ஓம்

ஸ்ரீ வேதவியாசர் அருளிச்செய்த

# ஸ்ரீ மஹா பாகவதம்

சித்திரப் பட‌ங்களுடன்

முதல் ஒன்பது ஸ்கந்தங்கள் அடங்கியது

## முதல் பாகம்

திருவனந்தபுரம் பாகவத சிரேஷ்டரான

வேணுகோபாலாசார்யர் அவர்களால்

ஸம்ஸ்க்ருத காவ்யத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

---

சில தமிழ் பண்டிதர்களைக்கொண்டு புதுக்கியும்,

விளக்கியும் சீர் திருத்தப்பெற்றது.

---

B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1950






விலை ரு. 12-0-0

ஓம்

# முன்னுரை

சகல சராசர அண்டங்களையும் படைத்துக் காத்து அழித்தருளும் முக்தி பிரதனை ஸ்ரீ பகவானது ஆக்ஞையை கடவாமல் ஆகாய வீதியிலே உலாவிவரும் அண்ட கோடிகளனைத்தும் தத்தமக்குரிய கதி-வேகங்களோடு எவ்வித தவறுதல் இல்லாமல் இயங்குகின்றன. இப்புவியில் உள்ள கனிஜ-தாவர - சரீரங்களையும், ஊர்வன - நீந்துவன - பறப்பன - நடப்பன ஆகிய பிராணிகளின் ஜன்மங்களையும், வசிக்கும் ஜீவ வர்க்கங்களும், அந்த பத்மநாபனது ஆணைக்கு மாறுதலின்றி தத்தமது கார்யங்களை கிரமமாக இயங்குகின்றன. என்றாலும் உத்தமமான மானிட ஜன்மத்தை வகித்த ஜீவகோடிகளோ தம்மைச் சூழ்ந்துள்ள வஸ்துக்களில் இன்னவை நித்யமானவை இன்னவை அநித்யமானவை எனப் பகுத்தறியும் ஆற்றல் தம்முள் அமையப் பெற்றிருந்தும், இன்னவை அநித்யப் பொருள்களோடுள்ள தம் உறவையே நாளும் விரும்பி, பந்தத்தைப் பெரிதும் பெருக்கிக்கொண்டு, வீணே அழிகின்றனர். நிவ்ருத்தி மார்க்கமாய் நடந்து மோக்ஷமார்க்கத்தை அடைய நினைவும் கொள்ளாத மனித சமூகம் உய்யும் பொருட்டு கருணாநிதியான பகவான் புவியில் மகஷிரிகளைப் படைத்து அவர்களின் மூலமாக வேதங்களை வெளிப்படுத்தி ஞானோபதேசம் செய்தருளினர். விதி - நிஷேத கர்மங்களை (அதாவது செய்யத் தகுந்த கார்யங்கள் இன்னவை - செய்யத் தகாதவை இன்னவை யெனவும்) பகுத்துரைக்கும் வேதங்களால் ஒரு சிலரே பயன் பெற்றனர். ஏனையோர்கள் சுலபமாக தர்மாதர்மங்களை அறிந்துய்வான் வேண்டி, புராண சங்கிதைகள் அம்மகா ரிஷிகள் மூலமாகவே வெளிவந்தன. உத்கிரஷ்டமான தபங்களைச் செய்து அடைதற்கரிய சித்திகளை அடைந்தவர்களில் சிலர் அஹம்பாவமடைந்து மனித குலத்தை ஹிம்சிக்க, அவர்களை சாமான்ய வழிகளால் வெல்லுதல் கூடாத கார்யமாக இருந்த காலங்களில் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே பூமியில் அவதரித்து துஷ்டர்களை சிக்ஷித்து சிஷ்டர்களை ரக்ஷிப்பதும், அதருமத்தை களைந்து தருமத்தை நிர்த்தாரணம் செய்வதும், வழக்கமா மென்ப.

அவ்விதமாக ஸ்ரீ பகவான் தன் இச்சாமாத்திரத்தால் இப்புவியில் வகித்த அவதாரங்கள் எண்ணிலடங்காதன. அவைகளுள், மச்ச-கூர்ம-வராக - நாரசிம்ம - வாமன - பரசுராம - ஸ்ரீ ராம - பல்ராம - ஸ்ரீ க்ருஷ்ண - புத்த - கல்கி அவதாரங்களை விசேஷமாகக் கூறுவார்கள். இந்த உத்கிஷ்ட விசேஷ அவதாரங்களிலும் ஸ்ரீ க்ருஷ்ண அவதாரம் பூர்த்தியான

தாகும். ஸ்ரீ க்ருஷ்ண பகவான் தன் ஜனனகால முதல் தான் மீண்டும் தன் திருவடிச் சோதிக்கு எழுந்தருளிய வரைக்கும் புரிந்தருளிய அதிமானுஷ லீலா சேஷ்டித காரியங்களை மிகவும் பக்தி சிரத்தையோடும் அவைகளுள் ஆழ்ந்த கருத்துகளை அறிந்தும் பாராயணஞ்செய்தும், சிரவணம் செய்தும், மனனம் செய்தும் வாழ்பவர் சகல மோக்ஷ சாம்பிராஜ்ஜியங்களையடைந்துய்வார்கள் என்பதில் சற்றேனும் ஐயமின்று. இந்த ஸ்ரீ பாகவதத்தினுடைய கதாமிர்த சத்தை கிரகித்து திருப்தி யடைந்தவனுக்கு மற்றொரு புராணத்தில்; ஆசையுண்டாகிறதில்லை. எனக் கூறுவது மிகையாகாது. நதிகளுக்குள் கெங்கையைப் போலும், தேவர்களுக்குள்ளே அச்சுதன் போலும், விஷ்ணு பக்தர்களுக்குள்ளே ருத்திரன் போலவும், சகல புராணங்களிலே இந்தப் பாகவதபுராணம் உத்தமமாயும் பாகவதோத்தமர்களுக்கு மிகவும் பிரீதி வாய்ந்ததுமாகும்.

இச்சீரிய கிரந்தத்தை திருவனந்தபுரம் பாகவத ஸ்ரேஷ்டரான ஸ்ரீமத் வேணுகோபாலாசாரியர் அவர்கள் ஸம்ஸ்க்ருத காவியத்திற் கிணங்க எழுதிய தமிழ் வசன காவ்யம் பலர்களால் அச்சியற்றப்பெற்று பலவித குற்றங்கள் மலிந்திருந்தது. எழுத்துப் பிழை சொற்பிழை பொருட்பிழை முதலிய பல பிழைகளையும் தகுந்த தமிழ்ப் புலவர்களைக்கொண்டு திருத்தி, சிற்சில விடங்களில் பாஷையை தற்காலத்திற் குகந்தவாறு நடைபட இனிமையாய்ப் புதுக்கியும், விளக்கியும், படிப்பதற்கு எளிதாக்கியுள்ளோம். எனினும் சிற்சில விடங்களில் பிழைகள் இன்னும் மிகுந்து காணக் கிடக்கும். அடுத்த பதிப்பில் அவைகள் களையப்பெறும்.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்.

# விஷய அட்டவணை



## பிரதம ஸ்கந்தம்

அத்தியாயம் பக்கம்



## த்விதீய ஸ்கந்தம்

## திரிதிய ஸ்கந்தம்

அத்தியாயம் பக்கம்



## சதுர்த்த ஸ்கந்தம்

## பஞ்சம ஸ்கந்தம்

விஷய அட்டவணை

அத்தியாயம் பக்கம்



## சஷ்டம ஸ்கந்தம்

## சப்தம ஸ்கந்தம்



## அஷ்டம ஸ்கந்தம்

அத்தியாயம் பக்கம்



ஸ்கந்தம்

# ஸ்ரீ மஹா பாகவதம்

## வசன காவியம்

கடவுள் துதி

கலி விருத்தம்

நீத வே ... களஞ்சிய னீணெறிச்
சூத மே ... சிகாமணி சொற்றிடு
போத ... ன் பிதாவிசைப் பூமிசை
யோத ... க்க தேவரு ளோங்கு மால்.

(இதன் பொருள்) ... த்தம் பொருந்திய நான்குவேதங்களுக்கும் ஒரு பொக்கிஷம் போலும், மேலான துறவற வொழுக்கத்தில் நின்றும், மி... ர்த்திவகித்த சூதமாமுனிவரெனச் சிறந்த வேதோத்தம ... திருவாய்மலர்ந்தருளிய தாமரைக் கமலத்தில் வீற்றிரு ... பிரமனை யளித்த தந்தையாகிய ஸ்ரீயஃபதியினது திரு ... யாடல்களி லொன்றாகிய ஸ்ரீ மஹா பாகவதத்தை கடல்சூழ் ... உலகவாசிகள் உஜ்ஜீவிக்கும்படி எடுத்துச் சொல்லச் ... வேசுரனது கிருபையானது குறைவற மேன்மேலுமோங்கு மென்பதாம்.

சுலோகம்.

வியாசம் வ... டநப்தாரம் சக்தேபௌத்ர மகல்மஷம்
பராசரா ... ங்தே சுகதாதம் தபோநிதிம்.

(இ-ள்) ... ம் - வியாசபகவானை, வசிட்டநப்தாரம் - வசிஷ்டமுனி ... கு இரண்டாம்பேரனை, சக்தேபௌத்திரம் - சக்திக்கு மூ... பேரனை, அகல்மஷம் - களங்கமற்றவனை, பராசராத் மஜ ... ராசருக்குப் புத்திரனை, சுகதாதம் - சுகருக்குத் தகப்ப... னை, தபோநிதிம் - தவத்திற்கு உற்பத்தித் தானமான ... னை வந்தே - நமஸ்கரிக்கின்றேன்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பிறந்தபொழு தேதுறந்து பிறைக்குழவி போனடிப்பப்
பின்போய்த் தொன்னூ
லறைந்தபுகழ் வியாதமுனி யாதாத்தான் மதலாயென்
றழைப்பச் செவ்வாய்
திறந்துநறை பொழியுமலர்ச் செழுந்தருவு மேனென்ன
வுயிர்க ளியாவு
நிறைந்துறையுஞ் சுகமுனிவ னிணையிதழ்த்தா மரைமலர்த்தா
ளினைநல் செய்வாம்.

# பிரதம ஸ்கந்தம்



## முதலாவது அத்தியாயம்

ஸ்ரீ மஹா பாகவத ஸ்கந்தத்தில் உபோத்காதமென்னப்பட்ட பிரகரணரூபமான பிரதமஸ்கந்தத்தினுடைய முதலாவது அத்தியாயத்திலே நைமிசாரண்ணிய வாசிகளான சவுனகாதி முனீஸ்வரர்கள், பிராதக் காலத்திலே பண்ணத்தக்க அக்கினிஹோத்திர முதலான வைதீக கருமத்தை முடித்தவர்களாய்ச் சூத புராணிகோத்தமரை நன்றாகக் கொண்டாடி அந்தந்த இதிகாச புராணங்களிலே உம்மாலே மனுஷர்களுக்கு முதற் காரணமாக எது நிச்சயிக்கப்பட்டதோ அதைச் சொல்ல வேண்டுமென்றும், மனுஷியர்களுக்குத் திரளாகக் கேழ்க்கத் தக்கவைகளுக்குள்ளே சாரமாயிருக்கிறதை புத்தியினாலே நன்றாகக் கிரகித்துச்சொல்ல வேண்டுமென்றும், முமூட்சுக்களானவர்களுக்கு மோட்சத்தைச் சாதித்தச் சாதனமேதென்றும், யாதொரு பகவானுடைய அவதாரம் பிராணிகளுடைய காத்தற் பொருட்டும் ஐசுவரியத்தின் பொருட்டும் ஆகக்கடவதோ அப்படிக்கொத்த புருஷனுடைய அவதார கதா சரித்திரங்களைவையென்றும், ஸ்ரீ கிருஷ்ண பகவான் தேவகியினிடத்திலே எதுக்காக அவதரித்தாரென்றும், ஸ்ரீ கிருஷ்ணன் வேறுலோகத்தை அடைந்திருந்த காலத்தில் தருமம் யாரைச் சரணமாகப் பற்றிற்றென்றும் இவை முதலான ஆறு வினாக்களைக் கேட்டனரென்றும் சொல்லப்பட்டது.

---

ஸ்ரீ வேதவியாச முனிவர் ஒன்றோடொன்று கலந்து உபயோகமில்லாம லிருந்த வேதங்களை வேறுவேறாகப் பிரித்து, அதன் பொருளைச் சகல சீவாத்மாக்களும் அறிந்து கடைத்தேற வேண்டி புராணங்களாகவும், இதிகாசங்களாகவும், இரண்டு வகையாக வெளியிட்டுத் தம்முடைய வர்ணாசிரமங்களுக்கு யோக்கியமான நித்திய நைமித்திய கருமங்களாலே ஸ்ரீ பகவானை ஆராதனம் செய்து பரிபூரணமாயிருந்த அறிவிற்கும் உலகத்துக்குத் தாம் செய்யவேண்டிய உபகாரம் இன்னமுஞ் சிலது குறையுண்டாக இருக்கிறதென்றும், தாமே தெரிந்து கொண்டு அதின் விவரங் காணமற் சிந்தித்துக் கொண்டிருந்த சமயத்தில், பிரமலோகத்திலிருந்து நாரதமுனிவர் வந்து இவரைப் பார்த்து, ஓ வியாச

முனிவரே! உம்முடைய மனதிலே என்னமோ சிந்தித்துக் கொண்டிருக்கின்றீர், அதைச்சொல்லுமென்று கேழ்க்க, வேத வியாசர் நாரத முனீஸ்வரரைப் பார்த்துச் சொன்னதாவது: ஓ! நாரத முனீஸ்வரரே! நான் இதுவரைக்கும் நடந்துக் கொள்ளவேண்டிய வர்ணாசிரம தருமங்களை நடத்தினேன்; வேதங்களைப் பிரித்து அவற்றின் பொருள்களையும் வெளியிட்டேன்; பிராகிருத தர்மங்களைப் பிரகாசம் பண்ணின தோஷபரிகார நிமித்தயமாகப் பாரதத்தினுடைய முடிவிலே ஹரிவம்சத்தினாலே ஸ்ரீமந் நாராயணருடைய திவ்விய குணாதிசயங்களையும் வெளியிட்டு லோகோபகாரத்தையும் கற்பித்தேன். நான் இப்படி யெல்லாஞ் செய்திருந்தும் இன்னமும் லோகோபகாரஞ் செய்யவேண்டிய துண்டென்று தோற்றியும், அஃதின்னதென்று தெரியாம லிருக்கையினாலே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். அதை தேவரீரறிந்து இன்னதென்று [illegible]ல வேண்டுமென்று விணவியதற்கு நாரதர் சொல்லு[illegible]

ஓ [illegible]முனிவரே! நீர்செய்ததெல்லாம் இயல்பாயினும் பிராகிருத தர்மங்களையும் பிராகிருதரான ராஜாக்களையும் மிகவும் விஸ்தாரமாகச் சொன்னீர். மோட்ச தருமமும் முக்திப் பிரதனான பரமாத்மாவையும், மோட்சத்தையே புருஷார்த்தமாகக் கோரியிருக்கிற ஸ்ரீ பாகவதர்களுடைய மகிமையும் மிதமாகச் சொன்னீர். அதுகளைக் கேட்ட ஜனங்களுக்கு [illegible]யானம் வருகிறதே யல்லாமல் தத்வக்கியானம் [illegible]மாட்டாது. ஆகையினாலே, இதுவே உம்முடைய [illegible] குறைவுக்கு ஏதுவானதென்று சொல்லி, இனிமேல் [illegible]வேண்டிய தவத்தைச் சொல்லுகிறேனென்று, ஸ்ரீமந் நாராயணரிடத்தில் தன்னுடையபிதாவான பிரம்மாவுக்கு உபதேசமாக வந்த ஸ்ரீ பாகவத கதையைத் தான் பிரம்மாவினிடத்திலிருந்து தெரிந்து கொண்டபடி வியாசருக்குச் சங்கிரகமாக வுபதேசஞ் செய்தார். அந்த வியாசரும் நாரதர் சத்திய லோகத்துக்குப் போனபிற்பாடு, சரஸ்வதி நதி தீர்த்தத்தில் ஸ்நானமுதலான நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு நாரதர் உபதேசித்த பிரமதத்வத்தை யோகத்தியானத்தினாலே உற்றுநோக்கி விஸ்தாரமாக ஸ்ரீபாகவத புராணத்தைச் செய்யத் தொடங்கினார். தொடங்குங் காலத்தில், இந்தப் பாகவத புராணத்திற் சொல்லப்படுகிற பிரம்ம சொரூபத்தையும், பிரம்மத்தினுடைய குணங்களையும், முக்தரான ஜீவாத்மாக்களையும், செகத்தினுடைய சிருஷ்டி முதலானவைகளையும், பிரமஞ்செகத்தில்,

அந்தப் பிரமம் பிரிவில்லாத காரணமாகியும் பிரிவுண்டான காரணமாகியு மிருக்கு மிருப்பையும், சங்கிரகமாகக் காண்பித்து, பிரமலட்சணமாகிய சென்மாதி காரணத்துவத்தைச் செகத்துக்குச் சொல்லுகிற உபநிஷத்தைப் பிரகாசம் பண்ணுகிற பிரமசூத்திரத்தாற் ருெடங்கிக் காயத்திரி பதங்களுடனே கலந்த கிரந்த பதங்களால் சேர்த்துப் பிரமத்தினுடைய சொருபத்தைத் தெளிய வுரைக்கிற சத்திய பதத்தால் முடிவைக் காண்பித்து, தீமகி யென்கிற காயத்திரி பதத்தால் முடிந்தபடியினுலே, பிரமம் செகத்துக்குக் காரணமென்றும் சர்வமும் அறிந்ததென்றும் தனக்கு ஒத்தாரு மிக்காருமில்லாமலிருக்கப்பட்ட தென்றும், தன்னை முத்தர்களடைகிற காலத்திலும் அவர்களிற் கலந்திருந்தே தான்வேருகவிருந்து அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்குமென்றும், இப்படிக் கெல்லாம் முதற் சுலோகத்திலே சொல்லி யிருக்கையால் இந்தப் பாகவதம் விரோதமான பொருள்களைச் சொல்லாது இந்த முதற் சுலோகத்திலே சொல்லியிருக்கிற பொருளென்னவென்ருல், சென்மாதியாகிய இந்த வுலகத்தினுடைய சிருஷ்டியும் பாலனமும் சங்காரமும் எவனுடைய செயலோ, இதுகளைச் சொல்லுகின்ற காரண வாக்கியங்கள் மற்ருெருவரிடத்திலே பொருந்தாமல், எவனிடத்திலே இயல்பாகப் பொருந்தி விளங்குகின்றனவோ, இந்த வுலகங்களுடைய சிருஷ்டி முதலான காரியங்களைத் தலைக்கூடும்படி சாதகமாகிய அறிவையுடைத்தானவ னெவனே, எவனுக்கு உயர்ந்தவரும் சரியானவரும் மற்ருெருவரில்லையோ? எவன் ஆதி கவியான பிரம்மாவுக்கு இந்த வுலகசிருஷ்டிக்கு பழைய மார்க்கமான வேதத்தை அறியும்படி தன்மனதினுலே தானே நினைத்தானே, எவனை எக்காலமுமிந்த மாய்கைக்குள் வெளிப்பட்ட நித்திய சூரிகளுமிவ்வளவென்று முழுவது மறியமாட்டாம லிருக்கின்ருர்களோ, பஞ்சபூதங்களும் ஆதிகாலத்தில் ஒன்ருேடொன்று கலக்கமாட்டாமலிருந்ததை எவன் அதுகளில் புகுந்து சேர்ப்பித்தானே, பிரிவில்லாத காரணமாகிய எவனிடத்தில் சத்துவ முதலான மூன்று குணங்களையுடைய கருமங்கள் உலகத்திற் சத்தியமாக விளங்குகின்றனவோ, இப்படி சூட்சுமஸ்தூலமாகிய சேதனு சேதனங்களிலே யுட்புகுந்து அவையும் அவற்றின் கருமங்களும் அவற்றின் கருத்தாவுமாகியிருந்தாலும் அதுகளிலுண்டான தோஷங்களைத் தன்னிடத்திலே எப்போதும் சேரவொட்டாம லிருக்கின்ற மகிமையை உடைத்தானவ னெவனே, அந்தப்பரம சத்திய மூர்த்தியை தியானம் பண்ணுகிறேனென்று முதற் சுலோகத்தால் வணங்கினுர். இப்படி தம்மாலே செய்யப்படுகிற பாகவத புராணத்தை மற்ற

இராசத தாமச தருமங்களைச் சொல்லுகிற புராணங்களோடே சரியென்றும், அதுகளில் சொல்லப்படுகிற அருத்தங்களிந்தப் புராணத்திற் சொல்லுகிற அருத்தங்களைப் போலே எதார்த்த மான தருமமென்று நினைக்கவேண்டிய தில்லை. ஆகையால் மோக்ஷமாகிற பதத்தைக் கோரினவர்களுக்கு இந்தப் பாக வதமே முக்கியமென்று இரண்டாவது சுலோகத்தால் வெளி யிட்டார்.

அதெப்படி யென்றால், இந்தப் பாகவதப் புராணத்திற் சொல்லுகிற தருமங்கள் மற்றவிடத்திற் சொல்லுகிற தருமங் களைப்போல், சொர்க்காதி போகங்களைக் கொடுத்து சில காலம் அவ்விடத்தில் புருஷனுக்கு ஆசையை உண்டுபண்ணி, அவனை அவனுமறியாமல் தலைகீழாகத் தள்ளுகிற வஞ்சனை விட்ட பரம தரும மாகையினாலேயும், இதில் வர்ணிக்கப் படுகிற தேவன் தன்னை யறிந்து தன்னை அடுத்தபேருக்குத் தாபத்திரயங்களையும் கெடுத்து ஒரு காலத்திலும் ஏற்றக்குறை யும் அழிவுமில்லாமலிருக்கிற ஆனந்த சமுத்திரமாகிய நிரதிசய இன்பத்தைத் தன் பக்தருக்குக் கொடுக்கும் புரு ஷோத்தமனென்றும் கூறுவதாம். இந்தப் புராண விஷ யங்களைச் சொல்லவும், படிக்கவும், யோக்கியரானவரெவ ரென்றால், பரதேவதையினுடைய மகிமையைச் சகிக்க மாட்டாமையாகிய அசூயையும் ஆச்சரியமும் விட்ட உத்தம புருஷரென்றும், இந்தப் புராணத்தை உபதே சித்தவர் ஆதி கர்த்தாவான ஸ்ரீமந் நாராயணமுனி யென்றும், இன்னம் இந்தப் புராணத்தைக் கேட்கவேண்டும் என்று இச்சித்த மகா புண்ணியசாலிக்கு இந்தக் கதைகளைக் கேட்கையிற்றானே சர்வ சுவதந்திரரான பரமாத்துமா, இவர்க ளுடைய நெஞ்சிற்புகுந்து அதிசஞ்சலமாகிய அவர்களுடைய மனதைத் தன்னிடத்திற் சேர்த்து இடைவிடாமல் ஒருமைப் பண்ணுவதுபோல, மற்றப் புராணங்களி லுண்டாகாதென்று சொல்லி, மூன்றாஞ் சுலோகத்தால் வேதமாகிற கர்ப்பக விருட் சத்திற் பழுத்த பழமானது பலித்து பிரமாவும் நாரத ரும் தாமுமாகிற துளிரும் பூவுமாய்த் தழைத்த கிளைகளில் தங்கி மெள்ள பூமியிலிழிந்து சுகமுனியாகிற கிளி முகத்தால் கோதப்பட்டு, மோட்சமாகிற மதுர ரசத்தைப் பெருக விடுகிற தோலும் கொட்டையும் நாருமில்லாத பாகவதமாகிர பழத்தைக் காட்டி ஓ பிரமானுபவம் பண்ணவல்லவர்களே! நீங்கள் இந்தவுலகத்திலே தானே அந்த ஆனந்தத்தை அடிக் கடி அனுபவம் பண்ணுங்கள். இந்த ஆனந்தானுபவம் உங்க ளுக்கு இவ்விடத்தில் மாத்திரமல்ல, மோட்ச திசையிலும்

இதுவே பலனாகப் பெறுவீரென்று சொல்லி, இந்தப் புரா ணத்தைப்படித்து இதனுடைய கருத்தை அனுபவிக்கும் ஜனங்களினுடைய சுகிர்தத்தைத் தாமே சந்தோஷித்து ஆச்சரியப்பட்டுக் கொண்டார்.

இப்படி மூன்று சுலோகத்தால் பாகவதத்திற் சொல்லு கிற சிறப்பை காண்பித்துத் தாஞ் செய்த புராணத்தைத் தம்முடைய வேத பாராயணமாகிற தபோ கர்ப்பத் தில் பிறந்து தமக்கு புத்திரராகிய சுகமுனிக்கு அருளிச்செய் தார். அவரும் பிறவிமுதல் பிரமநிஷ்டராஞலும், தம்முடைய மனதில் பிரத்தியட்சமாக அனுபவித்து வருகிற வாசுதேவ னுடைய மகிமையைச்சொல்லுகிற புராண ரத்னமாகையால், இந்தப் புராணத்தைப் படித்து, மனதில் தரி[illegible] இதைக் கேட்க மற்றொரு யோக்கிய ரில்லாமையால் [illegible]முடைய ஆச்சிமத்துக் குரித்தாகிய மவுனத்தைத், தரித்து [illegible]லும் ஒரு பசு கறக்கிற நேரமுமிராமல் சகலமும் வாசுதே[illegible] மென்று பிரத்தியட்சமாய்த் தெரிந்துகொண்டு, [illegible] கத்தில் சஞ்சரிக்கிற காலத்தில், பிரம சாபத்தால் த[illegible] தெரிந்து வயிராக்கியம் பிறந்து கங்கையில் பிராயோப[illegible] பண்ணிப் பரகதிக்கு வழி காண்பிக்கும் பரம பாகவத[illegible] காணுமல் தவித்திருந்த் பரிக்ஷித்து மகா ராஜாவுக்கு உ[illegible] தேசித்திருக்கிற சமயத்தில், நாரதர் முதலான சகல முனிவ[illegible] களும் அந்தக் காலமறிந்து, தங்களிருதயத்திலிருக்கிற கதா தரனை சுவாமியால் சகல தீர்த்தங்களையும் பரிசுத்தம் பண்ண வேண்டித் தீர்த்தயாத்திரை நிமித்தயமாய் எழுந்தருளி, இந்த உபதேசங் கேட்டு களிப்படைந்தார்கள். இந்தப் புராணத்தை ஸ்ரீ வேதவியாசமுனிவரிடத்தில் படித்து, வியாசரனுக்கிரகத் தினுல் சகலமான இதிகாச புராணங்களையும், தருமங்களையும், சகலமான பிராணிகளுக்கும் தெளிய வுரைத்து, லோகரட்ச ணம் பண்ணிவருகிற சூத புராணிகரிடத்தில், சவுனகர் முத லான ருஷிகள் தெரிந்துகொண்ட பாகவதத்தைத் தமிழ் வசன மாகக் கூறுகின்ருேம். இதில் வியாசமுனீஸ்வரருடைய கருத் தைத் தெரியாம லெழுதின கிரந்தங்களைப் பார்த்த பேருக்கு மனது நிலைக்கமாட்டாது. ஆனுலும், சமஸ்கிருத பாகவதத் தையும் இதன் வியாக்கியானங்களையும் மிகவும் சோதித்துப் பிரமாணங்களிலும், பரதேவதையிடத்திலும் அரூசையில்லா மலிருக்கின்ற மகா புருஷருக்கு மனது ஒப்புகிறதில் சமுசய மில்லை என்பது முன்னெருகாலத்தில் சகலமான தேவர் களும் முனிவர்களுங்கூடிச் சதுர்முகனை அடுத்து, ஓ பிதா மகனே! இந்தக் கரும பூமியில் கலிபுருஷன் எந்தமட்டும் கைக்

கொண்டு கலி தருமங்களை விர்த்திபண்ணி வைதீக கருமங்களைக் கெடுப்பானென்று கேட்டதற்கு, அந்தக் கமலாசனன் அவர்களைப் பார்த்துத் தேஜோமயமான ஒரு சக்கரத்தைக் கற்பித்து, ஓ தேவர்களே! முனிவர்களே! இந்தச் சக்கரத்தின் முனை யெவ்விடத்தில் முறிந்து விழுகிறதோ அதற்கப்பால் கலிதரும மிகுதியாகி வைதீக தருமங்களைக் கெடுக்குமென்று சொல்லி அந்தச்சக்கரத்தைப் பிரயோகித்த பின்பு, அதன் முனை எந்த விடத்தில் முறிந்து விழுந்ததோ அந்த ஆரணியத்துக்கு நைமிசாரணியமென்று பெயர் விளங்கிற்று. இதல்லாமல், முன்னொருகால் ஸ்ரீ மகாவிஷ்ணு அசுரரை அந்த ஆரணியத்தில் நிமிஷமாகிய கண்ணிமைப்பாடென்கிற ஆயுதத்தினால் சங்காரம் பண்ணின படியினாலே நைமிசாரண்ய மென்று சொல்லப்பட்டது. இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு நர நாராயண அவதாரம்பண்ணித் தபசு செய்தபடியினாலே ஸ்ரீ மகாவிஷ்ணு க்ஷேத்திரமாயிற்று. இப்படி இரண்டு வகையாக விளங்கின பெயரை யுடைத்தான ஸ்ரீ வைஷ்ணவ க்ஷேத்திரத்தில், சவுனகர் முதலாகிய ரிஷிகள் சகலமான புண்ணிய லோகங்களிலும் புகழப்பட்டு தம் சாட்சாத்காரத்தினால் தம்மை அடுத்த பக்தருக்கு முத்திகொடுக்கிற ஸ்ரீ மகாவிஷ்ணுவைக் குறித்து ஆயிரம் வருஷத்தால் முடிக்கிற சத்திரயாக தீக்ஷையைப் பண்ணிக்கொண்டிருந்த அந்த முனிவர்கள் ஒருநாள் காலையில் தங்களுடைய நித்திய நைமித்தியங்களைத் தீர்த்துக்கொண்டு அக்கினி சந்தோஷமும் செய்துக்கொண் டிருக்கையில், அவ்விடத்தில் வந்த சூதபுராணிகருக்கு உபசாரங்கள்பண்ணி உயர்ந்த ஆசனமுங் கொடுத்தார்கள். அவரும் அந்த ஆசனத்தி லிருந்தபின்பு அவரைக் குறித்து மிகவும் ஆதரவுடனே கேட்டார்கள்.

ஓ பரிசுத்த மகாத்மாவே! நீர் வியாசரிடத்திலிருந்து சகலமான புராணங்களையும், இதிகாசங்களையும், தருமசாஸ்திரங்களையும் படித்தீர். இப்படிக்கொத்த உம்மை அடுத்த புண்ணியசாலிகளுக்கு சகல தருமங்களையும் தெரியச்சொல்ல அறிவீரல்லவோ? வேதவித்துக்களுக்குள் சிரேஷ்டரான வியாசமுனிவரும், சேதனாசேதனங்களிலும் நிறைந்த பரமபுருஷனை அறிந்த மற்ற முனிவர்களும் ஜனங்களுக்கு நித்திய கலியாணமாகிய சூட்சும தருமங்களை எவ்வளவு அறிவார்களோ அவ்வளவு தருமங்களையும் அவர்களுடைய அனுக்கிரகத்தினால் நிச்சயமாகத் தெரிந்துக்கொண்டிருக்கின்ற சூதரே! நீர் தீர்க்காயுசு சம்பாதித்துக் கொண்டு பெரி

யோர்களிடத்தில் பக்தியுடனே பணிவிடை செய்து கேட்டிருந்த் தருமங்களை, அந்தப் பெரியோர்கள் மிகவும் ரகசியமாக விருந்தாலும், உமக்குச் சொல்லியிருப்பார்க ளல்லவோ? ஆகையால், அந்தச் சுபமாகிய சூட்சும தருமங்களை நீர் எங்களுக்கு சொல்லவேணும். ஓ சாது ஜனங்களுக்கெல்லாம் முதன்மையானவரே! இந்தக் கலியுகத்தில் ஜனித்திருக்கிற ஜனங்கள் கொஞ்சமான ஆயுசுண்டாகியும் புண்ணியங் குறைந்தும் பாவமிகுதியாயு மிருக்கையில், புத்தி யீனர்களாகியும், ரோக பீடிதர்களாயு மிருக்கிற இவர்களுக்கு அறியவேண்டிய தருமங்களும், அவைகளுடைய வைலட்சணியங்களும் அளவில்லை. அவைகளை அனேகதரம் கேட்டாலல்லாமல் தெரியக்கூடாது. ஆகையினால் இவைகளில் சாரமான தருமங்களை உம்முடைய புத்தியினால் திரட்டியெடுத்து ஒருக்கால் கேள்விசெய்த மாத்திரத்தால் பிராணிகளுடைய மனதிலிருக்கிற ரசோகுண தமோகுணங்களைக் கழித்து, மிகுதியான சத்துவ குணத்தை உண்டுபண்ணுகிற தருமங்களை எங்களுக்குச் சொல்லவேண்டும். சூதரே! உமக்கு நித்திய கல்யாணமே யிருக்கின்றது. இஃதேனென்றால் ஷட்குண பரிபூரணனை வாசுதேவன் சாத்துதனென்கிற ராசாவினுடைய குலத்தில் வசுதேவனுக்கு தேவகி கருப்பத்தில் ஸ்ரீகிருஷ்ணனென்று எந்தகாரியம் செய்யவேண்டி செனித்தானோ அதை நீரறிவீரே, ஆகையால் அதைக் கேட்கவேணுமென்றிச்சித்திருக்கிற எங்களுக்குச் சொல்லவேண்டும். எந்த தேவனுடைய அவதாரங்கள் ஜெனங்களுக்குத் தீவினையை விலக்கியிருக்கிற சம்பத்தை நிலைநிறுத்தி, அதிகமாகிய செல்வத்தைக் கொடுக்கும், அதிக பயங்கரமான சமுசாரத்தை அடைந்தவர்களுக்கும், அவர்களையு மறியாமல் அவர்கள் நாவிலே பிறந்த எவனுடைய நாமம் அந்தச் சமுசாரத்தை விலக்கும், எல்லாருக்கும் பயத்தை உண்டுபண்ணுகிற மிருத்தியுவானவனெவனுக்குப் பயந்து நடந்துக்கொள்ளுகிறானோ அவனுடைய பாதசம்பந்தத்தினால் பரமசாந்தி பிறந்த முனிவர்களும் புண்ணிய நதியாகிய கங்காஜலமும் தங்களைப் பரிசித்த மாத்திரத்தில் அப்பொழுதே பாவனஞ் செய்யக்கூடுமோ, அப்படிப்பட்ட மகிமையையுடையஇவைகளை இடைவிடாமல் அனுசரித்தவர்கள் கடைத்தேறுகிறதைச் சொல்லவேண்டும். பாவநிவர்த்தியாகிய பரிசுத்தத்தைக் கோரினவர்களின் கலிதோஷத்தைப் பரிகரிக்கிற ஷட்குண பரிபூரணரான பரமாத்மாவுடைய லீலைகள் வெகுபுண்ய பலனாகையால், அந்தத் தோத்திரத்தைக் கேட்கின்றதற்கு எவனுக்குத்தான் ருசி பிறவாது? அவனுடைய இச்சையினால் அவன் அம்ச

மான அவதாரங்களைச் செய்கின்ற அவனுடைய நடத்தைகள் இவ்வளவென்றும் இன்னபடியென்றும் அறியக்கூடாதென்று பிரகிருதி சம்பந்தம் நீங்கின ஞானிகள் ஸ்தோத்திரம் பண்ணுகையால், அவைகளைக் கேட்டவர்களுக்குப் பலனுண்டென்கிறதில் சந்தேகமில்லையென்றும், நிச்சயித்திருக்கிற எங்களுக்கு நீர் அந்தச் சரித்திரங்களைச் சொல்ல வேண்டும். பிறகு தானினைத்தபடி முடிக்கிற சுதந்தரனாகிய தனக்கு சுவாதீனமாகிய பிரகிருதியினால் தன் விளையாட்டை நடத்துகின்ற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியான ஸ்ரீ ஹரிதருமங்களை நிலைநிறுத்துவதாகச் செய்த அவதார கதைகளைச் சொல்ல வேண்டும். யாதொரு காரணத்தினால் உத்தமஸ்லோகனான ஸ்ரீ கிருஷ்ணனுடைய பராக்கிரமங்களைக் கேள்விப்பட்டு, அதனுடைய இரசத்தையறிந்தபேர்களுக்கு அடிக்கடி மதுரமாயிருக்கின்றதோ அது காரணத்தினால் நாங்களும் கேள்வியாகியும் திருப்தி யடையவில்லை. ஞானசத்தியாதிகளிலே பரிபூரணனான கேசவன் மனுஷிய ரூபமாகிய வஞ்சனையால் தன்னை மறந்து, மனுஷராலே செய்யப்படாத காரியங்களைச் செய்து பலராமருடனே கூடினாரல்லவோ, கலிபுருஷன் வந்தானென்று மிகவும் தெரிந்து, நாங்கள் இந்த வைஷ்ணவமாகிய நைமிசாரண்ணிய க்ஷேத்திரத்தில் வந்து வெகு காலம் சாத்தியமாகிய சத்திரயாகத்தைப் பண்ணும்படியான தீட்சை வகித்து, ஸ்ரீ ஹரியினுடைய கதைகளைக் கேட்கிறதில், சாக்கிரதையாயிருக்கிறோம். புருஷருடைய சத்துவத்தை அரிக்கிற கலியாகிய கரையில்லாத சமுத்திரத்தைக் கடக்கவேண்டுமென்று நினைத்திருக்கிற எங்களுக்கு நீர் தெய்வயெத்தனத்தினால் மாலுமிபோலக் காண்பிக்கப்பட்டீர். ஆகையால், சர்வ தருமங்களுக்கும் ஸ்வாமியாகியும், பிராமண்ய தேவனாகியுமிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் தன் னிசரூபத்தை யடைந்த பின்பு, தருமமானது எவனைச் சரணமடைந்தது? என்று வணங்கி வினவினார்கள்.

---

## இரண்டாவது அத்தியாயம்

சூதர் சவுனகாதி ரிஷீச்வரர்களால் பண்ணப்பட்ட ஆறு வினாக்களுக்குள் நாலு வினாக்களுக்கு உத்தரஞ் சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.

இப்படிச் சவுனகர் முதலான முனிவர்களால் கேட்கப்பட்ட சூதபுராணிகர் மிகவுஞ் சந்தோஷத்துடனே அவர்கள் கேட்டவைகளுக்குப் பதிலுத்தரவு சொல்லுகிறார்: இந்தப்

பாகவதத்தைத் தொடங்குங் காலத்தில் இதனுடைய விளக்க மாகிய மகோபகாரத்தைச் செய்த சுகப்பிரமரிஷிக்கு இரண்டு சுலோகத்தால் வந்தனஞ் செய்கின்றார். அது எப்படியென்றால், உபநயனமில்லாத காலத்தில் தனக்கு செய்யவேண்டிய தான தருமமொன்றுமில்லாமல் துறந்து செல்லுகிற யெவருடைய பிரிவைச் சகிக்கமாட்டாமல் வியாசமுனிவர் புத்திராவென்று அழைத்த சமயத்தில், தாபரங்களெல்லாம் ஏனென்று பதிலுத்தரங் கொடுத்தனவோ, சர்வ பூதங்களுடைய இருதயங்களையும் அடைந்த அந்த மகாமுனியை நான் சாஷ்டாங்கமாக வந்தனஞ் செய்கிறேனென்றும், தனக்கு அந்தரியாமியான பரமாத்மாவினுடைய மகிமையை விளங்கச் சொல்லுகிறதாயும், சகலமான வேதாந்தங்களுடைய சாரமாகியும், தனக்கு நிகர் மற்றொன்று மில்லாமலும் பரமாத்மாவினுடைய சொரூபத்தைப் பிரகாசம் பண்ணுகிறதாகவுமிருக்கிற ரகசியமான இந்த ஸ்ரீ பாகவதத்தைச் சமுசாரத்தில் மூழ்கி அந்த அந்தத் தமசு முதலான நரகங்களைக் கடக்க நினையாத சனங்களிடத்தில் தயவினால் எவர் வெளியிட்டாரோ, அந்த வியாச குமாரரான சகல முனிவர்களுக்கும் குருவைச் சரணமாக அடைகிறேனென்றும் வந்தனஞ்செய்து பின்பு, ஸ்ரீமந் நாராயணனுக்கும் நரோத்தமனான நரனுக்கும் சரஸ்வதிதேவிக்கும் வியாசருக்கும் வணக்கஞ்செய்து சமுசாரத்தை விளக்குகிற ஸ்ரீ மகா பாகவதத்தைச் சொல்லுகிறேனென்று பின்னையும் அவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்: ஓ முனீந்திரர்களே! எந்த அவதாரத்தினுடைய கதையைக் கேட்டால் பரமாத்துமா கருணை செய்கிறாரோ அந்தக் கிருஷ்ணபகவானுடைய லீலைகளைக் கேட்டீர்களாகையால், இப்போது நீங்கள் கேட்ட பிரஸ்னையானது உலகங்களுக்கெல்லாம் மங்களமாகையால், அந்தக் கேள்வி எல்லாருக்கும் சிலாக்கியமானது. சிரேஷ்டமாகிய தருமத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்டீர்களல்லவோ? அந்தத் தருமமேதெனில், பரமாத்துமாவினுடைய அருளுக்குக் காரணமாகியும் பரிபூரணமாகியும் பலாபேட்சையில்லாமலு மிருக்கிற யோக காக்ஷியால் அறியத்தக்கவனென்கிற கேசவனாகிய குற்றமற்றவனுடைய பக்தியொன்றே பரம தருமமென்று சொல்லப்படும். பரமாத்துமாவினிடத்திற் செய்கிற பக்தி சீக்கிரமாக விஷயத்தில் வயிராக்கியத்தையுண்டாக்கும். அந்த வயிராக்கியத்தால் பலாபேட்சை நீங்கும். இப்படி ஒருகாரணத்தையுங் கருதாத பக்தியால் பரமாத்துமாவின் கருணையுண்டாகும். இதைவிட மற்ற தருமங்களெல்லாம் அங்கமுள்ளனவாகச் செய்யப்பட்டிருந்தாலும்,

ஸ்ரீ ஹரிகதையில் பிரீதியைப் பிறப்பியாமற்போனால் சரீர வருத்தமாத்திர மல்லாமல் பலன் பெறமாட்டா.

அந்தப் பிரயாசம்செய்வதற்கு பலனற்றனவாகவே இருக்கும். உபநிஷத்துக்களின் அருத்தங்களுடைய கேள்வியும், ஸ்ரீ ஹரிகதையாகிய அமிர்தத்துக்குச் சரியாக வந்து நிற்க மாட்டாமல் வெகு தூரத்தில் விலகி நிற்கும். அதேனென்றால் ஹரிகதா சிரவணம் பண்ணுகிறபேருக்கு மனது கரைந்து நேத்திரத்தில் ஆனந்தபாஷ்பஞ் செனித்துச் சரீரமும் புளகிக்குமாப்போல், கடினமான வேதாந்த சிரவணம்செய்த பேருக்கில்லை. ஆகையால் சகல சீவாத்மாக்களுங் கடைத்தேற வேண்டித் தருமத்துக்கு மோட்சமும், அர்த்தத்துக்குத் தருமமும், காமமாகிற இச்சைக்குத் தத்துவக்கியானமும் பலனாக நிச்சயித்த அநாதியான பகவானுடைய சங்கற்பத்தை யறியாமல் அர்த்தத்தைக் குறித்துத் தருமங்களையும், காமத்தைக் குறித்து அர்த்தங்களையும், இந்திரிய சுகங்களைக் குறித்து காமத்தையும் சங்கற்பித்துக் கொண்டவர்கள் சுவர்க்க நரகமாகிற துக்கமாகிய பிறவிச் சமுசாரத்தை ஒருகாலத்திலும் தவிர்மாட்டார்க ளாகையால், சகல கருமங்களையுந் தத்துவகியானத்தைக் குறித்தே செய்யவேண்டும். தத்துவமானது கியான சொரூபமாகையாலும், கியானமே குணமாக வுடைத்தா யிருக்கையினாலும், சேதனா சேதனங்களைச் சரீரமாக வுடைத்தா யிருக்கையினாலும் அந்த சிறந்த ரூபத்தாலே பிரமமென்றும், பரமாத்துமாவென்றும், பகவானென்றும், சொல்லப்படுகிற வஸ்துவென்றும், அதனுடைய உண்மையை யறிந்தவர்கள் நிச்சயித்துச் சொல்லுகிறார்கள். அப்படியே தேர்ந்து ஆராய்ந்து விசுவாசித்து நிச்சயித்த முனீஸ்வரர்கள் கியானவைராக்கியங்களுடனே தாங்கள் கேள்விப்பட்டபடி செய்கிற பக்தியால் கியானஸ்வரூபனான ஆத்துமா தன்னிடத்தில் கியானஸ்வரூபனாகியும், கியானகுணனாகியும், பரிபூரணனாகியுமிருக்கிற பரமாத்துமாவைத் தன்னுடைய திரேகத்துக்குத் தான் ஆத்துமா வானதுபோலத் தனக்கு ஆத்துமாவாகிச் சாட்சாத் கரிக்கிறான். ஆகையால், ஓ பிராமண சிரேஷ்டர்களே ! வர்ணாசிரம தருமங்களால் சாங்கோபாங்கமாக அனுஷ்டித்த தருமவிசேஷங்களை ஸ்ரீ ஹரிக்குப் பிரீதியாகவே செய்யவேண்டும் ஆகையால், மனதை மற்றவிடங்களிற் போகவொட்டாமல் ஷட்குண பரிபூரணனான ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் நிறுத்தி அவன் ஸ்வரூப ஸ்வபாவங்களையுங் கேட்டுக் கீர்த்தனஞ்செய்து, தியானயுக்தனாகி, ஒரு நிமிஷமாகிலும் இடைவிடாமல் சிந்திக்கவேண்டும்

யாதொரு கிருஷ்ணனுடைய தியானமாகிற கத்தியை கைக்கொண்ட கியானிகள் கருமமாகிற பந்தத்தைச் சேதிக்கிறார்களோ அந்தப் பகவானுடைய கதையில் பிரீதியை எவன்தான் செய்யான்? ஸ்ரீ வாசுதேவனிடத்தில் அன்புபிறக்கவேணுமென்றால் அதற்குச் சாதனஞ்சொல்லுகிறோம். புண்ணிய தீர்த்தங்களில் வெகுகாலம் ஸ்நானாதிகள் செய்த புண்ணியத்தால் பரம பாகவதர்களுடைய கூட்டுறவு அடைந்து அவர்கள் அனுக்கிரகத்தினால் இந்த கதையைக்கேட்க இச்சையுண்டாகும். பின்பு கதாசிரவணஞ்செய்ய அந்தக் கதையில் சிரத்தைபிறந்து, பகவானிடத்தில் அதிகப் பிரீதியுண்டாகும். இப்படி அன்புடனே தன்னுடைய கதையைக் கேட்கிறவர்கள் இருதயத்திலிருக்கிற புண்ணிய சிரவண கீர்த்தனனான ஸ்ரீ கிருஷ்ணன் சாதுஜன பந்துவாகையால், அந்த இருதயத்திலுண்டான பாவங்களை யுதறிவிடுவான். இப்படி இருதயத்திலுண்டான பாவங்கள் நீங்கின பின்பு, இடைவிடாமல் பாகவதர்களுடைய சேவை பண்ணுகையில், உத்தம சுலோகனான பரமாத்துமாவினிடத்தில் சலியாத பக்தி பிறக்கும். அப்போது ரசோகுண தமோகுணங்களிடத்தில் பிறந்த காமக்குரோத முதலான அறுவகைக் குற்றங்களும் அரிஷ்டவர்க்கங்களும் இந்த மனதைப் பற்றமாட்டாதாகையால், இந்த மனது தன்னுடைய சஞ்சலத்தை விட்டுத் தத்துவ சம்பன்னமாகிய கியானத்தால் சம்சய விபரீதங்களைத் தவிர்ந்திருக்கும். பகவானிடத்தில் இப்படி தீவிரமானபக்தி செய்கையால், பிரசன்னமான மனதை யுடைத்தான புண்ணியசாலிக்கு விஷயசங்கந் தவிர்ந்து பகவானுடைய தத்துவமாகிற சாட்சாத்காரம் பிறக்கும்படிக்கும் இப்படி சகல சேதனாசேதனங்களுக்கும் ஸ்வாமியான பரமாத்மாவைத் தன்னிடத்திற் கண்ட மாத்திரத்தில் கருமமாகிற முடிச்சு அவிழ்ந்து சம்சய விபரீதங்களுந் தவிர்ந்து, பூர்வ சஞ்சிதமான கருமங்களெல்லாம் அதன் வாசனைகளுடனே தீரும். ஆகையால், கியானிகள் ஷட்குண பரிபூரணனான வாசுதேவனிடத்தில் பரம சந்தோஷத்தினால் மனதினுடைய பிரசாதத்துக்குக் காரணமான பக்தியை இடைவிடாமல் செய்வார்கள்.

இந்தப் பக்தியை ஸ்ரீ ஹரியிடத்தில் செய்தால் மோட்சமாகிற பலன் பெறுவார்களென்றும், மற்றொருவரிடத்தில் செய்தால் அப்பலனைப் பெறமாட்டார்களென்றும் மேற்சொல்லுகிறார். அதெப்படி யென்றால் பிரகிருதி யென்றும் புருஷனென்றும் பரம புருஷனென்றும் மூன்று வகையான தத்துவங்களில் பரம புருஷன் பிரகிருதியுடைய மூன்று

வகையான ஞான குணங்களிற் கலந்து மூன்று வகையான பேரினுல் விளங்கினவனுகி மூன்று சரீரங்களைத் தரித்தான். அவைகளில் ' சத்துவத்திற் கலந்து விளங்கின பரம புருஷன் ஹரியென்றும், ரசோகுணத்தில் விளங்கின பரம புருஷன் அயனென்றும், தமோகுணத்திற் கலந்து விளங்கின பரம புருஷன் அரனென்றும், இப்படி மூன்று வகையாய் உருவை யெடுத்து, அயனுகிற வுருவாலே இந்த வுலகங்களைச் சிருஷ்டித்தும், ஹரியென்னும் ரூபத்தாலே இரட்சித்தும், அரனென்னும் உருவத்தாலே சங்கரித்தும், தன்னுடைய லீலைகளை நடப்பிக்கிற பரமபுருஷனுடைய ரூபங்களிலே சத்துவ மூர்த்தியான ஸ்ரீ ஹரியிடத்திலிருந்து (சதுர்வித புருஷார்த்தங்களும்) நாலுவகை தருமங்களும் ஜனங்களுக்கு லபிக்கும். அதென்னவென்ருல் வேதமயமான அக்கினியானவன், அரணியான கட்டையில் நிறைந்து மறைந்திருக்கிருன். அந்த அரணியை கடையுங்காலத்தில் புகைந்து கொண்டிருக்கிருன். இப்படி மூன்று வகையான உருவையெடுத்த அக்கினிக்கு அந்த அக்கினியைக் காட்டிலும் புகைகிறகட்டை பெரியது என்றும், அதிலும் ஜொலிக்கிற தணல் பெரியதென்றும், எவ்வாறு உலகத்திலனைவரும் ஒப்பும்படியா யிருக்கிறதோ? அப்படித் தாமத சரீரகனுன அரனைக் காட்டிலும் ராசத சரீரகன்ன அயனும் அவனைக் காட்டிலும் சத்வசரீரகனுன ஹரியொருவனே மேன்மேலும் அதிக மாகையால், சத்வமயமான கியானமே பிரமமென்றும் சொல்லப்படும். இப்படிச் சுத்தமாகிய சத்துவத்தில் பிரவேசித்த ஸ்ரீ ஹரியை, இந்திரியங்களால் அறியக்கூடாமலிருந்தாலும், ஷட்குண பரிபூரணனுகவே நிச்சயித்து முனிவர்கள் முன் உபாசித்தார்கள். இப்பாலந்த ரிஷிகளைப்போல மற்ற ரிஷிகளும் இந்த ஹரியிடத்திலே தானே பக்தி பண்ணுகிருர்கள். மோட்சத்தை இச்சித்தவர்களெல்லாரும் மனக்குற்றமில்லாதவர்களானுலும் அதிகோரமான தேகத்தை யுடைத்தாகிய பிரமாதிகளான பூதபதிகளைக் கழித்து, நாராயணனுடைய அமிசங்களான அவதாரங்களையே யுபாசிப்பார்கள். ராசதமும் தாமதமும் கலந்த ரசோதமோ சரீரத்தை யெடுத்த பிராணிகள் தங்களுக்குச் சமானமான சீலத்தை யுடைத்தாகிய பிதுர்ப்பதியான ஆதித்தியாதிகளையும், பூதபதியான ருத்திராதிகளையும், பிரஜாபதியான பிரமாதிகளையும், சம்பத்தைக்குறித்தும், ஆதிபத்தியத்தைக் குறித்தும், சந்தானங்களைக் குறித்தும், உபாசிப்பார்கள். ஆகையால் சகல வேதங்களும் வாசுதேவனுகிற தேவனிடத்திலேதானே விளங்கும். வர்ணுசிரம தருமங்களெல்லாம் வாசுதேவனைத்தானே குறித்

துச்செய்யத்தக்கவைகள். கியானமெல்லாம், வாசுதேவனிடத்திலே தானே சம்பாதிக்கத் தக்கவை. சகலமான தபசுகளுக்கும் பலமாகிறவன் வாசுதேவன். சகல தருமங்களும் வாசுதேவப் பிரீதியாகவே செய்யவேண்டும். இவற்றின் பலனைக் கொடுக்கிறவனும் வாசுதேவனே. ஆதிகாலத்திலே ஷட்குண பரிபூரணனான வாசுதேவன் ஒருவனே தனக்கு சுவாதீனமான பிரகிருதியினால் இந்த வுலகங்களைச் சிருஷ்டித்தான். திரிகுணமயமான இந்தப் பிரகிருதியை சரீரமாக அபிமானித்திருக்குங் காலத்திலும், இந்தப் பிரகிருதி சூட்சமமாயிருக்குங் காலத்திலும், தான் காரணமாகவும், இது ஸ்தூலமாயிருக்குங் காலத்தில் தானே காரியமாகவும் இருந்தாலும், இந்தப் பிரகிருதி குணங்கள் தன்னிடத்தில் பொருந்தாமல் விளங்குகிறான். அந்தப் பிரகிருதியினாலே செய்யப்பட்ட இந்த குணங்களில் தான் புகுந்திருக்கையால் அந்தப் பிரகிருதியினுடைய குணங்களை உடைத்தானவன் போல் விளங்குவான். அக்கினி ஒருவனாக யிருந்தாலும் தனக்கு ஆச்ரயமான மரங்களில் வெவ்வேறாகத் தோன்றுகிறாப் போல் சகல சேதனா சேதனங்களிலும் நிறைந்திருக்கிற பரம புருஷன் வெவ்வேறாகத் தோன்றுவான். ஆகையால் இந்தப் பகவான் திரிகுண மயங்களான தன்மாத்திரைகளும் பூதங்களும் இந்திரியங்களுமாகிய இவற்றால் கற்பிக்கப்பட்ட காரியங்களிலும் தன் சங்கற்பத்தினாலே நிறைந்து அதனுடைய குணங்களை அனுபவிக்கிறான். உலக சிருஷ்டிகளெல்லாம் கர்த்தாவான இவன் சத்வகுணத்தைச் சரீரமாக நினைத்து லீலாவதாரங்களில் திருவுளம்பற்றித் தேவ மனுஷ்யாதி ரூபங்களைத் தரித்து இந்த உலகங்களை ரட்சிக்கிறான்.

---

## மூன்றாவது அத்தியாயம்

*மஹா புருஷனுடைய அவதார கதையின் வினாக்களுக்கு அந்தந்த சரித்திரங்களினால் பகவத் அவதாரங்களைச் சுருக்கமாக எடுத்துச் சொல்லுகையால் சூதராலே உத்தரஞ் சொல்லப்பட்டது.*

இப்படி ஷட்குண பரிபூரணனான பரமாத்மா, ஆதிகாலத்தில் உலகங்களைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று இச்சையினால், அகங்காரம் ஒன்றும், பூதங்களைந்தும், சூக்ஷ்ம பூதங்களைந்தும், இந்திரியங்களைந்தும் ஆகப் பதினாறுகலைகளுடனே கூடிய மகத்துவமாகிய சரீரத்தை சங்கற்பித்துட், புருஷாகாரமாகிய உருவை யெடுத்தான். அந்த ரூபம் எப்படிப்பட்ட

தென்ருல், பரிபூரணமான சலத்துக்குள்ளே யோகநித்திரை செய்கிற காரணத்தாலே, யோகத்தைச் செய்கிற அந்தமூர்த்தி விசிஷ்டமான *ஸ்வாமியினுடைய நாபியாகிற மடுவிலுண்டான கமலத்திற் பிறந்த சதுர்முகனுனவன் மற்றப் பிரஜாபதிகளுக்கெல்லாம் சிரேஷ்டனுக விளங்கி பரமாத்மாவினுடைய சரீர அவயங்களாகிற எந்தஸ்தான விசேஷத்தால் பதினுலு லோகங்களையுடைய விஸ்தாரத்தைக் கற்பித்தானே, அந்த ரூபம் சத்வ மதிகமாகி அதிக பலமானது. இந்த ரூபத்தைப் பிரம்மாவானவன், அநேகங் கண்களுடனேயும், பாதங்களுடனேயும், துடைகளுடனேயும், புஜங்களுடனேயும், சிரசுகளுடனேயும், காதுகளுடனேயும், மூக்குகளுடனேயும், வாய்களுடனேயும், கிரீடங்களுடனேயும், குண்டலங்களுடனேயும், பீதாம்பரங்களுடனேயும், கூடிவிளங்கி ஆச்சரியகரமாகிய இந்த ரூபத்தைக் கண்டான். ஸ்வாமியினுடைய அவதாரங்களில் இது முதலாவது அவதாரம். இந்த அவதாரத்திலிருந்து மற்ற அவதாரங்களெல்லாம் உண்டாயின. இந்த அவதாரத்தினுடைய பரமாணுவால் தேவதைகளும் மானிட மிருக பட்சி ஜெந்துக்களையெல்லாம் கற்பிக்கப் பட்டன. இந்த விராட்புருஷன், ஆதிகாலமான கவுமார சருக்கத்தில் தானே பிரமசரியத்தைத் தரித்து துஷ்கரமான தபசைச் செய்தான். இரண்டாவது அவதாரத்தில் அந்தப் பகவான் இந்த வுலகங்களுடைய க்ஷேமத்தைக் குறித்து பாதாளத்தில் முழுகியிருந்த பூமியை உத்தரிக்க வேண்டி எக்கிய ஸ்வரூபமான வராகரூபத்தைத் தரித்தார். அப்பால் மூன்ருவது அவதாரத்தில் ரிஷிசருக்கத்தில் நாரத ரூபமான அவதாரத்தையெடுத்து, பலத்தை இச்சியாத கருமானுஷ்டானமே முக்கியமென்று கருமஞ் செய்தவனை அந்தக் கருமபலன் துடராதென்பதையும் வெளியிடவேண்டி சாத்வ சங்கிதையான பாஞ்சராத்திர சாஸ்திரத்தை அருளிச் செய்தார். நாலாவது, தருமகலா சருக்கத்தில் நரநாராயணர்களென்கிற ரிஷி ரூபங்களைத் தரித்து சகல இந்திரிய நிக்கிரகங்களைச் செய்து மற்ருெருவராலே செய்யக் கூடாத தபசைச் செய்தார். ஐந்தாவது அவதாரத்தில் கபிலாவதாரத்தைத் தரித்து யோகசித்தி சிரேஷ்டனுகி வெகு காலமா யிருக்கிற சாங்கிய சாஸ்திரத்தை தமக்கு மாதாவான தேவகிக்கு உபதேசித்து தத்துவ சமூகங்களை நிச்சயஞ் செய்தார். ஆருவது அவதாரத்தில் அனுசூயா தேவியால் பிரார்த்திக்கப்பட்டு அத்திரி மகாரிஷிக்குப் புத்திரனுகச் ஜெனித்து தத்தாத்திரேயனென்று பெயரை

யுடைத்தாகி, அன்றகனுக்கும் பிரகலாதர் முதலானவர்களுக்கும் தத்துவ உபதேசஞ் செய்தார். ஏழாவது சருக்கத்தில் ருசிப்பிரஜாபதிக்கு ஆகுனுதி தேவியிடத்தில் அவதாரஞ் செய்து, ஸ்ரீ யக்கியமூர்த்தியென்று திருநாமந்தரித்து, சுயாமாதிகளான தேவகணங்களோடு கூடி சுவாயம்பு மன்வந்தரத்தை இரட்சித்தார். எட்டாவது சருக்கத்தில் நாபப்பிரஜாபதிக்கு மேருதேவியிடத்தில் அவதரித்து, உருக்கிரமனென்கிற திவ்விய நாமத்தாலே பிரகாசித்துச் சகலமான ஆசிரமங்களும் வந்தனஞ் செய்யும்படியான கியானிகளுடைய மார்க்கத்தைப் பிரகாசஞ் செய்தார்.

வாரீர் சவுனகாதி ரிஷிகளே! ஒன்பதாவது சருக்கத்தில் முனிவர்களாலே பிரார்த்திக்கப்பட்டு பிருது சக்கரவர்த்தியென்கிற பெயரால் விளங்கி, ஒன்பதாம் அவதாரத்தையெடுத்துப் பசுவேஷத்தை யெடுத்திருந்த இந்தப் பூமியைக் கறந்து, அதிமாத்திரமான கீர்த்தியைப்பிரகாசஞ்செய்தார். பத்தாவது அவதாரத்தில் சாக்ஷுசமன்வந்தரத்திலே முழுதும் கடல்மயமான சலத்தில் மச்சிய ரூபத்தைத்தரித்து ஓடத்தைக் கற்பித்து வைவச்சுத மனுவைப் பாலனஞ் செய்து பூமியை உத்தரித்தார். பதினொன்ருவது சருக்கத்தில் தேவதைகளும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாக நாட்டி பாற்கடலில் அமுதங் கடைகிற சமயத்தில் பாதாளத்தி லமிழ்ந்து அழுந்தின மந்தரத்தைக் கூர்ம ரூபமெடுத்து முதுகிலே தரித்தார். பன்னிரண்டாம் அவதாரத்தில் தன்வந்திரியாய் அவுஷதங்களாலே ரட்சித்தார். பதின்மூன்ருவது அவதாரத்தில் மோகினிரூபந் தரித்து அசுரர்களை மோகிப்பித்து தேவர்களுக்கு அமுதபானஞ் செய்வித்தார். பதினுன்காவது, நரசிங்க அவதாரத்தில் அதி பலாட்டியனுன இரணியகசிபுவை வச்சிர சமானமான நகங்களினுலே கோரைப் பிளந்தாப்போல் அவன் மார்பைப் பிளந்தார். பதினைந்தாவது, வாமனுவதாரத்தைச் செய்து மாபலியினுடைய யக்கிய பூமியில் வந்து மூன்றடி நிலத்தை யாசித்து பதினுன்கு லோகங்களையும் ஈரடியாயளந்து மற்ருேரடியால் அவனையுங் கைக்கொண்டு,தேவர்களுக்குச் சகாயஞ்செய்தார்.பதினுருவது பரசுராம அவதாரத்தில் பிராமண துரோகிகளான ராஜாக்களைப் பார்த்துக் கோபஞ்செய்து இருபத்தொருதரம் க்ஷத்திரியர்களைச் சங்கரித்து பூமியில் அவர்களைக் கருவறுத்தார். பதினேழாவது அவதாரத்தில், சத்தியவதியிடத்தில் பராசர முனீஸ்வரருக்கு ஜனித்து தம்முடைய நடத்தையால் வியாசரென்று திருநாமந் தரித்து, வேதமாகிற மகாவிருக்ஷத்தினு

டைய சாகைகளைக்கண்டு அவற்றின் சிக்கைப் பற்றறப் பரிகரித்தார். பதினெட்டாவது அவதாரத்தில் தசாத மகாராஜாவுக்கு ஸ்ரீராம நாமத்தாலே புத்திரனாக ஜனித்துத் தேவதைகளுடைய காரியசித்தி நிமித்தமாகச் சமுத்திர நிக்கிரகஞ்செய்து, சேதுபந்தனம் பண்ணி, வெகு பராக்கிர மங்களைக் காண்பித்தார். பத்தொன்பதாவது அவதாரத்தில், விருஷ்ணி வமிசத்திலே ஜனித்து, ஸ்ரீ ராம கிருஷ்ணர்க ளென்கிற திருநாமங்களைத் தரித்து, பூமிபாரத்தைத் தீர்த் தார். இருபதாவது அவதாரத்தில் கலி வந்த பின்பு தேவத் துரோகிகளான அசுரப் பிரகிருதிகளுக்கு மோசஞ்செய்விக்க வேண்டி, கீகடதேசத்தில் சீனனுக்குப் புத்தனென்னும் புத் திரனாக ஜனித்து, வேதவிருத்த மார்க்கங்களை வெளியிட் டார். இப்பால் சகலலோகஸ்வாமியான இவர் யுக சந்தி யிலே ராஜவர்க்கங்கள், சுவதருமங்களைவிட்டுத் திருடரைப் போல் ஜனங்களை அடித்துப் பறிக்குங்காலத்தில் விஷ்ணு யெச்சென்கிற பிராமணனுக்குக் கற்கியென்னுந் திருநாமந் தரித்துப் புத்திரனாக ஜனிக்கப்போகிறார்.

ஓ பிராமண சிரேஷ்டர்களே! பெரிதான நதியாதி களிலேயிருந்து உபகாரார்த்தமாகப் பிறந்த கால்வாய்களைப் போல, உலகவுபகாரமாகச் சத்வ சம்பூரணனான ஸ்ரீ ஹரியினு டைய அவதாரங்களை யெண்ணில் முடியாது. அந்த அவதா ரங்கள் எவைகளென்றால், ரிஷிகளும், மனுக்களும், தேவதை களும், மற்றுமுள்ள மிகவுந் தேஜசையுடைத்தான மனுகுமா ரர்களும், பிரசாபதிகளும், இவர்களெல்லாம் பகவத் அமிசங்க ளல்லாமல் வேறல்ல. எந்தக்காலங்களில் இந்திரசத்துருக்க ளான அசுரர்களும், இராக்ஷதர்களும், மற்றுமுள்ள துஷ்டர் களும் லோகங்களைப் பீடிப்பார்களோ அக்காலத்தில் இந்த வுலகங்களுக்குச் சுகங்களை உண்டுபண்ணவேண்டி, அவர்களி டத்தில் பகவதமிசம் அணுப்பிரவேசமாயிருக்கும். ஸ்ரீ கிரு ஷ்ணமூர்த்தியோவென்றால் பரிபூரணனான பரமாத்தும ஸ்வ ரூபம். இந்த ஷட்குண பரிபூரணனான பரமபுருஷனுடைய அவதார இரகசியத்தை யாதொரு மனுஷன் உபய சந்தியா காலங்களிலேயும் பரிசுத்தனாகி பக்தியுடனே ஸ்தோத்திரம் பண்ணுகிறானோ அவன் சமஸ்தமான துக்க சமுசாரத்தை யும் நீக்குவான். கருமாதீனமான சரீரங்களில்லாமல் ஞான ஸ்வரூபனான பரமாத்மாவுக்கு முன் சொன்ன ஸ்வரூபங்கள் பிரகிருதி குணங்களால் கற்பிதமான மகதத்வாதிகளினாலே தன்னிடத்தில் தன் இச்சையினால் உண்டாக்கிக்கொண்ட ரூபங்கள். சுத்தமான ஆகாசத்திலே மேகங்கள் ஓட்டாம

லிருந்தாப்போலவும், வாயுவிலே பூபராகம் ஒட்டாம லிருக்கி றது போலவும், கியானுசிரியனுன பரமாத்மாவிலே ஒட்டா மல் சம்பந்தித்திருக்கிற இந்த ரூபங்களை, புத்தியீனர்கள் சேதனங்களுக்குக் கருமத்தினுலே வந்த சரீரம்போல் கருமா தீனமான சரீரமென்று நினைப்பார்கள். இந்த விராட்புருஷ ரூபத்தைக்காட்டிலும் உத்கிருஷ்டமாகியும் வேருகியு மிருக் கிற ரூபம் ஒன்றுண்டு. அதன் ஸ்வரூபம் என்னவென்ருல், ஏற்றக்குறைவில்லாததான சத்வாதி குணங்களாலே விருத்தி யடையாமலும் ஒருவராலேயுங் காணப்படாமலும் கேட்கப் படாமலு மிருக்கிற ஸ்வரூபத்தை யுடைத்தாயிருக்கையால், வெளிப்படாமல் இருப்பது அவ்வியக்தமென்று சொல்லப் படும். அந்த ரூபத்தைத் தரித்த பரமாத்மாவினிடத்தில் பிரயப் பிரளய காலத்திலே சகல ஜீவ சமூகங்களும் சூட்சுமமென்று சொல்லப்படுகிற அந்தச் சரீரங்களுடனேகூடி மறைந் திருந்து, பின்பு மற்றொரு பிரம்மகற்ப காலத்திலே வேருக வருகையால் சகல ஜீவர்களும் பிறப்பார்களென்று சொல்லு வார்கள். இந்த வஸ்துவினிடத்தில் பிரகிருதி கற்பிதமான இந்த இரண்டு ருபங்களும் கர்மாதீனமாக வந்தனவல்ல. அவனிச்சையால் ஒப்பவந்தவையென்று தன்னுடைய புத்தி யினுலே நிச்சயமாகத் தெரிந்துக்கொள்ளுகிற கியானமே பிரமக் கியானமென்று சொல்லப்படும். இந்தக் கியானம் மோகசனகமான இந்த மாயை தவிர்ந்தாலே அல்லாமல் சம்சய திரிபுகளைத் தவிரமாட்டாது.

அப்படித் தெளிந்த கியானமுடையவனே சம்பூரண னென்று சொல்லுவார்கள். அந்த புருஷன் ஜீவனுக்கு முக்தி திசையில் காணும்படியான குணஷ்டங்களை உடைத்தான தன்னிடத்திலே நிறைந்த ஆத்மாவான ஷட்குண பரிபூர ணனை அனுபவித்துச் சிலாக்கியனுவன். கருமாதீனமான செயலும், கருமாதீனமான ஜன்மமுந் தவிர்ந்த சர்வ பூதாந்திரியாமியாகிற பரமாத்மாவினுடைய அவதாரங்க ளும், லீலைகளும், அவனிச்சையினுலே யுண்டானவே யல்லாமல் கருமத்தினுலே வந்தனவென்று, வேதங்களிலே இரகசியமாக விருந்ததைத் தத்வக்கியானிகள் சொல்லுகிருர் கள். இப்படி கியானஸ்வரூபனும் கியானகுணகனுமாகித் தன்னிச்சையினுலே சேதனு சேதனங்களைச் சரீரமாகத் தனக்குச் சங்கற்பித்து, அவ்வியக்த சரீரகனும் மகத்துவ சரீரகனுமாகிய பரமபுருஷன், தான் நினைத்தபடி முடிக்கும் வல்லமையை உடைத்தானவ னுகையால், இந்த வுலகங் களைச் சிருஷ்டித்தும், பாலனஞ் செய்தும், சிலந்திப்பூச்சி

போலத் தானே விழுங்குகிறுன். இந்த வுலகங்களை இரட்சிக்குங் காலத்திலும், சகல பூதங்களிலும் தான் உட்கலந்து, அவற்றின் குணங்கள் தன்னை யண்டாமல் தானே சுதந்தரனுக யிருந்து, ஜீவராசிகள் அஷ்டவர்க்கங்களை அனுபவிக்குங் காலத்திலும், அதன் கந்தத்தைத் தான் ஆக்கிராணம் செய்கிறதே யல்லாமல் பொசிக்கவில்லை. இப்படி ஷட்குணபரிபூரணனுன பரமாத்மாவினுடைய மகிமைகளை ஜனித்திருக்கிற ஜீவாத்மாக்களெல்லாம் கருமத்தினுல் குறைந்தும், விபரீதமாகியு மிருக்கிற கியானத்தை உடைத்தானவராகையால் தெளிவாக அறியமாட்டார்கள். வேஷதாரியானவன் பலவேஷந் தரித்தாப் போலவே, தானும் தன் சங்கற்பத்தால் வெகுவித ரூபங்களையும் நாமங்களையுந் தரித்திருக்கிற இவனை நிசமாக அறிந்தேனென்றும் ஸ்துதி செய்தேனென்றும் நினைத்தவன் அறிந்தவனல்ல. யாதொரு புருஷன் கபடமில்லாமலும் இடைவிடாம லிருக்கிற நினைவினுலே அளவிடப்படாத மகிமையை உடைத்தாகியும், இந்த வுலகங்களுடைய சிருஷ்டி முதலானதுகளையுஞ் செய்கிற சக்கிரபாணியினுடைய பாதபத்ம கெந்தத்தை அனுபவிக்கின்றுனே அவனே அவனுடைய மகிமை யறிவான்.

ஓ தன்னியரான சவுனகாதி ரிஷிகளே! மகானுபாவர்களான நீங்கள் சகல லோகநாதனுன இந்த வாசுதேவனிடத்தில் சர்வ சரீரகனுக நினைத்து எப்படி ஆத்மபாவத்தை நினைக்கிரீர்களோ அதனுல் இந்த உக்கிரமான சமுசார சக்கிரம் எந்த வஸ்துவினிடத்தில்லையோ அந்த வஸ்துவைச் சேருவீர்கள், சமுசயமில்லை. வியாசபகவான் வேதசமானமான இந்தப் பாகவத புராணத்தை உத்தமமாகிய கீர்த்தியையுடைத்தான ஸ்ரீ ஹரியினுடைய லீலாவண்ணமாகவே செய்தார். சகல லோகங்களுடைய சிறப்பைக் குறித்துச் செய்யப்படும் க்ஷேமங்களுக்கு இருப்பிடமாகி மிருக்கிற மகத்தான இந்தப் புண்ணிய சரித்திரத்தைச் சாந்தி நிதியான தன் புத்திரனுக்கு உபதேசித்தார். அவருஞ் சகல வேதங்களிலும் இதிகாசங்களிலும் எடுக்கப்பட்ட சாரமாகிய இந்தப் புராணத்தை உத்தமனுகிய பரிட்சித்து மகாராஜாவுக்குச் சொன்னுர். கங்கையில் பிராயோபவேசஞ் செய்திருந்த பரிட்சித்து மகாராஜாவுக்கு சுகமுனி இந்தப் பாகவத வுபதேசஞ் செய்யுங் காலத்தில், பிரம்மரிஷிகள் அனைவருங் கேள்விப்பட்டிருந்தார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணன் தருமங்களுடனேயும் கியானங்களுடனேயும் கூடவே பரமபதஞ் சேர்ந்த பின்பு, இந்தக் கலியுகத்

தில் தருமக் கியானங்களாகிற கண்கள் இழந்த பிராணிக ளுக்கு உண்மையான பொருளை விளக்கவேண்டி இந்தப் புராணமானது ஆதித்ய வுதயம்போலே உண்டாயிற்று. வாரீர் பிராமணர்களே! அந்தக் கங்கையிலே பரிட்சித்து மகாராஜாவுக்கு உபதேசம் பண்ணுகிற பிரம்மதேஜோ நிதி யான சுகமுனிவர் என்னை யனுக்கிரகித்து அருகே வைத்துக் கொண்டு உபதேசித்தார். அவரிடத்தில் நானும் அதிகரித் தேன். அப்படி அதிகரித்த நான் தெரிந்துகொண்டபடி என்புத்தி அனுசாரம் உங்களுக்கு அறியப்பண்ணுகிறேன் அன்புடன் கேளுங்கள்.

---

## நான்காவது அத்தியாயம்

*இதில் பகவானருளிய சாஸ்திரத்தினுடைய ஆரம்பத்துக்கு காரண மாவதையும், தபசினாலேயும், இதிகாச புராண யுக்திகளினா லேயும், வியாசருக்குச் சந்தோஷ மில்லாமையையும் வர்ணிக்கப்படுகிறன்து.*

தபோநிதியான சூதபுராணிகரைப் பார்த்துத் தீர்க்க சத்திரயாகத்தில் தீட்சதர்களான முனீஸ்வரர்களில் பெரியவ ராகி யிருக்கிற இருக்குவேத பாரங்கதரான சவுனகரென்கிற குலபதி மிகவுந் துதிசெய்து ஒருவார்த்தை சொல்லுகிறார். ஓ மகானுபாவராகிய சூதரே! தத்வங்களை யுரைக்கிறவர்களுக் குள்ளே சிரேஷ்டரே! புண்ணியமான இந்த பாகவதக் கதையை மகானுபாவரான சுகமுனீஸ்வரர் எப்படிச் சொன் னாரோ அப்படியே நீரும் எங்களுக்குச் சொல்லவேண்டும். எந்த யுகத்திலே இந்த ஸ்ரீ மகா பாகவதம் பூலோகத்திலே வந்தது? எந்த ஸ்தானத்திலே எந்த காரணத்தினாலே எவராலே ஆக்கியாபிக்கப்பட்டு வியாச முனீஸ்வரர் இந்தச் சத்கீதையைச் செய்தார்? அவருக்குக் குமாரரான சுகமுனீஸ் வரர் யோகீஸ்வரர்களுக் கெல்லாம் சிரேஷ்டராகி சகல வஸ்துக்களிலும் நிறைந்த பரமாத்ம ஸ்வரூபத்தை யேகரூப மாக நினைத்துத் தன்னிடத்தில் பிரகாசிக்கிற பரமாத்மாவி னிடத்தில் வைத்த மனதைச் சலிக்க வொட்டாமல் நிறுத்தி, பிறருக்குத் தெரியாமல் மூடவேஷத்தால், நின்ற விடத்திலே நில்லாமல் சஞ்சரிக்கிறவர் நகரவாசிகளான ஜனங்களாலே எப்படிக் காணப்பட்டார்? குருசாங்கல தேசங்களிலே ஏன் வந்தார்? உன்மத்தனைப்போலவும் ஊமையைப்போலவும் சஞ்சரிக்கிறவர் அஸ்தினாபுரத்தில் ஏன் வந்தார்? ஒரு கால விசேஷத்தில் சுகமுனிவரைப் பின்றொடர்ந்து ரிஷியோக்

கியமான வஸ்திரந் தரித்து வருகிற வியாசரைக் கண்டு வஸ்திரங்களில்லாமல் ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்த தேவகன்னிகைகள் சீக்கிரமாக லச்சையாலே வஸ்திரந் தரித்த ஆச்சரியத்தைக்கண்டு அந்தத் தேவஸ்திரீகளை வியாசமுனீஸ்வரர் பார்த்து, ஓ கன்னிகையர்களே! என்மகன் எவ்வனமுள்ள புருஷன், அவன் வஸ்திரமில்லாமல் வருகை யில் நீங்களும் வஸ்திரமில்லாமல் கேளிவிலாசமாக விருந் தீர்களே, வஸ்திரந்தரித்தும் விர்த்தனுமாகிய என்னைக்கண்டு ஏன் வஸ்திரந் தரித்தீர்களென்று கேட்க, அந்தக் கன்னிகை கள் வியாசரே யுமக்கு ஸ்திரீயென்றும் புருஷரென்றும் இரண்டு விபாகமுண்டு. உம்முடைய மகனுக்கு பரிபூரண மான பிரம்மஸ்வருப விவேக மொன்றே யல்லாமல் வேறில்லை யென்று சொன்னார்க ளல்லவோ? அப்படிப்பட்ட பரம முனீந்திருடனே பாண்டு குலத்தில் ஜனித்த பரிட்சித் தென்று பெயரையுடைத்தான ராஜரிஷி அந்த முனீந்திர ரைக்கேட்கவும், அவருக்கு அந்த முனீந்திரர் தெளிய வுரைக்கவுமான சம்வாதம் எப்படி உண்டாயிற்று? அந்த சம்வாதத்திலலல்லவோ இந்த சாத்வஜனன ஸ்ரீ கிருஷ்ண னுடைய கதைகள் நடந்தன; அந்த சுகமுனீந்திரர் கிரகஸ் தாச்சிரமத்திலிருக்கிற ஜனங்கள் அந்த ஆச்சிரமத்தைப் பரி சுத்தஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தால், அவர்களி டத்தில் தயவினாலே ஒரு பசு பால் கறக்குங்காலம் அவ்விடத் திலிருந்து அவர்களாலே வந்தனஞ் செய்யப்படுவார். அப் படிப்பட்ட சுகமுனிவர், வெகுகாலம் அவ்விடத்தில் எப்படி யிருந்தார்?

ஓ சூதரே! அபிமன்யு குமாரனான பரிட்சித்து மகா ராஜாவை பாகவதோத்தமனென்று சொல்லியிருக்கிறார்கள். அவனுடைய ஜனனமும், கருமங்களும் ஆச்சரியமானவை அவைகளையும் எங்களுக்கு நீர் சொல்லவேண்டும். அந் தப் பரிட்சித்துச் சக்கரவர்த்தி பாண்டு குமாரர்களுடைய பெருமையை விர்த்தி செய்து, இந்த பூமண்டலமெல்லாம் நிறைத்தவன். அவன் எந்தக்காரணத்தினால் மகாராஜ சம் பத்தை எண்ணாமல் கங்கையிலே பிரயோபவேசஞ் செய்தான். சகல சத்துருவர்க்கங்களும் தங்களுடைய க்ஷேமத்தைக்கோரி தங்கள் சம்பத்துகளைச் சமர்ப்பித்து' எவன் பாதபீடத்தை வணங்கினார்களோ, அந்தத் தீரன், தான் எவ்வனத்தையும் தனக்கு அதிக சிலாக்கியமான சம்பத்தையடைந்தும் பிரா ணனை விடவேண்டுமென்று எப்படி நினைத்தான்? இது ஆச் சரிய மாயிருக்கின்றது. வேதார்ச்சிதனான பரமாத்மாவினிடத்

திலே பற்றின சித்தவிருத்தியுண்டான சாதுஜனங்கள் சகல ஜீவர்களும் அசுபங்களை நீக்கிச் சுபங்களைக் கற்பித்துப் பின்னும் அவர்கள் உத்தமகதியடையும்படி இதத்தைச் செய்ய வேண்டித் தாங்கள் ஜீவிக்கிறதேயல்லாமல் தங்கள் பிரயோசனத்தைக் கோருகிறதில்லை. ஆகையால் காமக் குரோதாதிகளுக்கு வசமாகாமலிருக்கிற தன்சரீரத்தை வெறுத்துப் பரிக்ஷித்துமகாராஜா ஏன் சரீரத்தை விட நினைத்தான்? வேதார்த்தத்தை வெளியிட்ட ஸ்வரூபமில்லாத புராணங்களும், தரும சாஸ்திரங்களும், இதிகாசங்களுமாகிற வாக்குகளுக்கு விஷயமான தரும தத்வங்களிலே தேவரீர் சிரேஷ்டராகையால் நாங்கள் கேட்ட இந்தச் சூக்ஷ்மமான அர்த்தங்களை எங்களுக்குச் சம்பூரணமாகச் சொல்லவேண்டுமென்று சொன்ன சவுனகாதி ரிஷிகளைப் பார்த்துச் சூதபுராணிகர் சொல்லுகிறார்.

கேளுங்கள் சவுனகாதிரிஷிகளே! மூன்றும்யுகமாகிய துவாபரயுகத்திலே ஸ்ரீ பராசரமுனீந்திரருக்கு வாசவிதேவியிடத்திலே ஸ்ரீஹரியினுடைய அம்சமாகிய ஸ்ரீ வியாசமுனீந்திரர் ஒருகாலத்திலே சரஸ்வதி நதியில் ஸ்நானஞ்செய்து சரியைமுதலானவற்றை முடித்துக்கொண்டு பரிசுத்தராகி, ஜனமில்லாவிடத்தில் தாம் ஒருவராயிருந்துகொண்டு, சூரியவுதயமான பின்பு தருமாதருமங்கள் அறிந்தவராகையால், அறியக்கூடாமலிருக்கிற சூரியவேகத்தை யுடைத்தான காலத்தினாலே உண்டாகிய யுக தருமங்களுடைய சங்கற்பத்தை அந்தந்த யுகத்தில் கண்டு, அந்தந்த யுகதருமங்களுடைய யுகப்பிரமாணத்திலே பூமியில் பிறந்த சேதனாசேதனங்களுடைய சாமர்த்தியக் குறைவுபாட்டையும், அந்த ஜனங்களுக்குச் சிரத்தையில்லாமையும் ஈனபலமாயிருக்கையும், துற்புத்திகளையும் அற்பாயுள்களையும் அவர்களுக்குண்டான ரோகபீடைகளையும் திவ்ய தியானத்திலே கண்டு, சகல வர்ணங்களுக்கும் சமஸ்த வாச்சிரமங்களுக்கும், இதமானதெதுவென்று தியானம்பண்ணி வேதத்தினாலே விதிக்கப்பட்ட யக்கிய கருமம் நாலுவகையினாலே செய்யப்பட்டிருந்தாலும் பிரஜைகளுக்குப் பரிசுத்தமாகவே யிருக்குமென்று நினைத்து, அப்படியே சங்கற்பித்து யக்கியம் விருத்தியடைய வேண்டி, ஒன்றாகக் கலந்திருந்த வேதத்தை ருக்குவேதமென்றும், யசுர்வேதமென்றும், சாமவேதமென்றும், அதர்வண வேதமென்றும் நாலாகப்பிரித்து அவற்றுடனே இதிகாச புராணங்களை ஐந்தாம் வேதமாகக் கற்பித்து பயிலவனென்கிற ரிஷிக்கு ருக்குவேதத்தை உபதேசித்துக், கியானியான ஜைமுனிக்குச் சாமவேதத்தைச் சொல்லி, வைசம்பாயனரென்கிற

முனிசிரேஷ்டருக்கு யஜுர்வேதத்தைத் தெளியவுரைத்து, குரூராரான சுமந்துவென்கிற முனிக்கு அதர்வண வேதத்தை அப்பியாசம் பண்ணிவைத்து, இதிகாச புராணங்களை என்னுடைய பிதாவான ரோம ஹர்ஷணருக்கு அனுக்கிரகித்தார்.

இப்படிச் சிஷ்யர்களான பயிலவாதி முனிவர்கள் தங்களுக்கு உபதேசித்த வேதங்களை அநேக விதங்களாகப் பிரித்து, தாங்கள் தங்கள் சிஷ்யர்களுக்கும், அவர்கள் தங்களுடைய சிஷ்யருக்கும், இப்படிப் பாம்பரையாக உபதேசஞ் செய்வித்ததினாலே அந்த வேதங்கள் சாகைகளாகப் பிரிந்தன. ஆகையாலே அந்த வேதங்கள் சிற்றறிவான மனுஷ்யர்களாலேயும் தரிக்கும்படி யோக்கியமாக வியாசபகவான் தீனவற்சலராகையாலே அனுக்கிரகித்தார். இப்பால் ஸ்திரீகளுக்கும், சூத்திரர்களுக்கும், பிரமபந்துக்களுக்கும், காதினாலேயுங்கேட்கக்கூடாத வேதவிகித கருமங்கள் தம்முடைய சிரேயசை அறியமாட்டாமலிருக்கிற பிராணிகளுக்குச் சிரேயசுக்களை உண்டுபண்ணவேணுமென்று நினைத்துக் கிருபையினாலே அந்த வியாஸர் இதிகாசமான பாரதத்தைச் செய்தார். இப்படிச் சர்வ பிரகாரத்தினாலேயும் அந்தப் பிராணிகளுடைய இதத்தைச் சிந்தித்திருக்கிற வியாசருக்குச் சர்வாத்மகனான பரமாத்துமாவைத் தன் இருதயத்தில் சார்வதா நினைத்திருந்தும் மனதிலே சந்தோஷமில்லாமற்போயிற்று. இப்படிமிகுந்த சந்தோஷமில்லாத இருதயத்தை யுடைத்தான வியாசயோகி, பரிசுத்தமான சரஸ்வதி நதிதீரத்தில் ஏகாந்தமாக இருந்துகொண்டு ஆலோசனைபண்ணித் தருமங்களை அறிந்தவராகையாலே தனக்குள்ளே தான் சிந்திக்கின்றார். உபநயனமுதல் விரதயுக்தனாகி வேதங்களை அத்தியயனஞ்செய்தேன். குருக்களுக்கும், அக்கினிகளுக்கும், சந்தோஷம் செய்துவைத்தேன். சாஸ்திரம் விதித்த தருமங்களை வழுவுதலில்லாமலும் கபடமில்லாமலும் நடத்தினேன். பாரதமென்னும் நிமித்தத்தாலே வேதார்த்தங்களை வெளியிட்டேன். ஸ்திரீ சூத்திரர்களுக்குத் தெரியும்படி தருமங்களை வெளியிட்டேன். இப்படி யெல்லாஞ் செய்திருந்தும், இந்தத் தேகத்தில் வசிக்கிற ஆத்மாவுக்கு, என்னுடைய ஆத்மாவிலே நிறைந்திருக்கிற அந்தராத்மாவினாலே வருகிற ஆனந்தானுபவமும், மனதினாலே வருகிற சந்தோஷமும், அதிதுஷ்டனுக்குண்டான பிரம்மதேஜசுபோல பரிபூரணமாகாமைக்கு நிமித்தந்தெரியவில்லை. இதனால் பகவானுக்குப் பிரீதிகரங்களான பாகவத தருமங்களை மிகுதியாகச்

சொல்லாமலிருந்தேன். அந்தத் தருமங்களல்லவோ பரம அம்சர்களுக்கும், பரமாத்துமாவுக்கும், அதிப்பிரியமான தென்று, சகல பிராணிகளுடைய சுகத்தைக்குறித்து வியசனத்தை அடைந்து சிந்தித்திருக்கிற வியாசமுனிவருடைய ஆச்சிரமத்திலே நாரத முனீஸ்வரர் எழுந்தருளினார். தேவ பூசிதரான அவரை வியாச பகவான் எதிர்கொண்டு சீக்கிரமாக அர்க்கிய பாத்தியாசமன்யங்களாலே பூசித்துக் களிப்பாக வினவினார்.

## ஐந்தாவது அத்தியாயம்

*சர்வ தருமங்களைப் பார்க்கிலும் ஹரிகீர்த்தனத்தினுடைய கௌரவம் வியாசருடைய சித்தப் பிரசாதத்தின் பொருட்டு நாரதராலே உபதேசிக்கப்படுகின்றது.*

மிக்க கீர்த்திசாலியான நாரதமுனீச்வரரும் தமக்கு உபசாரங்கள் பண்ணின வியாசமுனீஸ்வரர் சுகாசனமாக தம்முடைய சமீபத்திலிருந்த பின்பு, அவரைப் பார்த்துத் தம்முடைய கையிலிருக்கிற வீணையினாலே கானஞ்செய்து கொண்டு புன்சிரிப்புடனே கூடினவர்போல ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாரீர் பாராசரர் குமாரரே! மஹானுபாவரே! உம்முடைய சரீரத்தில் பிரகாசிக்கிற ஜீவாத்மாவினிடத்தில் இருக்கிற அந்தரியாமியான பரமாத்துமாவினுடைய அனுபவத்தினாலே அவனுக்குச் சரீரமாகிய ஜீவாத்மாவுக்கு ஆனந்தமுண்டாயிருக்கிறதா? மனதினாலே கற்பிதமான சகல விந்திரிய விசிஷ்டமாகிய தேகத்துக்குச் சகல தரும விரத அனுஷ்டானங்களாலே சந்தோஷமிருக்கிறதா? ஆச்சரியமாகியும், மகத்தாயுமிருக்கிற வஸ்துவை அறியவேண்டு மென்று நினைத்திருந்தீரே, அதையறிந்தீரா? தருமார்த்த காம மோக்ஷங்களுக்குச் சாதகமாகிய தருமங்களினாலே மிகுதியாகிய பாரதமென்னும் இதிகாசத்தைச் செய்யவேண்டு மென்று நினைத்திருந்தீரே, அதைச் செய்தீரா? ஆதிமத்தியாந்த ரகிதமான பரப்பிரம்மத்தை அறியவேண்டுமென்று நினைத்திருந்தபடி நிச்சயமாகத் தெரிந்து கொண்டீரா? இப்படி யிருந்தாலும் ஒரு பிரயோஜனத்தைக் குறித்து வெகு பிரயாசஞ் செய்தவன் அந்தப் பலனை யிழந்தால் எப்படியோ, அப்படி உம்மைக்குறித்து நீரே சுகப்படுகிறீரோயென்று சொன்ன நாரதமுனீந்திரரைப்பார்த்து வியாசமுனிவர் சொல்லுகிறார். என்னிடத்தில் நீர்சொன்ன நடத்தையுள்



படம் நெ. 2. பக்கம் 24.

வியாசருக்கு, நாரதர் ஹரிகீர்த்தனத்தினுடைய பிரபாவத்தை கூறுதல்.

ளதுதான் ; சத்தியமாகவே சொன்னீர். இப்படியெல்லாம் உபகாரஞ்செய்திருந்தேன். ஆனாலும் என்னுடைய ஆத்துமா சந்தோஷம் அடையவில்லை. அதன் காரணத்தையும் அறியவில்லை. ஆகையால் பிரம்மதேவனுடைய சரீரத்தில் ஜனித்து அளவிடப்படாதக் கியான நிதியான தேவரீரைக் கேட்கிறேன். இப்படி ஜனித்தவர்களில் ஆதிபுருஷனாகியும், உயர்ச்சி தாழ்ச்சி இல்லாதவனாகியும், சகல வஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகியும், பிரகிருதியைச் சரீரமாகக் கிரகித்தும் மனதிலேதானே இந்த உலகங்களைக் கற்பித்தும், ரக்ஷித்தும், சங்கரித்தும், அந்தப் பிரகிருதியினுடைய கூட்டம் தவிர்ந்திருக்கிற சதுர்முகனுடைய சமீபத்தில் வசித்து அவருடைய தயவினாலே பரம சூட்சுமமான சகல தருமங்களையுந் தெரிந்த தேவரீர் சூரியனைப்போல மூன்றுலோகமும் சஞ்சரித்துச் ஜீவாத்ம சாட்சியான பிராணவாயுவைப்போல யோகவெள்ளத்தினாலே சகல ஜீவாத்மாக்களுடைய மனதிலுஞ் சஞ்சரிக்கிற சக்தியை யுடைத்தானவராகையால் கேட்கிறேன். பலத்தை இச்சியாமல்உரிய தருமங்களாலே, அணுவுக்கும் அணுவாய், மகத்துக்கு மகத்தாகிய பரமாத்மாவினிடத்தில், நியம அத்தியயனாதிகளான விரதங்களாலே வேதங்களிலும் நிஷ்டை பொருந்தின எனக்கு உண்டான குறைவைச் சொல்ல வேண்டுமென்று வினயத்துடனே விக்ஞாபனம் பண்ணின வியாசரைப் பார்த்து வேதமுனியான நாரத முனிவர் சொல்லுகிறார்.

ஓ வியாசமுனிவரே ! ஷாட்குண்ய பரிபூரணனான பரம புருஷனுடைய களங்கமற்ற கீர்த்தியை நீர் பரிபூரணமாகச் சொல்லவில்லை. அந்தக் காரணத்தினாலே உம்முடைய ஆத்மாவுக்குச் சந்தோஷம் பிறக்கவில்லையென்று நினைக்கிறேன். மிகுதியாகப் பரமாத்மாவினுடைய குணங்களை நீர் ஸ்துதி பண்ணாமற்போனதினாலே முன்சொன்ன உம்முடைய பரிபூரணக் கியானங்களுங் குறைந்தன. வாரீர் முனிசிரேஷ்டரே! தருமமுதலான புருஷார்த்தங்களும், அதன் சாதனங்களும், விஸ்தாரமாக எப்படி வர்ணிக்கப்பட்டனவோ, அப்படிச் சர்வத்திர பரிபூரணனான வாசுதேவனுடைய மகிமை விஸ்தாரமாக வர்ணிக்கப்படவில்லை. எவ்வாறு சொற்கள் மிகுதியான ஆச்சரியங்களுக்கு இடமாகியிருந்தாலும், உலகங்களுக்கெல்லாம் பாவனமான ஸ்ரீஹரியினுடைய புகழை ஸ்துதிசெய்யவில்லையோ அந்தச் சொற்களை மனதிலே பரமாத்மானுபவம் பண்ணுகிற ஜனங்கள் காகங்களிறங்குந் துறையென்று சொல்லுவார்கள். ஆகேகினென்

ருல் அதிமனோகரமான பிரம்மத்தினிடத்தில் களிக்கிற பரம அம்ஸ முனிவர்களாகிற ராஜ ஹம்ஸங்கள் அவ்விடத்தில் களிக்கமாட்டா. ஆகையால் யாதொரு பிரபந்தத்தில் சுலோ கப்பிரதிசுலோகங்களும் இலக்கணப் பழுதான சொற் களா யிருந்தாலும், அனந்தனுடைய கீர்த்திகளுக்கு உரியதாகிய நாமங்களை ஒருவர் சொல்லுகிற காலத்தில் தாங்கள் கேட்டும், கேட்கிற ஜனங்களிருந்த காலத் தில்! தாங்கள் தியானஞ்செய்தும், மற்றொருவரு மில்லாத காலத்தில் தாங்களே படித்தும், சாதுஜனங்கள் சுகத்தை யடைகிறார்களோ, சகல ஜனங்களையும் பாவனஞ்செய்கிற அந்தப் பிரபந்தமே சிலாக்கியமானது. பலாபேக்ஷையில்லா மற்செய்த கருமங்களும் அச்சுதனிடத்தில் பக்தியில்லாமற் போனால் பிரகாசிக்கமாட்டா. பிரகிருதி சம்பந்த நீங்கிய ஜீவஸ்வரூப சாக்ஷாத்காரமும் ஜீவசரீரகனான பிரம்மோபாச னத்துக்கு அங்கமாகாமற்போனால் அது மிகவும் பலமில் லாததேயாம். இப்படித் தன்னை யனுஷ்டிக்குங் காலத்திலும் தான் பலன்களைக் கொடுக்குங் காலத்திலும் வெகு சிரமத் தைக் கொடுக்கிற கருமங்கள் அச்சுதனிடத்தில் சமர்ப்பிக்கப் படாதபடியினாலே ரசோகுண தமோகுணங்களை விலக்கிச் சத்வவிருத்தியை ஜனிப்பிக்கமாட்டாமற்போன பின்பு ஏன் பிரகாசிக்கும்? ஆகையால் வாரீர் மகானுபாவரே! அமோக மானக் கியானத்தை உடைத்தாகியும், பரிசுத்தமான கீர்த் தியை யுடைத்தாகியும், எதார்த்தத்திலே விருப்பமுண்டாகி யும், சத்தியத்திலும் மெய்ஞ்ஞானத்திலும் ருசியுண்டாகியும், உசிதவிரதங்களை அனுஷ்டித்துமிருக்கிற தேவரீர் சகலமான சமுசாரங்களுடைய பந்தங்களை விலக்கப்பட்ட திரிவிக்கிரம னுடைய திவ்ய லீலைகளைத் தியானஞ்செய்து சாக்ஷாத்காரஞ் செய்யவேண்டும். அந்தப் பகவானுடைய லீலைகளைப் பார்க்கி லும் வேறான தருமங்களை நினைத்தும் விரும்பியும் சொல்லு கையால், அந்தந்தத் தருமங்களை, நிச்சயித்த ஜனங்களுக்கு அந்த ஈனதருமங்களுடைய போகங்களிலேயும், ஸ்வரூபக் கியானங்களினாலேயும் தேறித் தெளிந்தவர்களுக்கு ஓரிடத்தி லும் நிலைகொள்ளாமலிருக்கிற புத்தியானது, பெருங்காற்றில் அடிபட்ட கப்பல்போல் தன்னிலையில் ஒரு காலத்திலும் நிற்கமாட்டாது. சுபாவமான ஆசையுள்ள ஜனங்களுக்குத் தருமத்தைப் போதிக்கவேண்டி இழிவான விதிகளைச் சொல்லுகிறது மிகவும் கரைகடந்த சொற்கள். அந்தச் சொற்களாலே சொல்லப்படுகிறதே தருமமென்று நிச்சயித்த ஜனங்கள் அது ஈனதருமமென்று அதைத் தவிர்ந்து சிலாக் கிய தருமமான ஹரிசரித்திரங்களை விரும்பமாட்டார்கள். சகல

லோகநாதனுடைய ஆதியந்தமில்லாத மகிமையை நினைத்து அவன் கைங்கர்யரூபமாக அனுஷ்டிக்கிற நிசவிருத்தி தருமங்களாலே வருகிற சுகத்தை அறிந்து அதன் இலக்ஷணந் தெரிந்தவன் எவன்தான் விரும்பமாட்டான்? பிரகிருதி குணங்களாலே பரவசமாகி அபிமானத்துடனேகூடிய ஜனங்களுக்கு உபயவிபூதி நாயகனாகிய ஸ்ரீ ஹரியுடைய திவ்ய சரித்திரங்களைத் தெரியச் சொல்லவேண்டும் ஸ்வாமி யென்று மறுபடியும் சொல்லுகிறார்.

அபக்குவமான மனதையுடைத்தானவன் வர்ணாச்சிரமத்துக்கு யோக்கியமான தருமங்களை ஸ்ரீ ஹரியினுடைய சரண கமலங்களைப் பஜனஞ்செய்து, அந்த ஜன்மத்தை விட்டு நிகிருஷ்டமான ஜன்மத்தை எடுக்கையிலும், ஏதாகிலும் ஒரு ஜன்மத்தில் அந்த அசுபத்தைத் தவிர்ந்து உத்தம கதியை யடைந்தானாகில், தனக்கு உசிதமான வர்ணாச்சிரம தருமங்களைப் பலாபேக்ஷையைவிட்டு அனுஷ்டித்து ஸ்ரீ ஹரி பஜனஞ் செய்கிற பேர்கள் அற்புதமான பரமபதத்தை அடைகிறதற்குச் சொல்லவேண்டியதென்ன? ஒவ்வொருவரும் அவரவர் செய்த புண்ணிய பாவங்களினால் சொர்க்க நரகங்களென்கிற உயர்ந்ததும் தாழ்ந்ததுமான விடங்களில் சுழன்றுதிரிகிற பிராணிகளுக்குத் துர்ப்பலமாகிய தருமம் உலகத்தில் யாதொன்றுண்டோ அதனுடைய சம்பாதனத்தில் யத்தனஞ்செய்யவேண்டும். சகல லோகங்களிலும் அளவிட்டு அறியக்கூடாத வேகத்தையுடைத்தான காலசக்கரத்தினாலே வருகிற பாவதுக்கங்க ளுண்டாகிறாப்போலே புண்ணியங்களாலே சுகங்களும், பாவத்தால் துன்பங்களும் தான் வேண்டாமலிருந்தாலும் வருமாகையால் அந்தச் சுகிர்தக் கியானியானவன் அவற்றைவேண்டான். வாரீர் சிரேஷ்டரே! ஸ்ரீ முகுந்தனுடைய பஜனஞ்செய்கிறவன் இதரஜனங்களைப்போலச் சமுசாரத்தை எத்தனைப் பிரயாசத்திலும் ஒரு காலத்திலும் சேரச்சம்மதிக்கமாட்டான். அந்த ஸ்ரீ முகுந்த சரணாம்புஜ ரசமறிந்தவன், அவன் திருவடிகளுடைய பரம சுகத்தை நினைத்து நினைத்துக் கோரமான சமுசாரத்தைத் தள்ளவேண்டுமென்றே நினைப்பான். எந்தப் பகவானிடத்திலே இந்த வுலகங்கள் ஜனித்தனவோ எவனிடத்தில் லயத்தை யடைகின்றனவோ அந்தப் பிரிவில்லாத காரணனான வாசுதேவனிடத்தில் நிலைபொருந்தியிருக்கிற சேதனாசேதன சமூகமாகிய இந்த வுலகம் அந்த வாசுதேவ ஸ்வரூபமே யல்லாமல் வேறல்ல. சூக்ஷுமமாகிச் சேதனாசேதன சரீரகனான வாசுதேவ ஸ்வரூபத்தால் காரியமான உலகமென்

றும் அறிவில்லாத ஜனங்களுக்கு வேறுபோலே காணப் படும். இதைத் தேவரீரும் அறிவீர். ஓ மஹானுபாவரே! கருமவசமாகிய ஜெனனமில்லாமல் இச்சையினாலே அநேக அவுதாரங்களைத் தரிக்கிற பரம புருஷனாகிய பரமாத்மாவி னுடைய அம்சத்தைப் பரிபூரணக்கியானியான தேவரீர், உமக்கு ஆத்மாவாக நீரே அறிந்துகொண்டு இந்தப் பிரா ணிகளுடைய க்ஷேமத்தைக் குறித்து இதற்குச் சாதனமான தருமத்தை நினைத்து யத்தனஞ்செய்யவேண்டும். இப்படிக் கொத்த சுகிர்தம் ஏதென்றால், உலகத்தில் புருஷர்கள் செய் கிற வேதாந்த சிரவணத்தினாலும் பூரண தக்ஷிணையுடனே அனுஷ்டித்த யக்கியங்களாலும், தபசுகளாலும், சூக்த பாராயணங்களாலும் தடாகங்களுடைய நிர்மாணமாகிற அர்த்தங்களாலும், தானங்களாலு முண்டாகிய புண்ணிய பலத்தினாலே வரத்தக்கது. அந்தப் பலன்களுக்கு உயர்ந்த பலனை விசாரித்து நிச்சயிக்குமிடத்துப் புண்யசுலோகனாகிய பகவானுடைய கீர்த்தனமன்றி வேறில்லை.

நான் முன்ஜன்மத்தில் வேதாந்த வித்துக்களான பிரா மணர்களுடைய வீட்டு வேலைக்காரியாகிற கிருகதாசியி னுடைய புத்திரனாக ஜனித்திருந்தேன். வாரீர் வியாசரே! இந்த ரகசியத்தை ஜாக்கிரதையாகக் கேளும். அப்போது வருஷாகாலத்தில் தீர்த்தயாத்திரையில் விருப்பமுள்ள யதி கள் அந்தப் பிராமணர்களுடைய கிருகத்தில் வந்து வருஷ ருது, சரத்ருது, வென்கிற நாலுமாதங்களிலும் வழிநடக்கி றது அரிதாகையாலே அந்தப் பிராமண கிருகத்திலே வாசஞ் செய்தார்கள். அவர்கள் பரமயோகிகளாகையால் பரமாத்மாவினுடைய திவ்யகுணங்களை மிகவுஞ் சொல் லத் தொடங்கினார்கள். அப்போது நான் நன்றாகப் பேசத் தெரியாமல் மெத்தவும் பாலனாகவிருக்கையிலும் அவர்க ளுடைய முகாரவிந்தத்தில் ஜனித்த ஹரிகுணாமிருத கதை யைக் கேட்கவேண்டுமென்று பகவத் சங்கற்பத்தினால் அன்பு பெற்றிருந்தபடியினாலே அவர்களும் இவன் அதி பாலன் தன் விளையாட்டிற்கு உசிதமான பாவை முதலானது தரித்திருக்கையிலும் இந்திரிய சாபல்லியங்களை விட்டிருக்கிறா னென்றும், இதுவுமல்லாமல் நாம் சொல்லுகிற பரமபுருஷ னுடைய கதைகளைக் கேட்க நினைத்து நாமிருந்த இடத்தி லிருந்து நாம் திரிந்தவிடத்தில் திரிந்து பரிவுற்றிருக்கிறா னென்று நினைத்து மிகுதியுந் தயவுபண்ணி யனுக்கிரகஞ் செய்தார்கள். அவர்கள் முன்பாக நான் மழலைச் சொல் லுடனே கூடியிருந்தாலும் அவர்கள் சொல்லுகிற கதை

களைக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஒருநாள் அவர்கள் போஜனம் பண்ணின இலைகளைத்தொட்டு அந்த எச்சிலை என்உடம்பெல்லாம் பூசிக்கொண்டதைக் கண்டு வேண்டாமென்று அவர்கள் விலக்கும்போது சூட்சுமமாகக் கையிலகப்பட்ட பிரசாதத்தை ஒருதரம் நான் புசித்த மாத்திரத்தில் சகலமான பாவங்களையுந் தவிர்ந்தேன்.

இப்படிப்பட்ட என் நடக்கையாலே ரசோகுண தமோகுணங்களை விலக்கிச் சத்வகுணமிகுதியாகி மனதுக்குச் சம்சயங்களை விலக்கி நிச்சயத்தைப் பிறப்பிக்கையாலே அந்த யோகிகளுக்குப்பிரியமாகிய தருமங்களிலேயெனக்கும் அன்பு பிறந்தது. அவ்விடத்தில் சமஸ்த காலங்களிலும் அதிமனோகரங்களான ஸ்ரீ கிருஷ்ணன் கதைகளைத் தியானம் பண்ணுகிற யோகிகளுடைய அனுக்கிரகத்தினாலே அந்தக் கதாசிரவணத்திலே சிரத்தைப்பிறந்து திரிகாலங்களிலும் சிரவணம் பண்ணிக்கொண்டு அதில் அதிப் பிரீதியாகவே யிருந்தேன். வாரீர் அதிபுத்திசாலியே! ஸ்ரீ ஹரிகதையில் மிகவும் பிரீதி பிறந்ததால் கதாசிரவணங் கிடைக்கிற விடத்தில் நினைவு வுண்டாயிருக்கிற எனக்கு விஷயங்களில் சுழன்று திரிகிற என் மனது ஸ்ரீ ஹரிகதையில் தடைப்பட்டு நின்றது. அந்த ஸ்ரீ ஹரிகதையில் பிரீதியினால் தனக்கு வசவிர்த்தியான மாயையினாலே கற்பிதமான சூட்சும ஸ்தூலமாகியபிரபஞ்சத்தைச் சகல சேதனாசேதன சரீரகமான பிரம்மத்தில் ஒன்றாகிக் கலந்த என்னிடத்தில் நான் பார்க்கிறேன். இப்படி வருஷருதுவிலேயும், சரத்ருதுவிலேயும், அந்த யதீச்வரர்களிடத்திலிருந்து அடிக்கடி நிர்மலமான ஹரிலீலைகளைக் கேள்விப்பட்ட எனக்கு அந்த மகாத்மாக்களுடைய அனுக்கிரகத்தினாலே ஸ்ரீ ஹரியிடத்தில் பக்தி பிறந்து அதனாலே என்னுடைய மனதிலேயிருக்கிற ரசோகுண தமோகுணங்கள் நீங்கிப் பக்தியானது விருத்தியடைந்து சிரத்தையு முண்டாயிற்று. இவற்றாலே பாவங்கள் கழிந்தன. இப்பால் இந்திரிய சாபல்யங்களைவிட்டு விசுவாசத்துடனே கூடியிருக்கிற பாலகனாகிய என்னை அவர்கள் உத்தமபாத்திரமென்று அனுக்கிரகித்துச் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனால் அனுக்கிரகிக்கப்பட்ட அதிகாரியமான பிரமக்கியானத்தை யருளிச் செய்தார்கள். அவர்கள் பிரயாணப்படுகிறகாலத்திலும் மிகுதியான கிருபையினாலே உபதேசித்தக் கியானத்தினுடைய பிரபாவத்தினாலே சகல பிராணிகளையும் சிருஷ்டித்த வாசுதேவனுடைய சங்கற்பப் பிரபாவத்தையும் யாதொரு பிரமக்கியானிகள் பிரம்மபதத்தை யடைகிறார்களோ அந்தப் பிரபா

வத்தையும் அப்பொழுதேயறிந்தேன் ஓ பிராமணோத்தமனே! தாபத்திரயங்களாகிற ரோகத்துக்கு ஔஷதம் ஏதென்றால் ஷாட்குண்ய பரிபூரணனான பரமாத்மாவினிடத்தில் விகித கருமங்களைப் பலத்தை யிச்சியாமற்செய்து பிரம்மார்ப்பண மென்று சமர்ப்பிக்கிறதே யல்லாமல் வேறில்லை.

சகல சாஸ்திரங்க ளாலேயும் இப்படியே நிச்சயிக்கப்பட்டது. எந்த வஸ்துக்களாலே ரோகங்கள் பிறக்குமோ அந்த வஸ்துக்களாலே அந்த ரோகங்கள் எப்படி தீரமாட்டாவோ அப்படி மனுஷியருக்குச் சமுசாரங்களைக் கொடுக்கிற பல இச்சையால் செய்த கருமங்கள் அந்தச் சமுசாரங்களைப் பரிகரிக்கமாட்டா. அந்தக் கருமங்கள் தாமே பலனைக் கோராமல் சுதந்தரத்தைவிட்டு செய்யப்பட்டு ஸ்ரீ ஹரியிடத்தில் தியானம் பண்ணப் படுமாகில் அந்தச் சமுசாரங்களை வேரறப் பரிகரிக்கும். இந்தச் சமுசாரத்தி லிருக்குங்காலத்தில் உசிதமாகிய கருமங்களெல்லாம் பகவானுடைய பிரீதியை உண்டாக்கும்படி செய்தால் ஸ்ரீ ஹரியுடைய தத்வக்கியானமும் பக்தியுமுண்டாகும். ஆகையால் தங்களுக்கு உசிதமான கருமங்களைச் செய்கிற கியானிகள், பகவானிடத்திலே சித்தத்தை வைத்துக் கருமங்களையும் அனுஷ்டித்த பின்பு அந்தக் கருமங்கள் பகவத்பிரசாதமாகிற பலனைப் பரிபூரணமாகக் கொடுக்கவேண்டிய பகவானுடைய குணமகிமையால் பிறந்து விளங்குகிற நாமங்களை யடிக்கடி நினைக்கிறார்கள். ஷாட்குண்ய பரிபூரணனான உனக்கு வந்தனம், சர்வ பூதங்களிலும் உள்ளும் வெளியும் நிறைந்திருக்கிற வுன்னைத் தியானம் பண்ணுகிறோமென்று வாசுதேவனுக்கு விக்ஞாபனம் பண்ணிப் பிரத்தியும்னனென்றும், அனிருத்தனென்றும், சங்கருஷ்ணனென்றும், நித்தியமாகிய திவ்யமங்கள விக்கிரகத்தைத் தரித்திருக்கிற வுனக்கு நமஸ்காரம் பண்ணுகிறோமென்று, மூர்த்தி பேதங்களைச் சொல்லித் தன் சங்கற்பத்தினாலே தரிக்கப்பட்ட மூர்த்திகளையுடையதான மந்திரமே மூர்த்தியாகிய யக்கியபுருஷனைச் சகலமுந் தெரிந்தவர்கள் யாசிப்பார்கள். ஆகையால் நானும் சகல கருமங்களையும் பிரம்மார்ப்பணமாகச் செய்துவருகிறேன். இதையறிந்த சர்வக்கியனான பரமாத்மா எனக்குத் தம்முடைய விச்வரூப ஸ்வபாவ கோசரமாகிய கியான ஐசுவரியத்தையும் தன்னிடத்தில் பக்தியையும் கொடுத்தார். ஓ பிராமணோத்தமனே ! யாதொரு வஸ்துவைச் சகல துக்கங்களுடைய நிவர்த்திக்குச் சாதகமென்றும், சமுசார நிவர்த்திக்கு மற்றொன்றில்லை யென்றும் கியானிகள் சொல்லுகிறார்களோ, தத்துவத்தை

அறியவேண்டுமென்று நினைத்திருக்கிற பெரியோர்கள் எந்தப் பொருளை முழுதுமறிந்த பின்பு இனிக் கேட்கவேண்டிய தில்லையென்று ஒழிந்திருக்கிறார்களோ? சகல வேதங்களும் எந்த வஸ்துவை நிச்சயமாகச் சொல்லுகின்றனவோ? அந்தப் பரமானந்த ஸ்வரூபத்தை இந்தத் துக்கத்திலடிப்பட்டுக் கொண்டிருந்த ஜனங்களுக்கு ரசாயனமாகச் சொல்லும்.

---

## ஆறுவது அத்தியாயம்

*வியாசருக்கு நம்பிக்கை நிமித்தமாக நாரதர் ஜன்மாந்தரத்தில் கிருஷ்ண சங்கீர்த்தனத்தினாலே யுண்டான தம்முடைய பாக்கியத்தைச் சொன்னாரென்று சொல்லப்படுகிறது.*

இப்படி வியாசருக்கு நாரதமுனீச்வரர் உபதேசித்த பாகவத ரகசியத்தைச் சூதபுராணிகர் நைமிசாரண்ய வாசிகளான சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையும் நாரதரை ஸ்ரீ வேத வியாசர் கேட்ட வர்த்தமானத்தைச் சொல்லத் தொடங்கினார். இப்பால், ஓ பிராமணோத்தமரான சவுனகரே! ஸ்ரீ வியாச பகவான் தேவ முனியான நாரதருடைய பிறப்பையுந் தொழிலையுங் கேட்ட பின்பு, மறுபடியும் வினவுகிறார். வாரீர் பிரமகுமாரரே! தேவரீர் வேண்டுகோளுக்கு உபதேசஞ் செய்தருளின யோகீச்வரர்களாகிய அந்தச் சந்நியாசிகள் போனபின்பு பாலனாகி யிருந்த தேவரீர் என்ன செய்தீர்? அந்த ஜன்மத்தில் பாலப் பருவத்துக்கு மேலான பருவங்களிலெப்படிக் காலங் கழித்தீர்? அந்தச் சரீரத்தை விடுகிற பரிபக்குவ காலத்தில் தாசி குமாரரான அந்தத் தேகத்தையெப்படி விட்டீர்? ஓ முனி சிரேஷ்டரே! காலமானது, அறிந்த வஸ்துக்களுடைய நினைவை மறைத்து, மதியைத் தானே கெடுக்குமல்லவோ? அப்படியிருக்க, இப்போது உமக்குச் சென்ற ஜன்மத்தில் நீர் அனுபவித்த நடக்கைகளை எப்படி நினைத்துக்கொண்டிருக்கிறீர்? என்ற வியாசரைப் பார்த்து நாரதர் சொல்லுகிறார். ஓ வியாசரே! அந்த யதீச்வரர்கள் எனக்குக் கியானோபதேசஞ் செய்து போனபின்பு அந்தப் பாலரூபமா யிருந்த நான் என் தாய்க்கு ஒரே பிள்ளையாகையாலும், அவள் ஸ்திரீ ஜாதி, அறிவில்லாதவள், பிராமணர்கள் வீட்டு வேலைக்காரி யாகையாலும், எனக்கு வேறு திக்கில்லை யென்று என்னிடத்திலே யதிகமாகிய பாசமுடைத்தானவளாகி, என்னுடைய யோக க்ஷேமத்தை நினைத்து நினைத்துத் தன்னாலே யொன்றுமாகாத படியினாலே ஒரு தேறுதலுங் காணாம லிருந்தாள். அப்போது

நான் ஈச்வரனுடைய இந்த வுலகத்தில் ஆதீனமான ஸ்திரீ ஜன்மமானது மரப்பாவைபோலல்லாமல் வேறல்லவென்று நினைத்து நான் என் மாதாவிடத்தில் அந்தப் பிராமணர்களுடைய வீட்டிலே காத்திருந்தேன்; கிழக்கு மேற்கு முதலான திக்குகளையும், வருஷ மாச முதலான காலங்களையும் அறியும்படியான வயது ஐந்தான பின்பு, என் மாதாவானவள் ஒருநாள் அந்தணர்களுடைய பசுமந்தையில் பால் கறந்து கொண்டு வருகிற வழியில் சர்ப்பம் அவள் காலில் கடித்தது. அவளும் மரண மடைந்தாள்.

பகவான் தனது பக்தர்களுடைய சாந்தியைக் கோருவோனாகையால் இது என்னிடத்தில் ஸ்ரீ ஹரியினுடைய அனுக்கிரகமென்று தெரிந்து கொண்டு பின்பு வடதிசையை நோக்கிப் போகையில், சம்பூரணமான தேசங்கள், பட்டணங்கள், கிராமங்கள், வனங்கள் உத்தியான வனங்களையும், நானு வர்ணங்களான காவிக் கற்களாலும் மரங்களாலும் நிறைந்த மலைகளையும், மலர்ந்த கமலங்களால் விளங்கியும் தேவர்களால் கிரீடிக்கப்பட்டு மிருக்கிற தடாகங்களையும், விசித்திரமான நாதங்களுடனே கூடிய பக்ஷிகளாலும், மதுரமான கீதஞ்செய்கிற வண்டுகளாலும் நிறைந்தும், பெருமூங்கில்களாலும் நாணல்களாலும் தருப்பைகளாலும் சிறு மூங்கில்களாலும் நிறைந்த மகத்தான காட்டையும் கண்ணாலே கண்டேன். அப்பால் அதிகோர மாகிய பாம்புகள் கோட்டான்கள் நரிகளாலும் நிறைந்த பயங்கரமான வனத்தையுங் கண்டேன். பின்பு தேகத்தில் இளப்பையடைந்து இந்திரியங்கள் வசமாகாமல் பசியுந்தாகமும் மிகுதியாக இருந்ததினால் அங்கே யிருந்த நதியில் ஸ்நானஞ்செய்து ஜலபானம் பண்ணி சிரமத்தைப் பரிகரித்துக்கொண்டு, அந்த நிர்மானுஷ்யமான ஆரணியத்தில் ஒரு அரசமாத்தினடியின் கீழிருந்து கொண்டு அந்த யோகிகள் உபதேசஞ் செய்தபடி என்னிடத்தில் அந்தரியாமியா யிருக்கிற பரமாத்மாவை அறிவினாலே நினைத்துச் சிந்தித்துப் பக்தியினாலே மனதை நிறுத்திக் கமலங்கள் போலிருக்கிற ஹரிசரணங்களைத் தியானம் பண்ணினேன். அந்த ஹரி சரணங்களைப் பிரத்தியக்ஷமாகக் காணவேண்டு மென்கிற ஆசை அதிக மாகையாலே கண்களிலே ஆனந்த பாஷ்பங்கள் பெருகின. ஸ்ரீ ஹரியும் என்னுடைய இருதயத்தில் மெல்ல மெல்ல எழுந்தருளினர். அதனாலே மிகுதியான பக்தியுண்டாய் ஆனந்த பாவசமாகிய என் தேகத்தில் புளகாங்கித முண்டாயிற்று. வாரீர் வியாச முனீச்வரரே! அப்போது ஆனந்தமாகிற சமுத்திரத்தில்

மூழ்கிய நான் மற்றென்றையும் காணுமற்போனேன். பின்பு என் மனதை மற்றொரு விடத்தில் போக வொட்டாமல் நிறுத்தித் தன்வசஞ் செய்துகொண்ட ஸ்ரீ ஹரியினுடைய திவ்யமங்கள ஸ்வரூபத்தைக் காணுமல் அதனால் பிறந்த அந்தச் சுகத்தை யிழந்து என் இருதயமும் சூனியமா யிருக்கையால் திடுக்கிட்டவனைப் போலே எழுந்திருந்து பின்னையும் அந்த ஹரி ரூபத்தைக் காணவேண்டுமென்று நினைத்து மனதை இருதயத்தில் நிறுத்தியும், புத்தியினாலே முன்போலக் காணமாட்டாமற் போனேன். ரோகியானவன் இச்சையானபடி வயிறு நிறைகிற மட்டும் போஜனம் பண்ணக் கூடாமல் எப்படித் தவிப்பானோ அப்படி அந்த ரூபத்தைக் கண்டு திருப்தியடைய வேண்டுமென்று நினைத்து ஜனங்களில்லாத அந்த வனத்தில் தபித்திருக்கிற என்னை, வேதார்த்தங்களாலும் அளவிடப்படாத மகிமையை உடைத்தாகிய பகவான், என்னுடைய சுகத்தை மிகுதியும் பரிகரிக்கிறவன் போல் கம்பீரமாகியும் வழுவில்லாத எழுத்துக்களாயும் இருக்கிற வார்த்தையைச் சொன்னார்.

ஓ பிள்ளாய்! நீ இந்த ஜன்மத்திலே என்னைப் பார்க்கிறதற்கு யோக்கியனல்ல. ரசோகுண தமோகுணங்கள் தவிர்ந்து, சுத்த சத்வமாகிய மனதை யுடைத்தான யோகிகளாலே பார்க்கிறதற் கரிதான நான், அந்தக் குணங்கள் தவிராத உன்னைப்போலொத்த யோகிகளுக்குப் பிரத்தியக்ஷமாகமாட்டேன். நீ பண்ணுகிற சாகசம் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. இப்போது ஒருதரம் என்னை நீ காணும்படியாக நான் சங்கல்பித்ததேனென்றால், இந்த ரூபத்தைக் கண்ட உனக்கு மிகுதியான ஆசை பிறக்கவேண்டு மென்று காண்பித்ததே யல்லாமல் வேறல்ல. ஆகையால் உன்னுடைய இருதயத்தின் பிரத்தியக்ஷத்தில் இப்போது கண்ட என் திவ்ய மங்கள விக்கிரகத்தை மிகவும் இச்சித்துக் கொண்டிரு. என் ஸ்வரூபத்தை நினைத்தும் இச்சித்து மிருக்கிறவனுடைய பாவங்கள் பரிகாரமாகும். சாத்விகர்களான யோகிகளிடத்தில் சிலகாலம் அடிமை பண்ணி அவர்கள் அனுக்கிரகம் பெற்ற உன்புத்தியானது என்னிடத்தில் நிலையாய் நின்றபடியினாலே, இடைவிடாம லிருக்கிற பாபவர்க்கங்களுடனே கூடிய இந்தச் சரீரத்தை விட்டுப் பரம பாகவதனான சரீரத்தை எடுக்கப்போகிறாய். அப்போது நீ என்னை எப்பொழுதும் காண்பாய். உன் புத்தியானது இப்போது என்னிடத்தில் நிலையாய் நின்றபடியினாலே இனிமேல் ஒரு காலத்திலும் உனக்குத் தீங்கில்லை. இந்த உலகங்களுக்குப் பிரளயங்கள் வந்த பின்பு, நீ மற்றொரு ஜனனம் எடுத்

திருக்கையிலும் என் அனுக்கிரகத்தினலே என்னுடைய ஸ்மரணம் உனக்கு மறக்க மாட்டாது. என்று சொல்லிப் பின்பு ஆகாசரூபமான அந்தப் பரமேசுவரன் அந்தர்த் தானமாய் எழுந்தருளினர். நானும் மகத்துக்களுக்கெல் லாம் மகானுபாவனுகிய அந்தப் பரமபுருஷனைக் குறித்துத் திக்குநோக்கிச் சாஷ்டாங்கமாக வந்தனஞ் செய்தேன். அன்று முதல் அபிமானத்தை விட்டு, அந்த அனந்தனு டைய நாமங்களை உச்சரித்துக் கொண்டு அந்தப் பகவான் உலகோபகார நிமித்தமாகச் செய்த அதிரகசியமான லீலை களை நினைத்துக்கொண்டு மற்றொருவஸ்துவிலும் ஆசையில் லாமல் என் மனதில் சந்தோஷப்பட்டுக்கொண்டு நின்ற விடத்தில் நில்லாமல் பூமியெல்லாம் திரிந்துகொண்டு மதத் தையும் மாச்சரியத்தையும் விட்டு, ஸ்வாமி நியமித்த காலத் தைக் குறித்துக் காத்திருந்தேனென்று நாரத பகவான் வியாச முனீச்வரருக்குச் சொன்ன தம்முடைய ஜன்ம தரு மங்களைச் சூதபுராணிகர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின் னையும் ஓ பிராமணோத்தமர்களே! மற்ற விரதங்களையும் சொல்லுகிறேன் கேளுங்கள். அந்த வியாசரைப் பார்த்து நாரதர் மறுபடியும் சொல்லுகிறர்.

இப்படி ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பற்றின மனது எனக்கு மற்றொருவரிடத்தில் இச்சையில்லாம லிருக்கையாலே பிர சன்னமான மனதை யுடைத்தான எனக்குப்பரிபக்குவ காலம் வந்தது. மழையில்லாமல் தாபத்தினலே தபிக்கப்பட்ட ஜனங்களுடைய மனதுக்குச் சந்தோஷ முண்டாக வேண்டி வெகு மழைக்கு ஏதுவான மிகுதியும் பிரகாசமாகிய மின்னல் போல், நெருங்கிவந்த பரிபக்குவ காலத்தை நினைத்துப் பரம பாகவத ரூபமான சரீரத்தை யடைய வேண்டுமென்று மிகு தியும் நினைத்தேன். எனக்குப் பிராரத்வ கருமத்தாலே வந்திருந்த பஞ்சபூத தேகமானது விழுந்து போனபின்பு, பிரளய காலத்தில் இவ்வுலகங்களைத் தம்மிடத்தில் வைத் துக்கொண்டு திருப்பாற் கடலில் பள்ளிக் கொண்டிருக்கிற பரமாத்மாவினிடத்தில் சேர்ந்து நித்திரை செய்வதாக நினைத்து, நித்திரை பண்ணுகிற பிரமாவினுடைய மூச்சுக் காற்றுடன் அவருடனே பிரவேசித் திருந்தேன், சதுர்யுகம் ஆயிரமான பின்பு எழுந்திருந்து இந்த வுலகத்தை முன் போலச் சிருஷ்டிக்க நினைத்த சதுர்முகனுடைய பிராண வாயுவினிடத்தி லிருந்தும், மரீசிமுதலான ரிஷிகள் ஜனித்த போது அவர்களுடனே நானும் ஜனித்தேன். அன்றுமுதல் மூன்று வகையாகப் பிறக்கப்பட்ட இந்தப் பதினலு லோகங் களிலும், உள்ளும் புறமும் சஞ்சரித்தாலும் ஸ்ரீ மஹா

விஷ்ணுவினுடைய அனுக்கிரகத்தினாலே என்னுடைய விரதங்களுக்குக் குறைவில்லை. பிரமதேவனாலே கொடுக்கப்பட்ட இந்த வீணையை மீட்டி, நாதப்பிரம்மத்தாலே அலங்கரித்து, ஸ்ரீ ஹரிகதைகளைக் கானஞ் செய்துகொண்டு சஞ்சரிக்கிறேன். தம்முடைய திருவடியிலே சர்வ லோகபாவன தீர்த்தமான கங்கையை ஜனிப்பித்தும், தம்முடைய லீலா சிரவணத்தால் பிரசன்னராகிற ஸ்ரீ கோவிந்தன், தம் மகிமைகளைக் கானஞ்செய்கிற என் இருதயத்தில் அழைக்கப்பட்டவரைப் போலச் சீக்கிரமாகப் பிரகாசித்துத் தரிசனத்தைக் கொடுக்கிறார். விஷய சம்பந்தத்தினாலே அடிக்கடி கலங்கி அச்சுதனிடத்தில் மதியைநிறுத்த மாட்டாத பிராணிகளுடைய சமுசாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டுவித்து, அவர்களைக் கரைசேர்க்க வேண்டுமென்று நினைந்தால், ஸ்ரீ ஹரி தியானஞ் செய்கிற பாகவதோத்தமர்கள் சொல்லப்படுகிற ஹரிலீலா வர்ணமாகிற தெப்பமே யல்லாமல் வேறில்லை. காம லோபாதிகளாலே கலங்கின மதியையுடைய ஆத்மாவானவன் ஸ்ரீ முகுந்த சேவையினாலே எப்படிச் சீக்கிரமாகச் சாந்தி பெறுகிறானோ அப்படியே இயம நியமாதிகளான யோகங்களினாலே சாந்திபெற மாட்டான்.

வாரீர் பரிசுத்தமூர்த்தியே! யாதொரு அர்த்தங்களைப் பிரஷ்னஞ் செய்தீரோ அவைகளைச் சம்பூரணமாகச் சொன்னேன். என்னுடைய ஜனனத்தையும், ரகசியத்தையும், நடத்தையையும், உம்முடைய ஜன்மத்தையும், உம்முடைய சீலத்தையும், நீர் இனிமேல் செய்யவேண்டிய காரியத்தையும், பரமாத்மாவினுடைய முகவுல்லாச தோற்றமாகவே சொன்னேன் என்று சொன்ன நாரத ரிஷியினுடைய வார்த்தையை, சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையும் சவுனகாதிகளைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார்: ஓ சவுனகாதிகளே! ஸ்ரீ நாரத பகவான் வாசவி புத்திரனான வியாசரைப் பார்த்து இப்படிச்சொல்லி வியாசராலே அனுப்புவித்துக்கொண்டு தாம்கோரி வந்தகாரியம் தலைக்கூடினதினாலே மிகுதியும் சந்தோஷமடைந்து, வீணையை மீட்டிக் கானஞ் செய்துகொண்டு தம்முடைய சித்தமுவந்த விடத்தில் நடந்தார். தன்னியரான இந்தத் தேவரிஷி சார்ங்கமென்ற வில்லைத்தரித்து விளங்கின ஸ்ரீ ஹரியினுடைய கீர்த்தனம் கானஞ் செய்து மகிழ்த்துத் தன் கையிலிருக்கிற வீணையினால் சமுசாரமாகிற பிராணிகளை அந்தத் துன்பத்தை விலக்கிச் சுகத்தைக் கொடுக்கிறார், இது என்ன ஆச்சரியம், இது என்ன கிருபை என்று சொன்ன சூதரைப் பார்த்துச் சவுனகர் கேட்கிறார்.

## ஏழாவது அத்தியாயம்

*பாகவதத்துக்குச் சுரோதாவான பரிக்ஷித்தினுடைய ஜன்மத்தைச் சொல்லு கைக்குத், தூங்காநின்ற பிள்ளைகளினுடைய வதத்தினாலே அசுவத் தாமாவினுடைய தண்டனை சொல்லப்படுகின்றது.*

வாரீர் சூதரே! நாரதர் புறப்பட்டுப் போனபின்பு அவர் அபிப்பிராயத்தை அறிந்து கொண்ட வியாச பகவான் அப்பால் என்ன செய்தாரென்று கேட்கிற சவுனகரைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார்: பிராமண ராலே நிறைந்த சரஸ்வதி நதியினுடைய மேலண்டைக் கரையில் சம்மியாப் பிராசமென்கிற பெயரால் விளங்கின க்ஷேத்திரத்தில், ரிஷிகள் சத்திரயாகஞ்செய்த புண்ணியபூமி யாகையால் மதுக்களால் கற்பிக்கப்பட்ட அவ்விடத்தில், நிரந்தரமாகிய இலந்தைக்காட்டினால் சூழப்பட்டிருக்கிற தம் முடைய ஆச்ரமத்தில், அஸ்தபாதப் பிரக்ஷாளனமும் ஆச மனமுஞ் செய்து, யோகத்துக்கு யோக்கியமான ஆசனங் கெட்டி செய்துகொண்டு, சித்தத்தை மற்றொரு விடத்திற் போகாமல் மறித்துத் தியானஞ்செய்தார். பக்தியோகத்தி னால் நிர்மலமான மனதைப் பரமாத்மாவினிடத்தில் சலியா மல் நிறுத்தினவுடனே, மங்களகுண பரிபூரணனான பரம புருஷனையும் அவன் அவலம்பனத்தால் உலகங்களை மயக்கு கிற மாயையும் பிரத்தியக்ஷமாகக் கண்டார். அறிவினால் தன் னைக்காட்டிலும் உத்தமனாகிய சீவாத்மாவைத் தானே சூழ்ந்து அவனை மோகிப்பித்து அவனையும் தன்னைப்போலத் திரி குணாத்மகனென்று போதஞ்செய்வித்துத் தன்னால் கற்பிக்கப் பட்ட ஜனன மரண சுவர்க்க நரகங்களாகிற துன்பங்களை அவன் தன்னுடையதென்று நிச்சயிக்கும்படியான மகிமை யுடைய மாயையும் அந்த மாயாநிவர்த்தகனான பரமாத் மாவையும் பிரத்தியக்ஷமாகக் கண்ட பின்பு, துன்பமான சமுசாரத்துக்கு நிவர்த்தியானது கியான கருமேந்திரயங்க ளால் அறியக்கூடாத ஸ்ரீ ஹரியிடத்தில் பக்தியோகமே யல்லாமல் வேறில்லையென்று நிச்சய அறிவில்லாத இந்த வுலகங்களுடைய உச்சீவனார்த்தமாகச் சாத்வத குலத்தில் அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத்தைக் கீதமாகப் பாடினார். இந்தக் கதையைக் காதினால் கேட்டால் பரம புருஷனான ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்தி பிறப்பித்துச் சமுசாரிகளுடைய அக்கியானங்களையும் பய சுகங்களையும் பரி கரிக்கும். இப்படிப் பகவானுடைய மகிமையைச் சொல்லு கிறதாகவும், நாரதரால் உபதேசிக்கப்பட்டு மிருக்கிற சத்வ

சங்கீதையை முதல் தொடங்கிப் பரிபூரணமாகச் செய்து நிவர்த்தி தருமமே முக்கியமாக நினைத்திருக்கிற ஸ்ரீ சுகயோகிக்கு உபதேசஞ் செய்தாரென்று சொல்லுகிற சூதரைப் பார்த்துச் சவுனகர் கேட்கிறார். ஓ சூதரே! அந்தச் சுகயோகி நிவிர்த்தி தருமங்களில் ருசியுண்டாகிச் சகல வஸ்துக்களிலும் ருசியில்லாமல் உபேக்ஷித்தவர், எந்தக் காரணத்தினால் அதி விஸ்தாரமாகிய இந்தப் பாகவத சங்கீதையைப் பரமாத்மாவினிடத்தி லிருக்கிற மனதைத் திருப்பி எப்படிப் படித்தாரென்று கேட்ட சவுனகருக்குச் சொல்லுகிறார்.

ஓ சவுனகரே! பரமாத்மாவினிடத்தில் தங்கள் மதியினால் நிறுத்தின மனதையுடையராகி அந்தச் சுகத்தை அனுபவித்தும் மற்றொருவிடத்தில் ஆசையில்லாமலு மிருக்கிற யோகிகளும், சர்வாந்தர்யாமியான பரமாத்மாவினிடத்தில் ஒரு பலனைக் கோராமல் பக்தி பண்ணுவார்கள். அது எதனாலென்றால் அந்த ஸ்ரீ ஹரி அப்படிப்பட்ட திவ்யகுணங்களால் வசீகரிக்கப்பட்ட புத்தியை யுடைத்தான படியினாலே, அந்தச் சுகபகவானும் இப்படி அதி மகத்தாகிய இந்தப் பாகவதமென்கிற சங்கீதையைப் படித்துத் தம்முடைய இருதயத்தில் தரித்து ஸ்ரீ ஹரிபக்தருக்கு உபதேசிக்கவேண்டுமென்று நிரந்தரமாய் நினைத்திருந்தார். ஓ சவுனகரே! சுகமுனி ஸ்ரீ பாகவதத்தை ஏன் படித்தாரென்று நீர் கேட்டதற்கு நானும் உத்தரம் சொன்னேன். ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதைகளைச் சொல்லவேண்டுமென்று நீங்கள் வினவியதற்கு, அந்தக் கதைக்குச் சங்கிதையாகிய பரிக்ஷித்து மகாராஜாவுடைய ஜன்மமும் அவர் நடத்தையும் முடிவில் அவர் கதியடைந்ததும், பாண்டு குமாரரான தருமராஜன் முதலான பேர் சொர்க்காரோகணம் பண்ணுங் காலத்தில் நடந்த விருத்தாந்தங்களையும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய கீர்த்திகளுக்குக் காரணமாகையால் சொல்லுகிறேன், சாவதானமாய்க் கேளுங்கள். எப்போது யுத்தத்தில் கௌரவர்களிலும் பாண்டவர்களிலும் அதி வீரர்களான ராஜாக்கள் யுத்தங்கள் செய்து வீரசுவர்க்கத்தை அடைந்தார்களோ அப்போது பீமசேனனுடைய கதையால் அடிபட்டு முரிந்த தொடையை யுடைத்தான துரியோதனன், அந்தப் பூமியில் ஈனசத்வனாகி விழுந்திருந்த சமயத்தில், அவனுக்கு இதஞ் செய்யவேண்டுமென்று நினைத்த, அசுவத்தாமா திரௌபதை குமாரர்களான உப பாண்டவர்கள் ஐவரையும் நித்திரை பண்ணுகிற சமயத்தில் பாண்டவர்களென்று பிரமித்துச் சிரசுகளை அறுத்தானே அந்த ஈன கிருத்தியத்தைத் துரியோ

தனன் தனக்குப் பிரியமாக நினைக்கவில்லை. சகல ஜனங்களும் துரோண குமாரன் நிஷேதமான வேலையைச் செய்தானென்று நிந்தித்தார்கள். அந்தச் சமயத்தில் உப பாண்டவர்களுக்கு மாதாவான திரௌபதா தேவி தன்னுடைய சிசுக்களுடைய அனியாய மாணத்தைக் கண்டு பரிதாபப்பட்டுக் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருக விட்டுக் கொண்டு கதறி அழுகிற சமயத்தில் கிரீடமாலியான அர்ச்சுனன் அவளைச் சமாதானஞ் செய்தான்.

வாராய் திரௌபதீ! காண்டீப மென்கிற வில்லிலிருந்து விடப்பட்ட தீக்ஷணமான பாணங்களால் பிராமண அதமனான அசுவத்தாமனுடைய சிரசை அறுத்து, உன்மனதில் இருக்கிற சோகத்தாலுண்டான கண்ணீரை மாற்றுகிறேன். அந்தச் சிரசின்மேல் உன் பாதத்தைவைத்து உன் புத்திரர்களுக்குச் சமஸ்காரம் பண்ணினபின்பு ஸ்நானம்பண்ணப் போவாயென்று தனக்குப் பிராண நாயகியான திரௌபதியைப் பார்த்து விசித்திரமாகியும் சமரசமாகியு மிருக்கிற வார்த்தைகளால் சமாதானஞ்செய்து, தமக்கு மித்திரரான அச்சுதனைச் சாரதியாக முன்னிட்டுக்கொண்டு கவசத்தைத் தொடுத்துக்கொண்டு பயங்கரமான காண்டீப மென்கிற தனுசைக் கையில் தரித்து ஹனுமத்துவ சகிதனா லலங்கரிக்கப்பட்ட ரதத்தி லேறிக்கொண்டு தனக்குத் துரோகியான குரு புத்திரனைப் துரத்திப் போயினன். இப்படித் துரத்திக் கொண்டுவருகிற குமார ரூபியான அர்ச்சுனனை அந்த அசுவத்தாமா வெகு தூரத்தில் கண்டு பயந்து தன்பிராணனை ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமென்று, ருத்திரனைக் கண்டு பயந்து ஓடின ஆதித்தியன் போல, இந்தப் பூமியில் தன்னோட்டத்துக்கு எவ்வளவு விசாலங் கொடுத்ததோ அவ்வளவு தூரம் ரதத்துடனே ஓடினன். துரோண குமாரனான அசுவத்தாமா தன் ரதத்தில் கட்டின குதிரைகள் நடக்கமாட்டாமல் இளைப்படைந்தபின்பு தன்னை ரக்ஷிக்க மற்றொருவரில்லாமையால் அதற்குப் பிரம்மாஸ்திரமே கதியல்லாமல் வேறில்லையென்று நினைத்துக் கையினால் ஜலத்தை ஸ்பரிசித்து மனதில் தியானஞ் செய்துகொண்டு அந்த அஸ்திரத்தினுடைய வுபசங்காரத்தைத் தானறியாம லிருந்தாலும் தன்னுடைய பிராணனுக்குச் சங்கடமான சமய மாகையால் அதைப் பிரயோகஞ் செய்தான்.

அந்த அஸ்திரத்திலிருந்து அதி பயங்கரமான ஒரு தேஜசு பிறந்து சகல திக்குகளையும் மூடிக்கொண்டு சுவாலாமயமா யெரிகிறதைக்கண்டு, அர்ச்சுனன் தன் பிராணனுக்கு

ஆபத்து வந்ததென்று நினைத்து ஸ்ரீ கிருஷ்ணனைப்பார்த்து ஒருவார்த்தை சொன்னானென்று, ஆச்சரியத்துடனே சவுன கரைபார்த்துச் சூதர் சொல்லுகிறார். ஓ கிருஷ்ண; மஹா பாகு வே! பக்தர்களுடைய பயத்தைப் பரிகாரஞ் செய்கிறவரே! சமுசாரத்தில் தாபத்திரயங்களால் தபிக்கப்படுகிற பிராணிக ளுக்கு அந்தத் தாபத்திரயங்களை நிவர்த்திசெய்து மோக்ஷத் தைக் கொடுக்கிறவர் நீர் ஒருவரே யல்லாமல் வேறில்லை, பிர கிருதிக்கு நியந்தாவாகியும் தனக்குத் தானே சுவாமியாகியும் ஜகத்காரணமாகியும் இருக்கிற புருஷனும் தேவரீரே யல்லா மல் வேறில்லை. தேவரீர் கியானசக்தியினால் மாயப் பிரகிருதி யை உம்மிடத்தில் சந்திக்க வொட்டாமல் தூரத்தில் விலக் கிக் கியானானந்தமாகிய நிச ரூபத்தில் விளங்கிக்கொண்டு அந்த மாயையினால் சூழப்பட்டு மோகத்தை யடைந்திருக்கிற ஜீவ சமூகங்களுக்கு உமது மகிமையால் தருமார்த்த காம மோக்ஷங்களாகிற சிரேயசுகளைக் கொடுக்கிறீர். உம்முடைய இந்த அவதாரம் பூபாரத்தைப் பரிகரிக்க வேண்டுமென்னும் இச்சையினால் சங்கற்பிக்கப்பட் டிருந்தாலும், கியானானந்த ஸ்வரூபமாகையினால் மற்றொன்றையும் நினையாமலிருக்கிற உன்னடியார்கள் அடிக்கடி நினைத்துத் தியானஞ்செய்து கடைத்தேற வேண்டுமென்று சங்கற்பித்ததே யல்லாமல் வேறில்லை. இப்போது அதிபயங்கரமாகிய ஒரு தேஜசு நாலு பக்கமும் சுற்றிக்கொண்டு வருகிறது; ஓ தேவ தேவ னே! இது எப்படிப்பட்டது, எந்த விடத்திலிருந்து வருகிற தென்று நானறியேனென்று விக்ஞாபனம் பண்ணின அர்ச் சுனனுக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறார்: வாராய் அர்ச் சுனா! துரோண புத்திரன் பிரயோகித்த பிரம்மாஸ்திரத்தி னுடைய தேஜசு என்று தெரிந்து கொள்ளும். அவன் இந்த அஸ்திரத்துக்கு உபசங்காரத்தை யறியாமலிருந்தாலும் தனக்கு மரணகாலம் வந்ததென்று தெரிந்து பிரயோகித் தான். மற்ற அஸ்திரங்கள் இந்த அஸ்திரத்தைத் தடுக்க மாட்டா. இந்த அஸ்திரத்தினுடைய மகிமையை நீ யறிந்தவனாகையால் உலகமெல்லாம் பரவிவருகிற இந்த அஸ்திரதேஜசை, பிரதியாகிய பிரமாஸ்திரத்தினால் நீ தடுக்க வேண்டுமென்று சொன்ன ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினு டைய வார்த்தையைச் சூதர் சவுனகாதி ரிஷிகளுக்குச்சொல் லிப் பின்னையுஞ் சொல்லுகிறார். இப்படிப் பகவான் சொன்ன வார்த்தையைக் கேட்ட அர்ச்சுனன், எதிரிகளான வீரரை ஜெயிக்கும் வல்லமையுள்ளவனாகையால், தன்னுடைய அஸ்திரத்துக்குப் பிரதக்ஷணம்பண்ணி ஆசமனஞ் செய்து தானும் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். இதனால்

அந்த இரண்டு அஸ்திரங்களும் சுவாலைகளை யுண்டுபண்ணி எங்கும் வியாபித்து ஒன்றோடொன்று அடித்துக்கொண்டு பூமியிலும் ஆகாயத்திலும் சுவர்க்கத்திலும் சூர்யாக்கினிகளைப் போல நிறைந்தன. அந்த இரண்டு அஸ்திரங்களுடைய சுவாலைகளால் தபிக்கப்படுகிற பிராணிகள் பிரளய காலம் வந்ததென்று நினைத்தார்கள். இப்படிப் பிரஜைகளுக்கு உபத்திரவஞ் செய்கிற அஸ்திர சுவாலைகளால் உண்டாகிய சங்கடத்தையும், ஸ்ரீ வாசுதேவனுடைய அபிப்பிராயத்தையும் தெரிந்துகொண்ட அர்ச்சுனன் உபசங்கார மந்திரத்தால் இரண்டு அஸ்த்திரங்களையும் உபசங்காரஞ்செய்தான். அப்போது குரூரமாகிய கருமத்தைச் செய்த கௌதமி குமாரனை அசுவத்தாமாவை அர்ச்சுனன் கோபத்துடனே சிவந்த கண்களால் பார்த்துப்பிடித்துப் பசுவைக் கட்டுவது போல் பாசத்தால் கட்டினான். இப்படிச் சத்துருவைக் கயிற்றால் கட்டித் தன்னுடைய இருப்பிடத்துக்குக் கொண்டு போகவேண்டுமென்று நினைத்த அர்ச்சுனனைப் பார்த்து ஸ்ரீ புண்டரீகாக்ஷனை கிருஷ்ணன் கோபத்துடனே ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

வாராய் குந்திகுமாரனே! இந்தப் பிராமணாதமனைப் பிராணனோடே விடுகிறதாக நினையாமல் சங்காரம்பண்ணு. அதேனென்றால் தனக்கு ஒரு அபகாரஞ் செய்யாமலிருந்த பாலரை ராத்திரியில் தூங்குகிற சமயத்தில் சங்கரித்தவன். வேறொரு நினைவினால் தான் செய்யவேண்டிய கருமத்தில் நினைவு விட்டிருந்தவனையும், மூர்ச்சித்தவனையும், பித்தனையும், நித்திரை பண்ணுகிறவனையும், பாலனையும், ஸ்திரீகளையும், காரியா காரியங்களைத் தெரியாத அறிவில்லாதவனையும், சரண மடைந்தவனையும், இரத மிழந்தவனையும், பயந்தவனையும், எத்தனை சத்துருவானாலும் க்ஷத்திரிய தருமம் தெரிந்தவர்கள் கொல்லலாகாது. யாதொரு துஷ்டன் இவர்கள் பிராணனை வாங்குகிறானோ அந்தப் பாபிஷ்டன் அந்தத் தோஷத்தால் அதோ கதியை அடைவான். ஆகையினால் தயவில்லாதவனைச் சங்கரித்தால் அது உனக்குச் சிரேயசேயாம். இதுவல்லாமல் நீ திரௌபதியைப் பார்த்து வாராய் பாக்கியவதியே! யாதொருவன் உன் புத்திரர்களைச் சங்கரித்தானோ அவன் தலையைக் கொண்டு வருகிறேனென்றதை நானுங்கேட்டிருக்கையில் பிரதிக்கினைப்பண்ணினவன் நீ யாகையால், நல்ல குலத்திற் பிறந்து அந்தக் குலாசாரத்தைத் தவிர்ந்தும் தன்னுடைய சுவாமிக்கு விருத்தமான கருமத்தைச் செய்தும் உன்னுடைய புத்திரர்

களைச் சங்காரம் பண்ணியும், இப்போது உன்னைக் கொல்ல வேண்டுமென்று பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து மிருக்கிற இந்தப்பாவியை, வீரரில் சிரேஷ்டனுன நீ கொல்லுகிறதே நியாயமென்று அர்ச்சுனனைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி சொன்ன வார்த்தையைச் சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிருர்.

இப்படிக் குந்தி குமாரனைப்பார்த்து மனோதரும நிச்சயம் எப்படிப்பட்டதென்று சோதிக்க வேண்டிச் சொன்ன கிருஷ்ணன் வசனத்தை அர்ச்சுனன் கேட்டு அவன் தன் மக்களைக்கொன்றவன் ஆனுலும் தன்னுடைய குருகுமாரனுகையால் அசுவத்தாமாவைக் கொல்லுவதற்கு மனதில்லாமல் தான் இறங்கியிருக்கிற விடத்தில் ஸ்நேகித னுகவும் சாரதியாகவு மிருக்கிற கோவிந்தனுடனே வந்து மக்களுடைய மரணத்தால் சோகித்திருக்கிற பிராண நாயகியான திரௌபதியின் முன்னே அசுவத்தாமாவை நிறுத்தினுன். பசுவைப்பிடித்துக் கயிற்றிற் கட்டினுற்போல கட்டப்பட் டிருக்கிறவனும், தான் செய்த அநீதத்தினுலே தலை இறங்கிக்கொண் டிருக்கிறவனும், குருகுமாரனு மாகிய அசுவத்தாமனைத் திரௌபதா தேவியானவள் மிகவும் தயவுடனே நமஸ்காரஞ்செய்து, அர்ச்சுனனைப் பார்த்துக் குருகுமாரரான இவரைக்கட்டிக் கொண்டு வருகிறது ஞாயமோ? வென்று சொல்லிக் கட்டை விடும்விடும், இவர் பிராமணுேத்தமர், இதுவுமல்லாமல் உமக்குக் குருவானவர், எவ்வாறென்றுல்: ரகசியமாகத் தனுர் வேதத்தைப் பிரயோகத்துடனேயும், உபசங்காரத் துடனேயும் சகல அஸ்திரங்களையும் யாதொரு துரோணு சாரியருடைய அனுக்கிரகத்தினுல் அப்பியாசஞ் செய்தீரோ அந்தத் துரோணுசாரியர் தம்முடைய புத்திரரான அசுவத்தாமா வுடைய ரூபமாக விருக்கிருர். ஆதலால், அந்த அசுவத்தாமாவினிடத்தில் குருபக்தி செய்ய வேண்டியது. இதுவுமல்லாமல், கிருபாசாரியருடைய தங்கையான கௌதமி, இவ்வீரனைப்பெற்றவ ளாகையால் தன் மகனுக்கு நோந்த இந்தச் சிரமத்தைக் கண்டு தன் சரீரத்தை நிறுத்த மாட்டாள்; அவளுக்கு இந்தத் துன்பம் வரும்படிக்கு நாம் நடக்கலாகாது. ஆகையால், சகல தருமங்களையும்தெரிந்த மகானுபாவரே! உங்களால் மகத்தாகிய கவுரவத்தை அடைந்து விளங்கின இந்தக் கவுரவ குலத்துக்கு இப்போது இப்படிப் பாவத்தை விளைவிக்குங் காரியத்தைச் செய்வது உத்தமமல்ல. உலகத்தில் கவுரவர்களுடைய குலத்தைக் கேட்டவர்க ளெல்லாம் கைகூப்பி வந்தனஞ் செய்யும்

படியாகிப் பிரகாசித்து வந்த இந்தக் குலத்துக்கு அபகீர்த்தி வராமல் இரக்ஷிக்க வேண்டும். இதுவுமல்லாமல், இந்த அசுவத்தாமாவினுடைய மாதாவாகிய கௌதமி மகா பதிவிரதையாகையால் அவள் புத்திர சோகத்தினால் என்னைப்போல் கண்ணுங் கண்ணீருமாய் அழுகிறது உசிதமல்ல. பிராமணர்களுக்கு யாதொரு ராஜாக்கள் கோபத்தை உண்டு பண்ணினால் அந்த ராஜ வம்சம் தம் வர்க்கத்துடனே சோகத்தை அடையும் என்று திரௌபதா தேவி அர்ச்சுனனைப் பார்த்து வியசனத் துடனே சொன்ன விருத்தாந்தத்தைச் சூத புராணிகர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார். இப்படித் தருமத்துடனேயும், ஞாயத்துடனேயும், தயையுடனேயும், சத்தியத்துடனேயும், பக்ஷத்துடனேயும், திரௌபதாதேவி சொன்ன மகத்தான வார்த்தையைத் தருமராஜா வானவர் கேட்டு மிகவுஞ் சந்தோஷத்துடனே திரௌபதையைச் சிலாகித்தார்.

அப்படியே நகுலனும், சகாதேவனும், யுயூதானனும், அர்ச்சுனனும், தேவகி குமாரனான ஸ்ரீ கிருஷ்ண பகவானும், மற்றுமுள்ள ராஜஸ்திரீகளும் அந்த வார்த்தைக்குச் சந்தோஷித்தார்கள். அந்தச் சமயத்தில் பீமசேனன் சொல்லுகிறான். தனக்குப் பிரபுவான ராஜாவுக்கும், தனக்கும் ஒரு பிரயோசனமில்லாமல் நித்திரைபண்ணுகிற சிசுக்களைக் கொன்ற இந்தப்பாபிஷ்டனைச் சங்காரஞ்செய்தால் அது அவனுக்கு க்ஷேமமாகவே யிருக்கும்என்று பொறாமையுடனே சொன்ன வார்த்தையைக் கேள்வியுற்ற ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கு மித்திரனாகிய அர்ச்சுனனைப் பார்த்துப் புன் சிரிப்புச் செய்தவர் போல ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் அர்ச்சுனனே! பிராமணன் கொலைசெய்கிறதற்கு யோக்கியனான அதமனாகவிருந்தாலுகிலும், அவனைக் கொல்லலாகாதென்றும், ஆததாயி யானவனைச் சீக்கிரமாகக் கொல்லவேண்டு மென்றும், இந்த இரண்டு சாஸ்திரங்களையும் நானே சொன்னேன். ஆகையால் இரண்டையும் நீ பரிபாலனஞ் செய்யவேண்டும். உன்னுடைய நாயகியாகிய பாஞ்சாலியைச் சமாதானஞ் செய்கிற போது உன் மக்களைக் கொன்றவன் தலையை அறுத்துக் கொண்டு வருகிறேனென்று நீ செய்த பிரதிக்கினையும், பீமசேனனுடைய வசனத்தையும் சத்தியமாக நிறுத்தி யுனக்கும் பாஞ்சாலிக்கும் இஷ்டமான காரியத்தைப் பண்ணவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணன் நியமித்ததைச் சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்.

இப்படிப் பகவானால் ஆக்கியாபிக்கப்பட்ட அர்ச்சுனன் ஸ்ரீ ஹரியினுடைய கருத்தை அறிந்துகொண்டு அசுவத்தாமாவினுடைய சிரசில்தானே பிறந்து விளங்குகின்ற சூடாமணியைத் தலைமயிர்களுடனே சேர்த்துப்பிடித்துத் தன் சுரிகையினால் அறுத்து எடுத்துக்கொண்டு கட்டையும் அவிழ்த்துவிட்டுச் சிசு ஹத்தியினால் தேஜஸையும் மணியையும் இழந்திருக்கிற அசுவத்தாமாவைத் தன்னுடைய சேனைக்கு வெளியில் துரத்தினான். பிராமண அதமன் அபராதஞ் செய்தானாகில் அவனுக்குச் செய்ய வேண்டிய தண்டனையானது விகாரமாகத் தலையை க்ஷௌரஞ் செய்விக்கிறதும், அவனுக்குள்ள தனங்களை விசேஷ மில்லாமல் அபகரித்துக் கொள்ளுகிறதும், அந்த ஸ்தானத்தை விட்டு ஓட்டிவிடுகிறதுமே யல்லாமல் அவன் பிராணனை வாங்குகிற விதத்தைச் சாஸ்திரஞ் சொல்லவில்லை. ஆகையால் அசுவத்தாமாவுக்கு இப்படிச் சிக்ஷை செய்த பின்பு, பாண்டவர்க ளெல்லாரும் திரௌபதை யுடனே புத்திரர்களை நினைத்துத் துக்கித்துக் கொண்டு காலகதி யடைந்த பந்துக்களுக் கெல்லாம் சமஸ்காரஞ் செய்தார்கள். அப்பால், முன்னால் தன் பாதத்தில் விழுந்து அழுது கொண்டிருந்த திரௌபதைக்குத் தான் சொன்ன பிரதிக்ஞையின்படி பீமசேன னுடைய கதையினால் தொடை யொடிந்தும் மார்பு பிளந்து மிருக்கிற தங்கள் தங்கள் நாயகர்களைத் தழுவிக்கொண்டும் தலைமயிர்களை விரித்துக் கொண்டும் அழுகிற சத்துரு பத்தினிகளையும் பாரென்று ஸ்ரீ கிருஷ்ணன் காண்பித்தார்.

---

## எட்டாவது அத்தியாயம்

இந்த அத்தியாயத்தில், உத்தரையினுடைய கர்ப்பம், கோபியான அசுவத்தாமாவினுடைய அஸ்திரத்திரானின்றும், ஸ்ரீ கிருஷ்ணனால் காக்கப்பட்ட ரக்ஷணமும், குந்திதேவியினுடைய ஸ்தோத்திரமும், இராஜாவினுடைய சோகமும் கீர்த்திக்கப் படுகின்றன.

இப்படிச் சவுனகாதிகளைக் குறித்துச் சொன்ன சூதர் மறுபடியுஞ் சொல்லுகிறார்: யுத்தத்தில் மாணமடைந்த பந்துக்களுக்கு நீர்க்கடன் செய்ய வேண்டி ஸ்ரீ கிருஷ்ணனுடனேகூடப் பாண்டவர்கள், இறந்து போனவர்களுடைய ஸ்திரீகளை முன்னிட்டுக்கொண்டு கங்கையில் ஸ்நானஞ் செய்து திலதர்ப்பணாதிகள் செய்து பிரலாபித்தும், மீண்டும் ஸ்நானஞ் செய்து அவ்விடத்திலிருக்கிற குரு வம்சசிரேஷ்டனாகிய திருதராஷ்டிரனையும், விதுரனையும், புத்திரசோகத்தையுடைய காந்தாரியையும், குந்திதேவியையும், திரௌபதியை

யும் துக்கிக்க வேண்டாமென்று ஸ்ரீ கிருஷ்ணன் முனிவர்களுடனே சமாதானஞ்செய்து, பிராணிகளிடத்தில் வருகிற காலகதியானது ஒருவராலேயும் நீக்கக்கூடாதென்று அவர்களுக்குத் தெளியவுரைத்து, அஜாதசத்துருவான தர்மராஜாவினுடைய ராச்சியத்தைச் சூதினால் கட்டிக்கொண்ட துஷ்டர்களைப் பதிவிரதையான திரௌபதியுடைய தலைமயிரைப் பரிசித்ததால் உண்டான பாதகத்தில் சங்காரஞ் செய்வித்து, உத்தம கருமங்களான மூன்று அஸ்வமேத யாகங்களைத் தருமராஜாவினால் செய்வித்து, இந்திரனுடைய கீர்த்தியைப்போலத் தருமராஜனுடைய புகழைச் சகல திக்குகளினும் நிறைப்பித்துப் பாண்டவரிடம் விடைபெற்றுக் கொண்டு சாத்தகியுடனே துவாரகைக்குப் போகவேண்டுமென்று இரதத்தின் மேலேறியிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணன், மிகவும் பயத்தினால், நடுங்கிக்கொண்டு ஓடிவருகிற உத்தரையைச் சமீபத்தில் கண்டார்.

அந்த உத்தரை ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்துச் சொல்லுகிறாள். ஓ மகா யோகியே! தேவ தேவனே! ஜகத்பதியே! ரக்ஷியும் ரக்ஷியும். ஒன்றுக்கொன்று சத்துருவாயிருக்கிற இந்தவுலகத்துக்கு உம்மைவிட அபயம் கொடுக்கிறவர் மற்றொருவருமில்லை. ஓ ஸ்வாமியே! காய்ச்சின மழுப்போல் குரூரமாகிய பாணமானது என்னைத் துரத்துகிறது. ஓ விபுவே! அந்தப்பாணம் என்னை மிகவுந் தகித்தாலும்தகிக்கட்டும், என் கர்ப்பமாத்திரம் அழியாமல் காக்கவேண்டும், என்றிப்படி உத்தரை சொன்ன வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ பகவான் பக்தவச்சலராகையால் துரோணகுமாரனால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திரம் இதுவென்றறிந்துகொண்டிருக்கும் சமயத்தில், ஐந்து பாணங்கள் ஜ்வாலைகளுடனே பாண்டவர்களுக்கெதிராக வருகிறதைக்கண்டு பாண்டவர்கள் தங்கள் அஸ்திரங்களைக் கையிலெடுத்தார்கள். ஓ சவுனகாதிகளே! அப்போது ஜகத் பிரபுவான ஸ்ரீ கிருஷ்ணன் தம்மைவிட மற்றொருவரை நினையாமல் தம்மிடத்தில் பக்திசெய்கிற பாண்டவர்களுக்கு வந்திருக்கிற இந்த மஹா விபத்தைப் பார்த்துத் தம்மையே தேவதையாக வுடைத்தாயிருக்கிற சுதரிசனாஸ்திரத்தினால் தமக்கு மித்திரர்களாயிருக்கிற பாண்டவர்களை ரக்ஷித்தார். சர்வ பிராணிகளுக்கும் அந்தர்யாமியாகியும் உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கிற சக்தியை யுடைத்தான ஸ்ரீ ஹரியானவர் கவுரவ சந்தானத்தை ரக்ஷிக்கவேண்டித் தம்சங்கல்பத்தினால் விராடபுத்திரியினுடைய கர்ப்பத்தைச் சூழ்ந்துகொண்டார். ஓ பிருகு வம்சோத்பவரான சவுனகரே! பிரமசாமென்கிற அஸ்திரமானது வியர்த்தமாக மாட்டாது.

மற்றொரு அஸ்திரத்தினால் தடுக்கவுங் கூடாது. ஆனாலும் ஸ்ரீ விஷ்ணு தேஜஸினால் லயத்தை யடைந்தது. யாதொரு ஸ்ரீ விஷ்ணுதேவர் தம் விளையாட்டுக்குச் சாதனமாகிய பிரகிருதியால் இந்த வுலகத்தைக் கற்பித்து அதினுட் புகுந்து அதை ரக்ஷித்துப் பின்பு சங்காரஞ் செய்து தாம் பிறவாமலிருக்கிறாரோ, அந்தச் சர்வாந்தர்யாமியாகிய அச்சுதனிடத்தில் இதுவொரு ஆச்சரியமென்று நினைக்கவேண்டாம். இப்படிப் பிரமாஸ்திர மாகிற நெருப்பில் நின்றும் விடுபட்ட பாண்டவர்களுடனேயும் திரௌபதி யுடனேயுங் கூடியிருக்கிற குந்திதேவியானவள், துவாரகைக்கு எழுந்தருளவேண்டுமென்று பிரயாணமா யிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைக் குறித்துப் பிரார்த்திக்கிறாள்.

இந்த வுலகங்களுக்கு ஆதி காரணமாகியும், ஸ்வாமியாகியும், பிரகிருதிக்கு நியாமகனாகியும், சமஸ்த ஜீவ வர்க்கங்களாலேயும் அறியப்படாமலும், அவற்றினுடைய உள்ளும் புறம்பும் வியாபித்திருக்கிறவனாகவும், மாயையாகிற திரையினால் மறைந்து கியானங் குறைந்த பிராணிகளுடைய இந்திரியங்களால் அறியப்படாதவனும், அவ்யயனாகியு மிருக்கிற உம்மை வந்தனஞ் செய்கிறேன். உம்மிச்சையில் உண்டாக்கிக்கொண்ட உம்முடைய அவதாரத்தைத் தியானஞ்செய்கிற பரம ஹம்சாளாகிய முனிவர்களும் அறியமாட்டாம லிருக்கிற உம்மை ஸ்திரீ ஸ்வபாவமான நான் எப்படி அறியப் போகிறேன். வசுதேவ குமாரனாகித் தேவகி கர்ப்பத்தில் அவதரித்து ஸ்ரீ கிருஷ்ணனென்று திவ்யநாமத்தைத் தரித்தும், நந்த கோபனுக்குக் குமாரனாகிக் கோவிந்தனென்றும் நாமத்தைத் தரித்த தேவரீருக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். ஓ ஹ்ருஷீகேசனே! அதி துஷ்டனான கம்சனால் சிறையிலகப்பட்ட தேவகிதேவி வெகுகாலம் அனுபவித்த சோகத்தைப் பரிகரித்தாற்போல, மிகுதியும் துக்கத்தை யடைந்த என்னையும் அடிக்கடி காத்து விபத்துக்களைப் பரிகரித்து அந்தச் சோகங்களைத் தேவரீரே நீக்கினீர்; துரியோதனன் பீமசேனனுக்கு விஷங் கலந்த அன்னத்தை யிட்டபோதும், அரக்குமாளிகையில் நெருப்பை வைத்தபோதும், இடும்பாசுரனைக் கண்டபோதும், அதிதுஷ்டனான துச்சாதனாதியர்களுடனே கூடின துரியோதனனுடைய சபையில் அவமானஞ் செய்தபோதும், வனவாசத்திற் சங்கடங்கள் வந்தபோதும், யுத்தங்கள் தோறும் மகாரதிகர்களுடைய அநேகவிதமான அஸ்திர பயங்களினும் துரோண குமாரனாகிய அசுவத்தாமாவினுடைய அகோராஸ்திரத்திலும், நீரே சாந்தம் பண்ணினீர்; ஸ்ரீ ஹரியே!

துரியோதனனால் ஆக்கியாபிக்கப்பட்ட துருவாசர் எங்களுக்குச் சாபங்கொடுக்க வேண்டுமென்று நினைத்து அகாலத்தில் அதிதி பூசை பண்ணிவைக்கச் சொலலி வந்தபோது அந்த வனத்தில் எழுந்தருளி என் புத்திரர்களால் மூன்று லோகத்துடனே அந்த ரிஷிக்குத் திருப்தி செய்வித்தீர்; உம்மைத் தரிசனஞ் செய்தவர்களுக்கு மறுபடியும் பிறப்பில்லை. ஆகையால் அப்படிப்பட்ட உமது தரிசனத்தைக் கொடுக்கிற ஆபந்துகள் எங்களுக்கு அடிக்கடி வரட்டும். ஜெகத் குருவே! குலத்தினுலேயும், ஐச்வரியத்தினுலேயும், சாஸ்திரங்களினுலேயும், அழகினுலேயும், மிகுந்த மதத்தை யுடைத்தானவன், சகலத்தையுந் துறந்த ஞானிகளுக்கு யோக்கியரான உம்முடைய நாமத்தை நினைக்கமாட்டான். எப்பொழுதும் சகலத்தையுந் துறந்தவனை நினைக்கிறவராகவும், குணங்களுடைய விருத்தி யில்லாதவராகியும், தம்மிடத்தில் தாமே விவகரிக்கிறவராகவும், உலகங்களில் ஆசை யொழிந்தவராகவும், கைவல்ய பதியாகியு மிருக்கிற உமக்கு வந்தனஞ் செய்கிறேன். உம்மை ஆதியந்தங்க ளில்லாமலும் சுதந்தரராகியும், சர்வ பிராணிகளிலேயும் சமமாகச் சம்பந்தித்த காலசரீரராகியு மிருக்கிற ஈசானனென்று நினைக்கிறேன். அல்லாமற்போனுல் இந்தப் பூதங்களுக்கு ஒன்றுக்கொன்று கலகங்கள் வரக்காரணமென்ன? இந்தப் பூலோகத்தில் ஜனங்களுடைய நடக்கையை நடித்துக் காண்பிக்கிற நீர் செய்ய வேண்டுமென்று நினைத்த கருமத்தை மற்றொருவ ரறிய மாட்டார்கள். உமக்கு வேண்டியபே ரொருவருமில்லை. உம்முடைய துவேஷத்துக்கு யோக்கியமானவ ரொருவரு மில்லை. அவரவர் கருமத்தை யனுபவிக்குங் காலத்தில் அவரவர் மதிமாத்திரம் உம்மிடத்தில் விஷயமாகி யிருக்கும். ஓ விச்வாத்மகனே! கருமாதீனமாகிய ஜனனமும், கர்த்தத்துவமுமில்லாத உமக்கு ரிஷிகளிலும், திரியக்கு சாதிகளிலும், ஜல ஜந்துக்களிலும், ஜனனமும், கருமமும், அந்தந்தச் சாதிகளுடைய நடக்கைகளைச் செய்து காண்பிக்கவேண்டிச் செய்தனவே யல்லாமல் வேறல்ல. ஆனாலும் நீர் துடுக்குச் செய்தீரென்று யசோதை உம்மைக் கட்ட வேண்டு மென்று கயிறெடுத்த சமயத்தில் மையுடனே கலந்து நிறைந்த கண்ணீருடனே திருமுக மண்டலத்தைக் காண்பித்துப் பயந்தவரைப்போல் நடனஞ் செய்துகொண்டு யசோதை முன்னே நின்றிருந்த உம்முடைய வேஷம், என்னை இப்போது மோகிக்கப் பண்ணுகிறது. ஜனன மில்லாத பரமாத்மாவானவன், புண்ணிய சுலோகனாகியும், தனக்குப் பிரீதிமாத்திர மிகவுமிருக்கிற யதுவினுடைய கீர்த்திகளை விஸ்தாரஞ் செய்ய வேண்டி, அவளு

டைய வம்சத்தில் மலையபர்வதத்தில் சந்தன விருக்ஷம்போல் ஜனித்தா னென்று சிலர் சொல்லுகிருர்கள். வசுதேவ னுடைய க்ஷேத்திரமாகிய தேவகி யிடத்தில் தேவதைகளால் யாசிக்கப்பட்ட தேவரீர், இந்த வுலகங்களை ரக்ஷிக்கவேண்டிய நிமித்தமாகத் தேவ துரோகிகளைச் சங்காரஞ் செய்யவேண்டி அவதரித்தீரென்று சிலர் சொல்லுவார்கள். பூமியினுடைய பாரத்தைத் தீர்க்கவேண்டுமென்று யாசித்த சதுர்முகனு டைய வேண்டுகோளை யீடேற்ற இத்திருமேனியைத் தரித்தீ ரென்று சிலர் சொல்லுகிருர்கள். இந்தச் சமுசாரத்தில் அக்கியானத்தினலே துக்கித்திருக்கிற பிராணிகள் உம்மு டைய லீலைகளைக் கேள்வியுற்று ஸ்மரணஞ் செய்து கடைத் தேறும்படி திரு அவதரித்தீரென்று சிலர் சொல்லுகிருர்கள்.

ஓ சுவாமியே! தேவரீர் உம்முடைய இஷ்டப் பிரயோச னத்தை இச்சித்து இஷ்டர்களாகியும் தேவரீரையே அடுத் தும் ஜீவித்துக்கொண்டிருக்கிற எங்களைப் பிரிந்தீராகில் நட்பிழைப்பாகிற பாதகமென்று நினைத்துச் சகிக்கமாட்டாத தருமராஜா, சரீரத்தையே தரிக்கமாட்டாரென்று நினைத்துக் கொண்டிருக்கிற எங்களுக்கு உம்முடைய சரண கமலங்களே யல்லாமல் மற்ருெரு கதியில்லை. இந்திரியங்களுக்குச் சுவாமி யான சிவனுடைய தரிசனம் போல், தேவரீருடைய தரிச னங் கிடைத்தபோது நாங்களும், யாதவர்களென்றும், பாண் டவர்களென்றும், நிலைபெற்றுச் சரீரங்களைத்தரித்துப் பிர சித்தியுடனே கூடியபேர்களையு முடைத்தா யிருக்கிருேமல் லாமல், உம் தரிசன மில்லாமற்போனுல் எங்களுடைய ரூபங்களும், நாமங்களும், இந்த வுலகத்தில் பிரகாசிக்க மாட்டா. ஓ கதாதரனே! இப்போது இந்தப்பூமியானது சங்கு சக்கராதிகளான திவ்ய ரேகைகளுடனே கூடிய உம்மு டைய பாதங்களா லலங்கரிக்கப்பட்டும், கடாக்ஷத்தால் பரிபக் குவமான பயிர்கள், கொடிகள், விருக்ஷங்கள், பர்வதங்கள், சமுத்திரங்கள் முதலியவற்ருல் பிரகாசித்து எப்படி விருத்தி யடைந் திருக்கிறதோ, அப்படியே தேவரீர் துவாரகைக்கு எழுந்தருளினுல் வர்த்திக்க மாட்டாது. ஓ சர்வலோக நாய கனே! சர்வாந்தர்யாமியே! சர்வமூர்த்தியே! தேவரீரை ஒரு வேண்டுகோள் பிரார்த்திக்கிறேன். இந்த விருஷ்ணிக ளிடத்திலேயும் பாண்டவர்க ளிடத்திலேயும் எனக்கு இருக் கிற சிநேகமாகிற பாசத்தை நீரே நீக்கவேண்டும். இதுவு மல்லாமல் என்னுடைய மனது மற்ருெருவரிடத்தில் பொருந் தாமல் உம்மிடத்தில் சீக்கிரமாகப் பிரீதியை யடையவேண்டி உம்மைச் சரண மடைகிறேனென்று குந்திதேவி சரண

மடைந்து யாசித்த கிராமத்தைச் சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லி, அந்தக் குந்தியினிடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் செய்த பிரகாசத்தையுஞ் சொல்லுகிறார்.

சகல சுப நிதியான ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, குந்தியினுடைய ஸ்தோத்திரங்களைத் திருவுளம்பற்றி மந்தகாசஞ் செய்து துவார்கைக்கு எழுந்தருளவேண்டுமென்று சங்கற்பித்தவர் குந்திதேவி பிரார்த்தித்தபடியினாலேயும், தருமராஜா பிரீதியுடனே நிறுத்தியபடியினாலேயும், சம்மதித்துப் பாண்டவர்களுடனே குந்திதேவியையும், மற்றுமுள்ள ஸ்திரீகளையும் அழைத்துக்கொண்டு அஸ்தினாபுரத்துக்கு எழுந்தருளினார். பின்பு தருமராஜாவுக்குப் பகவத் சங்கல்பத்தை யறிந்த வியாசாதிகளாலேயும், அற்புதமான சரீரத்தை யுடைத்தாகிய ஸ்ரீ கிருஷ்ணனாலேயும், தெளியும்படி போதிக்கப்படும் புராதனமான இதிகாசங்களை இவர்கள் தெளிய வுரைத்தும், அவருக்குத் தெளிவு பிறவாமல் துக்கத்தை அடைந்து சொல்லுகிறார்: கருமாதீனமான இந்தத் தேகத்தின் நிமித்தமாக வெகு அக்ஷோஹிணி சேனைகளைச் சங்காரஞ் செய்வித்து, பாலர்கள், பிராமணர்கள், துணைவர்கள், மித்திரர்கள், பிதுர் ஜனங்கள், பிராதுரு வர்க்கங்கள், குரு ஜனங்கள் முதலியவர்களைச் சங்காரஞ் செய்வித்த எனக்கு, நரகங்களில் அநேககாலம் அனுபவம் பண்ணினாலும் அந்தப் பாவங்கள் தொலையமாட்டா. தருமமான யுத்தத்தில் பிரஜைகளைச் சங்காரம் பண்ணின ராஜனுக்குப் பாவமில்லை யென்று சொல்லுகிற தரும சாஸ்திரங்கள் எத்தனை யறிந்திருந்தாலும், மோகத்தினால் எனக்குத் தெளிவு பிறக்கவில்லை. யுத்தகளத்தில் மடிந்துபோனவர்களுடைய பந்துக்களான ஸ்திரீகளின் துரோகத்தைக் கிரகஸ்தாச்ரமத்தில் செய்யத்தக்கதான நித்திய நைமித்திய கருமங்களால் பரிகரிக்கிற சாமர்த்தியமும் எனக்கில்லை யென்றார்.

---

## ஒன்பதாவது அத்தியாயம்

*இதில் தரும ராஜாவின் பொருட்டுப் பீஷ்மரால் சொல்லப்பட்ட சர்வ தருமங்களினுடைய நிரூபணமும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸ்தோத்திரமும், பீஷ்மருடைய முக்தியும் வர்ணிக்கப்படுகின்றன.*

இப்படித் தருமராஜா, பிரஜைகளுக்குத் தாம் செய்த துன்பத்தினால் பாதகமுண்டென்றும், அதைப் பரிகரிக்கிறதற்கு யோக்கியமான தருமத்தை நாம் செய்ய வேண்டுமென்

றும் நினைத்து, பீஷ்மரானவர், உத்தராயண காலத்தை யபேக்ஷித்துச் சரசயனத்தில் படுத்திருக்கிற குரு க்ஷேத்திரத்துக்குப் பிரயாணப்பட்டார். அப்போது அவருடைய பிராதாக்களாகிய பீமாதிகளும் நல்ல லக்ஷணங்களுடனே கூடிய அசுவங்களி லேறிக்கொண்டு பின்செல்ல, வியாசர் தௌம்யர் முதலான பிராமணோத்தமர்கள் திவ்யமான ரதங்களிலேறிக் கொண்டு கூடவே நடந்தார்கள். ஓ பிரமரிஷியே! ஷட்குண பரிபூரணரான ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ச்சுனனுடனே கூட ரதத்திலேறிப் பின்னே யெழுந்தருளினர்: இப்படிக் குரு க்ஷேத்திரத்தில் சேர்ந்த தருமராஜா, அவ்விடத்தில் சொர்க்க லோகத்தில் போகத்தை யனுபவித்துச் சேஷத்துடனே பூமியில் விழுந்த தேவனைப்போல் விழுந்திருக்கிற பீஷ்மரைக் கண்டு வந்தனஞ் செய்தார். அவருடனே யவர் தம்பிகளும் ஸ்ரீ கிருஷ்ணனும் வந்த மற்றுமுள்ளவர்களும் நமஸ்காரம் பண்ணினர்கள். அந்தச் சமயத்தில் அந்தக் குரு க்ஷேத்திரத்தில் சகலமான பிரம ரிஷிகளும், உத்தமர்களான தேவரிஷிகளும், சிலாக்கியர்களான ராஜரிஷிகளும், பாரத சிரேஷ்டரான பீஷ்மரைக் காணவேண்டுமென்று தங்கள் தங்கள் சிஷ்யர்களுடனே கூடிக்கொண்டு வந்தார்கள், அப்படியே காசியபரும், பிரகஸ்பதியும், இவர்களுடனே இன்னும் சில தேவரிஷிகள் சிஷ்யவர்க்கங்களுடனே வந்தார்கள். இப்படி வந்த பிரம நிஷ்டர்களாகிய முனிகணங்களை, வசுக்களில் உத்தமரான பீஷ்மர் கண்டு உபசாரஞ்சொல்லி அவர்களுக்கு யோக்கியமான பூசைசெய்து ஸ்ரீ கிருஷ்ணனையும் உபசரித்துச் சிலாக்கியமான ஆசனத்தி லிருத்திய பின்பு அந்தக்கிருஷ்ணனுடைய பிரபாவத்தை அறிந்த பீஷ்மர் தம் இச்சையினல் தம்முன் எழுந்தருளி யிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தை தம் இருதயத்தில் தியானம்பண்ணி விசுவாசத்துடனேயும் பிரீதியுடனேயும் மானஸ மஹா பூசை செய்தார். பின்பு தம்முடைய சமீபத்தி லிருக்கிற பாண்டு குமாரனைத் தம்முடைய ஆனந்த பாஷ்பத்தினல் நிறைந்த கண்களால் பிரீதியுடனே பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறுர்.

ஓ தரும நந்தனனே! நீங்கள் மகத்தான கஷ்டங்களை அனுபவித்தீர்கள். அந்தச் சிரமங்கள் உம்முடைய பிரதிக்கினையால் வந்தனவாகையால் அவை ஞாயமென்று சகித்தீர்கள்; அது மகத்தான ஆச்சரியம். ஆனல் இராச்சியமிழந்து பிராமணர்களைப்போல் பிக்ஷைமுதலியவைகளினலும் சீவனம் பண்ணினீர்கள்; அதுவும் ஆச்சரியந்தான், இப்படிப்பட்ட

கிலேசங்கள் உங்களுக்கு வருவது யுக்தமல்ல. இதுவுமல்லா மல் உங்களுடைய பிதாவான பாண்டுமஹாராஜா சுவர்க் கத்தை யடைந்தபோது உம்முடைய மாதாவான குந்திதேவி சிசுக்களான உங்களைச் சம்ரக்ஷிக்கவேண்டி யுங்களுடனே வெகு கிலேசங்களை யடிக்கடி அனுபவித்தாள். காலமும் இந்த லோகமும் உங்களுடைய ஆதீனமாக இருக்கையினால் உங்க ளுக்கு எந்தெந்தச்சிரமங்கள் வந்தனவோ அவைகளெல்லாம் காலத்தினுடைய மகிமையென்று நினைக்கிறேன். ஓ பிரபுவே! தத்வங்களைத் தெளிந்த கியானிகளும், யாதொரு காலத்தி னுடைய ஸ்வரூபத்தை அறிய வேண்டுமென்று நினைத்துத் தியானஞ் செய்தும் அறியமாட்டாமல் மோகித்திருக்கிறார் களோ அந்தக்காலத்தினுடைய ஆதீனமாயிருக்கும் பிராணி களுடைய சுகதுக்கங்களென்று தெரிந்துகொண்டு, அந்தக் காலத்தை அனுசரித்து இப்போது அநாதர்களா யிருக்கிற பிரஜைகளுக்கு நீர் நாதராகி பரிபாலனஞ் செய்ய வேண்டும்.

பாரதகுலத்திற்பிறந்தபேர்களிற்சிரேஷ்டரான பிரபுவே! இந்த ஸ்ரீ கிருஷ்ணன், உலகங்களுக்கெல்லாம் ஆதிகாரண மாகியும் ஷட்குண பரிபூரணமா யிருக்கிற புருஷ சிரேஷ்ட னை ஸ்ரீமந் நாராயணனே யல்லாமல் வேறல்ல. இந்த வுல கங்களை மோகிப்பிக்கவேண்டி இந்த ஸ்ரீ கிருஷ்ணன் வேஷத் தைத் தரித்து, விருஷ்ணி வம்சத்தில் அவதரித்து, ஒருவர்க் குந் தெரியாமல் சஞ்சரிக்கிறான். இவனுடைய மகிமையை மஹானுபாவரான சிவன் அறிவார். அதிகோப்பியமான இவர் மகத்துவத்தைத் தேவ ரிஷியான நாரதர் அறிவார். இவருடைய அவதாரமாகிய கபிலர் அறிவார். ஓ நரேந் திரனே! யாதொரு கிருஷ்ணன், அம்மான் குமாரனென்றும், மித்திர னென்றும், உத்தமமான துணைவ னென்றும் நினைத் துச் சுகிர்தபாவத்தினால் மந்திரியாகவும், தூதனாகவும்; சாரதி யாகவும் கற்பித்தானோ அந்தக் கிருஷ்ணன் சமஸ்தங்களுக் கும் ஆத்மா வானவனும், சரீரவிசிஷ்டனான தன்னைக்காட்டி லும் மற்றொன் றில்லாதவனும், தனக்கொரு குறை வில்லாத வனும் ஆகையால் நீங்கள் செய்ய வேண்டுமென்று வேண் டிக்கொண்ட சாரத்தியம் முதலான கருமங்களால் அவன் மனதில் ஒரு வைஷம்மியமு மில்லையானாலும், ஓ ராஜாவே! அந்தரங்க பக்தர்களிடத்தில் இந்த ஸ்வாமியுடைய தயவு மிகுதியாக இருக்குமென்று அறியும். அதெப்படி யென்றால் பிராணனை விடவேண்டுமென்று நினைத்திருக்கிற எனக்கு இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பிரத்தியக்ஷமாக எழுந்தருளினார். யாதொரு யோகியானவன், ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பக்தி

யினுல் மனதை நிறுத்தி, வாக்கினுல் இவன் நாமத்தைத் தோத்திரஞ் செய்துகொண்டு சரீரத்தை விடுகிருனே, அவன் கருமபந்தங்களைத் தவிர்வானுகையால், தேவர்களுக்கெல்லாம் தேவனுன இந்தப் பகவான் சதுர்ப்புஜனுகியும், பிரசன்னமாகியும், புன்சிரிப்பினுலேயும், செந்தாமரைப் போலொத்த நேத்திரங்களாலேயும், சந்திரனுக்குச் சமானமாக விளங்குகிற முகத்தை யுடைத்தாகியு மிருந்து கொண்டு என்னுடைய தியானத்துக்கு மார்க்கமாயினுன். நான் சரீரத்தை விடுகிற வரையில் என்னிடத்தில் கிருபை செய்து என் முன்னே காத்திருக்க வேண்டுமென்று, பீஷ்மர் பிரார்த்தனை செய்ததைச், சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப், பின்பு தருமராஜா அந்தப் பீஷ்மரைக் கேட்ட விஷயத்தைச் சொல்லுகிருர்.

ஓ சவுனகாதிகளே ! யுதிஷ்டிரர், சரசயனத்தில் படுத்திருக்கிற பீஷ்மர் ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரார்த்தித்ததையுங் கேட்டுத், தாமும் சகல தருமங்களையும் பீஷ்மரிடத்திலிருந்து தெரியவேண்டு மென்று நினைத்துக் கேட்டார். அது யாதென்றல்: பூமியில் பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்று உயர்ச்சி தாழ்ச்சியான வர்ணங்களுடைய சிருஷ்டிக்கு மூலமான கருமங்க ளெவை? அந்தந்த வர்ணங்களுக்குத் தருமங்களெவை? பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்கிற நான்கு ஆசிரமத்தார்களுஞ் செய்ய வேண்டிய தருமங்க ளெவை? வைராக்கிய முள்ளவன் செய்யவேண்டிய தருமங்களும், ஆசையுள்ளவன் செய்ய வேண்டிய தருமங்களும் எப்படிப்பட்டன வென்று வேதஞ் சொல்லுகின்றது? தானத்தினுல் வருகிற தருமங்களையும், மோக்ஷங்களுக்குச் சாதகமாகிய தருமங்களையும், ஸ்திரீ தருமங்களையும், பகவத் தருமங்களையும், தருமார்த்த காம மோக்ஷங்களையும், அவைகளின் காரணங்களாகிய உபாயங்களையும் பிரித்து, எனக்குத் தெரியும்படியாய் உபதேசிக்க வேண்டுமென்று கேட்ட யுதிஷ்டிரருக்குப், பீஷ்மர் இந்தத் தருமங்களை யெல்லாம் அனேகவிதமான கதைகளை யுடைத்தான இதிகாசங்களில் காண்பித்துத் தெளிய உரைத்தார். இப்படிப் பீஷ்மர், தமக்கு மனசு வந்தபோது சரீரத்தியாகம் பண்ணும்படியான சக்தியுண்டாகி அதற்குரிய உத்தராயனமான காலத்தைக் குறித்துக்கொண்டிருக்கிறகாலம் யாதொன்றுண்டோ அதுவந்தது. யுத்தத்தில் தம்முடனே கூட வந்திருக்கிற இரதிகர்களில் ஆயிரம்பேர்களைச் சம்ரக்ஷணை பண்ணுகிற வல்லமை யுண்டாகிய பீஷ்மரானவர், அந்த உத்தராயனம் வந்தவுடனே மவுனத்தைத் தரித்துத் தம் மனதை

இந்த உலக வியாபாரத்திற் செலுத்தாமல் திருப்பி, ஆதி புருஷனாகியும் சதுர்ப்புஜனாகியும் தன் முன்னே யிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனைத், தம் இருதயத்தில் தாரணஞ்செய்து கண்களை மூடிக்கொண்டு. மற்றொன்றையும் நினையாமற் செய்கிற தாரணத்தினால் சகலமான அசுபங்களையுந் தவிர்ந்து, அந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய கடாக்ஷத்தினால் ஆயுதவேதனைகளும் பரிகரிக்கப்பட்டுச், சகலமாகிய இந்திரிய விருத்திகளையும் விட்டுச் சரீரத்தையும் விடத்தக்கவராகி ஸ்ரீ ஜனார்த்தனனை ஸ்துதி செய்தார்.

குறைவில்லாத இன்பத்தை யுடைத்தாகிய தாம் விளையாட வேண்டிப் பிரகிருதியை அடைந்து, தேவ மனுஷ்யாதிகளான நானாரூபங்களைத்தரித்து, அளவிறந்த மகிமையையுடைய பரமாத்ம ஸ்வரூபமான சாத்வதபுங்கவனாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில், பீஷ்மர் வேறொரு பலனைக் கோராமல் தம்மதியை நிறுத்திப் பதினான்குலோகங்களும் துதிக்கும்படியாகிய திவ்ய மங்கள விக்கிரக ரூபத்தைத் தரித்த, அர்ச்சுனன் சகனிடத்தில், என்னுடைய மதியானது சலியாம லிருக்கவேண்டும். யுத்தத்தில் நான்கு பக்கத்திலும் அவிழ்ந்து புரளுகிற கேசங்களோடே கலந்த வேர்வையுமுண்டான திருமுகமண்டலத்தையும், என்னுடைய தீக்ஷணமாகிய பாணங்களினால் தொளைக்கப்பட்ட சரீரத்தையும், அந்தப் பாணங்களினால் தொளைக்கப்பட்ட கவசத்துடனேயும் விளங்கின ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் என் மனதானது சலியாம லிருக்கவேண்டும். அர்ச்சுனனுடைய வார்த்தையைக் கேட்டு அவன் சேனைகளுக்கும் சத்துரு சேனைகளுக்கும் நடுவே இரதத்தை நிறுத்தி அதன்மேலே யிருந்துகொண்டு சேனைகளுடைய ஆயுளைத் தம் கண்களால் கிரகித்துக் கொண்டு மிருந்த அர்ச்சுனன், மித்திரனான ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் என்னுடைய பிரீதியானது இடைவிடாம லிருக்க வேண்டும். அதி விஸ்தாரமாகிய சேனைகளுக்கு முன்னே யிருக்கிற சேனாதிபதிகளைப் பார்த்து சுஜனங்களை வதஞ்செய்கிறது தோஷமென்றும் யுத்தஞ் செய்கிறதில்லையென்றும் பின்னடைந்த அர்ச்சுனனுடைய புத்தியைத் தத்வ உபதேசத்தினால் எவன் பரிகரித்தானோ? அந்தப் பரம புருஷனுடைய திருவடிகளில் எனக்குப் பிரீதிநிரந்தரமாக இருக்க வேண்டும். யாதொருவன், தன்னுடைய நிச்சயத்தைத் தவிர்ந்து என்னுடைய பிரதிக்ஞையை நிறைவேற்ற சக்கிராயுதத்தையும் தரித்து இரத்திலிருந்து பூமியிற் குதித்துச் சிங்கம்போல் விரைவாய் வந்தானோ அந்த ஷட்குண பரிபூரண

ஞன முகுந்தன் எனக்குக் கதியாகக் கடவன். ஒருகையில் சாட்டியைப் பிடித்தும், மற்றொரு கையில் குதிரைகளுடைய கயிற்றைப் பிடித்தும், விஜயனுக்குச் சாரத்தியஞ் செய்த ஷட்குண பரிபூரணனான ஸ்ரீ ஹரியிடத்தில் மரணத்தை இச்சித்திருக்கிற என்னுடைய மதியானது நிலைத்திருக்க வேண்டும்.

அதி மனோக்கியமான நடைகளுடைய விநோதங்களாலேயும், சிலாக்கியமான புன்சிரிப்பினாலேயும், பிரீதிபூர்வகமான கடாக்ஷங்களாலேயும் உண்டாகிய வெகுமானங்களையுடைத்தான மதத்தினால் தங்கள் உடம்பு மறந்து தங்களைக் கிருஷ்ணனாக நினைத்துக் கோபிகா ஸ்திரீகள் எந்தக் கிருஷ்ணனுடைய லீலைகளைத் தாங்களும் செய்து நிசப்பிரகிருதிகளை அடைந்தார்களோ, அந்தப்பகவானும், யுதிஷ்டிரருடைய இராஜசூய யாகத்தில் முனிவர்களாலேயும் அரசர்களாலேயும் நிறைந்த சபை நடுவே சகல ஜனங்களுக்கு இரமணீயமான தரிசனங்கொடுத்து அவர்களிடத்தி லிருந்து வெகுமானம் பெற்ற இந்த ஸ்ரீ கிருஷ்ணரூபியான பரமாத்மாவும், என்னுடைய புத்தியில் பிரத்தியக்ஷமாகக் கோசரிக்க வேண்டும். யாதொருவன் மூங்கிற் காடானது காற்றினால் ஒன்றுக்கொன்று இழைந்ததினாற் பிறந்த காட்டுத்தீயைப் போல் கவுரவர்களில் சூதைப் பிறப்பித்து, தன்னை அடுத்தவர்களுடைய சிரமத்தைப் பரிகரிக்கிற பாதபத்மங்களையுடைத்தானவனுமான அந்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை என்னுடைய இருதயத்தில் நினைத்து அவனுடனே கலந்து இந்த மனுஷ சரீரமாகிற கூண்டைப் பரித்தியாகஞ் செய்கிறேன். ஒருவனாகிய தான் தன்னால் கற்பிக்கப்பட்ட சரீரத்தை விலட்சணமாக உடைத்தான ஜீவாத்மாக்கள் தோறும் வெவ்வேறாய்ச் சரீரங்களைத் தரித்துச் ஜீவர்களுடைய இருதயங்கள்தோறும் வாசஞ் செய்துகொண்டிருந்தாலும், கருமாதீனமாகிய ஜனனமற்ற பரமபுருஷனை நானடைந்து அவனையன்றி வேறொன்று நினைக்கிற மோகத்தைத் தவிர்ந்தேன். இப்படியாகத் துதித்த பீஷ்மரானவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில் பரமாத்மபுத்தியினால் மனதினுடைய கருமமான நினைவுடனேயும், கண்களுடைய காரியமான பிரத்தியக்ஷத்துடனேயும், வாக்கினுடைய வியாபாரமாகிய ஸ்தோத்திரங்களுடனேயும், தம்முடைய ஆத்மாவைத் தன் மனதினால் சரீரமாகக் கலந்து சுவாசத்தை யுண்டாக்கி இந்தச் சரீரத்தை விட்டார். அங்கே யிருந்த ரிஷிகளும், ராஜாக்களும், மற்றுமுள்ள பேர்களும் பிரகிருதி சம்பந்த மில்லாத பரப்பிரமத்தி

னிடத்தில் கலந்தவராகப் பீஷ்மரைத் தெரிந்து கொண்டு மவுனமாயிருந்தார்கள். அப்போது தேவதைகளாலேயும், மனிதர்களாலேயும், அடிபட்ட துந்துமி வாத்தியங்கள் இரண்டு லோகங்களிலு முழங்கின. சத்புருஷர்கள் பீஷ்மருடைய சரம யாத்திரையை மிகவுஞ் சிலாகித்தார்கள். ஆகாசத்திலிருந்து புஷ்ப வருஷங்கள் பொழிந்தன. பின்பு யுதிஷ்டிரர், பரமபதஞ் சேர்ந்த பீஷ்மர் சரீரத்துக்குச் சமஸ்கார முதலாகிய அபர கிருத்தியங்கள் செய்வித்துத், துக்கப்பட்டுக் கொண்டிருந்தார். அங்கே யிருந்த முனிவர்க ளெல்லாம் சந்துஷ்டராகி ஸ்ரீ கிருஷ்ணனை அதி கோப்பியங்களான அவன் நாமங்களினால் ஸ்தோத்திரஞ்செய்து அந்த ஸ்ரீ கிருஷ்ணனைத் தங்களிருதயத்தில் தியானஞ் செய்துகொண்டு அவரவர் ஆச்சிரமங்களுக்குப் போனார்கள். அதன் பின்பு, யுதிஷ்டிரர் ஸ்ரீ கிருஷ்ணனுடனே அஸ்தினபுரஞ் சேர்ந்து தனக்குப் பிதாவான திருதராஷ்டிரனையும், வெகு தபசையுடைத்தான காந்தாரியையும் சமாதானஞ் செய்து, பிதாவான திருதிராஷ்டிரனாலேயும் ஸ்ரீ வாசுதேவனாலேயும் சிலாக்கியம் பண்ணப்பட்டு, இராச்சியத்தைத் தருமத்துடன் பரிபாலனஞ் செய்தார்.

## பத்தாவது அத்தியாயம்

ஸ்ரீ கிருஷ்ணன் செய்யத்தக்க காரியங்க ளெல்லாம் செய்தவராய், ஸ்திரீகளினால் ஸ்துதிக்கப்பட்டு அஸ்தின புரத்தினின்றும் துவாரகா பட்டணத்திற்கு வந்ததைச் சொல்லப்படுகின்றது.

இப்படித் தருமராஜாவினுடைய இராச்சிய பரிபாலனத்தைக் கேள்விப்பட்ட சவுனகர் சூதரைக் கேட்கிறார். ஓ சூதரே! தருமசாலிக்குச் சிரேஷ்டரான யுதிஷ்டிரர், தம்முடைய பொருள்களையும் அபகரித்துத் தங்களையும் அக்கினி விஷாதிகளால் கொல்லவேண்டுமென்று நினைத்த திரியோதனாதிகளைச் சங்காரம் செய்தபின், தம்பிமார்களுடனே கூட ஆகாரத்தை விட்டுத் தாம் செய்வித்த ஜனவதையால் தமக்குப் பாதக முண்டென்று நினைத்தவர், எப்படி இராச்சிய பரிபாலனஞ் செய்தாரென்று கேட்ட சவுனகருக்குச் சூதர் சொல்லுகிறார்: ஓ சவுனகரே! சமுசாரத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டுமென்று திருவுளம் பற்றின ஸ்ரீ கிருஷ்ணன் தான் சுதந்தரனாகையால், கவுரவர்களுடைய வம்சத்தில், மூங்கிற் காட்டில் தனக்குள்ளே தானே பிறந்து பற்றிக்கொண்ட காட்டுத் தீயைப் போல், அந்த வம்சத்திற் பிறந்த கலகமாகிற அக்கினியில் அவர்களைக் கொல்லுவித்து, மிகுதியான பாண்ட

வர்களில் தரும ராஜாவை அந்த இராச்சியத்தில் பட்டாபி ஷேகஞ் செய்வித்து மிகவும் சந்தோஷ மடைந்த பின்பு, அந்த யுதிஷ்டிரர் கையால் உத்தம கர்மமாகிய மூன்று அச்வ மேதங்களைச் செய்வித்து, அவருடைய அதி பாவனமான கீர்த்திகளைச் சகல திக்குகளிலும் இந்திரனுடைய கீர்த்தி யைப்போல் விருத்தி பண்ணி வைத்தார். சரசயனத்தில் படுத் திருந்த பீஷ்மருடைய உபதேசமாகிய தரும சிரவண காலத் தில் இராஜதருமங்களைப் பீஷ்மர் உபதேசித்து அவரை இராச்சிய பரிபாலனஞ் செய்யச் சொல்லி ஆக்ஞாபித்ததினு லேயும், ஸ்ரீ அச்சுதனுடைய உபதேசத்தினுலேயும், சகல பிரமைகளையுந் தவிர்ந்து அந்தத் தருமராஜா ஆபத் சகாய னை ஸ்ரீ கிருஷ்ணனுடைய வுதவியினுல் சமுத்திரஞ் சூழப் பட்ட பூமண்டலத்தைத் தனக்கு வசவிர்த்தியான தம்பிமார் களுடனேகூட இராச்சிய பரிபாலனஞ் செய்யுங் காலத்தில், வருண பகவான் மிகவும் வருஷித்தான். பூமி சகலமான பலன்களையும் கொடுத்தது. பசுக்கள் க்ஷீர சமூர்த்தியான மடி களுண்டாகி இடையர் பாளையங்களில் பால் நனைத்தன. நதி களும், சமுத்திரங்களும், மலைகளும், வன ஸ்திரீகளுடனே கூடிய கொடிகளும், தானியங்கள் விளைகிற பயிர்களும், அந் தந்த ருதுக்களில் தத் தமக்கு யோக்கியமான பலன்களை மிக வுங் கொடுத்தன. தரும புத்திரர் பிராணிகளுக்கு இராஜவா யிருந்தபோது ஜனங்களி லொருவருக்குந் தேக வியாதிகளும் மனோ வியாதிகளு மில்லை. தெய்வத்தினுலேயும், பிராணிகளி னுலேயும், பூதத்தினுலேயும், ஆத்மாவினுலேயும் உண்டாகிற கிலேசங்களும் தாபத்திரயங்களு மில்லை.

ஸ்ரீ ஹரியும், தமக்குச் சுகிர்த்துக்களான பாண்டவர்களு டைய சோகத்தை விலக்க வேண்டியும், தங்கையான சுபத்தி ரையுடைய பிரீதியைக் கோரியும், அந்த அஸ்தினபுரத்தில் சிறிது நாளிருந்தார். அப்போது பாண்டவர்கள் ஸ்ரீ கிருஷ் ணரைப் பார்த்து ஓ கிருஷ்ண மூர்த்தியே! எங்களிடத்தில் அனுக்கிரகத்தினுல் இங்கே வெகு காலமாக எழுந்தருளி யிருந்து, துவாரக வாசிகளான பிரிய வர்க்கங்களை விட்டிருக் கிறீர். இப்போது அவர்களைக் கடாக்ஷிக்க வேண்டுமென்று திருவுள்ளத்தில் நினைத்து எழுந்தருளி அவர்களைக் கடா க்ஷித்துப் பாலனமுஞ் செய்து துரிதமாக அடியேங்களுக்கு மீண்டும் தரிசனங் கிருபை செய்யவேண்டுமென்று அந்தப் பாண்டவர்களால் செலவு கொடுக்கப்பட்டு, பின்பு ஸ்ரீ கிருஷ் ணபகவான் தருமராஜாவை ஆலிங்கனமுஞ் செய்து நமஸ்காரமும் பண்ணி இரதத்திலேறுகிற சமயத்தில் சில

ரால் ஆலிங்கனமும் சிலரால் வந்தனமுஞ் செய்யப்பட்டு, இர தத்திலேறின பின்பு, சுபத்திரா தேவியும், திரௌபதியும், குந்திதேவியும், விராட கன்னிகையான உத்தரையும், காந் தாரியும், திருதராஷ்டிரனும், திருதராஷ்டிரனுக்குத் தாசி யிடத்திற் பிறந்த யுயுச்சுவும், கிருபாசாரியரும், நகுல சகா தேவர்களும், பீமனும், தவுமியனென்கிற ரிஷியும், ஸ்திரீ ஜனங்களும், சாரங்கபாணியான ஸ்ரீ கிருஷ்ணனுடைய பிரிவைச் சகிக்க மாட்டாமல் மோகித்தார்கள். நியான சூன்ய ஞனவன், சாது ஜன சங்கத்தினுல் எவனுடைய புகழை ஒருதரம் கேள்விப்பட்ட மாத்திரத்தில் தன்னுடைய துர்ச் செய்கைகளைவிட்டுப் பக்தியை யுடையவனுவனே, அப்படிப் பட்ட மகிமையை வாய்ந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய பிரிவைக் குந்தி குமாரர்கள் எப்படிச் சகிப்பார்கள். பாண்டவர் விஷ யங்களில் பொருந்தாத மனதுடையவர்களாகிச் சிநேக சம் பந்தத்தால் பார்த்துக்கொண்டு கூடச் சஞ்சரித்தார்களல்ல வோ. பந்துக்களாகிய ஸ்திரீ ஜனங்களெல்லாம் அந்த தேவகி சுதனிடத்தில் அதிக ஆசையினுல் அவன் பிரயா ணப்பட்டு நடக்கிற சமயத்தில், தம்முடைய கண்களில் ஜல முண்டாகிறது சுபமல்லவென்று நினைத்து அதைத் தடுத்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் மிருதங்கங்களும், சங்கங்களும், பேரிகைகளும், வீணைகளும், தம்பட்ட வாத்தி யங்களும், கோமுக வாத்தியங்களும், துந்துமி வாத்தியங் களும், ஆனக வாத்தியங்களும், கெண்டாரவ முதலானவை களும், மிகவும் முழங்கின. இந்த ஸ்வாமியைக் காண வேண்டுமென்று நினைத்த கவுரவ ஸ்திரீகள் உப்பரிகைகளு டைய சிகரங்களிலேறிப் பிரீதிகளுடனே ஸ்ரீ கிருஷ்ண னிடத்தில் புட்பமாரி பொழிந்தார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சிநேகிதனுன அர்ச்சுனன், தங் கத்தினுல் செய்யப்பட்ட காம்பையுடைய வெள்ளைக்குடை கவிக்க, உத்தவரும் சாத்தகியும் இரண்டு பக்கங்களிலேயும் அதி மனேகரங்களான வெண்சாமரைக ளிரட்ட விளங்கி னர். பிராமணர் செய்த ஆசீர்வாத ஓசைகள் பரவின. ஸ்திரீகளில் ஒருத்தியுடனே யொருத்தி சொல்லுகிற வார்த் தையாவது, ஓ சகிகளே! யாதொரு புராணபுருஷன், சத்வாதி குணங்கள் ஒன்ருெடொன்று கலக்கிறதற்கு முற்காலத் தில் தேவமனுஷியாதி தருமங்களும், மகதகங்காராதி விகா ரங்களு மில்லாத சூக்ஷ்மப் பிரகிருதியையும், ஜீவ வர்க்கங்களை யும், தனக்குச் சரீரமாகப் பெற்றுப் பிரளயகாலத்திலும் நியாஞதி சக்திகளையிழந்த சேதனு சேதனங்களும் ஆத்மா

வாகி, ஈச்வரனுன தன்னிடத்தில் லயமடைந்திருக்கும்போது, தானொருவனேயாகி யிருந்தானே, அவனே இந்த ஸ்ரீ கிருஷ்ணனென் றறியுங்கள். அந்தப் புராண புருஷன், நாமரூபங்க ளில்லாத தன்னிடத்தில், நாமரூபங்களைக் கற்பிக்க வேண்டுமென்று நினைத்துத், தன் சங்கற்பத்தால் ஆக்கியாபிக்கப்பட்டும், சிருட்டித்தும், ஜீவராசிகளை மயக்கிக்கொண்டு மிருக்கிற தனக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியை அனுசரித்து வெகு ரூபநாமங்களைத் தரித்தும், ஸ்திதிகாலத்தில் தனக்குச் சரீரமாகிய பிராணிகள் செய்யுங் கருமங்களுடைய அவஸ்தைகளைக் கற்பிக்கவேண்டி வேத ஸ்வரூபங்களாகிய சாஸ்திரங்களை வெளியிட்டானே அவனிவனே யென்று நினையுங்கள். ஓ சகிகளே ! இந்தச் சம்சாரத்தில் மஹாநுபாவர்களான கியானிகள், இந்திரியங்களைச் செயித்துப் பிராணவாயுக்களை வசிகரித்துத் தங்கள் பக்தியினுலே மிகுந்தும், சந்தேகாதிகளைக் கடந்து மிருக்கிற கியானங்களால் பரிபூரணர்களாகி, எவனுடைய பாத பத்மங்களைச் சாக்ஷாத்காரஞ் செய்கிறுர்களோ அந்தப் பரம புருஷனுகிய ஸ்ரீ கிருஷ்ணன் நம்முடைய சத்வகுணத்தை, இரசோகுண தமோ குணங்களுடனே சேராமல் செய்கிறவ னல்லவோ ! யாதொரு மகானுபாவன் வேதங்களிலேயும், வேதாந்தங்களிலேயும் கோப்பியமான வஸ்துவை அறிந்தவர்களால் அடிக்கடி கானஞ் செய்யப்பட்ட பாவனமாகிய கீர்த்தியை யுடைத்தாகியும், தானொருவனே யிந்த வுலகத்துக்கு ஸ்வாமியாகியும் தன் விளையாட்டினுல் சேதனுசேதன ஸ்வரூபமாகிய இந்த உலகத்தைச் சிருட்டித்தும், இரக்ஷித்தும், சங்கரித்தும், அவற்றைத் தான் வேண்டாமலும் பிரகாசிக்கிறுனே, அவனே இந்த மாதவன்.

எந்தக் காலத்தில் தங்களுடைய அதர்மங்களால் மிகுதியான தமோ குணத்தால் மறைக்கப்பட்டும், விபரீதமாகக் கிரகித்துக்கொண்டு மிருக்கிற அறிவை யுடைத்தான இராசவர்க்கங்கள், இந்தப் பூமியை யுபத்திரவஞ் செய்கிறுர்களோ அந்தந்த யுகங்களில் இவனல்லவோ சத்வ மயமான அவதாரங்களைத் தரித்துப் பிராணிகளுடைய சுகத்தைக் குறித்துச் சத்தியமாகிய கியானுதிகளையும், தயவையும், கீர்த்தியையும் தரிப்பிக்கிறுன். யாதொரு காரணத்தால் புருஷசிரேட்டனுகிய இந்த லக்ஷ்மி பதியானவன், யதுகுலத்தில் அவதரித்து, மதுவனத்தில் தன் திருவடிகளால் சஞ்சரித்தானே அக்காரணத்தால் யதுகுலமானது அதி சிலாக்கியமாயிற்று. மதுவனத்துக்குச் சிலாக்கியமானது மற்றென்று மில்லாமற்

பெருமையுடைய தாயிற்று. இது என்ன பாக்கியம்; இதென்ன ஆச்சரியம்; தன் அனுக்கிரகத்தினல் யாதொரு துவாரகா புரத்தில் வாசஞ்செய்தும், மந்தகாசத்துடனே கடாக்ஷம் செய்துகொண்டும், எழுந்தருளி யிருக்கிற தங்களுடைய ஸ்வாமியான ஸ்ரீ கிருஷ்ணனைத் துவாரகாபுரத்தில் வாசஞ் செய்கிற பிரஜைகள் நித்தியம் சாக்ஷாத்காரமாகக் காண்கிருர்களோ, அதனல் இந்தத் துவாரகா புரியானது சுவர்க்கலோகத்தினுடைய கீர்த்தியைத் திரஸ்காரஞ் செய்துகொண்டு, பூமிக்குப் புண்ணியமாகிய கீர்த்தியைக் கற்பிக்கின்றது.

ஓகோ என்ன ஆச்சரியம், வாராய் சகிகளே! எந்த ஸ்திரிகள் இந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய அதர அமிருதத்தை, அடிக்கடி பாணஞ் செய்யப்பட்டும், இவனல் பாணிக்கிரகணஞ் செய்யப்பட்டு மிருக்கிற அந்த மகானுபாவர்களாலே, ஈச்வாகினை இந்த ஸ்ரீ கிருஷ்ணன் விரதங்களாலேயும், தீர்த்த ஸ்நானங்களாலேயும், அனேக ஜன்மங்களில் நன்ருகப் பூசிக்கப்பட்டான் என்று, ஸ்திரிகள் சொல்லுகிறதைக் கேட்டுச், சிலாகித்த ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகையோடு நடந்தார். தருமராஜனும், மதுவைரியினுடைய இரக்ஷணத்தைக் கோரிச் சிநேகாதிசயத்தினல் ஸ்ரீ கிருஷ்ணனைச் சத்துருக்கள் மோசஞ் செய்யப் போகிருர்களென்று நினைத்துச் சதுரங்க சேனையை யனுப்பினர். அப்பால் சவுரியான ஸ்ரீகிருஷ்ணன் வெகு தூரந் தொடர்ந்து வந்த சினேக யுக்தரான விதுராருடனே வந்திருக்கிற கவுரவர்களை நிருத்தித் தம்முடைய இஷ்ட ஜனங்களுடனே துவாரகையைக் குறித்துப் போகிற மார்க்கத்தில் குருதேச முதலாகிய தேசங்களைக் கடந்து அந்தந்தத் தேசத்து ஜனங்கள் கொண்டு வந்த காணிக்கைகளை யங்கிகரித்துப் போகிறபோது அசுவங்கள் கொஞ்சம் இளப்படைந்ததைக்கண்டு சுதந்தரனை ஸ்ரீ ஹரி மத்தியான்ன சமயத்தில் மேற்குத் திக்கில் இரதத்தை விட்டுப் பூமியிலிழிந்து ஜலநிறைந்த தடாகக் கரையில் எழுந்தருளினர்.

---

## பதினேன்ருவது அத்தியாயம்

*ஆனர்த்தர்களால் ஸ்துதிக்கப்படும் யாதவேந்திரனை ஸ்ரீ கிருஷ்ணன் பட்டணத்தில் பிரவேசித்துப் பந்துக்களோடே கூடிக்கொண்டு கிரீடித்ததை நன்ருக வர்ணிக்கப்படுகின்றது.*

இந்தப் பிரகாரம் ஸ்ரீஹரிகதையைச் சவுனகாதிகளுக்குச் சொல்லிச், சூதர் பின்னையுஞ்சொல்லுகிருர். ஸ்ரீ கிருஷ்ணன்

ஆனர்த்த தேசத்தையடைந்து ஜனங்களுக்குத் தம்மைப் பிரிந்த துக்கத்தை விலக்கச் செய்பவர்போல், பாஞ்சசன்யத்தைப் பூரித்தார். உருக்கிரமனால் ஊதப்பட்ட வெளுத்த வயிற்றையுடைய பாஞ்சசன்னியமானது, ஸ்ரீ ஹரியினுடைய இதழ்களிலிருக்கிற சிவப்பினால் சிவந்து, அவருடைய கமலங்கள் போன்ற கைகளிற் பிடித்திருக்கிறபோது, அதிகமாகிய நாதத்தை யுடைத்தான அன்னமானது பத்மங்களுடைய கூட்டத்திலிருந்தாற்போல் விளங்கியது. அவ்விடத்திலிருக்கிற பிரஜைகள், அதிபயத்தைக் கொடுக்கிற அந்தச் சங்கத் தொனியைச் சமீபத்தில் கேட்டுத், தங்களுக்கு ஸ்வாமியாகிய ஸ்ரீ கிருஷ்ணனைக் காணவேண்டுமென்று இச்சித்து எதிர்கொண்டு வந்தார்கள். அவ்விடத்து ஜனங்களாதரவுடனே காணிக்கைகளைக் கொண்டுவந்து எப்பொழுதுங் குறைவில்லாத ஆனந்த ஸ்வரூபமாகிய பரமாத்மாவை யுபசரித்து, மலர்ந்த முகங்களை யுடைத்தாகி ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து ஆனந்த பாஷ்பங்களுடனே பிதாவிடத்தில் குழந்தைகள் பேசுவதுபோல் தங்கள் மழலைச் சொற்களாகிய வார்த்தைகளால் சொல்லுகின்றார்கள்:

ஓ சுவாமியே! இந்தச் சமுசாரத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற அதிசுபமாகிய அந்தப் பரமமான நிலையை இச்சித்தவர்களாகிய நாங்கள், பிரமாவினாலேயும், அவன் குமாரர்களான ஜனகாதிகளாலேயும், வந்தனஞ் செய்யப்பட்டும், கமலங்களுக்குச் சரியாகியு மிருக்கிற உம்முடைய திருவடியை வணங்கினோம். ஓ சமஸ்தங்களையும் கற்பித்த மகானுபாவனே! எங்களுக்கு ஆத்மாவும், சுகிர்தமும், பிதாவும், ஸ்வாமியும், சத்குருவும், சர்வோத்கிருஷ்டமான தேவதையும், தேவரீரே யல்லாமல் வேறில்லை. ஓ ஸ்வாமீ! சொர்க்க வாசிகளான தேவர்களுக்குங் கிடையாத பிரீதியால் உண்டாகிய புன்சிரிப்பினால் இரமணீயமான கடாக்ஷங்களை யுடைத்தாகியும், சர்வ அவயவங்களிலுஞ் சவுந்தரிய சம்பன்னமாகியு மிருக்கிற தேவரீருடைய திவ்ய மங்கள விக்கிரகத்தை அடியேங்கள் பிரத்தியக்ஷமாகக் காண்கிறதினாலே கதிபெற்றோம். ஓ பங்கஜாக்ஷனே! தேவரீர் பக்தர்களைக் காணவேண்டுமென்று நினைத்துக் குருதேசங்களிலும் மதுரா தேசங்களிலும் எழுந்தருளியிருந்தபோது, எங்களுக்கு ஒரு க்ஷணகாலமானது ஒருகோடி வருஷமாகவே யிருந்ததென்று துதித்ததைக் கேட்டு அவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்தவனாகிப், போகவதி பட்டணம்போல் யது வம்சத்தாராலே இரக்ஷிக்கப்பட்டும், சகல ருதுக்களிலுண்டான பழங்களையும், புஷ்பங்களையும், தளிர்களையும்

தரித்துப், புண்ணியமான மரங்களாலேயும், கொடிகளாலே யும், அலங்கரிக்கப்பட்ட நாட்டையும், அதைச் சேர்ந்த தோப்புகளாலேயும், கொல்லைப் புறங்களி லிருக்கிற தோட் டங்களாலேயும், இராஜாக்கள், மந்திரிகள். விளையாட யோக் கியமான சிங்கார வனங்களாலேயும், விளங்கிய தாமரைத் தடாகங்களாலே நிறைந்தும், கோபுரத்துவார மார்க்கங் களிலே விசேஷமான நிலைகளை யுடைத்தாகியும், விசித்திர மாகிய துவஜஸ்தம்பங்களிற் கட்டியிருக்கிற கொடிகளினாலே நிறைந்த நிழல்களை யுடைத்தாகியும், பரிமள ஜலங்களினால் தெளிக்கப்பட்டு மிருக்கிற இராஜமார்க்கங்கள், ஆவணங்கள், கடைவீதிகள், நாற்சந்திகள் இவைகளால் சிலாக்கியமாகியும், கிருகங்களுடைய வாசல்கள் தோறும் தயிர்களாலேயும், அக்ஷதைகளாலேயும், பழங்களாலேயும், கரும்புகளாலேயும், பூரணகும்பங்களாலேயும், பலிகளாலேயும், தூபதீபங்களா லேயும், பிரகாசித்துக் கொண்டு மிருக்கிற துவாரகா புரியில் ஸ்ரீ கிருஷ்ணன் பிரவேசித்தார். அப்போது அதிகப் பிரிய ரான கோவிந்த னெழுந்தருளுகிறு ரென்று கேள்வியுற்று மகத்தாகிய சந்தோஷத்துடனே வசுதேவரும், அக்குரூரரும், உக்கிரசேன மகா ராஜாவும், அற்புத பராக்கிரமசாலியான பலராமனும், பிரத்தியும்னனும், சாருதேக்ஷணனும், சாருவும், சாம்பனும், மருமகேதன் முதலானவர்களும், தங்கள் தங்கள் செய்கையை விட்டுப், பட்டத்து யானையை முன்னிட்டுக் கொண்டு சோபனங்களான சூக்தங்களைச் செபித்துக்கொண்டு வருகின்ற பிராமணர்களுடைய வேதகோஷங்களுடனேயும், பல வாத்தியங்களுடனேயும், இரதங்களி லேறிக்கொண்டு பயபக்தியுடனே எதிர்கொண்டார்கள்.

அழகிய குண்டலங்களணிந்த முக காந்திகளை யுடைத் தான ஸ்திரீகள் இரதங்களி லேறிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண னுடைய தரிசனத்தைக் கோரினவர்களாகிக் கூட்டங் கூட்டமா யெதிர்கொண்டு நடனஞ்செய்கிற பேர்களும், ஸ்ரீ ஹரியினுடைய அற்புதங்களாகிய சத் சரித்திரங்களைக் கானஞ்செய்தார்கள். ஸ்ரீ பகவானனவர், வந்த ஜனங்களெல் லாருக்கும் முறைமைப்படி அவாவர்களுக்கு வந்தனங்களா லேயும், ஆசீர்வசனங்களாலேயும், ஸ்பரிசங்களாலேயும், மந்தஹாசங்களாலேயும், கடைக்கண் பார்வைகளாலேயும், சன்மானஞ் செய்து, தாமும் பிரதி விஷயர்களான அவர்க ளால் வெகுமானஞ் செய்யப்பட்டு, இப்படிச் சுவதந்திரனை ஸ்வாமி துவாரகாபுரத்தில் பிரவேசித்தார். ஓ பிராமண சிரேஷ்டர்களே! ஸ்ரீ கிருஷ்ணன் துவாரகையில் இராஜ

மார்க்கத்தில் எழுந்தருளின அளவில், அந்தத் துவாரகையி லுள்ள குல ஸ்திரீகளெல்லாம் பிரதிதினமும் கிருஷ்ணனைச் சேவித்தும், தங்கள் நேத்திரங்களுக்குத் திர்ப்தியாகவில்லை. அதேனெனில், ஸ்ரீ மஹாலட்சுமி தேவியும் மோகித்து அவள் புத்தியானது மற்றொரு அவயவங்களிற் செல்லாமல் அந்த மார்பையே வீடாக இடைவிடாமல் வாசஞ்செய்தால் மற்றபேர் திர்ப்திக்கு அளவில்லையென்று சொல்லுகிறது அதிசயமல்ல. அப்படி அந்த அர்ச்சுனன் அவர்கள் நேத்திரங்களுக்குத் திர்ப்தி யில்லாம லிருக்கிறது விகித மென்றே நினைக்க வேண்டும். இப்படி இராஜ வீதியில் எழுந்தருளுகிற கிருஷ்ணனுக்கு மேலே கவிக்கப்பட்ட வெள்ளைக் குடையானது சூரியமண்டலம்போலவும், இரண்டு பக்கங்களிலேயும் இடைவிடாமல் வீசப்படுகிற வெண்சா மரைகள் சந்திர மண்டலம் போலவும், உப்பரிகைகளின் மேலிருந்து புரஸ்திரீகள் பொழிந்த புஷ்ப வருஷங்கள் நட் சத்திரங்கள் போலவும், திருமேனியில் தரித்திருக்கிற பீதாம்பரம் மின்னலைப் போலவும், திருமேனியி லணிந்த வனமாலை இந்திரதனுசு போலவும், இந்திர நீல மாணிக்க வர்னமான ஸ்வாமியுடைய திருமேனி இருண்ட மேகம்போ லவும், பிரகாசிக்கிறபடியால் மிகவும் அற்புதமாக விருந் தது. இப்படித் திவ்ய அலங்காரத்துடனே தம்முடைய கிரு ஹத்திலே எழுந்தருளித் தமக்குப் பிதாவாகிய வசுதேவரா லேயும், மாதுரு வர்க்கங்களாலேயும், ஆலிங்கனஞ் செய்யப் பட்டுத், தாம் வசுதேவருக்கும், தேவகி முதலாகிய தாய்மார் கள் ஏழுபேருக்கும், சாஷ்டாங்கமாக வந்தனஞ் செய்தார். அந்தத் தாய்மார்களும் ஸ்ரீ கிருஷ்ணனை மடியில் வைத்துக் கொண்டு பிரீதியினால் பால்சுரந்த ஸ்தனங்களை உடைத்தாகி யும், புத்திரவாஞ்சையால் ஆனந்த பரவசமாகிய புத்தியை யுடைத்தாகியும், கண்களிற் சொரிந்த ஆனந்த பாஷ்பங் களால் அபிஷேகஞ் செய்தார்கள். அப்பால் தம்முடைய பாரியர்களான ஸ்திரீகள் பதினாறாயிரவராலும் அலங்கரிக் கப்பட்டும், சர்வ சம்பத்துகளை உடைத்தாகி நிகரில்லாமலு மிருக்கிற தம்முடைய திருமாளிகையி லெழுந்தருளினார். அந்தக் கிருஹங்களி லிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனுடைய பத் தினிகள் வெகு நாளாய்ப் போயிருந்து, திரும்பவும் எழுந் தருளிக் கிருஹத்தில் தரிசனத்தைக் கொடுக்கிற வல்லபனைக் கண்டு மகிழ்ந்து, இதைவிட மகத்தாகிய வேறு உற்சவ மில்லை யென்று நினைத்துத் தூரத்தில் வருகிறபோதே தங் கள் ஆசனங்களை விட்டெழுந்து நாணத்துடனேயும், முக விலாசத்துடனேயும் எதிர் சென்று, அந்த ஸ்ரீ கிருஷ்ண

னைக் கண்களாலேயும், அறிவினாலேயும், தங்களுடைய ஆத்தும ஸ்வரூபங்களாலேயும், அளவிடப்படாத அன்பு உடைத்தானவர்களாகி ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள்.

இப்படிப்பட்ட மகிமையையுடைய பகவான் இந்த உலகத்தில் தம்முடைய சங்கற்பத்தினால் அவதரித்து, ஸ்திரீ இரத்தினங்களுடைய கூட்டங்களிலே கலந்து பிராகிருதரான மனுஷனைப்போல் கிரீடித்துக் கொண்டிருக்கிறபோது, உலகங்களையெல்லாம் மோகிப்பிக்கிற மன்மதன் இவர்களையும் மோகிப்பிக்க வந்து அதிகமாகிய சாமர்த்தியத்தை யுடைத்தாகியும், மனோக்கிய மாகிய சாதுரியத்துடனே கூடியு மிருக்கிறபகவானுடைய புன் சிரிப்பினாலேயும், நாணத்துடனே கூடிய கடாக்ஷத்தினாலேயும், அடிபட்டு அபஜயத்தை அடைந்து தானும் மோகித்துத் தன் கைவில்லையு மெறிந்துவிட்டான். அந்த உத்தமமாகிய ஸ்திரீகளும் தங்களுடைய நயங்களாகிய லீலைகளால், இந்த ஹரியினுடைய மனதைச் சலிப்பிக்க மாட்டாமற் போனார்கள். அந்தப் பரம புருஷனை, ஒன்றிலும் பற்றில்லாதவ னென்று நினையாமல், தங்களைப் போல் பிரகிருதியிலுழன்றவனாக நினைத்திருக்கிற இந்த உலக மெல்லாம், மிகவும் அறிவில்லாதவைகள் என்று அறியுங்கள். பிரகிருதி சம்பந்தனான, பிராகிருதனைப்போல் நடக்கிற, ஸ்ரீ ஹரியைச், சுத்த சத்வமாகிய திவ்ய மங்கள விக்கிரகத்தை யுடைத்தாகியும், ஞான சத்தியாதிகளுடனே நிறைந்து மிருக்கிறது ஓர் பரம புருஷனிடத்தில் பற்றின பரிசுத்தமான அறிவைப் போல், பிரகிருதி அவனைத் தொடர மாட்டாது. இப்படிப் பட்ட மகிமையை வாய்ந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய பிரமாணத்தை இந்த ஸ்திரீகள் அறிய மாட்டாமல் தங்களுடைய பேதமையினால் தங்களிடத்தில் மோகிதனாய்த் தாங்களிருக்கிற விடத்தில் ஏகாந்தமாகத் தொடர்ந்து வருகிறவனென்று நிச்சயித் திருந்தார்கள்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்

*யாதொரு பரிக்ஷித்தினுடைய ஜன்மப் பிரசங்கத்தின் பொருட்டு, விஸ்தரித்து அசுவத்தாமாவினுடைய தண்டனை முன்னே சொல்லப்பட்டதோ, அப்படிப்பட்ட பரிக்ஷித்தினுடைய ஜனனத்தைச் சொல்லப்படுகின்றது.*

இப்பால் சவுனகர் சூதரைக்கேட்கிறார். ஓ சூதரே! அசுவத்தாமாவால் பிரயோகிக்கப்பட்ட பிரமசிர மென்கிற அஸ்திரத்தினுடைய அக்கினிச் சுவாலைகளினால் உத்தரையி

னுடைய கர்ப்பமானது, ஜகத்பதியான ஸ்ரீ கிருஷ்ணனால் ஜீவித்த தல்லவோ, அந்தச் சிசுவானவன் பூமியில் பிறந்த தும் பின் இராச்சியபாரஞ் செய்யுங்காலத்தில் அவன் செய்த கருமங்களையும், சரீரத்தியாகஞ் செய்ததையும், பின்பு சுகப் பிரம ரிஷியினிடத்தில் கியான வுபதேசம் பெற்று எந்த வஸ் துவை அடைந்தானோ, அந்த மகானுபாவனுடைய சரித்தி ரங்களைச் சொல்ல வேண்டுமென்று கேட்க சவுனகரைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார். ஓ சவுனகரே! தருமராஜா வானவர். ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடிகளை அடிக்கடி சேவித்துக் கொண்டு, மற்றொரு வஸ்துவிலேயும் ஆசையில் லாமல் பிரஜைகள் சந்தோஷிக்கச் செங்கோல செலுத்திக் கொண்டு பிதாவைப்போல் பாலனஞ் செய்தார். ஐஸ்வரியங் களும், ஜனங்களும், பட்டமகிஷியும் பிராதாக்களும், பூமியும், ஜம்பு த்வீபாதிபத்தியமும் சொர்க்கத்தை யளாவிய கீர்த்தியும் பொருந்தி, இவையெல்லாம் தேவர்கள் கோரும்படியாக விருந்தாலும், முகுந்தனிடத்தில் நிலைப்பெற்ற மனதுண்டா கிய தருமராஜா, இவைகளில் இச்சை யில்லாம லிருந்தார். பிராமணோத்தமர்களே! இப்படி இராச்சிய பரிபாலனத்தை யுதிஷ்டிரர் செய்துவருங் காலத்தில், மாதாவினுடைய கர்ப் பத்திலிருந்த, வீரனாகிய பரிக்ஷித்தான சிசு. நிர்மல ஸ்வரூப னாகிச் சொர்ன கிரீடமும், அதிசுந்தரமும், கறுத்த தேகமும், மின்னலைப் போல் விளங்குகிற பீதாம்பரமும், நீண்ட சதுர்ப் புஜங்களும், குண்டலங்களும், சிவந்த கண்களும் வாய்ந்த, கதாபாணியான அச்சுதனால், அஸ்திர சுவாலையைப் பரிகரித் துக் கொண்டு, தன்னுடைய சமீபத்திலே யிருக்கிற ஸ்ரீ ஹரி யைப் பார்த்துக்கொண் டிருக்கையிற்றானே, பத்துமாதங்கள் சென்றன. பிற்பாடு பகவான் அந்தர்த்தானமாயினார். அப் பால் சகல நன்மைகளுக்கும் ஏதுவாகியும், அனுகூலமாகிய நல்ல கிரக வுதயங்களுடனே கூடியுமிருக்கிற சுப லக்கினத் தில், பாண்டு மகாராஜாவினுடைய வமிச பாலகனாகிய புத்தி ரன், பாண்டுவே மறுபடியும் பிறந்தானென்று சொல்லும் படி ஜனித்தான். தருமராஜாவானவர் தவுமியர், கிருபர் முத லாகிய பிராமணர்களாலே, அப்புத்திரனுக்கு ஜாதக கரு மத்தை முடித்து, மங்களமாகிய ஆசீர்வாதத்தைச் செய் வித்தார்.

அந்தத் தருமராஜா, இந்தப் பிரசோற்பத்தியாகிற புண் ணிய காலத்தில் பிராமணர்களுக்குச் சுவர்ணங்களையும், பசுக் களையும், கிராமங்களையும், அசுவங்களையும், இரதங்களையும், அபரிமிதமாக வழங்கிப், பின்பு பிராமணர்களை விசுவாசத் துடனே அஞ்சலி வந்தனஞ் செய்தார். அப்போது அவர்

கள் மிகவுஞ் சந்தோஷத்துடனே யுதிஷ்டிரரைப் பார்த்து ஓ கௌரவ சிரேஷ்டனே! இந்தப்பிள்ளை விஷ்ணுராத னென்று உலகத்தில் நாமதேயத்தைத் தரித்து, மிகுதியான கீர்த்திசாலியாயும், பாகவதர்களுக்குள்ளே யுயர்ந்த மஹாநு பாவனாகவு மிருப்பான், சந்தேக மில்லையென்று சொல்லித், தருமநந்தனன், ஓ பிராமண சிரேஷ்டர்களே! இந்தக் குமா ரன் இராஜரிஷிகளாகியும் புண்ணியமான நல்ல கீர்த்தி களையுமுடைய மஹாத்மாக்களை யனுசரித்துச், சத்புருஷ னென்று சொல்லும்படி நடப்பானோவென்று கேட்கப், பிராம்மணர்கள் இவன் இட்சுவாகைப்போல் பிரஜைகளைப் பரிபாலனஞ்செய்யவும், தசரத புத்திரனாகிய ஸ்ரீ இராமனைப் போலச் சத்திய சந்தனாகவும், உசீநர புத்திரனான சிபிச் சக்கரவர்த்திக்குச் சமானமான தாதுருத்துவத்தையும், துஷ் யந்தன் புத்திரனாகிய பரதனுக்கு நிகராக யக்கியசீலரான ஜோசியர்களுக்குக் கீர்த்திகரனாகவும், அர்ச்சுனனைப் போல வும், கார்த்தவீரியார்ச்சுனனைப் போலவும், வில்லாளிகளில் சிரேஷ்டனாகவும், சிங்கத்தைப்போல் பராக்கிரமத்தையும், பூமியைப்போல் பொறுமையும், சதுர்முகனைப்போல் சாந்தி யையும், வரந்தருவதில் சிவனைப்போலவும், சமஸ்தமாகிய சத்குணங்களையுடைய மகத்துவத்தில் ஸ்ரீ கிருஷ்ணனை யனு சரித்தும், நந்தி தேவனைப்போல் அவதாரியாயும், தைரியத் தில் மகாபலியைப் போலவும், ஸ்ரீ ஹரிபக்தியில் பிரகலாத னைப் போலவும், அநேகமாகிய அசுவமேதங்களை அடிஷ் டித்தும், கியானத்தில் முதிர்ந்தவர்கள், வயோ விருத்தர் கள், சீல விருத்தர்கள், இவர்களுடன் சகவாசஞ் செய்தும், ஜனகனைப்போல் இராஜரிஷியாகியும், சாஸ்திர மரியா தையை அதிக்கிரமித்து நடக்கிற ஜனங்களுக்குச் சிக்ஷகனாக வும், பூமி நிமித்தமாகவும், தரும நிமித்தமாகவும், கலிபுரு ஷனை நிக்கிரகஞ் செய்தும் பிரகாசித்திருப்பான். பின்பு பிராமண குமாரனுடைய சாபத்தினால், தக்ஷகனாலே தான் மரணத்தை யடையப்போகிறவனாகி அந்தச் சாபத்தைக் கேட் டுச் சர்வ சங்க பரித்தியாகஞ் செய்து, ஸ்ரீ ஹரியினுடைய பாதத்தையே நினைத்து, ஆத்மதத்வக் கியானத்தைக் கோரி வியாச குமாரனான சுகப்பிரம்ம ரிஷியினிடத்திலிருந்து பிரம் மக் கியானத்தை யடைந்து, கங்கையில் பிராயோபவேசஞ் செய்து, இந்தச் சரீரத்தை விட்டு நிர்மலமாகிய ஸ்ரீ ஹரி சரணத்தை யடையப் போகிறானென்று, ஜாதகபாகத்தில் சமர்த்தராகிய பிராமணர்கள் இரகசியமாகச் சொல்லி, அந் தத் தருமராஜா விடத்திலிருந்து சகல வெகுமானங்களையும் வாங்கிக்கொண்டு, அவரவர்கள் வீட்டுக்குப் போனார்கள்.

இந்தப் புருஷன், தான் கர்ப்பத்தி லிருக்கும்போது பரம புருஷனைப் பிரத்தியக்ஷமாகக் கண்டவன். இராச்சிய பரிபாலனஞ் செய்யும்போது, பூமியில் காணுகிற ஜனங்க ளிடத்தில் பரிக்ஷித்தபடியினாலே, இவனுக்குப் பரிக்ஷித் தென்று நாமதேயம் விளங்கியது. இப்படிச் சுக்கில பக்ஷத் தில் பிதுர்தேவதைகள் தங்களுடைய கலைகளாலே நாள் தோறும் விர்த்திபண்ணப்பட்ட சந்திரனைப்போலப், பரிக்ஷித் தும் தனக்குப் பிதுர் வர்க்கங்களான யுதிஷ்டிரர் முதலான வர்களால் விர்த்தி செய்யப்பட்டான். இப்பால் தருமராஜா வானவர் தம்முடைய தாயாதிகளுக்குத் தாம் செய்த துரோ கத்தைப் பரிகரிக்கவும், நிக்கிரகத்தையும் கப்பம் வாங்குகிற தையும் விட்டு, மற்ற சாத்வீகமான வகையால் தனத்தை யாசிக்க வேண்டியும் நினைத்ததை, அவர் தம்பிமார்க ளறிந்து, அச்சுதனிடத்தில் அந்த நிச்சயத்தைச் சொல்லி, அந்த ஸ்ரீ ஹரியினுடைய சாசனத்தினால் உத்தர திக்கில் பூர்வத்திலிருந்த இராஜாக்கள் மிகவும் யாகஞ்செய்து மிகுந்துபோய்ப் புதைத்திருந்த சேஷமான தனத்தை அபரி மிதமாகக் கொண்டுவந்து, அந்தத் தனத்தினால் சகல சாமக் கிரியைகளும் கற்பித்துக்கொண்டு, சந்தோஷத்துடனே யக்கியேசனாகிய ஸ்ரீ ஹரியை மூன்று அசுவமேதங்களால் ஆராதனஞ் செய்தார். தருமராஜாவினால் அழைப்பிக்கப் பட்ட ஸ்ரீ கிருஷ்ணபகவான் அசுவமேத விதானத்தை யறிந்த பிராமண முகத்தால் யுதிஷ்டிரரை யாசிப்பித்துச் சுகிர்த்துக்களான பாண்டவாதிகளுக்குப் பிரியத்தைச் செய் விக்கவேண்டுமென்று சில மாசங்கள் பரியந்தம் அவ்விடத்தி லிருந்து, அப்பால் தருமராஜாவினாலேயும், திரௌபதியினா லேயும், மற்றுமுண்டான பந்துக்களினாலேயும் அனுப்பு விக்கப்பட்டு, அர்ச்சுன னுடனேயும், யாதவர்களுடனேயும், துவாரகாபுரிக்கு எழுந்தருளினார்.

---

## பதின்மூன்றுவது அத்தியாயம்

*பரிக்ஷித்தினுடைய பட்டாபிஷேகத்தினால், இராஜாவான யுதிஷ்டிர ருடைய மகா பிரஸ்தானத்தைச் சொல்லுகைக்கு விதுர னுடைய வசனத்தினால் திருதராஷ்டிரனுடைய பொறுமை யின்மையைச் சொல்லப் படுகின்றது.*

இப்படிச் சூதர், சவுனகாதிகளைப் பார்த்துப் பின்னையும் சொல்லுகிறார். ஓ சவுனகாதிகளே! விதுரர் யாத்திரை

போனவிடத்தில், மைத்திரேயரைக் கண்டு அவரால் பரமாத்மாவான ஸ்ரீ கிருஷ்ணனுடைய நடக்கையை அறிந்து, பின்னேயுந் தான் கேட்கவேண்டிய தத்வங்களு மவரிடத்திலிருந்து அறிந்து தெளிந்து கொண்டு அஸ்தினபுரத்துக்கு வருவதைத் தருமராஜா கண்டு, தம்பியர்களுடனே எதிர்கொண்டார். அப்படியே திருதராஷ்டிரனும், யுயுச்சுவும், கிருபாசாரியரும், குந்திதேவியும், காந்தாரியும், திரௌபதியும், சுபத்திராதேவியும், உத்தரையும், கிருபியும், மற்றுமுள்ள இராஜஸ்திரீகளும், கியாதிகளும், கியாதிப் பத்தினிகளுந், தங்கள் தங்கள் புத்திரர்களுடனே எதிர்கொண்டு சந்தோஷத்தையடைந்து ஆனந்த பாஷ்பங்களைப் பொழிந்தார்கள். தருமராஜா, விதுரருக்கு ஆசனத்தைக் கொடுத்துப் பூசித்துப், போசனஞ் செய்வித்துச் சிரமந்தீர்ந்த பின்பு, சுகமாக விருந்த விதுரரைப் பார்த்து, விசுவாசத்துடனேயும், வினயத்துடனேயும், தருமராஜா வானவர் தம்முடைய பந்து ஜனங்கள் கேட்டுக்கொண்டிருக்க ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

ஓ விதுரரே! தேவரீருடைய நிழலில் வளர்ந்த பலத்தினால், விஷங்கள் அக்கினிகள் முதலான ஆபத்துகளைத் தவிர்ந்து மாதாவுடனே உபத்திரவமில்லாமல் அந்தந்தக் காலங்களில் சஞ்சரித்தோம். தாங்கள் இந்தப் பூமண்டலத்திலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானாதிகளைச் செய்து, முக்கிய க்ஷேத்திரங்களைத் தரிசனம் பண்ணிக்கொண்டு வந்த சரித்திரங்களைச் சொல்ல வேண்டுமென்று கேட்ட தருமராஜனுக்கு, யாதவர்களுடைய குலக்குறைவு நீங்கலாய் சகல சங்கதிகளையும் பிரீதியாய்ச் சொல்லி, அவரால் பூசிக்கப்பட்ட (யமதரும ராஜாவான சூரிய குமாரன், தனது தொழிலைப் பிதாவானவர் நடத்தும்படியாகவும், தான் ரிஷி சாபத்தினால் சூத்திர ஜன்மத்தை யெடுத்திருக்கும்) விதுரரானவர் பாண்டவர்களுக்குக் கிடைத்தற் கரிதான காலகதியை யறிந்து, திருதராஷ்டிரனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

ஓ இராஜாவே! இந்த வீட்டைவிட்டுச் சீக்கிரமாகப் புறப்படவேண்டும். மகத்தான பயமானது வந்தது. வாரும் ஓ பிரபுவே! இந்த லோகத்தில் ஜனித்தவர்கள், எந்தக் காரணத்தினாலே விபத்தை யடைந்து மிகவும் பிரியமாகிய பிராணனை விடுகிறார்களோ, அந்த மகிமைசாலியான காலசரீரகனான பரமாத்மா நமக்கெல்லாம் ஒருமிக்க வந்தார். இந்தச் சமயத்தில் தேகானுபந்தியான ஜனங்களையும், தனதி

களையும் நாம் விடவேண்டு மென்கிறதில் யத்தனந் தேவை யில்லை. பிதுர்ஜனங்களும், பிராதுரு வர்க்கங்களும், சிநேகி தர்களும், புத்திரர்களும் சங்கரிக்கப்பட்டார்கள். உமக்கு வயதுஞ் சென்றது. உம்முடைய சரீரமும் நரைதிரையால் மூடப்பட்டது. சத்துரு கிருகத்திலும் வாசஞ் செய்கிறீர். பூமியில் ஜனித்த பிராணிகளுக்கு எவ்வளவு காலஞ் சென் ருலும், எந்த விபத்து வந்தாலும், பிழைக்கவேண்டுமென்றே இச்சையாகையால், தேவரீர் பீமன் கையினுல் எறிந்த பிண் டத்தைப் பக்ஷித்துக் கொண்டிருக்கிறீர். எவர்களுக்கு அக்கினியையும், விஷத்தையும் கற்பித்தீரோ, எவர்களுடைய பாரியையை அகாலத்தில் சபையில் அவமானஞ் செய்வித் தீரோ? எவர்களிடத்தில் க்ஷேத்திபத்தையும், தனத்தையும், அபகரித்துக்கொண்டு அவர்களை இராச்சியப் பிரஷ்டராக அலைவதாகவுஞ் செய்வித்தீரோ? அவர்களால் கொடுக்கப் பட்ட அன்னங்களைப் புசித்துக்கொண்டு பிராணனை எவ்வ ளவு காலம் தரிப்பீர்? இந்தத் தேகம் ஜீர்ண வஸ்திரங்களைப் போல் நரையில் ஜீர்ணித்து, இதை விடக்கூடாதென்று நினைத்திருந்தாலும், நாசமடைகிறதில் சந்தேகமில்லை. ஆகையால் வைராக்கியம் பிறந்தவன், இந்தத் தேகத்தில் தனக்குப் பிரயோசனமில்லாத தசையைப் பார்த்து, சமுசார பந்தத்தை இச்சியாமல், தான் போனவழி தெரியாமல், சரீரத்தை விட்டானுகில், அவனே தீரனென்று சொல்லப் படுவான். யாதொருவன் மனுேஜயஞ் செய்துகொண்டு, தன் புத்தியினுலேயாவது பிறராலே யாவது இந்தச் சமுசாரத்தில் அருவை பிறந்த பின்பு, தன் மனதில் ஸ்ரீ ஹரியை நினைத்துத் தன் வீட்டை விட்டு வெளியில் புறப்பட்டு நடக்கிருனே, அவனே நரோத்தமன்; இப்பால் தேவரீர் சுஜனங்களி லொருவருக்குந் தெரியாமல் வடக்குத் திக்கிலே நடக்க வேண்டும்.

இனிமேல் காலமானது, ஜனங்களுடைய சத்வாதி குணங்களையும், தைரிய சந்தோஷாதிகளையும், அபகரிக்கிற தில் சம்சயமில்லை யென்று சொல்லத், திருதராஷ்டிரன் தன் தம்பியான விதுரரால் போதிக்கப்பட்டுத், தான் கியானமாகிய நேத்திரத்தை யுடைத்தானவனுகி, ஜனங்களிடத்தி லிருக்கிற உறுதியான சிநேக பாசங்களை யறுத்து, விதுரர் காண்பித்த மார்க்கத்தில் நடந்தான். அவனுடனே சிலாக்கிய சீலத்தை யுடைத்தாகியும், பதிவிரதையாகியு மிருக்கிற காந்தாரியுங் கூடவே நடந்தாள். இப்படி இந்த மூவரும் சந்தோஷத்தைக் கொடுக்கிற இமவத் பர்வதத்தை யடைந்தார்கள். பின்பு

தருமராஜா, பிராதக் காலத்திற் சந்தியாவந்தனம் முதலான நித்திய கருமங்களும், சூர்யோ பாசனேயுஞ் செய்து, பிராம ணர்களுக்குத் தானமுங் கொடுத்துத், திருதராஷ்டிரரையும், விதுரரையும் காந்தாரியையும் வந்தனஞ்செய்ய வேண்டு மென்று கிருஹத்தில் வந்து அவர்களைக் காணுமல் மனே துக்கத்துடனே அவ்விடத்திலிருந்த சஞ்சயனைக் கேட் கின்ருர். வாராய் கவதக்கினி புத்திரனுன சஞ்சயனே! விருத்தராகியும் நேத்திரங்களில்லாமலு மிருக்கிற நம்முடைய பிதாவான திருதராஷ்டிரனும், துக்கத்தை யுடைத்தாகிய நமக்கு மாதாவான காந்தாரியும், சிறிய தகப்பனும் உபகாரியு மாகிய விதுரரும், எவ்விடத்துக்குப் போனுர்கள். பந்துக்களை யிழந்த திருதராஷ்டிரர் பத்தினியுடனே கூட என்னிடத்தில் தோஷத்தை உண்டாக்கி மிகவும் துக்கித்துக்கொண்டு கங்கையில் விழுந்தாரோ? எங்களுக்கு ஜனக பிதாவான பாண்டு மகாராஜா சுவர்க்கத்தை யடைந்த பின்பு எங்களுக்கு உபகாரியர்களாகி, அந்த விசனம் தெரியாமல் இரக்ஷித்த பிதுர் சகோதரரான விதுரரும், திருதராஷ்டிரரும் இவ் விடத்தை விட்டு எவ்விடத்துக்குப் போனுர்களென்று கேட்க, தயவினுலேயும் சிநேகத்தினுலுண்டாகிய இரக்கத்தினுலே யும், திருதராஷ்டிரனை விட்டுப் பிரிந்ததினுலேயும், வாடின சரீரத்தை யுடைத்தான. சஞ்சயனும் தனக்கு ஸ்வாமியாகிய திருதராஷ்டிரனைக் காணுதபடியினுல், துக்கபீடிதனுகிப் பிரதி யுத்தரஞ் சொல்லமாட்டாம லிருந்தான். பின்பு ஆலோசனை செய்து தன் மதியால் மனதை யுறுதிசெய்து கொண்டு, தனக்குப் பிரபுவான திருதராஷ்டிரனுடைய பாதங்களை நினைத்து, அந்த அஜாத சத்துருவைப் பார்த்து, ஓ குல நந்தனனே! உங்கள் பிதாக்களுடைய நினைவை நானறி யேன். பதிவிரதையான காந்தாரியினுடைய இருதயத்தையும் அறியேன், அவர்கள் என்னை வஞ்சித்து எனக்குத் தெரி யாமல் நடந்து விட்டார்கள். அறிவுடையவரே யென்று சஞ்சயன் சொன்ன வார்த்தையைச் சவுனகாதிகளுக்குச் சொல்லிச், சூதர் பின்னையுஞ் சொல்லுகிருர்.

ஓ சவுனகாதிகளே! இராஜாவுடனே சஞ்சயன் சொல் லும்போது வீணைநாதஞ் செய்து கொண்டு பகவானுன நாரதர் தும்புருவுடனே காணப்பட்டார். அவருக்குக் குரு வம்சத்திற் பிறந்த தருமராஜா எதிர்கொண்டு அர்க்கியம் சமர்ப்பித்து, வந்தனஞ் செய்து, ஆசனத்தி லிருத்தி, ஓ பகவானே! எம்முடைய பிதாக்கள் போனவிடமும், பிள்ளைகளை யெல்லாம் நாங்கள் கொன்றபடி

யினால் ஆர்த்தியை யடைந்த காந்தாரி போனவிடமும்தெரிய வில்லை. இந்தச் சோக சமுத்திரத்தி லமிழ்ந்துபோகிற எங்களுக்கு மீகாமனைப்போல் தேவரீர் எழுந்தருளினீர். அதை யருள வேண்டுமென்று கேட்க, நாரதர் சொல்லுகிறார்: ஓ இராஜாவே! சகல பிரபஞ்சமும் ஈஸ்வராதீனமென்று நினைத்தீராகில் ஒருவரையுங் குறித்து நீர் சோகப்படவேண்டியதில்லை. குழந்தைகளுடைய இச்சையினால் விளையாட்டுக் குத் தகுதியான மரப்பாவைகளுடைய கூட்டமும் நீக்கமும் போல் ஈஸ்வரனுடைய இச்சையினால் மனிதருக்குச் சுஜனங்களுடனே சேருதலும் பிரிதலும் உண்டாயின. ஓ தர்ம புத்திரனே! இந்த லோகத்தை என்றைக்கும் அழிவில்லாததென்று நினைத்தாலும், இதற்கு அழியுந் தன்மை இயல் பென்று நிச்சயித்தாலும், இரண்டு மில்லாதனவென்றுந் தெளிந்துகொண்டாலும், அவர்களைக் குறித்து அக்கியானத்தால் துக்கப்படுகிறதே யல்லாமல் ஒரு காலத்திலும் அவர்கள் விஷயத்தில் விசனப்படத் தேவையில்லை.

ஆகையால் ஓ சிரேஷ்டரே! திக்கில்லாத தீனர்களான திருதராஷ்டிராதியர்கள் என்னை விட்டு எப்படி யிருக்கப் போகிறார்களென்று அக்கியானத்தினாலுண்டாகிய அவலத்தைப் பரித்தியாகம் பண்ணும். காலத்தினாலேயும், பிராப்த கருமத்தினாலேயும், பிரகிருதி குணங்களினாலேயும், பரிணமித்த பஞ்ச பூத விகாரமானது இந்தத் தேகம் இது சர்ப்பத்தினாலே சூழப்பட்ட புருஷன் மற்றொருவனை இரக்ஷிக்குமாப்போல், இதரப் பிராணிகளை எப்படிப் பாலனஞ் செய்யும். கைகளில்லாத ஜந்துக்கள் கைகளுண்டான பிராணிகளுக்கும், கால்களில்லாத ஜீவன்கள் நாலு கால்களுடனே கூடின உயிர்களுக்கும், கொஞ்சம் பலமான ஜீவன்கள் மிஞ்சிய பலமுள்ள பிராணிகளுக்கும், ஆகாரமாகவே யிருக்கின்றன. அப்படிப்பட்ட இந்த உலகங்களைச் சரீரமாகப் படைத்த ஷட்குண பரிபூரணனான பரமாத்மா, சுயம்பிரகாசனாகியும், ஜீவ வர்க்கங்களுக்கு அந்தராத்மாவாகியும், இந்தச் சேதனாசேதனங்களுடனே கலந்து ஒன்றாகியும், தன் சங்கற்பத்தினால் வெகுவாகியும், உள்ளும் புறமும் பிரகாசித்திருக்கிறானென் றறியும்.

ஓ மகா இராஜாவே! சகல பூதங்களையும் கற்பித்த அந்தப் பகவான் இந்தப் பூமியில் தேவத் துரோகிகளான அசுரர்களைக் கருவறுக்க வேண்டிக் கால சரீரனாகி, இப்போது அவதரித்து, அவன் தேவதைகளுக்குச் செய்யவேண்டிய

உபகாரங்களைச் செய்தது போக மிருந்த கருமத்தைச் செய்கிற தற்குப் பார்த்துக்கொண்டிருக்கிறான். நீங்களும் இந்தப் பூமியில் ஜெகதீஸ்வரன் எவ்வளவு காலம் இருக்கிறானோ அவ்வளவுக்குள் உங்கள் கருமத்தை யோசித்துக்கொள்ளுங்கள். திருதராஷ்டிரனும், விதுரனும், காந்தாரியும், இமவத்கிரிக்குத் தென் பாகத்தில் ரிஷிகளுடைய ஆஸ்ரமத்தைச் சேர்ந்தார்கள். யாதொரு ஆகாச கங்கையானது சப்த ரிஷிகளுடைய பிரீதியைச் சம்பாதிக்க வேண்டுமென்று ஏழுபிரிவாகப் பிரிந்து, சப்த சுரோதாவென்று பெயரை யுடைத்தாகியிருக்கிறதோ. அந்தக் கங்கையில் திருதராஷ்டிரன் மூன்று காலத்திலும் ஸ்நானஞ்செய்து, ஓமாதிகள் முடித்து, ஜலத்தை ஆகாரமாகச் செய்துக்கொண்டு, சாந்தி யுக்தனாகி, யீஷணாத் திரயத்தையும் விட்டு, ஆசனஞ் செய்துக்கொண்டு, சுவாசத்தையும் ஜயித்து, ஷட் டிந்திரிய விஷயங்களிற் செல்லாமல் நிவர்த்தி செய்துகொண்டு, ஸ்ரீ ஹரியினுடைய கியானத்தினால் ஆணவம், மாயை, காமியமாகிய மும்மலங்களையும் தவிர்த்து, மனதைப் புத்தியுடனே கூட்டி, அந்தக் கியானத்தை ஜீவாத்மாவுடனே சேர்த்து, அந்த ஜீவன் சர்வாதாரமான பிர்மத்தி னிடத்தில் கடாகாசம் மகா ஆகாசத்தில் கலக்குமாறுபோற் கலந்து, பிரகிருதி குணங்களுடைய பரிணாமமாகிய விகாரங்களை விட்டு, இந்திரியங்களையும் சித்தத்தையும் பரமாத்மாவினிடத்தில் நிறுத்தி, அறுவகை ருசியோடுங்கூடி சகலமான ஆகாரங்களையும் விட்டு, சருகு, ஜலம், காற்று இவைகளையுண்டு, சிலநாள் இவைகளையும் விட்டுக் கிளைகளைக் கழித்த மரத்தைப்போல் சலியாமலிருக்கிறான். சகலமான காரியங்களையும் விட்டிருக்கிற அவருக்கு நீர் விக்கினஞ் செய்யவேண்டாம். அந்தத் திருதராஷ்டிரன் இன்றுமுதல் ஐந்தாம் நாளையில் தன்னுடைய சரீரத்தை விடப்போகிறான். ஓ இராஜனே! பர்ணசாலையிலிருந்து தியானஞ் செய்கிற திருதராஷ்டிரனுடைய தேகத்திலுண்டாகிற யோகாக்கினியுடனே கலந்த தேகாக்கினியினாலே, பர்ணசாலையுடனே திருதராஷ்டிரன் தேகமும் பஸ்பமாகப் போகிறது, அதை அந்தப் பர்ணசாலைக்கு வெளியில் இருந்து பார்த்துக்கொண்டிருக்கிற பதிவிரதையான காந்தாரியும் அந்த அக்கினியில் பிரவேசிக்கப்போகிறாள். விதுரரும் அந்த ஆச்சரியத்தைக் கண்ணால் பார்த்த பின்பு, இவர்களுக்கு இந்தக் கதி கிடைத்த தல்லவோ வென்று சந்தோஷத்துடனேயும், பிராதாவையும், பிராதுர் பத்தினியையும் இழந்தோமே யென்கிற சோகத்துடனேயும் தீர்த்த யாத்திரை செய்யப்போகிறார். இந்தப் பிரகாரம் யுதிஷ்டிராருக்குத்

தெளியச்சொல்லி, நாரதர் சுவர்க்க லோகத்துக்குப் போனார் யுதிஷ்டிரரும் நாரதருடைய வார்த்தையை நினைத்துக் கொண்டு சோகத்தை விட்டார் என்று, சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்.

---

## பதினன்காவது அத்தியாயம்

*இராஜாவான தரும புத்திரர் துர் நிமித்தங்களைப் பார்த்துச் சந்தேகத்தையுடையவராய் அர்ச்சுனனிடத்தில் நின்றும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய லோகாந்தர கமனத்தைக் கேட்டாரென்று சொல்லப்படுகின்றது.*

ஓ சவுனகாதிகளே! ஜயசீலனான அர்ச்சுனன் பந்து ஜனங்களைக் காணவேண்டுமென்றும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரங்களை அறியவேண்டுமென்றும், துவாரகா புரத்திற்குப் போய், அவ்விடத்தி லிருக்கிறபோது சில நாட்கள் சென்றன. அப்பாலும் அர்ச்சுனன் வரவில்லை. அந்தச் சமயத்தில், இவ்விடத்தில் கவுரவ வம்சோத்தாரகனான தருமராஜா அதி கோரங்களான துர்க் குறிகளைக் கண்டார். அப்படியே மாறுபாடாக நடக்கிற குரூரமாகிய கால கதியையும், வெகு பாப ரூபமாகிய ஜனங்கள் வார்த்தைகளையும், குரோத லோபங்களையும், அசத்தியங்களையும், உலகத்தில் நடக்கிற குற்றமான வார்த்தைகளையும், புத்திரர்களுக்கு மாதா பிதாக்களிடத்தில் கலகத்தையும், மாதா பிதாக்களுக்குப் புத்திரரிடத்தில் துவேஷத்தையும், பிதாக்களுக்கும் தம் பதிகளுக்கும் ஒருவர்க்கொருவர் விரோதமாக இருக்கிறதையும், மிகவும் அநிஷ்டமான நிமித்தங்களையும், ஜனங்களுக்கு அதருமத்தில் பிரீதியையுங் கண்டு, தமக்குத் தம்பியான பீமசேனனைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாராய் பீமசேனனே! பந்துக்களைக் காணவேண்டுமென்னும் இச்சையினாலேயும் புண்ணிய சுலோகனான ஸ்ரீ கிருஷ்ணனுடைய நடக்கைகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றும், அர்ச்சுனனைத் துவாரகைக்கு அனுப்பியிருந்தோமே, ஆ தம்பி! இப்போது ஏழுமாதமாயின; உன் தம்பி வரக்காணேன்; இதற்குக் காரணமென்னமோ தெரியவில்லை. தேவ ரிஷியால் சொல்லப்பட்ட குரூரமாகிய காலந்தான் வந்ததோ? இந்தச் சம்பத்துகளும், இராச்சியமும், பாரியையும், பிராமணர்களும், குலமும், பிரஜைகளும், சத்துரு விஜயமும், இந்த ஜனங்களும், எவருடைய அனுக்

கிரகத்தினுலே லபித்தனவோ, அந்தப் பகவான் தமக்கு லீலார்த்தமாகத் தரித்த தேகத்தை, இப்போது விடவேண்டு மென்று நினைத்தாரோ? ஓ நர சிரேஷ்டனே! ஆகாயத்தி லும், பூமியிலும், தேசத்திலும், உற்பாதங்கள் உண்டாகின் றன. தொடையும், கண்ணும், புஜமும், அடிக்கடி துடிக்கின் றன. இவை நம்முடைய புத்திக்கு மோக ஜெனகமாகிய பயத்தை யுண்டாக்க வந்தனவென்று தெரிவிக்கின்றன. என் மனதி லுண்டாகிய நடுக்கமானது துன்பமாகியகாலம் சமீப மாக நெருங்கி வந்ததாகக் காண்கிறது. இந்தப் பெண் நரி யானது உதிக்கிற ஆதித்தனைப் பார்த்துக்கொண்டு, தன் வாயினுல் நெருப்பைக் கக்கிக்கொண்டு ஊளையிடுகிறது. வாராய் சிரேஷ்டனே! இந்த நாயானது என்னைப் பார்த் துப் பயமில்லாமல் எதிரே குலேக்கிறது. பசு முதலான சுப மிருகங்கள் இடது பக்கமாகவும், கழுதை முதலான அசுப மிருகங்கள் வலதுபக்கமாகவும் செல்கின்றன. வாராய் புருஷ சிரேஷ்டனே! என்னுடைய குதிரைகள் அழுகிற முகத் தோடே கூடினவைகளாகக் காணப்படுகின்றன. மிருத்தியுவி னுடைய தூதனுகை இந்தக் கபோதமும் கோட்டானும் நித்திரை யில்லாமல் ஒன்றுக் கொன்று எதிராக இடைவிட் டுக் கூகூவென்று கூப்பிடுகிற ஓசைகள், இவ்விடங்கள் சூன் னியமாக வேண்டுமென்று இச்சிக்கிறதாக இருக்கின்றன. திக்குகளுடைய முடிவுகளெல்லாம் புகை சூழ்ந்தன. திக்குக ளுடனே கூடின பூமியானது நடுங்குகிறது. மகத்தான இடி கள் விழுகின்றன. பெருங் காற்ருனது மேகங்களுடனே கூடிச் சகிக்கக் கூடாத தூளிகளை வருஷித்து, இருளைக் கப்பு கிறது. எங்குக் காணினும் மேகங்கள் அசங்கியமாய் இரத் தங்களை வருஷிக்கின்றன. சூரியன்காந்தி யில்லாமல் மழுங்கி யிருக்கிருன். கிரகங்கள் தமக்குள் ஒன்றுக்கொன்று யுத்தங் கள் செய்கிறதுபோல் காண்கின்றன. அலேந்துகொண் டிருக் கிற பூத கணங்களால் ஆகாசமும் பூமியும் கொளுத்தப் பட் டாற் போல் விளங்குகின்றன. கிழக்கே பெருகுகிற நதிகளும், மேற்கே பெருகுகிற நதிகளும், ஓடைகளும், ஜனங்களுடைய மனங்களும், கலங்குகின்றன. அக்கினியானது நெய் சொரிந்து ஆகுதிகள் பண்ணினுலும் ஜுவலிக்க வில்லே. இப்படிப்பட்ட காலம் என்ன செய்யுமோ தெரியவில்லே. குழந்தைகள் ஸ்தன்ய பானஞ் செய்யவில்லே. மாதாக்களுக்கு ஸ்தன்யங்களில் பால் சுரக்கவில்லே. பசுக்கள் கண்ணீருடனே ரோதனஞ் செய்கின்றன. இரிஷபங்கள் சந்தோஷமாக இருக்கவில்லே. தேவதா விக்கிரகங்கள் அழுகின்றனபோல் வேர்வைகள் பெருக விட்டுக்கொண்டு, இருந்த விடத்தை

விட்டுப் பெயர்ந் திருக்கின்றன. இத்தேசங்களும், கிராமங்களும், பட்டணங்களும், உத்தியான வனங்களும், தபசிகளுடைய ஆச்ரமங்களும், இரத்தினம் பிறக்கும் பூமிகளும், காந்தியில்லாமல் வளத்தை யிழந்து, சோபியாமலு மிருக்கின்றன. இவை நமக்கு என்ன துன்பத்தைக் காண்பிக்கின்றனவோ தெரியவில்லை. இந்த மிகுதியான உற்பாதங்களைக் காணுகிற நான், சுவர்க்லோகத்தாரும் புகழப்பட்ட மகிமையுடைத்தான இந்தப் பூமி, சங்குசக்கர முதலான ஒப்பில்லாத ரேகைகளுடனே பிரகாசிக்கிற பாத பத்மங்களை யுடைத்தான ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடி சம்பந்தத்தை, யிழந்ததென்று எண்ணுகிறேனென்று, தருமராஜா தாம் கண்ட அரிஷ்டங்களை நினைத்துத் துக்கித்துக் கொண்டிருந்தார்.

அப்போது துவாரகையிலிருந்து அநுமத்துவஜனை அர்ச்சுனன் வந்து, தருமராஜாவினுடைய பாதங்களில் விழுந்து, சந்தோஷ மில்லாமல் சோகத்துடனே கண்களில் பெருகுகிற தண்ணீருடனேயும், தேகத்தில் முன்னிருந்த வண்ணத்தை யிழந்து, மாறு வண்ணமுமாக நின்றனன். இவ்வாறு நிற்கின்ற அர்ச்சுனனைக் கண்ட தருமராஜா, நடுங்கின மனதுடனே, தம்முடைய துணைவர்களிடத்தில் நாரதருடைய வார்த்தையை நினைத்துக்கொண்டு கேட்கிறார்: வாராய் அர்ச்சுனா! ஆனர்த்ததேசத்துக்கு அலங்காரமாகிய பட்டணத்தில் நம்முடைய சுஜனங்களெல்லாரும் சுகமாக இருக்கிறார்களா? யதுக்களும், போஜர்களும், தாசாருகர்களும் சாத்வதர்களும், அந்தகர்களும், விருஷ்ணிகளும், சூரகுமாரராயும் பெரியவராயுமிருக்கிற நம்முடைய மாதாமகரும் சுகமாக இருக்கிறார்களா? நம்முடைய அம்மானான வசுதேவரும் தம்பிகளுடனே சுகமாக விருக்கிறாரா? அவருடனே பிறந்த ஸ்திரீ ஜாதிகளும், அவருடைய பாரியைகளும், அவர்களுடைய புத்திரர்களும் குசலமாக இருக்கிறார்களா? தேவகி முதலான ஸ்திரீகள் அவரவர்கள் மருமக்கள்மாருடனே குசலமாக இருக்கிறார்களா? துஷ்டனான புத்திரனைப் படைத்த உக்கிரசேன மகாராஜா, அவன் தம்பியுடனே க்ஷேமமாக இருக்கிறானா? இருதீகனுடைய சுதனான அக்குரூரனும், ஜயந்தனும், சுதனும், சாரணனும் குசலமாக விருக்கிறார்களா? இன்னும் சத்துருஜனமுதலானவர்களும், சாத்வதர்களுக்கெல்லாம் சிரேஷ்டனாகியும் ஷட்குண பரிபூரணனாகியு மிருக்கிற பலராமனும், விருஷ்ணிகளுக்குள்ளே மகாரதனான பிரத்தியும்நனும், கம்பீரமான கரவேகத்தை யுடையவனாகிய அநிருத்த பகவானும், சுஷே

ணனும், சாருதேக்ஷணனும், ஜாம்பவதி குமாரனுன ஜாம்பவனும், ரிஷபன் முதலாகிய மற்றுமுள்ள ஸ்ரீ கிருஷ்ண குமார சிரேஷ்டர்களும், அவரவர்கள் புத்திரர்களுடனே சுகமாக விருக்கிருர்களா? ஸ்ரீ கிருஷ்ணனை யனுசரித்து நடக்கிற சுருததேவனும், உத்தமன் முதலான பேர்களும், சுனந்தனும், நந்தனும், சிருஷ்டணியனும், மற்றுமுள்ள சாத்வ சிரேஷ்டர்களும், சுகமாக விருக்கிருர்களா? ஸ்ரீ ராம கிருஷ்ணர்களுடைய புஜங்களை ஆதரித்தவர்கள் நம்முடைய இடத்திலுண்டா யிருக்கிற சிநேக தருமத்தை விடாமல் அன்பு பாராட்டுகிருர்களா? பிரம்மண்ணிய தேவனுகியும், பக்த வச்சலனுகியும், ஷட்குண பரிபூரணனுகியு மிருக்கிற ஸ்ரீ கோவிந்தன், தன்னுடைய நண்பர்களுடனே துவாரகா புரத்தில் சுதர்மை யென்கிற சபையில் சுகமாக எழுந்தருளி யிருக்கிருரா? ஆதிகாரணனுகியம், அந்தமில்லா ஸ்வரூபனுமாகிய பரம புருஷன், லோகங்களுடைய க்ஷேமங்களை விர்த்தி பண்ணவேண்டி யல்லவோ, யது குலமாகிற சமுத்திரத்தி லவதரித்தான். யாதொரு ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாகு தண்டங்களால் இரக்ஷிக்கப்பட்ட துவாரகாபுரியில் யாதவர்கள் சகல பிராணிகளாலேயும் பூஷிக்கப்பட்டு மஹா புருஷனைப் போல் பரமானந்தமாகக் கிரீடிக்கிருர்களோ? யாதொரு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரண கமலங்களைப் பணிவிடையாகிற சிலாக்கிய கிரமத்தினுல் சத்தியபாமா முதலான பதினுருயிரம் ஸ்திரீகளும், யுத்தத்தில் தேவதைகளை ஜெயித்து, வச்சிராயுதம் பிடித்த இந்திரனுடைய பட்டமகிஷியான இந்திராணி தேவிக்கு யோக்கியமாகிய போகங்களைப் பறித்து வந்தார்களோ? யாதொரு ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாகு தண்டாமாகிற சிரேயசை யனுசரித்த யாதவவீரர்கள், பயலேசமுமில்லாமல் பராக்கிரமத்தினுல் தேவசிரேஷ்டர்களுக்கு உசிதமாகிய சுதர்மை யென்கிற சபையை யடிக்கடி தங்கள் கால்களால் மிதிக்க ஆசிரயித்தார்களோ? அந்த ஸ்ரீ கிருஷ்ணன் சுகமாகவெழுந்தருளி யிருக்கிருரா?

ஓ அர்ச்சுனு! உனக்கு ஆரோக்கியமுண்டா? தேஜசை யிழந்தவன்போல் காணுகின்றனையே? உனக்குச் சன்மானம் நடக்கவில்லையோ? வெகுகால மிருந்ததினுல் அசட்டை பண்ணினுர்களோ? பாவிகளால் தூஷிக்கப்பட்டு மனவருத்த மடைந்தையோ? அரசர்க்குக் கொடுக்கிறேமென்று ஆசையைக் கற்பித்துப் பிரதிக்கினை செய்த பொருளைக் கொடாம லிருந்தையோ? நீ பிராமணனுவது, பாலனுவது, பசுவாவது, விருத்தனுவது, ரோகியாவது, ஸ்திரீயாவது, இரக்ஷிக்க

வேண்டுமென்று உன்னை யடைந்த பிராணிகளை, இரக்ஷியாமல் தள்ளிவிட்டையோ? யோக்கிய மாகாத ஸ்திரீ சங்கமத்தைச் செய்தனையோ? சங்கமஞ் செய்ய யோக்கிய மாகாத ஸ்திரீகளை நீக்குதல் செய்தனையோ? மார்க்கத்தில் வருகிறபோது உத்தமனாகிய நீ அதருமிகளால் அபஜெயப் பட்டையோ? வழி நடந்து வருகிறபோது போஜனஞ் செய்விக்கைக்கு யோக்கியமான பாலர் விருத்தர்களைப் போசனஞ் செய்வியாம லிருந்தனையோ? அயோக்கியமாகியும் நிஷித்தமாகியு மிருக்கிற கருமத்தை அனுஷ்டித்தனையோ? இல்லாவிடின் அத்தியந்தம் இஷ்டனாகியும், ஆத்ம பந்துவாகியு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனை விட்டுப் பிரிந்தேனென்று நினைத்திருக்கின்றனையோ? இல்லாவிடில் இந்த சோகம் உனக்கு வரமாட்டாதென்று யுதிஷ்டிரர் கேட்டக் கேள்விகளை, சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார்.

---

## பதினைந்தாவது அத்தியாயம்

*கலியினுடைய பிரவேசத்தைப் பார்த்துப் பரிக்ஷித்தினிடத்தில் இராச்சிய பாரத்தை வைத்துத் தருமபுத்திரரானவர் சுவர்க்கத்தை யடைந்தாரென்று சொல்லப் படுகின்றது.*

இப்படி அர்ச்சுனன், நானாவிதமாகிய சம்சயத்துக்கு இடமான தன் ஸ்வரூபத்தை கண்ட பிதாவாகிய தருமராஜாவால் மிகவும் விகற்பிக்கப்பட்டு, ஸ்ரீ கிருஷ்ணனை நினைத்துக் கொண்டு தனக்குத் தமயனாகிய இராஜாவைப் பார்த்துக் கண்ணீருடன் விம்மிக்கொண்டு சொல்லுகிறான். ஓ மஹாராஜாவே! ஸ்ரீ கோவிந்தனுடைய தரிசனமிருந்த காலத்தில் நம்மை மிகவும் விருப்படும்படியாக இருந்த இந்த உலகமே, அவன் தரிசனத்தை யிழந்ததினால், நீக்கும்படியாயிற்று. எந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஆதரவினால் துருபத மகாராஜாவினுடைய கிருஹத்தில் சுயம்வரோற்சவத்தில், மன்மதனுடைய வேகத்தினால் அறிவழிந்த இராஜாக்களுடைய தேஜசுகளையும் அபகரித்து நாணேறிட்ட தனுசினால் லட்சியமான மச்சியத்தையும் அடித்துத் திரௌபதியையும் படைத்தோமோ? யாதொரு ஹரியினுடைய சார்பினாலே சகல தேவதைகளுடனே கூடிய இந்திரனை ஜயித்துக் காண்டவ வனத்தை அக்கினி பகவானுக்குச் சமர்ப்பித்தேனே? மாயமயமாகியும் மயனால் கற்பிக்கப்பட்டு மிருக்கிற சபையை அடைந்தோமோ? இராஜசூய யாகத்தில் பூமண்டலத்தி லிருக்கிற இராஜ வர்க்கங்களெல்லாம் பகுதி கொடுத்தார்

களோ? எவன் பிறப்பினால் இராஜவர்க்கங்களுடைய சிரோமணிக்கங்களால் பிரகாசிக்கப்பட்ட பாதத்தை யுடைத்தாகியும் பதினாயிரம் யானை பலத்தோடே கூடியுமிருந்த சராசந்தனைப் பீமசேனன் சங்கரித்துப் பிரமத கணங்களுக் கெல்லாம் அதிபதியாகிய ஈஸ்வரனைக் குறித்துச் செய்கிற யக்கியத்துக்குப் பசுவாகச் சம்பாதிக்கப்பட்ட இராஜாக்களை விடுதலை செய்ய, அவர்களும் தேவரீர் செய்த யக்கியத்தில் திறை கொண்டு வந்தார்களோ? ஓ அண்ணாவே! உம்முடைய பட்ட மகிஷியான திரௌபதியுடைய பட்டாபிஷேகத்தால், சிலாக்கியமாகியும் மனோக்கியமாகியுமிருக்கிற தலைமயிரைத் துராத்மரான துச்சாதனாதிகள் சபையில் பிடித்த நிமித்தமாக அவர்களைச் சங்கரித்து, அவர்களுடைய ஸ்திரீகளை என்றைக்கும் விரிந்த கூந்தலை யுடைத்தானவர்களாகச் செய்வித்தானோ? நம்முடைய சத்துருவான துரியோதனனால் ஏவப்பட்ட துருவாசர் வனத்தில் வந்தபோது ஸ்ரீ கிருஷ்ணனவன் எழுந்தருளிப் பாத்திரத்தி லொட்டிக்கொண்டிருந்த அன்னத்தைச் சாப்பிட்டதினாலேயே அகமர்ஷண ஸ்நானத்திற்குச் சென்றரிஷி திர்ப்தியடைந்து தமக்குப் போசனம் தேவையில்லை யென்று சொல்லாமல் நடக்கும்படி செய்தானோ? யாதொரு பகவானுடைய தேஜசினால் பார்வதி சமேதராயும் ஷட்குணங்கள் பொருந்தியுமிருக்கிற சூலபாணியான சங்கரர் பாசுபதாஸ்திரத்தை எனக்குத் தயவுசெய்தாரோ? பின்னையு மற்றுமுள்ள தேவர்களும் தங்கள் தங்கள் அஸ்திரங்களைக் கொடுத்தார்களோ? எவன் மகிமையால் இந்தச் சரீரத்துடனே இந்திர லோகத்தில் மகேந்திரனுடைய அர்த்தாசனத்தை யடைந்து அவ்விடத்தில் விளையாடிக் கொண்டிருக்கிற என்னுடைய காண்டீபத்துடனே அலங்கிருதமான இரண்டு புஜங்களையும் ஆசிரயித்து இந்திராதிகளான தேவதைகள் நிவாத கவசர்களின் பயமில்லாமல் சுகித்தார்களோ? யாதொரு வுதவியினால் வெல்லுதற்கரிதான பலத்துடனே கூடிய கவுரவ சேனையாகிற சமுத்திரத்தை நான் ஒருவனாகியே இரதத்திலேறிக் கொண்டு அந்தச் சயின்யத்தி லிருக்கிற வீரர்களை ஜயித்தேனோ? எண்ணிக்கை யில்லாத இராஜ சிரேஷ்டர்களுடைய இரத சமுகங்களால் சூழப்பட்டும், அலங்கரிக்கப்பட்டு மிருக்கிற பீஷ்மர், கர்னன், துரோணர், சல்லியன், இவர்களுடைய சேனைகளில் எனக்கு முன்னே நடந்து அந்தச் சேனாதிபதிகளுடைய ஆயுட்களையும், மனசுகளையும், பராக்கிரமங்களையும் தன்னுடைய பார்வையினால் அபகரித்தானோ?

ஓ அண்ணாவே! யாதொருவன் புஜங்களை யடைந்த என்னை துரோணர், பீஷ்மர், கர்னன், அசுவத்தாமா, சயித்திரதன், சல்லியன், சந்தனு, சகோதரனான பாகலீகன், இவர்கள் பிரயோகித்த அமோகங்களாகிய அஸ்திரங்களானவை பரிசிக்க வில்லையோ? வெகு புண்ணிய சாலிகள் எவனுடைய பாத பத்மங்களை, மோக்ஷத்தைக் குறித்துப் பஜனஞ் செய்கிறார்களோ, அந்த ஜகதீஸ்வரனான ஸ்வாமி, புத்தியீனனாகிய நான், சாரதியாக வேண்டுமென்று கோரினதற்கும் சம்மதித்துச் சாரத்தியஞ் செய்தபோது, என் இரதத்தினுடைய குதிரைகள் இளைத்து ஜல நிமித்தமாகச் சிரமமுற் றிருந்ததற்காக நான் இரதத்தை விட்டு நிலத்திலிறங்கிப் பிரயோகித்த பாணத்தினால் பூமியைப் பிளந்து, பாதாளத்திலிருந்து வந்த ஜலத்தைக் குதிரைகள் குடித்துக் கொண் டிருக்கையில், எவன் மகிமையால் சத்துருக்கள் மதி மயங்கி, என்னை யடிக்க மாட்டாமல் நின்றார்களோ? வாரீர் ராஜாவே! தாத்பரியத்தை யறியக் கூடாமலும், மனோக்கிய மாகவும், புன் சிரிப்புடனே கூடியும், சிலாக்கியமாகியும், பார்த்தனே! அர்ச்சுனனே! சகாவே! குரு நந்தனனே! என்று ஸ்ரீ மகாலட்சுமி பதியான ஸ்ரீ கிருஷ்ணனால் விசுவாசமாய்ச் சொல்லப்பட்ட வார்த்தைகள் இப்போதும் என் மனதைக் கலங்கச் செய்கின்றன. படுக்கையிலேயும், நடக்கையிலேயும், உடனுண்பதிலும் பேதமில்லாமலிருக்கையால், சகாவே! நீ சத்திய சந்தனன், உனக்குத் தெய்வசகாயம் உண்டென்று, பரியாசமாகச் சொல்லப்பட்டவனாலும், அவன் மகத்தான மகிமை யுடைத்தானவனாகையால், புத்திரனுக்குப் பிதாவானவன் போல மதியீனனான என்னுடைய பாவங்களை யெல்லாம் சகித்தான். ஓ ராஜேந்திரனே அப்படி நிரந்தரமாகச் சகவாசமும் பரிபாலனமுஞ் செய்யப்பட்ட புருஷோத்தமனைப் பிரிந்து, என்னுடைய அறிவையு மிழந்து வழியில் வருகையில், திரிவிக்கிரமனுடைய ஸ்திரீகளை ரக்ஷிக்கையில், துஷ்டர்களான கோபாலர்கள் என்னை, ஸ்திரீ ஜாதியைப் பலாத் காரித்தாற்போல், நிக்கிரகித்தார்கள். ஐயா சிரேஷ்டரே! சகலமான இராஜாக்களும் சிலாகித்த தனுசும், பாணங்களும், இரதமும், குதிரைகளும், இரதிகனாகிய நானும், இப்போது அந்த ஸ்ரீ ஹரியைப்பிரிந்த படியினாலே சகலமும் ஒரு க்ஷணத்திலேதானே, பஸ்மத்திற் செய்த ஆகுதி போலவும், உவர்ப் பூமியில் விதைத்த விதை போலவும் அபலமேயாயின.

ஓ ராஜாவே! நீர் கேட்ட சுகிர்துக்கள் துவாரகையில் பிராமண சாபத்தினால் அறிவழிந்து, வாருணியான கள்ளைப் பானஞ்செய்து, மதத்தினாலே மனது கலங்கி, வாள்போன்ற கோரைகளாலேயும், முஷ்டிகளாலேயும் அறிவில்லாமல் ஒருவர்க்கொருவர் அடித்துக் கொண்டு நாச மடைந்தார்கள். அதிலே நாலைந்துபேர் மிகுந்தார்கள். யாதொரு காரணத்தினால் பிராணிக ளொன்றுக்கொன்று அடித்துக் கொண்டு நாச மடைந்து, உபகாரத்தால் பாலனமும் செய்யப்படுகின்றனவோ, அவை ஷட்குண பரிபூரணனான ஜகதீஸ்வரனுடைய லீலையே யல்லாமல் வேறல்ல. ஜலத்தில் வளருகிற மீன்களிற் சிறு மீன்களைப் பெரிய மீன்கள் பக்ஷிக்கிறதைப் போலவும், பூமியிலேயும் துர்ப்பலமான ஜந்துக்களைப் பலமுற்ற ஜந்துக்கள் தாங்களே ஒன்றுக் கொன்று அடித்துக் கொண்டு இறக்கிறது போலவும், பலசாலிகளாகியும் மஹாநுபாவர்களாகியு மிருக்கிற யாதவர்களாலே அன்னிய வீரர்களைச் சங்காரஞ் செய்வித்த விபுவானவன், பிற்பாடு யாதவர்களையும், அவர்களாலே அவர்களை மடியச் செய்து, பூமிபாரத்தைப் பரிகரித்தான். நான் சந்தாப மடைந்தபோது கால தேசங்களையும் பிரயோஜனங்களையுங் காண்பித்து, என் மனதுக்குச் சமாதானஞ் செய்த ஸ்ரீ கோவிந்தன் வசனங்களை நினைத்தால் அவை என் மனதைத் தகிக்கின்றன வென்று, அர்ச்சுனன் தருமராஜாவைப் பார்த்துச் சொன்ன வார்த்தையைச், சூதர் சவுன காதிகளுக்குச் சொல்லிப் பின்னையும் அவன் மகிமையைச் சொல்லுகின்றார். வாரீர் சவுனகாதிகளே! இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதபத்மங்களை நினைத்து நினைத்து ஆகுலத்தையுற்ற அர்ச்சுனனுக்கு மிகுதியான பக்தியினால் மதியானது மோகங்களை விட்டுப்பரிசுத்தமாயிற்று. பின்பு ஸ்ரீ வாசுதேவனுடைய திருவடித் தியானத்தினால் சகல பாவங்களும் தீர்ந்தவனாகி, பாரத யுத்தத்தில் தனக்கு இதமாக ஸ்ரீ ஹரி யுபதேசித்த பரம புருஷ விஞ்ஞானமானது, கால விளம்ப மானதினாலேயும், கருமா தீனமாகிய தமோகுணத்தால் மறைந்திருந்து, மறுபடியும் அதிகரித்துப் பெற்ற பிரம்மக் கியானத்தினால் சோகத்தை விட்டுத் தான் சுதந்தரனென்கிற சம்சயத்தைத் தவிர்ந்து, பிரகிருதி குணங்களில் ஒன்றாமல் பந்தத்தை விட்டு நீங்கினான். யுதிஷ்டிரரும் பகவானுடைய கதியைக் கேள்விப்பட்டு, யதுகுல நாசத்தையு மறிந்து மனோஜெயஞ் செய்துகொண்டு, சுவர்க்க மார்க்கத்தைக் குறித்து உத்தேசித்தார். குந்தியும் தனஞ்சயனால் சொல்லப்பட்ட யாதவ பலத்தையும், ஸ்ரீ ஹரியினுடைய கமனத்தையும் அறி

ந்து கொண்டு, இந்திரியங்களினல் அறியக்கூடாத அகோசரனை ஸ்ரீ பகவானிடத்தில் மனதை நிறுத்தி, ஏகாந்த பக்தியினல் சமுசாரத்தை நிவர்த்தி செய்தாள்.

ஓ சவுனகாதிகளே! எந்தச் சரீரத்தை யெடுத்து முள்ளினல் முள்ளை வாங்கினற்போல் பூபாரத்தைத் தீர்த்தாரோ? அந்தச் சரீரத்தை விட்டுவிட்டார். அந்தப் பகவானுக்குத் தம் திருமேனியும் மற்ற சரீரங்களும் சமானமே யல்லாமல் வேறில்லை. வேஷதாரியானவன் வேஷத்தைத் தரிக்குங் காலத்தில் தன் நிஜ ரூபத்தை விடாமல் அந்த மாறு வேஷத்தைத் தரித்து, அதற்குள்ள நடனத்தையுஞ் செய்து, பின்பு அந்த வேஷத்தை விட்டுத், தன் நிஜ ரூபத்துடனே வெளிப்பட்டிருக்கிறவனைப்போல், மச்சியாதி ரூபங்களைத் தரித்த முகுந்தன் பூபாரத்தைத் தீர்க்கவேண்டித் தன்னிச்சையா லெடுத்த திருமேனியை விட்டுத், தன் நிஜ ரூபத்துடனே தன் பதத்திலிருந்தான். எப்போது ஜனங்கள் அனுசரித்துக் கடைத் தேறும்படியாகச் சிலாக்கியமாகிய லீலைகளைச்செய்த ஷட்குண பரிபூரணனுகிய ஸ்ரீ முகுந்தனுடைய திருவடிகள் விட்டு நீங்கினவோ, அப்பொழுதே ஸ்ரீ ஹரியிடத்தில் அறிவில்லாத ஜனங்களை, அதருமங்களுக்கெல்லாம் ஏதுவான கலிபுருஷன் வந்தடுத்தா னென்று, சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்பு யுதிஷ்டிராருடைய நடக்கைகளையுஞ் சொல்லுகிருர்.

ஓ சவுனகாதிகளே! யுதிஷ்டிரார், தம்முடைய நகரத்திலேயும், இராச்சியத்திலேயும், கிருஹத்திலேயும், ஜீவவர்க்கங்களிலேயும் அந்தக் கலியினுடைய சஞ்சாரத்தினல் லோபமும், அசத்தியமும், குடிலமும், இம்சையும், இவை முதலான அதருமங்களுடைய சமூகங்களைக்கண்டு, ஆலோசனை செய்து கொண்டு பயணத்தைக் குறித்து யத்தனஞ்செய்தார். சக்கரவர்த்தியான அந்தத் தருமராஜா, குணங்களால் தமக்குச் சமானமாகியும், வினயசாலியாகவுமிருக்கிற பவுத்திரனுகிய பரிக்ஷித்தை, நாலு சமுத்திரத்தையும் பவித்திரமாகத் தரித்த பூமண்டலத்துக்கு நாதனுக, அஸ்திணபுரத்தி லாரோபணஞ் செய்து, தான் தரித்துக்கொண்டிருந்த வெண்பட்டுக்களையும், கடக மகுட முதலான ஆபரணங்களையும், அவ்விடத்தில் தானே நிவர்த்தித்து, யானென்றும் எனதென்றும் எண்ணப்படுகிற அகங்கார மமகாரங்களை விட்டுச், சகல பந்தங்களையு மறுத்து, வாக்கு முதலான பத்து இந்திரியங்களையும் மனதிலடக்கி, அந்த மனதைப் பிராணவாயுவிலொடுக்கி அந்தப்

பிராணனை அபானவாயுவிற் சேர்த்து, அபானவாயுவை அதின் கருமமான உச்சாரத்துடனே அபான தேவதை யாகிய மிருத்தியு விடத்தில் இணைத்து, அந்த மிருத்தி யுவைப் பஞ்சபூத விகாரமாகிய சரீரத்திற் கூட்டி, சரீரத்தைப் பிராகிருத குணங்களில் சமர்ப்பித்து, குணங்களைப் பிரகிருதி யிற் பொருத்தி, அந்தப் பிரகிருதியை ஜீவாத்துமாவிற் செலுத்தி, அந்த ஜீவனை அழிவில்லாத பிரமத்தி லொன் ருகப் பொருத்தி வைத்துக்கொண்டு, மரவுரியைத் தரித்து, ஆகாரத்தை விட்டு, மவுனத்துடனே தலையை விரித்துக் கொண்டு, அறிவில்லாதவனைப் போலவும், பித்தனைப் போல வும், பேயனைப்போலவும், தன்னை யெல்லாரும் பார்க்க, தான் குருடனைப்போல் ஒரு பொருளையுங் கண்ணுற் பாராமலும், செவிடனைப்போல் ஒன்றையுங் கேளாமலும் வெளிப்பட்டு, மஹானுபாவர்கள் முன்னடந்த வழியான வடக்குத் திக்கைக் குறித்து, மனதில் பிரமத்தைத் தியானஞ் செய்துகொண்டு, எந்தவழியிற் போனவர்கள் திரும்பி வந்ததில்லையோ, அந்த மார்க்கத்தை அடைந்தார்.

அவருடனே அவர் தம்பிமார்களும், கலிபுருஷனுல் பரிசிக்கப்பட்ட பிரஜைகளினுல் நிறைந்த வுலகத்தைப் பார்த் துத் தங்களுடைய வர்ணுச்சிரமங்களுக்கு யோக்கியமாகிய தருமார்த்த காமங்களைப் பரம புருஷனுடைய பிரசாத நிமித்தமாக அனுஷ்டித் திருக்கையால், ஸ்ரீ வைகுண்ட னுடைய சரண கமலங்களைத் தியானஞ் செய்துகொண்டு, அந்தத் தியானத்தால் மிகுதியான பக்தியைச் செய்து, அதினுல் ரசோகுண தமோகுணங்களைப் பரிகரித்துச் சுத்த மாகிய புத்தியால் புருஷோத்தமனுகிய ஸ்ரீமந் நாராயண னுடைய திருவடிகளில் கட்டப்பட்ட மதியை யுடைத்தான வர்களாகிச் சகல கல்மஷங்களையும் போக்கி, சத்புருஷர் களால் அடையப்படுங் கதியை அடைந்தார்கள். மனே ஜயத்தை யுடைத்தான விதுரரும், பிரபாச க்ஷேத்திரத்தில் தேகத்தை விட்டு, ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் சித்தத்தை இடை விடாமல் நிறுத்திக்கொண்டு, தம்மை அழைக்க வந்த பிதுர் தேவதைகளுடனே தம்முடைய லோகத்தை அடைந்தார். திரௌபதியும் தன்பதிகளுக்குத் தன்னிடத்தில் அபேக்ஷை யில்லாமல் இருக்கிறதை நன்ருக அறிந்து, குண பரிபூரண னை ஸ்ரீ வாசுதேவனிடத்திற் பொருந்திய மதியை யுடைத் தாகி அவனை நிலையாக அடைந்தாள். யாதொருவன் சிந்தை யுடனே பகவானுடைய பயணத்தையும், பாண்டவர்களுடைய மஹா பிரஸ்தானத்தையும் கேட்கிருனே அவனுக்குப்

பாவனமாகியும், மிகவும் மங்களகரமாகியு மிருக்கிற இந்தக் கேள்வியானது ஸ்ரீ ஹரியினிடத்தில் பக்தியைக் கொடுத்து அவருடைய சித்தியையுங் கொடுக்கும்.

---

## பதினாறுவது அத்தியாயம்

*கலியினாலே பின்னங்களான பூமி தருமங்களுடைய பிராப்தியும், பாலனாகிய பரிக்ஷித்தினுடைய சம்வாதமும் சொல்லப்படுகின்றன.*

இந்தப் பிரகாரம் பாண்டவர்களுடைய மஹா பிரஸ்தானத்தை வர்ணனஞ் செய்த சூதர் பின்னையுஞ் சவுனகாதிகளுக்குச் சொல்லுகிறார். பரமபாகவதனான பரிக்ஷித்து மஹாராஜா, தன் ஜனனகாலத்தில் சாதகத்தினுடைய விதானத்தை அறிந்தவர்கள் சொன்னபடி சிலாக்கியமாகிய குணங்களை யுடைத்தாகிப் பிராமண சிரேஷ்டர்களுடைய சிக்ஷையால், தருமமாக இராச்சிய பரிபாலனஞ் செய்துகொண்டு விராடபுரத்துக்கு இராஜாவாகிய உத்தரனுடைய புத்திரியான இராவதியைக் கலியாணஞ் செய்து, அவளிடத்தில் ஜனமேஜயன் முதலான நாலு புத்திரர்களை ஜனிப்பித்து, மிகுதியான தக்ஷிணைகளுடனே கூடின மூன்று அசுவமேதங்களைச் செய்தான். ஓ சவுனகாதிகளே! அப்படிக் கிருபாசாரியரை ஆசாரியாக நியமித்துக்கொண்டு, அவர் தீக்ஷை செய்த அசுவமேதங்களில் இந்திராதி தேவதைகள் பிரத்தியக்ஷமாக வந்துபாகம் வாங்கிக் கொண்டார்கள். அந்த வீரன் திக்கு விஜயஞ் செய்யும்போது, இராஜ லக்ஷணத்தைத் தரித்தும், சீமானாகவும் இருந்து, இரண்டு கோக்களைத் தன்னுடைய காலினால் உதைத்துக்கொண்டு மிருந்த சூத்திரனை நிக்கிரகித்துத், தன் பராக்கிரமத்தினால் கலிபுருஷனையும் நிக்கிரகித்தானென்று. சூதர் சொன்ன வார்த்தையைக் கேட்ட சவுனகர், சூதரைப் பார்த்துக் கேட்கிறார்.

ஓ சூதரே! அந்தப் பரிக்ஷித்து மஹாராஜன் திக்கு விஜயஞ் செய்தபோது, எந்த நிமித்தமாகக் கலிபுருஷனை நிக்கிரகஞ் செய்தான். யாதொரு சூத்திரன் இராஜ வேஷத்தைத் தரித்துக் கோக்களைக் காலினால் உதைத்தானோ அவன் யார்? அந்தச் சரிதை ஸ்ரீ விஷ்ணுவினுடைய கதைகளுக்கு இடமாக விருந்தால் சொல்லத் தக்கது; பிரயோசன மில்லாத கதையைக் கேட்கிற காலங்கள் ஆயுள் குறைவே யல்லாமல் விருத்தியாகாது. ஓ சூதரே! மிதமாகிய ஆயுசும், இடைவிடாத மரணமுமான தன்மையைக் குறித்து அமிர்தமாகிற

மோக்ஷத்தை யிச்சித்துக்கொண் டிருக்கிற மனுஷர்களுடைய இதத்தைச் சிந்தித்து, இந்தச் சத்திரயாகத்தில் பசுவைக் கொல்லுதலாகிற கருமத்தைச் செய்ய மிருத்தியு பகவானை இங்கே யழைப்பித் திருக்கிறோம். இவ்விடத்தில் எவ்வளவு காலம் வாசஞ் செய்கிறோமோ அவ்வளவு மட்டுக்கும் ஒருவனு மிறக்க மாட்டான். லோகத்தில் ஸ்ரீ ஹரி லீலையாகிற அமிர்தத்தைப் பொழிகிற கதைகளை ஜனங்கள் கேள்வி செய்யக் கடவார்கள். சோம்பலாகியும், மந்த மதியராகியும், ஆயுளில் லாமலு மிருக்கிற இந்த ஜனங்கள், மனுஷ சரீர மெடுத்திருந்தும் இராக்காலமெல்லாம் நித்திரையாலேயும், பகற்காலமெல்லாம் பிரயோசன மில்லாத கருமங்களாலேயும் ஆயுள் கழிந்து போகிற தல்லவோ என்று நினையாமலிருக்கிற தென்ன ஆச்சரிய மென்று சொன்ன, சவுனகரைக் குறித்துச் சூதர் சொல்லுகிறார். பரிக்ஷித்து மகாராஜா குருசாங்கல தேசங்களில் வாசஞ் செய்திருக்கையில், தன்னுடைய ஆக்கினையினால் பந்தமான தேசத்தில் கலி புருஷன் பிரவேசித்தானென்கிற வார்த்தையைக் கேள்விப்பட்டவுடன், அவனிடத்தில் மிகுந்த கோபத்துடனே வில்லைக் கையிலெடுத்துக் கொண்டு, நீலவர்ணக் குதிரைகளுடனேயும் சிங்கக் கொடியால் விளங்கிக் கொண்டு மிருக்கிற இரதத்திலேறிப், பட்டணத்தை விட்டுப் புறப்பட்டு இரதகஜ துரக பதாதிகளென்கிற சதுரங்க சேனைகளுடனே, திக்குவிஜயத்தைக் குறித்துப் புறப்பட்டான். மேருவுக்குக் கீழ்ப்புறமான பத்ராசுவ வருஷத்தையும், மேற்புறமான கேதுமால வருஷத்தையும், தென்புற மான பாரத வருஷத்தையும், வடபுறமான குரு வருஷத்தையும், மேருவிற் சேர்ந்த இளா விரதம், இரம்மியகம், இரண்யமயம், ஹரி வருஷம், கிம்புருஷ மென்னும் பெயரால் விளங்கின வருஷங்களைச் ஜெயித்து, அங்கேயிருக்கிற இராஜாக்களிடத்திலிருந்து பகுதி வாங்கிக் கொண்டு, அந்தந்தவிடங்களில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய மகத்துவத்துக்குக் கியாபகமாகிய பாண்டவர்களுடைய கதைகளைக் கேள்வி செய்தும், அசுவத்தாமாவினுடைய அஸ்திர வொளியினால் தனக்கு வந்த சங்கடத்தை ஸ்ரீ கிருஷ்ணன் பரிகரித்துப் பாண்டவர்களிடத்தில் செய்த சிநேகத்தையும், பாண்டவர்கள் ஸ்ரீ கேசவனிடத்தில் அனுஷ்டித்த பக்தியையுங் கேள்விப்பட்டு, பரமசந்தோஷத்துடனே துதிசெய்த அந்த ஜனங்களிடத்தி லுண்டா யிருக்கிற பிரீதியினால் கடாக்ஷம் செய்து, மகா வுதாரனுகையாலேயும் விஸ்தாரமான தயையுடையவனுகையாலேயும், அவரவர்களுக்கு மிகுந்த தனங்களையும், வஸ்திரங்களையும், ஆபரணங்களையும் கொடுத்தான். ஸ்ரீ கிருஷ்

ணன் பாண்டவர்கள் நிமித்தமாகச் செய்த சாரத்தியத்தையும், சபாநாயகனாக விருந்ததையும், அவர்கள் சொற்படி நடந்து கொண்டதையும், சகாவாக விருந்ததையும், தூது நடந்ததை யும் இராத்திரி காலங்களில் அவர்களை இரக்ஷிக்க வேண்டி, யுருவின கத்தியைக் கையில் பிடித்துக் கொண்டிருந்ததையும், வனத்தில் சஞ்சரிக்கிறபோது அடிக்கடி அவர்களை யடுத்து ரட்சணஞ் செய்ததையும் அவர்களைத் தோத்திரஞ் செய்ததை யும், சிநேகிதரானவர்களுக்கு வந்தனஞ் செய்ததையும், அப்ப டியே யுலகமெல்லாம் அந்த விஷ்ணுவை நமஸ்கரித்ததை யும் கேள்விப்பட்டு, பரிக்ஷித்து மகாராஜா ஸ்ரீ ஹரியுடைய சரணார விந்தங்களில் பக்திசெய்தான். ஓ சவுனகாதிகளே தம் முடைய பெரியோர்களால் நடந்த நடத்தையை எப்போதும் அனுசரித்து நடந்து கொள்ளுகிற அந்தப் பரிக்ஷித்து மகா ராஜா வருகிற வழியில், ஒரு ஆச்சரியம் நடந்தது. அதைச் சொல்லுகிறேன் கேளுங்கள். தருமமானது ஒரு எருதின் ரூபத்தை யெடுத்து ஒரு காலால் நடந்து கொண்டு, கன்றை யிழந்த தாயைப் போல் கதறியுங் கண்ணீர் சொரிந்துகொண் டும், மாறு வர்ணத்துடனேயு மிருக்கிற பூமிதேவியாகிய பசுவை அடுத்துக் கேட்கின்றது. வாராய் மங்கள ரூபத்தை யுடைத்தானவளே உனக்கு ஆரோக்கிய முண்டா யிருக் கிறதா? எந்தக் காரணத்தினால் வாடின முகத்துடனே உன் னுடைய நிஜவர்ணத்தை யிழந்து இருக்கிறையோ, அந்தக் காரணத்தால் உன் மனதில் ஒரு கிலேசத்தை யனுபவித்துக் கொண்டிருக்கிறு யென்றும், உனக்குப் பந்துவான ஜனம் வெகு தூரமாகப் போயிருக்கிறபடியால், அந்த ஜனத்தை நினைத்துச் சோகப்படுகிறு யென்றும் நான் நிச்சயிக்கிறேன்.

ஓ அம்மா! நான் மூன்று கால்களை யிழந்து ஒரு காலால் நடக்கிறேனென்று துக்கப்படுகிறையோ? இல்லா விட்டால் உன்னைக் சூத்திரர்க ளனுபவிப்பார்களென்று துன்பப் படு கிறையோ? தேவதைகள் யக்கிய பாகத்தை யிழந்தார்க ளென்று விசனப்படுகிறையோ? இந்திரன் காலங்களில் வரு ஷங்களை நடத்த வில்லையென்று கவலைப் படுகிறையோ? ஸ்திரீகளைப் புருஷர்கள் இரக்ஷியாமல் கைவிடுவார்களென்று சங்கடப் படுகிறையோ? பாலர்களை மாதா பிதாக்கள் இரக்ஷி யார்க ளென்றோ? அந்தச் சிசுகளை இராக்ஷதர்களைப்போல் பீடிப்பார்களென்றோ? பிராமணர்கள் வேத விருத்தமாகிய கருமங்களைச் செய்வார்களென்று, வேதங்களைக் குறித்துச் சிரமப் படுகிறையோ? இராஜ வர்க்கங்கள் பிராமண பக்தி யில்லாம விருக்கிறபடியால், பிராமணர்களுக்கு எப்படி

யென்று துக்கிக்கிறையோ? கலிபுருஷன் க்ஷத்திரிய பந்துக்களைப் பிறப்பிப்பா னென்றும், அவர்கள் இராச்சி யத்தை ஞாயமாகப் பாலனஞ் செய்ய மாட்டார்களென்றும், சோகானுபவம் பண்ணுகிறையோ? இந்தக் கலியில் ஜீவ வர்க்கங்கள் போஜனங்களிலும், பானங்களிலும், இருப் பிடங்களிலேயும், சம்பிரமங்களிலேயும், விரும்பி யிருக் கிருர்களென்று கிலேசப் படுகிறையோ? உன்னுடைய மிகுந்த பாரத்தைப் பரிகரிக்க வேண்டிய அவதாரஞ் செய்த ஸ்ரீ ஹரியுடைய அந்தர்த்தானத்தை நினைத்துச் சந்தாபப் படுகிறையோ? சகல கருமங்களும் மோக்ஷத்துக்கு விலக்க மாயிற்றென்று கஷ்டப்படுகிறையோ? ஓ பூதேவியே! உன் னுடைய இளைப்பிற்கு ஏதுவான இந்த உன் மனோவியாதியை எனக்குச் சொல்ல வேண்டும். பலவாறுன கலியாலே யுன்னு டைய தேவ சிலாக்கியமாகிய பாக்கியம் அபகரிக்கப்பட்ட தென்று சங்கடப் படுகிறையோ? என்று ருஷப ரூபமாகிய தரும தேவதை கேள்வி செய்ததற்குப் பசு ரூபத்தைத் தரித் திருக்கிற பூமிதேவி உத்தாரஞ் சொல்லுகிருள்: ஓ தருமதேவ தையே! யாதொரு காரணத்தைக் கேட்கிறீரோ அதையெல் லாம் நீ ரறிவீர். எவனுல் உலகங்களுக் கெல்லாம் சுகத்தைக் கொடுக்கிற நாலு கால்களால் நீர் சஞ்சரிக்கிறீரோ? எவ னிடத்தில் சத்தியமும், தயையும், சாந்தியும், தியாகமும், சந்தோஷமும், மனோஜயமும், இந்திரிய நிக்கிரகமும், தபசும், பொறுமையும், வைராக்கியமும், சாஸ்திர சிரவண மும், கியானமும், ஐசுவரியமும், சவுரியமும், பராக்கிரமமும். தைரியமும், லாவண்ணியமும், சுவாதந்திரமும், சாமர்த்திய மும், சாந்தியும், பாக்கியமும், மிருது பாஷணமும், விசுவா சமும், சீலமும், பலமும், அகங்கார மில்லாமையும், இவை முதலான குணங்களெல்லாம் இடைவிடாம லிருக்கின்ற னவோ, மகா புருஷர்களால் பிரார்த்திக்கும்படியான இந்த மகா குணங்கள் எவனிடத்தில் ஒருகாலத்திலும் குறைவில் லாமல் விளங்குமோ? குண பாத்திரனுகியும் லக்ஷ்மி நிவாச னுகியு மிருக்கிற அந்த ஸ்ரீ ஹரியினுடைய நீக்கத்தைக் குறித்துத் துக்கிக்கிறேனே யல்லாமல், பாப ஹேதுவான கலியால் வியாபிக்கப்பட்ட ஜனங்களையும், என்னையும், அமரேசு வரனுகிய உம்மையும், தேவர்களையும், ரிஷிகளை யும், பிதுர்வர்க்கங்களையும், சாது ஜனங்களையும், பிராமணுதி வர்க்கங்களையும், பிரமசரியாதி ஆச்ரமங்களையும் நினைத்து நான் சோகப்படவில்லை.

ஓ தரும தேவதையே! மிகுதியான கியானுதிகளுக்கு இருப்பிடமாகிய பிரமாதிகளான தேவதைகளும் பகவானு

டைய திருவடிகளை அடுத்து நம்பிக்கொண்டிருக்கையிலும், அநேக காலம் எவளுடைய கடாக்ஷம் வேண்டுமென்று இச்சித்துத் தவசுகளைச் செய்தார்களோ? அந்த லக்ஷ்மிதேவியும், தனக்கு வீடாகிய கமலங்களுடைய பரிமளத்தை ஆக்கிராணஞ்செய்து, அவைகளில் ஆசை பிறந்து, மற்ற விடங்களை நினையாமல் அவைகளிற்றனே நிலையாகி நின்றுளோ? அந்த முகுந்தனுடைய பத்ம ரூபமாகியும், வச்சிராகரமாகியும், அங்குச சமானமாகவும், துவஜ ரூபமாகவும் விளங்குகிற ரேகைகளால் பிரகாசித்தும். செவந்து மிருக்கிற திருவடிகளால் அலங்கரிக்கப்பட்ட சரீரத்தை யுடைத்தாகி அவருடைய சம்பந்தத்தையும் அடைந்து, பதினன்கு லோகங்களுக்குள்ளே நான் சிரேஷ்டமென்று நினைத்திருந்த என்னுடைய கர்வத்தால், முடிவில் என்னை நிவர்த்தித்தானே? யாதொரு முரஹரியான இராஜ வேஷத்தை யெடுத்த, அசுரர்களுடைய எண்ணிக்கையில்லாத அக்ஷோஹிணியாகிற என் சுமையைத் தன் சுதந்தரத்தினல் பரிகரித்தானே யாதொரு ஸ்ரீ வாசுதேவன் யதுவம்சத்தில் அவதாரத்தைச் சங்கற்பித்து இந்த லோகத்தில் திருவடிகளை வைத்து நடக்கிறதற்குச் சங்கட மடைந்துகொண் டிருக்கிற உன்னைத் தன் சகாயமாத்திரத்தில் என்னிடத்தில் பரிபூரணமான பாதங்களால் சஞ்சரிக்கும்படி செய்தானே? யாதொரு காமஜனகன் சத்தியபாமை முதலான ஸ்திரீகளுடைய தைரியத்தைக் கர்வத்துடனேயும் தன்னுடைய பிரீதியுடனே கூடிய கடாக்ஷங்களாலேயும், மனோக்கியமாகிய புன் சிரிப்புக்களாலேயும், சமத்காரமான வார்த்தைகளினலேயும், பரிகரித்தானே? அந்தப் புருஷோத்தமனுடைய திருவடிகளால் அலங்கரிக்கப்பட்டு அந்தச் சுகத்தால் பரவசமாகிப் புளகாங்கிதையாகி யிருந்தவள், அவனுடைய நீக்கத்தை எவள் தான் சகிப்பாளென்று பூமிதேவியும் தருமதேவதையும், ஒருவர்க் கொருவர் சொல்லிக்கொண் டிருக்கிற சமயத்தில், பரிக்ஷித்தென்கிற இராஜரிஷியானவன் கிழக்கு முகமாகிப் பிரவாகத்தை யடைந்திருக்கிற சரஸ்வதி நதியை யடைந்தான்.

---

## பதினேழாவது அத்தியாயம்

மகா பராக்கிரம சாலியான பரிக்ஷித்தினல் செய்யப்பட்ட கலிபுருஷனுடைய நிக்கிரகம் சொல்லப்படுகிறது.

இந்தப்பிரகாரம் அவ்விடத்தில் ஸ்திரீ புருஷர்களாயிருக்கிற அந்தப் பசுக்களை யடிக்கிற இராஜ லக்ஷணமுடைய சூத்திரனையும், தாமரை வளையம்போல் வெளுத்

தும், மூத்திரத்தை விட்டுக்கொண்டும், நடுக்கத்துடனே ஒரு காலால் பயப்படுகிறது போலேயு மிருக்கிற ருஷபத்தையும், மிகவும் சூத்திரன் காலாலே யுதைப்பட்டுக்கொண்டும், கன்றில்லாமலும் கண்களிலிருந்தும் தண்ணீரைப் பெருகவிட்டு அழுதுகொண்டும், இளைத்து, பசியால் திரணத்தை யிச்சித்துக்கொண்டும், தருமமூலமாகியும், பசு ரூபத்தை யெடுத்த பூமியையுங் கண்ட, பரிக்ஷித்து மகாராஜா கையில் வில்லை வளைத்து நாணேறிட்டு அதில் பாணத்தைத் தொடுத்துக்கொண்டு மேகம்போல் கம்பீரமாகிய வாக்கினால் கேட்கிறான். ஆரடா நீ என்னாலே ரக்ஷிக்கப்பட்ட வுலகத்தில் ஸ்திரீ ரூபமாகிய பசுவைக் கொல்லுகிறாய். உன் வேஷத்தைப் பார்க்கையில் இராஜாவாக இருக்கிறாய். உன் கருமத்தைப் பார்க்கையில் சூத்திர வேஷதாரி போலிருக்கிறாய். காண்டீபத்தைத் தரித்த அர்ச்சுனனுடனே ஸ்ரீ கிருஷ்ணதேவன் போனதினால் எவர்களுக்குச் சோகம் வரும்படி செய்யலாகாதோ? அவர்களுக்கு சோகத்தைக் கொடுக்கிற நீயே சோகத்துக்கு யோக்கியனாகையால் உனக்கு வதத்தைக் கொடுக்கலாம். நீ தான் தாமரை வளையம்போல வெளுத்தும், மூன்று கால்களை யிழந்தும், ஒருகாலால் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற ருஷப வேஷத்தைத் தரித்திருக்கிறாய். எங்களைப் பல கவலைக் குட்படுத்தவேண்டுமென்று ருஷப வேஷத்தைத் தரித்த தேவதையோ? நீயார் சொல்லுக. கவுரவ வமிசத்திற் பிறந்த ராஜேந்திரர்களுடைய பாகு தண்டங்களாலே ரக்ஷிதமாகிய இந்தப் பூமண்டலத்தில் ஒரு காலத்திலும் உன்னைவிட மற்றொரு பிராணிகளுக்கும் கண்ணீர் நிலத்தில் விழுந்ததில்லை. வாராய் காமதேனு சந்ததியிற் பிறந்த ருஷபமே! இந்த சூத்திரனிடத்திலிருந்து உனக்குப் பயந் தேவையில்லை. இது நிமித்தம் நீ சோகப்படவேண்டாம். வாராய் மாதாவே! உனக்கு க்ஷேம முண்டாகுக. துஷ்டர்களை நிக்கிரகஞ் செய்கிற நான் சாக்கிரதையாயிருக்கையில் நீ அழவேண்டியதில்லை. எந்த இராஜாவுடைய இராச்சியத்தில் பிரஜைகள் துஷ்டர்களால் பீடிக்கப் படுகிறார்களோ? மதித்திருக்கிற அந்த இராஜாவினுடைய கீர்த்தியும், ஆயுசும், பாக்கியமும், அவனுடைய பரலோக கதியும் நாசமடையும். இராஜாவுக்குத் தன் இராச்சியத்தில் ஆர்த்தியடைந்த ஜனங்களுடைய ஆயாசத்தைப் பரிகரிக்கிறதே பரம தருமம். ஆகையால் பிராணிகளுக்குத் துரோகத்தைச் செய்கிற இந்த மிகுந்த துஷ்டனை நான் வதைக்கிறேன். ஓ சுரபி வம்சோத்பவனே! நாலு கால்களால் நடக்கிற உன்னுடைய மூன்று கால்களை வெட்டினவன் எவன்? ஸ்ரீ கிருஷ்ணனுடைய திரு

வடிகளை நம்பின இராஜாக்களுடைய இராச்சியத்தில்உன்னைப் போலொத்த பேருக்கு இப்படிக் கால்களுடைய இழப்பு வரலாகாது. ஓ ருஷபமே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக. நிரபராதிகளான சாது ஜனங்களுக்குத் துரோகத்தைச் செய்தவன், குந்தி குமாரர்களுடைய குலத்திற் பிறந்த பேர்களுடைய கீர்த்தியைக் கெடுத்தவன். உனக்கு அபராதியான அந்தத் துரோகியைச் சொல்லுக. அபராதமில்லாத ஜனத்தினிடத்தில், அபராதத்தைச் செய்கிறவனுக்கு என்னுடைய பயம் அவனுக்கு எங்கே போனாலுந் தீராது. அபராதமில்லாத பிராணிகளிடத்தில் துரோகத்தை எவன் பயமில்லாமல் செய்கிறானோ? அவன் தேவனாகியிருந்தாலும் அவனுடைய தோள்வளைகளுடனே பாகுவைப் பிரத்தியக்ஷமாக அறுத்துக் கொண்டு வருவேன். இராஜாக்களுக்குச் சுவதருமத்தினுடைய பரிபாலனமே உத்தமமான தருமமென்பது பிரசித்தமாகையால், இராஜாவானவன், தனக்குச் சங்கடமில்லாத காலத்தில் மரியாதையை அதிக்கிரமத்து அதருமங்களைச் செய்கிற ஜனங்களுக்குச் சாஸ்திர விகிதமாகிய சிக்ஷைகளைச் செய்ய வேண்டுமென்று சொல்லுகிற பரிக்ஷித்து மஹாராஜனுடைய வார்த்தையைக் கேட்ட ருஷபரூபமாகிய தருமதேவதை சொல்லுகின்றது. ஓ இராஜாவே! எவர்களுடைய குண சமூகங்களால் ஷட்குண பரிபூரணனாகிய ஸ்ரீ கிருஷ்ணன் தூது முதலாகிய கருமங்களைச் செய்தானோ? அப்படிப்பட்ட பாண்டவர்களுடைய குலத்தில் ஜனித்த உங்களுக்கு, இப்போது சொன்ன அபய வாக்கியம் யுக்தந்தான். ஓ புருஷ சிரேஷ்டனே! வாக்கிய பேதங்களால் மோகத்தை யடைந்த நாங்கள் இந்தக் கிலேசங்களுக்குக் காரணங்களையும், இந்தத் துக்கத்தைக் கற்பித்த புருஷனையும் அறியமாட்டோம்.

அப்புருஷ லக்ஷணத்தை ஒருவர் சொன்னபடி மற்றொருவர் சொல்லாமல் பலவகையாகச் சொல்லுகின்றனர். வேத புருஷன் கருத்துக்கு விரோதமாகிய மதத்தில் நிலைத்த மனதை யுடைத்தாயிருக்கிற சிலர், தமக்குத்தாமே பிரபுவென்று சொல்லுகிறார்கள், சிலர் நவக்கிரகங்களையே தெய்வமென்று சொல்லுகிறார்கள். யாகங்களை யல்லாமல் மற்றொரு நாதனில்லை யென்று சிலர் சொல்லுகிறார்கள். இந்த வுலகங்கள் இப்படிப் பிறந்தும், நடத்தைக்கு ஒருமையாயிருந்தும், பின்பு இறந்துபோகிறதெல்லாம் இதின் சுவபாவமே யல்லாமல் மற்றொருவர் தருமமல்ல வென்று சிலர் சொல்லுகிறார்கள். நாஸ்திகர் பிரயாசமில்லாமல் ஒருவருக்கும் பயமில்லை, பிரயாசமும் தன் கருமமாகையால் இந்த வுடலமே மூல

தெய்வமென்று சொல்லுகிறார்கள். நிரீச்வரசாங்கியர் தாம் செய்யும் யோகாப்பியாசமே பிரதானமென்றும், அதில் தம் ஏழ்மைப் புத்தியால் தமக்குத் தாமே மித்துருவுஞ் சத்துரு வுமாமென்று சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட மகிமையை யுடைத்தானவனென்றும், இவன் ஸ்வரூப மிதுவென்றும், மனதினால் அளவிடக்கூடாமலும் வாக்கினால் சொல்லி முடி யாமலு மிருக்கிறவன் பரம புருஷனே அல்லாமல் மற் றொருவனல்ல வென்று சிலர் நிச்சயித்தார்கள். ஓ ராஜ ரிஷியே! இவர்களில் எவர்கள் எங்கள் துக்கத்துக்குக் காரண மாகி யிருப்பார்களோ? அவர்களை உசிதமாகிய உம்முடைய மனதில் நிச்சயித்துக்கொள்ளுமென்று தரும தேவதை சொல் லிய வார்த்தையைக் கேள்விப்பட்ட பரீக்ஷித்துச் சக்கிரவர்த்தி யானவன் மனதை நிறுத்திக்கொண்டு தியானித்துத்தெளிந்து மனதிலிருந்த சோகத்தை விட்டு ஒரு வார்த்தை சொல்லு கிறான்.

ஓ தரும தேவதையே! அதர்மத்தைச் செய்தவர் அடை யத்தக்க நரகங்களை தங்கள் வாக்கினால் சொன்னவர்களு மடைவர். ஆகையால் அதனை நீ அறிந்திருக்கையினா லன்றோ நிச்சயமாகச் சொல்லாமல் மதபேதங்களைக் குறித் தனை, இந்தக் கருமத்தை எனக்குச் சொல்லவேண்டியும் பரி யாயத்தினால் சொன்னாய். ஆகையால், தரும தேவதையாகிய நீயே ருஷப ரூபத்தைத் தரித்துக்கொண்டு தருமத்தைச் சொல்லுகிறாய். இல்லாவிட்டால் பகவானுடைய சங்கல்பத் தால் நடக்கிற பிராணிகளுடைய கொல்லப்படுகிற தன்மையும் கொல்லுகிற தன்மையுமாகிற கதியை ஒருவருமறியமாட்டார். ஆகையால் மனதுக்குத் தெரியாத கருமத்தை வாக்கினால் சொல்லுகிறது அரிது. கிருதயுகத்தில் தவசும், சுசித்துவ மும், தயவும், சத்தியமும், இந்நான்கும் உனக்கு நாலு பாதங் களாக இருந்தன. உனக்கு விரோதியாகி அதருமத்தி னுடைய அம்சங்களான கர்வமும், ஈனசங்கமும், மதமும், அசத்தியமும் உன்னுடைய பாதங்களுக்குச் சத்துருவாகை யால், அசத்தியம், நீங்கலாக மற்ற மூன்றுகளால் யுகக் கிர மத்தினால் உன்னுடைய மூன்று பாதங்களும், இந்த கலியுகத் தில் கழிந்தன. இப்போது உன்னுடைய நாலத்தொரு அம்ச மாகிய சத்தியமொன்றே ஒழிந்திருக்கிறது. இந்தப் பாதத் தால்தான் நீ யுன்னைத் தரிசிக்கவேண்டும். புருஷரும் உன்னை அடையவேண்டும். அதருமமாகிய இந்தக்கலி புருஷன் அசத்தியத்தால் மிகவும் வளர்ந்து அந்தப்பாதத்தையும் வாங்கி வைக்கவேண்டுமென்று நினைத்திருக்கிறான். இந்தப்

பசு வேஷத்தைத் தரித்தவள் பூமிதேவி. இவளிதுவரைக் கும் சிலாக்கியமாகிய தவசு முதலான உன்னுடைய பாதங் களால் விநோதமாகிய சம்பத்தை அடைந்து, ஸ்ரீ ஹரி யுடைய பாத முத்திரைகளாகிற அலங்காரத்தைத் தரித் துச் சகல பாபங்களையும் ஸ்ரீ ஹரியால் தவிர்ந்து சுகித் திருந்தாள். இப்போது இந்தச் சம்பத்தையுமிழந்து, ஸ்ரீ ஹரியையும் கைவிட்டு, அதரும அம்சங்களாகிய கர்வசங்க மதங்களால் மிகுந்த பாரத்தை யெடுக்கமாட்டாமல் கண்களிலிருந்து தண்ணீர் சொரிய விட்டுக்கொண்டு, நாயக னைப் பிரிந்த பதிவிரதையைப்போல் பிராமண பக்தி யில்லா மல் ராஜ வேஷத்தைத் தரித்த சூத்திரர்கள் தன்னை அனுப விப்பார்க ளல்லவோவென்று இப்படித் தரும தேவதையை யும், பூமிதேவியையும், நல்ல வார்த்தைகளால் சமாதானஞ் செய்த பரிக்ஷித்து மகாராஜா. அதரும மூலமாகிய கலி புருஷனைச் சிக்ஷை செய்ய வேண்டித் தீக்ஷணமாகிய வாளை உருவினன். அப்போது தன்னைக் கொல்ல வேண்டுமென்று நினைத்துக் கட்கத்தைக் கையில் பிடித்திருக்கிற பரிக்ஷித்தி னுடைய மனதை யறிந்த கலிபுருஷன் பயத்தினால் நடுங்கிக் கொண்டு, தான் தரித்திருந்த ராஜவேஷத்தை விட்டு அவன் பாத மூலத்தில் தன் சிரசினால் வணங்கினான். அப்பொழுது அதிவீரனாகியும், சரணாகத ரக்ஷண விரதத்தைத் தரித்தவர் களில் பிரசித்தனாகியும், ஏழைகளிடத்தில் இரக்க முள்ளவனு மாகியு மிருக்கிற அந்தத் தேவராதன், தயாசாலியாகையால் அவனைக் கொல்லாமல் கொஞ்சம் நகைத்தவன்போல், ஒரு வார்த்தை சொல்லுகிறான்.

வாராய் கலிபுருஷனே! கேசவனுடைய கீர்த்தியைப் பரிபாலனஞ் செய்கிற பேரைக் கைகூப்பி அஞ்சலிபந்தம் செய்த வுனக்கு ஒரு விடத்திலும் பயமில்லை. ஆனாலும் நீ அதருமபந்துவாகையால் என் தேசங்களில் வாசஞ் செய் யாமல் நமக்கு உசிதமில்லாத மற்ற தேசங்களிற் போய்விடு. இராஜக்கிருஹங்களில் நீ வாசஞ் செய்கிற வயணந் தெரிந்து கொண்டு, லோபமும், பொய்யும், திருட்டும், இளப்பமாகிய வர்ணாசிரம தருமத் தியாகமும், வஞ்சனையும் கலகமும், டம்ப முங் கலந்த அதருமக் கூட்டம் அடுத்துவந்தன. அடா அதரும பந்துவே! பிரத்தியக்ஷமாகிற தருமத்துடனே வாசஞ் செய்யவேண்டிய இந்தப் பிரமாவர்த்த க்ஷேத்திரத்தில் யக்கிய சரீரகனான ஸ்ரீ ஹரி ஸ்தாவரங்களிலும், சங்கமங் களிலும் வாயுவானவன்போல், உட்புகுந்து வெளியிலும் நிறைந்து ஆத்மாவாகி இப்படி யக்கியம் செய்கிற ஜனங்களு

டைய இச்சா விஷயமான வஸ்துக்களை அமோகங்களாகக் கொடுக்கிறனென்று கலி புருஷனைப் பார்த்துப் பரிக்ஷித்து மகாராஜா சொன்ன வார்த்தையைக்கேட்ட அந்தக் கலியான வன் நடுக்கத்துடனே அந்த இராஜாவைக் காலதண்டத் தைத் தரித்திருக்கிற யமனைப்போல் நிச்சயித்துக்கொண்டு, ஓ சார்வ பூமானே! உம்முடைய ஆக்கினையால் எங்கேயாகி லும் ஒரு விடத்தில் போவேனாகில் அவ்விடங்களெல்லாம் பாணமேறிட்ட வில்லையுடைத்தான உம்மைக் காணுகிறேன். ஓ தருமத்தைச் செய்கிற பேர்களுக்குள் சிரேஷ்டரே! எந்த விடத்தில் சஞ்சல மில்லாமல் உம்முடைய ஆக்கினையைச் சிரசினால் தரித்துக்கொண்டு நான் வாசஞ்செய்வேனோ? அந்த ஸ்தலத்தை நீர் ஆக்கியாபிக்க வேண்டுமென்று கலி புருஷன் சொன்ன வார்த்தையைக் கேட்ட, பரிக்ஷித்து அந்தக் கலிக்கு வாசஞ் செய்கிறதற்கு இடங்களைக் கற்பித் தான். எந்த விடத்தில் சூதும், சுராபானமும், ஸ்திரீ ஜனங் களும், பிராணி வதைகளுமாகிய இந்த நாலும் நிறைந்திருக் கின்றனவோ? அதுவே யுனக்கிடம், என்று சொல்லியும் அதில் திர்ப்தி யில்லாமல் மறுபடியுங் கலிகேட்டுக் கொள்ள, சுதந்தரனான தேவராதன் அவனுக்கு மற்றோர் ஸ்தானமாக சுவர்ணத்தைக் கொடுத்தான். அதினால் பொய்யும், மதமும், காமமும், ரசோகுணமும், ஐந்தாவதான வைரமும் அடையப் பட்டபடியினால், அதரும ஏதுவான கலிபுருஷன் அந்த ஸ்தானங்களை யடைந்து உத்தரை குமாரன் கொடுத்த இந்த ஸ்தானங்களில் அவனாக்கினையைச் சிரசினால் பாலனஞ் செய்துகொண்டு வாசஞ் செய்தான். ஆதலால் நல்ல கதி வேண்டுமென்று நினைத்தவன் இந்த ஸ்தானங்களை ஒரு காலத்திலேயும் இச்சிக்க லாகாதென்று, சூதர் நைமிசாரண் ணிய வாசிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிறார். ஓ பிராமணர்களே! சகல தருமங்களையும் நடப்பிக்கிற அந்த இராஜேந்திரன் அந்த ருஷபத்தினுடைய நஷ்டங்களா யிருக்கிற தபசும், சத்தியமும், தயவுமாகிற மூன்று பாதங்களை யுந் திரும்பவுங் கூட்டினான். அந்தப் பூமிதேவியையும் சமா தானஞ் செய்து விருத்தி செய்துவைத்தான். அந்தப் பரி க்ஷித்து மகாராஜன் இப்போது இராஜ யோக்கியமாகியும், தனக்குப் பிதாமகனாகிய தருமராஜன் ஆரண்ணியப் பிரவே சம் செய்யவேண்டுமென்று நினைத்த காலத்தில் கொடுக்கப் பட்டு மிருக்கிற சிம்மாசனத்தை ஆரோகணஞ் செய்து வாசஞ் செய்கிறான். இராஜரிஷியாகியும், மகானுபாவனாகியும், சக்கிர வர்த்தியாகியும், அபிமேத கீர்த்தி சம்பன்னனாகியு மிருக்கிற அந்த கவுரவேந்திரன் காந்தியுடனேயும், சம்பத்துடனேயும்

இப்போது வாசஞ் செய்கிருன். ஓ பிராமணசிரேஷ்டர் களே! யாதொருவன் பரிபாலனஞ்செய்த பூமியில் நீங்கள் சத்திரயாகஞ் செய்ய நிர்மித்திருக்கிறீர்களோ? அந்த அபி மன்யு குமாரனை இராஜாவானவன் இப்படிப்பட்ட மகிமை யுடைத்தானவனென்று, சூதர் பின்னேயுஞ் சொல்லுகிருர்.

---

## பதினெட்டாவது அத்தியாயம்

*பரிக்ஷித்திற்கு வந்த பிரம சாபம், அந்தப் பிரம சாபமே இராஜாவுக்கு வைராக்கியத்தைப் பண்ணுகின்றும் அனுகிரக மாச்சுதென்றும், சொல்லப்படுகின்றது.*

வாரீர் பிராமண சிரேஷ்டர்களே! யாவனெருவன் துரோண குமாரனுடைய அஸ்திரத்தினுல் தகிக்கப்பட் டிருந்தாலும், ஷட்குண பரிபூரணனுகியும், அற்புத சரித்திர னுகியு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தினுல் மாதாவினுடைய கர்ப்பத்தில் மரிக்காமல் பகவானிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மனதை யுடைத்தா யிருந்தபடியால், பிரா மண கோபத்தினுல் வந்திருக்கிற தட்சகனிடத்திலிருந் துண் டான பிராமண சாப விஷயத்திலிருந்து மோகமடைய வில்லையோ? சுகப்பிரம ரிஷியினுடைய சிஷியனுகிய அந்த அபிமன்யு குமாரன் சமஸ்த தத்துவங்களையு மறிந்து, சர்வ சங்கமப் பரித்தியாகஞ் செய்து, நினைத் தற் கரியனுன ஸ்ரீ பரமாத்மாவி னிடத்தில் நிஷ்டை யைப் பொருந்திக், கங்கா நதியில் தன் சரீரத்தை நிவர்த் தித்தான். ஆகையால் உத்தம சுலோகனுகிய ஸ்ரீ வாசு தேவனுடைய வார்த்தைகளைச் சொல்லி, அவனுடைய கதைகளாகிற அமிர்தத்தைப் பானஞ்செய்து, அவன் பாத பத்மங்களைத் தியானித் திருக்கிற ஜனங்களுக்கு மரண காலத் திலும் மோசம் வரமாட்டாது. அபிமன்யு குமாரனுகிய இந்த மகாராஜன் ஏகச் சக்கிராதி பதியாகி இந்தப் பூமிக்கு எவ்வளவு காலம் நாயகனுக விருக்கிருனே அவ்வளவு காலமும் இந்தக் கலியானவன் பூமண்டல மெல்லாம் பிர வேசித் திருந்தாலும் விருத்தி யடையவில்லை. எந்தச் சம யத்தில் இந்தப் பூமியை அந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சேதித் தாரோ, அந்தச் சமயத்தில் தானே யனுசரித்து வந்தான். அதருமஏதுவான இந்தக் கலி புருஷனை இந்த மகாராஜன் இப்பூமியில் வராமல் ஏன் துவேஷிக்க வில்லை யென்ருல், சாரத்தைக் கிரகிக்கிற வண்டைப் போல் சாரமறிந்தவனுகை யால், அவன் வாசத்தை உபேக்ஷித்தான். ஓ சவுனகாதிகளே!

அதி புண்ணியமான பரிக்ஷித்தினுடைய உபாக்கியானம் ஸ்ரீ வாசுதேவனுடைய கதைகளுடனே நீங்கள் பிரஸ்னஞ் செய்தபடி, என்னுற் சொல்லப் பட்டது. அனேக சரித்திர சம்பன்னனுகிய ஸ்ரீ பகவானுடைய குணங்களாலேயும், லீலைகளாலேயும், பரி பூரணங்களான கதைகள் எவ்வளவுண்டோ அவ்வளவையும், சமுசார நிவர்த்தியை இச்சித்தவர்கள் கேட்கவேண்டு மென்று சொல்லுகிற சூதரைப் பார்த்து, நைமி சாரண்ணியவாசிகளான ரிஷிகள் சொல்லுகிருர்கள். ஓ சூதரே! அநேகமாயிர வருடம் ஜீவித்திருக்க வேண்டு மென்று நீர் ஸ்ரீ கிருஷ்ணனுடைய நிர்மலமான கீர்த்தியைச் சொல்லுகிறீர். அது மாணயோக்கியர்களான மனுஷருக்கு அமிர்தமல்லவோ ? அதிகமாகிய உபத்திரவங்களால் விசுவாசஞ் செய்கிறதற்கு அயோக்கியமாகிய இந்தச் சத்திரயாகத்தில் புகைகளால் மலினமாகிய சரீரத்தையுடைத்தான எங்களுக்கு ஸ்ரீ கோவிந்தனுடைய பாத பத்மங்களில் பிறந்தும் மதுரமாயு மிருக்கிற மதுவைப் பானஞ் செய்விக்கிறீர். ஓ சூதரே ! பாகவதர்களுடைய சகவாசலேசத்துக்குச் சுவர்க்கமும், கைவல்லியமும், சமமென்று நாங்கள் நினைக்கவில்லை, ஆகையால் மரண சீலராகிய ஜனங்களுடைய ஆசைக்கு விஷயமாகியபசுபுத்திரர்களைச் சமமல்லவென்று நினைக்கிறதில் சம்சயமில்லை. சாரத்தை யறிந்தவன் எவன்தான் மகானுபாவர்களுடைய இருதய நிவாசியான ஸ்ரீ ஹரியினுடைய கதையில் திர்ப்தியடையான்.

யோகீஸ்வரர்களான யாதொரு ஜீவப்பிரமாதிகளும் ஹேயகுணாரகிதனுகிய இவனுடைய கல்யாணகுணங்களுடைய முடிவை யறிந்தவர்களில்லை. ஆகையால் கியான சத்தியாதி சம்பன்னராகிய தேவரீர் மஹானுபாவர்களுடைய ஏகாந்த வசனத்துக்குயோக்கியனுகியஸ்ரீஹரியின் விசித்திரமான சரித்திரத்தைக் கேழ்க்க வேண்டு மென்று இச்சித்திருக்கிற எங்களுக்குக் கேள்வி செய்விக்க வேண்டும். ஓ வித்தியா நிதியே! குறை வில்லாத புத்தி சாலியான அந்தப் பரிக்ஷித்து என்கிறவன் பரம பாகவதன், வியாச குமாரராகிய சுகப்பிரம ரிஷியினுல் உபதேசிக்கப்பட்ட எந்தக் கியானத்தினுல் கருடத்துவஜன் பாத பத்மத்தை யடைந்தானே ? மிகவும் அற்புதமாகிய யோகநிஷ்டையை வர்ணித்தும், மிகுந்த புண்ணியமாகியும், பாகவதர்களுடைய மனசுகளுக்கு அபிராமமாகியும், அனந்தனுடைய சரித்திர வர்ணனமாகியு மிருக்கிற அந்தப் பரிக்ஷித்து வுபாக்கியானத்தை எங்களுக்குச் சொல்லுமையா ? வென்று பிரஸ்னஞ்செய்த சவுனகாதிகளைப் பார்த்

துப், பரம சந்தோஷத்துடனே சொல்லுகிறார். ஓ சவுன காதிகளே! நாங்கள் கியானவயதில், கியான விருத்தரான ஸ்ரீ சுகருடைய சேவையாலும், அனுவிர்த்தியாலும் சிலாக்கியமான ஜென்மத்தை யுடைத்தானவர்களானோம் அதி சிலாக்கியரான தேவரீர்களுடைய ஆக்கியாபனமானது சீக்கிரமாகத் துஷ் குலத்திற் பிறந்த மனோ ரோகத்தை யுதறிப் போடுகிறது. ஏகாந்த பாராயணனாகிய பரமாத்மாவினுடைய நாமங்களைப் பாராயணஞ் செய்கிறவர்களுக்கு, அந்த நாமம் துஷ்குல ஜென்மத்தைப் பரிகரிக்கு மென்கிறதில் சொல்ல வேண்டியதென்ன? அந்தப் பகவான் அளவிடப் படாத மகத்தான குணத்தையுடைத்தாகி யிருக்கிறபடியினால், ஸ்ரீ லக்ஷ்மி தேவியானவள் தன்னைப் பிரார்த்திக்கிற மற்ற தேவதைகளைச் சோதித்துச், சமானமாகியும், அதிசயமாகியு மில்லாமலும் தன்னை அடைய வேண்டுமென்று இச்சியாமலு மிருக்கிற யாதொரு அனந்தனுடைய சரண கமல ரேணுவை யடைந்தாளோ? பிரம தேவனால் சமர்ப்பிக்கப் பட்ட பூஜா ஜலமானது யாதொருவனுடைய பாதங்களில் நின்றும் ஜனித்து லோகங்களைப் பாலனஞ் செய்ததோ? அந்த முகுந்தனைக் காட்டிலும் பகவானென்கிற பதத்துக்கு முக்கியார்த்தமாகிய சர்வேஸ்வரன் லோகத்தில் எவன்தா னிருக்கிறான்? யாதொரு முகுந்தனிடத்தில் அனுராகயுக்தரான கியானிகள் தேகாதிகளில் உறுதியாயிருக்கிற சங்கத்தைவிட்டு அஹிம்சையும், உபசாந்தியுமாகிற சிலாக்கிய தருமங்களுக்கு, ஆதாரமாகிய பரம ஹம்சாசரமத்தை யடைகிறார்களோ? அந்த மஹானுபாவருடைய மகிமையைச் சொல்ல வேண்டு மென்று பிரஸ்னஞ் செய்தீர்க ளல்லவோ?

ஓ வேதமூர்த்திகளே! எனக்கு அறிவு எவ்வளவுண்டோ அவ்வளவும் சொல்லுகிறேன். பக்ஷிகளானவை எங்கும் பரந்த ஆகாசத்தை முழுவதும் சஞ்சரிக்க மாட்டாமல் தம் சக்தியுள்ள மட்டும் பறக்கிறது போல், கியானிகளும் ஸ்ரீ விஷ்ணு லீலைகளை முற்றும் அறிய மாட்டாமையினால் உள்ளமட்டும் சொல்ல மாட்டார்கள். அந்தப் பரிக்ஷித்து ஒரு காலத்தில் தனுசை யெடுத்துக்கொண்டு வனத்தில் வேட்டை செய்ய வேண்டுமென்று மிருகங்களை யடித்துச் சஞ்சரித்து, இளைப்பை யடைந்து, மிகவும் பசி தாகங்களுடனே ஜலாதாரமான ஏரிமுதலானவைகளைக் காணாமல் ஒரு ரிஷியாச்ரமத்தை அடைந்தான். அந்த ஆச்ரமத்தில் ஒரு ஆசனத்தி லிருந்துகொண்டு, சாந்தராகிக் கண்களை மூடிக் கொண்டு இந்திரியங்களைப் புறம்போகாமல் நிறுத்திக்கொண்டு

சாக்கிர - சொப்பன-சுழுத்தி யென்கிற மூன்றவஸ்தைகளையும் தவிர்ந்து, துரியஸாமரத்தையடைந்து, பிரமத்தைச் சாக்ஷாத் கரித்து விகார ரகிதனாகியும் அவிழ்ந்து தொங்குகிற சடைகளாலேயும் மான்றோலினாலேயும் மறைக்கப்பட்ட சரீரத்தையுடைத்தாகியும் இருக்கிற ஒரு ரிஷியைக்கண்டு, உலர்ந்துபோகிற கபோலங்களை யுடைத்தானவனாகிப் பிரம நிஷ்டரான முனியை உதகம் வேண்டுமென்று யாசித்தான். அப்போது அந்த ரிஷியினால் உபசாரங்கள் லபியாமற்போனபடியினாலே தன்னை அந்த முனீஸ்வரன் அசட்டை செய்தானென்று நினைத்துக் கொண்டு கோபத்தை யடைந்து, அந்தப் பிரம ரிஷியினுடைய தோளில் பிராண னில்லாத சர்ப்பத்தை வில் நுனியா லெடுத்துப் போட்டுப், பட்டணத்தைச் சேர்ந்தான்,

அவனப்படிச் செய்யவேண்டிய கருமமேனென்றால் இந்த ரிஷியானவர் சகலமாகிய இந்திரியங்களையும் செயித்துக் கண்களை மூடியிருக்கிறாரா? அல்லது பொய்யாகிய சமாதியை யடைந்து க்ஷத்திரியர் பாசங்களால் ஆகவேண்டிய தென்ன வென்று நினைத்திருக்கிறாரா? வென்று அறிய வேண்டி இப்படிச் செய்தான். பின்பு அதிதேஜஸையுடைத்தான அந்த ரிஷிகுமாரனான சிரிங்கியானவன், சிறுபிள்ளைகளுடனே விளையாடிக்கொண்டிருக்கையில், தன் பிதாவிடத்தில் ராஜா செய்த பாவத்தைக் கேட்டு, மரியாதையை அக்கிரமித்து நடக்கிற ஜனங்களுக்குச் சிக்ஷகனாகியும் குணபரிபூரணனாகியு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீ வைகுண்ட நகரத்திற்கு எழுந்தருளின பின்பு, மரியாதையைக் கெடுத்த இந்தத் துஷ்டனை இப்போது நான் நிக்கிரகஞ் செய்கின்றேன். என் தபோ பலத்தைப் பாருங்களென்று சொல்லிப் போட்டு ரோஷத்தினால் சிவந்த கண்களை யுடைத்தான அந்த ரிஷிகுமாரன், சிநேகிதர்கள் பார்த்திருக்கையில் கவுசிகை நதியுடைய வுதகத்தை ஸ்பரிசித்து வாக்காகிற வச்சிரத்தைக் கற்பித்தான். தன்குலக் கொள்ளியாகியும் என் பிதுர்த் துரோகியாகியுமிருக்கிற இவனை இன்றுமுதல் ஏழா நாள் என்னால் ஆக்கியாபிக்கப்பட்ட தக்ஷகன் தகிக்கப்போகிறான், என்றிப்படிச் சாபங் கொடுத்த பின்பு, ஆஸ்ரமத்தில் வந்து தோளில் விழுந்திருக்கிற சர்ப்பத்துடனே கூடிய தன் பிதாவைக் கண்டு துக்கத்தினால் குரல் விட்டழுதானல்லவோ? ஆங்கிரசனுடைய கோத்திரத்திற் பிறந்த சமீக ரிஷீஸ்வரர் தம்முடைய குமாரன் அழுகிற குரலைக்கேட்டுக் கண்களைத் திறந்து தம்முடைய தோளில் விழுந்திருக்கிற சர்ப்ப சவத்தைத் தள்ளிப்போட்டு வாராய் புத்திரனே! எந்தக் காரணத்தினால் அழுகிறு

யென்று கேட்டார். அதற்கு அந்த ரிஷிகுமாரன் நடந்த சரிதையெல்லாம் தன்னுடைய பிதாவான சமீகருக்குச் சொன்ஞன். அப்போது அந்தப் பிரம நிஷ்டரானவர் சபிக்கத் தகாத நரேந்திரனுக்குச் சாபங்கொடுத்தேனென்று சொன்ன புத்திரனைப்பார்த்து, வாராய் மூடனே! கொஞ்சமான துரோக நிமித்தியமாக மகத்தாகிய நிக்கிரகத்தைச் செய்தாய்; பரம புருஷனென்று பெயரை யுடைத்தான நரதேவனை மற்ற நரருக்குச் சமானமாக எண்ணக்கூடாது. வாராய் புத்திரனே! நரதேவனென்று பெயரை யுடைத்தாகிய ஸ்ரீ சக்கிரவர்த்தியானவன், ஜனங்களுடைய கண்ணினுல் காணப்படாம லிருந்தாஞகில் இந்த லோகமானது ரக்ஷிக்கப்படாத, செம்மறியாட்டு மந்தையைப் போல் சோரர்களால் உபத்திரவிக்கப் பட்டு க்ஷணமாத்திரத்தில் நசித்துப் போகும்; இந்தப் பரிக்ஷித்து மகாராஜாவானவன் தருமத்தைப் பாலனஞ் செய்கிறதில் திருஷ்டி யடைந்தவன். சகலமான பூமிக்குப் பிரபுவாகியும், மிகுந்த கீர்த்திசாலியாகியும், ராஜாவா யிருக்கையிலும், ரிஷிநடத்தை யுடைத்தானவனுகியும்; அசுவமேதங்களைச் செய்து அதினுல் பிரகாசித்தும், பிரத்தியக்ஷமாகப் பரமாத்மாவைச் சாக்ஷாத்கரித்து மிருக்கிற மகாபாகவதன். அவன் பசி தாகங்களால் இளைப்பை அடைந்து தீனஞகி நம்முடைய ஆஸ்ரமத்தில் வந்தவன். அவனுக்கு நாம் சாபங்கொடுப்பது உசிதமல்ல. பாப ரகிதனை தம்முடைய தாசரிடங்களில் புத்தி பரிபக்குவ மில்லாத பாலனுல் செய்யப்பட்ட பாவத்துக்குப் பிராயச்சித்தம் துர்லபமாகையால், சர்வாந்திரியாமியான ஸ்ரீ பகவான் க்ஷமித்தருள வேண்டுமென்று தன் புத்திரன் செய்த பாவத்தினுல் அந்த ரிஷி அனுதாபத்தை யடைந்து, தமக்கு ராஜா அபகாரஞ் செய்திருந்தாலும் அந்த அபகாரத்தை மனதினுல் நினைக்க வில்லை. அது ஏனென்ருல், சத்புருஷர் உலகத்தில் பித்தராலே சீத வுஷ்ண சுக துக்கங்களை அடைவிக்கப்பட்டிருந்தாலும் விசனத்தை அடையவில்லை; சந்தோஷத்தையு மடையவில்லை; இது வெகு விடத்தில் கண்டதுதான். யாதொரு காரணத்தினுல் சீவாத்மாவானவன் சுகதுக்காதி குணங்களுக்கு ஆச்ரயனல்லவே? வென்று சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையுஞ் சொல்லுகிருர்.

———

## பத்தொன்பதாவது அத்தியாயம்

யோகிஜனங்களினால் சூழப்பட்ட பரிக்ஷித்துக் கங்காதீர்த்தத்தில் பிராயோப வேசஞ்செய்திருந்த சமயத்தில் மஹாபாகவதரான சுகருடைய நல்வரவு சொல்லப்படுகின்றது.

ஓ சவுனகாதிகளே! அப்பால் அந்த ராஜாவானவன் ஒருவருமறியாமல் ரகசியமாகத் தான்செய்த அந்த ஈனமாகிய கருமத்தை நினைத்துக் கொண்டு விசனாக்கிராந்தனாகி யிருக்கிற சமயத்தில், முனிகுமாரனால் சொல்லப்பட்டும் தக்ஷகனிடத்தில் நின்றும் உண்டாகிற மரணத்தை அந்த ரிஷியினுடைய சிஷ்யமுகத்தால் கேள்விப்பட்டு, ராச்சியஞ் செய்யுங் காலத்திலே தானே இந்த லோகத்தையும் சொர்க்காதி லோகங்களையும் நிகிருஷ்டமாக நிச்சயித்தவனாகையால், சமுசாரத்தில் ஆசை பிறந்தவனுடைய வைராக்கியத்துக்குக் காரணமாகிய தக்ஷகாக்கினியானது சீக்கிரத்துக்கு வருகிறதே நன்மையென்று நினைத்து, ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடி சேவையைச் சகல புருஷார்த்தங்களிலும் சிரேஷ்டமென்று நிச்சயித்து, ஸ்ரீ துளசியினால் விளங்குகிற ஸ்ரீ கிருஷ்ண சரணங்களுடைய தூளிகளுடனே பிரகாசிக்கின்ற ஜலங்களுடைய பிரவாகத்தை யுடைத்தான தேவநதியில் பிராயோபவேசஞ் செய்தான். யாதொரு கங்கையானது சகல லோகங்களையும், உள்ளும் புறம்பும் பாவனஞ் செய்கிறதோ, அந்தக் கதையை எவன்தான் பஜனஞ் செய்யான்? இப்படி அந்தப் பாண்டு குலோத்பவன், ஸ்ரீ விஷ்ணு பாதத்தில் பிறந்த கங்கையில் பிராயோப வேசத்தைச் சங்கல்பித்து, சகல சங்கங்களையும் விட்டு முனிவேஷத்தைத் தரித்து, மனதை மற்றவிடங்களிற் செலுத்தாமல் நிறுத்திக்கொண்டு, ஸ்ரீ முகுந்தனுடைய திருவடிகளில் தியானஞ் செய்தான். அவ்விடத்தில் சகல லோகங்களையும் பாவனஞ் செய்கிறவர்களாகவும், மகத்தாகிய மகிமையுடைத்தாகியு மிருக்கிற ரிஷிகள் தங்கள் சிஷ்யர்களுடனே கூடத் தீர்த்தயாத்திரை யென்கிற வியாஜத்தினால் வந்தார்கள். அவர்களாரென்றால்: அத்திரி, வசிஷ்டர், சவுனகர், சாரத்துவான், அரிஷ்டநேமி, பிருகு, ஆங்கீரசர், பராசரர், விஸ்வாமித்திரர், பரசுராமர், உசத்தியர், இந்திரப்பிரதயர், இத்துமவாகர், மேதை, அதிதி, தேவலர், ஆரக்ஷணர், பரத்துவாசர், கவுதமர் பிரபிலாதர், மைத்திரேயர், அவுரவர், கமஷ்டர், அகஸ்தியர், வியாசர், நாரதபகவான், மற்றுமுள்ள உயர்ந்த தேவரிஷிகளும், பிரமரிஷிகளும், ராஜரிஷிகளும், அருணாதிகளான



படம் 3. பக்கம் 96.

பிரயோபவேசம் செய்திருந்த பரீக்ஷித்திற்கு,
சுகருடைய நல்வரவு.

காண்டரிஷிகளும், நானாவிதமான ரிஷிவர்க்கங்களிற் பிறந்து, ரிஷிசரியையுடனே விளங்குகிற இந்த ரிஷிகளுக்கு அர்க்கிய பாத்திய ஆசமனியங்களை யுக்தமாகக்கொடுத்து, அந்த ராஜா இவர்களைச் சிரசினால் வணங்கினான். அப்பால் அந்த ரிஷிகள் சுகமாக ஆசனங்களிலிருந்த பின்பு, திரும்பவும் அவர்களுக்கு வந்தனஞ் செய்துகொண்டு, மற்றொருவிடத்தில் மனதைச் சலிக்கவொட்டாமல் நிறுத்திக்கொண்டு தனக்குச் செய்யவேண்டிய காரியத்தை விக்கியாபனஞ் செய்தான். ஓ பிராமணோத்தமர்களே! மஹானுபாவர்களால் அனுக்கிரகிக்கப்படும் நாங்கள் ராஜ வர்க்கங்களுக்குள்ளே மிகவும் தன்னியாளாகிறோம். ஈனமாகிய கருமத்தை யுடைத்தான ராஜகுலமானது பிராமணர்களுடைய பாத சவுச ஜலத்துக்கு விலக்கமல்லவோ? அப்படிப் பாபியாகியும், சர்வகாலங்களிலும் கிருகங்களில் ஆசக்தியுண்டான சித்தத்தை யுடைத்தாகியு மிருக்கிற என்னுடைய பாப பரிகார நிமித்தமாகி ஸ்ரீ ஹரியானவர் என் வயிராக்கியத்துக்கு மூலமாகிப் பிராமணசாப ஸ்வரூபமாக ஆவிர்ப்பவித்தார். இல்லாவிட்டால் இந்தச் சமுசாரத்தில் ஒழிவில்லாத நான் சீக்கிரமாகப் பயத்தை யடையேனல்லவோ? என்னை நீங்கள் சரணாகதனாகை நிச்சயஞ் செய்ய வேண்டும். இந்தக் கங்காதேவியும் சுவாமியிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடைத்தானவளாக நிச்சயிக்கட்டும், பிராமணனால் ஆக்கியாபிக்கப்பட்ட குடிலனை தக்ஷகன் கடித்தாலும் கடியாமலிருந்தாலும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய கதைகளைக் கானஞ் செய்யுங்கள். இனிமேல் நான் எந்தெந்த ஜன்மங்களை யெடுப்பேனோ அந்தந்த ஜன்மங்களிலேயும் பெரியவர்களிடங்களிலே மித்திரத்துவமே யிருக்கவேண்டுமென்று, தன்னுடைய குமாரனை ஜனமேஜயனிடத்தில் ராச்சிய பாரத்தை வைத்துக், கங்கையினுடைய தென்கரையில், கிழக்கு நாணலான குசப்புல்லுகளில் வடக்கு முகமாயிருந்த பின்பு, ஆகாசத்தில் தேவர்கள் சிலாகித்துச், சந்தோஷத்துடனே அவனிருந்த பக்கத்தில் புஷ்பங்களை வருஷித்துத் துந்துபி வாத்தியங்கள் முழக்கினார்கள். அவனைக்கிட்டி வந்த மஹாரிஷிகளெல்லாம் சாதுசாதுவென்று கொண்டாடிச் சிலாக்கியஞ் செய்துகொண்டு பிரஜைகளிடத்தில் அனுக்கிரகஞ் செய்கிற சீலத்தை யுடைத்தானவர்களாகி, உத்தம சுலோகனான ஸ்ரீ கிருஷ்ணனுடைய கல்யாண குணங்களால் மனோக்கியமாக விருக்கும்படி ஒரு வார்த்தை சொன்னார்கள். ஓ ராஜரிஷி சிரேஷ்டனே! ஸ்ரீ கிருஷ்ணனை அனுசரித்து நடக்கிற உங்களிடத்தில் யாதொரு காரணத்தினால் உங்களுடைய பெரியோர்களான

தருமபுத்திராதியர் இராஜாக்களுடைய கிரீடங்களால் அலங்கரிக்கப்பட்ட சிம்மாதனத்தை அந்தக்ஷணத்தில் தானே விட்டாற்போல் நீரும் சர்வசங்கப் பரித்தியாகஞ்செய்து, இப்போது ரசோகுண தமோகுணங்களில்லாமையினால் சோகமில்லாமலும், ஆனந்தமயமுமாகிய பரலோகத்தை அடைகிற காலம் ஆதலால், நாங்களனைவரும் இவ்விடத்திலிருக்கக் கடவோமென்று பக்ஷபாதமில்லாமலும், தேனைப்போல் மதுரமாகவும், வெகுதாத்பரிய கர்ப்பமாகவும், யதார்த்தமாகவு மிருக்கிற வார்த்தையைக் கூறினர். இதைக் கேள்விப்பட்ட பரீக்ஷித்தானவன் அந்தவார்த்தையால் சந்தோஷமடைந்து, ஸ்ரீ விஷ்ணுவினுடைய சரித்திரங்களைக்கேட்கத் தககவனாகி ஒரு வார்த்தை சொல்லினான். ஓ வேதமூர்த்திகளே! மூன்று உலகங்களுக்கும் மேலான மூர்த்தியைத் தரித்திருக்கிற வேதங்களைப்போல் தேவரீர்களும் எழுந்தருளினீர்கள்; இவ்விடத்திலும் லோகாந்தரங்களிலும் தேவரீர்களுக்கு யோக்கியமான பிரயோசனமில்லை. பரானுக்கிரகமில்லாமல் மற்றொரு பலத்தைக் கோராமலிருக்கிறது உங்களுக்குக் குலதருமமாகையால், வேண்டிய காரியங்களை நான் செய்யத் தக்கவனாகி உங்களிடத்தில் விசுவாசித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஓ கியானாதிக்கர்களே! மரணத்தை அடைகிற ஜனங்களுக்குத் திரிகரணங்களாலே செய்யப்படுவதாகியும், சுத்தமாயிருக்கிற கிருத்தியத்தை நிச்சயித்துச் சொல்லுங்களென்று கேட்ட ராஜாவுக்கு நிச்சயமாகச் சொல்லவேண்டி, யாகமென்றும், யோகமென்றும், தானமென்றும், ஒருவருக்கொருவர் விவாகஞ்செய்து கொண்டிருக்கிற அந்த ரிஷிகளிடத்தில், வியாசகுமாரனை சுகப்பிரமரிஷி சுயேச்சையாய்ப் பூமியில் சஞ்சரித்துக்கொண்டு, மற்றொரு வஸ்துவையும் பாராமலும், வர்ணாச்சிரமங்களுடைய அடையாளங்களில்லாமலும், அவதூத வேஷமாகியும், பாலர்களால் சூழப்பட்டும் எழுந்தருளினார். பதினாறு வயதுள்ள சிறுவனாகியும், கழுத்தினுடைய பக்கங்களும், கபோல ஸ்தலங்களும் பிரகாசிக்கும்படியான காத்திரத்தை உடைத்தாகி, விசாலமாகியும் அழகாயு மிருக்கிற நேத்திரங்களும், உயர்ந்து நீண்ட முகமும், அலங்காரமாகிய புருவங்களும், சங்கப்போல திரண்ட கழுத்தும், பெருத்தும் உயர்ந்துமிருக்கிற மார்பும், நதிப்பிரவாகத்தின் சுழிபோல் விளங்குகிற உந்தியும், மூன்று ரேகைகளால் மனோக்கியமாகிய உதரமும், மிகவும் மிருதுவாகிய கரங்களும், பாதங்களுப், தொடைகளும், புஜங்களும், திக்

குகளாகிற அம்பரத்தைத் தரித்தும், ஒன்றோடொன்று கலந்தும், சிதறியுமிருக்கிற கேசங்களும், முழங்கால் வரைக்கும் தொங்குகிற பாகுகளும், சிலாக்கியமாகிய அமரோத்தமனாகிய உபேந்திரனுக்குச் சமானமாகிய காந்தியும், சியாமள வர்ணமும் அழகான யவ்வனமும் பொருந்தின அவயவ காந்தியாலும் சிலாக்கியமாகிய, மந்தஹாசத்தாலும் எப்பொழுதும் ஸ்திரீகளுடைய மனசுகளை அபகரித்தும் வருகிற சுகப்பிரம ரிஷியைக் கண்ட ரிஷிகளெல்லாரும், தங்களாசனங்களைவிட்டு எழுந்திருந்து எதிர்கொண்டு அவர் மறைக்கப்பட்ட மகிமையை யுடைத்தா யிருந்தாலும், அவருடைய லக்ஷணங்களை அறிந்தவர்களாகையால் மரியாதை செய்தார்கள். அந்தப் பரிக்ஷித்தும் அதிதியாகி வந்திருக்கிற அந்தச் சுகமுனியைக் குறித்துத் தன் சிரசினால் பூஜித்தான். அப்பால் அவருடைய மகிமையை அறியாத ஸ்திரீகளும் பாலர்களும் ஒழிந்தார்கள். அந்தராஜா அவரை மிகவும் பூசித்து ஒரு ஆசனத்தி லெழுந்தருளச் செய்தான். மஹானுபாவரான சுகமுனியானவர் சிலாக்கியர்களான பிரமரிஷி தேவரிஷி ராஜரிஷிகளுடைய சமூகத்தால் சூழப்பட்டிருக்கும்போது, நவக்கிரகங்களாலேயும், அஸ்வனியாதி நக்ஷத்திரங்களாலேயும், சூழப்பட்ட சந்திரபகவான் போல் விளங்கினார். அளவிடப்படாத புத்தியை யுடைத்தாகியும், சாந்தி நிலயமாகியும், எழுந்தருளியிருக்கிற அந்தச் சுகமுனியைப் பரமபாகவதனை அந்த ராஜாவானவன் அடுத்துச் சிரசினால் வணங்கி வந்தனஞ்செய்து அஞ்சலியஸ்தஞ் செய்துகொண்டு, நல்ல வார்த்தையால் வினயத்துடனே பிரஸ்னஞ் செய்தான். ஓ சர்வக்ஞமூர்த்தியே! நாங்கள் க்ஷத்திரியர்களா யிருந்தாலும் இப்போது சத்புருஷர்களுடைய ஆசிரயத்துக்குப் பாத்திரமானோம். யாதொரு காரணத்தினால் அதிதி ரூபமாகிய தேவரீர்களுடைய கிருபையினால், தேவரீர்களுடைய தரிசனமும் ஸ்பரிசமும் ஸ்ரீ பாத தீர்த்தமும் அடியேனுக்குக் கிடைத்தபின்பு யோக்கியாளாகினோம். பாண்டு குமாரர்களிடத்தில் பிரிய முள்ளவனாகியிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணன், தமது அத்தைப் பிள்ளைகளுடைய பிரீதி நிமித்தமாக, அந்தக் கோத்திரத்திற் பிறந்த எனக்கு ரூபமாகத் தரிசனங்கொடுத்த பிரபாவத்தினால், ஒருவராலேயும் அறியக்கூடாத கதியை யுடைத்தான தேவரீருடைய தரிசனம், மனுஷப்பிராணிகளான எங்களுக்குக் கிடைத்தது. ஆகையால் சகல யோகிகளுக்கும் பரமகுருவான தேவரீரை, இந்தலோகத்தில் எப்பொழுதும் மரணத்தை அடையத்தக்கவர்களான ஜனங்களுக்கு இதமான காரியத்தைக் கேட்கி

றேன். ஓ ஸ்வாமியே! பஞ்சபூத சரீரகனுன ஒருவன், எதைக் கேள்வி செய்ய வேண்டும்? எதை ஜபிக்கவேண்டும்? யாதொன்றைச் செய்யவேண்டும்? எதை ஸ்மரிக்கவேண்டும்? அடையவேண்டியதெது? அதை வித்தியாச மின்றிச் சொல் லும். ஓ பிராமணோத்தமரே! சுகுண பூரணராகிய தேவரீர் கிருகஸ்தர்களுடைய கிருகங்களில் ஒரு நிமிஷகாலமாகிலும் ஒரு விடத்தில் வாசஞ்செய்ததைக் கண்டவர்களில்லையென்று சொன்ன பரிக்ஷித்து மஹாராஜாவைப் பார்த்துச் சகல சாஸ்திரங் களையறிந்தும் சிலாக்ய தருமங்களை நிச்சயித்து மிருக்கிற வியாசகுமாரரான சுகபகவான் சிலாக்கியமான வார்த்தையி னல் பிரதியுத்தரஞ் சொல்லுகிருரென்று சூதர் சவுனகாதிக ளுக்குச் சொன்னர்.

---

# த்விதீயஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

பூர்வ ஸ்கந்தத்தில், சாஸ்திர முகவுரையும், சுகருடைய வரவும் சொல்லப் பட்டது. இனிமேல் இரண்டாம் ஸ்கந்தத்தில், முதல் அத்தியாயத்தில் சுகமகா முனியானவர் பரிக்ஷித்திஞல் கேட்கப்பட்ட மனுஷியர்க ளுடைய கிருத்தியத்தைச் சொல்லுகின்ருர்.

### சுகர் வாக்கியம்.



ஓ இராஜாவே! லோகஹிதமாகிய உன்னு டைய விஞவானது மிகவும் சிலாக்கியமாகை யால் அது ஆத்மதத்வ மறிந்தவர்களுக்குச் சம்மதமானது. மனிதர்கள் கேட்கவேண்டிய அர்த்தங்களில் எது சிரேஷ்டமோ அதையே கேட்கிருய். ஆத்ம தத்வமறியாமல் கிருகங்களில் மோகித்துக் கொண் டிருக்கிற கிருகஸ்தர்களான ஜனங்கள் இதைக்கேள்விசெய்ய வேண்டியது. அளவிடக் கூடாத ஆசையுடைத்தாகிய ஜனங்களுக்கு இராத்திரி காலமெல்லாம் நித்திரையால் கழிந்துபோகிறது. யௌவன காலமெல்லாம் காமத்திஞ லும், பகற்காலமெல்லாம் பணத்தாசையிஞலும், சுஜனங் களுக்கு வஸ்துக்களுடைய சம்பாதனத்திஞலும் நாள்கள் கழிந்து போகின்றன. தான் பார்த்திருக்கையில் அநித்திய மாகிய தன் சரீரத்திலும், களத்திர புத்திராதிகளிலும் விருப் புடையவஞகித் தன்னுடைய மரணத்தைத் தானறியாமல், சகல சேதஞ சேதனங்களுக்கும் ஆத்மாவாகியும், நியந்தா வாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியை வேதாந்தங்களாலறிந்து கீர்த்த னஞ் செய்யாமலிருக்கிருன். ஆதலால் இந்தச் சம்சாரபயம் நீங்கவேண்டுமென்று இச்சித்தவர்கள் அவனை யப்படியே சிந்திக்கவேண்டும். தன்னைத்தானே யறிகிறதாகிற ஞான யோகத்திஞலேயும், அஷ்டாங்கயோகமாகிற பக்தியோகத்தி ஞலேயும், வர்ணுச்சிரம தருமங்களைப் பலனை யிச்சியாமற் செய்கிறதாகிற தரும நிஷ்டையாலேயும் பிராணிகளுக்குச் சிலாக்கியமான பலன் என்னவென்ருல், அந்தியத்தில் நாரா யணத்தியானமே சிலாக்கியமாகிய பலஞகும். இதற்கு மேற்

பட்டபலன் ஒன்றுமில்லை. ஓ ராஜாவே! வேதசமானமாகி யும், பகவானுடைய குணநிதியாகியும், அநாதியாகியு மிருக் கிற ஸ்ரீ மகா பாகவத புராணத்தைத் துவாபர யுகாதியில் பிதாவான வியாசரிடத்திலிருந்து நான் அத்தியயனஞ் செய் தேன். நீர் மகா புருஷனை ஸ்ரீ ஹரியை ஆசிரயித்தவ ராகையால், இந்தக் கதையை யுமக்குச் சொல்லுகிறேன். ஸ்ரத்தை யுள்ளவர்களுக்கு ஸ்ரீ முகுந்தனிடத்தில் சலியாத மதியுண்டாகும்.

ஓ ராஜாவே! சம்சாரங்களில் வியசனத்தினல் ஒழிவு பிறந்தும், எந்தக் காலத்திலும் யாதொரு காரணத்தாலும் பயமில்லாத நிலையாகிற மோக்ஷத்தை இச்சித்துக்கொண்டு மிருக்கிற யோகி ஜனங்கள், ஸ்ரீ ஹரிநாமசங்கீர்த்தனத்தை யடிக்கடி செய்கிறதேயல்லாமல் வேறில்லை. சம்சாரத்தை யிச்சித்துத் தன்னுடைய ஆயுளை அறியாம லிருக்கிறவர் களுக்கு, வெகு காலம் இந்தப் பூமியில் ஆயுளிருந்தும் பிர யோசனமில்லை. தனக்கு மோக்ஷமாகிற சம்பத்தைக் கொடுக் கிறதற்குச் சாதனமான காலஞ் சொற்பமாக விருந்தாலும், அது தன்னால் நிச்சயிக்கப்பட்டு ஒரு முகூர்த்தமாகிலும் சிலாக்கியமாகும். அதெப்படியென்ருல் பூர்வகாலத்தில் கட் வாங்கதனென்கிற ராஜரிஷி, தேவர்களுக்கு அசுரயுத்தத்தில் சகாயஞ்செய்து சந்தோஷித்திருந்த தேவர்களினிடத்தில் மற் ருெரு வரத்தைக் கோராமல், அவர்களால் தன்னுடைய ஆயுள் நிலையை யறிந்துகொண்டு சர்வசங்க பரித்தியாகஞ் செய்து, ஒரு முகூர்த்தத்தில் பயமில்லாத நிலையான ஸ்ரீ ஹரி யாகிற பதவியை யடைந்தான்.

ஓ குருவம்சோத்பவனே! உனக்கு இப்படிப்பட்ட சாபம் வந்திருந்தாலும் ஜீவித்திருக்கிறகாலம் ஏழு நாளிருக்கிறது. இவ்வளவு காலத்தில் பரலோக சாதனமான கருமங்களையெல் லாம் செய்துகொள்ளலாம். புருஷனானவன் தனக்கு அந் தியகாலம் வந்ததாகில். பயத்தைவிட்டு வைராக்கியமாகிற கத்தியினல் தேகத்திலும் தேகானுபந்தியான வஸ்துக்களி லும் பற்றின ஆசையை யறுக்கவேண்டும். இவன் கியானி யாகிக் கிருகத்தைவிட்டுப் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து, சுசியாகி மற்ருெருவருமில்லாமலு மிருக்கிற விடத் தில் முறைமைப்படி கற்பிக்கப்பட்ட ஆசனத்திலிருந்து கொண்டு, பரிசுத்தமாகியும் மூன்று அக்ஷரயாகியு மிருக்கிற சிலாக்கியமான பிரணவத்தை மனதினல் செபித்துக்கொண்டு, சுவாசத்தை ஜயித்து, மனதை நிக்கிரகித்துப், பிரணவத்தை மறவாமல் புத்தியாகிற சாரதியால் இந்திரியங்களை விஷயங்

களிலிருந்து திருப்பி நிக்கிரகித்துக்கொண்டு, கருமங்களால் இழுக்கப்படுகிற மனதைத் தன்மதியினால் சுபமான வஸ்துவில் நிறுத்தி, அதில் மனதுக்கு முன் பழக்கமில்லாமையால், ஒவ்வொரு அவயவமாகத் தியானஞ் செய்யவேண்டும், ரூபரசாதிகளான விஷயங்களை யொழித்தமனதைச் சுபாசிரயத்தில் பொருத்திவைத்த பின்பு மற்றொன்றை நினைக்கலாகாது. யாதொரு சுபாசிரயத்தில் ஆசிரயித்த பின்பு முன்னால் ரசோகுண தமோகுணங்களால் மூடமாகி, யீனமாகிய கருமங்களில் ஓடித்திரிந்த தன்மனது அந்த ரசோகுண தமோகுணகாரியங்களை யொழித்துத் தெளிவாகி நிற்கையில், ஸ்ரீ மகா விஷ்ணுவினுடைய அந்தச் சுபாசிரயமே பற்றுக்கோடாகும். அந்த ஆசிரயத்தில் யுத்தியால் நிறுத்தப்பட்டு, மனோயோகமாகிற தாரணையால் அந்த மனதினால் முற்காலத்தில் சம்பாதிக்கப்பட்ட பாவத்தைப் பரிகரிக்கவேண்டும். யாதொரு தாரணையைச் செய்யுங்காலத்தில் அந்த யோகிக்கு மங்களமான ஆசிரயத்தைப் பார்க்கையால் யோகமானது சீக்கிரத்தில் சித்திக்குமென்று உபதேசிக்கிற சுகப்பிரம்மரிஷியினுடைய வார்த்தையைக் கேள்விசெய்த பரிக்ஷித்து மகாராஜா பிரஸ்னஞ் செய்கிறார்.

ஓ பிரம்மரிஷியே! தாரணையை யெப்படிச் செய்யவேண்டும்? யோகி சம்மதமான தாரணையானது எந்த ஆச்சிரமத்திற் செய்யப்பட்டது? அது எப்படிப்பட்டதாகிப் புருஷனுடைய மனோமலத்தைச் சீக்கிரத்தில் பரிகாரஞ் செய்யுமென்று, பிரஸ்னஞ்செய்த பரிக்ஷித்து பூபதிக்கு ஸ்ரீ சுகப்பிரம்மரிஷி யுபதேசஞ் செய்கிறார்.

ஓ ராஜாவே! ஆசனத்தையும், சுவாசத்தையும் ஜயித்து, விஷயங்களிற் சங்கத்தைவிட்டுக், ஞானகருமேந்திரியங்களையும் ஜயம்செய்து, புத்தியால் மகத்தான பகவத் ரூபத்தில் மனதை நிறுத்தவேண்டும். இதுவே தாரணையென்று சொல்லப்படும். யாதொருவிடத்தில் அதீதமும், வர்த்தமானமும் வரப்போகிறதுமாகிற பிரபஞ்சமெல்லாங் காணப்படுகிறதோ, பெரிதுக்கெல்லாம்பெரிதான அந்தவஸ்துவானது பரமாத்மாவுக்கு அதிசயமாகிய தேகமாகும். அது எதென்றால், இந்தப் பிரம்மாண்டத்துக்குள்ளடங்கினவிடம். இதற்கு ஈரேழுவிதமாகிய ஆவரணங்களுண்டு. இதைச் சரீரமாகப் படைத்தும், தாரணைக்கு ஆதாரமாகியுமிருக்கிற இந்தப் புருஷன் எவனென்றால், குணபரிபூரணனாகிய பரமபுருஷன். இந்தப் பரமபுருஷனுக்குப் பாதாளமானது அடிக்கால்களென்றும், ரசாதலமானது அடிகளுடைய மேற்புறமும் அதின் பக்கங்க

ளென்றும், சகலவஸ்துக்களையுஞ் சிருஷ்டிசெய்கிற இந்தப் பகவானுக்கு மகாதலமானது கணுக்கால்களென்றும், தலா தலமானது கணுக்காலுக்கு மேற்பட்டும், முழங்காலுக்குக் கீழ்ப்பட்ட விடங்களென்றும், விஸ்வமூர்த்தியான இவனுக் குச் சுதலமானது இரண்டு முழங்கால்களென்றும், விதல மானது இரண்டு தொடைகளென்றும், அதலம் இடுப்பின் கீழ்ப்புறமென்றும், சொல்லுகிறார்கள். ஓ பூபதியே! இவ னுக்குப் பூலோகமானது இடுப்பின் மேற்புறமென்றும், புவர்லோகமானது நாபியென்றும், சுவர்லோகமானது இருதயமென்றும், மகா லோகமானது மார்பென்றும், ஜனலோகமானது கழுத்தென்றும், தபோ லோகமானது ஆதி புருஷனாகிய இவனுடைய நெற்றியென்றும், சகஸ்ர சிரசை யுடைத்தாகிய இந்தப் புருஷோத்தமனுக்குச் சத் திய லோகமே சிரங்களென்றும், தேவதைகளெல்லாம் புஜங்களென்றும், சப்தமானது இவனுக்குச் சுரோத்தி ரேந்திரியமென்றும், அசுவனி தேவதைகள் இந்தப் பரம புருஷனுக்கு நாசிகளென்றும், கந்தமானது கிரா ணேந்திரியமென்றும் ஜ்வலிக்கிற அக்கினியானது வாயென் றும், சூரியன் இரண்டு நேத்திரங்களென்றும், இந்த விஷ்ணுவுக்கு இரவும் பகலும் இரண்டு இமைகளென்றும், இவன் புருவ நெரிப்பே பிரம்மபதமென்றும், உதகங்களே இவனுக்குத் தாதுக்களென்றும், ரசமே ரசனேந்திரியமென் றும், பதங்களெல்லாம் அனந்தனுடைய பிரம்ம மந்திரங்க ளென்றும், யமன் கோரப்பல்லும் மற்றப் பற்களென்றும், ஜனங்களை மயக்குகிற மாயையானது அவனுடைய புன்சிரிப் பென்றும், அளவில்லாமலிருக்கிற சிருஷ்டியானது அவர் கடைக்கண் பார்வையென்றும், லச்சையானது மேலுதடென் றும், ஆசையானது கீழுதடென்றும், தருமமே ஸ்தனமென் றும், அதரும மார்க்கமே முதுகென்றும், பிரம்மதேவன் லிங்கமென்றும், மித்திரா வருணர் பீஜங்களென்றும், சமுத் திரங்களெல்லாம் குட்சியென்றும், மலைகளெல்லாம் எலும்பு களுடைய சமூகங்களென்றும், நதிகளெல்லாம் இவனுடைய நாடிகளென்றும், உலகத்தைச் சரீரமாக வுடைத்தான இவ னுக்குப் பூமியில் ஜனிக்கிற மரம், செடி, கொடிகளெல்லாம் சரீர ரோமங்களென்றும், அளவிடப்படாத பராக்கிரமத்தை யுடைத்தான வாயுவானவன் சுவாசமென்றும், காலங்களெல் லாம் நடைகளென்றும், குணவைஷம்யமானது கருமமென் றும், ஜகத்பதியான அந்த ஸ்வாமிக்கு மேகங்களானவை கேசங்களென்றும், அளவிடப்படாத அவனுக்குச் சகல பிராணிகளும் வாசஸ்தானமென்றும், சூக்ஷ்ம பிரகிருதி

யானது இருதயமென்றும், சந்திரனே சகல விகாரங்களுக்கும் ஆதாரமாகிய மனதென்றும், மகத்தத்துவமே விக்கியான சத்தியென்றும், சர்வோத்தமனான ஸ்ரீ ஹரிக்குக் கிரீசனே அந்தக்கரணமென்றும், அசுவங்களும், ஒட்டகங்களும், கஜங்களும், நகங்களென்றும், மற்ற மிருகங்களும், பசுக்களும், ஜகனமென்றும், பக்ஷிகளெல்லாம் சிற்பசாமர்த்தியமென்றும், சுவாயம்பு மனுவானவன் புத்தியென்றும், மனுபுத்திரர்களான மனுஷ்யர்கள், வீற்றிருக்குமிடமென்றும், கந்தருவர்களும், வித்தியாதர்களும், சாரணர்களும், அப்சரர்களும், ஆறுவிதமான சுரங்களென்றும், அசுர சிலாக்கியனான பிரகலாதன் நினைப்பென்றும் தெரிந்துக்கொள்ளவேண்டும்.

ஓ ராஜரிஷியே! அந்தப் பரமாத்மாவுக்குப் பிராமணர்கள் முகமாகவும், க்ஷத்திரியர்கள் புஜமாகவும், வைசியர்கள் உதரமாகவும், சூத்திரர்கள் திருவடிகளாகவும், அநேக ரூபமாகிய வசுருத்திராதித்ய ஸ்வரூப தேவ கணங்களுடனேயும், சோமாதிகளான திரவியங்களுடனேயுங்கூடின யக்கிய பரம்பரையானது அவன் கருமமாகவும், பிரம்மாண்டத்தில் கற்பிக்கப்பட்டிருக்கிற லோகாதிகளெல்லாம் அவனுக்கு அவயவங்களாகவு மிருக்கின்றன. இந்த விராட் புருஷனுடைய விக்கிரக அவயவங்களெல்லாம் என்னால் உனக்குச்சொல்லப்பட்டது. யாதொரு விக்கிரகத்தைக் காட்டிலும் வேறான வஸ்து வில்லையோ, எந்த அதிமகத்தான சரீரத்தில் புத்தியுடனேகூட மனது தரிக்கப்படுகிறதோ, சமஸ்தமான கியானங்களிலும் விஷயமாகியிருக்கிற அந்தப் பரமாத்மாவானவன் சுவப்பனத்தில் தனக்கனேக சரீரங்களைக் காணுகிற ஜீவாத்மாவுக்கு அந்தச் சரீரங்கள் எப்படிப் பந்தங்களல்லவோ, அப்படிப் பந்தமாகாத இந்தச் சரீரத்தையுடைத்தாகியிருப்பான். ஒரு காலத்திலும் இல்லையென்கிற சொல்லுக்கு விஷயமாகாமலும், ஆனந்தக்கடலாகியு மிருக்கிற அவனையே தியானஞ் செய்யவேண்டுமே யல்லாமல் மற்றப் பிரகிருதியாலும் பிராகிருதரான புருஷரிடங்களிலும் ஆசையைச் செய்யலாகாது. அல்லவென்று செய்தால் அந்தச் சீவாத்மாவானவன் சமுசாரி யாகுவனென்று சுகப்பிரம்மரிஷியானவர் பரிக்ஷித்து மகாராஜாவுக்கு உபதேசித்துப் பின்னையும் இந்தத் தாரணையினுடைய அவாந்திர பலத்தையுங் காண்பித்து இந்தத் தாரணஞ்செய்யாமல் சமுசாரத்திலிருக்கிற ஜனங்களுடைய பாவத்தை நிந்திக்கிறார்.

---

## இரண்டாவது அத்தியாயம்

*சாலம்பன யோகத்தினால் சாதிக்கத் தக்கதான சர்வாந்திரியாமியி னுடைய தாரணை சொல்லப்படுகிறது.*

ஓ ராஜாவே! பிரம்மாவானவன் முன்னிப்படிப்பட்ட பிரம்மாண்ட சரீரனான பரமாத்மாவுடைய தாரணையால் சந்தோஷமடைந்த ஸ்ரீ ஹரியிடத்திலிருந்து பிரளயத்தில் நஷ்டமாயிருந்த புத்தியை அடைந்து சகலமான வீக்ஷணத்தைத் தரித்து, முன் கல்பத்தி லிருந்தபடி வஸ்துக்களை நிச்சயித்து, இந்தத் தாரணைக்கு அவாந்திர பலமாகிய சிருஷ்டியை முன்போல் செய்தான். சப்த பிரம்மமாகிய வேதபுருஷன் சொல்லுகிற மார்க்கமோ வென்றால், ஈனபலமாகிய சுவர்க்காதிகளை ஸ்துதிசெய்கிற நாமதேயங்களால் அந்த வஸ்துக்களை தியானஞ்செய்துகொண்டு, அதற்குச் சாதனமாகிய கருமங்களில் கடியதாகிய பிரயாசங்களை யடைந்து, அனுபவ காலத்தில் சிலாக்கியமில்லாத அந்தப் பலன்களை யடைந்து, கபடமாகிய அந்த வழியில் சுகமென்கிற வாசனையால் அறிவில்லாமல் நித்திரை பண்ணுகிறவன், முன் வாசனையால் சுவப்பனங்களைக் கண்டு அந்த வஸ்துக்களை யடையமாட்டாம லிருக்கிறதுபோல் அலைந்துகொண்டு திரிவான். ஆகையால், கியானியானவன் போக்கிய வஸ்துக்களில் தனக்கு எவ்வளவு இல்லாவிட்டால் தீராதோ, அவ்வளவும் பரிக்கிரகித்து அதில் ஆசக்தி செய்யாமல், அதுவும் அசுகமென்று நிச்சயித்து, அந்தப் போகங்களும் கருமாதீனமாகையால் அதைக் கோருகிறது மிகவும் அலைச்சலென்று பார்த்து அந்த யத்தனத்தைத் தவிர்க்கவேண்டும். ஆனால் சரீர சம்ரக்ஷணம் எப்படி நடக்குமென்று கேழ்க்கிறீரா? சொல்லுகிறோம் கேளும்.

இந்தப் பூமியானது விசாலமாயிருக்கையில் தான் நித்திரைசெய்ய மெத்தை முதலான வஸ்துக்கள் சம்பாதிக்கிற பிரயாசமேன்? தனக்குச் சுவாதீனமாகிய புஜங்களிருக்கையில் தலையணைகள் தேடவேண்டியதென்ன? தன்னுடைய கரமிடமாகிற அஞ்சலி யிருக்கப் பெரிதான பானபோசன பாத்திரங்க ளேதுக்கு? திக்குகளாகிற மர உரிகளிருக்க வெண்பட்டுக்களால் பிரயோசன மென்ன? வழிகளில் சீர்ண வஸ்திரங்க ளிராதோ? பிக்ஷை வேண்டுமென்றால் மரங்கள் தான் கொடாதோ? வாசஞ் செய்யவென்றால் மலைகள் குகைகள் அடைபட்டனவோ? நதிகளில் ஜலங்கள் பானஞ் செய்யவற்றினவோ? இவைகளொன்றுங் கிடைக்காத காலங்

களில் ஸ்ரீஹரியானவர் தம்மைச் சரணமடைந்தவரைக் காக்காமல் கைவிடுவாரோ? எந்தக்காரணத்தால் கியானிகளும், தம்மதத்தால் அறிவில்லாத ஜனங்களை அனுசரிக்கிறார்கள். இப்படித்தன் இருதயத்தில் தன்னாலறியப்பட்டும், தனக்கு மிகவும் பிரீதிவிஷயனாகவும், குணபரிபூரணனாகவும், அனந்தனாகவு மிருக்கிற பரமாத்மா விருந்தபின்பு, அவனிடத்தில் சுகித்து மற்றொன்றை நினையாமல் அவனையே யுபாசித்தால் சமுசார ஏதுவான பிரகிருதி லயத்தை யடையும். வைதரணீ நதிக்குச் சமானமாகிய சமுசார பரம்பரையில் விழுந்து, தான் செய்த கருமங்களுடைய பரிபாகமாகிற தாபங்களை அடைந்திருக்கிற ஜனத்தைக் கண்ணாலே பார்த்துக்கொண்டிருக்கிறவன் எவன்தான் அந்தப்பரமாத்மாவினிடத்தில் தியானத்தை ஆதரவுசெய்யாமல் அறிவில்லாத பிராணியைப்போல் அசத்தாகிய விஷயாதி சிந்தையை அவலம்பிப்பான்? சில மஹாபுருஷர்கள் தம்முடைய தேகத்துக்குள் இருக்கிற பரமாகாசத்தில் அங்குஷ்டமாத்திரமாகி வாசஞ்செய்துகொண்டும், நாலுபுஜங்களுடனேயும் அந்தப் புஜங்களில் சங்கு சக்கரங்களையும், கதா கட்கங்களையும் தரித்துக்கொண்டும் விளங்குகிற பகவானிடத்தில் மனதை நிறுத்திச் சிந்திக்கிறார்கள். அந்தப் பகவானுடைய திவ்ய மங்கள விக்கிரகத்தைச் சொல்லுகிறோம் கேளும்.

ஓ பூபாலனே! பிரசன்னமான வதனமும், கமல தளங்கள்போல் விசாலமான நேத்திரங்களும், கதம்ப புஷ்பத்தினுடைய தாதுக்கள்போல் பொன்வர்னமாகிய அம்பரமும், அதன் காந்தியால் விளங்குகிற ஆரமும், ஜாம்பூனதமாகிய தோள்வளைகளும், இரண்டு கபோலங்களிலும் ப்ரகாசஞ் செய்கிற மஹாரத்தினகசிதமாகிய திருமகரக்குழைகளும், ஜோதிமயமான கிரீடமும், மிகவும் மலர்ந்த இருதய கமலத்தினுடைய நடுவில் யோகீஸ்வரர்களால் ஸ்தாபிக்கப்பட்டும், தளிர்கள்போல் விளங்குகிற திருவடிகளும், ஸ்ரீதேவியால் அலங்கரிக்கப்பட்ட மார்பில் அவளழகுக் கண்ணாடியாகிய கௌஸ்துவாபரணத்தால் பிரகாசிக்கிற கந்தரமும், ஒரு காலத்திலும் வாடாமலிருக்கிற வனமாலையும், விலையிடக்கூடாம லிருக்கிற அரைஞாணினாலும், மோதிரங்களாலும், நூபுரங்களாலும், கங்கணங்களாலும் அலங்கரிக்கப்பட்டும், மாசில்லாமலும், மிருதுவாகியும், கறுத்தும் கொஞ்சம் சுருளுடனேயும்கூடிய முன்னெற்றி மயிர்களுடனேயும், விளங்குகிற மந்த ஹாசத்தால் மனோக்கியமாகிய திருமுக மண்டலமும், கம்பீரமாகியும், வினோதமாகியு மிருக்கிற புன்சிரிப்பினா

லேயும், கடைக்கண் பார்வைகளாலேயும், மிகவும் விளங்கு கிற புருவங்களுடைய வணக்கத்தால் அறிவிக்கப்பட்ட மிகுதி யான அனுக்கிரகத்தை யுடைத்தாகியும், விநோதமாகியு மிருக்கிற மனதானது எவ்வளவுகாலம் தாரணையில் நிற்கி றதோ அவ்வளவுகாலமும் தியானகல்பிதமான இந்தத் திவ்ய மங்கள விக்கிரகத்தில் பரிபூரணனாகிய பரமேஸ்வரனைப் பிரத்தியக்ஷமாக சாக்ஷாத்கரிக்கவேண்டும். இப்படித் திவ்ய அவயவ சம்பூரணனான பரமாத்மாவைச் சாக்ஷாத்காரஞ்செய் கிற உபாயத்தைச் சொல்லுகிறேம் கேளும். தன்மதியால் பாதமுதலாகிய அவயவங்களைச் சிந்திக்கவேண்டும். கதாதர னுடைய மந்தஹாசம் வரைக்கும் சிந்திக்குங்காலத்தில் எந்தெந்த அவயவத்தில் மனது பொருந்தித் தெளிவை யடைகிறதோ அந்தந்த அவயவத்தைவிட்டு மற்ற அவயவத் தைத் தியானஞ் செய்தால் புத்தி தெளிவையடையும். எவ்வ ளவுகாலம் மகத்துக்கெல்லாம் மகத்தாய் அணுவுக்கெல் லாம் அணுவாய் இவை இரண்டிற்கும் நியந்தாவாகியு மிருக் கிற இந்த ஜகத்பதியிடத்தில் யோகமானது பரிணதமாக வில்லையோ, அதுவரைக்கும் பரமபுருஷனுடைய பிரம் மாண்டமாகிற விக்கிரகத்தைத் தங்கள் வர்ணாச்சிரம தருமத் தைச்செய்து முடிவில் சிந்திக்கவேண்டும்.

இப்படித் தியானஞ்செய்கிற முனியானவன் எப்போது இந்தச் சரீரத்தை விடவேண்டுமென்று நினைக்கிறனே, அப்போதிது புண்ணிய க்ஷேத்திரமென்றும், இது உத்தரா யனமென்றும், காலதேசங்களைக் குறித்து விளம்பாஞ் செய்யா மல், சுகமாகிய ஆசனத்தையடைந்து, சுவாசங்களை ஜயித் துக், கும்பகப் பிராணாயாமத்தைச் செய்யவேண்டும். அதினுல் நிர்மலமாகிய புத்தியைக்கொண்டு மனதை நிக்கிரகித்துச் சீவாத்மாவிடத்தில் சேர்த்து, அந்தச் சீவனைத் தனக்கு ஆத்மாவான பரமாத்மாவிடத்தில் நிறுத்தித், தைரியத் துடனே உபசாந்தியடைந்து, சகல கருமங்களையும் விட்டு விடுவான். பரமமான எந்த இடத்தில் சகலமாகிய தேவதை களையுந் தன்வசஞ் செய்யப்பட்ட சிரேஷ்டமாகிய காலத் துக்கு ஆக்கியாபிக்கிற சக்தியில்லையோ? அந்தவிடத்தில்ஜகங் களுக்கு ஈஸ்வரராகிய தேவர்கள் சுதந்திரர்களல்லவென்கிற தில் சொல்லவேண்டியதென்ன? அந்த இடத்தில் ரசோ குண தமோகுண சத்வகுணங்களுடைய காரியமாகிய விகார மும், மகத்தத்துவமும் மூலப்பிரகிருதியும் ஒரு காலத்திலும் சம்பாதிக்கமாட்டா. பிரம்மத்தைக் காட்டிலும் வேறாகிய பிரபஞ்சமில்லையென்று நிச்சயித்து, அந்தப் பிரம்மத்தையே

சம்பந்தமில்லாமல் அனுபவஞ் செய்யவேண்டித் தங்கள் தேகத்தை விடவேண்டுமென்று நினைத்த யோகிகள், இந்த விடத்தை விஷ்ணுபதமென்று சொல்லி, இந்தத் தேகத்தில் ஆத்மாவென்கிற பிரமையை விட்டு, மற்ற விடத்தில் ப்ரீதியில்லாமல் சிலாக்கியமாகிய இந்தப் பதத்தை இடைவிடாமல் ஆலிங்கனஞ் செய்கிறார்கள். ஆகையால் விக்கியானமாகிற கண்ணையுடைத்தான முனியானவன், தன் யோக பலத்தால் விஷயவாசனைகளைத் தவிர்ந்து வியவஸ்தையி லிருந்து கொண்டு இப்படி இந்தச் சரீரத்தை யொழிக்கவேண்டும். இவன் இந்தச் சரீரத்தை நிவர்த்திக்கும் வகை யெப்படியென்றால், தன் அடிக்காலால் குதஸ்தானத்தை அழுத்திக் கொண்டு, அவ்விடத்திலிருந்து பிராணவாயுவை யதற்கு மேலாகிய ஆறு சக்கர ஸ்தானங்களிலேயும் சிரமத்தை யெண்ணாமல் எழுப்பவேண்டும். அதெப்படியென்றால், கும்பகத்தினால் இருதய ஸ்தானத்திலிருக்கிற பிராணவாயுவை, மூலாதாரத்திலிருக்கிற அபானவாயுவுடனே கூட்டி நிறுத்திக்கொண்டு, மூலாதாரத்திலிருந்து சுவாதிஷ்டான வழியில் மணிபூரகத்திலெழுப்பி, அங்கேயிருந்து அனாகதசக்கரத்திலெழுப்பி, பின்பு விசுத்தசக்கரத்தில் சம்பந்திப்பித்து, அந்த விடத்திலிருந்து ஏழுவிதமான பிராண மார்க்கங்களையும் பந்தனஞ் செய்துகொண்டு, பின்பு ஆக்கினைசக்கரத்தினை நினைத்து, மற்றொன்றையும் நினையாமல் அரைமுகூர்த்தம் அவ்விடத்தில் நின்று தன் புத்தியைச் சலிக்கவொட்டாமல் பிரம்ம ரந்திரத்தைப் பேதித்துச் சிலாக்கியமாகிய பதத்தை யடையவேண்டும். இப்படி யோகசித்தி பெற்றவன், சதுர்முகனுடைய பதத்தையடைய வேண்டுமென்று இச்சித்தாலும், அணிமாதி அஷ்டை ஸ்வரியங்களையு முடைத்தாகிய தேவதைகளுடைய விலாச ஸ்தானங்களை யிச்சித்தாலும், திரிகுண சேர்க்கையை அவ்விரண்டிலுஞ் சஞ்சரிப்பான். சஞ்சரிக்குங்காலத்தில் மனேந்திரியங்களுடனே கூடவே நடப்பான்.

உபாசனமாகிற வித்தையையும் பகவத்தருமங்களாகிற தவசையும் அஷ்டாங்க யோகங்களையும் விக்கியானங்களையும் அடைந்தும், வாயுவைப்போல் சூட்சுமமாகிப் புண்ணிய சரீரத்தை யுடைத்தாயிருக்கிற யோகீச்வரர்களுக்கு, இந்தப் பிரம்மாண்டத்தி னுள்ளடங்கிய லோகங்களிலும், இந்த அண்டத்துக்குப் புறம்பாகிய இடங்களில் உண்டாயிருக்கிற கதியை மற்றவர்கள் கருமங்களால் அடையமாட்டார்கள். தேஜோமயமாகியும், வியாபகமார்க்கமாகியும், பரமாகாச ரூப

மாகியு மிருக்கிற சுழிமுனை நாடி மார்க்கத்தால் நடந்தவர்கள் சகல பாவங்களையும் உதறி அக்கினியை அடைந்து உயர்ந்த ஸ்தானமாகியும், சிஞ்சுமார சக்கரமென்னும் பெயரையுடைத் தாகியு மிருக்கிற ஸ்ரீ ஹரிபதத்தை அதிக்கிரமித்துச் சூக்ஷ்ம மாகியும், ரசோகுண தமோகுணங்களு மில்லாமலு மிருக்கிற சுத்த சத்வமாகிய சரீரத்துடனே தானொருவனாகிச் சகல தேவர்களாலேயும் வந்தனஞ் செய்யப்படும் கல்பபரியந்தம் ஜீவித்திருக்கிற பிருகுரிஷி முதலானவர்கள் ரமிக்கிறஸ்தான மாகியுமிருக்கிற மகாலோகத்தை யடைந்து, கல்பாந்தரத்தில் ஸ்ரீ அனந்தனுடைய முகாக்கினியால் தகிக்கப்படுகிற சுவர்க்க பரியந்தமான லோகங்களையும் அந்தச்சுவாலையால் வெப்ப மடைந்திருக்கிற மகா லோகத்தையும் பார்த்துச், சித்தர் களில் சிரேஷ்டர்களாயிருக்கப்பட்டும் விமானங்களால் விளங் கப்பட்டு மிருக்கிற சதுர்முகபதமான சத்தியலோகத்தை யடைவான். எந்தச் சத்தியலோகத்தில் வாசஞ்செய்கிற சுகிர்துகளுக்கு இந்தப் பிரம்ம தத்துவத்தை அறியாதவர் களுடைய அளவிடப்படாமலுண்டாகிய துக்கங்கள் தரிசனத் தினாலேயும், தயையினாலேயும், அடிக்கடி மனோவேதனை யல் லாமல் மற்றச் சோகமும், மூப்பும், மரணமும், ஆர்த்தியும், பயமும், உண்டாகாதோ! அந்தச் சத்தியலோகத்தில் வாசஞ் செய்கிற சனங்களுடைய கதியானது மூன்றுவிதமாயிருக்கும். மிகுந்த புண்ணியத்தால் இந்த லோகத்தையடைந்த ஜனங் கள் கல்பாந்தத்தில் தங்களுடைய புண்ணிய தாரதம்மியத்தி னால் திரும்பவும் அதிகாரிகளாய் ஜனிப்பார்கள். கமலாசன சரீரனாகிய பரமாத்மாவுடைய வுபாசனத்தைச் செய்தவர்கள் அந்தப் பலத்தால் அந்த இரண்ணியகற்பனுடனே முக்தியை யடைவார்கள். ஸ்ரீ ஹரியைத்தானே உபாசித்தவர்கள் தாங் கள் நினைத்தபொழுதே பிரம்மாண்டத்தைப் பேதித்துக் கொண்டு ஸ்ரீ விஷ்ணுபதமான வைகுண்டத்தை யடைவார் கள். இவர்களில் ஸ்ரீ ஹரியைச் சாக்ஷாத்காரமாக வுபாசித்து முக்தியடைகிறவர்கள் பிரம்மாண்டத்தைப் பேதித்து நடக்கிற வகையைச் சொல்லுகிறோம் கேளும்.

ஓ ராஜாவே! அந்தச் சத்திய லோகத்திலிருந்து அண்டாவரணமாகிய பிருதிவியை யடைந்து, பயமில்லாமல் அந்தப் பிருதிவி சரீரனாகியிருந்து, ஜலமாகிற ஆவரணத்தை யடைந்து, அந்தச் சலசரீரத்துடனே அக்கினி மண்டலத் தைச் சேர்ந்து, அந்தச் சோதிசரீரத்துடனே வாயுமண்ட லத்தைச் சேர்ந்து, வாயுமயனாகி ஆகாசமண்டலத்தைச் சேர்ந்து, ஆகாசமயனாகிக் கிராணேந்திரியத்துடனே கந்த

தன் மாத்திரையை யடைந்து, அதன் பிற்பாடு நேத்ரேந்திரியத்துடனே ரூப தன்மாத்திரையை யடைந்து, அதன் பின்பு தொக்கென்னு மிந்திரியத்துடனே பரிசதன் மாத்திரையை யடைந்து, அதன்மேல் சுரோத்திரேந்திரியத்துடனே சப்த தன்மாத்திரையை யடைந்து, பிராணனுடனே யந்தந்தக் கருமங்களை யடைந்த அந்த யோகியானவன் பூத சூக்ஷ்மேந்திரியங்களுடைய சங்கோசத்தால் மனோமயமாகியும், தேவமயமாகியு மிருக்கிற அகங்காரத்தை யடைந்து, அந்தச் சரீரத்துடனே விக்கியானமயமாகி, மகத்தத்துவத்தை யடைந்து, அந்தச் சரீரத்தை யுடைத்தாகிக் குணத்திரயத்தினுடைய லயஸ்தானமாகிய பிரகிருதியை யடைந்து, அந்தப் பிரகிருதியாகிற சரீரத்துடனே யிருந்து, பின்பு சாந்தமாகியும், ஆனந்தமயமாகியுமிருக்கிற பரமாத்மாவை, முடிவில் தானும் ஆனந்தஸ்வரூபனாகிப் பொருந்துவான். யாதொருவன் இந்தப் பகவத் கதி யடைந்தானோ, அவன் திரும்பவும் இந்தச் சமுசாரத்தை யடையமாட்டான். ஓ ராஜாவே! உன்னால் கேட்கப்பட்ட இந்த இரண்டு கதியும், அநாதியாகிய வேதங்களால் சொல்லப்பட்டிருக்கின்றன. முற்காலத்தில் இரண்யகர்ப்பனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ வாசுதேவர், அந்தச் சதுரானனுக்கு இந்த இரண்டு கதியையும் உபதேசித்திருந்தார். இந்த வுலகத்தில் சமுசாரத்தி லுழன்று திரிகிற ஜனங்களுக்குக் குணபரிபூரணனான வாசுதேவனிடத்தில், பக்தியோகமானது எந்தக் காரணத்தினால் உண்டாகுமோ, அதைவிட எளிதானவழி மற்றொன்றில்லை. கமலாசனனும் நிர்விகார சித்தனாகி, வேதங்களையெல்லாம் பலவாகவிரித்துத் தன்புத்தியால் ஆலோசித்துப் பரமாத்மாவினிடத்தி லுண்டாகிற பக்தியோக காரணத்தை நிச்சயித்தார். கியானாதி குணபரிபூரணனான அந்தப் பிரம்மன் எப்படி நிச்சயித்தாரென்றால், காணப்படுகிற வஸ்துக்களுடைய தரிசனமானது காணுகிறவனை யல்லாமல் கூடாதென்றும், அவனுக்கும் காணுகிற சக்தி சுதந்தரனாகிய பரமாத்மாவினுடைய ஆதீனமென்றும், புத்தி முதலானவை ஒரு கர்த்தாவினால் கற்பிக்கப்பட்டவை யென்றும், அது ஏனென்றால், வாள் முதலான ஆயுதம்போல் கரணமாகையாலென்றும், நிரூபிக்கப்படுகிற அனுமானங்களாலும், அதன் பின்பு தான்செய்த நிரந்தர சிந்தனமாகிற தியானத்தினாலும், சர்வ பூதங்களிலும் ஸ்ரீ ஹரியானவர் சாக்ஷாத்கரிக்கப்பட்டார். ஆகையால், ஓ தேவவிரதனே! இப்படி நிச்சயிக்கப்பட்ட சர்வத்திர பரிபூரணனான ஸ்ரீ ஹரியைச் சர்வகாலத்திலும், சிரவணஞ்செய்தும், கீர்த்தனஞ்செய்தும், ஸ்மரணஞ்

செய்தும், ஜனங்கள் கடைத்தேறவேண்டும். எந்த ஜனங்கள் சர்வாத்மாவாகிய ஸ்ரீ ஹரியினுடைய கதையாகிற அமிர்தத்தைக் காதுகளாகிற குடங்களில் சச்சனமுகத்தால் நிறைத்துப் பானஞ் செய்கிறார்களோ? அவர்கள் விஷய சம்பந்தத்தால் தூஷிக்கப்பட்ட மனதைப் பாவனஞ்செய்துகொண்டு, அந்த ஸ்ரீ ஹரியுடைய சரணாம்புஜ சமீபத்தை யடைவார்கள்.

---

## மூன்றாவது அத்தியாயம்

*விஷ்ணுபக்தியினுடைய விசேஷத்தைக் கேளாநின்ற சுகமுனியினுடைய பக்தி அதிசயத்தினால் அந்த விஷ்ணுவின் கருமங்களின் சிரவணத்தி லாதரவு சொல்லப்படுகிறது.*

இந்தப் பிரகாரம் மோக்ஷத்துக்கு சாதகமாகி, பக்தியோகத்திற்குக் காரணமாகிய ஹரிகதாசிரவணத்தையும், அதின் கீர்த்தனத்தையும், சிந்தனையையும், உபதேசித்த சுகப்பிரம்மரிஷியானவர், மீண்டும் இந்த ஹரி பக்தியினுடைய மகிமையைத் தெரியச்சொல்லவேண்டிக், காமிய பலன்களைக்கோரினவர்களுக்கு, அந்தப் பலன்களைக் கொடுக்கிற கருமங்களைப்போல், சர்வபலன்களைக் கோரினவர்களுக்கும், ஒரு பலனையுங் கோராமல், மோக்ஷபலத்தைக் குறித்தவர்களுக்கும், இந்த ஹரிபக்தியே யல்லாமல் மற்றொரு காரணமில்லை யென்று சொல்லத் தொடங்கினார். ஓ மஹாராஜாவே! யாதொரு முக்திசாதனத்தைச் சொல்லவேண்டுமென்று நீ யென்னைக் கேட்டீரோ, அந்தக் காரணமானது முன்னால் பெரியவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அது எதென்றால், ஜன்மாந்தர சுகிர்தங்களால் மனுஷசரீரத்தை யெடுத்து, அதிலும் புத்தியுண்டாகி யிருந்தவர்களுக்கு மரணகாலம் சமீபித்தபோது, ஸ்ரீ ஹரியினுடைய கதாமிருத சிரவணாதிகளே தாரகமாகும். அதெப்படியென்றால், பிரம்மதேஜஸை விரும்பினவன், வேதத்துக்குச் சுவாமியாகிய பிரம்மாவைக் குறித்து யக்கியஞ்செய்ய வேண்டும். இந்திரியங்களைக் கோரினவன் இந்திரனைக்குறித்து யாகஞ்செய்யவேண்டும். பிரஜைகளை வேண்டினவன் தக்ஷன் முதலான பிரசாபதிகளை யர்ச்சிக்கவேண்டும். ஐஸ்வரியத்தைக் கோரினவன் துர்க்காதேவியைக் குறித்துக் கர்மானுஷ்டானஞ் செய்யவேண்டும். தேஜஸைக்கோரினவன் சூரியனை யர்ச்சிக்கவேண்டும். திரவியத்தைக் கோரினவன் அஷ்டவசுக்களைப் பூஜைபண்ணவேண்டும். வீரத்தைக் கோரினவன் ஏகாதச ருத்திரர்களை

யர்ச்சிக்கவேண்டும். அன்ன முதலான போசனத்தை இச்சித்தவன் அதிதிதேவதையையும், மகவர்க்கத்தைக் கோரினவன் அதிதிகுமாரர்களான தேவர்களையும், இராச்சியத்தைக் கோரினவன் சகலமான தேவர்களையும், திக்குவிஜயத்தை இச்சித்தவன் சாத்தியர்களையும், ஆயுளைக் கோரினவன் அசுவனி தேவர்களையும், புஷ்டியைக் கோரினவன் பூமி தேவியையும் பூஜிக்கவேண்டும். தன்னுடைய ஸ்தானத்தை விட்டுச் சலியாமலிருக்க வேண்டுமென்று கோரினபுருஷன் ஆகாயத்தையும் பூமியையும், அழகைக் கோரினவன் கந்தர்வர்களையும், ஸ்திரீகளிடத்தில் ஆசையுண்டானவன் ஊர்வசியென்கிற அப்சரசையும் உபாசிக்கவேண்டும். சர்வாதிபத்தியம் வேண்டுமென்று கோரினவன் சகல தேவர்களுக்கும் சிரேஷ்டனாகிய சதுர்முகனைப் பூஜிக்கவேண்டும். கீர்த்தியைக் கோரினவன் யக்கிய சரீரனாகிய ஸ்ரீ விஷ்ணுவை யர்ச்சிக்கவேண்டும்.

பொக்கிஷங்களுடைய வித்தையைக் கோரினவன் சிவனையும், தம்பதிகளுடைய அனுகூலத்தைக் கோரினவன் உமாபதியையும், தருமத்தைக் குறித்தவன் உத்தமசுலோகனை ஸ்ரீ ஹரியையும், சந்தானத்தை இச்சித்தவன் பிதுர் தேவதைகளையும் யர்ச்சிக்கவேண்டும். ரக்ஷணத்தைக் கோரினவன் ராக்ஷதர்களையும். பராக்கிரமத்தைக் கோரினவன் வாயுகணங்களையும். இராச்சியத்தை இச்சித்தவன் பதினான்கு மனுக்களையும் தேவர்களையும், சத்துருவை ஜயிக்க அபிலாஷை கொண்டவன் நிருதிதேவனையும், போகத்தை இச்சித்தவன் சோமனையும் பூஜிக்கவேண்டும். வைராக்கியத்தைக் கோரினவன் பரமபுருஷனை ஆராதிக்கவேண்டும். இப்படியே ஏகாந்த பக்தியைக் கோரினவனும், சகல பலன்களைக் கோரினவனும், மோக்ஷத்தை இச்சித்த வுதார புத்திசாலியும், தீவிரமான பக்தியோகத்தால் பரம புருஷனையே ஆராதிக்க வேண்டுமல்லாமல் வேறில்லை. பாகவதர்களால் நிச்சயிக்கப்படும் குண பரிபூரணனை பரமாத்மாவினிடத்தி லுண்டாகியு மிருக்கிற பக்தியோகம் யாதொன்றுண்டோ அதுவே இந்தப் பூமண்டலத்திற் செய்கிற தபசுகளுக்குப் பலோதயமாகி யிருக்கும். யாதொரு ஹரிகதையில் கியானமும், காமக் குரோதாதி நிவர்த்தியைக் கொடுக்கிற பரமாத்மப் பிரசாதமும், இகபரத்திலுண்டாகிய குணங்களில் வைராக்கியமும், கைவல்லியத்திற்கு மார்க்கமென்று நிச்சயிக்கப்பட்ட பக்தியோகமும் உண்டாகின்றனவோ? அந்த ஹரிகதையிற் சுகித்தவன் எவன்தான் அதில் பிரீதிசெய்யா

னென்று சொன்ன சுக முனிவருடைய வார்த்தைகளைச் சவுன காதிகளுக்குச் சொல்லிக்கொண்டு வருகிற சூதரைப் பார்த்துச் சவுனகர் கேட்கிறார். ஓ சூதரே! இப்படிச் சுகமுனிவரால் நன்றாக வுரைக்கப்பட்ட ரகசியத்தை வினவிய பரத சிரேஷ்டனை பரிக்ஷித்து, வியாசகுமாரராகியும், ஞானநிதியாகியு மிருக்கிற சுகமுனிவரை மறுபடியும் இப்போது கேட்டதல்லாமல் வேறு எதைக் கேட்டார்? எங்களுடைய மனதிற்கு அனுகூலமாகிய வார்த்தைகளைச் சொல்கிற நீர் பாகவத சிரேஷ்டரான வியாசகுமாரர் ஆத்மவித்தையில் சமர்த்த ராகையால் நல்ல வார்த்தையால் கேள்விசெய்த பரிக்ஷித்து மகாராஜனுக்கு உபதேசித்த இரகசியமான அர்த்தத்தைச் சொல்லவேண்டும் என்றனர்.

---

## நான்காவது அத்தியாயம்

*ஸ்ரீ ஹரியினுடைய சிருஷ்டி முதலானகதைகளைப் பரிக்ஷித்தினால் பிரஸ்னம்பண்ணப்பட்ட சுகர் பிரம்ம நாரத சம்வாதத்தைவெளியிடுகிறார்.*

இப்படிப் பிரஸ்னஞ்செய்த சவுனகரைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார். ஓ சவுனகரே! அந்த உத்தரைகுமாரன் வியாச குமாரனிடத்திலிருந்து ஆத்மதத்துவம் நிச்சயித்ததற்குக் காரணமாகிய முன்சொன்ன வார்த்தையைக் கேள்விசெய்து, சிலாக்கியமான மதியை ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் நிறுத்தித், தன் சரீரத்திலும், பாரியையிடத்திலும், தன் புத்திரர்களிடங்களிலும், கிருகங்களிலும், பசுக்களிலும், திரவியங்களிலும், பந்துக்களிலும், குறைவில்லாத ராச்சியத்திலும், உறுதியாயிருந்த மனதைவிட்டான். ஓ சிரேஷ்டர்களே! அந்த மகா கீர்த்திமானவன் ஸ்ரீ கிருஷ்ண மகாத்மிய சிரவணத்தில் சிரத்தையுண்டானவனாகி நீங்களென்னைக் கேட்கிறதுபோல் இந்த ஸ்ரீ ஹரி லீலையாகிற அர்த்தத்தையே ஸ்ரீ சுகர் சந்நிதியில் கேள்விசெய்தான். பின்பு தன் மரணகாலத்தை யறிந்து தருமார்த்த காமங்களுக்குச் சாதநமாகிய திரிவர்க்க கருமத்தைத் தியாகஞ்செய்து, ஷட்குண பரிபூரணனாகிய ஸ்ரீ வாசுதேவனைத் தனக்கு ஆத்மாவென்று சிலாக்கியமாகிய நிச்சயத்தை யடைந்த பரிக்ஷித்தானவன், அந்தச் சுகமுனியைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ பிராமணோத்தமனே! சர்வக்கியனாகிய உம்முடைய வசனமே சிலாக்கியமானது. ஓ அனகரே! தேவரீர் சாதிக்கிற ஸ்ரீ ஹரிகதையால் பாபங்களெல்லாம் சிதறின. ஆனாலும் ஸ்ரீ பகவான் தன்னுடைய சங்கற்பாதீனை

யான பிரகிருதியால் சமஸ்தமான புவனத்தையும், சிருஷ்டி செய்கிறதை லோக கர்த்தாக்களாகிய பிரம்மருத்திராதியர்கள் மனதினுலேயும் நினைக்கமாட்டார்கள். இப்படிச் சிருஷ்டி செய்த பிரபஞ்சத்தை எப்படி ரக்ஷிக்கிருனே? சுதந்தரனுகிய அந்தப் பிரபுவானவன் திரும்பவும் எப்படி சங்காரஞ்செய் கிருனே? அமுதசக்தியுண்டாகிய அந்தப் பரமபுருஷன் பிரம்மருத் திராதிகளான எந்தெந்தச் சக்தியை அவலம் பித்து, அவர்களைக்கொண்டு லீலையைச் செய்விக்கிறவனுகி, விவிதங்களான கருமங்களைச் செய்வித்து, தானும் விளையாடிக் கொண்டிருக்கிருனே? அதை விசேஷமாக அறியவேண்டு மென்று இச்சிக்கிறேன். ஓ பிராமணேத்தமனே! ஆச்சரிய கரமான கருமங்களைச் செய்கிற பகவானுடைய லீலையானது கியானிகளாலேயும், சிந்திக்கக்கூடாதென்று தோற்றுகிறது. ஒருவனுகிய பரமபுருஷன் அமுதமாகிய ஜனங்களால் பிர கிருதியினுடைய குணங்களைத் தரித்து, அந்தந்த ஜன்மத்தில் அனுஷ்டிக்கப்பட்ட கருமங்களால் லீலையைச் செய்கிருனே? அன்றிக் கிரமக்கிரமமாக இந்தக் குணங்களை விரும்பி இப்படி லீலாயுக்தனுக விருக்கிருனே வென்று, உண்டாயிருக்கிற இந்த என்னுடைய சம்சயத்தைப் பரிகரிக்கவேண்டி, அடி யேனுக்குத் தேவரீர் வேதாந்த வித்தையில் நிபுணரும், நிரந் தரத் தியானமாகிற அதி னனுபவத்திலும் சமர்த்தரல்லவோ? வென்று பிரஸ்னஞ்செய்த பரிக்ஷித்தைப் பார்த்துச் சுகமுனி யானவர் சொல்லத் தொடங்கினதைச் சவுனகாதிகளுக்குச் சூதர் சொல்லுகிருர்.

ஓ சவுனகாதிகளே! ஸ்ரீ ஹரியுடைய குணகீர்த்தனத் தைப் பிரார்த்திக்கப்பட்ட சுகமுனியானவர் ஸ்ரீ ரிஷிகேசனைச் சிந்தித்துக்கொண்டு, ஸ்ரீ ஹரியை வந்தனஞ்செய்யத் தொடங் கினர். அதெப்படியென்றல், அபரிமித சக்தியாகியும், பிர பஞ்சத்தினுடைய சிருஷ்டி, திதி, சங்காரங்களாகிற லீலா நிமித்தமாகிப், பிரம்ம விஷ்ணு ருத்திரர்களென்கிற மூன்று மூர்த்திகளை அவலம்பித்து, சகல ஜீவராசிகளுடைய அந் தரியாமியாகியும், ஒருவராலேயும் அறியக்கூடாத தன்மையை யுடைத்தாகியு மிருக்கிற பரமபுருஷன் பொருட்டு வந்தனம் செய்கிறேன். சத்புருஷர்களுடைய சஞ்சிதபாப வாசனைகளைச் சேதித்துக் கொண்டும், பாலன நிமித்தமாகிச் சகல சேதனு சேதனங்களைச் சரீரமாக விரும்பியும், பரம அம்சாசிரமத்தில் நிஷ்டை பொருந்திய ஜனங்களால் அடிக்கடி தேடப்படுகிற ஆத்மதத்துவத்தைக் கொடுத்துக் கொண்டு மிருக்கிற பரம புருஷன் பொருட்டு வணக்கஞ் செய்கிறேன். சாத்விக குலத்

திற் பிறந்தவர்களுக்குச் சிரேஷ்டனாகியும், கபடயோகிகளுக்கு அத்தியந்த தூரமாகிய நிஜஸ்வரூபத்தை யுடைத்தாகியும், தன்னுடைய ஐஸ்வரியத்துக்கு அதிகமாயும், சமமாகியுமிருக்கிற மற்றொரு ஐஸ்வரியமில்லாமலும், சுயம் பிரகாசமாகியும் ஸ்வரூபத்தினாலேயும், ஸ்வபாவத்தினாலேயும், பரிபூரணனாகி என்னிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கிற பரம புருஷனைக் குறித்து வந்தனஞ் செய்கிறேன். எவனுடைய கீர்த்தனமும், ஸ்மரணமும், எவனிடத்தில் செய்த சமர்ப்பணமும், எவனுக்குச் செய்த வந்தனமும், எவனுடைய சிரவணமும், எவன் பூஜையும் ஜனங்களுடைய கல்மஷத்தை அப்பொழுதே பரிகாரஞ்செய்கிறதோ, அந்த மஹா மங்களமாகிய கீர்த்தியை யுடைத்தான பரமபுருஷனைக் குறித்து அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன். கியானிகளானவர்கள் எவனுடைய சரணாரவிந்த பஜனத்தால் இகபரங்களாகிய விஷயங்களில் தங்களுடைய மனதிற்குச் சங்கடத்தைப் பரிகரித்துச் சகல சிரமங்களையுந் தவிர்ந்து பரம மாகிற கதியை யடைகிறார்களோ, மிகவும் மங்களமாகிய கீர்த்தி சம்பன்னனான அந்தப் பரமபுருஷனைக் குறித்து அநேக வந்தனஞ் செய்கிறேன். தவசுகளைச் செய்கிறவர்களும், தானம்பண்ணுகிறவர்களும், கீர்த்தி சம்பாதித்தவர்களும், யோகத்தை அனுஷ்டித்தவர்களும், மந்திரங்களை ஜபிக்கிற பேர்களும், சத் கருமங்களைச் செய்கிறவர்களும், எவனிடத்தில் சமர்ப்பணம் பண்ணமற் போனால் க்ஷேமத்தையடைய வில்லையோ மிகுந்த மங்கள கீர்த்தியான அவன் பொருட்டு வெகுவாகிய வந்தனஞ்செய்கிறேன் பாப ஜாதிகளான கிராதர்களும், ஊனஜாதிகளும், புளிந்தஜாதிகளும், புலக்கஜாதிகளும், ஆபிரகஜாதிகளும், யவனர்களும். சகாளும், அதிநிக்ஷித்தமாகிய குரூரகருமங்களை யுடைத்தான மற்றப்பாவிகளும், எவனுடைய திருவடிகளில் பக்திசெய்கிற பாகவதர்களுடைய பக்தியைச் சேர்ந்த மாத்திரத்தில் பரிசுத்தர்களாகிறார்களோ, அந்த மங்கள வாக்கியனான பரமாத்மாவினுடைய திருவடிகளை வணங்குகிறேன். தீரர்களுக்கு ஸ்வாமியாகியும், வேதமயனாகியும் விளங்குகிற அந்த மதி விஷயனாகிய பரமாத்மா ஒருவனாய், நிஜமாகிய பக்தியை யுடைத்தான பிரம்மசங்கராதிகளால் ஆச்சரியத்துடனே பார்க்கப்படுவதான மூர்த்தத்தை யுடைத்தாகி விளங்குகிறானே, அந்தப் பகவான் என்னிடத்தில் பிரசாதஞ்செய்ய வேண்டும். சிருஷ்டிக்கு முற்காலத்தில் பிரம்மதேவனுடைய இருதயத்தில் சிலாக்கியமாகிய நினைவைக் கற்பிக்கவேண்டுமென்று யத்தனஞ் செய்துகொண்டிருக்கிற எவனால் ஆக்கியா

பிக்கப்பட்ட சரஸ்வதி தேவியானவள் தன்னுடைய அங்கமாகிய சிக்ஷாதிகளுடனே எவன் முகத்திலிருந்து ஆவிற்பவிக்கச் செய்தானோ, ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாகிய அந்தப் பரமபுருஷன் பிரசாதம்பண்ணக் கடவன்.

யாதொரு விபுவானவன் பூர்வத்தில் பஞ்ச மகா பூதங்களால் இந்தச் சரீரங்களை யெல்லாங் கற்பித்து, அவைகளில் தான் சார்ந்து நில்லாமல் சயனம் பண்ணுகையால் புருஷனென்று சொல்லப்பட்டுக் கியான கருமேந்திரியங்களும், பஞ்ச மகா பூதங்களுமாகிய பதினாறுகலைகளை அவலம்பித்து, அவற்றின் குணங்களைப் புசிக்கிறானோ, அந்த மதிவிஷயனாகிய பகவான் என்வார்த்தைகளை அலங்கரிக்கக்கடவன். சாந்தி யுக்தாளாகிய புருஷர்கள் கியானமய மாகியும், எவன் முகாம்புஜத்தில் பிறந்து மிருக்கிற மதுவைப் பானஞ் செய்தார்களோ, குணபரிபூரணனாகியும், சகல சேதனா சேதனங்களையும், தான் தரித்தும் அவைகளில் வாசஞ்செய்து கொண்டு மிருக்கிற அந்தப் பிரம்மன் பொருட்டு வந்தனஞ் செய்கிறேனென்று இஷ்டதேவதா நமஸ்காரஞ்செய்த சுகமுனியானவர், பரிக்ஷித்து மஹாராஜாவைப் பார்த்து, இந்த விஷயத்தில் முன்னடந்திருக்கிற உபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கினார். ஓ ராஜாவே! நீர் என்னைக் கேள்விசெய்த இந்த வினாக்களை பூர்வத்தில் பிரமாவைப் பார்த்து நாரதர் வினவினார் அந்தப் பிரஸ்னத்துக்கு, வேதகர்ப்பனாகிய சதுர்முகன், ஸ்ரீ ஹரியினிடத்தி லிருந்து ஏகாக்கிர சித்தனாகித், தான் உபதேசம் பெற்றபடி பிரதியுத்தரஞ் சொன்னான். அந்த அர்த்தத்தை நானுமக்குச் சொல்லுகிறேனென்று சொல்லிப், பின்னையும் ஆதரவதிசயத்தினால் ஸ்ரீ ஹரி பிரசாதத்தைப் பிரார்த்திக்கிறார். அதெப்படி யென்றால், ஸ்ரீ மகாலக்ஷ்மி பதியாகியும், யக்கியாதிபதியாகியும், புத்தி பதியாகியும், லோக பதியாகியும், பூபதியாகியும், அந்தகர்களுக்கும், விருஷ்ணிகளுக்கும், சாத்வதர்களுக்கும் பதியாகியும், கதியாகியும், சஜ்ஜனங் களுக்கெல்லாம் நிதியாயுமிருக்கிற பகவான். என்னிடத்தில் பிரசாதஞ் செய்யக்கடவர். யாதொருவனுடைய திருவடிகளை யிடைவிடாமற் செய்கிற தியானமாகிற சமாதியால் ஆராயப்பட்ட புத்தியால் ஆத்ம தத்துவத்தை யறிந்த கியானிகள், அவரவர்களுடைய இச்சைக்கு அனுசாரமாகச் சொல்லுகிறார்களோ, அந்த முகுந்தன் என் பொருட்டுப் பிரசாதஞ்செய்யக் கடவனென்று பிரார்த்தனை செய்துகொண்டு சதுர்முகனைப் பார்த்து நாரதர் பிரஸ்னஞ்செய்த பூர்வ கதையைச் சொல்லத் தொடங்கினார்.

## ஐந்தாவது அத்தியாயம்

*லீலா அவதாரமான விராட்டானவர், காலகருமமுதலான சக்திகளில் சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களைச் சிருஷ்டித்தாரென்று, பிரம்மா நாரதருக்குச் சொன்னாரென்று சொல்லப்படுகிறது.*

ஓ ராஜாவே! சதுர்முகனைப்பார்த்து நாரதர் பிரஸ்னஞ் செய்த கிரமமென்னவென்றால், ஓ தேவதேவனே! சகல பிராணிகளையுஞ் சிருஷ்டி செய்கிற பிரம்மகணங்களுக்கெல் லாம் ஆதியாகி ஜனித்தவனே! உமக்கு நான் வந்தனஞ் செய்கிறேன். ஆத்ம தத்வத்தைப் பிரகாசஞ் செய்கிறதான சாதனத்தை உனக்கு உபதேசிக்கவேண்டும். ஓ சுவாமியே! ஆத்ம ஸ்வரூபக்கியானத்துக்குச் சாதனமாகிய இந்தப் பிர பஞ்சமானது எந்தத் தருமத்தை யுடைத்தானது? எவனி டத்திலிருக்கிறது? எவனால் சிருஷ்டிக்கப்பட்டது? பிற்கா லம் எவனிடத்தில் லயமடைகிறது? எவன் ஆதீனமானது? இதின் ஸ்வரூபம் எப்படிப்பட்டது? இந்தத்தத்துவத்தை எனக்கு அருளிச்செய்ய வேண்டும். முன்பிறந்தும் இப்போ திருந்தும் பிற்காலம் வருகிறதாகவு மிருக்கிற சகல வஸ்துக் களுக்கும் ஸ்வாமியாகிய தேவரீர் இந்த ரகசியத்தை யறிவீர். உள்ளங்கை நெல்லிக் கனியைப்போல் உம்முடைய விசிஷ்ட கியானத்தினால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்ற தேவரீர், எவரி டத்தி லிருந்து விக்கியானத்தைச் சம்பாதித்தீர்? உமக்கு ஆதாரமானவஸ்து எது? உமக்கு உயர்ச்சியானவர் எவர்? நீர் எவனுடைய ஆதீனர்? உம்முடைய ஸ்வரூபமென்ன? உம்முடைய பிரகிருதியால் நீர் ஒருவரா யிருந்துகொண்டு பஞ்சமகா பூதங்களால் பிராணிகளைச் சிருஷ்டி செய்கிறீர். நீரோ அவைகளுக்கு துன்பத்தை அடைவிப்பித்தும், பிரயாசை யில்லாமல் சிலந்திப் பூச்சியைப்போல் உம்மு டைய சக்தியை வெளியிட்டுக்கொண்டு சிருஷ்டிசெய்கிறீர். இந்தப் பிரபஞ்சத்தில் உத்தம மத்திம கனிஷ்டங்களாகியும், மனுஷ்யாதிகளான வுருவாகியும், சுக்லாதிவர்க்கங்களுடனே விளங்கிக்கொண்டு மிருக்கிற காரியங்களும், இவைகளுக்குக் காரணமாகிய சூட்சுமவஸ்துக்களும்; தேவரீரைவிட மற் றொருவரா லுண்டாகின்றனவென்று நான் அறிந்துகொள்ள வில்லை. அப்படிப்பட்ட தேவரீர் மனோஜையஞ் செய்து கொண்டு கஷ்டமாகிய தபசைச் செய்கையால் அடியேனுக்கு மோகத்தை யுண்டுபண்ணி மற்றொரு நாயகனுண்டென்கிற சங்கையைக் கற்பிக்கிறீர். ஓ சர்வசுவாமியே! எனக்கு இந் தத் தத்வத்தை நன்றாக அறியும்படி அருளிச்செய்ய வேண்டு

மென்று பிரஸ்னஞ்செய்த நாரதமகாமுனியைக் குறித்து அந்தச் சரஸ்வதி வல்லபன் சொல்லுகிருன். வாராய் குழந்தாய்! மிகவுங் கருணுசாலியாகையால் உனக்கு இந்தச் சிலாக்கியமாகிய சம்சயம் பிறந்தது. வாராய் சவுமியனே! எந்தக் காரணத்தால் ஸ்ரீ பகவானுடைய மகிமையாகிற லீலைகளைச் சொல்லும்படி யென்னைக்குறித்து யாதொரு வார்த்தையைச் சொன்னையோ, அது மிகவும் அரிதானது. ஸ்ரீ பகவானுடைய மகிமையால் எனக்கு அவ்வளவு சக்தியுமுண்டு. ஆதித்தியனும், அக்கினியும், சோமனும், கிரகங்களும், விளக்குகின்ற சுயம்பிரகாசமாகிய பிரமஸ்வரூபத்தால் பிரகாசிக்கப்பட்ட பிரபஞ்சத்தை நானும் பிரகாசஞ் செய்விக்கிறேன். யாதொருவனுடைய துற்செயமாகிய மாயையால் என்னை ஜகத்துக்குக் குருவென்று சொல்லுகிருர்களோ குணபரிபூரணனுகிய அந்த வாசுதேவனைக் குறித்துத் தியானஞ் செய்கிறேன்.

யாதொருவனுடைய சிருஷ்டிபதத்தில் நிற்கிறதற்கும் லச்சை யடைந்திருக்கிற அந்த மாயையால் மோகிக்கப்பட்ட துர்ப்புத்தியான ஜனங்கள் நானென்றும் எனதென்றும் இல்லாத மகிமையைச் சிலாகிக்கிருர்களோ, பஞ்சமகா பூதங்களும், சிருஷ்டியேதுவாகிய ஜீவகருமங்களும், காலமும், திரிகுணங்களும், ஜீவவர்க்கங்களும், தத்வமாக விசாரித்தால் ஸ்ரீ வாசுதேவனைக் காட்டிலும் வேறல்ல. வாராய் பிர்மநிஷ்டனே! வேதங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்தில் பிறந்தன. தேவர்களெல்லாம் நாராயணனுடைய அங்கத்திற் ஜனித்தார்கள். சுவர்க்காதி லோகங்களெல்லாம் நாராயணனுடைய ஆனந்த ஸ்வரூபங்கள். சகல யக்கியங்களும் அந்த நாராயணனுடைய ஆனந்த சாதனமானவை. பிராணுயாமாதிரூபமாகிய யோகமும், சித்தத்துக்குத் தைரியமாகிற தபசும், இவற்றின் பலமாகிய கியானமும், அவற்ருல் அடையும் கதியும். அவனுடைய பிராப்தியும், அவற்றின் சாதனங்களாகவே யிருக்கும். நிர் விகாரனுகியும், சகல சரீரகனுகியும், சுதந்தரனுகியும், சிருஷ்டியைப் பரிக்கிரகித்து மிருக்கிற அந்த நாராயணனுடைய சிருஷ்டிக்கு விஷயமாகிய பிரபஞ்சத்தை அவனுல் சிருஷ்டிக்கப்பட்ட நான் அவன் கடாக்ஷத்தால் ஆக்கியாபிக்கப்பட்டவனுகிச் சிருஷ்டியைச் செய்கிறேன். ஹேயகுணாகிதனுயு மிருக்கிற அந்தச் சுவாமிக்குத் தன் சங்கல்பத்தால் சிருஷ்டி, திதி, சங்கார நிமித்தமாகிப் பரிக்கிரகிக்கப்பட்டிருக்கிற சத்வாசோதம மென்கிற குணங்கள் மூன்றுண்டு. அந்தக் குணங்கள் பஞ்சமகா பூதங்களுக்

கும் இந்திரியாபிமான தேவதைகளுக்கும் இந்திரியங்களுக்குங் காரணங்களாகி யிருந்துகொண்டு ஒருகாலத்திலும் பந்தமில்லாமலிருக்கிற ஸ்வரூபத்தை யுடைத்தாகி யிருந்தாலும் மாயாசம்பந்தத்தை யுடைத்தாகியிருக்கிற ஜீவாத்மாக்களிடத்தில் காரியமாகியும் காரணமாகியும் கர்த்தாவாகியு மிருக்கிறதை இணக்கியதுகள். இப்போது நம்முடைய மதியிற்ரோன்றியும் அதோக்ஷஜமாகியு மிருக்கிற அந்தக் குணபரிபூரணன் இந்த மூன்று குணங்களாகிய அடையாளங்களால் தன்னுடைய அடியார்களால் காணப்பட்ட தனது மகிமையை யுடைத்தாகி யிருந்துகொண்டு சகலமான வுயிர்களுக்கு மெனக்கும் சுவாமியாகி மாயைக்கு ஈசனுகையால் தன்னுதீனமாகிய மாயையால் விசேஷமாகித் தான் வெகு ரூபமாக வேண்டுமென்று இச்சித்தவுடனே தன்னிடத்தில் சுய இச்சையால் வந்திருக்கிற காலத்தையும், ஜீவகருமங்களையும் குணவைஷம்மியத்தையும் தன்னையடுத்த மாயையில் அங்கீகரித்தான். பின்பு புருஷோத்தமனுல் அவலம்பிக்கப்பட்ட காலத்தினுலும் குணவைஷம்மியத்தினுலும் ஆகாரபேதத்தை யடைந்திருக்கிற, சீவகருமத்தினுலும் மகத்தத்துவம் பிறந்தது. ரசோ குணத்தினுலுஞ் சத்வ குணத்தினுலும் வளர்ந்திருக்கிற அந்த மகதத்துவத்தினுடைய விகாரத்தால் தனக்குத்தானே சுவாமியாகியு மிருக்கிற அந்தப் பரம புருஷன் சிலந்தியைப்போல் சிருஷ்டியைச் செய்துகொண்டும் செய்த சிருஷ்டியை அரித்துக்கொண்டு மிருப்பான். அகங்காரமென்று சொல்லப்படுகிற அந்த மகத்தத்துவ விகாரமானது தானும் விகாரத்தையடைந்து மூன்று விதமாக விருக்கும். அந்த விதங்களை வைகாரிக மென்றும் தைசசமென்றும் தாமசமென்றும் அதனுண்மை யறிந்தவர்கள் சொல்வார்கள்.

ஒ அறியவல்லவனே! தாமச அகங்காரமானது, திரவிய சக்தியென்றும், தைசச அகங்காரமானது கியானசக்தி யென்றுஞ் சொல்லப்படுகிறது. பூதாதியாகிய தாமச அகங்காரம் விகரித்ததால் ஆகாயம் பிறந்தது. அறிந்தவனுக்கும், அறியப்படுகிற பொருளுக்கும், லிங்கமாகியு குணமாகியு மிருக்கிற சப்தமானது அந்த ஆகாயத்தின் ஸ்வரூபமாகி அதிலட்சணமாக விருக்கும். அப்பால் விகாரத்தையடைந்த ஆகாயத்திவிருந்து ஸ்பரிசமாகிற குணத்தை யுடைத்தான மாருதம் பிறந்தது. அந்த வாயுவானது தனக்குக் காரணமாகிய ஆகாயத்துடனே சம்பந்தித்திருக்கையால் சப்தமாகிற குணத்தையும் உடைத்தாயிருக்கும். இதுவுமன்றித் தேககாரண

மாகிற பிராணனுக்கும், பராக்கிரமத்துக்கும், இந்திரிய மன சரீரங்களுடைய சாமர்த்தியமாகிற பலன்களுக்கும், சலனங் களுக்கும் ஏதுவாகவே யிருக்கும். காலத்தினாலும், பிராணி கருமத்தினாலும், குணவைஷம்மியத்தினாலும், விகாரத்தை யடைந்திருக்கிற அந்தச் சமீரணனிடத்திலிருந்து ரூபதன் மாத்திராகிரமத்தினால் தேஜசுபிறந்தது. அதற்குச் சுதசித்த மாகிய ரூபமும், காரணமாகிய வாயு சம்பந்தத்தால் உண்டா யிருக்கிற ஸ்பரிசமும், ஆகாயத்தி லுண்டாயிருக்கிற சப்த மும், அதின் குணங்களாகவே யிருக்கும். பின்பு விகாரத்தை யடைந்த தேஜசிலேயிருந்து ரசதன்மாத்திரை முகமாக வுதகம் பிறந்தது. அந்தச் சலமானது நிசமான ரசமாகிய குணத்தினாலும் தன்னுடைய காரணங்களால் வந்த ரூப ஸ்பரிச கோஷங்களாலும் பிரகாசித்திருக்கும். விசேஷமாகி விகாரமடைந்த ஜலத்திலிருந்து கந்த தன்மாத்திரை மார்க் கத்தால் பிருதிவி பிறந்தது. அந்தப் பூமியானது நிஜமான கந்த குணத்தையும் பராதீனமாகிய ரச ரூப ஸ்பரிச சப்த குணங்களையும் உடைத்தாயிருக்கும். வைகாரிக அகங்காரத்தி லிருந்து மனதும், அதற்குத் தேவையான சந்திரனும் பிறந் தார்கள். அப்படியே யதிலிருந்து திக்கும், வாயுவும், சூரிய னும், வருணனும், அஸ்வனி தேவர்களும், அக்கினியும், இந்திரனும், உபேந்திரனும், மித்திரனும், பிரம்மதேவனு மாகிற இந்திரியாபிமானி தேவதைகள் பதின்மரும் ஜனித் தார்கள். அதன் பின்பு, தைசச அகங்காரத்தினுடைய விகாரத்தால் கிராணேந்திரியமும், ரசனேந்திரியமும், சக்ஷு ரிந்திரியமும், சுரோத்திரேந்திரியமும், தொக்கிந்திரியமு மாகிய கியானேந்திரியங்களைந்தும், வாகிந்திரியமும், அஸ் தேந்திரியமும், பாதேந்திரியமும், பாயுவிந்திரியமும், உபஸ் தேந்திரியமுமாகிற கருமேந்திரியங்களைந்தும் உற்பவித்தன. இவைகளில் சுரோத்திரேந்திரியத்துக்குத் திக்கும், தொக்கிந் திரியத்துக்கு வாயுவும், சக்ஷுரிந்திரியத்துக்குச் சூரியனும், ரசனேந்திரியத்துக்கு வருணனும், கிராணேந்திரியத்துக்கு அஸ்வனிதேவர்களும், வாகிந்திரியத்துக்கு அக்கினியும், பாணியாகிற இந்திரியத்துக்கு இந்திரனும், பாதமாகிற இந் திரியத்துக்கு உபேந்திரனும், பாயுவென்கிற இந்திரியத்துக்கு மித்திரனும், உபஸ்தேந்திரியத்துக்குப்பிரசாபதியும், அதிஷ் டான தேவதைகளானார்கள். அப்படியே கியானசத்தியான புத்தியும், கிரியாசத்தியான பிராணனும், தைசச அகங்காரத் தில் ஜனித்தனவென்று நாரதருக்குச்சொன்ன சதுரானனன் உபதேசத்தைப் பரிக்ஷித்து மகாராஜனுக்கு ஸ்ரீசுகமுனி உப

16

தேசித்த தத்துவத்தைச் சூதர் சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னேயுஞ் சொல்லுகிறார்.

ஓ பிரம்மவித்துக்களில் சிரேஷ்டர்களே! பின்பு இந்தத் தேகேந்திரியங்களும் ஒன்றோடொன்று கலக்கமாட்டாம லிருக்கிறபடியால், அந்தப் பூதங்களுடனேயும், மனோபுத்தி பிராக்ருதகுணங்களுடனேயும் கலந்துகொண்டு, எப்போது ஈசனுக்கு வீடாகிய சரீரத்தை நிர்மாணஞ் செய்யமாட்டாமற் போயினவோ, அப்போது அந்தப் பகவானுடைய சக்தி அனுப்பிரவேசத்தால் ஆக்கியாபிக்கப்பட்ட இவைகள், ஒன்றோடொன்று கலந்து பிரகிருதி காரியமாகி யிருந்து கொண்டு, சமஷ்டி வியஷ்டி ரூபமாகிய அந்தச் சரீரத் தைக் கற்பித்தன கற்பிக்கப்பட்ட அந்தச்சரீரம் ஒரு அண்ட மாகி, ஜலத்தில் அநேகமாயிரம் வருஷம் இருந்த பின்பு, அதற்குச் சீவப்பிரதனான பரமாத்மா காலத்திலும், பிராணி கருமத்திலும், குணவைஷம்மியத்திலும், அனுப்பிரவேசஞ் செய்திருந்தவன், இந்த அண்டத்திலும் அனுப்பிர வேசஞ்செய்து, சீவனில்லாமலிருந்த இந்த அண்டத்தைச் சீவிப்பித்தான். அப்படிப்பட்ட இந்தப்பரமாத்மா, அண்ட மாகிய பிறத்தில் வசிக்கிறபடியால், புருஷ சப்த வாச்சியனாகி அந்த அண்டத்தில் நிறைந்து, அதைத் தனக்கு வேறாக வைத்துக்கொண்டு, ஆயிரம் சிரசுகளும், ஆயிரம் முகங்களும், ஆயிரங் கண்களும், ஆயிரம் பாகுக்களும், ஆயிரந் தொடை களும், ஆயிரந் திருவடிகளுமாகவே யிருந்தான், யாதொரு வனுடைய அவயவங்களால் உலகங்களைத் தியானபரர்கள் கற்பிக்கிறார்களோ, அவனுடைய கடிப்பிரதேசத்துக்குக் கீழ்ப் பட்ட அவயவங்களால்மேலே ஏழு உலகங்களும் கற்பிக்கப் பட்டன. அப்படியே அந்தப் புருஷனுடைய முகத்திற்பிறந்த பிராமணர்கள் அவனுக்கு வதனமாகவும் பாகுவில் ஜனித்த க்ஷத்திரியர்கள் அவனுக்குப் புஜமாகவும், ஊருவிலுற்பவித்த வைசியர்கள் அவனுக்குத் தொடைகளாகவும், பாதங்களில் சம்பவித்த சூத்திரர்கள் அவனுக்குத் திருவடிகளாகவும், அறிந்துகொள்ளவேண்டும். பாதாளலோக முதல் பூலோகம் வரைக்கும் கடிபரியந்தமான அவன் பாதங்களிலிருந்து பிறந்தனவென்றும், புவர்லோகமானது அவன் நாபியில் ஜனித்ததென்றும், சொர்க்கலோகமானது அவன் இருதயத் தில் உற்பவித்ததென்றும், மகாலோகமானது அந்த மஹாத்மாவினுடைய மார்பிற் சம்பவித்ததென்றும், ஜன லோகமானது அவன் கழுத்தில் சம்பவித்ததென்றும், தபோ லோகமானது அவன் நெற்றியில் பிறந்ததென்றும், சத்திய

லோகமானது அவன் சிரசுகளில் ஆவிற்பவித்ததென்றும், அதற்கு மேற்பட்ட பிரம்மலோகமான வைகுந்தமானது நித்தியமென்றும் கூறுவர். அவனை இப்படிச் சப்தலோக சரீரகனைச் சிலபேர் உபாசனஞ் செய்கிறார்கள். இந்த உலகங்கள் பதினான்கென்று நிச்சயித்த ஜனங்கள் அதலலோகமானது அவன் கடியில் பிறந்ததென்றும், விதலமானது அந்த விபுவினுடைய வூருக்களால் கற்பிக்கப்பட்டதென்றும், பரிசுத்தமான சுதலமானது அவன் ஜானுக்களால் ஜனித்ததென்றும், தலாதலமானது அதனடிப்பிரதேசத்தில் உற்பவித்ததென்றும், மகாதலமோவென்றால் கணுக்கால்களால் உதித்ததென்றும், ரசாதலமானது புறங்கால்களால் ஆவிற்பவித்ததென்றும், பாதாளமானது அடிக்கால்களால் சம்பவித்ததென்றும் பூமிமுதலான, மேலேழுலோகங்களும் ஜகனம் முதலான அவயவங்களாற் சம்பவித்தனவென்றும், இப்படி அந்தப் புருஷன் லோகமயனாகி யிருக்கிறானென்று உபாசிக்கிறார்கள். இல்லாவிட்டால் பாதாள முதல் பூலோகம்வரைக்கும் கடிபரியந்தமான பாதங்களாலும், புவர்லோகமானது நாபியாலும், சத்தியலோக பரியந்தமான சொர்க்கலோகமானது சிரசினாலும் ஜனித்தனவென்றும், இப்படியாக லோககற்பனஞ்செய்து தியானஞ்செய்யலாமென்று பிரம்மாவானவர் நாரதருக்கு உபதேசித்தபடி சுகமுனி பரிக்ஷித்து மகாராஜாவுக்கு உபதேசித்ததை, சூதர் நைமிசாரண்ய வாசிகளான சவுனகாதிகளுக்குச் சொல்லிப் பின்னையும் நாரதருக்கு அந்தச் சதுரானனன் உபதேசித்த வகையைச் சொல்லுகிறார்.

## ஆறாவது அத்தியாயம்

*அத்தியாத்மாதி பேதத்தினால் விராட்விபூதியும் சொல்லப்பட்டுப், பூர்வோக்தமான சமஸ்தாதாரத்தவமும் புருஷசூக்தத்தினால் திரஸ்கரிக்கப்பட்டது.*

வாராய் குமாரனே! நான்முகன் முதலான ஜனங்களுடைய வாகிந்திரியங்களுக்கு அதிதேவதையான அக்கினிக்கும், இந்த விராட் புருஷனுடைய முகமானது க்ஷேத்திரமாக இருக்கும். காயத்திரி முதலான ஏழுவிதமாகிய சந்தசுக்களுக்கும், இவனுடைய தொக்கு முதலான சப்த தாதுக்களும் க்ஷேத்திரமாயிருக்கும். தேவதைகளுக்கு அன்னமாகிய அவ்வியத்துக்கும், பிதுர்க்களுடைய அன்னமாகிய கவ்வியத்துக்கும், இந்த இரண்டுக்கும் புறம்பான மானு

ஷான்னத்துக்கும் ஆறுவிதமான ரசங்களுக்கும், நம்முடைய ரசனேந்திரியங்களுக்கும், இவைகளுக்கு அதிதேவதையான வருணனுக்கும் அந்த விராட்புருஷனுடைய நாக்கு வுற்பத்தி ஸ்தானமாகி யிருக்கும். அவனுடைய நாசிகளானவை சகல பிராணங்களுக்கும், வாயுதேவனுக்கும், உற்பத்தி ஸ்தான மாகியிருக்கும். பின்னும் அஸ்வனி தேவர்களுக்கும், சகல மான ஔஷதிகளுக்கும், பரிமளத்துக்கும், சிலாக்கியமான அவனுடைய கிராணேந்திரயமானது ஜன்மபூமியாக விருக்கும். சுக்கிலாதி ரூபங்களுக்கும், இவைகளைப்பிரகாசஞ்செய்விக்கிற தேஜசுகளுக்கும், அவனுடைய சக்ஷுரிந்திரியம் உற்பவஸ்தானமாகவே யிருக்கும், பகலுக்கும் சூரியனுக்கும், அவன் கண்கள் ஜன்மபூமியாயிருக்கும். அவன் காதுகள் திக்குகளுக்கும் தீர்த்தங்களுக்கும், அவன் சுரோத்திரேந்திரியங்கள் ஆகாசங்களுக்கும், சப்தங்களுக்கும் அவதார ஸ்தலமாக விருக்கும்.

அவனுடைய தேகமானது சகல வஸ்துக்களி லுண்டாகிய சராசரங்களுக்கும், அழகுக்கும், பாத்திரமாயிருக்கும். இவனுடைய தொக்கிந்திரியமானது ஸ்பரிசத்துக்கும், வாயுவுக்கும், சகல யக்கியங்களுக்கும், உற்பவ ஸ்தலமாக விருக்கும். எவற்றால் யக்கியமானது பரிபூரணமாகிக் கற்பிக்கப்படுகிறதோ, பூமியைப்பிளந்து கொண்டு ஜனிக்கிற அந்த விருக்ஷங்களுக்கெல்லாம் இவனுடைய ரோமங்களே பரம காரணமாக விருக்கும். இவன் கேசங்கள், மேகங்களுக்கும், இவன் தாடி மீசை மயிர்கள் மின்னல்களுக்கும், அவன் கரங்களும் பாத நகங்களும் எழுகு முதலான லோகங்களுக்கும் கற்களுக்கும் ஜனனபூமியாக விருக்கும். இவன் பாகுகள் இந்திராதிகளான லோகபாலர்களுக்கும், சுபகருமங்களுக்கும், இவன் விக்கிரமமானது பூலோக, புவலோக, சுவர் லோகங்களுக்கும், க்ஷேமங்களுக்கும், ரக்ஷணத்துக்கும், சாதனங்களாக விருக்கும். சகலமாகிய அபீஷ்டங்களுடைய பிரார்த்தனைகளுக்கும், இந்த ஸ்ரீ ஹரியினுடைய திருவடிகளே ஆஸ்பதமாகி யிருக்கும். ஜலங்களுக்கும், வீரியத்துக்கும், அவனுடைய மோக்ஷத்துக்கும், பர்ஜன்னியனென்கிற பிரஜாபதிக்கும், அந்த மஹா புருஷனுடைய லிங்கமே பிறப்பிடமாக விருக்கும். அவனுடைய உபஸ்தமோ வென்றால், சந்தான நிமித்தமாகிய சமபோகத்தால் உண்டான நித்திரையில்லாம விருக்கிறதற்கு ஸ்தலமாகியு மிருக்கும். அவனுடைய பாயுவென்கிற கருமேந்திரியமானது, யமனுக்கும், மித்திரனுக்கும், மலவிசர்ஜனத்துக்கும், ஸ்தலமாகியிருக்கும்.

வாராய் நாரதனே ! அவனுடைய குதமானது இம்சைக்கும், கிறிக்கும், மிருத்தியுவுக்கும், நரகத்துக்கும், உற்பத்திஸ்தானமென்று சொல்லப்பட்டது. அவனுடைய பின்பக்கமானது அவமானத்துக்கும், அதருமத்துக்கும், அக்கியானத்துக்கும், ஜன்மபூமியாக விருக்கும். அவனுடைய நாடிகள் மேற்கே பெருகுகிற நதிகளுக்கும், கிழக்கே பெருகுகிற நதிகளுக்கும், அவதார பூமியாக விருக்கும். அவனுடைய எலும்புகளின் சமூகமானது மலைகளுக்குக் காரணங்களாக விருக்கும். அந்தப் புருஷோத்தமனுடைய பிரகிருதியான துச்சங்கள் சிலாக்கியமாகிய அன்ன முதலானதுகளுக்கு ஏதுவாகியிருக்கும். பிராணிகளுடைய மரணத்துக்கும், சமூத்திரங்களுக்கும், அவனுடைய உதரம் சாதகமென்று பிரசித்தமானது. அவன் இருதயமானது மனதுக்கு ஸ்தானமாகியிருக்கும். தருமத்துக்கும், எனக்கும், உனக்கும், என் குமாரர்களாகிய ஜனகாதிகளுக்கும், பவனுக்கும் விக்கியான தத்துவத்துக்கும், அந்தப் பரம புருஷனுடைய மனதே பரம்மஸ்தானமாகியிருக்கும், ஆகையால் நானும், நீயும், ருத்திரனும், உனக்கு முன்னே ஜனித்த ஜனகாதிகளும், மரீசி கிருதுகளும், தேவகணங்களும், அரசசமூகங்களும், நாகங்களும், பக்ஷிகளும், மிருகங்களும், கந்தருவர்களும், அப்சரசுக்களும், யக்ஷர்களும், ராக்ஷசர்களும், பூதகணங்களும், மலைப்பாம்புகளும், பசுக்களும், பிதுர்தேவதைகளும், சித்தர்களும், வித்தியாதரர்களும், சாரணர்களும், தருக்களும், மற்றும் நானுவிதமாகிய ஜலநிவாசிகளாகவும், ஸ்தலவாசிகளாகவும் ஆகாச நிவாசிகளாகவுமிருக்கிற ஜீவவர்க்கங்களும், நவக்கிரகங்களும், அசுவனி முதலான நக்ஷத்திரங்களும், மற்றுமுள்ள தாராகணங்களும், தூமகேதுக்களும், மின்னல்களும், மேகங்களும், முன் பிறந்து போனதும், இப்போது ஜனித்திருப்பதும், இனியேல் சம்பவிக்கப்போகிறது மாகிற மற்றுமுள்ள இந்தச் சகலமும், அந்தப் பரம புருஷனேயல்லாமல் வேறில்லை. இந்தப் பிரபஞ்சத்தைக் காட்டிலும் பத்து அங்குலம் வளர்ந்து வாசஞ்செய்கிற இவனுல், இப்பிரபஞ்சமெல்லாம் உயர்ந்து வியாபிக்கப்பட்டது. தன்னுடைய மண்டலத்தில் வசித்துக்கொண்டு தபிக்கிற இந்த ஆதித்தியனுனவன் எப்படி அந்த மண்டலத்தின் வெளியிலும் பிரகாசிக்கிருனே, அப்படியே விராட் புருஷ தேகத்திற் பிரதாபத்துடனே விளங்குகிற பரம புருஷனும், அந்த விராட்டின் தேகத்தினுடைய உள்ளும் புறம்பிலும் பிரகாசிக்கின்ருன். அந்தப் பரமபுருஷன் யாதொரு காரணத்தால் மரணத்தைக் கொடுப்பதான கர்மபலமாகிற அன்

ணத்தை அதிக்கிரமித்தானே, அந்தக் காரணத்தினால் ஸ்வ
ரூப ஜ்ஞான ஆவிர்பாவமாகி இரண்டு விதமாகின்ற மோக்ஷத்
துக்கும் அதிபதியானான்.

வாராய் பிரம்மசுலோத்பவனே! அந்தப் புருஷோத்தம
னது லயமில்லாமலும் பிரபஞ்ச சர்ஜனகவுமிருக்கிற இந்த
மகிமை அபரிமிதமானது. லோகங்களுடைய ஸ்வரூப
ஸ்வபாவங்களை அறிந்தவர்கள், இந்த விராட் புருஷனு
டைய அவயவங்களாகிய இந்த உலகங்களில் சகல பிராணிக
ளும் வாசஞ் செய்கின்றனவென்று அறிந்திருக்கிறார்கள்.
கிருதகமென்றும், அகிருதகமென்றும், கிருதாக்கிருதகமென்
றும், மூன்று விதமாகச் சொல்லப்படுகிற இந்தப் பதினான்கு
உலகங்களுடைய உபரிபாகத்திலிருக்கிற கைவல்லியத்துக்
கும், மேலாகிடிருக்கிற திரிபாத் விபூதிகளில் லயமில்லா
மலும் பயமில்லாமலு மிருக்கிற க்ஷேமமானது நிலைநின்றது.
இந்த க்ஷேமத்தைத் திரிபாத் விபூதியான ஸ்ரீ வைகுண்டத்
தில் புத்திரேஷணாதிகளைத் தவிர்ந்து நிஷ்டைபொருந்தின
நைஷ்டிக பிரம்மசாரியும் வானப்பிரஸ்தனும், சந்நியாசியும்,
ஆச்ரமநிஷ்டர்களா யடைகிறார்கள். இவர்களைக்காட்டிலும்
வேறாகியும் சிலாக்கியமாகிய நிஷ்டையிலுமிருக்கிற கிருகஸ்
தாச்சிரமம் பொருந்தினவர்களுக்கு, இந்தப் பதினான்கு
லோகங்களிலுண்டாகிய க்ஷேமமே யல்லாமல் வேறில்லை.

நானாவித ஜன்மங்களை யெடுக்கிற ஜீவனானவன் போகத்
துக்கும் மோக்ஷத்துக்கும் ஏதுவாகியும், தக்ஷிணோத்தரங்க
ளாகியு மிருக்கிற இரண்டு வழிகளையும் அனுசரிப்பான்.
அந்தந்த மார்க்கங்களில் போகசாதனமாகிய மார்க்கமானது
கருமத்தினாலும், மோக்ஷசாதனமாகிய கதியானது பக்தி முத
லாகிய வித்தையினாலும் சாதிக்கப்பட்டிருக்கும். புருஷோத்
தமனேவென்றால், இந்த இரண்டு வழிகளுக்கும் தான் ஆச்ர
யமேயல்லாமல் இவைகளை ஆச்ரயித்ததில்லை. அந்தப் புரு
ஷோத்தமனுடைய தேகாபிமானியான விராட்புருஷன்
பூதங்களுக்கும், இந்திரியங்களுக்கும், திரிகுணங்களுக்கும்
ஆத்மாவாகி, விஷயமாகிய அண்டத்திற் ஜனித்து, அந்த
அண்டத்தையும் அதினுட்பட்ட பிரபஞ்சத்தையும் பிரகா
சஞ்செய்துகொண்டு, தபிக்கிற ஆதித்யன்போல் விளங்கு
கிறார். அந்த மகாத்துமாவினுடைய நாபியிற்பிறந்த நளினத்
தில் நான் ஜனித்தேன். இந்த விராட் புருஷனுடைய
அவயவங்களைக் காட்டிலும் வேறாகிய யக்கிய சாதனங்களைச்
சாதிக்க வேண்டுமென்று யத்தனஞ்செய்த சமயத்தில், அந்தப்

புருஷனுடைய அவயவங்களால் தானே யக்கிய போக்கிய மாகிய பசுக்களையும், அவைகளைக் கட்டுகிறதற்கு யோக்கிய மாகிய யூபஸ்தம்பங்களையும், இப்போது நாமிருக்கிற யக்கிய பூமியையும், சிலாக்கியமாகிய வசந்தாதிகாலங்களையும், யக்கிய பாத்திரங்களையும், நெல் முதலான ஔஷதிகளையும், நெய் முதலான கிநேகவர்க்கங்களையும், மதுராதிரசங்களையும், சுவர்ணாதி லோகங்களையும், மிருத்திகையையும், ஜலத்தை யும், இருக்கு யசுர்க்களையும், சாமங்களையும், அவுத்திராதியை யும், கருமநாமதேயங்களையும், சுவாகாகார முதலான மந்தி ரங்களையும், தக்ஷிணைகளையும், விரதங்களையும், தேவதைக ளுடைய நாம நிர்த்தேசங்களையும், கற்ப சூத்திரத்தையும், சங்கற்பத்தையும், அனுஷ்டான வகையையும் விஷ்ணுகிர மாதிகதிகளையும் தேவதைகளுடைய தியான முதலாகிய மதியையும், பிராயச்சித்தத்தையும், செய்த கருமங்களை ஸ்ரீ பகவானிடத்தில் சமர்ப்பிக்கிறதையும், சம்பாதித்தேன், இப்படி யக்கியசாதனங்களைப் பரிபூரணமாகச் சம்பாதித்த நான் யக்கியஸ்வரூபியாகியும், நியந்தாவாகியுமிருக்கிற அந் தப் புருஷனை யக்கியத்தினாலேயே பூஜித்தேன்.

வாராய் நிர்த்தோஷனே! அப்பால் உன்னுடைய பிரா தாக்களான பிரஜாபதிகளெல்லாரும், இந்திராதி ரூபத்தால் பிரகாசமாகியும், நிஜரூபத்தால் ஒருவராலேயும் அறியக் கூடாமலுமிருக்கிற அந்தப் புருஷனை யேகாக்கிர சித்தர்க ளாகி பஜித்தார்கள். பின்பு யோக்கியமாகிய காலத்தில் மனுக்களும், ரிஷிகளும், பிதுர் தேவதைகளும், தேவர்க ளும், அசுரர்களும், மனுஷர்களும், சுதந்திரப்பிரபுவாகிய அந்தப் பரமபுருஷனை, இந்தக் கிருதுக்களால் பூசித்தார்கள். சிருஷ்டிக்கு முற்காலத்தில் மிகுதியான பிரகிருதி குணங் களைத்தரித்த ஸ்ரீமந் நாராயண னென்னுஞ் சொல்லுக்கு விஷயமாகிய யாதொரு பகவானிடத்தில் இந்தச் சமஸ்த பிரபஞ்சமும் ஸ்திரமாயிருக்கிறதோ, அந்தப் பகவானால் ஆக்கியாபிக்கப்பட்ட நான் சிருஷ்டி செய்கிறேன். அவன் வசனை அரனும் இந்த உலகத்தைச் சங்காரஞ்செய்கிறுன். சிருஷ்டி, ஸ்திதி, சங்காரங்களுக்கும் காரணமாகிய மூன்று சக்தியையும் படைத்த அந்தப் பரமபுருஷன் விஷ்ணுரூபத் தைத் தரித்து இந்த உலகங்களை ரக்ஷணஞ் செய்கிறுன். வாராய் ஐயனே! என்னைக்குறித்து எப்படி நீ பிரஸ்னஞ் செய்தையோ அப்படியே விசிதமாகச் சொன்னேன். காரிய காரணஸ்வரூபமாகிய சிருஷ்டியோக்கியமான வஸ்துக்களி

லொன்றும் குணபரிபூரணனை ஸ்ரீமந் நாராயணனைக் காட்டிலும் வேறல்ல.

'வாராய் சிரேஷ்டனே! யாதொரு காரணத்தால் ஸ்ரீ ஹரியானவர் பக்தியதிசயத்துடனே கூடிய மனதை யுடைத்தாகிய வென்னால் தியானஞ் செய்யப்படுகிறாரோ, அந்தமகிமையாகி யென்னுடைய தசேந்திரியங்கள் அசத்தாகிய விஷயங்களில் சம்பந்திக்கவில்லை. என்மனதும் ஒரு காலத்திலும் வியர்த்த சிந்தையைச் செய்யவில்லை. என்வார்த்தையும் ஒரு சமயத்திலும் அபத்தமாகிறதில்லை. அப்படிப்பட்ட இந்திரிய மனோ வாக்கு விருத்திகளை யுடைத்தாகியும், வேதமயனாகியும், தபோமயனாகியும், பிரஜாபதிகளுக்கெல்லாம் சிரேஷ்டனாகியும், அவர்களுடைய வந்தனை யோக்கியனாகியு மிருக்கிற நான் மனோஜயஞ்செய்து கொண்டு சிலாக்கியமாகிய யோகத்திலிருந்து தியானஞ்செய்து கொண்டிருந்தாலும், எவனிடத்தில் ஜனித்தேனோ அவனையும் அந்த ஜனனத்தையும் அறிந்ததில்லை. யாதொருவன் தனக்கு முடிவை யடையமாட்டாத ஆகாசத்தைப்போல் தனதான சங்கல்பத்தினுடைய அளவிடப்படாத விபவத்தைத் தானே அறியமாட்டானோ, அந்த மகிமையை மற்றவர்க ளெப்படித் தான் அறியப்போகிறார்கள். தன்னை யடைந்தவர்களுடைய ஜனனமரண மாகிய சமுசாரத்தைச் சேதித்துக்கொண்டும், க்ஷேமகாரணமாகியும், க்ஷேமமாகியுமிருக்கிற அவன் திருவடிகளை வணங்கினேன். நானும், ருத்திரனும், நீங்களும், சத்தியமாகிய அவனுடைய கதியை அறிந்ததில்லை. இப்படி யிருக்கையில் மற்ற தேவர்கள் எப்படி யறியப்போகிறார்கள். ஆனாலும் அவனுடைய பிரகிருதியென்று சொல்லப்படுகிற மாயையால் மோகிக்கப்பட்ட புத்தியை யுடைத்தான பேர்களாகி நிர்மிக்கப்பட்டிருக்கிற இந்தப் பிரபஞ்சத்தை நம்முடைய மதியுள்ள மட்டும் அறிந்துகொள்ளுகிறோம். யாதொருவனை தத்துவமாக அறியமாட்டாத நாமெல்லாரும் எவனுடைய அவதார லீலைகளைக் கானஞ்செய்கிறோமோ அந்தப் பகவானுக்கு வந்தனஞ்செய்கிறேன். அப்படிப்பட்ட மகிமையுடைத்தாகித் தனது அவதார லீலைகளால் நம்முடைய மதி விஷயனாகியும், பிரபஞ்சகாரணனாகியு மிருக்கிற பரமபுருஷன், கல்பங்கள் தோறும் தனக்கு ஜனனமில்லாமலிருக்கையிலும், தன் சங்கற்பத்தால் தன்னிடத்தில்தானே ஜனித்தும், ஜனித்ததை ரக்ஷித்தும், பின்பு சங்காரத்தையும் செய்கிறானோ அந்தப் பரமபுருஷனுடைய தத்துவம் ஏதென்றால், பரமார்த்த சத்தியமாகியும், பரிபூரணமாகியும், ஆதியந்தங்க

ளில்லாமலும், ஹேயகுணாகிதமாகியும், சரீரமயத்தால் ஒன்ருகியும், சலனமில்லாமலும், நிச்சயமாகியு மிருக்கிற கியான ஸ்வரூபமே யல்லாமல் வேறல்ல.

வாராய் முனியே! இந்தப் பரமாத்ம ஸ்வரூபத்தை, இந்திரியங்களையும் மனதையும் அகங்காரத்தையும் ஜயித்து, சாந்தியுடைத்தாகிய முனிவர்கள், அந்தச் சாந்திபொருந்திய காலத்தில் அறிந்திருப்பார்கள். அவர்களே அசத்துக்கரான வாதிகளுடைய தர்க்கங்களால் மனதில் கலக்கத்தையுடைத்தானபோது அறியமாட்டார்கள். அவ்வியத்தமான பிரகிருதியுடனே சம்பந்தித்து, அந்தப் பிரகிருதியாகிற புறத்தில் வாதஞ்செய்கிறபடியால், புருஷனென்று சொல்லப்படுகிற அந்த ஸ்வரூபமானது பரமாத்மாவுக்கு முதலான அவதாரமாகும். குணவைஷம்மியமும் காரண காரிய ஸ்வரூபமாகிய பிரகிருதியும், அவனுடைய சக்தி ஸ்வரூபமான அவதாரங்களும், மகத்துவமும், பஞ்சமகா பூதங்களும், சத்வாதிகுணங்களும், ஏகாதசேந்திரியங்களும் விராட்டென்று சொல்லப்படுகிற இவைகளுடைய சமூகமாகிற சரீரமும், ஸ்தாவரங்களும், சங்கமங்களும், நானும், சிவனும், குபேந்திரனும், தக்ஷன் முதலான இந்தப் பிரஜாபதிகளும், நீ முதலான பிரம்மரிஷிகளும், சொர்க்கபோக நாயகர்களும், பக்ஷி சிரேஷ்டர்களும், நரேந்திரர்களும், பாதாளாதிபதிகளும், கந்தர்வா தீஸ்வரர்களும், வித்தியாதர சிரேஷ்டர்களும், சாரணசிலாக்கியர்களும், யக்ஷாதியர்களும், ராக்ஷத மூர்த்தன்னியர்களும், சர்ப்பாதிபர்களும், நாக மவுலிகளும் பிதுர் சிரேஷ்டர்களும், மனுஷிய சிரேஷ்டர்களும், தைத்தியேந்திரர்களும், சித்தேசுவரர்களும், தானவாதியர்களும், மற்றுமுள்ள பிரேத பிசாச பூத கூஷ்மாண்ட ஜல ஜந்து, மிருக பசுக்களில் சிரேஷ்டங்களும், அவனுடைய காரியரூபமான அவதாரங்கள். இதுவுமன்றி யாதொரு வஸ்து இந்த உலகங்களில் அந்தப் பகவானுடைய ஐஸ்வரியத்தையும், தேஜஸையும், கனத்தையும், பராக்கிரமத்தையும், இந்திரிய மனதுகளுடைய பலத்தையும், சம்பத்தையும், அதிகாரத்தையும், லச்சையையும், காந்தியையும், புத்தியையும், ஆச்சரியமான வர்னத்தையும், உடைத்தாயிருக்குமோ, இவையெல்லாம் உருவை யெடுத்திருக்கிற அந்தப் பரமாத்மஸ்வரூபமேயன்றி வேறல்ல. வாராய் ரிஷியே! ஜகத்வியாபகமான அந்தப் பரமாத்மாவுடைய எந்த முக்கியமாகிய லீலாவதாரங்களை யறிந்தவர்கள் சொல்லுகிருர்களோ, காதுகளிலுண்டாகிய பாவங்களைச் சொலிப்பிக்கிற அந்த அவதார

கதைகளைக் கிரமமாகச் சொல்லத்தொடங்குகிறேன். அதி மனோக்கியமான இந்தக் கதைகளாகிற அமுதங்களை உமது காதுகளாகிற பானபாத்திரங்களால் பானஞ்செய்யும்.

---

## ஏழாவது அத்தியாயம்

இது, பகவானுடைய லீலாவதாரங்கள், அந்தந்த அவதாரக்கிரமங்கள், அந்தந்தப் பிரயோசனங்கள், இவைகளைப் பிரம்மாவினால் நாரதருக்குச் சொல்லப்பட்டவாறு சொல்லப்படுகின்றது.

இந்தப்பிரகாரம் வியஷ்டி சமஷ்டி ரூபமாகிய ஸ்ரீ ஹரி சிருஷ்டியை நாரதருக்கு உபதேசஞ்செய்த இரண்யகர்ப்பன், அந்த ஹரியுடைய லீலார்த்தமாகியும் சுத்த சத்வமாகியுமிருக்கிற பகவத் அவதாரங்களைச் சொல்லத் தொடங்கினார். வாராய் நாரதனே! எப்போது இந்தப் பூமண்டலத்தைத் தைத்தியனான இரண்யாக்ஷன் சுருட்டி யெடுத்துக்கொண்டு மகா சமுத்திரத்தில் பிரவேசித்தானோ, அப்போது இந்தப் பூமண்டலத்தை உத்தரிக்கவேண்டிச் சகல யக்கியமாகியும் வராக ரூபமாகியு மிருக்கிற சரீரத்தைத் தரித்தவனாகிப் பகவான் அவதரித்து, மகார்ணவ மத்தியிலிருக்கிற இரண்யாக்ஷனை, யக்கியோத் தாரகனாகிய அனந்தன், தன் கோரைப் பற்களால் மலையைப் பிளந்தாற்போல் பிளந்தார். இப்பால் ருசிப்பிரஜாபதி யிடத்திலிருந்து ஆகுதியென்கிற தேவிக்குக் குமாரனாகி ஜனித்துச், சுயக்கினென்கிறபெயரால் விளங்கின பரமபுருஷன், தன்னுடைய பாரியையான தக்ஷணாதேவி யிடத்தில் சுயாமாளென்று பெயரையுடைத்தாகிய தேவர்களை ஜனிப்பித்து, மூன்று லோகங்களுடைய மகத்தாகிய சிரமத்தைப் பரிகரித்தார். அப்பால் தனக்கு மாதாமகனாகிய சுவாயம்புமனுவால் ஹரியென்று அடிக்கடி சொல்லப்பட்டார். கர்த்தமப் பிரஜாபதியினுடைய கிருகத்தில் அவருடைய பாரியையான தேவஹூதி யிடத்தில் ஒன்பது கன்னிகையர்களுடனே யுற்பவித்து ஸ்ரீ கபிலரென்று நாமத்தைத் தரித்து, தனக்கு மாதாவாகிய தேவாஹூதிக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசித்தார். பின்பு அந்தத் தேவஹூதியானவள் அந்த வித்தையால் திரிகுண சங்கமாகிற மலத்தை அந்த ஜன்மத்தில்தானே தன்னாத்மாவிடத்தில் வேண்டாம லுதறிப் போட்டுக் கபிலருக்கு யோக்கியமாகிய கதியை யடைந்தாள். பின்பு புத்திரனிடமாகத் தபசுசெய்த அத்திரி மஹாரிஷியுடைய தபசினால் சந்தோஷத்தையடைந்த பரமபுருஷன், அந்த அத்திரியைப்பார்த்து ஓ அத்திரிமஹாரிஷியே! உம்மு

டைய தபசுக்குப்பலனுக என்னை உமக்குத் தத்தஞ்செய்தே னென்றுசொல்லி அந்த ரிஷிக்குத் தான் குமாரனுக அவதரித் ததனுல், தத்தாத்திரையனென்று பிரகாசமாகிய நாமத்தைத் தரித்தார். அந்தப்பகவானுடைய பாதபங்கஜங்களுடைய பராகங்களால் பரிசுத்தமாகிய மூர்த்திகளை யுடைத்தான யதுக்களும்,ஏயாள் முதலான பேர்களும், யோகசம்பத்தையடைந்து, திருஷ்டா திருஷ்டரூபமாகிய உபய சம்பத்தையும் அடைந்தார்கள். அப்பால் அநேகவிதமாகிய லோகங்களைச் சிருஷ்டிக்கவேண்டுமென்கிற இச்சையால் செய்த என் தபசினுடைய சமர்ப்பணத்தால் ஜனகனென்றும், சனந்தனென்றும், சனற்குமாரனென்றும், சனச்சுஜாதனென்றும் சனபதத்துடனே கூடிய நான்குவிதமாகிய நாமங்களைத் தரித்து, நான்கு ரூபமாக அவதரித்து, முன் கற்பத்தில் விளங்கின ஆத்மவித்தை பிரளயத்தில் விநஷ்டமாயிருக்கிறபடியால் அதை இந்தக் கற்பத்தில் அனேகமாகிய முனிவர்களுக்கு உபதேசித்தார். அந்த உபதேசத்தால் அந்த ரிஷிகள் தங்கள் மனதில் பிரம்மஸ்வரூபத்தைச் சாக்ஷாத்கரித்தார்கள். இப்பால் தக்ஷகன்னிகையான மூர்த்தி தேவியிடத்தில் தருமப் பிராஜாபதிக்கு, நாராயணனென்றும், நரனென்றும், இரண்டு ரூபமான குமாரராகி அவதரித்துத் தபசைச் செய்யுங்காலத்தில், விக்கினஞ் செய்யவேண்டுமென்று அவ்விடத்தில் வந்த மன்மத சேனைகளாகிய அப்சர ஸ்திரீகள் அந்தப் பகவானுடைய நியம லோபத்தைக் காணுமலும், தங்களுடைய தபோவிகாதமாகிய நியமலோபத்தாலும், தங்களைக்காட்டிலும் மிகுதியாகிய சௌந்தரியாதிகளுடனே கூடிய அவன் தொடையிற் பிறந்த அப்சரசுக்களைக் கண்டும், லச்சைப் பட்டுக்கொண்டு, மன்மதனுடைய சேனைகளை நிக்கிரகிக்கமாட்டாமற் போனுர்கள். காமனைத் தகித்த புகழுடையவர்களான மஹானுபாவர்களும் சகிக்கக்கூடாமலும் தன்னைத்தகிக்கிற சக்தியை யுடைத்தாகியுமிருக்கிற காமத்தைத் தோஷமென்று நினைத்துத் தகிக்க மாட்டாமற் போனுர்களோ? அந்தக் காமமும், நிர்மலமாகிய நாராயணன் இருதயத்தைப் பிரவேசிக்க வேண்டுமென்று நினைத்தபொழுதே தான் பயந்தோ? அப்படிப்பட்ட மஹாபுருஷனுடைய மனதைக் காமமானது எப்படித்தான் அனுசரிக்கும், இப்பால் யாதொருவன் பாலனுகி யிருந்தாலும், உத்தான பாதனென்கிற ராஜா சமீபத்தில் மகத்தானதாயுடைய வார்த்தையாகிற பாணங்களால் போக்கப்பட்டவனுகித் தபசைக் குறித்து வனங்களையடைந்து தபசைச்செய்து திவ்யமாகிய தோத்திரங்களையுஞ் செய்கிற அவன் பொருட்டுப் பிரசன்னனுகிய ஸ்ரீ ஹரியானவர் துருவகதியைக் கொடுத்த

பின்பு, அவனுடைய நிலையாகிய கிஞ்சுமார சக்கரத்துக்கு மேலாகிய ஜனலோகத்தில் வாசஞ்செய்கிற பிருகு முதலாகிய முனிவர்களும், அதின் கீழ்ப்பட்ட சுவர்க்கத்திலிருக்கிற சப்த ரிஷிகளும் எவனைத் தோத்திரஞ் செய்கிறார்களோ, அவனே துருவனென்று சொல்லப்படுகிற பரமபுருஷன். அப்பால் வேனனென்கிற ராஜா சாஸ்திர மரியாதிகளை அதிக்கிர மித்ததா லுண்டாகிய பிராமண சாபமாகிய வச்சிராயுதத் தால் பஸ்மமாகிய பராக்கிரமத்தையுஞ், சம்பத்தையும் உடைத் தாகி நரகத்தில் விழாநின்று மிருக்கிற அந்த வேனனை ரக்ஷிக்கவேண்டுமென்று, ரிஷிகளுடைய பிரார்த்தனையால், அவனையும் ரக்ஷித்து, அவனுக்கு மகனாக ஜனித்து, இந்தப் பூமியாகிற தேனுவிடத்திலிருந்து சகலமாகிய பலன்களையும் கறந்தானே, அவன் பிருது சக்கிரவர்த்தியென்னும் பரம புருஷன். பின்பு ஆக்கினீத்திர சுதனாகிய நாபியிடத்தி லிருந்து சுதேவியென்னும் பெயரை யுடைத்தாகிய மேரு தேவிக்குக் குமாரனாக அவதரித்த இந்த ஹரியானவர், விருஷப யோகியென்று நாமத்தையடைந்து சகல விஷயங் களிலும் ஆசையை யொழித்து மிகவும் சாந்தியடைந்த இந் திரியங்களுடனே சர்வசரீரனாகிய பரமாத்ம ஸ்வரூபத்தில் நிலையாகி நின்று, மூடனைப்போல் தன்னை நினைக்கும்படி செய்தார். அப்போது ரிஷிகள் இவனுடைய பரம அம்ஸாச் சிரமத்தைப் பரமோத்கிருஷ்டமென்று தோத்திரஞ் செய் தார்கள்.

அப்பால் என்னுடைய சத்திர யாகத்தில் இந்த ஆதி புருஷனானவன் ஹயக்கிரீவனாக அவதரித்து, வேதமயனாகி யும், சகல தேவர்களுக்கும் அந்தராத்மாவாகியும், உருக்கின தங்கத்துக்குச் சமானமாகிய தேககாந்தியுடனே பிரகாசித்த, இந்த யக்கிய புருஷனுடைய மூச்சுக்காற்றை யுடைத்தாகிய நாசாரந்திரங்களிலிருந்து, அதிபாவனமாகிய சப்த ரூபங்க ளான வேதங்கள் பிரகாசித்தன. அப்பால், பிரளய காலத் தில் சகல பிராணிகளுடைய சமூகங்களுக்கும் ஆதாரமாகிய பூமிஸ்வரூபமாகியும், மச்ச ரூபமாகியும், சுவாயம்புமனுவால் காணப்பட்ட இந்தப் புருஷோத்தமனானவன், நான் பயந்த சமயத்தில் நழுவின வேதமார்க்கங்களைத் தான் அறிந்து கொண்டு, அந்த ஜலத்தில் விளையாடினானல்லவோ, பின்பு க்ஷீரசமுத்திரத்தில் அமர சிரேஷ்டர்களும் அசுராதிபதி களும் அமிர்தத்தைக் கடையும்போது, இந்த ஆதிபுருஷன் கூர்மரூபத்தைத் தரித்துத், தன் முதுகால் மத்தான மந்தர பர்வதத்தை யெடுக்குங் காலத்தில், அந்த மலையுடைய வாஞ்சு

தலால் பரிகரிக்கப்பட்ட நினைவை யுடைத்தாகி நித்திரை யாகிற மகோற்சவத்தை யடைந்தார்.

பின்பு சுவர்க்க நிவாசிகளான தேவதைகளுடைய பய நிவர்த்தி நிமித்தம், நாசிம்மரூபத்தைக் கற்பித்துச் சுழன்று கொண்டிருக்கிற புருவ நெறிப்பினாலும், தம் முஷ்டிகளா லும், விகடமாகிய முகத்தை யுடைத்தாகியும், வெகு தூரத்தி லிருந்து சமீபத்தை யடைந்து பிரகாசித்துக், கெதையைத் தரித்து மிருக்கிற, தயித்தியேந்திரனாகிய இரண்யகசிபுவைத் தள்ளி நகங்களாற் பிளந்தார். பின்பு சரசினுடைய நடு விலே மிகவும் பலத்தையுடைத்தாகிய முதலையால் பீடிக்கப் பட்ட பாதத்தையுடைத்தாகி யிருக்கிற கஜேந்திரனானவன், தன்மத மடங்கினபின்பு, ஓ ஆதிபுருஷனே! ஓ அகிலலோக நாயகனே! அதிபாவனமாகிய கீர்த்தியுடையவனே! சிர வண மங்களமான நாமதேயங்களைத் தரித்தவனே! யென்று உயர்ந்த தொனியை யுடைத்தாகிய துதியைச்செய்து, சரணு கதனாகக், கஜயூதனை அப்பிரமேயனாகிய அந்தச் சக்கிராயுதன், பக்ஷிராஜனான கருடனுடைய புஜத்திலேறி விரைந்து யெழுந்தருளித், தன் சக்கிராயுதத்தால் அந்த முதலையுடைய வாயைப் பிளந்து, அதின் முகத்தில் அகப்பட்டிருந்த கஜ சிரேஷ்டத்தைத் தன் கையால் அவலம்பித்துத், தயாதிசயத் தால் அவனை உத்தாரஞ் செய்தவன், குணபரிபூரணனை ஸ்ரீ ஹரியே யல்லாமல் வேறல்ல. யக்கியமத்தியில் ஸ்ரீ விஷ் ணுவானவர், அதிதிதேவிக்குக் குமாரர்களான துவாத சாதித்தர்களுக்கு அபகிருஷ்டரானாலும், சுபகுணங்களால் மிகவும் சிரேஷ்டராகவே விளங்குகிறார். யாதொரு காரணத் தால் இந்தப் பதினான்கு லோகங்களையும் வாமன ரூபமாகிய தன்னுடைய பதந்நியாசங்களால் மூன்றடியென்னும் வியா ஜத்தால், மகாபலி பிரதிக்கினை பண்ணின உத்தரக்ஷணத்தில் ஆக்கிரமித்தார். சகல லோகநாயகனாகிய பரமபுருஷன் யாசனைச்செய்யலாமோ வென்றால், நியாயமார்க்கத்திலிருக்கிற புருஷனை யாசனையைத் தவிர்ந்து மற்ற வழிகளால் ஸ்தானப் பிரம்சஞ் செய்விக்கிறது சுவாமிக்கு உசிதமல்ல, பக்தனாகிய பலியை யாசனையாலாகிலும் ஸ்தானப்பிரம்சம் செய்விக்கிற தும் உசிதமோவென்றால், தன்னுடைய ஸ்ரீ பாததீர்த்தங்களை மிகவும் சிரசில் தரித்தும், தன் குருவாகிய சுக்கிராசாரியினு டைய வசனத்தையு மெண்ணாமல் அவன் வார்த்தைப்படிக் குத் தன்னுடைய விபவத்துக்கு இளப்பம் வந்திருக்கையிலும் தான் கொடுத்த மூன்றாமடி வைக்கிறதற்கிடமாகித் தன்னையே கொடுத்தும் வேறே மனதிலொன்றும் நினையாதபடிக்கு இப்

போது அவன் பலாத்காரத்தால் வந்திருக்கிற திரிலோகாதி பத்தியமும் முன்னவன் கோரிக்கையால் வருகிற மூன்று லோக விபவமும் சரியான பிரயோசன மல்லவென்று தான் சாலோக்கியமாகிய விபவத்தைக் கொடுக்கவேண்டுமென்று நினைத்துச் செய்த யோசனையும் அநுக்கிரகமேயல்லாமல் அவனுக்கு நிக்கிரகமல்ல.

வாராய் நாதனே! ஸ்ரீ வாசுதேவனைச் சரணமாகவரித்த மகானுபாவர்கள் யாதொன்றை நன்றாய் துரிதமாக அறிவார்களோ, ஆத்மதத்வப் பிரகாசமாகியும் ஸ்ரீ பாகவதமென்று நாமத்தைத் தரித்துமிருக்கிற கியானசாதனத்தையும், பக்தி யோகத்தையும், மிகுந்த பக்தியை யுடைத்தாகிய உன்னால் மிகவு மாதரவுடனே கேள்வியுற்றேன். இப்பால் மன்வந்தரங்கள்தோறும் அவதரித்துப் பத்துத் திக்குகளிலும் வியாபித்திருக்கிற தன்னுடைய பராக்கிரமமாகிற சக்கரத்தைத் தரித்து, மற்ற இராஜ வர்க்கங்களுக்கு நிக்கிரகத்தைக் கற்பித்துத், தன்னுடைய திவ்ய சரித்திரங்களால் மூன்று லோகங்களுக்கும் உயர்ச்சியான சத்திய லோகங்களிலேயும் தன் கீர்த்தியை விர்த்தி செய்தான். பின்பு ஸ்ரீ ஹரியானவர் உலகத்தில் அவதரித்துத் தன்வந்திரியென்று திவ்ய நாமத்தைத் தரித்து, மிகுந்த கீர்த்தி சம்பன்னராகி அதிகமாகிய ரோகங்களை யுடைத்தான நாருடைய வியாதிகளைத் தன் திருநாமத்தால் சீக்கிரத்தில் பரிகரித்துத் துர்மரண மில்லாத ஆயுசுடைய சமுர்த்தியையுங் கொடுத்துத், தயித்தியரால் தள்ளப்பட்டிருந்த யக்கிய பாகத்தையு மடைந்து, ஆயுர்வேதத்தையும் பிரகாசஞ்செய்து, மறுபடியும் உக்கிரவீரியனான பரசுராம ரூபத்தைத் தரித்து, உலகத்தினுடைய லயத்தைக் குறித்துத் தெய்வத்தால் சம்பாதிக்கப்பட்டும், பிராமணர்களிடத்தில் துரோகத்தால் வேதமார்க்கங்களை யிழந்தும், நரகயேதுவாகிய கருமங்களை இச்சித்தும், பூமிக்குக் கண்டகம்போலவு மிருக்கிறக்ஷத்திரிய குலத்தைத் தீக்ஷணமாகிய பரசுதாரையால் இருபத்தொரு தலைமுறை சங்கரித்தார்.

பின்பு மயேசனானவன் தன்னுடைய அமிசமாகிய லக்ஷ்மணாதிகளான பிராதாக்களுடனே இக்ஷ்வாகு வமிசத்தில் அவதரித்துத், தன் பிதாவாகிய தசரதனுடைய ஆசனத்திலிருந்து, தன்னுடைய பாரியையாகிய சீதையுடனேயும், தம்பியாகிய லக்ஷ்மணனுடனேயும், வனப்பிரவேசமாகிப் பத்துச் சிரசுடனேகூடிய ராவணனை விரோதஞ்செய்து, அவன் பொருட்டுச் சமுத்திரத்தைப் பந்திக்கத், திரி

புரத்தைத் தகிக்கவேண்டுமென்று இச்சித்திருந்த அரனைப் போல், தன் சத்துருவினுடைய பட்டணத்தைத் தகிக்க வேண்டுமென்று நினைத்திருக்கிற ஸ்ரீ ராமனிடத்திலிருந்து, பயத்தையடைந்து, நடுக்கமுண்டாகி வெகுதூரத்திலிருக்கிற சுகுர்தஜனமாகிய சீதாதேவியால் கலக்கப்பட்ட ரோஷத்தினால் சிவந்திருக்கிற வீக்ஷணத்தால் மிகவும் தாபத்தையடைந்த மகா மச்சியங்களையும், சர்ப்பங்களையும், முதலைகளையும் உடைத்தாகியுமிருக்கிற சமுத்திரராஜன் மார்க்கத்தைக் கொடுத்தான். இந்தத் தாசரதியானவர் சயின்ய மத்தியில் சஞ்சரிக்கிற பாரியாபகாரியான தசகந்தரனுடைய மார்பிலே முறிந்துமிருக்கிற மகேந்திரவாகனயாகிய ஐராவதத்தினுடைய தந்தங்கள்போல், கீர்த்தியால் வெளுத்த திக்குகளுடைய விஜயத்தால் உண்டாகியநகைப்பை இவன் பிராணங்களுடனே கூடத் தம் தனுசினுடைய நாணோசைகளால் அப்பொழுதே அபகரித்தார். பின்பு தன் மாயையால் தன்னம்சமானது கறுத்தும் வெளுத்துமிருக்கிற கேசங்களாகக் காண்பித்த இந்த மாயன் ஆசுராமிசமாகிய அரசர்களுடைய சமூகத்ததாகி பீடிக்கப்பட்ட பூமியின் கிலேசத்தைப் பரிகரிக்க வேண்டிப் பலராமருடனே ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்து ஜனங்களால் அறியப்படாத நடத்தையை யுடையவனாகித் தன்னுடைய மகிமைக்கு அநுகுணமாகிய கருமங்களைச் செய்யப்போகிறார், அதிபாலனாலே யுண்டான பூதனாமரணமும், அவதரித்த மூன்று மாதத்தில் பாதத்தாலுண்டாகிய சகடபேதனமும், தவழந்து விளையாடுங்காலத்தில் ஆகாசத்தையளாவின மருதமரங்களுடைய நடுவிற் புகுந்த இவனால் சனித்த அர்ச்சுன விருக்ஷங்களுடைய பேதனமும், இடைச்சேரியிலிருக்கிற பசுக்களையும் பசுபாலர்களையும், விஷசலபானத்தால் மரிக்குஞ் சமயத்தில் அனுக்கிரக நிமித்தமாகிய அந்த திருஷ்டி வருஷத்தால் ஜீவனஞ் செய்விக்கப்போகிறார். இதுவுமல்லாமல், கோக்களும், கோபாலர்களும் ஜலபானஞ் செய்த யமுனை மடுவில் விளையாடிக்கொண்டு விஷசோதனார்த்தமாக ஆலகால வீரியத்தால் அலைந்துக்கொண்டிருக்கிற நாக்கையுடைத்தாகிய காளியனை யுச்சாடனஞ் செய்யப்போகிறார். ஒருவராலேயும் அறியக்கூடாத வீரியத்தையுடைத்தாகிய ஸ்ரீ கிருஷ்ணன் பலராமருடனேகூடக் காளியனை நிக்கிரகித்த தினத்தின் ராத்திரியில் யமுனை தீரத்தில் கிரீஷ்மருதுவால் மிகவும் உலர்ந்த மரங்களை யுடைத்தாகிய முஞ்சாவியில் அயர்ந்து நித்திரை யடைந்திருக்கையில் காட்டுத் தீயாற் றகிக்கப் படுகிறபொழுது இந்த ஜனங்களைக் கண்களை மூடச் சொல்லிக் காக்கப்போகிறதை ஜனங்கள் சொல்லப்போகிறார்

கள். இந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய தாயான யசோதை, இந்தக் குமாரனுடைய பந்தன நிமித்தமாக எந்தெந்தக் கயிற்றை யெடுப்பாளோ அந்தந்தப் பாசமெல்லாம் குறைவாகவே யிருக்கும். மறுபடியும் மாதாவான கோபிகையானவள் கொட்டாவி விடுகிற இவனுடைய வதனத்தில் ஈரேழுலகங் களையுங் கண்டு தன்மனதிற் சங்கித்து, இவன் பரமபுருஷ னென்று நிச்சயிக்கப்போகிறாள். வருணபாசத்தாற் சனித்த பயத்திலிருந்து நந்தகோபனையும், வியோமனென்று பெயரை யுடைய மயன் குமாரனால் பிலத்தில் மறைக்கப்பட்ட கோபாலர்களையும் விடுவிக்கப்போகிறார். அக்கினியால் பரிக் கப்பட்டும் ராத்திரியில் மிகவும் சிரமத்தில் நித்திரை யடைந்து மிருக்கிற கோகுல வாசியரான ஜனத்தை ஸ்ரீ வைகுந்த நகரத்தையடையச் செய்விப்பார். இந்த ஸ்ரீ கிருஷ் ணன் ஏழுவயதா யிருக்கையில் கோபாலர்கள் இந்திரனுக்குச் செய்கிற யக்கியமானது கெடுக்கப்பட்ட வளவில் விரதத்தி னுடைய க்ஷயத்தின்பொருட்டு இந்திரனனவன் மழை வரு ஷித்தசமயத்தில் பசுக்களை ரக்ஷிக்கவேண்டுமென்று இச்சித் துப் பரிசுத்தமாகியும் ஒன்றாகியுமிருக்கிற கரத்தில் கோவர்த் தன பருவதத்தை மேலேயெடுத்து ஏழுநாள் வரைக்கும் லீலை யுடனே தரிக்கப்போகிறார். வனத்தில் சந்திர கிரணத்தால் வெளுத்திருக்கிற ராத்திரியில் விளையாடிக்கொண்டும் ராஜக் கிரீடா நிமித்தமாகக் கோபிகளுடைய மார்க்கங்களை நிரீக்ஷித் துக் கொண்டு மிருக்கிற இந்த வாசுதேவன் அவியக்த மதுரமாகி யிருக்கிற சுரபிசேஷத்தை யுடைத்தான கியானத் தால் விர்த்தி பண்ணப்பட்ட காமரோகத்தை யுடைத்தாகிய ஸ்திரீகளை அபகரிக்க நினைத்துவந்த குபேரன் தம்பியாகிய சங்கசூடனுடைய சிரசை அரிக்கப் போகிறான். பிரலம்பா சூரனும், தேனுகம்பனும் கெதியும், அரிஷ்டனும், முஷ்டி கனும், சாணூரனும், குவலயாபீடமென்கிற யானையும், கம்ச னும், காலயவனனும், நரகாசுரனும், பவுண்டரீகன் முதலான பேர்களும், மற்றுமுள்ள சால்வனும், துவிதனும், பல்வல னும், தந்தவக்கிரனும், ஏழு எருதுகளும், சம்பாசுரனும், விடூரதனும், ருக்குமி முதலான பேர்களும், காம்போஜ னும் குருகுலத்திற் பிறந்தவர்களும், சிருஞ்சயனும், கேக யன் முதலான பேர்களும், எவர்கள் யுத்த பூமியில் ரணத் தைச் சிலாகித்துக் கொண்டு கையில் பிடித்த வில்லுக ளுடனே சஞ்சரிப்பார்களோ, அவர்களெல்லாரும் பலராம னென்றும், வீமனென்றும், அர்ச்சுனனென்றும், பரியாய மாகிய நாமதேயங்களை யுடைத்தான ஸ்ரீ ஹரியால் ஒருவ ராலேயுங் காணக்கூடாமலும், அரிநிலையுமாகியு மிருக்கிற

வைகுந்தத்தைக் காலாந்தரத்தில் அடையப்போகிறுர்கள். இவையெல்லாம் திவ்ய சரித்திரமென்றே நினைக்கவேண்டும். மற்றதெல்லாம் பின்பு யுகங்கள்தோறும் காலத்தினுல் லயத்தை யடைந்த புத்தியை யுடைத்தாகியும், சொல்பமாகிய ஆயுளை யடைந்துமிருக்கிற நமருக்குத் தன்னதான வேதங்களுடைய முடிவைக் காணுகிறது மிகவும் அரிதென்று நிச்சயித்துச் சத்தியவதியிடத்தில் வியாசராக ஆவிற்பவித்து வேதமாகிற விருக்ஷத்தைச் சாகையென்கிறகிளையாக விபாகஞ் செய்யப்போகிறுர். பின்பு மயனுல் நிர்மிக்கப்பட்டும், அறியக்கூடாத வேகத்தை யுடைத்தாகியு மிருக்கிற புரங்களால் லோகங்களைச் சங்கரித்துத் தேவ துவேஷிகளாயும், வேதோக்தங்களாகிய தர்மானுஷ்டானத்தில் நிரதராகியு மிருக்கிற பாஷண்ட ஜனங்களுக்கு யோக்கியமாகிய விஷயங்களை நிவர்த்தித்து அயோக்கியமாகிய வஸ்துக்களைப் பரிக்கிரகித்தும் விகாரமாகிய மதியைக் கற்பிக்கவேண்டி அதற்குச் சித்தமாகிய வேஷத்தைத் தரித்துப் பாஷாண்ட தருமங்களை மிகவுஞ் சொல்லப்போகிறுர். எந்தக் காலத்தில் சத்புருஷர்களுடைய கிருகங்களில் ஸ்ரீஹரி கதைகளில்லாமற்போகுமோ? அந்தக் கிருகங்களில் ஜனித்த பிராமணர்கள் பாஷாண்டிகளாகிறுர்கள். சூத்திரகுலத்திற் பிறந்தபேர்கள் எந்தக்காலத்தில் ராச்சியபாரஞ் செய்வார்களோ? எப்போது சுவாகா வென்றும், சுவாதாவென்றும், வஷ்டென்றும் சொல்லப்படுகிற சப்தங்கள் க்ஷயிக்குமோ? அந்தக் கலியுகாந்தத்தில் இவைகளைச் சிருஷ்டிக்கவேண்டிக் குணபரிபூரணனை பகவான் அவதரிக்கப் போகிறுர். சிருஷ்டி காலத்தில் தபசும், நானும், ரிஷிகளும், நவப் பிரமாக்களும், பரிபாலன காலத்தில் தருமமும், ஸ்ரீ விஷ்ணுவும், மனுக்களும், அமரர்களும், ராஜாக்களும், லயகாலத்தில் அதருமமும், அரனும், கோபப் பிரதானங்களான சர்ப்பங்களும், அசுராதிகளும். மிகுந்த சக்தியையுடைத்தாகிய இந்தப் பகவானுடைய மாயா விபூதிகளே. கியானியா யிருந்தாலும் யாதொருவன் பூமிரேணுக்களை எண்ணி நிச்சயிப்பானே அவன் விஷ்ணுவுடைய வீரியங்களைக் கமனஞ் செய்கிறதற்குச் சமர்த்தனுவான். பரம புருஷனுடைய மாயா பிலத்தின் முடிவை நானறியேன். உனக்கு முன்னமே பிறந்து அன்றுமுதலின்றையவரைக்கும் தியானஞ் செய்கிற சனகாதிகளும் அறியமாட்டார்கள். ஆதிதேவனுகியும் ஆயிரமுகங்களைத் தரித்துமிருக்கிற சேஷனும் இவனுடைய சுகுணங்களை இதுவரைக்கும் கானஞ்செய்து கொண்டிருந்தாலும் முடிவை ஒரு காலத்திலும் அறியமாட்டான். அப்படிக்கொத்த மகிமையை

யுடைத்தான இந்தப் பகவான் எவர்களிடத்தில் தயவு செய்வாரோ அந்தப் புருஷர் சர்வப் பிரகாரத்தாலும் இந்த அனந்தனுடைய திருவடிகளை நிஷ்கபடமாக ஆசிரயிப்பார்கள். இப்படி ஆசிரயித்த சாதுசனங்களே அசக்கியமான ஸ்ரீ வாசுதேவனுடைய மாயையை மிகவும் அதிக்கிரமிப்பார்கள். இப்படி மாயையைக் கடந்த ஜனங்களுக்கு நாய் நரிகளுக்குப் பக்ஷணமாகிய இந்தத் தேகத்தில் ஆத்ம புத்தியானது ஜனிக்கமாட்டாது.

முனிவர்கள் யாதொன்றைப் பிரம்மமென்று நிச்சயித்திருக்கிறார்களோ அதுவே பரமபுருஷனாகிய பகவானுடைய ஸ்வரூபமென்று தெரியவேண்டும். பிரம்மமாவது, நித்தியமாகியும், எப்போதும் சுகமாகியும், சோகமில்லாமலும், இருக்கிற வஸ்துவாம். அது சர்வகாலத்திலும் சாந்தமாயிருக்கிறபடியால் எப்பொழுதும் சுகமாகுமென்றும், எப்பொழுதும் சுகமாகையால் நித்தியசுகமா யிருக்குமென்றும், பயமில்லாம லிருக்கிறபடியால் சோகமில்லாம லிருக்குமென்றும், சகல சேதனு சேதனங்களிலும் வேண்டாமலிருக்கிறபடியால் பயமில்லையென்றும், கியானரச மாகையால் மற்றொன்றிலும் ஒன்றாதென்றும், பிரகிருதி சம்பந்த மில்லாமையாலும் சர்வசமமாகையாலும், காரியா காரணங்களைக் காட்டிலும் பரமாகையாலும், ஆத்ம தத்துவமென்றுஞ் சொல்லப்பட்டது. ஆனால் இந்த ஆத்மஸ்வரூபம் இவ்வளவென்று நிச்சயிக்கலாமோ வென்றால், வேதாந்த சுருதிகளும் அத்தச் சுரூப ஸ்வபாவங்களை அளவிட்டு அறியமாட்டா. வேதங்களால் புகழப்பட்ட யக்கியாதி கருமங்களும் தனக்குப் பலமாக அவனை பரிசிக்க மாட்டா. மாயையும் அவன் எதிரே நிற்கிறதற்கு லஜ்ஜித்து விலகி நிற்கும். விஷயங்களில் தொடர்ந்து திரிகிற மனதை இந்தப் பரப்பிரம்மத்தினிடத்தில் நியமித்த முனிவர்கள் விசிஷ்ட பேதமாகிய காரணத்தைத் தரித்திராகி யிருந்தவன் ஐஸ்வரிய சம்பன்னனை பின்பு ஜலானுபவதிசையில் கூப சாதனமாகிய ஆயுதத்தைத் தரிக்கிறதுபோல் பரிகரிப்பார்கள் மகத்வாதிகளுடைய ஸ்வபாவத்தினால் ஜனித்த காரியங்களுக்குப் பிரசித்தியானது எவனுடைய ஆதீனமோ அவனே முத்திதிசையில் அனுபவிக்கிற சகல சுபங்களுக்கும் சுவாமியாகியும் தாதாவாகியு மிருப்பான். இந்தத் தேகமானது, தனக்குப் பிரிவிலாக்காரணமாகிய பஞ்சபூதங்களும் லயித்தவுடனே தானும் லயத்தையடையுங் காலத்தில், இந்தத் தேகத்திலிருக்கிற சீவசரீரனாகிய பரமபுருஷன், தான் ஜனியாதவனாகையால், ஆகாசத்தைப்போல் லயத்தை யடையமாட்டான்.

வாராய் வத்சனே! விசுவத்தைப் பிறப்பித்த குண பரிபூரணனை வேதங்கள் சொல்லுகிறபடிக்கு உனக்கு நான் சொன்னேன். இவனுடைய மகிமையைச் சொல்லவேண்டுமென்றால், ஒருவராலேயும் சொல்லிமுடியாது. சூக்ஷ்மமாகியும், ஸ்தூலமாகியும், காரியமாகியும், காரணமாகியு மிருக்கிற வஸ்துக்களெல்லாம் ஸ்ரீ ஹரியைக் காட்டிலும் வேறல்ல. இந்த விருத்தாந்தமானது பகவானுடைய ஸ்வருபங்களை அவலம்பித்திருக்கையால் ஸ்ரீ பாகவதமென்று நாமத்தை யுடைத்தானது. எனக்குப் பகவானால் உபதேசிக்கப்பட்ட இந்த ஸ்ரீ பாகவதமானது ஸ்ரீ பகவானுடைய விபூதிகளுக்குச் சங்கிரகமாயிருக்கிறபடியால், இதை நீ விஸ்தாரமாகப் பிரகாசஞ் செய்யவேண்டும். சகல சேதனா சேதனங்களுக்கும் ஆத்மாவாகியும், இவைகளுக்கு ஆதாரமாகியும், சுகுண பரிபூரணனாகியு மிருக்கிற, ஸ்ரீ ஹரியிடத்தில் நாருக்குப் பக்தியானது எப்படி விருத்தியாகுமோ, அப்படிச் சங்கற்பித்து வர்ணிக்கத் தக்கது. சுதந்தரனாகிய இந்தப் பரமபுருஷனுடைய சங்கற்பத்தை வர்ணித்தவரும், இதைக் கேள்விசெய்து சந்தோஷித்தவரும், நித்தியமும் சிரத்தையாய் கேள்வி செய்கிறவரும், பிரகிருதி மகிமையால் மோகத்தை யடைய மாட்டார்கள்.

---

## எட்டாவது அத்தியாயம்

*இது பரிக்ஷித்தானவன் ஜீவேஸ்வரர்களுக்குத் தேககசம்பந்தம் எப்படிக் கூடுமென்று ஆக்ஷேபித்து, மற்றும் அறியவேண்டியவனாய் வெகு பிரகாரங்களான புராண அற்புதங்களைப் பிரஸ்னஞ் செய்தானென்று சொல்லப்படுகின்றது.*

இப்படி நாரதருக்குப் பிரம்ம உபதேசத்தால் அவதரித்த ஸ்ரீ பகவத் சங்கிரகத்தை உபதேசித்த ஸ்ரீ சுகமுனியைப் பார்த்துப் பரிக்ஷித்து மகாராஜன் பிரஸ்னஞ்செய்கிறான். ஓ பிரம்மரிஷியே! ஹேயகுணரகிதனாகிய ஸ்ரீ ஹரியினுடைய கல்யாண குணங்களை வர்ணிக்கச்சொல்லிக் கமலாசனனால் ஆக்கியாபிக்கப்பட்ட ஸ்ரீ நாரத முனீந்திரர் எவரெவருக்கு எப்படிச் சொன்னாரோ அதை யறியவேண்டுமென்று இச்சித்திருக்கிறேன். ஓ வேதாந்த கியானிகளில் சிரேஷ்டனான மகானுபாவனே! அற்புதமாகிய பராக்கிரமத்தை யுடைத்தாகிய ஸ்ரீ ஹரியுடைய க்ஷேமகரங்களான கதைகளைச் சொல்லவேண்டும். எப்படியானால் நான் அகிலாத்மாவாகிய ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில், சங்கை ரகிதமாகிய மனதை நியமித்து, இந்தக் களேபரத்தைத் தரிப்பேனே, அப்படியே வர்ணிக்க

வேண்டும். சிரத்தையினால் நித்தியமுங் கேள்விசெய்தும் தன் சரித்திரத்தைக் கானஞ்செய்துகொண்டுமிருக்கிற புருஷனுடைய இருதயத்தில், அநு, கர்ணரந்திரத்தால் சீக்கிரமாகப் பிரவேசித்து, அந்த இருதயகமலத்தில் வாசஞ்செய்துகொண்டு அவர்களுடைய பாபத்தைச் சரருதுவானது ஜலத்தினுடைய மலத்தை அரிக்குமாப்போல் உதறிப்போடும்.

இப்படிக் கழுவப்பட்ட பாபத்தையுடைத்தான புருஷன், ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதமூலத்தை விடமாட்டான். இந்தத்திருவடி பஜனத்தால் விஷய சங்கங்களால் வந்த கிலேசங்களைத் தவிர்ந்து, வழிநடக்கிறவன் வீட்டை யடைவதுபோல், ஸ்ரீ கிருஷ்ணனுடைய சிரவணாதிகளைத் தவிர்ந்து மற்றொன்றை நினைக்கமாட்டான். ஓ பிரம்மநிஷ்டரே! பிராகிருத சம்பந்தமில்லாத இந்த ஜீவாத்மாவுக்குப் பிருதிவி முதலான பூதகாரியம் தனது கருமமாகிற காரணத்தால் உண்டாயிற்றோ? இல்லையென்று நிர்மிதமாகவே யிருக்குமோ? இதையும், இந்த லோகங்களுடைய வின்னியாசம் போலிருக்கிற லக்ஷணத்தை யுடைத்தான பத்மமானது, எவனுடைய உதரத்திலிருந்து ஜனித்ததோ? தன்னிடத்திலிருக்கிற அவயவங்களை ஆசிரயித்த அந்தப் பரமபுருஷனும் உலகத்தில் சஞ்சரித்தும் காணப்பட்டுக் கொண்டு மிருக்கிற ஜீவனுக்கு வேறுவேறாகிய அவயவங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவையும், உடைத்தாகி யிருக்கிறானென்று சொல்லப்பட்ட இந்தச் சரீரத்தினுடைய ஸ்வரூபத்தையும், வெளியிட்டுச் சொல்லவேண்டும். பஞ்ச மஹா பூதங்களுக்கும் நியந்தாவாகிப் பிரபஞ்சங்களுடைய சிருஷ்டியும், ஸ்திதியும், லயமும் பிறப்பித்த புருஷன், தன்மாயைக்கு ஈசனாகவும், சகல சுகுணங்களும் ஆசிரயமாகித், தன்னுடைய சிருஷ்டி சங்கற்பத்தை நிவர்த்தித்து எவ்விடத்தில் சயனஞ்செய்கிறான். லோகபாலர்களுடனே சகல லோகங்களும் பரமபுருஷனுடைய அவயவங்களால் கற்பிக்கப்பட்டன வென்றும், லோகபாலர்களுடனே கூடிய உலகங்களால் இந்தப் பரமபுருஷனுடைய அவயவங்கள் கற்பிக்கப்பட்டனவென்றும் கேட்டிருக்கிறோம். இதனால் மனதுக்கு நிலையில்லை. இதுவுமல்லாமல் அறிய வேண்டிய அர்த்தங்கள் விஸ்தாரமுண்டு. அது எப்படியென்றால், மகாகல்பமும், அவாந்தரகல்பமும், எவ்வளவு காலமாக விருக்கும் பூதமென்றும் பவ்ஷ்யமென்றும் வர்த்தமானமென்றும் சொல்லப்படுகிற சப்தங்களைப் பேராகவுடைத்தான காலத்தை அனுமானப் பிரமாணத்தால் அறியும்வகை எப்படி? மனுஷரென்றும், தேவரென்றும், பிதுர்க்களென்

றும் சொல்லப்படுகிற ஜீவராசிகளுடைய ஆயுட்பிரமாணம் எவ்வளவு? இந்தப்பூமியில் ஜனிக்கிற பிராணிகளுக்கு இவர்களுடைய காலானுசரணம் சொல்பமாகியும், மகத்தாகியுமிருக்கிறதை எப்படி அறியலாம்? வருகிற கருமமாகிற கதிகள் எவ்வளவு? அந்தக் கருமகதிகள் எப்படிப்பட்ட பலன்களைக் கொடுக்கும்?

ஓ பிராமணோத்தமனே! எந்த வர்ணத்திற் ஜனித்தவனுக்கு எந்தக் கருமம் விகிதமாக விருக்குமோ, அந்தக் கருமத்தை அவன் எப்படி அனுஷ்டிக்கவேண்டும்? அனுஷ்டித்த கருமம் அவனுக்கு எப்படிப்பட்ட பலனைக்கொடுக்கும்? அந்தக் கருமங்களி லுண்டாகிய குணவிஸ்தாரத்தையும், பூமிபிறந்ததையும், பாதாளஞ் ஜனித்ததையும், திக்குகள் உண்டானதையும். ஆகாசத்தினுடைய ஆவிற்பாவத்தையும், நவக்கிரகங்களும், நக்ஷத்திரங்களும், மலைகளும், நதிகளும், சமூத்திரங்களும், தீவுகளும், பிறந்த விவரத்தையும், இவைகளில் வாசஞ்செய்கிற பிராணிகளுடைய உற்பத்தியையும் அண்டகடாகத்தினுடைய அளவையும், இதின் உள்ளும் புறமும் இருக்கிற வஸ்துக்களுடைய ஜனனத்தையும், மகா புருஷர்களுடைய சரித்திரத்தையும், வர்ணாச்சிரமங்களுடைய நிச்சயத்தையும், மிகவும் ஆச்சரியகரமாகிய ஸ்ரீ ஹரியினுடைய அவதார சரித்திரங்களையும், யுகங்களையும், யுகப்பிரமாணங்களையும், அந்த யுகங்களிற் செய்யவேண்டிய தருமங்களையும், மனுஷ்யர் எல்லாரும் செய்யவேண்டிய தருமங்களையும், அந்தந்த வர்ணாச்சிரமத்தார் விசேஷமாகச் செய்துகொள்ள வேண்டிய தருமங்களையும், சகல ஜாதிகளும் அவரவர்கள் விருத்தியால் ஜீவிக்க வேண்டிய தருமங்களையும், ராஜரிஷிகளுடைய தருமங்களையும், ஆபத்தை யடைந்தவர்கள் அனுஷ்டிக்கவேண்டிய தருமங்களையும், பிரகிருதி முதலான தத்வங்களுடைய ஸ்வரூபங்களையும், அவைகளுடைய பிரமாணங்களையும், அவைகளால் நடக்கிற கருமங்களையும், பரமபுருஷனுடைய ஆராதன விதியையும், யோக லக்ஷணத்தையும், ஆத்மக்கியான ஸ்வரூபத்தையும், யோகீஸ்வரர்களுடைய அணிமாதி அஷ்ட ஐஸ்வரியங்களையும், யோகிகள் முக்தியடையுங் காலத்தில் அவர்களுடைய லிங்கசரீர நிவர்த்தியையும், நான்கு வேதங்களையும், ஆயுர்வேத முதலான வுப வேதங்களையும், தருமசாஸ்திரங்களையும். இவைகளிற்சேர்ந்த இதிகாச புராணங்களையும், சர்வபூதங்களுடைய வுற்பத்தியையும், ஸ்திதியையும், பிரளயத்தையும், வேதோக்தமான கருமங்களையும், ஸ்மிருதிகளால் சொல்லப்படுகிற கருமங்களையும், நித்தியங்களாகியும், காமி

யங்களாகியு மிருக்கிற அக்கினி ஹோத்திரங்களுடைய விதி களையும், தருமார்த்த கருமங்களுடைய கதியையும், நிஜமான தருமங்களை யஜித்தவர்களுடைய ஸ்திதியையும், பாஷண் டோற்பத்தியையும், ஜீவாத்மாவுடைய பந்த திசையையும், மோக்ஷஸ்திதியையும், இந்த இரண்டையும் தவிர்ந்த சமயத் தில் இந்தச் ஜீவனுடைய நிலையையும், சுதந்திரனான பர மாத்மா தனக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியுடனே விளை யாடுகிற லீலையையும், இந்த மாயையைவிட்டு இவன் அறியா தவன்போல் சாக்ஷியாக விருக்கிற இருப்பையும் எனக்குக் கிரமமாக வெளியிட்டுத் தேவரீர் அருளிச்செய்ய வேண்டும். ஓ முனீந்திரரே! தேவரீருடைய திருவடிகளை நம்பின அடி யேனுக்கு இந்த அர்த்தங்களை வெளியிட்டு அடியேன் கிருதார்த்தனாகும்படி செய்கிற பாரம் தேவரீருடையதே யல்லாமல் மற்றொன்றுமில்லை. இன்னம் வெகுபெயர்கள் எழுந்தருளி யிருக்கிறார்கள். அவர்களெல்லாரும் தங்கள் தங்களுடைய பெரியோர்கள் அனுஷ்டித்த தருமங்களைத் தாங்களும் அனுஷ்டிக்கிறார்களே யல்லாமல் தேவரீரைப் போல் அறிந்தவர்களல்லர். வாரீர் பிராமணோத்தமரே! அடியேன் விரதத்தினாலும் பிராமண சாபத்தினாலும் மிக வுந் துன்பத்தை யடைந்திருந்தாலும், ஸ்ரீ அச்சுதனுடைய கதாமிருகத்தைப் பானஞ்செய்கிற என்னுடைய பிராணங்கள் பராதீனமாகவில்லை யென்று சொல்லுகிற தேவராதனுக்குச் சஜ்ஜனபதியான ஸ்ரீ ஹரியுடைய கதாமிருகத்தைச் சொல்ல வேண்டுமென்று சதசிலே வரிக்கப்பட்ட சுகரானவர், அந்தப் பரிக்ஷித்தைக் குறித்துப் பிரம்மகற்பமானது வந்தசமயத்தில் ஷட்குண பரிபூரணனாகிய ஸ்ரீ பகவானால் சதுர்முகனுக்கு உபதேசமாகி வந்தும் வேதாந்த சமானமாயு மிருக்கிற ஸ்ரீ பாகவத புராணத்தைச் சொல்லத் தொடங்கினார். பாண்டு குலத்தில் ஜனித்தவர்களிற் சிரேஷ்டனாகிய பரிக்ஷித்துப் பிரஸ்னஞ்செய்த அர்த்தங்களைக் கிரமமாகச் சொல்லவேண்டு மென்று உபக்கிரமித்தார்.

---

## ஒன்பதாவது அத்தியாயம்

சுகப்பிரம்மரிஷி, ஸ்ரீ ஹரியினாலே பிரம்மதேவனுக்குச் சொல்லப்பட்ட பாகவதத்தைப் பரிக்ஷித்துக்குச் சொன்னாரென்று சொல்லப்படுகிறது.

வாராய் பரிக்ஷித்துமகாராஜனே! பஞ்சமகா பூதங்க ளுடனே சம்பந்தமில்லாத ஜீவனுக் கிந்தப் பூதங்களால்

நிற்கப்பட்ட சரீரசம்பந்தம் எப்படி யுண்டாகுமென்று பிரஸ்னஞ் செய்ததற்குப் பிரதியுத்தரம் ஸ்ரீமந் நாராயண சதுராநன நாரத வியாச பரம்பரைகளால் நானறிந்தபடி சொல்லுகிறேன் கேளும். பிரகிருதியைப்பார்க்கிலும் உத்கிருஷ்டனாகியும், அநுபவஸ்வரூபனாகியு மிருக்கிற ஜீவனுக்குப் பரமாத்மாவினுடைய சம்பந்தம் வந்தபின்பு, மூலகாரணமாகிய பிரகிருதியானது தேவமனுஷியாதி ரூபமாகவே விளங்கி, இந்தச் சரீரங்களில் ரமித்து, எனதென்றும், நானென்றும், எண்ணிக்கொள்ளுகிறான். எப்போது பரமபுருஷனிடத்தில் பக்தி செய்கிறானோ, அந்தச் சமயத்தில் சகல மோகங்களையுந் தவிர்ந்து, தன்னிடத்திலிருக்கிற குணாஷ்டக ஆவிற்பாவத்தை யடைந்து ஹேயகுணரகிதனாகி யிருக்கிற பரமபுருஷாநுபவத்தில் நிலையாகி நிற்பான். ஈசுவரனுக்கும் ஜீவனுக்கு முண்டாகிய சரீர சம்பந்தம்போல் அவயவ சம்பந்த மிருந்தால், அவனுக்கு ஜீவர்களைப் பார்க்கிலும் விசேஷமில்லை; ஆகையால் அவனிடத்தில் செய்த பக்தியால் ஜீவர்கள் எப்படிக் கடைத்தேறுதலென்று பிரஸ்னஞ் செய்ததற்குப் பிரதியுத்தரஞ் சொல்லுகிறேன் கேளும். நிஷ்கபடமாகிய பிரம்மதேவனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீமந் நாராயணன், அந்தச் சதுராநனைக் குறித்துப் பிரசாதஞ்செய்த கியானாநந்த ஸ்வரூபமாகியும், சத்தியமாகியு மிருக்கிற தன்னுடைய திவ்யமங்கள விக்கிரகத்தைக் காண்பித்துத், தபசு முதலான சிலாக்கிய சரித்திரங்களால் தன்னிடத்தில் பக்தி செய்யவேண்டுமென்று உபதேசஞ் செய்தபடியினால், அந்தப் பரமபுருஷனிடத்திற் செய்த பக்தி யோகம், ஜீவாத்ம வர்க்கங்களுடைய முக்திக்குச் சாதனமாகிய தத்வக்கியானத்தை ஜனிப்பிக்கிறதிற் சம்சய மில்லை. ஆனால் இவ்விடத்தில் என்ன சொல்லப்பட்டதென்றால், ஈரேழுலகங்களையும் அவயவங்களாகப்பெற்ற பரமபுருஷ தியானத்தால், கியானாநந்த ஸ்வரூபமாகிய லீலாவிக்கிரக விஷயமான பக்தி பிறந்தபின்பு, முக்திசாதகமாகிய தத்வக்கியானம் பிறக்குமென்று சொல்லுகையால் இந்தப்பக்தி விஷயமாகிய திவ்யமங்கள விக்கிரகம் கியானாநந்த ஸ்வரூபமாகையால், ஜீவசரீரங்களைப் பார்க்கிலும் விலக்ஷணமென்று வியக்தமாகவே சொல்லப்பட்டது. பிரம்மதேவனுக்கு அந்த ஆதிபுருஷன் எந்தக்காலத்தி லுபதேசஞ் செய்தாரென்றால், தேவர்களுக்கெல்லாம் ஆதிதேவனாகியும், பக்தியைச் செய்கிற பேர்களுக்கெல்லாம் பரமகுருவாகியு மிருக்கிற அந்தப் பத்மசம்பவன் தனக்கு ஆசனமாகிய தாமரைக் கொடியின் வழியாகச் சிலதூர மிறங்கி அத

னுடைய அசைவினலே வந்து தனக் காதாரமாகிய அந்த அம்புஜத்தில் சலியாம லிருந்துகொண்டு சிருஷ்டி செய்ய வேண்டுமென்று சங்கற்பித்து இந்தப் பிரபஞ்சங்களுடைய நிர்மாணமாகிற கருமம் எப்படியாலுல் தலைக்கட்டுமோ, அப்படிப்பட்ட சங்கற்பபூர்த்தி யில்லாமையினுல், அது நிமித்தமாகச் சிந்தித்திருக்கிற சமயத்தில், இரண்டக்ஷரமாகிய தப சப்தமானது இருந்தாற்போலுச்சரிக்கப் படாததாகி ஜலத்தில் ஆவிற்பவித்தது. அந்த வார்த்தையைப் பிரம்மன் செவியுற்றான்.

ஓ ராஜாவே! ஸ்பரிசங்களாகிய வர்ணங்களில் பதினரும் வர்ணமும், இருபத்தொன்ரும் வர்ணமுங் கூடிய அந்தச் சப்தம் தன் அர்த்தத்தை அறிவுடையாருக்குத் தனமாகிக் கொடுக்குமென்று சொல்லுவார்கள். இந்தச் சப்தத்தை ஆதரவுடனே கேள்வியுற்ற அந்தச் சுரசிரேஷ்டன், அந்தச் சப்தத்தை யுச்சரித்த புருஷனைக் காணவேண்டுமென் றிச்சைப் பட்டுப் பத்துத் திக்குகளிலும் தன் கண்களை விஸ்தாரமாகச் செலுத்தி அவைகளில் தன்னைவிட மற்றொருவரைக் காணமல் அந்தப்பீடமத்தியில் உறுதியாகவிருந்து, தான் கேள்வியுற்ற சப்தத்தைத் தனக்கு இதமாக நிச்சயித்துத் தபசைச் செய்யவேண்டுமென்று நிச்சயித்தான். பிறகு தபதப வென்று கேட்கப்பட்ட சப்தத்தில் விகாதமில்லாத நிச்சயத்தைஉடைத்தாகியும், பிராணுதி வாயுக்களையும், மனதையும், கியானேந்திரியங்களையும், கருமேந்திரியங்களையும், நிக்கிரகித்துத், தபசு செய்தவர்களுக்குள்ளே உறுதியான தபசை யுடைத்தாகியு மிருக்கிற அந்தப் பாரதிவல்லபன் ஏகாக்கிரக சித்தனுகிச் சகல லோகங்களுக்கும் பிரகாசமாகிய தபசை ஆயிரந் திவ்யவருஷம் அனுஷ்டித்தான். இப்படித் தவநிலை பெற்ற மனதை யுடைத்தான பிரம்மதேவனலே யர்ச்சிக்கப் பட்ட குணபரிபூரணன் மிகுதியாகிய புண்ணியத்தை யுடைத்தாகிய தேவர்களால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்ட தனதான அந்தவுலகத்தை யந்த இரண்யகர்ப்பனுக்குக் காண்பித்தார். அவ்விடத்தில் மாயா விகாரங்களாகிய காமக்குரோத முதலானவை இல்லை. அவ்விடத்தில் ஸ்ரீஹரியுடைய நித்யகைங்கரியத்தில் நிரதராகியும், தேவர்களாலேயும், அசுரர்களாலேயும், அருச்சிக்கப்பட்டும், சில மகானுபாவர்கள் வாசஞ்செய்கிறார்கள். அவர்கள் எப்படி யிருக்கிறார்களென்றால், தாசாம் பூவினுடைய நிறம்போலிருக்கிற வர்ணத்தை யுடைத்தாகியும் கமலதளம் போலிருக்கிற கண்களுடனேயும், பீதாம்பரங்களைத் தரித்தும் சிலாக்கியமாகிய காந்திகளுடனேயும், மிருது

வான சரீரங்களுடனேயும், நான்கு புஜங்களால் பிரகாசித்தும்,மிகுதியான வொளியுடனேயும்,சிலாக்கியமான ரத்தினங்களைப் பதித்து மிருக்கிற பதக்கங்களையும், முத்தாரங்களையும் தரித்து மிருக்கிறார்கள்.

இப்படியே பவளவர்ணம் போன்ற சிவந்த சரீரமும், வைடூரிய நிறம்போ லிருக்கிற சரீரங்களும், தாமரை வளையத்துக்கு நிகரான சுப்பிரமாகிய காயங்களுடனேயும், பிரகாசிக்கிற சில நித்திய சூரியர்கள் பத்துத் திக்கிலும் ஒளியினால் விளங்குகிற குண்டலங்களையும், கிரீடங்களையும், வனமாலைகளையுந் தரித்து விளங்குகிறார்கள். சமஸ்த திக்கிலேயும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற திவ்யமாகிய விமானவரிசைகளில் விளங்குகிற மகாபுருஷரால் அற்புதமாகியும் தங்களுடைய காந்திகளால் பிரகாசிக்கிற சரீரங்களைத் தரித்த உத்தம ஸ்திரீகளுடைய காந்திப் பிரபாவத்தால் மின்னல்களுடனே கூடிய மேகங்களால் நிறைந்த ஆகாசம்போல் எப்பொழுதும் பிரகாசித்தும், ஸ்ரீ தேவியானவள் திவ்யமான ரூபத்தைத் தரித்துக்கொண்டு சகல சம்பத்துக்களுடனேயும், வெகு விதமாகிய ஸ்துதிக்குப் பாத்திரமான ஸ்ரீ ஹரியுடைய பாதங்களில் வெகு பிரகாரமாகப் பூசைசெய்தும், தன்னுடைய ஆஞ்ஞையை யனுசரித்த வசந்தனாலேயும், அவனை அனுசரித்து நடக்கின்ற மற்ற ருதுக்களாலேயும், நானுவிதமாகத் தியானஞ் செய்யப்பட் டிருந்தாலும், தனக்குச் சுவாமியாகியும், தன் பிரீதிக்குப் பாத்திரமாகியும் ஸ்ரீ ஹரியுடைய விசித்திர லீலைகளால் தியானஞ்செய்யப்பட்டு மிருக்கிற ஸ்ரீரமாதேவிக்கும், யக்கியங்களுக்கும், சகல சேதனா சேதனங்களுக்கும் பதியாகிய பரவாசுதேவனைப் பத்மசம்பவன் சாக்ஷாத்கரித்தான். சுனந்தனனந்தன் முதலாகிய சிலாக்கியமாகிய கைங்கரியத்தில் ருசிபெற்று மிருக்கிற கிங்கரர்களால் நான்கு புரத்திலும் உபசரிக்கப்பட்டும் தம்மிடம் பக்தி யுளாரிடங்களில் செய்கிற பிரசாதத்தினால் அபிமுகனாகவும், அபாங்கங்களாகிற மதுவினால் சம்பன்னராகவும், பிரசன்னமாகிய ஆசனத்துடனேயும், செந்தாமரை போலிருக்கிற கண்களுடனே கூடிய திருமுக மண்டலத்தை யுடைத்தாகியும், கிரீடத்தையும் குண்டலங்களையும் தரித்தும், நான்கு புஜங்களுடனே பிரகாசித்தும், பீதாம்பரங்களால் அலங்கரிக்கப் பட்டும், தன் மார்பிலிருக்கிற ஸ்ரீ தேவியால் பூஷிதனாகியும், பிரகிருதியும், புருஷனும், மகத்வமும், அகங்காரமும், ஏகாதசேந்திரியங்களும், பஞ்சமகா பூதங்களும், பஞ்ச தன்மாத்திரைகளுமாகிற இருபத்தைந்து

தத்துவங்களுடனேயும், மற்ற விடங்களில் ஸ்திர மில்லாம லும் சகலமும், தன்னுடையதாகியு மிருக்கிற ஐஸ்வரியங்க ளுடனே கூடியிருக்கிற பரம புருஷனை, அதிசிலாக்கியமாகிய உயர்ந்த சிம்மாசனத்தில் கண்டு, அந்தத் தரிசனத்திலுண் டான ஆனந்தரசத்தினால் நனைக்கப்பட்ட அந்தக் கரணத்தை யுடைத்தாகியும், சரீரமெங்கும் நிறைந்த ரோமாஞ்சங்களுட னேயும், பிரேமாதிசயத்தால் ஜனித்த ஆனந்த பாஷ்பங்க ளால் நிறைந்த கண்களுடனேயும், அந்த விசுவசிருஷ்டி கர்த் தாவான பரமபுருஷனுடைய பாதபத்மங்களை வணங்கினான்.

அப்படித் தன் திருவடிகளில் மிகுதியான பக்தியை அனுஷ்டித்துக்கொண்டும், தன் சங்கல்பத்தால் விஷயமான பிரஜாசிருஷ்டி செய்கிற சாசனத்துக்கு யோக்கியனாகியு மிருக் கிற அந்தப் பிரம்மதேவனைக் குறித்துப் புன்சிரிப்புடைய வார்த்தையைச் சொல்லிச் சந்தோஷத்துடனே கூடின அப் பரமபுருஷன், அந்த விதாதாவைத் தன் திருக்கைகளால் ஸ்பரிசித்து ஒரு வார்த்தையைச் சொல்லுகிறார்: வாராய் வேதகற்பனே! கபட யோகிகளால் சந்தோஷம் செய் விக்கப்படாத நான், சிருஷ்டி செய்யவேண்டுமென்று வெகு காலம் அனுஷ்டித்த உன்னுடைய தபசினால் மிகவும் சந்தோ ஷத்தை யடைந்தேன். உன் மனதில் அபீஷ்டமாகிய வரத்தைக் கேள் உனக்கு க்ஷேமமாகட்டும். புருஷர்கள் சிரேயசை யடையவேண்டு மென்று செய்கிற பிரயாசமெல் லாம் என்னுடைய தரிசனமாகிற பட்டுந்தான். இப்போது உனக்குக் கிடைத்த என்னுடைய திவ்யலோக தரிசன மானது உனக்குண்டாக வேண்டுமென்று நாம் சங்கல்பித்த சங்கல்பமகிமையே யல்லாமல் வேறல்ல. இந்தத்தரிசனம் நான் செய்த தபசுக்குப் பலமாயிருக்கக் கூடாதோ வென் றால், தபதபவென்று நான் சொன்ன சொல்லை ரகசி யத்தில் கேள்விசெய்து மற்றொருவரால் செய்யக்கூடாத தபசைச் செய்தாயாகையால் கருமங்களை யறியாமல் மோகித் திருக்கிற உன்னைக்குறித்து அந்தத் தபசைச் செய்யும் படி நானே ஆக்கியாபித்தேனாகையால் அதுவும் என் சங் கல்பமகிமையே யல்லாமல் வேறல்ல தபசானது என்னு டைய இருதயமே யல்லாமல் வேறல்ல. நானும் அந்தத் தபசுக்கு ஒன்றான ஆத்துமாவாகிறேன். வாராய் நிர்த் தோஷனே! அந்தத்தபசு எனக்கு இருதயமாயிருக்கு மென் கிறதைத் தெளியச் சொல்லுகிறேன் கேள். இந்தப் பிரபஞ் சத்தைத் தபசினால்தான் சிருஷ்டிசெய்கிறேன். திரும்பவும் தபசினாலேயே சங்காரஞ் செய்கிறேன். பாலனம் செய்யுங்

காலத்தில் இந்தத் தபோபலத்தினுல் பரிபாலனஞ் செய்கி றேன். தபசானது மற்றொருவராலே அதிக்கிரமிக்கக்கூடாத என் சக்தியென்று தெளிந்துகொள்ள வேண்டுமென்று ஸ்ரீ பரமாத்மாவானவர் பிரம்மதேவனுக்கு உபதேசஞ்செய்த போது அந்த இரண்யகற்பன் சொல்லுகிறுன்.

ஓ ஷட்குண பரிபூரணனுன பரமாத்மாவே! சர்வப் பிராணிகளுடைய புத்தியிலேயும் பிரவேசித்துச் சாக்ஷியா யிருக்கிற தேவரீர் ஒருவிஷயத்திலும் விகாதமில்லாத விக்கி யான சக்தியால் பிராணிகள் செய்யவேண்டுமென்று இச்சித் திருக்கிற கருமத்தை யறிவீரன்றுே? யாசிக்கிற அடியேனு டைய அபீஷ்டபலத்தை யனுக்கிரகஞ் செய்யவேண்டும். ஓ நாதனே! ரூப மில்லாமலும் ஸ்தூலமாகியும், சூக்ஷ்ம மாகியு மிருக்கிற தேவரீருடைய ரூபங்களை அடியேன் அறிய வேண்டும். தேவரீருக்குச் சுவாதீனமாகிய பிரகிருதியுடைய சம்பந்தத்தால் மகதகங்கார முதலாகிய சக்திகளால் பெருகின பிரபஞ்சத்தைத் தேவரீரே பிரமாதி ரூபத்தைப் பரிக்கிரகித் தும், சிருஷ்டித்தும், ரக்ஷித்தும், சங்கரித்தும், சிலந்திப் பூச்சியானது தன் வாய்நூலால் கட்டப்பட்ட மண்டலம் போல் வெளிப்படையாகாத சங்கல்பத்துடனே விளையாடு கிறீர். ஓ மாதவனே! அந்தச் சிருஷ்டியாதி விஷயமான புத்தியை என்னிடத்தில் கற்பிக்கவேண்டும். இப்படி யறிந்து கொண்ட அடியேன் தேவரீரால் சிருஷ்டிக்கப்பட்ட அர்த் தத்தைச் சோம்பலில்லாமல் செய்துகொண்டு வருகிறேன். தேவரீருடைய அனுக்கிரகத்தால் பிரஜாசிருஷ்டியை இச்சித் துச் செய்துகொண்டுவந்தாலும், அதனுல் அடியேனுக்கு அகங்காரபந்தம் வரவேண்டாம். ஓ சர்வேஸ்வரனே! தேவரீ ரால் லௌகிகனுன சினேகிதனுடைய சினேகம்போல் காய ஸ்பரிசங்களால் பிரஜாசிருஷ்டியாகிற கைங்கரியத்தில் ஆக்யாபிக்கப்பட்ட அடியே னெவ்வளவுகாலம் ஜனங்களை உத்தம மத்தி மாதிபேதத்தால் பிரித்து வியாகுலசித்த னுகாமல் சிருஷ்டி செய்கிறேனே அவ்வளவு காலமும் தேவரீர் செய்தருளிய வெகுமானத்தால் நான் சுதந்திர னென்று நினைக்கிற அடியேனுக்கு மிகுதியான காலமானது வாராமலிருக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்த பிரம்ம தேவனைக் குறித்து ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறுர்.

வாராய் சதுர்முகனே! என்னுல்சொல்லப்பட்ட சாஸ் திரசன்னியமான என்விஷயமாகும் கியானத்தையும், அதி னனுகுணமான அனுபவத்தையும், அதிரகசியமாகிய பக்தி யையும், அந்தப் பக்தியோகத்தினுடைய சாதனத்தையுங்

கொடுத்தேன். நான் எந்தஸ்வரூபத்தை யுடைத்தானவனே, எப்படிப்பட்ட சத்துவத்தை யுடைத்தானவனே; எந்த ஸ்வரூபமான குணங்களையுங் கருமங்களையு முடைத்தானவனே, அப்படிப்பட்ட தத்வக்கியான மானது உனக்கு என் அனுக்கிரகத்தா லுண்டாகட்டும். சிருஷ்டிக்கு முற்காலத்தில் நானொருவனே யிருந்தேன். சூக்ஷமமான வஸ்துவும், ஸ்தூலமான வஸ்துவு மிவைகளுக்குக் காரணமாகிய பிரகிருதியும் என்னைக்காட்டிலும் வேறாக விருக்கவில்லை. இப்பால் சிருஷ்டியான காலத்திலும் நானே யிருக்கிறேன். பிரத்தியக்ஷமாகிய இந்தப் பிரபஞ்சமும் நானென்று தெரிந்து கொள்ளவேண்டும். இனிமேல் பிரளயகாலத்தில் லயமில்லாமலிருக்கிற இந்த வஸ்துவும் நானேயாகிறேன். யாதொன்றால் ஆத்ம ஸ்வரூபம் நிச்சயமில்லாதகாலத்தில் ஸ்வாதந்திரியமாகிய அந்தமில்லாமலிருக்கையிலும், ஒருவனாகிய இந்தவிடத்தில் இரண்டு சந்திரனென்கிற மதிபோல் சுவாதந்திரியந் தோற்றுகிறதோ, ஆத்ம ஸ்வரூபம் பிரகாசமானவுடனே முன்தோற்றின சுவாதந்திரியம் பத்மத்தைப்போல் தோற்றவில்லையோ, அதுவே எனக்கு வசியையான மாய்கையென்று நிச்சயஞ்செய்துகொள்ளலாம். எப்படியானால் பிருதிவி முதலான பூதங்கள் அதின் காரியமான பவுதிகங்களில் பிரவேசித்தும், இதற்கு முன்காலத்தில் பிரவேசியாமலுமிருக்கிறதோ, அப்படியே பூத பவுதிகங்கள் ஜனித்தபின்பு அவைகளில் நான் பிரவேசித்தும் அவற்றின் முற்காலத்தில் பிரவேசியாமலுமிருப்பேன். யாதொன்று சகல காரியங்களிலேயும் சம்பந்தித்தும், காரியங்களுடைய முற்காலத்தில் சம்பந்தியாமலும், சர்வகாலங்களிலும் சம்பந்தித்து மிருக்குமோ, அதுவே பரமாத்மாவினுடைய ஸ்வரூப தத்வமாக அறியவேண்டுமென்று இச்சித்தவாறு அறியத்தக்கது. இதுவே என்னுடைய அபிமத மென்று நிச்சயித்துச் சிலாக்கியமாகிய மானசவிருத்தியுடனே யிருக்கக்கடவாய். இப்படியிருக்கிற நீ கல்பங்கள்தோறும் கற்பிக்கிற சிருஷ்டிகளிலே நானே கர்த்தாவென்று மோகத்தை ஒருகாலத்திலும் அடையமாட்டாயென்று சதுர்முகனுக்கு ஸ்ரீ பகவான் உபதேசித்ததைப் பரிக்ஷித்து மஹாராஜாவுக்கு உபதேசித்த சுகமுனீஸ்வரர் பின்னையுஞ் சொல்லுகிறார்.

ஸ்ரீ பகவான் சகல ஜனங்களுக்கும் அதிபதியான பரமேஷ்டியைக் குறித்து இந்தப்பிரகாரம் ஆக்கியாபித்து, அந்தப் பிரம்மதேவன் பார்த்துக்கொண்டிருக்கையிற்றானே தம்முடைய கியானானந்தமயமாகிய அந்தத்திவ்யமங்கள் விக்ர

கத்தை அந்தர்த்தானஞ் செய்வித்தார். பின்பு அந்தப்பிரம் மன் மறைந்துபோன ஸ்ரீ ஹரியைக்குறித்து அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு, சர்வபூதங்களிலும் அனுப்பிரவேசித்து முன்னடந்த பிரம்ம சிருஷ்டியைப்போல் சமஸ்தங்களையுஞ் சிருஷ்டிசெய்தான். கர்மானு குணமாகச் சிருஷ்டிசெய்கிற அந்தப் பிரஜாபதியானவர் பிரஜைகளுடைய மேக்ஷமத்தை இச்சித்தவராகி, ஒருகாலத்தில் இயம நியமப் பிராணயாம முதலான சுகசாதனங்களை அனுஷ்டித்தார். இப்படி யோகத் திலிருக்கிற பிரம்மதேவனைக் குறித்துப் புத்திரர்களுக் குள்ளே மிகவும் பிரீதிவிஷயனுகிய நாரதமுனீஸ்வரன் சீலத்தினுலேயும், விசுவாசத்தினுலேயும், இந்திரிய நிக்கிர கத்தினுலேயும், அவரை யநுசரித்துச் சிஷ்ருஷையைச் செய்தார். ஓ பரிக்ஷித்து மகாராஜனே! பிரகிருதிக்குச் சுவாமியாகிய ஸ்ரீ விஷ்ணுவுடைய மாய்கையென்று சொல் லப்படுகிற பிரகிருதியை யறியவேண்டுமென்று இச்சித்த மஹா பாகவதராகிய அந்த மகாமுனி தன் பிதாவான பர மேஷ்டியைச் சந்தோஷஞ் செய்வித்தார். பின்பு சர்வலோக பிதாமகனுகிய தன்பிதா, சந்துஷ்டராகி யிருக்கிருரென்று பார்த்து, நீ இப்போது என்னைக்குறித்துக் கேட்ட பிரஸ் னத்தை அந்தத் தேவரிஷி மிகவும் பிரஸ்னஞ்செய்த நாரத ரைக் குறித்துச் சகல பிராணிகளையும் சிருஷ்டிசெய்க சதுரா னனன் ஸ்ரீ பகவானுல் நான்கு சுலோகரூபமாகத் தனக்கு உபதேசிக்கப்பட்டுத் தச லக்ஷணத்துடனே கூடிய பாகவத மென்று சொல்லப்படுகிற இந்தப் புராணத்தை நன்ருகச் சொன்னர். ஓ ராஜாவே! சரஸ்வதி நதிதீரத்தில் பரப்பிரம் மத்தைத் தியானஞ்செய்து அமுதமாகிய தேஜசுடனே கூடிய வியாச முனியைக்குறித்து அந்த நாரதர் உபதேசித்த இந்தப் புராணத்தை ஸ்ரீ சுகர் அந்தக் கிரமங்களுடன் விபரமாகச் சொல்லத் தொடங்கினர்.

---

## பத்தாவது அத்தியாயம்

---

*பாதாராயணியரான சுகப்பிரம்மரிஷி பாகவத தத்துவாசத்தினல் ராஜாவினற் செய்யப்பட்ட பிரஸ்னத்துக்கு உத்தரஞ் சொல்லத் தொடங்கினர்.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்:

ஓ விஷ்ணுராதனே! இந்தப் பாகவத புராணத்திற் சொல்லப்படுகிற லக்ஷணங்களை அதனதின் பெயரால் சொல்லுகிருேம் கேளும். அவைகள் யாவையென்ருல், சற்கமென்றும், விசற்கமென்றும், ஸ்தானமென்றும், போஷண

மென்றும், ஊதியென்றும், மனுவாந்திரமென்றும், ஸ்ரீ ஹரிகதையுடனே கூடிய ஹரிபக்தர்களுடைய கதை யென்றும், நீரோதமென்றும், முக்தியென்றும், ஆச்ரய மென்றும், பத்துவிதமாக விருக்கும். ஆனால் விலக்ஷண மாகிய அர்த்தங்களைச் சொல்லுகிறபடியால் இது ஸ்ரீ பகவா னுடைய குணவர்ணனமாகிய ஸ்ரீ மஹா பாகவத மாகுமோ வென்று சங்கிக்கவேண்டியதில்லை. உபதேசமான ஆச்ரயத்தி னுடைய தத்துவக்கியான நிமித்தமாக மற்ற ஒன்பதையுஞ் சொல்லவேண்டி யிருக்கிறபடியால் அவைகளுடைய லக்ஷ ணங்களும் இந்தப் புராணத்திற் சொல்ல வேண்டும். இது யுக்தமாகி யிருக்கின்றதைப் பற்றித் தத்துவக்கியானிகள் வேதாந்த வாக்கிய சிரவணத்தாற் பிறந்த அர்த்தக்கியா னத்தை முன்னிட்டுக்கொண்டு ஜகத்காரணமாகிய பிரம் மத்தை நிரூபிக்குமிடத்தில் இவைகளையும் இந்தவிடத்தில் பிரதானமாக வசனிக்கிறார்கள். மகாபூதங்களைந்தும், அதின் தன்மாத்திரைகளும், ஏகாதசேந்திரியங்களும், மகத்துவமும், அகங்காரமாகிற இந்த இருபத்து மூன்றினுடைய சிருஷ்டி யானது சற்கமென்று சொல்லப்படுகிறது. பரப்பிரம்மத்தி னுடைய அனுப்பிரவேசத்தால் வைஷம்மியத்தை யடைந்து திரிகுணங்களாலும், பரமேசுவரனாகிற விராட் புருஷனாலும் ஜனித்த சராசர சிருஷ்டியானது விசற்கமென்று சொல்லப் படும். ஸ்ரீ வைகுந்தனுடைய விஜயமானது ஸ்தானமென் றும் அவன் அனுக்கிரகமே போஷணமென்றும், நிச்சயிக் கப்பட்டிருக்கிறது. மனுவந்தரங்களும் அவயவங்களுக்கு ஈசானாகிய சத்புருஷர்களுடைய தருமங்களும், சிலாக்கிய மாகிய தரும கருமங்களுடைய வாசனைகளும், ஊதியாகும். ஸ்ரீ ஹரியுடைய திவ்ய அவதார சரித்திரங்களும், அங்குள்ள பக்தர்களான மஹா பாகவதர்களுடைய சரித்திரங்களும், அநேக விதமாகிய கிளைக்கதைகளால் விருத்தியடையாத சத் கதைகளென்று சொல்லப்படும். ஸ்ரீ ஹரியானவர் யோக நித்திரையை யடைந்த பின்பு இந்தச் சீவாத்மாக்களுடைய கர்னகளேபரங்களுடனே கூடவருகிற லயத்தை நீரோத மென்று சொல்லுவார்கள். அனாதி கர்மவாசனையால் வந்தி ருக்கிற சுவாதந்திரிய தேவத்துவ மனுஷியத்துவாதிகளை விட்டு நிஜரூபமாகிய கியான ஸ்வரூபனாகியும், பரம புருஷா தீனனாகியும், பிராரப்த கருமத்தைத் தவிர்ந்திருக்கையு முத லான குணாஷ்டகத்தை யுடைத்தாகியு மிருக்கிறபடியே முக்தி யென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரபஞ்ச சிருஷ்டி யும், ஸ்திதியும், லயமும், எந்த வஸ்துவினிடத்திலிருந்து பிரகாசிக்கின்றதோ, பரப்பிரம்ம மென்றும், பரமாத்மாவென்

றும், எப்போது அண்டத்தைப் பிளந்துகொண்டு வேருக நின்ருனே அப்போது தனக்கு ஒரு நிலையை இச்சித்த இந்த பரிசுத்தமான புருஷன், சுப்பிரங்களான உலகங்களைச் சிருஷ்டிசெய்து நாரமென்று சொல்லப்படுகிற அந்த ஜலத்தை ஸ்தானமாக வுடைத்தாயிருக்கிறபடியால் நாராயணனென்று நினைக்கப்படுகிருன். பிரகிருதியும் சிருஷ்டியாதிகளுக்குக் காரணமாகிய பிராணிகருமமும், காலமும், குணவைஷம்யமும், போக்தாவாகிய ஜீவனும், எவனுடைய அனுக்கிரகத்தால் தம் தம் கருமங்களுக்கு யோக்கியமா யிருக்கின்றனவோ, அந்த ஜகதீஸ்வரன் தன் அபேக்ஷையால் சகலமும் தன்னிடத்தில் லயத்தையடையத் தானெருவனுகியிருந்து வெகு ரூபனுக வேண்டுமென்று இச்சித்து யோகமாகிற படுக்கையிலிருந்து எழுந்திருந்து அந்தத் தேவன் சுவர்ணம்போல் மிகவும் பிரகாசிக்கின்ற கெர்ப்ப ரூபமாகிய சக்தியைத் தனக்கு வசியையாகிய மாயையால் ஏகரூபமாகிய அந்தப் புருஷசக்தியானது எப்படி வேருயிற்ரு அவ்வாறு அச்சரீரமத்தியத்திலிருக்கிற ஆகாசத்திலிருந்து கிரியாசத்தியால் இதாகிதங்களைச் செய்கிற பரம புருஷனிடத்திலிருந்து இந்திரிய சக்தியும், மனதினுடைய சக்தியும், தேக சக்தியும் ஜனித்தன. இந்த மூன்று சக்தியாகிய சூக்ஷமரூபத்திலிருந்து சூத்திரமாகியும, மகத்தாகியும், அணுவென்றும் சொல்லப்படுகிற பிராணசக்தியானது சம்பவித்து ராஜாவுடனே தொடர்ந்து திரிகிற ஏவலர்கள்போல் சர்வசந்துக்களிலும் இது செய்கிற சேஷ்டையால் இந்திரியங்களும் சேஷ்டிக்கையாலும் இச்சேஷ்டை நிவர்த்திக்குங் காலத்தில் அவையும் சேஷ்டையை விட்டு விடுகிறபடியினுலே இவற்றிற்கெல்லாம் மகத்துவமுண்டென்று விவேகசாலிகள் அறிந்துகொள்ளலாம்.

அந்த விபுவினுடைய சரீர நடுவிலிருந்து இந்திரியங்களை அலைக்கிருனே, அந்தப் பிராணனுலே பசியும், தாகமும் ஜனித்தன. பக்ஷிக்கவேண்டுமென்கிற பிரீதியினுலேயும், பானஞ்செய்யவேண்டுமென்கிற இச்சையினுலேயும், முன்னே முகமானது பிறந்தது. அந்த முகத்திலிருந்து ரசனேந்திரியத்துக்கு அதிஷ்டானமாய்த் தாலுவானது ஜனித்தது. அதிலே ஜிஃவேந்திரிய முண்டாயிற்று. அதின் தேவதையான வருணனுஞ் ஜனித்தான். ஜிஃவேந்திரியத்தால் அறியப்படுகிற சமஸ்த ரசங்களும் அதிலிருந்தே ஜனித்தன. பின்பு சொல்லவேண்டுமென்று இச்சித்த அளவில்லாத அந்தப் பரமபுருஷனுடைய முகத்திலிருந்து வன்னியும், வாக்

கும், இந்திரியமும் ஜனித்தபின்பு, அவற்றிலிருந்து சொற்கள் பிறந்தன. இந்த வாக்கிந்திரியத்துக்குப் பலமே அதிஷ்டானமாயிற்று. அதற்கு அதரோஷ்டா தந்தங்களாகிற மறைவுமுண்டாயிற்று. பிராணவாயுவானது மிகவுஞ் சலித்த போது நாசிகை உண்டாயிற்று. அந்த நாசிகையிலிருந்து கிராணேந்திரியமும், அதின் தேவதைகளான அஸ்வனி தேவர்களும், கந்தமும் பிறந்தன. எப்போது தன்னிடத்திற் பிரகாசமில்லாம லிருந்ததோ அப்போதுதான் தேகத்தையும் மற்றவைகளையும் நேத்திரங்களால் பார்க்கவேண்டுமென்று இச்சையுடைத்தான அந்தப் புருஷனுக்குக் கண்களுண்டாயின. அவைகளில் சக்ஷுரிந்திரியமும், அதின் தேவதையான ஆதித்தியனும், அதற்கு விஷயமாகிய ரூபமாகிற குணமும் ஆவிர்ப்பவித்தன. தேவதைகள் சொல்லுகிற சொற்களை அறியவேண்டுமென்று இச்சித்த வைராக புருஷனுக்குக் கர்ணங்கள் பிறந்தன. சுரோத்திரேந்திரியமாகிற இந்திரியமும், அதின் தேவதையான திக்குகளும், அதற்கு விஷயமாகிய சப்தங்களும் உதித்தன. பின்பு வஸ்துக்களிலிருக்கிற மிருதுவாகிய தன்மையும், கடினமாகிய தன்மையும், லகுவாகியதன்மையும், குருவாகிய தன்மையும், உஷ்ணமாகிய தன்மையும், சீதமாகிய தன்மையும், அறியவேண்டுமென்று இச்சித்த வைராக புருஷனுக்குத் தொக்கிந்திரியஞ் ஜனித்தது. அதற்குச் சர்மமே அதிஷ்டானமாயிற்று. அந்தத் தொக்கு இந்திரியமும் அதிஷ்டானமாகிய சர்மத்தினுடைய வெளியில் வியாபித்ததுகண்டு தியின்ஸ்பரிசத்தைக் கிரகித்துக்கொண்டு லோமமென்று சொல்லப்படுகின்றது.

இவ்விடத்தில் விருக்ஷங்களே தேவதைகளாயின. இந்தச் சர்மத்தினுள்ளே வியாபித்த தொக்கிந்திரியம் ஸ்பரிசங்களைக் கிரகிக்கிறதால் தொக்கென்று சொல்லப்பட்டது. அவ்விடத்தில் வாயுவே தேவதையாயிற்று. பின்பு நானாவிதமாகிய கருமங்களைச் செய்யவேண்டுமென்று இச்சையுண்டானதால் அந்தப் புருஷனுக்கு இரண்டு கைகளுமுண்டாயின. அவைகளில் பலமாகிற இந்திரியமும், இந்திரனாகிற தேவதையும் ஜனித்தபின்பு, இவரால் கிரகணமாகிற கருமமும் ஜனித்தது. அத்தியந்த மிஷ்டமாகிய கமனத்தை இச்சித்த அந்தச் சுவாமிக்கு இரண்டு பாதங்கள் ஜனித்தன. அந்தப் பாதங்களிலிருந்து பிறந்த கமனசக்தியாகிற இந்திரியத்துக்கு ஸ்ரீ ஹரியே தேவதையாகி யிருந்தார். அந்த இந்திரியங்களால் மனுஷர் சுபகருமங்களைச்செய்து க்ஷேமங்களைக் கற்பித்

துக்கொள்ளுகிறுர்கள். பின்பு புத்திரவர்க்கங்களேயும், ரதி ஆனந்தங்களேயும், சுவர்க்காதி ஸ்தானங்களேயும் இச்சித்த அந்தப் பரமேஸ்வரனுக்கு சிஸ்னம் பிரகாசித்தது. அதில் உபஸ்தமென்கிற இந்திரியம் ஜனித்தது. அதற்குப் பிரஜாபதியே தேவதையாஞர். அந்த இந்திரியத்தை அனுசரித்து வருகிற சுகமானது ஸ்திரீகளுடைய போகமாகிற காமங்களேச் சம்பந்தித்திருக்கும். பிறகு புசித்த ஆகாரங்களுடைய ஆசாரமாகிய அம்சங்களேப் பரிகரிக்க வேண்டுமென்று இச்சித்த அந்த உத்தமனுக்குக் குதமானது பிறந்தது. அதிலிருந்து பாயு வென்கிற இந்திரியம் ஜனித்தது. மித்திரன் தேவதையானுன். இந்த இரண்டுபேர்களேயும் ஆசிரயித்து மல விசர்க்கமென்கிற காரிய முண்டாயிற்று. பின்பு இருந்த தேகத்தைவிட்டுத் தேசாந்தரங்களே வியாபிக்க வேண்டுமென்று இச்சித்த பரமபுருஷனுக்கு நாபித்துவாரமானது உதித்தது. அவ்விடத்தில் அபானனென்கிற வாயுவும், அதற்கு அதிதேவதையான் மிருத்தியு முண்டாயிற்று. பிராணவாயுவைப் பிரிந்த அபானவாயுவாலும், அதின் தேவதையான மிருத்தியுவாலும் மரண முண்டாயிற்று. அதன்பின்பு அன்னத்தையும், ஜலத்தையும் கிரகிக்கவேண்டுமென்று இச்சித்த விராட்புருஷனுக்கு இவற்றிற்கு அதிஷ்டானமாகிய குக்ஷியும், அன்னசங்கிரகத்துக்குக் காரணமாகிய ஆந்திரமும், ஜல சங்கிரகத்துக்கு ஏதுவாகிய நாடிகளும் ஜனித்தன. அந்த நாடிகளிடத்தில் நதிகளும், ஆந்திரத்தில் சமுத்திரங்களும் உதித்தன. அந்த நதிகளால் துஷ்டியும், சமுத்திரங்களால் புஷ்டியும் பிரகாசித்தன. பின்பு தன்னுடைய மாய்கையை தியானஞ் செய்யவேண்டுமென்று இச்சித்த அந்தச் சுவாமிக்கு இருதயமாகிற அதிஷ்டானம் ஜனித்தது. அதிலிருந்து மனதும், அதின் தேவதையான சந்திரனும், கருமாகிய சங்கல்பமும், காமமென்கிற அபிலாஷையும் பிறந்தன. ஜலத்தினுலும், வாயுவினுலும், ஆகாசத்தினுலும் விருத்தியடைந்திருக்கையால், பிருதிவி ஜலதேஜோமயங்களாகிய தொக்கென்று சொல்லப்படுகிற அதிஷ்டானமாகிய கனத்த தோலும், அதின்மேல் சூக்ஷமமாயிருக்கிற தோலும், மாம்சமும், உதிரமும், மேதசும், மச்சையும், எலும்புமாகிற ஏழு தாதுக்களும், அகங்காரத்திற் பிறந்த சப்தமுதலான குணங்களில் பிரீதிபொருந்திய இந்திரியங்களும், உற்பவித்தன. இவைகளில் மனது சகல விகாரங்களுக்கும் ஏதுவாகி யிருக்கும் புத்தியானது விக்கியானரூபமாகி யிருக்கும்.

வாராய் தேவராதனே! வெளியில் பிருதிவி முதலாகிய அஷ்டவர்ணங்களை யுடைத்தான பெரிதாகிய பகவத் ரூபத்தை உனக்குச் சொன்னேன்; இந்தச் சரீரத்திற்குக் காரணமாகியும், இந்திரியங்களால் கிரகிக்கப்படாம லிருக்கிறபடியால் அவ்யக்தமாகியும், ஆதிமத்தியாந்தங்க ளில்லாமையால் ஒரு விசேஷமுமில்லாமலும், க்ஷயவிருசங்களைத் தவிர்ந்திருக்கையால் வாக்கிந்திரியத்திற்கும், மனோவிந்திரியத்திற்கும், விஷயமாகாமலு மிருக்கிற லிங்கசரீரமென்கிற மற்றொரு ரூபம் இந்தப் பகவானுக்கு உண்டாயிருக்கிறது. இந்தப் பகவானுடைய ஸ்தூல சூக்ஷ்மமாகிய இரண்டு ரூபங்களையும் உனக்குத் தெரியச் சொன்னேன். சகலத்தையும் அறிந்த ஞானிகள் மாயாகற்பிதமாகிய இந்த இரண்டு ரூபங்களையும் அனுசரித்து ஸ்ரீ ஹரியைத் தியானஞ் செய்வார்கள். நிஜரூபத்தால் ஒரு கருமங்களில்லாமலும், மாய்கையால் அனேக கருமங்களைச் செய்துகொண்டும், குணபரி பூரணனாகியும், மிகவும் பெரிதான சுவரூபத்தை யுடைத்தாகியும், தன்னனுப்பிரவேசத்தால் மற்ற வஸ்துக்களைப் பெரிதாகக் கற்பித்தும் விளங்குகிற அந்தப் பரம புருஷன், தனக்கு நாமமாகிய சப்தங்களையும் அதின் கருமங்களையும் வகிக்கிறான். அதெப்படி யென்றால், பிரஜாபதிகளையும், மனுக்களையும், தேவர்களையும், ரிஷிகளையும், பிதுர்க்கணங்களையும், வெவ்வேறாகக் கற்பித்து, அப்படியே சித்தர்களையும், சாரணர்களையும், கந்தர்வர்களையும், வித்தியாதரர்களையும், அசுரர்களையும், குய்யகர்களையும், கின்னரர்களையும், அப்சரசுகளையும், நாகர்களையும், கிம்புருடர்களையும், மாதுருகணங்களையும், ராக்ஷதர்களையும், பிசாசகணங்களையும், பிரேதங்களையும், பூதங்களையும், விநாயகர்களையும், கூஷ்மாண்ட கணங்களையும், உன்மாதகணங்களையும், வேதாளங்களையும், யாதுதானர்களையும், கிரணங்களையும், பக்ஷிகணங்களையும், மிருககணங்களையும், பசுக்களையும், விருக்ஷங்களையும், மலைகளையும், ஓ ராஜாவே! மலைப்பாம்பு முதலானவைகளையும், மசக மச்சிய தாபரரூபத்தால் இரண்டு வகையாகவும், சராயுஜமென்றும், அண்டஜமென்றும், சுவேதஜமென்றும், உற்பிஜமென்றும் நான்கு வகையாகியும், ஜலங்களில் வசித்தும், நிலங்களில் வசித்தும், ஆகாசத்தில் வசித்துமிருக்கிற இப்படிப்பட்ட சிருஷ்டிகளைச் செய்து அவைகளில் அனுப்பிரவேசித்து, அவற்றின் பேர்களால் கீர்த்திக்கப்பட்டு, அவைகளுக்கு யோக்கியமாகிய கருமங்களைச் செய்கிறான். இப்பால், கருமங்களுடைய கதிபேதங்களைச் சொல்லுவோம் கேட்பாயாக.

ஓ ராஜாவே! உத்தமங்களாகியும், நிக்ருஷ்டங்களாகியும், மீசுரங்களாகியும், கருமகதிகள் மூன்று விதமாக இருக்கும். அதெங்ஙனமென்றால், சத்துவகுணமென்றும், ரஜோகுணமென்றும், தமோகுணமென்றும், மூன்று வகையாகிய குணங்களால் இந்தக் கதிகளும் திரிவிதமாகவே யிருக்கும். அவைகளில் சத்துவமானது சுவர்க்கமாகியும், அதில் வாசஞ்செய்கிற தேவதைகளாகியும், அதற்குப் பலமாகிய சுகங்களாகவும் விளங்குகிறது. ரஜோ குணமானது பூலோகமாகவும், அதில் வசிக்கிற மனுஷியாளாகவும், அவர்களுடைய சுகதுக்கானுபவமாகிய போகமாகவும் பரிணமித்தது. தமோ குணமானது நரகமாகவும், அங்கே அனுபவிக்கிற ஜீவவர்க்கங்களாகவும், அங்குள்ள யாதனைகளாகவும் பிரகாசித்தது. அந்த மூன்று கதிகளும் ஒவ்வொருவகையா யிருந்தாலும் வேறொரு குணத்தால் மூன்று வகையாகவே யிருக்கும். அதெப்படியென்றால், ஒவ்வொரு குணசுவபாவம் மற்ற இரண்டு குணங்களுடைய சுவபாவங்களுடனே கலந்திருக்கையால், கலந்த வஸ்துவுடைய பேதத்தால் மூன்றுவகை விகாரபேதத்தை அடையும். இப்படிச் சதுர்முகாதி ரூபத்தால் சிருஷ்டியைச் செய்த அந்தப் பகவானே இந்த ஜகத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று இச்சித்துத் தருமஸ்வரூபியாகிய விக்கிரகத்தைத் தரித்து ஜகத்தை தேவமனுஷிய திரியக்கு ஸ்வரூபங்களால் ஸ்தாபனஞ் செய்துகொண்டு போஷணஞ் செய்கிறான். அப்பால் தன்னிடத்திலிருந்து சிருஷ்டிக்கப்பட்ட சமஸ்த வஸ்துக்களையும், காலாக்கினி ருத்திரரூபத்தால் பிரளயகாலத்திலே மேகமண்டலத்தைப் பெருங்காற் றடித்ததுபோல் சங்காரஞ்செய்கிறான். சுபகுண பரிபூரணர்க்கெல்லாம் சிரேஷ்டனாகியும், தோஷதூரகனாகியுமிருக்கிற அந்தப் பரிபூரணனான பகவான், அந்த ஜகத் சிருஷ்டியாதிகளால் சொல்லப்பட்டவனாலும், கியானிகள் இந்த ரூபத்தோடே கூடினவனாகவே அவனைச் சாக்ஷாத்காரஞ் செய்கிறதற்கு இச்சிக்கமாட்டார்கள். அதேனென்றால், இந்த ஜகத்தினுடைய ஜனன முதலாகிய கருமங்களுண்டாகுகையில், அந்தப் பரமபுருஷன் இவைகளில் பிரிவில்லாமல் இருக்கிறபடியாலும், ஜன்மாதிகளையடைந்தவ னல்லாமையாலே அவனிடத்தில் காரணத்துவாதிகளைச் சுருதிகள் சொல்வதென்றால் அவனுக்குக் கருமகர்த்திருத்துவம் வந்திருக்கிறபடியால் ஸ்வரூபத்திலுண்டாகிய கர்த்திருத்துவத்தை நிஷேதிக்கவேண்டி மாயாதீனமான கர்த்திருத்துவம் அடிக்கடி சொல்லப்படுகிறது. இப்போது பரப்பிரம்ம சம்பந்தியான மஹா கல்பமும், அவாந்தர கல்பமும், சூசனையாய் உனக்குச் சொல்லப்பட்டது. அந்த மஹா

கல்பத்திலுண்டான பிராகிருத சிருஷ்டிகளுடைய பிரகாரமும், இவ்விரண்டுக்கும் சாதாரணமாகிய ரூபமும், காலத்தினுடைய பரிமாணமும், கல்ப லக்ஷணங்களும், அதின் ஸ்வரூபங்களும், எப்படிச் சொல்லவேண்டுமோ அப்படியே இனிமேல் சொல்லப்படும். இப்போது பாத்துவ சம்பந்தியான கல்பத்தைச் சொல்லுகிறோம் கேளுமென்று, ஸ்ரீ சுகர் தேவராதனுக்கு உபதேசித்த கதையைச் சூதர் நைமிசாரண்ய வாசிகளுக்குச் சொன்னபின்பு, சவுனகர் சூதரைப் பார்த்துக் கேட்கிறார்.

ஓ சூதரே! பாகவத சிரேஷ்டரான விதுரர் இராச்சியத்தைத் தியஜித்து, பந்துக்களையும் தனங்களையும் தியாகஞ் செய்து, தீர்த்தயாத்திரை செய்தாரென்று எங்களுக்குத் தேவரீர் சொன்னீரல்லவோ, அந்த விதுரருக்கும், மைத்திரேயருக்கும், ஆத்துமவிசாரப் பிரஸ்தாபம் நடந்ததே அது எந்த விடத்தில் நடந்தது, இல்லாவிட்டால், சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணபகவானே மைத்திரேயர் பிரஸ்னஞ்செய்ததற்கு அந்தப் பகவான் தானே, மைத்திரேயருக்கு ஆத்தும தத்துவத்தை உபதேசித்தாரன்றோ, அந்த விருத்தாந்தத்தை எங்களுக்குச் சொல்லவேண்டும், ஓ சாந்தமூர்த்தியே! விதுருருடைய நடக்கையையும், அவர் பந்துஜனங்களைத் தியாகஞ் செய்ததற்குக் காரணத்தையும், தீர்த்தயாத்திரை செய்து வந்ததையும், சொல்ல வேண்டுமென்று பிரஸ்னஞ்செய்த சவுனகரைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார். ஓ சவுனகரே! பரிக்ஷித்து மஹாராஜாவும், சுகமுனியைக் குறித்து இப்படியே பிரஸ்னஞ் செய்தார். அதற்கு அந்தச் சுகயோகி, எப்படிப் பிரதி உத்தரஞ் சொன்னாரோ அப்படியே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

---

# திரிதியஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

ஸ்ரீமந் நாராயணனைப்பற்றிப் பிரம்ம நாரத சம்வாத ரூப மாக த்விதீயஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிற இந்தப் பாகவதமே, ஆதிசேஷனுடைய முகத்தினாலே விஸ்தரிக்கப்பட்டதென்று மூன்றாவது ஸ்கந்த முதற்கொண்டு விஸ்தாரமாகச் சொல்லப்படுகின்றது. இதில் ஆதியில் நான்கு அத்தியாயம் சிருஷ்டி விதுர மைத்திரேய சம்வாதமும், மேல் எட்டு அத்தியாயம் பிரபஞ்சத்தினுடைய லயங்களும், மேலே ஏழு அத்தியாயம் வராக அவதாரமும், மேலே ஒரு அத்தியாயம் பிரபஞ்சத்தினுடைய உபசாரங்களும். அதற்குமேல் நான்கு அத்தியாயம் கபிலர் அவதாரமும், அதற்குமேல் ஒன்பது அத்தியாயம் கபிலோ பாக்கியானமும், இந்தப்பிரகாரம் முப்பத்துமூன்று அத்தியாயங்களாக இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி முதலானவை வர்ணிக்கப்பட்டது.

### சுகர் வாக்கியம்.



வாராய் பரிக்ஷித்து மஹாராஜனே! என்னைக்குறித்து யாதொரு பிரஸ்னம் பண்ணினையோ இந்த அர்த்தந்தானே உன்னுடைய பிதாமகரான பாண்டவர்களுக்கு மந்திரியாகவும், சமஸ்தலோக நாயகராகியுமிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணபகவானானவர், அஸ்தினபுரத்திலே பிரவேசிக்கும்போது துரியோதனனுடைய கிருஹத்தைவிட்டுச் சர்வ சம்பத்துகளினாலேயும் சம்பூர்ணமாயிரா நின்ற விதுரருடைய கிருஹத்தைத் தம்முடைய கிருஹமாக எண்ணிப் பிரவேசிக்க, அப்படிப்பட்ட கிருஹத்தைவிட்டுக் காட்டிலேபோன விதுரரால் பூதபௌஷிய வர்த்தமானக் கியானத்தை யுடையவரான மைத்திரேய மகாரிஷியானவர் கேட்கப்பட்டாரென்று சொல்லா நின்ற சுகப்பிரமரிஷியைப் பார்த்துப் பரிக்ஷித்து வினவுகின்றான் வாரீர் பிரம்மரிஷியே! விதுரருக்கு மைத்திரேய மகாரிஷியுடனே எப்போது சம்வாத முண்டாயிற்று. அதை எனக்கு விவரமாகச் சொல்லவேண்டுமென்று கேட்ட

பரிக்ஷித்து மஹாராஜாவுக்குச் சர்வஞ்ஞராகிய பிரம்மரிஷி யானவர் அதிக சந்தோஷமுடையவராய் அந்த ராஜாவைப் பார்த்துச் சொல்லத்தொடங்கினர். வாராய் ராஜனே! எப்போது திருதராஷ்டிரனனவன், அதருமத்தினலே விவேக மில்லாதவனுய்த் துஷ்டர்களான தன்னுடைய பிள்ளைகளைப் போஷித்தும், தன் தம்பி பாண்டுமகாராஜனுடைய பிள்ளைகளாகிய பாண்டவர்களை அரக்குமாளிகையிலே பிரவேசிப்பித்துத் தகிப்பித்தும், சபையிலே தனக்கு மருமகளாகிய திரௌபதியினுடைய மயிரைப்பிடித் திழுத்த துச்சாதனனுடைய நிந்திதமான கருமத்தை நிறுத்தாமலும், சூதிலே அதருமமாகவுங் கபடமாகவும் செயிக்கப்பட்டவராகியும், சாதுவாகியும், சத்தியசந்தராகியும், பதினூன்குவருஷம் வனவாசஞ்செய்து திரும்பிவந்து தம்முடைய பாகத்தைக்கேட்கிற தருமபுத்திருக்குக் கொடாமற் போனதினுலும், சகல லோக நாயகரான ஸ்ரீ கிருஷ்ணரானவர், தருமபுத்திராலே அனுப்புவிக்கப்பட்டவராய்ச், சபையிலே பீஷ்மர் முதலான பேர்களுக்கு அமிர்தம்போல் ஆனந்தமாயிருக்கிற வார்த்தைகளைச் சொல்லப், புண்ணியவர்ச்சிதனை திருதராஷ்டிரனனவன் சிலாக்கியங்களாக எண்ணுமற் போனபடியினுலும், மந்திரிகளுக்குள்ளே சிரேஷ்டரான விதுரரானவர் மிகவும் பிரசித்தமான வார்த்தையால் திருதராஷ்டிரனை நோக்கி, வாராய் மகாராஜனே! சகிக்கக்கூடாத உன்னுடைய அபராதத்தைச் சகித்துக்கேட்கிற தருமபுத்திருடைய அம்சத்தைக் கொடுக்கக்கடவாய். அர்ச்சுனன் முதலான பிராதாக்களுடனே கூடிக்கொண்டிருக்கிற பீமசேனன் முதலான பாண்டவர்களைப் பகவானுன ஸ்ரீ கிருஷ்ணரானவர் தன்னவர்களாகக் கிரகித்திருக்கிருர். துரியோதனனைப் பிள்ளையென்கிற புத்தியினலே போஷிக்கிருய் ஸ்ரீ கிருஷ்ணருக்கு விரோதியான பாபமானது சரீரந்தைத் தரித்துக்கொண்டு உன்னுடைய கிருஹத்திலே வந்து பிரவேசித்து வாசம் பண்ணிக்கொண்டிருக்கின்றது. ஆகையினலே அந்தப் புத்திரனைக் குலத்திற்கு க்ஷேமத்தின் பொருட்டுச் சீக்கிரமாக விட்டுவிடக்கடவாயென்றுசொன்ன விதுரர் வார்த்தையைக்கேட்ட துரியோதனனனவன் மிகவும் திரஸ்கரித்ததெப்படியெனில், தாசி புத்திரனுகியும் கபடனுகியுமிருக்கிற இவனை இந்தச் சபையிலே எவன் அழைத்தான். இவன் யாதொருத்தனுடைய அன்னத்தினலே போஷிக்கப்பட்டானே, அவனுக்குப் பிரதிகூலனுகியும், சத்துருக்களுடைய காரியத்திலே முக்கியனுகியுமிருக்கிருன் ஸ்மசானம்போலே அமங்களரூபியான இவனைத் தன முதலான சம்பத்தைக் கிரகித்துக்

கொண்டு பிராணனோடே மாத்திரம் பட்டணத்துக்கு வெளியே சீக்கிரமாகத் துரத்திவிடக் கடவீரென்று துரியோதனனுடைய கர்னகடூரங்களான வாக்குகளாகிற பாணங்களாலே யடிக்கப்பட்டவரா யிருந்தாலும், அந்த விதுரரானவர் விசனமில்லாதவராய், ஈசுவரனுடைய மாயாவைபவத்தை யென்ன சொல்லப்போகிறோமென்று அந்த மாயையைக்கொண்டாடி, அவன் போகச்சொல்லுவதற்கு முன்னேயே தாமே ராஜத்துவாரத்திலே தனுசை வைத்துப்போட்டு, கவுரவர்களுடைய புண்ணிய பரிபாகத்தினாலே அடையப்பட்டிருக்கிற அந்த விதுரரானவர், அஸ்தினபுரத்தினின்றும் புறப்பட்டு, பூமியிலே பிரம்ம ருத்திராதி அனேக மூர்த்திகளையுடைய திவ்விய க்ஷேத்திரங்களைத் தரிசித்துப் புண்ணியத்தைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்கிற இச்சையினாலே தாம் ஒருவராய் அனந்தருடைய மூர்த்திகளாலே யலங்கரிக்கப்பட்டிருக்கிற பட்டணங்களிலேயும், புண்ணியங்களான வுத்தியான வனங்களிலேயும், பருவதங்களிலேயும், ஆரணியங்களிலேயும், நிர்மலமான தீர்த்தத்தை யுடையவைகளான சரசுக்கள், நதிகள், இவைகளிலேயும், திவ்யங்களான க்ஷேத்திரங்களிலேயும் சஞ்சரித்தார். பவித்திரமாகியும் ஏகபுக்தமாகியுமிருக்கிற ஜீவனவிருத்தியை யுடையவராகியும், புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானமும், பூமியிலே சயனிப்பும் உடையவராய்த் தேகாபிமானத்தை விட்டுத் தம்முடைய பந்துக்களாலே காணப்படாமல் மரவுரி கிருஷ்ணாஜினங்களைத் தரித்து ஸ்ரீ ஹரிக்குச் சந்தோஷகரங்களான விரதங்களை ஆசரித்தார்.

இந்தப்பிரகாரம் இந்தப் பாரத வருஷத்தைப் பிரதக்ஷணமாகச் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு எவ்வளவு காலத்திலே பிரபாசதீர்த்தம் வந்துசேர்ந்தாரோ, அப்போது தருமபுத்திரரானவர் ஸ்ரீ கிருஷ்ண சகாயத்தினாலே ஏகசக்ராதிபத்தியத்தை யுடைத்தாகி இருக்கிற பூமியைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பதையும், மூங்கில்கள் ஒன்றோடொன்றிழைந்து உண்டாகாநின்ற அக்கினியோடே கூடிக்கொண்டிருக்கிற வனமானது தகிக்கப்படுவதுபோல, ஒருவர்க்கொருவர் விரோதத்தினாலே அடிபட்டுபோன கவுரவர்களுடைய நாசத்தைக்கேட்டு மிகவும் விசனப்பட்டு, அவ்விடத்திலிருந்து மேற்குமுகமாகப் போய்ச் சரஸ்வதிநதியை அடைந்து, அந்த நதியிலேயும சுக்கிரதீர்த்தம், மனுதீர்த்தம், பிருகுதீர்த்தம், அக்கினிதீர்த்தம், அசிததீர்த்தம், வாயுதீர்த்தம், சுதாபதீர்த்தம், கோதீர்த்தம், குகதீர்த்தம், யமதீர்த்

தம், இவைகளில் தீர்த்தமாடி, அவ்விடத்தில் பிராமணர்களாலும், ரிஷிகளாலும், தேவர்களாலும், பிரதிஷ்டை செய்யப்பட்டும், ஆயுதங்களிலே முக்கியமான சக்கிர ஸ்தாபிதஞ் செய்யப்பட்டுமிருக்கிற ஸ்ரீ ஹரியுடைய நானுவிதங்களான க்ஷேத்திரங்களையும் சேவித்துத், தன தான்ய சம்ருத்தமான சௌராஷ்டிரதேசம், சவ்வீரதேசம், மச்சதேசம், குருதேசம், ஜாங்கலதேசம், இவைகளைத்தாண்டி யமுனாநதியை வந்தடைந்து அவ்விடத்திலே பாகவதோத்தமராயும், வாசுதேவருடைய பக்தராயும், சமதமாதி குணங்களை யுடையவராயும், பிரகஸ்பதியினிடத்தினின்று சகல நீதிசாஸ்திரங்களையும் அறிந்தவராயும், மிகவும் பிரசித்தராயுமிருக்கிற உத்தவரைக் கண்டு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு, பகவானுலே ரக்ஷிக்கப்படா நின்ற தம்முடைய பந்துக்களின் குலத்தைக்கேட்டார்.

வாரீர் உத்தவரே! புராண புருஷர்களாகியும், தம்முடைய நாபிக்கமலத்திலுண்டான பிரம்மனுடைய பிரார்த்தனையினுலே இந்தப் பூமியிலே யவதரித்துமிருக்கிற அந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவரும் சுகமாக இருக்கிறார்களா? பரம சுகிர்தராகியும் பூச்சியராகியுமிருக்கிற வசுதேவரானவர் சுகமாக இருக்கிறாரா? யாதவர்களுடைய சேனைகளுக்கு நாயகனுகியும் வீரனுகியுமிருக்கிற பிரத்தியும்நனானவன் சுகமாக இருக்கிறானு? கமலம்போலொத்த நேத்திரங்களையுடைய ஸ்ரீ கிருஷ்ணரானவர், ராச்சியத்திலே பட்டாபிஷேகம் பண்ணி ஸ்தாபிக்கப்பட்டாரா? உக்கிரசேனரானவர், சுகமாயிருக்கிறாரா? பூர்வசன்மத்திலே பார்வதி கருப்பத்திலே தரிக்கப்பட்டிருந்த குமாரசுவாமியை ஜாம்பவதியானவள் அனேக விரதங்களை ஆசிரயித்துப் புத்திரனுகப்பெற்று ஸ்ரீ ஹரிக்குச் சமானமாகியும் மகாரதிகர்களுக்குள் சிரேஷ்டனுகியுமிருக்கிற சாம்பன் சுகமாக இருக்கிறானு? அர்ச்சுனனிடத்தினின்று சமஸ்த தனுர்வேத ரஹசியங்களையடைந்து கிருஷ்ணனுடைய சேவையினுலே யாதவர்களாலே அடையக் கூடாத கதியையடைந்த சாத்தகியானவர் சுகமாக இருக்கிறாரா? வித்துவானுகியும், பாபசூன்யராகியும், பகவத் பக்தராகியுமிருக்கிற அக்குரூரானவர் சுகமாக இருக்கிறாரா? ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் புத்திரனுகவுடைய தேவகிதேவியானவள் தேவ மாதாவான அதிதிதேவியைப்போலும், யக்கியங்களுடைய ஸ்வரூபமான அர்த்தத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற வேதத்தைப்போலும் சுகமாக இருக்கிறாளா? சித்தம், அகங்காரம், புத்தி, மனம் என்று நான்குவிதங்களான அந்தக்கரணத்துக்கு அதிதெய்வமாகியு மிருக்கிற யாதொரு

அனிருத்தனைச் சகல சாஸ்திரங்களும் காரணமாகச் சொல்லுகின்றனவோ, அந்த அனிருத்தன் சுகமாக இருக்கிருனு? சத்தியபாமாவினுடைய புத்திரன் சாருதெக்ஷணன், கதன், இவர்கள் முதலானபேர்களும் சுகமாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருக்கிருர்களா? தருமபுத்திரர் தமக்குக் கைகள்போ லிருக்கிற அர்ச்சுனன், கிருஷ்ணன், இவர்களுடனேகூட, தருமமார்க்கமாக மரியாதையைப் பரிபாலனம் பண்ணிக் கொண்டிருக்கிருரா? சபையிலே துரியோதனனுனவன் சாம்பிராச்சிய சம்பத்தையும், அர்ச்சுனன் முதலான பிரா தாக்களுடைய அனுவிருத்தியையும் பார்த்து, மிகவும் தபிக் கும்படியான ஐஸ்வரியத்தையுடைய தருமபுத்திரர் சுகமாக இருக்கிருரா? மிகவும் கோபத்தை யுடையவனுன பீம சேனன் வெகுகாலமாய் அடக்கிக்கொண்டிருந்த கோப மாகிற விஷத்தை மகா அபராதத்தைப் பண்ணியிரா நின்ற கவுரவர்களிடத்திலே விட்டுவிட்டானு? கதையினுடைய விசித்திரமான மார்க்கங்களை அப்பியாசம்பண்ணின பீம சேனனுடைய பாத ஸ்பரிசத்தைப் பூமியானது சகிக்கமாட் டாமல் போயிற்ருே? அந்தப் பீமசேனன் சுகமாக இருக்கிருனு? மகாரதிகர்களுடைய சமூகத்திலே கீர்த்திவகித்தவனுகியும், சகல சத்துருக்களையும் சங்காரம் பண்ணுகிறவராகியும், மாயாகிராதரூபியாயு மிருக்கப்பட்ட ருத்திரரானவர் எவனுடைய சரக்கூடத்திலே மறைக்கப்பட்டு காணப்படாத வராய் அவனுடைய பராக்கிரமத்துக்குச் சந்தோஷப்பட் டாரோ, அந்த அர்ச்சுனன் சுகமாக இருக்கிருனு? சபத் தினி புத்திரர்களா யிருந்தாலும் குந்திதேவிக்குப் புத்திரர் கள்போலவே யிரா நின்ற நகுல சகாதேவர்க ளிருவரும் இப்பைகளாலே ரக்ஷிக்கப்படா நின்ற நேத்திரங்கள்போல் பாண்டவர்களால் ரக்ஷிக்கப்பட்டவர்களாய் வச்சிராயுததாரி யான தேவேந்திரனுடைய முகத்தினின்றும் அமிர்தத்தை யடைந்த கருடன்போல் யுத்தத்திலே துரியோதன னிடத்தி னின்றும் தங்கள் ராச்சியத்தைப் பிடுங்கிக்கொண்டு சுகமாக ரமித்துக்கொண் டிருக்கிருர்களா? புத்திரர்கள் நிமித்த மாகவே பிராணனை வைத்துக்கொண்டிருக்கிற குந்திதேவி யும், ராஜோத்தமனுகியும், ஏகவீரனுகியும், அகிரதனுகியு மிருக்கிற பாண்டு மகாராஜனை விட்டுப் பிராணனைத் தரித் துக்கொண்டிருக்கிறது ஆச்சரியமே. வாரீர் சௌமியரே! திருதராஷ்டிரனுனவன், மரித்துப்போன பாண்டுமகாராஜ னுக்குத் துரோகத்தைப்பண்ணித் தன்னுடைய புத்திரர்க ளான துரியோதனுதியர்களை யனுவர்த்தியா நின்ற திருத ராஷ்டிரனுக்கு நண்பனுகியும் தமயனுகியுமிருக்கிற நானும்

பட்டணத்தை விட்டுத் துரத்திவிடப்பட்டேன். அதோ கதியை யடைந்துபோன அந்தத் திருதராஷ்டிரனுக்கு விசனப்படுகிறேன். அப்படிக்கெல்லாமிருந்த நான், தம்முடைய திவ்ய ஐஷ்வரியங்களை மறைத்து மானுஷ்ய லீலைகளினுலே மனுஷர்களுடைய சித்த விருத்திகளை அபகரித்துக்கொண்டு, சகல லோக நாயகரா யிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய மாயா மகத்துவத்தைப் பார்த்து ஆச்சரியப்படாதவனுகி, இந்தப் பூமியிலே யொருவராலேயுங் காணப்படாதவனுய்ச் சுகமாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறேன். எமக்குத் துரியோதனுதியர்கள் அபராதம் பண்ணின காலத்திலே, பகவான் அவர்களைச் சங்கரிக்கத் தக்கவராயிருந்தாலும், அவர்களுடைய அபராதத்தை அப்போது உபேட்சை பண்ணினது ஏனென்ருல், அனேகம் சேனைகள், வித்தியா மதம், தன்மதம், குலமதம், இந்த மதங்களினுலே மரியாதை தப்பி நடந்தும், மிகவும் கருவத்தை யுடையவர்களாகியுமிருக்கிற ராஜாக்களை அதஞ்செய்ய வேண்டுமென்று, தம்மைச் சரணமாக அடைந்த பூமியினுடைய பாரத்தைத் தீர்க்க வேண்டுமென்கிற இச்சையினுலே கவுரவர்களுடைய அபராதத்தைச் சகித்தார். வாரீர் சகாவே! தம்மைச் சரணமாக அடையாநின்ற பிரம்மன் முதலான சமஸ்தலோக பாலர்களுக்கும் தம்முடைய ஆக்கினையைத் தப்பாமல் நடத்துகின்ற பேர்களுக்கும், கர்வப் பிரயோஜனத்தின்பொருட்டும், யாதவகுலத்திலே யவதரித்து, ஜன்மரகிதராகியும், பவித்திரமான கீர்த்தியை யுடையவராகியு மிருக்கிற அந்தப் பகவானுடைய வார்த்தையை எனக்கு சொல்லக்கடவீர்.

---

## இரண்டாவது அத்தியாயம்

---

ஸ்ரீ கிருஷ்ண வியோகத்தினுலே மிகவும் விசனப்படுகின்ற உத்தவரானவர், பெருமூச்சு விட்டுக்கொண்டு, விதுரருக்கு ஸ்ரீ கிருஷ்ணருடைய பால்ய சரித்திரங்களை வர்ணித்தாரென்று சொல்லப்படுகிறது.

வாராய் மகாராஜனே! ஐந்து வயதில் அந்த உத்தவரானவர், ஸ்ரீ கிருஷ்ணன்போலே பிரதிமையைச் செய்து வைத்துக்கொண்டு அவருக்குப் பூஜை நடத்திக்கொண்டிருக்கையில், பிராதக்கால போஜனுர்த்தமாய் மாதாவினுலே பிரார்த்தித்து அழைக்கப்பட்டாலும் அந்தப் போஜனத்தை விரும்பாமல் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சேவையே மேன்மையாக வெண்ணி, வார்த்திகத்தை அடைந்தார். அப்படியிராநின்ற அந்த உத்தவரானவர், பகவானுடைய வார்த்தையைக்

குறித்து விதுரரால் கேட்கப்பட்டவராய், அந்தப் பகவானுடைய திருவடிகளை ஸ்மரித்துக்கொண்டு அதைரியத்தை யுடையவராய் மறுவசனஞ் சொல்லமாட்டாமல், ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருவடித்தியானமாகிற அமிர்தத்தினாலே ஒரு முகூர்த்தகாலம் முழுகினவராய்ப், புளகாங்கித சர்வ அவயவங்களையுடையவராய்ப், பிற்பாடு மெல்ல மெல்ல பகவத்தியானமாகிற லோகத்தினின்றும் திரும்பித், தேகாதி கியானத்தையுடைய அந்த உத்தவரானவர், நேத்திரங்களைத் துடைத்துக் கொண்டு, யாதவ குலத்தை உபசங்காரம்பண்ணினது முதலான பகவானுடைய லீலைகளை நினைத்துக்கொண்டதினாலே மிகவும் ஆச்சரியத்தை யுடையவராய், அந்த விதுரரைப் பார்த்துப் பிரதிவசனம் சொல்லுகிறார். வாரீர் விதுரரே! ஸ்ரீ கிருஷ்ணராகிய சூரியனானவர் அஸ்தமனத்தையடைகிறபடியால், காலமாகிற மலைப்பாம்பினாலே விழுங்கப்பட்டுச் சம்பத்தை யிழந்திருக்கிற நம்முடைய பந்துக்களுக்கு எப்படி க்ஷேமமுண்டென்று சொல்லுவேன். லோகத்திலே யிராநின்ற ஜனங்கள் யாவரும் பாக்கியவீனமாகி யிருக்கின்றனர்.

அதிலும் யாதவர்கள் மிகவும் பாக்கியவீனர்கள். அவர்கள் கிருஷ்ணரோடேகூட வாசம்பண்ணிக்கொண்டிருந்தாலும் அவர் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணரென்று அறியாமற் போனது எதுபோலென்றால், க்ஷீரசமுத்திரத்திலே யிருக்கின்ற மச்சியங்கள், அதிலே பிறவாநின்ற சந்திரனைச் சந்திரனென்று அறியாமல், இதுவும் மனோக்கியமான ஒரு ஜலஜந்துவென்றே அறிந்ததுபோல், சமஸ்த யாதவர்களும் சர்வலோக அரசனாயிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனை யாதவசிரேஷ்டனென் றெண்ணிக்கொண்டிருந்தார்கள். சிசுபாலர் முதலான பேர்கள் மிகவும் வைரத்தையே ஆசிரயித்தவர்களாய் நிந்தித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வசனங்களைக் கேட்ட ஜனங்கள், பரமாத்துமாவான ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் வைக்கப்பட்ட சித்தம் மாறி மிகவும் மூடர்களாக நிற்கிறார்கள். பகவானானவர் தபசுபண்ணாதவர்களாகியும், தம்முடைய திவ்யமூர்த்தத்தைப் பார்த்துத் திருப்தி யடையாத நேத்திரங்களையுடையவர்களாயு மிருக்கிற மனுஷியர்களுக்கு, இவ்வளவு காலம் திவ்ய மூர்த்தியைக் காண்பித்து, ஜனங்களுடைய நேத்திரங்களைப் பிடுங்கிப் போட்டாற்போல் அந்தரத்தானத்தை யடைந்தார். தம்முடைய மாயாபலத்தைக் காண்பியாநின்ற பகவானாலே கிரகிக்கப்பட்டும், மனுஷியாவதார லீலைகளுக்கு யோக்கிய

மாகியும், ஆச்சரியகரமாகியும், சகல உபாக்கியானங்களுக்கு ஸ்தானமாகியும், பூஷணங்களுக்குப் பூஷணங்களாகியும், அவயவங்களை யுடைத்தாகியு மிருக்கிற தருமபுத்திரருடைய ராஜசூய யாகத்திலே, நேத்திரங்களுக்குப் பரமானந்தகரமாயிருந்த திருமேனியைப் பார்த்து, ஜனங்கள் பிரம்மாவுக்கு மனுஷ்யதேக நிர்மாணத்திலே இதற்குமேல் சாமர்த்திய மில்லையென்று எண்ணிக் கொண்டார்கள்.

கோபிகைகள் பிரீதியினலே அந்த ஸ்ரீ கிருஷ்ணனையே யனுவர்த்தித்துச் செய்யப்படுகின்ற காரியங்களை முடியாமல் விட்டிருத்தலாலும், சாந்தரூபர்களாகியும், தம்முடைய அம்சங்களாகியு மிருக்கிற சாதுக்கள் பீடிக்கப்படுகையினலும், மிகவும் கிருபாசாலியான சித்தத்தை யுடையவராகியும், பிரம்மாதி சகல லோகங்களுக்கும் ஈசுவரராகியுமிருக்கிற பகவானவர், ஜன்மமில்லாத வராயிருந்தாலும், அக்கினியானது காஷ்டங்களிலே ஆவிர்ப்பவிக்கிறதுபோல் அவதரியா நின்ருர். அந்தப் பகவான், வசுதேவருடைய கிருஹத்திலே அவதரித்துக் கம்சனிடத்தினின்றும் பயந்தாற் போல் கோகுலத்திலே வாசமும், காலயவனன் முதலிய சத்துருக்களுக்குப் பயந்தாற் போல் மதுராபட்டணத்தினின்றும் ஓடிப்போனதும், மாதா பிதாக்களுடைய பாதங்களில் பிரணமம் பண்ணிக் கம்சனிடத்தில் நின்றும் மிகவும் பயப்பட்ட உங்களுக்குச் சிசுருஷையைப் பண்ணுதவர்களாகியு மிருக்கிற எங்களை அனுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று சொன்னவைகளை நினைத்து என்னுடைய சித்தமானது மிகவும் துக்கிக்கிறது. பகவானனவர் தமது புருவ நெரிப்பாகிற காலத்தினலே பூபாரத்தைப் போக்கடித்த அவருடைய ஸ்ரீ பாதரேணுக்களை எவன்தான் மறந்து போகச் சமர்த்தனுவான்? யோகீஸ்வரர்களானபேர்கள் தீவிரமான யோகாப்பியாசத்தினல் சித்தியை யடைகிறதற்கு இச்சிக்கிற பகவானுடைய வியோகத்தை யெவன்தான் சகிப்பான்? யுத்தத்திலே ராஜாக்கள் அர்ச்சுனனுடைய பாணமாகிற ஜலத்தினலே யலம்பப்பட்டுப் பரிசுத்தர்களாய் நேத்திரங்களுக்கு ஆனந்தகரமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய முகாரவிந்தத்தைப் பார்த்து அவருடைய பதவியை யடைந்தார்கள். திரிமூர்த்திகளுக்கும் ஈசுவரராகிய பகவான் தம்முடைய பரமானந்த ஸ்வரூபத்தினலே யடையப்பட்ட ஸமஸ்த போகங்களையும் உடைய உக்கிர சேனனிடத்திலே பண்ணப்பட்ட கைங்கரியமானது, பிரத்தியர்களான நம்மை மிகவும் விசனப்படுத்துகிறது. பூதனையானவள் அந்தப் பக

வானைக் கொல்லத் தன்னுடைய ஸ்தனங்களின் வழியாகக் காளகூட விஷத்தைப் பானம் பண்ணுவித்தவளா யிருந்தாலும், மாதாவான யசோதையாலே யடையத்தக்கதான கதியை யடைந்தாள். அப்படிப்பட்ட கிருபாசாலியான அந்தப் பகவானைத் தவிர மற்ற எவனைச் சரணமாக அடையப்போகிறேன். வேதங்களுக்கு ஈசுவரனுகியும், சர்வலோகேஷ்வரனுகியு மிருக்கிற ஸ்ரீ ஹரியினிடத்திலே கோபாவேச மார்க்கத்தினுலே வைக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களான அசுரர்கள். சக்ராயுதரான ஸ்ரீ ஹரியைக் கருடாரூடனுகப் பார்த்த மாத்திரத்தில் பாகவதர்களாவரென்றே யெண்ணுகிறேன். அந்தப் பகவானுனவர், பிரம்மாவினுலே பிரார்த்திக்கப்பட்டு இந்தப் பூமிக்குச் சுகத்தைப் பண்ண வேண்டுமென்று இச்சித்து வசுதேவருக்குத் தேவகியி னிடத்திலே அவதரித்துக் கம்சனிடத்திற் பயப்படுகின்ற பிதாவான வசுதேவராலே கோகுலத்தை யடைவிக்கப் பட்டவராய், அவ்விடத்திலே பலராமரோடேகூட அப்பிரகாசமான தேஜஸையுடையவராய்ப், பதினெருவருஷம் வாசம்பண்ணிப் பக்ஷிகளாலே சூழப்பட்டிருக்கிற விருக்ஷங்களை யுடையதான யமுனு தீரத்திலுள்ள வனத்திலே கோபாலர்களோடே கன்றுகளை மேய்த்து விளையாடிக்கொண்டும், பார்க்கப் பார்க்க ரமணீயமா யிருக்கிற தம்முடைய கௌமார லீலையை அந்த வனத்திலுள்ள பிராணிகளுக்குக் காண்பித்து அழுகிறவரைப்போலு மிருந்து, சுந்தரமூர்த்தியாகியும், பால சிம்ஹம்போன்ற பார்வையை யுடையவராகியு மிருக்கிற அந்தப் பகவான், சம்பத்திற்கு ஸ்தானமாகியும்வெண்மையான பசுக்களை யுடையதாகியுமிருக்கிற கோகுலத்தினின்று வேணுகானம் பண்ணித் தம்மை அனுவர்த்திக்கின்ற கோபாலர்களை ரமிப்பித்துக்கொண்டிருந்தார். கம்சனுலே யேவப்பட்ட மகா மாயாவிகளான சத்துருக்களை விளையாட்டாகச் சிம்மாதிகளைப்போல் சங்கரித்தார்.

யமுனுநதியிலே வெகுகாலம் வாசம் பண்ணிக்கொண்டிருந்த காளியனை நிக்கிரகித்து, அதனுடைய விஷஜலத்தினுலே மரித்துப்போன கோபாலர்களையும், பசுக்களையும் திரும்பி யெழுப்பித், தம்முடைய கடாக்ஷத்தினுலே விஷதோஷம்போய்ச் சுபத்தையடைந்த ஜலத்தைக் கோபாலர்களையும், கோக்களையும் பானம்பண்ணுவித்தார். அளவில்லாமற் சேர்ந்திருக்கின்ற தனத்துக்குச் சன்மார்க்கமாய் விரயத்தைப் பண்ணுவிக்க வேண்டுமென்றும், தேவேந்திரனைக் கருவபங்கம் பண்ண வேண்டுமென்றும், இச்சித்த பகவானுனவர் நந்தகோபரைக் கொண்டு பிராமணமுகமாய்ப் பூஜை பண்ணுவித்

தார். தன்னுடைய பூஜாநுபங்கத்தினாலே மிகவும் அவமானத்தை யுடையவனான இந்திரனானவன், கோபத்தினாலே கோகுல நாசார்த்தமாக வருஷிக்கையில், அந்த மகா வருஷத்தினாலே மிகவும் பீடிக்கப்பட்ட கோகுலமானது, ஸ்ரீ பகவானுடைய லீலையினாலே தரிக்கப்பட்ட பர்வதமாகிற குடையினாலே ரக்ஷிக்கப்பட்டது. வாரீர் விதுரரே! ஸ்ரீ கிருஷ்ணரானவர் சரத்கால சந்திரனுடைய கிரணங்களாலே மிகவும் விளங்கா நின்ற சாயங்காலத்தைப் பார்த்துச் சந்தோஷமாய் ஸ்திரீகளுடைய மண்டலத்துக்குப் பூஷணமாகவிருந்து மதுரமாகக் கானம் பண்ணிக்கொண்டு லீலை பண்ணினார்.

---

## மூன்றுவது அத்தியாயம்

*ஸ்ரீ கிருஷ்ணரானவர் கோகுலத்திலிருந்து மதுரையிலே போய்க் கம்ச வதை முதலானதைப் பண்ணினதும், துவாரகையில் லீலைகளைப் பண்ணினதும் வர்ணிக்கப்படுகிறது.*

வாரீர் விதுரரே! ஸ்ரீ கிருஷ்ணன் பலராமரோடே தம்முடைய மாதா பிதாக்களுக்குச் சுகத்தைப்பண்ண இச்சித்து மதுராபட்டணத்திலே வந்து பராக்கிரமத்தினாலே சத்துருக்களுக்குள்ளே சிரேஷ்டனான கம்சனை உன்னதமான மஞ்சத்தினின்றும் கீழே தள்ளிக் கொன்று பூமியிலே யிழுத்துப் போட்டுச், சாந்தீபினியென்கிற குருவினிடத்தில் சமஸ்த வேதங்களையுஞ் சாங்கோபாங்கமாக அத்தியயனம் பண்ணி அந்தக் குருவின் மரித்துப்போன புத்திரனைக் கொண்டுவந்து கொடுத்தார். ருக்மணி விவாக நிமித்தமாக அழைக்கப்பட்ட சிசுபாலன், ஜராசந்தன் முதலான அந்த ராஜாக்கள் பார்த்துக்கொண்டிருக்கத் தம்முடைய அம்சமான ருக்மணி தேவியைக் கருடனானவர் அமிர்தத்தை அபகரித்தாற்போல் அபகரித்தார் ஒருவராலேயுங் கட்டுப்படாமலிருந்த ருஷபங்களைப் பிடித்து மூக்காங்கயிறு போட்டு அடக்கிச் சுயம்வரத்திலே நக்னசித்துவினுடைய குமாரத்தியைக் கோரா நின்றும் மூடர்களாகியும் சஸ்திர பாணிகளாகியு மிருக்கிற ராஜாக்களை அஸ்திரங்களாலே சங்கரித்துக் கலியாணம் பண்ணினார். நரகாசுரனைக் கொன்று அவனுடைய புத்திரனான பகதத்தனுக்கு ராஜ்ஜியத்தைக் கொடுத்து அவ்விடத்திலிருந்த அதிதி தேவியினுடைய குண்டலங்களைக் கொடுத்துச் சுவர்க்கத்திற்குப்போய்ச் சத்தியபாமைக்குப் பிரியத்தைப் பண்ண வேண்டுமென்று பாரிசாத விருக்ஷத்தைத் துவார

கைக்குக் கொண்டுவந்து நாகாசுரனாலே அபகரிக்கப் பட்டிருந்த கன்னிகைகளுக்கு யோக்கியமான ரூபத்தையுடையவராய் ஒரு முகூர்த்தத்திலே விவாகம் பண்ணிக்கொண்டு அந்த ஸ்திரீகளிடத்திலே தமக்குச் சமானர்களான பத்துப் பிள்ளைகளைப் பெற்றார்.

சம்பராசுரன், துவிதன், பாணாசுரன், முரன், பல்லவன், இவர்கள் முதலான பேர்களைப், பிரத்தியும்நன், பலராமன் முதலான பேர்களாலே சங்காரம் பண்ணுவித்தார். தந்தவக்கிரன் முதலானபேர்களைத் தாமே சங்காரஞ்செய்து, உம்முடைய பிராதாக்களான பாண்டுமகாராஜன் திருதராட்டிரன் இவர்களுடைய புத்திரர்களின் பக்ஷமான ராஜாக்களைச் சம்மாரஞ்செய்வித்துச் சந்தோஷப்படாமல் பிரத்தியும்நன் முதலானபேர்களாலே சம்பூர்ணமாகி ஒருத்தராலேயும் ஜயிக்கக்கூடாததாயிருக்கிற யாதவ வதத்துக்கு உபாயமானது என்னவெனில், மத்தியபானத்தினால் ஒருவருக்கொருவர் விவாதம் உண்டாயிற்றானால் அதுவே இவர்களுடைய வதத்துக்கு உபாயம். இதைப்பார்க்கிலும் வேறில்லை, தாமே நசித்துப் போவார்களென்று சிந்தித்து அவ்வாறு செய்தார். அபிமன்யுவினால் புரு வம்சவிருத்திகரமான உத்தரையினுடைய கர்ப்பத்தை ரக்ஷித்துத் தருமபுத்திரரை மூன்று அஸ்வமேதங்களாலே யஜிப்பித்தார். அந்தத் தருமபுத்திரரும் பிராதாக்களோடே கூட ஸ்ரீ கிருஷ்ணரை அனுவர்த்தித்துப் பூமியைத் தருமமாகப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார். விசுவரூபியான பகவானும் சாங்கிய யோகத்தை ஆஸ்ரயித்தவராய்த் துவாரகா பட்டணத்திலே புன்சிரிப்புடனே கூடிக் கொண்டிருக்கிற கடைக்கண் பார்வையினாலேயும், அமிர்தத்திற்குச் சமானமான வாக்கினாலேயும், நிர்த்துஷ்டமான சரித்திரத்தினாலேயும், மகாலக்ஷ்மிக்கு இருப்பிடமான திருமேனியினாலேயும், இந்த லோகத்திலேயிருக்கிற ஜனங்களையும் ரமிப்பித்துக்கொண்டிருந்தார். அந்தப்பகவானுக்குக் கிருகஸ்த கருமங்களிலேயும், காமபோகங்களிலேயும், வைராக்கியமானது உண்டாயிற்று. ஒருக்கால் துவாரகாபட்டணத்திலே கிரீடித்துக்கொண்டிருக்கின்ற யாதவகுமாரர்களாலே கோபித்துக் கொண்டவர்களாய் ரிஷிகள் பகவானுடைய அபிப்பிராயத்தை யறிந்தபேர்களாய்ச் சாபத்தைக் கொடுத்தார்கள். சிலமாதங்கள் போனபிற்பாடு போஜர்கள், விருஷ்ணிகள், அந்தகர்கள் முதலான யாதவர்கள் மிகவும் சந்துருஷ்டர்களாய்த் தெய்வ மாய்கையினாலே மோகிக்கப் பட்டவர்களாய்ப்பிரபாசதீர்த்தத்தைப்போயடைந்து அதிலே

ஸ்நானம்செய்து தேவரிஷி பிதுர் தர்ப்பணம் பண்ணிப் பிராமணர்களுக்கு வெகுபாலுள்ள சாதுக்களான இளவயதுள்ள பசுக்களையும் சுவர்ணங்கள், ரசிதங்கள், கட்டில் மெத்தைகள், வஸ்திரங்கள், கிருஷ்ணாசனங்கள், ரத்தினகம்பளங்கள், அசுவங்கள், யானைகள், ரதங்கள், கன்னிகைகளையும், ஜீவனப்பிரதான பூமி முதலியவைகளையுந் தானம்பண்ணிப், பின்னும் திவ்யமாகியும் நானாரசங்களோடே கூடிக்கொண்டுமிருக்கிற அன்னங்களைக் கொடுத்துச் சாஷ்டாங்கமாக தண்டம் பண்ணினார்கள்.

---

## நான்காவது அத்தியாயம்

*விதுராானவர் பந்துக்களுடைய நாசத்தைக் கேட்டு, உத்தவருடைய உபதேசத்தினாலே ஆத்மஞானத்தின் பொருட்டு மைத்திரேய மகரிஷியைப்போ யடைந்தாரென்று சொல்லப்படுகின்றது.*

வாரீர் விதுராரே! அந்த யாதவர்கள், பிராமணர்களாலே அநுக்கிரகம் பண்ணப்பட்டவர்களாய்ப் போஜனம் பண்ணி மத்தியபானஞ்செய்து அந்த மயக்கத்தினாலே விவேகமில்லாதவர்களாய் ஒருவருக்கொருவர் இரகசியத்தை வெளிப்படுத்துவதான துர்வசனங்களாலே அடித்துக்கொண்டார்கள். அந்த மத்தியபான தோஷத்தினாலே விவேகவீனர்களாயிருக்கிற அந்த யாதவர்களுக்குச் சூரியன் அஸ்தமானத்தை யடைந்துபோகையில் அப்போது மூங்கில்கள் ஒன்றுக்கொன்றிழைந்து தகிக்கப்பட்டுப் போகிறதுபோல் நாசமானது உண்டாயிற்று. ஸ்ரீ கிருஷ்ணரும் தம்முடைய மாய்கையின் வைபவத்தைப் பார்த்துச் சரசுவதிநதியிலே போய் ஆசமனம்பண்ணி அரசவிருக்ஷ மூலத்திலே யோகாப்பியாசத்திலே யிருந்தார். பிரபன்னர்களுடைய துக்கத்தைப் போக்கடிக்கவேண்டுமென்றும், தம்முடைய பலத்தை உபசங்காரம் பண்ணவேண்டுமென்றும் இச்சித்த அந்தப் பகவானாலே நான் பூர்வமே துவாரகையைவிட்டுப் பதரிகாச்சிரமத்திற்குப் போகும்படி நியமிக்கப்பட்டேன். அப்படி அந்தப் பகவானுடைய அபிப்பிராயத்தை யறிந்தவனாயிருந்தாலும் அவருடைய திருவடிகளின் வியோகத்தைச் சகியாதவனாய்ப் பின்னே போனேன். சரசுவதிநதி தீரத்திலே ஒருவராகவும், எனக்கு இஷ்டராகவும், பிரபுவாகியும், லக்ஷ்மி நிவாசராகியும், சர்வபரிபூரணராகியும், நீலமேகசாமளராகியும், நிர்மலராகியும், மலர்ந்து சிவந்திருக்கிற பத்மம்போலொத்த நேத்திரங்களையுடையவராகியும், நான்கு புஜங்க

ளுடனே காணப்பட்ட பீதாம்பரதாரியாகியும், தாமரைப் புஷ்பம்போலொத்த வலது திருவடியை இடது இடையின் மேல் வைத்துக்கொண்டும், மனோக்கியமான அரச விருக்ஷத்தின்மேல் சார்ந்துகொண்டும், விஷய சுக அபிலாஷையை விட்டவராகியும், ஆனந்த பரிபூரணராகியு மிருக்கிற பகவானைக் கண்டேன். அப்போது அவ்விடத்திலே மகாபாகவதராகியும், வியாசருக்குச் சிநேகராகியு மிருக்கிற மைத்திரேய ரிஷியானவர் லோகசஞ்சாரியாய் இச்சையால் அவ்விடத்துக்கு வந்தனர். அந்த ரிஷியானவர் கேட்டுக்கொண்டிருக்கையில் ஸ்ரீ முகுந்தர் என்னைப் பிரீதியினாலே கடாக்ஷித்து ஒரு வார்த்தை சொன்னார்.

வாரீர் உத்தவரே! உம்முடைய மனத்துக்குள்ளேயிருக்கின்ற அபீஷ்டத்தை நான் அறிவேன். பூர்வஜன்மத்திலே வசுவாகவிருந்த நீரும், விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகளும் ஏகமாகச் சேர்ந்து யக்கியம் பண்ணினீர். அந்த யக்கியத்தில் என்னுடைய சித்தியை அடையவேண்டுமென்று உம்மாலே யக்கியம் பண்ணப்பட்டு நன்றாக ஆதரிக்கப்பட்டேன். ஆகையாலே மற்றவர்களாலே யடையக்கூடாத என்னுடைய ஸ்தானத்தை உமக்குக்கொடுக்கப்போகிறேன். இந்தச் சன்மத்திலே என்னை ஏகாந்த பக்தியிலே பார்க்கின்ற உமக்கு மங்கள முண்டாகக்கடவது. பூர்வத்திலே என்னுடைய நாபிக்கமலத்திலே ஜனித்த பிரம்மதேவன் பொருட்டுப் பரமக்கியானமானது என்னாற் சொல்லப்பட்டது. அதைச் சொல்லுகிறேன் கேளுமெனச் சொல்லக் கேட்டுப் பரம புருஷனுடைய கிருபாகடாக்ஷானுக்கிரகத்துக்குப் பாத்திரனாகியும் சினேகிதத்தினாலே புளகாங்கித தேகனாகியுமிருந்த நான் கண்ணீரைப் பெருக்கிக்கொண்டு, அஞ்சலிபந்தம்செய்து தட்டுத்தடங்கலில்லாத சப்தங்களை யுடையவனாய் அந்தப் பகவானைப் பார்த்து ஒரு வார்த்தை சொன்னேன்.

வாரீர் ஈசனே! தேவரீருடைய பாதபத்மங்களை ஆசரியா நின்ற பேர்களுக்குத் தருமார்த்த காம மோக்ஷ ரூபங்களான நான்கு புருஷார்த்தங்களுக்குள்ளே எந்தப் புருஷார்த்தந்தான் மிகவுந் துர்லபமாக விருக்கும். தேவரீருடைய சரணாரவிந்த சேவைகளிலே மிகவும் ஆசையையுடைய நான், அந்தப் புருஷார்த்தங்களைக் கோரவில்லை. இச்சையில்லாதவராயும் கிரியா சூனியராகியு மிருக்கிற உமக்குக் கருமங்களும், ஜன்மமில்லாதவராகியு மிருக்கிற உமக்கு

ஜன்மமும், காலஸ்வரூபியான உமக்குச் சத்துருக்களினின்றும் பயத்தினாலே துக்கம் ஆசரித்ததும், அதைவிட்டு ஓடிப்போனதும், ஆத்துமானந்த பூரணரான வுமக்கு அநேகமாயிரம் ஸ்திரீகளாலே சூழப்பட்ட கிருகஸ்தாச்சிரம தருமம் யாதொன்றுமுண்டோ? இந்த விஷயத்திலே வித்துவாம்சர்களுடைய புத்தியும் சம்சயத்தை யடையா நிற்கிறது. தேவரீர் தேசகாலங்களாலே மறைக்கப்படாமலும், சம்சயமில்லாமலும், நிச்சயரூபமாகியு மிருக்கிற கியானசத்தியை யுடையவரா யிருந்தாலும், அக்ஞன்போலவே சாவதானத்தை யுடையவராய் யாதொரு யோசனையைக் கேட்டீரோ அது என்னுடைய மனதை மோகிப்பிக்கிறது. வாரீர் சுவாமி! தேவரீருடைய தத்துவஸ்வரூபப் பிரகாசமாகியும், பரமமாகியு மிருக்கிற யாதொரு கியானத்தைப் பிரம்மதேவரின் பொருட்டுச் சொன்னீரோ அதை நான் கேட்கிறதற்கு யோக்கியமானால் உபதேசிக்கக் கடவீரென்றுகேட்க என் பொருட்டுப் பரமபுருஷராகியும், அரவிந்தம்போன்ற நேத்திரங்களை யுடையவராயும், ஆசாரியரூபியாகியு மிருக்கிற அந்தப் பகவானிடத்தில் நின்றும் அத்தியயனம் பண்ணப்பட்ட பரமாத்தும தத்துவக்கியான மார்க்கத்தை யுடையவனாய் அவரைப் பிரதக்ஷிணம்பண்ணி அநேக பிரணாமங்களைச் செய்து அவருடைய வியோகத்தினாலே விசனப்படுகின்ற மனதை யுடையவனாய் இவ்விடத்திலே வந்தேன். தேவதேவோத்தமர்களாகியும், நித்தியக் கியான ஐஸ்வரியாதிகளை யுடையவர்களாயும், நரநாராயணரிஷிகள் அந்நியர்க்கு உபத்திரவமில்லாமலும், ஒருத்தராலேயும் பண்ணக்கூடாமலும், எண்ணிக்கை யில்லாமலும் இருக்கிற தபசை பண்ணிக்கொண்டிருக்கிற பதரிகாச்சிரமத்தைக் குறித்துப் போகப் போகிறேனென்று சொன்ன உத்தவரை நோக்கி ஸ்ரீ கிருஷ்ண பகவானாலே கிரகிக்கப்பட்ட ஜனங்களுக்குள்ளே முக்கியராகியும் மகா பாகவதராகியு மிருக்கிற விதுரர் ஒரு வார்த்தை சொன்னார்.

வாரீர் உத்தவரே! யோகீஸ்வரராகிய அந்த ஸ்ரீ கிருஷ்ணராலே யுபதேசிக்கப்பட்ட தத்வக்கியானத்தைச் சொல்லக் கடவீரென்று பிரார்த்தியா நின்ற விதுரரைப் பார்த்து, வாரீர் விதுரரே! தத்துவக்கியான உபதேசத்தின் பொருட்டு இந்த மைத்திரேய மகாரிஷியானவர், தம்மால் ஆராதிக்கப்படத் தக்கவரென்று பகவானாலே ஆக்கியாபிக்கப்பட்டிருக்கிறாரென்று உத்தவரானவர் இந்தப்பிரகாரம் விதுரருடனேகூட விஸ்வமூர்த்தியான ஸ்ரீ ஹரியினுடைய குணகீர்த்தனமாகிற

அமிர்தத்தினாலே சகல பாபங்களையும் போக்கடித்தவராய் அந்த யமுனாநதியினுடைய மணற்குன்றிலே அந்தராத்திரியை லக்ஷணமாகப் போக்கடித்துப், பிற்பாடு அவ்விடத்தினின்று புறப்பட்டுப் பதரிகாச்சிரமத்துக்குப் போனாரென்று சொல்லுகிற சுகப்பிரம்மரிஷியைப் பார்த்து, வாரீர் பிரம்மரிஷியே! அதிரத மகாரதர்களுக்குள்ளே உத்தமர்களான விருஷ்ணிகள், போஜர்கள் முதலான யாதவர்கள் பிராமண சாபத்தினாலே நாசமடைந்ததும், ஸ்ரீ ஹரியும் அந்த மனுஷ்யதேகத்தை விட்டுவிட்டார், அப்படிப்பட்ட சாபத்தில் இந்த உத்தவர் மாத்திரம் எவ்வாறாகத்தப்பினார், இந்த ரகசியத்தைச் சொல்லக்கடவீரென்று பிரஸ்னம் பண்ணுகிற ராஜாவைப் பார்த்துச் சுகர் சொல்லுகிறார்.

வாராய் மகாராஜனே! சத்தியசங்கற்பரான அந்தப் பகவானானவர், பிராமணசாபமென்கிற வியாஜத்தை யுடையதாகியும், தம்முடைய சத்திரூபமாகியுமிருக்கிற காலத்தினாலே பரிபூரணமான தம்முடைய குலத்தை உபசங்காரம்பண்ணித் தேகத்தையும் விட்டுவிடப் போகிறவராகி, இந்தப்பிரகாரம் சிந்தித்தார். என்னவென்றால், நாம் இந்த மனுஷ்யலோகத்தில் நின்றும் ஒழிந்தால் பரமாத்மதத்வப் பிரகாசகரமான கியானத்துக்குள்ளே உத்தமரான உத்தவரே யோக்கியராகா நிற்கின்றார். நம்முடைய தத்வக்கியானத்தை ஜனங்களுக்கு உபதேசம் பண்ணிக்கொண்டு இந்தலோகத்திலேயே சந்துருஷ்டரா யிருக்கட்டு மென்கிற அபிப்பிராயமுடையவராகியும்; சகல வேதங்களுக்கும் காரணராகியும், திரிலோக நாயகராகியுமிருக்கிற ஸ்ரீ ஹரியினாலே ஆக்கியாபிக்கப்பட்டவராய் அந்த உத்தவரானவர் பதரிகாச்சிரமத்தை யடைந்து அவ்விடத்திற் சமாதியினாலே ஸ்ரீ ஹரியை யாராதித்துக் கொண்டிருந்தார். வாராய் மகாராஜனே! பிற்பாடு அந்த விதுரரும் லீலையினாலே கிரகிக்கப்பட்ட தேகத்தை யுடையவராகியும் பரமாத்மாவாகியு மிருக்கிற ஸ்ரீகிருஷ்ணருடைய சிலாக்கியங்களான லீலைகளை உத்தவரிடத்தில் கேட்டுப் புத்திமான்களுக்குத் தைரிய விருத்திகரமாகியும், பசுவுக்குச்சமானராகியும், அதைரிய சித்தர்களாகியுமிருக்கிற பேர்களுக்குச் சகிக்கக்கூடாததாகியுமிருக்கிற அந்தத் திவ்யமூர்த்தியினுடைய உபசங்காரத்தையுங் கேட்டு மிகவும் பிரீதியினாலே தைரியமில்லாதவராய் மனவருத்தமடைந்து அந்த யமுனா நதியில் நின்றும் கங்காதீரத்திலேயிருக்கிற மைத்திரேய மகாரிஷியினிடத்திலே வந்துசேர்ந்தார்.

## ஐந்தாவது அத்தியாயம்

*விதுராராலே ஸ்ரீ பகவானுடைய லீலைகளைக் குறித்துக் கேட்கப்பட்டவராய், மைத்திரேய மகாரிஷியானவர் மகதத்வ முதலான தத்வங்களுடைய சிருஷ்டியையும், அந்தத் தத்வங்களாலே பண்ணப்பட்ட ஸ்ரீ ஹரியினுடைய ஸ்தோத்திரத்தையுஞ் சொன்னாரென்று சொல்லப்படுகிறது.*

வாரீர் மகாராஜனே! அச்சுதரிடத்தில் பக்தியினாலே பரிசுத்தராகியும், நல்ல சீலம் கிருபை முதலான குணங்களாலே சந்துருஷ்டராகியுமிருக்கிற விதுரரானவர், கங்கா தீரத்திலே யிராநின்றும் அளவிடக்கூடாத கியானத்தையுடையவராகியும், சீலம், தயை முதலான குணங்களாலே பூரணராகியுமிருக்கிற மைத்திரேய மகாரிஷியை யடைந்து இந்தப்பிரகாரம் பிரஷ்னம்பண்ணினார். வாரீர் மைத்திரேய மகாரிஷியே! லோகத்திலேயுள்ள சற்சனர் சுகத்தின்பொருட்டுக் கருமங்களைப் பண்ணுகிறார்கள். அந்தக் கருமங்களாலே சுக துக்க சாந்தியை ஒன்றும் அடையவில்லை; அந்தக் கருமங்களாலே பின்னையும் மகத்தான துக்கமே யடைகிறது. ஆகையினாலே, இப்படிப்பட்ட இந்தச் சமுசாரத்திலே யெங்களுக்கு எதுயுக்தமோ அதைச் சொல்லக்கடவீர். மேலும், தம்முடைய புராதன கருமங்களாலே கிருஷ்ணரிடத்திலே பக்தியில்லாதவராகியும், அதருமசீலராகியும், துக்கத்தையுடையவராகியுமிருக்கிற ஜனங்களினுடைய அனுக்கிரகத்தின்பொருட்டு, மங்களகரர்களாகியும், கிருஷ்ணருடைய பக்தர்களாகியு மிருக்கிற மஹானுபாவர்கள் இந்த லோகத்திலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையாலே, வாரீர் சாதுக்களுக்குள்ளே உத்தமரே! சுகசொரூபமாயிருக்கிற மார்க்கத்தை எங்களுக்குச் சொல்லக்கடவீர். யாதொரு மார்க்கத்தினாலே யாராதிக்கப்படுகிற பகவான், புருஷர்களுடைய பக்தியினாலே பரிசுத்தமான இருதயத்திலே யிருந்துகொண்டும், வேதங்களாலே சொல்லப்படும் பரமாத்தும சாக்ஷாத்காரத்தோடே கூடிக்கொண்டு மிருக்கிற கியானத்தைக் கொடுப்பாரோ? அந்த மார்க்கத்தைச் சொல்லக்கடவீர். சத்வாதி குணங்களுடைய மாயைக்கு நியந்தாவாகியும், சுதந்திரராகியுமிருக்கிற பகவானானவர், யாதொரு புருஷரூபமாக அவதரித்து எந்த லீலைகளைப் பண்ணினாரோ? அந்தப் பகவானானவர் இந்தப் பிரபஞ்சத்தை எப்படிச் சிருஷ்டித்து எப்படி ஸ்தாபித்தாரோ? இந்தச் செகத்திற்குச் சீவனத்தை எந்தப்பிரகாரமாகக் கற்பித்தாரோ? திரும்பியும் யோகமா

யையாலே இந்தப் பிரபஞ்சத்தை யெந்தப் பிரகாரமாக வைத்துக்கொண்டு சயனித்திருக்கிருர்? இந்தப் பிரபஞ்சத்திலே அனுப்பிரவேசித்திருந்துகொண்டு எந்தப் பிரகாரமாய்ப் பிரமருத்திராதி ரூபமாக ஆனுர்? பிராமணர்கள் தேவர்கள் பசுக்கள் இவர்களுக்கு க்ஷேமத்தின் பொருட்டு மச்சியகூர்மாதி அவதார பேதங்களாலே கருமங்களை யெந்தப்பிரகாரமாகப்பண்ணினுர்? புண்ணியமான கீர்த்தியையுடைய பேர்களுக்குள்ளே உத்தமரான அந்தப் புருஷோத்தமருடைய சரித்திரங்களை அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தாலும் எங்களுடைய மனதானது திருப்தியடையவில்லை, லோகநாதர்களுக்கும் ஈஸ்வரனை அந்தப் பகவானனவர், யாதொரு தத்துவ பேதங்களாலே இந்த லோகங்களையும், லோகாலோக பருவதங்களுக்கு வெளிப்பிரதேசங்களையும், லோகபாலர்களையும் நிர்மாணம்பண்ணி, வேறுவேருகச் சமஸ்தபிராணிகளுடைய சமூகமானவை தம்தம் கருமானுரூபமான அதிகாரத்தையுடையனவாய்க் காணப்பட்டுக்கொண் டிருக்கச்செய்தனவோ, அந்த ஸ்ரீமந்நாராயணரானவர் கருமங்கள் அவற்ருல் பண்ணப்பட்ட ரூபம், அவற்ருல் பண்ணப்பட்ட நாமதேயம், இவைகளை யுடையவர்களான ஜீவர்களுக்குப் பேதத்தைப் பண்ணினுர். இவைகளைச் சவிஸ்தாரமாக என் பொருட்டு வர்ணிக்கக்கடவீர்.

வாரீர் சர்வஞ்ஞரே ! பிராமணர்கள் முதலான வர்ணங்களுடைய தருமங்களானவை என்னுலே மகாபாரதத்திலே வியாசருடைய முகத்தில் நின்றும் அடிக்கடி நன்ருகக் கேட்கப்பட்டன. ஸ்ரீ கிருஷ்ணருடைய கதாமிர்தப் பிரவாகத்தைத் தவிர அற்பசுகத்தைப் பண்ணுநின்ற அந்தக் கருமங்களுடைய சிரவணத்திஞலே நாங்கள் திருப்தியை அடைந்தோம். ஸ்ரீ கிருஷ்ணருடைய கதாமிர்தப் பிரவாகத்திஞலே திருப்தியை அடையவில்லை. உங்களுடைய யக்கியங்களிலே இந்திராதி தேவர்களாலே வர்ணிக்கப்படுகின்ற ஸ்ரீகிருஷ்ணருடைய கதாமிர்தத்தினின்றும் எவன்தான் திருப்தியடையான்? உமக்குச் சிநேகரான வியாசமகாரிஷியானவர் ஸ்ரீ பகவானுடைய குணகீர்த்தனம் மோக்ஷசாதனமென்று சொல்ல இச்சித்தவராய்த் தருமார்த்த காமங்களை மிகவும் சொன்னுர். மனுஷியர்களுடைய சித்தமானது ஸ்ரீ ஹரியினுடைய கதாசிரவணத்திலே பிரவேசிக்கப்பட்டுப் பாரதத்தைச் சொல்லாநின்ற வியாச மகாரிஷிக்கும் ஸ்ரீ ஹரிகதாசிரவணத்திலேயே தாற்பரியம். அப்படிப்பட்ட ஸ்ரீ ஹரியினுடைய கதாசிரவணமானது சிரத்தையை யுடையவனுகியும்,

ஸ்ரீ ஹரியினுடைய பாதபத்மங்களுடைய தியானத்திலே மிக வும் சுகத்தை யுடையவனாகியு மிருக்கிற புருஷனுக்கு மிகவும் விருத்தியைச் செய்கின்றது. துச்சங்களான விஷய சுகங் களிலே வைராக்கியத்தை யுண்டாக்கும்படியான ஸ்ரீ ஹரியி னுடைய கதையிலே சிரத்தை யில்லாதவர்களாயும், அஞ் ஞர்களாகியு மிருக்கிற அவர்களைக் குறித்து விசனப்படுகி றேன். விருதாவான மனோவாக்குகளின் வியாபாரத்தை யுடையபேர்களின் ஆயுளைக் காலயானது கொண்டுபோவ தைக் குறித்து விசனப்படுகிறேன். வாரீர் தீனபந்துவான மைத்திரேய மகாரிஷியே! புஷ்பங்களில் நின்றும் சாரத் தைக் கிரகிப்பதுபோல் புண்ணியமான கீர்த்தியையுடைய தாகியும், சமஸ்தபிராணிகளுக்குச் சுகத்தைக் கொடாநின்று மிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய கதைகளுக்குள்ளே உத்தம மானதாயும், இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி சங்கார நிமித்தமாக விசித்திர சக்திகளைக் கிரகித்திருக்கிற அந்தப் பகவான்தானே மனுஷியனாக அவதரித்து, அதிமா னுஷங்களான லீலைகளைப் பண்ணினதுமான சரிதைகளை யெனக்குச் சொல்லவேண்டுமென்று விதுரராலே பிரஸ்னம் பண்ணப்பட்டவராகிச் சர்வக்கியராயிருக்கிற அந்த மைத்தி ரேயமகாரிஷியானவர் அந்த விதுரரை நோக்கிச் சொல்லுகி றார். வாராய் சாதுவே! ஸ்ரீ கிருஷ்ணரிடத்திலே மிகவும் மனதையுடையவரான உம்மாலே நன்றாகப் பிரஸ்னம் பண் ணப்பட்டது. பிரஜா சங்காரகர்த்தாவாயிருக்கிற யமதரும ராஜனானவன், மாண்டவ்ய மகா ரிஷியினுடைய சாபத்தி னாலே விசித்திரவீரியனுடைய ஸ்திரீயாகக் கிரகித் திருந்த தாசியினிடத்திலே வியாசரிடத்தில் நின்றும் பிறந்த நீர் பகவானுக்கும் பாகவதர்களுக்கும் சம்மதமானவர். அப்படிப் பட்ட உமக்கு ஏக மாயையினாலே விருத்தியடையா நின்றும், பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களைப் பண்ணா நின்று மிருக்கிற பகவானுடைய லீலைகளைக் கிரமமாகச் சொல்லுகிறேன்.

வாரீர் மகானுபாவரே! அந்தப் பகவானானவர் இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்து அவருடைய காரிய காரண ஸ்வரூபமான காலசக்தியினாலே சத்வாதி குணங்களின் கிரியையையுடைய மாயாப் பிரகிருதியிலே தம்முடைய அம்ச பூதனாகியும், பிரகிருதிக்கு அதிபதியான ஆத்மாவாகியுமிருக் கிற புருஷரூபத்தினாலே சித்தினுடைய ஆபாசரூபமான வீரியத்தைத் தரித்தார். பிற்பாடு காலத்தினாலே பிரேரணை பண்ணப்பட்ட அந்தப் பிரகிருதியில் நின்றும் தத்வமானது

உண்டாயிற்று. சத்வகுணப் பிரதான மானபடியினாலே அக்கினியானது நிவர்த்தமாகியும் விக்கியான ஸ்வரூபியாகியுமிருக்கிற அந்த மகதத்வமானது தன்னுடைய தேகத்துக்குள்ளே யிராநின்ற பிரபஞ்சத்தைப் பிரகாசியா நின்று கொண்டு உண்டாயிற்று. சித்தினுடைய ஆபாசம் சத்வாதி குணங்கள் பிரயோகமான காலம் இவற்றின் ரூபமாகியும் மகதத்வ சரீரியாகியுமிருக்கிற அந்த விக்கியான ஆத்மாவானவன் சர்வாத்தியக்ஷனான பகவானுடைய சிருஷ்டிக்கு விஷயமாய் இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்க வேண்டுமென்கிற இச்சையினாலே தன்னுடைய ஆத்மாவை வேறொரு காரிய ரூபத்தை யடைந்ததாகப் பண்ணினான். சிருஷ்டி காரியத்தை யுடையதான அந்த மகதத்வத்தில் நின்றும் காரியமான அதிபூத காரணமான அத்தியாத்துமம் கர்த்தாவான அதிதெய்வம் இவைகளுக்கு ஆசிரயமாகிய பஞ்சமகா பூதங்கள் தேஜேந்திரியங்கள் இந்திரியங்களுக்கு அபிமான தேவர்கள் மனது இவைகளுடைய சுவரூபமான அகங்காரம் உண்டாயின. அந்த அகங்காரமானது சாத்வீகமென்றும், ராஜசமென்றும், தாமசமென்றும் மூன்றுவிதமாயிருக்கும். சிருஷ்டிக்கிரியை யுடையதான அந்த சாத்வீக அகங்காரத்தில் நின்றும் மனதும் இந்திரிய அதிஷ்டார்களான தேவர்களும் உண்டானார்கள். கியானேந்திரிய கருமேந்திரியங்கள் ராஜச அகங்காரத்தில் நின்றும் உண்டாயின. சப்தத்தினின்றும் ஆகாசமானது உண்டாய்ப் பகவானாலே கடாக்ஷிக்கப்பட்ட அந்த ஆகாசமானது காலம் மாயை புருஷன் இவைகளுடைய சம்பந்தத்தினாலே கிரியையுடையதாய் ஸ்பரிசத்தைப் பிறப்பித்தது. ஆகாசத்தினின்றும் உண்டான அந்த ஸ்பரிசமானது கிரியையுடையதாய் வாயுவைப் பிறப்பித்தது. ஆகாசத்துடனே கூடிக்கொண்டு மகா பலத்தை யுடையதாகியிருக்கிற அந்த வாயுவானது கிரியையுடையதாய் ரூப தன்மாத்திரையை உண்டாக்கிற்று. அந்த ரூபத்தில் நின்றும் லோகத்துப் பிரகாசகமான தேஜசானது உண்டாயிற்று. வாயுவுடனே கூடிக்கொண்டிருக்கிற அந்தத் தேஜசானது பரம புருஷராலே கடாக்ஷிக்கப்பட்டுக் கிரியையுடையதாய், காலம் மாயை புருஷன் இவற்றின் சம்பந்தத்தினாலே ரச குணத்தை யுடையதான ஜலத்தைச் சிருஷ்டித்தது. தேஜசுடனே கூடிக்கொண்டிருக்கிற அந்த ஜலமானது பரம புருஷராலே கடாக்ஷிக்கப்பட்டுக் கிரியையை யுடையதாய் காலம் மாயை புருஷன் இவர்களுடைய சம்பந்தத்தினாலே கந்த குணத்தை யுடையதான பூமியைச் சிருஷ்டித்தது. வாரீர் விதுரரே! ஆகாச முதலான பஞ்ச பூதங்களுக்குள்ளே

எதில் நின்றும் எது உண்டாயிற்றோ அந்தக் காரியங்களுக்குக் காரண குணங்களுடைய சம்பந்தத்தினாலே ஒன்றுக்கொன்று உயர்வான குணங்களையுடையதாய்ச் சொல்லுவார்கள். அதெப்படி யென்றால், ஆகாசத்துக்குச் சப்தகுணம் ஒன்றே. வாயுவுக்கு ஆகாச சம்பந்தத்தால் சப்தம், ஸ்பரிசம், இரண்டு குணங்கள். தேஜசுக்குச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், இந்த மூன்று குணங்கள். ஜலத்துக்குச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், இந்த நாலு குணங்கள். பூமிக்குச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் இந்த ஐந்து குணங்களென்று அறியத்தக்கது. ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய அம்சங்களாகியும், காலசின்னமான பரிணாமம், மாயாசின்னமான கிரியை, புருஷசின்னமான கியானம், இவைகளுடனே கூடிக்கொண்டு மிருக்கிற மகத்துவ முதலானதுகளுக்கு அபிமானிகளான இந்தத் தேவதைகள் ஒன்றுக்கொன்று வேறு வேறுகளான குணங்களை யுடையவையானபடியினாலே ஒன்றுக்கொன்று சம்பந்த மில்லாததினாலே பிரம்மாண்ட சிருஷ்டியிலே சாமர்த்திய மில்லாதவைகளாய் அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு பரமாத்மாவைக் குறித்து ஸ்தோத்திரம் பண்ணின.

## தத்துவாபிமானி தேவர்களுடைய ஸ்தோத்திரம்.

வாரீர் தேவதேவனே! பிரபன்னர்களுடைய தாபத்தைப் போக்கடிக்கிறதிலே குடைபோலேயிரா நின்ற தேவரீருடைய ஸ்ரீ பாதபத்மங்களைக் குறித்துப் பிரணாமம் பண்ணுகிறோம். யாதொரு ஸ்ரீ பாதபத்மங்களை ஆசிரயமாக வுடையவர்களான யோகீஸ்வரர்கள் மகத்தான சம்சார துக்கத்தைச் சீக்கிரமாகத் தூர விட்டுவிடுகிறார்களோ இந்தச் சம்சாரத்திலே தாபத்திரயத்தினாலே திரஸ்கரிக்கப்படா நின்ற ஜீவர்களுக்கு ஆஸ்ரயமான பரமாத்ம தத்வக்கியான ஜனகமான தேவரீருடைய ஸ்ரீ பாதபத்மச் சாயையை ஆசிரயிக்கிறதற்குக் கோருகிறோம். வாரீர் பகவானே! பக்ஷிகளானவை கூண்டில் நின்றும் வெளிப்புறப்பட்டு நான்குதிக்கிலேயும் சஞ்சரித்துத் திரும்பவும் அந்தக்கூண்டிலே தானே பிரவேசிப்பதுபோல், சகல வேதங்களும் உம்முடைய முகாரவிந்தத்தில் நின்று உண்டாகிக் கியான கருமங்களைப் பிரகாசிப்பித்து உம்மிடத்திலேயே லயிக்கின்றன. ஆகையினாலே ரிஷீஸ்வரர்களான பேர்கள் அப்படிப்பட்ட வேதங்களாலே விஷயங்களில் ஆசக்தியில்லாமலிருக்கிற மனதினால் தேடத்தக்கவையான சமஸ்த பாபங்களையும், போக்கத்தக்க நதிகளுக்குள்ளே சிரேஷ்டமான கங்கைக்கு உற்பத்தி ஸ்தானமாயுமிருக்கிற புண்ணிய

கரமான பாதார விந்தத்தையுடைய தேவரீரைச் சரண மடைகிறோம். யோகிகளான பேர்கள் சதா இருதயத்தில் தியானம்பண்ணி வைராக்கிய பலத்தை யுடையதான கியானத்தினாலே பரமாத்ம சாக்ஷாத்காரத்தை அடைகிற தேவரீருடைய பாதபத்மத்தைச் சரணமாக அடைகிறோம். வாரீர் பரேசனே! மகாகீர்த்தியையுடைய தேவரீரது ஸ்வரூபக் கியானத்தினால் உண்டாகிற அக்கியான காமகர்ம சம்சாரங்களுடைய நிவர்த்தியினால் உண்டாகின்ற மோக்ஷ லக்ஷ்மியினாலே நித்திய முக்தாளாயிருக்கிறவர்கள் விஷயங்களிலே ஆசக்தியை யுடையவையான இந்திரியங்களாலே மிகவும் தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற மகானுபாவர்கள் தேவரீருடைய கதையாகிற அமிர்த பானத்தினாலே விர்த்தியடைகின்ற பக்தியினால் நிர்மலமான இருதயத்தை யுடையவர்களாய் வைராக்கியபலத்தை யுடையதான தேவரீருடைய ஸ்வரூபக்கியானத்தை யடைந்து அநாயாசமாக வைகுண்ட லோகத்தை அடைவார்கள். அப்படி யோகாப்பியாசத்தினாலே அடைகிறபேர்களுக்கு மிகவும் சிரமமானது உண்டாகாநிற்கிறது. ஞானிகள் தேவரீருடைய கதாசிரவணாதிகளாலே அநாயாசமாகவே தேவரீரை அடைகிறார்கள். சிரமம், தேகம், முதலானவைகளிலே நான் என்னதென்கிற அகங்காரத்தை யுடையபேர்களுக்குத் தேவரீருடைய பலப் பிராப்தியானது ஒருக்காலுமில்லை. அந்நியர்களான நாங்கள் லோகங்களைச் சிருஷ்டிக்க வேண்டுமென்கிற இச்சையினால் தேவரீராலே சத்வரசதமோகுணங்களாலே சிருஷ்டிக்கப்பட்டு விருத்தமான ஸ்வபாவத்தை யுடையவர்கள் ஒருவரோடொருவர் கூடாதவர்களாய் எது நிமித்தமாகச் சிருஷ்டிக்கப்பட்டோமோ அதற்குச் சமர்த்தர்களாகாமற் போகிறோம்.

வாரீர் ஜனனமில்லாதவரே! நாங்கள் பூஜாபாகத்தைச், சம்பூர்ணமாகத் தேவரீர்பொருட்டு எப்படிப் பிறப்பித்தும், எந்தப் பிரகாரமாகக் கருமபலத்தை அநுபவித்தும், எந்தப் பிரகாரமாக இந்த ஜீவர்கள் எவ்விடத்தி லிருந்துகொண்டு விக்கினமில்லாமலும் சம்சயமில்லாதவர்களுமாய்த் தேவரீருக்கும் எங்களுக்கும் பூஜாபாகத்தைச் சமர்ப்பித்துக் கருமபலத்தை அநுபவிப்பார்களோ அப்படிப்பட்ட பிரம்மாண்டத்தைச் சிருஷ்டிக்க எங்களுக்குச் சாமர்த்தியத்தைக் கற்பிக்கக்கடவீர். சர்வகாரணராகியும், விகாரசூனியராகியும், ஆசிரியராகியும், அநாதியாகியுமிருக்கிற தேவரீர் காரியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற எங்களுக்குக் காரணராகா

திற்கிறீர். வாரீர் தேவதேவனே! ஜென்மரகிதரான தேவரீர் சத்வாதிகுணங்களுக்கும் கருமங்களுக்கும் காரணமாகியும், தேவரீருடைய சக்திரூபமாகியும், மாயையாலே மகத்துவ ரூபமாகியு மிருக்கிற வீரியத்தை முன்னாலே வைத்தீர். வாரீர் பரமாத்துமாவே! காரியாபி பூதர்களாயிருக்கிற மகதத்வ முதலான நாங்கள் தேவரீரிடத்தில் நின்றும் என்ன நிமித்தமாக உண்டானோம். தேவரீருக்கு எந்தக் காரியத்தைச் செய்வோம். வாரீர் தேவதேவனே! தேவரீருடைய அனுக்கிரகத்தை யுடையவர்களான எங்களுக்குக் கிரியா நிமித்தத்திலே தேவரீர் சக்தியோடேகூடத் தமது கியானத்தைக் கொடுக்கக்கடவீர். தேவரீருடைய கியான கிரியா சக்திகளாலேயே சிருஷ்டியிலே நாங்கள் சமர்த்தர்களாகா நிற்கிறோம் இல்லாவிட்டால் சமர்த்தர்களாகோம்.



## ஆறுவது அத்தியாயம்

*ஈஸ்வரனாலே யேவப்பட்ட அந்தத் தத்வங்களால் விராட்டுச் சரீரத்தினுடைய சிருஷ்டியையும், அந்த விராட்டுச் சரீரத்தில் பகவானாலே பண்ணப்பட்ட அதிதெய்வாதி பேதத்தையும் சொல்லுகிறார்.*

மைத்திரேய மகாரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்த ஈஸ்வரரானவர் இந்தப்பிரகாரம் ஒன்றோடொன்று கூடாமலிருந்தும் லோகசிருஷ்டி சாமர்த்திய மில்லாதவைகளாயு மிருக்கிற தம்முடைய சக்திகளான மகதத்வ முதலான தத்வங்களுடைய ஸ்திதியைப் பார்த்துப் பிற்பாடு உருக்கிரமனென அந்தப் பகவானானவர் சிருஷ்டியாதிகளிலே விகரியா நின்றும் காலமென்றும் பெயரை யுடையதாகியுமிருக்கிற பிரகிருதியென்கிற சக்தியைத் தரித்து அந்த இருபத்துமூன்று தத்வங்களுடைய கூட்டத்திலே ஏககாலத்தில் அந்தரியாமியாகப் பிரவேசித்துக் கிரியாசக்தியினாலே ஜீவர்களுடைய வியாபார ரகிதமாயிருக்கிற அதிருஷ்டத்தை யெழுப்பி ஒன்றோடொன்று கூடாமலிருக்கிற அந்தத் தத்வங்களுடைய கணத்தைக் கூட்டிவைத்தார். அந்த இருபத்து மூன்றாயிருக்கிற தத்வ கணமானவை ஈஸ்வரனாலேவப்பட்டனவாய்த் தங்களுடைய அம்சங்களாலே விராட்டுச் சரீரமாகிற அண்டத்தைச் சிருஷ்டித்தன. அனுப்பிரவேசித்த அந்த ஈஸ்வரனாலே விசுவ காரணங்களான தத்துவங்களுடைய கணமானது தங்களுடைய அம்சங்களாலே ஒன்றுக்கொன்று சேர்ந்து விராட்டுச்

சரீரமாகப் பரிணமித்தது. அந்த விராட்டுச் சரீரத்திலே ஸ்தாவர ஜங்கம ரூபங்களான இந்த லோகங்களானவைக ளிருக்கின்றன. சுவர்ணமயமாயிருக்கிற அந்த விராட்டு சரீர அபிமானியான புருஷனானவன் அந்தப் பிரம்மாண்ட மத்தி யத்திலே பிரதான கருமசேஷத்தை யுடையவர்களான சகல ஜீவர்களோடே கூடிக்கொண்டு அனேகமாயிரம் வருஷம் சலத்திலே வாசம் பண்ணிக்கொண்டிருந்தார். அந்த விராட் டுப் புருஷனானவன், கியானசக்தி, கிரியாசக்தி, போகசக்தி இவைகளை யுடையவனாய்த் தன்னுடைய ஆத்துமாவைக் கியானசக்தியினாலே யிருதயத்துக்குள்ளே யிரா நின்ற சைதன் னியரூபமாகவும், யோகரூபமாகவும், கிரியாசக்தியினாலே தசவித பிராணரூபமாகவும், போக சக்தியினாலே அத்யாத்து மம், அதிதெய்வம், அதிபூதம் என மூன்று ரூபமாகவும் பிரித்தான். இந்த விராட்டுப் புருஷனானவன், சமஸ்த பிராணி களுக்கும் அந்தரியாமியாகியும், சீலபுருஷனாகியும், பர மாத்மாவினுடைய ஆதி அவதாரமாகியு மாகா நிற்கிறான். விராட் புருஷன் சராசர ரூபமான அத்தியாத்துமமென்று சொல்லப்பட்ட இந்திரியங்களோடே கூடிக்கொண்டிருக் கிற விராட்டென்றும், ஆதி பூதமென்று சொல்லப்பட்ட தேகங்களோடே கூடிக்கொண்டிருக்கிற விராட்டென்றும், அதிதெய்வமென்னப்பட்ட அபிமானதேவர்களோடே கூடிக் கொண்டிருக்கிற விராட்டென்றும், இந்தப்பிரகாரம், மூன்று விதமாகியும், பிராமணரூபமாகப் பத்துவிதமாகியும், இருதயத் துக்குள்ளே யிரா நின்ற சைதன்னியத்தினாலே ஏகரூபமாகியு மிருக்கிறான். ஈஸ்வரனான அந்த விராட்புருஷனானவன், விசுவகாரணங்களான அந்தத் தத்துவங்களுடன் கூடி யிருத்தலால் அவனுக்கு நாங்கள் பூசையை எப்படிச் சமர்ப் பிப்போம். அதை யனுக்கிரகிக்கக் கடவீரென்று வினாவிய வசனத்தை ஸ்மரித்து அந்த தத்துவங்களுக்கு நானாவித மான விருத்திலாபத்தின் பொருட்டுத் தம்முடைய தேஜசி னாலே அந்த விராட்ரூபத்தை யிந்தப்பிரகாரம் செய்வோ மென்று ஆலோசனைபண்ணினார்.

இந்தப்பிரகாரம் ஆலோசனை பண்ணுகிற விராட்புருஷ னுக்குத் தேகத்திலே பிரகாசமாகச் சில ஸ்தானங்களுண்டா யின. தத்துவங்களுக்கு ஆசிரயங்களான அந்த ஸ்தானங் களைச் சொல்லுகிறேன் கேட்கக்கடவீர். அந்த விராட்புரு ஷனுக்கு முகமானது பிரகாசமாக வுண்டாயிற்று. ஜீவனான வன் வாக்கிந்திரியத்தினாலே சப்தத்தை யுச்சரித்து லோக பாலகனா யிருக்கிற அக்கினி தன்னுடைய அம்சமான

அந்த வாக்கிந்திரியத்தோடே அந்த முகத்தை ஸ்தான மாக அடைந்தான். அந்த விராட்புருஷனுக்கு நாவா னது உண்டாயிற்று, ஜீவனானவன் ரசனேந்திரியத்தி னாலே ரசங்களைக் கிரகிக்கிறான். லோகபாலகனான வருண னானவன் தன்னுடைய அம்சமான அந்த ரசனேந் திரியத்தோடேகூட அந்தத் தாலுவை ஸ்தானமாக அடைந் தான். அந்த விராட்புருஷனுக்கு நாசிகைகள் பிரகாசமாக உண்டாயின. ஜீவனானவன் கிராணேந்திரியத்தினாலே கந் தத்தையறிகிறான். அசுவனிதேவர்கள் தங்களுடைய அம்ச மான அந்தக்கிராணேந்திரியத்தோடேகூட அந்நாசிகையை ஸ்தானமாக அடைந்தார்கள். அவ்விராட்புருஷனுக்கு நேத்திரங்களானவை பிரகாசமாக உண்டாயின. ஜீவனுக்கு நேத்திரேந்திரியத்தினாலே ரூபக்கியானமானது உண்டா கிறது. சூரியனானவன் தன்னுடைய அம்சமான அந்த நேத்திரேந்திரியத்தோடே கூட அந்த நேத்திரங்களை ஸ்தானமாக அடைந்தான். அவ்விராட்புருஷனுக்குச் சர் மங்கள் பிரகாசங்களாக உண்டாயின. ஜீவனானவன் யாதொரு தொக்கிந்திரியத்தினாலே ஸ்பரிசக்கியானத்தை யடைகிறான். லோகபாலனான வாயுவானவன் தன்னுடைய அம்சமான அத்தொக்கிந்திரியத்தோடே கூட அந்தச் சர்மத்தை ஸ்தானமாக அடைந்தான். அவ்விராட் புருஷனுக்குக் காதுகளானவை பிரகாசங்களாக உண்டாயின. ஜீவனான வன் சுரோத்திரேந்திரியத்தினாலே சப்தக்கியானத்தை யடை கிறான். திக்குகளானவை தங்களுடைய அம்சமான அந்தச் சுரோத்திரேந்திரியத்தோடேகூட அக்காதுகளை ஸ்தானமாக அடைந்தன. அந்த விராட்புருஷனுக்குச் சர்மமானது பிரகாசமாக உண்டாயிற்று. ஜீவனானவன் ரோமங்களாலே தினவினுடைய கியானத்தையறிகிறான். ஔஷதிகளானவை தங்களம்சமான அந்த ரோமங்களோடேகூட அச்சர்மத்தை ஸ்தானமாக அடைந்தன. அவ்விராட்புருஷனுக்கு விருஷ்ணமானது பிரகாசமாக உண்டாயிற்று. இந்த ஜீவ னானவன் ரேதசினாலே ஆனந்தத்தை யடைகிறான். பிரம்மா வானவர் தம்முடைய அம்சமான அந்த ரேதசோடேகூட அவ்விருஷ்ணத்தை ஸ்தானமாக அடைந்தார்.

அந்த விராட்புருஷனுக்குக் குதமானது பிரகாசமாக உண்டாயிற்று. ஜீவனானவன் பாயுவென்கிற இந்திரியத்தி னாலே மலவிசர்க்கத்தை யடைகிறான். லோகபாலனான மித் திரனானவன் தன்னுடைய அம்சமான அந்தப் பாயு விந்திரி யத்தோடேகூட அந்தக் குதத்தை ஸ்தானமாக அடைந்

தான். அவ்விராட்புருஷனுக்கு அஸ்தங்களானவை பிர காசமாக உண்டாயின. ஜீவனானவன் கிரயவிற்கிரயாதி சக்தி களோடேகூட அவ்வஸ்தங்களை ஸ்தானமாக அடைந்தான். அவ்விராட் புருஷனுக்குப் பாதங்களானவை பிரகாசமாக உண்டாயின. ஜீவனானவன் கதிசக்தியினாலே யடையத்தக்க தேசங்களை அடைகிறான். லோகேசுரனான ஸ்ரீ விஷ்ணு தம்முடைய அம்சமான அந்தக் கதி சக்தியோடேகூட அப் பாதங்களை ஸ்தானமாக அடைந்தார். அவ்விராட் புருஷ னுக்கு இருதயம் பிரகாசமாக உண்டாயிற்று. ஜீவன் மனதி னாலே சங்கற்பாதி ரூபமான விகாரத்தை யடைகிறான். சந்தி ரன் தன்னுடைய அம்சமான அந்த மனதோடேகூட அந்த இருதயத்தை ஸ்தானமாக அடைந்தான். அவ்விராட் புரு ஷனுக்குப் புத்தி பிரகாசமாக உண்டாயிற்று. ஜீவனுக்கு அறிவினாலே அறியத்தக்க விஷயங்களுடைய கியானம் உண்டாகிறது. பிரகஸ்பதி தம்முடைய அம்சமான அந்த அறிவோடேகூட அப்புத்தியை ஸ்தானமாக அடைந்தார். அவ்விராட் புருஷனுக்கு அகங்காரம் பிரகாசமாக உண்டா யிற்று. ஜீவன் அகம் விருத்தியினாலே கிரியை அடைகிறான். உருத்திரன் தன்னுடைய அம்சமான அந்த அகம் விருத்தி யோடேகூட அவ்வகங்காரத்தை ஸ்தானமாக அடைந்தான் அவ்விராட்புருஷனுக்குப் புத்தி பிரகாசமாக உண்டாயிற்று. இந்த ஜீவன் யாதொரு பிரக்ஞையினாலே விக்கியானத்தை யடைகிறான். பிரம்மா தம்முடைய அம்சமான பிரக்ஞை யோடுகூட அடைந்த புத்தியை ஸ்தானமாக அடைந்தார். விராட்புருஷனுடைய சிரசினின்றும் சுவர்க்கமும், பாதங் களினின்றும் பூமியும், நாபியினின்றும் அந்தரிக்ஷமும் உண் டாயின. மிகவும் அதிசயித்திரா நின்ற சத்வகுணத்தினாலே தேவர்கள் சுவர்க்கத்தை ஸ்தானமாக அடைந்தார்கள். மனு ஷியர்களும் அவர்களுக்குச் சகாயங்களாயிருக்கிற பசு முத லான பிராணிகளும் ராஜசசுபாவத்தினாலே பூமியை ஸ்தான மாக அடைந்தார்கள். ருத்திரனுடைய பாரிஷதகணங்க ளான பூதங்கள் தாமச சுபாவத்தினாலே பகவானுடைய நாபி யாகியும் பூலோக சுவர்க்கலோகங்களுக்கு மத்தியமாகியு மிருக்கிற அந்தரிக்ஷத்தை ஸ்தானமாக அடைந்தன.

வாராய் ராஜசிரேஷ்டனே! அந்த விராட்புருஷ னுடைய முகத்தினின்றும் வேதங்களும் பிராமணவர்ண மும் உண்டானார்கள், அங்கங்களுக்குள்ளே முகம் சிறந்ததுபோல மற்ற வர்ணங்களுக்குப் பிராமணன் குருவாக நிற்கிறான். அவனுக்கு வேதாத்தியயன முதலி

யன விருத்தியாகா நிற்கின்றன. அந்தப் புருஷனுடைய பாருகளினின்றும் பாலரூபமான விருத்தியும் க்ஷத்திரிய வர்ணமும் உண்டாயின. அந்த விராட்புருஷனுடைய தொடைகளிலேயிருந்து லோகத்துக்கு ஜீவனஹேதுக்களான வியாபாரங்கள் உண்டாயின. அப்புருஷனுடைய பாதங்களினின்றும் சிசுரூஷை தருமசித்தியின் பொருட்டுச் சூத்திர வர்ணத்துடன் உண்டாயிற்று அந்தச் சூத்திரனுடைய சிசுரூஷா விர்த்தியினாலே ஸ்ரீ ஹரியானவர் மிகவுஞ் சந்தோஷிக்கிறார் பிராமணர்கள் முதலான நான்கு வர்ணத்தினரும் தங்கள் விர்த்திகளோடே கூடப் பரமபுருஷரான ஸ்ரீ ஹரியினுடைய முகம் முதலான அங்கங்களினின்றும் உண்டானார்களாகையினாலே இந்த நான்கு வர்ணத்தினரும் ஆத்தும சுத்தியார்த்தமாகச் சுவதர்மத்தினாலே சிரத்தையுடனே கூடத் தங்களுக்கு வாழுள் அளிப்பவரும், கர்த்தாவாகியுமிருக்கிற அந்த ஸ்ரீ ஹரியை ஆராதிக்கிறார்கள். வாரீர் விதுரரே! காலம், கர்மம், சுவபாவம், இவற்றின் ரூபமான சக்தியையுடைய அந்த விராட்புருஷனை வர்ணிப்பதற்கு எவன்தான் இச்சியான்? அந்த ஸ்ரீ ஹரியைத் தவிர இதர வஸ்துக்களுடைய கீர்த்தனத்தினால் துஷ்டமாயிருக்கிற என்னுடைய வாக்கைப் பவித்திரம் பண்ணுகிற ஸ்ரீ ஹரியினுடைய கிர்த்தியைக் குருமுகத்தினின்றும் கேட்டறிந்தபடி, என்புத்தி சத்தியானுசாரமாகச் சொல்லுகிறேன்.



## ஏழாவது அத்தியாயம்



*சம்சயத்தைப் போக்கடியாநின்ற மைத்திரேய மகாரிஷியினுடைய வசனத்தைக் கொண்டாடித் திரும்பவும், நானுவிதப் பிரஸ்னங்கள் விதுரராலே பண்ணப்பட்டனவென்று சொல்லப்படுகின்றது.*

வியாசருடைய புத்திரராகியும், கியானியாகியு மிருக்கிற விதுரரானவர் மைத்திரேய மகாரிஷியைப் பார்த்து, பிரார்த்தனை ரூபமான வாக்கினாலே சந்தோஷிப்பித்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

விதுரருடைய வாக்கியம்.

வாரீர் பிரம்மரிஷியே! கியானஸ்வரூபியான பகவானுக்குக் குணங்கள் லீலையினாலே யெப்படிக்கூடும்? பிரவிர்த்தி ஜனகமான இச்சையானது பாலனுக்கு விளையாட்டிலேயேதுவாக விருக்கிறது; மற்றொருபாலன் லீலையிலே பிரவிர்த்திப்பிக்கிற நிமித்தமாகவாகிலும் பாலனுக்கு லீலையிலேயிச்சையுண்டாகிறது ஏகனாகியிருக்கிற ஈஸ்வரனுக்கு லீலை

பண்ணவேண்டுமென்கிற இச்சை எப்படி உண்டாகிறது? பகவானானவர், சத்துவாதிகுணமாகியும், ஜீவனுக்குக் கர்த்துருத்துவ போக்த்திருத்துவாதி மோகத்தைப் பண்ணுகிற மாய்கையினாலே இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும், பாலனம் பண்ணியும், மறுபடியும் தம்மிடத்திலே லயமாக்கிக் கொள்ளுகிறார். தேசகால ஜாகராதி அவஸ்தைகளாலே தள்ளப்படாமலிருக்கிற கியானஸ்வரூபத்தை யுடையவரான அந்தப் பகவானானவர், மாய்கையுடனே எப்படிக் கூடுவர்? சராசர ரூபங்களான சமஸ்த தேகங்களிலேயும் அந்தரியாமியா யிருக்கவும் ஆனந்தாதி ஸ்வரூபத்துக்கு நாசமும் எப்படி உண்டாக்குவர்? என்னுடைய மனதிலே உண்டாகிற மகத்தான இந்த ஐயத்தைப் போக்கடிக்கக் கடவீரென்று ஆக்ஷேபித்த அந்த விதுரரைப் பார்த்து மைத்திரேய மகாரிஷியானவர் சிரித்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்த ஈஸ்வரனுக்கு மாய்கையுடனே சம்பந்தமும் இச்சையென்கிறதுமே மாய்கையாக நிற்கிறது. நித்திரையிலே சொப்பனம் காண்கிற புருஷனுக்குச் சிரச்சேத முதலானது இல்லாமலிருந்துஞ் சிரசானது சேதிக்கப் பட்டுப் போயிற்றென்று ஆத்மாவுக்கு அனர்த்தமானதில்லாமலே காணப்படுவதுபோல, அந்த ஈஸ்வரனுக்கும் மாய்கை முதலானது இல்லாமலே காணப்படுகிறது. ஜலத்திலே பிரதிபலிக்கின்ற சந்திரனுக்கு அந்த ஜலத்தினாலே பண்ணப்படாநின்ற சாஞ்சல்லிய முதலான குணம் காணப்படுவது போல, தேகத்தினுடைய கர்மமானது அசத்தாயிருந்தாலும் தேகத்திலே அபிமானத்தையுடைய ஜீவனுக்குச் சத்தாகக் காணப்படுகிறது, பரமாத்துமாவான ஈஸ்வரனுடைய குணமன்று. அந்த ஜீவனுக்கும் தேகத்தினுடைய குணமான ஜனன மரண முதலானவை, நிவர்த்தி யார்க்கத்தினாலேயும் வாசுதேவருடைய கிருபையினாலேயும், உண்டாகிற பக்தியோகத்தினாலேயும், ஸ்ரீ ஹரியினிடத்தில் சமஸ்த இந்திரியங்களுக்கும் சலியாமலிருக்கை உண்டாகிறபோது சமஸ்த சம்சாரக் கிலேசங்களும் மகா நித்திரையில் சகல துக்கங்களும் லயத்தை யடைந்திருக்கிறது போல், லயத்தையடையும். மனதிலே உண்டாகின்ற அந்த ஸ்ரீ ஹரியினுடைய சரணாரவிந்த பூந்துகளினுடைய சேவையிலே பிரீதியானது சகல கிலேசங்களுடைய நாசத்தைப் பண்ணுமென்கிறதற்குக் கேட்கவேண்டிய தென்னவென்று சொன்ன மைத்தி

ரேய மகாரிஷியினுடைய வசனத்தைக்கேட்டு விதுரர் சொல்லுகிறார்.

விதுரர் வாக்கியம்.

வாரீர் மைத்திரேய மகாரிஷியே! எனக்குண்டான சம்சயமானது உம்முடைய வாக்கியமாகிற கத்தியினாலே சேதிக்கப்பட்டுப்போயிற்று. ஜீவாத்துமா பாதந்திரனென்றும், ஈஸ்வரன் சுவதந்திரனென்றும், உம்மாலே நன்றாகச் சொல்லப்பட்டது. இந்தத் தேகாதி பிரபஞ்சத்துக்கு மூலமான அக்கியானத்தைத் தவிர வெளியிலே வேறொன்றுமில்லை ஆகையினாலே ஜீவனை மூடிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ ஹரியினுடைய சக்திரூபமான மாய்கையை இருப்பாகவுடைய இந்தப் பிரபஞ்சமானது தோற்றிக்கொண்டிருக்கின்றது. இது சொப்பனத்தில் காணப்படாநின்ற தன்னுடைய சிரச்சேத முதலானது போலவே யில்லாததாகியும், மூலசூனியமாகியுமாகா நிற்கிறது. தேகாதியில் ஆசக்தியையுடையவனாகியும், மிகவும் மூடனாகியுமிருக்கிற புருஷன் இதைச் சத்தியமாக எண்ணுகிறான். பிரகிருதியை யதிக்கிரமித்தவனாகியும் மிகவும் விவேகியாகியுமிருக்கிற புருஷன் சமுசயகிலேசங்களில்லாததினாலே மிகவுஞ் சுகியாக விருக்கிறான். இந்தப் பிரபஞ்சத்தைத் துக்கரூபமாக வெண்ணி இதை விட்டுவிட வேண்டுமென்று இச்சித்திருக்கிற புருஷன் ஆத்மானந்தானுபவமில்லாததினாலே பிரபஞ்சத்தை விடுகைக்குச் சமர்த்தனாகாதவனாய் மிகவும் கிலேசத்தை யடைகிறான். அகங்கார முதலான இந்தப் பிரபஞ்சமானது தோற்றப்பட்டுக் கொண்டிருந்தாலும், பிரபஞ்சமென்கிறது இல்லை. கேவலம் தோற்றிக் கொண்டிருக்கிறது மாத்திரமே யல்லாமல் வஸ்துவல்லவென்று தேவரீருடைய திருவடிச்சேவையினாலே நிச்சயித்து, இந்தத் தோற்றுதலையும் நான் விட்டுவிடப் போகிறேன். ஸ்ரீ ஹரியினிடத்தில் நிலைபெற்ற பக்தியில்லாதவர்களுக்குப் பாகவதசேவை அடையக்கூடாததாகவே யிருக்கும். பெரியவர்களுடைய கூட்டத்தில் எவ்வாறு தேவதேவான ஜனார்த்தானவர், நித்தியமாகப் புகழப்படுகிறாரோ, அப்படிப்பட்ட பாகவதர்களுடைய சேவையினாலே ஸ்ரீ பகவத் கதா சிரவணமும், அதனாலே அசைவில்லாததுமான பக்தியும் உண்டாக்கித், தேகாதிகளிலே ஆசக்தியானது நிவர்த்தியாகும். வாரீர் மைத்திரேய மகாரிஷியே! அந்தப்பரமாத்மாவானவர், முன்னே இந்திரியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற மகத்தத்துவ முதலான தத்துவங்களைக் கிரமமாகச் சிருஷ்டித்து, அவற்றினுடைய அம்சங்களாலே விராட்ரூபத்தைச் சிருஷ்டித்து, அவற்றில் அனுப்பிரவேசம்

பண்ணியிருக்கிற விராட்புருஷனுடைய சரீரத்திலே, இந்தப் பிரஜைகள் விசித்திரங்களான ரூபங்களை யுடையவராய்ப், புத்திரர்கள், பவுத்திரர்கள், ஞாதிகள், பந்துக்களுடனே கூட வுண்டாகிறார்களோ, யாதொரு பிரஜைகளாலே இந்தப் பிரபஞ்சம் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, பிரம்மா முதலான பேர்களுக்கும் ஈஸ்வரனான அந்த விராட் புருஷனானவர், எவர்களைச் சிருஷ்டித்தாரோ, அவராலே சிருஷ்டிக்கப்பட்ட பிரஜாபதிகளையும், பிராகிருத சிருஷ்டிகள் ஆறும், வைகிருத சிருஷ்டிகள் மூன்றும், ஆக ஒன்பதுசிருஷ்டிகளையும், அதன் பின்னேயுண்டாகும் சிருஷ்டிபேதங்களையும், மனுக்களை யும், மனுவந்தராதிபர்களான இந்திரன் முதலான பேர்களை யும், அவர்களுடைய வம்சங்களையும், அந்த வம்சங்களிலே பிறந்த பிரசித்த புருஷர்களுடைய சரித்திரங்களையும், இந்தப் பூமிக்கு மேலேயிருக்கிற லோகங்களையும், கீழேயிருக்கிற லோகங்களையும், அந்த லோகங்களுடைய இருப்பையும், பிரமாணங்களையும், பூலோகத்தினுடைய பிரமாணத்தையும், மிருகங்கள், மனுஷியர்கள், தேவர்கள், சர்ப்பங்கள், பக்ஷிகள், இவைகளுடைய சிருஷ்டியையும், ரிஷீஸ்வரர்களுடைய ஜன்மங்களையும், கருமங்களையும். வேதத்தினுடைய விபாகத் தையும், யக்கியத்தினுடைய விஸ்தாரங்களையும், யோகசமாதி யினுடைய மார்க்கத்தையும், கியானத்தினுடைய மார்க்கத் தையும், அதற்கு உபாயமான சாங்கியக்கியானத்தினுடைய மார்க்கத்தையும், பகவானாலே சொல்லப்பட்ட பாஞ்சராத்தி ராதிதந்திரத்தையும், பாஷண்டர்களுடைய மார்க்க வைஷம் மியத்தையும், ஈனஜாதிகளுடைய சிருஷ்டியையும், சத்வாதி குணங்களாலேயும், அதின்மூலங்களான கருமங்களாலேயும் உண்டாகாநின்றும், நானாவிதங்களாகியும், கணக்கில்லாமலு மிருக்கிற ஜீவனுடைய கதிகளையும், தருமார்த்த காமமோ க்ஷங்கள் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமலுமிருக்கிற வுபா யங்களையும், விருத்தியினுடைய சுவரூபத்தையும், நீதியினு டைய சுவரூபத்தையும், சாஸ்திரத்தினுடைய சித்தாந்தத்தை யும், சிரார்த்தத்தினுடைய விதியையும், பிதுர்த்தேவதைகளு டைய சிருஷ்டியையும், நவக்கிரகங்கள் அஸ்வனி முதலான நக்ஷத்திரங்களின் சிருஷ்டியையும், காலசக்கிரத்தினுடைய சமஸ்தானத்தையும், தானத்தினுடைய பலத்தையும், பசுவி னுடைய பலத்தையும், யாகாதிகருமத்தினுடைய பலத்தை யும், தடாகப்பிரதிஷ்டை முதலான தருமத்தினுடைய பலத் தையும், தேசாந்தரங்களை யடைந்திருக்கின்ற புருஷனுடைய தர்மத்தையும், ஆபத்துக்காலத்திலே செய்யவேண்டிய தர்மத் தையும். தீனர்களிடத்திலே வாச்சல்லியத்தையுடைய மகானு

பாவர்கள் மிகவும் பக்தியுடனே அனுவர்த்திக்கின்ற சிஷியர் களுக்கும், புத்திரர்களும். மிகவும் அரிதாயிருக்கிற அர்த்தத் தையும் சொல்லுவார்கள். பிரளயத்திலே சயனித்துக்கொண் டிருக்கின்ற பரமேஸ்வரனை யெவர்கள் உபாசித்துக்கொண் டிருக்கிறார்கள்? எவர்கள் லயத்தை யடைந்திருக்கிறார்கள்? ஜீவனுடைய தத்துவத்தையும், பரமாத்மாவினுடைய சுவ ரூபத்தையும் உபநிஷத்தினாலே அறியப்படுகிற கியானத்தை யும், குரு சிஷ்யர்களுடைய பிரயோஜனத்தையும், அவர் களாலே உண்டாக்கப்படுகிற பலத்தையும், அந்தக்கியானத் துக்குப் பாக்கியங்களாகியும், அந்தரங்களாகியு மிருக்கிற சாதனங்களையும், கியானம், பக்தி, வைராக்கியம், இவைகளுக் குச் சாதனங்களையும் ஸ்ரீ ஹரியினுடைய லீலைகளை அறிய வேண்டுமென்ற இச்சையினாலே பிரஸ்னம் பண்ணுகிற எனக்குச் சிநேகிதரானபடியினாலே விசிதமாகச் சொல்லக் கடவீரென்று குருசிரேஷ்டரான விதுரராலே பிரஸ்னம் பண்ணப்பட்ட புராணார்த்தங்களை யுடையவராகியும், பகவா னுடைய கதையிலே பிரவர்த்திப்பிக்கப்பட்டவராய் மிகவும் விர்த்தியடையா நின்ற சந்தோஷத்தை யுடையவராகியு மிருக்கிற அந்த மைத்திரேய மகாரிஷியானவர் அந்த விது ரரைப் பார்த்து இந்தப் பிரகாரஞ் சொல்லத் தொடங்கினார்.



## எட்டாவது அத்தியாயம்



*பிரளயக்கடலிலே சயனித்துக்கொண்டிரா நின்ற ஸ்ரீமந் நாராயணருடைய நாபிக் கமலத்திலே உண்டான பிரம்மாவானவர், அந்த ஸ்ரீமந் நாராயணரை அறியாதவராயும், பயப்பட்டவராயும், தபசினாலே ஸ்ரீ ஹரியைச் சந்தோஷிப்பித்தா ரென்று சொல்லப்படுகின்றது.*

வாரீர் விதுரரே! இந்தலோகத்திலே புருச்சக்ரவர்த்தியி னுடைய வம்சமானது சத்புருஷர்களுக்குச் நிலாகிக்க யோக்கியமாக விருக்கின்றது. இந்த வம்சத்திலே பகவத்பக்த னாகியும், லோகபாலகனாகியு மிருக்கிற யமதர்மராஜனை உமக்குப், பாகவதமெனப்பட்ட புராணத்தைச் சாக்ஷாத் பகவா னானவர் சனற்குமாரர் முதலான ரிஷிகளுக்குச் சொன்னபடி சொல்லுகிறேன் கேளும். சனற்குமாரர் முதலான யோகீஸ் வரர்கள் பாதாளத்திலே யிருக்கிற ஞானத்தை யுடையவ ராய்ப், பிரகாசிக்கப்பட்ட சங்கர்ஷணமூர்த்தியை யடைந்து, அவருடைய திருவடிகளைத், தேவகங்காஜலத்தில் ஸ்நானம் பண்ணி மிகவும் ஈரமாயிருக்கிற, தங்களுடைய ஜடாமுடிக

ளாலே ஸ்பரிசித்துச் சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி அந்தச் சங்கர்ஷண மூர்த்தியினுடைய லீலைகளை அடிக்கடி ஸ்தோத்திரம்பண்ண, நித்தியசித்தியான ஐஸ்வரியாதி குணங்களையுடையவரான அந்தச் சங்கர்ஷண மூர்த்தியானவர், நிவிர்த்தி மார்க்கத்திலே மிகவும் இச்சையை யுடையவரான சனற்குமார யோகியின் பொருட்டு, இந்தப் பாகவதத்தை அருளிச்செய்தனர். மகா தபஸ்வியா யிருக்கிற சாங்கியாயனமுனிவர், பகவானுடைய இந்த லீலாவிபூதிகளைப் பிரகாசஞ்செய்ய வேண்டுமென்று இச்சையுடையவராய்த், தம்மை அனுவர்த்தியா நின்றும், எனக்கு ஆசாரியராகியு மிருக்கிற பராசரமகாரிஷிக்கும், பிரகஸ்பதிக்கும் சொன்னார். மிகவும் கிருபாசாலியான அந்தப் பராசரரானவர், புலஸ்திய மகாரிஷியினாலே புராணகர்த்தாவாகப் போகிறீரென்று அனுக்கிரகிக்கப்பட்டவராய் உத்தமமான இந்தப் பாகவத புராணத்தை எனக்குச் சொன்னார். மிகவும் சிரத்தை யுடையவராகவும், நித்தியமாக அநுஷ்டானபரராகவு மிருக்கிற உமக்கு இந்தப் புராணத்தைச் சொல்லுகிறேன். எப்போதும் ஒன்றினாலேயும் திரஸ்கரிக்கப்படாத ஞானசக்தியை யுடையவரான ஸ்ரீமந் நாராயணரானவர், தம்முடைய மாயா விநோதங்களை விட்டுச் சுவரூபானந்தானுபவத்திலே மிகவும் ஆனந்தத்தை யுடையவராய், கிரியாசூனியராகி, யொருவராய் ஆதிசேஷனிடத்திலே சயனித்து நித்திரையினாலே நேத்திரங்களை மூடிக்கொண்டாரோ அப்போது சமஸ்த பிரபஞ்சமும் ஜலத்தினால் வியாபிக்கப்பட்டு, அந்த ஸ்ரீமந் நாராயணரானவர் தமக்குள்ளே தரிக்கப்பட்ட சமஸ்த பிராணிகளையுந் திரும்பிச் சிருஷ்டிக்கிற நிமித்தமாய்க், காலசுவரூபியான தம்முடைய சக்தியைப் பிரேரணை செய்துகொண்டு, தமக்கு ஸ்தானமான அந்தப் பிரளயஜலத்தில், அக்கினியானது காஷ்டத்திற்குள் அடங்கி யிருப்பதுபோலடங்கி, அந்த ஜலத்தில் ஆயிரம் சதுர்யுகம் யோகநித்திரை செய்து, திரும்பவும் சிருஷ்டி நிமித்தமாகப் பூர்வமே பிரேரணை பண்ணப்பட்ட கால சுவரூபமான தம்முடைய சக்தியினாலே கிரியாலாபங்களை அடைந்தவராய்த், தம்முடைய திவ்யமங்கள விக்கிரகத்தில் லயப்பட்டிருக்கின்ற லோகங்களைப் பார்த்துச் சூக்ஷ்மரூபங்களாயிருக்கிற அந்தப் பதார்த்தங்களிலே வைக்கப்பட்ட திருஷ்டியை யுடையவராய்த் தமது தேகத்துக்குள்ளே யிரா நின்றும் அதிசூக்ஷ்மமாகியுமிருக்கிற அந்தப் பிரபஞ்சரூப பதார்த்தமானது காலானுசாரியாயிருக்கிற சுவகுணத்திலே சலிப்பிக்கப்பட்டதாய் உண்டாகப்போகிறதாய் அப்போது பகவானுடைய நாபிப்பிரதேசத்தில் நின்றும் உண்டாயிற்று,

அந்தச் சூக்ஷ்மப் பிரபஞ்ச ரூபமான அர்த்தமானது, ஜீவர்களுடைய அதிர்ஷ்டத்தைப் பிரகாசிப்பியா நின்ற காலத்தினாலே பத்மரூபமாக நின்று பரமாத்துமாவைக் காரணமாகவுடையதாய்ச், சூரியன்போல் தன்னுடைய தேஜசினாலே விஸ்தாரமான அந்த ஜலத்தைப் பிரகாசிப்பித்துக்கொண்டு சீக்கிரமாக வுண்டாயிற்று. ஜீவர்களுக்கு அநுபவ யோக்கியங்களான பதார்த்தங்களைப் பிரகாசிப்பித்துக் கொண்டும், லோகஸ்வரூபமாகியு மிருக்கிற அந்தப் பத்மத்திலே, ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் தாமே அந்தரியாமியாகப் பிரவேசித்தார்.

ஸ்ரீ ஹரியினாலே பிரவேசிக்கப்பட்ட அந்தப் பத்மத்திலே சுவயமாகவே சகலவேத சுவரூபரான பிரம்மாவானவர் உண்டாயினர். அந்தப் பிரம்மா பத்மத்தினுடைய பொகுட்டிலேயிருந்து லோகங்களைப் பார்க்கிற நிமித்தம் நான்கு முகங்களை யடைந்து, மகா வாயுவினாலே உண்டாகா நின்ற அலைகளினது சமூகத்தையுடைய அந்த ஜலத்தில் உண்டான அந்தப் பத்மத்தையும், லோகங்களுடைய தத்துவத்தையும், தன்னுடைய ஆத்துமாவையும் அறியாமல், இந்தக் கமலமானது எவ்விடத்தில் நின்றும் உண்டாயிற்றோ வென்று வெகுகாலம் யோசனைசெய்து அந்தக் கமலத்தினுடைய கொடியின் ரந்திரமார்க்கத்தினாலே அந்த ஜலத்துக்குள்ளே தலைகீழாகப் பாதாளத்திலே போய்த் தேடியும் அந்த மூலத்தை யறியாமற்போனர். வாரீர் விதுரரே! கரையில்லாத அந்தக் காரணத்துக்குள்ளே போய்த் தமக்குக் காரண வஸ்துவைத் தேடுகின்ற அந்தப் பிரம்மாவுக்குச் சமஸ்த பிராணிகளுக்கும் பயத்தை யுண்டாக்கி ஆயுஷ்க்ஷயத்தைப் பண்ணிக்கொண்டிருக்கிற அந்த ஸ்ரீ ஹரியினுடைய ஆயுதரூபமான காலசக்கிரமானது ஆவிர்ப்பவித்தது. அந்தப் பிரம்மாவானவர், அந்தக் காலசக்கரத்தைப் பார்த்து மனோரத சித்தியில்லாதவராய்த் தேடுகிற வியாபாரத்தில் நின்றும் நிவிர்த்திப் பித்தவராய்த் திரும்பவும் தமக்கு ஆஸ்ரயமான அந்தக் கமலத்திலேயே யிருந்து மெல்ல ஜெயிக்கப்பட்ட சுவாசத்தினாலே சமாதியோகத்தை ஆஸ்ரயித்து அநேக வருஷங்கள் பண்ணப்பட்ட சமாதியோகத்திலே யுண்டாயின தியானத்தை யுடையவராய்த், தமது ஹிருதயத்துக்குள்ளே குடைபோன்ற அனேக படங்களையுடைய சிரசுகளில் ஒளிக்கிற ரத்தினகாந்திகளாலே அந்தகார நாசத்தை யுடைய தாமரைக் கிழங்குபோல மிகவும் தவளமாகியும் மகா தீர்க்கமாகியு மிருக்கிற ஆதிசேஷ

னுடைய சரீரமாகிற கட்டிலிலே சயனித்து ஒருவராகியும் சந்தியாகாலத்திற்கு நிகர்த்த சிவந்த வஸ்திரத்தை யுடைய ராகியும், சுவர்ன மயமான அனேகம் சிரங்களையுடையராகி யும், அனேக ரத்தினங்கள், உதக தாரைகள், மூலிகைகள், புஷ்பங்கள், இவற்றின் மாலைகளையுடையதாகியும், மூங்கில்க ளாகிற புஜங்கள், விருக்ஷங்களாகிற பாதங்கள், இவைகளை யுடையதாகியும், மரகத ரத்தினமயமாயிருக்கிற பருவதத்தி னுடைய காந்தியை யளவினாலேயும், விஸ்தாரத்தினாலேயும் உபமானமில்லாமல் விளங்கா நின்றும் மூன்று லோகங் களுக்கும் ஆஸ்ரயமாகியும், நானாவிதங்களாகியும், திவ்வியங்க ளாகியு மிருக்கிற ஆபரணங்கள் வஸ்திரங்கள் இவைகளு டைய காந்தியை யுடையதாகியு மிருக்கிற தேகத்தினாலே திரஸ்கரியா நின்றும் அங்கீகரிக்கப்பட்ட திவ்ய மங்கள ரூபத்தை யுடையவராகியும், தங்களுக்கு இஷ்டங்களாயிருக் கிற பலன்களை யடைகிறதின்பொருட்டுப் பரிசுத்தமான உபா சன மார்க்கங்களாலே அர்ச்சியா நின்ற புருஷர்களுக்குச் சர்வாபீஷ்டங்களையும் தரா நின்றும், நகங்களாகிற சந்திரர் களுடைய கிரணங்களோடே கூடிக்கொண்டும், விரல்களா கிற மனோக்கியங்களான இதழ்களை யுடையனவாயு மிருக்கிற ஸ்ரீ பாதபத்மத்தைக் கிருபையினாலே கொஞ்சம் உயரவெடுத் துக் காண்பியா நின்றும், மூன்று லோகத்தினுடைய துக்கத் தைப் போக்கடியா நின்ற புன்சிரிப்பை யுடையராகியும் விளங்குகின்ற குண்டலங்களாலே யலங்கரிக்கப்பட்டும், கோவைப்பழம் போலொத்த அதரத்தினுடைய காந்தி யினாலே சிவந்த வர்ணத்தை யுடையதாகியும், கோபமான நாசிகையையுடையதாகியும், சுதந்தரமான புருவங்களையுடைய தாகியு மிருக்கிற திருமுகமண்டலத்தினாலே பக்தர்களைக் குறித்துக் கிருபை செய்து கொண்டிரா நின்ற அந்தப் புருஷனைப் பார்த்தார்.

வாரீர் விதுரரே! பீதாம்பரத்தினாலேயும், நவரத்தின கசிதமான அரைஞாண் மாலையினாலேயும், நிதம்பபாகத்திலே யலங்கரிக்கப்பட்டும், ஸ்ரீ வச்சச் சின்னத்தையுடைய மார் பிலே விளங்கா நின்ற மகாவிலைபெற்ற ஆரங்களினாலே யலங் கரிக்கப்பட்டும், சிரேஷ்டங்களான தோள் வளைகளிலே யிரா நின்ற உத்தமங்களான ரத்தினகாந்திகளாலே வியாபிக்கப் படா நின்ற பாகுதண்டங்களாகிற அனந்த சாகைகளையுடைய ராகியும், பிரதானத்தை மூலமாக வுடையதாகியும், சர்ப்ப சிரேஷ்டங்களுடைய சரீரங்களாலே சூழப்படா நின்ற சாகைகளையுடையதாகியும், லோகசுவரூபமாகியும், சந்தன

விருக்ஷம்போலேயிரா நின்ற ஆதிசேஷனைச் சகாயமாயுடையவராகியும், பிரகாசமாகக் காணப்படா நின்ற கவுஸ்துவாபரணத்தை மார்பில் உடையவராகியும், ஸ்தாவர சங்கமங்களுக்கு ஸ்தானமாகியும், வேதங்களாகிற வண்டுகளாலே புகழப்பட்ட காந்தியையுடையராகியும், தம்முடைய கீர்த்தி சுவரூபமாகியுமிருக்கிற வனமாலிகையினாலே சூழப்பட்டவராகியும், சூரியன், சந்திரன், வாயு, அக்னி, இவர்களாலேயும் அடையக்கூடாதவராகியும் மூன்று லோகத்திலும் பிரகாசத்தையுடையவராகியும், சமஸ்த லோகங்களிலேயும், சஞ்சரித்துக்கொண்டிரா நின்ற சுதரிசன முதலான ஆயுதங்களாலே ஒருத்தராலேயும் அண்டக்கூடாதவராகியு மிருக்கிற ஸ்ரீ ஹரியைப் பார்த்தார். ஜகத் கர்த்தாவான அந்தப் பிரம்மாவானவர் எப்போது ஸ்ரீ ஹரியைப் பார்த்தாரோ, அப்போதே லோகசிருஷ்டியையுடையவராய், அந்தப் பகவானுடைய நாபியாகிற தடாகத்தில் கமலத்தையும், அதிலே தன்னையும், ஜலத்தையும், பிரளயகால வாயுவையும், ஆகாசத்தையும் பார்த்து, பிரஜைகளைச் சிருஷ்டிக்க இச்சையுடையவராய் அந்தப் பகவானைக் குறித்து ஸ்தோத்திரம் பண்ணினார்.



## ஒன்பதாவது அத்தியாயம்.



*பிரம்மாவானவர் ஏகார்ணவமான ஜலத்திலே லோகசிருஷ்டியைப்
பண்ணவேண்டுமென்கிற இச்சையினாலேயும், தபசினாலேயும்;
சந்துஷ்டரான ஸ்ரீமந் நாராயணரைப் பார்த்து
ஸ்தோத்திரம் பண்ணினாரென்று
சொல்லப்படுகிறது.*

### பிரம்மஸ்துதி.

வாரீர் பகவானே! வெகுகாலம் பண்ணின வுபாசனையால் இப்போது என்னாலே அறியப்பட்டீர். பிராணிகளுக்குத் தேவரீருடைய தத்துவமானது அறியப்படுகிற தில்லையென்பது தோஷமாக விருக்கிறது. சுத்தசத்துவ ரூபமான தேவரீருடைய ரூபமானது அனேக அவதாரங்களுக்குக் காரணமென்று காண்பிக்கிற நிமித்தமாகக் கிரகிக்கப்பட்டது. வாரீர் பரமபுருஷரே! ஒன்றினாலேயும் மறைக்கப்படாத பிரகாசத்தை யுடையதாகியும் விகற்ப சூனியமாகியும் ஆனந்த

மாத்திரமாகியும் இருக்கிற தேவரீருடைய ரூபமானது, இந்த ரூபத்தைக்காட்டிலும் வேறன்று. வாரீர் பரமாத்மாவே! உபாசிப்பவர்களுக்குள்ளே முக்கியமாகியும், பிரபஞ்சத்துக்குக் காரணமாகியும், பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேருகியும், பிருதிவிமுதலான பூதங்கள் இந்திரியங்கள் இவைகளுக்குக் காரணமாகியுமிருக்கிற இந்த ரூபத்தையே உபாசிக்கிறேன். வாரீர் புவனமங்களரே! தேவரீரை உபாசிக்கிற எங்களுக்கு மங்களத்தின் பொருட்டுக் காண்பிக்கப்படுகிற இதுவே நிரு பாதிக ரூபமாகாநிற்கிறது. ஈஸ்வரன் இல்லையென்றும், நிந்திதமான தர்க்கத்தையே ஆஸ்ரயித்து நரகத்தை யடைகிற பேர்களாலே உபாசிக்கப்படாத தேவரீரின் பொருட்டு அடிக்கடிப் பிரணாமம் பண்ணுகிறேன். தேவரீருடைய திருவடிகளையே ஆஸ்ரயித்து வேதங்களாகிற வாயினுலே ஸ்மரிக்கப்படாநின்ற தேவரீருடைய சரணாரவிந்தங்களைப் பாடி நாசியால் ஆக்கிராணம் பண்ணியும் தேவரீருடைய கதைகளைக் கர்னரந்திரங்களாலே சிரவணத்தையேபண்ணிக் கொண்டிருக்கிற பக்தர்களுடைய இருதயகமலத்தில் நின்றும் ஒழியாமல் பிரகாசிக்கின்றீர். வாரீர் அச்சுதரே! பசி, தாகம், பிணி, பித்தம், சேஷ்மம், இவைகளாலேயும், சீதம், உஷ்ணம், வாதம், மழை, இவைகளாலேயும், ஒன்றுக்கொன்று மாறுபட்ட பூதங்களாலேயும், மிகவும் சகிக்கக் கூடாததான காமாக்கினியினுலேயும், ஒழியாத கோபத்தினுலேயும், அடிக்கடி பீடிக்கப்படாநின்ற ஜனங்களைப் பார்க்கின்ற என்னுடைய மனதானது மிகவும் துக்கிக்கின்றது. தேவரீருடைய மாயாவிலாசத்தை யுடையதான இந்தப் பிரபஞ்சத்தைத் தேவரீரைக்காட்டிலும் வேருக எந்தமட்டுக்கும் பார்க்கிருனே அந்தமட்டுக்கும் அசத்தாயிருந்தாலும், இந்தச் சம்சாரமானது துக்கங்களைக் கொடுத்துக், கர்மபலத்தை யுடையதாய் ஒழியாமலேயிருக்கின்றது. தேவரீருடைய கதாசிரவணம், கீர்த்தனம் முதலியவைகளிலே பிரீதியில்லாதவர்களாயிருக்கிறவர்கள் ரிஷிகளாக விருந்தாலும் சம்சார துக்கத்தையே யடைகிருர்கள்.

வாரீர் நாதனே! தேவரீருடைய அனந்த கல்யாண குணங்களுடைய கேள்வியினுலே பார்க்கப்பட்ட சுவரூபத்தை யுடையவரான தேவரீர், பக்தர்களுடைய பக்தியோகத்தினுலே நன்ருக சோதிக்கப்பட்டிருக்கிற இருதய கமலத்திலே யிருக்கிறீரன்ருே? வாரீர் பகவானே! நானுவித பிராணிகளிடத்திலே அந்தராத்துமாவா யிருக்கிற தேவரீரிடத்தில் பக்தி யில்லாத பேர்களுக்குத் துர்லபமான தேவரீருடைய

ஆராதனம், சிரேஷ்டமாகி ஒரு காலத்திலேயும் நாசத்தை யடைகிறதில்லை. பல இச்சையினாலே செய்யப்பட்ட தருமமானது கோரப்பட்ட பலத்தைக் கொடுத்துவிட்டு நசித்துப் போகும். ஆகையினாலே சர்வகால சுவரூபமான கியானத்தினாலே சமஸ்தபேத மோகங்களையும் போக்கடியா நின்றும் கியான ஸ்வரூபராகியும், பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி திதி சங்காரங்களிலே காரணமாகியு மிருக்கிற மாயையினுடைய விலாசத்தினாலே கிரீடையை யுடையவராகியும், ஈஸ்வரராகியும், பரமபுருஷராகியு மிருக்கிற தேவரீர் பொருட்டுப் பிரணாமம் பண்ணுகிறேன். பகவானுடைய அவதாரங்களின் அனந்த கல்யாணகுண லீலைகளையுடைய நாமங்களைப் பிராணவியோக காலத்திலே உச்சரிக்கிறவர்கள் அனேக ஜன்மங்களிலே பண்ணப்பட்ட பாவத்தை க்ஷணத்திலே விட்டு, நித்தியத்துவமாகிற பிரம்மத்தையே யடைகிறார்கள், திரிமூர்த்திகளை வேர்களாக உடையவராகி மரீசி, பிரஜாபதி, மனு முதலான பேர்களை யனேக சாகைகளாக உடையவர்களாகியும், தம்மை ஆஸ்ரயமாக உடையதான பிரகிருதியைச் சத்துவாதிகுண பேதத்தினாலே பிரித்துச் சிருஷ்டி, ஸ்திதி, பிரளயங்களுக்கு ஏதுக்களான நான், ருத்திரன், ஸ்ரீ மஹாவிஷ்ணு என்று இந்தப்பிரகாரம் மூன்று ரூபத்தை யுடையவராய்ப், பிரபஞ்சமாகிற விருக்ஷத்துக்குக் காரணமாகியுமிருக்கிற தேவரீர்பொருட்டுப் பிரணாமம் பண்ணுகிறேன். பிரளய ஜலத்திலே யிரா நின்றும், அனந்த சக்திகளை யுடையவராகியு மிருக்கிற யாதொரு பகவானுடைய நாபிக்கமலத்தில் நின்றும், இவ்விடத்திலே மகத்துவ ரூபமான சித்தத்துக்கு அபிமானி தேவதையாயிருக்கும் நான் உண்டானேனே, அந்தப் பகவானுடைய ஆச்சரியகரமான இந்த ரூபத்தை விஸ்தாரம் பண்ணாநின்ற எனக்கு, வேதவசனங்களுடைய வுச்சாரணமானது நாசத்தை யடையாமலிருக்கக்கடவது. மிகவும் கிருபாசாலியாகியும், புராணபுருஷராகியு மிருக்கிற பகவானவர், மிகவும் விருத்தியடையா நின்ற பிரீதியையுடைய புன்சிரிப்புடனே கூட நேத்திர கமலத்தை விரிவு செய்துக் கொண்டு, பிரபஞ்சத்தினுடைய ஆவிர்ப்பாவத்தின் பொருட்டும், அனுக்கிரகத்தின் பொருட்டும், எழுந்திருந்து, மதுரமான வாக்கினாலே என்னுடைய வியசனத்தைப் போக்கக் கடவர்.

வாரீர் விதுரரே! அந்தப் பிரம்மாவானவர், தமக்குக் காரணமான அந்தப் பகவானுடைய தபசிலேயும், உபாசனை

யினாலேயும், சித்தசமாதியினாலேயும் பார்த்துத், தம்முடைய மனோவாக்குகளின் சக்தி யெவ்வளவோ அவ்வளவு தோத்திரம்பண்ணி, மிகவும் இளைப்பை யடைந்தவர்போல இருந்தனர். பிற்பாடு, மதுசூதனரானவர் கம்பீரமான வாக்கினாலே அவருடைய மோகந்தணிய ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாரீர் வேதகற்பரே! நீர் என்னை யாதொரு சிருஷ்டியைக் குறித்துப் பிரார்த்தித்தீரோ, அது பூர்வமே உம்மாலே சம்பாதிக்கப்பட்டிருக்கின்றது. என்னை ஆச்ரயமாகவுடைய வேதவித்தையைப் பரிசீலனம்பண்ணித், திரும்பவும் தபசைச் செய்து, அந்த வித்தையினாலேயும் தபசினாலேயும் உம்முடைய இருதயத்துக்குள்ளே மிகவும் பிரகாசமாயிருக்கிற லோகங்களைப் பார்க்கப்போகிறீர். வாரீர் பிரம்மாவே! பிற்பாடு நீர் மிகவும் பக்தியை யுடையவராகியும், சித்த சமாதானத்தை யுடையவராகியுமிருந்து உம்மிடத்திலேயும் லோகங்களிலேயும் வியாபித்துக் கொண்டிருக்கின்ற என்னையும், என்னிடத்திலே யிரா நின்ற லோகங்களையும், ஜீவாத்துமாக்களையும் பார்க்கப்போகிறீர். காஷ்டங்களிலே யிருக்கின்ற அக்கினியைப்போல், சர்வபூதங்களிலேயும் அந்தரியாமியாயிருக்கின்ற என்னைப் பார்க்கிறபோதே சமஸ்த மோகத்தையும் விட்டு நானாவிதங்களான கர்ம சமூகத்துடனே கூடின பிராணிகளைச் சிருஷ்டிக்க வேண்டுமென்று இச்சிக்கின்ற உம்முடைய அந்தக்கரணமானது இந்த விஷயத்திலே வியசனத்தையடையாமலிருக்கப்போகிறது. என்னுடைய அனுக்கிரகமானது உண்டாயிருக்கிறபடியினாலே ஆதி ரிஷியாயிருக்கிற உம்மை பாபிஷ்டமான ரஜோகுணமானது பற்றப்போகிறதில்லை. பிரஜைகளைச் சிருஷ்டிக்கவேண்டுமென்று யத்தனித்த உம்முடைய மனது என்னிடத்திலேயே ஸ்திரமாக வைக்கப்பட்டதினாலே, பிராணிகளுக்கு மிகவும் அறியக்கூடாதவனுமிருக்கிற நான் உம்மாலே அறியப்பட்டேன். தபசிலே மிகவும் நிஷ்டையும், என்னிடத்திலே அசஞ்சலமான பக்தியும், தத்துவக்கியானமும், என்னுடைய சுவரூபதரிசன முதலியவெல்லாம் என்னுடைய அனுக்கிரகத்தினாலே உண்டாகும். உமக்கு மங்களம் உண்டாகக் கடவது. யாதொரு புருஷனானவன் உம்மாலே பண்ணப்பட்ட ஸ்தோத்திரத்தினாலே நித்தியமாக ஸ்தோத்திரஞ் செய்து என்னை உபாசிக்கிறானோ அந்தப் புருஷனுக்குச் சீக்கிரமாகப் பிரசன்னனாய் விடுவேன். தடாகம், நந்தவனம் முதலான தர்மங்களாலேயும், தபசு, யக்கியங்கள், தானங்கள், யோகாப்பியாசங்கள், சித்தசமாதி, இவற்றாலே புருஷர்களுக்கு யாதொருபலம் சித்திக்குமோ, அந்தப் பலத்தில்

என்னுடைய பிரீதியே காரணமென்று தத்துவத்தையறிந்த பேர்களுடைய சித்தாந்தம். ஆகையினுலே என்னிடத்திலே பக்தியைப் பண்ணக்கடவன். சர்வவேதமயராகியும், என்னைக் காரணமாக வுடையவராகியுமிருக்கிற நீர்தானே இந்த மூன்று லோகத்தையும் சிருஷ்டிக்கக்கடவீர். என்னிடத்தி லேயே யிருக்கிற பிராணிகளைச் சிருஷ்டிபண்ணக் கடவீ ரென்று அந்தப் பகவானுனவர் பிரம்மாவின் பொருட்டுச் சிருஷ்டிக்கத் தக்கதான இந்த ஜகத்தைச், சுவரூபத்தினுலே பிரகாசம் பண்ணுவித்து அந்தர்த்தானமாயினுர்.



## பத்தாவது அத்தியாயம்



*கிரமமாகச் சிருஷ்டியைச் சொல்லுகைக்குப் பிராகிருத முதலான வியாபகத்தினுலே சிருஷ்டியானது பத்துவிதமாகச் சொல்லப்படுகின்றது.*

### விதுரருடைய வாக்கியம்.

வாரீர் மைத்திரேய மகாரிஷியே! பகவான் அந்தர்த் தானத்தை யடைந்தபிற்பாடு பிரம்மாவானவர் பிரஜைகளை எத்தனைவிதமாகச் சிருஷ்டித்தார். அதைக் கிரமமாக எனக்குச் சொல்லக்கடவீரென்று, விதுரராலே பிரார்த்திக் கப்பட்டவராய், மைத்திரேய மகாரிஷியானவர் யதாக்கிரம மாகச் சொல்லத்தொடங்கினுர்.

### மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்தப் பிரம்மாவும் ஜன்மரகிதரான பகவானுல் ஏவப்பட்டவராய்த் தமக்கிருப்பிடமான பத்ம முகுளத்திலே பிரவேசித்து, அந்த ஒரு கமலத்தையே மூன்று லோக ரூபமாக விபாகம் பண்ணினுர். வாரீர் விதுரரே! இந்த மூன்றுலோகரூபமாக நாள்தோறும் சிருஷ்டிக்கத் தக்கதான ஜீவர்களுடைய போகஸ்தானத்தின் சிருஷ்டி யானது சொல்லப்பட்டது. மகாலோக முதல் பிரம்மலோக பரியந்தங்களான லோகங்கள், பலாபேக்ஷயில்லாமல் செய் யப்பட்ட தர்மத்தினுடைய சுவரூபமானபடியினுலே பிரம்மா வினுடைய பரார்த்தகாலபரியந்தம் நாசமில்லாமலே யிருக் கும். பூலோக, புவர்லோக, சுவர்லோகமாகிய மூன்றுலோகங் கள் காமியகர்மத்தினுடைய பலமானபடியினுலே, கல்பங்கள்

தோறும் உற்பத்தி நாசங்களை யுடையனவா யிருக்குமென்று சொல்லுகின்ற மைத்திரேய மகாரிஷியைப் பார்த்து நானுவித விசித்திர ரூபத்தையுடைய ஸ்ரீ ஹரியினது காலமென்று சொன்ன, அந்தக் காலமானது எப்படிக் கற்பிக்கப்படுகிறது. அதை விஸ்தாரமாக எனக்குச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தித்த விதுரரைப் பார்த்து, மைத்திரேயர் சொல்லுகிறார். வாரீர் விதுரரே! சத்வாதி குணங்களுடைய விகாரமான, மகத்துவ முதலான தத்துவங்களுடைய பரிணாமத்தினாலேயே, ஆதியந்தமில்லாமலிருக்கிற அந்தக் காலத்தை நிமித்தமாகவுடைய பகவானானவர், தம்முடைய சுவரூபத்தை லீலையினாலேயே பிரபஞ்சரூபமாகச் சிருஷ்டித்தார். பிரம்மமயமாயிருக்கிற இந்தப்பிரபஞ்சமானது கர்த்தாவான ஈஸ்வரனாலேயும், காலமென்கிற நிமித்தத்தினாலேயும், வேறாகக் காணப்படுகிறது. இத்தப்பிரபஞ்சமிப்போதிருக்கிறபடியே பூர்வமுமிருந்தது. இனிமேலும் இப்படியே இருக்கப்போகிறது.

இந்தப்பிரபஞ்சத்துக்குப்பிராகிருதமென்றும், வைகிருதமென்றும், இரண்டு பேதங்களுண்டு. இந்தப் பேதங்களாலே சிருஷ்டியானது ஒன்பதுவிதமாகச் சொல்லப்படும். அது பத்தாவதாகவு மிருக்கிறது. இந்தப்பிரபஞ்சத்துக்குக்காலத்தினால் நித்தியபிரளயமும். சங்கருஷணருடைய முகத்திலிருந்து உண்டாகாநின்ற பிரளயாக்கினியினாலே நைமித்திகப் பிரளயமும், தம் தம் காரியங்களைக் கிரகியாநின்ற சத்துவாதி குணங்களாலே பிராகிருத பிரளயமும், இத்தப்பிரகாரம் பிரளயமானது மூன்று விதமாகச் சொல்லப்படுகின்றது. தசவித சிருஷ்டியாவது எப்படியென்றால். ஸ்ரீ ஹரியினுடைய சமீபத்தில் நின்றும் சத்வாதிகுணங்களுடைய சாஞ்சல்லியமானது மகதத்துவத்தினுடைய சிருஷ்டியான பிரதம சிருஷ்டியாகாநிற்கிறது. அகங்காரத்தினுடைய சிருஷ்டியானது இரண்டாவது சிருட்டியாகா நிற்கிறது. அகங்கார சிருஷ்டியிலே திரவியங்கள், இந்திரியங்கள், கிரியைகள் இவைகளுடைய சிருஷ்டியுண்டாதலால் அந்த அகங்காரத்தினுடைய சிருஷ்டி இரண்டாம் சிருஷ்டி, பூத சூக்ஷ்ம சொரூபமாகியும், மகாபூதங்களுக்குச் சனகமாகியுமிருக்கிற பூதசிருஷ்டியானது மூன்றும் சிருஷ்டியென்று சொல்லப்படும் கியானேந்திரிய காமேந்திரிய ஸ்வரூபமான இந்திரிய சிருஷ்டியானது நான்காம் சிருஷ்டியாகிறது. மனதானது யாதொரு சத்துவகுணப் பிரதானமாகா நிற்கிறதோ, அந்தச்சத்துவகுண சுவரூபமான இந்திரியாபிமானி தேவர்க

ளுடைய சிருஷ்டியானது ஐந்தாம் சிருஷ்டியாகிறது. ஜீவர்களுக்கு ஆவரணத்தையும், நானென்கிற விக்ஷேப சக்தியையும் பண்ணுகின்ற அக்கியானத்தினுடைய சிருஷ்டியானது ஆறும் சிருஷ்டியாகா நிற்கிறது. இந்த ஆறு சிருஷ்டிகளும் பிராகிருத சிருஷ்டிகளாகா நிற்கிறது இது சம்சார துக்கத்தை நிவர்த்திக்கின்ற புத்தியையுடைய ஸ்ரீ ஹரியினது லீலையாக விருக்கின்றது. ஸ்தாவரங்களுடைய ஆறுவித சிருஷ்டியானது ஏழாம் சிருஷ்டியாகிறது. எப்படி யென்றால், புஷ்பமன்றியிலே பலிக்கிற விருக்ஷங்கள், பலபாகத்தினாலே அந்தத்தையடைகின்ற ஔஷதிகள் ஏறிப் படருகிறகொடிகள், மூங்கில் முதலானவைகள், பூமியிலே படருகிற கொடிகள், புஷ்பித்துப் பலிக்கப்பட்ட விருக்ஷங்கள், இவைகளுடைய சிருஷ்டியானது. ஆறு விதமாகும். இந்த ஆறும் ஊர்த்துவ சஞ்சாரத்தை யுடையவையாகியும், கியானப்பிரகாச மில்லாதனவாகியும். இருதயத்துக்குள்ளேயே சீதோஷ்ண ரூப ஸ்பரிசத்தை யறிந்து அனேக பேதங்களை யுடையனவாகியு மிருக்கும். பக்ஷி மிருகாதிகளுடைய சிருஷ்டியானது எட்டாம் சிருஷ்டியாகிறது. அச்சிருஷ்டியானது இருபத்தெட்டு விதமாயிருக்கும். அவ்விதங்களாவன அந்தப் பிராணிகள் நாளைக்கு வரப்போகிறதை அறியாதனவாகியும், ஆகாராதி மாத்திரத்தையே யுடையனவாகியும். ஆக்கிராணத்தினாலேயே வஸ்துக்களை யறிந்தும், இருதயத்திலே விவேக சூனியங்களாகவுமிருக்கும். இருபத்தெட்டு விதங்களெப்படி யென்றால், பசு, ஆடு, எருமை, மாடு, மான், பன்றி, காட்டுப்பசு, வெள்ளாடு, ஒட்டகம், இந்த ஒன்பதும், இரண்டு குளம்புகளுடைய மிருகங்கள் ; கழுதை, அசுவம், கோவேறுகழுதை, கவுரமிருகம், சரபம், கவரிமான், இந்த ஆறும், ஒரு குளம்பையுடைய மிருகங்கள் ; நாய், நரி, செந்நாய், புலி, பூனை, முசல், முள்ளம்பன்றி, சிங்கம், குரங்கு, யானை, உடும்பு, ஆமை, இந்தப் பன்னிரண்டும் ஐந்து நகங்களையுடையவைகள் ; முதலை முதலான ஜலசெந்துக்களும், கழுகு, பருந்து, கூளி, டேகை, காடை, பல்லூகம், மயில், அம்சம், சாரசம், சக்கிரவாகம் காக்கை, கோட்டான், கோகிலம் முதலானவைகள் ஆகாசசஞ்சாரிகள்.

வாரீர் விதுரரே! பூமியிலே ஆகார சஞ்சாரத்தையுடையரான மனுஷியர்களுடைய சிருஷ்டி ஒன்பதாவதாக விருக்கிறது. அவர்கள் ஏகரூபமாக ரசோகுணத்தை யுடையவர்களாகவும், காமத்திலேயே ஆசக்தியையுடைய வர்களாகவும், சுகதுக்கத்திலே புத்தியை யுடையவர்களாகவு மிருப்பார்கள்.

ஸ்தாவரம், திரியக்கு, மனுஷியர்கள், இந்த மூன்று சிருஷ்டிகளும் வைகிருத சிருஷ்டியென்று சொல்லப்படும். தேவசிருஷ்டியானது பிராகிருதமென்று சொல்லப்படும். சனற்குமாரர் முதலான பேர்களுடைய சிருஷ்டியானது பிராகிருதமென்றும் வைகிருதமென்றும் இரண்டு விதமாகச் சொல்லப்படும், தேவசிருஷ்டி பதினெட்டு விதம். அதாவது, தேவர்கள், பிதுரர்கள், அசுரர்கள், கந்தருவர்கள், அப்சரசுகள், சித்தர்கள், யக்ஷர்கள், ராக்ஷசர்கள், சாரணர்கள், பூதப்பிரேதபிசாசங்கள், வித்தியாதரர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள், தைத்தியர், கருடர், அந்தரர், உரகர், போகபூமியர் முதலான பதினெட்டு விதமென்று சொல்லப்படும். இந்தச் சிருஷ்டிகளும் பிரம்மரூபியான ஸ்ரீ ஹரியினுலே பண்ணப்பட்டவை. இதற்குமேல் மனுக்களேயும், மனுவந்தரங்களேயும் சொல்லுகிறேன் கேட்கக்கடவீர். வாரீர் விதுரரே! ஸ்ரீ ஹரியானவர் இந்தப் பிரகாரம் கல்பாதிகளிலே சிருஷ்டித்தது. இந்தச் சிருஷ்டி முன்னே யுண்டாயிற்று பின்னே யுண்டாயிற்றென்கிற விவகாரத்தைச் சுருதி முதலானவைகள் பாரமார்த்திகமாகச் சொல்லப் பிரவர்த்தித்தவைகளல்ல அவைகளுக்கு அந்தப் பரமாத்மாவினுடைய சுவரூபத்தைச் சொல்லுகிறதிலேயே தாத்பரியம். நதியிலே சுழலுகின்ற சுழலுக்கு முன்பின் என்கிற வியவஸ்தை யில்லாததுபோலும், சொப்பன முதலான சிருஷ்டிகளிலே சுவரூபம் முதலான வியவஸ்தை யில்லாததுபோல் ஈஸ்வரன் மாயாவி யானபடியினுலே, அவரால் பண்ணப்படுகின்ற சிருஷ்டிகளுக்கு முன்பின் என்கிற வியவஸ்தை யில்லே. வாரீர் விதுரரே! இந்தக் கல்பத்திலேயும், மன்வந்தரத்திலேயும், தேவாசுரர்கள் முதலான பேர்கள் நாமரூபங்களாலே சொல்லப்படுகிறவர்களே. கல்பாந்தரத்திலேயும், மன்வந்தராந்தத்திலேயும், இந்த நாமரூபங்களாலேயே சொல்லப்படுகிருர்கள்.



## பதினென்றுவது அத்தியாயம்



*பரமாணு முதலான அவயவங்களாலே காலமும், யுகமும், மன்வந்தராதிகளாலே கல்பத்தினுடைய பிரமாணுதிகளும் சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! பிறக்கின்ற வஸ்துவினுடைய காரணங்களுக்குள்ளே கடைசியாக விருக்கின்ற அவயவத்துக்கு

அவயவமாகாமலும், அனேகமா யிருந்தும் காரியாவஸ்தையை அடையாமலும், ஒன்றோடொன்று கூடாமலும், யாதொன்று இருக்கிறதோ, அது பரமாணுவென்று அறியத்தக்கது. ஏகமாய்ச் சேருகின்ற பரமாணுக்களாலே மனுஷியர்களுக்கு அவயவியென்கிற புத்தியானது உண்டாகிறது. அந்தப் பரமாணுவாதி வியவஸ்தைகளுடைய பிராப்தியினால் பிரபஞ்சத்தை அளவிடாநின்றும், பகவானுடைய சக்திசுவரூபமாகியும், மிகவும் சூக்ஷ்மமாகியும், சிருஷ்டி ஸ்திதிலயங்களுக்குக் காரணமாகியுமிராநின்ற காலமும், ஸ்தூலசூக்ஷ்ம பேதங்களாலே அறியப்படாநிற்கிறது. பிரபஞ்சத்தினுடைய பரமாணு அவஸ்தையை அனுபவிக்கிற காலமானது பரமாணுவென்று சொல்லப்படும். அந்தக் காலமானது பரம மகா காலமாகச் சொல்லப்படும். இரண்டு பரமாணுக்கள் ஒரு அணுவென்று சொல்லப்படும். மூன்று அணுக்கள் ஒரு திரிசரேணுவென்று சொல்லப்படும். கவாக்ஷத்திலே பிரவேசியாநின்ற சூரியகிரணங்களிலே அனுவர்த்தித்தும் ஆகாசத்திலே பறந்துகொண்டும், பூமியையடையாமலுமிருக்கிற அப்படிப்பட்ட மூன்று திரிசரேணுக்களை அடைகிற காலமானது திருடிகாலமென்று சொல்லப்படும். நூறு திருடி காலமானது ஒரு வேதகாலமென்று சொல்லப்படும். மூன்று வேதகாலம் கூடினால் ஒரு லவகாலமென்று சொல்லப்படும். மூன்று லவம் கூடினால் ஒரு நிமிஷமென்று சொல்லப்படும். மூன்று நிமிஷமானது ஒரு க்ஷணமென்று சொல்லப்படும். ஐந்து க்ஷணமானால் ஒரு காஷ்டையென்று சொல்லுவார்கள். பதினைந்து காஷ்டைகளை ஒரு லகுவென்று சொல்லுவார்கள். பதினைந்து லகுக்களை ஒரு நாழிகையென்று சொல்லுவார்கள். இரண்டு நாழிகையை ஒரு முகூர்த்தமென்று சொல்லுவார்கள். ஆறு நாழிகையாகட்டும் ஏழு நாழிகையாகட்டும் மனுஷியர்களுக்கு ஒரு ஜாமமாகும். ஐந்து குன்றிமணியிடை பொன்னானது ஒரு மாஷமென்று சொல்லப்படும். நாலுவிரற்கடை அளவாகப் பண்ணப்பட்டிருக்கிற நாலுமாஷப் பொன்னாலே அடியிலே பண்ணப்பட்ட ரந்திரத்தை யுடையதாகியும், ஆறுபலம் தாம்பரத்தாலே பண்ணப்பட்ட பாத்திரமானது நாழிஜலத்தினாலே அந்த ரந்திரத்தினாலே பிரவேசிக்கப்பட்ட எவ்வளவிலே முழுகிப்போகிறதோ அந்தக் காலமானது ஒரு நாழிகையென்று சொல்லப்படும். மனுஷியர்களுக்குப் பகலிலே நாலு ஜாமமும் இராத்திரியிலே நாலுஜாமமு முண்டாகும். அதுவே அகோராத்திரமாகா நிற்கிறது. பதினைந்து அகோராத்திரம் ஒரு பக்ஷமென்று சொல்லப்படும். அந்தப் பக்ஷமானது சுக்லபக்ஷம்

கிருஷ்ண பக்ஷமென்று இரண்டு விதமாகும். அந்த இரண்டு பக்ஷமும் பூர்ணமானல் மனுஷியர்களுக்கு ஒரு மாதமாகும். அந்த மாதமானது பிதுர் தேவர்களுக்கு ஒரு அகோராத்திர மென்று சொல்லப்படும். இரண்டு மாதங்கள் ஒரு ருது வென்று சொல்லப்படும். ஆறு மாதங்கள் ஒரு அயனமென்று சொல்லப்படும். அந்த அயனமானது உத்தராயனம் தக்ஷிணு யனமென்று இரண்டு விதமாகும். அந்த இரண்டு அயனங் களைச் சுவர்க்கத்திலுள்ள தேவர்களுக்கு ஒரு அகோராத்திர மென்று சொல்லுவார்கள். பன்னிரண்டு மாதங்கள் ஒரு வருஷமாகும். இப்படி நூறு வருஷமானது மனுஷியர் களுக்குப் பரமமான ஆயுசாகச் சொல்லப்படுகிறது. சந்தி ராதி கிரகங்கள், அசுவனிமுதலான நக்ஷத்திரங்கள், இவைக ளோடே கூடிக்கொண்டிருக்கிற காலசக்கரத்திலேயிரா நின்றும், காலஸ்வரூபியாகியும் ஈஸ்வரனாகியுமிருக்கிற சூரிய னானவன், பரமாணு முதலாகியும் வருஷத்தை அந்தமாக வுடையதாகியு மிருக்கிற காலத்திலே பன்னிரண்டு ராசி சுவரூபமான புவனகோசத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிறன்.

வாரீர் விதுரரே! அக்காலம் சௌரமானம், பாற்கஸ் பத்தியமானம், சாந்திரமானம் இவை முதலான பேதத்தி லே சம்வச்சரமென்றும், பரிவச்சரமென்றும், இதாவச்சர மென்றும், அனுவச்சரமென்றும், வச்சரமென்றும், இந்தப் பிரகாரம் சொல்லப்படுகின்றது. தேஜோமண்டல ரூபமான யாதொரு சூரியனானவன் சிருஷ்டிக்கத் தக்கவைகளான காரி யசக்தியைக் காலரூபமான தன்னுடைய சக்தியிலே அனே கப் பிரகாரமாகக் காரியாபி முகமாகப் பண்ணிக்கொண்டு புருஷனுக்கு மோகவிர்த்தியின் பொருட்டும் பல இச்சையை யுடைய பேர்களுக்குச் சொர்க்காதி பலத்தை யக்கிங்களாலே விஸ்தாரமாகச் செய்துகொண்டும் ஆகாசத்திலே சஞ்சரித் துக் கொண்டு மிருக்கிறனே, வருஷம் முதலான ஐந்துக்கும் பிரவர்த்தகனுக இருக்கிற அந்தச் சூரியன்பொருட்டுப் பூசை யைப் பண்ணக் கடவீர்கள் என்று சொன்ன மைத்திரேய மகாரிஷியைப் பார்த்து விதுரர் கேட்கிறர். வாரீர் மைத் திரேய மகாரிஷியே! பிதுர்க்கள், தேவர்கள், மனுஷியர்கள், இவர்க்குத் தங்கள் தங்கள் மனதிலே நூறு வருஷ மென்று கணிதமான பரமாயுசினுடைய பிரமாணமானது சொல்லப்பட்டது. பிரம்மாவுக்கு நாள்தோறும் சிருஷ் டிக்கத்தக்கதான இந்த மூன்று லோகத்தைக் காட்டிலும் வெளிப்பட்டவர்களாய் எந்தக் கியானிக ளிருக்கிறர்களோ அவர்களுடைய கதியைச் சொல்லக்கடவீர். கியானி

களான பேர்கள், யோகசித்தமாயிருக்கிற நேத்திரத்தினலே அறியக்கூடாத பதார்த்தத்தையும் அறிவார்களன்றோ வென்கிற விதுரரைப் பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறார்.

வாரீர் விதுரரே! கிருதயுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம், சந்தியை சந்தியாங்கிசம் இவைகளுடனே கூடிக்கொண்டிருக்கிற இந்த நான்கு யுகமும் பன்னீராயிரம் திவ்ய வருஷங்களையுடையனவாகச் சொல்லப்படுகின்றன. கிருதயுக சந்தியென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே நானூறு வருஷமும், சந்தியாங்கிசமென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய அந்தத்திலே நானூறுவருஷமும், இந்த எண்ணூறு வருஷங்களுக்கு மத்தியிலே கிருதயுகம் நாலாயிரம் வருஷமென்று சொல்லப்படும். திரேதாயுசந்தி யென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே முந்நூறு வருஷமும், அந்தத்திலே முந்நூறு வருஷமும், இந்த அறுநூறு வருஷங்களுக்கு மத்தியிலே திரேதாயுகம் மூவாயிரம் வருஷமென்று சொல்லப்படும். துவாபரயுக சந்தி யென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே இருநூறு வருஷமும், அந்தத்திலே இருநூறு வருஷமும் இந்த நானூறு வருஷங்களுக்கு மத்தியிலே துவாபரயுகம் இரண்டாயிரம் வருஷமென்று சொல்லப்படும். கலியுகசந்தியென்று சொல்லப்பட்ட யுகத்தினுடைய ஆதியிலே நூறுவருஷமும், அந்தத்திலே நூறுவருஷமும், இந்த இருநூறு வருஷங்களுக்கு மத்தியிலே கலியுகம் ஆயிரம் வருஷமென்று சொல்லப்படும். யுகங்களுக்குள்ளே கிருதயுகமானது, ஆதியுகமாய் உத்தமமாகியும், கலியுகமானது அந்தியமாகி லயஏதுவாகியு மிருக்கும். சந்தியைச் சந்தியாங்கிசம் இவைகள் மத்திய காலத்திலே கோபாலம்பனம் முதலான தர்மமானது பண்ணைப்படுகிறதென்று காலத்தையறிந்த பெரியவர்கள் அதை யுகமென்று சொல்லுவார்கள். கிருதயுகத்திலே தர்மமானது நான்கு பாதத்தையுடையதாய் மனுஷ்யர்களை யாஸ்ரயித் திருக்கும். அந்தத் தர்மந்தானே மற்ற யுகங்களிலே விருத்தி யடைகின்ற அதர்மமென்கிற பாதத்தினலே குறைந்து போகும். இந்த மூன்று லோகத்துக்கு வெளியிலே மகா லோக முதலாகிய பிரம்மலோகபரியந்தங்களான லோகங்க ளிலே ஆயிரம் சதுர்யுகம் ஒரு பகலும், ஆயிரம் சதுர்யுகம் ஒரு ராத்திரியுமாக இரண்டுஞ்சேர்ந்து ஒருநாளாக நிற்கும். அந்தராத்திரியிலே விசுவகர்த்தாவான பிர்ம்மாவானவர், சயனித்து நித்திரைபண்ணி அந்த ராத்திரி முடிவிலே ஆரம்பிக்கப்பட்ட லோகசிருஷ்டியானது ஒருபகல் முப்பது

நாழிகையிலே பதினாலு மனுக்களையாக்கி அனுபவித்துக் கொண்டு உண்டாகும். ஒரு மனுவந்தரம் எத்தனை யுகமென்றால் திவ்ய வருஷங்களிலே ஐயாயிரத்திருநூற்றி னாற்பத்திரண்டு வருஷமும், பத்துமாதமும், எட்டுநாளும், நாலு ஜாமமும், இரண்டு முகூர்த்தமும், காலே அரைக்காலே காணி அரைக்காணி நாழிகையாம். இவ்வளவு காலத்தோடே கூடிக்கொண்டிருக்கிற எழுபத்தொரு சதுர்யுகபரியந்தம் மனுவானவன் தன் காலத்தைப் பரிபாலனம்பண்ணுவான். மனுவந்தரங்களிலே அந்தந்த மனுக்களுடைய புத்திரர்களானபேர்கள் கிரமமாய் ராஜாவாக நிற்பார்கள். மனுக்களும், சப்தரிஷிகளும், தேவர்களும், ஏககாலத்திலேயேயிருப்பார்கள். இந்திரர்களும், அவர்களை அனுவர்த்தியாநின்ற கந்தருவர்கள் முதலான பேர்களும், ஏககாலத்திலேயே உண்டாயிருப்பார்கள். பக்ஷிமிருகாதிகள், மனுஷ்யர்கள், பிதுர்க்கள், தேவர்கள், இவர்களுக்குத் தம்தம் கர்மங்களாலே சிருஷ்டிக்கிறது பிரம்மாவுக்கு நாள்தோறும் பண்ணப்படுகிற சிருஷ்டியாக விருக்கும். மனுவந்தரங்களிலே பகவானானவர் சத்துவகுணத்தைத் தரித்துத் தம்முடைய மூர்த்திகளான மனுமுதலான பேர்களாலே பிரகாசிக்கப்பட்ட பவுருஷத்தையுடைய ஜகத்தை ரக்ஷிக்கிற பகவானானவர் சாயங்காலத்திலே தமோகுண லேசத்தை க்ரகித்து நிக்ரகிக்கப்பட்ட பவுருஷத்தை யுடையவராய்த் தம்மிடத்திலே பிரவேசிக்கின்ற பிராணிகளையுமுடையவராய் வியாபார சூனியரா யிருப்பார். இராத்திரியானது உண்டாயிருக்கையில் பூலோக முதலான மூன்று லோகங்களும் சந்திர சூரியர்களுடைய பிரகாசமில்லாதவைகளாய் வியாபாரத்திலே நின்றும் ஒழிந்திரா நின்ற அந்தப் பிரம்மாவையே அடைந்திருக்கும். பகவானுடைய சக்திசுவரூபமான சங்கருஷ்ணருடைய முகாக்கினியினாலே மூன்று லோகங்களும் தகிக்கப்பட்டுப் போகையில் பிருகுமஹாரிஷி முதலானபேர்கள் அக்கினிச் சுவாலையினாலே மிகவும் பீடிக்கப்பட்டவர்களாய் மகாலோகத்தைவிட்டு ஜனலோகத்தை அடைவார்கள். அப்போது கற்பாந்த காலத்திலே மிகவும் விர்த்தியடைந்த சமுத்திரங்களானவை மிகவுஞ் சாஞ்சல்லியத்தை யுடையனவாகி மகா வாயுக்களாலே யுண்டாக்கப்பட்ட அலைகளையுடையனவாய், இந்த மூன்று லோகத்தையுஞ் சூழ்ந்துகொள்ளும். அந்த ஜலமத்தியிலே ஸ்ரீ ஹரியானவர் அனந்தசயனராகி யோகநித்திரையினாலே மூடப்பட்ட நேத்திரங்களை யுடையவராய், ஜனலோக வாசிகளான மஹரிஷிகளினாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டுக் கொண்டிருப்பார். வாரீர் விதுரரே!

காலகதியினலே காணப்படுகின்ற அகோராத்திரம் இந்தப் பிர்ம்மாவுக்குப் பரமமான ஆயுசான நூறுவருஷமாகும். மனுஷியர்களுக்குப் போலவே அந்த ஆயுசும் க்ஷயத்தை யடையும். பிரம்மாவுக்கு நூருயுசிலே பாதி ஆயுசு பரார்த்த மென்று சொல்லப்படும். இந்தப் பிரம்மாவுக்குப் பூர்வமான பரார்த்தமானது நடந்துபோயிற்று. இரண்டாம் பரார்த்த மானது இப்போது நடக்கிறது. அந்தப் பூர்வபரார்த்தத்தி னுடைய ஆதியிலே பிரம்மமென்னப்பட்ட மகாகற்பத்திலே சப்த பிரம்மமென்று சொல்லுகிற பிரம்மாவானவர் உண்டா ஞர். அந்தப் பூர்வபரார்த்தத்தினுடைய அந்தத்திலேயே பத்மகற்பமானது உண்டாயிற்று.

ஸ்ரீ ஹரியினுடைய நாபிசரசிலிருந்து லோகாசார மானது உண்டானதைப் பத்மகற்பமென்று சொல்லுவார் கள். அது பிரம்மாவுக்கு இரண்டாம் பரார்த்தமாகும். அதி னுடைய ஆதியிலே ஸ்ரீ ஹரியானவர் வராக அவதாரஞ் செய்ததினலே, இந்தக் கற்பம் வராக கற்பமென்று சொல் லப்படுகின்றது. இரண்டு பரார்த்தமென்று பெயரை யுடைய தாகியும், பிரம்மாவுக்கு நூறு ஆயுசாகியு மிருக்கிற இந்தக் காலமானது காரியோபாதி சூனியராகியும் அனந்த ராகியும், அநாதியாகியும் ஜகத்ரூபியாகியு மிருக்கிற ஸ்ரீ ஹரிக்கு நிமிஷமென்று உபசாரமாகச் சொல்லப்படு கின்றது, பரமாணுகாலத்தை ஆதியாக வுடையதாகியும், இரண்டு பரார்த்தத்தை அந்தமாக வுடையதாகியும் இருக் கிற இந்தக் காலமானது மிகவும் சமர்த்தமாயிருந்தாலும், அந்த ஈஸ்வரனுக்குச் சமர்த்தமன்று. தேகாதிகளிலே அபிமானத்தை யுடைய பேர்களுக்கே சமர்த்த மாகும். சோடசவிகாரங்களாலே பண்ணப்பட்டும் ஒன்றுக்கொன்று பத்தத்தனை உயர்த்திகளாயிருக்கிற பிருதுவி முதலான ஏழு ஆவரணங்களாலே வெளியிலே சூழப்பட்டும், உள்ளே ஐம்பதுகோடி விஸ்தாரங்களாயிருக்கிற இந்தப் பிரம்மாண்ட மானது யாதொரு ஸ்ரீஹரியினுடைய சுவரூபத்திலே பரமா ணுப்போலே காணப்படாமலும், அநேகங்கோடி பிரம் மாண்டராசிகள் ரோமாந்தரத்திலே அடங்கினவைகளாய்க் காணப்படுகிற பரம புருஷராகியும், மகாத்துமாவாகியு மிருக்கிற அந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய சமஸ்த கார ணங்களுக்குங் காரணமான அந்தச் சுவரூபத்தை ஆதியந்த சூனியமான சாக்ஷாத் பரப்பிரம்மமென்று சொல்லுவார்கள்.

## பன்னிரண்டாவது அத்தியாயம்

மானசிகமான குமாராதிகளுடைய சிருஷ்டியானது விர்த்தியடையாமலே ஸ்திரீ புருஷ சரீரத்தினுலே பண்ணப்படுகின்ற மனுஷ சிருஷ்டியானது வர்ணிக்கப்படுகின்றது.

மைத்திரேய மகாரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! பரமாத்துமாவினுடைய காலஸ்வ ரூபமான மகிமையானது உமக்குச் சொல்லப்பட்டது. பிரம்மாவானவர் இப்பிரபஞ்சத்தை எப்படிச் சிருஷ்டித் தாரோ, அதைச் சொல்லுகிறேன் கேளும். லோககர்த்தா வான அந்தப் பிரம்மாவானவர், பிரம்மத்தினுடைய அப் பிரகாச ரூபமான அந்தகாரத்தையும், நான் என்கிற புத்தி ரூபமான மோகத்தையும், விஷய போகங்களிலே இச்சாரூப மான மகாமோகத்தையும் சிருஷ்டித்து, மிகவும் பாபிஷ்ட மான அந்த சிருஷ்டியைப் பார்த்துத் தன்னை மிகவுங் கொண்டாடிக்கொள்ளாமற் போனர். பிற்பாடு பகவானு டைய கியானத்தினுலே மிகவும் பரிசுத்தமான மனதினுலே ஜனகரையும், சனந்தரையும், சனதசுஜாரையும், சனற்குமா ரையும், கிரியாசூனியர்களாகியும், ஜிதேந்திரியர்களாகியும், ஊர்த்துவரேதசுக்களாகியு மிருக்கிற முனிவர்களைச் சிருஷ் டித்து, அந்த முனிவர்களைப் பார்த்து, வாருங்கள் புத்திரர்களே! பிரஜைகளைச் சிருஷ்டிக்கக் கடவீர்களென்று சொல்லாநின்ற அந்தப் பிரம்மாவினுடைய ஆக்கினையை மோக்ஷசாதனமான தர்மத்தை யுடையவர்களாகியும், வாசு தேவ பாராயணர்களாகியுமிருக்கிற அம்முனிவர்கள் ஒப்பா மற் போனர்கள். அந்தப் பிரம்மாவானவர் இந்தப்பிரகாரம் தம்முடைய ஆக்கினையை அங்கீகரியாமலிருக்கிற அந்தப் புத்திரர்களாலே அவமானம் பண்ணப்பட்டவராய், அத னுலே மிகவும் சகிக்கக்கூடாமலிருக்கிற கோபத்தை அடக்கு தற்கு ஆரம்பித்து, அது புத்தியினுலே மிகவும் அடக்கப் பட்டிருந்தாலும், பிரம்மாவினுடைய புருவமத்தியினின்றும் நீலலோகிதனென்கிற குமாரனுக ஆவிர்ப்பவித்தது, தேவர் களுக்கு முன்னே பிறந்தவராகியும், பகவானுகியுமிருக்கிற அந்த ருத்திரனுனவர் மிகவும் ரோதனம்பண்ணிக்கொண்டு பிரம்மாவை நோக்கி வாரீர் ஜகத்குருவே! எனக்கு நாமதே யங்களையும், ஸ்தானங்களையும் கற்பிக்கக்கடவீரென்று கேட் டுக்கொண்ட அந்த உருத்திரனைப் பார்த்து மனேக்கியமான ஒரு வார்த்தை சொல்லுகின்ருர்.

வாராய் சுரசிரேஷ்டனே! நீ ரோதனம் பண்ணவேண்டாம். உனக்கு அப்படியே நாமங்களையும், ஸ்தானங்களையும் கற்பிக்கிறேன். நீ மிகவும் பரபரப்பையுடைய பாலனானவன் போல் ரோதனம் பண்ணினபடியினாலே பிரஜைகள் உன்னை ருத்திரனென்று சொல்லப்போகிறார்கள். இருதயம், இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி, சூரியன், சந்திரன், தமசு இவைகள் உனக்கு ஸ்தானங்களாகப் பூர்வமே நம்மாலே கற்பிக்கப்பட்டிருக்கின்றன. மன்னியுவென்றும், மனுவென்றும், மகா காளனென்றும், மகானென்றும், பீமனென்றும், ரிஷபத்துவஜனென்றும், ஊர்த்தரேதரென்றும், பவனென்றும், காலனென்றும், வாமதேவனென்றும், திருதவிருதனென்றும், இந்த நாமங்களையுடையவனாய்ப் புத்தியென்றும், திருதியென்றும், ரசானையென்றும், உமையென்றும், நியத்தென்றும், சற்பியென்றும், இளையென்றும், அம்பிகையென்றும், இளாவதியென்றும், சுதையென்றும், தீக்ஷையென்றும், ருத்திராணியென்றும், பெயருற்றவர், உமக்கு ஸ்திரீகளாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த ஸ்திரீகளோடே கூடினவனாய்ப் பிரஜைகளுக்குப் பதியாக நிற்கிறபடியினாலே பிரஜைகளைச் சிருஷ்டிக்கக் கடவாயென்று இந்தப்பிரகாரம் பிதாவான பிரம்மாவினாலே ஆக்கியாபிக்கப்பட்டவராய், அந்த ருத்திரனானவர், தம்முடைய பலம் ஆகிருதி சுபாவம், இதற்கு அனுரூபமாகத் தமக்குச் சமானர்களாயிருக்கிற பிரஜைகளைச் சிருஷ்டித்தார். ருத்திரராலே சிருஷ்டிக்கப்பட்டவர்களாகியும் ஜகத்தை நாலுபக்கமும் ஆக்கிரமியா நின்றுமிருக்கிற ருத்திரர்களுடைய கூட்டங்களைப் பார்த்துப் பிரம்மாவானவர் சங்கையுடையவராய் ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் சுரோத்தமனே! இப்படிப்பட்ட பிரஜைகளைச் சிருஷ்டி பண்ணினது போதும். உன்னாலே சிருஷ்டிக்கப்பட்ட இவர்கள் என்னோடேகூட லோகங்களைத் தகிக்கிறவர்கள்போல் மிகவும் சகிக்கக்கூடாதவர்களாகியு மிருக்கிற இப்படிப்பட்ட பிரஜைகளாலே திக்குகள் மிகவும் சந்தாபத்தை யடைந்தன. உனக்கு மங்களமுண்டாகக் கடவது. சமஸ்த பிராணிகளுக்கும் சுபகரமான தவசைப்பண்ணிப் பூர்வ கல்பத்திலே யிருந்த பிராணிகளைப்போலவே நீ இந்தப் பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கப் போகிறாய். புருஷனானவன் தவசினாலேயே பரஞ்சோதி ஸ்வரூபராகியும், சர்வ பிராணிகளுடைய இருதயத்திலே வாசம்பண்ணுகிற ஸ்ரீ ஹரியை ஆயாசமின்றியே யடைகிறான். ஆகையால் அப்படிப்பட்ட தவத்தைப்பண்ணக் கடவாயென்று பிரம்மாவி

ஞலே யாக்கியாபிக்கப்பட்டவராய், அந்த ருத்திரரானவர் அப்படியே செய்கிறேனென்று அங்கீகரித்து, வாணிபதி யான அந்தப்பிரம்மாவைப் பிரதக்ஷணம்பண்ணி அவரிடத்தி லனுமதி பெற்றுக்கொண்டு, தவத்தின்பொருட்டு வனத்தை யடைந்தார். பிற்பாடு ஸ்ரீ பகவானுடைய சக்திகளோடே கூடிக்கொண்டிருக்கிற அந்தப் பிர்ம்மாவுக்கு லோகசிருஷ் டிக்கு ஏதுக்களான மரீசி, அத்திரி, ஆங்கிரசு, புலஸ் தியர், புலகர், கிருது, பிருகு, வசிஷ்டர், தக்ஷன், நாரதர் இந்தப் பதின்மரும் பிறந்தார்கள். நாரதமுனி யானவர் அந்தப் பிரம்மாவினுடைய மடியினின்றும் பிறந்தார். தக்ஷப்பிரஜாபதியானவர் கட்டைவிரலினின்றும் பிறந்தார். வசிஷ்டர் பிராணத்தினின்றும் பிறந்தார். பிருகு மகாரிஷி தொக்கினின்றும் பிறந்தார். கிருதுவானவர் கையி னின்றும் பிறந்தார். புலகர் நாபியினின்றும் பிறந்தார். புலஸ்தியரிஷி காதினின்றும் பிறந்தார். ஆங்கிரசு முகத்தி னின்றும் பிறந்தார். அத்திரிமகாரிஷி நேத்திரத்தினின்றும் பிறந்தார். மரீசிரிஷியானவர் மனதினின்றும் பிறந்தார். யாதொரு தர்மத்திலே சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணர் பிரசன் னரா யிருக்கிறாரோ அந்தத் தர்மமானது பிரம்மாவினுடைய வலது ஸ்தனத்தினின்றும் உண்டாயிற்று. யாதொரு அதர் மத்திலே லோகபயங்கரமான மிருத்தியு உண்டாயிற்றோ அந்த அதர்மமானது பிரம்மாவினுடைய முதுகினின்றும் உண்டாயிற்று. இருதயத்தினின்று காமமும், புருவங்களி னின்று கோபமும், அதரத்தினின்று லோபமும், முகத்தி னின்று வாக்கும், சிசனத்தினின்று சமுத்திரங்களும், சாயையினின்று தேவஹூதிக்குப் பதியான கர்த்தமப் பிரஜா பதியு முண்டானார்கள். விசுவகர்த்தாவான அந்தப் பிரம் மாவினுடைய தேகத்தினின்றும், மனதினின்றும், இந்தப் பிரபஞ்சமானது இத்தப் பிரகாரம் உண்டாயிற்று.

வாரீர் விதுரரே! அந்தப் பிரம்மாவானவர் தம்முடைய பெண்ணாகியும், பாலையாகியும், இச்சையில்லாதவளாகியு மிருக்கிற வாக்குத்தேவியைப் பார்த்துக் காமத்தை யுடையவ ராய் இச்சித்தாரென்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். தம் முடைய புத்திரர்களாகியும் மரீசி, பிரஜாபதி முதலாகியு மிருக்கிற அந்த ரிஷிகள், அதர்மத்தைச் செய்யப் புத்தியை யுடையவரா யிருக்கிற பிதாவான அந்தப் பிரம்மாவைப் பார்த்து விசுவாசத்தினாலே இந்தப்பிரகாரம் தர்மத்தை யறி வித்தார்கள். வாரீர் ஜகத்கர்த்தாவே! உம்மைக்காட்டிலும் பூர்வம் உண்டாயிருந்த பிரம்மாக்களாலேயும் இப்படிப்பட்ட

அதர்மமானது பண்ணப்படவில்லை. இனிமேல் யாவர் உண்டாகப்போகிறார்களோ அவர்களும் இப்படிப்பட்ட அதர்மத்தைப் பண்ணப்போகிறதில்லை. சமர்த்தனாகவிருக்கிற எந்தப் புருஷன் தான் காமனை நிக்கிரகியாமல் தன்னுடைய பெண்ணைத்தானே யிச்சித்தலையடைவான். மகா தேஜசுவிகளாயிருக்கிற மகாபுருஷர்களுக்கும் இப்படிப்பட்ட காரியமானது கீர்த்திப் பிரதமாக மாட்டாது. யாதொருவருடைய நடத்தையை யனுவர்த்தியாநின்ற லோகமானது க்ஷேமத்தையடைகிறதோ அப்படிப்பட்ட மகாபுருஷர்கள் இப்படிப்பட்ட காரியத்தைப் பண்ணுகிறது யுக்தமன்று. பகவானானவர் தம்முடைய பிரகாசத்தினாலே தம்மிடத்திலேயே யிராநின்ற இந்தப் பிரபஞ்சத்தைப் பிரகாசம் பண்ணுகிறாரோ, அந்தப் பகவானானவர் இந்தத் தர்மத்தை ரக்ஷிக்கிறதற்கு யோக்கியராகவு மிருக்கிறார். அந்தப் பகவான் பொருட்டுப் பிரணமம் பண்ணுகிறோமென்று சொல்லுகிற தம்முடைய புத்திரர்கள் வார்த்தையைக் கேட்டுப் பிரம்மாவானவர் மிகவும் லஜ்ஜையை யுடையவராகி அப்போது அந்தச் சரீரத்தை விட்டுவிட்டார்.

திக்குகளானவை கோரரூபமான அந்தச் சரீரத்தைக் கிரகித்தன. அந்தச்சரீர மெதுவென்றால், மூடுபனியினாலே யாதொரு இருளுண்டாகிறதோ, அதுவே அந்தச் சரீரமென்று சொல்லுவார்கள். பிற்பாடு இந்த ஜனங்களைப் பூர்வம்போல எந்தப் பிரகாரம் படைத்தேனோ அந்தப்பிரகாரமாகச் சிருஷ்டிக்கப் போகிறேனென்று தியானம் பண்ணாநின்ற அந்தப் பிரம்மாவினுடைய நான்கு முகத்தினின்றும் நான்கு வேதங்களும், யக்கியங்களுடைய விஸ்தாரங்களும், உபவேதங்களும், நியாயங்களும், இவைகளோடே கூடப் பிரம்மசரியாதி ஆஸ்ரமங்களும், அவைகளுடைய விர்த்திகளும், தபசு, சவுசம், பூததயை, சத்தியவசனம் என்னப்பட்ட தர்மத்தினுடைய நாலுபாதங்களு முண்டாயினவென்று சொல்லாநின்ற மைத்திரேய மகாரிஷியைப் பார்த்து விதுரானவர், வாரீர் மைத்திரேயமகாரிஷியே! தக்ஷன் முதலான பிரஜாபதிகளுக்குப் பிரபுவான அந்தப் பிரம்மாவானவர், வேத முதலானவைகளை எவ்வாறு சிருஷ்டித்தார். அதையெனக்குச் சொல்லக்கடவீரென்று பிரார்த்தியாநின்ற விதுரரைப்பார்த்து மைத்திரேய மகாரிஷியானவர் சொல்லுகிறார். வாரீர் விதுரரே! அந்தப் பிரம்மாவானவர் தர்ம முதலான முகங்களாலே நான்கு வேதங்களையும் நான்கு குருக்களுடைய கர்மமகச்!சிருஷ்டித்தார். அதெப்படியெனில், ருக்கு

வேதத்தை சாஸ்திர மென்னப்பட்ட ஹோதாவினுடைய கர்மமாகவும், யஜுர்வேதத்தைத் திறஜியை என்னப்பட்ட அத்துவரியுவினுடைய கர்மமாகவும், சாமவேதத்தை ஸ்துதி ஸ்தோத்ரம் என்னப்பட்ட உத்காதாவினுடைய கர்மமாக வும், அதர்வணவேதத்தைப் பிராசிதமென்னப்பட்ட பிரம் மாவினுடைய கர்மமாகவும், இந்தப்பிரகாரம் கிரமமாக நான்கு வேதங்களையும் பண்ணி, மறுபடியும் கிழக்கு முகத்தி னாலே ஆயுர்வேதத்தையும், தக்ஷண முகத்தினாலே தனுர் வேதத்தையும், மேற்குமுகத்தினாலே காந்தர்வ வேதத்தை யும், உத்தரமுகத்தினாலே விசுவகர்மா சாஸ்திரவேதத்தை யும், சமஸ்த முகங்களினின்றும், இதிஹாச புராணமென்னப் பட்ட ஐந்தாம்வேதத்தையும், பூர்வமுகத்தினின்று ஷோடசி யென்றும், உக்தியமென்றும் சொல்லப்பட்ட கர்மங்களையும், தக்ஷணமுகத்தினாலே சயனம், அக்கினிஷ்டோம மென்னப் பட்ட கர்மங்களையும், பச்சிமமுகத்தினாலே அப்தோரியாமம் அதிராத்திர மென்னப்பட்ட கர்மங்களையும், உத்தரமுகத்தி னாலே வாசபேயம், கோசவமென்னப்பட்ட கர்மங்களையும், சவுசம், பூதாபயதானம், தபசு, சத்தியமென்கிற தர்மத்தினு டைய நான்கு பாதங்களையும், ஆஸ்ரமங்களையும், அவற்றின் விர்த்திகளையும், உபநயனம் ஆரம்பித்துச் செய்யத்தக்கதான பிரம்மசரியத்தையும், பிராஜாபத்திய விரதத்தையும், நைஷ்டி கப் பிரம்மசரியத்தையும், கிருகஸ்தாச்ரமத்திலே நிஷித்த மன்றியிலே யிருக்கிற கிருஷி முதலான விர்த்தியையும், யாசன முதலான விர்த்தியையும், யாசனை செய்கையில் சம்பவியா நின்ற விர்த்தியையும், க்ஷேத்திரத்திலே யுதிர் ந்துபோன தானியகணங்களை பொருக்குகிற ரூபமான சிலோஞ்ச விர்த்தியையும், வானப்பிரஸ்தாச்ரமத்தையும், நான்கு விதமாகச் சிருஷ்டித்தார். அதெப்படியெனில், உழுது பயிரிடாமல் தானே விளையாநின்ற தானியங் களாலே ஜீவனம் பண்ணுகின்ற வைகானசர்களும், புதிய தானியம் அகப்பட்டவுடனே பூர்வம் சேர்ந்திருந்த தானி யத்தை விட்டுவிடுகிற பேர்களான வாலகில்லியர்களும், பொழுதுவிடிகையி லெழுந்திருந்து எந்தத் திக்கைப் பார்க் கிறானோ அந்தத் திக்கிலேயே சம்பாதிக்கப்பட்ட பல முதலா னவைகளாலே ஜீவனம் பண்ணுகின்ற ஔதும்பார்களும், தானே மரத்தினின்றும் விழாநின்ற பல முதலானவை களாலே ஜீவனம் பண்ணுகின்ற ஆன்மாக்களும் இந்தப் பிர காரம் நான்குவிதமாக வானப்பிரஸ்தர்கள் சிருஷ்டிக்கப்பட் டார்கள். சன்னியாசாச்சிரமத்திலேயும் தன்னுடைய ஆச்ரம தர்மத்தையே பிரதானமாகவுடைய குடீசகனும், கர்மத்தை

யப்பிரதானமாகவெண்ணி கியானத்தையே பிரதானமாக வுடையவனான ஸநதனும், கியானப்பியாசத்திலே நிஷ்டையையுடையவனான அப்சனும், தத்துவக்கியானத்தை யுடையவனான நிஷக்கிரியனும், இந்தப்பிரகாரம் நான்குவிதமாகச் சிருஷ்டிக்கப்பட்டார்கள். ஆத்துமா அநாத்தும விவேகரூபமான மோக்ஷத்தைப் பலமாகவுடைய வித்தையும், சொர்க்காதி பலத்தை யுடையதான திரவியத்தையும், கிருஷியாதிரூபமாகியும், ஜீவனஹேதுவாகியு மிருக்கிற விர்த்தியும், அர்த்தபரமான தண்டநீதி வித்தையும், இந்தப் பிரகாரமே வியாகிருதிகளும், பிரணவமும், அந்த பிரம்மாவினுடைய இருதய ஆகாசத்தினின்றும் உண்டாயின. அவருடைய ரோமங்களினின்றும், உஷ்ணிகு என்னப்பட்ட சந்தசும், தொக்கினின்றும் காயத்திரி என்னப்பட்ட சந்தசும், மாம்சத்தினின்றும் திருஷ்டுபு என்னப்பட்ட சந்தசும், பித்தநாடியினின்றும் அனுஷ்டுபு என்னப்பட்ட சந்தசும், அஸ்தியினின்றும் ஜகதி என்னப்பட்ட சந்தசும், மச்சை என்னப்பட்ட சாரத்தினின்றும் பங்கிதி என்னப்பட்ட சந்தசும், பிராணனில் நின்றும் பிரகிருதி என்னப்பட்ட சந்தசும் உண்டாயின.

அந்தப் பிரம்மாவினுடைய ஜீவனானது ககார முதலாய் இருபத்தைந்து அக்ஷரங்களாகியும், தேகமானது அகாரமுதலான வர்ணங்களாகியும், இந்திரியங்களானவை ச-ஷ-ஸ-ஹ என்று நான்கு வர்ணங்களாகியும், பலமானது ய-ர-ல-வ என்று நான்கு வர்ணங்களாகியும், நிஷாத முதலான சப்த சுரங்களும் அவருடைய லீலையினாலேயும் உண்டாயின. வாரீர் விதுரரே! வியக்தங்களான அக்ஷரங்களையும், அவ்வியக்தமான பிரணவத்தையும், சுவரூபமாகவுடையவராகியும், சப்தப்பிரம்ம ரூபியாகியுமிருக்கிற அந்தப் பிரம்மாவுக்குப் பரமாத்துமாவானவர், பரிபூரணமான பிரம்ம சுவரூபராகியும், இந்திராதிரூபமான நானாசக்திகளை யுடையவராகியும் பிரகாசித்தார். பின்பு அந்தப் பிரம்மாவானவர் வேறொரு சரீரத்தைக் கிரகித்துச் சிருஷ்டியின் பொருட்டு, மனதைத் தரித்து மகாவீரியத்தை யுடையவர்களான ரிஷிஸ்வரர்களுடைய விஸ்தரிக்கப்படாமலிருக்கிற சிருஷ்டியையும் அறிந்து, இருதயத்திலே மறுபடியுஞ் சிந்தித்தார். அதெப்படியென்றால், இது மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. நித்தியமாகச் சிருஷ்டி வியாபாரத்தையுடையவனாயிருந்தாலும் எனக்குப் பிரஜைகள் விர்த்தியடையவில்லை. இந்த விஷயத்திலே தெய்வமானது பிரதிபந்தமாக நிற்கிறது. இது நிச்

சயமென்று இந்தப் பிரகாரம் யுகத்தைச் செய்யாநின்றும் தெய்வ அனுகூலத்தையும் அபேக்ஷியா நின்றுமிருக்கிற அந்தப் பிரம்மாவினுடைய ரூபமானது இரண்டு பிரகாரமாக ஆயிற்று. அந்த இரண்டு ரூபங்களினின்றும் ஆணும் பெண்ணுமாய் இரண்டு சிசுக்களுண்டாயின. அந்த சிசுக்களிலே புருஷ சிசுவானது திரிலோகபதியான சுவாயம்புமனுவாயிற்று. அந்த ஸ்திரீ சிசுவானது சதரூபையென்று பெயரையுடையவளாய் அந்தமனுவுக்கு ஸ்திரீயாக ஆயிற்று. அப்போது ஸ்திரீபுருஷர்களுடைய தர்மத்தினாலே பிரஜைகள் விர்த்தியடைந்தனர். அதெப்படியென்றால், வாரீர் விதுரரே! அந்தச் சுவாயம்பு மனுவானவன் சதரூபை என்னப்பட்ட ஸ்திரீயினிடத்திலே ஐந்து பிள்ளைகளைப் பெற்றான். பிரியவிரதன், உத்தான பாதனென்று இரண்டு பிள்ளைகளையும், ஆஹூதியென்றும், தேவஹூதியென்றும், பிரசூதியென்றும், மூன்று பெண்களையும், இந்த ஐந்துபேரையும் பெற்றான். ஆஹூதி என்கிற பெண்ணை ருசுப்பிரஜாபதிக்கும், தேவஹூதியை கர்த்தமப்பிரஜாபதிக்கும், பிரசூதியைத் தக்ஷப்பிரஜாபதிக்கும் கொடுத்தான். அவர்களுடைய சந்ததிகளாலே இந்த ஜகம் பூரிக்கப்படாதாயிற்று.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



மனுப்பிரஜாபதி பிரஜைகளைச் சிருஷ்டிக்க இச்சிக்கையில், மகாஜலத்திலே முழுகிப்போன பூமியை உத்தாரணம் பண்ணுகைக்கு அவதரித்த வராக ரூபியான சுவாமியினாலே பண்ணப்பட்ட தைத்திய சங்காரமானது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகருடைய வாக்கியம்.

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! இந்தப் பிரகாரம் சொல்லுகின்ற மைத்திரேய மகாரிஷியினுடைய வசனத்தைக் கேட்டு வாசுதேவருடைய கதையிலே மிகவும் ஆதரவையுடையவரான அந்த விதுரரானவர் மறுபடியும் பிரஸ்னம் பண்ணினார். வாரீர் மைத்திரேய மகாரிஷியே! பிரம்மனுக்கு இஷ்டபுத்திரனாகியும், திரிலோகபதியாகியுமிருக்கிற அந்தச் சுவாயம்பு மனுவானவன், அனுகூலையான பத்தினியை அடைந்த பிற்பாடு என்ன பண்ணினான். வாரீர் மகாரிஷியே! அந்தச் சுவாயம்பு மனுவானவன், விசுவசேனரையே ஆச்ரய

மாக வுடையவனன்றே. ஆகையினாலே ஆதிராஜனாகியும் மகானுபாவனாகியு மிருக்கிற அந்தச் சுவாயம்பு மனுவினுடைய சரித்திரத்தைக் கேட்க சிரத்தையை யுடையவனை என் பொருட்டுச் சொல்லக் கடவீர். எவர்களுடைய இருதயங்களிலே ஸ்ரீ முகுந்தருடைய பாதாரவிந்தமானது நித்தியமாக விருக்கிறதோ ? அந்த மகாபாகவதர்களுடைய குணங்களைக் கேள்விசெய்கிறது யாதொன்றுண்டோ? இதுவே புருஷர்களுக்கு வெகுகாலம் கிரமப்பட்டு அறியப்படா நின்ற வேதாந்தக் கியானத்தினையுடைய மகாக்கியானிகளாலே சிலாகிக்கப்படா நிற்கிறதன்றோ? வாராய் மகாராஜனே ! இந்தப் பிரகாரம் சொல்லா நின்றும் மிகவும் வணக்கத்தை யுடையவராகியும் சஹஸ்ரசிரசுகளை யுடையவரான ஸ்ரீ கிருஷ்ணருடைய திருவடிகளை இருதயத்திலே தரிக்கப்பெற்று மிருக்கிற விதுரரைப் பார்த்துப் பகவானுடைய கதையிலே பிரவர்த்திக்கப் பட்டவராகியும் புளகாங்கித தேகராகியுமிருக்கிற அந்த மைத்திரேய மகாரிஷியானவர் ஒரு வார்த்தை சொன்னார். வாரீர் விதுரரே ! தன்னுடைய பாரியையோடேகூடப் பிரம்மாவி னிடத்தினின்றும் உண்டாகா நின்ற சுவாயம்பு மனுவானவன் அஞ்சலிபந்தத்துடன் சாஷ்டாங்கப் பிரணாமம் பண்ணிக்கொண்டு அந்தப் பிரம்மாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறான்.

வாரீர் பிரபுவே ! நீர் சமஸ்த பிராணிகளுக்கும் பிதாவாக விருக்கிறீர். உம்முடைய பிரஜைகளான எங்களுக்கு உம்முடைய சிசுருஷையானது எந்தக் கர்மத்தினாலே உண்டாகுமோ, அந்தக் கர்மத்தை எங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்கின்ற சுவாயம்பு மனுவைப் பார்த்துப் பிரம்மாவானவர், வாராய் குழந்தாய் பூபதியே! உனக்கு மங்கள முண்டாகக்கடவது. நீ கபடமில்லாம லிருக்கிற மனதினாலே என்னை ரக்ஷிக்கக்கடவீரென்று சுவயமாகவே பிரார்த்திக்கப்பட்ட படியினாலே உன்பொருட்டு மிகவுஞ் சந்துஷ்டனானேன். பிரமாதமில்லாதவர் களாகியும், துவேஷ மில்லாதவர்களாகியு மிருக்கிற புத்திரர்களாலே யதாசக்தி பிதாவினுடைய ஆக்ஞையானது ஆதரவுடனேகூடக் கிரகிக்கப்படுகிறது. இதுவே புத்திரர்களாலே பிதாவினிடத்திலே பண்ணப்படுகிற பூசையாகிறது. ஆகையினாலே நீ இந்த ஸ்திரீயினிடத்திலே உனக்குச் சமானர்களாயிருக்கிற புத்திரர்களைப் பிறப்பித்துத் தர்ம மார்க்கமாகப் பூமியைப் பரிபாலனம் பண்ணக்கடவாய். புருஷோத்தமரான ஸ்ரீ ஹரியையும் யக்கியங்களாலே யஜிக்கக்கடவாய். வாராய் ராஜனே !

பிரஜா சம்ரக்ஷணத்தினாலேயே என் பொருட்டுப் பரமமான சிசுரூஷையானது பண்ணப்பட்டதாக விருக்கும். பிரஜைகளை ரக்ஷிக்கின்றவனுக்குப் பகவானான ரிஷிகேசரும் பிரசன்னராகவிருப்பார். யக்கியமூர்த்தியாகியும், ஸநாதனராகியு மிருக்கிற பகவானானவர் யாதொருவருக்குச் சந்துஷ்டராகவில்லையோ ? அவர்களுடைய சிரமமானது வியர்த்தமானதா யிருக்கும் என்று சொல்லுகின்ற பிரம்மதேவரைச் சுவாயம்பு மனுவானவன் பார்த்து, வாரீர் பாபனாசரே ! உம்முடைய ஆக்கினையை நான் பரிபாலனம் பண்ணப்போகிறேன். பிரஜைகளுக்கும் எனக்கும் இருக்கத்தக்க ஸ்தானத்தைக் காண்பித்துக் கட்டளை பண்ணக்கடவீர். சகலப் பிராணிகளுக்கும் இருப்பிடமான பூமியானது பிரளயகால ஜலத்திலே முழுகி யிருக்கிறதன்றோ ? இந்தப் பூதேவியினுடைய எழுச்சியில் யத்தனமானது பண்ணவேண்டியது என்று சொல்லுகின்ற சுவாயம்பு மனுவினுடைய வார்த்தையைக் கேட்ட பிரம்மாவானவர், பூர்வம் பாலனம் பண்ணப்பட்டிருந்த பூமி திரும்பவும் அகாரணமாக முழுகியிருக்கின்றதைப் பார்த்து இந்தப் பூமியை எந்தப்பிரகாரம் உத்தாரணம் பண்ணப்போகிறேனென்று வெகுகாலம் சிந்தித்து, ஈஸ்வரனாலே சிருஷ்டி காரியத்திலே ஆக்கியாபிக்கப் பட்டிருக்கிற நம்மாலே இப்போது இந்தவிஷயத்திலே என்னசெய்யத் தக்கது ? நான் யாதொரு பகவானுடைய இருதயத்தினின்றும் உண்டானேனோ அந்த ஈஸ்வரனானவன் என்னுடைய மனவெண்ணத்தைப் பூர்த்திபண்ணக் கடவன் என்று தியானம் பண்ணுகிற பிரம்மாவினுடைய நாசிகாரந்திரத்தி னின்றும் அந்த க்ஷணத்திலே அங்குஷ்டப் பிரமாணமான ஒருவராக சிசுவானது வெளியிலே புறப்பட்டு ஒரு க்ஷணத்திலே மகாகஜப் பிரமாணமாக விர்த்தியடைந்தது.

இப்படி மிகவும் ஆச்சரியகரமாயிருக்கிற வராகரூபத்தை அந்தப் பிரம்மாவானவர் மரீசி பிரஜாபதி, இவர் முதலான புத்திரர்களோடேயும், சநத்குமாரர் முதலான யோகீஸ்வரர்களோடேயும், மனுவோடேயும் கூடவிருந்து பார்த்து, இதென்ன ஆச்சரியம் ! வராகமென்கிற வியாஜத்தையுடைய இந்தப் பிராணியானது நம்முடைய நாசிகையிலிருந்தும் உண்டாய் அங்குஷ்டமுனைப் பிரமாணமாகக் காணப்பட்டு, ஒரு க்ஷணத்திலே பெரிய பர்வத சிகரத்திற்குச் சமானமாக ஆய்விட்டது. இந்த வராகமாக யக்கியமூர்த்தியான அந்தப் பகவான் தம்முடைய நிஜரூபத்தை மறந்து என்னுடைய மனதைத் துக்கிப்பிக்க ஆவிர்ப்பவித்தாரோ ? என்று இந்தப்

பிரகாரம் அந்தப் பிரம்மாவானவர் சிந்தித்துக்கொண்டிருக் கையில், பர்வதத்திற்குச் சமானமாகியும் யக்கிய மூர்த்தி யாகியுமிருக்கிற அந்தப் பகவானானவர் கர்ச்சித்தார், அந் தக் கர்ச்சனையினாலே பிரம்மாவும், சநத்குமாரர் முதலான யோகிகளும், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் இவைகளிலே வாஸம்பண்ணுகிற மகாரிஷிகளான பேர்க ளும், மாயாமயமான அந்த வராகத்தைப் பூர்வம் பகவா னென்று நிச்சயமில்லாமல் உண்டாயிருந்த தங்களுடைய துக் கத்தைப் போக்கடியாநின்ற அந்தக் கர்ச்சனத்தைக் கேட்டு மிகவும் சந்துஷ்டர்களாகிப் பவித்திரங்களான ருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதங்களாலே ஸ்தோத்திரம் பண்ணி னார்கள்.

வேதங்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்படுகின்ற அந் தப் பகவானானவர், தம்முடைய குணங்களைப் புகழ்கின்றதைக் கேட்டுப், பிரம்மா முதலான தேவர்களுக்கு மங்களத்தின் பொருட்டுத் திரும்பவும் கர்ச்சித்துக் கஜேந்திரனுடைய லீலை போன்ற லீலையையுடையவராகி, உயரவெடுக்கப்பட்ட வாலை யுடையவராகி, ஆகாசத்திலே சஞ்சரியாநின்ற திருஷ்டாத்திர ராகி, உதறுகின்ற பிடரிமயிர்களை யுடையவராகித், தீக்ஷணங்க ளான ரோமங்களையுடைய சருமத்தையுடையவராகி, மேகங் களை அடிக்கப்பட்ட குளம்புகளை யுடையவராகி, மிகவும் வெளுத்திருக்கிற கோரப்பல்லுகளை யுடையவராகிப், பொறி போலொத்த நேத்திரங்களுடன் பூமியை உத்தாரணம் பண்ணுகின்ற அந்த வராகமூர்த்தியானவர், தாம் யக்கியமூர்த் தியா யிருந்தாலும் பசுஜாதியைப்போல் கிராணேந்திரி யத்தினாலே பூமியினுடைய மார்க்கத்தை மோந்து மகா கோரமான கோரப்பற்களை நீட்டினவராய்க் கிருபாபூரணங்க ளான நேத்திரங்களாலே ஸ்தோத்திரம் பண்ணுகின்ற ரிஷி களைப் பார்த்துக்கொண்டு ஜலத்திலே பிரவேசித்தார்.

அப்போது அச் சமுத்திரவொலி யெப்படியிருந்த தென்றால், வச்சிரமயமான பர்வதம்போன்ற சரீரம் வகித்த அப்பகவானுடைய பிரவேசத்தினால் உண்டான வேகத் தினாலே பிறக்கப்பட்ட குக்ஷியையுடையதாகி மிகவும் சப்தித்தும் வெகுதூரம் பரவிய தீர்த்தங்களாகி யிருக் கிற அலைகளாகிற கைகளோடு கூடி மிகவும் துக்காக் கிராந்தமாயு மிருக்கிற அச்சமுத்திரமானது எக்கியேசுவரனை நோக்கி, என்னைப் பிளந்து போடாமல் ரக்ஷிக்கக்கட வீரென்று கூப்பிட்டதுபோலிருந்தது. அப்போது பக

வானனவர், நாவிதன் சுரிகைபோல் மகா கூர்மையான குளம்புகளாலே கரையில்லாத அந்த ஜலத்தைப் பிளந்து, உள்ளே பிரவேசித்துப் பிரளய காலத்தில் சகல ஜீவர்களுக்கும் ஆதாரமாகத் தம்முடைய குக்ஷியிடந்தரித்திருந்த பூமியைப் பாதாளத்திலே கண்டு, தம்முடைய கோரப்பற்களினலே அப்பூமியையெடுத்துப் பாதாளத்தினின்றும் வெளியிலே புறப்பட்டு விளங்கினர் அப்போது அந்த ஜலத்தினின்றும் தண்டையெடுத்துக்கொண்டு எதிராகவந்து தடுக்கின்ற ஆதிதயித்தியனுகியும், சகிக்கக்கூடாத பராக்கிரமத்தையுடையவனுகியுமிருக்கிற இரணியாக்ஷனே, சக்கரம்போல் ஜ்வலிக்கும் கடுங்கோபத்தையுடைய அந்தப் பகவானனவர், லீலையாகச் சிம்மமானது யானையைச் சங்கரிப்பதுபோல் சங்கரித்துக் கஜேந்திரமானது மலையடிவாரப் பூமியை லீலையாகப் பிளந்து பொன் முதலிய தாதுக்களாலே சிவந்துபோன கண்டஸ்தலமு முகமு முடையதுபோல், அவனுடைய இரத்தமயமாகிய சேற்றினலே தம்முடைய நீலவர்ணமான திருமேனியில் பூசப்பட்டு, வெளுத்த தந்தத்தினுடைய நுனியினலே லீலையாய்ப் பூமியை உத்தாரணம் பண்ணினர். இப்படி உத்தாரணம் பண்ணின ஈசனேப்பார்த்துப் பிரம்மா முதலான சமஸ்தமான ரிஷிகளும் அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு வேதவாக்கியங்களுக்குச் சமானங்களான ஸ்தோத்திரங்களாலே ஸ்துதிபண்ணினர்கள்.

### பிரம்மா முதலாயினேர் வராகமூர்த்தியைத் துதித்தல்.

வாரீர் தயா நிதியே! ஒருவராலும் ஜெயிக்கப்படாதவராயும், யக்கியங்களாலே ஆராதிக்கப்படுகிறவராயும், தேவஸ்வரூபான திருமேனியை உதறுகின்றவராயும், ரோமங்களுடைய பள்ளங்களிலே சமஸ்த சமுத்திரங்களும் அடங்கிப் போகும்படியான திருமேனியையுடைய வராகரூபியான உமக்குப்பிரணமம் பண்ணுகிறோம். வாரீர் தேவதேவரே! தேவரீருடைய இந்த ரூபமானது பாவசித்தர்களாயிருக்கிற பேர்களுக்குத் தரிசனமாகாது. அத்திருவுரு சருமத்திலே காயத்திரி முதலான சந்தசுகளும், ரோமங்களிலே தர்ப்பைகளும், நேத்திரத்திலே ஆச்சியமும், நான்கு திருவடிகளில் அத்வரியூ, ஹோதா, உத்காதா, பிரம்மா இவர்களுடைய கருமங்களும், முகத்தினுடைய நுனியில் சுருக்கு என்கிற யக்கிய பாத்திரமும், நாசிகைகளில் சுருவம் என்கிற யக்கிய பாத்திரமும், உதரத்திலே இடை என்கிற பக்ஷணபாத்திரமும், காதிலே சமசம் என்கிற சோமபாத்திரமும், காதுகளுடைய

ரந்திரங்களிலே பிராசித்திரமென்னப்பட்ட பிரம்மபாகபாத்திரமும், வதனத்திலே கிரகமென்னப்பட்ட பாத்திரமும், அக்கினி ஹோத்திரமானது பக்ஷணமாகவும் பெற்று நிற்கிறது. தீக்ஷண்ய இஷ்டியானது தேவரீருடைய அவதாரமாகவும், ஆச்சிரயமாகிற அவிசையுடையவைகளான உபசது என்னப்பட்ட மூன்று இஷ்டிகளும் உம்முடைய கழுத்தாகவும், பிராயணீயம், உதயணீயம் என்னப்பட்ட இஷ்டிகள் உம்முடையகோரப் பற்களாகவும், பிரவர்க்கியமானது உம்முடைய நாக்காகவும், சப்பியம், அவசப்பியம் என்னப்பட்ட அக்கினிகள் தேவரீருடைய சிரசாகவும், செங்கற்களால் பண்ணப்படா நின்ற யக்கியவேதிகைகள் தேவரீருடைய பிராணன்களாகவும், சோமரசமானது ரேதசுகளாகவும், பிராதசவன முதலானவை பாலியாதி அவஸ்தைகளாகவும், அக்கினிஷ்டோமம், அத்தியக்கினிஷ்டோமம், உத்தியர், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தொர்யாமம் என்னப்பட்ட ஏழு யக்கியங்களும் தேவரீருடைய தொக்கு மாமிச முதலான சப்த தாதுக்களாகவும் துவாதசாக முதலான சமஸ்த யக்கியங்களும் தேவரீருடைய சரீரசந்திகளாகவும், அனுட்டானமாகிற பந்தனத்தையுடையவரான தேவரீர் சமஸ்தானங்களான சோமமில்லாத எக்கிய ஸ்வரூபமாகியும், சோமங்களையுடையவைகளான கிருதுஸ்வரூபராகவும் நிற்கிறீர்.

சமஸ்தமான மந்திரங்கள், தேவதைகள், திரவியங்கள், இவைகளுடைய ஸ்வரூபராகியும், சமஸ்தகிருது ஸ்வரூபராகியும், கர்மஸ்வரூபராகியு மிருக்கிற தேவரீர் பொருட்டுப் பிரணமம் பண்ணுகிறோம். வைராக்கியத்துடனே கூடிக்கொண்டும், நிஷ்காமயமாகச் செய்யப்பட்ட கர்மபலமாகியுமிருக்கிற சித்தசுத்தியினாலே உண்டாகிற பக்தியினால் சாக்ஷாத்காரமாக அறியப்படுகின்ற கியானஸ்வரூபராகியும், கியானப்பிரதராகியும், ஆசாரிய ரூபியாகியு மிருக்கிற தேவரீர் பொருட்டுப் பிரணமம் பண்ணுகிறோம் வாரீர் பகவானே! தேவரீருடைய கோரப்பல்லி நுனியினாலே தரிக்கப்பட்டும், பர்வதங்களுடனே கூடிக்கொண்டுமிருக்கிற அந்தப் பூமியானது ஜலத்தினின்றும் வெளிப்படுவது. மகா கஜேந்திரனுடைய தந்தத்தினாலே சேற்றோடே பேர்க்கப்படுகிற தாமரையைப்போலும், குலாசலத்தினுடைய சிகரத்தினாலே தரிக்கப்படுகின்ற மகத்தாகிய மேகத்தைப்போலும், இப்படி விளங்குகிற தேவரீருடைய பத்தினியாகியும், ஜகன் மாதாவாகியுமிருக்கிற இந்தப் பூமியை, யக்கிய ஜீவர்களான பிராமணர்கள்

பொருட்டு, மந்திரத்தினாலே அக்கினியை அரணியிலே வைத்திருக்கிறதுபோல் ஸ்தாபித்து, அத்தியந்தம் ஆச்சர்ய கரயான இந்தப்பிரபஞ்சத்தை உம்முடைய சங்கல்பத்தினாலே சிருஷ்டிபண்ணுகிறீர், தேவரீரிடத்திலே இந்தப் பூமியினுடைய உத்தாரணமான தாச்சர்யகரமன்று. வேதஸ்வரூபமாயிருக்கின்ற இந்தச் சரீரத்தை உதறுகின்ற தேவரீருடைய பிடரிமயிர்களின் முனையிலுண்டாகின்ற ஜலபிந்துக்களாலே ஜனலோக, தபலோக, சத்தியலோகங்களிலே வாசம்பண்ணுகின்ற நாங்கள் மிகவும் பவித்திரர்களாகப் பண்ணப்பட்டோம். தேவரீருடைய லீலைகளின் கரையை அறியவேண்டுமென்று இச்சிக்கிற புருஷன் மிகவும் விவேகமில்லாதவனாகிறான், வாரீர் பகவானே! சமஸ்த பிரபஞ்சத்தையும் உம்முடைய யோகமாய்கையினுடைய யோகசத்தியினாலே மிகவும் மோகிக்கும்படி செய்கிற தேவரீர் மங்களத்தைப் பண்ணக்கடவீரென்று பிரம்மாதிகளான ரிஷீஸ்வரர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்படுகிற அந்தப் பகவானானவர், தம்முடைய குளம்பினாலே பாதாளத்தினின்றும் லீலையாய்ப் பூமியை உத்தாரணம்பண்ணி, அந்த ஜலத்தின்பேரில் வைத்துப் போட்டு, அந்தர்த்தானமாயினார். வாரீர் விதுரரே! இந்தப் பிரகாரம் பூமியை உத்தாரணம் பண்ணுகின்றவராகியும், சம்சார துக்கத்தைப் பரிகரிக்கின்றவராகியும், சிலாக்கியராகியும், மாயையினாலே பண்ணப்பட்ட சரித்திரங்களையுடையவராகியும், பகவானாகியுமிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய கதையை யாதொரு புருஷனானவன், பக்தியினாலே கேட்கிறானோ, கேள்வி செய்விக்கிறானோ, அந்தப் புருஷனுக்குச் சீக்கிரமாகப் பிரசன்னராய்ச் சகலமான அபீஷ்டங்களைக் கொடுத்துப் புருஷார்த்தங்களுக்குள்ளே சாரத்தையுடைய மோக்ஷத்தை அப்பகவான் அடையப் பண்ணுவன், இதற்குச் சந்தேகமில்லை.



## பதினான்காவது அத்தியாயம்



*திதிதேவிக்குக் காமத்தினாலே சந்தியாகாலத்திலே காசிபரிடத்தினின்றும் கர்ப்போற்பத்தியும், அதினுடைய வதத்திலே காரணமுஞ் சொல்லப்படுகின்றது.*

வாராய் மகாராஜனே! மைத்திரேய மகரிஷியினாலே வராகரூபியான ஸ்ரீ ஹரியினுடைய கதையைக் கேட்டுத்

திருப்தியில்லாதவராகிய விதுரரானவர், அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு திரும்பவும் பிரஸ்னம்பண்ணினர். வாரீர் முனிச்சிரேஷ்டரே! யக்கிய வராகரூபியாலே பூமியானது உத்தாரணம் பண்ணப்பட்டதென்றும், இரணியாக்ஷனனவன் சங்கரிக்கப்பட்டானென்றும், தேவரீராலே கேட்கப்பட்டன. அந்தப் பகவானுக்கும், தயித்தியராஜனை இரணியாக்ஷனுக்கும் எந்த ஏதுவினலே யுத்தமுண்டாயிற்று? அதையும், அந்த இரணியாக்ஷனுடைய ஜன்மத்தையும், அடியேனுக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும் என்று பிரார்த்திக்கின்ற விதுரரை மைத்திரேய மகரிஷியானவர் பார்த்து, வாரீர் விதுரரே! உத்தானபாதனுடைய புத்திரனை துருவனனவன், நாரத மகரிஷியினலே சொல்லப்பட்ட ஸ்ரீ ஹரியினுடைய கதையைக் கேட்ட மகத்துவத்தினல், மிருத்தியுவினுடைய சிரசிலே பாதத்தை வைத்துக்கொண்டே விமானரூடனய் ஸ்ரீ ஹரியினுடைய பரமபதத்தை யடைந்தான். அப்படிப்பட்ட கதையைப் பிரஸ்னம் பண்ணுகிறீர், பூர்வத்திலே தேவதேவரான பிரம்மாவினலே தேவதைகளுக்குச்சொன்ன இதிகாசமானது என்னலேயுங் கேட்கப்பட்டிருக்கிறது. அதைச் சொல்லுகிறேன் கேளும். தக்ஷப்பிரஜாபதியினுடைய புத்திரியான திதிதேவியானவள் மன்மதனலே பீடிக்கப்பட்டவளாகிச் சந்தியாகாலத்திலே சூரியன் அஸ்தமனத்தை யடையும்போது அக்கினியை நாக்காக உடையவராகியும், யக்கியங்களுக்குப் பதியாகியுமிருக்கிற புருஷோத்தமரைக் குறித்துப் பாலினலே ஓமம்பண்ணி, அக்கினிஹோத்திர சாலையிலே சித்தசமாதானத்தை யுடையவராயிருக்கிற பதியைப் பிரார்த்திக்கிருள்.

வாரீர் வித்வானே! மன்மதனனவன், உம்முடைய நிமித்தமாகத் தீவினையான என்னை, வாழை மரத்தை மதத்த யானையானது பீடிப்பதுபோல், பீடிக்கிருன். ஆகையினலே என்னிடத்திலே இந்தவேளை நீர் நன்ருக அனுக்கிரகிக்க வேண்டும். பெண்களிடத்திலே வாஞ்சையையுடைய எங்கள் பிதாவான தக்ஷப்பிரஜாபதியானவர் எங்களைப் பார்த்து, வாருங்கள் புத்திரிகளே யென்றழைத்து, நீங்கள் என் வார்த்தையைக் கேட்கக் கூடவீர்களென்று எங்களைத் தனித்தனியே கேட்டுத், தம்முடைய பெண்களுக்குள்ளே யெவர் தம்முடைய அபிப்பிராயத்தை யறிந்திருந்தார்களோ, அந்தப் பதின்மூன்று பெண்களையும் உமக்குக் கொடுத்தார். ஆகையினலே என்னுடைய மனோரதத்தைப் பரிபூரணமாகச்செய்து, உமது நிரதிசய மகிமையை ஆஸ்ரயித்த என்னெண்ண

மானது வியர்த்தமாகப் போகாதபடி காக்கவேண்டும் என்று, இந்தப்பிரகாரம் வெகுவார்த்தைகளைச் சொல்லுகின்ற தீனை யாயிருக்கிற அந்தப் பத்தினியைக் காசிபப் பிரஜாபதியான வர் பார்த்துச் சமாதானமாகப் பிரதியுத்தரஞ் சொல்லுகிறுர்.

வாராய் ஸ்திரீயே! நீயேன் சோகிக்கிருய், உன்னுடைய இஷ்டத்தைப் பூர்ணமாகப் பண்ணுகிறேன். புருஷனுக்குத் தர்மார்த்த காம சித்திகளை யுண்டாக்குகிற ஸ்திரீயினுடைய மனோரதத்தை எந்தப் புருஷன் தான் சபலமாகப் பண்ணுன்? சமஸ்தாஸ்ரமங்களையும் அன்னதான முதலானதினுலே திருப்திசெய்து, அந்தப் பிரபாவத்தினுல் தானும் வியசன மாகிற சமுத்திரத்தை எளிதாகத் தாண்டுகிருன். சிரேயஸைக் கோருகின்ற புருஷனுக்கு ஸ்திரீயைத் தன் தேகத்தினு டைய பாதியாக வேதங்கள் சொல்லுகின்றன. ஸ்திரீயி னிடத்திலே இகபரலோக சாதனமான கர்மபாரத்தை வைத் துப்போட்டு வியசனமில்லாதவனுகியும், சம்சாரத்தினின்றும் விமுக்தனுகியுமிருந்து இதரமான ஆஸ்ரமங்களாலே ஜயிக் கக்கூடாதவைகளான இந்திரியங்களாகிற சத்துருக்களை, மலைக்கோட்டையை யாஸ்ரயித்திருக்கிற ராஜாக்களைப்போல, லீலையாக ஜயிக்கிருன். அப்படிப்பட்ட அனேக உபகாரங்க ளைப் பண்ணுகின்ற உனக்கு எனது புருஷாயுசுவரையில் உபகாரஞ் செய்தாலும் அதற்கிணையாகமாட்டாது. ஆனு லும் புத்ரோற்பத்தியின் பொருட்டு உண்டாகின்ற உன்னு டைய மனோரதத்தைப் பரிபூரணமாகப் பண்ணுகிறேன். என்னை நிந்தியாமல் ஒரு முகூர்த்த காலமாத்திரம் சகித்துக் கொண்டிரு. இந்தச் சமயம் பூதபதியான ருத்ரனுடைய கிங்கரர்களான பூதங்கள் சஞ்சரிக்கிறகாலம். இந்தச் சந்திய காலத்திலே பகவானுகிய ருத்திரரானவர் ரிஷபாரூடராய்ப் பிரதம கணங்களாலே சூழப்பட்டு ஸ்மசானதூளியினுலே புகைசூழ்ந்த வர்ணமாய் நான்கு பக்கங்களிலும் விரித்த ஜடா கலாபத்தை யுடையவராகிப் பஸ்மத்தினுலே பூசப்பட்டு ரஜி தம் போலே வெளுத்திருக்கிற தேகத்தை யுடையவராகி, சோமன், சூரியன், அக்கினி ரூபங்களாகியிருக்கிற நேத்தி ரங்களுடையவராயிருப்பர். அவ்வுருத்திரருக்குச் சுவஜன மென்றும், பரஜனமென்றும், ஆப்தனென்றும், நிந்தித னென்றும் இல்லை. சுவதந்திராசாரத்தினுலே நிர்மாலியம் போலே தூரவிடப்படும் அவராலே அனுபவிக்கப்பட்ட போகத்தை யுடையதாகி யிருக்கிற மாயாவிபூதியை, அவ ருடைய மகாப்பிரசாத மென்று நாம் விரதங்களாலே கோருகிறோம். அக்கியான ஆவாரணத்தைப் போக்கடிக்க

வேண்டுமென்று இச்சையை யுடையவர்களான கியானிகள், விஷயங்களிலே ஆசக்தி யில்லாமலிருக்கிற அந்த உருத்திருடைய சரித்திரத்தைக் கீர்த்திக்கிறார்கள். சத்புருஷர்களுக்குக் கதியான உருத்திரானவர், தமக்குச் சமனு மதிகனு மில்லாதவராயிருந்தாலும், தாம் பூதசரியையை ஆசரிக்கிறார். வாராய் வனிதா! நாய் நரிகளுக்குப் பக்ஷியமான இந்தச் சரீரத்தையே ஆத்துமாவென்கிற புத்தியினலே வஸ்திரம், மாலைகள், ஆபரணங்கள், திவ்ய கந்தங்கள் இவைகளாலே கொண்டாடுகிற அக்கியானிகள், சர்வக்கியராய்த் தன்னுத்துமாவிலேயே ரமித்துக்கொண்டிருக்கிற உருத்திரருடைய லோக சிக்ஷாரூபமான ஆசாரத்தைப் பரிகாசம் பண்ணுகிறார்கள். பிரம்மா முதலான பேர்கள், உருத்திரராலே பண்ணப்பட்ட தங்களுடைய அதிகாரங்களையும், வர்ணுஸ்ரம ஆசார மரியாதைகளையும், பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இந்தப் பிரபஞ்சமானது உருத்திரராலே சிருஷ்டிக்கப்பட்ட மாயையாம். அம்மாயை அவருடைய ஆக்கினையின்படி செய்து கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட பரமேஸ்வரனைச் சூழ்ந்திருக்கிற பூத கணங்கள் சஞ்சரிக்கிறகாலம் இது என்று சொல்லுகிற பர்த்தாவான காசிபரிஷியினுடைய வார்த்தையை மனதினலே அலைக்கப்பட்ட இந்திரியங்களை யுடையவளான அந்தத் திதிதேவியானவள் கேட்டு, வேசியாஸ்திரீயானவள் போல், லச்சையில்லாதவளாய், அந்தப் பிரம்மரிஷியினுடைய வஸ்திரத்தைப் பிடித்துக்கொண்டாள். இப்படி நிஷித்த கர்மத்திலே புத்தியையுடைய தன் பாரியையின் நிர்ப்பந்தத்தையறிந்த காசிபரானவர், ஈஸ்வரன் பொருட்டுப் பிரணுமம்பண்ணி, பிற்பாடு ரகஸ்யத் தலத்திலே அவளோடே கூடப்பிரவேசித்து, அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்து, பிற்பாடு பாதப்பிரக்ஷாளனம், ஸ்நானம், சுத்தாசமனங்களைப் பண்ணிப் பிராணுயாமஞ்செய்து, வாக்கு நியமத்தையுடையவராகி, நிர்மலமாகியும் சனுதனமாகியுமிருக்கிற பிரம்மத்தைப் பிரணவ பூர்வமாகத் தியானம்பண்ணிக் கொண்டிருந்தார்.

வாரீர் விதுராரே! பிறகு திதிதேவியானவள் அந்த நிஷித்தகர்மதோஷத்தினலே மிகவும் லச்சையையுடையவளாகி, பிரம்ம ரிஷியான பர்த்தாவை யடைந்து தலையை வணங்கிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிருள். வாரீர் பிரம்மரிஷியே! என்னுடைய இந்தக் கர்ப்பத்தைப் பூதபதியான உருத்திரானவர் இம்சியாமலிருக்கவேண்டும். அவருக்கு மகா அபராதத்தைப் பண்ணினேன். பூதங்களுக்குப்

பிரபுவாயும், துக்கத்தைப் போக்கடியா நின்றும், மகாதேவ ராகியும், ஒருவராலேயும் அதிக்கிரமிக்கக் கூடாதவராகியும், கோரப்பட்ட பலப்பிரதராகியும், நிஷ்காம்யர்களுக்கு மங்கள ஸ்வரூபராகியும், சுபாவமாக வொருவரையும் பீடியாதவரா கியும், துஷ்டர்களிடத்திலே தண்டனையை யுடையவராகியும், சங்கார காலத்திலே கோபத்தை யுடையவராகியும், பகவா னுகியும், மகத்தான அனுக்கிரகத்தை யுடையவராகியும், என் னுடைய தங்கையினுடைய பர்த்தாவாகியுமிருக்கிற அந்த உருத்திரானவர் பிரசன்னராகித் தயாவிலியான வேடனுக் கும் தயை பண்ணத் தக்கவர்களாயிருக்கிற ஸ்திரீகளுடைய சுபாவத்தை நன்ருய் அறிந்திருக்கிருர். ஆதலால் அந்த ஈஸ் வரனை நமஸ்கரிக்கிறேன் என்று சொல்லுகிற பாரியையைச் சந்தியா காலத்திலே செய்யத்தக்கதான நியமத்தை நிறை வேற்ரு நின்ற அந்தக் கசியபப் பிரஜாபதியானவர் அப் பாரியை நோக்கி ஒரு வார்த்தை சொல்லுகிருர்.

வாராய் துஷ்டையே! உனக்குச் சித்தசுத்தி இல்லாமல் என்னுடைய ஆக்கினையை அதிக்கிரமித்துச் சந்தியாகால தோஷத்தில் அடைந்த கர்ப்பத்திலிருந்து மிகவும் துஷ்டர் களான இரண்டு பிள்ளைகள் பிறக்கப்போகிருர்கள். அந்தப் புத்திரர்களாகிய அதமர்கள் லோகபாலர்களோடே கூடிக் கொண்டிருக்கிற மூன்று லோகங்களையும், அடிக்கடி உபத்திர வம் பண்ணப் போகிருர்கள். தீனர்களாகியும் நிரபராதிகளா கியுமிருக்கிற ஸ்திரீகளையும், புருஷர்களையும், துன்பஞ்செய் கையில் அதனுலே மகானுபாவர்களான ரிஷிகள் வருத்த மடைய, விசுவேசுவராகியும், சகலலோக சரணியராகியு மிருக்கிற பகவானனவர் மிகவும் கோபத்தை யடைந்தவராய் அவதாரம் பண்ணி, வச்சிரபாணியான இந்திரனனவன் பர் வதங்களைக் கண்டித்ததுபோல், அவர்களிருவரையும் சங்கரிக் கப்போகிருர் என்று சொல்லுகின்ற பர்த்தாவைத் திதி தேவி யானவள் பார்த்து, வாரீர் பிரம்ம ரிஷியே! என்னுடைய புத்திரர்களுக்குச் சக்கிரபாணியாயும், கம்பீரமாகியுமிருக் கின்ற பாகுக்களுடையவரான ஸ்ரீமந் நாராயணராலே வதத் தைக் கோருகிறேன். மற்றப் பிராமணரிடத்தினின்றும் வத மானது உண்டாகவேண்டாம். பிராமண சாபத்தினுலே தகிக்கப்பட்டவனுக்கும், பிராணிகளுக்குப் பயத்தைக் கொடுத் துக் கொண்டிருக்கிறவனுக்கும், நரகத்திலேயிருக்கிற பிராணி களுக்கும் அனுக்கிரகம் கிடையா. அந்தப் புருஷன் எந்த ஜன்மத்தை யடைகிருனே அந்த ஜாதிப்பிராணிகளும் அவ னுக்குக் கிருபையைப் பண்ணமாட்டாவென்று பிரார்த்திக்

கின்ற பாரியைப் பார்த்துக் காசிபப் பிரஜாபதியானவர் சொல்லுகின்றார்.

வாராய் திதிதேவியே! அப்படிப்பட்ட உன்னுடைய இரண்டு புத்திரர்களுக்குள்ளே ஒரு புத்திரனுக்கு, லோகோத்தமனைப் பகவானை ஸ்ரீஹரியினிடத்திலும், ருத்திரனிடத்திலும், உன்னிடத்திலும், மிகவும் பக்தியுடையவனாயும், சத்புருஷர்களுக்குச் சிலாக்கியனாகவும் ஒரு புத்திரனானவன் உண்டாகப்போகிறான். அந்தப் பவுத்திரனுடைய பரிசுத்தமான கீர்த்தியைப் பகவானுடைய புகழுடன் கானம் பண்ணப் போகிறார்கள். மாற்றற்றபொன்னானது அக்கினிப்புட முதலான உபாயங்களாலே சோதிக்கப்படுவதுபோல், சத்புருஷர்களான பேர்கள் உனது பவுத்திரனுடைய சுபாவத்தை அனுவர்த்திகைக்கு நீர் வச்ராயுதமுதலியவற்றைக்கொண்டு அவன் சித்தத்தைச் சோதிக்கப் போகிறார்கள். சர்வஞ்ஞராகியும், சர்வாந்திரியாமியாகியும், சாக்ஷியாகியுமிருக்கிற பகவானானவர் உன் பவுத்திரனுக்குத் தாமே சத்தியமென்கிற கியானத்தினாலே பிரசன்னராவர். அளவில்லாத கியானத்தை யுடையவனாகியும், மகாபிரபாவத்தை யுடையவனாகியும், மகத்துக்களுடைய மத்தியத்திலே மிகவும் கியானியாகியும், மகாபாகவதனாகியுமிருக்கிற அந்தப் பவுத்திரனானவன் மிகவும் விர்த்தியடைகின்ற பக்தியினாலே பரிசோதிக்கப்பட்டு நிர்மலமான சித்தத்திலே ஸ்ரீஹரியை ஸ்தாபித்துத் தேகாதிகளிலே அபிமானத்தை விட்டுவிடப்போகிறான். ஆலஸ்ய மில்லாதவனாகியும், நல்ல சுபாவத்தை யுடையவனாகியும், தைரிய முதலான குணங்களுக்கு உற்பத்தி பூமியாகியும், பக்தருடைய சம்பத்தினாலே சந்துஷ்டனாகியும், பக்தர்கள் விசனப்பட்டார்களேயாகில் மிகவும் துன்பத்தை யுடையவனாகியும், சத்துருவே யில்லாதவனாகியும், நக்ஷத்திரராஜனான சந்திரனானவன் கிரீஷ்ம காலத்திலே உண்டாகின்ற தாபத்தைப் போக்கடிக்கிறதுபோல், ஜகத்தினுடைய சோகத்தைப் போக்கடிக்கிறவனாக உண்டாகி, உள்ளும் வெளியும் நிர்மலராகியும், கமலம்போலொத்த நேத்திரங்களை யுடையவராகியும், தம்முடைய பக்தர்களுடைய இச்சானுகுணமாகிக் கிரகிக்கப்பட்ட திவ்யமங்கள விக்கிரக ரூபத்தை யுடையவராகியும், ஸ்ரீ மகாலக்ஷ்மியாகிற ஸ்திரீக்குப் பூஷணமாகியும், மிகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற மகரகுண்டலங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுகமண்டலத்தை யுடையவராகியுமிருக்கிற ஸ்ரீ ஹரியை உள்ளிலேயும், வெளியிலேயும், பார்த்துக் கொண்டிருக்கப் போகிறானென்று சொன்

னதைக் கேட்டுத், திதி தேவியானவள் தன்னுடைய பவுத்திரனை மகா பாகவதனாகவும், தன்னுடைய புத்திரர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தினின்றும் வதத்தையுங் கேட்டு அந்த ஸ்ரீ ஹரியுடனே கூட யுத்தஞ்செய்கிற புத்திரர்களுக்கு மாணத்திலே மகத்தான கீர்த்தியும், உத்தமகதியுமுண்டாகுமென்றுமிகவும் உற்சாகத்தை யுடையவளுமானாள்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*கியான சூரியர்களான தேவர்களாலே கேட்கப்பட்டவராய் பிரம்மாவானவர், ஸ்ரீ வைகுண்டத்திலே ஸ்ரீமகா விஷ்ணுவினுடைய பாரிஷதர்களுக்குப் பிராமணசாபம் முதலானதையும் அதற்குக் காரணத்தையும், சொல்லுகிறாரென்று சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்தத் திதிதேவியானவள் தன்னுடைய புத்திரர்களாலே பண்ணப்படப் போகிறதான தேவர்களுடைய உபத்திரவத்தினின்றும் சங்கையை யுடையவளாய் ஏவலருடைய தேஜஸை நாசம்பண்ணுகின்ற காசிபப்பிரஜாபதி சம்பந்தமாகியுமிருக்கிற அந்த வீரியத்தை நூறுவருஷம் தரித்தாள். அந்தக் கர்ப்பதேஜஸினாலே சமஸ்தலோகமும் சூரியாதி பிரகாசமில்லாமல் அந்தகாரம் மூடியிருக்கிறதைத் தேவர்கள் விசுவகர்த்தாவான பிரம்மாவுக்குச் சொன்னார்கள்.

வாரீர் பிரபுவே! யாதொரு காரணத்தினாலே நாங்கள் மிகவும் பயந்திருக்கிறோமோ அதைத்தேவரீரே அறிந்திருக்கிறீர். தேவரீர் ஸ்தூலங்களாகியும் சூக்ஷமங்களாகியு மிருக்கிற பிராணிகளுடைய அபிப்பிராயத்தை யறிந்து கியானத்தையே பலமாக வுடையவராகியும், சங்கல்பத்தால் இந்தப் பிரம்ம தேகத்தை யடைந்திரா நின்றும், கிரகிக்கப்பட்ட ரஜோ குணத்தை யுடையவராகியும், பிரபஞ்சத்துக்குக் காரணமாகியுமிருக்கிற தேவரீரின் பொருட்டு வணக்கம் பண்ணுகிறோம். சேதனுசேதன பிரபஞ்சத்துக்குக் காரணராகியும், காரியகாரண சுவரூபராகியும், காரிய காரணங்களைக் காட்டிலும் பாராகியு மிருக்கிற உம்மை யாதொருவர் நிஷ்காம்யமான பக்தியினாலே தியானம் பண்ணுகிறார்களோ, அப்படிப்பட்டவர்களுக்கு ஒருவிடத்திலேயும் அவமானமானது உண்டா

கிறதில்லை. காசிபப் பிரஜாபதி சம்பந்தமான வீரியமாயிருக்கிற திதிதேவியினுடைய கர்ப்பமானது, சமஸ்த திக்குகளையும் அந்தகாரத்தினாலே பகல் ராத்திரி என்கிற விபாகமில்லாமல் செய்வித்தபடியினாலே, கர்மலோபத்தை யுடையவரான எங்களுக்குச் சுகத்தை விதிக்கக்கடவீர். இப்போது அது, காஷ்டத்தினாலே விருத்தியடைகிற அக்கினியானதுபோல், விருத்தியடைந்து கொண்டிருக்கின்றது என்று விஞ்ஞாபனஞ் செய்த தேவர்களை நோக்கிப் பிரம்மாவானவர் சிரித்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

வாருங்கள் தேவர்களே! உங்களுக்குப் பூர்வமே பிறந்தவர்களாகியும், என்னுடைய மானஸ புத்திரர்களாகியும், லோகங்களிலே இச்சை இல்லாதவர்களாகியு மிருக்கிற ஜனகாதி யோகீஸ்வரர்கள் ஆகாசமார்க்கமாகச் சமஸ்த லோகங்களிலேயும் சஞ்சரித்துக்கொண்டிருந்து, ஒருக்கால் நிர்மலமான மனதை யுடையவராகியும், பகவானாகியு மிருக்கிற ஸ்ரீ ஹரிக்கு நித்திய வாசஸ்தானமாகியும், சமஸ்த லோகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டும், ஸ்ரீ வைகுண்ட மென்னும் பெயரை யுடையதாகியும், நிஷ்காம்யமாகச் செய்யப்பட்ட தர்மத்தினாலே விளங்குகிற பாகவதர்கள் அந்த ஸ்ரீ வைகுண்டனுக்குச் சமானமான திவ்யதேகங்களை யுடையவர்களாய் வாசம் பண்ணத்தக்கதாயும், தர்ம மூர்த்தியாகியும், பகவானாகியுமிருக்கிற பரம புருஷரானவர் சத்தசத்துவமான திவ்யமங்கள மூர்த்தத்தைத் தரித்துக்கொண்டு தம்முடைய பக்தர்களான நம்மைச் சுகிப்பித்திருக்கிற ஸ்தானமாகியும், சரீரத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற மோக்ஷமானதுபோல் ஷட்ருதுக்களிலேயும் பல புஷ்ப முதலிய இஷ்டங்களைக் கொடுக்கின்ற விருக்ஷங்களாலே விளங்குகிறதாயும், நிசிரேயசம் என்கிற பெயரையுடைய உத்தியான வனத்தின் நீரூற்றுகளுடைய மத்தியத்திலே பெருகாநின்ற புஷ்பரசங்கள், வசந்தகாலத்திலே உண்டாகின்ற புஷ்பங்கள், இவைகளுடைய கந்தத்துடன் வீசுகிற வாயுவை அபேக்ஷியாமல் திரஸ்கரித்து, விமானசாரிகளான பகவத் பாரிஷதாள் ஸ்திரீகளோடே கூடினவர்களாய் லோகங்களுடைய பாபங்களை நாசம்பண்ணத்தக்க பகவானுடைய சரித்திரங்களை வண்டைப்போல் கானம் பண்ணிக்கொண்டிருக்கையில், கபோத பக்ஷிகள், கோகிலங்கள், சாரசபக்ஷிகள், சக்கிரவாகப்பக்ஷிகள், சாதகப்பக்ஷிகள், அம்சங்கள், கிளிகள், தித்திரிபக்ஷிகள், மயில்கள் முதலியவைகளும் அந்த ஸ்ரீ பகவானுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதுபோல்

தங்களுடையகோலாகலமானசப்தயானது ஒருக்ஷணமாத்திர மாகிலும் ஒழியாமலிருக்கிறதாயும், மந்தாரபுஷ்பம், குருக் கத்திபுஷ்பம், கருநெய்தல், சண்பகம், அரணம், புன்னை, நாகம், மல்லிகை, மகிழ், அம்புஜம், பாரிஜாதம், முதலியபுஷ் பங்கள், ஸ்ரீ துளசி, இவற்றை ஆபரணமாக வுடையவரான ஸ்ரீ ஹரியினாலே அந்தத் துளசியினுடைய கந்தமானது விசேஷமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கையில், அந்தத் துளசி யினுடைய தபசை மற்றப் புஷ்பங்களால் சிலாகிக்கப்படுகிற தாயும், வைடூரியங்களாகியும், மரகத மயங்களாகியும், சுவர்ண மயங்களாகியுமிருக்கிற பக்தர்களுடைய விமானங்களாலே சூழப்பட்டும் ஸ்ரீகிருஷ்ணரிடத்திலேயே மனதையுடையவர்க ளான பேர்களுக்கும், மந்தஹாசத்திலே விளங்காநின்றமுகங் களை யுடைய வர்களாகவுமிருக்கிற ஸ்திரீகள் பரிஹாசம் முத லானவைகளாலே காமத்தை யுண்டாக்காமலும், ஸ்ரீ மகா லக்ஷ்மியினுடைய அனுக்கிரக நிமித்தமாகப் பிரம்மாதிதேவர் கள் மகாபிரயத்தினத்தைப் பண்ணத்தக்கதாயும், அந்த ஸ்ரீ லக்ஷ்மியானவள் மனோகரமான ரூபத்தையுடையவளாய், மனோக்கியங்களான சிலம்புகளாலே தன்னுடைய சரணா விந்தத்தைச் சப்தித்துக்கொண்டு சஞ்சல முதலான தோஷங் களை விட்டவளாய், ஸ்படிகமயமான சுவர்களை யுடையதாகி யும், மத்தியிலே சுவர்ணகலசங்களை யுடையதாகியுமிருக்கிற ஸ்ரீஹரியினுடைய திவ்ய கிருகத்திலே லீலாதாமரைப் புஷ் பத்தில் விளங்கிக்கொண்டிருக்கிறவள் போல. தன்னுடைய பரிஜனங்களோடே கூடிக்கொண்டு துளசிகளாலே ஸ்ரீஹரி யைப் பூஜித்துப் பவள மயமான கரைகளை யுடையனவாகியும், நிர்மலமாகியும், அமிர்தம்போல மதுரமாகியும், தீர்த்தத்தை யுடையதாகியு மிருக்கிற நடைவாவிகளின் ஜலத்திலே பிரதி பலியாநின்றும், சோபனங்களான முன்னெற்றி மயிர்களை யும், உன்னதமான நாசிகையையு முடையதாகியுமிருக்கிற தன்னுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துப் பகவானாலே இளநகை பண்ணப்பட்டதாக எண்ணிக்கொள்ளத் தக்கதா யும், தேவதேவோத்தமரான ஸ்ரீஹரியினுடைய அனுவிர்த் தியினாலே யமனை நிராகரித்தவர்களாகியும், அகங்கார மில் லாதவர்களாகியும், இச்சிக்கத்தக்கதான கிருபை முதலான சுபாவத்தை யுடையவர்களாகியும், அந்த எம்பெருமா னுடைய சோபனமான கீர்த்தியை யொருவருக் கொருவர் சொல்லிக்கொள்ளுகிறதிலே உண்டாகிற பிரீதியினாலே பாவசர்களாய் அதனாலே புளகாங்கித தேகிகளாகியு மிருக் கிற மகா பாகவதர்கள் அடையத்தக்கதாகியும், விசுவ கர்த்தாவான ஸ்ரீ ஹரியினாலே வாசம் பண்ணப்பட்டும்,

சமஸ்த லோகங்களுக்கும் முக்கியமாகியும், சேவிக்கத்தக்க தாகியும், அப்பிராகிருதமாகியும், விசித்திரங்களாகியும், தேவோத்தமர்களுடைய விமானங்களின் காந்திகளை யுடையனவாகியும், அபூர்வமாகியுமிருக்கிற அந்த ஸ்ரீ வைகுண்டத்தை ஜனகாதி யோகிகள் யோகமாயா பலத்தி ஞலே அடைந்து பரமமான சந்தோஷத்தை யுடையவர்க ளாய், ஆறு பிரகாரங்களைத் தடையில்லாமல் தாண்டி, ஏழாம்பிரகாரத்திலே சமானமான வயதை யுடையவர்களாகி யும், கதாபாணிகளாகியும், உத்தமங்களான தோள்வளைகள், குண்டலங்கள், கிரீடங்கள் இவைகளாலே சுந்தரமான அலங்காரத்தை யுடையவர்களாகியும், மதித்த வண்டுகளாலே சூழப்பட்ட துளபமாலையினுலே நீலவர்ணங்களான நான்கு புஜங்களுக்கு மத்தியிலுள்ள மார்பினிடத்திலே சூட்டப்பட் டவர்களாகியும், நெறிக்கப்பட்டிருக்கிற புருவத்தினுலேயும், தீர்க்கங்களான சுவாசத்தையுடைய நாசிகளாலேயும், மிகவும் சிவந்த நேத்திரங்களினுலேயும், கொஞ்சங் கோபத்தையுடை யதுபோல் கலங்கியிருக்கிற முகத்தையுடைய அந்தத் துவார பாலகர்கள் இருவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர் களை லக்ஷயஞ்செய்து கேளாமலே பூர்வம் சுவர்ணமய மாகியும், வச்சிரமயமாகியு மிருக்கிற கதவுகளை யுடையவைக ளான ஆறு வாசல்களையும் தாண்டி ஏழாம் பிரகாரத்தினு டைய வாசலிலேயும் பிரவேசித்தார்கள். அப்போது அந்தத் துவாரபாலகர்களானவர்கள் இவ்விடத்திலேயும் இவர்க ளுக்கு இத்தனை தைரியமாவென்று அவர்களுடைய தேஜ சைப் பார்த்துச் சிரித்துப் பிரம்மண்ணியதேவரான பகவானுக் குப் பிரதிகூலமான நடத்தையை யுடையவர்களாயும், திகப்ப ரர்களாயும், விருத்தர்களாயிருந்தாலும் ஐந்து வயது பாலர் கள்போலே காணப்படுகின்ற பரமாத்தும தத்துவத்தை யறிந் தவர்களாவுகமிருக்கிற அந்த நான்கு குமாரர்களையும் பார்த் துத் தடைக்கு அயோக்கியர்களாயிருந்தாலும், அந்தக் குமா ரர்களைப் பிரம்பினுலே தடுத்தார்கள். அப்படிச் சமஸ்த தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீமந்நாராயண னுடைய துவாரபாலகர்களாலே தடுக்கப்பட்ட அந்த ரிஷிக ளானவர்கள் மிகவும் சுகிர்த்தான ஸ்ரீ ஹரியைத் தரிசனம் பண்ணவேண்டுமென்கிற இச்சைக்குப் பங்கம் உண்டாயிற்றே யென்று கொஞ்சம் கோபத்தினுலே கலங்கின நேத்திரங்களை யுடையவர்களாய் ஒரு வார்த்தை சொல்லுகிருர்கள்.

அந்தப் பகவானைப்போலவே சமஸ்த பிராணிகளிடத்தி லேயும் சமபுத்திபெற்றிருக்கிற பாகவதர்களுக்குள்ளே உங்க

ளிருவருக்குமாத்திரம் இவ்விடத்தில் சிலர் பிரவேசிக்க லாம் சிலர் பிரவேசிக்கக் கூடாதென்கிற வீஷ்மமான சுபாவம் எப்படி உண்டாயிற்று. இவ்விடத்திலே பக வானிடத்தில் பக்தியில்லாமல் ஒருத்தனும் வரமாட் டானல்லவோ? புருஷோத்தமராகியும் இருக்கிற அந் தப் பகவான் விஷயத்திலே எந்தப் புருஷன் சங்கிக்கத் தக்கவன்? சமஸ்த பிரபஞ்சத்தையும் குக்ஷியிலே தரித்துக் கொண்டிருக்கிற அந்தப் பகவானிடத்திலே வித்துவாம்சர்க ளானவர்கள் பேதத்தைப் பார்க்காமல் கடாகாசத்தைப் போலத் தங்கள் ஆத்துமாவில் அந்தர்ப் பூதமாகப் பார்க்கி ருர்கள். அப்படிப்பட்ட பகவானிடத்திலே பேதமில்லை யன்ருே? ராஜா முதலான பேர்களுக்குப் பேதபுத்தியிருக் கிறபடியினுலே பயம் உண்டாகிறது. அப்படிப்போல் பேத புத்தியில்லாத ஸ்ரீ ஹரிக்குப் பரமானது யாதொரு காரணத் தினுலே உண்டாயிற்று. தேவர்களைப்போல் வேஷத்தை யுடையவர்களான உங்களுக்கு எப்படித் தெரிந்தது. ஸ்ரீ வைகுண்டநாதரான இந்தப் பரமபுருஷருக்கு ஏவலர்களாகி யும் மந்தபுத்திகளாகியுமிருக்கிற உங்களுக்கு இருதயத்திலே பேதபுத்தியிருந்ததினுலே இந்த வைகுண்டத்தினின்றும் பூலோகத்தை யடையக்கடவீர்கள். எந்த லோகங்களிலே இப்படிப் பேதபுத்தியையுடைய பாவிக்குக் காமக்குரோத லோபமென்கிற மூன்று சத்துருக்கள் உண்டாயிருக்கிருர் களோ அந்தப் பாபிஷ்ட லோகங்களை யடையக்கடவீர்க ளென்று சொல்லுகின்ற அந்த ரிஷிகளுடைய கோரமான வார்த்தையைக் கேட்டு அந்தப் பிரமசாபத்தை அனேகம் அஸ்திர சமூகங்களாலேயும் தடைபண்ணக் கூடாததாகவும் அறிந்து, ஸ்ரீ ஹரியினுடைய துவாரபாலகர்களான அவர் கள் மிகவும் பயத்தினுலே அந்த ரிஷீஸ்வரர்களுடைய திரு வடிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டவர்களாய்த் தண்டாகாரமாய் விழுந்து நமஸ்காரம்பண்ணி ஒரு வார்த்தை சொல்லுகிருர்கள்.

கேளீர் மகாயோகிகளே! மகா அபராதத்தைப் பண் ணினவனுக்கு யாதொரு தண்டனையுண்டோ, அந்தத் தண் டனை உங்களாலே பண்ணப்பட்டது. அந்தத் தண்டனையும் எங்களுக்கு உண்டாகட்டும். ஆனுலும் இந்த விஷயத்திலே நாங்கள் மிகவும் நிக்ருஷ்டமான மூடஜென்மங்களை யடைந்தி ருந்தாலும் பகவானுடைய ஸ்மரணத்தை நாசம்பண்ணுகிற மோகமானது உண்டாகவேண்டாமென்று சொல்லிக்கொண் டிருக்கிற சமயத்தில், பெரியவர்களுக்குப் பூச்சியராகியும்,

தாமரையொத்த வுந்தியையுடையராகிய மிருக்கிற பகவானுன வர் பாவகதர்களிடத்திலே செய்த தம்முடைய பக்தர்க ளுடைய அபராதத்தை அந்த க்ஷணத்திலே யறிந்து பரமாம்சர்களான அந்த மகரிஷிகள் கண்டு பிடிக்க அரி தான தம்முடைய திருவடிகளைத் தரிசிக்க வந்தவர்களைத் தடுத்ததினு லுண்டான அந்த ரிஷீஸ்வரர்களுடைய கோபத்தை யறிந்து தாம் லக்ஷ்மீசமேதராய் அவர்கட்குக் காக்ஷி கொடுத்து அவர்களுடைய கோபத்தைப் போக்கடிக்க வேண்டுமென்கிற அருளுள்ளவராய்த் தாமரைபோன்ற திரு வடிகளாலே நடந்து ஸ்ரீ மகா லக்ஷ்மி சமேதராகச் சஞ்சாரத் துக்கு யோக்கியமாயிருக்கிற இரண்டு பாரிசத்திலேயும், அம்சங்கள் போல் விளங்கி ஜ்வலித்துக்கொண்டிருக்கிற சாமரங்களும், வாயுவினுலே அசைகின்ற தவளமான குடை யும், சந்திரன் போன்ற மிகவும் சுப்பிரமான முத்துமாலைகளி னின்றும் நழுவுகின்ற ஜலத்தின் துளிகளை யுடையவராகியும், அந்த ரிஷியீஸ்வரர்கள் துவாரபாலர்கள், இவர்களை யனுக் கிரகிக்கிற நிமித்தமாகச் சோபனமான திருமுகமண்டலத்தை யுடையவராய்க் கோரத்தக்க கிருபை முதலான குணங்களுக்கு இருப்பிடமாகியும், பிரீதியோடே கூடிக்கொண்டிருக்கிற கடாக்ஷத்தினுலே மிகவும் மனோகராகியும், நீலவர்ணமான மார்பிடத்திலே விளங்குகின்ற ஸ்ரீ மகாலக்ஷ்மியுடன் தமக்கு நித்தியமான ஸ்ரீ வைகுண்டத்தினின்றும் வருகிறவராயும், மிகவும் பருத்த இடுப்பிற்குப் பின்பாகத்திலே தரிக்கப்பட் டிருக்கின்ற பீதாம்பரத்தில் பிரகாசியா நின்ற அரைநூன் மாலையினுலேயும், வண்டுகளாலே சப்திக்கப்பட்ட வனமாலை யினுலேயும், மணிக்கட்டு கைகளிலே மனோக்கியமான கடகங் களை யுடையவராகியும், மற்றொரு அஸ்தத்தினுலே தாமரைப் புஷ்பத்தைச் சுழற்றிக்கொண்டும், மின்னலைத் திரஸ்கரிக் கின்ற மகரகுண்டலங்களாலே யலங்கரிக்கப்பட்ட கபோலங் களை யுடையவராகியும், உன்னதமான நாசிகையையுடைய திருமுகமண்டலத்தை யுடையவராகியும், நவரத்தினங்க ளிழைத்த கிரீடத்தை யுடையவராகியும், பாகுதண்டங்களு டைய மத்தியத்திலே மனோக்கியமாகியும், மிகவும் விலை பெற்றதாயு மிருக்கிற முத்துமாலையினுலேயும், கண்டத்திலே தரிக்கப்பட்டிருக்கின்ற கவுஸ்துப மாலையினுலேயும், நானே சவுந்தரியநிதியென்று எண்ணியிருந்த ஸ்ரீ மகா லக்ஷ்மியினு டைய அகங்காரமானது இந்தப் பகவானுடைய சவுந்தரியத் திற்கு முன்னே ஓங்காமல் அடங்கிப் போனதாகவும், அள வில்லாத சவுந்தரியத்துக்கு நிதியாகியும், எனக்கும் ருத்திர னுக்கும் உங்களுக்கும் அனுக்கிரகார்த்தமாகத் திவ்யமங்கள

விக்கிரகத்தைத் தரியாநின்றுமிருக்கிற அந்த ஸ்ரீமந் நாராயணரானவர் பிரத்தியக்ஷமாயினர். அவரைப் பார்த்து அந்த ஜனகாதி யோகிகள் மிகவும் திருப்தியடையாம லிருக்கிற நேத்திரங்களை யுடையவர்களாய்ச் சந்தோஷத்தினாலே சாஷ்டாங்கமாகப் பிரணாமம் பண்ணினார்கள். அரவிந்தம்போன்ற நேத்திரங்களை யுடையவரான அந்தப் பகவானுடைய திருவடித்தாமரைகளில் அர்ச்சித்திருக்கிற ஸ்ரீ துளசியினுடைய மதுராசத்துடனே கூடிக்கொண்டிருக்கிற பரிமளத்தை அவர்கள் ஆக்கிராணித்துப் பிரம்மானந்தத்தை யடைந்து மிகவும் மனோகரமாகியும் தவளமாகியுமிருக்கிற புன்சிரிப்பை யுடையதான அந்தப் பகவானுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்து ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தார்கள்.



## பதினாறுவது அத்தியாயம்



*ஸ்ரீ ஹரியினாலே சமாதானம் பண்ணப்பட்டு மிகவும் பச்சாத்தாபத்தை யுடையவர்களாகிய அந்த ரிஷியீஸ்வரர்களாலே அந்த ஜய விஜயர்களுக்கு அசுரஜன்மத்திலேயும் அனுக்கிரகம் பண்ணப்பட்டதென்று சொல்லப்படுகிறது.*

### ஜனகாதி யோகிகளுடைய ஸ்துதி.

வாரீர் அநந்தரே! தேவரீர் எங்களிருதயத்திலே நித்தியமாக விருந்தாலும் கியானமில்லாதவர்களுக்குக் காணப்படாதவராகவே விளங்குகிற தேவரீர் எங்களுடைய நேத்திரங்களுக்குப் பிரத்தியக்ஷமாக விருக்கிறீர். தேவரீருடைய நாபிக் கமலத்தினின்றும் உண்டாகியிருக்கின்ற எங்களுக்குப் பிதாவான பிரம்மாவினாலே தேவரீருடைய பரம ரகசியமான சரித்திரமானது உபதேசிக்கப்பட்டபோதே எங்களுடைய சிரவணமார்க்கத்தினாலே எங்களுடைய புத்தியைக் கலந்துபோனீர். வாரீர் பகவானே! தேவரீருடைய பக்தர்கள் எங்களால் சபிக்கப்பட்டபடியினாலே எங்களுக்கு நரகங்களிலே மிகவும் ஜென்மிக்கும்படி உண்டாகுமன்றோ? ஆனாலும் வண்டானது முள்ளுகளாலே தைக்கப்பட்டாலும் புஷ்பங்களிலேயே ரமிக்கிறதுபோல் எங்களுடைய சித்தம் விக்கினங்கள் சம்பவித்தாலும் அதை யெண்ணாமல் தேவரீருடைய திருவடிகளிலேயே ரமிக்கிறது. ஸ்ரீ துளசியானது தேவரீருடைய திருவடி சம்பந்தத்தினாலேயே சோபிக்கிறதுபோல்

எங்களுடைய வாக்குகள் தேவரீருடைய திருவடி பஜனத்தினால் பரிசுத்தமாகும்படி அனுக்கிரகிக்கவேண்டும். வாரீர் அனந்தமான கீர்த்தியை யுடையவரே! தேவரீருடைய இந்தத் திவ்யமங்கள ரூபத்தைச் சேவித்ததினாலே எங்களுடைய நேத்திரங்களானவை மிகவும் ஆனந்தத்தை யடைந்தன.

### பிரமதேவர் வாக்கியம்.

வாருங்கள் தேவர்களே! ஸ்ரீ வைகுண்ட வாசியான பகவானானவர் இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அந்த ரிஷிகளுடைய வாக்கியத்தைக் கொண்டாடி அவர்களைப் பார்த்து ஒருவார்த்தை சொன்னார். வாருங்கள் யோகீஸ்வரர்களே! என்னுடைய பாரிஷதர்களான ஜயன் விஜயனென்கிற இவர்களிருவரும் என்னை அநாதரவு பண்ணி உங்களுக்கு வெகுவாக அதிக்கிரமத்தைப் பண்ணினார்கள். அதனால் என்னைப் பின்பற்றுகிற உங்களாலே இவர்களிருவருக்கும் தண்டனையானது பண்ணப்பட்டபடி நம்மாலேயும் அனுமதி பண்ணப்பட்டது, ஓ பிராமணர்களே! நீங்கள் எனக்குப் பரமமான ஆப்தராகையினாலே இப்போது உங்களை க்ஷமிப்பிக்கிறேன். உலகத்தில் ஏவலன் அபராதத்தைப் பண்ணினால் ஜனங்கள் யஜமானன் பண்ணினதாய்ச் சொல்லுகிறதுபோல் என்னுடைய துவாரபாலகர்கள் அபராதஞ்செய்தது நான் செய்ததே தவிர வேறல்ல. அந்த அபராதமானது என்னுடைய கீர்த்தியை, வெண்குஷ்டமானது தேகத்தினுடைய தோலை வியாபித்துக் கெடுத்துப்போடுகிறதுபோல், நாசம்பண்ணிப்போடும். என்னுடைய நிர்மலமான புகழாகிற அமிர்தம் தியானம் பண்ணின சண்டாளன் முதற்கொண்டு சமஸ்த ஜகத்தையும் பாவனமாகப் பண்ணுகிறது. ஸ்ரீ வைகுண்டநாதனாயிருக்கிற என்னுடைய சோபனமாகியும், பவித்திரமாகியுமுள்ள பாகுவானாலும் உங்களுக்குப் பிரதிகூலமான வியாபாரத்தைச் செய்தால் அதைச் சேதித்துப் போடுவேன். உங்களுடைய சேவையினாலே ஸ்ரீபாதபத்மங்களிலே யிரா நின்றும் பவித்திரமாகியுமிருக்கிற ரேணுக்களையுடைய என்னாலே சமஸ்த லோகங்களுடைய மலத்தையும் போக்கடிக்கிறவனாகியும், நல்ல சீலத்தை யடைந்துமிருக்கிற எனக்கு இந்தக் குணங்கள் உங்களாலே உண்டாயின. மிகவும் விரக்தனாயிருந்தாலும் என்னை ஸ்ரீ மகாலக்ஷ்மியானவள் விடாமலேயிருக்கிறாள். ஸ்ரீமகாலக்ஷ்மியினுடைய கடாக்ஷம் வேண்டுமென்று பிரம்மா முதலான பேர்களும் மகா தீக்ஷணயான நியமங்களைப் பண்ணுகிறார்கள்

அப்படிப்பட்ட லக்ஷ்மி என்னை விடாமலிருக்கிருள். நிஷ்காமனுயிருக்கிற பிராமணனுக்குக் கவளங்கள் தோறும் நெய்யினுலே நனேக்கப்பட்டிருக்கிற பாயச முதலான அன்னத்தைப் புஜிப்பிக்கின்ற பிராமணனுடைய முகத்தினுலே நான் திருப்தியடைவதுபோல் யாகஞ்செய்வதில் நான் திருப்தியடையமாட்டேன். என்னுடைய ஸ்ரீபாத தீர்த்தமானது சந்திரசேகரனுன ருத்திரனுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த லோகங்களேயும் பவித்திரமாகப் பண்ணுகிறது, அப்படிப்பட்ட மகிமையையுடைய நானும் பிராமணர்களுடைய நிர்மலமான ஸ்ரீ பாதரேணுவைக் கிரீடங்களாலே தரிக்கிறேன். எனக்குச் சரீரங்களாயிருக்கிற பிராமணர்களேயும் என்னுடைய சரீரத்தினின்றும் உண்டாகின்ற பசுக்களேயும் அநாதர்களாகி என்னேயே ஆஸ்ரயமாக வுடையவர்களான பிராணிகளேயும், என்னேக்காட்டிலும் வேறென்கிற பேதபுத்தினுலே எவன் பார்க்கிருனே அவனே யமனுடைய தூதர்கள் கண்டங்கண்டமாய்ச் சேதிப்பார்கள். யாரொருவர் பிராமணர்களே ஸ்ரீ வாசுதேவனென்கிற புத்தியினுலே பூஜித்துச் சந்துருஷ்டமான இருதயத்தை யுடையவர்களாய் நல்ல வாக்கினுலே ஸ்தோத்திரம் பண்ணுகிருர்களோ அவர்களாலே நான் வசீகரப்பட்டவனுகிறேன். ஆகையினுலே என்னுடைய அபிப்பிராயத்தை அறியாதவர்களான இந்த ஜய விஜயர்களிருவரும், தங்களுடைய அதிக்கிரமத்தினுலே வந்த அபராதத்துக்கு யோக்கியமான கதியைச் சீக்கிரமாக அடைந்து மறுபடியும் என்னுடைய சமீபத்திலேயே வந்து அடையக்கடவர்கள். காவலர்களான இவர்களுக்கு ஸ்ரீ வைகுண்டலோக வியோகமானது சீக்கிரமாக முடிவடையும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று வேதமந்திரங்களுக்குச் சமானமாகி யிருக்கிற வாக்கினுடைய சாதுரியத்தைக்கேட்டும் அந்த ரிஷீஸ்வரர்களான பேர்கள் மிகவும் சிரேஷ்டமாகியும், மிதமான அக்ஷரங்களே யுடையவைகளாகியும், அர்த்தத்தினுலே விஸ்தாரமாகியும், கெம்பீரமான அபிப்பிராயத்தை யுடையனவாயுமிருக்கிற அந்தப் பகவானுடைய வசனத்தைக் காதுகொண்டு கேட்டு அர்த்த விசாரம் பண்ணியும் நம்மைச் சிலாகிக்கிருரென்றும், நம்மாலே பண்ணப்பட்ட தண்டனேயைச் சங்கோசமாகப் பண்ணுகிருரென்றும், அந்தப் பகவானுடைய அபிப்பிராயத்தை யறியாமல் தங்களேக் கொண்டாடுகிருரென்றும், தம்முடைய பிரபுத்துவத்தைப் பிரகாசிப்பித்து ராஜாக்களே சிக்ஷிப்பிக்கிற நிமித்தமாய்ப் பிராமணர்களேச் சமாதானம் பண்ணுகிருரென்றும்

அறிந்து, அஞ்சலி பந்தத்தை யுடையவர்களாய் அந்தப் பக வானைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார்கள். தேவ தேவரான தேவரீர் எம்முடைய துவாரபாலகர்களாலே பண் ணப்பட்ட அபராதமானது எம்மாலேயே பண்ணப்பட்ட தென்றும், உங்களாலே அந்த ஜய விஜயர்களுக்குப் பண் ணப்பட்ட தண்டனை எமக்கு அனுக்கிரகமே ஆகிறதென்றும் சொல்லுகிறபடியினாலே நாங்கள் தேவரீருடைய அபிப்பிரா யத்தை யறியோம்.

வாரீர் பிரபுவே! பிரமண்ணியரான தேவரீருக்குப் பிரா மணர்கள் பரமமான தெய்வமன்றோ! தேவர்களுக்கும் பூச்சி யாளாயிருக்கிற பிராமணர்களுக்கும் பகவானான தேவரீரே பரமாத்துமாவாகியும், தெய்வமாகியுமிருக்கிறீர். சாச்வதமான தர்மமானது தேவரீரிடத்தினின்றும் உண்டாகித் தேவரீ ருடைய அவதாரங்களாலே ரக்ஷிக்கப்பட்டுமிருக்கிறது. தேவரீர் அந்தத் தர்மத்துக்குப் பரராகியும், விகாரசூனிய ராகியும், பல சுவரூபமாகியு மிருக்கிறீர். பிராணிகள் தேவரீ ருடைய அனுக்கிரகத்தினாலே வைராக்கியத்தையடைந்து பரமமான யோகத்தையுடையவர்களாய் அனாயாசமாகச் சம்சாரத்தைத் தாண்டுகிறார்கள். சாரக்கிரகியாயிருக்கிற வண் டானது தேவரீருடைய திருவடிகளிலே பக்தர்களாலே சமர் பிக்கப்பட்ட ஸ்ரீ துளசியிலே நிச்சலமாக ரமித்திருக்கிறபடி யினாலே அந்தத் திருவடிகளுடைய சௌந்தரியம் மிகவும் அதிகமென்றெண்ணித் தவத்திலே வக்ஷஸ்தலத்திலேயே யிருந்து ஸ்ரீ துளசியோடேகூட அந்தத் திருவடிஸ்தானத் தையே பெறவேண்டுமென்கிற ஆசையினால் பரிசுத்தங்க ளான உபசாரங்களாலே மிகவும் சேவித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ மகாலக்ஷ்மியைத் தேவரீர் மிகவும் விரும்பவில்லை. அப் படிப்பட்ட தேவரீர் பிராமணர்களுடைய புண்ணியகரமான ஸ்ரீ பாததூளியினாலே பவித்திரனானேனென்கிறதும், பிரா மணர்களுடைய பிரசாதத்தினாலே ஸ்ரீ மகாலக்ஷ்மி என்னை விடாமலிருக்கிறாளென்கிறதும், உசிதமன்றோ? வாரீர் பகவானே! தபசு, சவுசம், தயையென்று பெயரையுடைய வைகளான பாதங்களினாலே எங்களுக்குச் சகல அபீஷ்டத் தையும் கொடுக்கிற நிமித்தமாகச் சத்துவமூர்த்தியான தேவரீராலே ஸ்தாவரஜங்கம சுவரூபமான இந்தப் பிரபஞ்ச மானது தரிக்கப்படுகிறது. அப்படியிருக்க இந்தப் பிராமண குலத்தைப் பிரகாசமாக ரக்ஷியாமற் போவீரேயாகில் அப் போதே மங்களகரமான தேவரீருடைய ஆக்கியாரூபமான வேதமார்க்கமானது நாசத்தை யடைந்துபோம். தேவரீ

ருடைய அந்த ஆசாரத்தையே பிரமாணமாக இந்த லோக மும் கிரகிக்கும். தர்மத்தை ரக்ஷிக்கிற நிமித்தமாகப் பிரா மணர்களுக்கு வணங்குகிற தேவரீருடைய பிரபாவமானது குறைந்து போகிறதில்லை. அந்த வணக்கம் தேவரீருக்கு விநோதமாயிருக்கிறது. தேவரீர் இந்த ஜய விஜயர்களுக்கு வேறே தண்டனை விதித்தாலும், விசிதமான ஜீவனத்தை விதித்தாலும், அதையெல்லாம் நாங்கள் யோக்கியமாகவே ஒப்புக் கொள்ளுகிறோம். இல்லாவிட்டாலும் நாங்கள் நிரபராதிகளான இந்த ஜய விஜயர்களைச் சாபத்துடனே கூட்டி வைத்தோமென்று எங்களிடத்தி லேதாகிலும் உசித மான தண்டனமானது பண்ணப்படட்டுமென்று சொல்லு கின்ற ஜனகாதியோகிகளைப் பரர்த்து ஸ்ரீ பகவானனவர் சொல்லுகிறார்.

வாருங்கள் பிராமண சிரேஷ்டர்களே இந்த ஜயவிஜயர் களிருவரும் கோபாவேசமுடைய மனமுடையவர்களாய் அசுர ஜன்மத்தை யடைந்து சீக்கிரமாக என்னுடைய சமீ பத்தையே வந்து அடையப்போகிறார்கள். உங்களாலே யாதொரு சாபமானது கொடுக்கப்பட்டதோ அந்தச் சாப மானது நம்மாலேயே செய்யப்பட்டதென்று அறியக்கடவீர் களென்று அருளிச்செய்கிற பகவத் வாக்கியத்தைக் கேட்டு அந்த ஜனகாதியோகிகள் நேத்திரங்களுக்கு ஆனந்தகரமா கியும், சுவயம் பிரகாசமாகியு மிருக்கிற அந்த ஸ்ரீ வைகுண்ட லோகத்தையும், ஸ்ரீ வைகுண்டவாசியான ஸ்ரீ ஹரியையும் பார்த்து மிகவுஞ் சந்துஷ்டர்களாய், அந்தப் பகவானை அனேகம் பிரதக்ஷணம் பண்ணிச்சேவித்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டு பகவானுடைய ஐசுவரியத்தைக் கொண்டாடிக்கொண்டு போனார்கள். பிற்பாடு ஸ்ரீ பகவா னனவர் தம்முடைய பாரிஷதர்களான ஜயவிஜயர்களைப் பார்த்து நீங்கள் அதோ லோகத்தை யடையுங்கள் பயப்பட வேண்டாம். உங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது. பிரா மணசாபத்தைச் சமர்த்தனானாலும் நிக்கிரகிக்க இச்சிக்கிற தில்லை. அது எனக்கு இஷ்டந்தான். நான் யோக நித்தி ரையை யடைந்திருந்தபோது துவாரகையிலே உங்களாலே தகையப்பட்டு மிகவும் கோபத்தையடைந்த ஸ்ரீ மகாலக்ஷ்மி யாலேயும் சபிக்கப்பட்டீர்கள். இப்போது பிராமணர்களா லேயும் சபிக்கப்பட்டீர்கள். என்னிடத்திலே தீவிரமான பக்தியோகத்தினாலே அந்தப் பிரம்ம சாபத்தைக் கடந்து கொஞ்சகாலத்திலேயே திரும்பவும் என்னுடைய சமீபத்தை வந்து அடையப்போகிறீர்களென்று தம்முடைய துவார

பாலகர்களான ஜயவிஜயர்களைக் குறித்து ஆக்கியாபித்துப் பகவானுனவர் தம்முடைய ஸ்தானத்தை யடைந்தார். பிற்பாடு அந்தப் பாரிஷோத்தமர்களான ஜயவிஜயர்கள் பரிக்கக் கூடாத பிரம்மசாபத்தினுலே பேறிழந்தவர்களாகியும், கருவமில்லாதவர்களுமாய் ஸ்ரீ வைகுண்டத்தினின்றும் விழுந்துவிட்டார்கள். வாருங்கள் புத்திரர்களான தேவர்களே! அப்போது அந்த ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து விழுகையில் விமானத்தின் நுனிகளிலே யிருக்கின்ற பேர்களாலே ஆஹாகார சப்தமானது மிகவும் உண்டாயிற்று. ஸ்ரீ ஹரியினுடைய பாரிஷதோத்தமர்களான இந்த ஜயவிஜயர்களிருவரும் இப்போது திதியினுடைய கர்ப்பத்திலே வைக்கப்படுகின்ற காசிபருடைய வீரியத்தை யடைந்தார்கள். அந்த அசுரர்கள் தேஜசினுலே விருத்தியடையப்போகிருர்கள். அவர்களைப் பகவான் தானே பிரீதியால் தண்டனை செய்யவேண்டுமென்று இச்சித்திருக்கிருர். ஆகையினுலே இந்த விஷயத்திலே நம்முடைய யோசனையினுலே யெவ்வளவு காரியமாகப் போகிறது.



## பதினேழாவது அத்தியாயம்



*அந்த ஜயவிஜயர்களுடைய லோகபயங்கரமான உற்பத்தியும்; இரணியாக்ஷனுடைய திக்குவிஜயத்திலே உண்டான அற்புதமான பிரபாவமும் சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! பிற்பாடு சமஸ்தமான தேவர்களும் பிரம்மாவினுலே சொல்லப்பட்ட, வசனத்தைக் கேட்டுச் சங்கையைவிட்டுத், திரும்பவும் சுவர்க்கம் வந்து சேர்ந்தார்கள். பதிவிரதையான அந்தத் திதிதேவியும் பர்த்தாவினுடைய ஆக்கினையினுலே தன்னுடைய புத்திரர்களிடத்தினின்றும் தேவர்களுக்கு உபத்திரவத்தை எண்ணினவளாய் நூறு வருஷம் கர்ப்பமானது பூரணமான பிற்பாடு இரட்டைப்பிள்ளைகளைப் பெற்ருள். அந்தப் பிள்ளைகள் பிறந்த சமயத்தில் ஆகாசத்திலும், பூமியிலும், சுவர்க்கத்திலும், சமஸ்தலோகங்களிலும் பயங்கரங்களான வுற்பாதங்கள் வெகுவாக உண்டாயின. அதாவது பர்வதங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற பூமியானது நடுங்கிற்று. சமஸ்த

திக்குகளும் ஜொலித்தன. குறைக்கொள்ளிகளோடே கூட இடிகள் விழுந்தன. சமஸ்தமான பிராணிகளுக்கும் பயங் கரங்களான தூமகேதுகள் உண்டாயின. மிகவும் சகிக்கக் கூடாததாகியும், மகா வேகத்தினாலே பங்கென்கிற சப்தத்தை அடிக்கடி பண்ணிக் கொண்டும், மகா விருக்ஷங்களை வேரோடே பிடுங்கிப் போட்டுக்கொண்டும், சுழல்களுடைய சமூகத்தையுடையதாகியும், புழுதியைத்தானே துவஜமாக வுடையதாகிய பெருங்காற்றானது வீசி மிகவும் பிரகாசிக்கின்ற மின்னல்களையுடைய மேகக் கூட்டத்தினாலே காணப்படாமல் ஆகாசத்திலே வியாபிக்கின்ற அந்தகாரத்தினாலே சூரியன் முதலான கிரகநக்ஷத்திரங்களுடைய ஸ்தானமும், ஈஷித்துங் காணப்படாமற் போயிற்று. மிகவும் விர்த்தியடைந்த அலை களும் மகரமீன் முதலான ஜந்துக்களையுமுடைய சமுத்திர மானது மகா வியசனத்தையுடையதுபோல் மிகவும் சப் தித்தது. கிணறு நடபாவி முதலானவைகள் உலர்ந்து போகின்ற தாமரைப் புஷ்பங்களையுடையவைகளாகி நதி களும் கலங்கிப்போயின. ராகுவினாலே பீடிக்கப்பட்ட சந்திர சூரியர்களுக்கு அடிக்கடி பரிவேஷங்களுண்டாயின.

மேகங்களில்லாமல் சப்தங்கள் ரதத்வனிகள்போல் பர்வ தங்களுடைய குகைகளினின்றும் உண்டாயின. பெண்நரிக ளானவை கிராமங்களுடைய மத்தியில் முகத்திலே ஜொலித் துக்கொண்டிருக்கிற அக்கினியைக் கக்கிக்கொண்டு அமங்கல மாக மிகவும் ஊளையிட்டன. நாய்கள் கழுத்தை யுயர வெடுத் துக்கொண்டு பாடுகிறதுபோலவும், அழுகிறதுபோலவும், நான்கு திக்கிலேயும், நாதவிதங்களாகியும், பயங்கரங்களாகி யுங் குலைத்தன. கழுதைகளும், குதிரைகளும், கூர்மையான குளம்புகளாலே பூமியை யுதைத்துக்கொண்டு கூட்டங் கூட் டமாய் ஓடிக்கொண்டிருந்தன. அந்தக் கழுதைகளுடைய கத்துதல்களாலே பக்ஷிகளானவை மிகவும் பயந்து கூண்டு களினின்றும் எழும்பிப்போயின. அந்தக் கோஷங்களாலே மற்றப் பசு மிருக ஜாதிகளும் மலமூத்திரங்களை விட்டுக் கொண்டன. பசுக்கள் இரத்தங்களைக் கறந்துகொண்டு மிக வும் பயப்பட்டன. மேகங்கள் இரத்த மாம்சங்களை வருஷித் தன. தேவதா விக்கிரகங்கள் கண்களினின்றும் ஜலத்தைப் பெருக்கிக்கொண்டு அழுதன. விருக்ஷங்கள் காற்றன்றியில் அடியோடே விழுந்துபோயின. குரூரங்களான கிரகங்க ளானவை பூச்சியர்களான குரு, புதன் முதலான சுபக்கிரகங் களையும், நக்ஷத்திர கணங்களையும், மிகவும் பீடித்து வக்கிர கதியாகச் சஞ்சரித்தன. இன்னும் மற்றவைகளான மகோத்

பாதங்களையும் பார்த்து அதனுடைய தத்துவத்தை யறியாத வர்களான ஜனங்களில் ஜனகாதியர்களைத்தவிர மற்றப்பேர் பயந்தவர்களாய்ப் பிரபஞ்சத்துக்குப் பிரளயம் வந்ததோ வென்று எண்ணிக்கொண்டார்கள். ஆதிதயித்தியர்களான அவர்களிருவரும் சிலைபோன்ற திடமான சரீரத்தினாலே பர்வத சிரேஷ்டங்கள்போல விருத்தியடைந்து சுவர்ண மயங்களான கிரீடங்களின் நுனிகளாலே சுவர்க்கத்தைத் தொடும்படியாயும், பருமனாலே திக்குகளை வியாபிக்கும்படி யான தோள்வளைகளுடனே கூடிக்கொண்டிருக்கிற புஜங்களை யுடையவர்களாயும், அடிக்கடி பாதங்களாலே பூமியை அலைத்துப் போகும்படி செய்கிறவர்களாகியும், மனத்திற் கினிய அரைநாண்மாலையினாலே சூரியமண்டலத்தை அதி சயிக்கச் செய்திருந்த அவர்களில் காசிபப் பிரஜாபதியானவர் முன்னே ஜனித்தவனுக்கு இரணியகசிபுவென்றும், பின்னே ஜனித்தவனுக்கு இரணியாக்ஷனென்றும் நாமகரணம் பண் ணினார். அந்த இரணியகசிபுவானவன் தன்னுடைய தோள் வலியினாலேயும், பிரம்மாவினுடைய வரத்தினாலேயும், மிக வும் பயமில்லாதவனாய் லோகபாலகர்கள் சஞ்சரித்துக்கொண் டிருக்கிற மூன்றுலோகங்களையும், தன்வசமாகப் பண்ணிக் கொண்டான். அவனுக்குத் தம்பியான இரணியாக்ஷனென்பவன் கதாபாணியா யுத்தம்செய்யவேண்டுமென்கிற இச்சையுடைய வனாயும், மிகவும் சகிக்கக்கூடாத வேகத்தையுடையவனாகியும், சப்திக்கின்ற கதையையுடையவனாகியும் பலத்தினாலேயும், வரத்தினாலேயும், மிகவும் கர்வித்தவனாகியும், தட்டுத்தடை யில்லாமல் எங்கும் சஞ்சரிக்கத் தக்கவனாகியு மிருந்தனன். அந்த இரணியாக்ஷனைப் பார்த்துக், கருடனைக்கண்டு பயப் படுகின்ற சர்ப்பங்கள்போல, தேவர்கள் மறைந்துபோனார் கள். அப்போது இரணியாக்ஷனென்பவன் தன்னுடைய தேஜஸினாலே மறைந்துபோன இந்திரன் முதலான தேவர் களை யெங்குந்தேடிக் காணாதவனாய் மிகவும் அட்டஹாசஞ் செய்து சுவர்க்கத்தினின்றும் புறப்பட்டு ஜலக்கிரீடை பண் ணக் கம்பீரமாகியும், பயங்கரமான சப்தத்தை யுடையதாகியு மிருக்கிற சமுத்திரத்தில், மதங்கொண்ட யானையைப்போல் பிரவேசிக்கையில், வருணனுடைய சேனைகளான ஜலஜந் துக்களுடைய கூட்டங்கள் மிகவும் பயத்தை யுடையவைக ளாகி, அவனாலே அடிக்கப்படாதவைகளா யிருந்தாலும் அவனுடைய தேஜஸினாலே மிகவும் திரஸ்கரிக்கப் பட்ட வைகளாய், வெகுதூரம் ஓடிப்போய்விட்டன. பலவானான அந்த அசுரனென்பவன், அந்தச் சமுத்திரத்திலே அனேக வருஷங்கள் சஞ்சரித்து வாயுவினாலே யெழும்பப்பட்ட மகத்



படம் நெ. 4. பக்கம் நெ, 235.

இரணியாக்ஷனுக்கும், வராகரூபியான
பகவானுக்கும் யுத்தம்.

தான அலைகளை யிரும்புமயமான கதையினாலே அடித்துக் கொண்டு வருணனுடைய விபாவரியென்னப்பட்ட பட்டணத்தை யடைந்து, ஜலஜந்துக்களுடைய கூட்டங்களுக்கு ராஜாவாகியிருக்கிற வருணனைக் கண்டு நகைத்து, அவனைப் பரிகாசமாய்த் தாழ்ந்தவன்போல் பிரணாமம்பண்ணி, அவனை நோக்கி நீ பூர்வத்தில் சமஸ்த தைத்திய தானவர்களையும் ஜெயித்து ராஜசூயயாகம் பண்ணிச் சமஸ்த லோகபாலகர்களுக்கும் அதிபதியாகிப் பிரசித்தமான கீர்த்தியை யுடையவனாகி, நானே வீரியவானென்று அகங்காரத்தை யுடைத்தான பேர்களுடைய கர்வத்தை அடக்குகிறவனாகி யிருக்கிறாய். ஆகையினாலே எனக்கும் யுத்தத்தைக் கொடுவென்று மிகவும் கர்வத்தையுடைய சத்ருவினாலே திரஸ்கரிக்கப்பட்டவனாகி அந்த வருணனானவன் தனக்குள்ளே உண்டான கோபத்தை அடக்கிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறான்.

வாராய் அசுரசிரேஷ்டனே! நாங்கள் யுத்தம் பண்ண வேண்டுமென்கிற உற்சாகத்தினின்றும் ஒழிவை யடைந்திருக்கிறோம். யுத்தமார்க்கத்திலே மிகவும் சமர்த்தனான உன்னைச் சந்தோஷிப்பிக்கச் சமர்த்தனரான ஸ்ரீ புருஷோத்தமரைக் காட்டிலும் வேறே ஒருவரையும் நான் பார்க்கவில்லை. ஆகையினாலே நீ அந்தப் பகவானை ஸ்தோத்திரம் பண்ணி யடையக்கடவாய். அவர் உன்னைப்போலொத்த துஷ்டர்களை நாசஞ்செய்கிறதற்காகவும், சத்புருஷர்களை அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்றும் அனேகம் அவதாரங்களைப் பண்ணுகிறார். சீக்கிரமாக அந்தப் பகவானை யடைந்து கர்வபங்கத்தையுடையவனாய் நாய் நரிகளாலே சூழப்பட்டு யுத்த பூமியிலே விழுந்து கிடக்கப் போகிறாயென்றான்.



## பதினெட்டாவது அத்தியாயம்



*இரணியாக்ஷனுக்கும், பூமியை உத்தாரணம் பண்ணுகின்ற வராகரூபியான பகவானுக்கும் உண்டான யுத்தமானது சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! மிகவும் மதத்தையுடைய அந்த இரணியாக்ஷனானவன் வருணனாலே சொல்லப்பட்ட யுத்த பூமியிலே அடிபட்டு விழப்போகிறா யென்கிற வார்த்தையை யெண்ணாமல், நாரத மகரிஷியால் தூண்டப்பட்டு அவரிடத்தினின்றும் ஸ்ரீ ஹரியினுடைய கதியைப்

பார்க்கவேண்டுமென்று மிகவும் விரைவாகப் பாதாளத்திலே பிரவேசித்து, அவ்விடத்திலே வராகரூபியாய்ப் பூமியைத் தம்முடைய கோரப்பல்லி னுனியினுலே உயரத் தாங்கிக் கொண்டும் சிவந்த காந்தியோடே கூடிக்கொண்டுமிருக்கிற நேத்திரத்தினுலே தம்முடைய தேஜசுக்களைத் திரஸ்கரிக்கிற அந்த ஸ்ரீ ஹரியைப் பார்த்துக் காட்டிலே சஞ்சரிக் கின்ற இந்த வராகமானது ஜலத்திலே சஞ்சரிக்கிற தென்று ஆச்சரியத்தையுடையவனுய்ச் சிரித்து, அந்தவராக ரூபியான பகவானைக் குறித்து ஒருவார்த்தை சொல்லுகிறுன்.

வாராய் அறிவிலியே! இந்தப் பூமியானது பிரம்மாவி லுலே பாதாள லோகவாசிகளான எங்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இதை விட்டுவிடு. நான் பார்த்துக்கொண்டி ருக்கையில் இந்தப் பூமியுடனேகூட க்ஷேமமாக நீ போகப் போகிற தில்லையென்று அந்தச் சமுத்திர ஜலத்தினின்றும் வெளிப்புறப்படுகின்ற அந்த ஸ்ரீ ஹரியைச், சுவர்ணவர் ணங்களான மயிர்களையுடைய மச்சியமானது, யானையைப் பின்தொடர்ந்தாற்போல், பின் தொடர்ந்து, பயங்கரமான கோரப்பற்களையுடையவனுகி, இடிமுழக்கம்போலே சப்தத்தை யுடைய அந்த இரணியாக்ஷனனவன், லச்சையில்லாதவர் களாயிருக்கிற துஷ்டர்களுக்கு நிந்தாபயமில்லை யன்றே வென்று சொன்னுன். அந்தப் பகவானுனவர், விசுவ கர்த்தாவான பிரம்மாவினுலே ஸ்தோத்திரம் பண்ணப்பட் டும் தேவர்களாலே புஷ்பங்கள் வருஷிக்கப்பட்டவராய் அந் தச் சத்துரு பார்த்துக் கொண்டிருக்கையில் பூமியை ஜலத் தின்மேலே வைத்து, அந்தப் பூமியினிடத்திலே தம்முடைய ஆதார சக்தியை ஸ்தாபித்து, பின்னுேடே அனுவர்த்தித் துக்கொண்டு வருகின்ற அந்த இரணியாக்ஷனைப் பார்த்து மிகவுங் கோபத்தையுடையவராய் ஒரு வார்த்தை சொல்லுகி றுர். வாராய் அசுரசிரேஷ்டனே! நாங்கள் வனசரங்களான மிருகங்களென்று சொன்னது யதார்த்தமே. உன்னைப்போ லொத்த நாய்களைத்தேடிக்கொண்டிருக்கிறும் மிருத்தியுவின் பாசத்தினுலே கட்டப்பட்டிருக்கின்ற உன்னுடைய அமங் கலமான வார்த்தையைச் சூரர்கள் சிலாகிக்கமாட்டார் கள். பாதாளலோக வாசிகளான அசுரர்களுடைய நிக்ஷேப மான பூமியை அபகரித்தபடியால், லச்சையில்லாமல் உன்னுடைய கதையினுலே துரத்திவிடப் பட்டவர்களானு லும், யுத்தத்திலே மகாப் பிரயாசைப்பட்டுப் பலவானுக இருக்கிற உன்னுடனே வயிரத்தை யுண்டாக்கிப்போட்டு எங்கே போகப்போகிறும். நீ பாதசாரிகளான அசுரசேனு

பதிகளுக்குப் பிரபுவாகவிருந்து யோசனை பண்ணுதவனுய் நம்மை அவமானம்பண்ணுகிருயாதலால் எங்களைச் சங்காரம் பண்ணிப்போட்டு உன் பந்துக்களுடைய கண்ணீரைத் துடைத்து உன் பிரதிக்கினையைப் பூர்த்திசெய்து கொள்ளென்று சொல்லுகிற பகவானைப் பார்த்து, மகா சர்ப்பம் போல் தீவிரமான கோபத்தை யடைந்து பெருமூச்சுவிட்டுக் கலங்கின இந்திரியங்களை யுடையவனுகி அந்த அசுரனுனவன், மகாவேகத்துடன் கிட்டிப்போய்க், கதையினுலே ஸ்ரீ ஹரியை அடித்தான். பகவானும் தம்முடைய மார்பிலே சத்துருவினுலே விடப்பட்ட கதையினுடைய வேகத்தை, யோகியானவன் மிருத்தியுவை லக்ஷயஞ் செய்யாததுபோல், தள்ளிப்போட்டார். திரும்பவும் அந்தக் கதையை யெடுத்து அடிக்கடி சுழற்றிக்கொண்டிருக்கிற அந்தச் சத்துருவை ஸ்ரீ ஹரியானவர் மிகவுங் கோபத்தையுடையவராய் எதிர்த்தார். அந்த அசுரனுனவன் தன்னுடைய கதையினுலே ஸ்ரீ ஹரியினுடைய வலது புருவத்திலே அடித்தான். வாரீர் விதுரரே! கதாயுத்தத்திலே மிகவுஞ் சமர்த்தரான ஸ்ரீ ஹரியானவரும் தம்முடைய கதையினுலே சத்துருவினுடைய கதையைமேலே விழுகிறதற்கு முன்னமே அடித்துப் போட்டார். அந்த ஸ்ரீ ஹரியும் இரணியாக்ஷனும் இருவரும் மகா பெரியவைகளான கதைகளாலே ஒருவரையொருவர் ஜயிக்க வேண்டுமென்கிற இச்சைகளினுலே ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டார்கள். இந்தப்பிரகாரம் மகா குரூராங்களான கதைகளாலே யடிக்கப்பட்டுப் பெருகுகின்ற இரத்தங்களை ஆக்கிராணம் பண்ணுகிறதினுலே மிகவும் விருத்தியடைகின்ற கோபத்தை யுடையவர்களாகி, விசித்திரங்களான யுத்தமார்க்கங்களை ஆச்ரயித்து யுத்தம் பண்ணினுர்கள்.

வாரீர் விதுரரே! பூமிநிமித்தமாகச் சண்டையிடுகின்ற இவர்களுடைய யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்கிற இச்சையுடையவராய்ப் பிரம்மாவானவர் ரிஷிகளாலே சூழப்பட்டு, ஆதிவராகமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணரைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிருர். வாரீர் தேவதேவரே! அடியேனிடத்தினின்றும் அடையப்பட்ட வரத்தை யுடையவனுன இந்த அசுரனுனவன் தேவரீருடைய திருவடிகளை அடுத்திருக்கின்ற நிரபராதிகளான தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும், பசுக்களுக்கும், பயத்தைப்பண்ணிப், பிராணன் முதலானவைகளை அபகரித்துத் தனக்கு எதிரில்லாதவனுய் பகைவரைத்தேடிக்கொண்டு லோகங்களிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிருன். மிகவும் மாயாவியாகியும், கர்விதனுகியும், எங்குந்

தடையில்லாதவனாகியும், மிகவும் துஷ்டனாகியு மிருக்கிற இந்த அசுரனைக், கோபத்தினாலே கலங்கியிருக்கிற சர்ப்பத்தை வால்முதலானதை விளையாட்டுக்குப் பிடித்து இழுக்கிற பாலனானவன்போல விளையாடாமல், அசுரர்கள் விருத்தியை யடைகிற சந்தியாகாலம் வருவதற்கு முன்னையே இவனை ஜயிக்கவேண்டும். லோகங்களுக்கு விநாசகரமாகியும், அசுரர்களுக்கு ஜயத்தைக் கொடுக்கத்தக்கதாகியும், மிகவும் கோரமாகியுமிருக்கிற சந்தியகாலமானது கிட்டியிருக்கிறது. இப்போது அபிசித்துவென்று பெயரையுடைய சுபகாலமானது போயிற்று. அந்த முகூர்த்த சேஷத்திலேயே தேவரீருடைய பக்தர்களான எங்களுக்கு க்ஷேமத்தின் பொருட்டு, ஒருவராலேயும் ஜயிக்கக் கூடாதவனான இந்தச் சத்துருவைச் சீக்கிரமாகச் சங்கரிக்கவேண்டும். தெய்வாதீனமாக இவனுக்கு மிருத்யுவாக விதிக்கப்பட்ட தேவரீரை இந்த அசுரனானவன் சுவயமாகவே அடைந்தானாதலால் இவனைச் சீக்கிரத்திலேயே சங்கரித்து லோகங்களை ஸ்தாபிக்கக்கடவீர் என்றனர்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்



*பிரம்மா முதலான தேவர்களாலே பிரார்த்திக்கப்படுகின்ற வராக ரூபியான ஸ்ரீ ஹரியினாலே இரணியாக்ஷன் சங்கரிக்கப் பட்டானென்று சொல்லப்படுகின்றது.*

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்தப் பகவானானவர் பிரம்மாவினுடைய நிஷ்கபடமாகியும் அமிர்தம் போலேயு மிருக்கின்ற வசனத்தைக்கேட்டுச் சிரித்துப் பிரீதியுடனே கூடிக்கொண்டிருக்கிற கடைக்கண் பார்வையினாலே அந்த வார்த்தையை அங்கீகரித்து, எதிரே நிற்பவனாகிச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற அந்தச் சத்துருவான அசுரனுடைய கபோலப் பிரதேசத்திலே அடித்தார். அந்த அசுரனானவன் தனது கதையினாலே பகவானுடைய கதையானது கையினின்றும் நழுவிச்சுழன்று விழுந்துபோகும்படி அடித்தது மிகவும் ஆச்சரியகரமாயிருந்தது. அந்த அசுரனானவன் நிராயுதரான ஸ்ரீ ஹரியைப் பாதிக்காமல் தர்மத்தை அனுசரித்துக் கொண்டிருந்தான். அப்போது பகவானானவர் தம்முடைய கதை அடிபட்டுப் போனதற்குச் சமஸ்தமான பேர்களுடன்

தாமும் ஆ! ஆ! வென்று அவனுடைய தர்மத்தைக்கொண்டாடித் தம்முடைய சக்கரத்தை ஸ்மரித்தார். தக்ஷணம் அது மிகவும் பரபரப்புடனே சுவாமியினுடைய திருக்கையில் நின்றது. பிறகு சக்கிராயுதத்தை யுடையவராகி அசுரனென்று பெயரை யுடைத்தான தம்முடைய பாரிஷதசிரேஷ்டனுடனே யுத்தம்பண்ணுகின்ற அந்தப் பகவானுடைய பிரபாவத்தை அறியாதபேர்களான தேவர்கள் இந்த அசுரனைச் சங்கரிக் கக்கடவீரென்று நான்கு பக்கமும் சொல்லிக்கொண்டார்கள். அந்த அசுரனானவன், சக்கிரபாணியாயும், பத்மதளம்போலொத்த நேத்திரங்களை யுடையவருமான அந்த ஸ்ரீ பகவான் எதிரே யிருக்கிறதைப் பார்த்துக் கோபத்தினாலே கலங்கின இந்திரியங்களை யுடையவனாய்ப் பெருமூச்சு விட்டு, உதடுகளைக் கடித்துக்கொண்டு, மகா பயங்கரங்களான கோரப்பற்களை யுடையவனாய், நேத்திரங்களினாலே தகித்துப் போடுகிறவன்போல் பார்த்து, இந்த அடியுடன் நீ மாண்டாயென்று சொல்லித் தன்னுடைய கதையினாலே அந்த ஸ்ரீ ஹரியை அடித்தான்.

அப்போது யக்கிய வராகமூர்த்தியான அந்தப் பகவானானவர், தம்முடைய இடது காலினாலே லீலையாகவே மகாவாயு வேகத்தையுடைய அந்தக் கதையைப் பரிகரித்து அவனைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் அசுரனே! என்னை ஜயிக்கவேண்டுமென்று இச்சையையுடைய நீ ஆயுதத்தை யெடுத்துக்கொள்ளென்று சொல்ல, அந்த அசுரனானவன் திரும்பவும் அந்தக் கதையினாலே பகவானை அடித்து மிகவும் அட்டகாசம் பண்ணினான். அப்போது பகவானும் தம் மேலேவந்து விழுகின்ற அந்தக் கதையைக், கருடனானவர் சர்ப்பத்தைப் பிடிப்பதுபோல், பிடித்துக்கொண்டார். அப்போது அந்த அசுரனானவன், தன்னுடைய பவுருஷம் திரஸ்கரிக்கப்பட்டுக் கர்வபங்கத்தை யுடையவனாய், அந்த ஸ்ரீ ஹரியினாலே திருப்பவும் கொடுக்கப்படுகின்ற கதையைக் கிரகிக்க இச்சியாதவனாய்ச், சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினிபோலே, கவளீகரியா நின்றும், மூன்று சிகைகளை யுடையதாகியுமிருக்கிற சூலத்தை ஸ்ரீ ஹரியின் பொருட்டுப் பிராணனை யுத்தேசித்துப் பிரயோகித்தான். அந்தச் சூலத்தைத் தீக்ஷணமான கூர்மையையுடைய சக்கரத்தினாலே, பூர்வத்தில் அமிர்தகலசத்தைக் கொண்டுவருகின்ற கருடன்மீது பிரயோகிக்கப்பட்ட வச்சிராயுதத்தை அதமாகப் பண்ணுகைக்குக் கருடனால் விடப்பட்ட ஒரு இறகை இந்திரனானவன் சேதித்தாற்போல், சேதித்துப் போட்டார். அந்த அசுரனு

னவன் விருத்தியடைகின்ற கோபத்தையுடையவனாய் எதிரே வந்து விசாலமாகியும், ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு வாசஸ்தானமாகியுமிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய மார்பை முஷ்டியினாலே குத்தி அந்தர்த்தானத்தை யடைந்தான். பகவானும், புஷ்பச்செண்டினாலடிபட்ட கஜமானது அதை லக்ஷியம்செய்யாததுபோல், அந்தக் குத்தினைக் கொஞ்சமாகிலும் லக்ஷியம் செய்யாமலிருந்தார். பிற்பாடு அந்த அசுரனானவன் யோக மாயைக்கு ஈஸ்வரனான ஸ்ரீ ஹரியினிடத்திலே யனேக பிரகாரமான மாயையைச் செய்ய ஆரம்பித்தான். அதாவது மகா வேகத்தையுடைய வாயுக்கள் வீசியும் புழுதி மழையினாலே அந்தகாரமாகச் செய்யப்பட்டுக் கவண்களாலே யெறியப்பட்ட கல்லுகள்போல் நான்கு திக்குகளினின்றும் விழுந்தன. மகத்தான மின்னல்கள், இடி முழக்கங்கள், இவற்றுடன் கூடிய மேகங்கள், அடிக்கடி பாம்சங்கள், மயிர்கள், இரத்தங்கள், மலமூத்திரங்கள், எலும்புகள் இவைகளை வருஷித்தன. ஆகாசமானது சந்திர சூரிய நக்ஷத்திரங்கள் முதலான கிரகங்கள் பிரகாசியாமல் வியாபித்திருந்தது.

வாரீர் விதுரரே! பருவதங்களானவை நானாவிதங்களான ஆயுதங்களை வருஷிக்கிறதாகக் காணப்பட்டன. திகம்பரிகளாகியும், சூலத்தையுடையவர்களாகியும், தலைமயிர்களை விரித்துக்கொண்டுமிருக்கிற ராக்ஷஸிகள் காணப்பட்டார்கள். ரதகஜ துரக பதாதிகளுடனே யக்ஷராக்ஷஸர்களாலே வெட்டு குத்தென்று மிகவும் உக்கிரங்களான சொற்கள் சொல்லப்பட்டன. அப்போது சமஸ்த பிரஜைகளும் மிகவும் பயந்தவர்களாய் இந்தப் பிரபஞ்சத்திற்குப் பிரளயகாலந்தான் வந்ததென்று நடுங்கினார்கள். அப்போது பகவானானவர் அசுர மாயைகளை நாசம்பண்ணத் தமக்கு மிகவும் இஷ்டமான சுதரிசனாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணினார். அப்போது திதிதேவியானவள் தனது பர்த்தாவினுடைய ஆக்கினையை ஸ்மரித்துக்கொண்டு சரீரத்தில் நடுக்கங்கொள்ள, ஸ்தனத்தினின்றும் இரத்தமானது பெருகிற்று. அந்த அசுரனானவன் திரும்பவும் ஸ்ரீ ஹரியைக் கோபத்தினாலே வச்சிராயுதம் போலத் திடங்களான முஷ்டிகளாலே குத்த, பகவான் இந்திரன் விருத்திராசுரனை யடித்தாற்போல அவனுடைய கபோலத்திலே யடித்தனர். விசுவகர்த்தாவான பகவானாலே அடிபட்டு நான்கு பக்கமும் சுழலுகின்ற சரீரத்தை யுடையவனாகி, விழிகள் பிதுங்கி, கை, கால், கழுத்து இவைகள் சூர்ணமாய் மகாவாயுவினாலே வேரோடே பிடுங்கப்பட்ட விருக்ஷத்தைப்போல், விழுந்தான். இப்படி பூமியிலே

விழுந்து குரூரமான கோரப்பற்களால் உதடுகளைக் கடித்துக்கொண்டிருக்கிற அசுரனைப் பார்த்து, அங்கே வந்திருந்த பிரம்மா முதலான பேர்கள், இப்படிப்பட்ட மரணத்தை யெவன்தான் அடைவனென்று, கொண்டாடி வியப்பை யடைந்து, யோகீஸ்வரர்களான பேர்கள் மோக்ஷத்தை யடையவேண்டு மென்ற இச்சையினாலே யாதொரு பகவானை யேகாந்தத்திலே தியானம் பண்ணிக்கொண்டிருக்கிறார்களோ, அந்தப் பகவானுடைய திருவடியினாலேயே அடிக்கப்பட்டவனாய், அவருடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டே சரீரத்தை விட்டு விட்டானன்றோ? ஸ்ரீ பகவானுடைய பாரிஷதர்களா யிருக்கிற இவர்கள், பிராம்மண சாபத்தினாலே அசுர ஜன்மத்தை யடைந்தவர்கள், திரும்பவும் சில ஜன்மங்களிலே சாபத்தினின்றும் விடுபட்டவர்களாய், ஸ்ரீ வைகுண்ட ஸ்தானத்தையே யடைவர் என்றபடி அவர்கள் தங்கள் பதங்களை யடைந்தனரென்று சொல்லிக்கொண்டு அந்தப் பகவானைப் பார்த்துத் தேவதைகள் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். சமஸ்த யக்கியங்களுக்கும் காரணரூபராகியும், பிரபஞ்சத்தின் பரிபாலன காலத்திலே கிரகிக்கப்பட்ட சத்துவமூர்த்தியாகியு மிருக்கிற தேவரீர் பொருட்டு அனேகம் நமஸ்காரம். மர்பபேதியா யிருக்கிற இந்த அசுரனானவன் அதமாய்ப் போனானே நாங்களும் தேவரீருடைய திருவடிகளிலே பக்தியினாலே மிகவும் சுகிர்தர்களானோமென்று பிரம்மா முதலான தேவர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய் அளவில்லாத விபவத்தையுடையதான தம்முடைய ஸ்ரீ வைகுண்டலோகத்தை யடைந்தார். மகா கம்பீரமான பராக்கிரமத்தையுடைய இரணியாக்ஷனானவன் ஸ்ரீ ஹரியினாலே கிரீடார்த்தமான மரப்பாவைபோலவே திரஸ்கரிக்கப்பட்ட சரித்திரமானது கேட்கப்பட்டபடிக்கு உமக்குச் சொல்லப்பட்ட தென்று மைத்திரேயமகரிஷி சொன்ன பகவானுடைய கதையைக் கேட்டு மகா பாகவதரான விதுரரானவர் பரமமான ஆனந்தத்தை யடைந்தார். வாராய் மகாராஜனே! மிகவும் புண்ணியகரமாகியும், பவித்திரமாகியும், தனகரமாகியும், புகழைத் தருவதாகியும், ஆயுசு, இஷ்டங்கள் இவைகளுக்கு ஸ்தானமாகியும், பிராணன், இந்திரியங்கள் இவைகளுக்கு ரக்ஷகமாகிமாகியும், இருதயத்திலே சௌரியத்தை விருத்திபண்ணிக்கொண்டுமிருக்கிற இந்த இரணியாக்ஷ வதத்தைக் கேட்கிற பேர்களுக்கு அந்திய காலத்தில் ஸ்ரீமந் நாராயணரே கதியாக விருப்பார்.



## இருபதாவது அத்தியாயம்.

பூர்வம் உபக்கிரமித்துச் சொல்லப்பட்டிருந்த சிருஷ்டியானது
திரும்பவும் சொல்லுகைக்கு விதுரராலே மைத்திரேய
மகாரிஷிக்கு ஞாபகம் பண்ணப்பட்டதைச்
சொல்லப்படுகின்றது.

### சவுனக மகரிஷியினுடைய வாக்கியம்

வாரீர் சூதபுராணிகரே! சுவாயம்பு மனுவானவர் பூமியினுடைய பிரதிஷ்டையை யடைந்து ஈசுவரனிடத்திலே லயத்தை யடைந்திரா நின்ற பிராணிகளைத் திரும்பவும், எந்த வுபாயங்களினாலே சிருஷ்டித்தார்? மகா பாகவதராகியும், ஸ்ரீ கிருஷ்ணருக்கு ஏகாந்த சுகிர்தராகியும், ஸ்ரீ கிருஷ்ணருடைய வார்த்தையை அனாதரவு பண்ணின திருதராஷ்டிரனை மிகவும் அபராதியென்று விட்டுவிட்டவராகியும், சாக்ஷாத் ஸ்ரீ வியாசருக்குச் சமானராகியும், அவருடைய புத்திரராகியும், சர்வபிரகாரத்தினாலேயும், ஸ்ரீ கிருஷ்ணரை ஆஸ்ரயித்தவராகியும், மகா பாகவதர்களை அனுவர்த்தித்திருக்கிற விதுரரானவர், தீர்த்தயாத்திரையைப் பண்ணிக்கொண்டு கங்காதுவாரத்திலே சகல தத்துவங்களையும் அறிந்திருக்கிற மைத்திரேயமஹரிஷியை யெந்த விருத்தாந்தத்தைக் கேட்டார்? அதை யெங்களுக்குச் சொல்லவேண்டு மென்று கேட்கிற ரிஷிகளைப் பார்த்துச் சூதர் சொல்லுகிறார். வாருங்கள் சவுனகாதி மகரிஷிகளே! தம்முடைய மாயையினாலேதரிக்கப்பட்ட ஸ்ரீ ஹரியானவர் பூமியினுடைய வுத்தாரணஞ்செய்து அவராலே அடிக்கப்பட்டுபோன இரணியாக்ஷன் சரிதையையுங்கேட்டு விதுரரானவர் மிகவும் சந்தோஷத்தை யுடையவராய் மைத்திரேய மகரிஷியைப் பார்த்துத் திரும்பவும் ஒருவார்த்தை கேட்கிறார்.

வாரீர் பிரம்மரிஷியே! பிரஜாபதிகளுக்குப் பதியான அந்தப் பிரம்மாவானவர் பிரதமத்திலே பிரஜா சிருஷ்டியிலே மரீசிப்பிரஜாபதி முதலான பேர்களும், சுவாயம்பு மனுவும், பிரம்மாவினுடைய ஆக்கினையினாலே பாரியைகளுடனே கூடிக்கொண்டு இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தார்களா? அல்லது பாரியைகளில்லாமல் சுதந்திரர்களாகவே சிருஷ்டித்தார்களா? எல்லாரும் ஏகமாய்ச் சேர்ந்துகொண்டு இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தார்

களா? அதைச் சொல்லவேண்டுமென்று கேட்கிற விதுரரைப்பார்த்து மைத்திரேய மகரிஷி சொல்லுகிறார். வாரீர் விதுரரே! மிகவும் சிந்திக்கக்கூடாததாகியும் ஜீவர்களுடைய அதிருஷ்டரூபமாகியும், பிரகிருதிக்கு இருப்பிடமாகியுமிருக்கிற பகவானுடைய குணத்திரய ரூபமான பிரகிருதியினின்றும் மகதத்துவ முண்டாயிற்று. ரஜோகுணத்தைப் பிரதானமாகவுடைய அந்த மகத்தத்துவத்தினின்றும் சப்தாதி மூன்று குணத்தையுடைய அகங்கார முண்டாயிற்று. அந்த அகங்காரமானது சப்தாதி விஷயங்களையும், ஆகாச முதலான மகா பூதங்களையும், ஞானேந்திரியங்களையும், கர்மேந்திரியங்களையும், அதினபிமான தேவர்களையும், சிருஷ்டித்தது. இந்திரியங்கள் அகங்காரத்தினுடைய அம்சங்கள். இந்திரியாபிமானி தேவர்களும், மனதும், சத்துவகுணத்தினுடைய அம்சங்கள். இவை தனித்தனியே யிருந்துகொண்டு இந்தப் பிரம்மாண்டத்தைச் சிருஷ்டித்தன. பரமாத்மாவினுடைய சம்பந்த மில்லாததான அந்தப் பிரம்மாண்ட கோசமானது, ஜலத்தின்மேலே அனேகமாயிரம் வருஷங்கள் மிதந்து கொண்டிருந்தது. பின்பு பகவானான ஈசுவரனானவர், அந்தப் பிரம்மாண்டத்திலும் பிரவேசித்தார். அந்தப் பிரம்மாண்ட சரீரியான பரமபுருஷனுடைய நாபியினின்றும் அனேகமாயிரம் சூரியர்கள்போல மிகவும் தேஜஸை யுடையதாகியும், சமஸ்த ஜீவர்களுடைய சமூகத்துக்கு நிவாசஸ்தானமாகியு மிருக்கிற கமலமானது உண்டாயிற்று. அந்தக் கமலத்திலே பிரம்மா சுவயமாகவே யுண்டானார்.

அந்தப் பிரம்மாவானவர், அந்த ஜலத்துக்குள்ளே சயனித்துக் கொண்டிருக்கின்ற பகவானாலே பிரயோகிக்கப்பட்டவராய் யதாபூர்வமாக இந்தலோக மரியாதைகளை நாமரூபாதி விபாகங்களாலே சிருஷ்டித்தார். பிரதமத்திலே அபுத்திபூர்வமாகத் தாமிசிரமென்றும், அந்த தாமிசிரமென்றும், தமசென்றும், மோகமென்றும், மகாமோகமென்றும், ஐந்து பருவங்களை யுடையதான அவித்தையைச் சிருஷ்டித்து, அதனிடத்திலே சந்தோஷப்படாதவராய், அந்தச் சரீரத்தை விட்டுவிட்டார். அந்தச் சரீரத்தினின்றும் யக்ஷ ராக்ஷதர்களுண்டாகிப் பசிதாகங்களினாலே பீடிக்கப்பட்டவர்களாய், அந்தப் பிரம்மாவைப் பக்ஷித்துப் போடுங்களென்றும், ரக்ஷிக்க வேண்டாமென்றும் சொன்னார்கள். அப்போது பிரம்மாவானவர் மிகவும் பயந்தவராய் அவர்களைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார்: நீங்கள் என்னைப் பக்ஷிக்கவேண்டாம் ரக்ஷிக்கக்கடவீர்கள்.

எனக்குப் புத்திரர்களாக வுண்டானவர்களிலே எவர்கள் பக்ஷித்துப்போடுங்களென்று சொன்னார்களோ அவர்கள் யக்ஷர்களாகவும், எவர்கள் ரக்ஷிக்கவேண்டாமென்று சொன்னார்களோ அவர்கள் ராக்ஷதர்களாகவு மாகவென்றனர். பிரதானமாகச் சிருஷ்டித்த தேவர்கள் அந்தப் பிரம்மாவினாலே விடப்பட்டுப் பகல்ரூபமாகிய அந்தச் சரீரத்தை லீலைபண்ண இச்சையை யுடையவர்களாய்க் கிரகித்தார்கள். அந்தப் பிரம்மாவானவர் தம்முடைய ஜகனப் பிரதேசத்தினின்றும், ஸ்திரீகளிடத்திலே ஆசக்தியை யுடையவர்களான அசுரர்களைச் சிருஷ்டித்தார். அந்த அசுரர்கள் மிகவும் ஆசையை யுடையவர்களானபடியினாலே ரதிக்கிரீடையின் பொருட்டு அந்தப் பிரம்மாவை அடைந்தார்கள். பிரம்மாவானவர் லச்சையில்லாதவர்களான அசுரர்களாலே அனுசரிக்கப் பட்டவராய், மிகவுங் கோபத்தையும், பயத்தையும் அடைந்து ஓடிப்போய், வரப்பிரதராகியிருக்கிற ஸ்ரீ ஹரியைச் சரணமாக அடைந்து, தேவரீருடைய கடாக்ஷத்தினாலே பிரஜைகளைச் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறேன். பாபிஷ்டர்களான இந்த அசுரர்கள் ரதிக்கிரீடை பண்ணுகைக்கு என்னை யடைந்து தொந்தரை செய்கிறார்களென்று விசனப்படுகிற அந்தப் பிரம்மாவைப் பார்த்துக், கோரமான இந்தச் சரீரத்தை விட்டுவிடுமென்று பகவானாலே சொல்லப்பட்டவராய், அந்தப் பிரம்மாவானவர் சரீரத்தை விட்டுவிட்டார்.

வாரீர் விதுரரே! சமஸ்தமான அசுரர்களானவர்கள் சந்தியாகால ரூபமாயிருக்கிற அந்தப் பிரம்மாவினுடைய சரீரத்தைச், சகலாபரண பூஷிதையான ஸ்திரீயாகவெண்ணி, அந்தச்சரீரத்தில் மிகவும் மோகத்தையடைந்து, இந்தப் பிரகாரங் கேட்கிறார்கள்: வாராய் வாழைமரப்போன்ற தொடைகளை யுடையவளே! நீ யார்? யாருடைய பெண்? இவ்விடத்திலே உனக்கென்ன காரியம்? உன்னுடைய ரூபமாகிற விலையில்லாத வஸ்துவினாலே பாக்கிய வீனர்களான எங்களை மிகவும் பாதிக்கிறாய்? உன்னுடைய ஜாதிகுல முதலானவைகளைக் கேட்கிறதினாலே பிரயோஜன மென்ன? உன்னுடைய பார்வையினாலே எங்களுடைய மனதை யலையச்செய்கிறாய். கையினாலே அடிக்கின்ற பந்தானது அடிக்கடி யெழும்பி விழுகின்றதுபோல, உன்னுடைய பாதபத்மமானது ஓரிடத்திலே ஸ்திரமாக இருக்கவில்லை. மிகவும் பெரிதாயிருக்கிற ஸ்தனங்களின் பாரத்தினாலே பயப்படுகின்ற உன்னுடைய இடையானது இளப்பை யடைகிறது. உனது கடைக்கண் பார்வையானது மகா ஆலசியத்தை யுடையதாக விருக்கிறது.

சோபனமான கூந்தலையுடைய முகமானது மிகவும் நிர்ம்மல மாக விளங்குகிறதென்று நினைத்து, அந்தச் சந்தியா காலமா கிற ஸ்திரீக்குச் சூரியனே பந்தாகவும், மேகங்களுடைய மின்னே இடையாகவும், நக்ஷத்திரங்களுடைய பிரகாசத்தைக் கடைக்கண் பார்வையாகவும், அந்தகாரத்தை அவளுடைய கேசங்களாகவும், மூடபுத்தியை யுடைய அந்த அசுரர்கள் எண்ணிக் கிரகித்தார்கள்.

பிறகு அந்தப் பிரம்மாவானவர் கம்பீரமான அபிப்பிரா யத்தை யுடையவராய்ச் சிரித்துத் தம்முடைய சரீரத்தைத் தாமே ஆக்கிராணம் பண்ணிக் கொண்டு, சௌந்தரியத்தி னாலே கந்தருவர்களையும் அப்சரசுகளுடைய கூட்டங்களையுஞ் சிருஷ்டித்தார். பிற்பாடு மிகவும் காந்தியை யுடையதாகியும், நீலரூபமாகியுமிருக்கிற அந்தச் சரீரத்தையும் விட்டுவிட்டார். அதை விசுவாவசு முதலான கந்தருவர்கள் பிரீதியினாலே கிர கித்தார்கள். பின்னையும் அந்தப் பிரம்மாவானவர் தம் முடைய ஆலசியத்தினாலே பூதபிசாசங்களைச் சிருஷ்டித்துத், திகம்பரர்களாய் மயிர்களை விரித்துக்கொண்டிருக்கிற அவர் களைப்பார்த்துக் கண்களை மூடிக்கொண்டார். அந்தப் பூத பிசாசங்களானவர்கள் பிரம்மாவினாலே விடப்பட்டவுடலைச் சோம்பலென்னும் பெயரை யுடையதான சரீரமாக அடைந் தார்கள். இந்திரியங்களுக்குத் துர்ப்பலமான சரீரத்தை நித் திரையென்று சொல்லுவார்கள். பூதகணங்களானவர்கள் இந் திரிய வாட்டத்தினாலே அசுசியாயிருக்கிற பேர்களைப் பிரமிக் கப் பண்ணுகிற அந்த பூரணத்தை வெறியுள்ளதென்று கிர கித்தனர். பிறகு பிரம்மாவானவர் அப்பிரத்யக்ஷமாக அன் னத்தைப் புசிக்கிற சாத்திய கணங்களையும், பிதுர்க்கணங்களை யும் சிருஷ்டித்தார். கர்மசீலர்களான பேர்கள் சாத்தியர்கள் பொருட்டும், பிதுர்க்கள் பொருட்டும், சிரத்தையாக அவ்விய கவ்வியங்களைக் கொடுக்கிறார்கள். பிறகு பிரம்மாவானவர் அந்தர்த்தான சக்தியினாலே, சித்தர்களையும், வித்தியாதரர் களையும் சிருஷ்டித்து, ஆச்சரியகரமான அந்தர்த்தான மென்று பெயரையுடையதான சரீரத்தை அவர்களுக்குக் கொடுத்துத், தம்முடைய பிரதிபிம்பத்தினின்றும் கின்னரர் களையும், கிம்புருடர்களையும் சிருஷ்டித்தார். அந்தக் கின்ன ரர், கிம்புருடரானவர்கள் ஸ்திரீ புருடரூபமா யிருந்து கொண்டு, அருணோதய காலத்திலே அந்தப் பிரம்மாவையே கானம்பண்ணிக்கொண்டு, பிரதி பிம்ப ரூபமான அந்தச் சரீரத்தையே கிரகித்தார்கள். வாரீர் விதுரரே! அவரு டைய கேசங்களினின்றும் அகியென்னப்பட்டும், விசாலமான

எனக்குப் புத்திரர்களாக வுண்டானவர்களிலே எவர்கள் பக்ஷித்துப்போடுங்களென்று சொன்னார்களோ அவர்கள் யக்ஷர்களாகவும், எவர்கள் ரக்ஷிக்கவேண்டாமென்று சொன்னார்களோ அவர்கள் ராக்ஷதர்களாகவு மாகவென்றனர். பிரதானமாகச் சிருஷ்டித்த தேவர்கள் அந்தப் பிரம்மாவினாலே விடப்பட்டுப் பகல்ரூபமாகிய அந்தச் சரீரத்தை லீலைபண்ண இச்சையை யுடையவர்களாய்க் கிரகித்தார்கள். அந்தப் பிரம்மாவானவர் தம்முடைய ஜகனப் பிரதேசத்தினின்றும், ஸ்திரீகளிடத்திலே ஆசக்தியை யுடையவர்களான அசுரர்களைச் சிருஷ்டித்தார். அந்த அசுரர்கள் மிகவும் ஆசையை யுடையவர்களானபடியினாலே ரதிக்கிரீடையின் பொருட்டு அந்தப் பிரம்மாவை அடைந்தார்கள். பிரம்மாவானவர் லச்சையில்லாதவர்களான அசுரர்களாலே அனுசரிக்கப் பட்டவராய், மிகவுங் கோபத்தையும், பயத்தையும் அடைந்து ஓடிப்போய், வரப்பிரதராகியிருக்கிற ஸ்ரீ ஹரியைச் சரணமாக அடைந்து, தேவரீருடைய கடாக்ஷத்தினாலே பிரஜைகளைச் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறேன். பாபிஷ்டர்களான இந்த அசுரர்கள் ரதிக்கிரீடை பண்ணுகைக்கு என்னை யடைந்து தொந்தரை செய்கிறார்களென்று விசனப்படுகிற அந்தப் பிரம்மாவைப் பார்த்துக், கோரமான இந்தச் சரீரத்தை விட்டுவிடுமென்று பகவானாலே சொல்லப்பட்டவராய், அந்தப் பிரம்மாவானவர் சரீரத்தை விட்டுவிட்டார்.

வாரீர் விதுரரே! சமஸ்தமான அசுரர்களானவர்கள் சந்தியாகால ரூபமாயிருக்கிற அந்தப் பிரம்மாவினுடைய சரீரத்தைச், சகலாபரண பூஷிதையான ஸ்திரீயாகவெண்ணி, அந்தச்சரீரத்தில் மிகவும் மோகத்தையடைந்து, இந்தப் பிரகாரங் கேட்கிறார்கள்: வாராய் வாழைமரப்போன்ற தொடைகளை யுடையவளே! நீ யார்? யாருடைய பெண்? இவ்விடத்திலே உனக்கென்ன காரியம்? உன்னுடைய ரூபமாகிற விலையில்லாத வஸ்துவினாலே பாக்கிய வீனர்களான எங்களை மிகவும் பாதிக்கிறாய்? உன்னுடைய ஜாதிகுல முதலானவைகளைக் கேட்கிறதினாலே பிரயோஜன மென்ன? உன்னுடைய பார்வையினாலே எங்களுடைய மனதை யலையச்செய்கிறாய். கையினாலே அடிக்கின்ற பந்தானது அடிக்கடி யெழும்பி விழுகின்றதுபோல, உன்னுடைய பாதபத்மமானது ஓரிடத்திலே ஸ்திரமாக இருக்கவில்லை. மிகவும் பெரிதாயிருக்கிற ஸ்தனங்களின் பாரத்தினாலே பயப்படுகின்ற உன்னுடைய இடையானது இளப்பை யடைகிறது. உனது கடைக்கண் பார்வையானது மகா ஆலசியத்தை யுடையதாக விருக்கிறது.

சோபனமான கூந்தலையுடைய முகமானது மிகவும் நிர்ம்மல மாக விளங்குகிறதென்று நினைத்து, அந்தச் சந்தியா காலமா கிற ஸ்திரீக்குச் சூரியனே பந்தாகவும், மேகங்களுடைய மின்னே இடையாகவும், நக்ஷத்திரங்களுடைய பிரகாசத்தைக் கடைக்கண் பார்வையாகவும், அந்தகாரத்தை அவளுடைய கேசங்களாகவும், மூடபுத்தியை யுடைய அந்த அசுரர்கள் எண்ணிக் கிரகித்தார்கள்.

பிறகு அந்தப் பிரம்மாவானவர் கம்பீரமான அபிப்பிரா யத்தை யுடையவராய்ச் சிரித்துத் தம்முடைய சரீரத்தைத் தாமே ஆக்கிராணம் பண்ணிக் கொண்டு, சௌந்தரியத்தி னாலே கந்தருவர்களையும் அப்சரசுகளுடைய கூட்டங்களையுஞ் சிருஷ்டித்தார். பிற்பாடு மிகவும் காந்தியை யுடையதாகியும், நீலரூபமாகியுமிருக்கிற அந்தச் சரீரத்தையும் விட்டுவிட்டார். அதை விசுவாவசு முதலான கந்தருவர்கள் பிரீதியினாலே கிர கித்தார்கள். பின்னையும் அந்தப் பிரம்மாவானவர் தம் முடைய ஆலசியத்தினாலே பூதபிசாசங்களைச் சிருஷ்டித்துத், திகம்பரர்களாய் மயிர்களை விரித்துக்கொண்டிருக்கிற அவர் களைப்பார்த்துக் கண்களை மூடிக்கொண்டார். அந்தப் பூத பிசாசங்களானவர்கள் பிரம்மாவினாலே விடப்பட்டவுடலைச் சோம்பலென்னும் பெயரை யுடையதான சரீரமாக அடைந் தார்கள். இந்திரியங்களுக்குத் துர்ப்பலமான சரீரத்தை நித் திரையென்று சொல்லுவார்கள். பூதகணங்களானவர்கள் இந் திரிய வாட்டத்தினாலே அசுசியாயிருக்கிற பேர்களைப் பிரமிக் கப் பண்ணுகிற அந்த பூரணத்தை வெறியுள்ளதென்று கிர கித்தனர். பிறகு பிரம்மாவானவர் அப்பிரத்யக்ஷமாக அன் னத்தைப் புசிக்கிற சாத்திய கணங்களையும், பிதுர்க்கணங்களை யும் சிருஷ்டித்தார். கர்மசீலர்களான பேர்கள் சாத்தியர்கள் பொருட்டும், பிதுர்க்கள் பொருட்டும், சிரத்தையாக அவ்விய கவ்வியங்களைக் கொடுக்கிறார்கள். பிறகு பிரம்மாவானவர் அந்தர்த்தான சக்தியினாலே, சித்தர்களையும், வித்தியாதரர் களையும் சிருஷ்டித்து, ஆச்சரியகரமான அந்தர்த்தான மென்று பெயரையுடையதான சரீரத்தை அவர்களுக்குக் கொடுத்துத், தம்முடைய பிரதிபிம்பத்தினின்றும் கின்னரர் களையும், கிம்புருடர்களையும் சிருஷ்டித்தார். அந்தக் கின்ன ரர், கிம்புருடரானவர்கள் ஸ்திரீ புருடரூபமா யிருந்து கொண்டு, அருணோதய காலத்திலே அந்தப் பிரம்மாவையே கானம்பண்ணிக்கொண்டு, பிரதி பிம்ப ரூபமான அந்தச் சரீரத்தையே கிரகித்தார்கள். வாரீர் விதுரரே! அவரு டைய கேசங்களினின்றும் அகியென்னப்பட்டும், விசாலமான

படத்திலுலே பெருத்த முத்துக்களை யுடையனவாகியும், மிகவும் வேகத்தை யுடையனவாகியும், மகா கோபத்தை யுடையனவாகியு மிருக்கிற சர்ப்பங்களுண்டாயின. பிறகு தம்முடைய குணத்திலுலேயே லோககர்த்தாக்களான மனுக்களைச் சிருஷ்டித்து, அவர்கள் பொருட்டுப் புருஷரூபமான தம்முடைய சரீரத்தைக் கொடுத்தார். அப்போது பூர்வத்திலே சிருஷ்டிக்கப்பட்ட பேர்கள் அந்த மனுக்களைப் பார்த்துப் பிரம்மாவைப் புகழ்ந்து, இனி அக்கினிஹோத்திர முதலான கிரியைகளினுலே நாங்களெல்லாரும் அவிற்பாக முதலானதைப் புசித்துக் கொண்டிருப்போமென்று கொண்டாடினுர்கள். பின்னையும், அந்தப் பிரம்மாவரனவர் சுவாசமான இந்திரியங்களை யுடையவராய்த் தபசுடனேயும், உபாசனையுடனேயும், ஆசனமுதலான யோகத்துடனேயும், வைராக்கிய சம்பத்துடனேயுங் கூடின ரிஷிகளான புத்திரர்களைச் சிருஷ்டித்துத், தம்முடைய தேகத்தின் அம்சமான சமாதியும், யோகமும், ஐசுவரியமும், தபசும், வித்தையும், வைராக்கியமும் இவைகளை அந்த ரிஷிகளின் பொருட்டு அம்சமாய் கொடுத்தார்.



## இருபத்தோன்ருவது அத்தியாயம்.



*கர்த்தமப்பிரஜாபதியினுடைய தபசுக்கும் உபாசனைக்கும் சந்தோஷித்து, ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் அந்தக் கர்த்தமப் பிரஜாபதிக்குச் சுவாயம்புமனுவினது பெண்ணின் விவாக முறை கூட்டினதை சொல்லப்படுகின்றது.*

இப்படிச் சொல்லுகிற மைத்திரேய மகரிஷியைப் பார்த்து விதுரர் சொல்லுகிருர். வாரீர் பிரம்மரிஷியே! அந்தச் சுவாயம்பு மனுவினுடைய புத்திரர்களான, பிரியவிரதனும், உத்தானபாதனும், தர்மத்தையும் சப்ததீவுகளோடு கூடிக்கொண்டிருக்கிற பூமியையும் ரக்ஷித்தார்களென்றும் அவருடைய பெண், கர்த்தமப் பிரஜாபதியினுடைய பத்தினியென்றும் உம்மாலே சொல்லப்பட்டன. அந்தக் கர்த்தமப் பிரஜாபதியானவர் இயமநியமாதி யோகங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற அந்தப் பத்தினியினிடத்திலே எத்தனை புத்திரர்களைப் பெற்ருர்? அதையும், பிரம்ம புத்திரர்களான ருசிப்பிரஜாபதியும், தக்ஷப்பிரஜாபதியும், மனுவி

னுடைய புத்திரிகளான ஆஹூதி, பிரசூதி யென்கிற பாரியைகளிடத்தில் பிரஜைகளை எப்படிச் சிருஷ்டி பண்ணினார்கள்? அதையுஞ் சொல்லவேண்டுமென்று பிரஸ்னம் பண்ணுகிற விதுரரைப் பார்த்து மைத்திரேய மகரிஷியானவர் சொல்லுகிறார். வாரீர் விதுரரே! கர்த்தமப் பிரஜாபதியானவர். பிரஜைகளைச் சிருஷ்டி பண்ணச்சொல்லிப் பிரம்மாவினாலே ஆக்யாபிக்கப்பட்டவராய்ச் சரஸ்வதிநதி தீரத்திலே பதினாயிரவருஷம் தபசுபண்ணிப் பக்தர்களுக்குச் சர்வாபீஷ்டத்தையும் கொடுக்கின்ற ஸ்ரீ ஹரியைப் பக்தியினாலே ஆராதித்துக்கொண் டிருந்தார். அப்போது அவருடைய தவத்திற்குமெச்சி வேதாந்தங்களாலே அறியத்தக்கதான பிரம்மஸ்வரூபத்தைக் காண்பித்தார். அந்தக் கர்த்தமப் பிரஜாபதியானவர் ஸ்ரீ மகாலக்ஷ்மி சமேதராய்க் கருடாரூடராய் ஆகாசத்தில் விளங்குகின்ற பகவானைப் பார்த்து மிகவும் சந்தோஷத்தை யுடையவராய்ச் சாஷ்டாங்கமாகப் பிரணாமம் பண்ணி அஞ்சலிபந்தம் செய்துக்கொண்டு ஸ்தோத்திரம் செய்கிறார்.

### கர்த்தமப் பிரஜாபதியினுடைய ஸ்தோத்திரம்.

வாரீர் பிரபுவே! சமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் ஆசாரியரான யோகீஸ்வரர்களாலும் காணவொண்ணாத தேவரீருடைய தரிசனத்தினாலேஎன்னுடைய நேத்திரங்கள்சாபல்யமாயின. சம்சாரமாகிற சமுத்திரத்துக்குத் தெப்பமாக விருக்கின்ற தேவரீருடைய திருவடித்தாமரைகளை யுபாசிக்கிறவர்களுக்கு இஷ்டங்களைக் கொடுக்கிறவரானாலும் நான் கிருகஸ்தாச்சிரமத்திலே காமதேனுவைப்போல் தர்மார்த்த காமங்களைக் கற்கின்ற சீலத்தையுடைய பாரியை விவாகம் பண்ண வேண்டுமென்று, நிர்த்துஷ்டமான இருதயத்தை யுடையவனாய்ச் சர்வாபீஷ்டங்களைக் கொடுக்கிறதற்குக் கற்பக விருக்ஷம்போ லிருக்கின்ற தேவரீருடைய திருவடியை யுபாசிக்கிறேன். சகலலோக நாயகரான தேவரீருடைய வாக்காகிற மூக்காங்கயிற்றிலே எருதாகிய இந்த ஜன்மமானது கட்டப்பட்டிருக்கிற படியினாலே கர்மமயமான தேவரீருடைய ஆஞ்ஞையைப் பரிபாலனம் பண்ணுகிற நிமித்தமாகப் பாரியையை இச்சிக்கிறேன். காமத்தினாலே திரஸ்கரிக்கப்படுகின்ற பேர்களாயும், தேவரீரது கல்யாண குணங்களை யுடைய கீர்த்தனமாகிற மதுரமான அமிர்தத்தினாலே பசிதாக முதலானவைகளைப், போக்கடித்தவர்களாகியு மிருக்கிற பாகவதர்களுடைய ஆயுசைக் காலரூபமான சக்கிரமானது

அபகரிக்க மாட்டாது. சிலந்திப் பூச்சியானது வேறொரு சாதனத்தை அபேக்ஷியாமல் நூலைச் சிருஷ்டிப்பதுபோல நிரபேக்ஷராய்ப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி திதி சங்காரங் களைப் பண்ணுகிறீர். ஒருக்கால் பூஜித்த புருஷரிடத் திலே வெகு அபீஷ்டங்களை வருஷித்துப் புத்திமுக்தி களைக் கொடுக்கப்பட்ட தேவரீரைச் சரணமாக அடைகிறே னென்று அந்தக் கர்த்தமப் பிரஜாபதியினாலே மிகவும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டும், பத்பநாபரானவர் மந்த ஹாசங்களுடனே ஆனந்தகரமான வாக்கினாலே அந்தக் கர்த் தமப் பிரஜாபதியைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

வாரீர் கர்த்தமப் பிரஜாபதியே! என்னுடைய ஆராதன மானது ஒருக்காலும் வியர்த்தமாய்ப் போகிறதில்லை. அதி லேயும் என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையுடைய பேர்களுக்குள்ளே உம்மைப்போலொத்தவர்களிடங்களிலே சர்வப் பிரகாரத்தினாலேயும், அது வியர்த்தமாய்ப் போகிற தில்லை. பிரம்மாவினுடைய புத்திரனாகியும், சார்வபூமனாகி யும், பிரசித்தரான சதாசார லக்ஷணங்களை யுடையவனாகியு மிருக்கிற மனுவானவன் சப்த சமுத்திரங்களுடனே கூடிக் கொண்டிருக்கிற இந்த பூமியை ரக்ஷித்துக் கொண்டிருக்கி றான். சகல தர்மங்களையும் அறிந்த அந்த மனுவான வன் சதரூபை யென்கிற பாரியையுடனே கூட உம்மைப் பார்க்கவேண்டுமென்ற இச்சையை யுடையவனாய் நாளனன் றைக்கு இவ்விடத்திலே வரப்போகிறான். கறுத்த கடைக் கண்களை யுடையவளாயும், யௌவன வயதும், நல்ல சீலமும், நல்ல குணங்களுடனேயும் யோக்கியமான பர்த்தாவைக் கோரிக்கொண்டும் இருக்கிற தன்னுடைய பெண்ணை அரிய ரான உமக்குக் கொடுக்கப்போகிறான். அந்த ஸ்திரீயினிடத் திலே ஒன்பது பிரகாரமாக வைக்கப்போகிற உம்முடைய வீரியத்திலே பிறக்கின்ற கன்னிகைகளிடத்திலே ரிஷீஸ் வரர்களும் சீக்கிரமாகப் புத்திரர்களை யுண்டாக்கப் போகிறார் கள். நீரும் என்னுடைய ஆக்கினையை நன்றாகப் பரிபால னம் பண்ணிப் பரிசுத்தமான இருதயத்தை யுடையவராய், என்னையே அடையப்போகிறீர். கிருகஸ்தாச்சிரமத்திலே சகல பிராணிகளிடத்திலேயும் கிருபைசெய்து, சன்னியாச ஆஸ்ரமத்திலே ஆத்துமத்தியானத்தை யுடையவராய்ச் சகல ஜகத்துடனே கூடிய என்னை, உம்முடைய ஆத்து மாவிலே பார்க்கப் போகிறீர். நானும் உம்முடைய வீரியத்துடனே உமது பாரியையான தேவஹூதியினிடத் திலே அவதாரம்பண்ணித் தத்துவத்தை வெளிப்படுத்தப்

போகிறேனென்றுசொல்லி, அந்தப் பகவானானவர் ஸ்ரீவை குண்டத்தைக் குறித்து எழுந்தருளினார். பிற்பாடு அந்தப் பகவான் அருளிச்செய்தபடி கர்த்தமப் பிரஜாபதியானவர் அந்த மனுவரவுக்காக அந்த பிந்துசரசிலேயே வாசம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது மனுவானவர், சுவர்ணத்தினாலே அலங்கரிக்கப்பட்ட ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு, தன்னுடைய பெண்ணையும் பாரியையும் அந்த ரதத்தின்மேலே வைத்துக்கொண்டு, பெண்ணுக்கு வரனைத் தேடுகிற நிமித்தமாய்ப் பூமியெல்லாம் சஞ்சாரம்பண்ணிச் சாந்தநிதியான அந்தக் கர்த்தமப் பிரஜாபதியினுடைய ஆஸ்ரமத்தை வந்தடைந்தார். பிரபன்னரான கர்த்தமப்பிரஜாபதியினிடத்திலே மிகவும் கிருபையுடனே கூடிக்கொண்டிருக்கிற பகவானுடைய நேத்திரங்களினின்றும் ஆனந்த பாஷ்பப்பிந்துக்கள் விழுந்தபடியால், அந்த ஆஸ்ரமத்திலேயிருக்கிற சரசானது பிந்து சரசென்று பிரசித்தமாயும், சரஸ்வதி நதியால் சூழப்பட்டும், புண்ணியகரமாகியும், மகா குளிர்ச்சியுடனே கூடி அமிர்தத்திற்குச் சமானமான செல்வத்தை யுடைத்தாகியும், மகா ரிஷிகளுடைய சமூகத்தினாலே சேவிக்கப்பட்டும், மதுரமாகச் சப்திக்கிற மிருகங்களாலும், பக்ஷிகளாலும், ஷட்ருதுவினாலேயும் உண்டாகின்ற பலங்கள் புஷ்பங்களாலே சம்பூர்ணமான விருக்ஷங்கள், கொடிகள் முதலியவைகளால் நிறைந்த வனபந்தியினுடைய காந்திகளுடனே கூடிக்கொண்டும் மதித்திருக்கிற பக்ஷிகள், வண்டுகளுடைய விநோதத்துடன், மயில்களின் நாட்டிய லீலைகளை யுடையதாகியும், ஒன்றுக்கொன்று அழைத்துக் கொள்ளுகின்ற நானாவிதமாயும், மனோக்கியமாயும் உள்ள புள்ளோசைகளை யுடையதாயும் விருக்ஷங்களை யுடையதாகியு மிருக்கிற ஆஸ்ரமத்திலே ஆதிராஜரான அந்தச் சுவாயம்பு மனுவானவர் தம்முடைய பரிஜனங்களுடனே பிரவேசித்து, அந்த ஆஸ்ரமத்தின் தவசிலேவெகுகாலம் உக்கிரமான யோகத்தை யுடையவராயும், ஸ்ரீ பகவானுடைய பிரீதிக்குப் பாத்திராகியும், மகாதேஜஸை யுடையவராகியும், பத்மதளம்போலொத்த நேத்திரங்களை யுடையவராயும், ஜடாதாரியாகியும், மரவுரியை வஸ்திரமாக வுடையவராகியும், அழுக்கு மூடிக்கொண்டிருக்கிற மகா ரத்தினம்போல் மலினராகியும், பிரம்மசாரியாகியும், அக்கினியில் ஹோமஞ் செய்கிறவராகியு மிருக்கிற அந்த மகரிஷியினுடைய சமீபத்தில்போய்ச் சாஷ்டாங்கமாகப் பிரணாமஞ்செய்து நிற்கிற அந்த மனுவை ஆசீர்வாதங்களாலேயும், யோக்கியமான பூசையினாலேயும் உபசரித்து மவுனத்துடனே கூடிக்கொண்டிருக்கிற அந்த மனுவைக்

குறித்து ஸ்ரீ பகவானுடைய ஆக்கினையை ஸ்மறித்துக் கொண்டு மதுரமான வாக்கினலே யிந்தப் பிரகாரஞ் சொல்லுகிருர்.

கர்த்தமப் பிரஜாபதியினுடைய வாக்கியம்.

வாராய் நரதேவனே! சாதுக்களை ரக்ஷிக்கிறதற்குந் துஷ்டர்களைச் சங்கரிக்கிறதற்கும், சஞ்சரிக்கிற உம்முடைய பாவமான சத்தியானது சூரியன், சந்திரன், அக்கினி, இந்திரன், வாயு, யமன், வருணன் இவர்களுடைய ரூபத்தை அந்தந்தக் காரிய காலத்திலே தரிக்கிற அப்படிப்பட்ட மகிமையை யுடைய ஸ்ரீ ஹரியான உம்மைப் பிரணாமம் பண்ணுகிறேன். ஜயசீலமாகியும், நவரத்தினங்களுடைய சமூகங்களுடனே கூடிக்கொண்டுமிருக்கிற ரதத்தின் பேலேறிக் கொண்டு மேகத்தொனிபோல் கம்பீரமாகச் சப்திக்கின்ற நாணேசையினலே சத்துருக்களைப் பயப்படச் செய்துக் கொண்டு சூரியன்போல் பூசஞ்சாரம் பண்ணமல் போனீரானல் அப்போதே பகவானலே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற சமஸ்தமான வர்ணாஸ்ரம மரியாதைகளனைத்தும் அழிவடையும். இந்த லோகமும் சோரர்களாலே ஆக்கிரமிக்கப் பட்டதாய் நாசத்தை யடைந்துபோகும். அப்படிப்பட்ட நீர் என்ன நிமித்தமாக இங்கே வந்தீரோ, அந்தப் பிரயோஜனத்தைச் சொல்லும். நாம் அங்கீகரிக்கிறோம்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்.



*அந்த மனுவானவன் பகவானலே ஆக்கியாபிக்கப்பட்டபடி தேவஹூதியென்னப்பட்ட தன்னுடைய பெண்ணைக் கர்த்தமப் பிரஜாபதிக்குக் கொடுத்தானென்று சொல்லப்படுகிறது.*

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! இந்தப்பிரகாரம் சமஸ்தமானகுண கர்மங்களையுடைய அந்த மனுவானவன் மிகவும் லச்சையை யுடையவன்போல் நிவிர்த்திமார்க்கபாரான அந்த ரிஷியைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிருன். வாரீர் பிரம்ம ரிஷியே! வேதமூர்த்தியாகியும் பிரம்மரூபியாகியு மிருக்கிற பகவானனவர், சகல வேதங்களையும் பிரகாசிப்பித்துப் பரிபா

லனம் பண்ணுவிக்கவேண்டித் தம்முடைய முகத்தினின்றும் தவசு, வித்தை, யோகம் இவைகளுடனே கூடினவர்களாகியும் ஆலசிய மில்லாதவர்களாயு மிருக்கிற பிராம்மணர்களான உங்களை சிருஷ்டித்து அவர்களை ரக்ஷிக்கும்பொருட்டுத் தம்முடைய ஆயிரங் கைகளினின்றும் எங்களைச் சிருஷ்டித்தார். பிராம்மணஜாதி பிரம்மாவுக் கிருதயமாகவும், க்ஷத்திரியஜாதி பிரம்மாவினுடைய அங்கமாகவும் சொல்லப்படுகின்றன. பிராம்மண ஜாதியும், க்ஷத்திரியஜாதியும், ஒருவர்க்கொருவர் ரக்ஷித்துக்கொண்டிருக்கிறார்கள். பகவானானவர் சர்வஸ்வரூபியா யிருந்தாலும் நிர்விகாரராயிருந்து சமஸ்தத்தையும் ரக்ஷிக்கிறார். வாரீர் மகாரிஷியே! நீர் பிரீதியினாலே ரக்ஷிக்கவேண்டு மென்கிற இச்சையை யுடையவராய் எனக்குச் சகல தர்மத்தையுஞ் சொன்னீர். உம்முடைய சத்தரிசனத்தினாலே என்னுடைய சம்சயங்களெல்லாம் சேதிக்கப்பட்டுப் போயின. மனோ நிச்சயமில்லாத பேர்களுக்குக் காக்ஷிகொடாத பகவானானவர், என்னாலே காணப்பட்டனர். மங்களகரமான தேவரீருடைய வசனங்கள் என்னுடைய கர்ணரந்திரங்களாலே கிரகிக்கப்பட்டன.

ஆனாலும் தீனனாயிருக்கிற என்னுடைய விக்கியாபனத்தைக் கேட்க யோக்கியரா யிருக்கிறீர். என்னுடைய புத்திரியாகிய இந்தக் கன்னிகையானவள், யௌவனவயதும் நல்ல ஆசாரமுமுடையவள். கல்லியாணகுணங்கள் முதலியவைகளுடனே கூடிக்கொண்டிருக்கிற பர்த்தாவைக் கோருகிற இந்தக் கன்னிகை உம்முடைய சீலம், கியானம், ரூபம், வயது கல்யாண குணங்கள், இவைகளை நாரதமகாரிஷியினிடத்தினின்றும் கேட்டு, அன்றுமுதல் உம்மிடத்திலேயே மிகவும் ஆசக்தியை யுடையவளாக விருக்கிறாள். சர்வப்பிரகாரத்தினாலேயும் கிருகஸ்தாச்சிரம தர்மங்களுக்கு யோக்கிதையாகியிருக்கிற இந்தக் கன்னிகையை அங்கீகரிக்கவேண்டும். நிஷ்காமனா யிருக்கிறவனுக்கும் தனக்குத்தானே பிராப்தமான விஷயத்தைத் திரஸ்கரிக்கிறது உசிதமல்ல. ஆசக்தனாயிருக்கிறவனுக்குக் கேட்கவேண்டியதில்லை. புருஷனானவன் சுவயமாகவந்து கொடுக்கிறாரென்கிற தாதாவை அனாதரவு பண்ணி, லுத்தனைப் போய் யாசிக்கிறானே அவனுடைய பிரசித்தமான கீர்த்தியானது க்ஷீணித்துப் போகும். வாரீர் வித்துவானே! நான் உம்மை விவாகார்த்தமாக யத்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறவராகக் கேள்விப்பட்டிருக்கிறேன். பிரம்மசரியத்துக்கு முடிவையுடையவரான நீர் என்னாலே கொடுக்கப்படுகின்ற இந்தக் கன்னிகையை யங்கீகரிக்கவேண்டு

மென்று விக்கியாபனம் பண்ணுகின்ற சுவாயம்பு மனுவைப் பார்த்துக், கர்த்தமப் பிரஜாபதி ஒரு வார்த்தை சொல்லு கிறார். வாராய் மனுவே! நான் விவாகம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று கோரியிருக்கிறது யதார்த்தமே. உன்னு டைய புத்திரியான இந்தக் கன்னிகையும் என்னிடத்தி லேயே ஆசக்தியை யுடையவளானபடியினாலே மற்ற ஒருவ ருக்கும் கொடுக்கிறேனென்று பிரதிக்கினை பண்ணப்பட்டவ ளன்று. ஆகையினாலே எங்களிருவருக்கும் முக்கியமான இந்த விவாகமானது மிகவும் யோக்கியமாக விருக்கிறது.

வாராய் ராஜனே! உன்னுடைய புத்திரியான இந்தக் கன்னிகையினுடைய விவாகத்தினால் உன்னுடைய மனோரத மானது சபலமாகக்கடவது. தன்னுடைய தேககாந்தியி னாலே பூஷணங்களுடைய காந்தியைத் திரஸ்கரிக்கின்ற இந்தப்பெண்ணை எவன்தான் ஆதரியாமற் போவன். உப்ப ரிகையின் மேலே சதங்கைகள் சப்திக்கப் பந்தாடும்போது அந்தப் பந்திலேயே சுழன்றுகொண்டிருக்கிற கண்களையுடை யவளான இவளைப் பார்த்து விசுவாவசு வென்கிற காந்தருவ னானவன் மோகத்தினாலே மூடமான மனதையுடையவனாய்த் தன்னுடைய விமானத்தினின்றும் விழுந்துவிட்டானன்றோ. ஸ்ரீ மகா லக்ஷ்மியினுடைய சரணசேவை பண்ணாதவர்க ளாலே பார்க்கிறதற்கு யோக்கியதை யற்றவளாகியும் உத் தான பாதனுடைய தங்கையாகியும், சுவயமாகவே வரிக்கி றவளாகியுமிருக்கிற இந்த ஸ்திரீயை எவன்தான் கிரகியாதே போவான்? ஆகையினாலே பதிவ்ரதையான இவளை யங்கீ கரிக்கிறேன். இந்த ஸ்திரீயானவள் என்னுடைய வீரியத் தைப் பரிக்கிறமட்டுக்கும் கிருகஸ்த தர்மங்களை யனுட்டானம் பண்ணித் தேவருணம், பிதுர்ருணம், பூதருணங்களைத் தீர்த் துப் பிற்பாடு பரம ஹம்சர்களான யோகிகளுக்கும் அரிதாகி யும், பகவானாலே சொல்லப்பட்டு மிருக்கிற சந்நியாசத்தை அடைவேனென்று சொல்லிப்போட்டு, மவுனத்தை யடைந் தவராய்ப், புத்தியினாலே பத்மநாபரைத் தியானம் பண்ணிக் கொண்டு, அந்தத் தேவஹூதியினுடைய மனதை ஆசையை யுடையதாகப் பண்ணினார். பிற்பாடு அந்த மனுவானவன் தன்னுடைய பாரியையான சதரூபையினுடைய அபிப்பிரா யத்தையும், பெண்ணான தேவஹூதியினுடைய அபிப்பிராயத் தையும், அறிந்து சந்தோஷத்தை யுடையவனாய்ச், சகல குணபரிபூரணரான அந்தக் கர்த்தமப் பிரஜாபதியின் பொருட்டு அந்தக் கன்னிகையை விவாகம் பண்ணிக்கொடுத் தான். மகானுபாவையான அந்தச் சதரூபையானவள்,

விவாககாலத்திலே கொடுக்கத்தக்கவைகளான மகா விலை பெற்ற பூஷணங்கள், வஸ்திரங்கள், கிருகோபகரணங்கள், இவைகளைப் பிரீதியினாலே அந்தத் தம்பதிகளுக்குக் கொடுத்தாள். அந்த மனுவானவன் அந்தப் பெண்ணைக் கைகளினாலே கட்டிக்கொண்டு விசனந் தீர்ந்தவனாய், அந்தக் கர்த்தமப் பிரஜாபதிகையிலே அனுக்ஞை பெற்றுக்கொண்டு, தன்னுடைய பரிவார ஜனங்களுடனேகூடப் பாரியை சமேதனாய் ரதத்தின்மேலேறிக்கொண்டு, தன்னுடைய பட்டணத்தைக் குறித்துப் புறப்பட்டு வருகிறபோது, அந்த சரஸ்வதி நதியினுடைய விரண்டு கரைகளிலேயும், சமதமாதி குணங்களை யுடையவர்களான ரிஷியீஸ்வரர்களுடைய ஆஸ்ரமங்களைப் பார்த்துக்கொண்டு வருகிற ராஜாவைப் பார்த்துப், பிரஜைகள் மிகவும் சந்துஷ்டர்களாய், நிர்த்தகீத வாத்தியங்களுடனேகூட எதிர்கொண்டார்கள். மகா வைபவத்துடனே பெறிகிஷ்மதியென்று பெயரையுடையதான தன்னுடைய பட்டணத்திற் பிரவேசித்து ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என்னப்பட்ட தாபத்திரயங்களையும், நாசம் பண்ணத்தக்க கிருகத்திலே பிரவேசித்துத் தன்னுடைய பாரியை, பிரஜைகள் இவர்களுடனே தர்மார்த்தங்களுக்கு விரோதமில்லாமலும், அருணோதய காலங்களிலே ஸ்திரீகளுடனே கூடிக்கொண்டிருக்கிற கந்தர்வர்களாலே கானம் பண்ணப்பட்ட பிரசித்தமான கீர்த்தியை யுடையவனாய், நித்திரையைவிட்டு நீங்கி யிருதயத்திலே ஸ்ரீ ஹரியினுடைய கதைகளைக் கேட்டுத் தியானஞ் செய்துகொண்டும் துர்லபங்களான போகங்களை யுண்டுபண்ணுகிறதிலே மிகவும் சமர்த்தனாகியும், பகவத்பரனாகியும், தியானயோகத்தை யுடையவனாகியு மிருக்கிற அந்த சுவாயம்பு மனுவைப் போகங்களானவை ஒரு க்ஷணத்தினாலேயும், திரஸ்கரிக்கச் சமர்த்தங்களாகாமற் போனபடியினாலே அந்த மனுவானவன் ஸ்ரீ வாசுதேவருடைய தியானம் முதலானவைகளாலே காசராதி அவஸ்தைகளையும், சத்வமுதலான குணங்களையும் திரஸ்கரித்து, எழுபத்தொரு சதுர்யுகரூபமான தன்னுடைய மனுவந்தரத்தைப் போக்கினான். வாரீர் விதுரரே! அந்தச் சுவாயம்புமனுவானவன் ரிஷிகளாலே கேட்கப்பட்டு நித்தியமாய்ச் சமஸ்த பிராணிகளுக்கும் இதத்தைக் கோரினவனாய்த், தன்னாலே பண்ணப்பட்ட ஸ்மிருதியிலே மனுஷ்யர்களுக்கும், பிராமணாதி வர்ணங்களுக்கும், ஆஸ்ரமங்களுக்கும், சுபகரங்களாகியும், நானாவிதங்களாகியு மிருக்கிற தர்மங்களைச் சொன்னவனாகியும், ஆதிராஜனாகியும், கீர்த்திக்கத் தக்கவனாகியு மிருந்தான். அந்த மனுவிடைய ஆச்சரியகர

மான இந்தச் சரித்திரமானது உமக்குச் சொல்லப்பட்டது. அவனுடைய புத்திரியான தேவஹூதியினுடைய சந்ததியைக் கேட்கக்கடவீர்.



## இருபத்துமூன்றுவது அத்தியாயம்.



கர்த்தமப்பிரஜாபதி, தேவஹூதி, இவ்விருவர்களுடைய தபோயோக பலத்தினாலே நிர்மிக்கப்பட்டும், சர்வசம்பத்துகளுடனே கூடிக் கொண்டும், இச்சானுகுணமாகச் சஞ்சரிக்கத்தக்க விமானத்திலே செய்த லீலைகள் சொல்லப்படுகின்றது.

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! மாதா பிதாக்களான சுவாயம்பு மனுவும் அவருடைய ஸ்திரீயும் புறப்பட்டுப்போன பிற்பாடு, இங்கிதங்களை யறிந்து நடக்கத்தக்கவளாயும், பதிவிரதையாயுமிருக்கிற அந்தத் தேவஹூதியானவள், பார்வதி பரமேசுவரனைப் பூஜிப்பதுபோல், காமம், டம்பம் துவேஷம், லோபம், இவைகளில்லாமல் பிரீதியினாலேயும், அந்தரங்க பகிரங்க சவுசத்தினாலேயும், கவுரவத்தினாலேயும், மனோ நிக்கிரகத்தினாலேயும், சிசுரூஷையினாலேயும், பக்தியினாலேயும், சிநேகத்தினாலேயும், மதுரமான வாக்கினாலேயும், உடம்பு மறந்திராதவளும், ஆலசிய மில்லாதவளுமாய் மிகவும் தேஜசுவியான பர்த்தாவைச் சந்தோஷிப்பித்துக் கொண்டிருந்தாள். அந்தத் தேவ ரிஷிசிரேஷ்டரான கர்த்தமப் பிரஜாபதியானவர், தன்னை மிகவும் அனுவர்த்தித்து வெகுகாலம் விரதங்களை யாசரிக்கிறதினாலே யிளைத்தும், மிகவும் துர்ப்பலையாயுமிருக்கிற அந்த ஸ்திரீயைப் பார்த்துக் கிருபையுடனே யொரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் மானினி! உன்னுடைய பக்தியினாலேயும், பரமமான சிசுரூஷையினாலேயும், அத்தியந்தம் நான் சந்துஷ்டனானேன். பிராணிகளுக்குத் தேகமானது மிகவும் இஷ்டமானதாயிருந்தாலும், அதை எண்ணாமல் என்னுடைய சேவையினாலே ஆசக்தியை யுடையவளான உன்னை என்னாலே கஷ்டப்படுத்த யுபேக்ஷை பண்ணப்பட்டது. ஆதலால் மனுஷ்யர்களாலே அடையக் கூடாத விபவங்களை அனுபவிக்கக் கடவாயென்று சொல்லுகின்ற பர்த்தாவைப் பார்த்து, அந்த ஸ்திரீயானவள் வியசன

மில்லாதவளாய் மிகவும் வணக்கமும், பிரீதியும், கொஞ்சம் லச்சையுடனே கூடிக்கொண்டிருக்கிற கடைக்கண் பார்வையி ஞலே விளங்குகின்ற புன்னகையுடைய முகமுமுள்ளவளாய் ஒருவார்த்தை சொல்லுகிருள்.

### தேவஹூதியினுடைய வாக்கியம்.

வாரீர் பிராமணோத்தமரான பர்த்தாவே! யோக மாயைக்கு ஈசுவரராகியும், சமர்த்தராகியுமிருக்கிற உமக்கு இது சித்தமாக விருக்கிறதென்று நானறிவேன். பர்த்தாவி னிடத்தில் ஸ்திரீகளுக்குப் பிரசவவுற்பத்தி யடைகிறது மிகவும் தர்மமானது. அந்த அமிசத்திற்கு நிமித்தமான காமசாஸ்திரப்படிக்குச் சங்கற்பிக்கக்கடவீர். மன்மதனுலே தூண்டப்பட்டுத் தேவரீருடனே ரமிக்கவேண்டுமென்கிற இச்சைக்கு இருப்பிடமாகப் பண்ணப்பட்டுத் தீனமாயிருக்கிற அடியேனுக்குக் கிரீடைக்கு யோக்கியமான போஜனம், பானம் முதலானவைகளுடன் கூடின கிருகத்தையும், யோசனை செய்யவேண்டுமென்று வினவுகிற பாரியையி னுடைய வார்த்தையைக் கேட்டுக், கர்த்தமப் பிரஜாபதியான வர் தம்முடைய ஸ்திரியின் பிரியத்தைக் கோரி யோக பலத்தை ஆச்ரயித்தவராகி, அந்த க்ஷணத்திலே இச்சாரூப மாகச் சஞ்சரிக்கத் தக்கதாகியும், சமஸ்த கோரிக்கைகளையும் உண்டாக்கும்படியானதும், திவ்வியமாகியும், சமஸ்த ரத்தி னங்களுடனே கூடிக் கொண்டும், சமஸ்த சம்பத்துகளையும், உத்திரோத்தரமான அபிவிர்த்திகளையு முடையதாகியும், ரத்தினமயங்களான ஸ்தம்பங்களினுலே அலங்கரிக்கப் பட்டும், திவ்யங்களான சாமக்கிரியைகளுடனே கூடிக்கொண் டும், சர்வகாலத்திலேயும் சுபகரமாகியும், பட்டுவஸ்திரங்களா லேயும், விசித்திரங்களான துவஜங்களாலேயும் அலங்கரிக் கப்பட்டும், விசித்திரங்களான புஷ்பங்களை யுடையவைகளா கியும், மதுரமாகச் சப்திக்கின்ற வண்டுகளை யுடைய மாலை களாலே அலங்கரிக்கப்பட்டும், வெண்பட்டுப் பீதாம்பர முத லான திவ்ய வஸ்திரங்களாலே விளங்கியும், மேன்மேலும் உபரிகைகளிலே வேறுவேருன சயனகிருகங்களிலே வைக் கப்பட்டிருக்கிற மெத்தை, கட்டில், விசிறி, ஆசனம் இவை களாலே மிகவும் மனோக்கியமாகியும், அந்தந்த விடங் களிலே நானுவித விசித்திரங்களான சில்பங்களினுல் அலங் கரிக்கப்பட்டும், மரகதமாணிக்கப் பிரதேசங்களாலேயும், பவளமயங்களான திண்ணைகளாலேயும், வாசற்படிகளிலே பவளமயங்களான கீழ்ப்படி மேற்படிகளினுலே விளங்கியும்

வச்சிரமயங்களான கதவுகளை யுடையதாகியும், இந்திர நீல ரத்தின மயங்களான உபரிகைகளிலே சுவர்ணகலசங்களு டனே கூடிக்கொண்டும், நேத்திரங்களை யுடையவைகள் போல் விளங்குகின்ற வச்சிரமயங்களான சுவர்களிலே யிழைக்கப்பட்ட செம்பு ரத்தினங்களுடனே கூடிக்கொண்டும், விசித்திரங்களான மேல்கட்டு வஸ்திரசமூகங்களாலேயும், மிகவும் விலைபெற்ற சுவர்ணமயங்களாவன தோரணங் களாலே விளங்கியும், அங்கங்கே அன்னங்கள் மாடப்புறாக் கள் இவைகளுடைய கூட்டங்களாலே மதுரமாகச் சப்திக்கப் பட்டும், விசித்திரங்களாகப் பண்ணப்பட்டிருக்கிற அம்ச முத லானவைகளைத் தன் சுயஜாதி யென்றெண்ணி அவைகள் மேலே யேறி இறங்கிக் கொண்டிருக்கிற அம்சங்களாலே சப் திக்கப்பட்டும், கிரீடாபிரதேசங்கள், சயனகிருகங்கள், போக ஸ்தானங்கள், கிருகத்துக்கு வெளிப்பிரதேசங்கள் ஆத்து மாவுக்கு எப்படிச் சுகமுண்டாகுமோ, அந்தப்படிக்கு நிர்மிக் கப்பட்டிருக்கிற பிரதேசங்களாலே சோபிதமாகியும், மிகவும் ஆச்சரிய ஜனகமாயுமிருக்கிற அந்த விமானத்தைப் பார்க் கின்ற தன்னுடைய ஸ்திரீயைப் பார்த்துச் சகல பிராணிகளு டைய இருதயத்தையும் அறிந்தவரான கர்த்தமப் பிரஜாபதி யானவர் ஒருவார்த்தை சொல்லுகிறார்.

வாராய் ஸ்திரீயே! இந்தப் பிந்துசரசிலே ஸ்நானம் பண்ணி இந்த விமானத்திலே யேறக்கடவாய். ஸ்ரீ ஹரியி னாலே நிர்மிக்கப்பட்டிருக்கின்ற இந்தச் சரசானது மனுஷி யர்களுடைய சமஸ்த இஷ்டங்களையுங் கொடுக்கத் தக்க தென்று சொல்லுகின்ற பர்த்தாவினுடைய வசனத்தைக் கேட்டுக், கருநெய்தல் புஷ்பம்போன்ற நேத்திரங்களை யுடை யவளாயும், மிகவும் அழுக்கடைந்த வஸ்திரத்தையும், சடைபற்றி யிருக்கிற கேசங்களையும் உடைய தேவஹூதி யானவள், மங்களகரங்களான செல்வங்களையுடையதான சரசுவதி நதியினுடைய ஜலத்திலே பிரவேசித்தாள். அந்தச் சரசுக்குள்ளே யௌவன வயதை யுடையவர்களாகியும், பத்ம கந்தம்போன்ற கந்தத்தை யுடையவர்களாகியு மிருக்கிற ஆயி ரங் கன்னிகைகளைக் கண்டாள். அவர்கள் இவளைப்பார்த்துச் சீக்கிரமாக வெழுந்திருந்து அஞ்சலிபந்தம் பண்ணிக் கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்கள். நாங்கள் உனக்கு பரிசாரகர்கள், உனதாக்கினையின்படி நடக்கத்தக்கவர்க ளென்று சொல்லி, மகா விலைபெற்ற சம்பங்கித் தைல முத லானவைகளாலே அப்பியங்கன ஸ்நானம் பண்ணுவித்து, நூதனங்களாகியும், மகா விலைபெற்றவைகளாகியு மிருக்கிற

வெண்பட்டு வஸ்திரங்களையும், மிகவும் சிரேஷ்டங்களாகியும், இஷ்டங்களாகியும், காந்தியை யுடையவைகளாகியுமிருக்கிற பூஷணங்களையும் அணியச்செய்து, சர்வ குணங்களுடனேயும் கூடிக்கொண்டிருக்கிற அன்னத்தையும், அமிர்தம்போல் மதுரமாயிருக்கிற தீர்த்தத்தையுங் கொடுத்தார்கள். பின்னர் அந்தத் தேவஹூதியின் தேகமெப்படி யிருக்கிறதென்றால்:-நன்றாக அழுக்குப்போக அப்பியங்கன ஸ்நானத்தைப் பண்ணுவிக்கப்பட்டும், சர்வாபரணங்களினாலேயும் அலங்கரிக்கப்பட்டும், கண்டத்திலே பதக்கங்களை யுடையதாகியும், கைகளிலே வளையல்களை யுடையதாகியும், சப்தியாநின்ற சுவர்ணமயமான சிலம்புகளை யுடையதாகியும், இடுப்பின் பிற்பாகங்களிலே தரிக்கப்பட்டும், சுவர்ணமயமாகியும், அனேக ரத்தினங்களை யுடையதாகியுமிருக்கிற அரைநூல் மாலையினாலேயும், மகா விலைபெற்ற ஆரத்தினாலேயும், குங்கும முதலான மங்கள திரவியத்தினாலேயும் அலங்கரிக்கப்பட்டும், சோபனங்களான புருவங்களினாலேயும், தந்தங்களினாலேயும், மனோக்கியமான கடைக்கண் பார்வையினாலேயும், நீலங்களான முன்னெற்றி மயிர்களாலேயும் விளங்காநின்ற முகத்தையுடையதாகியு மிருக்கிற தன்னுடைய தேகத்தைக் கண்ணாடியிலே பார்த்துப் பர்த்தாவைக் கட்டியணைய உகந்தவளா யிருக்கிறோமென்று நிச்சயித்து, ரிஷிசிரேஷ்டராகியும், இஷ்டராகியு மிருக்கிற தன்னுடைய பர்த்தாவை நினைத்தாள். அப்போது கர்த்தமப் பிரஜாபதி யிருக்கிறவிடத்தில் அந்த ஸ்திரீகளுடனேகூடத் தானுமிருக்கக்கண்டு, இதென்னவென்று மிகவும் ஆச்சரியத்தை யடைந்தாள். அந்த ரிஷியானவர் நன்றாய் மங்கள ஸ்நானம்பண்ணி யலங்கரிக்கப்பட்டவளாகியும், நூதனமாக வந்தாற்போல் விளங்குகின்றவளாகியும், விவாகத்துக்கு முன்னேயிருந்த ரூபத்தை அடைந்தவளாகியும், வஸ்திரங்களாலே மறைக்கப்பட்ட மனோக்கியமான ஸ்தனங்களையுடையவளாகியும், அனேகம் வித்தியாதர ஸ்திரீகளாலே சேவிக்கப்பட்டும் மகா விலைபெற்ற வஸ்திரத்தை யுடையவளாகியுமிருக்கிற பாரியையைப் பார்த்துப் பிரீதியையுடையவராய் அந்த விமானத்தின்மேலே யேற்றி வைத்துக்கொண்டு அந்த ஸ்திரீகளாலே சிசுரூஷை பண்ணப்பட்ட சரீரத்தை யுடையவராய் மிகவும் சுந்தரமாகியும், நக்ஷத்திரங்களாலே சூழப்பட்ட சந்திரன்போல் விளங்கினார். மன்மதனுக்குச் சகாவான மந்தமாருதத்தினாலே சவுந்தரியத்தை யுடையவைகளாகியும், ஆகாசகங்கை விழுகிறதினாலே மங்களகரங்களான சப்தங்களை யுடையவைகளாகியும்,

அஷ்டதிக்குப் பாலகர்களுடைய லீலைகளை யுடையவைக ளாகியு மிருக்கிற குலாசலங்களுடைய குகைகளிலே யிருக் கின்ற சித்தர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவர்க ளாய்க் குபேரன்போல வெகுகாலம் வைசர்மபீகம், சுவர்ணம் நந்தனம், புஷ்பபத்திரிகம், சயித்திரதமென்னப்பட்ட தேவ வுத்தியானவனங்களிலேயும், மானசசரசிலேயும், ரமித்துக் கொண்டும், இச்சானுகுணமாக வாயுவானவன்போல் சகல லோகங்களிலேயும் சஞ்சரித்துக்கொண்டும், தேவர்களை அதி சயித்தார். சமுசார வியசனத்தைப் போக்கடிக்கின்ற ஸ்ரீ ஹரியினுடைய திருவடிகளை ஆராதிக்கப்பட்ட புருஷர் களுக்கு எதுதான் துர்லபமாகும். அப்படிப்பட்ட பகவத் பக்தரான கர்த்தமப் பிரஜாபதியானவர் தீவுகள் முதலான சமஸ்த பூமண்டலத்தையும், தம்முடைய ஸ்திரீக்குக் காண் பித்துத், திரும்பவும் ஆஸ்ரமத்தின் பொருட்டுத் திரும்பினார். அந்த ஸ்திரீயானவள் மிகவும் சுந்தரரான அந்தப் பர்த்தா வுடனே கூடினவளாய் அந்த வியானத்திலே மிகவும் உத் கிருஷ்டமாகியும் பிரீதிகாமாகியுமிருக்கிற சயனத்தையே ஆஸ்ரயித்தவளாயினள். யோகப்பிரபாவத்தினாலே ரமித்துச் சம்பத்தினாலே சம்பூர்ணர்களாகியுமிருக்கிற அந்தத் தம்பதி களுக்கு நூறு சம்வச்சரங்கள் கொஞ்சகாலம்போலவே அதிக்கிரமித்தன. சர்வ சங்கற்பத்தையும் அறிந்தவரான அந்தக் கர்த்தமப்பிரஜாபதியானவர் அந்த ஸ்திரீயைத் தம் முடைய அர்த்த சரீரரூபமாகப் பாவனை பண்ணிக்கொண்டு தம்முடைய ரூபத்தை ஒன்பதுவிதமாகப் பிரித்து அந்த ஸ்திரீயினிடத்திலே தம்முடைய வீரியத்தை வைத்தார். பிற்பாடு அந்தத் தேவஹூதியானவள் ஒருநாளையிலேயே ஸ்திரீ பிரஜைகளைப் பெற்றாள். அந்தக் கன்னிகைகள் சமஸ்தமான பேர்களும் சுந்தரமான சரீரங்களை யுடையவர்க ளாகியும், பத்மத்தினுடைய கந்தம்போலொத்த கந்தங்களை யுடையவர்களாகவு மிருந்தார்கள். அப்போது சன்னியசித் துக்கொண்டு போகப்போகிறவராயிருக்கிற பர்த்தாவைப் பார்த்துத் தேவஹூதியானவள் வெளிக்குச் சிரித்துக்கொண்டு உள்ளே வியாகூலமான சித்தத்துடனே கூடினவளாய், நகங் களாகிய ரத்தினங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற பாதத்தி னாலே பூமியைக் கிழித்து, தலையை வணங்கி, அதோமுகமாய் நின்றுகொண்டு, மெல்ல மெல்லக் கண்ணீர்த் துளிகளை நிறுத்தி மதுரமாக ஒரு வார்த்தை சொன்னாள்.

வாரீர் பகவானே! என்பொருட்டு உம்மாலே பிரதிக்கினை பண்ணப்பட்டதானாலும், சரணமாக வடைந்த எனக்கு அப

யப்பிரதானம் பண்ணவேண்டும். உம்முடைய புத்திரிகள் தங்களுக்கு யோக்கியர்களான பர்த்தாக்களைத் தேடத்தக்க வர்களாக விருக்கிறார்கள். நீர் சன்னியசித்துக்கொண்டு வனத்தையடைந்து இருக்கையில் எனக்குக் கியான உபதே சம் யார் செய்வார்கள் ? இவ்வளவு காலமும் விஷயங்களிலே ஆசக்தியாய்ப் பரமாத்தும சித்தியை விட்டவளாய் உம்மு டைய அபிப்பிராயத்தை யறியாமலிருந்த என்னாலே உம்மி டத்திலே பண்ணப்பட்ட சங்கமமானது எனக்கு அபயத்தின் பொருட்டு ஆகக்கடவது. துஷ்டர்களிடத்தில் அக்கியானத் தினால் பண்ணப்படுகிற சங்கமமானது சம்சாரத்துக்கு ஏது வாகயிருக்கும். சாதுக்களிடத்திலே செய்யப்படுகின்ற சங்கமம் மோக்ஷத்தின் பொருட்டு ஏதுவாக விருக்கும். இந்த லோகத் திலே புருஷனுடைய கர்மமானது தர்மாபி முகமாகியும், வைராக்கியத்துக்கு ஏதுவாகியும் இருக்கும். அந்த வைராக் கிய முகமாய் ஸ்ரீ ஹரியினுடைய சேவையின் பொருட்டு உறுதியில்லாத புருஷன், பிராணனுடனே யிருந்தாலும் மரித்தவனுக்கொப்பாவான். நான் பகவானுடைய மாயை யினாலே மிகவும் வஞ்சிக்கப்பட்டவளானேன். மோக்ஷத் தைக் கொடுக்கின்ற உம்மையடைந்து சம்சாரபந்தத்தி னின்றும் மோக்ஷத்தைக் கோராமற் போனபடியினாலே பகவானுடைய மாயையினாலே வஞ்சிக்கப்பட்டேன்.



## இருபத்துநான்காவது அத்தியாயம்



*பகவானுடைய கபிலாவதாரமும், அவருடைய பிதாவான கர்த்தமப் பிரஜாபதியினுடைய குணத்திரயத்தி னின்றும் விடுபட்டுக் கிருகஸ்தாச்ரமத்தி னின்றும் நிவர்த்தி மார்க்கத்தை யடைந்ததுஞ் சொல்லப்படுகிறது.*

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்தக் கர்த்தமப்பிரஜாபதியான வர், இந்தப்பிரகாரம் மகா துக்கத்துடனே சொல்லுகின்ற மனுவினுடைய பெண்ணாகிய அந்தத் தேவஹூதியைப் பார்த் துத் தயைபண்ணி ஸ்ரீ ஹரியினாலே சொல்லப்பட்ட வார்த் தையை ஸ்மரித்துக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் சிலாக்கியமானவளே! பாக்கியஹீனையென்று நீ விய

சனப்படவேண்டாம். நாசரகிதனுன பகவானுனவர் உன்னு டைய கர்ப்பத்தைச் சீக்கிரமாக அடையப்போகிருர். இந்தி ரிய நிகிக்கிரகத்திஞலேயும், சுவதர்மத்திஞலேயும், தபசுக ளாலேயும், திரவியதான முதலானவைகளாலேயும், சிரத்தி ஞலேயும், ஈஸ்வரனைப் பஜிக்கக்கடவாய். அந்தப் பகவா னுனவர் உன்னுலே யாராதிக்கப்பட்டவராய் என்னுடைய எஜைை விஸ்தாரமாகப் பண்ணி உனக்குப் புத்திரனுக அவ தரித்துப் பிரம்மவுபதேசம் பண்ணி உன்னுடைய அகங்கார ரூபமான பந்தத்தைச் சேதித்துப் போடப்போகிருரென்று சொன்ன பர்த்தாவினுடைய வார்த்தையைக் கேட்டு, அந்தத் தேவஹூதியானவள் கூடஸ்தராகியும், ஜகத்குருவாகியு மிருக் கிற பரம புருஷரைப் பஜித்தாள். இப்படி யநேக நாள்களை யுடைய காலமானது அதிக்கிரமிக்கையில் மதுசூதனரான பகவானுனவர், அந்தத் தேவஹூதியினிடத்திலே கர்த்தமப் பிரஜாபதியினுடைய வீரியத்தை யாசிரயித்தவராய்க், தாரு விலே யக்னியானது பற்றுவதுபோல் ஆவிர்ப்பவித்தார். அப்போது ஆகாசத்திலே மேகங்களானவை மங்கல வாத்தி யங்களைச் சப்திப்பித்தன. கந்தருவர்கள் அந்தப் பகவானைக் குறித்துக் கானம் பண்ணிஞர்கள். அப்சர ஸ்திரீகள் சந் தோஷத்திஞலே நர்த்தனம் பண்ணிஞர்கள். ஆகாசத்திலே சஞ்சரிக்கின்ற தேவர்களாலே வருஷிக்கப்பட்டவையாகியும் திவ்வியங்களாகியு மிருக்கப்பட்ட புஷ்பங்கள் விழுந்தன. சமஸ்தமான திக்குகளும், ஜலங்களும், சத்புருஷர்களுடைய மனங்களும் நன்ருகத் தெளிந்தன. அப்போது பிரம்மா வானவர், மரீசிப்பிரஜாபதி முதலான ரிஷிகளாலே சூழப் பட்டவராய், சரஸ்வதி நதியிஞலே சூழப்படுகின்ற அந்தக் கர்த்தமப் பிரஜாபதியினுடைய ஆஸ்ரமத்தைக் குறித்து வந்தார். வாரீர் விதுரரே! சர்வஞ்ஞரான அந்தப்பிரம்மா வானவர் பரப்பிரம்ம ரூபமான பகவானைச் சாங்கியக்கியா னத்தை யுபதேசிக்கிறதின் பொருட்டுச் சத்துவாம்சத்தி ஞலே அவதரித்தவராக அறிந்து அந்தப்பகவானுடைய சங்கல்பத்தைப் பூசித்துப் பரிசுத்தமான இருதயத்துடனே கர்த்தமப் பிரஜாபதியையும் தேவஹூதியையும் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிருர்.

பிரம்மாவினுடைய வாக்கியம்.

வாராய் குழந்தாய்! நீ என்னுடைய வாக்கியத்தைக் கிரகித்துக் கபடமில்லாமல் என்னைப் பூஜித்தாய். இந்தப் பிரமாம் லோகத்தில் புத்திரனுனவன் தகப்பனுடைய

வசனத்தைக் கவுரவத்தினாலே யங்கீகரிக்கக்கடவன். வாராய் குழந்தாய்! சோபனமான இடையை யுடையவர்களாகியும், பதிவிரதைகளாகியு மிருக்கிற இந்த உன்னுடைய பெண்கள், தங்களுடைய வம்சங்களாலே இந்தச் சிருஷ்டியை அனேக விதமாக விர்த்திபண்ணுவிக்கப் போகிறார்கள். ஆகையினாலே நீ மரீசி முதலான ரிஷீஸ்வரர்களுக்கு இந்தப் பெண்களைக் காலமதிக்கிரமியாமல் இப்போதே கொடுத்துக் கீர்த்தியைப் பொருந்தக்கடவாய். இப்போது உன்னிடத்தில் அவதரிக்கப்போகிற குமாரன் சகல ஜீவதயாபரமூர்த்தியான ஸ்ரீமந் நாராயணனென் றறிகிறேனென்று கர்த்தமப் பிரஜாபதியைப் பார்த்துச் சொல்லி, பின்பு தேவஹூதியைப் பார்த்துச் சொல்லுகிறார். வாராய் மனுபுத்திரியே! சுவர்ணவர்ணமான சிகைகளையுடையவராகியும், பத்மம்போலொத்த நேத்திரங்களை யுடையவராகியும், பத்மமுத்திரையோடே கூடிக் கொண்டிருக்கிற ஸ்ரீ பாதபத்மங்களை யுடையவராகியும், கயிடாபசுரனைச் சங்கரித்தவராயுமிருக்கிற இந்தப் பகவானானவர் சாஸ்திரக்கியானம், பரமாத்மக்கியானம் இவைகளாகிற வுபாயத்தினாலே கர்மங்களுடைய வாசனைகளை வேருடனே பிடுங்கிப் போடப்போகிறவராய் உன்னுடைய கர்ப்பத்திலே யவதரித்துப் பகவத்ஸ்வரூபத்தை யறியாமல் மித்தியாக் ஞானத்தையுடைய அகங்காரக் கிரந்தியைச் சேதித்துப் போட்டு யோகசித்தர்களுடைய கூட்டங்களுக்கு ஈசுவராராகியும், சாங்கியக் கியானத்திற்கு ஆசாரியராகியும், உன்னுடைய கீர்த்தியை விருத்திபண்ணி லோகத்திலே கபிலமகாரிஷியென்று பிரசித்தமான நாமத்தையடையப் போகிறாரென்று ஜகத் கர்த்தாவான பிரம்மாவானவர் கொண்டாடிச் சனற்குமாரர் முதலான ரிஷிகளுடனேயும், நாரதமகரிஷியுடனேயும் கூடினவராய், அம்சவாகனத்தி லேறிக்கொண்டு சத்தியலோகத்தைக் குறித்துப்போனார். பிற்பாடு கர்த்தமப் பிரஜாபதியானவர் பிரம்மா சொன்னபடிக்குத் தம்முடைய கன்னிகைகளை விசுவகர்த்தாக்களான நவப்பிரஜாபதிகளுக்கும் விவாகம் பண்ணிக்கொடுக்க நிச்சயித்துக், கலையென்கிற பெண்ணை மரீசி மகரிஷிக்கும், அனசூயையை அத்திரிமகரிஷிக்கும், சிரத்தையை அங்கிரசுக்கும், அவிர்பூவென்கிற பெண்ணைப் புலஸ்தியருக்கும், கதியென்கிற கன்னிகையைப் புலகருக்கும், கிரியையென்கிற பெண்ணைக் கிருதமகரிஷிக்கும், கியாதியென்கிறவளைப் பிருகுமகரிஷிக்கும், அருந்ததியை வசிஷ்டருக்கும் கொடுத்தார். யாகசாந்திக்கு முடிவான தேவதையான சாந்தியென்பவளை அதர்வணரிஷியின் பொருட்டுக் கொடுத்து அந்தப் பிரம்மரிஷிகளை மிகவும்

சந்தோஷிப்பித்தார். வாரீர் விதுரரே! பிற்பாடு அந்த ரிஷிக ளானவர்கள் கல்யாணம் பண்ணிக்கொண்டு மிகவும் சந்தோ ஷத்தை யடைந்தவர்களாய் அந்தக் கர்த்தமப் பிரஜாபதியிடத் தில் விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் ஆஸ்ரமங்களை யடைந்தார்கள். அந்தக் கர்த்தமப் பிரஜாபதியானவர், அவதரிக்கின்றவரைச் சாக்ஷாத் ஸ்ரீ பகவிஷ்ணுவாக அறிந்து ஏகாந்தத்திலேபோய்ச் சாஷ்டாங்கமாகப் பிரண மம் பண்ணி ஒருவார்த்தை சொல்லுகிறார். தங்கள் தங்க ளுடைய பாவங்களாலே சம்சாரத்தில் மிகவும் தகிக்கப்படு கின்ற பேர்களுக்கு வெகுகாலத்திற்குப் பிற்பாடு சமஸ்த தேவர்களும் பிரசன்னர்களாவார்கள். யதீஸ்வரர்களான பேர்கள் வெகு ஜன்மங்களிலே பரிபக்குவமான பக்தியோகத் தினாலே யுண்டான சித்தசமாதியினாலே தேவரீருடைய திரு வடியைப் பார்க்கைக்கு யத்தனம் பண்ணுகிறார்கள்.

வாரீர் பகவானே! பக்தர்களுடைய மகிமையை விருத்தி பண்ணுவிக்கிற தேவரீர் அடியேனுக்குப் புத்திரனாக அவ தரிக்கப் போகிறேனென்று சொன்ன வசனத்தை யதார்த்த மாகப் பண்ணுகைக்குக் கியான சாதனமான சாங்கிய சாஸ் திரத்தைப் பண்ணப்போகிறவராய் அவதரித்திருக்கிறீர். இது ஆச்சரியம். பிராகிருத ரூபரகிதரான தேவரீருடைய இந்த மனுஷ்யரூபங்கள் பக்தாகளுக்கு இஷ்டங்களாயிருக்கின் றன. வஸ்துவாய்ச்சர்க ளானவர்கள் தத்துவத்தை யறிய வேண்டுமென்கிற இச்சையினாலே சர்வகாலமும் சேவிக்கிற திருவடிகளை யுடையவராகியும், ஐசுவரியம், வைராக்கியம், யச்சு, கியானம், வீரியம், ஸ்திரீ, இந்த ஆறு குணங்க ளாலே சம்பூர்ணராயுமிருக்கிற தேவரீரைச் சரணமாக வடை கிறேன் சுவாதீனங்களான சக்திகளை யுடையவரான பரமேசு வராகியும், பிரகிருதிக்கு ஆசிரியமான புருஷரூபராகியும், மகதத்துவரூபராகியும், இவைகளுக்குக் கிரியாஜனகரான காலரூபராகியும், திரிகுணாத்மகமான அகங்காரரூபராகியும், இந்திரிய ரூபராகியும், அவைகளுக்கு அபிமானியான தேவதாரூபராகியும் சுவானந்தானுபவத்தினாலே தம்மிடத் திலேயே லயித்திருக்கின்ற பிரபஞ்சத்தை யுடையவராகி யும், கபிலரூபராகியு மிருக்கிற தேவரீரைச் சரணமாக அடைகிறேன். வாரீர் பகவானே! பிரஜைகளுக்கெல்லாம் பதியான தேவரீரைக் குறித்து ஒரு விக்கியாபனம் பண்ணிக் கொள்ளுகிறேன். புத்திரனாக அவதரிக்கின்ற தேவரீராலே குணத்திரயத்தையும் நிறைவேற்றினவனும், பரிபூரணகாம னாகியு மிருக்கிற அடியேன் சன்னியாசிகளுடைய மார்க்

கத்தை ஆசிரயித்தவனும் இருதயத்திலே தேவரீரை ஸ்மரித்துக்கொண்டு சோகமில்லாதவனுய்ச் சஞ்சரிக்கப் போகிறேனென்று விக்கியாபனம் பண்ணுகின்ற கர்த்தமப் பிரஜாபதியைப்பார்த்துப்பகவான் ஒருவார்த்தைசொல்லுகிருர். வாரீர் மகரிஷியே! வைதீக கிருத்தியத்திலேயும், லவுகீக கிருத்தியத்திலேயும், பிரமாணம் வார்த்தை தவிரக்கூடாதென்று என்னுலே சொல்லப்பட்டிருக்கிற படிக்கு உமக்குப் புத்திரனுக அவதரிக்கிறேனென்று சொன்ன படியினுலே அந்த வார்த்தை யதார்த்தமாகும்படியாய் அவதரித்தேன். இந்த அவதாரத்தை, மோக்ஷத்தைக் கோருகின்றபேர்களுக்கு ஆத்மக்யானத்திலே சம்மதபான தத்துவக்கியான வுபதேசத்திற்காகவென்று அறியக்கடவாய். சூக்ஷ்மமான இந்த ஆத்மக்கியான மார்க்கமானது வெகுகாலமாக நஷ்டமாய்ப்போயிருப்பதை, திருப்பவும் தரிக்கச்செய்யப்போகிற என்னுலே அனுக்ஞை பண்ணப்பட்டவராகக் கர்மத்தினுலே ஜயிக்கக்கூடாததான சம்சாரமாகிற மிருத்தியுவை ஜயித்து மோக்ஷத்தின்பொருட்டு என்னை யதேச்சா சஞ்சாரத்துடன் பஜித்துப் பரஞ்சோதியாயும், சர்வபூதங்களுடைய இருதயத்திலே அந்தரியாமியாயும், இருக்கின்ற என்னை உம்முடைய ஆத்மாவிலேயே பார்த்து க்ஷோபமில்லாதவராய் மோக்ஷத்தை யடையப்போகிறீர். நான் மாதாவான தேவஹூதிக்குச் சர்வ கர்மங்களையும், மூலத்துடனே நாசம்பண்ணி ஆத்மவித்தையை யுபதேசித்துச் சம்சாரபயத்தைத் தாண்டி ஆனந்தத்தை யடையும்படி செய்யப்போகிறேனென்று பகவானுலே சொல்லப்பட்ட அந்தக் கர்த்தமப் பிரஜாபதியானவர் மகா சந்துஷ்டராய் அந்தக் கட [illegible] பிரதக்ஷணம் பண்ணி ரிஷீஸ்வரர்களுடை [illegible] ம, அம்சாதி தர்மத்தை ஆஸ்ராயித்தவராகி [illegible] வயேசரணமாக வுடையவராகியும், இகபாச [illegible] மங்களை விட்டவராகியும், நிராசிரயராகியும், [illegible] ணரூபமான இந்தப் பிரபஞ்சத்தைக் காட்டிலும் [illegible] யிருக்கிற பரப்பிரம்மத்தினிடத்திலே மனதை ஸ்திரமாகவைத்து, அகங்கார சூனியராகியும், கிருக முதலானவைகளிலே மமதை யில்லாதவராகியும், சீதோஷ்ண முதலியவைகளிடத்தில் சமபுத்தியையுடையவராகியும், ஆத்மக்கியானத்தை யுடையவராகியும், அலையொழிந்திருக்கிறசமுத்திரமானதுபோல் நிச்சலராய் ஸ்ரீவாசுதேவனிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தை யுடையவராயும், அக்கியானபந்தத்தை விட்டவராயும், யதேச்சா சஞ்சாரியாகியும், பரமாத்மாவினிடத்திலே சமஸ்த பிராணிகளையும், சாக்ஷாத்கரித்தவராயும், காமக்குரோத சூனியரா

கியும், சர்வப் பிராணிகளிலேயும் சமபுத்தியை யுடையவரா கியுமிருக்கிற அந்தக் கர்த்தம மகாரிஷியால், பகவத்பக்தி யோகத்தினலே மிகவும் சிலாக்கியமான பரமபதமானது அடையப்பட்டது.



## இருபத்தைந்தாவது அத்தியாயம்.



*புத்திரரான கபில மகாரிஷியானவர், மதாவான தேவஹூதியினலே சம்சார பந்த மோக்ஷத்தைக் குறித்துக் கேட்கப்பட்டவராய் ஆதியிலே பக்தி மார்க்கத்தைச் சொன்னரென்று சொல்லப்படுகின்றது.*

சவுனக மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் சூதபுராணிகரே! தம்முடைய மாயையினலே தத்வங்களைப் பிரவிர்த்திப்பிக்கிறதற்கு ஜன்மரகிதராகிய சாக்ஷாத் பகவான்தானே மனுஷியர்களுக்கு ஆத்மக்கியானத் தைக் காண்பிக்கிறதின் பொருட்டுக் கபிலமகாரிஷியாக அவ தரித்தாரென்று அருளிச்செய்தீரே அந்த பகவானுடைய குணங்களைக்கேட்டு எனக்குத் திருப்தி அடையவில்லை. பக்தா னுக்கிரகார்த்தமாக அந்தப் பகவானனவர் யாதொரு கருமங் களைச் செய்தாரோ, அந்தக் கர்மங்களைக் கேட்கச் சிரத்தை யுடைய எனக்குச் சொல்லவேண்டுமென்று பிரஸ்னம் பண்ணுகின்ற சவுனகாதி மகரிஷிகளைப் பார்த்துச், சூத புராணிகர் சொல்லுகிருர். வாருங்கள் சவுனகாதிரிஷிகளே! வியாசருக்குச் சினேகிதராகியிருக்கிற மைத்திரேய மகரிஷி யானவர் இந்தப் பிரகாரமே ஆத்மவித்தையிலே விதுரராலே பிரஸ்னம் பண்ணப்பட்டவராய், மிகவும் சந்துஷ்டராய் அந்த விதுரரைக்குறித்து இந்தப் பிரகாரம் சொல்லுகிருர். வாரீர் விதுரரே! பிதாவான கர்த்தமப் பிரஜாபதியானவர், வனத்தை யடைந்த பிறகு, பகவானன கபிலமகாரிஷியானவர் மாதாவுக்குப் பிரீதியைப் பண்ண வேண்டுமென்கிற இச்சை யினலே அந்தப் பிந்து சரசிலேயே வாசம் பண்ணிக் கொண் டிருந்தார். நிவர்த்திபரராகியும், தத்வ மார்க்கத்தைக் கரை கண்டவராகியும், தன்னுடைய புத்திரராகியு மிருக்கிற அந் தக் கபிலமகாரிஷியைப் பார்த்துத் தேவஹூதியானவள் கர்த்த மப் பிரஜாபதியினுடைய வசனத்தை ஸ்மரித்துக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிருள். வாரீர் நிரதிசயமகிமையை யுடையவரே! அசத்துக்களான இந்திரியங்களுடைய விஷயா பிலாஷையினலே மிகவும் இளப்பையடைந்த பூரிக்கப்படு

கின்ற காமத்தினாலே அந்தத் தமசு என்னப்பட்ட நரகத்தைப் பல ஜன்மங்களாக அடையப்பட்டிருக்கிற அடியேனுக்கு இந்த ஜன்மத்தில் உமதருளினால் உம்முடைய சேவையானது என்னாலே அடையப்பட்டது. ஜகத்காரணராகியும் பகவானாகியு மிருக்கிற தேவரீர் அக்கியானத்தினாலே குருடாயிருக்கிற இந்த லோகத்திற்குச் சூரியனானவன்போல் நேத்திர ஸ்வரூபமாக ஆவிற்பவித்தீர். ஆகையினாலே இந்தச் சரீரத்திலே நானென்றும், என்னதென்றும், இப்படிப்பட்ட ராகத்வேஷாதிகளுடனே கூடிக்கொண்டிருக்கிற என்னுடைய அந்த மோகத்தைப் போக்குகைக்குத் தேவரீரே யோக்கியர். சகல லோக ரக்ஷகராகியும், பக்தர்களுடைய சம்சாரமாகிற விருக்ஷத்திற்குக் கோடாரியாகியும், உத்தம தர்மங்களை அறிந்த பேர்களுக்குச் சிரேஷ்டராகியும், பிரகிருத புருஷராகியு மிருக்கிற உம்மை நன்றாக அறியவேண்டு மென்கிற இச்சையினாலே, சரணமாக அடைகிறேனென்று பிரார்த்திக்கின்ற மாதாவினுடைய கோரிக்கையைக் கேட்டு, புன்சிரிப்பினாலே விளங்குகின்ற திருமுக மண்டலத்தை யுடையவராய் ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

### ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! சுக துக்கத்தை நிவர்த்தி செய்யத் தக்கதாயும், மோக்ஷசாதனமாகியு மிருக்கிற அத்யாத்தும யோகத்தை உனக்குச் சொல்லுகிறேன் கேள். மோகத்திற்கும், பாபத்திற்கும், சாதகமான இந்த மனதானது, சுகதுக்கத்தைச் சமமாகவெண்ணி, வைராக்கியத்துடன் சுவயம்பிரகாசராகியும், சமஸ்தசுவரூபியாயு மிருக்கின்ற பரமாத்துமாவினிடத்திலே சலியாமல் பக்தி செலுத்துவதைக் காட்டிலும் வேறே மார்க்கமில்லை. கியானிகளான பேர்கள் அசத்தான விஷயங்களில் செலுத்துகிற மனதை, ஜீவனுக்குப் பாசபந்தமாகச் சொல்லுவார்கள். சன்மார்க்கத்தில் செலுத்துகிற மனதை மோக்ஷத்திற் குரித்தாகச் சொல்லுவார்கள். மிகவும் பொறுமையை யுடையவர்களாகியும், கிருபையை யுடையவர்களாகியும், சமஸ்த பிராணிகளுக்கும் சுகிர்துக்களாகியும், சத்துருவில்லாதவர்களாகியும், சமத மாதி குணங்களை யுடையவர்களாகியும், சாதுக்களாகியும், என்னிமித்தமாகச் சகல தர்மங்களையும், சுவஜனங்களையும் விட்டவர்களாகியும், சந்துஷ்டர்களாகியும், என்னுடைய அவதார சம்பந்தங்களான கதைகளைக் கேட்டுக் கீர்த்தனஞ் செய்கிறவர்களாகியுமுள்ளவர்களை நானாவிதங்களான தாபங்கள் பாதிக்கமாட்டா. வாராய் பதிவிரதையே! சர்வ சங்கத்தையும் விட்டிருக்கின்ற

சாதுக்களுடைய சங்கமத்திஞலே சமஸ்த தோஷங்களையும் போக்கி, என்னுடைய கதைகளை நித்தியமாக ஜபித்துச், சீக்கிரமாக அக்ஞானத்தை நிவர்த்தித்து, என்னையே யடைக வென்று சொல்லுகின்ற பகவானுடைய வசனத்தைக் கேட்டுத், தேவஹூதியானவள் சொல்லுகிருள். வாரீர் பகவானே! ஸ்திரீயான நான் யோக்கியமான எந்தப் பக்தியிஞலே மோக்ஷஸ்வரூபியான தேவரீருடைய பதத்தைச் சீக்கிரமாக அடைவேனே அதை, மந்த புத்தியான எனக்கு விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கின்ற மாதாவினுடைய அபிப்பிராயத்தை அறிந்து சாங்கிய சாஸ்திரத்தைக் கூறுகின்ருர்.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! வேதோக்தங்களான கர்மங்களையும், சப்தாதி விஷயங்களையும் அறிகிற இந்திரியங்களுக்கு, ஸ்ரீ பகவானிடத்திலே உண்டாயிருக்கிற நிலையான பக்தியானது, ஜடராக்னி யானதுபோலச் சரீரத்தை நாசம் பண்ணிப்போடும். அப்படிப்பட்ட பக்தியையுடைய பாகவதர்களான பேர்கள் என்னுடைய ஸ்ரீ பாதபத்ம சேவையிஞலே ஆசக்தி யுடையவர்களாகி என்னுடைய சாயுச்சியத்தைக் கோராமல் எனது ரூபங்களாலே அபகரிக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களாகிச் சத்தியலோக முதலானவைகளிலே யிருக்கின்ற அணிமா முதலிய அஷ்ட ஐசுவரியத்தையும் விரும்பாமல் ஸ்ரீ வைகுண்ட பதத்திலே உண்டாகின்ற சகல சம்பத்தையும் அடைகிருர்கள். வாராய் சாந்தமான ரூபத்தை யுடையவளே! அந்த பாகவதர்கள் என்னையே சரணமாக அடைந்து ஒருக்காலும் போகமில்லாதவர்களாகவும் ஆகிறதுமில்லை. மிகவும் சாகிருதையை யுடையதான என்னுடைய காலசக்கிரமும் அவர்களைத் தரிசிக்கிறதுமில்லை. இகபர லோகங்களை யடைகின்ற ஆத்துமாவை அனுவர்த்தித்துக் கொண்டிருக்கின்ற புத்திரமித்திர களத்திராதிகளையும், பசு முதலான தனங்களையும், கிருகங்களையும், மற்றுமுள்ளவைகளையும் விட்டு, விசுவமுகனுன என்னை ஏகாந்த பக்தியிஞலே ஆசரிக்கிறவர்களைச் சம்சாரத்தினின்றும் மிகவும் தரிப்பிப்பேன். என்னை விட்டால் பின்னை ஒன்றிஞலேயும் தீவிரமான இந்தச் சம்சார பயமானது நிவர்த்திக்கப்பட மாட்டாது. என்னுடைய ஆக்கினையால் வாயுவானவன் வீசிக்கொண்டும், சூரியனுனவன் பிரகாசித்துக் கொண்டும், இந்திரனுனவன் ஜலத்தை வருஷித்துக்கொண்டும், அக்கினியானவன் தகித்துக்கொண்டும்,

மிருத்தியுவானவன் காலம் தப்பாமல் பிராணிகளிடத்திலே சஞ்சரித்துக்கொண்டும், யோகீஸ்வரர்களானபோர்கள் கியான வயிராக்கியங்களுடனே கூடிக்கொண்டிருக்கிற பக்தி யோகத்தினாலே என்னுடைய திருவடிகளை ஆஸ்ராயித்துக் கொண்டு மிருக்கிறார்கள். வாராய் மாதாவே! தீவிரமான பக்தியோகத்தினாலே என்னிடத்திலே நிச்சலமாக வைக்கப் பட்டிருக்கிற மனதுடையவர்களுக்குச் சதுர்வித புருஷார்த்தங்களிற் சிறந்த மோக்ஷத்திற்கு யாதொரு தடையுமில்லை.



## இருபத்தாறுவது அத்தியாயம்.

*பிராணிகளுடைய விவேகத்திற்கு சாங்கிய சாத்திரத்தினாலே சமஸ்த தத்வங்களுடைய ஜன்மமும், லக்ஷண பேதங் களும் சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! புருடனுக்குப் பிரகிருதி குணங்களைப் போக்கடிக்கின்ற தத்வங்களுடைய லக்ஷணத்தையும், அகங்காரங்களைப் போக்கடிக்கின்ற மோக்ஷ சாதனமான கியானத்தையும் உனக்குச் சொல்லுகிறேன். பிரபஞ்சத்துடன் கூடினவனாகியும், இந்திரியங்களுக்கு அவிஷயமான பிரகாசத்தை யுடையவனாகியும், பிரகிருதியைக் காட்டிலும் வேறுபட்டவனாகியும், சத்துவாதிகுணாதிதனாகியும், சுவயம் பிரகாசனாகியு மிருக்கிற ஆத்துமாவானவன் பிறப்பு இறப் பற்றவனாய்ச் சொப்பனங் கண்டுகொண்டிருக்கிற புருடனைப் போல ஜனன மரணங்களை யுடையவைகளான தேக முதலிய உபாதிகளுடனே கூடிக்கொண்டும், சூக்ஷ்மமாகியும், பகவானுடைய சக்தியாகியும், திரிகுணஸ்வரூபமாகியு மிருக்கிற பிரகிருதியினாலே தன் சுவபாவத்தை மறந்து அவற்றின் செய்கைகளைத் தனதாக வெண்ணியிருக்கிற ஆத்துமாவுக்குச் சரீரம், இந்திரியங்கள், இந்திரியாபிமானி தேவவர்க்கங்கள், இவைகளுடனே அமிக்கப்பட்டிருக்கிறதினாலே பிரகிருதியைக் காரணமென்று சொல்லுவார்கள். சுகதுக்கங்களுடைய போகத்தினாலே பிரகிருதியைக் காட்டிலும் பரனாயிருக்கிற ஆத்துமாவைக் காரணமாகச் சொல்லுவார்க ளென்று சொல்லுகின்ற ஸ்ரீ பகவானைப் பார்த்துத் தேவஹூதி வினவுகிறாள். வாரீர் புருஷோத்தமரே! இந்தப் பிரபஞ்சத்துக்கு

காரணர்களான பிரகிருதி புருஷர்களுடைய லக்ஷணத்தை நன்றாகச் சொல்லவேண்டுமென்று கேட்கிற தேவஹூதியைப் பார்த்துப் பகவானானவர் சொல்லுகிறார்.

வாராய் மாதாவே! விசேஷசூனியமாகியும், விசேஷங்களுக்கு ஆசிரியமாகியும், சத்வாதி குணங்களுடையதாகியும், அகாரியமாகியும், காரியகாரண ஸ்வரூபமாகியும், நித்தியமாகியுமிருக்கிற பிரதானத்தையே பிரகிருதியென்று சொல்லுவார்கள். பிருதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாசமென்னு மகாபூதங்கள் ஐந்து; கந்தம், ரசம், ரூபம், ஸ்பரிசம், சப்தமென்று அதின் குணங்கள் ஐந்து; சுரோத்திரம், தொக்கு, நேத்திரம், கிராணம், ரசனை, வாக்கு, கைகள், பாதங்கள், கோசம், குதம் என்று இந்திரியங்கள் பத்து; மனது, புத்தி, அகங்காரம், சித்தம் என்று கரணங்கள் நான்கு; ஆக தத்வம் இருபத்துநான்கும், தத்வத்தை யறிந்தவர்களாலே பண்ணைப்பட்டிருக்கின்றன. இருபத்தைந்தாம் தத்வமாகியும், பிரகிருதி பரவசனாகியும், தேகாதிகளிலே அகங்காரத்தினால் மூடனாகியுமிருக்கிற ஜீவனுக்குப் பயமானது உண்டாகிற காலத்தை ஈஸ்வரனுடைய பராக்கிரமமாகச் சிலபேர்கள் சொல்லுவார்கள். அந்தக் காலரூபமான ஸ்ரீ பகவானானவர் தம்முடைய மாயையினாலே பிராணிகளுடைய தேகத்திற்குள்ளே புருடரூபராகியும், வெளியிலே காலரூபராகியும் இருக்கின்றனர். பின்னும் விடாமல் வியாபித்துக்கொண்டு ஜீவர்களுடைய அதிர்ஷ்டத்தினாலே சலியாநின்ற சத்வாதி குணங்களையுடையதான பிரகிருதியினிடத்திலே தம்முடைய சக்தியைப் பிரளயகாலத்திலே லயம்பண்ணி வைத்திருந்ததாயும், பகவானுடைய ஆவிர்பாவத்துக்கு ஸ்தானமாகியும், ஆதிபூதரூபத்தினாலே மகதத்வமென்றும், அத்தியாத்ம ரூபத்தினாலே சித்தமென்றும், உபாசியதேவதா ரூபத்தினாலே வாசுதேவனென்றும், சொல்லப்படுகிற மகதத்துவத்தினின்றும் உண்டான வைகாரிகமென்றும், தைசதமென்றும், தாமசமென்றும், மூன்றுவிதமாகச் சொல்லப்படுகிற அகங்காரத்தை ஆயிரம் சிரசுகளையுடைய அனந்தபுருடராகச் சொல்லுகிறார்கள். அகங்காரத்திலே சங்கர்ஷணர் உபாசன தேவதையாகியும், ருத்திரன் அதிஷ்டான தேவதையென்றுந் தாத்பரியம். அந்த அகங்காரத்திற்குத் தேவதா ரூபத்தினாலே கர்த்ருத்வமும், இந்திரிய ரூபத்தினாலே காரணத்வமும், பஞ்சபூத ரூபத்தினாலே காரியத்வமும், சத்வாதிகுண ரூபத்தினாலே சாந்தத்வமும், கோரத்வமும், மூடத்வமும், லக்ஷணமாக விருக்கிறது. வைகாரிகாகங்காரத்தினின்றும்

மனது உண்டாயிற்று. மனதினுடைய சங்கல்பங்களாலே இச்சாரூப விருத்தியான மனதை இந்திரியங்களுக்கு ஈசுவரனெனவும், அனிருத்தவியூகம் உபாசிய தேவதையென்றும், சந்திரன் அதிஷ்டாதாவாகியும் அறியத்தக்கது. அந்த மனது சரத்காலத்திலே உண்டாகின்ற கருநெய்தல் புஷ்பம் போலச் சியாமள வர்ணமாகியும், ரிஷிகளாலே மெல்ல மெல்ல வசீகரிக்க யோக்கியமாகியு மிருக்கிறது.

வாராய் மாதாவே! தைசச அகங்காரத்தினின்றும் புத்தியானது உண்டாயிற்று. பிருதிவி முதலான திரவியங்களுடைய பிரகாச ரூபமான விக்கியானமும், இந்திரியங்களுக்குச் சகாயமாயிருக்கையும், சந்தேகமும், பொய்யான கியானமும், நிச்சயமும், ஸ்மரணமும், நித்திரையும், இவைகள் வேறுவேறான விருத்திகளாலே புத்தியினுடைய லக்ஷணமாக விருக்கும். பிராணனுக்குக் கிரியாசக்தியும், புத்திக்கு வித்தியாசக்தியு மிருக்கிறபடியினாலே இவைகளுடைய கிரியாசத்தி, கியானசக்திகளை யுடையதாயிருக்கும். கியானேந்திரியங்கள், கர்மேந்திரியங்களென்று இரண்டு பிரகாரமாயிருக்கிற இந்திரியங்கள், தைசச அகங்காரத்தினின்றும் உண்டாயின. தாமச அகங்காரத்தி னின்றும் சப்தமாத்திரையானது உண்டாயிற்று. அதினின்றும் ஆகாசமானது உண்டாயிற்று. சுரோத்திரேந்திரியமானது அந்தச் சப்தத்தையடைகிறது. அது பிராணிகளுக்கு உள்ளென்றும், வெளியென்றும் கூறுகிற விவகாரத்துக்கு இடமாயும், பிராணன் இந்திரியங்கள் மனது இவைகளுக்கு இருப்பிடமாயும் உள்ளது. அது ஆகாசத்தினுடைய காரியமான லக்ஷணமாக விருக்கிறது. காலகதியினாலே வேறொரு ரூபத்தை யடையாமல் சப்த குணத்தை யுடையதாயிருக்கிற அந்த ஆகாசத்தி னின்றும் ஸ்பரிசமும், அந்த ஸ்பரிசத்தினின்றும் வாயுவும் உண்டாயின. தொக்கிந்திரியம் அந்த ஸ்பரிசத்தை கிரகிக்கிறது. மிருதுவும், கடினமும், சீதளமும், உஷ்ணமும், இவைகள் ஸ்பரிசத்தினுடைய லக்ஷணமாக விருக்கும். பின்னும் அந்த ஸ்பரிசம் வாயுவினுடைய குணமாகவிருந்து விருக்ஷசாகை முதலானவைகளைச் சலிப்பிக்கிறதும், திரணம் முதலானவைகளை ஒன்றோடொன்று சேர்க்கிறதும், கந்தமுள்ள திரவியத்தைக் கிராணேந்திரியத்தைக் குறித்தும், சீதளமுள்ள திரவியத்தைத் தொக்கிந்திரியத்தைக் குறித்தும், சப்தத்தைச் சுரோத்திரேந்திரியத்தைக் குறித்தும் அடைவிப்பித்துச், சமஸ்த இந்திரியங்களுக்கும் பலமாகி வாயுவினுடைய காரியத்தினாலே லக்ஷணமாகா நிற்கும்,

ரூபமும், அந்த ரூபத்தினின்றும் அந்த வாயுவினின்றும் தேஜசுமுண்டாயின. அந்த ரூபமானது வஸ்துவினுடைய ஆகிருதியாயும், வஸ்துவுக்கு விசேடணமாகியும், நேத்திரேந்திரியத்தினாலே கிரகிக்கப்பட்டும் தேஜசினுடைய அசாதாரண தர்மமாயுமிருக்கும்.

வாராய் மாதாவே! பிரகாசமாகத் தண்டுல முதலானதைப் பாகம் பண்ணுகிறதும், உலர்த்திப் போடுகிறதும், பசிதாபங்களை யுண்டாக்குகிறதும், தேஜசினுடைய காரியமாக நிற்கிறது. அந்தத் தேஜசினின்றும் ரசமும், அதினின்றும் ஜலமுமுண்டாயின. மதுரமான ஒரு ரசந், தானே கூடுகின்ற திரவியங்களுடைய விகாரத்தினாலே, கஷாயமாகியும், மதுரமாகியும், புளிப்பாகியும் கைப்பாகியும், துவர்ப்பாகியும், உவர்ப்பாகியும், ரசனேந்திரியத்தினால் கிரகிக்கப்பட்டும், அனேக விதமாகப், பேதிக்கப்படுகிறது. ஜலமானது ஈரமாய் மண் முதலானதைப் பிண்டமாகப் பண்ணுகையும், திருப்தியைக் கொடுக்கிறதும், ஜீவனமாக விருக்கிறதும், தாகத்தைப் போக்கடிக்கிறதும், மிருதுவாகப் பண்ணுகிறதும், தாபத்தைப் போக்கடிக்கிறதும், கிணறு முதலானதில் எடுக்க எடுக்கத் திரும்ப சுரக்கிறதும், இவைகள் ஜலத்தினுடைய காரியங்கள். அந்த ஜலத்தினின்றும் கந்தமும், அதினின்றும் பூமியும் உண்டாயின. அந்த கந்தமானது பத்மம் முதலானவற்றின் பரிமளமும், உள்ளிப்பூண்டு முதலானவற்றினுடைய நாற்றத்தையும் அடைந்து கிராணேந்திரியத்தால் கிரகிக்கப்பட்டிருக்கும். பத்மம் முதலானவற்றையுடைய பூமியானது பிரமாதி ரூபத்தினாலே பரப்பிரம்மத்துக்குச் சரீரரூபத்தைப் பண்ணுகையும் வேறொரு ஆதாரவை அபேக்ஷியாமல் தானாகவிருந்து ஜலாதிகளுக்கு ஆதாரமாகியும், ஆகாச முதலானவைகளுக்கு இடமாயும், சமஸ்த பிராணிகளுடை புருஷத்வ முதலான குணங்களுக்குப் பிரகாசம் பண்ணுகிறதும், பூமியினுடைய காரியமாக இருக்கிறது. ஆகாசத்தினுடைய குணமான சப்தமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்குச் சுரோத்திரேந்திரியமென்றும், வாயுவினுடைய குணமான ஸ்பரிசமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்துக்குத் தொக்கேந்திரியமென்றும், தேஜசினுடைய குணமான ரூபமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்கு நேத்ரேந்திரிய மென்றும், ஜலத்தினுடைய குணமான ரசமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்கு ரசமென்றும், பூமியினுடைய குணமான கந்தமானது கிரகிக்கப்படுகிற இந்திரியத்திற்குக் கிராணேந்திரிய மென்றுஞ் சொல்லப்படுகிறது.

காரணமான ஆகாச முதலானதினுடைய குணமான சப்த காரியமான வாயு முதலானதில் சம்பந்தமிருக்கிற படியினாலே அந்தச் சப்தம் பூமியில் காணப்படுகிறது. மகதத்வ முதலான இந்த ஏழு தத்வங்களும் ஒன்றோடொன்று கூடாமலிருந்த போது, ஈஸ்வரனானவர் காலகர்மங்களுடனே கூடினவராய் அவைகளிலே பிரவேசித்து அசேதனமான பிர்மாண்டமானது உண்டாக, அந்த அண்டத்தினின்றும் விராட் புருஷரானவர் உண்டானார்.

அதனாலே அந்தப் பிரமாண்டமானது விசேஷமென்று பெயரையுடைத்தாயிற்று. பகவானானவர் சுவர்ணமயமாகியும், ஜலத்தையே யாதாரமாக வுடையதாகியு மிருக்கிற அந்தப் பிரம்மாண்ட கோசத்திலே கிரியைப்பற்றிப் பிரவேசித்து, இந்திரிய ஸ்தானங்களைப் பிரித்து, முன்னே முகத்தை யுண்டுபண்ண வாக்கானது உண்டாயிற்று. அந்த வாக்குடனேகூட அக்கினியானது அந்த முகத்திலே பிரவேசித்தது. பிற்பாடு நாசிகைகளுண்டாயின. பிராயணனுடனே கூடின கிராணேந்திரியமானது அந்த நாசிகைகளிலே பிரவேசித்தது. பிற்பாடு நேத்திரங்களுண்டாயின. சக்ஷுரிந்திரியமும், சூரியனும், பிராணனோடே கூடிக்கொண்டு நேத்திரங்களிலே பிரவேசித்தார்கள். பிற்பாடு செவிகளுண்டாயின. திக்குகளும், சுரோத்திரேந்திரியமும், பிராணனுடனே கூடிக்கொண்டு அந்தச் செவிகளாலே பிரவேசித்தன. பிறகு தொக்கிந்திரியம், ரோமம், மீசை, கேசம் முதலானவைகளும் உண்டாயின. அந்த ரோமகேசங்களினின்றும் ஔஷதிகளும், சிஸ்னமும், அதினின்றும் வீரியமும், அதினின்றும் ஜலங்களும், பின்னர் குதமும், அதினின்றும் அபானமும், அந்த அபானத்தினின்றும் லோகபயங்கரனான மிருத்தியுவு முண்டானான். பிற்பாடு அஸ்தங்களும், அந்த அஸ்தங்களினின்றும் பலமும் உண்டாயின. அந்த அஸ்தங்களைப் பலத்துடனே கூட இந்திரன் அனுப்பிரவேசித்தான். பின்பு பாதங்கள் பிரிந்து கதியுண்டாயிற்று, அந்தப் பாதங்களினின்றும் ரந்திரங்களோடே கூடினதான நரம்புகளும் அதின் பிற்பாடு இரத்தமும் உண்டாயின. அந்த நாடிகளிலே நதிகளுண்டாயின, பிறகு குட்சியுண்டாயிற்று. அதினின்றும் பசிதாபமுண்டாயின. அதினின்றும் சமுத்திரமுண்டாயிற்று. பின்னர் அந்த விராட் புருஷனுக்கு இருதயகமல முண்டாயிற்று. இருதயத்தினின்றும் மனது உண்டாயிற்று. மனதினின்றும சந்திரனுண்டானான். பிற்பாடு புத்தியுண்டாயிற்று. புத்தியினின்றும் பிரம்மா வுண்டானான்.

பின்பு அகங்கார முண்டாயிற்று. அகங்காரத்தி னின்றும் ருத்திர னுண்டானன். பிறகு சித்தமுண்டாயிற்று. அதினின் றும் க்ஷேத்திரக்கியனுண்டானன். இந்தப்பிரகாரம் உண்டாகா நின்ற இந்த தேவர்கள், அந்த விராட்புருஷனை எழுப்புகிற திலே சமர்த்தராகாதவர்களாய்த் திரும்பவும் அந்த விராட் புருஷனை எழுப்புகைக்குக் கிரமமாக அந்தந்த இந்திரியங் களிலே பிரவேசித்தார்கள். அக்கினியானவன் வாக்கேந் திரியத்தோடே முகத்தையடைந்தும், வாயுவானவன் கிரா ணேந்திரியத்தோடே கூட நாசிகைகளை யடைந்தும், சக்ஷுரிந் திரியத்தோடே கூடச் சூரியனானவன் நேத்திரேந்திரியங்களை யடைந்தும், மிருத்தியுவானவன் அபானேந்திரியத்தோடே கூடக் குதத்தைப் பிரவேசித்தும், இந்திரனானவன் பலத் துடனே கூட அஸ்தங்களை யடைந்தும், ஸ்ரீ விஷ்ணு வானவர் கதியோடே கூடச் சரணங்களை யடைந்தும், சமுத்திரமானது பசி தாகங்களோடே குக்ஷியைப் பிரவே சித்தும், சந்திரனானவன் மனதோடே கூட இருதயத் தைப் பிரவேசித்தும், பிரம்மாவானவன் புத்தியோடே கூட இருதயத்தை யடைந்தும், ருத்திரனானவன் அகங்காரத் தோடே கூட இருதயத்தை யடைந்தும், அந்த விராட்புரு ஷன் எழுந்திருக்கவில்லை; சயித்தியனான க்ஷேத்திரக்கியனா னவன் சித்தத்தோடே கூட இருதயத்தைப் பிரவேசித்த போதே அந்த விராட்புருஷனானவன் அந்த ஜலத்தினின் றும் எழும்பினன். நித்திரை பண்ணுகின்ற புருஷனைப் பிராணன், இந்திரியம், மனது, புத்தி இவைகள் தங்களு டைய சக்தியினாலே க்ஷேத்திரக்கியனன்றியிலே எழுப்புகைக் குச் சமர்த்தங்களாக வில்லாதனபோல் அந்தத் தேவர்களும் சமர்த்தர்களாகாமற் போனார்கள். அப்படிப்பட்ட க்ஷேத்திரக் கியானத்தினாலே காரிய காரணமானவனைக் கியானத்தி னாலே நன்றாக விவரித்துச் சிந்திக்கவேண்டும்.



## இருபத்தேழாவது அத்தியாயம்.



தத்துவக்கியான முதலான வெகு சாதன யோகத்தினாலேயும், பிர கிருதிபுருஷர்களுடைய விவேகத்தினாலேயும், மோக்ஷ ரீதியானது நிரூபிக்கப்படுகின்றது.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! ஜலத்திலே பிரதிபலிக்கின்ற சூரிய னானவன் அந்தச் சலதர்மங்களாலே யதார்த்தமாகச் சம்மதிக்

கப் படாததுபோல் புருஷனானவன் தேகத்திலே யிருந்தாலும், விகாரசூனியனாயும், சத்வாதிகுண சூனியனாகியுப் கர்த்ருத்வ சூனியனாயும் இருக்கிறபடியினாலே, அந்தப் பிராகிருதங்களான சுகதுக்காதிகளாலே சம்பந்திக்கப்படவில்லை. அவன் அமிக்கப்பட்டானேயானாலப்போது அதனாலேயுண்டாயிருக்கின்ற அகங்காரத்தினாலே மிகவும் மூடமான மனதையுடையவனாய், நான் கர்த்தாவாகிறேனென்று எண்ணி அதனால் மனதில் துக்கத்தையுடையவனாகி, பிரகிருதி சம்பந்தத்தினாலே பண்ணப்படுகின்ற தர்மார்த்த காமங்களாலேயும், ராகத்துவேஷாதிகளாலேயும், தேவ, திரியக்கு, நரர்கள் முதலான ஜன்மங்களில் சம்சார மார்க்கத்தை யடைகிறான் நித்திரை பண்ணுகிறவன் சொப்பனத்திலே பதார்த்தங்களில்லாம லிருந்தாலும் பதார்த்தம் உண்டாய்க் காணப்படுகிறதுபோல், விஷயங்களைச் சிந்திக்கின்ற புருஷனுக்கு யதார்த்தமில்லாத சம்சாரரூப அர்த்தமானது நிவர்த்திக்கிறதில்லை. அசத்துக்களான விஷயங்களுடைய மார்க்கத்திலே விழுகின்ற சித்தத்தை மெல்ல மெல்லத் தீவிரமான பக்தியோகத்தினாலேயும், வைராக்கியத்தினாலேயும், வசப்படுத்திக் கொள்ளவேண்டும். யமநியம முதலான யோகமார்க்கங்களினால் என்னிடத்திலேயே வைக்கப்பட்ட சித்தத்தையுடையவனாய் என்னுடைய கதாசிரவணஞ் செய்து சகல பிராணிகளிடத்திலும் சமபுத்தி யுடையவனாய் வயிரமில்லாமலும், சத்சங்கத்துடனும் கூடி நிஷ்காமனாய் ஈசுவரார்ப்பணம் பண்ணப்படுகிற சுவதர்மத்தை யுடையவனாயும், யதேச்சாலாபத்தில் சந்துஷ்டனாயும், சிரத்தையோடே கூடினவனாகியும், ஏகாந்தவாசியாகிச் சமதமாதிகுணங்களையுடையவனாகியும், சகல பிராணிகளுக்கும் சுகிர்த்தாகியும், தயையுடையவனாகியும், பரமாத்துமக் கியானத்தை யுடையவனாகியும், புத்திர மித்திராதி அனுபந்தங்களுடனே கூடிக் கொண்டிருக்கிற இந்தத் தேகத்தினிடத்தில் அசத்தான மமதையைப் பண்ணாதவனாகியும், நேத்திரத்தினாலே சூரியனைப் பார்க்கிறதுபோல் மனதினாலே பரமாத்துமாவை அறிந்து ஆத்துமக்கியானத்தை யுடையவனாய் ஜகத்திற்கு நேத்திரமானதுபோல் பிரகாசமாகியும், சமஸ்த காரியங்களிலேயும், காரணங்களிலேயும், இணைபிரியாமலு மிருக்கிறவன் பரிபூரணமான பிரம்மத்தை யடைவன் ஜலத்திலே பிரதிபலிக்கின்ற சூரியனுடைய பிம்பமானது கிருகமத்தியிலிருக்கின்ற சுவரிலே பிரகாசிப்பதைக், கிருகத்திலே யிருக்கின்ற புருஷன் பார்த்துச் சுவரிலே பிரகாசிக்கின்ற அந்தப் பிரதிபிம்பத்தைக் கொண்டு, ஜலத்திலே யிருக்கிற

பிரதி பிம்பமாக அறிந்து, அந்த ஜலத்திலேயிருக்கின்ற பிரதிபிம்ப மூலமாக ஆகாசத்திலே யிருக்கின்ற சூரியனைப் பார்க்கிறதுபோல், தேகேந்திரியங்களிலே அந்தரியாமியா யிருக்கின்ற பிரதி பிம்பங்களினாலே திரிகுணாத்துமகமான அகங்காரமானது காணப்படுகிறது.

அந்த ஆத்துமாவினாலே சத்தியக்கியான சுவருபரான பரமாத்துமாவானவர் காணப்படுகிறார். இந்திரியங்கள் முத லானவைகள் நித்திரையினாலே பிரகிருதியிலே லயித்திருக் கையில், பரமாத்துமாவானவர் அப்போது ஆத்மாவை நாசத்தை யடைந்தவன்போல எண்ணிக்கொண் டிருக்கிறார் அதெப்படிப்போல வென்றால் : திரவிய நாசத்தையுடைய மனிதனானவன் தானே நாசமடைந்ததாக வியசனப்படுவது போலாம். தேகத்துக்குப் பிரகாசனாகியிருக்கிற ஆத்துமா வைத் தேகாதிகளைக் காட்டிலும் வேறாகிச் சர்வசாக்ஷியா யிருக்கிறவனாக அறிந்து, அவனையே அடைவனென்று சொல்லுகிற பகவானுடைய வசனத்தைக்கேட்டுத், தேவ ஹூதி கேட்கிறாள் : வாரீர் பிரம்மநிஷ்டரே ! புருஷனையன் றிப் பிரகிருதிக்குப் பிரகாசமில்லாமலும், பிரகிருதியை யன் றிப் புருஷனுக்குப் பிரகாசமில்லாமலும், கந்தத்தை விட்டுப் பூமியும், பூமியைவிட்டுக் கந்தமும் விடாதது போலும். ஜலத்தைவிட்டு ரசமும், ரசத்தைவிட்டு ஜல மும் விடாதது போலும், பிரகிருதியைவிட்டுப் புருஷ னும், புருஷனைவிட்டுப் பிரகிருதியும் பிரகாசிக்கிறதில்லை அப்படியிருக்கக் கர்த்ருத்வமில்லாத புருஷனுக்குக் கர்ம பந்தமுள்ள சத்வாதிகுணங்களுடைய சம்பந்தம் எப்படி உண்டாகாமலிருக்கும். அதை அடியேனுக்குச் சொல்ல வேண்டுமென்று கேட்கிற தேவஹூதியைப் பார்த்து, ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிறார். வாராய் மாதாவே ! சுவதர்மத்தினாலும், நிர்மலமான மனதினாலும், சர்வகால மும் என்னுடைய கதாசிரவணத்தினாலே விருத்தியடைகின்ற புருஷனுடைய பிரகிருதியானது, அக்கினியை யுண்டாக்கு கிற அரணியானது அந்த அக்கினியினாலேயே தகிக்கப்பட் டுப் போகிறதுபோல், மெல்ல நாசத்தை யடைந்துவிடும். புசிக்கப்பட்ட போகங்களையும், நித்தியமாகக் காணப்பட்ட தோஷங்களையுமுடைய அந்தப் பிரகிருதியானது, சுவா னத்தினிடத்திலே யிருந்தும் ஈஸ்வரனாயு மிருக்கிற பரமாத் மாவுக்கு அசுபத்தைச் செய்யமாட்டாது. நித்திரை பண்ணு கிற புருஷனுக்குச் சொப்பனமானது வெகு அனர்த்தங்களை யுண்டாக்கி, விழித்துக் கொண்டபின்பு புத்தியில் தோன்றிக்

கொண் டிருந்தாலும், மோகத்தைச் செய்யாததுபோல், பிரகிருதியும், தத்துவக்கியானத்தை யறிந்த புருஷனுக்கு, ஒருக்காலும் அபகாரத்தைச் செய்யாது பரமாத்துமாவி னிடத்திலே பிரீதியையுடைய புருஷனானவன் என்னுடைய பிரசாதத்தினாலே கைவல்லிய மென்று பெயரையுடைய மோக்ஷத்தைச் சீக்கிரமாக அடைவான்.



## இருபத்தெட்டாவது அத்தியாயம்.



*தியானத்தினாலே விளங்குகின்ற அஷ்டாங்கயோகத்தினாலே சர்வ வுபாதிசூனியமான பரமாத்ம சுவரூபக்கியானமானது சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் ராஜபுத்திரியே! மனது தெளிவாகிச் சன்மார்க்கத்துடன் ஸ்ரீ பகவானைத் தியானிக்கத்தக்க யோகாப்பியாசத்தினுடைய லக்ஷணத்தைச் சொல்லுகிறேன். தன்னுடைய சக்தியுள்ளமட்டும் சுவதர்மானுஷ்டானமும், விருத்தி தர்மத்தில் நிவர்த்தியும், அதிஷ்டான ரூபமாகக் கிடைத்ததைக்கொண்டு சந்தோஷப்படுகையும், ஆத்ம வித்துக்களான பாகவதர்களுடைய திருவடிகளை அர்ச்சிக்கையும், தர்மார்த்த காமங்களினின்றும் நிவர்த்தியும், மோக்ஷசாதன தர்மத்திலே ஆசக்தியும், அல்பமாயும், பரிசுத்தமாயு மிருக்கிற அன்னத்தினுடைய போஜனமும், சர்வகாலமும் அஹிம்சையும், சத்தியவசனமும், திருடாமல் இருக்கையும், மௌனமும், சர்வகாலமும் பகவானிடத்திலே மனதை அசஞ்சலமாக நிறுத்தியிருக்கையும், விஷயங்களினின்றும் இந்திரியங்களுடைய நீக்கமும், இருதயத்திலே பிராணனுடைய ஸ்தானங்களான மூலாதார முதலானதிற்குள்ளே ஒரு பிரதேசத்திலே மனதுடனேகூடப் பிராணனுடைய தாரணமும், ஸ்ரீ வைகுண்டருடைய லீலைகளான தியானமும், மனதுக்குப் பரமாத்மாவினுடைய சுவரூபத்தைச் சம்பாதிக்கையும், இவைகளில் மிகவும் சமர்த்தனான புருஷனானவன் தனது புத்தியினாலே மனதை மெல்ல ஆத்மாவினிடத்திலே நிறுத்தக்கடவன், பரிசுத்தமான இடத்திலே தர்ப்பாசனம், கிருஷ்ணாஜினம், வஸ்திரம், இவைகளை மேலே போட்டுக் கொண்டு, அந்த ஆசனத்திலே சொஸ்திகாசனத்தை யுடைவ

ணுகிப், பிராணவாயுவை நிறுத்தக்கடவன். சொவஸ்திகாசன மாவது தொடைகளைக் கணைக்கால்களுக்கு உள்ளாகப் பண் ணிக்கொண்டு, பாதநுனிகளை முழங்கால்களுடைய மத்தியத் திலே வைத்துக்கொண்டிருக்கிற யோகியினுடைய அந்த ஆச னத்தைச் சொவஸ்திகமென்று வித்துவாம்சர்கள் சொல்லு வார்கள். இபபடிப்பட்ட ஆசனத்திலிருந்துகொண்டு பிராண னுடைய மார்க்கத்தைப் பூரக, கும்பக, ரேசகங்களாலே சோதிக்கக்கடவன். பூரகமாவது வெளியிலே வந்தவாயு வைத் திரும்பவும் உள்ளே பிரவேசிப்பிக்கிறது. கும்பக மாவது பிரவேசித்தவாயுவை நிறுத்தித் தரிக்கிறது. ரேசக மாவது தரிக்கப்பட்டவாயுவை வெளியிலே விடுகிறது. இவை களினாலேயாவது, இடையென்கிற நாடியினாலே பூரித்துப் பிங்கலையென்கிற நாடியினாலே விடுகிறதும், பிங்கலை நாடியி னாலே பூரித்து இடை நாடியினாலே விடுகிறதுமான பிரதி கூலமாயாகிலும் சோதிக்கக்கடவன்.

சித்தமானது ஸ்திரமாக விருக்கும்படி சோதிக்கக்கட வன். ஊதி உருக்கப்பட்ட சுவர்ணமானது மலத்தை விட்டு விடுகிறதுபோலச் சுவாசசயத்தையுடைய யோகிக்கு மனது சீக்கிரமாக நிர்மலமாய் ஸ்திரப்படும், அவன், பிராண நிரோதங்களால் வாதபித்த சிலேஷ்மங்களையும், தாரணை களால் பாவத்தையும், இந்திரிய நிக்கிரகத்தினாலே விஷய சங்கங்களையும், பரமத்தியானத்தினாலே ராகத்துவேஷாதி குணங்களையும் தகிக்கக்கடவன். மனதானது யோகாப்பியாசத் தினாலே நிர்மலமாகியும், ஸ்திரமாகியு மிருக்கிறபோது, தன்னுடைய மூக்கு நுனியிலே வைக்கப்பட்ட திருஷ்டியை யுடையவனாய்ப் பகவத்பக்தியைத் தியானம் பண்ணக்கடவன். பிரசன்னமான பத்மம்போன்ற திருமுகமண்டலத்தை யுடை யவராகியும், பத்மகற்பம்போல் சிவந்த நேத்திரங்களை யுடை யவராகியும், நீலோற்பல தளம் போன்ற திருமேனியை யுடையவராகியும், பொன்வர்ணமான பீதாம்பரத்தை யுடைய வராகியும், மார்பிலே ஸ்ரீ வச்சத்தை யுடையவராகியும், கவுஸ்துவாபரணத்துடனே கூடிக்கொண்டிருக்கிற கண் டத்தை யுடையவராகியும், மதித்த வண்டுகளுடைய மதுர மான தொனியை யுடையதான துளசிமாலையினாலே சூழப் பட்டவராகியும், விலையில்லாததான ஆரம், வலையம், கிரீடம், தோள்வளை, நூபுரம், இவைகளை யுடையவராகியும், அரை நூல் மாலையினால் விளங்குகின்ற கடிப்ரதேசத்தை யுடையவ ராகியும், பக்தர்களுடைய இருதயகமலத்தை ஆசனமாக வுடையவராகியும், மனோக்கியமான ரூபத்தை யுடையவராகி

யும், சாந்தராகியும், பக்தர்களுடைய மனதையும், நேத்தி ரங்களையும், சந்தோஷிப்பிக்கிறவராகியும், அடிக்கடி, அதி சுந்தரமான தரிசனத்தை யுடையவராகியும்,சமஸ்த லோகங்க ளாலேயும், நமஸ்கரிக்கப் படுகிறவராகியும், பவித்திரமா யிருக்கிற யஜஸை யுடையவராகியும், புண்ணிய சுலோகிக ளான பலி, பீஷ்மர் முதலான பேர்களுக்கு யஜஸை பண்ணி யும், சம்பூர்ணங்களான அவயவங்களை யுடையவராகியு மிருக் கிற ஸ்ரீமந் நாராயணனை மிகவும் பரிசுத்தமான மனதினாலே தியானம்பண்ணி, அவருடைய சமஸ்த அவயவங்களையும் பார்த்த பிற்பாடு, அந்தப் பகவானுடைய ஒரு அவயவமாயும், வச்சிரம், அங்குசம், துவஜம், பத்மம் இவைகளாகிற ரேகை களுடனே கூடிக்கொண்டும், மிகவும் உன்னதங்களாகித் தாமரை இதழ்போல் சிவந்தும், நிலவைப்போலொத்த நகங் களை யுடையதாகியும், தியானம்பண்ணுகிற பேர்களுடைய இருதயத்திலுள்ள அந்தகாரத்தை நாசம் பண்ணுகிறதாயு மிருக்கிற பகவானுடைய சரணாரவிந்தத்தை நன்றாகச் சிந்திக் கக்கடவன். அந்தத் திருவடிகளை அலம்புகிற பிரபாவத் தினாலே பரிசுத்தமாய்ச் சகல நதிகளுக்கும் சிரேஷ்டமா யிருக்கிற கங்கையை சிரசிலே தரித்தபடியினாலே சிவனா னவன் பரிசுத்தனானான். தியானம் பண்ணுகிறவனுடைய மனதிலிருக்கின்ற மலமாகிற பர்வதத்திலே விடப்பட்ட வச் ராயுதம் போன்ற பகவானுடைய சரணார விந்தத்தைத் தியானம் பண்ணக்கடவன்.

ஜன்மரகிதராகியும், பரிபூரணராகியு மிருக்கிற பகவா னுடைய இரண்டு முழங்கால்களானவை, சமஸ்தலோக கர்த் தாவான பிரம்மாவுக்கு மாதாவாகியும், தேவர்களாலேயும் சேவிக்கப்பட்டும், பத்மம்போன்ற நேத்திரங்களை யுடைய வளாயு மிருக்கிற ஸ்ரீ மகாலக்ஷ்மியானவள் தனது தொடை களின்மேல் வைத்துக்கொண்டு, தளிரொத்த கைகளினாலே பிடித்து உபசரிக்கப்படுகின்றன. இந்த இரண்டு முழங்கால் களையும், இருதயத்திலே தியானம் பண்ணக்கடவன். கருட னுடைய தோள்களில் விளங்கியும் பலத்துக்கு நிதியாகியும், காசாம் புஷ்பம்போன்ற காந்தியுடையனவாகியு மிருக்கிற பகவானுடைய தொடைகளைத் தியானம் பண்ணக்கடவன். பாதங்கள் வரையில் தொங்குகின்ற பீதாம்பரத்திலே அரை நூல் மாலையினாலே சூழப்பட்டிருக்கிற கடி பச்சாத்பாகத்தைத் தியானம் பண்ணக்கடவன். பிரம்மாவுக்கு ஸ்தானமான பத்மத்திற்கு உற்பத்தி காரணமாயிருக்கிற நாபியைத் தியானம் பண்ணக்கடவன். ஸ்ரீ ஹரியினுடைய இந்திர நீலமணி

போலவும், நிர்மலமான ஆரங்களுடைய காந்தியினலே வெளுத்து மிருக்கிற ஸ்தனங்கள் இரண்டையும் தியானம் பண்ணக்கடவன். ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு இருப்பிடமாகியும், ஸ்மரித்தும், தரிசனம் பண்ணுகிற புருஷர்களுடைய மனதுக்கும், நேத்திரங்களுக்கும், மிகவும் ஆனந்தத்தைப் பண்ணுகிற மார்பைத் தியானம் பண்ணக்கடவன். கவுஸ்துவமணியைப் பூஷணமாகவுடைய கண்டத்தைத் தியானம் பண்ணக்கடவன். க்ஷீராப்தி மதனசமயத்திலே தம்மாலே தரிக்கப்பட்ட மந்தரபர்வதத்தினுடைய சுழலினலே மிகவும் பிரகாசமாகப் பண்ணப்பட்ட தோள்வளைகளையுடைய பாகுகளையும், சகிக்கக் கூடாத தேஜஸையுடைய சுதரிசனத்தையும், தாமரைப் புஷ்பம்போலும் ராஜ அம்சம்போலு மிருக்கிற சங்கத்தையும், நன்ருகத் தியானம் பண்ணைக் கடவன். சத்துருபடர்களுடைய இரத்தமாகிற சேற்றினலே பூசப்பட்டு மிகவும் இஷ்டமாகியு மிருக்கிற கதையைத் தியானம் பண்ணக்கடவன். வண்டுகளின் கூட்டத்தினுடைய சப்தத்தினலே சப்தித்துக்கொண் டிருக்கிற வனமாலையையும் தியானம் பண்ணக்கடவன். பக்தரிடங்களிலே கிருபையோடே கூடிய திருமுகமண்டலத்தைச் சிந்திக்கக்கடவன். வக்கிரங்களாகியும், முன்னெற்றி மயிர்களுடைய சமூகத்தினலே சூழப்பட்டும், ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு ஸ்தானமாகிய பத்மத்தைத் திரஸ்கரிக்கத் தக்கதாயு மிருக்கிற நேத்திரங்களையுடைய புருவங்களை ஆலசிய மில்லாதவனய்த் தியானம் பண்ணக் கடவன். அதிகோரமான தாபத்திரயத்தை நாசம் பண்ணத் தக்கதாகியும், மனேக்கியமான மந்தஹாசத்துடனே கூடிக் கொண்டும், கிருபைக்கு இருப்பிடமாகியு மிருக்கிற கடாக்ஷத்தைச் சர்வகாலமுந் தியானம் பண்ணக்கடவன். பிரபன்னர்களான பக்தர்களுடைய தீவிரமான சோகத்தினலே யுண்டாகிக் கண்ணீராகிற சமுத்திரத்தை யுலர்த்திப் போடத்தக்கதாகியும், மிகவும் கெம்பீரமாகியு மிருக்கிற புன்னகையையும், தன்னுடைய இருதயாகாசத்திலே பார்க்கப்படுகின்ற ஸ்ரீ ஹரியினுடைய அதரோஷ்டங்களுடைய காந்தியினலே சிவந்தனவாகியும், சூக்ஷ்மங்களாகியும், குருக்கத்தி மொக்குகளுடைய வரிசைபோல் விளங்குகிற பல்வரிசைகளையுந் தியானம் பண்ணக்கடவன்.

இந்தப் பிரகாரம் பகவானை ஸ்ரீ ஹரியினிடத்திலே அடையப்பட்ட பிரேமரசத்தை யுடையவனகியும், பக்தியினலே உருகுகின்ற இருதயத்தை யுடையவனகியும், சந்தோஷத்தினலே யுண்டாகின்ற மயிர்க்குச்சை யுடையவனகியும்

மிகவும் ஆசையினலே யுண்டாகின்ற ஆனந்த பாஷ்பத்தினல் வியாபிக்கப்பட்டும், ஆனந்தப் பிரவாகத்திலே முழுகினவனய், அந்த ரூபதாரணையிலே பிரயத்தன மில்லாதவனய் விடுவன். அப்போது ஆஸ்ரயமான காஷ்டத்தை விட்டிருக்கின்ற அக்கினிச் சுவாலையானது சாந்தியை யடைகிறதுபோல் சாந்தியை யடைந்து தேகமுதலான உபாதி சூனியனய் அக்கியான சூனியமாயிருக்கிற மனதினுடைய நிவர்த்தியினலே சுகதுக்கங்களுக்கு வெளிப்பட்டவரான அந்தப் பரமாத்மாவினிடத்திலே நிஷ்டையை யடைந்தவனய்ப் பூர்வம் அனுபவித்த சுகதுக்கங்களை அகங்காரத்திலே வைத்துப் போட்டுப் பரமாத்ம சாக்ஷாத்காரத்தை யுடையவனயிருப்பன் இந்தப்படிக்கு யோகசித்தியை யுடைய புருஷனனவன் எந்தத் தேகத்தினின்றும் பரமாத்ம ஸ்வரூபத்தை யடைந்தானே அந்தத் தேகத்தையும் பாரான். மத்தியபானத்திலே யுண்டான மதத்தினலே ஒன்றுந் தெரியாமலிருக்கிற புருஷனனவன், வஸ்திரம் தன் சரீரத்திலே சுற்றப்பட்டிருக்கிறதையும், நழுவி விழுந்துபோனதையும் அறியாததுபோல், பூர்வீகமான புண்ணிய பாப வாசனையினலே தனது பிராரத்த கர்மம் இருக்கிற மட்டுக்கும் சஞ்சரித்துக் கொண்டு, புத்திர மித்திராதிகளையும், தன்னுடைய தேகத்தையும், சொப்பனத்துக்குச் சமானமாக நினைத்து, நானென்றும் எனதென்றும் அபிமானப்படான். அக்கினியானது ஜொலிக்கின்ற காஷ்டத்தைக் காட்டிலும் தன்னிடத்தினின்றும் பிறவாநின்ற பொறிகள், புகை இவைகளைக் காட்டிலும் வேருகச் சொல்லப்படுகிறதுபோல் ஆத்மாவென்கிற அபிமானத்திற்கு விஷயமான தேகம், இந்திரியங்கள், மனது, இவைகளைக் காட்டிலும் புருஷனனவன் வேருகச் சொல்லப்படுகிருன். ஜீவனென்று பெயரை யுடையவனனை அந்தப் புருஷனைக் காட்டிலும் பரப்பிரம்மமென்று சொல்லப்பட்ட பகவானனவர் வேருக நிற்கிருர். சராயுச முதலான சதுர்விதப் பிராணிகளிலேயும் அந்தப் பரமாத்துமாவையும், அந்தப் பரமாத்மா வினிடத்திலே நான்குவிதப் பிராணிகளையும், அந்த நாலுவிதப் பிராணிகளிலே பஞ்சபூத ஸ்வரூபமென்று அடையும் பகவானையும், அசஞ்சலமாக இராநின்ற புத்தியினலே பார்க்கக்கடவன். அக்கினியானது காஷ்டங்களுக்குத் தீர்க்கமென்றும், சிறியதென்றும், நாஞவிதமாகப் பேதங் காணப்படுவதுபோல் தேகத்திலேயிருக்கின்ற புருஷனும் நானவிதமாக அறியப்படுகிருன். ஆகையினலே பரமாத்மாவினுடைய அம்சமான ஜீவனுக்குப் பந்தவேதுவாகியும், ஸ்ரீ மகாவிஷ்ணுவினு

டைய சத்தியாகியும், காரியகாரண சுவரூபமாகியும், இப்படிப் பட்ட தென்று சிந்திக்கக்கூடாமலு மிருக்கிற பிரகிருதியை அந்தப் பகவதனுக்கிரகத்தினாலே ஜெயித்துப் பரமாத்ம சுவரூபானுபவத்துடனே கூடியிருக்கக் கடவன்.



## இருபத்தொன்பதாவது அத்தியாயம்



*பக்தியோகமும், காலத்தினுடைய பலமும், விரக்தியின் பொருட்டுக் கோர மான சம்சாரமும், வெகு பிரகாரமாகச் சொல்லப்படுகின்றன.*

இப்படி அருளிச்செய்த பகவானைப் பார்த்துத் தேவஹூதி கேட்கிறாள். வாரீர் பகவானே! மகதத்வமுதலான தத்வங்கள், பிரகிருதி புருஷர்களுடைய லக்ஷணம், சாங்கிய சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிற மகதத்வ முதலானவைகளுக்கு வேறுவேறாகக் காணப்படுகிற லக்ஷணமுஞ் சொல்லப்பட்டன. இந்த லக்ஷணத்தைச் சொல்லுகிறதற்கு மூலமான பக்தியினுடைய மார்க்கத்தையுஞ் சம்சார சுவரூபத்தையுங் காலத்தினுடைய சுவரூபத்தையுஞ் சொல்லவேண்டுமென்று கேட்கிற மாதாவினுடைய வசனத்தைக் கொண்டாடிக் கிருபையுடையவராய், மாதாவைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! பக்தியோகமானது, அனேகவிதமான மார்க்கங்களாலே வெகுவிதமாகச் சொல்லப்படுகிறது. புருஷர்களுக்குச் சுவபாவமான சத்வாதி குணங்களுடைய விருத்திபேதத்தினாலே அபிப்பிராயம் வேறாக விருப்பது போல் பக்தியும் வேறுவேறாகக் காணப்படுகிறது. ஹிம்சை, டம்பம், த்வேஷம், இவைகளைச் சங்கற்பித்துக்கொண்டு கோபத்தையும் பேதபுத்தியையும் உடையவனாகி என்னிடத்திலே பக்தியைப்பண்ணுகிற புருஷன் தாமச னென்றும், விஷய சவுக்கியங்களையும், யஜையையும், ஐசுவரியத்தையுங் கோரிக்கொண்டு பேதபுத்தியை யுடையவனாய் அர்ச்சாதி விக்கிரகங்களிலே என்னை அர்ச்சிக்கிறபுருஷன் ராஜசனென்றும், பாபக்ஷயத்தை யுத்தேசித்தாகிலும், பகவத்பிரீதியை யுத்தேசித்தாகிலும், யக்கியம் பண்ணுகின்ற விதியை யுத்தேசித்தாகிலும், அர்ச்சாதி விக்கிரகத்திலே என்னை ஆராதிக்கிற புருஷனானவன் சாத்விக னென்றுஞ் சொல்லப்படுவன்.

என்னுடைய கல்யாண குணங்களைக் கேட்டமாத்திரத்திலே சமுத்திரப்பிரவேசம் பண்ணுகிற நீங்காத கங்காபிரவாகம் போல் என்னிடத்திலே அஞ்சலமாய்ப் பக்தி செலுத்துகிற அந்த நிர்க்குண பக்தியையுடைய பரம பாகவதர்கள், என்னுடைய சேவையை யன்றியிலே சாலோக்கியமென்ற எனது வைகுண்ட லோகவாசத்தையும், சாமீப்பியமென்கிற என்னுடைய சமீப வாசத்தையும், சாருப்பிய மென்கிற எனது சமான ரூபத்தையும், சாயுச்சியமென்கிற ஐக்கியத்தையும், என்னாலேகொடுக்கப்பட்டாலும்இவைகளைக் கிரகிக்கிறதில்லை. இந்தத் திரிகுணத்தையும் விட்டு என்னுடைய சுவரூபானுபவத்திற்குப் பக்தனானவன், யோகமென்று பெயரையுடைய தான அந்தப் பக்தியை மோக்ஷமென்று சொல்லப்படும். பல இச்சையில்லாமலும், சிரத்தையுடனே கூடிக்கொண்டு மிருக்கிற சுவதர்மத்தினாலேயும், நிஷ்காமனாகியும், ஹிம்சாரகிதமாகியு மிருக்கிற பாஞ்சராத்தரங்களிலே சொல்லப்பட்ட பூஜா கிரமத்தினாலேயும், எனது விக்கிரகத்தினுடைய தரிசனம், ஸ்பரிசனம், பூஜை, ஸ்தோத்திரம், பிரணமம், இவைகளாலேயும், சகல பிராணிகளிடங்களிலும், ஈஸ்வர புத்தியினாலேயும், தைரியம், வைராக்கியம், மகத்துக்களுடைய சன்மானம், தீனர்களிடங்களில் கிருபை, தனக்குச் சமானயான பேர்களிடத்திலே சிநேகம், இயம நியமங்களாலும் வேதாந்த முதலானவற்றினுடைய சிரவணங்கள், எனது நாமகீர்த்தனம், கபடமில்லாம லிருக்கை, விஷயசங்கமும் அகங்காரமு மில்லாம லிருக்கை, இந்தக் குணங்களினாலே மிகவும் பரிசுத்தனாகிறான். என்னுடைய தர்மங்களை அனுஷ்டானம் பண்ணுகிறவனுடைய சித்தமானது, பிரயத்தன மின்றியில் எனது குணங்களைக் கேள்வி செய்த மாத்திரத்தில் வாயுவினாலே அடைவிக்கப்படுகின்ற கந்தமானது புஷ்பாதி ஸ்தானத்தினின்றும் கிராணேந்திரியத்தை யடைகிறது போலப் பரமாத்மாவை யடையும். பரமாத்துமாவாகியும் சர்வ நியந்தாவாகியு மிருக்கிற என்னை உபேக்ஷைபண்ணி அவிவேகத்தினாலே அர்ச்சாதி விக்கிரகத்தைப் பரிகசிக்கிற யாதொரு புருஷனானவன், பஸ்மத்திலே ஹோமம் பண்ணினவனுக்குச் சமானமாவான். வாராய் மாதாவே! பிராணிசமூகங்களை நிந்திக்கின்ற புருஷனிடத்தில் நான் சந்தோஷப் படுகிறதில்லை. சுவதர்மத்தை அனுஷ்டானம் பண்ணிக்கொண்டிருக்கின்ற புருஷனானவன், சமஸ்த பிராணிகளிலேயு மிருக்கின்ற என்னைத் தன்னுடைய இருதயத்திலே காணுகிற வரையில் என்னை அர்ச்சாதி விக்கிரகத்திலே அர்ச்சிக்கக் கடவன்

தனக்கும் அன்னிய பிராணிகளுக்கும் கொஞ்சமாகிலும் பேதமாய்ப் பார்க்கிற புருஷனுக்கு மிருத்தியு ரூபியான நான் மகத்தான பயத்தைப் பண்ணுவேன். ஆகையினாலே என்னைத் தானத்தினாலேயும், சன்மானத்தினாலேயும், சிநேகத்தினாலேயும், சமதிருஷ்டியினாலேயும் பூஜிக்கக் கடவன்.

வாராய் சுபத்தையுடையவளே! அசேதனங்களைக் காட்டிலும் உயிர்கள் சிரேஷ்டம். அந்த உயிர்களிலும் பிராண விருத்தியை யுடையன சிறந்தன. அவைகளிலும் அறிவை யுடையன சிலாகிக்கத்தக்கன. அவைகளிலும் இந்திரிய விருத்திகளை யுடையன சிரேஷ்டம். அவற்றிலும் ஸ்பரிசக்கியானத்தை யுடையன சிரேஷ்டம். அதிலும் ரசக்கியானத்தை யுடையன சிரேஷ்டம். அவற்றிலும் கந்தக்கியானத்தை யுடையன உத்தமம். அவைகளிலும் சப்தக்கியானத்தை யுடையன சிலாக்கியம். அவற்றிலும் ரூபக்கியானத்தை யுடையன சிரேஷ்டம். அவற்றிலும் கீழ்மேலும் பல்லை யுடையன சிரேஷ்டம், பாதமில்லாதவைகளான அவைகளிலும் வெகுபாதங்களை யுடையன சிரேஷ்டம். அவைகளைக் காட்டிலும் நான்கு பாதங்களை யுடையவைகள் சிரேஷ்டம். அவைகளிலும் இரண்டு பாதங்களையுடைய மனுஷியஜாதி சிரேஷ்டம். அவர்களிலும் பிராம்மணவர்ணம் சிரேஷ்டம். பிராம்மணர்களிலேயும் வேதத்தை யறிந்தவன் சிரேஷ்டம். அவனிலும் வேதார்த்தத்தை யறிந்தவன் சிரேஷ்டன். அவனிலும் சம்சயங்களைப் போக்கடிக்கிறவன் சிரேஷ்டன். அவனைக்காட்டிலும் சுவதர்மத்தை அனுஷ்டானம் பண்ணுகிறவன் சிரேஷ்டன். அவனிலும் தர்மார்த்த பலன்களைக் கோராமல் வைராக்கியத்தை யுடையவன் சிரேஷ்டன். அவனிலும் தேகம் கிரியாபலன்கள் இவைகளை என்னிடத்திலே சமர்ப்பித்தவன் சிரேஷ்டன். என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தையும் கர்மபலத்தையு முடையவனாகிச் சகல பிராணிகளிடத்திலும், சமபுத்தியையுடைய புருஷனைக் காட்டிலும் சிரேஷ்டனான பிராணியை நான் பார்க்கவில்லை.

வாராய் மனுபுத்திரியே! பக்தி யோகமும் அஷ்டாங்க யோகமும் சொல்லப்பட்டன. வஸ்துக்களுடைய ரூபங்களுக்கு ஆசிரயமாகியும், அற்புதப் பிரபாவத்தை யுடையதாகியு மிருக்கிற பகவானுடைய ரூபமே காலமென்று சொல்லப்படும். அந்தக் காலரூபியாயிருக்கிற பகவானுக்கு இஷ்டனென்றும், த்வேஷியென்றும், பந்துவென்று மில்லை. அந்தப் பகவானுடைய ஆக்கினையால் வாயுவானவன் வீசுகிறதும்,

சூரியனானவன் பிரகாசிக்கிறதும், இந்திரன் வருஷிக்கிறதும், சந்திரனானவன் பிரகாசிக்கிறதும், விருக்ஷங்களும் ஔஷதி கொடிகளும் தம்தம் காலத்தில் புஷ்பங்களையும் பலன்களையும் கிரகிக்கிறதும், நதிகள் பிரவாகிக்கிறதும், சமுத்திரமானது கரையை அதிக்கிரமியாம லிருக்கிறதும், அக்னியானது தகிக்கிறதும், பர்வதங்களோடே கூடப் பூமியானது முழுகிப் போகாம லிருக்கிறதும், ஆகாசமானது பிராணிகளுக்கு மார்க்கத்தைக் கொடுக்கிறதும், மகதத்வமானது தேகத்தை ஏழாவரணங்களாலே சூழப்பட்டிருக்கிறலோகமாகப் பண்ணு கிறதும், சத்வாதிகுண நியந்தாக்களான பிரம்மா முதலான தேவர்களும் இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி முத லானவைகளிலே அடிக்கடி ஜாக்கிறதையாகக் காத்துக் கொண்டிருக்கிறதும், ஸ்தாவர ஜங்கம ரூபமான இந்தப் பிரபஞ்சமானது பிரம்மாதிகளுடைய வசமா யிருக்கிறதும், அந்தப் பிரம்மாதிகளும் இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டியாதிகளைப் பண்ணுகிறதும் ஆம். அவர் பிறர் ரூபமா யிருந்து புத்திராதிகளைச் சிருஷ்டி பண்ணிக் கொண்டும், மிருத்தியு ரூபமா யிருந்து சங்கரித்துக் கொண்டும், சுவயம் நாசரகிதராகியும், விகாரமில்லாதவ ராகியும் இருக்கிறார்.



## முப்பதாவது அத்தியாயம்.



தேகம், ஸ்திரீ முதலானவைகளிலே ஆசக்தமான சித்தத்தை
யுடையவர்களான காமிகளுடைய பாபத்தினாலே
தாமசமான அதோகதியானது
சொல்லப்படுகின்றது.

### கபில மஹரிஷியினுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! பலமுள்ள காலத்தினாலே சலிப்பிக் கப்பட்டாலும், இந்த ஜனங்கள் அந்தக் காலத்தினுடைய மகத்தான பராக்கிரமத்தை, வாயுவினுடைய பராக்கிரமத்தை மேகபந்தியானது அறியாததுபோல, ஜனங்கள் காலரூபி யான பகவானால் நாசம் பண்ணப் படுவதறியாமல், அதிக சுகத்தின்பொருட்டு அர்த்தத்தைச் சம்பாதிக்கிறதற்காக வெகு பிரயாசைப்பட்டு அநித்தியமாகியும், புத்திர களத்திராதி களோடே கூடிக்கொண்டு மிருக்கிற தேகம், தனம் முதலான

வைகளை அவிவேகத்தினாலே நித்தியமாக எண்ணிக்கொண்டும், சுகத்தையும், வைராக்கியத்தையும் அடையாமல் நரகத்திற்குரிய பாபங்களைச் சம்பாதித்து நாக வாதனையை அனுபவிக்கச் செய்யும் பகவானுடைய மாயையால் மோகிக்கப்பட்டும், அந்த நரகவாதனையில் கிடைக்கிற ஆகாராதிகளில் அன்புடையவராய் அந்தத் தேகத்தையும் விட்டு விடுகைக்கு இச்சிக்கிறதில்லை. மேலும் அந்த ஜனங்கள் துஷ்டர்களான ஸ்திரீகளுடைய ஏகாந்தத்திலே பண்ணப்படுகிற சம்போகாதி ரூபமாயிருக்கிற மாயையினாலேயும், மதுரமான மழலைச்சொற்களையுடைய சிசுக்களின் வார்த்தைகளாலேயும், அபகரிக்கப்பட்ட மனதுகளை யுடையவராய் கிருகங்களிலே சோம்பலில்லாமல் துக்கத்தைச் சுகம்போலே யெண்ணி வெகு பெயரை ஹிம்சித்து வெகுவழியாய்ச் சம்பாதிக்கப்பட்ட பொருள்களாலே அவர்களைப் போஷித்துக்கொண் டிருந்து தமக்கு வயது தளர்ந்த பின்பு அசக்தராகி அன்னியர்களுடைய தனத்திலே ஆசையை யுடையவராய்ச் சம்சாரத்தைக் காப்பாற்றுவதில் சாமர்த்திய மில்லாதவராய் வியர்த்தமான பிரயத்தனத்தை யுடையவரான அந்தப் புருஷனைப் பாரியை முதலானபேர்கள் சமர்த்தராயிருந்த காலத்திலே ஆதரவு பண்ணினாற்போல் ஆதரவு செய்யாமல் மிகவும் அநாதரவுடன் நாய்க்கும், பூனைக்கும், ஆகாரம் போடுவதுபோலப் போடுகிற ஆகாரத்தைப் புசித்துக்கொண்டும். வார்த்திகத்தினாலே வைரூப்பியத்தை யுடையவராகியும், ரோகத்தை யுடையவராகியும், மிகவும் ஜொலிக்கின்ற ஜடராக்கினியை யுடையவராகியும், அல்பமான ஆகாரத்தையும், வியாபாரங்களையு முடையவராகியும், அசக்தராகியும், மரணத்திற்குச் சமீபித்தவராகியும், சேஷ்மத்தினாலே தகையப்பட்ட நாடி மார்க்கங்களுடையவராகியும், பிராணவாயுவினாலே வெளிப்பட்டுப்போன கண்களை யுடையவராகியும், இளைப்பு பெருமூச்சுகளாலே பண்ணப்பட்ட ஆயாசத்தை யுடையவராய்க் கண்டத்திலே குருகுருவென்கிற சப்தத்தை யுடையவராய் மிகவும் சகிக்கக்கூடாததான மரணவேதனையினாலே பந்துக்களாழுதுகொண்டிருக்கையில் மரணத்தை அடைகிறசமயத்தில் பயங்கரர்களாகியும், கோபத்தினாலே சிவந்த கண்களை யுடையவர்களாகியு மிருக்கிற இரண்டு யமதூதர்களைப் பார்த்துப் பயந்த இருதயத்தையுடையவராகி, மலமூத்திரங்களை விட்டுக்கொண்டு, அந்த யமதூதர்கள் கையிலகப்பட்டு அவர்களுடைய மிரட்டுகளாலே பிளந்துபோகின்ற இருதயத்தை யுடையவராகியும், மார்க்கத்திலே சுவானங்களாலே பிடுங்கப்பட்டவராகியும், மிகவும் துக்கத்தை யுடையவராகியும், தாம்

பண்ணின பாபத்தை ஸ்மரித்தும், பசிதாகங்களாலே பீடிக்கப்பட்டவராகியும், சூரியன், காட்டுத்தீ, பெருங்காற்று, இவைகளாலே பீடிக்கப்பட்டவராய், வருக்கப்பட்ட மணல்களை யுடையவைகளாகியும், இளைப்பாறிக்கொள்ளத்தக்க இடமில்லாததாயும், உதகமில்லாததாகியு மிருக்கிற மார்க்கத்திலே அசக்தரா யிருந்தாலும், முதுகிலே குறடாவினால் அடிக்கப்பட்டவராய், மிகவும் பிரயாசத்தினாலே மூர்ச்சையடைந்தவராகியும், திரும்பவும் எழுந்திருந்து, பாபிஷ்டமான மார்க்கத்தினுடைய தொண்ணூற்றொன்பதினாயிரம் யோசனைகளை மூன்று முகூர்த்தங்களாலேயாவது, இரண்டு முகூர்த்தங்களாலேயாவது தாண்டி, யமலோகத்தை யடைந்தவராய், மிகவுங் கடூரங்களான நரகவாதனைகளை அடைகிறார். ஓரிடத்திலே தம்முடைய கை கால்கள் முதலான அவயவங்களுக்குத் துணிகளைச் சுற்றிக், குறைக்கொள்ளிகளாலே கொளுத்தி விடுகிறதையும், மற்றோரிடத்திலே தம்மாலேயாவது மற்றொருத்தராலேயாவது சேதிக்கப்பட்டிருக்கிற தம்முடைய மாம்சத்தைப் பக்ஷித்தும், அந்த யமலோகத்திலே சுவானங்கள், பருந்துகள், பாம்புகள், தேள்கள், கொசுக்கள் முதலானவைகளாலே சரீரபீடையையும் அடைந்து, அவயவங்களைக் கண்டங் கண்டமாகச் சேதிக்கிறதையும், கேசம் முதலானவைகளாலே கிழிபடுகிறதையும், பர்வத சிகரங்களினின்றுந் தள்ளப்படுகிறதையும், ஜலத்துக்குள்ளே போட்டு மிதித்து வைக்கிறதையும், பள்ளத்திலே போட்டு வைக்கிறதையும் அடைவர். அந்த தாமிஸ்ரம் ரவுர முதலான நரகவாதனைகளை அனுபவிப்பார். வாராய் மாதாவே! இந்த ஜன்மத்தில் நரகத்திலே யுண்டாகின்ற வாதனைகள் யாவும் இந்தச் சமுசாரத்திலேயுங் காணப்படுகின்றன. பிராணிகளுக்குத் துரோகங்களைச்செய்து அதனாலே போஷிக்கப்பட்ட சரீரத்தை இங்கேயேவிட்டுத், தாம் செய்த பாவத்தை மார்க்கத்திற்குக் கட்டமுதாக வுடையவராகித், தனத்தைப் பறிகொடுத்தவர்போல், மிகவும் விசனப்பட்டுக்கொண்டு, நரகத்திலே ஈஸ்வரனாலே யடைவிக்கப்பட்டுத், தம்மாலே செய்யப்பட்டிருக்கிற குடும்ப போஷணத்தினுடைய பாவத்தை அனுபவித்து, மனுஷ்ய ஜன்மத்திற்குக் கீழ்ப்பட்டவைகளான யாதனா ஜன்மங்கள் எத்தனையுண்டோ அவை யனைத்தையும் கிரமமாக அடைந்து, பாபத்தை போக்கிக்கொண்டு திரும்பவும் மனுஷ்யதேகத்தை அடைகிறார்.

## முப்பத்தோராவது அத்தியாயம்.

*மிசிரங்களாயிருக்கிற புண்ணிய பாவங்களாலே மனுஷிய ஜன்மப்பிராப்தி ரூபமான ரஜோகுண கதியானது சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! புருஷன் ஈஸ்வரனாலே பிரவிர்த்திக்கப்படுகின்ற பூர்வகர்மத்திலே திரும்பவும் தேகத்தை யடைகிறதின் பொருட்டுத் தந்தையுடைய வீரியத்தின் பிந்துவை ஆஸ்ரயித்த ஸ்திரீயினுடைய கர்ப்பத்தைப் பிரவேசித்து, முதல்நாளில் சுக்கில சோணித ரூபமாகியும், ஐந்தாநாளிலே குமிழி ரூபமாகியும், பத்தாநாளில் இலந்தைப்பழம்போலவும், பிற்பாடு மாம்சபிண்டாகாரமாகியும், முதல்மாதத்திலே சிரசும், இரண்டாமாதத்திலே கைகால்முதலான அவயவங்களுடனே கூடின சரீரமும், மூன்றுமாதத்திலே நகம், ரோமங்கள், அஸ்திகள், சர்மங்கள், கண், காது முதலான இந்திரியத் துவாரங்களுடைய வுற்பத்தியும், நால்காமாதத்தில் சப்த தாதுக்களும், ஐந்தாமாதத்தில் பசிதாகங்களும், ஆறுமாதத்தில் சராயு என்னப்பட்ட பையிலே தாயாருடைய வலது பாரிசமான வயிற்றிலே சுழன்றுகொண்டும், மாதா பக்ஷிக்கப்பட்ட அன்னபானாதிகளாலே விருத்தியடைகின்ற தாதுக்களையுடையவனாய், அனேக ஜந்துக்களுக்கும், மல மூத்திரங்களுக்கும், ஸ்தானமாக அந்தக் குக்ஷியிலே புழுக்களினாலே கடிக்கப்பட்டு, மிகுந்த கிலேசத்தை யுடையவனாய், அடிக்கடி மூர்ச்சை யடைந்தும், மாதாவினாலே பக்ஷிக்கப்படுகிற துவர்ப்பு, கைப்பு, சுடுகை, உப்பு, காரம், புளிப்பு, முதலானவைகளாலே அவயவங்களில் உண்டான வேதனையையுடையவனாய்ச், சராயுவென்னப்பட்ட பையினாலேயும், தாயாருடைய குடல்களினாலேயும் சூழப்பட்டவனாய்ச், சிரஸைக் குக்ஷியிலே வைத்துக்கொண்டு வணங்கப்பட்ட முதுகு, கழுத்து, இவைகளை யுடையவனாய், அந்தக் கர்ப்பத்திலே வாசம் பண்ணுகிறான். அந்தக் கர்ப்பத்திலேயிருந்து ஜன்மாந்தர கர்ம வசத்தினாலே யுண்டாகிற கியானத்தை யுடையவனாய், அனேக ஜன்மங்களிலே செய்யப்பட்ட கர்மத்தை நினைத்துக் கொண்டு, சுவாசம் விடக்கூடாமல் வெகு சங்கடத்துடன் ஏழாமாத முதற்கொண்டு அடையப்பட்ட கியானத்தை யுடையவனாய்ப், பிரசவ ஏதுக்களான வாயுக்களாலே யலைக்கப்பட்டவனாய், மலத்திலே பிறந்திருக்கின்ற புழுக்களுடனே கூடப்பிறந்த புழுப்போல், இருந்தவிடத்திலேயிராமல் பிர

மித்து, மிகவும் தபிக்கப்பட்டுத், தேகாத்மக்கியானத்தை யுடையவனாகியும், திரும்பவும் கர்ப்பவாசத்தில் பயத்தை யுடையவனாகியும், ஏழு பந்தன தாதுக்களை யுடையவனாகியு மிருக்கிற அந்த ஜீவனானவன் ஈஸ்வரனை யஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு, வியாகூல வாக்கினாலே ஸ்தோத்திரம் பண்ணுகிறான். துஷ்டனான எனக்கு யோக்கியமான கர்ப்ப வாசரூபமான கதியானது காண்பிக்கப்பட்டு, மிகவும் சிரமத்தை அடைந்திருக்கிற ஜகத்தை ரக்ஷிக்கைக்குத் தமதிச்சையினாலே கிரகிக்கப்பட்ட நானாவித ஸ்வரூபத்தை யுடையவராகியும், விகாரசூனியராகியும், உபாதிசூனியராகியும், பரிபூரணமான கியானத்தை யுடையவராகியு மிருக்கிற அந்தப் பரமாத்துமாவைப் பிரணாமம் பண்ணுகிறேன். பஞ்ச பூதங்களாலே நிர்மிக்கப்பட்ட சரீரத்திலே, அபத்தமாகவே மறைக்கப்பட்டவனாகியும், சங்கமில்லாதவனாகியும், இந்திரியங்கள், பூதங்கள், விஷயங்கள், அகங்காரம் இவைகளை ஸ்வரூபமாக வுடையவனாகியுமிருக்கிற நான், அப்படிப்பட்ட சரீரமில்லாதவராகியும், அளவில்லாத மகிமையையுடையவராகியும், சர்வக்கியராகியும், பிரகிருதி புருஷர்களுக்குப் பரராகியு மிருக்கிற அந்தப் பரமபுருஷருக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கிறேன். தேவரீருடைய மாயையினாலே சுவரூபக் கியானமில்லாதவனாய்ச் சத்வாதிகுணங்களை நிமித்தமாக வுடையதான கர்மபந்தனத்தையுடைய இந்தச் சம்சாரமார்க்கத்தினாலே பண்ணப்படுகின்ற கிலேசத்துடனே சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற நான் மகானுபாவரான அந்த ஈஸ்வரனுடைய அனுக்கிரகத்தையன்றி எந்த யுக்தியினாலே நிஜஸ்வரூபத்தை அடைவேன்.

பூதபவுஷிய வர்த்தமான விஷயமான கியானத்தை அந்தப் பகவானைத் தவிர மற்றொருவன் எவன்தான் கொடுப்பான். ஸ்தாவரங்களிலேயும், ஜங்கமங்களிலேயும், அந்தரியாமியாகவிருக்கிற அந்த ஈஸ்வரனை ஜீவரூபமான கர்மமார்க்கத்தை அனுவர்த்திக்கின்ற நாங்கள் தாபத்திரய சாந்தியின் பொருட்டுச் சரணமாக அடைகிறோம். மாதாவினுடைய குக்ஷியிலே யிருக்கின்ற இரத்தம், மலம், மூத்திரங்களாகிற கிணற்றிலே விழுந்தும், ஜடராக்கினியினாலே மிகவும் தபிக்கப்பட்டுமிருக்கின்ற தேகத்தை யுடையவனாகியும், அதனாலே மிகவும் சின்னமான புத்தியை யுடையவனாகியுமிருக்கிற நான், இந்தக் கர்ப்பத்தினின்றும் பாழுங்கிணற்றுக்குச் சமானமான வெளியிலே புறப்படுகைக்கு இச்சிக்கவில்லை. வெளிப் புறப்படுகையிற்றானே தேவரீருடைய மாயையால் மோகிக்கப்

பட்டு, நானென்றும், என்னதென்று மெண்ணுகிற புத்தியுண் டாய்த், திரும்பவும் புத்திரமித்திர களத்திராதிக ளென்கிற சம்சாரத்தில் சிக்கிக்கொண்டு, தேவரீருடைய திருவடிக்குப் புறம்பாய்ப் போவேன். ஆதலால் இந்தக் கர்ப்பத்தினின் றும் வெளிப்பட்டுக் கெட்டுப்போகாம லிருக்கும்படி கிருபை செய்ய வேண்டுமென்று நிச்சயிக்கப்பட்ட புத்தியையும் பத்து மாதங்களை யுடையவனாகியுமிருக்கிற அந்த ஜீவன் தக்ஷணத் திலே பிரசவத்துக்கு ஏதுவான வாயுவினாலே தள்ளப்பட்ட வனாய்ச், சிரசை அதோ முகமாகப் பண்ணிக்கொண்டு, மிகவுங் கிலேசத்துடன் சுவாசமுங் கியானமு மில்லாதவனாய், மகா பிரயாசத்தினாலே வெளிப்பட்டுப், பூமியிலே விழுந்து, இரத்தங்களாலும், மலங்களாலும் பூசப்பட்டுத், தத்துவக் கியானத்தை யிழந்து, விபரீத புத்தியை யடைந்தவனாய், அழுதுகொண்டிருந்து, அன்னியனுடைய அபிப்பிராயத்தை யறியாத ஜனத்தினாலே போஷிக்கப்படுகின்ற அந்த ஜீவனானவன், ஸ்தன்னிய பானார்த்தமாக அழுகையில், வயிற்று நோயினாலே யழுகிறதென்று வேப்பிலை ரசத்தைப் பானம் பண்ணி வைப்பார்கள். வயிற்று நோயினாலழுதால், பசித்தழுகிறானென்று ஸ்தன்னிய பானத்தைப் பண்ணி வைப்பார்கள். இவை முதலான அனிஷ்டத்தை யடைந்து அவற்றை நிவர்த்தித்துக்கொள்ளச் சக்தியற்றவனாய், எறும்பு, கொசுகு முதலான ஜந்துக்களாலே கடிக்கப்பட்டும், அசுசியான சயனத்திலே படுத்துக்கொண்டும், தன் அவயவங்களைச் சொறிந்து கொள்ளவும், எழுந்து உட்கார்ந்து நடக்கிறது முதலானவைகளிலும் சாமர்த்தியமில்லாதவனாய்த், துக்ககரமான ஐந்து வயதுவரைக்கும் பாலியத்தையும் யௌவனத்துக் கீழ்ப்பட்ட பாலவயதையு மனுபவித்தான்.

பிற்பாடு காமத்தை யுடையவனாய் அகங்காரத்தினாலும், கோபத்தினாலும், ஆத்மநாசத்தின் பொருட்டுக் காமிகளிடத் திலே விரோதத்தைச் செய்துகொண்டு, விவேக ஈனனாகியும், துர்ப்புத்தியாகியும், பஞ்சபூதங்களாலே செய்யப்பட்ட தேகத் திலே மகத்தான ஆக்கிரகத்தையுடையவனாய் அடிக்கடி நான் என்னதென்கிற புத்தியுடன் அக்கியான கர்மங்களினால் ரூபிகரித்திருக்கிற தேகத்தினாலே கட்டப்பட்டவனாய்ச் சம் சாரத்தை யடைந்து, சிசினவுதர திருப்தியின் பொருட்டுப் பிர யத்தனத்தை யுடையவனாய்த், துன்மார்க்கத்திலே ரமித்துக் கொண்டிருந்து, திரும்பவும் பூர்வம் போலவே நரகத்திற் குரியவனாகிறான். சத்தியம், சவுசம், தபசு, மவுனம், பரமார்த் தக்கியானம், லச்சை, சம்பத்து, எஜஸ்ஸு, பொறுமை, மனேக்

கியநிக்ரகமான, பெரியவனென்கிறது, இவைகள் அசத்துக்க ளானதால் சகவாசஞ்செய்யாமலிருக்கவேண்டும்.புருஷனுக்கு ஸ்திரீகளுடைய சங்கத்தினுலேயும், ஸ்திரீகளின் கூட்டம் செய்கிற பேர்களுடைய சங்கத்தினுலேயும், மோகமும், பந்தமுமுண்டாகிறபடிக்கு மற்ருெருவருடைய சங்கத்தினுலே உண்டாகமாட்டா. பிரம்மாவும் தம்முடைய பெண்ணைப் பார்த்து, மோகித்துப் பெண்மான் ரூபமாக அவளை லச்சை யில்லாதவராகித் தாமும் மான் ரூபியாகப் பின்சென்ருர். அந்தப் பிரம்மாவினுலே மரீசிப்பிரஜாபதி முதலான பேர் கள் சிருஷ்டிக்கப்பட்டார்கள். ஸ்ரீமந் நாராயணரைத் தவிர மற்ற எந்தப் புருஷன்தான் ஸ்திரீரூபமான மாயையினுலே மிழுக்கப் படாமலிருக்கிருன்? யோகாப்பியாசத்தினுடைய கரையை அடைய இச்சிக்கிறவனும், பரமாத்தும ஸ்வரூபத் தையுடைய இச்சிக்கிறவனும், ஒருக்காலும் ஸ்திரீகளிடத் திலே சங்கத்தைப் பண்ணுமலிருக்கக் கடவன். மோக்ஷத் தைக் கோருகின்ற புருஷனுக்கு ஸ்திரீகளை நாகத்துவார மாகச் சொல்லுவார்கள். ஸ்ரீ ஹரியினுலே நிருமிக்கப்பட்டும் சிசுரூஷைக்குக் காரணமாகியு மிருக்கிற அந்த ஸ்திரீரூப மான மாயையைத் தனக்குப் பிரதிகூலமான மிருத்தியுவைப் போலவும், திரணங்களாலே மூடப்பட்ட கிணற்றைப்போல், தனம், புத்திரன், கிருகம், இவைகள் தெய்வத்தினுலே நிரு மிக்கப்பட்ட மிருத்தியுவாக அறியக்கடவன். வேடனுடைய கண்ணியானது அனுகூலமாக அறியப்பட்டிருந்தாலும் மிருகத்துக்கு மரணஹேதுவானதுபோல், கியானியானவன் இவைகளை மிருத்தியுவென்று அறிந்து விஷய சங்கத்தை விட்டு மிகவும் தத்வவிசாரத்தை யுடையதாகியும், யோக வைராக்கியங்களோடேகூடிக்கொண்டு மிருக்கிற புத்தியினுல், மாயையினுலே பண்ணப்பட்ட லோகத்திலே, தேகாபிமானத் தைவிட்டுச் சஞ்சரிக்கக்கடவன்.



## முப்பத்திரண்டாவது அத்தியாயம்



*சாத்விக தர்மங்களாலே ஊர்த்துவ கதியும், தத்துவக்கியான மில்லாதவனுக்கு அந்த லோகங்களினின்று திரும்ப ஜனனமும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் மாதாவே! கிருகஸ்தாஸ்ரமத்தில் தர்மார்த்த காமரூபங்களான தர்மங்களைச் செய்கிற புருஷனானவன், பகவ தாராதன ரூபமான தர்மத்தைவிட்டுப் பிராகிருத தேவர்களை

யும், பிதுர்க்களையும், கிருதுக்களாலே சிரத்தையோடே கூடி யாகஞ் செய்கிறவன், சத்திய லோகத்தை யடைந்து திரும்பவும் ஜன்மத்தை யடைவன். அனந்த சயனரான ஸ்ரீ ஹரியானவர் பிரளயத்திலே பாம்பணையிலே சயனித்துக் கொள்ளுகிறபோது யாகாதி தர்மங்களை யனுஷ்டானம் பண்ணின கிருகஸ்தர்களுக்கு, இந்த லோகங்கள் லயத்தை யடைகின்றன. பிரம்மாவினுடைய ஆயுளுக்கு முடிவான அந்தப் பிரளயபரியந்தம், பிரம்மாவைப் பரமேஸ்வரராகத் தியானம் பண்ணுகிற பேர்கள் அந்தப் பிரம்மலோகத்தை யடைந்திருந்து, அந்தப் பிரம்மாவானவர் தம்முடைய காலத்தை அனுபவித்துப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், மனது, இந்திரியங்கள், சப்தாதி விஷயங்கள், அசங்காரம் இவைகளினாலே சூழப்பட்ட பிரம்மாண்டத்தை உபசங்காரம் பண்ண இச்சித்தவராய்ப், பரமாத்மாவை யடைகிறபோது அவர்களுமந்தப் பிரம்மாவுடனே கூடவே பரமானந்த ரூபராகியும், சர்வோத்கிருஷ்டராகியும், பரப்பிரம்மமாயுமிருக்கிற புராணபுருஷனை அடைவார்கள். பகவானை யுபாசிக்கிறவர்கள், சாக்ஷாத்தாகவே அந்தப் பகவானை அடைவார்கள். ஆகையினாலே சமஸ்த பிராணிகளுடைய இருதய கமலங்களிலே அந்தரியா மியாகவும், பிரசித்தமான பிரபாவத்தை யுடையவராகியு மிருக்கிற பகவானை ஏகாந்த பக்தியினாலே சரணமாக அடையக்கடவாய். ஸ்தாவர ஜங்கமங்களுக்குக் கர்த்தாவாகியும், வேதகர்ப்பராகியுமிருக்கிற பிரம்மாவானவர், யோகசித்தியையுடைய சனற்குமாரர் முதலான யோகீஸ்வரர்கள், மரீசி முதலான ரிஷிகள், இவர்களுடனே கூடப் பேதபுத்தியினாலேயும், அகங்காரத்தினாலேயும், நிஷ்காமமான கர்மத்தினாலேயும், கர்த்துருத்துவத்தினாலேயும், பிரம்மலோகாதி பத்தியரூபமாகியும், தர்மபலரூபமாகியு மிருக்கிறஐசுவரியத்தை யனுபவித்துப், பிரளயகாலத்திலே சகுணப்பிரம்மரூபியான பரமபுருஷனை அடைந்து, ஈஸ்வரரூபமான காலத்தினாலே சத்வாதி குணங்களுக்கு லயமுண்டாயிருக்கையில், திரும்பவும் சிருஷ்டியிலே முன்போலவே தம் தம் அதிகாரங்களுடனே கூட உண்டாகிறார்கள். கர்மங்களிலே ஆசக்தியை யுடையவர்களாகியும், சிரத்தையுடனே கூடி விகித கர்மங்களையும், காமிய கர்மங்களையும், நித்திய கர்மங்களையும், ரஜோகுணத் தினாலே சூழப்பட்ட காமத்திலேயே மனதை யுடையவர்களாகியும், இந்திரிய நிக்கிரக மில்லாதவர்களாகியும், தர்மார்த்த காமியங்களைக் கோரினவர்களாகியு மிருக்கிற புருஷர்கள் சம்சாரத்தை அபகரிக்கின்ற புத்தியை யுடையவர்களாகி, மிக்க வெற்றி

களையுடைய ஸ்ரீ ஹரியினது கதையிலே இச்சையில்லாதவர்களாய், மலத்தை புசியாநின்ற ஜெந்துக்கள் மலத்தையேகோருகிறதுபோல், பாக்கிய வீனர்களாகிருர்கள். கர்ப்பாதான முதலாய்ச் சாயக்கிரியை பரியந்தங்களான கர்மங்களை யதாவத்தாகச் செய்கிறவர்கள் சூரியனுடைய தக்ஷிணமார்க்கமான தூமாதி மார்க்கத்தினுலே பிதுர்லோகத்தையடைந்து திரும்பவும் புத்திரர்கள் முதலானபேர்களிடத்திலே பிறக்கிருர்கள்.

வாராய் மாதாவே! நலமிழந்தவர்களாகி அந்த லோகத்தினின்றும் இந்த லோகத்தைக் குறித்து விழுகிருர்கள். ஆகையினுலே நீ பகவத் குணங்களை ஆஸ்ரயித்துப் பத்தியினுலே அந்தப் பரமேஸ்வரரைப் பஜிக்கக் கடவாய். அந்த ஸ்ரீ வாசுதேவனிடத்திலே செய்யப்படுகின்ற பக்தி யோகமானது வைராக்கியத்தையும், பிரம்ம சாக்ஷாத்கார ரூபமான கியானத்தையும் உண்டாக்கும். சித்தத்தைப் பகவத் குணங்களில் லயிக்கச்செய்கிற புருஷனனவன், அந்த சுவயம் பிரகாச ரூபமாகிய பரமபதத்தைப் பார்த்து மகதத்வம் தத்வாதி திரிகுண சுவரூபமாகியும், மகா பூதரூபமாய் ஐந்துவிதமாகியும், இந்திரியரூபமாய்ப் பதினெரு விதமாகியு மிருக்கிற அகங்காரமும், ஜீவரூபமும், அந்த ஜீவனுக்குச் சரீரமாகிய இந்தப் பிரம்மாண்டமான ஜகத்துமாய் நானுரூபமாக இருக்கின்ற பிரம்மத்தினிடத்திலேயே சமர்ப்பிக்கப்பட்ட மனதையுடையவனுகியும், பிரபஞ்ச விஷயசங்க மில்லாதவனுகியும், வைராக்கியத்தை யுடையவனுகியும், சிரத்தையினுலேயும், பக்தியினுலேயும், யோகாப்பியாசத்தினுலேயும், நித்தியமாக அந்தப் பிரம்மத்தையே எங்கும் பார்க்கிருன். வாராய் பூஜ்ஜியையே! பிரம்ம சாக்ஷாத்காரரூபமான இந்தக் கியானமானது நம்மாலே சொல்லப்பட்டது. இந்தக் கியானத்தினுலே பிரகிருதிபுருஷர்களுடைய தத்வமான கியானயோகமும், பக்தியோக சுவரூபமான பிரபத்தியும், இந்த இரண்டுக்கும் பரமாத்மா வொருவரே யடையத்தக்கவராக விருக்கிருர். அனேக ரூப ரசாதி குணங்களுக்கு ஆஸ்ரயமான வெல்லம் பால் முதலான ஒரு வஸ்துதானே நேத்திரத்திற்கு வெளுப்பாகவும், ரஸேந்திரியத்திற்கு மதுரமாகவும், ஸ்பரிச இந்திரியத்துக்குச் சீதமாகவும், இப்படி நானுவிதமாக அறியப்படுகிறதுபோல் அந்தப் பகவான் ஒருவரே தடாகப்பிரதிஷ்டை முதலான கிரியைகள், யாகங்கள், தானங்கள், தபசு, அத்தியயனம், வேதார்த்த விசாரணை, இந்திரிய நிக்கிரகங்கள், கர்ம சன்னியாசம், நானுவித அங்கங்களையுடைய பத்தி யோகங்கள்,

நிஷ்காம ரூபமான தர்மங்கள், இவைகளினாலே அறியப்படு கிறார். வாராய் மாதாவே! பக்தியோகத்தினுடைய நான்கு விதமான சுவரூபத்தையும், சமஸ்த பிராணிகளாலேயும், உள்ளும் புறம்பும் ஓடிக்கொண்டும் அறியக்கூடாத சக்தியை யுடையதான காலத்தினுடைய கதியையும், சம்சாரகதிகளையும் சொன்னேன். இந்தத் தத்துவக்கியானத்தை வணக்கமில் லாதவன், சோம்பலையுடையவன், துராசாரன், டாம்பீகன், விஷயங்களிலே ஆசக்தியையுடையவன், புத்திராதி கிருகங் களிலே ஆசக்தியை யுடையவன் என்னுடைய பக்தியில்லாத வன், எனது பக்தர்களுக்கு த்வேஷியாயிருக்கிறவன், இவர்க ளுக்கு ஒருக்காலும் உபதேசிக்காமலிருக்கவேண்டும். சிரத் தையையுடையவன், பக்தியையுடையவன், வணக்கத்தையுடை யவன், அசூயையில்லாதவன், சகல பிராணிகளிடத்திலே யும் சிநேகத்தை யுடையவனாகியும், வைராக்கியத்தையுடையவ னாகியும், சமதமாதி குணங்களை யுடையவனாகியும், புத்திமானா கியும், த்வேஷமில்லாதவனாகியும், சதாசார சம்பன்னனாகியு மிருக்கிறவன் இவர்களுக்கு இந்தக் கியானத்தை யுபதேசிக் கக் கடவன். வாராய் மாதாவே! சிரத்தையுடனே இந்த உபாக்கியானத்தைக் கேட்டுப் பாராயணம் பண்ணுகிற புருஷன் என்னுடைய பரமபதத்தை அடைவன்.

## முப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

அந்தக் கபில மகரிஷியினுடைய உபதேசத்தினால் உண்டாகிற கியானத்தி னாலே இவருடைய மாதாவான தேவஹூதியினுடைய ஜீவன் முக்தியானது சொல்லப்படுகின்றது.

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! இந்தப்பிரகாரம் கபில மகரிஷியினு டைய வசனத்தைக்கேட்டு, அவருடைய மாதாவாகியும், கர்த் தமப் பிரஜாபதியினுடைய பாரியையாகியு மிருக்கிற அந்தத் தேவஹூதியானவள், அக்கியானநாசத்தை யுடையவளாய், அந்தப் பகவானைப் பிரணாமப்பண்ணி ஸ்தோத்திரம் பண்ணி னாள். வாரீர் பகவானே! இந்தப் பிரம்மாவும் பிரளய ஜல மத்தியிலே சயனித்துக்கொண்டு, பஞ்சமகா பூதங்களுக்கும் சமஸ்த ஜகத்துக்குங் காரணராயும், ஜகத்ரூபியாயு மிருக்கிற தேவரீருடைய திருவுருவத்தைத் தியானம் பண்ணினாரே யல்லாமல் பார்க்கவில்லை. அந்தப் பிரம்மாவுக்கு உற்பத்தி

காரணராகியும், சத்வாதி குணப்பிரவாக ரூபமான சக்தியை யுடையவராகியும், கிரியாசூனியராகியும், சத்திய சங்கற்பராகியும், ஜீவர்களுக்கு நியந்தாவாகியும், சிந்திக்கக்கூடாமலும், அனேகங்களாகியுமிருக்கிற சத்திகளை யுடையவராகியும், இந்தப் பிரபஞ்சத்தை யுதாத்தில் வகிக்கிறவராகியும், யுகாந்தத்திலே வடபத்திரசாயியாய்ப் பாதாங்குஷ்டத்தைப் பானம்பண்ணித் திருக்கண் வளர்ந்துகொண்டிருக்கின்ற மாயாசிசுவான தேவரீர் என்னுடைய குக்ஷியில் என்னமாய்த்தரிக்கப்பட்டீர் துஷ்டநிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்வதற்காக வராக முதலான அவதாரங்கள் செய்ததுபோலவே, ஆத்மக்கியான மார்க்கத்தை வெளிப்படுத்துகிறதற்காகச் சுவய இச்சையினாலே கிரகிக்கப்பட்ட இந்த அவதாரமும் என்னாலே தரிக்கப்பட்டது. தேவரீருடைய நாமதேயத்தைக் கேட்டதினாலேயும், கீர்த்தனம்பண்ணினதினாலேயும், சேவைசெய்ததினாலேயும், ஒருக்கால் ஸ்மரித்ததினாலேயும். சண்டாளனும் அந்த க்ஷணத்திலேயே யாகஞ்செய்தவனுக் கொப்பாகிறபோது, அடியேன் கடைத்தேறுகிறதற்குக் கேட்கவேண்டியதென்ன? தேவரீருடைய நாமத்தைக் கீர்த்திக்கிறவர்களே மகா தவசையும், யோகங்களையும், கங்காதீர்த்தங்களின் ஸ்நானத்தையும், நல்ல ஆசாரத்தையும், சகல வேதங்களையும் அத்தியயனஞ் செய்தவர்களாயும் ஆவார்கள். அப்படிப்பட்ட மகிமையுள்ள பரமபுருஷராகியும், தேஜசினாலே அவித்யாகாம கர்மமூலமான சம்சாரத்தை நாசம்பண்ணுகிறவராகியும், வேதகர்ப்பராகியும், ஸ்ரீ மகாவிஷ்ணுவாகியும், கபிலரூபமாகியுமிருக்கிற தேவரீரை நான் சரணமாக அடைகிறேன்.

வாரீர் விதுரரே! இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராகியும் கபிலரென்று பெயரையுடையவராகியும் பகவானாகியும், மாதாவினிடத்திலே வாற்சல்லியத்தை யுடையவராகியு மிருக்கிற அந்தப் பரமபுருஷரானவர் கம்பீரமான வாக்கினாலே ஒருவார்த்தை சொல்லுகிறார். வாராய் மாதாவே! நம்மாலே சொல்லப்பட்ட பக்திமார்க்கத்தினாலே அபயஸ்தானமான என்னையடையப்போகிறாய், எனக்கிஷ்டமான இந்தமதத்தை அறியாதபேர்கள் சம்சாரத்தை யடைந்துகொண்டிருப்பார்களென்று சிலாக்கியமுள்ள தம்முடைய தத்துவக்கியான மார்க்கத்தை வெளியிட்டுப் பிர்ம நிஷ்டையான தம்முடைய மாதாவினாலே அநுக்ஞையைப் பண்ணப்பட்டவராய்ப் புறப்பட்டுப் போனார். பிற்பாடு அந்தத் தேவஹூதியும், புத்திரனை பகவானாலே சொல்லப்பட்ட பக்தி கியான யோகத்தையுமுடையவளாய்ச் சரஸ்வதி நதியி

னுடையதிரமான பிந்துசரசிலே கர்த்தமப்பிரஜாபதியினு டைய தபோயோகத்தினாலே நிர்மிக்கப்பட்டும், தேவர்களால் பிரார்த்திக்கத்தக்கதாகியும், உபமானமில்லாமலும், பால் நுரைக்குச் சமானங்களான தந்தங்களாலே யிழைக்கப்பட்டும், சுவர்ணமயங்களாகியும், சக்கரங்களாகியு மிருக்கிற பீடம், சயனம் முதலான சாமக்கிரியைகளை யுடையதாகியும், நிர் மலங்களான ஸ்படிக, மரகதமயமாயிருக்கிற சுவர்களிலே ரத்னமயமான தீபங்களுடைய காந்தியினாலும், ஸ்திரீகளி னாலே பிரகாசிக்கப்பட்டும், புஷ்பங்களோடே கூடிக்கொண்டு மிருக்கிற அனேக தேவவிருக்ஷங்களாலே ரமணீயமாகியும், மதுரமாகச் சப்திக்கின்ற பக்ஷி மிதுனங்களை யுடையதாகியும், மதித்துமிருக்கிற வண்டுகளையுடைத்தான உத்தியான வனத் தையுடைய கிருகத்தில் பத்மகந்தங்களுள்ள நடபாவியில் கர்த்தமப் பிரஜாபதினாலே சந்தோஷம் பண்ணப்பட்டிருக்கிற தன்னைத் தேவர்களும் ஸ்தோத்திரப்பண்ணித் தேவேந்திர னுடைய ஸ்திரீகளுக்கும் பிரார்த்திக்கத்தக்கதான கிருகசம் பத்தைவிட்டுப் புத்திரவியோகத்தினாலே துக்கத்தையுடைய வளான அந்தத் தேவஹூதியானவள் தத்வக்கியானத்தை யறிந்தவளா யிருந்தாலும் நசித்துப்போயிருக்கின்ற கன்றி னிடத்திலே வாற்சல்லியத்தையுடைய பசுவானதுபோல், மிகவும் துக்கத்தை யடைந்திருந்தாள்.

வாரீர் விதுரரே! தேவதேவராகியும், புத்திரராகியும், கபிலரூபியாகியு மிருக்கிற அந்த ஸ்ரீ ஹரியைத் தானே தியானம் பண்ணிக்கொண்டும், மகாசம்பத்தையுடையதான கிருகத்திலே ஆசையற்று, வைராக்கியத்தினாலேயும் யோகா னுஷ்டானத்தினாலே உண்டாகின்ற பிரம்மசாக்ஷாத்காரத் துக்கு ஏதுவாகியும், பரிசுத்தமாகியுமிருக்கிற கியானத்தி னாலே பொன்வர்ணமான கேசங்களையுடைய ஜடையை வாய்ந்து தபசினால் மெலிந்த தேகத்தை யுடையவளாய், மரவுரியைத் தரித்துக்கொண்டு, தெளிவுபொருந்திய முகத் துடன், தனது புத்திரரைப் பரமாத்துமாவாக வெண்ணித் தியானஞ்செய்துகொண்டு, தூங்கி யெழுந்த புருஷன், சொப் பனத்தில் காணப்பட்ட தேகத்தை மறந்தாற்போல், தன்னு டைய தேகத்தை மறந்தாள். அந்தத்தேகம், மனோவியாசங் களில்லாமையால் இளையாமல் புஷ்டியாய், நீறுபூத்த நெருப் புப்போல், பிரகாசிக்கத் தபோயோக மயமாகியும், விரியப் பட்ட தலைமயிர்களையுடையவளாகியும், பகவத்சங்கற்பத்தி னாலே ரக்ஷிக்கப்பட்டு மிருக்கிற அந்தத் தேவஹூதியானவள், வாசுதேவரிடத்திலே பிரவேசிக்கப்பட்ட புத்தியையுடைய

வளாய்த், தேகத்தை ஸ்மரிக்காமல், கபிலராலே உபதேசிக்கப்பட்ட பக்தி மார்க்கத்தினுல் பரப்பிர்ம்மமாகியும், அந்தராத்மாவாகியும், ஆனந்தரூபமாகியு மிருக்கிற பகவானை அடைந்து, மூன்றுலகத்திலேயும் பிரசித்தமாய்ச் சித்தபதமென்று பேர்பெற்று, சித்தர்களாலே சேவிக்கப்பட்டுச் சித்தியைக் கொடுக்கத்தக்கதான நதியாயினள். மகாயோகியான கபிலரும் சித்தாசிரமத்தினின்றும் மாதாவினுடைய அநுமதிகொண்டு வடக்குத் திக்கிலே போனுர். சித்தசாரண கந்தருவர்களாலேயும், முனிவர்களாலேயும், அப்சரஸ்திரீகளினுலேயும், ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவராய்ச், சமுத்திர ராஜனுலே கொடுக்கப்பட்ட பூஜாஸ்தானங்களை யுடையவராய்ச், சாங்கியாசாரியர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவாராய், யோகத்தை யடைந்து, மூன்றுலோகத்தினுடைய சாந்தியின்பொருட்டுச் சாந்தசித்தரா யெழுந்தருளியிருக்கிருர், வாரீர் விதுரரே! உம்மாலே நான் என்னகேட்கப்பட்டேனே அந்தக் கபில தேவஹூதி சம்வாதமுஞ் சொல்லப்பட்டது. இந்தக் கபிலமுனிவருடைய மதமாகியும், ஆத்மயோக ரகசியமுமான இந்தக் கபிலோபாக்கியானத்தை எவன் சொல்லுகிருனே, எவன் கேட்கிருனே, அவன் பகவானுனை கருடத்துவஜனிடத்திலே வைக்கப்பட்ட புத்தியையுடையவனுய் அவருடைய பாதாரவிந்தத்தை யடைவன்.



ஓம்

# சதுர்த்தஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

ஸ்ரீமத் பாகவத புராணத்தில், சதுர்த்தஸ்கந்தத்தில், இருபத்தொன்பதத்தியாயங்களிலேயும், துரியமான விசற்கம் சொல்லப்படுகிறது. அதில், ஈஸ்வராதீனர்களான பிரம்ம மனுவாதியர்களாலே விசற்கமென்கிற விசேஷ சிருஷ்டி பண்ணப்பட்டது. அவைகளுக்குள்ளே, பிரதம அத்தியாயத்தில் மனுவினுடைய கன்னியா வம்சம் பிறந்ததும். அந்தக் கன்னியா வம்சத்திலே யக்கியாதி மூர்த்திகளினாலே ஸ்ரீ ஹரியினுடைய அவதாரங்களும் சொல்லப்படுகின்றன.

### மைத்திரேயர் வாக்கியம்



வாரீர் விதுரரே! சுவாயம்பு மனுவுக்குச் சதரூபை யென்கிற ஸ்திரீயினிடத்திலே, ஆகூதியென்றும், தேவஹூதியென்றும், பிரசூதியென்றும். மூன்று பெண்களும் இரண்டு பிள்ளைகளும் பிறந்தார்கள். தனக்கிரண்டு புத்திரர்களிருக்கவும், அந்த ஆகூதியென்கிற பெண்ணினிடத்தில் ஆசையினாலே அவளுக்குப் பிறக்கிற பிள்ளை தனக்குப் புத்திரனாக வேண்டுமென்கிற விருப்பத்துடன் கேட்டுக்கொள்ளுகிற சதரூபையென்கிற தனது பாரியையினால் தூண்டப்பட்டு, ருசிப்பிரஜாபதியைக் கேட்டுக்கொண்டு அந்தப் பெண்ணைக் கொடுத்தான். அந்த ருசி, ஆகூதியென்கிற தம்முடைய ஸ்திரீயினிடத்திலே பிரம்மதேஜசுடனே கூடின மிதுனமென்கிற ஸ்திரீ புருஷர்களை ஈசுவர தியானத்தினாலே யுண்டாக்கினார். அவர்களில், யக்கியமூர்த்தியான விஷ்ணு பிள்ளையாகவும், ஸ்ரீ மகாலக்ஷ்மியே பெண்ணாகவும் பிறந்தார்கள். சுவாயம்பு மனுவானவர் சந்தோஷத்துடன் தவுத்திய ரூபமான யக்கியமூர்த்தியைச் சுவக்கிருகத்தை அடைவித்துக் கொண்டார். ருசிப்பிரஜாபதியும் அந்தத் தக்ஷிணை யென்கிற பெண்ணை வேதமந்திரங்களுக்குப் பதியான

விஷ்ணுவுக்கு கொடுத்தார். அந்த யக்கிய தக்ஷிணைகளுக்கு யாமாளென்று பிரசித்தர்களாயும், மகாபலசாலிகளாயும், தோஷனென்றும். பிரதோஷனென்றும், சந்தோஷனென்றும், பத்திரனென்றும், சாந்தியென்றும், இடஸ்பதியென்றும், இத்மனென்றும், கபியென்றும், விபுவென்றும் சுகர்மனென்றும், சுவேதனென்றும், ரோசனனென்றும், பன்னிரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். மனுவும் தேவர்களும், மனுபுத்திரர்களும், சுரேசுவரனான இந்திரனும், ரிஷிகளும், ஹரியினுடைய அம்சாவதாரமும், ஆக இந்த ஆறும் கூடின காலமே மனுவந்தரமென்று சொல்லப்படும். சுவாயம்பு மனுவந்தரத்தில் சுவாயம்புவே மனுவாகியும், தூஷதாளென்னப்பட்ட தேவர்களும், மரீசிப் பிரமுகாளான சப்தரிஷிகளும், ஹரியினுடைய அம்சாவதாரயான யக்கியரும், யக்கியாராயிருக்கிற இந்திரனும், பிரியவிரதன் உத்தானபாதனென்கிற பிருதிவிபாலர்களான மனுப்புத்திரர்களும் உண்டானார்கள். அந்தப் பிரியவிரதன் உத்தானபாதனென்கிற மனுப்புத்திரர்களுடைய புத்திர பவுத்திர இரண்டாம் பேரர்களாலே அந்தச் சுவாயம்பு வனுவந்தரம் பாலிக்கப்பட்டது.

வாரீர் விதுரரே! தேவஹூதியென்கிற பெண்ணைச் சுவாயம்புமனு கர்த்தமருக்குக்கொடுத்தார். அந்த மனுவினுடைய சம்பந்தமான வம்சம் விஸ்தரித்து உம்மாலே சொல்லப்பட்டது. பிரம்மபுத்திரரான தக்ஷப்பிரஜாபதிக்குச் சுவாயம்பு மனுவானவர் தமது பிரசூதியென்கிற பெண்ணைக் கொடுத்தார். அந்தத் தக்ஷப்பிரஜாபதியினாலே யுண்டாக்கப்பட்ட வம்சம் மூன்று லோகத்திலேயும் நிரளாகப் பரம்பிற்று கர்த்தமப் பிரஜாபதியினுடைய பெண்களது வம்ச பரம்பரையைச் சொல்லுகிறேன் கேளும். கர்த்தமருடைய பெண்ணான கலை யென்கிறவள் மரீசிமகரிஷிக்கு காசியபனென்றும் பூரணிமாவென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அந்தப் பூரணிமாவானவர், விரஜையென்றும், விசுவகாவென்றும், தேவகுல்லியாவென்றும், மூன்று பெண்களைப் பெற்றார். அவர்களுக்குள்ளே தேவகுல்லியா வென்கிறவள், ஜன்மாந்திரத்திலே ஹரியினுடைய திருவடித் தூலக்கத்தினாலே தேவகங்கையானாள். அத்திரியினுடைய பத்தினியான அனுசூயை யென்கிறவள் தத்தாத்திரேயனென்றும், துருவாசனென்றும், சோமனென்றும், மூன்றுபிள்ளைகளை விஷ்ணு ருத்திர பிரம்மாக்களினுடைய அம்சங்களினாலே பெற்றாளென்று சொல்லுகின்ற மைத்திரேய மகரிஷியைப் பார்த்து விதுரா

ரானவர், சிருஷ்டி, ஸ்திதி, சங்கார கர்த்தாக்களான பிரம்மா, விஷ்ணு ருத்திரர், இவர்கள் என்ன காரணத்திற்காக அந்த அனுசூயை யென்பவளிடத்தில் புத்திரர்களாகப் பிறந்தார்கள். அதை யெனக்குச் சொல்ல வேண்டுமென்று பிரஸ்னம்பண்ணுகிற விதுரரைப் பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறார். வாரீர் விதுரரே! பிரம்மாவினாலே சிருஷ்டி செய்யச் சொல்லி ஆக்கியாபிக்கப்பட்ட அத்திரிமகா ரிஷியானவர் பத்தினியுடனே கூடி ரிஷியமென்கிற குலபர்வதத்தை யடைந்து, பூங்கொத்துகளுடனே கூடின பலாச விருக்ஷம் அசோகவிருக்ஷம் இவைகளோடு சேர்ந்த கானகத்திலே நிற விந்தியென்னப்பட்ட நதியினுடைய ஜலப்பிரவாகங்களினாலே கோஷிக்கப்பட்ட ஒரு ஆஸ்ரமத்திலே பிராணாயாமத்தினாலே மனதைக் கட்டிக், காற்று, வெயில், குளிர் இவைகளைச் சகித்து, வாயுபக்ஷணஞ் செய்து, ஒருபாதத்தினாலே நின்று கொண்டு ஜகத்துக்கு அதீஸ்வரரானவரைச் சரணமாக வடைகிறேனென்று நூறுவருஷமிருந்தார். அவர் நமக்குச் சந்தோஷிக்கத் தக்க பிள்ளையைக் கொடுக்க வேண்டுமென்று பிராணாயாமமாகிய எரிகரும்பினாலே அக்கினியை வளர்த்தினார். அத்திரி முனியினுடைய சிரசினின்றும் வெளிப்பட்டு ஜ்வலிக்கின்ற அக்கினியினாலே தபித்துக்கொண்டிருக்கின்ற மூன்று லோகங்களையும், பிரம்மா விஷ்ணு ருத்திரர்களான பிரபுக்கள் பார்த்து, அந்த அத்திரியினுடைய ஆஸ்ரமத்தை யடைய, அவருமிந்த ஹரிஹர பிரம்மாக்களைக்கண்டு, பூமியிலே தண்டம்போல் பிரணாமம்பண்ணித், தங்கள் தங்கள் வாகனங்களுடனும். சக்கிரம், சூலம். கமண்டலமுதலான ஆயுதங்களுடனும், பிரத்தியக்ஷமான அம்மூவர்களைப் புஷ்ப முதலியவைகளால் அர்ச்சித்துப் பூசைசெய்து தயாநிதிகளாகிய அவர்களுடைய தேஜசினாலே சிதறப்பட்ட நேத்திரங்களைமூடி, மனதை அவர்களிடத்திலே லயமாகப் பண்ணிக்கொண்டு, அஞ்சலி பந்தத்துடனேகூடக் கம்பீரமாகியும், மதுரமாகியு மிருக்கிற வாக்கினாலே சர்வ லோக சிரேஷ்டர்களான திரிமூர்த்திகளை ஸ்தோத்திரம் பண்ணினார்.

### அத்திரி முனிவர் வாக்கியம்.

கல்பங்கள்தோறும் ஜகத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி சங்கார நிமித்தமாகப் பிரிக்கப்பட்ட சாத்துவீக, ராஜஸ, தாமஸ குணரூபமான தேகத்தையுடைய பிரம்ம விஷ்ணு ருத்திரர்களான உங்களை நமஸ்கரிக்கின்றேன். உங்களுக்குள்ளே நம்மாலே அழைக்கப்பட்டவர்களார்? அது உங்க

ளாலே சொல்லத்தக்கது. புத்திர சந்தானார்த்தமாகத் தேவப் பிரதானனாகியும், பகவானாகியு மிருக்கிற ஒருவனையே இவ்விடத்தில் நம்மாலே சித்தத்தில் வைக்கப்பட்டது. அடியேனுடைய வாக்குக்கும், மனதுக்கும் வெகுதூரமான நீங்கள் மூவரும் இவ்விடத்திற்கு எப்படி வந்தீர்கள்? என்னிடத்திலே தயைபண்ணிச் சொல்லுங்கள். இதிலே எனக்கு மகத்தான ஆச்சரியமா யிருக்கிறதென்று சொல்லுகிற அத்திரிமுனியினுடைய வாக்கியத்தைக் கேட்டுத், தேவசிரேஷ்டர்களான திரிமூர்த்திகள், அத்திரிமுனியைப் பார்த்துச் சிரித்து மதுரமான வாக்கினாலே, பிரதியுத்தரஞ் சொல்லுகிறார்கள். வாரீர் உத்தமரே! உம்மாலே எப்படிச் சங்கல்பம் பண்ணப்பட்டதோ அப்படியே உண்டாகத் தக்கது; வேறே ஒரு பிரகாரத்தினாலே உண்டாகத்தக்கதில்லை. சத்திய சங்கல்பரான நீர், முக்கியமாய் யாரைக்குறித்துத் தியானஞ் செய்தீரோ அவர்களே நாங்கள். ஆனபடியினாலே, நம்முடைய அமிசபூதர்களாகி, லோகப்பிரசித்தர்களாய், மூன்று பிள்ளைகள் பிறக்கப் போகிறார்கள். அவர்களால் உம்முடைய யஜஸானது கியாதி யடையப்போகிறதென்று இஷ்டமான வரத்தைக் கொடுத்துத், தேவசிரேஷ்டர்களான திரிமூர்த்திகள் அந்தத் தம்பதிகளாலே பூஜிக்கப்பட்டவர்களாய், அந்தர்த்தானமாய்ப் போனார்கள். அப்பால் பிரம்மாவினுடைய அமிசமாகச் சந்திரனும், விஷ்ணுவினுடைய அம்சமாக யோகவித்தான தத்தாத்திரேயரும், ருத்ரனுடைய அமிசமாகத் தூருவாசரும் உண்டானார்கள். இப்பால் அங்கிரசனுடைய சந்தானத்தைக் கேளாய். சிரத்தை யென்கிற அங்கீரசனுடைய பத்தினியானவள், சீனிவாலி யென்றும், குகூவென்றும், ராகாவென்றும், அனுமதியென்றும், நான்கு பெண்களையும், சுவாரோசிஷ மன்வந்தரத்திலே உசகத்தியரென்றும், பிரகஸ்பதியென்றும், பிரசித்தர்களான இரண்டு பிள்ளைகளையும் பெற்றாள்.

புலஸ்தியப் பிரம்மாவானவர், அவிற்பூவென்கிற பத்தினியினிடத்திலே அகஸ்தியரையும், விசிரவசு வென்கிற பிரஜாபதியையும் பெற்றார். அந்த அகஸ்தியரே ஜன்மாந்தரத்திலே தக்ஷணாக்கினியென்கிற ஜடராக்கினியானார். மகாதவசியான விசிரவசுவென்கிற பிரஜாபதியும், இளிபிலையென்கிற ஸ்திரீயினிடத்திலே குபேரனையும், கேகசியென்கிற ஸ்திரீயினிடத்திலே ராவண கும்பகர்ண விபீஷணர்களையும் பெற்றார். புலகரென்கிற ரிஷிக்குப் பாரியையான கெதியென்பவள் கர்மசேடனென்றும், வரியானென்றும் சகிஷ்ணு

வென்றும் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். கிருதுவினுடைய பாரியையான கிரியை யென்பவள், வாலகில்லியர்களென்று பிரசித்தர்களாய்ப் பிரம்ம தேஜஸினாலே பிரகாசித்துக்கொண் டிருக்கிற அறுபதினாயிரம் ரிஷிகளைப் பெற்றாள். வசிஷ்டருக்கு அருந்ததியினிடத்தில் சக்தி முதலான பிள்ளைகள் பிறந்தார்கள். மற்றொரு ஸ்திரீயான ஊறசை யென்கிறவளிடத்திலே சித்திரகேதுவென்றும், சுரோசியென்றும், விரசனென்றும், மித்திரனென்றும், உப்பணனென்றும், வசுபிரத்தியானென்றும், தியுமானென்றும், ஏழுரிஷிகள் பிறந்தார்கள். அதர்வா வென்கிற ரிஷியினுடைய பத்தினியான சாந்தியானவள் விரதங்களை யுடையவனாயும், அஸ்வ சிரசாகியுமிருக்கிற தத்தியங்குவென்கிற பிள்ளையை அடைந்தாள். பிருகுவானவர் கியாதியென்கிற ஸ்திரீயினிடத்திலே தாதா, விதாதாவென்னும் இரண்டு பிள்ளைகளையும், பகவானிடத்திலே விருப்பமுள்ள பாற்கவியென்கிற பிரசித்தையான லக்ஷ்மியையும் பெற்றார். மேருவானவன், ஆயதியென்றும் நியதியென்றும் இரண்டு பெண்களைத் தாதா, விதாதா, இவர்களுக்குக் கொடுத்தான். அந்தத் தாதா விதாதாக்களாலே ஆயதி, நியதி, இவர்களுக்கு மிருகண்டுவென்றும், பிராணனென்றும், இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள்.

மிருகண்டுவி னிடத்தினின்றும் மார்க்கண்டேயரும், பிராணனிடத்தினின்றும் வேதசிரசை யென்கிற ரிஷியும் பிறந்தார்கள். அந்த வேதசிரசை யென்கிற ரிஷிக்கு உசனசென்றும், பார்க்கவரென்றும், பிரசித்தரான இரண்டு புத்திரர்க ளுண்டானார்கள். அந்த உசனசென்கிறவருக்குச் சுக்கிராசாரியர் புத்திரரானார். வாரீர் விதுரரே! லோகங்களைச் சங்கற்பங்களினாலே உண்டாக்கினார்கள். பாபஹரமாகியும், பரமமாகியு மிருக்கிற கர்த்தமருடைய தவுஹித்திர சந்தானம் சிரத்தையுடனே கூடின உமக்குச் சொல்லப்பட்டது. சுவாயம்பு மனுவினுடைய பெண்ணான பிரசூதியைப் பிரம்ம குமாரரான தக்ஷன் விவாகம் பண்ணிக்கொண்டு, அவளிடத்திலே நிர்மலங்களான கண்களையுடைய பதினாறு பெண்களைப் பெற்று, யமனுக்குப் பதின்மூன்று பெண்களையும், அக்கினிக்கு ஒருபெண்ணையும், பிதுர்தேவதைகளுக்கெல்லாம் ஒரு பெண்ணையும், சம்சாரச்சேதியான பகவனென்கிற ருத்திரனுக்கு ஒருபெண்ணையுங் கொடுத்தான். யமதர்மனுக்குக் கொடுத்த பெண்களுடைய பெயர்கள், சிரத்தை, மைத்திரி, தயை, சாந்தி, துஷ்டி, புஷ்டி, கிரியை, உன்னதி, புத்தி, மேதை, திதீக்ஷை, ஹ்ரீ, மூர்த்தியென்னும் பதின்

மூவர். அவர்களில், சித்தை சுபனென்கிறவனையும் மைத்திரி பிரசாதனையும், தயை அபயனையும், சாந்தி சுகனையும், துஷ்டி முத்து என்பவனையும் புஷ்டி ஸ்தூமயனையும் கிரியை யோகனையும், உன்னதி தற்பனையும், புத்தி அர்த்தனையும், மேதை ஸ்மிருதியையும், திதீக்ஷை க்ஷேமனையும், இறு பிரஸ்தரனையும், மூர்த்தி சர்வகுணாகரர்களான நரநாராயண ரிஷிகளையும் பெற்றார்கள். அந்த நரநாராயணர்களுடைய அவதாரகாலத்திலே சத்புருஷர்களுடைய மனங்களும் திக்குகளும் நதிகளும் தெளிவாக ஆயின. ஆகாசத்திலே தூரிய வாத்தியங்கள் முழங்கின. பூமியிலே புஷ்பமாரி பொழிந்தன. முனிகள் சந்தோஷித்து ஸ்தோத்திரம் பண்ணவும், கந்தருவ கின்னரர்கள் கானம்பண்ணவும் தேவஸ்திரீகள் நர்த்தனம்பண்ணவும் இப்படிப் பரமமான மங்களமுண்டாயிற்று. பிரம்மா முதலான தேவதைகளெல்லாம், இந்த ஜெகன்மரியாதை குலையாமைக்குச் சத்வகுணத்தினாலே சிருஷ்டிக்கப்பட்ட தேவகணங்களான எங்களை ஸ்ரீமகாலக்ஷ்மிக்கும் இருப்பிடமாயும், நிர்மலமாயும், தாமரசபுஷ்பத்தைத் திரஸ்கரிக்கத் தக்கதாகியும், கருணா பூரணமாகியுமிருக்கிற திருக்கண்களினால் பார்க்கக்கடவிரென்று தேவகணங்களினாலே ஸ்தோத்திரஞ்செய்து பூஜிக்கப்பட்டவராய், அந்த நரநாராயணரிஷிகள் கந்தமாதன பர்வதத்தை யடைந்தார்கள். பகவதம்சபூதர்களான அவர்களே இந்தப்பூமியிலே துஷ்ட நிக்கிரகம் பண்ணுகைக்கு யதுகுலத்துக்கும், குருகுலத்துக்கும் நாதர்களாகிக் கிருஷ்ணார்ச்சுனர்களாக அவதரித்தார்கள். சுவா என்கிற அக்கினியினுடைய பாரியையானவள், பகவானென்றும். பவமானனென்றும், சுசியென்றும், மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். அந்த மூவரிடத்தினின்றும், அக்கினி அபிமானி தேவதைகள் நாற்பத்தைந்து பேர்கள் பிறந்தார்கள். அந்த அக்கினி, அபிமானிதேவதைகள். பிதுர் பிதாமகர்களுடனே கூட நாற்பத்தொன்பது வகை பிரம்மவாதிகளான அந்த அக்கினிகள் சவுமியாளென்கிற சுயம்பாகிகளாகியும். ஆச்சியபதா திகைகளாகியுமிருக்கிற பிதுர்க்கள் யஜ்வாவர்க்களன்றியில் அனக்கினிகளாய் அக்கினி சுவர்த்தாக்களென்றும், யஜ்வாவர்க்களாக சாக்கினிகளான பருகிஷத்துக்களென்றும் இரண்டு வர்க்கம். அவர்களுக்குத் தக்ஷ புத்திரியான சுதையென்கிறவள் பத்தினியாய் அவர்களிடத்தினின்றும் மேதாவியென்றும், தாரணியென்றும், இரண்டு பெண்களைப் பெற்றாள். பிரம்மவாதினிகளாயும், சுபாளாகியு மிருக்கிற அந்த இரண்டு பெண்களும் கியான, விக்கியான பாரங்கதர்களாகிச் சந்ததி, ஞானியர்களாகி

யிருந்தார்கள். சிவனுடைய பத்தினியாகியும், தக்ஷனுடைய பெண்ணுகியுமிருக்கிற சதியானவள் ஆத்மகுணங்களினுலே யும், நடத்தையினுலேயும், தனக்குப் பதியான சிவனை அனுச ரித்தவளாய்ப் புத்திரனை அடையாமல் நிரபராதியான சிவ னிடத்திலே பிரதிகூலனுகியும், தனக்குப் பிதாவாகியு மிருக் கிற தக்ஷனிடத்தில் கோபத்தினுலே தான் தானே தன்னு டைய தேகத்தை யோகத்தினுல் போக்கடித்துக்கொண்டாள்.



## இரண்டாவது அத்தியாயம்



*தக்ஷப்பிரஜாபதியினுடைய விசுவசித்திபாகமும், அவருக்கும் மகாதேவருக் கும் துவேஷமுண்டான காரணமும் சொல்லப்படுகின்றன.*

### விதுரர் வாக்கியம்

தக்ஷப்பிரஜாபதியானவன் தன்னுடைய பெண்ணை சதியை அனுதரித்துச் சராசர குருவாகியும், நிர்வைரனுகி யும், சாந்தமூர்த்தியாகியும், ஆத்மாதாரனுகியும், ஜகத்துக்கு மகாதெய்வமாகியு மிருக்கிற சிவபெருமானை என்ன நிமித்த மாகத் துவேஷித்தான்? அதை எனக்குச் சொல்லவேண்டு மென்று பிரஸ்னம் பண்ணுகிற விதுரரைப்பார்த்து, மைத்தி ரேயர் சொல்லுகிருர். வாரீர் விதுரரே! பூர்வத்திலே விசுவ கர்த்தாக்களான பிரஜாபதிகளுடைய யக்கியத்தில் சமஸ்த தேவகணங்களும் சிஷியவர்க்கங்களுடன் கூடின சூரியன் போன்ற ரிஷீஸ்வரர்களால் பிரகாசிதமாயிருக்கின்ற அந்தச் சபையில் அநேககோடி சூரியனுக்கொப்பான தேஜசுள்ள தக்ஷப்பிரஜாபதியைச், சதசிலே யிருக்கின்ற பிரம்மாவும் ருத்திரனுந்தவிர மற்றப்பேர்கள் யாவரும் பார்த்துத், தங்கள் தங்கள் ஆசனங்களினின்றும் எழுந்திருந்து அவனை யதா வத்தாகப் பூஜித்தார்கள். அப்போது தக்ஷனனவன் அவர்க ளாலே நன்ருகப் பூஜிக்கப்பட்டவனுய் லோககுருவான பிரம் மாவை நமஸ்காரம்பண்ணி அவருடைய ஆக்கினையினுலே ஆசனத்திலேயிருந்து தன்னைப் பூஜியாதவனுகியும் மருமக னுகியுமிருக்கின்ற ருத்திரனைக் குரூரதிருஷ்டிகளாலே தகித் துப் போடுகிறவன்போல் பார்த்துக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிருன்.

வாருங்கள் சபையோர்களே! சாதுக்களுடைய ஆசா ரத்தைச் சொல்லுகின்ற என்னுடைய வசனம் கேட்கத்தக்

கது. அக்கியானத்தினலுந் துவேஷத்தினலும் சொல்ல வில்லை. அதாவது லோகபாலகர்களுக்குள்ளே ஒருவனகி யும், லச்சையில்லாதவனுகியும், சதாசாரசூனியனுகியும், சத் புருஷர்களாலே ஆசரிக்கப்பட்ட சன்மார்க்கத்தைத் தூஷிக் கப்பட்டவனுகியும், எனக்குச் சிஷ்யனுகியும், நெருப்பை யொத்த நேத்திரங்களையுடையவனுகியும், சத்கிரியாசூனியனுகி யும், அசுசியாகியும், அகங்காரத்தை யுடையவனுகியும், மரி யாதையில்லாதவனுகியும், சூத்திரன் இடத்துச்சொன்ன வேதமந்திரம் நிஷ்பலமாதல்போல் இச்சையில்லாதவனு யிருந்தாலும் பெண்ணைக் கொடுத்தேன். அந்த ருத்திரனுன வன் பிரேதங்களுக்கு வாசபூமியான ஸ்மசானங்களிலே கோரங்களான பூதப்பிரேத பிசாசங்களாலே சூழப்பட்டவனு யும், உன்மத்தம் பிடித்தவன்போல் நிர்வாணியாகியும், விரிக் கப்பட்ட தலைமயிர்களை யுடையவனுகியும், ஸ்மசான பஸ்மத் தினலே பண்ணப்பட்ட அபிஷேகத்தை யுடையவனுகியும், நரர்களுடைய அஸ்திகளைப் பூஷணமாகவுடையவனுகியும், உன்மத்தனுகியும், உன்மத்த ஜனப்பிரியனுகியும், தமோகுண சுவரூபர்களான பிரமதபூத கணங்களுக்குப் பதியாகியு மிருக்கிற இந்த ருத்திரனுக்குச் சிவனென்கிற பெயர் தகாது. இப்படிப்பட்ட சவுசார சூன்னியனு யிருக்கின்ற இந்தத் துஷ்டனுக்கு மான்விழிகள் போன்ற நேத்திரங்களை யுடைய வளாகி இருக்கின்ற எனது கன்னிகையையுங் கொடுத்தேன். கேவலம் மரியாதைக் குறியவனுன என்னை அவமதித்தானு தலால் தேவாத்மனுன இந்த ருத்திரன் தேவயக்கியத்திலே இந்திரன், உபேந்திரன் முதலான தேவர்களுடனேகூட யக்கிய பாகத்தை யடையாமல் போகக்கடவனென்று சாபத் தைக் கொடுத்து, மிகவும் விர்த்தியடைகின்ற கோபத்தை யுடையவனுய், அந்தச் சதசிலிருந்து புறப்பட்டுத், தன் கிருகத்தை யடைந்தான். அப்போது ருத்திரனுடைய சேவகர்களுக்குள்ளே சிரேஷ்டனுன நந்தி கேசுரனுன வன், அந்தச் சாபத்தை யறிந்து ரோஷத்தினலே கலங்கின நேத்திரங்களை யுடையவனுய், அந்தத் தக்ஷ னையும், அவன் சபித்ததைக் கேட்டுச் சந்தோஷித்த பிராம்மணர்களையும் சபித்தான். இந்தத் தக்ஷனுனவன், கியான சூனியனுயும், பேததிருஷ்டியை யுடையவனுகியும், தத்வக்கியான சூனியனுயும், புத்தியீனனுய்க் கர்ம மார்க்கத் தையே அனுஷ்டிக்கத்தக்கவனுயும், பரமாத்மக்கியான சூனியனுகியும், பசுவுக்குச் சமானனுகியும், மிகவும் ஸ்திரீகளி டத்திலே ஆசக்தியை யுடையவனுகியும், சீக்கிரமாக ஆட்டி னுடைய முகம்போலொத்த முகத்தை யுடையவனுகவுமாகக்

கடவனென்று சபித்துப், பிற்பாடு பிராம்மணர்களை உத்தே சித்து ஜநநமரணாதி துக்கங்களையே அனுபவித்துக் கொண்டும், தேகபோஷணைக்காக வித்தை, தபசு, விரதம், இவைகளை யுடையவர்களாகியும், தனம், தேகம், இந்திரியங்கள் இவைகளிலே மிகவும் பிரீதியை யுடையவர்களாகியும், யாசகர்களாகியும், இந்த லோகத்திலேயே இருக்கக்கடவர்களென்று சபித்த நந்தியினுடைய வார்த்தையைக் கேட்டுப் பிருகுமகரிஷியானவர் மிகவும் குரூரமாகியும், பரிகரிக்கக் கூடாததாகியு மிருக்கிற சாபமான பிரமதண்டத்தைப் பிரயோகம் பண்ணினார். ருத்திரனுடைய விரதத்தையும், சைவர்களையும், அனுவர்த்திக்கிற அவர்கள் பாஷாண்டிகளாகவும், சாஸ்திர மார்க்க விரோதிகளாகவும், சவுசாசார வர்ச்சிதர்களாகியும், விவேக சூனியர்களாகியும், ஜடை, பஸ்மம், அஸ்தி, இவைகளைத் தரித்தவர்களாகியும், தெய்வம்போலே மத்திய மாம்சங்கள் புசிக்கத்தக்கதா யிருக்கிற அமங்களமான தீக்ஷையிலே பிரவேசிக்கத் தக்கவர்களாகியும், மரியாதா ரூபமாகியும், வர்ணாஸ்ரமாசாரங்களை யுடையவர்களான புருஷர்களுக்கு ஆஸிரயமாயிருக்கிற வேதத்தையும் பிராம்மணர்களையும் தூஷித்தபடியினாலே, பாஷாண்ட மார்க்கத்தையே ஆஸ்ரயித்தவர்களாகக் கடவர்களென்று சொல்லுகின்ற பிருகுமகரிஷியினுடைய சாபத்தைக்கேட்டு, ருத்திரனானவர் கொஞ்சம் விசனத்தை யுடையவர்போல் அந்தச்சதசினின்றும் புறப்பட்டுப் போனார். வாரீர் விதுரரே! விசுவகர்த்தாக்களான அந்தப் பிரஜாபதிகள் யக்கியமூர்த்தியான ஸ்ரீ ஹரியை உத்தேசித்து, ஆயிரம் சம்வச்சரத்தையுடைய யக்கியத்தை நிறைவேற்றிக் கங்கையும், யமுனையுங் கூடியிருக்கிற பிரவாகத்திலே அவப்பிருதஸ்நானம் பண்ணிச், சகலமான பேர்களும் பரிசுத்தமான மனதோடே கூடினவர்களாய், அவ்விடத்தினின்றும் தங்கள் தங்கள் ஸ்தானத்தை யடைந்தார்கள்.



## மூன்றாவது அத்தியாயம்



தக்ஷனுடைய யக்கியோற்சவத்தைப் பார்க்கவேண்டு மென்கிற இச்சையினாலே போகப்போகிறவளாயிருக்கிற சதீதேவியானவள், மகேசனாலே யேதுக்களால் தகையப்பட்டாளென்று சொல்லப்படுகின்றது.

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! இந்தப் பிரகாரம் ருத்திரனுக்கும் தக்ஷனுக்கும் சர்வ காலமும் துவேஷமானது அதிக்கிரமித்து,

சர்வலோக குருவான பிரம்மாவினுலே, தக்ஷனவன் சமஸ்த பிரஜாபதிகளுக்கும் அதிபதியாய்ப் பட்டாபிஷேகம் பண்ணப் பட்டது முதல் மகத்தான கர்வமுண்டாய், அதினுலே ஈஸ்வரன் முதலான பிரம்ம நிஷ்டர்களைத் திரஸ்கரித்து வாஜபேயமென்கிற யக்கியத்தைச் செய்து, பிற்பாடு பிரகஸ்பதி யக்கியமென்கிற உத்தமமான கிருதுவுக்கு ஆரம்பித்தான். அந்தக் கிருதுவிலே சமஸ்தமான பிரம்மரிஷிகளும், தேவரிஷிகளும், பிதுர்தேவர்களும், அவர்களுடைய பத்தினிகளுடனே மிகவும் பூஜிக்கப்பட்டார்கள். ஆகாசத்திலே இந்த ஆச்சரியத்தைச் சொல்லிக்கொள்ளுகின்ற தேவர்களுடைய வசனத்தைக் கேட்டுத் தக்ஷனுடைய புத்திரியான சதீதேவியானவள் பிதாவினுடைய யக்கிய மகோற்சவத்தைக் குறித்துச் சகலாலங்காரங்களுடன் போகிற தேவதாஸ்திரீகளைக் கைலாசத்திலிருந்து பார்த்துப் பூதபதியான தன்னுடைய பர்த்தாவைக் குறித்து ஒரு வார்த்தை சொல்லுகிறுள். வாரீர் தேவதேவனே! உம்முடைய மாமனுரான தக்ஷப்பிரஜாபதியினுடைய யக்கியமகோற்சவமானது இப்போது நிறைவேற்றப் படுகிறது. அதற்குச் சமஸ்ததேவர்களும் போகிருர்கள் அந்த யக்கியத்திலே பர்த்தாக்களுடனே கூடிக்கொண்டிருக்கிற என்னுடன் பிறந்த பெண்களையும், சிறிய தாயார்களையும், விசனப்பட்டுக் கொண்டிருக்கிற தாயாரையும், ரிஷீஸ்வரர்களாலே நிறைவேற்றப்படுகின்ற கிருதுசிரேஷ்டயான யக்கியத்தையும், வெகு காலமா யிச்சித்துக்கொண்டிருக்கிற மனதையுடையவளான நானும், அந்தயக்கியத்திலே உம்முடனே கூடப் பிதாவினுலே கொடுக்கப்பட்ட அலங்கார முதலான திரவியத்தை அங்கீகரிக்கக் கோருகிறேன். ஆச்சரியரூபமாகியுந் திரிகுண ஸ்வரூபமாகியுமிருக்கிற இந்த ஜகமானது, உம்முடைய மாயையினுலே பண்ணப்பட்டதா யிருந்தாலும், நான் ஸ்திரீ ஜாதியாகையால் உம்முடைய தத்துவத்தை யறியாதவளா யிருக்கிறேன். மிகவும் தீவினையால் என்னுடைய பிறந்த விடத்தைப் பார்க்கவேண்டுமென்று இச்சிக்கிறேன். அந்த யக்கிய தரிசனுர்த்தமாய்க் கூட்டங் கூட்டமாகப்போகிற சர்வாபரண பூஷிதர்களாகியும், பர்த்தாக்களுடனே கூடிக்கொண்டு மிருக்கிற ஸ்திரீகளைப் பாரும். பிதாவினுடைய கிருகத்திலே நடக்கும் மகோற்சவத்தைக் கேட்டு எனது மனம் பதைக்கின்றது. சத்புருஷர்களான பேர்கள் அழைக்கப்படாதவர்களா யிருந்தாலும் சினேகிதன் வீட்டிற்கும், பர்த்தாவினுடைய கிருகத்திற்கும் பேதமில்லாதற் போவார்களாத

லால், கிருபாசாலியாயும், மகத்தான கியானத்தை யுடையவ ராகியும், அடியேனைப் பாதிதேகத்தில் தரிக்கப்பட்டிருக்கிற தாலும், அடியேனால் பிரார்த்திக்கப்பட்ட கோரிக்கையைச் சபலமாகச் செய்யவேண்டுமென்று கோருகிற சதீதேவியின் வார்த்தையைக் கேட்டுச், சிவமூர்த்தி விசுவகர்த்தாக்களான பிரஜாபதிகள் முன்னிலைக்குத் தன்னைத் தக்ஷப்பிரஜாபதி யானவர் மர்மபேதிகளான துர்ப்பாஷைகள் சொன்னதை நினைத்துப் புன்னகையுடன் அந்தச் சதீதேவியைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார்.

வாராய் சோபனையே! பந்துக்களானபேர்கள் அழைக்கப் படாதவர்களாயிருந்தாலும், விவேகிகள், சிநேகிதன் முதலா னவர்களுடைய கிருகத்தைக் குறித்து போவார்களென்பது யதார்த்தமானாலும், அந்தப் பந்துக்கள் பலவானையும், தேகாதி அகங்காரத்தினாலும், கோபத்தினாலுந் தோஷத்தை ஆரோபிக்கப்படாமல் இஷ்டர்களாயிருந்தால் விவேகிகள் அவனுடைய கிருகத்தைக் குறித்துப் போவதற்குத் தடை யிராது. துஷ்டர்கள், தோஷ பூதங்களாயிருக்கிற வித்தை, பசு, தனம், சவுந்தரியம், யவ்வனவயது, குலம், இந்த ஆறு குணங்களினாலேயும், விவேகமானது நசிக்கப்பட்டு, அகங் காரத்தை யுடையவராய் மகத்துக்களுடைய தேஜசைப்பாரா மல் அவமதிப்பார்கள். குரூரங்களான பாணங்களினாலே பீடிக்கப்பட்ட சரீரத்தை யுடையவன் விசனப்படாமல் சுகமாக நித்திரை பண்ணுவன். பந்துக்களுடைய துர் வசனங்களினாலே அவமானப்பட்டவன் அகோரத்திரமும் நித்திரை பிடியாமல் விசனப் பட்டுக்கொண்டிருப்பன். வாராய் சோபனமான புருவத்தையுடையவளே! உத்தம மான ஸ்திதியை யுடைத்தான தக்ஷப்பிரஜாபதியினுடைய பெண்களுக்குள்ளே மிகவுமிஷ்டமானவளென்று எனக்கு நன்றாய்த் தெரிந்திருக்கின்றது. ஆனாலும் அந்தத் தக்ஷனை வன் என்னிடத்திலே துவேஷம் வைத்து, மிகவும் தபித் துக்கொண்டிருக்கிற படியினாலே என்னுடைய நிமித்தம் உன்னையும் அவமானஞ் செய்வான். உலகத்தில் ஒருவர்க் கொருவர் எதிர்கொண்டு வணக்கத்துடன் தண்டன் சமர்ப் பித்துக்கொள்ளுகிறது சர்வாந்திரியாமியான அந்த ஸ்ரீ வாசு தேவன் பொருட்டே தவிர வேறில்லை. அப்படிப்பட்ட பரமபுருஷரான ஸ்ரீமந் நாராயணனைச் சதா தியானஞ் செய்துகொண்டு, நிரபராதியாயிருக்கிற என்னைத் துர்வசனங் களினாலே திரஸ்கரித்த அந்தத் தக்ஷனானவன் உன்னாலே பிதாவென்னும், உன்னைப் போஷித்தவனாகவும் பார்க்கத்

தக்கவனல்லன். அவனை அனுவர்த்தித்துக் கொண்டிருக்கிறவர்களும் பந்துவாகப் பார்க்கத்தக்கவர்க ளல்லர், ஆதலால் என்னுடைய வார்த்தையைத் தள்ளிப்போயினையேயானால் உனக்கு மரணஹேதுவான அவமானம் நேரிடுமென்று சொன்னார்.



## நான்காவது அத்தியாயம்



*பர்த்தாவை விட்டுப்போன சதீதேவியானவள் பிதாவினாலே அவமானம் பண்ணப் பட்டவளாய்க், கோபத்தினாலே அந்தத் தக்ஷனைத் திரஸ்கரித்து அந்த யக்ஞயத்திலேயே சரீரத்தை விட்டுவிட்டாளென்று சொல்லப்படுகிறது.*

மைத்ரேய மகரிஷியினுடைய வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்த ருத்திரபகவான் இப்படிக்குச் சொல்லி நாமனுக்கியைப்பண்ணி அனுப்பினால் இவள் அவ்விடத்தில் நம்மிட நிமித்தம் அவமானம் நேரிடுவதைச் சகிக்காமல் சரீரத்தியாகஞ் செய்துகொள்வள். அனுப்பாமல் நிறுத்தினால் இவ்விடத்திலேயே சரீரத்தியாகஞ் செய்துகொள்வள். இப்படி இரண்டு விதத்திலுஞ் சரீரத்தியாகஞ் செய்வதற்கு ஹேதுவா யிருப்பதைச் சிந்தித்துக் கொண் டிருக்கையில், சதீதேவியானவள் பந்துக்களைப் பார்க்க வேண்டுமென்கிற இச்சையை யுடையவளாய் ருத்திரனிடத்தினின்றும், செலவு பெற்றுக்கொள்ளச் சங்கையுற்று, அடிக்கடி கிருகத்தைப் பிரவேசித்தும், பந்துக்களைப்பார்க்க வேண்டு மென்கிற இச்சைக்கு விகாதத்தினாலே மிகவும் விசனத்தையுடையவளாகி, நேத்திரஜலங்களுடைய திவலைகளாலே சூழப்பட்டு, நடுக்கத்துடனிருக்கிற அந்தப் பவானியானவள் அந்தருத்திரரைக் கோபத்தினாலேதகித்துப் போடுகிறவள்போல் பார்த்துக்கொண்டிருந்து, பின்பு பெருமூச்சுடன் ஸ்திரீ சுபாவத்தினாலே மூடமான புத்தியை யுடையவளாய்ப், பிரீதியினாலே தேகத்தினுடைய அர்த்த பாகத்தைக் கொடுத்த அந்தப் பதியை விட்டுவிட்டுச் சோகத்தினாலுங் கோபத்தினாலும் துக்கத்தையுடைய இருதயத்தோடே கூடப் பிதாவினுடைய கிருகத்தைக் குறித்துப் போயினாள். அப்படி ஏகாங்கியாகப் போகிற அந்தச் சதீதேவியைப் பார்த்துத் திரிநேத்திரருடைய கிங்கரர்களான மணிமான்

மதன் நந்திமுதலானபேர்கள், பின்சென்று அவளை ருஷபத்தின் மேலேவைத்துக்கொண்டு லீலார்த்தமான கிளி, பந்து, கண்ணுடி, பத்மம், வெண்குடை, சாமரம், புஷ்பமாலை முதலானவைகளும், துந்துமி சங்கம் வேணுமுதலான வாத்தியங்களும், கீதங்களும், பிரகாசிப்பித்துக்கொண்டுவர, எங்கும் வேதகோஷங்களாலேயும், தேவர்களாலேயும், பிரம்மரிஷிகளாலேயும் சூழப்பட்டும், யக்கியபசுவுடனே கூடிக்கொண்டும், மிருத்திகை, தாறு, அவிசு, சுவர்னம், தற்பம், சர்மம் இவைகளாலே நிர்மிக்கப்பட்ட பாத்திரங்களை யுடையனவாகியு மிருக்கிற அந்த யக்கிய சாலையைப்போ யடைந்தனள். அவ்விடமடைந்த சதிதேவியைக் கண்டு அவளுடன்கூடப் பிறந்த பெண்கள் பிரீதியினுல் ஆனந்த பாஷ்பத்தை யுடையவர்களாய் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார்கள், தாயாரும் அவளுடையசிறியதாயாரும் அவளுக்குத்தக்கபடி ஆதரித்துச் சன்மானத்துடன் ஆதனங்கொடுத்தார்கள். இவர்களைத் தவிர மற்றெவரும் யக்கியகர்த்தாவான தக்ஷனிடத்தினின்றும் பயத்தினுலே ஆதரியாமற்போனுர்கள். பிரீதியாய் விசாரித்தவர்களையும், சந்தோஷசெய்தி கேளாமலிருப்பவர்களையும், ருத்திரபாகத்தை யுடையதாகாமலிருக்கிற அந்த யக்கியத்தையும், தேவதேவராகியும், பிரபுவாகியுமிருக்கிற ருத்திரரிடத்திலே பண்ணப்பட்ட அவமானத்தையும், சிவத்துவேஷியான அந்தத் தக்ஷனை வதஞ்செய்ய யத்தனஞ்செய்த பிரமதகணங்களையும் பார்த்து, அவர்களைத் தன்னுடைய ஆக்கினையால் தகைந்து, சகலருங் கேட்கக் கோபத்தினுல் தழுதழுத்த வாக்குடன் நிந்தித்தாள்.

சகல ஜீவகோடிகளிடத்திலும் பிரியாப்பிரியங்களில்லாதவராகியும், பரமாத்துமாவாகியுமிருக்கிற அந்தச் சிவனிடத்திலே, உன்னைத்தவிர எவன்தான்பிரதிகூலமாக நடப்பன். சாதுக்களானவர்கள் எதிரியினுடைய குணங்களையே கிரகிப்பார்கள். மகத்துக்கள் குணதோஷங்களைச் சமமாகக் கிரகிப்பார்கள். மத்தியமர்கள் குணங்களி லிருக்கின்ற தோஷங்களைக்கிரகிப்பார்கள். அதமனுய் உன்னைப்போலொத்த அசூயையுடைய புருஷன் குணங்களையேதோஷமாகக்கிரகிப்பன். ஜடமானசரீரத்தை ஆத்மாவென்று சொல்லுகிறவனுகியும் மகத்துக்களிடத்திலே அசூயையுடன் சத்துக்களையே சர்வகாலமும் நிந்திக்கிறவனுயுமிருக்கிறுய். இரண்டக்ஷரமாகியும்பிரசித்தமாகியுமிருக்கிற சிவவென்கின்ற நாமமானது வாக்கினுலே ஒருக்கால் சொல்லப்பட்டதாகில் அந்த மனுஷியர்களுடைய பாவத்தை அந்த க்ஷணத்திலேயே

நாசம் பண்ணும். அப்படிப்பட்ட மகிமையுள்ள சிவனை அமங்கல ரூபியான நீயானவன் துவேஷிக்கிறாய், பிர்மானந்தமாகிற மகரந்தத்தைப் பிரார்த்திக்கின்ற மகத்துக்களுடைய மனதாகிற வண்டுகளாலே சிவனுடைய பாதபத்மமானது சேவிக்கப்படுகிறது. ஜடைகளை விரித்துக்கொண்டு ஸ்மசானத்தினுடைய மாலைகளையும், பஸ்மங்களையும், மனுஷியர்களுடைய தலையோடுகளையும் பூஷணமாக வுடையவராகிப் பிசாசங்களுடனேகூட ஸ்மசானத்திலே வாசம் பண்ணுகிற அந்தச் சிவனுடைய பாதாரவிந்தத்தினின்றும் நழுவுகின்ற நிர்மாலியத்தை மேலோர் சிரசுகளாலே தரித்து மேன்மையை யடைகிறார்கள். மரியாதை யில்லாதவர்களான புருஷர்களாலே தூஷிக்கப்பட்டாரே யானால், அதைக் கேட்ட புருஷனானவன், தான்மரிக்கவும் அவர்களைச் சிக்ஷிக்கவுஞ் சாமர்த்திய மில்லாதவனானால், காதுகளை மூடிக் கொண்டு அவ்விடத்தைவிட்டு அப்பாலே போய்விடுவன். சமர்த்தனேயானால் அந்தத் துஷ்டர்களுடைய நாவைப் பலாத்காரமாக அடியோடே சேதித்துப்போடுவன். அதைப் பார்க்கிலுந் தன் பிராணனை விட்டுவிடுவன். ஆதலால் நீலகண்டரைத் தூஷிக்கிற வுன்னிடத்தினின்றும் உண்டான இந்தச் சரீரத்தை வைத்துக்கொண்டிருக்கப் போகிறதில்லை. வாராய் பிதாவே! எங்களாலே ஆஸ்ரயிக்கப்படுகின்ற அணிமாதி சம்பத்துக்களானவை உமக்குண்டாயிருக்கவில்லை. உங்களுடைய சம்பத்துக்கள் பிராணன் முதலியவைகளிலே மிகவும் பிரீதியை யுடையவர்களா யிருக்கிற பெயர்களாலே சிலாகிக்கப் படுகின்றனவாயும், தூமமார்க்கங்களாலே யஜிக்கப்படுகிறவைகளாயு மிருக்கிற அந்தச் சம்பத்துக்களே உங்களுக் கிருக்கின்றவை. எங்களுடைய சம்பத்துக்கள் அறியப்படாத காரணங்களை யுடையவைகளாகியும் பிரம்மவித்துக்களாலே சேவிக்கப்பட்டனவாகியு மிருக்கின்றன. ஆகையாலே நான் பலவானென்றும், ருத்திரன் தரித்திரனென்றும் கர்வத்தையடையவேண்டாம். அந்த ஈஸ்வரனிடத்திலே பண்ணப்பட்ட அபராதத்தை யுடையவனான உன்னுடைய தேகத்தினின்று முண்டான இந்தச் சரீரத்தினாலே பிரயோஜனமில்லை. இந்தத் தேகத்தைத் தரித்தது போதும், மகா புருஷர்களுக்கு அபசாரத்தைப் பண்ணுகிற உன்னுடைய சம்பந்தமான இந்தத் தேகத்தைச் சுடவேண்டாமா? பகவானான ரிஷபத்துவஜரானவர் பரிஹாசம் முதலானவைகளினாலே விசேஷமாகத் தாக்ஷாயணியென்று அழைத்துக்கொண்டு உன்னுடைய நாமத்தைச் சொல்லுகிறபோது அந்த விளையாட்டினாலே உண்டான சந்தோஷத்தை

விட்டு மிகவும் துக்கத்தையுடையவளாயிருப்பேன். ஆகையி ஞலே சவத்துக்குச் சமானமாகியும், உன்னுடைய தேகத்தி னின்றும் உண்டானதாகியு மிருக்கிற இந்தத் தேகத்தை விட்டுவிடுகிறேன்.

### சுகப்பிரம ரிஷியினுடைய வாக்கியம்

வாராய் காமக்குரோதாதிகளை ஜயித்த பரிக்ஷித்து மஹா ராஜனே! அந்தச் சதீதேவியானவள், இந்தப்பிரகாரம் அந்த யக்கியத்திலே தக்ஷனைக் குறித்துச்சொல்லி, மவுனத் தை யடைந்தவளாய்ப், பூமியிலே வடக்கு முகமாக இருந்து ஆசமனம் பண்ணி, நேத்திரங்களை மூடிக்கொண்டு, பீதாம் பரத்தாலே சூழப்பட்டவளாகி, யோகாசனத்தை யுடையவ ளாய்ப் பிராண அபான வாயுக்களை நான்குபக்கமும் வியாபி யாமல் தகைந்து ஏகரூபமாகப் பண்ணி, நாபிச்சக்கரத்தி ஞலே நிறுத்தி, அவ்விடத்தினின்றும் உதானவாயுவை யெழுப்பிப் புத்தியோடேகூட மெல்லமெல்ல இருதயத்திலே ஸ்தாபித்து, அதினின்றுங் கண்டத்திலே ஸ்தாபித்துக், கண்டமார்க்கமாய் புருவங்களுடைய மத்தியத்திலே அடை விப்பித்தாள். மகத்துக்களுக்குப் பூச்சியரான ருத்திராலே அடிக்கடி ஆதரவினுலே மடியிலே யேற்றி வைத்திருக்கப் பட்ட சதீதேவி தன்னுடைய தேகத்தைவிட இச்சித்தவ ளாய்ச், சரீரங்களிலே பிராண நிரோதனமாகிற அக்கினி யைத்தரித்து, ஜகத்குருவான தன்னுடைய பர்த்தாவி னுடைய பாதாரவிந்தத்தைச் சிந்தித்துக்கொண்டு, பர்த்தா வைவிட மற்றென்றையும் தன் தேகத்தையும் பார்த்திலள். அந்த க்ஷணத்திலே அந்தத் தேகமானது, சமாதியினுலுண் டான அக்கினியிலே பஸ்மமாய்விட்டது. அந்த ஆச்சரியத் தைப் பார்த்தபேர்களுடைய ஹாஹா வென்கிற சப்தமானது ஆகாசத்திலேயும் பூமியிலேயும் நிரம்பியது. தேவர்களுக் குள்ளே மிகவும் பூஜ்ஜியரான ருத்திருடைய இஷ்டையான தேவியானவள் தக்ஷனுலே கோபித்துக் கொள்ளப்பட்டவ ளாகப் பிராணனை விட்டுவிட்டாள். ஸ்தாவர சங்கமரூப மான இந்தப் பிரபஞ்சத்திற்குக் காரண பூதனுன இந்தத் தக்ஷப்பிரஜாபதியினுடைய துற்ஜன ஸ்வபாவத்தைப் பாருங் கள். எங்கும் பூஜிக்க யோக்கியையான இந்தச் சதீதேவியான வள் இந்தத் தக்ஷனுலே அவமானம் பண்ணப்பட்டவளாய்ப் பிராணனை விட்டுவிட்டாள். தயாசூனியமான இருதயத்தை யுடையவனுகியும், அதமனுகியுமிருக்கிற இந்தத் தக்ஷனுன வன், ஜனங்களுடைய மத்தியிலே மகத்தான அபகீர்த்தியை யும் நரகத்தையு மடையப்போகிறுன். ஈஸ்வரத்துவேஷியான

இந்தத் தக்ஷனானவன், தன்னுடைய பெண்ணான சதீதேவி மரணத்திற்கு யத்தனம் பண்ணுகிறபோது அவளைத் தகையாமல் உபேக்ஷை செய்ததா லுண்டான அபகீர்த்தியையும், நரகத்தையும், அடையப்போகிறானென்று ஜனங்கள் சொல்லிக்கொள்ளுகையில், ருத்திரப் பாரிஷிதர்களான பேர்கள் சதீதேவியினுடைய அற்புதமான பிராணத்தியாகத்தைப் பார்த்து அந்தத் தக்ஷனைக் கொல்லுகைக்கு ஆயுத பாணிகளாகப் புறப்பட்டு ஓடிவந்தனர். அந்தப் பிரதமகணங்களுடைய வேகத்தைப் பார்த்துப் பிருகுமகாரிஷியானவர் யக்ஞியவிகாதம் பண்ணுகிற பெயர்களை நாசஞ்செய்கின்ற மந்திரத்தினாலே தக்ஷிணாக்கினியினாலே ஹோமம் பண்ணினார். அதினின்றும் பிருகுவென்று பெயரை யுடையவர்களான அந்தத் தேவர்கள் பராக்கிரமத்தினாலே வெருப்பிரகாரமாகப் புறப்பட்டுப் பிரம்மதேஜசினாலே பிரகாசிப்பவராய்க் குறைக்கொள்ளியை ஆயுதமாக வுடையவர்களாய் அந்தக் குய்யகர்களுடனே கூடியிருக்கிற அந்தப் பிரதம கணங்களை நான்கு திக்கிலேயும் அடித்துத் துரத்தினார்கள்.



## ஐந்தாவது அத்தியாயம்

சங்கரரானவர் சதீதேவியினுடைய தேகதியாகத்தைக்கேட்டுக்
கோபத்தினாலே வீர பத்திரரை யுண்டாக்கி அவராலே
தக்ஷனைக் கொல்லுவித்தாரென்று
சொல்லப்படுகின்றது.

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்

வாரீர் விதுரரே! ருத்திரனானவர், தக்ஷப்பிரஜாபதியினாலே அவமானம் பண்ணப்பட்ட சதீதேவியினுடைய நாசத்தையும் அந்தத் தக்ஷனுடைய யக்கியத்திலுண்டான தேவர்களாலே தம்முடைய பாரிஷதர்கள் துரத்தி விடப்பட்டதையும், நாரத மகரிஷியினிடத்தினின்றுங்கேட்டு அபாரமான கோபத்தை யடைந்து கடிக்கப்பட்ட வுதடுகளை யுடையவராகி அக்கினியினுடையஜ்வாலைபோல் உக்கிரமான காந்தியையுடையதான ஜடையைப்பிடுங்கிச் சீக்கிரமாக எழுந்திருந்து நகைத்துக் கம்பீரமான சப்தத்தை யுடையவராய் ஜடையைப் பூமியிலேவிட, அதினின்றும் தேகத்தினாலே சுவர்க்கத்தை ஸ்பரிசித்தும் ஆயிரம் பாகுகளை யுடையவராகியும், மேகம்போல் காந்தியை யுடையவராகியும்

மூன்று சூரியர்கள் போலொத்த கண்களையுடையவராகியும், மிகவும் உன்னதங்களான பற்களையுடையவராகியும் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்கினிபோலொத்த மயிர்களை யுடையவராகியும், கபாலமாலைகளை யுடையவராகியும், நானாவிதங்களாகியும், உயரவெடுக்கப்பட்டு மிருக்கிற ஆயுதங்களையுடையவராகியு மிருக்கிறவீரபத்திரானவர் உண்டாகி, ருத்திரரை நோக்கி அஞ்சலிப்பந்தம் பண்ணிக்கொண்டு நான் செய்ய வேண்டிய தென்னவென்றுகேட்கிற அந்த வீரபத்திரரைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறார். வாராய் படனே! நீ என்னுடைய படர்களுக்கு நாயகனாகி யக்கியத்துடனே கூடிக்கொண்டிருக்கிற தக்ஷனை நாசம்பண்ணு. பிரம்ம தேஜசானது ஜயிக்கத்தக்க தென்றெண்ண வேண்டாம். நீயென் அம்சமாக விருக்கிறாயென்று ருத்திரராலே ஆக்கியாபிக்கப்பட்டவராய், அந்த வீரபத்திரரானவர் தேவதேவராகியும், பிரபுவாகியுமிருக்கிற அந்த ருத்திரரைப் பிரதக்ஷணம் பண்ணி அப்போது தம்மைப் பலசாலிகளுடைய பலத்தை ஜயிக்கத்தக்கவராக வெண்ணிக்கொண்டார்.

வாரீர் விதுரரே! அந்த வீரபத்திரரானவர் மிகவும் அட்டகாசம்பண்ணிப்பிரமத கணங்களாலே பின்செல்லப்பட்டவராய்ச் சப்தியாநின்றசிலம்பு முதலான பூஷணங்களை யுடையனவான பாதங்களை யுடையவராகி அவனுக்கு யமன் போல் பயங்கரமான சூலத்தை யெடுத்துக்கொண்டு ஓடிவந்தார். இப்படி ஓடிவருகிற வீரபத்திரரை ரித்துவிக்குகள், சதசியாள், பிராமணர்கள், பிராமணபத்தினிகள், சமஸ்தமான பேர்களும் பார்த்து, வடக்குத்திக்கிலே இதென்ன அந்தகாரமோ வென்று பிரமித்துப், பிற்பாடு புழுதியென்றறிந்து, இந்தத் தூளானது எங்கிருந்துண்டாயிற்றென்று சிந்தித்தார்கள். இவ்விடத்திலே பெருங்காற்றுகளும் வீசவில்லையே. சோரர்களுமில்லையே, இப்போதிராநின்ற பிராசீனபரிஹி என்னப்பட்ட ராஜாவானவன் உக்கிரமான ஆக்கினையுடையவனாக ஜீவித்திருக்கிறானே, பசுக்களும் மிகவும் வேகத்துடனே தூரத்திக்கொண்டு போகப்படவில்லையே, இந்தப் புழுதியானது எதினாலே யுண்டாயிற்று. இப்போது லோகந்தான் பிரளயத்தை யடைந்துபோகிறதோ என்னவோவென்று பிரசூதியென்கிற தக்ஷனுடைய பத்தினியுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த ஸ்திரீகளும் பயந்த சித்தத்தை யுடையவராய் இந்தத் தக்ஷப்பிரஜாபதியானவன் சமஸ்தமான பெண்களும் பார்த்துக் கொண்டிருக்கையில், புத்திரியாகியும் நிரபராதியாகியு மிருக்கிற சதீதேவியை

அவமானம் பண்ணின பாபத்தினுடைய பலமிதுவென்று சொல்லிக் கொண்டார்கள்.

பிரளயகாலத்திலே நான்குபக்கமும் சிதறுகின்ற ஜடா முடியை யுடையவராகியும், தம்முடைய சூலநுனியிலே கோக்கப்பட்ட திக்கஜங்களையுடையவராகியும், மிகுந்த அட்டகாசமாகிய மேகசப்தத்தினாலே பிளக்கப்பட்ட திக்கு களை யுடையவராகியும், உயரவெடுக்கப்பட்ட அஸ்திரங்களை யுடையவைகளான பாகுக்களாகிற துவஜங்களை நான்குபக்க மும் பரப்பிக்கொண்டு சந்தோஷத்தினாலே நர்த்தனம் பண்ணுகிறவராகியும், சகிக்கக்கூடாத தேஜஸை யுடையவ ராகியும், புருவநெறியினாலே பார்க்கக்கூடாதவராகியும், நக்ஷத்திரங்களைத் தள்ளப்பட்ட பயங்கரமான கோரப்பற்களை யுடையவராகியு மிருக்கிற அந்த ருத்திரரைப், பொறுமையை யுடையவராகப் பண்ணிக் கோபித்துக் கொள்ளும்படி செய்த தக்ஷப்பிரஜாபதிக்கு க்ஷேமமாவது எப்படி யுண்டாகப் போகிற தென்று மிகுந்த பயத்தையடைந்த ஜனங்களினாலே வெகுப் பிரகாரமாக அந்த ருத்திரர் விஷயத்திலே சொல்லப்படுகை யில், அப்போது மகானுபாவனான அந்தத் தக்ஷனுக்குப் பயங்கரமான மகோற்பாதங்களானவை அனேக பிரகார மாகப் பூமியிலேயும், ஆகாயத்திலேயும் நான்கு பக்கங்களி லேயும் உண்டாயின. அப்போது நானாவிதமான ஆயுதங் களையுடையவர்களாகியும், வாமனரூபிகளாகியும், எடுக்கப் பட்ட ஆயுதங்களை யுடையவர்களாகியும், பொன் வர்ணமான வர்களாகியும், பச்சைவர்ணமானவர்களாகியும், முதலையினு டைய முகம்போலவும் வயிறுபோலவு மானவர்களாகியும், மான் முகங்களையும் வயிறுகளையு முடையவர்களாகியும், நான்குபக்கமும் ஓடிவருகிற அந்த ருத்திரபடர்களாலே அந்த யக்கியமானது சுற்றிக்கொள்ளப்பட்டுச் சிலர் பிருகு வம்சத்தை முறித்துப்போட்டார்கள். சிலர் பத்தினிசாலையை நாசம்பண்ணிப்போட்டார்கள். சிலர் சதசியாளிருக்கிற மண்டபத்தை அழித்துப் போட்டார்கள். சிலர் அக்கினி ஹோத்திரசாலையை அழித்துப்போட்டார்கள். சிலர் மடைப் பள்ளியை நாசம்பண்ணிப் போட்டார்கள். சிலர் யக்கியபாத் திரங்களைத் துவம்சம்பண்ணிப்போட்டார்கள். சிலர் அக்கினி களை நாசம்பண்ணிப் போட்டார்கள். சிலர் குண்டங்களிலே சிறு நீரை விட்டார்கள். சிலர் யக்கியவேதிகைகளை யிடித்துப் போட்டார்கள். சிலர் ரிஷிஸ்வரர்களைப் பீடித்தார்கள். சிலர் அவர்கள் பத்தினிகளை மருட்டினார்கள். சிலர் கிட்டியும் ஓடிப்போயு மிருக்கிற தேவர்களைப் பிடித்துக்கொண்டார்கள்.

மணிமானுனவன் பிருகு மகரிஷியையும், வீரபத்திரரான வர் தக்ஷப்பிரஜாபதியையும், சண்டேசனுனவன் பூஷாவென் னப்பட்ட தேவனையும், நந்தீஸ்வரரானவர் பகனையும் பிடித் துக்கொண்டார்கள். சமஸ்த ரித்விக்குக்களும், சதசியாளும், தேவர்களும். அந்தப் பிரதம கணங்களாலே அனேகப் பிர காரமாக மிகவும் பீடிக்கப்பட்டவர்களாய் ஓடிப்போனுர்கள்.

சதசிலே மீசைகளை யுருவிச் சிரித்தும், ஓமம்பண்ணு கின்ற யக்கிய பாத்திரத்தைக் கையிலே யுடையவராகியுமிருக் கிற அந்தப் பிருகுமகரிஷியினுடைய மீசைகளை வீரபத்திர ரானவர் பிடுங்கிப்போட்டார். சிவனிந்தையைப் பண்ணு கின்ற தக்ஷனைக் கண்சாடை காட்டின பகனுடைய நேத்திரங் களை நந்தீஸ்வரரானவர் பிடுங்கிப்போட்டார். மகாதேவரான வர் தக்ஷனாலே நிந்திக்கப்படுகையில் சிரித்த பூஷாவினுடைய பற்களைச் சண்டேசனுனவன் பிடுங்கிப்போட்டான். வீரபத்திர ரானவர் தக்ஷனுடைய மார்பிலே ஏறிக்கொண்டு தீக்ஷணமான நுனியையுடைய ஆயுதத்தினுலேயும் அனேக அஸ்திரங் களாலேயும் சேதிக்கப்படாமலிருக்கிற சர்மத்தை யுடைய வனுன அந்தத் தக்ஷனைப் பார்த்து மிகவும் ஆச்சரியத்தை யடைந்து வெகுகாலஞ்சிந்தித்து அந்த வீரபத்திரரானவர் யக்கியத்திலே பசுக்களுடைய பீடாதிரூபமான மரணவுபா யத்தைப்பார்த்து அந்த உபாயத்தினுலே யசமானனுகிற பசு வினுடைய சரீரத்தினின்றும் சிரசைச் சேதித்துப் போட் டார். அப்போது வீரபத்திரருடைய அந்தக் காரியத்தைப் பார்த்து மிகவுங் கொண்டாடி, அந்தப் பூதப்பிரேத பிசாசங் களுடைய சாதுவாதமும் மற்றைப்பிராமணர்களுடைய அசாதுவாதமு முண்டாயிற்று. வீரபத்திரரானவர் கோபத்தி னுலே அந்தச் சிரசைத்தக்ஷிணுக்கினியிலே ஹோமம்பண்ணிப் போட்டார். அந்தப் பிரமதகணங்கள் அந்த யக்கியத்தைப் பஸ்மமாகப் பண்ணிப்போட்டுக் கைலாயத்தைக் குறித்துப் போனுர்கள்.



## ஆருவது அத்தியாயம்



*பிரம்மதேவரானவர் தேவகணங்களுடனேகூடப் பூமியை அடைந்து, தக்ஷன் முதலானபேர்களைப் பிழைப்பிக்கச்செய்து சமாதா னம் பண்ணினுரென்று சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! பிற்பாடு சமஸ்த தேவகணங்களும் ருத்திரசேனைகளாலே அபஜயப்பட்டவர்களான ரித்விக்குகள்

சதசியாள் முதலானவர்கள் பயத்தை யுடையவர்களாய்ப் பிரம்மதேவரையடைந்து நமஸ்காரம் பண்ணிச் சமஸ்த விருத்தாந்தத்தையுஞ் சொன்னார்கள். பூர்வம் தானே இப்படி வரப்போகிறதை யறிந்து தக்ஷனுடைய யக்கியத்தைக் குறித்துப் போகாமலிருந்த பிரம்மதேவரானவர் ஒரு வார்த்தை சொல்லுகிறார். மிகவும் தேஜசையுடைய புருஷன் அபராதம் பண்ணியிருந்தாலும் அவனிடத்திலே துவேஷிக்கிற பேர்களுக்கு க்ஷேமமுண்டாகமாட்டாது. யக்கிய பாகத்திற்குரிய ருத்திரரை திரஸ்கரித்து நடத்தியபடியால் இவ்வளவு தொந்தரை நேர்ந்தது. இப்போது தயாநிதியான அந்த ருத்திருடைய பாதார விந்தங்களைப் பிடித்துக்கொண்டு க்ஷமிப்பியுங்கள். அவர் கோபித்துக்கொண்டால் லோகபாலர்களுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த லோகங்களும் நாசத்தையடைந்துபோகும். பாரியையினாலே பிரிவுபட்டவராகியும் இருதயத்தில் துர்ப்பாஷைகளினாலே அடிக்கப்பட்டுமிருக்கிற அந்த ருத்திர தேவரைச் சீக்கிரமாக நீங்கள் யக்கியத்திற்கு மீட்சிக்கோரி க்ஷமிப்பியுங்களென்று ஆக்யாபித்துப், பிதுர்க்கள், பிரஜாபதிகள், தேவர்கள் இவர்களுடனே தம்முடைய லோகத்தினின்றும் திரிபுரவைரியான ருத்திருக்கு ஸ்தானமாகியும் இஷ்டமாகியும் ஔஷதிகளுக்கு வுற்பத்திஸ்தானமாகியும் தபசு, யோகம், மந்திரங்களினாலே சித்தர்களால் சேவிக்கப்பட்டும், கின்னரர்கள், கந்தர்வர்கள், அப்சரஸ்திரீகள் இவர்களாலே சர்வகாலமும் சூழப்பட்டும், நானாவிதங்களான ரத்தினங்கள், தாதுக்கள், விருக்ஷங்கள், கொடிகள், புதர்கள், இவைகளை யுடையவைகளாகியும், நானாவிதங்களான மிருக கணங்களாலே சூழப்பட்டும், நிர்மலங்களாகிய மலையருவிகள் குகைகள் தாழ்வரைகளை யுடையவைகளாகியுமிருக்கிற சிகரங்களிலே நாயகர்களுடனே கூட விளையாடிக்கொண்டிருக்கின்ற தேவஸ்திரீகளுக்குப் பிரீதியைப் பண்ணுகிறதாயும், மயில்களாலே சப்திக்கப்பட்டும் மதாந்தங்களாயிருக்கிற வண்டுகளுடைய ராகத்தை யுடையதாகியும், கோகுலங்களுடைய சப்தங்களாலேயும், உன்னத சாகைகளாகியும், இச்சித்தவைகளெல்லாங் கொடுக்கின்ற விருக்ஷங்களாலே பக்ஷிகளை அழைக்கிறதுபோலு மிருக்கிற வனத்தை யுடையதாயும், ஆம்பல் செங்கழுநீர் பத்மம் இவைகளாலே சூழப்பட்டு மதுரமாகச் சப்திக்கின்ற பக்ஷிக்கூட்டங்களாலே விளங்கிக்கொண்டு மிருக்கின்ற தடாகங்களையுடையதாகியும், கங்கையினாலே சூழப்பட்டும், பவித்திரமாகியும் சுகந்தமாகியும் ஜலத்தை யுடையதாகியுமிருக்கிற கைலாச கிரியையும், அந்தப் பர்வதத்திலே மிகவும் மனோக்கியமாகியும், அளகை

யென்று பெயரை யுடையதாகியும், சௌகந்திக மென்னப் பட்ட பத்மவனத்தை யுடையதாகியும், ருத்திரபகவானுடைய பாதாரவிந்த தூளியினாலே மிகவும் பாவனங்களான நந்தை யென்றும் அளகந்தை யென்றும் சொல்லப்பட்ட இரண்டு நதிகளால் சூழப்பட்டும், வெள்ளி சுவர்னம் மகாரத்தினங் களின் மயமான அனேக விமானங்களாலும், யக்ஷஸ்திரீகளா லுஞ் சூழப்பட்டு மின்னல்களோடே கூடிக்கொண்டிருக்கிற மேகம்போல விளங்குகிற குபேரனுடைய அந்தப் பட்டணத் தையும் அபீஷ்டத்தைக் கொடுத்தும் கொண்டும் ஆச்சரிய கரங்களாகியு மிருக்கிற இலை, காய், கனிவர்க்கங்களையுடைய விருக்ஷங்களாலே சுபகரமாகியும், இரக்தகண்டங்களை யுடை யனவாகிய வண்டினங்களினது ஸ்வரத்தையுடையதாகியும் அம்சங்களுடைய கூட்டத்துக்கு இஷ்டமாகியும், திடமான கொடிதண்டுகளையுடைய பத்மங்களாலே சூழப்பட்ட சாசுகளை யுடையதாகியும், நூதனமான அரிச்சந்தன விருக்ஷங்களு டைய ஆகாரத்தினாலே யக்ஷ ஸ்திரீகளுடைய மனதை அடிக்கடி மிகவும் சலிப்பிக்கிற சௌகந்திக மென்னப்பட்ட வனத்தையும், பத்மங்களுடைய சமூகங்களை யுடையதாகியும் கிம்புருஷர்களாலே சூழப்பட்டும், வயிடூரியங்களாலே பண் ணப்பட்ட படிகளையுடைய நடைவாவிகளையும், நூறுயோசனை தூரம் உன்னதமாகியும், நான்கு பக்கமும் எழுபத்தைந்து யோசனை தூரம் கிளைகளினாலே விஸ்தாரமாகியும், நான்கு பக்கமும் ஸ்திரமான நிழலையும், பக்ஷிகளுடைய கூடுகளையு முடையதாகியும், தாபத்தைப் போக்கடிக்கத் தக்கதாகியும், மோக்ஷத்தைக் கோருகிற பேர்களுக்கு இருப்பிடமாகியும், மகாயோகஸ்வரூபமாகியு மிருக்கிற ஆலமரத்தின் கீழே கோபத்தை விட்டிருக்கின்ற யமன்போலும், சாந்தர்களான மகா சித்தர்களாலேயும், குபேரனாலேயும், குய்யகர்கள், இரா க்ஷசர்கள் இவர்களாலே பூஜிக்கப்பட்டவராகியும், உபாசனை. தபசு, சமாதி, இவைகளுடைய மார்க்கத்தை யுடையவராகி யும், லோகேஸ்வரராகியும், பிரபஞ்சத்திற்கு இஷ்டராகியும், சந்தியாகால மேகம்போன்ற சரீரத்தில் பஸ்மத்தினாலே பூசப்பட்டுப், சடை, சர்மப், சந்திரகலை முதலான சின்னங் களைத் தரித்துப், தர்ப்பை மயமான ஆசனத்திலே யிருந்தும் ரிஷீஸ்வரர்கள் கேட்டுக்கொண்டிருக்கப் பிரஸ்னம் பண்ணு கின்ற நாரத மகரிஷிக்குப் பரப்பிரமத்தை உபதேசிக்கிறவ ராயும், இடது பாதபத்மத்தை வலதுதொடையின்மேலே வைத்துக்கொண்டு இடது முழங்காலின்மேலே இடக்கையை வைத்துக்கொண்டு வலதுகையினுடைய மணிக்கட்டிலே ஜபமாலையைத் தரித்துக்கொண்டு வலதுகையினால் பண்ணப்

பட்ட தத்துவமுத்திரையினலே காணப்படும், பிரம்மானந்தத்திலே யேகாக்கிரசித்தரா யிருக்கின்றவராயும், யோகப்பட்டையை ஆஸ்ரயித்திருக்கின்ற தியான சீலர்களான மனுக்களுக்கு ஆதிமனுவாகியுமிருக்கிற அந்தக்கிரீசனை லோக பாலர்களுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த முனிகளும் அடைந்து அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு தண்டனிட்டார்கள். அந்தக்கிரீசனும் சித்தமகரிஷிகளுடன் அவ்விடத்திலேவருகின்ற பிரம்மாவைப்பார்த்து எழுந்திருந்து வாமன மூர்த்தியான ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் கசியபப் பிரஜாபதிக்குப் பிரணயம் பண்ணினற்போல் தண்டன் சமர்ப்பித்து நிற்க, பத்மாசனர் அந்தச் சந்திர சேகரனைப் பார்த்துச் சிறித்துக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

### பிரம்மாவினுடைய வாக்கியம்

வாரீர் ஈசனே! உம்மைச் சர்வ ஜகத்துக்கும் சக்திபீஜஸ்வரூபமான பிரகிருதிபுருஷருக்கும் காரணராகவும், பேத சூனியராகியும், பரப்பிரம்மமாகியும் அறிகிறேன். உம்முடைய அம்சர்களான பிரகிருதி புருஷர்களிடத்திலிருந்து சிலந்திப்பூச்சிப்போல் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும் இரக்ஷித்தும் சங்கரித்துக்கொண்டு மிருக்கிறீர். தர்மார்த்தங்களைக் கொடுக்கின்ற வேதத்தினுடைய ரக்ஷணைக்கு யக்கியத்தைச்சிருஷ்டித்தீர். பிராம்மணர்கள் மரியாதைகளுடன் அனுஷ்டானஞ்செய்கிற வர்ணாஸ்ரம தர்மங்களும், உம்மாலேயே நிர்ணயம் பண்ணப்பட்டன. சுபகர்மத்தைப் பண்ணுகின்ற புருஷனுக்குப் பலமாகச் சொர்க்க மோக்ஷங்களைக் கொடுக்கின்றீர். அக்கிரமங்களைப் பண்ணுகின்ற புருஷனுக்குக்கோரமான நரகத்தைப் பண்ணுகிறீர். ஒருவராலேயும் உல்லங்கனம் பண்ணக்கூடாத பத்மநாபருடைய மாயையினலே மோகிக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களாகியும், பேதபுத்தியை யுடையவர்களுமாக இருக்கிறவர்களிடத்திலேயும், சாதுக்களான பேர்கள் கிருபையைப் பண்ணுவார்கள். தெய்வத்தினலே அடிக்கப்பட்டவனிடத்திலே பராக்கிரமத்தைப் பண்ணர்கள். ஆகையினல் அந்த மாயையினலே மோகிக்கப்பட்ட மனதையுடையவர்களாகியும், கர்மத்திலேயேபிரவர்த்திக்கின்ற சித்தத்தை யுடையவர்களாகியுமிருக்கிறபேர்களால் செய்யப்படுகிற அபராதத்தைப் பொறுத்து அந்தத் தக்ஷப்பிரஜாபதியினுடைய யக்கியத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். யக்கியத்திலே பாகத்தைக் கொடாமற் போகிறவர்கள் நிஷித்தமான யக்கியம் பண்ணினவர்களாக ஆகிறார்கள். யஜமானனுன தக்ஷனையும் பிழைப்பித்துப், பக

தேவனுடைய கண்களையும் கொடுத்துப், பிருகுமகரிஷிக்கு மீசைகளும் உண்டுபண்ணிப் பூஷாவுக்கும் பூர்வம்போலொத்த தந்தங்களும் உண்டாக்கப்படட்டும். உம்மாலே அனுக்கிரகிக்கப்பட்ட ஆயுதங்களினலேயும், கற்களினலேயும், பிளக்கப்பட்ட சரீரத்தையுடைய தேவர்களுக்கும், ரித்துவிக்குகளுக்கும் சீக்கிரமாக ஆரோக்கியமுண்டாகப்படட்டும். யக்கியத்திலே யிருக்கிற பதார்த்தங்கள் யாவும் உம்முடைய பாகமாக விருக்கட்டும். அந்த யக்கியத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்று பிரம்மதேவர் சொன்னர்.



## ஏழாவது அத்தியாயம்



*தக்ஷன் ருத்திரர் முதலான பேர்களாலே அழைக்கப்படுகின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் அந்தத் தக்ஷனலே யக்கியத்தை நிறைவேற்றிவைத்தாரென்று சொல்லப்படுகின்றது.*

மைத்திரேய மகரிஷியினுடைய வாக்கியம்

வாரீர் மகாபாகுவே! இந்தப்பிரகாரம் பிரம்மதேவராலே பிரார்த்திக்கப்பட்ட ருத்திரரானவர் சிரித்துப் பிரம்மாவைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிருர். வாரீர் பரேசனே! பரமாத்மாவினுடைய மாயையினலே மோகிக்கப்படுகின்ற அக்கியானிகளுடைய அபராதத்திற்குத் தக்கபடி என்னலே தண்டனையானது செய்யப்பட்டது. அந்தத் தக்ஷப்பிரஜாபதி ஆட்டினுடைய முகத்தையுடையும்படியாயும், பகதேவன் மித்திரதேவனுடைய நேத்திரத்தையுடையவனகவும், பூஷாவானவன் மாவை யசமானனுடைய பற்களாலே பக்ஷிக்கத் தக்கவனகவும், எனக்கு யக்கியசேஷத்தைக் கொடுத்தவர்களாயும், முறிக்கப்பட்ட அவயவங்களையுடைய தேவர்களும் மற்ற ரித்துவிக்குகளும் அசுவனிதேவர்களுடைய கைகளாலேயும், பூஷாவினுடைய அஸ்தங்களாலேயும், பாகுகளை யுடையவர்களாகவும், பிருகுமகரிஷியானவர் ஆட்டினுடைய மீசையை மீசையாக உடையவராகத்தக்கவரென்று அனுக்கிரகித்தனர். வாரீர் விதுரரே! அப்போது சமஸ்தபிராணிகளும் சிவனலேசொல்லப்பட்டிருக்கிற வார்த்தையைக் கேட்டுச் சந்துஷ்டமான மனதினலே சாது சாதுவென்று சொன்னர்கள். பிற்பாடு ரிஷிகளுடனே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்த தேவர்களும் நீரே வந்து சமஸ்தமும் பண்ணப்பட தக்கவரென்று சிவனைப் பிரார்த்தித்து, அந்தச் சிவனுடனேயும் பிரம்மாவினுட

னையுங் கூடினவர்களாய் அந்த யக்கியசாலையை வந்தடைந்து ருத்திருடைய சொற்படிக்கு அந்த யக்கிய பசுவினுடைய சிரசைத் தக்ஷனுடைய சரீரத்துடனே கூடக் கூட்டி ருத்திரஞல் கடாக்ஷிக்கப்படுகையில் தக்ஷனைவன் அந்த க்ஷணத்திலே நித்திரை பண்ணினவன்போல் எழுந்திருந்து எதிரேயிருக்கின்ற சிவனுடைய தரிசனத்திஞலே சரத்காலத்து மடுவானதுபோல் நிர்மலனுகியிருக்கையில் மரித்துப்போன பெண்ணை நினைத்துக்கொண்டு துக்கத்திஞல் கண்களில் நீர் சொரிய ருத்திரனை ஸ்தோத்திரம் பண்ணத் தோன்ருமல் வெகு பிரயாசத்திஞல் மனதை நிறுத்தி ஈசனை ஸ்தோத்திரம் பண்ணிஞன்.

### தக்ஷன் வாக்கியம்

வாரீர் ஈசனே! நம்மாலே நீர் பழிக்கப்பட்டபோதே உம்மாலே சிக்ஷை பண்ணப்பட்டேன். அதுவே எனக்கு அனுக்கிரகமாயிற்று. நீர் முன்னே பிரமமாயிருந்துகொண்டு வித்தை, தபசு, விரதம் இவைகளாலே ஆசக்தர்களான பிராமணர்களை முதலில் முகத்திஞலே ஜீவதத்துவத்தை ரக்ஷிக்கிறதற்காகவும், சம்பிரதாய பிரவர்த்தனத்திஞலே ஆக்கியாபிக்கிறதற்காகவும், சிருஷ்டித்தீர். பசுபாலனுனவன் பசுக்களை ரக்ஷிப்பதுபோல் பிராமணரை ஆபத்துக்களில் ரக்ஷிக்கிறீர். தத்வக்கியான சூனியனுன அடியேன் துர்வார்த்தைகளாகிற பாணங்களினுலே தேவரீரை வெறுக்கப் பேசினேன். அதைமறந்து அதோகதியிலே விழுகிற வென்னைக் கிருபாரசத்திஞலே நனைந்திருக்கிற திருஷ்டியினுலே ரக்ஷித்தீர். அப்படிப்பட்ட மகிமையுள்ள உமக்கு அடியேனுல் செய்யத் தக்கதான பிரதியுபகாரம் ஒன்றுமில்லையென்று ருத்திரரை க்ஷமைகொண்டு அந்தத் தக்ஷனைவன் பிரம்மாவிஞலே அனுக்ஞை பண்ணப்பட்டு உபாத்தியாயர் ருத்துவிக்குகளுடனேகூட யக்கியத்தை விஸ்தரிப்பித்து விஷ்ணுதேவதையை அழைப்பிக்கத் தக்கதாகியும், மூன்று கபாலங்களிலே சேர்க்கப்பட்ட புரோடாசத்தை வீரர்களான பிரதம கணங்களுடைய சம்சர்க்க தோஷத்தினுடைய சுத்தியின் பொருட்டும், யக்கிய சந்தானத்தின் பொருட்டும், அவிசை யுடையவரான அத்துவர்யுடனே தக்ஷன் விசுத்த புத்தியிஞலே ஸ்ரீமந் நாராயணனைக் குறித்துத் தியானம் பண்ணினபோதே அந்த ஸ்ரீ ஹரியானவர் பத்துத் திக்குகளையும் பிரகாசிப்பிக்கிற பிரபையினுலே சதஸிலிருக்கிற பேர்களுடைய தேஜஸை அபகரிக்கத்தக்கதாகியும், பிரகத்ர தந்திரமென்னப்பட்ட ஸ்தோத்திரங்களை இறகுகளாகவுடைய கருடனுலே சமீ

பத்தை அடைவிக்கப்பட்டவராகியும், காளமேக சியாமள ராகியும், பிரகாசிக்கின்ற சூரியனைப்போல பிரகாசிக்கின்ற கிரீடத்துடனே கூடினவராகியும், நீலங்களான கேசங்க ளாகிற வண்டுகளினாலே அலங்கரிக்கப்பட்டுக் குண்டலத் துடனே கூடின திருமுக மண்டலத்தை யுடையவராகியும், சங்குசக்கிர கதாகட்க சார்ங்கங்களினால் ரக்ஷிக்கிறதிலே சிரத்தை கூடினவராகியும், வக்ஷசிலே வாசம் பண்ணப்பட்ட லக்ஷ்மியை யுடையவராகியும், கம்பீரமான புன்சிரிப்புடனே கூடின கடாக்ஷத்தினுடைய லேசத்தினாலே லோகத்தை யெல்லாம் சந்தோஷிப்பிக்கிறவராயும், வனமாலியாயும், பக்கத்திலே சுழலாநின்ற ஆலவட்டம் சாமரசிரேஷ்டம் இவைகளை யுடையவராகியும், சந்திரமண்டலம் போன்ற வெள்ளைக்குடையினாலே மேலே சோபானத்தை யடைந்தவ ராகியும், கோடிசூரியப் பிரகாசம்போலப் பிரத்தியக்ஷமான அந்த லக்ஷமீ வல்லவனைப் பார்த்துப் பிரம்மா இந்திரன் ருத்திரன் இவர்களை முக்கியராகவுடையவரான சமஸ்தமான தேவகணங்களும், சீக்கிரமாக வெழுந்திருந்து சாஷ்டாங்கப் பிரணாமம் பண்ணி ஸ்தோத்திரம் செய்தார்கள். யக்கியேசுர னாகியும், விசுவ சிருஷ்டிகளுக்கெல்லாம் பரம குருவாகியும், சனந்தனாதிகளாலே சூழப்பட்டவராகியு மிருக்கிற சுவாமி யைத் தக்ஷப்பிரஜாபதியானவன் சந்தோஷத்தினாலே கிரு தாஞ்சலியாய்ச் சரணமடைந்து ஸ்தோத்திரஞ் செய்கிறான். வாரீர் பகவானே! ஒருவராலேயும் பயமில்லாதவராகியும், மாயையைத் திரஸ்கரித்துப்போட்டு இருக்கிறவராகியு மிருக் கிற தேவரீருக்கு நமஸ்காரமென்று சொன்னபின்பு ரித்து விக்குகள் ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள்.

ரித்துவிக்குகளுடைய ஸ்துதி

வாரீர் அசஞ்சலரே! நாங்கள் நந்தீஸ்வரனுடைய சாபத் தினாலே கர்ம சக்த புத்திகளாய் உம்முடைய சுவரூபத்தை யறியமாட்டாமல் உம்முடைய பிரசாதத்துக்குக் காரணமாகி யும், திரிகுணாத்மகமாயுமிருக்கிற யக்கியமுகத்தாலே உம்மை யறிந்துகொண்டோமென்று சொன்னபின்பு சதசியாள் ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள்.

சதசியாள் ஸ்துதி

வாரீர் சம்புவே! ரக்ஷக சூனியமாகியும், அதிக துக்கத் தையுடையதாகியும், அனந்தனாகிற மகா சர்ப்பத்தினாலே கவியப்பட்டதாகியும், சுகதுக்கங்கள் சீதோஷ்ணங்களாகிற

பள்ளத்தையுடையதாகியும், காலனாகிற மிருகங்களுடைய பயத்தை யுடையதாகியும், சோகமாகிற காட்டுத்தீயை யுடையதாகியும், விஷயங்களாகிற கானல் ஜலத்தை யுடையதாகியு மிருக்கிற சம்சாரமார்க்கத்திலே யிருக்கப்பட்ட அகங்கார மமகாராஸ்பதங்களான மகாசுவையுடனே கூடின அக்கியான சந்துக்களுடைய கூட்டமான நாங்கள் காமத்தினாலே விடப்பட்டவர்களாய் எப்போது உம்முடைய பாதமூலத்தை யடையப் போகிறோமென்று பிரார்த்தித்தார்கள்.

### ருத்திரன் ஸ்துதி

வாரீர் வரத்தைக் கொடுக்கப்பட்ட சுவாமியே! அவாப்த சமஸ்த காமமாகியும், நிஷ்காமர்களான ரிஷிகளினாலே மிகவும் பூஜிக்கத்தக்கதாகியு மிருக்கிற அபீஷ்டபிரதமான பாதாரவிந்தத்திலே பண்ணப்பட்ட புத்தியை யுடையவனான என்னை வித்தியாஈனமான இந்த லோகம் ஆசார பிரஷ்டனென்று சொல்லுவதை நான் உம்முடைய அனுகிரகத்தினாலேயும், பெரியவர்களுடைய அனுக்கிரகத்தினாலேயும், அதை வித்தியாசமாய் எண்ணுகிறதில்லை யென்று சொன்னார்.

### பிருகு மகரிஷி ஸ்துதி

வாரீர் ஸ்ரீ ஹரியே! அதிபிரயாசத்தினாலே பிரவேசிக்கத்தக்கதானதேவரீருடைய மாயையினாலே அபகரிக்கப்பட்ட ஆத்மசத்தை யுடையவர்களாயும், பிரம்மாதிகளான சரீரிகளெல்லாம் தமசு என்னப்பட்ட மூலப்பிரகிருதியிலே சுபாவம் என்னப்பட்ட நித்திரையை அடைந்தவர்களாய்ச் சீவாத்மாவினிடத்திலே வியாபிக்கப்பட்ட உம்முடைய சுவரூபத்தை இப்போதும் அறியவில்லை ஆஸிரதாளுக்கெல்லாம் ஆத்மாவாகியும், பந்துவாகியுமிருக்கிற பகவான் பிரசன்னமாகக் கடவரென்று ஸ்தோத்திரஞ்செய்தார்.

### பிரம்மா ஸ்துதி

வாரீர் பக்தவச்சலரே! பதார்த்தங்களுடைய பேதங்களைக் கிரகிக்கிற இந்திரியங்களினாலே பார்க்கிறது உம்முடைய நிஜஸ்வரூபமன்று. கியானத்துக்கும் கியான விஷயமான அர்த்தத்துக்கும் காரணமான சத்வாதி குணங்களை ஆசிரயமாகவுடைய பிரகிருதி பிராகிருதங்களைக் காட்டிலும் விலக்ஷணமாக விருக்கிறவர் நீரேயன்றி வேறில்லை யென்று ஸ்தோத்திரஞ் செய்தார்.

இந்திரன் ஸ்துதி

வாரீர் அச்சுதனே! இந்த விசுவங்களுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாகியும், மனதுக்கும் கண்களுக்கும் ஆனந்தவர்த்தமாகியு மிருக்கிற உம்முடைய ரூபம் சுரத்வேஷிகளைப் போக்கடிக்க உயரவெடுக்கப்பட்ட ஆயுதங்களையுடையவையாகியும், அஷ்டவிதங்களாகியு மிருக்கிற தண்டங்கள் போலொத்த புஜங்களோடே கூடினதாகக்கொண்டு உற்பவித்திருக்கிறதென்று ஸ்தோத்திரஞ் செய்தான்.

ரித்துவிக்குகளின் பத்தினிகள் ஸ்துதி

வாரீர் யக்கியமூர்த்தியே! உம்மை ஆராதிக்கிறதின் பொருட்டுப் பிரம்மாவினாலே உண்டாக்கப்பட்ட இந்த யக்கியம் தக்ஷப்பிரஜாபதியினுடைய அபராதத்தினால் பசுபதியினாலே த்வம்சிக்கப்பட்டது. பசுஹிம்சாலக்ஷணமான உற்சவத்தையுடைய இந்த யக்கியத்தைச் செந்தாமரைக் கண்களினாலே பாவனம் பண்ணுமென்று துதித்தார்கள்.

ரிஷிகள் ஸ்துதி

வாரீர் ஹேயப்பிறத்தியகனான பகவானே! காமத்தை அனுஷ்டிக்கிற கர்மத்தினுடைய பலத்தோடே நீர் சம்பந்திக்கிறதில்லை. சிலர் ஐசுவரியத்தின்பொருட்டு ஸ்ரீ மகாலக்ஷ்மியை உபாசிக்கிறார்கள். உம்மை உபாசனை பண்ணுகிற அந்த லட்சுமியை நீர் சற்றும் ஆதரிக்கவில்லை. ஆனபடியினாலே உம்முடைய திவ்யசேஷ்டிதம் அகடிதகடனாரூபமாக இருக்கிறதென்று துதி செய்தார்கள்.

சித்தர்கள் ஸ்துதி

வாரீர் சர்வக்ஞரே! சம்சாரக்கிலேசமாகிற தாவாக்கினியினாலே தகிக்கப்பட்டு, விஷயமாகிற தாகத்திலே பீடிக்கப்பட்ட எங்களுடைய மனதாகிய கஜமானது, உம்முடைய கதையாகிற அமிர்தமயமான நதியிலே பிரவேசித்ததாகிய பிரம்மானந்தக் கியானனான முத்தனைப்போல அழிந்து போயிற்றென்று துதித்தார்கள்.

தக்ஷபத்தினி ஸ்துதி

வாரீர் ஈசனே! உமக்குப் பிரணாமம்பண்ணுகிற புருஷன் தலையில்லாமல் உடல்மாத்திரமுள்ள புருஷன் சோபியாதது போல் எம்முடைய யாகமானது உம்மையன்றிப் பிரகாசிக்கு

வில்லை; ஆனபடியினாலே காந்தையான ஸ்திரீயுடனே கூட எம்மை ரக்ஷியுமென்று பிரார்த்தித்தாள்.

லோகபாலகர்கள் ஸ்துதி

வாரீர் நிரதிசயமான ஐசுவரியத்துடனே கூடினவரே! நீர் தேகாபிமானிகளாலே காணப்படுகிறவரல்லீர், ஞானதிருஷ்டியினாலேயும், காணத் தக்கவரல்லீர், பஞ்சபூதங்களைக் காட்டிலும் விலக்ஷணமான நீர் அப்பஞ்ச பூதங்களுடனேயும் கூடினவராகிப் பிரகாசிப்பதும் உம்முடைய மாயை தானென்று துதித்தார்கள்.

யோகீஸ்வரர்கள் ஸ்துதி

வாரீர் பிரபுவே! விஸ்வரூபியான உம்மிடத்திலே யிருக்கின்ற ஜீவாத்துமாக்களைச் சுதந்தரங்களாகப் பார்க்கத் தக்கவனைக் காட்டிலும் உமக்கு இஷ்டனானவன் ஒருவனுமில்லை. இதரதேவதாபஜனம் பண்ணாமல் பக்தியினாலே உம்மைப் பஜனை பண்ணினவர்களுக்கு அனுக்கிரகத்தைப் பண்ணும். ஜகத்தினுடைய உற்பத்தி ஸ்திதி-சங்கார நிமித்தமாக உம்முடைய சங்கற்பத்தினாலே பேதிக்கப்பட்ட சத்வாதி குணங்களையுடைய ஆத்மமாயையினாலே பண்ணப்பட்ட பிரம்யாதி பேதபுத்தியையுடைய உமக்குப் பிரணாமமென்று துதி செய்தார்கள்.

சப்தப்பிரம்மமான வேதபுருஷன் ஸ்துதி

வாரீர் ஷட்குண பரிபூரணரே! அங்கீகரிக்கப்பட்ட சத்வகுணத்தை யுடையவராகியும், அதினாலேதானே தர்மாதிபுருஷார்த்தங்களைக் கொடுக்கிறவராகியு மிருக்கிற உம்முடைய நிலையை நானும் இந்திராதிதேவதைகளும் அறிய மாட்டோம். அப்படிப்பட்ட உமக்குப் பிரணாமம் பண்ணுகிறேனென்று துதிசெய்தான்.

அக்கினிபுருஷன் ஸ்துதி

வாரீர் குணநிதியே! பகவானான உம்முடைய தேஜசினாலே மிகவும் விருத்தியடைகின்ற தேஜசையுடைய நான் பிரசித்தமான யக்கியாதி கர்மங்களிலே தேவதைகள் பொருட்டு எனதுவாயினால் நினைக்கப்பட்ட அவிசைவகிக்கிற அந்த யக்கிய ரக்ஷகராகியும், பஞ்சவித யக்கிய மூர்த்தியாகியும், பஞ்சவிதங்களான யசுரர் மந்திரங்களினாலே

ஆராதிக்கப் பட்டவராகியு மிருக்கிற யக்கியபகவானுன உம்மைச் சேவிக்கிறேன் என்று துதிசெய்தான்.

### தேவதைகள் ஸ்துதி

வாரீர் பரமாத்மனே! முன்னே கல்பாந்தத்திலே ஜகத்தைக் கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு ஜலத்திலே நாகபரியங்கத்திலே சயனித்துக்கொண்டு, சித்தர்களாலே தியானம் பண்ணப்பட்ட கியானமார்க்கத்தை யுடைய ஆதி புருஷனுன நீர், இப்போது கண்முன்னே சஞ்சரிக்கிறீர்; தாசர்களான எங்களையும் ரக்ஷிக்கவேண்டுமென்று ஸ்துதி செய்தார்கள்.

### கந்தர்வ அப்சரசுக்கள் ஸ்துதி

வாரீர் தேவனே! மரீசி முதலான இந்த நவப்பிரஜாபதிகளும், பிரமேந்திராதிகளும், ருத்திரனை முன்னிட்டுக் கொண்டிருக்கிற முப்பத்துமுக்கோடி தேவதைகளும் உம்முடைய அம்சா அம்சங்களாக விருக்கிருர்கள். இந்த ஜகத்தை லீலாஸ்தானமாகவுடைய உமக்குப் பிரணுமத்தை நித்தியமாகப் பண்ணுகிருேமென்று பிரார்த்தித்தார்கள்.

### வித்தியாதரர்கள் ஸ்துதி

வாரீர் வாசுதேவனே! புருஷார்த்த சாதனமான சரீரத்தை யடைந்து புத்தியில்லாதவன் உம்முடைய மாயையினுலே நான் என்னுடைய என்கிற அபிமானத்தைப் பண்ணித் தனக்கு அனுகூலியாத பாரியா புத்திராதிகளாலே நிராகரிக்கப்பட்டிருந்தாலும் நிசமாகாத சப்தாதி விஷயங்களிலே ஆசையையுடையவனுகி யிருக்கிருன். உம்முடைய கதாமிர்தத்தைப் பானம் பண்ணுகிறவன் அக்கியானத்தைத் தூரத்திலே விட்டவனு யிருக்கிருனென்று துதிசெய்தார்கள்

### பிராமணர்கள் ஸ்துதி

வாரீர் தேவமூர்த்தியே! யாகம், அவிசு, அக்கினி, ஹோத்திரம், மந்திரம், சமித்துகள், தற்பங்கள், பாத்திரங்கள், சதசியாள், ரித்துவிக்குகள், தம்பதிகள், தேவதைகள், சோமலதை ஆச்சியம், பசு, இவை முதலிய யாவும் நீரே. முன்னே நீர் பாதாளத்தில் நின்றும் பூமியை வாராகரூபியாய்க் கஜசிரேஷ்டமானது தாமரைக்கொடியை யெடுப்பது போல் கோரப்பல்லினுலே சப்தித்துக் கொண்டபடியே லீலையினுலே யெடுத்தீர். அப்படிப்பட்ட உம்முடைய சுந்தரி

சனத்தைக் கோருகின்ற எங்களுக்குப் பிரசன்னமாகக் கடவீ ரென்று பிரார்த்தித்தார்கள்.

மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! இந்தப்பிரகாரம் சமஸ்தமான பேரா லேயும், ஸ்தோத்திரஞ்செய்யப்பட்டுக் கொண்டிருக்கையில் ருத்திரனாலே நாசம்பண்ணப்பட்ட யக்கியத்தைப் பிரம்ம குமாரனான தக்ஷன் நடப்பித்தான். சர்வாத்மாவாய் சர்வபாகங் களையும் புசிக்கின்ற பகவான் தம்முடைய பாகமான திரி கபால புரோடாசத்திலே பிரியப்பட்டவர்போல் தக்ஷனை யழைத்து ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் தக்ஷபிரஜா பதியே? ஜகத்துக்குப் பரமகாரணனாகியும், ஆத்மேஸ்வர னாகியும், சர்வசாக்ஷியாகியும், சுயம்பிரகாசனாகியும், நிருபாதி யாகியும், ஜகத்தைச் சிருஷ்டிக்கிறவனாகியும், ரக்ஷிக்கிறவனாகி யும், சங்கரிக்கிறவனாகியு மிருந்து அந்தந்தக் காரியங் களுக்கு யோக்கியமான பேரைத்தரிக்கிறேன். அப்படிப்பட்ட பரப்பிர்மமானது என்னைச் சிரசு அஸ்த முதலான அங்கங் களையுடைய புருஷனைச் சரீரத்திற்கு வேறுபாடானவ னென்றுசொல்லக் கூடாததுபோல் என்னிடத்திலே பக் தியை யுடையவன் பிராணிகளிடங்களிலே யிருக்கிற என்னை வேறென்கிற புத்தியைப் பண்ணாமலிருக்கவேண்டும். ரஜோ குணரூபியான சிருஷ்டி கர்த்தாவாகிய பிர்மாவும், சத்துவ குணரூபியான ரக்ஷணகர்த்தாவாகிய விஷ்ணுவும், தமோ குணரூபியான சம்ஹார கர்த்தாவாகிய சிவனும், இம் மூன்று பிரகாரமாகவிருக்கிற என்னைப் பேதமாக எண்ணாதவன் சுகத்தையுடைவனென்று பகவானாலே ஆக்கியாபிக்கப்பட்டுப் பிரஜாபதிகளுக்கெல்லாம் பதியான தக்ஷன் ஹரியைத் திரி கபால புரோடாசமென்கிற கிருதுவினாலே பூஜித்து, ருத்தி ரன் முதலான தேவர்களையும் பூஜித்து, அவபிருதஸ்நான மென்கிற யாகத்தினுடைய முடிவிலே சோம்பர்களான தேவதைகளையும், இதரதேவதைகளையும், பூஜித்துப், பிற்பாடு ரித்துவிக்குகளுடனேகூடக் கர்மத்தை முடித்து அவபிருத ஸ்நானத்தைப் பண்ணித் தன்னுடையதான பிரபாவத்தி னாலே கர்மசித்தியடைந்த தக்ஷப்பிரஜாபதிக்குத் தர்மத்தி லேயே புத்தியைக் கொடுத்து அந்தத் தேவதைகளும் சுவர்க் கத்தை யடைந்தார்கள். இந்தப் பிரகாரம் தக்ஷகுமாரியான சதிசரீரத்தை விட்டு ஹிமவானுடைய பாரியையான மேனை என்கிற ஸ்திரீயினிடத்திலே திரும்பவும் பிறந்தாளென்று கேட்டிருந்தோம். அந்தப் பார்வதியானவள் பிரளயகாலத் தில் நித்திரையை யடைந்த யோகமாயையானது ஸ்ரீ மகா



படம் நெ. 5. பக்கம் நெ. 327.

திருவன் தபஞ்செய்து பகவானைப்
பிரத்தியட்சமாகக் கண்டது.

விஷ்ணுவை அடைந்தாற்போல் அந்த ருத்திரனையே புருஷனாக அடைந்தாள். இந்தப்பிரகாரம் தக்ஷனுடைய யாகத்தை நாசம்பண்ணின ருத்திரனது சரித்திரம் பிரகஸ்பதியினுடைய சிஷ்யரான உத்தவரிடத்தினின்றும் நம்மாலே கேட்கப் பட்டது. இந்தப் பரிசுத்தகரமாகியும், கீர்த்திகரமாகியும், ஆயுர் விருத்திகரமாகியும், பாபராசிகளை நாசப்பண்ணுகிறஈசனுடைய சரித்திரத்தை நித்தியமாகக் கேட்டு அந்தப் பிரகாரம் கீர்த்திக்கிறவன் பக்திக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமான பக்தி யுடையவனுய்ச் சகல பாபங்களையும் போக்கிச் சுகமாயிருப்பன்.



## எட்டாவது அத்தியாயம்



இதுவரைக்கும் மனுவினுடைய கன்னியா வம்சத்திலே பிராப்தமான தக்ஷ யக்கியத்தினுடைய கதை சொல்லப்பட்டது. இனிமேல் மனுவினுடைய புத்திரவமிசத்திலே பிராப்தமான துருவனுடைய சரித்திரம் ஐந்து அத்தியாயங்களினாலே சொல்லப்படுகின்றது. குருவினுடைய சந்நிதானத்திலே சபத்தினி மாதாவினுடைய ரோஷ வசனத்தினாலே பட்டணத்தினின்றும் வெளிப்புறப்பட்ட துருவன் தன்னுடைய தவசினாலேஸ்ரீமந் நாராயணனைச் சந்தோஷிப்பித்ததைச் சொல்லுகின்றது.

### மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! சனக ்சனந்தனாதி ரிஷிகளும்-நாரதரும் - ருபுவும் - அருசனும் - அருணியும் - எதியும்-பிரம்ம புத்திரர்களான இவர்களெல்லாம் ஊர்த்தரேதஸ்சுகளாய் நயிஷ்டிக பிரம்மசரியத்திலே யிருந்துகொண்டு கிருகஸ்தாஸ்ரமத்திலே வாசம் பண்ணவில்லை. அதர்மத்தினுடைய பாரியையான மிருஷையானவள் டம்பனென்று ஒரு பிள்ளையையும், மாயையென்று ஒரு பெண்ணையும், பெற்றாள். அந்த இரண்டு பெயரையும் அபுத்திரனான நிருதியானவன் வாங்கிக் கொண்டான். அந்த டம்ப மாயைகளுக்கு லோபமும் நிகிர்த்தியும் உண்டாயினர்; அவர்களிடங்களினின்றும் குரோதமும் ஹிம்சையும் உண்டாயினர்; அவர்களினின்றும் துர்க்கதியும் கலியும் உண்டாயினர்; அந்தத் துர்க்கதியினிடத்திலே கலியானவன் பயத்தையும் மிருத்துவையும் உண்டாக்கினான். அவர்களினின்றும் யாதனையென்றும் நிரயமென்றும் ஒரு ஸ்திரீபுருஷ மிதுன முண்

டாயிற்று. இவர்களெல்லாம் அதர்ம விருக்ஷத்தினுடைய சம்சார ஹேதுக்களான சாகைமார். இந்தச் சாகைகளைச் சிரேயசைக் கோருகின்ற புருஷனானவன் ஆசரியாமலிருக்கக் கடவன் என்று பிரதிசர்க்கம் என்னப்பட்ட பிரளயஞ் சொல்லப்பட்டது. புண்ணியகரமான இந்தப் பிரதி சர்க்கத்தைக் கேட்டுப் புருஷன் தன்னுடைய சம்சார துக்கத்தை விட்டு விடுகிறான். வாரீர் குருவம்ச சிரேஷ்டரே! இனிமேல் புண்ணிய கீர்த்தியாகியும், ஹரியினுடைய அம்சமான பிரமாவினுடைய தேகாந்தரத்தினின்றும் பிறப்பையுடையவனான சுவாயம்பு மனுவினுடைய புத்திர வம்சத்தைச் சொல்லுகிறேன். சதரூபை யென்னப்பட்ட ஸ்திரீக்குப் பதியான மனுவினுடைய பிள்ளைகளான பிரியவிரதன் உத்தானபாதன் இவர்களிரண்டு பெயரும் வாசுதேவ மூர்த்தியினுடைய அம்சமாகையினாலே ஜகத்தை ரக்ஷித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள்ளே உத்தான பாதனுக்குச் சுநீதியென்றும், சுருசியென்றும், இரண்டு ஸ்திரீகள் இருந்தார்கள். அவர்களில் சுருசியென்கிறவள் பதிக்கு அத்தியந்த இஷ்டையாயும், சுநீதி யென்பவள் பதிக்கு இஷ்டமில்லாதவளாயுமிருந்தாள். அந்தச் சுநீதியினுடைய பிள்ளையான துருவன் தனது மாற்றாந் தாயாகிய சுருசியின் பிள்ளையான உத்தமனைச் சீராட்டிக் கொண்டிருக்கிற தகப்பனாகிய உத்தானபாதன் மடியிலேற வேண்டுமென்று அருகிற்சென்ற துருவனைப் பார்த்து ராஜா சந்தோஷப்படவில்லை. அந்தச் சமயத்தில் சுருசியானவள் சக்களத்திப் பிள்ளையான துருவனைப் பார்த்து ராஜா கேட்டுக்கொண்டிருக்கப் பொறாமையுடனே கர்வத்தினாலே ஒரு வார்த்தை சொல்லுகிறாள்.

வாராய் குழந்தாய்! நீ ராஜகுமாரனாயிருந்தாலும் என் கர்ப்பத்திலே பிறவாததால் உனக்கு ராஜாசனங் கிடைக்கமாட்டாது. ராஜாவுடைய சிங்காசனத்தை இச்சிக்கிறவனே யானால், தபசினாலே பரமபுருஷனை ஆராதித்து, அவருடைய அனுக்கிரகத்தினாலே என்னுடைய கர்ப்பத்திலே பிறப்பைச் சம்பாதிக்கக் கடவாயென்றனள். அந்தச் சபத்தினி மாதாவுடைய துர்வார்த்தைகளினாலே அடிக்கப்பட்டவனாய்த், தண்டத்தினாலே அடிக்கப்பட்ட சர்ப்பம்போல், ரோஷத்தினாலே பெருமூச்சு விட்டுக்கொண்டு அழுகையுடன் தாயாருடைய சந்நிதானத்திலே போய் நிற்கத் துடிக்கின்ற உதட்டையுடைய அந்தக் குழந்தையைச் சுநீதியானவள் மடியிலே யெடுத்துவைத்துக்கொண்டு, சபத்தினியான சுருசி சொன்ன வார்த்தையை அந்தப்புர ஜனமுகமாய்க் கேட்டுச், சோக

மாகிற காட்டுத் தீயினாலே வாடின கொடிபோலே, தைரியத்தைவிட்டுத், தாமரைப் புஷ்பம் போலொத்த நேத்திரங்களினாலே கண்ணீரை விட்டுத் தீர்க்கமான பெருமூச்சுடன் சோகத்தினுடைய கரையைக் காணமாட்டாமல், தன்னுடைய குழந்தையைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகிறாள்.

வாராய் குழந்தாய்! பரர்களிடங்களிலே அபராதத்தையெண்ணாதே. பரனைத் துக்கிக்கச்செய்கிறவன் தானே அந்தத் துக்கத்தை யனுபவிக்கிறான். பாக்கிய ஈனையான என் உதரத்திலே தரித்து என்னுடைய ஸ்தன்னியத்தினாலே விருத்தியும் அடைந்தாயென்று சுருசி சொன்ன வார்த்தை யதார்த்தமே. ராஜாவானவன், என்னைப் பாரியை யென்றும் தான் பர்த்தாவென்றும் அங்கீகாரம் பண்ணுகைக்குச் சங்கோசப்படுகிறான். ஆனபடியினாலே நீ துவேஷத்தை விட்டவனாய்ச் சுருசியின் குமாரனை உத்தமனைப்போல் ராஜாசனத்தை இச்சிக்கிறவனானால், அதோக்ஷஜனை சுவாமியினுடைய பாதாரவிந்தத்தை ஆராதிக்கக் கடவாயென்று அவள் சொன்னவண்ணம் செய்யத்தக்கது யதார்த்தமே. பிரம்மாவானவர் சத்துவாதி குணங்களை யுடையவரான பகவானுடைய பாதபத்மத்தைப் பூஜித்து யோகிகளாலே சேவிக்கத் தக்கதான பரமேஷ்டி பதத்தை யடைந்தார். உனக்குப் பாட்டனாராகியும் பூஜ்ஜியராகியு மிருக்கிற மனுச்சக்கரவர்த்தியானவர், அந்தப் பகவானைச் சர்வாந்திரியாமி யென்கிற புத்தியினால் அதிகமான தக்ஷிணையையுடைய யக்கியங்களினாலே பூஜித்து, அன்னியர்களாலே அடையக் கூடாமலிருக்கிற அகண்ட மண்டலாதி பத்தியத்தையும் அந்தத்திலே மோக்ஷசுகத்தையும் அடைந்தார். வாராய் குழந்தாய்! பக்தர்களிடங்களிலே வாற்சல்லியத்தை யுடையவராகியும், மோக்ஷத்தை இச்சித்த பேர்களாலே தேடத்தக்கதான பாதாரவிந்தத்தை யுடையவராகியும், பிரம்மாதிகளாலே தேடப்பட்டும், அஸ்தத்திலே பத்மத்தைத் தரித்துக் கொண்டுமிருக்கிற ஸ்ரீமகாலக்ஷ்மியினாலே தேடப்படுகிற அவரைவிட வேறொருவர் உன் துக்கத்தைப் போக்கடிக்கிறவரைக் காணேனென்று சொல்லுகிற தாயாருடைய வார்த்தையைக் கேட்டுத், தைரியத்தினாலே மனதை நிக்கிரகித்துத் துருவனானவன் பிதாவினுடைய பட்டணத்தினின்றும் வெளிப் புறப்பட்டான். அந்த விருத்தாந்தத்தை நாரதர் கேட்டு அவனிடத்துக்கு வந்து அவனுடைய செயலை அறிந்து பாவத்தைப் போக்கடிக்கின்ற கையினாலே சிரசிலே ஸ்பரிசித்து ஆச்சரியத்துடனே தமக்குள் ஒரு வார்த்தை சொல்லுகிறார். இவன் சிறுபிள்ளையா

யிருந்தாலும் தன் மாற்ருன் தாயாருடைய மானக்குறைவான துஷ்டவார்த்தைகளைக் கேட்டுச் சகியாத க்ஷத்திரிய குணமுடைய ஆச்சரியகரமாயிருக்கிற பிரபாவத்தை என்னசொல்லப்போகிறேனென்று தமக்குள்ளே ஆச்சரியத்தை யடைந்து அவனைநோக்கி, வாராய் குழந்தாய்! சர்வசம்பத்துடனே கூடின தகப்பனருடைய கிருகத்தைவிட்டு நீ ஒருவனாய் எங்கே போகிறாய்? உமது ஸ்வஜனத்தினின்றும் உண்டான அவமானத்தினாலே தபித்துக்கொண் டிருக்கிறவனாகத் தோன்றுகிறதென்ற நாரதருடைய வார்த்தையைக்கேட்டுத் துருவன் சொல்லுகிறான்.

ஓ சுவாமி! பகவத்தியானத்தைப் பார்க்கிலும் இந்த ஐசுவரியம் எவ்வளவென்று சொல்லுகிற அவனுடைய கருத்தை நாரதர் அறிந்து, மாற்றுந் தாயாரான சுருசியினுடைய மர்மபேதியான வார்த்தைகளால் நொந்திருக்கிற மனதையுடைய இவன் சமாதானத்திற் குட்பட மாட்டானென்று அறிந்துகொண்டு, நாரதர் அவனை நோக்கி ஒரு வார்த்தை சொல்லுகிறார். வாராய் குழந்தாய்! விளையாட்டிலே ஆசக்தி யுடையவனாகியும், சிறுபிள்ளையாகியு மிருக்கிற உனக்கு அவமானமும் சன்மானமும் இப்போது யோக்கியமாகப் பார்க்கவேண்டியதில்லை. மானம் அவமான மென்கிற விவேக மிருந்தாலும் புருஷனுக்கு மோகத்தை விட்டால் விசனத்துக்கு வேறே யேதுக்களில்லை. வித்வானானவன் ஈஸ்வரனுடைய அனுகூலத்தையன்றி நம்முடைய வியாபாரங்கள் பல யேதுக்கள் ஆகமாட்டாவென்றறிந்து பகவத் சங்கற்பத்தினால் உண்டானபட்டுக்குஞ் சந்தோஷத்தை யடைவன். நீ தாயாராலே உபதேசிக்கப்பட்ட யோகத்தினாலே பகவானுடைய பிரசாதத்தை யடையவேண்டுமென்று இச்சிக்கின்றாய்; அந்தப் பகவானை ஆராதிக்கிறது மகாப் பிரயாசை யென்பது என்னுடைய நிச்சயம். மனனசீலர்களான ரிஷிகள் நானாப் பிரகாரங்களாகக் கர்மயோகங்களினாலேயும், சமாதியினாலேயும், தேடிக் கண்டு பிடிக்கவில்லை. ஆனபடியினாலே இந்த நிஷ்பலமான கோரிக்கை யொழிக்கத்தக்கது. புருஷார்த்தங்களுக்கு யோக்கியமான வயசு வந்தபோது யத்தனம் பண்ணப்போகிறாய். குணசிரேஷ்டனான புருஷனைக்கண்டு சந்தோஷிக்கவும், குணமில்லாத புருஷனைக் கண்டு தயைபண்ணவும், சமானமான புருஷனிடத்திலே சிநேகம் பண்ணவும் வேண்டும். அவர்களிடங்களில் அசூயையும் அவமானத்தையும் விரோதத்தையும் பண்ணக் கூடாதென்று சொன்ன நாரத மகாமுனியின் வார்த்தையைக்

கேட்டுத் துருவன் சொல்லுகிறுன். வாரீர் பகவானே! சுக துக்கங்களிலே சமமான மனதை யுடைத்தான யகாத்மாக்களுக்கு இந்தச் சாந்தியான து சொல்லத்தக்கது. க்ஷாத்திர சுபாவத்தை யடைந்து வினயமில்லாத என்னுடைய மன மானது சுருசியினுடைய துர்வார்த்தைகளாகிற பாணங்களினுல் பிளக்கப்பட்டிருக்கிற படியினுலே இந்தச் சாந்தியானது மனதில் தரிக்கவில்லே. எனது பிதுர் பிதாமகாதிகளினுலேயும், அன்னியர்களாலேயும் அடையப்படாமலிருக்கிற மூன்றுலோகத்தைக் காட்டிலும் உத்கிருஷ்டமா யிருக்கிற ஸ்தானத்தை யடையவேண்டுமென்று இச்சையையுடைய எனக்கு நல்வழியைச் சொல்லுமென்று துருவனுலே சொல்லப்பட்ட வசனத்தைக் கேட்டு நாரதமகா முனியானவர் சந்தோஷப்பட்டுப் பாலனுயிருக்கிற துருவனேப் பார்த்துத் தயையுடன் ஒரு வார்த்தை சொல்லுகிருர்.

வாராய் குழந்தாய்! உன்னுடைய அபீஷ்டத்துக்குத் தாயாராலே சொல்லப்பட்டதே மார்க்கம். ஷாட்குண்ய பரிபூரணரான வாசுதேவனே காரணராகையினுலே அவரிடத்தில் அசஞ்சலமான மனதினுலே பஜனே பண்ணவேண்டும். தர்மார்த்த காம மோக்ஷங்க ளென்கிற புருஷார்த்தங்களுக்கு ஸ்ரீ ஹரியினுடைய பாத பஜனமே முக்கியம். உனக்கு க்ஷேமமுண்டாகப் போகிறது. யமுனேயினுடைய தீரத்திலிருக்கின்ற மதுவனத்திலே அந்த ஸ்ரீ ஹரியானவர் முக்கியமாய் வாசஞ் செய்வர். அந்த வனத்தைக் குறித்துப் போய் யமுனேயின் மங்களகரமான தீர்த்தத்திலே திரிகாலமும் ஸ்நானம் பண்ணி உனக்கு உசிதங்களான தேவ்தா நமஸ்காராதி நித்தியகர்மங்களேச் செய்து தர்ப்பைகளால் பண்ணப்பட்ட ஆசனத்திலே யிருந்துகொண்டு ரேசகபூரக கும்பங்க ளென்கிற மூன்று பிரகாரமான பிராணுயாமத்தினுலே பிராணவாயு இந்திரியங்கள் மனது இவைகளுடைய சஞ்சலத்தை மெல்லத் தள்ளிப்போட்டுத் தைரியத்துடனே ஆதிகுருவான ஸ்ரீமந் நாராயணனேத் தியானம் பண்ணிப் பக்தர்களிடங்களிலே சர்வகாலமும் அனுக்கிரகத்தைப் பண்ணுகிறவராகியும், வரங்களேக் கொடுக்கின்ற பேர்களுக்குள்ளே சிரேஷ்டராகியு மிருக்கிற பகவானே ஏகாக்கிரமான மனதிலே தியானம் செய். அவ்வாறு பண்ணுகிறவன், அந்தப் பகவத்தியானத்தி னின்றும் திரும்புகிறதில்லே. சிரேஷ்டமாகியும் ரகசியமாகியு மிருக்கிற அந்தத் தியான மந்திரத்தை ஏழுநாளேக்கு ஜபிக்கிற புருஷன் தேவதைகளே யெல்லாம் காண்பான். அப்படிப்பட்ட துவாதசாக்ஷரிக்

கொப்பான பூஜையைச் சொல்லுகிறேன் கேள். பரிசுத்தங்க ளான தீர்த்தங்களினலேயும், புஷ்பமாலைகளினலேயும், கந்தமூலபலங்களினலேயும், சிலாக்கியமான அறுகினலே யும், தளிர்களினலேயும், பிரியமான துளசியினலேயும், பூஜ்ஜிய பாத்திராதிகளினலேயும், சுவர்ணம் வெள்ளிமுத லான பகவத்பிரதிமை அல்லது பிருதிவி ஜலாதிகளிலே பூஜித்து விஷயங்களிலே பிரவர்த்தியாம லிருக்கிற மனதை யுடையவனய்த் தியானசீலனய்ச் சாந்தனய் மவுனத்தோடே கூடினவனய் மிதமாகக் கந்தமூல பலன்களைப் புசித்துப் பெரியோர்களால் விதிக்கப்பட்டபடி பூஜைகளை மந்திர இருதயமான துவாதச அக்ஷரியினலே மந்திர மூர்த்தியான பகவான் பொருட்டுப் பண்ணக்கடவாய். அவர் மனேவாக் குக் காயங்களால் பக்தியுடனே கூடிப் பூஜிக்கிறபேர்களுக்குப் பக்தியை விருத்திபண்ணிப் பிராணிகளுக்குத் தர்மார்த்த காமமோக்ஷங்களிலே இஷ்டமானதைக் கொடுக்கிருர். இந்தி ரிய சுகங்களிலே விரக்தனனவன் அதிகமான பக்தியினலே அந்தப் பகவானை, ஆத்மாவினுடைய மோக்ஷத்தின் பொருட் டுப், பஜனை பண்ணவேண்டுமென்று நாரதராலே சொல்லப் பட்ட வார்த்தையை ராஜகுமாரனன துருவன் கேட்டு, நாரத ரைப் பிரதக்ஷணம் பண்ணிச் சேவித்து ஸ்ரீ ஹரியினுடைய சரணங்களினலே அலங்கரிக்கப் பட்டிருக்கிற மனேகர மான மதுவனத்தைக் குறித்துப்போனன். பிற்பாடு நாரதர் உத்தானபாத ராஜாவினுடைய அந்தப்புரத்திலே பிரவே சித்து அந்த ராஜாவினலே பூஜிக்கப்பட்டவராய்ச் சுகமாக ஆசனத்திலேயிருந்துகொண்டு ஒருவார்த்தை சொல்லுகிருர்.

வாராய் ராஜாவே! வாட்டத்துடன் கூடின முகத் தோடே தீர்க்கமாக என்னயோசனை பண்ணுகிருய். உன்னு டைய தர்மார்த்த காமங்களுக்கு இழிவோவென்று பிரஸ்னை பண்ணுகின்ற நாரதமுனியைப் பார்த்து ராஜா சொல்லு கிருர். வாரீர் பிரம்மநிஷ்டரே! என்னுடைய குழந்தை ஐந்து வயதிலே மகாபுத்திமானய்த் திருஷ்டிப்பிரியனயிருக்கிறவன், தன் தாயாருடனே தயையில்லாத ஸ்திரீஜனத்தினலே துரத்தி விடப்பட்டான். இளைப்பையடைந்து பசியுடனே வாடுகின்ற முகாரவிந்தத்தை யுடையவனய், அநாதனய், வனத்திலே படுத்துக்கொண்டிருக்கின்ற எனது குழந்தையை மிருகங்கள் பக்ஷியாமலிருக்குமா! ஸ்திரீ மோகத்திலே துர்ச்சனர்களுக் கெல்லாஞ் சிரேஷ்டனயிருக்கிற நான், பிரீதியினலே மடி யிலேயேற வந்த பிள்ளையைப் பார்த்துச் சந்தோஷியாமற் போன என்னுடைய துஷ்ட பாவத்தைப் பாருமென்று

சொல்லுகிற ராஜாவைப்பார்த்து, நாரதர் சொல்லுகிறார். வாரும் பிள்ளாய் ராஜாவே! ஜகத்தையெல்லாம் வியாபிக்கத் தக்க கீர்த்தி சம்பாதிக்கப்போகிற பிள்ளையினுடைய பிரபாவத்தை யறியாமல், தெய்வத்தினாலே ரக்ஷிக்கப் படத்தக்க அந்தப் பிள்ளையைக் குறித்து நீ விசனப்பட வேண்டாம். லோகபாலர்களாலேயுஞ் செய்யக்கூடாத தபசுமுதலான கர்மத்தைப் பண்ணி, உன்னுடைய கீர்த்தியை விஸ்தரிப்பித்துக்கொண்டு, சீக்கிரமாக வரப்போகிறானென்று தேவரிஷியான நாரதராலே சொல்லப்பட்ட வார்த்தையை விசுவாசத்துடனே கேட்ட ராஜாவானவன், ராச்சிய லக்ஷ்மியிலே அநாதரவு பண்ணிப் பிள்ளையைத்தானே சிந்தித்துக் கொண்டிருந்தான்.

துருவனானவன் அந்த மதுவனத்திலே போய்ப் புண்ணிய தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணிச், சுசியாய் அன்றிராத்திரி உபவாசமாகவிருந்து, சமாதானத்துடனே கூடினவனாய் நாரதருடைய ஆக்கினைப் பிரகாரம் பரம புருஷனை ஆராதித்துச், சரீர மிருக்கிறதற்காக மூன்று நாளைக்கொருதரம், விளாம்பழம், இலந்தைப்பழம் முதலியவைகளைப் பக்ஷித்துக்கொண்டு, ஸ்ரீ ஹரியைப் பூஜித்தவனாய் ஒரு மாதத்தைப் போக்கி, மறுமாதம் ஆறுநாளைக்கொருதரம் பழுத்து உதிர்ந்த இலை திரணங்களைப் பக்ஷித்தும், மூன்றுமாதம் ஒன்பது நாளைக்கொருதரம் தீர்த்தத்தைப் பக்ஷித்தும், புண்ணிய கீர்த்தியான சுவாமியைச் சமாதி யோகத்தினாலே பூஜித்தும், நான்காமாதத்திலே பன்னிரண்டு நாளைக்கொருதரம் வாயுவைப் பக்ஷித்துக் கொண்டும், சுவாச நிரோதனம் பண்ணினவனாய்ச் சுவாமியைத் தானே தியானம் பண்ணிக்கொண்டும், ஐந்தாமாதத்திலே சுவாச நிரோதமுடையவனாய்ப் பிரம்மத்தைத் தியானம் பண்ணிக் கொண்டும் ஒரு பாதத்தினாலே சலியாமல் ஸ்தாணுவானது போல விருந்துகொண்டும், பூதேந்திரியங்களுக்கு இருப்பிடமான மனதைச் சப்தாதிவிஷயங்களினின்றும் ஆக்ருஷித்துப், பகவானுடைய ரூபத்தைத் தியானம்பண்ணிக் கொண்டிருந்தான். மகதகங்காரங்கள் முதலான தத்துவங்களுக்கெல்லாம் இருப்பிட மாகியும், பிரகிருதி ஜீவர்களுக்கு ஈஸ்வரனாகியு மிருக்கிற பிரம்மத்தைத் தரிக்கின்ற துருவனுக்கு மூன்று லோகங்களும் நடுங்கின. துருவனுடைய பாதாங்குட்டத்தினாலே ஊன்றப்பட்ட பூமியானது கஜேந்திரன் ஏறியிருக்கின்ற ஓடமானது அடிக்கடி இடம் வலமாக வணங்குவதுபோல் பாதிமட்டும் வணங்கிற்று. அந்தத்துருவ

ஞனவன் தன்னுடைய இந்திரியத்துவாரங்களையும், பிராண வாயுவையும் விஷயங்களிலே ஓடாமல் நிறுத்தி, ஏகாந்த பக்தியினாலே விசுவரூபியான பகவானைத் தியானம் பண்ணிக் கொண்டிருக்கையில், லோகபாலர்களுடனே கூடின லோகங் களெல்லாம் மூச்சடங்கி உபத்திரவத்துடனே பகவானைச் சரணமாக அடைந்து விக்கியாபனம் பண்ணின. வாரீர்! பகவானே சராசராத்மகமான சர்வப்பிராணி சரீரத்துக்கும் இப்படிப்பட்ட பிராணசங்கட தசையை ஒருக்காலும் அறி யோம். ஆனபடியினாலே எங்களை இந்தத்துக்கத்தினின்றும் ரக்ஷிக்கவேண்டுமென்று சொல்லுகின்ற தேவதைகளைப் பார்த்துப் பகவான் சொல்லுகிறார். வாருங்கள் தேவதை களே! இந்தப் பாலனான துருவன் அரிதான தபசுசெய்கிறதி னாலே உங்களுக்குப் பிராணவாயுவினுடைய தகைவு உண்டா யிற்று. இவன் என்னிடத்திலே நிறுத்தப்பட்ட மனதை யுடையவனாய் இருக்கிறான். அவனை நிவர்த்திப்பிக்கிறேன் நீங்கள் பயப்படாமல் சுவஸ்தானத்துக்குப் போங்களென்று அருளிச் செய்தார்.



## ஒன்பதாவது அத்தியாயம்



*துருவன் ஸ்ரீ ஹரியை ஸ்தோத்திரம்பண்ணி அவரிடத்தினின்றும் அபீஷ்ட மான வரங்களெல்லாம் அடைந்து. பிரீதியினாலே பிதாவினால் கொடுக்கப்பட்ட ராச்சியத்தைப் பரிபாலனம் பண்ணி னானென்று சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! பகவத் வாக்கியத்தினாலே பயத்தை விட்ட தேவதைகள் பகவானை நமஸ்கரித்துச் சுவர்க்கத்தை யடைந்தார்கள். பிற்பாடு ஆயிரஞ்சிரசுடைய பகவானும் கருடாரூடராய்ப் பக்தனான துருவனைப் பார்க்கவேண்டு மென்கிற இச்சையினாலே மதுவனத்தைக் குறித்துப் போனார். அந்தத்துருவன், யோக பரிபக்குவத்தினாலே ஸ்திரமான புத்தியினால் தன்னுடைய இருதய புண்டரீகத்திலே கருடா ரூடராய் மின்னலைப்போல் பிரகாசித்து மறைந்த பகவானைச், சீக்கிரமாக வெளியிலே, அந்தப் பிரகாரமே கண்டு பயந்தவ னாய்ச் சரீரத்தைத் தண்டத்தைப்போலே வணங்கிப் பூமி யிலே நமஸ்கரித்து, அந்த பகவானைக் கண்களினாலே பானத் துப் பானம் பண்ணுகிறவன்போலவும், கைகளினாலே ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளுகிறவன்போலவு மிருந்தான்.

அதைக்கண்டு பகவான், தன்னுடைய குணங்களைத் தோத்தி ரம் பண்ணவேண்டுமென்று இச்சித்துத், தோத்திரம்பண்ணத் தெரியாமல் கைகளைக் கூப்பிக்கொண்டிருக்கின்ற துருவனைப் பார்த்துத், தேஜோமயமான சங்கத்தினாலே கிருபையோடே அவன் கபாலத்தில் ஸ்பரிசித்தார். அந்த க்ஷணத்திலே தானே வேதமயமான சரஸ்வதியையடைந்து ஜீவேஸ்வர சுவரூபத்தின் நிச்சயத்தை யறிந்தவனாகியும், பக்தியினாலே யுண்டான பிரீதியையுடையவனாகியும், சாஸ்வத ஸ்தானத்தை யடையப் போகிறவனாகியு மிருக்கிற துருவனானவன் பகவானைத் தோத்திரம் பண்ணினான்.

சமஸ்தசக்தியை யுடையவராயும், பிரகாசியாமலிருந்த என்னுடைய வாகிந்திரிய முதலானவற்றைப் பிரகாசிப்பிக்கச் செய்தவராயு மிருக்கிற உமக்குப் பிரணாமம் பண்ணுகிறேன். வாரீர் பகவானே! சத்வாதி குணங்களை யுடையதாகியும், மாயையென்றுஞ் சொல்லப்படுகின்ற உம்முடைய சக்தியினாலே மகதகங்காரங்கள் முதலான சர்வ பிரபஞ்சத்தையுஞ் சிருஷ்டித்து, அதிலே அனுப்பிரவேசித்து அந்தரியாமியா யிருந்துகொண்டு அந்த மாயா விகாரங்களான இந்திரியங்களினாலே தாருக்களிலே, ஒரு அக்கினி தானே நானாவிதமாகப் பிரகாசிக்கிறதுபோல், நானா ரூபமாகப் பிரகாசிக்கிற உம்மாலே கொடுக்கப்பட்ட கியானத்தினாலே சரணமாக அடைந்த பிரம்மாவானவர், தூங்கியெழுந்த புருஷனைப் போலே, இந்தப் பிரபஞ்சத்தைப் பார்த்தார். முக்தர்களுக் கெல்லாம் ரக்ஷகமான உம்முடைய பாதமூலமானது செய்த நன்றி மறவாத புருஷனாலே எப்படித்தான் மறக்கப்படும். சமுசாரத்துக்கு ஒழிவையும் மோக்ஷத்தையும் கொடுக்கின்ற உம்மை அர்த்தகாம நிமித்தமாக உபாசிக்கிறவர்கள், நிச்சயமாக உம்முடைய மாயையினாலே வஞ்சிக்கப்பட்ட புத்தியை யுடையவர்களாய்ச் சவத்தோடே சமானமான தேகத்தினாலே அனுபவிக்கத் தக்கதான அச்சுகத்தைக் கோரிக் கற்பக விருக்ஷமான உம்மை அர்ச்சிக்கின்றார்கள். விஷய சம்பந்தத்திலே உண்டாக்கத்தக்க சுகம் நரகத்திலேயும் உண்டாகும். அது கோரத்தக்கதன்று. அவர்கள் அப்படிப்பட்ட தேகபோக்கியமான சொல்ப சுகத்தைக்கோருகிறதினாலே உம்முடைய மாயையினாலே வஞ்சிக்கப்பட்டவர்களே. பிராணிகளுக்கு உம்முடைய பாதாரவிந்தத் தியானத்தினாலும் உம்முடைய பக்தர்களுடைய சத்கதையைக் கேட்கிறதினாலும், உண்டாகிற சுகம் தம்முடைய ஆனந்த ரூபமான பிரம்மானுபவத்திலே உண்டாகமாட்டாது.

வாரீர் நாரதரே! உம்மிடத்திலே சர்வதா பக்தியை யுடையவர்களாகியும், நிர்மலமான இருதயத்தை யுடையவர்களாகியும், மகான்களாகியுமிருக்கிற பேர்களுடைய சகவாசமானது எனக்கு இடைவிடாமலிருக்கும்படி அனுக்கிரகிக்க வேண்டும். அவர்களுடைய சகவாசத்தினாலும், உம்முடைய குணகதையாகிற அமிர்தபானத்தினாலும், பயங்கரமாகியும் அதிகமான துக்கத்தையுடையதாகியுமிருக்கிற சமுசார சமுத்திரத்தினுடைய கரையைச் சீக்கிரமாக ஏறுவேன். ஸ்தாவர ஜங்கம ரூபங்களாயிருக்கிற பிரபஞ்சத்துடன் கூடினதாகியும், ஸ்தூலமாகியு மிருக்கின்ற இந்த விராட்டுரூபத்தை நான் அறிவேன். இதைப்பார்க்கிலும் வேறுபட்டதாகியும் மனம் வாக்குகளினாலே எட்டப்படாமலிருக்கிற உம்முடைய நிஜஸ்ரூபத்தை நான் அறிவேன். பிரபஞ்சத்திலும் கர்மத்திலும் அகப்படாதவராகியும், அளவில்லாத கியான முடையவராகியும், பரிபூரணராகியும், விகாரமில்லாதவராகியும், சர்வத்துக்குங் காரணராகியும், ஷட்குண பரிபூரணராகியும், திரிகுணத்தில் அகப்படாதவராகியும், சங்கற்பக் கியானத்தினாலே அகப்பட்டதாகியும், நிபந்தனை யுடைத்தான மரியாதையை யுடையதாகியு மிருக்கிற சர்வத்தையும் பூரணமான கியானத்தினாலே பார்த்துக்கொண்டு, பிரபஞ்ச விலக்ஷணமாக யக்ஞரூபியாகியும், விசுவகாரணராகியும், அத்தியந்த சூனியராகியும், ஆனந்தஸ்வரூபராகியும், நிர்விகாரராகியு மிருக்கிற உம்மைச் சரணமாக அடைகிறேன். இச்சிக்கப்படுகின்ற பசு புத்திராதி பலன்களைச் சித்திக்கச் செய்கின்ற உம்முடைய பாதபத்மத்தை அர்த்தகாமாதி அபேக்ஷையினாலே பஜனை பண்ணுகிற தீனர்களான எங்களையும் புருஷார்த்த ஸ்வரூபியான நீர், கன்றைவிட்டுத் திருப்புகின்ற பசுவானதுபோலே, ரக்ஷிக்கிறீரென்று பக்தியுடனே துருவனாலே தோத்திரம் பண்ணப்பட்டவராய்ப், பக்தர்களிடத்திலே பிரீதியை யுடையவரான பகவான் அந்தத் துருவனைப் பார்த்துச் சந்தோஷித்து ஒரு வார்த்தை சொல்லுகிறார்.

வாராய் ராஜகுமாரனே! உன்னுடைய மனதிலேயிருக்கிற இஷ்டத்தை நான் அறிவேன். நான்தபோதனமான விரதத்தை யுடையவனான உனக்கு, அன்னியர்களாலே அடையப்படாமலும் தேஜோமயமாயும், சூரியாதி நவக்கிரகங்களும், அசுவனியாதி நக்ஷத்திரக் கூட்டமும், செக்கிலே பிணைக்கப்பட்ட சுழல் மரமானதுபோல் சுழலத்தக்கதாகியும், அவாந்தர கல்பவாசிகளுக்குப் பிற்பாடு இருக்கிறதாகியும், நக்ஷத்திர ரூபர்களான யமன், அக்கினி, காசியபர், சப்தரிஷி

கள் முதலான பேர்களும் பிரதக்ஷணமாகச் சஞ்சரித்துக் கொண்டு மிருக்கிற பதத்தைக் கோடுக்கிறேன். நீ உன்னு டைய தகப்பன் உன்வசத்திலே ராச்சியத்தை வைத்துப் போட்டுத், தபசுக்கு வனத்தை யடைந்த பிற்பாடு தர்மத்தை ஆசிரயித்தவனாய்ச், சிந்திக்கப்பட்ட இந்திரிய போகத்தை யுடையவனாய், இருபத்தாறாயிரம் வருஷம் பூமியை ரக்ஷிக்கப் போகிறாய். உன்னுடைய பிராதாவான உத்தமனானவன் வேட்டைக்குப் போனவிடத்திலே நாசத்தை யடைந்திருக்கை யில், அவனிடத்திலே பிரீதியையுடைய அவன் தாயாரான சுருசியானவள் அவனைத் தேடிக்கொண்டு காட்டுத்தீயிலே பிரவேசிக்கப் போகிறாள். நீ யக்கிய மூர்த்தியான என்னைப் பூரணமான தக்ஷணையையுடைய யக்கியங்களினாலே பூஜித்துத் தேகாந்தத்திலே என்னை நினைத்து மறுபடியும் ஜன்மத்தை யடையாத துறவிகளுடைய உயர்ந்த ஸ்தானத்தைப்போலும் சப்தரிஷிகளுடைய பதத்தைக்காட்டிலும் மேலானதாயும், சர்வ லோகங்களினாலும் நமஸ்கரிக்கப்பட்டதாயு மிருக்கிற ஸ்தானத்தையடையப் போகிறாயென்று அனுக்கிரகித்து, அவன் பார்த்துக்கொண்டிருக்கத் தம்முடைய ஸ்தானத்தை யடைந்தார். அந்தத் துருவனும் அற்ப சுகத்தை அடைந் தோமென்று எண்ணினானென்று சொல்லுகிற மைத்திரேய ரைப் பார்த்து விதுரர் சொல்லுகிறார். வாரீர் பிரம்மநிஷ் டரே! பரம புருஷார்த்த ஸ்வரூபத்தை யறிந்த துருவன் அடையக்கூடாத உத்தமமான ஹரியினுடைய பரமமான ஸ்தானத்தை ஒரு ஜன்மத்திலே தானே அடைந்திருந்தும் எப்படித் திருப்தி யில்லாதவனானானென்று கேட்கிற விதுர ரைப் பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறார். வாரீர் விது ரரே! சபத்தினி மாதாவினுடைய வசனமாகிற பாணங்களி னாலே அடிக்கப்பட்டதற்குத் தக்க பயனை அடைந்தோமே யன்றி மோக்ஷத்தை இச்சியாமற் போனோமே யென்று விசனத்தை யடைந்தான்.

துருவன் வாக்கியம்

ஜிதேந்திரியர்களான சனந்தர் முதலான ரிஷிகள், அனேக ஜன்மங்கள் யோகாப்பியாசஞ்செய்து அறியப்படாத பகவானுடைய பாதாரவிந்த சாகையை, ஆறுமாதங்களில் அடைந்தும் பேதபுத்தியால் அக்கியானிகளுக்கெல்லாம் தலைவனான நான் நாரதருடைய வார்த்தையை உண்மையாகக் கொள்ளாமல் எனக்கும் கீழ்ப்பட்ட ஸ்தானத்தை யடையத் தேவதைகளினாலே மோசம் போய் என்னாலே பிரார்த்திக்கப் பட்ட இந்த ஸ்தானமானது ஆயுளில்லாத புருஷனிடத்

திலே வைத்தியஞ் செய்ததுபோல் வீணாயிற்று. சம்சார துக்கத்தைப் போக்கடிக்கின்ற ஜகத் ரூபியான பகவானைத் தபசினாலே பிரசன்னமாகப் பண்ணுவித்துக்கொண்டும் மோக்ஷத்தை விரும்பாமல் பாக்கிய ஈனனான தான் தரித்திரனானவன் சக்கிரவர்த்தியினிடத்தில் உமி நூக்கை யாசித்தது போலத் திரும்பவும் சம்சாரத்தையே யாசித்தேனென்று தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு வருகின்ற துருவனை அங்கிருக்கிறவர்கள் கண்டு, உத்தானபாத ராஜாவண்டையிற் சென்று இச்சேதியுரைக்க, அவன் மரித்துப்போன பிள்ளை பிழைத்து வந்ததுபோல் நினைத்து, இந்தச் சந்தோஷ சமாசாரஞ் சொன்னவனுக்கு அதிக விலைபெற்ற முத்தாரத்தைக் கொடுத்து நன்றாயலங்கரிக்கப்பட்ட இரதத்திலேறிக்கொண்டு தனது இருமனைவிகளும் உத்தமனென்கிற புத்திரனும் தன்னைத் தொடரவும் பிராமணர்கள் மந்திரி பிரதானியர் பந்து மித்திர வர்க்கங்கள் சூழவும் பலவித மங்கள வாத்தியங்கள் முழங்கவும் பட்டணத்தில் நின்றும் வெளிப் புறப்பட்டுப் போய், பட்டணத்துக்கு வெளியிலேயிருக்கின்ற உத்தியான வனத்தண்டை வருகின்ற துருவனைப் பார்த்து, உத்தானபாதராஜா இரதத்தில் நின்றும் சீக்கிரமாக இறங்கி வெளனத்துடனே கிட்டப்போய் உடம்பு தெரியாத ஆசையை யுடையவனாய்ப் பிள்ளையைக் கைகளினாலே ஆலிங்கனம் பண்ணி அடிக்கடி உச்சியை மோந்துகொண்டு குளிர்ச்சியான ஆனந்த பாஷ்பங்களினாலே ஸ்நானம் பண்ணுவித்தான். நல்லவர்க்கெல்லாம் நாயகமான துருவன் தன் தந்தையின் பாதங்களிலே வணங்கி அவருடைய ஆசீர்வாதம் பெற்று தனது அன்னைய ரிருவரையும் நமஸ்கரிக்க, மாற்றாந்தாயான சுருசியானவள் துருவனை யெடுத்துக் கட்டிக்கொண்டு ஆனந்த பாஷ்பங்களினாலே தடுக்கப்பட்ட வார்த்தையுடன் "சிரஞ்சீவியா யிருக்கக்கடவை" யென்று ஆசீர்வதித்தனள். நீர் பள்ளத்தில் பாய்வதுபோல் சகலரும் துருவனை வணங்கினார்கள். உத்தமனும் துருவனும் இரண்டு பேரும் ஒருத்தருக்கொருத்தர் பிரீதியை யுடையவர்களாகக் கட்டிக்கொண்டு சரீர சம்பந்தத்தினால் மயிர்க்கூச்ச லுடையவர்களாய் மிகவும் சந்தோஷத்தை யடைந்தார்கள். துருவனுடைய தாயாரான சுநீதியானவள் தன்னுயிர்க்குயிரான புத்திரனை யணைத்து ஆசிகூறி ஆநந்தமடைந்து துயர் தீர்ந்தனள்.

கேளும் விதுரரே! ஆனந்த நீரால் நிறையப்பெற்ற அழகிய நேத்திரங்களையுடைய சுநீதியினுடைய ஸ்தனங்களி

னின்றும் புத்திரவாற்சல்லியத்தினாலே பாலானது அடிக்கடி பெருகிற்று. அந்தச் சமயத்தில் ஜனங்கள் சுநீதியைப் பார்த்து தெய்வாதீனமாக உன்னுடைய பிள்ளையானவன் வெகுகாலம் காணாமற்போய், திரும்பவும் உன்னையடைந்து உன்னுடைய மனோவியாதியை போக்கடித்தது தவிர, இப்பூமியையும் இரட்சிக்கப் போகிறானென்று சொல்லி, துருவனைப் பார்த்துப் பக்தர்களுடைய துக்கத்தைப் போக்கடிக்கின்றவராயும், சகல லோகங்களாலும் பூஜிக்கப்பட்டவராயு மிருக்கின்ற பகவானுடைய கல்யாணகுணங்கள் உன்னாலே பிரகாசமடைந்தன என்றிவ்வண்ணம் ஜனங்களினாலே கொண்டாடப்பட்டவனாகித் தனது சகோதரனுடனே ஒற்றுமைப்பட்டிருக்கிற துருவனை உத்தானபாத ராஜாவானவர் பட்டத்து யானையின் மேலேற்றிக்கொண்டு சந்துஷ்டனாகவும் ஜனங்களினாலே தோத்திரம் பண்ணப் பட்டவனாகவும் பட்டணத்தில் பிரவேசித்தான். வீதிகள் தோறும் கட்டப்பட்டிருக்கின்ற மகர தோரணங்கள், புஷ்ப பலங்களுடனே கூடின வாழை கமுக மரங்கள் மாந்தளிர்கள் நூதன வஸ்திரங்கள் புஷ்பமாலைகள் முத்து ஆரங்கள் ஆகியவைகளாலும், வாசல்கள்தோறும் அமைக்கப்பெற்ற தீபஸ்தம்பங்களுடனே கூடின பூரணகும்பங்கள் சொர்ண மயமான உபகரணங்களுடனே கூடின மெத்தைகளினாலும், நான்கு திக்குகளிலும் அலங்கரிக்கப்பட்ட சம்பத்துகளுடனே கூடின விமான சிகரங்களினுடைய காந்திகளினாலே விளங்குகின்ற நாற்சந்தி வீதிகளாலும் அந்தப் பட்டணம் பிரகாசித்திருந்தது. அப்படி ஊர்வலம் வருகின்ற துருவனைக் கண்டதும் நகரமாதர்கள் அட்சதை வெள்ளைக் கடுகு தீர்த்தம் அறுகம்புல் புஷ்பங்கள் பழங்கள் ஆகிய மங்கள திரவியங்களை அவன்மீதிறைத்து ஆசீர்வதித்தனர். இப்படி சகல வைபவத்துடனே மனோகரமான கீதங்களைக் கேட்டுக்கொண்டு, விலையில்லாத ரத்தினமயமாயும், பால் நுரைகளுக்குச் சமானமாகிய படுக்கைகளும் சுவர்ண தந்த மயங்களாகியு மிருக்கிற உபகரணங்களும் விலையில்லாத ஆசனங்களுமுள்ளதாயும் ஸ்படிகமயமாயும் மரகத மயமாகியு மிருக்கிற சுவர்களிலே இரத்தின தீபங்கள் பெண்பிரதிமைகளுடன் விளங்குகிறதாயும் ரமணீயமான உத்தியான வனங்களில் நானாவித திவ்ய தருக்களினாலும் மதுரமாகச் சப்திக்கின்ற பட்சி மிருகங்களினாலும் மதுரமாகக் கானம் பண்ணுகின்ற வண்டுகளினாலும் நிறைந்ததாயும், வைடூரியமான படிக்கட்டுகளை யுடையதான நடைவாவிகளுடையதாயும், தாமரை கருநெய்தல் ஆம்பல் இவைகளுடையதாயும்,

அம்சங்கள் நீர்க் காக்கைகள் முதலான பட்சிக் கூட்டங்களின் ரமணீயமான சப்தங்களை யுடையதாயும், சுவர்க்கம் போல் மனோக்கியமாயுமிருக்கிற பிதாவினுடைய கிருகத்தில் பிரவேசித்து, வெகு பிரகாரமாகப் பிதாவினால் உபசாரம் பண்ணப்பெற்று ஜயந்தனைப்போலச் சுகமாக இருந்தான். அப்படிப்பட்ட கிருகத்திலே துருவன் வாசப்பண்ணிக் கொண்டிருக்கையில் ராஜரிஷியான உத்தானபாத ராஜன் தனது குமாரனுடைய பிரபாவத்தைக்கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்து யவ்வனத்தை யடைந்தவனாகியும் பிராணிகளுக்கெல்லாம் சம்மதனாகியுமிருக்கிற துருவனைப் பூமிக்கு அதிபதியாக்கி விஷயபோகங்களில் விரக்தியடைந்தவனாய் ஆத்மோஜ்ஜீவனத்தின் பொருட்டுத் தவஞ்செய்ய வனம் அடைந்தான்.



## பத்தாவது அத்தியாயம்



*தனது சகோதரனான உத்தமனைக் கொன்ற யட்சர்களை அளகாபுரியில் தனியாய் வதைத்த துருவனுடைய பராக்கிரமம் சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்.

**சத்குண சம்பன்னரான விதுரரே கேளும்!** அந்தத் துருவனானவன் பிரஜாபதியான சிம்சுமாரனுடைய பெண்ணாகிய பிரமியை விவாகம் பண்ணி அவனிடத்தினின்று கற்பன் வற்சரன் எனும் இரண்டு பிள்ளைகளையும், வாயுவினுடைய பெண் விஷை என்கிற மனைவியினிடத்தில் உற்கலனென்கிற பிள்ளையையும் ஒரு ஸ்திரீ இரத்தினத்தையும் பெற்றான். உத்தமனோ விவாகமில்லாமலே காலங்கழித்து வந்தான். ஒருநாள் அவன் வேட்டையாடப்போன விடத்தில் அதிசூரனான ஒருயட்சனாலே இமயபர்வதத்திலே அடிக்கப்பட்டான். அந்த உத்தமனுடைய மாதாவான சுருசியும் அந்தப் பிள்ளையினுடைய கதியை யடைந்தாள். அதைக் கேட்ட துருவன் தனது சகோதரனுடைய வதத்தைச் சகியாதவனாகி, அந்த அரக்கர்களுடைய சாமர்த்தியத்தை யானறிகிறேனென்று ஜயப் பிரதமான ரதத்தின்பேரிலேறிக் கொண்டு சென்று, புண்ணிய சனங்களுக் கிருப்பிடமாகிய இமோற்பர்வதத் தாழ்வரையிலே உருத்திர சேவகர்களான பூதங்களினாலும் குய்யகர்களாலும் நிறையப்பெற்ற அளகா

புரியைப் பார்த்து ஆகாயமும் திக்குகளும் அதிரும்படியாகச் சங்கத்தை முழக்கினான்.

அந்தத் தொனியினாலே யக்ஷமாதர்கள் பயத்தையடைய, யக்ஷர்கள் அந்தச் சப்தத்தைச் சகியாதவர்களாகி ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு பட்டணத்தில் நின்றும் வெளிப்புறப்பட்டு ஓடிவந்தெதிர்த்தார்கள். அவர்களைப் பார்த்து உக்கிரமான தனுவை யுடையவனாகியும், மகா ரதனாகியுமிருக்கிற துருவனானவன் ஒவ்வொருத்தனையும் மும்மூன்று பாணங்களாலே ஏக காலத்திலே அடித்தான். இப்படி எல்லாருடைய நெற்றியிலும் புதைபட்டிருக்கிற பாணங்களைப் பார்த்து அவனுடைய புஜபலத்திற்காக அவனைக் கொண்டாடினாரெனினும் அந்த லட்சத்து முப்பதினாயிரம் யட்சர்களும் அவனுடைய பராக்கிரமத்தைச் சகிக்க மாட்டாமல் ஏககாலத்தில் துருவன் பேரிலே உழலைத்தடி படைக்கத்தி எரியீட்டி சூலம் கோடாலி சத்தி தடி உலக்கை சித்திரமான இறகுகளையுடைய பாணங்கள் முதலிய பல கொடூர ஆயுதங்களை யெறிந்தார்கள்.

ஆகாயத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கின்ற சித்தர்கள் சூரியனுக்குச் சமானனாகி யிருக்கின்ற துருவன் யட்சர்களாகிற சாகரத்திலே முழுகிப்போய் விட்டானென்று ஆஹாகாரஞ் செய்தார்கள். அந்தச் சமயத்திலே பனிக்கூட்டத்தைப் பேதித்துக்கொண்டு வெளிவருகின்ற பகலவனைப்போல அந்த அஸ்திர சஸ்திரங்களின் சமூகத்தைத் தன்னுடைய பாணங்களினாலே சூரணமாகப் பண்ணி அவர்களுடைய கவசங்களை வச்சிரா யுத்தத்தால் பிளக்கப்பட்ட பர்வதம்போல் பேதித்துக்கொண்டு சரீரங்களிலே பிரவேசிக்கும்படி பாணங்களை ஏவினான். இவ்விதம் வதைக்கப்பட்ட யக்ஷ படாளுடைய அழகிய குண்டலங்களையுடைய சிரசுகள் பனைமரம் போன்ற துடைகள் கடகங்களுடன் கூடிய கைகள் முத்தாரங்கள் தோள்வளைகள் கிரீடங்கள் மகாவிலைபெற்ற பாகைகள் இவைகளினாலே அந்த யுத்த பூமியானது பாவப்பெற்று விளங்கியது.

இராஜ சிரேஷ்டனான துருவனுடைய பாணங்களினாலே அடிபட்டுக் கீழே விழுந்தவர்கள்போக மிகுந்த யக்ஷகணங்கள் பாணங்களினாலே அறுக்கப்பட்ட அங்கங்களையுடையவர்களாய், சிம்மத்தினாலே யடிக்கப்பட்ட யானைகள் போல் அந்த யுத்த பூமியை விட்டு ஓடிப்போய் விட்டார்கள்.

மீண்டும் சத்துருக்கள் எதிர்த்து வருவார்களென்று சங்கை யுற்றவனாய் துருவன் சாக்கிரதையுடனிருக்கையில், பெருங் காற்றினாலே அலைக்கப்பட்ட சமுத்திர கோஷத்தைப்போல் மகத்தாகிய சப்தத்துடன் நான்கு திக்குகளிலும் தம்பெழுந் தது. உடனே நான்கு திக்கிலும் பிரகாசமான மின்னல்களை யுடையதாகியும் பயங்கரமான சப்தங்களையுடையதாகியு மிருக் கிற மேகக் கூட்டங்கள் ஆகாயமெங்கும் வியாபித்து இரத்த மாம்சங்கள் மலமூத்திரங்கள் கோழைகள் தலையில்லாத வுடல் கள் பர்வதங்கள் கதை பரிசம் கத்தி உலக்கை முதலான அனேக ஆயுதங்களை வருஷித்துக் கொண்டு ஓடிவந்தன. மத்த கஜங்களும் சிங்கங்களும் வியாக்கிரமங்களும் கும்பு கும்பாக ஓடிவந்தன. சமுத்திரமும் பயங்கரமான அலைகளி னாலே பூமியை நான்கு பாரிசத்திலும் கவிந்து பிரளய காலத் தைப்போல் பயங்கரமான மகா சப்தமுண்டாக்கியது. இப்படி அசுரர்களால் ஏவப்பட்ட மாயா காரியங்களைப் பார்த்து பிரம ரிஷிகளெல்லோரும் சாரங்க பாணியாகியும் தேவதேவாகி யும் தன்னைத் தஞ்சமென்றடைந்தவருடைய துக்கத்தைப் போக்கடிக்கிறவராகியு மிருக்கின்ற சுவாமியானவர் துருவனு டைய எதிரிகளைத் தும்சம் பண்ணக்கடவரென்று அனுக் கிரகம் செய்தார்கள்.



## பதினொன்றாவது அத்தியாயம்.

சுவாயம்பு மனுவானவர் துருவனுக்குத் தத்வோபதேசஞ்செய்து யட்சர்களுடைய நாசத்தை நிவர்த்தித்தமை கூறப்படுகின்றது.

மைத்திரேயர் வாக்கியம்.

அச்சுதனுடைய அடிமலர்களை அல்லும் பகலும் அகத்திருத்தி ஆராதனைபுரியும் ஆரியரே கேளும்! இவ்வி தம் ரிஷி சிரேஷ்டர்களின் அனுக்கிரகத்தை ஏற்று, துரு வன் அடியோடு யக்ஷர்களை தும்சம்பண்ணத் தீர்மானித்து. ஆசமனம்பண்ணிப் பரிசுத்தனாய், தனுசிலே நாராயணாஸ் திரத்தை அனுசந்தானம்பண்ண, உடனே குய்யகர்களால் நிருமிக்கப்பட்ட மாயாகாரியங்கள் ஞானம் பிறந்தவனுக்கு சம்சாரகிலேசங்கள் நாசமடைவதுபோல் நசித்தன. சொர்ண மயமான கட்டுகளையும், அம்சங்களின் இறகுகளையும், பயங்கர மான சப்தங்களையுமுடைய துருவனுடைய பாணங்கள்

வெளிப்புறப்பட்டு, சத்துருக்களுடைய சேனையிலே மயில்கள் வனத்திலே பிரவேசிக்கிறதுபோல் நுழைந்து நாலாபக்கங் களிலும் பீடிக்க, அதைச் சகிக்கமாட்டாமல் யட்சர்கள் கோபத்தையடைந்தவர்களாகி ஆயுதபாணிகளாய், படத்தை விரித்துக்கொண்டு சீறுகின்ற சர்ப்பங்கள் கருடனை யெதிர்க் கிறதுபோல் எதிர்த்தார்கள். அப்படி எதிர்த்த அனைவரை யும் துருவன் சந்நியாசிகள் சூரியமண்டலத்தைப் பேதித்துக் கொண்டு அடைகிற பரலோகத்தையடையச் செய்தான்.

இப்படி யட்சர்கள் துருவனால் நாசமடைவதைக்கண்டு பிதாமகனான சுவாயம்பு மனுவானவர் ரிஷிகளுடனே அந் தத் துருவனையடைந்து கிருபையினாலே "குழந்தாய் துருவ! நிரபராதிகளான இந்த யக்ஷபடர்களையடிக்க ஏதுவாகியும் நாக துவாரமாகியுமிருக்கிற கோபத்தை விட்டுவிடு. சத்புரு ஷர்களாலே நிந்திக்கப்படுகின்ற இந்தக் காரியம் நம்முடைய குலத்துக்கு யோக்கியமன்று. உன் பிராதாவை ஒரு யக்ஷன் சங்கரித்திருக்க, அவன் நிமித்தம் உன்னாலே வெகுபேர் அடிக்கப்பட்டார்கள். பரமாத்மாவில் நின்றும் உண்டான இந்த ஜடமான தேகத்தை ஆத்மாவென்று நினைத்து பசுக் கள்போல ஒருவரை இம்சிக்கிறது பகவானையே சரணமாக அடைந்த சாதுக்களுக்குத் தகுதியன்று. ஆராதிக்க முடி யாதவராகியும் சராசராத்மகமான பூதங்களுக்கெல்லாம் வாசஸ்தானமாகியு மிருக்கிற பகவானை பாலியத்திலே யாரா தித்து சிரேஷ்டமான பதத்தை யடைந்த நீ சர்வகாலமும் அரிதாசர்களுக்கு அசம்மதமாயிருக்கிற இப்படிப்பட்ட இம்சாகாரியத்தில் எப்படி ஈடுபட்டாய்? பெரியோரிடத்துப் பொறுமையும் தனக்குத்தாழ்ந் தோரிடத்துத் தயையும் சமானமானபேர்களிடத்துச் சிநேகமும் எல்லாப் பிராணி களிடத்திலும் சமபுத்தியும் செலுத்துகிறவர்களுக்கன்றோ சர்வாந்தரியாமியான பகவான் பிரசன்னராவார்?

அவர் பிரசன்னரானதினாலே பிரகிருதிகாரியங்களான சத்வாதி குணங்களினாலே ஆக்கப்பட்ட ஸ்தூல சூட்சும தேகபந்தமென்கிற ஜீவ பாவத்தினாலும் விடப்பட்டவனாய் ஆனந்தரூபமான பிரமத்தையடைவன். ஒன்றிலொன்று கலந்திருக்கிற பிருதிவி முதலான பஞ்சபூதங்களினாலுண் டாக்கப்பட்ட சரீரம் ஸ்திரீயென்றும் புருஷரென்றுஞ் சொல் லப்படுகிறது அந்த ஸ்திரீ புருஷர்களுடைய சம்பந்தத்தி னாலே சிற்சில ஸ்திரீ புருஷசரீரங்கள் இந்தச் சமுசாரத்தி லுண்டாகின்றன. பரமாத்மாவின் மாயையினது சத்வாதி குணங்களின் உற்பவத்தினாலே சிருஷ்டிஸ்திதி சம்மாரங்கள்

உண்டாகின்றன. அதுகளிலே சத்வாதி குண சூனியரான பரமாத்மாவினுல் காரியகாரண ரூபமான இந்தப் பிரபஞ்சம் காந்த சன்னிதானத்தில் லோகமயமான ஊசியானது சுழ்லுகிருப்போல் ஸ்வயமாகவே சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களை யடைகிறது. அந்தப் பகவானுடைய காலசக்தியினுல் கிரமமாக வுண்டாக்கப்பட்ட சத்வ ரஜச தமோ குணங்களுடைய சாஞ்சல்லியத்தினுல் பிரிக்கப்பட்ட சிருஷ்டி ஸ்திதி சங்கார சக்திகளையுடையவராக இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தாலும் சங்கரித்தாலும் கர்த்தாவாகாத வராயுமிருக்கிருர். சிருஷ்டி சங்காரங்களை ஏககாலத்தில் தானே செய்யாமலிருக்கிறது அந்தப் பகவானுடைய காலசக்தி அப்படிப்பட்டதாகையால் அறியக்கூடாத அந்தக்காலமானது தாய் தகப்பனென்கிற ஜனனத்தினுல் புத்திரனென்கிற ஜனனத்தையுண்டாக்கிச் சிருஷ்டியைப் பண்ணுகிறது. தான் உற்பத்தியுடையதன்று. விநச ஏதுவான சொர்ணம் முதலிய ஜனனத்தையும் பிறப்பித்து அதையும் நாசம்பண்ணுகிறது. ஒழிவில்லாத சக்தியையுடையவர் பகவான். சிருஷ்டி ஏதுவாகியும் விநாச ஏதுவாகியும் பிராணிகளிற் சமமாகப் பிரவேசித்திருக்கிற அந்தப் பரமாத்மாவுக்குத் தன்னவனென்றும் சத்துருவென்றுமில்லை. இந்தப் பிரகாரம் சமமாகவிருக்கின்ற அந்த ஈசுவரனை ஓடுகின்ற காற்றைத்தூள்கள் அனுசரிக்கிருப்போல் கர்மாதீனர்களான பிராணிகள் அனுசரிக்கிருர்கள். விருத்திக்ஷயமில்லாதவராகியும் ஏக ரூபியாயுமிருக்கிற இந்த விபுவான ஈஸ்வரன் கர்மாதீனமாகிய பிராணிகளுக்கு ஆயுசு க்ஷயத்தையும் அந்தப் பிரகாரமே ஆயுசு விருத்தியையும் பண்ணுகிருர். இப்படிப்பட்ட ஈஸ்வரனைச் சிலபேர் கர்மமென்றும் சிலபேர் அதிர்ஷ்டமென்றும் நானுவிதமாகச் சொல்லுகிருர்கள். கண்ணுலே பார்க்கப்படாதவராகியும் பிரமாணத்தில் அகப்பட்டவராகியும் நானுவித சக்திகளையுடையவராகியுமிருக்கிற அந்த ஈஸ்வரனுடைய செயலை ஒருவரும் அறியமுடியாது.

துருவனே கேளாய்! அப்படிப்பட்ட பரமாத்மாவை எவன் தான் நிச்சயமாக அறியப்போகிருன்? இந்த யட்சபடர்கள் உன்னுடைய பிராதாவான உத்தமனைக்கொன்றவர்களன்று. உற்பத்தி நாசங்களுக்குச் சுபாவமாக ஈஸ்வரனே காரணம். அந்தப் பரமாத்மாவே இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறவனுகியும் இரட்சிக்கிறவனுகியும் சங்கரிக்கிறவனுகியு மிருக்கிருன். ஆனுலும் நான் செய்கிறேனென்கிற அகங்கார மில்லாமையினுலே பிரகிருதி குண கர்மங்களில்

அகப்பட்டவனன்று. பூதங்களுக்கெல்லாம் அந்தரியாமியாகியும் நியந்தாவாகியும், பூதங்களுக்கு உற்பத்தி ஸ்தானமாகியும் விரோதிகளுக்கு மிருத்தியுவாகியும் பக்தர்களுக்கெல்லாம் மோட்சப் பிரதனாகியும் ஜகத்துக்கெல்லாம் இருப்பிடமாகியுமிருக்கிற அந்த ஈஸ்வரனை நீ சர்வப்பிரகாரத்தினாலும் சரணமாக அடை. நீ ஐந்துவயதில் தாயாரைவிட்டுச் சபத்தினிமாதாவினுடைய சதுரவார்த்தைகளினாலே பிளக்கப்பட்ட இருதயத்தையுடையவனாகித் தபோவனத்தை யடைந்து தபசினாலே இந்திரியங்களினால் அறியக்கூடாதவரான ஸ்ரீ பகவானை ஆராதித்து மூன்று லோகத்துக்கும் உயர்ந்த ஸ்தானத்தை யடைந்தாய். சிரேயசுகளுக்கு மிகவும் விரோதமான கோபத்தை ஔஷதத்தினால் வியாதியைக் கண்டிப்பதுபோல் விவேகத்தினால் நீ அடக்கு. உனக்கு நன்மை உண்டாகும். ரோஷத்துடன் கூடின புருஷனுக்கு லோகமானது மிகவும் நடுங்கும் மோட்சத்தைக் கோருகின்ற வித்துவான் கோபத்தை யடக்கவேண்டும். உன்னுடைய சகோதரனை கொன்ற யக்ஷசர்களைக் கோபத்தினால் நீ கொன்றபடியால் சிவனுக்குச் சகாவான குபேரன் உன்னா லவமானஞ் செய்யப்பட்டான். அவனை க்ஷமை பண்ணிக் கொள்ளாவிடில் உன்னுடைய வம்சந் திரஸ்கரிக்கப்படும். அதற்குமுன் க்ஷமை பண்ணிக்கொள்ளென்று மனுவினாலே உபதேசிக்கப்பட்ட துருவன் மனுவை வணங்கி, பகவானே அடியேன் உம்முடைய ஆணையின்படி நடத்தற்குறியவன். அன்னை சகோதரர்களினிமித்தம் துக்கிக்கின்ற என்னைக் குபேரனே மன்னிக்க வேண்டுமென்று சொன்னான். அதுகேட்டுச் சுவாயம்பு மனுவானவர் துருவனையும் குபேரனையும் ஆசீர்வதித்து அவர்களாலே சேவிக்கப்பட்டவராய் ரிஷிகளுடனே தம்முடைய ஸ்தானத்தை நோக்கிப்போனார்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



துருவன் குபேரனாலே சந்தோஷிக்கப்பட்டவனாய்த் தன் பட்டணத்தை யடைந்து யக்கியங்களினாலே ஸ்ரீ ஹரியை ஆராதித்து உத்தமமாகிய ஸ்தானத்தை யடைந்தமை சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர் வாக்கியம்.

இப்படி சுவாயம்பு மனுவினாலே உபதேசிக்கப்பெற்றுத் துருவன் கோபத்தைவிட்டு யுத்தத்தில் நின்றும் ஒழிந்திருக்

திருனென்று அறிந்து குபேரனானவன் சாரணயக்ஷ கின்னரர் களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவனாய் அந்த யுத்த பூமியில் வந்து அஞ்சலிபந்தத்துடனே கூடின துருவ னைப் பார்த்து 'வாராய் க்ஷத்திரிய குமாரனே! பிதாமக னான மனுவினுடைய வசனத்தினால் விடக்கூடாத வைரத்தை விட்டுவிட்ட உன்னிடத்தில் பிரீதியை யடைந் தேன். யக்ஷர்கள் உன்னால் கொல்லப்பட்டதும் உனது சகோ தரன் யக்ஷனால் உயிர் துறந்ததும் ஊழின் பயனேயன்றி வேறில்லை. ஜனன மரணங்களுக்குக் காரணம் தேகாபிமான மும் வாஞ்சையினால் கர்மசம்பந்தமும் கர்மபலமான துக்கமும், நான் நீயென்கிற வியர்த்தமான புத்தியும் அஞ்ஞானத்தினால் உண்டாகிறது. அஞ்ஞானத்தைப் போக்கடிக்கின்ற ஸ்ரீ பக வானையே பஜனைசெய். உனக்குச் சிரேயசுண்டாகும் என்னா லுனக்கேதாகிலும் அடையத் தக்கதிருந்தால் சங்கையில்லா மற்கேள் கொடுக்கிறேன் என்று சொன்னான். இது கேட்ட துருவன் எங்கும் நிறைந்த எம்மானான ஹரியின் சர ணாரவிந்தத்து இடையறாத பக்தியே எனக்கு வேண்டுவது இதைக்காட்டிலும் யானடைதற்குரியது என்ன இருக்கின்றது என்றனன். குபேரனானவன் சந்தோஷத்துடனே கூடின மனதுடன் அந்தத் துருவனுக்கு அசஞ்சலமான பக்தியைக் கொடுத்து அவன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே அந் தர்த்தானமாய் விட்டான்.

அந்தத் துருவனும் தன்னுடைய பட்டணத்தை யடைந்து புண்ணிய பாவ பலப்பிரதாதாவாகியும் திரவிய தேவதா கிரியா ரூபங்களான எக்கியங்களுக்கெல்லாஞ் சுவாமியாகியு மிருக்கிற பகவானை வெகுவான தக்ஷிணைகளையுடைய யக்கியங் களினால் ஆராதித்துச் சமஸ்த சராசரங்களும் பகவத் ஸ்வ ரூபமென்று தியானித்துக்கொண்டு ஆசாரகுண சம்பன்னனா கியும் தீனவற்சலனாகியுமிருக்கிற அந்தத் துருவனைப் பிரஜை கள் பிதாவாக எண்ணினார்கள். சுகானுபவங்களினால் புண் ணிய க்ஷயத்தையும் பண்ணிக்கொண்டு இருபத்தாறாயிர வருஷம் பூமண்டலத்தைப் பரிபாலனஞ்செய்து பிறகு புத்திர னுக்கு ராஜ்யாபிஷேகம் செய்து, பொன் பெண்டீர் முதலான சகல ஐசுவரியமும் துச்சமென்று திரஸ்கரித்து, தபசுசெய்யப் பதரிகாசிரமத்திற்குப் போய் ஜிதேந்திரியனாகச் சுத்தோதகத்தில் ஸ்நானம்பண்ணி ஆசனத்திலே யிருந்து கொண்டு ஜெயிக்கப்பட்ட பிராண வாயுவையுடைய மனதி னால் போக்கப்பட்ட இந்திரியங்களை யுடையவனாய் சமத மாதி குணங்களுடன் ஸ்தூலமான விராட் ரூபத்தை

யும் சமாதியில் நிஷ்டையுடனே விட்டு விட்டு, திவ்ய ஆத்மஸ்வரூபத்தைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்தான். மகா விசித்திரகோல உருவங்கொண்டதோர் விமானம் ஆகாயத்தினின்று மிழிந்து அதினின்றும் அப்ராகிருத திவ்ய சரீரமும், சங்குசக்ர கதைகளையுடைய சதுர்புஜங்களும், சியாயள நிறமும் தாமரைக்கண்களும், பொன்னுடையும், கிரீடம் ஆரம் தோள்வளை குண்டலம் ஆகிய இவைகளுமுடைய யுவாக்களான தேவசிரேஷ்டர்கள் வெளிவந்து துருவனைக்கண்டார்கள். அவர்களைக் கண்டதும் அவர்கள் புண்ணிய சுலோகனை புருஷோத்தமனுடைய கிங்கரர்களேயாக வேண்டுமென்று நிதானித்தவனாய், துருவன் நமஸ்காரம் செய்தான். அவர்கள் துருவனை நோக்கி அரசனே! உனக்கு மங்கள முண்டாகக் கடவது. நீ ஐந்துவயதிலே தபசினால் பகவானை சந்தோஷிப்பித்ததினால் அந்த பகவானுடைய கிங்கரர்களான நாங்கள் இவ்விடத்தில் நின்றும் உன்னை பகவத்பதத்தை யடைவிப்பிக்கிறதற்கு வந்தோம். ஜயிக்கக்கூடாத விஷ்ணுபதம் உன்னாலே ஜெயிக்கப்பட்டது. சப்தரிஷிகளும் விஷ்ணுபதத்தை யடையாமல் கீழேயிருந்து பார்த்துக்கொண் டிருக்கிறார்கள். விஷ்ணு பதத்தைச் சந்திராதித்தர்கள் முதலாகிய நவக்கிரகங்களும் அசுவினியாதி நக்ஷத்திரங்களும் பிரதக்ஷணம்செய்து வருகின்றன அப்படிப்பட்ட அந்த விஷ்ணு பதத்தை யடைவிப்பதற்கு உத்தமரான பகவானால் அனுப்புவிக்கப்பட்டு வந்தோம். இந்தச் சிரேஷ்டமாகிய விமானத்தில் ஏறிக்கொள்ளென்று சொன்னார்கள். அமுதம்போன்ற சுனந்தனந்தர்களுடைய வார்த்தையைக் கேட்டு விஷ்ணுவுக்குப் பிரியபக்தனான துருவனானவன் ஸ்னானம்பண்ணி நித்திய கர்மங்களைச் செய்து அலங்கிருதனாய் ரிஷிகளை நமஸ்கரித்து ஆசீர்வாதத்தைப்பெற்று சிரேஷ்டமாகிய அந்த விமானத்தைப் பிரதக்ஷணம்பண்ணிப் பூசித்து பகவத் கிங்கரர்களான சுனந்தனந்தர்களை நமஸ்கரித்து, திவ்விய தேகத்தை யுடையவனாகி அந்த விமானத்திலேறினான். அப்போது துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. கந்தர்வ சிரேஷ்டர்கள் கானம்பண்ணி புஷ்ப வருஷங்களைப் பெய்தார்கள். இப்படி சகல சம்பிரமத்துடன் விஷ்ணுபதத்தை யடையப்போகிற துருவன் தாயாராகிய சுநீதியை நினைத்தான். அந்தத் துருவனுடைய அபிப்பிராயத்தை அறிந்த தேவ சிரேஷ்டர்களான சுனந்தனந்தர்கள் விமானத்திலேறிக்கொண்டு தேவயானமென்கிற மார்க்கத்தால் போகின்ற அவனது தாயாரைத் துருவனுக்குக் காண்பித்தார்கள். அவளைப்பார்த்துச் சந்தோஷமடைந்து,

மீண்டும் போகும்போது அங்கங்கு தேவதைகளால் புஷ்பங்களினாலும் ஸ்தோத்திரங்களினாலும் பூசிக்கப்பட்டு நவக்கிரக ஸ்தானங்களையும் மூன்று லோகத்தையும் சப்தரிஷிகள் ஸ்தானத்தையும் தாண்டி அதற்கு மேலானதாயும் தன்னுடைய காந்தியினாலே மூன்று லோகங்களும் பிரகாசிப்பவைகளாயும் பிராணிகளிடத்தில் தயையில்லாதவர்கள் அடையக்கூடாததாகியும் சாந்தர்களாயும் சமதிருஷ்டியை யுடையவர்களாயும் பரிசுத்தர்களாயும் சர்வ பிராணிகளையும் சந்தோஷிப்பிக்கிறவர்களாயு மிருக்கிறபேர்களா லடையத்தக்கதாகியு மிருக்கின்ற விஷ்ணுபதத்தை அடைந்து, மூன்று லோகத்துக்கும் நிர்மலமான சூடாமணிபோலே விளங்கினான். பிணையெருதுகளுடைய கூட்டத்திற்கு ஆதாரமாய் மத்தியில் நட்டிருக்கின்ற ஸ்தம்பம்போல் சகலமான ஜோதிக்கணங்கள் அந்தத் துருவனையே ஆதாரமாக வுடையவைகளாய்ச் சுழலுகின்றன. இப்படி சுழலுகிறதை நாரத ரிஷியானவர் பார்த்து சந்தோஷத்தை யுடையவராய்த் தம்முடைய வீணையை மீட்டிக்கொண்டு பிரசேதசங்களுடைய எக்கியத்திலே பகவத் மகாத்மியத்துடன் இந்தத் துருவனுடைய சரித்திரத்தைக் கானம் பண்ணினார்.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



*பிருதுச் சக்ரவர்த்தியினுடைய சரித்திரம் சொல்லப்படுகிறது.*

### சூதர் வாக்கியம்

சௌனகாதி ரிஷிகளே! இவ்விதம் விதுரரானவர் மைத்திரேயராலே சொல்லப்பட்ட துருவ சரித்திரத்தைக் கேட்டு, பகவானான அதோக்ஷஜனிடத்திலே திடமான பக்தியையுடையவராய்த் திரும்பவும் மைத்திரேயரைப் பார்த்துக் கேட்கத் தொடங்கினார்.

வாரீர் பிராமணோத்தமரே! பிரம நிஷ்டர்களான பிரசேதசுக்களுடைய சத்திர மென்கிற யக்கியத்திலே பகவத் மகாத்மியத்துடன் துருவ சரித்திரத்தை நாரதர் கானம் பண்ணினாரென்று உம்மாலே சொல்லப்பட்டது. அந்தப் பிரசேதசுக்கள் யார்? அவர்கள் எவருடைய பிள்ளைகள்? எவ்

வம்சத்திலே பிறந்தவர்கள்? எவ்விடத்திலே சத்திரயாகஞ் செய்தார்கள்? அந்தப் பிரதேசுக்களுடைய யக்கியத்திலே தேவ ரிஷியான நாரதர் பகவத் கதைகள் சொன்னதையும் அடியேனுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கிற விதுரரை நோக்கி மைத்திரேயர் சொல்லுகிறார்.

விதுரரே துருவனுடைய பிள்ளையான உற்கலனானவன் தன் தந்தை தபோவன மடைந்த பிறகு அகண்ட மண்டலாதிபத்தியத்தை யிச்சியாமல் பிறந்தநாள் முதல் உபசாந்தமான மனதையுடையவனாய் ரீகத்துவேஷாதிகளில்லாமல், ஞானஸ்வரூபனாயும் பிரமமாயுமிருக்கிற பரமாத்மாவை அனுசந்தானம் பண்ணிக்கொண்டு பைத்தியக்காரனைப் போல் திரிந்துகொண்டிருக்க, க்ஷத்திரிய குலப் பெரியவர்கள் மந்திரிகளுடன் யோசித்து அவனுக்குத் தம்பியான பிரமியினுடைய பிள்ளை வஜ்ஜிரனை ராஜாவாகப்பண்ணினார்கள். அந்த வஜ்ஜிரனுடைய பாரியையான சுவ்திதியானவள் புட்சியாரனென்றும் திக்மகேது வென்றும் இஷ்டனென்றும் ஊர்ஜனென்றும் வசுவென்றும் ஜயனென்றும் ஆறு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களுக்குள்ளே புட்சியாரனுக்குப் பிரபாவென்னும் மனைவியிடத்து பிராதஹவென்றும் மத்தியந்தன வென்றும் சாயமென்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். தோஷாவென்கிறவளிடத்தில் பிரதோஷம் நிசிதம் வியுஷ்டி யென்னும் மூன்று புத்திர ருற்பவித்தார்கள். அவர்களுள் வியுஷ்டி யென்கிறவன் புஷ்கரிணி யென்கிற ஸ்திரீயினிடத்திலே சர்வதேஜசு என்கிற பிள்ளையைப் பெற்றான். அவன் ஆகாதி யென்கிற ஸ்திரீயினிடத்திலே சாக்ஷசு என்கிற மனுவைப் பெற்றான். மனுவியினுடைய மகிஷியான நட்வலையானவள் புருவன் குச்சன் திரடன் துய்மனன் சத்தியன் வத்தனன் ரீதவிருதன் அக்கினிஷ்டோமன் அதிராத்திரன் பிரத்தியும்னன் சிபி உன்முகன் என்னும் பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். உன்முக னென்கிறவன் பிரீதகேசி யென்கிறவளிடத்திலே அங்கன் சுமந்திது சுவாவவு கிருது அங்கிரசு கேயன் என்னும் உத்தமர்களான ஆறு பிள்ளைகளைப் பெற்றான். அங்கனுடைய மனையாளான சுனிதையானவள் மகா குரூரமான வேனனென்கிற பிள்ளையைப் பெற்றாள். அந்த வேனனுடைய துர்நடத்தையினாலே அந்த ராஜ ரிஷியான அங்கன் துயருற்றவனாய் அரசை வெறுத்து அரணியம் புகுந்தனன். அரசை மேற்கொண்ட வேனன் கொடுங்கோலோய்ச்சி, கடிய திட்டங்களுக் குட்படும்படி குடிகளை

வற்புறுத்தினன். இவ்விதம் சகலருக்கும் துன்பமியற்று தலைச் சகியாது ரிஷிகள் சபிக்க, வேனன் மரணமடைந்தனன். பிறகு அரசனொருவ னின்மையால் உலகத்தில் கள்ளர் முதலிய துஷ்ட ஜனங்களின் உபத்திரவ மதிகரிக்க வேதியர் யாவரும் ஒன்றுகூடி வேனனது உலர்ந்த சரீரத்து வலது கையைக்கடைய அதினின்றும் நாராயண அம்சனாய் ஆதிசக்கரவர்த்தியான பிருதுவானவ னுண்டானனென்று மைத்திரேயர் உரைத்தனர்.

அது கேட்டு சதாசார நிதியாயும் பிராமண சிரேஷ்டர்களையே தெய்வமாக எண்ணுகிறவனும் மகானுபாவனுமிருக்கிற அந்த ராஜாவுக்கு துஷ்ட புத்திரன் எவ்விதமுண்டானன்? சகல தர்மமும் அறிந்த ரிஷீஸ்வரர்கள் அந்த வேனனிடத்திலே எந்த அபராதத்தைப் பார்த்துச் சாபத்தைப் பிரயோகித்தார்கள்? பிரஜைகளை ரக்ஷியாநின்ற ராஜாவானவன் பாபியாயிருந்தாலும் இந்த லோகபாலர்களுடைய சக்தியைத் தரிக்கிறதினாலே அவனை நிராகரிக்கிறது யுக்தமன்றே! ஆதலால் இந்தச் சரித்திரத்தை விவரமாக எனக்குச் சொல்லியருள வேண்டுமென்று விதுரர் கேட்க, மைத்திரேய முனிவர் மொழியலாயினர். சத்குண சம்பன்ன சதுரரான விதுரரே கேளும்! ராஜ ரிஷியான அந்த மகாராஜா மகா கிருதுவான அஸ்வமேதத்தைப் பண்ண, அந்த யாகத்திலே அவிசை வாங்கிக்கொள்ளத் தேவதைகள் வராமற் போனார்கள். அந்த ரித்விக்குகள் ஆச்சரியத்துடனே அங்கனைப் பார்த்து அரசனே ஓமம் பண்ணவில்லையென்று சொல்லுகின்ற ரித்விக்குகள் வார்த்தையைக் கேட்டு, அங்கன் மிகவும் விசனமடைந்து தேவர்கள் வராமைக்குக் காரணத்தையறிய விரும்பினவனாய், தான் ஏதாகிலும் அபராதஞ் செய்திருந்தால் அதை வெளியிடும்படி சபையோர்களைக் கேட்டுக்கொண்டான். அரசனே! நீ அபுத்ரனாயிருப்பதைத் தவிர வேறுவித குற்றம் இந்த யாகத்திலே செய்ததாக எமக்குத் தோற்றவில்லை. ஆதலின் கற்பகத்தருபோல் விரும்பினதை யளிக்கின்ற ஸ்ரீயப்பதியான ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்தால் சத்புத்திரனுண்டாகி அதினாலே தேவதைகள் தங்கள் பாகத்தை வாங்கிக் கொள்ளுவார்கள் என்றனர். பிறகு அவ்வரசன் புத்திரோற்பத்தியைக் கோரி ஓர் யக்கியம் நடத்த, அதினின்றும் ஸ்வர்ணாபரணங்கள் நிர்மலமான வஸ்திரங்கள் ஆகியவைகளைத் தரித்த ஒரு புருஷன் ஸ்வர்ண பாத்திரத்திலே திவ்வியமான பாயசத்தை யெடுத்து வந்து அரசனது கையில் கொடுத்தான். அந்த ராஜாவான

வன் பிராமணர்களாலே அனுஜ்ஞை பண்ணப்பட்டவனாய் இரண்டு கைகளினாலேயும் அந்தப் பாயசத்தை வாங்கிக் கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் கம்பீரமான புத்தியை யுடையவனாய்த் தன்னுடைய பத்தினி கையிலே அதைக் கொடுத்தான். அவள் அதைப் புசித்து ருதுகாலத்திலே பர்த்தாவிடத்தினின்றும் கர்ப்பத்தைத்தரித்து ஓர் புத்திரனைப் பெற்றாள்.

வேனனென்னும் நாமம் பூண்ட அப்புத்திரன் பாலனா யிருக்கும்போதே தன் தாயைப் பெற்ற பாட்டனாகியும் அதர்மத்தினுடைய அம்சத்தினாலே யுண்டானவனாயு மிருக்கிற மிருத்யுவினுடைய மார்க்கத்தைப் பிடித்து அதர்மத்திலே புத்தியுடையவனாய் வில்லை யெடுத்து வேடனைப்போல் வனங்களிலே சஞ்சரித்துக்கொண்டு ஒருத்தருக்கும் உபத்திரவம் புரியாத பிராணிகளையெல்லாம் அடிக்கத் தொடங்கினான். தன்னுடன் விளையாடுகிற பாலர்களையெல்லாம் இம்சித்தான். இப்படித் தீமைபுரியும் வேனனைக் கண்டோர் யாவரும் நடுங்கினர். அப்படிப்பட்ட துஷ்டனான புத்திரனைப் பார்த்து அந்த ராஜாவானவன் தண்டனை பண்ணுவதற்குச் சமர்த்தனாகாதவனாய்ப் புத்திர னில்லாத காலத்தில் எம்பெருமானை வெகு பிரகாரமாகப் பூசித்துக் கஷ்டப்பட்டதையும் புத்திரனுண்டான பின்பு உண்டான துக்கத்தையும் பார்த்துச் சகிக்கமாட்டாமல் அளவில்லாத ஐஸ்வரியங்களுக் கிருப்பிடமான தன்னுடைய கிருகத்தைவிட்டு அர்த்த ராத்திரியிலே எழுந்திருந்து மனுஷியர்களாலே காணப்படாதவனாய்ப் போனான். பிற்பாடு புரோகிதர்கள் மந்திரிகள் சிநேகிதர்கள் முதலான பேர்களும் ராஜாவானவன் மிகவும் விசனத்தினாலே வைராக்கியத்தை யடைந்து புறப்பட்டுப்போனவனாக அறிந்து யோகமார்க்கந் தெரியாதவர்கள் இருதயத்திலே மறைந்திருக்கிற பரமாத்மாவை யறியாமல் தேடுவது போல் பூமியெங்குந் தேடிக்காணாமல் திரும்பவும் பட்டணத்தே வந்து ஓரிடத்திலே கூடியிருக்கிற ரிஷிகளை நமஸ்கரித்து, கண்ணீருடனே கூடினவர்களாய் இராஜனைக் கண்டு பிடிக்க முடியாமற் போனதைச் சொன்னார்கள்.

## பதினான்காவது அத்தியாயம்



*வேனன் அரசை வகித்ததும் பிறகு கொடுங்கோன்மைக்காகச் சபிக்கப்பட்டதும் கூறப்படுகின்றது.*

### மைத்ரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! பிரம நிஷ்டர்களாலே பிருகு முதலான ரிஷிகளெல்லாம் லோகங்களுக்கு க்ஷேமத்தைச் சிந்தித்தவர்களாய் வீரமாதாவான சுனிதையை யழைத்துப் பிராணிகளுக்கெல்லாம் சம்மதிப்படாதவனான வேனனைப் பூமிக்கு ராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணினார்கள். அதி உக்கிரமான ஆக்கினையையுடைய வேனன் ராஜாவாய்ச் சிங்காசனத்தை ஏறினானென்று கேட்டு, சோரர்களெல்லாம் இந்த க்ஷணத்தில் சர்ப்பத்தினாலே பட்சிக்கப்பட்ட எலிகள் மறைவதுபோல் மறைந்து போனார்கள். அஷ்ட ஐசுவரியங்களினால் கர்வத்தை யடைந்தவனாயும் தர்மமாய் ராச்சியத்தை ரட்சிக்கிறதை விட்டவனாகியும் தன்னைத்தானே உகந்து கொள்ளுகிறவனாயு மிருக்கிற வேனன் அங்குசமில்லாத களிறு போலே ரதத்திலேறிப் பூமியையும் ஆகாசத்தையும் அலைக்கிறவன்போல் சஞ்சரித்துக் கொண்டு பிராமணர்களைப் பார்த்து நீங்கள் ஒரு இடத்திலேயும் யக்கியங்கள் தானங்கள் ஓமங்கள் பண்ணவேண்டாமென்று நாலாபக்கங்களிலும் பேரிசப்தத்தினாலே தகைந்து தர்மகாரியங்களை நிறுத்திவிட்டான். இப்படி துர்நடத்தையுடைய வேனனுடைய சேஷ்டையையும் ஜனங்களுடைய அபாயத்தையும் ரிஷிகள் பார்த்து இருதலைக்கொள்ளி எறும்புபோல் சோரர்களால் பிடிக்கப்பட்ட ராச்சியம் ராஜா இல்லாமையால் கெட்டுப்போமென்கிற பயத்தினாலே ராஜ்ஜியத்திற்கு இந்த வேனனானவன் ராஜாவாகப் பண்ணப்பட்டான். இவனாலும் ஜனங்களுக்குப் பயமுண்டாயிற்று. பால் புகட்டி வளர்க்கப்பட்ட பாம்பானது வளர்த்தவனுக்கே அனர்த்தத்தை உண்டாக்குவதைப்போல் நம்மாலே ராஜாவாகப் பண்ணப்பட்ட வேனன் பிரஜைகளுக்கே அனர்த்தத்தைப் பண்ணுகிறான். ஆனாலும் நம்மாலே ராஜாவாகப் பண்ணப்பட்டதினாலே அந்தப்பாவம் நம்மைச் சேராமலிருப்பதற்காக அவனை நல்லபடிப் பிரார்த்திப்போம் நம்முடைய வார்த்தையைக் கேளாமற் போனானாகில் லோகத்தைப் பிடித்ததினாலே கெட்டுப்போன அவனை நம்முடைய தேஜசினாலே தகித்துப் போடுவோமென்று

இந்தப் பிரகாரம் நிச்சயித்து அந்த வேனனை யடைந்து இஷ்ட வசனங்களினுலே சமாதானம் பண்ணி இதமான வார்த்தையைச் சொன்னார்கள்.

வாரும் ராஜ சிரேஷ்டனே! சமஸ்தமான லோகங்களுக்கும், லோக பாலர்களான தேவர்களுக்கும் தேவ போகங்களைக் கொடுக்கின்ற யக்கியங்களுக்கும் நியந்தாவாகியும் வேத ஸ்வரூபியாயும், தர்ம ஸ்வரூபியாயும் தபசினுலே ஆராதிக்கத் தக்கவராகியுமிருக்கிற பகவானை நானுவிதங்களான எக்கியங்களினுலே உனது க்ஷேமத்தின் பொருட்டு ஆராதித்துக் கொண்டு உன்னுடைய தேசத்திலேயிருக்கிற எங்களை தர்மத்தைப் பண்ண வேண்டாமென்று தகைய வேண்டாம். உன்னுடைய தேசத்தில் பிராமணர்களாலே பண்ணப்பட்ட யக்கியத்தினுலே ஆராதிக்கப் பட்டவர்களாயும் ஹரியினுடைய அம்சங்களாயுமிருக்கிற தேவதைகள் சந்துஷ்டர்களாய் உன்னுடைய இஷ்டத்தைக் கொடுப்பார்கள். அந்தத் தேவதைகளை அவமானம் பண்ண வேண்டாமென்று சொல்லுகின்ற ரிஷிகளைப் பார்த்து, வேனன் சொல்லுகிருன், வாருங்கள் பிராமணர்களே! நீங்கள் தெரியாதவர்கள். அதர்மத்தைத் தர்மமென்று அறிந்தவர்கள். விர்த்திகளைக் கொடுத்து ரக்ஷிக்கிற ராஜாவை விட்டு அன்னியனைப் பூசித்து, சகல போகங்களையும் கொடுக்கின்ற பர்த்தாவை விட்டுப் பரபுருஷனைப் பூசிக்கின்ற ஸ்திரீகள்போலானீர்கள். அப்படிப்பட்டவர்கள் இந்த லோகத்திலேயும் லோகாந்தரத்திலேயும் சுகத்தையடைய மாட்டார்கள். அந்த எக்கிய புருஷனுன விஷ்ணு பிரமா ருத்திரன் இந்திரன் வாயு எமன் சூரியன் பர்ஜன்னியன் குபேரன் சோமன் பூமி அக்கினி வருணன் மற்றுமுள்ள தேவதைகளும் ராஜாவினுடைய தேகத்திலேயே இருக்கிருர்கள். ராஜா சர்வ தேவமயன். ஆனபடியினுலே நீங்கள் என்னை யக்கியாதி கர்மங்களினுலே, த்வேஷத்தை விட்டவர்களாய்க் கொண்டு ஆராதியுங்களென்று சொன்னுன். பிராமணர்கள் தங்களுடைய மங்களமான பிரார்த்தனை பலியாமற் போனதுடன் தங்களையே அவமதித்து, பகவானையும் நிந்தித்ததைச் சகியாமல் அவனைச் சபித்து விட்டுத் தமது ஆசிரமங்களுக்குச் சென்றனர். பிறகு சுனிதையானவள் துதித்துக்கொண்டு மந்திரபூர்வகமான புத்திசாதுரியத்தினுலே அந்தப் புத்திரனுடைய சரீரத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்தாள். இப்படியிருக்க, ஒருக்கால் அந்தப் பிருகு முதலான ரிஷிகளெல்லாம் சரஸ்வதி தீரத்திலே ஸ்நானம்பண்ணி அக்கினி ஹோத்

திரங்களுடன் சத்கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில் பயங்கரமான தூளியானது பூமியில் நின்றும் எழும்பி, திகந்தங்களில் வியாபிக்கத்தக்க மகோத் பாதங்களுடன் லோகத்தினுடைய தனத்தை அபகரிக்கிறவர்களாகியும் ராஜா இல்லாமையினாலே ஒருத்தரை யொருத்தர் இம்சிக்கிறவர்களாகியு மிருக்கிற கள்ளர்களுடைய உபத்திரவத்தை யறிந்து இந்த ராஜ்ஜியத்திற்கு ராஜா இல்லாவிடில் கெட்டுப்போமென்றும் தர்மிஷ்டனான அந்த மகா ராஜாவினுடைய *வம்சமும் நசிக்கத்தகாதென்றும் ஆபத்தையடைந்த ஜனத்தைப் பார்த்து உபேக்ஷயா யிருக்கிறவர்களுடைய *தபசு உடைந்த பாண்டத்திலே யிருக்கின்ற ஜலத்தைப் போல் ஒழுகிப்போகுமென்றும் யோசித்து ரிஷிகள் மிருதனாயிருக்கிற அந்த வேனனுடைய தொடையைச் சீக்கிரமாகக் கடைந்தார்கள். அப்போது அந்தத் தொடையிலே காகத்தைப்போலே கறுத்தும் குட்டையான அங்கத்தையும் புருவநெரிப்பினாலே வக்கிரமான முகத்தையும் குட்டைகளான பாதத்தையும் பள்ளமான மூக்குநுனியையும் நீண்ட கபோலங்களையும் சிவந்த கண்களையும் சிவந்த மயிர்களையும் உடையவனாயிருக்கிற ஒரு புருஷனுண்டானான். அவன் ரிஷிகளுடைய பாதங்களிலே வணங்கி, தைரியத்துடனே நான் என்னசெய்கிறதென்று கேட்க, அந்தப் புருஷனைப் பார்த்து அந்த வேனன் செய்திருந்த பாபமெல்லாம் இந்த உருவமாய்ப் பிறந்தபடியா லிவனை ரிஷிகள் நிஷிதாவென்று சொன்னார்கள்.

ஆகையினாலே அவன் நிஷிதனானான். அவனுடைய வம்சத்திலே பிறந்தவர்களெல்லாம் நிஷிதர்களென்று குரூர ஜாதிகளாய்ப் பர்வதங்கள் காடுகள் இவைகளை இருப்பிடமாக உடையவர்களானார்கள். திரும்பவும் அந்த ரிஷிகளாலே கடையப்பட்ட அந்த ராஜாவினுடைய பாகுகளில் நின்றும் பகவதம்சங்களாய் ஸ்திரீ புருஷர்களான இரண்டு பேர்கள் பிறந்தார்கள். அவர்களைப்பார்த்து அந்த ரிஷிகள் பகவானுடைய அம்சமென்று அறிந்து மிகவும் சந்தோஷத்தையுடையவர்களாய் ஒரு வார்த்தை சொன்னார்கள். கேசவ ஸ்வரூபியான இந்த மகாபுருஷன் ராஜாக்களுக்கு முந்தினவனாகவும் கீர்த்தியை விஸ்தரிப்பிக்கிறவனாயும் பிருது வென்று பிரசித்தமான பெயரையுடையவனாகவும் ஆகப் போகிறான். சோபங்களான தந்தங்களையுடையவளாகியும் குணங்களையே பூஷணமாகவுடையவளாகியும் லக்ஷ்மி அம்சமாயுமிருக்கிற இந்த ஸ்திரீயானவள் அர்ச்சிசு என்று

பெயரையுடையவளாய் இந்தப்பிருதுவைத்தானே பர்த்தாவாக அடைந்து உத்தமஸ்திரீயாயிருக்கப் போகிறாளென்று பிராமணர்கள் ஸ்தோத்திரம் பண்ணினார்கள். கந்தருவர் கானம் பண்ணினர். சித்தர்கள் புஷ்பங்களை வருஷித்தனர். அப்சரஸ்திரீகள் நர்த்தனம் பண்ணினர். தேவதுந்திபி முதலான வாத்தியங்களை முழக்கினர். அவ்விடத்தில் எல்லாத் தேவர்கள் ரிஷிகள் பிதுர்க்கள் இவர்களுடன் ஜகத்குருவான பிரமதேவர் வந்தார். பிறகு வேனனுடைய பிள்ளையாகியும் ஸ்ரீ ஹரியினுடைய அடையாளமான சக்கரத்தை வலது கையில் ரேகையாக உடையவனாகியு மிருக்கின்ற பிருதுவுக்குப் பட்டாபிஷேகமகோற்சவம் ஆரம்பிக்கப்பட்டு உலகத்தினுள்ள பல ஜீவவர்க்கங்களும் தத்தம்மால் கூடிய திரவியங்களைக் கொடுத்து உதவவும் சகல ஜனங்களும் ஆனந்தமெய்தி ஆரவாரிக்கவும் பட்டாபிஷேகம் நிறைவேறியது. பிருது மன்னனும் தனது நாயகி அர்ச்சிசு என்பவளுடன் வேறொரு அக்கினியென விளங்கினான். அம் மகாராஜாவுக்குப் பிரமாவானவர் வேத மயமான கவசத்தையும், குபேரன் சொர்ணமயமான உயர்ந்ததோர் சிம்மாசனத்தையும், வருணன் செல்வத்தைப் பெருக்கிச் சந்திர வர்ணமாயிருக்கிற குடையையும், வாயு இரண்டு சாமரைகளையும் தர்ம புருஷன் ஓர் கீர்த்தி மாலையையும், இந்திரன் உத்தமகிரீடத்தையும், யமன் ஆக்கினைக்குச்சாதனமான தண்டத்தையும், சரஸ்வதி ஓர் ஆரத்தையும், உபேந்திரரான பகவான் சுதரிசன அம்சமான சக்கரத்தையும், இலட்சுமி நித்திய சம்பத்தையும், ருத்திரன் தேஜோ நிதியான உறையையுடைய கத்தியையும், பார்வதி சந்திராகாரங்களையுடைய கேடயத்தையும் சந்திரன் அமிர்தமய அஸ்வங்களையும், விஸ்வகர்மா ஓர் அழகிய இரதத்தையும், அக்கினி அஜகவ மென்னும் தனுசையும், சூரியன் கிரணமயமான பாணங்களையும், பூமிதேவி நினைத்தவிடத்திலே கொண்டுபோய் விடத்தக்க பாதுகைகளையும், ஆகாயம் நாள்தோறும் புஷ்ப வருஷத்தையும், சித்தர்கள் நாட்டிய கீதவாத்தியங்களிலே சாமர்த்தியத்தையும் அந்தர்த்தான சக்தியையும், ரிஷிகள் சத்தியங்களான ஆசீர்வசனங்களையும், சமுத்திரம் தன்னிடத்திலே பிறந்த சங்கத்தையும் கொடுத்தன. பின்னும் சமுத்திரங்கள் பர்வதங்கள் நதிகள் மகாத்மாவான பிருது சக்கரவர்த்தியின் இரதத்துக்கு மார்க்கத்தைக் கொடுத்தன. பிரதாபசாலியான பிருதுவானவன் தன்னை ஸ்தோத்திரம் பண்ண வந்தவர்களான சூதமாகத வந்திகளைப் பார்த்துப் புன்சிரிப்புடனே கம்பீரமாகச் சொல்லுகிறான்.

என்னிடத்தில் என்ன உயர்ந்த குணங்களைக்கண்டு ஸ்தோத்திரம் செய்யப்போகிறீர்கள். ஸ்தோத்திரங்களுக்குப் பாத்திரரான பகவானுடைய கல்யாண குணங்களைப் பாடுவதைவிட்டு வீணாக என் விஷயமாக உமது உயர்ந்த வார்த்தைகள் உபயோகப்படுவானேன்? பெரியவர்களுடைய கிருபைக்குப் பாத்திரனாகி மகத்துக்களுடைய குணங்களைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்னு மிச்சையுடைய நான் உங்கள் ஸ்தோத்திரத்திற்குடன்படேன். நான் உலகத்திலே சிலாக்கியமான கர்மங்களினாலே பிரசித்தியை அடைந்தவனன்று என்று அரசன் உரைப்பதைக்கேட்டு, சூதமாகதர்கள் ரிஷிகளினாலே ஏவப்பட்டு ராஜாவினுடைய அமிர்த வசனங்களினால் சந்தோஷ மடைந்தவர்களாய், அந்த ராஜாவை நோக்கி, தேவதேவரான பகவானுடைய அம்சமாகத் தாம் அவதரித்திருக்கின்றீர். உம்முடைய மகத்துவத்தை வர்ணிக்கிறதற்குப் பிரமாதிகளுடைய புத்திகளும் பிரமிக்குமெனின், நாங்கள் உம்மை ஸ்தோத்திரம் பண்ணுகிறதற்கு எப்படி சமர்த்தராவோம்? என்றாலும் ரிஷிகளுடைய ஆக்ஞையை மேற்கொண்டு எம்மால் கூடியபடி உமது சரித்திரத்தை எடுத்துக் கூறுவோமென்று பின் வருமாறு ஸ்தோத்திரம் செய்தனர்.

இந்தப்பிருது மன்னர் தர்மவான்களுக்குள்ளே சிரேஷ்டர். தர்மத்தினாலே ஜனங்களின் பிரீதியைப் பண்ணுகிறவர். தர்ம மரியாதைகளை ரக்ஷிக்கிற தர்மத்தைக் கெடுக்கிறபேர்களை ஒழிப்பவர். தன்னுடைய தேகத்திலே இந்திராதிலோக பாலர்களுடைய அம்சங்களை அந்தந்த அம்சத்தை அதிக்கிரமியாமல் அந்தந்தக் காலத்திலே பரிக்கிறவர் பாலன் போஷணாதிகளிலே பூலோகம் சொர்க்கலோகம் இவ்விரண்டுக்கும் அனுகூலமான காரியத்தைப் பண்ணுகிறவர். இந்த ராஜா சகல பிராணிகளிடத்திலும் சமனாயிருந்துகொண்டு, சூரியனைப்போல தேஜசினாலே பிரகாசித்து, கப்பம் வாங்குகிற காலத்திலே அர்த்தத்தைக் கிரகிக்கிறவராயும் க்ஷாமகாலங்களிலே அர்த்தத்தைக் கொடுக்கிறவராகியும் இருப்பவர் மிகவும் பொறுமையுந் தயையுமுடையவர். இந்திரன் வருஷியாமற் போனாலும் சீக்கிரமாக வருஷத்தை யுண்டாக்கி, கஷ்டத்தை யடைந்திருக்கிற பிராணிகளை ரட்சிக்கப்போகிறவராகியும், தனது அன்பினாலும் புன் சிரிப்பினாலும் பிரசன்ன முகத்தாலும் உலகத்துக்குத் திருப்தியுண்டாக்கப் போகிறவராகியும், சமுத்திர ராஜனைப்போல ஒருவரு மறியக்கூடாத உயர்ந்த நடையையுடையவராயும், பிறராலே அறியப்படாம

லிருக்கிற காரியசித்தியையுடையவராகியும் கம்பீரமான புத்தியை யுடையவராகியும் தனராசிகளை ரட்சிக்கிறவராகியும், அனந்த மகத்துவங்களை யுடையவராகியும் இருப்பவர். சர்வகாலமும் ஹரிசரணாரவிந்தங்கள் அகலாத மனமுடையவராகியும், சத்துருக்களினால் ஜயிக்கக்கூடாதவராகியும், சேரவிருந்தாலும் தூரமிருக்கிறவரை யொத்தவராகியு முள்ளவர். வேனனாகிற அராணியில் நின்றும் உண்டான இந்தப் பிருதுவாகிற அக்கினி ஒருவராலேயும் பராக்கிரமத்தினாலே அவமானம் பண்ணத்தக்கதன்று. பிராணிகளுக்குள்ளே வாசம் பண்ணுகின்ற பரமாத்துமாவைப்போல ஜனங்களினாலே வெளியாகப் பண்ணப்பட்ட கர்மங்களையும் அந்தரங்கமாகச் செய்விக்கப்பட்ட கர்மங்களையும் சாரர்கள் முகமாக அறிந்திருந்தாலும் அறியாதவர்போல இருக்கிறவராயும், தனது சத்துருவினுடைய பிள்ளையானாலும் தண்டிக்கயோக்கியனாகாதவனைத் தண்டிக்காதவராயும் தனது புத்திரனானாலும் தண்டிக்கத்தக்கவனைத் தண்டிக்கிறவராயும் சூரியன் தன்னுடைய கிரணங்களினாலே பூமி முழுமையும் எப்படி பிரகாசிப்பிக்கிறானோ, அப்படியே பூமி யெங்கும் தனது ஆக்ஞையைச் செலுத்துகிறவராகியும், திடமான விரதத்தை யுடையவராகியும், பெரியவர்களை உபாசிக்கிறவராகியும், சகல பிராணிகளுக்கும் ரட்சகராகியும் தீனர்களிடத்திலே வாற்சல்லியத்தையுடையவராகியும், பரஸ்திரீகளை மாதாவைப்போல் பார்க்கிறவராகியும், பிரஜைகளது க்ஷேமத்தைப் பிதாவைப்போல் கவனிக்கிறவராகியும், பிரமவாதிகளான ரிஷிகளுக்குத் தாசராகியும் இருப்பவர். சகல ஔஷதிகளையும் தனக்குள்ளே அடக்கி வைத்துக்கொண்டிருக்கிற பூமியைப் பராக்கிரமத்தினாலே கறக்கப்போகிறவராகியும் தன்னுடைய தனுசு முனையினாலே மேடுபள்ளமாயிருக்கிற இந்தப் பூமியை நாலாபக்கத்திலும் சமமாகச் செய்யப்போகிறவராகியும், திரிலோகாதிபனாய் நிர்விகாரனாய் அனந்த கல்யாண குணகணனாயுள்ள பரமாத்துமாவினுடைய அம்சாவதாரமென்று சொல்லப்படுகிறவராயும் தனிவீரராகி உதயகிரிபரியந்தமான பூமண்டலத்தை ரட்சிக்கப்போகிறவராகியும், ஜயப்பிரதமான இரதத்திலேறிக்கொண்டு வில்லுங் கையுமாய்ச் சூரியனைப்போல் பூமியை ரக்ஷிக்கும் நிமித்தமாய்ப் பிரதட்சணமாகச் சஞ்சரிக்கப்போகிறவராகியும், லோகபாலர்களுடனே கூடின ராஜாக்களிடத்திலும் கப்பம் வாங்கப்போகிறவராயும், விளையாட்டிலே பர்வதங்களையெல்லாம் தனது தனுசினுடைய முனையினாலே இந்திரனைப்போலே பிளந்து பூமியைச் சமமாகப்பண்ணிப் பிரஜைகளுக்கெல்லாம் விர்த்தியைப் பண்ணுகிறவராயும், அஜ

கவமென்கிற தனுசை யெடுத்துச் சப்தித்துக்கொண்டு சிங்கம் போலச் சஞ்சரிக்கிறபோது அந்தத் திக்குகளிலே யிருக்கிற சோரர்களை யெல்லாம் விரட்டி யோட்டுகிறவராயும், சாஸ்வதி சான்னித்திய முடையவராயும், நூறு அஸ்வமேதம்பண்ணித் தன்னுடைய ஸ்ருகசமீபத்திலேயிருக்கிற உததியான வனத்திலே சனற்குமாரரை யடைந்து பக்தியினாலே அவரை ஆராதித்து அவராலே பரப்பிரமத்தை அடையும்படியான ஞானத்தை அடையப்போகிறவராயும், சித்தமான கீர்த்தியை யுடையவராயும் பக்தி கியான பராக்கிரமங்களை யுடையவராகியும், அங்கங்கே தன்னுடைய ஸ்தோத்திர ரூபமான சரித்திரங்களைக் கேட்கப்போகிறவராயும், திக்குகளை யெல்லாம் ஜயித்து நிர்ப்பயமாகத் தமது ஆக்ஞையைச் செலுத்துகிறவராயும், தம்முடைய தேஜஸினாலே லோகத்தினுடைய சல்லியத்தைப் போக்கடிக்கிறவராயும், தேவாசுரர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்போகிறவராயு மிருக்கிற பிரபாவத்தை யுடையவராய்ப் பிரசித்தராகப் போகின்றார் என்று புகழ்ந்தார்கள்.



## பதினைந்தாவது அத்தியாயம்

*பூமிதேவியைத் தண்டிக்க முயன்ற பிருது சக்கிரவர்த்தியைப் பூமிதேவி பிரார்த்தித்தமை சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! இந்தப் பிரகாரம் பிருது சக்கரவர்த்தி குணங்களினாலேயும் தர்மங்களினாலேயும் பிரகாசிக்கப்பட்டவனாய் ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அந்தச் சூதமாகத வந்திகளைச் சந்தோஷிப்பித்து, பிராமணர்கள் தன்னுடைய சேவகர்கள் மந்திரிகள் புரோகிதர்கள் பட்டணத்து ஜனங்கள் தேசத்திலிருக்கிற ஜனங்கள் முதலானவர்களை யெல்லாம் நன்றாகப் பூசித்தானென்று சொல்லுகின்ற மைத்திரேயரைப் பார்த்து "ரிஷிசிரேஷ்டரே! நானாரூபையான இந்தப் பூமி எதற்காகக் கோவினுடைய ரூபத்தைத் தரித்தாள்? பிருதுவானவன் எதைக் கன்றாகவும் எதைக் கறக்கிறதற்குப் பாத்திரமாகவுங் கொண்டான்? சுபாவமாக மேடுபள்ளமாயிருக்கின்ற பூமியை எப்படி சம

மாகச் செய்தான்? அவனுடைய யக்கியசாதனமான அசு வத்தை இந்திரன் எதற்காக அபகரித்தான்? பிரமவித்துக்க ளுக்கெல்லாம் சிரேஷ்டராயிருக்கிற சனற்குமாரரிடத்தில் நின்றும் பிரம சாக்ஷாத்காரத்தையுடைய ஞானத்தையடைந்து எந்தக் கதியை அடைந்தான்?'' என்று வினவுகின்ற விதுர ரைப் பார்த்து மைத்திரேயர் சொல்லுகிறார்:—

அந்தப் பிருது சக்கரவர்த்தியானவன் பூமியிலே உணவு பதார்த்தங்கள் விளையாத காரணத்தால் பசியினாலே இளைத் துப்போன தனது பிரஜைகளைக் கண்டு, வெகுகாலம் ஆழ்ந்த யோசனையிலிருந்து ஒஷதீபீஜங்களைத் தனக்குள்ளே பூமி அடக்கி விட்டதினால் ஜனங்கள் பசியினாலே வருந்துகிறார்க ளென்று நிச்சயித்துப் பூமியின்பேரிலே கோபத்தையடைந்த வனாய்த் திரிபுரங்களைச் சம்மாரம்பண்ணின உருத்திரன்போல் கையிலே தனுசை எடுத்துக்கொண்டு பூமியை அடித்து விடு கிறேனென்று பாணத்தைச் சந்தானம் பண்ணினான் அப் போது பூமியானவள் ஆயுதபாணியான அந்தப் பிருது வைப் பார்த்து நடுங்கினவளாய், கோரூபத்தை யெடுத்துக் கொண்டு வேடனாலே துரத்தப்பட்ட மான் பேடுபோல் ஓடினாள். அந்தப் பிருதுவும் மிகக்கோபங்கொண்டு அவ ளைத் துரத்தித் தொடர்ந்தான். அந்தப் பூமிதேவி திக்கு விதிக்குகள் ஆகாசம் பூமி ஆகிய எவ்விடங்களில் ஓடி யும் விடாமல் பின்னே ஆயுதத்தை யெடுத்துக்கொண்டு ஓடிவருகின்ற பிருது சக்கரவர்த்தியைக் கண்டு பயந்து, மகானுபாவனாகியும் தர்மங்களை அறிந்தவனாயு மிருக்கிற சரணாகதவற்சலா! நீ என்னை ரட்சிக்க வேண்டும். தீனை யாயும் அபராத மில்லாதவளாயும் ஸ்திரீயாயுமிருக்கிற என்னை தர்மஜ்ஞனென்று சொல்லப்படுகின்ற நீ எப்படி கொல்ல நினைத்தாய்? மகா அபராதத்தைப் பண்ணியிருந் தாலும் ஸ்திரீகளை ஒருவரும் கொல்லத்துணிய மாட்டார் களே. உன்போன்ற மகானுபாவர்களுடைய மனதில் இத்த கைய எண்ணமும் உதிக்கலாமா? இவ்வுலகமோ என்னால் தரிக்கப்பட்டிருக்கிறது. மகாஜலத்திலே திடமான ஓடப்போ லிருக்கிற என்னைக் கொன்றுவிட்டு உன்னையும் இந்தப் பிரஜைகளையும் எப்படி தரிக்கப் போகிறாயென்று இந்தப் பிர காரம் சொல்லுகின்ற பூதேவியைப் பார்த்து சக்கரவர்த்தி சொல்லுகிறான்:—

பூமகளே! கேள், என்னுடைய ஆக்கினையைத்தள்ளி யக்கியத்திலே உண்டான அவிர்ப்பாகத்தையு மடைந்து

தானியாதிகளை உண்டாக்காதவளாயிருக்கிற உன்னைக் கொல்வதிலென்ன குற்றமிருக்கிறது? கோருபமாயிருந்துகொண்டு நாள்தோறும் திரணங்களைப் பக்ஷித்து மடியிலிருக்கின்ற பாலைக் கறவாமற்போனால், பொல்லாததாயிருக்கிற அந்தப் பசுவைத் தண்டிக்கிறதற்கென்ன தடை? மூடபுத்தியுள்ள நீ பிரமாவினாலே சிருஷ்டிக்கப்பட்ட ஒஷதிபீஜங்களைக் கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு வெளிப்படுத்தாமலிருக்கிறாய். பசியினால் பிடிக்கப்பட்டு மகா துக்கமடைந்திருக்கிற இந்தப் பிரஜைகளுடைய துக்கத்தை என்னுடைய பாணங்களினாலே பிளக்கப்பட்டிருக்கிற உன்னுடைய மாமிசத்தினாலே போக்கடிக்கப் போகிறேன். புருஷனாகட்டும், ஸ்திரீயாகட்டும், நபும்சகனாகட்டும், தன்னைத்தானே சிலாகித்துக்கொண்டு பிராணிகளிடங்களிலே தயையில்லாதவனெவனோ அவனைக் கொல்லுகிறது ராஜாக்களுக்குத் தோஷமன்று. மதித்தவளும் யுக்தமான காரியத்தைவிட்டவளுமான உன்னைக் கண்டங் கண்டமாகப்பண்ணி என்னுடைய யோகபலத்தினாலே இந்தப் பிரஜைகளைத் தரியச் செய்யப்போகிறேனென்று இந்தப்பிரகாரம் யமனைப்போலும் பயத்தைக் கொடுக்கக்கூடிய கோபமொழிகளையுரைத்த அந்தப்பிருது சக்கரவர்த்தியைப் பார்த்து இவன் ஸ்ரீமந்நாராயணனுடைய அம்சமுடையவனே யாகவேண்டுமென்று நிர்மானித்துத் தீனமான வசனங்களினால் ஸ்தோத்திரம் பண்ணுகிறாள்.

தேவரீருடைய சம்பந்தமான பிரகிருதியினாலே உண்டாக்கப்பட்ட நானாவிதமான தேவமனுஷ்யாதி சரீரங்களையும் சத்துவாதி குணங்களையும் உடையவராயும், தன்னுடைய ஆனந்தானுபவத்தினாலே ஆத்தியாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதி தெய்வீகமென்கிற மோககாரியங்களான ராகத்துவேஷாதிகளை விட்டவராயும் பரமபுருஷராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன். பிராணிகளுக்கெல்லாம் இருப்பிடமாகவும் சுவேதஜம் அண்டஜம் ஜராயுஜம் உத்பீஜமென்கிற பூதங்களால் தரிக்கப்படத் தக்கவளாயுமுள்ள என்னை நீர் இப்போது கொல்லவேண்டுமென்றால் நான்வேறு யாரிடம் அடைக்கலம் புகப்போகிறேன். ஆதிகாலத்திலே இந்தச் சராசராத்மகமான பிரபஞ்சத்தைப் பிரமாவினாலே சிருஷ்டித்த மாயையினாலே தானே ரக்ஷிக்கிறதற்கு ஏற்பட்டிருக்கிற நீர் என்னையே கொல்லவேண்டுமென்று இச்சிக்கிறீர். ஸ்வவசமில்லாத ஜனங்களினாலே ஈஸ்வரனுடைய இச்சையானது அறியப்படத் தக்கதன்று. காணப்படாதவரா

யிருந்துகொண்டு மகத்தத்துவ முதலாகப் பிரம பரி யந்தமுள்ள யாவையும் சிருஷ்டித்து, அந்தப் பிரமாவைக் கொண்டு பிரபஞ்சத்தையெல்லாம் சிருஷ்டி பண்ணுவித்த பரமபுருஷரான உமக்கு நமஸ்காரம். பகவானே! பஞ்சபூதங் கள் இந்திரியங்கள் மனது இந்த ரூபமான இந்த ஜகத்தை ஸ்தாபிக்கப் போகிறவராய் ஆதிவராக ரூபியாய், பாதாளத்தி லிருந்த என்னை ஜலத்தில் நின்றும் எடுத்தீர். இந்தப் பிரஜை களை ரட்சிப்பது நிமித்தம் நீர் பிருதுவாக அவதரிக்கிறீர். பகவானுடைய சத்துவாதி குணரூபையான மாயையினுலே மயங்கப்பட்ட யான் பாகவதர்களுடைய கருத்தையும் தேவரீ ருடைய மகிமையையும் எப்படி அறியப் போகிறேன்?



## பதினெட்டாவது அத்தியாயம்



பிருது சக்கரவர்த்தியின் முயற்சியால் பூமியினின்றும் ஸ்தாவர முதலிய பலன்கள் விளைந்தமை சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! கேளும், அந்த பூமகள் கோபத்தால் துடிக்கின்ற உதட்டையுடைய பிருது சக்கரவர்த்தியைப் பார்த்து மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு, மீண்டும் பிரார்த்திக்கிருள். பிரபுவே! கோபத்தை விட்டு எனது முறையைக் கேளும். வண்டானது புஷ்பத்தி லிருக்கிற மதுவைக் கிரகிப்பதுபோல் விவேகியானவன் சகல வஸ்துக் களின் சாரத்தையுங் கிரகிப்பான். தத்துவத்தை யறிந்த ரிஷிகளினுலே புருஷார்த்த சாதனங்களான உபாயங்கள் காணப்பட்டுஞ் செய்யப்பட்டு மிருக்கின்றன. பூர்வீகர்க ளாலே காண்பிக்கப்பட்ட உபாயங்களைச் சிரத்தையுடனே கைக்கொண்டவன் சீக்கிரமாகப் பலன்களை யடைவான். மற்றவர்களுக்குப் புருஷார்த்தங்கள் கைகூடுவதில்லை. அரச சிரேஷ்டரே! பிரமாவினுலே சிருஷ்டிக்கப்பட்ட ஓஷதிகள் விரதநியமங்கள் இல்லாத துஷ்டர்களாலே புசிக்கப்படுவன வாகவும் உம்மையொத்த ராஜாக்களாலே ரக்ஷிக்கப்படாதன வாயும் காணப்பட்டதால் அந்த ஓஷதிகளை நான் பக்ஷித் தேன். இப்போது பூர்வீகர்களாலே காண்பிக்கப்பட்ட உபாயத்தினுலே அந்த ஓஷதிகளை அடைகிறதற்கு நீர்

யோக்கியர். பிராணிகளுக்குப் பலத்தைத்தரும் இஷ்டமான அன்னத்தை யிச்சித்தால் நான் எந்தக் கன்றினிடத்திலே வாற்சல்லியத்தை யுடையவளாய் உமக்குப் பல ரூபங்களான மனோரதங்களைக் கொடுப்பேனா, அப்படிப்பட்ட கன்றையுங் கறக்கிறவனையுங் கறக்கத்தக்க பாத்திரத்தையும் எனக்கு நீர் கற்பிக்கவேண்டும். வருஷஜலமானது என்னிடத்திலே நிற்கும்படி சமமாகப் பண்ணவேண்டுமென்று பிரியமாயும் இதமாயு மிருக்கிற பூமிதேவியினுடைய வார்த்தையைக் கேட்டு, அந்த ராஜாவானவன் மனுப்பிரஜாபதியைக் கன்றாகக்கொண்டு தன்னுடைய கையாகிற பாத்திரத்திலே சகல ஓஷதிகளையுங் கறந்தான்.

பிற்பாடு ரிஷிகள் முதலாகப் பதினைந்துபேர் பிருதுவினாலே வசீகரிக்கப்பட்ட பூமியிலேயிருந்து தங்கள் தங்கள் இஷ்டத்தைக் கறந்துகொண்டார்கள். அதெப்படியென்றால், ரிஷிகள் இந்திரியங்களாகிற பாத்திரங்களிலே பிரகஸ்பதியைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு வேதமயமான சுக்கியான பாலைக் கறந்து கொண்டார்கள். தேவகணங்கள் இந்திரனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு ஸ்வர்ணமயமான பாத்திரத்திலே அமிர்தப்பாலைக் கறந்துகொண்டார்கள். தைத்திய தானவர்கள் அசுரசிரேஷ்டனான பிரகலாதனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு இருப்புமயமான பாத்திரத்திலே சுராமத்தியமான க்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள். கந்தர்வர்களும் அப்சரஸ்திரீகளும் விசுவாவசுவைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு பத்மமயமான பாத்திரத்திலே கானமயமான மதுவையும் சவுந்தரியத்தையும் க்ஷீரமாகக் கறந்துகொண்டார்கள். சிரார்த்த தேவதைகளான பிதுர்க்கள் அறியமாவைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு பச்சை மண்பாத்திரத்திலே பிதுர்க்களுடைய அன்னமான கவியமாகிய க்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள். சித்தர்கள் கபிலரைக் கன்றாகப் பண்ணிக் கொண்டு ஆகாசமென்கிற பாத்திரத்திலே அணிமாதி சித்திரூபமான க்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள். வித்தியாதரர்கள் அந்தக் கபிலரையே கன்றாகப்பண்ணிக்கொண்டு ஆகாசமென்கிற பாத்திரத்திலே ஆகாசத்திலே சஞ்சரிக்கிற வித்தையாகிற க்ஷீரத்தைக் கறந்துகொண்டார்கள். மாயாவிகளான கிம்புருஷர்கள் முதலானபேர் மயனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு அந்தர்த்தானமாய்ப் போகிற மாயையைக் கறந்துகொண்டார்கள். யக்ஷர்கள் ராக்ஷசர்கள் பூதங்கள் பிசாசர்கள் இவர்கள் ருத்திரனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு கபாலமாகிற பாத்திரத்திலே இரத்த

மாகிற மத்தியத்தைக் கறந்துகொண்டார்கள். சர்ப்பங்கள் விருச்சிகம் முதலான துஷ்ட ஜந்துக்களும் இரும்புமயமான பாத்திரத்திலே விஷமாகிற க்ஷீரத்தைக் கறந்துகொண்டன. பசுக்கள் ரிஷபத்தைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு காடென்கிற பாத்திரத்திலே திரணமாகிற க்ஷீரத்தைக் கறந்துகொண்டன. கோரைப்பற்களையுடைய மிருகங்கள் சிங்கத்தைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு தங்களுடைய சரீரமென்கிற பாத்திரத்திலே மாமிசமயமாகிற க்ஷீரத்தைக் கறந்துகொண்டன. பட்சிகள் கருடனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு புழுக்கள் பழங்கள் முதலான க்ஷீரத்தைக் கறந்துகொண்டன. விருட்சங்கள் ஆலமரத்தைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு அதற்கு வேறுவேறான வாசனையான பாலைக் கறந்துகொண்டன. பர்வதங்கள் இமவத்பர்வதத்தைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு தங்களுடைய தாழ்வரையிலே பொன்னருவி முதலான நானா தாதுக்களையும் க்ஷீரமாகக் கறந்து கொண்டன. இதர பிராணிகளும் தங்கள் தங்களிலே முக்கியமானவனைக் கன்றாகப் பண்ணிக்கொண்டு தங்களுடைய பாத்திரத்திலே வெவ்வேறான சர்வ காமங்களையுங் கறந்து கொண்டன.

வாரீர் குரு சிரேஷ்டரே! இவ்விதம் பிருது சக்கரவர்த்திமுதலான பேர்கள் பூமியில் நின்றும் தங்கள் தங்கள் பாத்திர பேதத்தினாலும் கன்று பேதத்தினாலும் தத்தமக்குரிய பலவித பலன்களையும் அடைந்தனர். பிறகு அந்தப் பிருது மன்னன் சர்வாபீஷ்டத்தையும் கொடுத்த அந்தப் பூமியினிடத்தில் வாற்சல்லியத்தை யுடையவனாய்த் தனக்குப் பெண்ணாகப் பாவனைபண்ணி அந்தப் பூமியைச் சமப்படுத்த எண்ணித் தன்னுடைய தனுசினாலே பர்வத சிகரங்களைச் சூரணமாகப் பண்ணி நாலு பக்கமும் சமமாகச்செய்து இந்தப் பூமண்டபத்திலே அங்கங்கே யோக்கியமாகப் பிரஜைகளுக்குக் கிராமங்களையும் நகரங்களையும் பட்டணங்களையும் நானாவிதங்களான கிரிதுர்க்கங்களையும், ஜலதுர்க்கங்களையும் வனதுர்க்கங்களையும் வேடச்சேரிகளையும் இடைச்சேரிகளையும் தண்டிருக்கத்தக்க இடங்களையும் சுவர்ணம் முதலான தாதுக்களின் உற்பத்தி ஸ்தானத்தையும் உழுகிற நிலங்களும் பர்வத சமீபங்களிலே இருக்கப்பட்ட கொல்லைகளும் இவைகளை யெல்லாம் கற்பித்தான். இந்தப் பிருது சக்கரவர்த்தி அவதாரத்துக்கு முன்னே பட்டணம்

கிராமம் முதலான வாச ஸ்தானங்களில்லை. எவனெவனுக்கு எங்கெங்கே இஷ்டமோ, அந்தந்த இடங்களிலே பயமில்லாமல் சுகமாக வாசம்பண்ணிக் கொண்டிருப்பார்கள்.



## பதினேழாவது அத்தியாயம்



*அசுவத்தை யபகரித்த இந்திரனைக் கொல்ல நினைத்த பிருதுவைப் பிரமதேவர் வந்து தடுத்தமை சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! பின்னர், ராஜரிஷியான அந்தப் பிருது சக்கரவர்த்தியானவன் சரஸ்வதி நதிதீரமான பிரமாவர்த்தமென்கிற புண்ணிய க்ஷேத்திரத்திலே அசுவமேதம் பண்ணக்கடவோமென்று நிச்சயித்துத் தொண்ணூற்றொன்பது அசுவமேதஞ் செய்து நூறுவது அசுவமேதஞ் செய்ய ஆரம்பித்தான். பிருதுவினுடைய அந்த யக்கிய மகோற்சவத்தைப் பார்க்க யக்கியங்களுக்கெல்லாம் ஸ்வாமியாயும் பிரபுவாயுமிருக்கிற விஷ்ணுவானவர் பிரமருத்திராதிகள் அஷ்டதிக்குப் பாலர்களுடன் கூடினவராய் எழுந்தருளினர். கந்தர்வர் ரிஷிகள் அப்ஸரஸ்திரீகள் சித்தர் வித்தியாதரர்கள் தைத்தியர் தானவர்கள் யக்ஷர்களும் சுனந்த நந்தர்கள் முதலான அரியினுடைய பாரிஷத சிரேஷ்டர்களும் கபிலர் நாரதர் தத்தாத்திரேயர் சனக சனந்தனர்கள் முதலான யோகீசுவரர்களும் மற்றுமுள்ள பகவத் சேவா பரர்களான பாகவதர்களும் சேவித்துக்கொண்டு பின் சென்றார்கள். அந்த யக்கியத்தில் சர்வகாமங்களையும் கொடுக்கப்பட்ட பூமியானவள் நெய் முதலான அபீஷ்டார்த்தங்களை ராஜாவுக்குக் கொடுத்தனள். நதிகள், கரும்புரசம் திராட்சைரசம் முதலான ரசங்களையும் பால் தயிர் மோர் நெய் பாயசம் அன்னம் இவைகளைப் பெருக்கின. விருக்ஷங்கள் மதுரமாயிருக்கிற பலன்களை உண்டாக்கின. சமுத்திரங்கள் இரத்தின ராசிகளைக் கொடுத்தன. பர்வதங்கள் நாலுவகைப்பட்ட அன்னத்தைக் கொடுத்தன. சமஸ்தமான ஜனங்களும் ராஜாக்களும் உலுப்பைகளைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். இப்படிப்பட்ட நாராயண அம்சமான பிருதுவினுடைய அதிகமான ஐசுவரியத்தைச் சகியாதவனாய் இந்திரன் அந்த யக்கியத்துக்கு விக்கினம்பண்ண இச்சித்துப் பிருது சக்கரவர்த்தியினுடைய கண்ணுக்குத் தட்டாமல் பாஷண்ட வேஷமாய் அந்த

பக்கிய அசுவத்தை அபகரித்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பிப்போனான். அந்த இந்திரனை அத்திரி மகா ரிஷியானவர் கண்டு மகாரதனுனை பிருதுவின் புத்திரனுக்குக் காட்டினார். அவன் கோபத்தை யடைந்தவனுய்ப்பின்னே துரத்திக்கொண்டுபோய் நில் நில்லென்று சொல்லிக்கொண்டு தர்மமயமான சரீரத்தை யுடையவனுகியும் ஜடாதாரியாயும் பஸ்மத்தினுலே பூசப்பட்டு மிருக்கிற தபசியாக எண்ணி அவன்பேரில் பாணத்தைப் பிரயோகியாமல் திரும்பிவிட்ட பிருது புத்திரனைப்பார்த்து அத்திரி மகா ரிஷியானவர் திரும்பியும் அவனைக் கொல்லும்படி ஏவினர்.

அந்தப் பிருது குமாரன் ஆகாய மார்க்கத்திலே ஓடுகின்ற இந்திரனைத் துரத்தினன். அந்த இந்திரன் அந்த அசுவத்தையும் அந்த வேஷத்தையும் விட்டு மறைந்தான். பிருது குமாரன் யக்கியக் குதிரையைக் கிரகித்துக் கொண்டு தகப்பனுருடைய யக்கியசாலையை யடைந்தான். அவனுடைய அற்புத காரியத்தைப் பார்த்து மகா ரிஷிகள் விசிதாசுவனென்கிற பேரைக் கொடுத்தார்கள். திரும்பவும் இந்திரன் காடாந்தகாரத்தைச் சிருஷ்டித்து அதிலே மறைந்து கொண்டு திரும்பவும் அந்த அசுவத்தை அபகரித்துக் கொண்டு ஆகாய மார்க்கத்திலோடினன். அவனைப் பார்த்துத் திரும்பவும் அத்திரி மகா ரிஷியானவர் பிருது குமாரனுக்குக் காண்பித்தார். அந்த விசிதாசுவன் இந்திரனைக் கொல்லாமல் விடுகிறதில்லையென்று தனுசிலே பாணத்தைச் சந்தானம்பண்ண, இந்திரன் அந்த அசுவத்தையும் அந்த வேஷத்தையும் விட்டு அவன் கண்ணிலே படாமல் மறைந்திருந்தான். திரும்பவும் வீரனுன விசிதாசுவன் அசுவத்தைக் கிரகித்துக்கொண்டு மீண்டான். சத்புருஷர்களாலே நிந்திக்கப்பட்ட அந்த இந்திரன் தரித்த ரூபம் பாஷண்டமென்று சொல்லப்படுகின்றது. ஜயினர்கள், பௌத்தர்கள், கபாலிகர்கள் இவர்கள் தர்மம்போலே காணப்படுகின்ற அந்தப் பாஷாண்ட வேஷத்தில் விருப்பமுடையவர்களாய்த் தரிக்கின்றூர்கள். அதன் பிறகு ஞான சக்தி சம்பன்னனுன பிருது சக்கரவர்த்தி கோபத்துடன் இந்திரனைக் கொல்லுகிறேனென்று வில்லிலே பாணத்தைச் சந்தானம் பண்ண, அவனைப் பார்த்து ரித்துவிக்குகள் இந்த எக்கியத்திலே விதிக்கப்பட்ட பசுவதமன்றி வேறொரு இம்சை செய்தல் கூடாதென்று நிறுத்தி, அந்த இந்திரனை மகத்தாகிய சக்திகளையுடைய ஆகுதிகளினுலே அக்கினியிலே ஓமம் பண்ணிப் போடுகிறோமென்று சொல்லி அவனனுமதி பெற்று சுருக்கு

என்கிற ஓம பாத்திரத்தால் ஓமம் பண்ணுகின்ற ரித்விக்கு களை நோக்கிப் பிரமா சொல்லுகிறார்: ரித்விக்குகளே! இந்திரன் பகவத் சொரூபியாயிருந்து யக்கியத்தினால் பூசிக்கப் பட்டவன். இவனைக்கொல்ல உங்களால் சக்கியப்படாதென்று நிறுத்தி, இந்தப் பிருதுவானவன் ஒன்று குறைய நூறு அஸ்வமேதம் பண்ணினதினாலேயே கோனசதக்கிருது வென்று பிரசித்தனாய் இந்திரனைக் காட்டிலும் அதிசயித்த கீர்த்தியையுடையவனாயிருக்கக் கடவனென்று சொல்லி, பிருதுவைப் பார்த்து, பிருதுவே! உன்னாலே செய்யப்பட்ட எக்கியங்கள் போதும். மோட்ச தர்மத்தை அறிந்த நீ இந்திரனிடத்தில் கோபம் வையாமல் பகவத் ஸ்வரூபியான நீங்களிருவரும் அன்னியோன்னியமாய் இருங்களென்று சொன்னார். பிருதுவும் இந்திரனுடன் விரோத எண்ணத்தை விட்டு, சினேகம் பூண்டு, ஸ்னானஞ்செய்து தேவதைகளால் அடைய வேண்டிய வரத்தை யடைந்துபிராமணர் முதலியயாவருக்கும் வேண்டியன உதவி, யாவரையும் திருப்தி செய்தான்.



## பதினெட்டாவது அத்தியாயம்



மகா விஷ்ணு பிருது மன்னனுக்குத் தத்துவோபதேசம் செய்து வரங்கொடுத்தமை சொல்லப்படுகின்றது.

### மைத்திரேயர் வாக்கியம்

அச்சுதனுடைய அடிமலர்களை அகமலரிலிருத்தும் ஆரியரே! கேளும். பிருதுசக்கரவர்த்தியினாலே நிறைவேற்றப்பட்ட யக்கியங்களுக்குச் சந்தோஷித்து ஸ்ரீ முகுந்தனனவர் இந்திரனுடன் பிருது சக்கரவர்த்தியை நோக்கிச் சொல்லுகிறார். அரசனே! இந்திரன் உன்னுடைய யாகத்துக்கு விக்கினம் செய்ததற்கு நீ பொறுத்துக் கொள்ளவேண்டும். சாதுக்களாயும் உத்தமர்களாயு மிருக்கிற ஞானிகள் பிராணிகளுக்குத் துரோகஞ் செய்யார்கள். இந்தச் சரீரம் புண்ணிய பாபமென்கிற இருவினைகளின் விளைவெனக் கண்ட ஆத்மக்கியானியானவன் இந்தச் சாரத்தில் ஆசக்தியைச் செய்யான். ஆத்மாவான ஜீவனைக்காட்டிலும் பரமாயிருக்கின்றவன் ஈஸ்வரன். தேகத்தை ஆசிரயித்திருக்கிற தர்மங்கள் தேகத்தை ஸ்பரிசித்துக் கொண்டிருக்கிற ஆத்மாவுக்கில்லை. தேகம் பாலிய கௌமாராதி பேதத்தினாலே அநேக ரூபமாயும் தோஷத்துடனே கூடினதாயும் ஞான சூனியமாயும் சத்வாதி

குணத்தோடே கூடினதாயும் மாயாகுணங்களையுடையதாகி யும் அல்பமாயும் கிருகாதிகளிலே அடங்கினதாயும் ஈஸ்வர ஞலே காணப்பட்டதாயும் ஆத்துமாவையுடையதுமாகியு மிருக்கிறது. இந்தத் தேகத்திலேயிருக்கிற அந்தராத்மாவை அறிந்தவன் தேக குணங்களிலே அகப்படாமல் பரமாத்து மாவான என்னிடத்திலேயே இருப்பான். எவனொருவன் சிரத்தையுடையவனாய் என்னையே பஜனை பண்ணுகிருனே, அவனுடைய மனம் சுத்தப்பட்டு, பிரகாசமான ஆத்மக்கியா னத்தை யடைந்து மோட்சமெய்துவன். சுக துக்கங்களையும் உத்தம மத்திம அதமர்களையும் சமமாகப் பார்க்கிறவனாயும் இந்திரியங்களை ஜயித்தவனாயு மிருக்கிற நீ நம்மாலே உண் டாக்கப்பட்ட மந்திரி முதலிய சமஸ்த பரிவாரங்களுடன் பிரஜைகளை ரட்சிக்கிறதே உத்தமமான தர்மம். இன்னும் சிறிது காலத்தில் உனக்கு ஸனகாதி தவசிரேஷ்டர்களின் தரிசனம் உண்டாகப் போகிறது. அவர்களிடத்தினின்றும் உனக்கு வேண்டியதைப் பெற்றுக்கொள். என்றிவ்வித முரைத்த பகவானுடைய அமிர்த வசனங்களைக் கேட்டு ஆனந்தமடைந்தவனாய், பிருது சக்கரவர்த்தி தான் செய்த அபராதத்திற்காக வெட்கப்பட்டுக் கொண்டிருக்கின்ற இந்தி ரனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு முராஹரியான ஸ்ரீ பக வானை நமஸ்கரித்து அஞ்சலியஸ்தத்துடன், நாதனே! பெரியவர்களுடைய இருதய மத்தியத்தில் நின்றும் வெளிப் புறப்படுகின்ற உம்முடைய பாதாரவிந்தங்களின் மகத்தான கீர்த்தியைக் கேட்கிறதற்குப் பதினாயிரஞ் செவிகளை யருள வேண்டும். பெரியவர்களுடைய உறவும் உம்முடைய மங்கள கரமான கீர்த்தியைக் கேட்கவேண்டுமென்கிற முயற்சியுமல் லாமல் வேறெதையாகிலும் கோருகிறவன் ஒரு மூடமான பசுவுக்குச் சமமானவன். சாரத்தை யறிந்தவன் எவன்தான் அந்தக் குணானுபவத்தில் நின்றும் ஒழிவன்? கல்யாண குணாகரராயும் புருஷோத்தமராயுமிருக்கிற உம்மை லக்ஷ்மி யானவள் சரணமாக அடைந்தாற்போல் நானுமடைந்தேன். எங்களிருவருக்கும் நீர் ஒரு புருஷனாயிருக்கிறபடியால் எங்க ளுக்குக் கலகமுண்டாகாமற் போகும்படி எங்களுக்குச் சம மாக இதத்தைப் பண்ணுமென்று பிருதுவினால் தோத்திரம் பண்ணப்பட்ட பகவான், அந்தப் பிருதுவைக் குறித்துச் சொல்லுகின்றார்: அரசனே! பக்தி மிகுதியால் நீயுரைத்தன யாவும் உண்மையே. சாதாரண ஜனங்கள் பசுவாதி பலன் களைக் கோருகிறார்கள். நம்மிடத்தில ஆசக்தி யுடையவர்கள் சொர்க்க மோட்ச நரகங்களைச் சமமாகப் பார்ப்பார்கள். உன் னிடத்தில் நான் சந்தோஷித்தேன். எனது ஸ்வரூப

சிக்ஷையை விசுவசித்து, பிரகிருதி தேகப்பமான தோஷத்தை விட்டு, அர்த்தயுக்தமாய்ச் சொன்ன வார்த்தைக்குச் சந்தோஷித்தேன். உனக்கு மங்கள மூண்டாகக்கடவதென்று அனுக்கிரகித்து, அவனுடைய மனதை அபகரித்துக்கொண்டு, தம்முடைய ஸ்தானத்தை யடைந்தார். பிற்பாடு தேவர்கள் ரிஷிகள் பிதுர்க்கள் முதலிய யாவரும் பிருது மன்னனால் மல விதமாசப் பூசிக்கப்பட்டுத் தத்தமது இடம் சென்றனர். கந்தர்வர்கள் சித்தர்கள் சாரணர்கள் உரகர்கள் கின்னரர்கள் அப்சர ஸ்திரீகள் மனுஷியர்கள் பக்ஷிகள் மூகங்கள் இவர்களெல்லாரும் பகவத் ஸ்வரூபமென்று பக்திகளினாலே வெகு பிரகாரமாகப் பூசிக்கப்பட்டவர்களாய்த் தங்கள் ஸ்தானத்தை யடைந்தார்கள்.



## பத்தோன்பதாவது அத்தியாயம்



*மகா சத்திர மென்னப்பட்ட யக்ஞத்தில் தேவதைகள் முதலான பேருடைய மகா சதசில் பிருதுவினாலே பண்ணப்பட்ட பிரஜைகளினுடைய அலங்கார சிருஷ்டி சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்

விதுரரே! அந்தப் பிருதுசக்கரவர்த்தியானவன் முத்து மாலைகள் புஷ்பமாலைகள் வெண்பட்டுகள் சொர்ண தோரணங்கள் இவைகளினால் அலங்கரிக்கப்பட்டும், மிகவும் பரிமளித்துக் கொண்டிருக்கிற அகிற்கட்டை சந்தனக் குழம்புகளாலே நனைக்கப்பட்ட நாற்சந்திவீதிகளை யுடையதாகியும், புஷ்பங்கள் அக்ஷதைகள் பலங்கள் பச்சை நிறங்கொண்ட நெற்கதிர்க் கற்றைகள் தீபங்கள் குலைகளுடனே கூடின வாழைமரங்கள் சிறு பாக்கு மரங்கள் துளிர்களினாலே கட்டப்பட்ட மாலைகள் இவைகளினால் நாலண்டையும் அலங்கரிக்கப்பட்டதுமான பட்டணத்தில் பிரவேசித்தான். அவனை சர்வாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்ட ஸ்திரீகள் கன்னிகைகள் தீபங்களையும் தயிர் முதலான மங்கள திரவியங்களையும் ஏந்தி எதிர்கொண்டு வந்து ஸ்தோத்திரஞ் செய்யப் பிராமணர்கள் சுவஸ்திவசனங்கூற சங்கம் துந்துபி முதலான வாத்தியங்கள் முழங்கத் தன்னுடைய கிரகத்திலே பிரவேசித்திருந்தான். சிலநாள் சென்ற பிறகு, தன்னுடைய கீர்த்தியை உலக முழுதும்

பரவச் செய்யக்கூடிய மகா சத்திரமென்கிற யாகத்தைப் பிருது சக்கரவர்த்தி செய்ய ஆரம்பித்தான். அந்த யாகத்திற்கு வந்த தேவதைகள் பிரம ரிஷிகள் ராஜ ரிஷிகள் இன்னம் பூஜ்யர்களாகிய சமஸ்தமான பேர்களையும் தகுந்தபடி உபசரித்து வரவேற்றனன். கிருஷ்ணாஜின ஆசனமும் தர்ப்பைப் பவித்திரத்தைக் கையிலே யணிந்தும் உசித கர்மங்களைப் பண்ணினவனுகியும் கிருபை நிறைந்த குளிர்ந்த பார்வையுடையவனுகிய அந்தப் பிருது சக்கரவர்த்தி அந்தச் சத்திர யாகமத்தியிலிருந்து சந்திரன் உதயமானாற்போல் எழுந்திருந்து நாலுபக்கமும் பார்த்து, சபையிலே யிருக்கின்றவர்களைச் சந்தோஷிப்பிக்கக்கூடிய செவிக்கினிய சொல்லாகியும் கம்பீர அர்த்தங்களையுமுடைய வசனங்களை உரைப்பானுயினன்.

இச்சபையிலே நிறைந்த மகா ஜனங்களே! தர்மத்தையறியவேண்டுமென்கிற பேர்கள் தங்கள் மனதில் இருக்கிற அர்த்தத்தைச் சத்புருஷர்களிடங்களிலிருந்து சிரவணஞ் செய்யவேண்டும். லோக கர்த்தாவான பகவானுல் பிரஜைகளுக்குத் தண்டநாயகனுக நியமிக்கப்பட்ட அடியேன் சொல்வதைக் கொஞ்சம் கவனித்துக் கேட்கவேண்டும். தர்மத்தைச் செய்கிறவன் அதை ரக்ஷிக்கிறவன் அதைப்பார்த்து சந்தோஷப்படுகிறவன் இந்த மூன்றுபேருக்கும் பலன் சமானமாயிருக்குமென்று நீங்கள் ஒப்புக்கொண்டிருக்கிறபடி தர்மத்தில் மோகப்பட்டு விசனத்தையடைந்த வேனனும் அவனுக்குச் சமானமானவர்கள் சிலபேரும் தவிர மற்ற மனுப்பிரஜாபதி உத்தானபாதன் துருவன் பிரியவிரதன் என்னுடைய பாட்டனை அங்கராஜன் பிரமா சிவன் பிரகலாதனன் பலிச்சக்கரவர்த்தி இவர்கள் தர்மார்த்தகாமங்கள் சொர்க்கம் மோட்சம் இவைகளுக்கு ஏகரூபமான ஏதுவாகியும் கர்மபலன்களைக் கொடுக்கிறவராயும் இருக்கிற பரமேஸ்வரர் ஒருவரிருக்கிறுரென்று நிச்சயம்பண்ணியிருக்கிறுர்கள். அந்த ஈஸ்வரனுடைய பாதாங்குஷ்டத்தில் உண்டான கங்கையினிடத்திலே ஸ்னுனம்பண்ணினவனுடைய பாபத்தைப்போக்கத்தக்க திருவடிகளையுடைய பகவானைச் சேவிக்கிறவன் சம்சார துக்கத்தையடையான். நீங்களும் குணமான கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு அந்தப் பகவானை பஜனை செய்யுங்கள். அக்கினியானது விளைவான தாருவிலிருந்தாலும் வெளிப்படப் பிரகாசிப்பதுபோல் யாகாதி கிரியாபலமாகவும் பகவான் அறியப்படுகின்றுர். சர்வகாலமும் பூமியில் திடமான விரதத்தையுடையவர்கள் எனக்கு மிகவும் இஷ்டமென்றறியுங்கள்.

யக்கியத்தைப் பூசிக்கின்ற இந்திராதி தேவதைகளுக்கு அதிஷ்வரனாகியும் ஜகத்குருவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியைத் தங்களுடைய கர்மயோகத்தினால் ஆராதிக்கிறவர்கள் எனக்கு அனுக்கிரகத்தைப் பண்ணுகின்றவர்களாவார்கள். சம்பத்துக்களையுடைய ராஜகுலத்தின் பிரபுத்துவமானது தவசினாலும் வித்தையினாலும் விளங்காநின்ற பிராமண குலத்தினாலே விருத்திசெய்யப்படுகின்றது. புராண புருஷராயும் பூஜ்யர்களுக்கெல்லாம் சிரேஷ்டராயு மிருக்கின்ற ஸ்ரீ ஹரியானவர் நித்திய மகாபிராம நிஷ்டர்களான பிராமணர்களுடைய சேவையினால் ஒருக்காலும் பிரியாமலிருக்கிற லக்ஷ்மியையும் ஜகத்துக்குப் பாவனமாகிய எஸஸையும் அடைந்தார். அத்தகைய மகிமையுடைய பிராமணர்களைப் பகவதாக்கினையை வழுவாதவர்கள் சேவிக்கவேண்டும். பிராமண குலத்தை நித்தியமாய்ச் சேவிக்கிற புருஷனுக்கு ஞானாப்பியாச மில்லாமற் போனாலும் சுபமாகத்தானே சீக்கிரமாகப் பரிசுத்தனாவான். அப்படிப்பட்ட பிரம குலத்தைக் காட்டிலும் தேவதைகளுக்கு வேறே என்ன இருக்கின்றது. சர்வமும் பகவத்சொரூபமென்று அறிந்தபேர்கள் செய்கிற யாகத்தில் கொடுக்கப்பட்ட அவிசைப் பிராமணர்களுடைய மூலமாய்ப் புசிக்கிறார்களேயன்றி அசேதனமான அக்கினியிலே ஓமம் பண்ணப்பட்ட அவிஸைப் புசிக்கிறதில்லை. சகல பிரபஞ்சமும் கண்ணாடிபோல் பிரகாசிக்கிற வேதத்தை நித்தியமாக, சிரத்தையுடன் அத்யயனஞ்செய்து பிரமசாக்ஷாத்காரத்தையடைகிற பிராமணர்களுடைய பாதாரவிந்தரேணுவை நான் கிரீடத்தின்பேரில் ஆயுசுள்ளமட்டுந் தரிக்கின்றேன். அந்த ரேணுவை நித்தியமாகத் தரிக்கிறவனுக்குச் சீக்கிரமாகப் பாவமெல்லாம் நசிக்கும். அவனை சமஸ்தமான சற்குணங்களும் அடையும். குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாகியும் சீலத்தைத் தனமாகவுடையவனாகியும் நன்றிமறவாதவனாகியும்பெரியவர்களை உபாசிக்கிறவனாயுமிருக்கின்றவனைச் சம்பத்துக்கள் தானே அடையும். அப்படிப்பட்ட பிராமண குலமும் கோக்களுடைய குலமும் பக்தர்களுடன் கூடின ஸ்ரீ ஜனார்த்தன சுவாமியும் எனக்குப் பிரசன்னமாகக் கடவர்களென்றான். அவ்வினிய மொழிகளைக் கேட்டு, பிதுர்க்கள் தேவர்கள் பிராமணர்கள் முதலியோர்

சந்தோஷித்து, சற்புத்திரனால் லோகங்கள் ஜயிக்கப்படு மென்று சொல்லுகின்ற சுருதிப்பிரமாணம் சரியானதே. பிராமண சாபத்தினால் அடிக்கப்பட்ட வேனனும், பகவானை நிந்தித்ததினால் நரகத்துக்கு யோக்கியனான இரணியகசிபும் பிள்ளைகளுடையபிரபாவத்தினால் நரகத்தைத்தாண்டினார்கள்.



## இருபதாவது அத்தியாயம்



*ஸ்ரீஹரியினால் ஏவப்பட்டு, சனற்குமாரர் பிருது சக்கரவர்த்திக்கு உத்தமமான ஞானோபதேசம் செய்ததை சொல்லப்படுகின்றது.*

மைத்ரேயர் வாக்கியம்

விதுரரே! கேளும், இந்தப்பிரகாரம் பிருது சக்கரவர்த்தியை ஜனங்கள் ஸ்தோத்திரஞ் செய்கிறபோது, அந்த மகா சதசிலே சூரியனுக்குச் சமானமான தேஜஸையுடைய ஸனகாதியோகிகள் வந்தார்கள். ஆகாசத்தில் நின்று இறங்குகின்ற அவர்களைக் கண்டு ராஜாவானவர் சபையிலிருக்கின்ற ஜனங்களுடனே ஜீவாத்மாவானவன் சப்தாதி விஷயங்களைப் பார்த்து எழும்புவதுபோல் அந்த யோகீஸ்வரர்களை எதிர்கொண்டு அர்க்கியம் முதலான உபசாரத்தால் பூசித்து ஆசனங்களில் எழுந்தருளப்பண்ணி, திருவடிகளைத் துலக்கி அந்தத் தீர்த்தத்தைத் தன்னுடைய சிரசிலே தரித்துப் பிரகாசிக்கும் அக்கினி போலவும் பரமசிவனுக்கு முன்னே பிறந்தவர்களாயுமிருக்கிற அந்த யோகிகளைப் பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லுகிறார்:—

மங்களத்துக்கெல்லாம் ஸ்தானமாயிருக்கிற யோகிகளே! உங்களுடைய தரிசனங் கிடைக்கும்படி பூர்வத்தில் என்ன பாக்கியஞ்செய்தேனோ அறிகிலேன். தேவரீர்களுடைய சத்தரிசனங் கிடைத்த புருஷனுக்கு என்ன குறைவிருக்கின்றது. அந்தரியாமியான புருஷன் காண்பதற்கரிதாயிருப்பதுபோல் தேவரீர்களுங் காணுகிறதற்குத் துர்லபமாக இருக்கிறீர்கள் பகவத் பக்தர்கள் நாடுகிற இடம் தரித்திரனுடைய இடமாயிருந்தாலும் மகைசுவரியமுடைய இடமாகச் சொல்லத்தக்கது. சப்தாதி விஷயங்களைப் புருஷார்த்தமாக எண்ணி இந்தச் சம்சாரத்தில் உழலுகிற நாங்கள் பிறவித் துன்பத்தைக் கடந்து உய்யும்வழி எதுவோ அதை பகவத் ஸ்வரூபிகளான நீங்கள் அருளிச் செய்யவேண்டுமென்று

வினவுகிற அரசனை நோக்கி சனற்குமாரர் புன்சிரிப்புடனே சொல்லுகிறார்: அரசரேறே! சர்வபூதங்களுக்கும் சுகத்தை யிச்சித்த உன்னால் நல்ல பிரசினம் பண்ணப்பட்டது. காமரூபமான மலத்தைப் போக்கடிக்கத்தகுந்த பகவத்பாதாரவிந்தத்தின் குணங்களைக் கேட்கிறதில் ஆசக்தியும் சரீரகிருகாதிகளிடத்தில் விரக்தியும் உனக்கு எப்போது முண்டாயிருக்கிறது.

சிரத்தையினாலே பகவத் கைங்கரியமும் யோகநிஷ்டையும் யோகசிரேஷ்டர்களுடைய சேவையும் புண்ணிய கதைகளைக் கேட்கிறதும், அர்த்த காமிகரிடத்தில் சகவாசத்தை நிவர்த்திப்பிக்கின்றதும், இதர வஸ்துக்களிலே இச்சையில்லாமல் ஆத்ம திருப்தி யடைந்திருக்கிறதும், ஏகாந்த வாசத்தில் ருசியும் பூத இம்சையில்லாம லிருக்கிறதும், சமதமாதி குணங்களுடன் பகவத்குணானுபவஞ் செய்கிறதும், இதர தேவதைகளை நிந்திக்காம லிருக்கிறதும், இப்படிப்பட்ட அனுஷ்டானத்துட னிருந்தால் பிரமத்தினிடத்தில் ஸ்திரமான ஆசக்தி யுண்டாகின்றது. அப்போது நல்ல ஆசாரியன் மூலமாய் அக்கினியானது தீக்கடைகோலைத் தகிப்பதுபோல் சுகதுக்காதிகள் சொர்ப்பனமாய்விடும், ஆதலால், மனதைச் சுத்திசெய்துகொண்டு தர்மார்த்தங்களில் முதன்மையான மோட்சத்தையேவிரும்பி, சம்சாரமாகிற சமுத்திரத்திற்குத் தெப்பமாயிருக்கிற அமளங்கமான ஸ்ரீ ஹரியினுடைய பாதாரவிந்தத்தைப் பற்றக்கடவாய் என்று பிரமபுத்திரரான சனற்குமாரரால் உபதேசிக்கப்பட்ட அந்தப் பிருது சக்கிரவர்த்தி அவரைநோக்கி, பிரமநிஷ்டர்களே! முன்னே தீனர்களிடங்களில் தயைபண்ணுகின்ற ஸ்ரீ ஹரியினால் அனுக்கிரகிக்கப் பெற்றாற்போல் மகானுபாவர்களான உங்களாலும் அனுக்கிரகிக்கப்பட்டேன். இந்த மகோபகாரத்திற்கு இணையாக விஷயாதிகளில் இச்சையற்றிருக்கின்ற உங்களுக்கு எதைக் கொடுத்துத் திருப்தியடையப் போகிறேனென்று பலவாகப் பிரார்த்தித்து சாஷ்டாங்கமாய்த் தண்டன் சமர்ப்பித்து அஞ்சலி கூப்பிக்கொண்டு நிற்கிற பிருது சக்கரவர்த்தியினிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு சதசிலிருக்கப் பட்டவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் ஆகாசமார்க்கத்தில் போய்விட்டார்கள்.

பிறகு பிருது சக்கரவர்த்தி சாம்பிராச்சியத்தில் சம்பந்தப்பட்டிருந்தாலும் விஷயங்களில் ஆசக்தியில்லாத சூரியனைப் போல் ஆசக்தி சூனியனாய், பிரம நிஷ்டையையுடையவனா

யிருந்தான். அவனுக்கு அதிர்ச்சிசு என்கிற பாரியை யினிடத்தில் விசிதாஸ்வன் தூமகேது அரியசுவன் திரு வருணன் விருகன் என்னும் தன்க்குச் சமானர்களான ஐந்து பிள்ளைகளைப் பெற்று, ஏக ராஜாவாய் அச்சுதனிடத்தில் மன தையுடையவனாய், சூரியனானவன் பூமியி லிருக்கின்ற ஜலத் தைக் கிரகித்து மறுபடியும் பூமியில் வருஷிப்பதுபோல் பிர ஜைகளிடத்தில் தனக்குண்டான கப்பத்தை வாங்கி அவர் களுக்காகவே உபயோகப்படுத்திக்கொண்டு தேஜசினால் அக் கினிபோலும், பராக்கிரமத்தில் இந்திரன் போலும், பொறு மையில் பூமிபோலவும், அபீஷ்டத்தைக் கொடுக்கிறதில் சொர்க்கம்போலவும், இஷ்டவஸ்துக்களைக் கொடுப்பதில் பர்ஜன்னிய தேவன்போலும், சமுத்திரம்போல் அகாதமான அபிப்பிராயமுடையவனாயும், தைரியத்தில் மகாமேருவைப் போலும், ஆச்சரிய குணத்தில் இமவானைப் போலும் பொக்கிஷத்தில் குபேரனைப்போலும், குப்தமான அர்த்தத் தில் வருணன்போலும், வியாபகத்தில் வாயுவைப்போலும், பலத்தில் ருத்திர பகவானைப்போலும், சௌந்தரியத்தில் மன்மதனைப்போலும், பெரிய மனதில் சிங்கம்போலும், மனுஷியர்களிடத்தில் வாற்சல்லியத்தில் மனுவைப்போலும், பிரபுத்துவத்தில் பிரம்மாவைப்போலும், வேதவாதத்தில் பிரகஸ்பதியைப் போலும், ஜிதேந்திரியத்தில் ஸனகாதி யோகிகள்போலும் பசு குரு வேதியர்களிடங்களில் பக்தி, வணக்கம் லச்சை சீலம் இவைகளில் உபமானமில்லாதவ னாயும் திரிலோகத்திலும் பரந்த சிறந்த கீர்த்தியடைந் திருந்தான்.



## இருபத்தொன்றுவது அத்தியாயம்



*பிருது சக்கரவர்த்தி வானப்பிரஸ்தாசிரம மடைந்து யோக சமாதியிலிருந்து வைகுந்த மடைந்தமை சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! ஆத்மக்கியானியாகியும் பிராணிகளுக் குச் சகல அன்னங்களையும் உண்டாக்கினவனும் பராக்கிர மாதிகளை நிர்மாணம் பண்ணினவனும் ஸ்தாவர ஜங்கமங் களுக்கு விர்த்திகளைக் கொடுத்தவனும் பெரியோர்களுடைய தர்மத்தை ஆசரிக்கிறவனுமாகிய பிருது சக்கரவர்த்தியான வன் ஒருக்கால் தன்னுடைய வார்த்திகத்தைப் பார்த்துத்

தன்னுடைய பிரிவைச் சகிக்காமல் விசனப்படுகிறவளாகியும் மகளாகியுமிருக்கிற பூமியைப் புத்திரர்கள் ஆதீனம் பண்ணிவிட்டுத் துதிக்கின்ற பிரஜைகளிடத்திலும் ஆசையை விட்டவனாய்த் தனது மனைவியுடனே தபோவனத்தை யடைந்து நியமப்படி சிறிதுநாள் கந்தமூல பலங்களையும் சிறிதுநாள் ஜீரணங்களான திரணங்களையும் சிறிதுநாள் ஜலத்தையும் சின்னாள் வாயுவையும் ஆகாரமாய்ப் பண்ணிக் கொண்டு கிரீஷ்மருதுவில் பஞ்சாக்கினிமத்தியிலும் வருஷ காலங்களில் வருஷதாரைகளில் நனைந்தும் பனிக்காலத்தில் கழுத்தளவு ஜலத்திலுமிருந்து தபசு செய்கிறவனாகியும் பூமியில் சயனிக்கிறவனாகியும் க்ஷமையும் மௌன விரதமும் கொண்டு காமக் குரோதங்களையும் பிராணாதி வாயுக்களையும் ஜயித்து உத்தமமான தபசினால் பிராரப்த கர்ம நாசத்தை உடையவனாய் ஸனத்குமாரர் உபதேசித்த யோகமார்க்கத்தை அனுசரித்து, குதிக்கால்களினால் குதத்தை அழுத்திப் பிராணவாயுவைமூலாதாரத்தில் நின்றும் ஊர்த்துவமுகமாக எழுப்பி, நாபியில் நிறுத்தி அவ்விடத்திலிருந்து இருதயம் மார்பு கண்டம் புருவமத்தியம் இவைகளில் நிறுத்தி அங்கே யிருந்து பிரம ரந்திரத்தில் நிறுத்தி பூதவாயுவுடனேயும் தேகத்தினுடைய அம்சத்தைப் பூமியிலேயும் தேஜசை தேஜசிலேயும் இந்திரியங்களை ஆகாசத்திலேயும் சரீரத்திலிருக்கிற திரவாமிசத்தை ஜலத்திலும் பூமிதத்துவத்தை ஜலதத்துவத்திலும் ஜலதத்துவத்தை தேஜஸ் தத்துவத்திலும் தேஜசை வாயுதத்துவத்திலும் வாயுவை ஆகாச தத்துவத்திலும் மனதை இந்திரியங்களிலும் இந்திரியங்களைப் பூதங்களுக் காரணமான அகங்காரத்திலும் அதை மகத்தத்துவத்திலும் அந்த மகத்தத்துவத்தைப் பிரகிருதியை உபாதியாக வுடைய ஜீவனிலுஞ்சேர்த்து பிரமநிஷ்டனாயிருந்து ஞான வைராக்கியங்களினால் ஜீவவுபாதியை விட்டுவிட்டான்.

அவனுடைய பத்தினியான அற்பசிசு வென்கிற சுகுமாரியான ராஜ ஸ்திரீயானவள் விபத்தையடைந்திருக்கிற தனது பதியின் தேகத்தைப் பார்த்து, சற்றே பிரலாபித்து, பிற்பாடு மந்தர பர்வதத்தின் தாழ்வரையில் சிதையைக் கல்பித்து அதிலே பர்த்தாவினுடைய தேகத்தை யெடுத்துச் சேர்த்து, நதியிலே ஸ்நானம்பண்ணி மகத்தாகிய யக்கியாதி கர்மங்களைச் செய்திருக்கின்ற பர்த்தாவுக்குச் செய்யவேண்டிய கர்மங்களெல்லாஞ் செய்து, ஆகாசத்திலிருக்கின்ற தேவதைகளைச் சேவித்து அக்கினியை மூன்றுதரம் பிரதக்ஷணம் பண்ணி, பர்த்தாவினுடைய பாதங்களைத் தியானம் பண்ணிக்

கொண்டு அந்தச் சிதையில் பிரவேசித்து வீர சிரேஷ்ட ளுகியும் பக்திவாளுகியுமிருக்கிற அந்தப் பிருது சக்கரவர்த்தி யுடனே தேவர்கள் கொண்டாட அனுகமனம் பண்ணினுள். புஷ்பவருஷங்கள் பெய்யவும் தேவதுந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கவும் பிருது மன்னனுடைய மனைவியும் அவனடைந்த வைகுந்தம் புகுந்தனள்.

பிருது சக்கரவர்த்தியின் பெருமை பொருந்திய கதையை அன்புடன் கேட்போர், பிராமணராயின் விரும்பியதை யடைவார்கள். க்ஷத்திரியராயின் ஏழுலகையும் ஒரு குடையிலுள்வர். வைசியராயின் பெரும் பொருளடைவர். பின்னவரான சூத்திரர் உள்ளன்போடு சிரவணம் செய்தால் உத்தமராவார்கள். புத்திரரில்லாதுழல்பவர் புத்திர சம்பத்தடைவர் என்று விதுரருக்கு மைத்திரேய முனிவர் புகன்றனர்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்



*பிராசீன பரிகிஷன் என்கிற ராஜாவினிடத்தில் நின்றும் பிரசேதசுக்களென்கிற ராஜரிஷிகளுடைய வுற்பத்தியும் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்ட ருத்திரகீதை ஸ்தோத்திரமும் சொல்லப்படுகின்றது.*

மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! பிருதுவினுடைய புத்திரனுகிய விசிதாசுவன் தன் தம்பிமார்களில் அரியசிவனுக்குக் கிழக்குத் திக்கையும் தூமகேதனுக்கு தட்சண திக்கையும் விருகுவுக்கு மேற்குதிக்கையும் திரவிணனுக்கு வடக்குத் திக்கையும் கொடுத்தான். இந்திரனிடத்தில் நின்றும் அந்தர்த்தான வித்தையைப் பெற்று, சிகண்டினியென்கிற ஸ்திரீயினிடத்திலே பூர்வகாலத்திலே வசிஷ்டருடைய சாபத்தினலே மானிட யோனியிலே ஜனிக்கும்படி சபிக்கப்பட்டிருந்த அக்கினியானவன் பாவகனென்றும் பவமானனென்றும் சுசியென்றும் மூன்று பிள்ளைகளாகப் பிறந்தான். நபஸ்வியென்கிற மற்றெரு பாரியையிடத்தில் அவிரதானனென்றெரு பிள்ளையைப்பெற்று, கப்பம் வாங்குகிறதிலும் தண்டிக்கிறதிலும் ராஜ தர்மத்தைக் கோரமானதாக யெண்ணி, தீர்க்க சத்திரமென்கிற கிருதுவை வியாஜமாக வைத்துக்கொண்டு ராச்சியத்தைத் துறந்து, ஸ்ரீ அச்சுதனிடத்திலும் பாகவதர்களிடத்திலும் பக்தியுள்ளவனுய் ஸ்ரீ பகவானுடைய சாலோக்கி

யத்தை யடைந்தான். அவனுடைய புத்திரனை அவிர் தானனைவன் அவிர்தானி யென்கிற ஸ்திரீயினிடத்திலே பரிகிஷித்து சேயன் சுக்கிலன் கிஷ்ணன் சத்தியன் சிதப்பிர பன் என்னும் ஆறு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களுக் குள்ளே மகா பூஜ்யனுகிய பரிகிஷித்து என்கிறவன் ராஜா வாக இருந்துகொண்டு கர்ம மார்க்கத்திலேயுஞ் சமர்த்தனு யிருந்து அனேக யக்கியங்களைச் செய்தான். அந்த யக்கிய சாலையில் கிழக்கு நுனியாக இரண்டங்குலப் பிரமாணம் பூமி யெல்லாந் தர்ப்பைகளினுல் பரப்பப்பட்டபடியால் அவன் பிராசீன பரிகிஷனென்று பெயரை யடைந்தான். அவன் சமுத்திரராஜனுடைய பெண்ணுகியும் மனோகரங்களான சர் வாங்கங்களும் நன்றாக அலங்கரிக்கப்பட்டுமிருக்கிற சத்துருகி என்பவளை விவாகஞ்செய்யுங்காலையில், அக்கினிகூட மோகிக் கத்தகுந்த சௌந்தரியமுள்ளவளும் கால்சிலப்பினுல் திக்கு களைச் சப்திக்கச் செய்யுமவளுமான அந்தச் சத்துருகியினுலே தேவர்கள் - அசுரர்கள் - கந்தர்வர்கள் - முனிவர்கள் - சித்தர் கள்-மனுஷியர்கள்-உரகர்கள் இவர்களெல்லாரும் மோகத்தை யடைந்தார்கள். அப்படிப்பட்ட மகிமையுள்ள ஸ்திரீயி னிடத்திலே தந்தைக்குச் சமானமான விரதங்களை யுடையவர் களா யிருக்கிற பிரசேதசுக்களென்றும் பத்துப் பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் பிரஜைகளைச் சிருஷ்டிக்குப்படி பிதாவினுலே ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய்த் தபசு செய்வ தற்குச் சமுத்திரத்திலே பிரவேசித்து, ருத்திரனுலே யுபதே சிக்கப்பட்ட ருத்திரகீத ஸ்தோத்திரத்தினுலே பதினுயிர வருஷம் ஸ்ரீ ஹரியைக் குறித்துத் தியானஞ் செய்தார்க ளென்று சொன்னுர். மைத்திரேயரே ! பிரசேதசுக்களுக்கு ருத்திரனுடனே மார்க்கத்திலே எப்படி சம்பந்த முண்டா யிற்று ? ருத்திரன் எந்த ஸ்தோத்திரத்தைச் சொன்னுர். அதை எனக்குச் சொல்லுமென்று விதுரர் கேட்க, மைத்தி ரேயர் சொல்லுகிருர் :—

வாரீர் விதுரரே ! சத் புருஷர்களான அந்தப் பிரசேத சுக்கள் பிதாவினுடைய வார்த்தையைச் சிரசா வகித்துத் தபசு பண்ணவேண்டுமென்று ஆதரவுடனே கூடின மனதை யுடையவர்களாய் மேற்குச் சமுத்திரத்தினுடைய சமீபத்திலே மிகவும் விசாலமாகியும், மகத்தாகியும், மகாத்மாக்களுடைய மனதுபோலே மிகத்தெளிந்தும், செந்தாமரை கருநெய்தல் செங்கழுநீர் முதலான புஷ்பங்களுக்கெல்லா மிருப்பிடமாகி யும், அம்சம் சக்கிரவாகம் நீர்க்காக்கைகள் மதித்திருக்கிற வண்டினங்கள் இவைகளின் மதுரமான சப்தத்தினுலே வியா

பிக்கப் பட்டுமிருக்கின்ற கொடிகள் விருக்ஷங்களை யுடையது மான ஒரு சதசைப் பார்த்து, அதிலே மனோகரமாயிருக்கிற மிருதங்கம் வீணை, முதலான வாத்தியங்களின் கானத்தைக் கேட்டு ஆச்சரியத்தை யுடையவர்களாய், அந்தச் சதசிலே பிரவேசிக்கப்போகிற சமயத்திலே, அந்தச் சதசிலேயிருந்து பரிவாரங்களுடன் வெளிப் புறப்படுகின்ற ருத்திர பகவானை தரிசித்து, சந்துஷ்டர்களாகி யிருக்கிற அந்தப் பிரசேதசுக் களைப்பார்த்து, ருத்திரர் ஒரு வார்த்தை சொன்னார். உங்க ளுடைய மனதிலிருக்கின்ற அர்த்தம் நம்மாலே அறியப்பட்டு உங்களை அனுக்கிரகிக்கிறதற்காக வந்தோம். திரிகுணமா யிருக்கின்ற பிரகிருதிக்கும் ஜீவனுக்கும் வேறுபட்டிருக்கிற வாசுதேவனைச் சரணமடைந்தவன் எனக்குப் பிரியன். ஸ்வ தர்மத்தில் நிஷ்டையுடைய புருஷன் நூறு ஜன்மங்கள் பிரமாவினுடைய சாரூப்பியத்தை யடைந்த பிறகு என்னு டைய சாரூப்பியத்தை யடைவன். சொல்லுவதற்கு அடங்காததாயும் பிரபஞ்சத்துக்கு வேறுபட்டு மிருக் கிற விஷ்ணு சாரூப்பியத்தை நானும் தேவதைகளும் எங்கள் அதிகார முடிவிலே அடைவதுபோல் பரமபாகவத னான புருஷன் அடைவன். அனைபடியினாலே பாகவதர்க ளான நீங்கள் பகவானைப்போல் எனக்கு இஷ்டர்களாக இருக்கிறீர்கள். பாகவதர்களுக்கும் என்னைப் பார்க்கிலும் அன்னியனாய்ப் பிரியனாய் வேறொருவன் ஓரிடத்திலேயு மில்லை. ஏகாந்தத்திலே ஜபிக்கத்தக்கதாகியும், பாவனமாகி யும், மங்களகரமாகியும், மிகவும், மோட்சகரமாகியு மிருக் கின்ற ஸ்தோத்திரத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்களென்று விஷ்ணுபக்தனாகிய சிவன் அஞ்சலிபந்தத் துடனே அந்த ராஜரிஷிகளைப் பார்த்துச் சொல்லுகிறார். வாரீர் ஆத்துமக்கியானிகளுக் கெல்லாம் சிரேஷ்டரானவர் களே! ஸ்வதர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு பகவானிடத் திலே வைக்கப்பட்ட மனதையுடையவர்களாய் விசுவாசத் துடனே சர்வ பூதங்களிலே அந்தரியாமியாகியும், பரமாத்மா வாகியு மிருக்கின்ற அந்த ஸ்ரீ ஹரிக்கு மிகவும் இஷ்டமா யிருக்கின்ற ஏகாதசமென்னும் பெயரையுடைய மகா மந்தி ரத்தை எனக்கும் பிருகு முதலான பிள்ளைகளுக்கும் பிரமா வானவர் உபதேசித்தார். அதை ஜபித்த பிரபாவத்தினால் அஞ்ஞானத்தைப் போக்கி நானாரூபமான பிரஜைகளைச் சிருஷ்டித்தோம். ஆதலால் இந்த மந்திரத்தை ஜபிக்கின்ற புருஷன் ஞானத்தைத் தெப்பமாகப் பண்ணிக்கொண்டு சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டி மோக்ஷமடைவான். வாரீர் பிரசேதசுக்களே! நம்மாலே சொல்லப்பட்ட இந்தப்

பகவத் தோத்திரத்தை அத்தியயனம் பண்ணி வேண்டிய புருஷார்த்தங்களைக் கோரி அந்த வாசுதேவனை ஸ்தோத்திரஞ் செய்கிறவன் எல்லாவற்றையுமடைவன். இந்த ஸ்தோத்திரத்தைப் பிராதக்கால மெழுந்திருந்து அஞ்சலிபந்தம் பண்ணி, சிரத்தையுடனே கேட்டுங் கேட்பித்துக்கொண்டுமிருக்கிற புருஷன் கர்மபந்தத்தினாலே விடப்படுவன். நீங்களும் அந்தப் பரம புருஷனுடைய ஸ்தோத்திரத்தை ஏகாக்கிர புத்தியுடன் ஜபித்து அத்தத்துவத்தினுடைய அந்தத்திலே இஷ்டரான அந்தப் பரமாத்துமாவையே அடையப் போகிறீர்களென்று ருத்திரன் அனுக்கிரகித்தார்.



## இருபத்திமூன்றாவது அத்தியாயம்



*பிரசேதசுக்கள் தபசு பண்ணிக்கொண்டிருக்கையில் அவர்களுக்குப் பிதாவான பிராசீனபரிகிஷுவென்கிற ராஜாவைக்குறித்து நாரதர் புரஞ்சனனுடைய கதாவியாஜத்தினாலே ஆத்மக்கியானத்தை ஐந்து அத்தியாயங்களினால் சொன்னாரென்று சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! இந்தப்பிரகாரம் ருத்திரன் அந்த ஸ்தோத்திரத்தை யுத்தேசித்துத் தம்முடைய பாரிஷதர்களாலே சூழப்பட்டு அந்தர்த்தானமாய்ப் போனார். பிரசேதசுக்களும் அந்த ஸ்தோத்திரத்தை ஜபித்துப் பதினாயிர வருஷம் ஜலத்திலேயிருந்து தபசு பண்ணிக்கொண்டிருக்கும்போது, கர்மத்திலேயே மனதையுடைய பிராசீனபரிகிஷுவினிடத்தில் தயாளுவாகியும் ஆத்துமதத்துவத்தை யறிந்தவராகியு மிருக்கின்ற நாரதர் எழுந்தருளி, அவனை நோக்கி, துக்க நிவர்த்தியும் சுகப்பிராப்தியும் இந்த இரண்டும் நீ செய்கிற கர்மத்தினால் சித்திக்கமாட்டாதென்று சொன்னதைக் கேட்டு, "மகானுபாவரே! கர்மத்திலே புத்தியுடைய நான் மோக்ஷ சாதனமான ஞானத்தை அறியேன். ஆதலால் மோக்ஷ சாதனமான ஞானத்தை அடியேனுக்கு உபதேசம் செய்ய வேண்டும்" என்று பிரார்த்திக்கின்ற அரசனை நோக்கி, நாரதர் இராஜாவே! யாகத்திலே உன்னாலே கும்பு கும்பாகக் கொல்லப்பட்ட இந்த ஜீவராசிகள், தேகத்தைவிட்டு லோகாந்தரத்தை யடையப்போகிற உன்னை இரும்புத்தடி

களினாலே சேதிப்பதற்காகச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கின்றன. இந்தத் துக்கம் ஒழிகிற நிமித்தம் புரஞ்சனன் சரித்திரமான இதிகாசத்தைச் சொல்லுகிறேன் கேள் என உரைக்கின்றார்.

முன்னே மகா கீர்த்திமானான புரஞ்சனனென்னும் பெயரையுடைய ஒரு ராஜனிருந்தான். அவனுக்கு அவிக்கியாதியென்னும் பெயரையுடைய லோகப்பிரசித்தனான வியாபார சிநேகனிருந்தான். அந்தப் புரஞ்சனன் ஏகபோக சாதனமான ஒரு புரத்தைத் தேடிக்கொண்டு பூமியெல்லாஞ் சஞ்சரித்து எங்குங் காணமல் மகா துக்கத்தை யடைந்து, ஒருக்கால் இமவத்பர்வதத்தினுடைய வலதுபாரிசமான தாழ்வரையிலே நவத்துவாரத்துடனேயும் பிரகாரங்கள், உத்தியானவனங்கள், உப்பரிகைகள், உழலைத்தடிகள், கவாக்ஷங்கள், வெளிவாசல்கள், வெள்ளி பொன் இரும்புமயங்களான சிகரங்களுள்ள கிருகங்களும், நாலுபாரிசத்தில் நெருங்கியும் இந்திரநீலம், ஸ்படிகம், வச்சிரம்-முத்து-மரகதம்-மாணிக்கம் இவைகளாலே செய்யப்பட்ட உப்பரிகைப் பிரதேசத்தையும் பிரகாசமாகிய காந்தியினால் போகவதி பட்டணம்போல் மண்டபங்கள்-நாற்சந்திகள் - ராஜமார்க்கங்கள் - லீலாஸ்தானங்கள் - கடைகள் - நாற்சந்திச் சாவடிகள் - துவசங்கள்-பிரவாளமயங்களான திண்ணைகளுடனும், திவ்வியங்களான விருக்ஷங்கள், கொடிகள் நெருங்கினதாயும் சப்திக்கின்ற பட்சிஜாதிகள், மிருகங்கள் இவைகளின் கோலாகலங்களுடனே ஸரஸுக்களை யுடையதாகியும், பனி ஜலங்களின் திவலைகளுடைய புஷ்பத்தோடே சம்பந்தித்திருக்கின்ற வாயுவினாலே சலியாநின்ற துளிர்களமைந்த சாகைகளையுடைய விருட்ச சம்பந்தத்தை யுடையதான சரசுக்களின் தீரங்களை யுடையதாகியும், ஒருத்தரையும் இம்சியாமலிருக்கின்ற மிருகங்களையுடைய வனத்திலே தன்னைக் கூப்பிடுவதுபோலச் சப்திக்கின்ற கோகிலங்களின் தொனியை யுடையதுமான உத்தியான வனத்திலே ஒரு உத்தம சுயேச்சா சஞ்சாரியாகியும், அநேக ஸ்திரீகளுக்கு நாயகியாகியும், விவாகமில்லாதவளாகியும், புருஷனைத் தேடிவருகின்றவளாகியும், சௌந்தரியமான தந்தங்களை யுடையவளாகியும், சிறு பெண்ணாகியும், கண்ணாடிபோன்ற கபோலங்களும், சிரேஷ்டமான முகமும், சமமாக வைக்கப்பட்டிருக்கின்ற கன்னங்களில் குண்டலங்களின் காந்தியைத் தரிக்கின்றவளாகியும், பச்சைநிறமாகியும், சொர்ணமயமான அரைநூல் மாலைகளையும் கால் சிலம்புகள் சப்திக்கும்படி சஞ்சரிக்கின்ற தேவதையைப்

போன்றவளாகியும், தோற்றப்பட்ட இளமையாலே சமங்களாகியும் விருத்தங்களாகியும் ஒன்றுக்கொன்று நெருங்கியுமிருக்கின்ற ஸ்தனங்களை வஸ்திரங்களினால் மறைக்கின்றவளாகியும், யானையைப்போல நடக்கிறவளாகியும், மனோக்கியமான புன்சிரிப்புடையவளுமான ஸ்திரீயையும், அவளுக்குத் துணையாய் முன்னே நடந்து வருகிற ஒரு புருஷனையும், பாரிசத்தில் ரட்சித்துக்கொண்டு வருகின்ற ஐந்துதலை சர்ப்பத்தையும் பார்த்து அந்த ஸ்திரீயினுடைய கடைக்கண் பார்வையாகிற பாணத்தினாலே அடிக்கப்பட்ட அந்தப் புரஞ்சனன் சொல்லுகிறான்: தாமரை யிதழ்போன்ற கண்களையுடையவளே! நீ யார்? ஆருடைய பெண்? உன் பின்னே வருகின்ற பதினொருபேரான இந்த மகாபடர்களார்? இந்த ஸ்திரீகளார்? உனக்கு முன்னே நடக்கிற இந்தச் சர்ப்பமார்? சிவனைத் தேடுகின்ற பார்வதியா? பிரமாவைத் தேடுகின்ற சரஸ்வதியா? மகாவிஷ்ணுவைத் தேடுகின்ற லட்சுமியா? அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்ற புன்சிரிப்புடைய உன்னாலே சிருஷ்டிக்கப்பட்ட இந்த மன்மதன் உனது கடைக்கண் பார்வையாகிற பாணங்களினாலே பேதிக்கப்பட்ட இந்திரியங்களையுடைய என்னைப் பாதிக்கிறானாகையினாலே என்னிடத்திலே அன்பு செலுத்தி என்னை அங்கீகரிக்க வேண்டும். மனதை ஹரிக்கத் தகுந்த கருவிகளுடனே கூடின கண்களுள்ளவளாகியும், மனோகரமான வசனத்தை யுடையவளாகியுமிருக்கின்ற உன்னுடைய முகத்தை உயரவெடுத்து எனக்குக் காண்பியென்று தைரியமில்லாதவன்போல யாசிக்கின்ற வீரனை புரஞ்சனனைப்பார்த்து நகைத்து அந்த ஸ்திரீ ஒரு வார்த்தை சொல்லுகிறாள் :—

புருஷசிரேஷ்டனே! நான் தாய்தந்தை முதலானவர்கள் யாரையு மறியேன். இந்தப் புருஷர்கள் என்னுடைய சினேகிதர்கள். இந்த ஸ்திரீகள் என்னுடைய தோழிகள். இந்தச் சர்ப்பமானது நான் தூங்கும்போது இந்தப்பட்டணத்தை ரட்சித்துக்கொண்டிருக்கும். தெய்வாதீனமாய் அப்பிரயோசகனாகியும் குரூபியாயு மிருக்கிற பர்த்தாவை அடையாமல் பிரசித்தனுந் தானசீலனும் மகாரூபத்தையுடையவனுமிருக்கிற உம்மைவிட்டு நான் ஆரைத்தா னடையப்போகிறேன். மகாபுருஷனே! கிருபாதிசயத்தையுடைய புன்சிரிப்புடனே கூடிக்கொண்டிருக்கிற கடாக்ஷத்தினாலே தீனர்களுடைய மனோவியாதியைப் போக்கடிக்கிறதற்காகச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற உம்மைவிட்டு நான் ஆரையடையப்போகிறேனென்றுசொல்ல, அவர்களிருவரும் ஒருவருக்

கொருவர் சங்கேதம்பண்ணிக்கொண்டு அந்தப் பட்டணத்திற் பிரவேசித்து, நாலுபக்கத்திலுங் காயகர்கள் கானஞ்செய்ய, நூறு வருஷம் ரமித்துச் சந்தோஷப்பட்டிருந்தார்கள். அந்தப் பட்டணத்துக்குமேலே ஏழுவாசலும் கீழே இரண்டு வாசலும் உண்டாயிருக்கின்றன. அந்த நவத்துவாரங்களுடனே கூடின பட்டணத்துக்கு ராஜாவானவன் ஒருவராலும் அறியப்பட்டவனன்று. அந்தப் பட்டணத்துக்கு மேலான ஏழுவாசலுக்குள் கிழக்குத்திக்கில் ஓரிடத்தில் நிர்மிக்கப்பட்டிருக்கின்ற சத்தியோதா, அவிர்முகியென்னும் இரண்டு வாசல்களில் துயுமத்தென்கிற சினேகிதனுடன் பிரவேசித்து விப்பிராசிதமென்கிற தேசத்தையும், நளினி நாளினியென்னும் இவ்விரண்டு வாசல்களுள்ள கிழக்குத் திக்கிலே அவதூதனென்கிற சினேகிதனுடன் பிரவேசித்து உற்பமென்கிற தேசத்தையும், அந்தக் கிழக்குத்திக்கில் மற்றொரு முக்கியையென்னும் பெயரையுடைய துவாரத்தில் ரசக்கியன் விபணன் என்னும் இவ்விரண்டுபேர்களுடன் புறப்பட்டு ஆபணமென்றும் பெகோதனமென்று பெயரையுடைய தேசத்தையும், பிதுர்கூவென்னும் பெயரையுடைத்தான வாசலின் தென்பக்கத்தில் பிதுர்கூவென்னும் பெயரையுடைய துவாரத்தில் சுருத்தானென்கிறவனுடன் பிரவேசித்து, தக்ஷண பாஞ்சாலமென்கிற தேசத்தையும், வடக்கு வாசல் துவாரமான தேவகூவென்கிறதில் சுருத்தானென்கிறவனுடன் பிரவேசித்து உத்திரபாஞ்சால தேசத்தையும், மேற்குதிக்கில் ஆசூரியென்கிற துவாரத்தில் துர்மதனென்கிறவனுடன் பிரவேசித்து, கிராமியகமென்கிற தேசத்தையும், மேற்குத்திக்கில் நிருதியென்கிற துவாரத்தில் லுபதனென்கிறவனுடன் பிரவேசித்து வைசசமென்கிற தேசத்தையும் அடைந்தான். அந்தப் பட்டணத்திலிருக்கிறவர்களுக்குள்ளே கண்ணில்லாதவர்களாய் நிர்வாக்கியன் உபஸ்கரன் என்னும் இரண்டு பெயர்களை எந்தக் காரியங்களுக்கும் சகாயமாக வைத்துக்கொண்டு எங்கே போனாலும் எந்தக்காரியஞ் செய்தாலும் கூடவைத்துக்கொண்டிருந்து அந்தப்புரஞ்சனன் விசூசினனென்கிறவனுடன் அந்தப்புரத்தில் பிரவேசித்துத் தன்னுடைய ஸ்திரீ புத்திரர்களாலே உண்டாக்கப்பட்ட விசனத்தையும் சந்தோஷத்தையும் ஆனந்தத்தையும் அடைந்து, கர்மங்களிலே ஆசக்தியுடையவனாய் மகாமோகிதனாகி ஸ்திரீ புத்திராதிகளினாலே வஞ்சிக்கப்பட்டவனாகித் தன்னுடைய ஸ்திரீயானவள் எதைக் கோருகிறாளோ, அதற்கொரு தடையில்லாமல் நடத்திக்கொண்டு வந்தான்.

## இருபத்தினன்காவது அத்தியாயம்

வேட்டை யென்கிற வியாஜத்தினுலே சொப்பன ஜாகரரூபமான சமுசாரம் சொல்லப்படுகின்றது.

மைத்திரேயர் வாக்கியம்.

வாரீர் விதுரரே! அந்தப் புரஞ்சனனுனவன் மிகவும் வேகமுடைய ஐந்து குதிரைகள் சாரதிக்கு இருப்பிடமான ஈஷாதண்டங்கள், இரண்டு சக்கரங்கள், ஒரு அச்சு, மூன்று துவஜஸ்தம்பங்கள் இவைகளினுலே அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற சொர்ணமயமான இரதத்தின் மீது தனுஷ்பாணியாய் ஆரோகணித்துக்கொண்டு சொர்ணமயமான கவசத்தைத் தரித்து, அக்ஷயமான அம்பருத்தூணியை யுடையவனுய் ஒரு சேனுநாயகனுடன் ஐந்து பிரதேசங்களையுடைய வனத்தையடைந்து மகா காவத்துடன் வேட்டையிலே அசுரர்களைப்போல் நிர்த்தயனுய் அந்த வனங்களிலுள்ள மிருகங்களை வதைக்க யத்தனஞ்செய்து சிராத்தத்திலே உபயோகிக்கப்பட்ட மிருகங்களை இராஜாக்கள் அடிக்கத்தகாதென்று சாஸ்திரங்களில் விதித்திருக்கிற முறைதப்பி, ஞானமில்லாமல் சித்திரங்களான இறகுகளையுடைய பாணங்களினுலே தயாசாலிகளுக்குச் சகிக்கக்கூடாத ஜீவ இம்சை செய்யத் துணிந்து, முசல்கள் - காட்டுப்பன்றிகள் - மான்கள்- முள்ளம்பன்றிகள் இவை முதலான மிருகங்களைச் சங்கரித்த சிரமத்தினுலே பசிதாகமுடையவனுய் அந்த வனத்தை விட்டு, கிருகத்தையடைந்து சிரமத்தைப் போக்கடித்துக் கொண்டு சந்தன புஷ்ப தாம்பூலங்களினுல் நன்ருயலங்கரிக்கப்பட்டுத் தன்னுடைய பாரியையினிடத்தில் கியபகங் கொண்டவனுய் மன்மதனுல் அபகரிக்கப்பட்ட மனதுடன் அந்தப்புரத்தில் பிரவேசித்துப் பார்க்கையில், அவ்விடத்தில் தன்னுடைய பாரியாளைக் காணுமல் அந்தப்புர ஸ்திரீகளை நோக்கி, உங்களுடைய யஜமானி எங்கே யிருக்கிருளென்று கேட்கிற அரசனைப் பார்த்து, அந்த ஸ்திரீகள், வாராய் ராஜனே! உன்னுடைய இஷ்டநாயகியானவள் உமது பிரிவைச் சகிக்காமல் தேகாபிமானத்தை விட்டு, கட்டில் மெத்தை முதலானதை நிவர்த்தித்துத் தரையிற் படுத்துக் கொண்டிருக்கிருளென்று காண்பிக்க, அதைப் பார்த்துப் புரஞ்சனன் அவளுக் கினிய வார்த்தைகள் சொல்லித் தேற்ற வேண்டுமென்று கருத்துக்கொண்டு அவளைத் தூக்கி மடியில்

வைத்துக்கொண்டு அவளை நோக்கி ஒருவார்த்தை சொல்லு கிறான்:—வாராய் சோபனையே! சமானமா யிருப்பவர்கள் தப்பு செய்தால் அவர்களுக்குத் தகுந்த தண்டனை செய்யாத வர்களைப் புண்ணியஞ் செய்யாதவர்களென்று சொல்லலாம். அவிவேகியானவன் தான் செய்த தப்பிதத்திற்குப் பதிலாய்ச் செய்யப்பட்ட தண்டனையை அனுக்கிரகமென் றறியமாட் டான். அபராதியான என்னிடத்தில் நீ பிரீதியினால் கோபித் துக் கொண்டதாயிருந்தாலும், திலகசூன்யமாகியும் பிரணய கோபத்தினாலே பயங்கரமாகிச் சினேக சூன்யமாகியு மிருக் கிற உன்னுடைய முகத்தையும் துக்கத்தினாலே அலைந்து சந்தன குங்கும சூனியங்களாகியு மிருக்கிற ஸ்தனங்களை யுடைய உன்னைப் பார்க்க என்மனந் தாளவில்லை. ஆனபடியி னாலே சுய இச்சையினால் வேட்டையிலே விசனத்தை யடைந்த என்னிடத்தில் பிரசன்னமாய் மன்மதனுடைய பாணவேகத்தினாலே தைரிய மிழந்திருக்கிற என்னை அங்கீ கரிக்கவேண்டுமென்று வேண்டினான்.



## இருபத்தைந்தாவது அத்தியாயம்



*மனை மக்களிடங்களிலே ஆசக்தியினாலே தன்னை மறக்கச் செய்யும் கால கன்னிகையினுடைய உபாக்கியானத்திலே சோரரோக முதலானவை சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்

வாராய் மகாராஜனே! இந்தப்பிரகாரம் புரஞ்சனியான வள் தன்னுடைய விலாசங்களினாலே புரஞ்சனனை நன்றாக வசப்படுத்திக்கொண்டு மங்கள ஸ்நானஞ்செய்து மநோக்கிய மான வஸ்திராபரணங்களினால் அலங்கரித்துக்கொண்டு, யௌவனத்தில் கர்விதையாகி, அவன் சமீபத்திலே சென்று ஆலிங்கனம் பண்ணிக்கொள்ள, அவனும் அவளை ஆலிங் கனம் பண்ணி ரகசியத்திலே அனுகூலங்களா யிருக்கிற அவளுடைய வார்த்தைகளினாலே மோகப்பட்டிருக்கிற விவேகத்தையுடையவனாய், ஸ்திரீவசீகரனாகிப் பகலென்றும் இராத்திரி யென்றும், அறியாமல் தன் ஸ்திரீயினுடைய புஜத்தைத் தலைக்கணையாகச்செய்து அந்த ஸ்திரீயையே பரம புருஷார்த்தமாக எண்ணித் தன்னுடைய சொரூபத்தையும், பரமாத்மாவினுடையசொரூபத்தையும்அறியாமல் அவளிடத்

தில் அனேகம் பிள்ளைகளையும்,பெண்களையும்பெற்று, அவரவர்களுக்குத் தக்கபடி விவாகஞ்செய்து அவர்களுக்கும் அனேகம் பிள்ளைகளுண்டாய் மிகவும் போகசம்பத்துடன் மதாந்தகாரனாய் காலத்தினுடைய கதியை அறியாதவனாகவே வெகு விதமான கோரிக்கைகளை யுடையவனாய் பசு இம்சா ரூபங்களான யக்கியங்களினால் தேவர்கள் - பிதுர்க்கள் - பூதபதிகள் இவர்களைப் பூசித்து, அனுகூலர்களா யிருக்கிற புத்திர பௌத்திரர்களிடங்களிலே ஆசக்தியுடன் விவேக ஈனனாயிருக்கிற அந்தப் புரஞ்சனனுக்கு ஸ்திரீ மோகத்தை நிவர்த்திக்கத் தக்கதான வார்த்திகமானது வந்தது. அதற்கு முன்னமே கந்தர்வர்களுக்கெல்லாம் அதிபதியான சண்டவேகனென்கிறவனும் மகா பலசாலிகளான மூந்நூற்றறுபது பேர் கந்தர்வர்களும் அவர்களுடைய ஸ்திரீகள் மூந்நூற்றறுபது பேர்களும் அந்தப் புரஞ்சனனுடைய பட்டணத்தை யழிக்க நினைத்து அந்தப் பட்டணத்தைச் சுற்றிக்கொண்டு அபகரிக்க யத்தனம் பண்ணினபோது, அந்தப் பட்டணத்தை ரக்ஷிக்கின்ற தளகர்த்தாவாகியும் பலவானாகியு மிருக்கிற பிரசாகரனானவன் ஒருவனாய், கந்தர்வர்கள் எழுநூற்றிருபது பெயருடனேயும், தனியாகவே நூறு வருஷம் யுத்தம் பண்ணித் தடைசெய்துகொண் டிருந்தவனாதலால் அந்த யுத்தத்திலே தனக்குப் பலவீனம் வந்து பந்துக்களுடனே கூடி மகா துக்கத்தை யடைந்தவனாய்ச் சிந்தை நொந்துகொண்டிருந்தான்.

அந்த ராஜாவானவன் தன்னுடைய சேவகர்களாலே கொடுக்கப்பட்ட போக்கிய வஸ்துகளைக் கிரகித்து ஸ்திரீ வசனாகி அந்தப் பட்டணத்துக்கு வந்த பயத்தை யறியாமலிருக்கிற சமயத்தில் நாரதமுனிவர்வந்து இவ்வாறு சொல்லுகிறார்: காலனுக்குப் பெண்ணான ஜரையென்கிற ஸ்திரீ தனக்குப் பர்த்தாவை இச்சித்து மூன்றுலகத்திலேயுஞ் சஞ்சரித்துக்கொண் டிருக்கிறவளாயும், சந்தோஷத்துடன் புரு சக்கரவர்த்தியினால் கிரகிக்கப்பட்டவளாய் அவனுக்கு இராச்சியத்தைக் கொடுத்தவளாயும், அனிஷ்ட போகத்தை யுண்டாக்குகிறதினாலே துர்ப்பகையென்று சொல்லப்படுகிறவளாயு மிருக்கிற அந்த ஜரையானவள் பூமியிலே சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் பிரமலோகத்திலிருந்து பூமியிலே வாாநின்ற என்னைப் பிரம நிஷ்டனென்று அறிந்திருந்தாலும் மன்மதனாலே மோகத்தை யடைந்தவளாய் என்னைப் பர்த்தாவாகச் சொன்னாள். அவளை நான் விரும்பாமல் நிராகரித்த

படியால் எந்த இடங்களிலேயும் நிலையாயிராமற் போகக்கட வீரென்று கோரமான சாபத்தைக் கொடுத்து, என்னிடத் தில் நின்றுஞ் சித்தியாமலிருக்கிற சங்கல்பத்தை யுடையவ ளாய், யவர்களுக்கு இராஜாவாகியும் என்னாலே சொல் லப்பட்டவனுமான பயமென்கிறவனை நோக்கி, வாராய் வீரனே! யவர்களுக்குச் சிரேஷ்டனாயிருக்கிற உன்னை இஷ்ட னாகிய பர்த்தாவாக வரிக்கிறேன். பிராணிகளுக்கு உன்னிடத் திலே பண்ணப்பட்ட சங்கல்பம் சித்தியாமற் போகிற தில்லையே, உன்னையே யடைந்திருக்கிற என்னிடத்திலே தயவு செய்வாயென்று மிகவும் விருப்பமுடன் சொல்லுகிற காலகன்னிகையினுடைய வார்த்தையைக் கேட்டு அந்த யவனேசுரனான பயனானவன் தேவ ரகசியத்தைப் பண்ண வேண்டுமென்று இச்சித்திருக்கிற அந்தக் காலகன்னிகை யைப்பார்த்துப் புன்சிரிப்புடனேகூட ஒருவார்த்தைசொல்லு கிறான்: வாராய் காலகன்னிகையே! இந்த உலகமானது உனக்குப் பர்த்தாவாக இருப்பது என்னுடைய ஞான திருஷ்டியினா லறியப்பட்டது. நீ ஒருத்தராலேயு மறியப் படாத கதியையுடையவளாய், என்னுடைய சேனையுடனே கூடிக்கொண்டால், எனது சேனாபதியான பிரசுரமானது உன்னைக் கர்மத்தினாலே நியமிக்கப்பட்ட இந்த வுலகத்தை யடைவிப்பிக்கும். இந்தப் பிரசுரமானது எனக்குப்பிராதா. நீயும் எனக்குத் தங்கையாய்விடு. உங்களிருவரோடு கூடி நானிந்த உலகத்திலே அறியப்படாத கதியை யுடையவனாகி யும், பயங்கரமாகிய சேனையை யுடையவனாகியும் சஞ்சரித்துக் கொண்டிருப்பேன் என்றனன்.



## இருபத்தாருவது அத்தியாயம்



வைதர்ப்பியென்கிற ஸ்திரீ சிந்தை யினால் ஸ்திரீ பாபத்தை
யடைந்த புரஞ்சனனுக்கு தெய்வானுகூலமாக
உண்டான முக்தி சொல்லப்படுகின்றது.

### நாரதர் வாக்கியம்

வாராய் பிராசீனபரிகிசே! பயனென்னும் பெயரை யுடைய எவனேசுவரனுடைய ஆக்கினையைச் செய்கிற சேவ கர்கள், பிரசுவான் காலகன்னிகை யிவர்களுடனே கூட இந் தப் பூமியெல்லாஞ் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். ஒருக்

கால் அந்தப் பயனுடைய சேனையிலே யிருக்கிறவர்கள் பலத்தில் சமர்த்தனான சர்ப்பத்தினாலே ரக்ஷிக்கப்பட்டுப் பூமியிலே யுண்டான போக்கிய வஸ்துக்களினாலே நிறைந்திருக்கிற புரஞ்சனனுடைய பட்டணத்தைக் காலகன்னிகையான ஜரையுடன் பலாத்காரமாகப்பற்றி அனுபவித்தார்கள். இந்தப் பிரகாரம் அந்த ஜரை அந்தப் பட்டணத்தைப் பீடிக்கையில் அந்தப் பட்டணத்துக்கு அபிமானியாகியும், சம்சாரியாகியும், மமதையினாலே வியாகூலனாகியுமிருக்கிற புரஞ்சனனவன் வெகுவிதங்களான சந்தாபங்களையடைந்து காலகன்னிகையினால் ஆலிங்கனம் பண்ணப்பட்டபடியால் நசித்துப்போன சம்பத்தை யுடையவனாய், தீனனாய் விஷயத்திலே மனதை யுடையவனாய், புத்திசூன்யனாய் கந்தருவ எவனர்களாலே பலாத்காரமாக அபகரிக்கப்பட்ட ஐசுவரியத்தையுடையவனான புரஞ்சனனவன் ஜீரணமான தன்னுடையபட்டணத்தைப்பார்த்து பிரதிகூலர்களாகியும் தன்னிடத்திலே ஆதரவைப் பண்ணாதவர்களாகியு மிருக்கிற புத்திர பௌத்திரர்கள் படர்கள் மந்திரிகள் பிரீதியில்லாத ஸ்திரீ இவர்களையும் பார்த்து காலகன்னிகையினால் ஆக்ரமிக்கப்பட்ட தன்னையும் சத்துருக்களினாலே தூஷிக்கப்பட்ட பாஞ்சால தேசங்களையும் பார்த்து அதிகமான வருத்தத்தை யடைந்தவனாய் அந்தப் பட்டணத்தை விட்டுவிட மனதில்லாமலிருக்க எவனேசுவரனான அவனுக்குத் தமையனான பிரசுவானவன் வந்து அந்தப் பட்டணத்தையெல்லாம் சகோதரனான பயனுக்குப் பிரியத்தைப் பண்ணவேண்டுமென்கிற இச்சையினாலே தகித்தான். அப்போது புரஜனங்கள் பாரியாள் அடிமைகள் முதலியவர்களுடன்கூடி சமுசாரியான புரஞ்சனன் தவித்தான். புரபாலனான அந்த நாகம் மிகவும் தாபத்தை யடைந்து வேகவிபத்தினாலே அதிகமான நடுக்கத்தை யுடையதாய் அந்தப் பட்டணத்திலே யிருக்கமாட்டாமல் அக்கினியினாலே தகிக்கப்பட்ட விருக்ஷத்தினுடைய பொந்தில் -நின்றும் கிளம்புகிற சர்ப்பத்தைப்போல் அந்தப் பட்டணத்தைவிட்டுப் போகிறதற்கு இச்சித்தது அந்தப் புரஞ்சனனவன் எப்போது தூர்பலமான அவயவங்களை யுடையவனானானோ, அப்பொழுதே சக்தி யில்லாதவனாய் வெகுபேர்களான அந்த எவனர்களாலே கழுத்தைப் பிடிக்கப் பட்டவனாகக் குறுகுறென்று வகோரமாய்க் கூப்பிட்டான் மறுபடியும் மனைமக்கள் முதலிய பந்து மித்திரவர்க்கங்களையும் வீடு தனம் முதலிய சம்பத்துக்களையும் விட்டுப் பிரிய மனம் சகியாது வருந்தினன். தனது பிரிய நாயகியைப் பிரியமாட்டாது இவ்விதம் பிரலாபித்தான்:

நான் லோகாந்தரத்தை யடைந்தேனுகில் அநாதையான இந்த ஸ்திரீ தீனையாய் தீனர்களான இந்தக் குழந்தைகளை வைத்து துக்கித்துக்கொண்டு எப்படி யிருக்கப்போகிருள். நான் சாப்பிடாமற் போவேனுகில் இவளும் சாப்பிடுகிற தில்லையே. நான் ஸ்நானம் பண்ணுவிட்டால் என்னையே கதியாக அடைந்திருக்கிற இவளும் ஸ்நானம் பண்ணுகிற தில்லையே. நான் கோபித்துக் கொண்டால் மிகவும் பயப்படு வாளே. நான் விரட்டினேனேயாகில் பயத்தினுல் எதிரி லொருவார்த்தையுஞ் சொல்லாமலிருப்பாளே. ஒன்றுந் தோன்ரும லிருக்கிற எனக்கு விவேகத்தைச் சொல்லு வாளே. நான் தேசாந்தரம் போயிருந்தேனுகில் விசனத்தி னுலே யிளைத்துத் துக்கப்பட்டுக்கொண்டிருப்பாளே. இப்ப டிப்பட்டவளாகியும் வீரர்களுக்குத் தாயாகியும் இருக்கிற என்னுடைய ஸ்திரீயானவள் கிரகஸ்த தர்மமான புருஷ னுடனே அநுமரண மார்க்கத்தை யிச்சியாமற்போவாளோ? என்னையே கதியாக வுடையவளாகியும் அனுதையாகியு மிருக்கிற நம்முடைய பிள்ளைகளும் பெண்களும் நான் பர லோகத்தை அடைந்தபிற்பாடு சமூத்திரத்திலே யுடைந்து போன ஓடத்திலே யிருக்கிறவர்கள்போலே எப்படியிருக்கப் போகிருர்களென்று மகாதீனமான புத்தியினுலே விசனப் படுகிற புரஞ்சனனை யவனேசுவானுன பயன்வந்து கிட்டித் தங்கள் கிருகத்துக்கு வேண்டும் பசுவைப்போல இழுத்துக் கொண்டு போகிறபோது, அந்தப் புரஞ்சனனுடன் ராச்சி யானுபவகாலத்திலே சகாயங்களாய்க் கூட இருந்தவர்களும் மகா விசனத்தை யடைந்து மிகவும் பயந்தவர்களாகப் பின் னுலே போனுர்கள். அந்தப்பட்டணத்தை ரட்சிக்கும் ஐந்து தலை நாகமும் அந்தப் பட்டணத்தை விட்டுப் போய்விட்ட போதே அந்தப் பட்டணமானது ஜீரணமாய்ப் பஞ்சபூதங் களை யடைந்துபோயிற்று. பலவானுன யவனுலே யிழுக்கப் பட்ட மகா அஞ்ஞானத்தை யுடைய நிர்த்தயனுன அந்தப் புரஞ்சனனுலே காமியகர்மங்களினுல் யாதொரு பசுக்கள் கொல்லப்பட்டனவோ, அந்தப் பசுக்கள் இவன் செய்த இம்சையை நினைத்து மிகவும் கோபத்தை யடைந்தவை களாய் இந்த ராஜாவைக் கோடாலிகளாலே பிளந்தன. அந் தப்புரஞ்சனன் கரையில்லாத தமசிலே முழுகினவனுய் அனேக வருஷங்கள் கோரமான வாதனைகளை அநுபவித்து ஸ்திரீயினுடைய சங்கத்தினுலே விவேகமில்லாதவனுய்ச் சரீ ரம் விடும்போது அவளையே மனதில் நினைத்துப் பிராணனை விட்ட படியினுலே பின்பு விதர்ப்பராஜாவினுடைய கிருகத் திலே உத்தம ஸ்திரீயாகப் பிறந்தான்.

பின்பு சுயம்வரத்திலே வீரியத்தையே பந்தயமாக வுடைய அந்த விதர்ப்பராஜன் பெண்ணைச் சத்துருக்களை ஜயித்தவனுகியும் பாகவதனுகியுமிருக்கிற பாண்டிய தேசாதிபதியான மலயத்துவசன் யுத்தத்திலே ராஜாக்களையெல்லாம் ஜயித்து விவாகஞ் செய்துகொண்டான். அந்தப் பாண்டிய ராஜாவானவன் அந்த வைதர்ப்பியினிடத்திலே கறுப்பான கண்களையுடைய ஒருபெண்ணையும் ஏழுபிள்ளைகளையும் பெற்ருன். அந்தப் பிள்ளைகளுக்குள்ளே ஒவ்வொருத்தனுக்கும் அனேகம் பிள்ளைகள் பிறந்தார்கள். அந்த வம்சங்களாலே பூமியானது மனுவந்தரமெல்லாம் அனுபவிக்கப்படுகிறது. அப்படிப்பட்டவர்கள் பிறந்தார்கள். அகஸ்தியர் மலயத்துவசனுக்கு ஸ்ரீ மந்தபுத்திரியாகியும் விரதத்தை யுடையவளாகியுமிருக்கிற அந்தப் பெண்ணை விவாகஞ்செய்து அவளிடத்திலே இத்துமவாகனனென்கிற பெயரையுடைய திடச்சுதனென்கிற முனியானவன் பிறந்தான். ராஜரிஷியான அந்த மலயத்துவசன் பிள்ளைகளுக்கு ராச்சியத்தைப் பங்கிட்டுக் கொடுத்து ஸ்ரீ கிருஷ்ணனை ஆராதிக்க வேண்டுமென்று இச்சையை யுடையவனுகி இமவத்பர்வதத்தைக் குறித்துப் போனுன். மோகிப்பிக்கின்ற கண்களையுடைய வைதர்ப்பியும் பிள்ளைகளையும் கிருகங்களையும் போகங்களையும் விட்டு சந்திரனைச் சந்திரிகையானது அனுசரிப்பதுபோல் பாண்டிய தேசாதிபதியான மலயத்துவசனைத் தொடர்ந்து சென்ருள். அந்த இமவத்பர்வதத்திலே தாம்பரபர்ணியென்றும் கோதகையென்றும் சந்திரவகையென்றும் நிர்மலமான ஜலத்தை யுடைய பிரசித்தமான நதிகளின் தீர்த்தங்களிலே நித்தியமாக ஸ்நானஞ்செய்து உள்ளும்புறப்பும் நிர்மலனுகவிருந்து கந்த மூலபலங்கள் பழுப்பிலைகள் திரணம் உதகம் இவைகளைச் சாப்பிட்டுக் காயகிலேசத்தை யுடையவனுக உக்ரமான தபசைச்செய்து, சமபுத்தியுடையவனுகி, சீத உஷ்ணங்கள் காற்றுமழைகள் பசிதாகங்கள் பிரியம் அப்பிரியங்கள் சுக துக்கங்களென்கிற தொந்தங்களை ஜயித்து தபசினுலேயும் உபசரணையினுலேயும் பாபத்தைத் தகித்தவனுய், இயம நியமங்களினுலே இந்திரியங்களையும் சுவாசத்தையும் ஜயித்தவனுய் தேவமானத்தாலே நூறுவருஷம் ஸ்தாணு போலே சலியாமல் பகவானுன ஸ்ரீ வாசுதேவனிடத்திலே பக்தியைச் செய்த அவன் வேறே ஒன்றையு மறியாதவனுகி யிருந்ததால் தேகாதிவிலக்ஷணனுன ஜீவாத்மாவினிடத்திலே பரமாத்மாவை வியாபகனுகவுஞ் சாட்சியாகவு மறிந்து அநித்தியமான தேகவிருத்தாந்தத்தைச் சொப்பனத்தைப் போலப்

பார்த்து அந்த விமரிசனத்தையும் விட்டு மிகவும் பகவதனு சந்தான தற்பரனுனன்.

ஓ ராஜாவே! குருவாகியுஞ் சாக்ஷாத் பகவானுகியுமிருக்கிற அரியினுலே சொல்லப்பட்ட எங்கும் பிரகாசமான விசுதக்கியான தீபத்தினுலே ஜீவாத்மாவைப் பரப்பிரமத்தினிடத்திலேயும், அந்தப் பரப்பிரமத்தை ஜீவாத்மாவினிடத்திலேயும் பார்த்து, அந்த உபாசனத்தையும் விட்டுச் சமுசாரத்தில் நின்று மொழிந்தான். அப்போது பதியினிடத்திலே பிரீதியினுலே போகங்களை விட்டு பணிவிடைக்கினிய மாவுரியை யுடுத்தி விர்தத்தினுலே இளைத்த தேகத்தையுடையவளாகியுஞ் சடையாய்ப்போன தலையயிர்களை யுடையவளாகியுமிருக்கிற அந்த வைதர்ப்பியானவள் பதியினுடைய சமீபத்திலே எரியும் அக்கினிபோல விளங்கினுள். ஸ்திரமான ஆசனத்தை யுடையவனுயிருக்கிற பர்த்தா தேகத்தை விட்டுவிட்டதை அறியாமல் முன்போலவே பணிவிடை செய்துகொண்டிருந்து பதியினுடைய பாதங்களிலே உஷ்ண மொழிந்திருக்கக்கண்டு, தன் கூட்டத்தில் நின்றும் விடுபட்ட மான்பேடுபோல் துக்கப்பட்டாள், பதியில்லாமல் தீனையாகவும் அனுதையாகவுமிருக்கிற அவள் கண்ணீரினுலே தன்னுடைய ஸ்தனங்களை நனைத்து, ராஜரிஷியே! எழுந்திரும் எழுந்திரும். சோரர்களான துஷ்ட க்ஷத்திரியர்களுக்குப் பயப்பட்டுக்கொண்டிருக்கிற சமுத்திரமே மேகலையான இந்தப்பூமியை இரக்ஷிப்பதற்கு யோக்கியனுக நிற்கிறுயென்று இந்தப்பிரகாரங் காட்டிலே பதியை அனுசரித்தவளாகியுஞ் சிறுபெண்ணுகியுமிருக்கிற அந்த ஸ்திரீயானவள் பிரலாபித்துப் பதியினுடைய பாதங்களிலே விழுந்து கண்ணீர் விட்டழுதாள். பின்பு சிதையையடுக்கி அதிலே புருஷனுடைய சரீரத்தை வைத்துத் தகித்து ரோதனஞ்செய்து அனுமாரணஞ் செய்யவேண்டுமென்று நினைத்தாள். அப்போது பூர்வ ஜன்மத்திலே சினேகிதனுகியும் ஆத்மக்கியானியாகியு மிருக்கிற ஒரு பிராமணன் அவ்விடத்திலே வந்து அழுதுகொண்டிருக்கிற அந்த ஸ்திரீயைப்பார்த்து சமாதானஞ் செய்து வாராய் பெண்ணே! நீயார்? எவருடைய பெண்? படுத்துக்கொண்டிருக்கிறவனுர்? எவனிமித்தம் நீ ரோதனம்பண்ணுகிருய்? இந்த ஜன்மத்துக்கு முன் உன்னுடனே விளையாடிக்கொண்டிருந்த சினேகனென்று என்னை நீ அறி. சகியே! ஜன்மாந்தரத்திலே நான் அவிக்கியாதனுக்குச் சிநேகனென்பது உன் நினைவுக்குவருகிறதா? பூர்வ ஜன்மத்திலே ஆண்வடிவா யிருந்த நீ என்னை விட்டுவிட்டுப்

பூமியிலே யுண்டான போகத்திலே ஆசையை யுடையவனாய் ஓரிடத்தை இச்சித்துப் போனாய். நீயும்நானு மிருவருஞ் சினேகிதர்களாகி யுபமானச சரசிலே வாசம் பண்ணிக் கொண்டிருக்கிற வர்களாகியு மனேக வருஷங்கள் மரண மில்லாதவர்களாயிருக்கிற அம்சங்களாயிருந்தோம்.

வாராய் தோழியே! அப்படிப்பட்ட நீ என்னைவிட்டு விஷய சுகத்திலே புத்தியை யுடையவளாய்ப் பூமியிலேசஞ் சரித்து ஒரு ஸ்திரீயினாலே பண்ணப்பட்டதாயிருக்கிற ஒரு பட்டணத்தைப் பார்த்தாயா? அந்தப் பட்டணம் எப்படி யிருக்கிறதென்றால், சப்தாதி ஐந்து விஷயங்களே ஐந்து தோட்டங்கள், நவத்துவாரங்களே ஒன்பது வாசல்கள், பிருதிவி அப்பு தேயுக்களே மூன்று பிராகாரங்கள், பிரா ணனே ஒரு ரக்ஷிக்கிற சாரதி, கியான இந்திரியமைந்து மனது ஒன்று ஆக இந்த ஆறுபேரும் அபீஷ்டத்தைச் சம்பாதிக்கிறவர்கள் கர்மேந்திரியங்களைந்துங் கடைத்தெருவு கள், பஞ்சமகா பூதங்களே அஞ்சுகாரணங்கள், புத்தியே யஜமானி, தேகமே பட்டணம். இந்தப் பட்டணத்தில் பிர வேசித்துக் கர்வப்படுகிற புருஷன் ஒன்றையுமறியாத மூட னாய்ப் போகிறான், வாராய் விபுவே! நீயானவன் இப்படிப் பட்ட பட்டணத்திலே புத்தியென்னப்பட்ட ஸ்திரீயினாலே கிரகிக்கப்பட்டவனாய் அவளுடனே ரமித்துக்கொண்டு தன்னையும் பரமாத்மாவையு மறிந்தவனாய் அந்த ஸ்திரீ சங்கத்தினாலே இப்படிப்பட்ட பாபிஷ்டமான ஸ்திரீஜன் மத்தை அடைந்தாய். ஆகையினாலே நீ சுபாவமாய் விதர்ப்ப னுடைய பெண்ணு மன்று. இந்த வீரனை மலயத்துவசன் உனக்குப் புருஷனுமன்று. நவத்துவாரமான இந்தப் பட்ட ணத்திலே எந்தப் புத்திக்குப் பாவநாசமா யிருந்தாயோ அந்தப் புரஞ்சனி யென்னப்பட்ட புத்திக்கு நீ பர்த்தாவு மன்று. எந்தக்காரணத்தினாலே புருஷனை உன்னை ஸ்திரீ யாக எண்ணியிருக்கிறாயோ இது என்னாலே பண்ணப்பட்ட மாயை. எந்தக் காரணத்தினாலே நாமிரண்டுபேரும் சுத்தர் களோ, அந்தக் காரணத்தினாலே இந்த இரண்டும் ஆத் மாவுக்குச் சுபாவமாகவில்லை. நம்மிருவருடைய சொரூபத் தைப்பார். நீ என்னுடைய அமிசபூதமான ஸ்வதந்திர னன்று. நான்உன்னை அமிசமாகவுடையவன். நம்மிருவருக்கும் ஞானிகள் கிஞ்சித்தும் சம்பந்தமில்லாமையைப் பார்ப்பவ ரில்லை. எந்தப் பிரகாரம் புருஷன் தன்னை ஒருவனையும் கண்ணாடியிலேயும், கண்களிலேயும், இரண்டு பிரகாரமாகப் பார்க்கிறானோ. அந்தப் பிரகாரமே நம்மிருவருக்கும் பிம்பப்

பிரதிபிம்பங்கள்போல் பேதமுண்டாயிருக்கிறது. இந்தப்பிரகாரம் அந்த மானஸ சரசிலே வாசம்பண்ணுகிற அம்சத்தினாலே சுத்தனான ஜீவன் அப்படிப்பட்ட அம்சத்தினாலே போதிக்கப்பட்டவனாய் சொரூபத்தை யடைந்தவனாய் ஈசுவரனைவிட்டுப் பிரிந்ததினாலே நசித்துப்போன விவேகத்தைத் திரும்பவும் அடைந்தான். வாராய் பிராசீன பரிகிசே! இந்த ஆத்துமவுபதேசம் கதாரூபமாக உனக்கு என்னாலே காண்பிக்கப்பட்டது. எந்தக் காரணத்தினாலே விசுவகர்த்தாவான பகவான் அப்பிரத்தி யக்ஷத்திலே பிரீதியை யுடையவனோ அந்தக் காரணத்தினாலே அப்பிரத்தி யக்ஷமாகவே உனக்குச் சொல்லப்பட்டது.



## இருபத்தேழாவது அத்தியாயம்

*ஸ்திரீ சங்கத்தினாலே சம்சாரமென்றும் ஈசுவரசங்கத்தினாலே முக்தி யென்றும் பிரகாசமாகக் கதாரூபமாகச் சொல்லப்பட்ட ஆத்ம உபதேசத்துக்கு விக்கியானம் சொல்லப்படுகின்றது.*

### பிராசீன பரிகிசுவினுடைய வாக்கியம்

நாரதபகவானே! உமது வசனத்தினுடைய தாத்பரியம் நம்மாலே நன்றாக அறியப்படவில்லை. ஞானிகள் உம்முடைய வசன தாத்பரியத்தை நன்றாக அறிவார்கள், காமமோகிதனான நான் அறியமாட்டேனென்று ராஜா சொல்ல நாரதர் சொல்லுகிறார்: ராஜாவே! யாதொரு புரஞ்சனன் ஏக பாதமாயும், திவிபாதமாயும், த்ரிபாதமாயும், சதுர்ப்பாதமாயும், வெகுபாதமாயும், பாதமேயில்லாமலு மிருக்கிற பட்டணமென்று சொல்லப்பட்ட தேகத்தைப் பிரகாசிப்பிக்கிறானோ அப்படிப்பட்ட புரஞ்சனனை ஜீவாத்துமா வென்றறி. அந்த ஜீவனான புரஞ்சனனுக்குச் சகாவாய் அவிக்கியாதனென்று பெயரை யுடையவனாய் எவன் சொல்லப்பட்டானோ அவனைப் பரமாத்மாவென்றறி. யாது காரணத்தினால் புருஷர்களாலும், நாம ரூபங்களாலும், கிரியா குணங்களாலும், அறியப்படாததினாலே அந்த ஈஸ்வரன் அவிக்கியாதனென்று சொல்லப்படுகிறான். புருஷன் பிரகிருதியினுடைய சமஸ்த குணங்களையுமுடைய வேண்டுமென்று எப்போது இச்சித்தானோ அப்போது பட்டணமென்று சொல்லப்பட்ட தேச

பாதாதி சரீரங்களுக்குள்ளே நவத்துவாரங்கள் கைகள் கால்கள் இதுகளோடே கூடிய மனுஷ்ய சரீரத்தையே யோக்கியமென்றெண்ணுகிறான். அந்தப் பட்டணத்திலே ஸ்திரீயென்றுசொல்லப்பட்டது புத்தியென்றறி. எந்தப் புத்தியினாலே நான் எனது என்னும் விகல்பம் உண்டாயிற்றோ அதை ஸ்திரீயென்றும், எந்தப் புத்தியை ஆஸ்ரயித்து இந்த ஜீவனானவன் தேகத்தில் இந்திரியங்களினாலே ரூப ரசாதி குணங்களை யனுபவிக்கிறானோ அதையே ஸ்திரீயென்றும் சொல்லப்பட்டது.

கர்ம ஞானேந்திரியங்கள் விஷயானுபவத்திற்குச் சகாயமென்று சொல்லப்பட்டன. எந்த இந்திரியங்களினாலே ஜீவனுக்கு ஞானமும் கர்மமும் உண்டாக்கப் படுகிறதோ, அவ்விந்திரியங்களே சகாயர்களென்று சொல்லப்பட்டன. அவ்விந்திரியங்களினாலே யுண்டாக்கப்பட்ட விர்த்திக் கியானங்களே அந்தப் புத்திக்குச் சகிகளென்று சொல்லப்பட்டன. பஞ்சவிர்த்தியை யுடையதான பிராணனே அஞ்சுதலையை யுடையதான சர்ப்பமென்று சொல்லப்பட்டது. மகா பலசாலியான வொருதளவாயென்று எவன் சொல்லப்பட்டானோ அவனை ஞான கர்மேந்திரியங்களுக்கு ராஜாவான மனதென்றறி. யாதொரு பாஞ்சாலங்களென்னப்பட்ட தேசங்கள் சொல்லப்பட்டனவோ அவைகளை சப்த ஸ்பரிச ரூப ரசகந்தமென்னப்பட்ட ஐந்து விஷயங்களென்றறி. அந்தத் தேசங்கள் நடுவிலே ஒன்பது வாசலையுடையதோர் பட்டணமுளதென்று எது சொல்லப்பட்டதோ அது தேகமென்றும், அந்த வாசல்களை இந்திரியரந்திரங்களென்றும் அறி, இந்த ஜீவாத்துமா வானவன் இந்திரியங்களை முன்னிட்டுக்கொண்டு கண்கள் காதுகள் மூக்கு வாய் சிசனம் குதமென்னப்பட்ட இந்த வாசல்களாலே ஜீவாத்மாவானவன் வெளியிலே புறப்பட்டு சப்தாதி விஷயங்களை அடைகிறான். இந்தப் பட்டணத்துக்குக் கிழக்கே ஐந்து வாசல்கள் சொல்லப்பட்டதே அவை கண்கள் இரண்டு, மூக்கிரண்டு, வாயொன்று என்று அறி. வடக்குத் திக்கிலே யாதொரு வாசல் சொல்லப்பட்டதோ அதை இடது காதாயும் தெற்கு திக்கிலே சொல்லப்பட்டதை வலது காதாகியும் அறி. மேற்கு திக்கிலே யாதொரு இரண்டு வாசல்கள் சொல்லப்பட்டதோ அதை சிசனமென்றும் குதமென்றும் அறி. ஒரு இடத்திலே யிருக்கப்பட்ட சத்தியோத மென்றும் அவிர்முகி யென்றும் சொல்லப்பட்ட இரண்டு வாசல்களையும் இரண்டு கண்களென்றும் அறி. ஜீவனுன

வன் நேத்திர இந்திரியங்களுடனே கூடிக்கொண்டு அந்த வழியால் புறப்பட்டு விப்பிராசிதமென்று சொல்லப்பட்ட ரூபத்தையறிகிறான். நளினி நாளினியென்று சொல்லப்பட்ட வாசல்கள் இரண்டு மூக்குகளென்றறி. சவுரபமென்று சொல்லப்பட்ட தேசத்தைக் கந்தமென்றறி. அவதூதயென்று சொல்லப்பட்டவனை கிராணேந்திரியமென்றறி. முக்கியமென்று சொல்லப்பட்ட வாசலை முகமென்றறி. விபணமென்று சொல்லப்பட்ட தேசத்தை வாக்கென்றறி. ரசகியமென்று சொல்லப்பட்டவனை ரசனேந்திரிய மென்றறி. ஆபணமென்று சொல்லப்பட்டதை விவகாரமென்றறி. பெகூதனமென்று சொல்லப்பட்டதைச் சித்திரானமென்றறி. பிதுருவுளமென்னப்பட்டதை வலக்காதென்றும் தேவவுளமென்னப்பட்டதை இடக்காதென்றும் அறி. பாஞ்சாலமென்று சொல்லப்பட்டதைப் பிரவிர்த்தி சாஸ்திரமென்றும், நிருக்தி சாஸ்திரமென்றும், பிதுர்யானம், தேவயானமென்றறி. ஆசூரியென்று சொல்லப்பட்டதை குதமென்றறி. வைசசமென்று சொல்லப்பட்டதை நரகமென்றறி. லுபதகனென்று சொல்லப்பட்டவனை பாயுவிந்திரியமென்றுமறி. அந்தர்களென்று சொல்லப்பட்டவை கை காலென்றுமறி. இந்த ஜீவனானவன் காலோடே கூடிக்கொண்டு நடக்கிறான், கையோடே கூடிக்கொண்டு செய்கிறான். அந்தப்புரமென்று சொல்லப்பட்டது இருதயம். விசுசினனென்று சொல்லப்பட்டதை மனதென்றறி.

இந்த ஜீவாத்துமாவானவன் அந்த மனதுடனே கூடிக்கொண்டு அந்த மனதினுடைய சத்துவாதி குணங்களினாலே மோகத்தையும் விவேகத்தையும் சந்தோஷத்தையும் அடைகிறான். இந்தப் புத்தியானது எப்படி யெப்படி விகாரத்தை யடைகிறதோ, எப்படி யெப்படி இந்திரியங்களைப் பிரவிர்த்திப்பிக்கிறதோ அப்படி அப்படி அந்தப் புத்தியினுடைய குணங்களினாலே ஆசக்தனாய் இந்த ஜீவனானவன் சாட்சிமாத்திரனா யிருந்தாலும் அதினுடைய வியாபாரங்களை யடைகிறான். இந்தத் தேகமே ரதமென்று இந்திரியங்களே குதிரையென்றுஞ் சொல்லப்பட்டது. சம்வற்சரத்தினுடைய வேகமே மேற்கதி யென்றுஞ் சொல்லப்பட்டது. புண்ணிய பாவமென்கிற கர்மங்களே இரண்டு வண்டியென்றுஞ் சொல்லப்பட்டது. சத்துவராஜஸ் தமோகுணங்களே மூன்று துவஜமென்றுஞ் சொல்லப்பட்டது. பஞ்சப்பிராணனே அஞ்சுபந்தனமென்றுஞ் சொல்லப்பட்டது. மனதே கயிறென்றும் புத்தியே சாரதியென்றும் இருதயம் சிம்மாசன

மென்றும் சுகதுக்கங்களே சாரஸ்தானமான கூபரமென்றும் சொல்லப்பட்டன. சப்தாதி பஞ்சவிஷயங்களே ஐந்து ஆயுதங்களென்றுஞ் சப்ததாதுக்களே அவதூதமென்றுஞ் சொல்லப்பட்டன. ஆகிருதியே பராக்கிரமமென்று சொல்லப்பட்டது. ஜீவாத்துமாவானவன் தேகேந்திரியங்களுடனே கூடினவனாய். சப்தாதி பஞ்ச விஷயங்களை அநுவிக்கிறானென்கிறது ரதத்தின் பேரிலே ஏறிக்கொண்டு பஞ்சப்பிரஸ்தமென்னப்பட்ட வனத்திலே போய் வேட்டையாடுகிறானென்று சொல்லப்பட்டது. சம்வற்சரமே சண்ட வேகனென்று சொல்லப்பட்டது. எந்தச் சம்வற்சரத்தினாலே அகண்டமான காலம் பின்னமாகச் சொல்லப்படுகிறதோ அந்தச் சம்வற்சரத்துக்குப் பகல்கள் கந்தர்வர்களென்றும் இராத்திரிகள் கந்தர்வஸ்திரீகளென்றுஞ் சொல்லப்பட்டன. அந்தச் சம்வற்சரத்துக்கு அவயவங்களான மூந்நூற்றறுபது நாள்கள் திரும்பித் திரும்பி வந்துகொண்டு பிராணிகளுடைய ஆயுசை அபகரிக்கின்றன. ஜரையானது காலகன்னிகையெனப்பட்டது. எந்த ஜரையை லோகமானது சந்தோஷப்படுத்தாமற் போயிற்றோ, அந்த ஜரையை எவனேசுவரனென்று சொல்லப்பட்ட மிருத்தியுவானவன் லோகத்தை நாசம் பண்ணுகிறதற்காகத் தனக்குத் தங்கையாய்க் கிரகித்தான். ஆதி வியாதியென்பவை அந்த யவனேசுவரனுக்குப் பரிசனங்களாகிற யவனர்களெனச் சொல்லப்பட்டன. பிராணிகளுக்குப் பீடையைப் பண்ணுகின்ற பிரசுவரனென்னப்பட்டது சீதசுரமென்றும் உஷ்ணசுரமென்றும் சொல்லப்படுகிறது.

ராஜாவே! இந்த ஜீவாத்துமாவானவன் இந்தப்பிரகாரம் ஆதியாத்மிகம் ஆதிதெய்விகம் ஆதிபவுதிக மென்னப்பட்ட வெகுவிதங்களான துக்கங்களினாலே பீடிக்கப்பட்டவனாய் மகா அஞ்ஞானத்தை யுடையவனாய்ப் பிராணேந்திரியமனது இவைகளுடைய தர்மங்களைத் தன்னிடத்திலே ஆரோபித்துக்கொண்டு நானென்றும் என்னதென்றும் அஞ்ஞானத்தினாலே விஷயசுகலேசத்தையே யெண்ணிக்கொண்டு கர்மங்களைச் செய்துகொண்டு இந்தத் தேகத்திலே நூறு வருஷம் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறான். ஸ்வயம்பிரகாசனான ஜீவாத்துமாவானவன் தன்னையும், பரமகுருவான பகவானையும், அறியாமல் எப்போது பிரகிருதியினுடைய குணங்களினாலே ஆசக்தியைப் பண்ணுகிறானோ, அப்போது குணாபிமானியாய்ப் பிரகிருதிபரவசனாய்ப் புண்ணிய பாபரூபமாயிருக்கிற கர்மங்களைப் பண்ணி, சாத்துவிகனாகவும் ராஜசனாகவும்

தாமசனாகவும் கர்மானுகுணமாகப் பிறக்கிறான். சில ஜன்மங்களிலே பிரகாசரூபமான லோகங்களைச் சாத்வீககுணத்தினாலும் அடைகிறான். சில ஜன்மங்களிலே துக்கத்தையுடைய கர்மத்தினாலே ஆயாசத்தையுடைய லோகங்களை ரஜோ குணத்தினாலும் அடைகிறான். சிறிது ஜன்மத்திலே இருட்டு. துக்கம் இவைகளை யுடையவையான லோகங்களை, தமோ குணத்தினாலும் அடைகிறான். சிறிது ஜன்மத்திலே புருஷனாகியும் ஸ்திரீயாயும் நபுஞ்சகனாகியும் தேவனாயும் மனுஷ்யனாயும் பட்சியாயும் மிருகங்களாயும் கர்மானுகுணமாய் மந்த புத்தியான இந்த ஜீவனானவன் பிறக்கிறான். மகா பசியுடனே கூடினதாயும் தீனமாயுமிருக்கிற நாயானது வீடுகள் தோறும் போய், தசையினாலே மூடிய எலும்பையாகிலும் அன்னத்தையாகிலும் எப்படி யடையுமோ, அப்படியே கர்மவசனான ஜீவனும் மேலுலகம் பாதாளம் பூலோகம் ஆகிய இந்த லோகங்களிலே அனேக பிரகாரமாகப் பிரமித்துக்கொண்டு தன் கர்மானுகுணமாகப் பிராப்தமான சுகதுக்கங்களை யடைகிறான். தெய்வகதியால் வந்ததாயும், பிராணிகளாலே வந்ததாயும், தன் தேகத்திலேயே சம்பவித்ததாயு மிருக்கிற இந்த மூன்றுவிதமான துக்கங்களிலே ஒரு துக்கமாகிலும் ஜீவனுக்கிருக்குமேயல்லாமல் இல்லாமற் போகிறதில்லை. இந்தத் துக்கத்தைப் பரிகரிக்க உபாயமில்லை. உபாய மிருந்தாலும் அதுவும் துக்கரூபமேயாகும். எப்படி சுமையை எடுக்கிற புருஷன் தலையிலிருக்கும் சுமையைத் தோளிலே யிறக்கிக்கொண்டாலும் சுமையெடுக்கிற துக்கம் எப்படிப் போகவில்லையோ, அப்படியே துக்கத்துக்குப் பண்ணிக்கொள்ளுகிற பரிகாரங்களும் துக்கரூபமாகவே யிருக்கும். ஞானமில்லாமல் செய்யப்பட்ட கர்மங்கள் முன் கர்மங்களுக்குப் பரிகாரரூபம் ஆகமாட்டா. கர்மமும் அதற்குப் பிராயச்சித்தமான கர்மமும் அஞ்ஞானத்தினாலே செய்யப்பட்டபடியினாலே சொப்பனத்திலே கண்ட சொப்பனம்போலே ஒரு கர்மத்தினாலே ஒரு கர்மம் பரிகரிக்கப்பட மாட்டாது. புருஷனுக்குச் சொப்பனத்திலே காணப்படுகிற வஸ்துக்கள் அப்போது யதார்த்தமாக இல்லாமலிருந்தாலும் சொப்பனத்திலே அந்த வஸ்துவின் அனுபவம் எப்படி யுண்டாயிருக்கிறதோ, அப்படியே பரம புருஷார்த்தரூபனான ஜீவாத்துமாவுக்கு உபாதியான மனதினாலே தேகாதி சம்பந்தமே யதார்த்தமாயில்லாமலிருந்தாலும் சம்சாரமென்கிறது உண்டாயிருக்கிறது. ஆகையினாலே பரமபுருஷார்த்த ரூபனான இந்த ஜீவனுக்கு எந்த அஞ்ஞானத்தினாலே அனர்த்தபரம்பரைகளையுடைய சம்சாரம் நேர்ந்திருக்கிறதோ அந்த அஞ்ஞானம் குருவான வாசு

தேவரிடத்திலே செய்யப்பட்ட பக்தியினாலே நாசமடையும்; ஞானமும் சீக்கிரம் உண்டாகும்.

ராஜரிஷியே! அந்தப் பக்தியோகமானது அச்சுதனுடைய கதையைக் கேட்கிறவனுக்கும், அதில் சிரத்தையுடையவனுக்கும், அதை நித்தியம் பாராயணம் பண்ணுகிறவனுக்கும் சீக்கிரம் கைகூடும். எவ்விடத்திலே நிர்மலமான இருதயத்தையுடையவர்களாய், சாதுக்களாய், பகவத் குணங்களைச் சொல்வதிலும் கேட்பதிலும் ஆசையுடனே கூடின மனதையுடையவர்களான பாகவதர்க ளிருக்கிறார்களோ, அந்தக் கோஷ்டியிலே மகாபாகவதர்களாலே கீர்த்திக்கப்பட்ட பகவத் சரித்திரமாகிற அமிர்த நதிகள் நாலண்டையிலேயும் பிரவகியா நிற்கின்றன. அப்படிப்பட்ட அமிர்தப் பிரவாகங்களை எவர்கள் சாவதானமாய்க் காதுகளினாலே பானம் பண்ணுகிறார்களோ, அவர்களைப்-பசி-தாகம்-பயம்-சுகம்-யோகம்-இப்படிப்பட்ட ஹேய குணங்கள் அடைவதில்லை. இவைகளினாலே நித்தியமாகப் பிடிக்கப்பட்ட ஜனமும் பகவானுடைய குணங்களாகிற அமிர்த சமுத்திரத்திலே ஆசக்தியைப் பண்ணுகிறதில்லை. சாக்ஷாத் சதுர்முகனும் பகவானான ருத்திரனும் மனு சக்கரவர்த்தியும் தக்ஷன் முதலான நவப்பிரஜாபதிகளும் நைஷ்டிகரான ஸனகாதிகளும் மரீசி அத்திரி அங்கிரசு புலஸ்தியர் புலகர் கிருது பிருகு வசிஷ்டர் முதலிய பிரம நிஷ்டர்களும் நானும் வேதவாதிகளும், தபசு ஞானம் யோகம் இவைகளினாலே பார்த்துக்கொண்டிருந்தாலும் சர்வ சாட்சியான பரமாத்தும சொரூபத்தை நன்றாக அறிந்தவர்களன்று. அபாரமான வேதத்தையே அத்தியயனம் பண்ணிக்கொண்டிருக்கிறவர்கள் மந்திர லிங்கங்களினாலே சொல்லப்பட்ட இந்திராதி ரூபமான பகவத் ரூபத்தைக் கர்மமார்க்கத்தினாலே உபாசித்தாலும் பரமமான வாசுதேவ ரூபத்தை அறியார்கள். எப்போது பகவானான வாசுதேவன் தன்னை மனதிலே தியானம் பண்ணப்பட்டவனை அனுக்ரகிக்கிறானோ அப்போது அவன் லோக விவகாரத்தையும் வேதங்களிலே கர்மமார்க்கத்தையும் அனுசரிக்கின்ற புத்தியையும் விட்டுவிடுகிறான். வாராய் பிராசின பர்கிஷே! ஆனபடியினாலே அஞ்ஞானத்தினால் பரம புருஷார்த்தம் போலத் தோன்றும். கேள்விக்குப் பிரியமாயும் முக்கியமான மோட்ச புருஷார்த்தத் தோடே சம்பந்தியாமலுமிருக்கிற கர்மமார்க்கங்களிலே புருஷார்த்த புத்தியைப் பண்ணவேண்டாம். மலினபுத்திவந்தர்கள் வேதத்தினுடைய தாற்பரியத்தை அறியாமல் அதைக் கர்மபரமாக யார் சொல்

லுகிறார்களோ, அவர்கள் பகவான் வசிக்கும் பகவத் சொருப மான அந்த லோகத்தை அறிய மாட்டார்கள். கிழக்கு நுனி களாய், தர்ப்பைப் புல்லினாலே பூமியெல்லாம் பரப்பி அனே கம் பசுக்களை இம்சை பண்ணி, நானே வெகு யக்கியங்களைப் பண்ணினவனென்று அகங்காரத்தை யுடையவனாயும். கர்வித னாயுமிருக்கிற நீ கர்ம தத்துவத்தையாவது ஞானதத்துவத் தையாவது அறிந்தவனன்று எந்தக் கர்மம் அரியைச் சந் தோஷிப்பிக்கிறதோ அதுவே கர்மம். எந்த வித்தை அந்த அரியினிடத்திலே பக்தியை யுண்டாக்குகிறதோ அதுவே வித்தை. அரியானவர் சரீரிகளுக்கெல்லாம் ஸ்வயம் ஆத்மா வாயும், நியந்தாவாயும் தாமே காரணமாயுமிருக்கிறாரன்றோ? ஆகையாலே பிராணிகளுக்கு இந்தச் சமுசாரத்திலே யாதொரு அரிபாத பஜனையினாலே க்ஷேமம் உண்டாகிறதோ, அந்த அரியினுடைய பாதாரவிந்தமே சரணமாக அடையத் தக்கது. யாதொரு பகவானிடத்திலே அணுமாத்திரமும் பயமில்லையோ, அந்தப் பகவானே இந்த ஜீவனுக்கு மிகவும் இஷ்டமானவரென்று இந்தப் பிரகாரம் எவன் அறிகிறானோ அவனே வித்துவான். எவன் வித்துவானோ அவனே குரு, அவனே அரி. வாராய் புருஷசிரேஷ்டனே! இந்தப் பிரகா ரம் உன்னாலே பண்ணப்பட்ட பிரசினமானது நம்மாலே பரிகரிக்கப்பட்டது.

இனி இந்த விஷயத்திலே ரகசியமாயும் நிச்சயிக்கப் பட்டு மிருக்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறேன் கேள். மெல்ல மெல்ல சஞ்சரித்துக் கொண்டும், புஷ்ப வனத்திலே ஸ்திரீயுடனே கூடிக்கொண்டும், அந்த ஸ்திரீயினிடத்திலே பிரீதியுடன் வண்டுகளின் கானத்தையே காதுகளினாலே கேட்டுக் கொண்டும், எதிரே வாநின்றும் பிராணிகளை வதைத்துத் தன்பிராணனைத் திருப்தி பண்ணுவியா நின்று மிருக்கிற செந்நாய்களையும் எண்ணாமல் சஞ்சரித்துக் கொண் டிரா நின்றும், பின்பக்கத்திலே வேடனுடைய பாணத் தினாலே அடிக்கப்பட்டுமிருக்கிற மிருகத்தைப்பார். இதற்குத் தாத்பரிய மென்னவென்றால், கிருகஸ்தாசிரமத்திலே காமிய கர்மங்களினாலே யுண்டான அற்ப சுகங்களையே அனுபவித் துக்கொண்டு ஸ்திரீயோடு கூடினவனாய் அந்த ஸ்திரீ யினிடத்திலேயே ஆசக்தனாயும், அந்த ஸ்திரீயினுடைய மதுரமான வார்த்தைகளிலேயே ஆசையை யுடைய காது களை யுடையவனாகியும் நாள்தோறும் தன்னுடைய ஆயுளை அபகரித்துக் கொண்டுபோகும் அகோராத்திர மெனனப் பட்ட காலத்தையும் அறியாமல் சஞ்சரித்துக் கொண்டிருக்

கிற இந்தப் புருஷனை இவனுக்குத் தெரியாமலேயே வந்து காலனானவன் பிராணனைக் கொண்டுபோகின்றான். ஆகையால் இந்த ஜீவனுடைய கதியை மிருகத்தினுடைய சேஷ்டிதம் போல நன்றாக விசாரித்து இருதயத்துக்குள்ளே சிந்திக்கப்பட்ட பாக்கிய வியாபாரத்தைச் சித்தத்திலேயே அடக்கிப்போடு. விடபுருஷர்களுடைய கதையை யுடையதான கிருகஸ்தாசிரமத்தை விட்டு விடு. ஜீவாத்மாவுக்கு நியந்தாவாயிருக்கிற பரமாத்மாவைச் சந்தோஷிப்பித்துக் கொண்டிரு. இந்தப் பிரகாரம் கிரமமாகச் சர்வ வியாபாரங்களில் நின்றும் ஒழிவை அடை என்று சொல்லுகின்ற நாரத மகாரிஷியைப் பார்த்து ராஜா பிரசினம் பண்ணுகிறார் :—

பிரம நிஷ்டரே! எந்த அர்த்தத்தைக் கேட்கவேண்டுமோ, அது என்னால் நன்றாகக் கேட்கப்பட்டது. நன்றாக விசாரித்து மறியப்பட்டது. யாதொரு ஆத்துமதத்துவத்தை நீர் சொன்னீரோ, அந்த ஆத்தும தத்துவத்தையுங் கர்மத்தையும் உபதேசியாநின்ற என்னுடைய ஆசாரியர்கள் அறியார்கள். அவர்கள் அறிந்திருந்தார்களேயானால் எனக்கு ஏன் சொல்லாமற் போவார்கள். ஆசாரியர்களால் உபதேசிக்கப்பட்ட ஆத்ம தத்துவத்திலே யுண்டாயிருந்த சம்சயமானது உம்மாலே போக்கடிக்கப்பட்டது. யாதொரு கர்மத்திலே இந்திரிய விர்த்திகளும் பிரவிர்த்தியாவோ அந்தக் கர்மத்திலே ரிஷிகளும் மோகத்தை யடைந்திருக்கிறார்கள். அந்தக் கர்ம விஷயத்திலே சந்தேகமுண்டாயிருக்கிறது. அதெப்படியென்றால், புருஷனானவன் இந்தப் பூமியில் எந்தச் சரீரத்தினால் கர்மங்களைச் செய்கிறானோ, அந்தச் சரீரத்தை யிங்கேயே விட்டுவிட்டுப் பரலோகத்தில் கர்மத்தினாலே யுண்டாக்கப்பட்ட வேறே ஒரு சரீரத்தினால் கர்ம பலன்களை அனுபவிக்கிறான். இந்தப் பிரகாரம் வேதவாதிகளுடைய வாதமானது அங்கங்கே கேட்கப்படுகிறது. திரும்பவும் சாஸ்திரங்களினால் விதிக்கப்பட்ட வேறு கர்மமும் பண்ணப்படுகிறது. செய்யப்பட்ட கர்மமும் அந்த க்ஷணத்திலேதானே காணப்பட்டதாய்ப் பிரகாசிக்கிறதில்லை. ஆகையால் கர்மம் நசித்துப் போயிருக்கும்போது அதினுடைய பலானுபவம் எப்படி சம்பவிக்கும்? இந்தச் சந்தேகத்தை எனக்குத் தெளியும்படியாய்ச் சொல்ல வேண்டுமென்று கேட்கின்ற ராஜாவைப் பார்த்து நாரதமகாரிஷி சொல்லத் தொடங்கினார். அரசனே! புருஷனானவன் இவ்விடத்திலே எந்தத் தேகத்தினாலே கர்மங்களைப் பண்ணுகிறானோ கர்த்தா

வான தேகத்துக்கும் போக்தாவான தேகத்துக்கும் வேறு காமத்திலிருக்கின்ற லிங்க சரீரமான அந்த மனதினாலேயே பரலோகத்திலே கர்மபலத்தை அனுபவிக்கிறான். அதெப்படியென்றால் புருஷனானவன் சயனித்துக்கொண்டும் சுவாசத்தை யுடையதாயுமிருக்கிற இந்தச் சரீரத்திலே அபிமானத்தை விட்டு, நித்திரை செய்கிற காலத்தில் இதற்கு வேறாயும் கர்மத்தினாலே யுண்டாக்கப்பட்டு மிருக்கிற இதற்குச் சமானமான சரீரத்தினாலே ஜாக்கிரத்தி லனுபவிக்கப்படுகிற கிருத்தியங்கள் சொர்ப்பனத்திலேயும் மனதிலே யிருக்கப்பட்ட தன்னுடைய கர்மங்களை அனுபவிக்கிறானோ அப்படியே லோகாந்தரத்திலேயும் கர்மத்தினாலே பண்ணப்பட்ட சரீரத்தினாலே கர்ம பலன்களை அனுபவிக்கிறான்.

புருஷன், இவர்கள் என்னுடைய புத்திரர்கள் நான் பிராமணனென்று சொல்லிக்கொண்டு மனதினாலே எந்தெந்தச் சரீரத்தைக் கிரகித்தானோ, அந்தச் சரீரத்தினாலே செய்யப்பட்ட கர்மத்தை அந்தப் புருஷன் அடைகிறான். யாதொரு கர்மத்தினாலே புனர் ஜன்மம் உண்டாகிறதோ, அந்தக் கர்மத்தை அவனே அடைகிறான். செய்யப்பட்ட கர்மம் இங்கே நசித்துப் போயிருக்கப் பரலோகத்திலே கர்ம பலானுபவம் எப்படி யுண்டாகும்? என்னும் கேள்விகளுக்கு பதில் எப்படியானால் ஞான கர்மேந்திரியங்களுடைய பிரவிர்த்திகளினாலே மனமென ஒன்று அனுமிக்கப் படுகிறதோ, அப்படியே மனதினுடைய வியாபாரங்களினாலே பூர்வ தேகத்திலே செய்யப்பட்ட கர்மமும் அனுமிக்கப்படுகிறது இந்தச் சரீரத்தினாலே ஒரு இடத்திலேயும் அனுபவிக்கப் படாமலும் கேட்கப்படாமலும் பார்க்கப்படாமலும் இருக்கிற வஸ்து, சொப்பனதிலேயாவது இச்சையிலேயாவது மனதிலே ஒரு நாளுந் தோன்றாது. சப்தாதி ரூபமாயும் சத்வாதி குணமயமாயும், ஷோடச ரூபமாகவும் சொல்லப்படுகிற லிங்க சரீரத்தை யுடையவனான இந்த ஜீவனுக்கு கர்மபலானுபவத்திலே தேகம் உண்டென்கிறதை நிச்சயமாக அறி. ஒருக்காலும் அனுபவிக்கப்படாத வஸ்துவானது மனதிலே பிரகாசிக்கமாட்டாது. ராஜனே! உனக்கு மங்கள முண்டாகட்டும். உத்தமனாகப் போகின்ற புருஷனுக்கும் அதமனாகப்போகின்ற புருஷனுக்கும் மனதுதானே ஔதாரியம் லோபம் ஆகிய குணங்களைக் கற்பித்துப் பூர்வ ஜன்மத்தையும் வரப்போகிற ஜன்மத்தையுஞ் சொல்லுகிறது. ஒருபோதும் பார்க்கப் படாமலும் கேட்கப்படாமலுமிருக்கிற வஸ்து மனதிலே தோன்றுகின்றது. அதை அன்

னிய தேசத்திலே யிருக்கிறதும், அன்னியகாலத்திலே யிருக்கிறதும், அன்னிய புருஷனிடத்திலே யிருக்கிறதும், நித்திரையினாலே சொப்பன தோஷத்தினாலே தன்னிடத்திலே தோன்றுகிறதென்று அறியத்தக்கது. சமஸ்தமான சப்தாதி விஷயங்களும் கர்மானுகுணமாக அனுபவிக்கப் படுகிறதான படியினாலே மனதிலே அடைந்திருக்கின்றன.

அனுபவித்த பிற்பாடு விட்டுப்போகின்றன. சகல ஜனங்களும் மனதை யுடையவர்களன்றோ? சத்துவகுணப்பிரதானமாயும் பகவத்கியானத்தையுடையதாயுமிருக்கிற மனதிலே இந்தப் பிரபஞ்சமானது சந்திரனை ஸ்பரிசிக்கின்ற ராகுவானவன்போல் சம்பந்தித்திருக்கிறதாகப் பிரகாசிக்கிறது. அனாதியான புத்தி மனது சப்தாதி விஷயங்களுடைய சங்காத ரூபமான லிங்கசரீர மிருக்கிற மட்டுக்கும் புருஷனிடத்திலே நான் எனதென்கிற தேகசம்பந்தம் ஒழிகிறதில்லை. நித்திரை மூர்ச்சை வியாதியினாலே உண்டான ஆயாசம் இஷ்ட ஜனங்களுடைய வியோகத்தினாலே யுண்டான துக்கம் மரணம் இவைகளிலே இந்திரியசகதி அடங்கிப் போயிருக்கிற படியினாலே நானென்கிற அகங்காரம் பிரகாசிக்கிறதில்லை. எப்போது யௌவனத்தையுடைய புருஷனுக்குப் பதினொரு இந்திரியங்களினாலே பிரகாசிக்கப்படாநின்ற அகங்காரமானது கர்ப்பத்திலேயும் பாலிய அவஸ்தையிலேயும் இந்திரியங்கள் சமர்த்தங்களாகாம லிருக்கிறதினாலே அமாவாசையிலே சந்திரபிம்பம் எப்படி காணப்படவில்லையோ, அப்படிபோல் காணப்படவில்லை. சப்தாதி விஷயங்களைத் தியானம் பண்ணுகின்ற இந்த ஜீவனுக்கு லிங்க சரீரம் உள்ளமட்டும் தேக சம்பந்த மிருக்கிறபடியினாலே சொப்பனத்திலே யில்லாமலிருக்கிற வஸ்துக்கள் எப்படி காணப்படுகிறதோ, அப்படிப்போலே பரமார்த்தமாய் ஒரு விஷயமு மில்லாமலிருந்தாலும் சம்சாரம் ஒழிகிறதில்லை, சப்தாதி ரூபமாயும் சத்வாதி குணமயமாயும் ஷோடச ரூபமாகவும் லிங்கசரீரம் சொல்லப்படுகின்றது. ஞான சக்தியை யுடைய புருஷன் ஜீவாத்மாவென்று சொல்லப்படுகிறான். இந்த லிங்க சரீரத்தோடு கூடிக்கொண்டு ஜீவாத்மாவானவன் ஸ்தூல தேகங்களை யடைந்து திரும்பவும் விட்டுவிடுகிறான். இந்த லிங்க சரீரத்தோடே கூடிக்கொண்டு சந்தோஷம் சுகம் பயம் துக்கம் சோகம் இவைகளை அனுபவிக்கிறான். எப்படியானால் திரணத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிற கிருமியானது மற்றொரு திரணத்தைப் பிடித்துக்கொண்ட பிற்பாடு அந்தத் திரணத்தை எப்படி விட்டு

விடுகிறதோ, அப்படிபோலவே ஜீவனானவன் மரணத்தை யடையும்போது, இந்தத் தேகத்தை யுண்டாக்காநின்ற கர்மம் முடிந்ததினாலே இந்தச் சரீரத்தைப் பின்னை யொரு சரீரம் பற்றுகிறதற்கு முன்னே விடுகிறதில்லை. யாதொரு காரணத்தினாலே இந்திரியங்களால் சப்தாதி விஷயங்களைத் தியானம் பண்ணிக்கொண்டு அடிக்கடி கர்மங்களைப் பண்ணுகிறானோ, அந்தக் காரணத்தினால் அந்தப் பிராணிகளுக்கு ஜன்மஹேதுவாகிறது. ஆத்மாவுக்குக் கர்மமூலமான அஞ்ஞானத்தினாலே தேகாதிகளுடைய கர்மபந்தமுண்டாகிறது. ஆனபடியினாலே ஜன்மத்தைப் போக்கடித்துக் கொள்ளுகிற நிமித்தமாய் இந்தப் பிரபஞ்சத்தைப் பகவத்ரூபமாகப் பார்த்துக்கொண்டு எந்த பகவானாலே இந்தப் பிரபஞ்சத்துக்குச் சிருஷ்டி ஸ்திதி சங்காரங்கள் உண்டாயிருக்கிறதோ, அந்த பகவானையே பலவிதமாகவும் சரணமாக அடையென்று நாரதர் சொன்னார்.

மைத்ரேயர் வாக்கியம்

விதுரரே! இந்தப் பிரகாரம் பாகவத சிரேஷ்டரான நாரதர், சிவன் விஷ்ணு இவர்களுடைய ஸ்வரூபத்தை ராஜாவுக்கு உபதேசித்து அவனுடைய அனுமதிகொண்டு, பிற்பாடு சித்தலோகத்தை யடைந்தார். ராஜரிஷியான பிராசீன பரிகிஷவும் பிரசாரக்ஷணத்திலே புத்திரர்களை நியமித்துத் தவசின் பொருட்டு கபிலாசிரமத்தைத் தியானம் பண்ணிக்கொண்டு அந்த பகவத் பக்தியினாலே அந்த பகவானுடைய சாரூப்பியத்தை யடைந்தான். வாரீர் விதுரரே! தேவரிஷியினாலே சொல்லப்பட்ட இந்த ஆத்மக்கியானத்தைக் கேட்கிறவன் கேட்பிக்கிறவன் ஆகிய இருவரும் முக்தர்களாவார்கள். முகுந்தனுடைய யசஸினாலே லோகபாவனமாகியும் தேவரிஷி சிரேஷ்டரான நாரதருடைய முகத்தில் நின்றும் உண்டானதாயும் ஆத்மபாவனமாயு மிருக்கிற இந்த ஆத்ம வுபதேசத்தை எவன் கீர்த்திக்கிறானோ அவன் உத்தம ஸ்தானத்தை யடைவான். சமஸ்த கர்ம பந்தங்களினாலே விடப்பட்டவனாய், திரும்பவும் சம்சாரத்திலே ஜன்மத்தை யடையான்.



## இருபத்தெட்டாவது அத்தியாயம்

*பிரசேதசுக்கள் ருத்திரகீதத்தினாலே ஈசுவரனை மெய்ப்பித்து அவனாலே வெகு வரங்களையடைந்து பிற்பாடு அங்கிருந்து வந்து விராட்சி யென்கிற பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொண்டு ராச்சியபாரம் பண்ணினார்களென்று சொல்லப் படுகின்றது.*

### விதுரர் வாக்கியம்

மைத்திரேயரே! பிராசீன பரிகிஷுவினுடைய பிள்ளைகள் ருத்திரகீதத்தினால் ஹரியைச் சந்தோஷிப்பித்து எப்படிப்பட்ட சித்தியை அடைந்தார்கள்? அந்தப் பிரசேதசுக்கள் தேவனை கிரீசனை எதேச்சையாகவே யடைந்து கைவல்லிய நாதராகிய ஸ்வாமிக்குப் பிரியனான ருத்திரனுடைய அனுக்கிரக பாத்திரர்களாய் மோக்ஷத்தை யடைந்தார்கள். அது நிச்சயம். மோக்ஷத்தை யடைகிறதற்கு முன்னே இந்த லோகத்திலும் பரலோகததிலும் எப்படிப்பட்ட பலத்தை யடைந்தார்கள், அதைச் சொல்லவேண்டுமென்று பிரசினம் பண்ணுகின்ற விதுரரைப் பார்த்து? மைத்திரேயர் சொல்லத்தொடங்கினார்: வாரீர் விதுரரே! அந்தப் பிரசேதசுக்கள் பிதாவினுடைய ஆக்கினையைக் கடவாமல் சமுத்திரத்திலே மூழ்கிக்கொண்டு ருத்திரனாலே சொல்லப்பட்ட கீதத்தினாலே ஜப யக்கியத்தினாலும் தபசினாலும் நிர்விகாரனை பரமாத்மாவைப் பதினாயிர வருஷம் ஜபஞ்செய்து சந்தோஷிப்பித்தார்கள். இந்தப் பிரகாரம் தபசு பண்ணிக் கொண்டிருக்கிற அந்தப் பிரசேதசுக்களுக்குப் பதினாயிரம் வருஷத்துக்குப் பிற்பாடு ஜகந்நாதரான ஸ்ரீமந் நாராயணன் தம்முடைய தேஜசுகாந்தியினாலே அந்தப் பிரசேதசுக்களுடைய தபசினாலே யுண்டான கிலேசத்தைப்போக்கடிக்க நினைத்து, சத்துவப்பிரதானமான மூர்த்தத்தினாலே பிரசன்னரானார். மேரு சிகரத்திலே யிருக்கிற காளமேகம்போல் கருடாரூடராய் பீதாம்பரதாரியாய் கவுஸ்துவ மாணிக்கத்தைக் கண்டத்திலே யுடையவராய் அந்தக் கவுஸ்தவ மாணிக்கத்தினுடைய தேஜசினாலே திக்குகளைப் பிரகாசப்படுத்திக் கொண்டும் ஆவிர்ப்பவித்தார். ஜோதிமயமான சுவர்ணமயமுள்ள கிரீட குண்டலங்களினாலே விளங்குகின்ற கபோலங்களையும் வதனத்தையும் உடையவராய்ப் பிரகாசியாநின்ற கிரீடத்தை யணிந்தவராய் அஷ்டாயுதங்களினாலேயும் பக்தர்களான முனிவர்

களாலேயும் தேவசிரேஷ்டர்களாலேயும் சேவிக்கப் பட்ட வராய், கருடனுகிற கின்னரன் தனது இறக்கைகளுடைய தொனிகளினாலே கானம் பண்ணப்பட்ட கீர்த்தியையுடைய வராய், பருத்தும் நீண்டு மிருக்கிற அஷ்ட புஜங்களினாலே சூழப்பட்ட மார்பிலே யிராநின்ற லக்ஷ்மியுடனே, சண்டை செய்கின்ற காந்தியையுடைய வனமாலையினாலே சூழப்பட்ட வரான ஆதிபுருஷன் கிருபாபூரண கடாக்ஷங்களுடனே கூடினவராய் சரணாகதமென்ற பிரசேதசுக்களைக் குறித்து மேகநாதம்போலும் தொனியுடன் அருளிச்செய்கிறார்:—

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்

இராஜகுமாரர்களே! உங்களுக்கு நன்மை யுண்டாகக் கடவது. நீங்களனைவரும் ஏகபுத்தியா யிருந்துகொண்டு ஏக விரதர்களாய் என்னையே ஆராதித்தீர்கள். உங்களுடைய சுகிர்த பிரபாவத்தினால் நான் சந்தோஷத்தை யடைந்தேன், உங்கள் மனதிலே யிருக்கிற கோரிக்கையை என்னிடத்தில் நின்றும் அடைவதற்குக் கேளுங்கள். எந்தப்புருஷன் நாள் தோறும் சயனகாலத்திலே உங்களை நினைக்கிறானோ, அவ னுக்குத் தன் பிராதாக்களிடத்திலே வாத்சல்லியமும் பிராணி களிடத்தில் தயையும் உண்டாகும். எவர்கள் சித்த சமா தானத்தை யுடையவர்களாய் இந்த ருத்திர கீதத்தால் சாயங் காலத்திலும் பிராதக்காலத்திலும் என்னை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களோ, அவர்களுக்கு நான் இஷ்டவரங்களை யும் சோபனமான புத்தியையும் கொடுப்பேன். நீங்கள் சந்தோஷத்தை யுடையவர்களாய் பிதாவினுடைய ஆக் ஞையை எப்போது கிரகித்தீர்களோ, அதினால் உங்களு டைய மனோகரமான கீர்த்தி லோகங்களெல்லாம் வியாபிக்கப் போகிறது. உங்களுக்குக் குணங்களினால் பிரமாவுக்குச் சமானனும், பிரசித்தியுமுடைய புத்திரன் உங்களுக்கு உண் டாகப்போகிறான். அந்தப் பிள்ளையானவன் இந்த மூன்று லோகத்திலும் தன் சந்தானத்தினாலே பிரசித்தியடையப் போகிறான். கண்டு மகாரிஷிக்குப் பிரமலோசையென்கிற அப்சரஸ்திரீயானவள் கமலம்போலும் கண்களையுடைய வளான ஒரு பெண்ணைப்பெற்றாள். அந்தப்பெண்ணை அந்த ஆசிரமத்திலேயே விட்டு விட்டு அவள் சுவர்க் கத்தையடைந்தனள். பசியினாலே அழுதுகொண்டிருக்கிற அந்தப்பெண்ணை விருக்ஷங்க ளெடுத்து வளர்த்தன. தயாளுவாயும் ஓஷதிகளுக்கெல்லாம் ராஜாவாயுமிருக்கிற சந்திரன் அமிர்தத்தைப் பெருக்காநின்ற தர்ஜனி யென்

ளப்பட்ட தன் விரலைப் பசியினாலே அழுதுகொண் டிருக்கிற அந்தப் பெண்ணினுடைய வாயிலே கொடுத் தான். அதினாலே அக்குழந்தை விர்த்தியடைந்தது. ராஜகுமாரர்களே! என்னையே உபாசியாநின்ற உங் கள் பிதாவினாலே நீங்கள் பிரஜைகளைச் சிருஷ்டி பண்ணச் சொல்லி ஆக்கியாபிக்கப்பட்டீர்களன்றோ? அந்தப் பிரஜா சிருஷ்டி நிமித்தத்தாலே உத்தமஸ்திரீயான அந்தப் பெண் ணைச் சீக்கிரமாக நீங்கள் விவாகம் பண்ணிக்கொள்ளுங்கள். சோபனமான இடையையும் சமானமான தர்மத்தையும் சீலத் தையு முடையவளாய் உங்களிடத்திலேயே வைக்கப்பட்ட மனதையுள்ளவளாயு மிருக்கிற அந்தப் பெண்ணானவள் உங் களுக்குப் பத்தினியாகக் கடவள். நீங்கள் தடுக்கப்படாத பராக்கிரமத்தை யுடையவர்களாய், அனேக திவ்விய வருஷங் கள் பூமியிலும் சுவர்க்கத்திலும் உண்டான போகங்களையும் விடுத்து, என்னுடைய ஸ்தானமான பரமபதத்தை அனுப விக்கப் போகிறீர்கள். எனக்குப் பிரீதியாகக் கர்மங்களைச் செய்தவர்களாயும் என்னுடைய கதையினால் காலத்தைப் போக்குகிறவர்களாயுமிருக்கிற புருஷர்கள் கிருகஸ்தாசிரமத் திலே யிருந்தாலும் அந்தக் கிருகஸ்தாசிரமத்திலேயும் அவர்களுக்கு எந்தக் காரியம் சாத்தியமாகமாட்டாது? சர் வஜ்ஞனான நான் பிரம நிஷ்டர்களாலே கீர்த்திக்கப்பட்ட வனாய்க் கேட்பவர்களுடைய இருதயத்தையும் அடிக்கடி அடைந்தவனாய்ப் பிரகாசிப்பேன். பரப்பிரமமான என்னை அடைபவர்கள் திரும்பவும் சோகம் மோகம் விஷயப்பிரீதி இவைகளை அடையார்கள்.

### மைத்திரேயர் வாக்கியம்

விதுரரே! பிறகு, ஜனார்த்தனனுக்குப் பிரசேதசுக்கள் அநேக பிரணாமங்களைப் பண்ணினவர்களாய், பிரசேதசுக்கள் கைகளைக் கூப்பிக்கொண்டு அந்த பகவத் தரிசனத்தினாலே ரஜஸ்தமோகுணங்கள் மனோமலங்கள் இவைகளைப் போக் கடித்தவர்களாய், பக்தி அதிசயத்தினாலே பொருமலை யுடைய வாக்கினாலே அந்தப் பகவானை ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

### பிரசேதசுக்களுடைய ஸ்தோத்திரம்

வாரீர் பகவானே! வேதங்களினாலே சர்வ புருஷார்த்த சாதனமாகச் சொல்லப்பட்ட உதாரங்களான குணங்களை யும் நாமங்களையு முடையவராய் ஆசிரிதர்களுடைய கிலேசங்

களைப் போக்கடிக்கிறவராய், மனதினுல் அறிவதற்கும் வாக்கினுல்சொல்வதற்கும் அகப்படாதவராய் சர்வேந்திரியங்களினுலேயும் அறியப்படாத கதியை யுடையவராயுமிருக்கிற உமக்குப் பிரணாமம். சுபாவமாகப் பிரகிருதி சம்பந்தமும் சோகமோகாதிகளு மில்லாதவராயும், புருஷார்த்தமான ஆத்மசொரூபத்தைக் கிரகியாதமனதிலே தோன்ருநின்ற தேவாதி பேதத்தை யுடையவர்களான ஜீவாத்மாக்களுக்கு அந்தரியாமியாகியும், ஜகதுற்பத்திஸ்திதிசங்காரங்களிலே மாயா குணத்தினுலே பிரமாதி மூர்த்தங்களை யுடையவராயுமிருக்கிற உமக்குப் பிரணாமம். நிர்மலமான சத்துவ மூர்த்தியாயும், பாபத்தைப் போக்கா நின்ற ஞானத்தைக் கொடுக்கிறவராயும் வாசுதேவராயும் கிருஷ்ணனுயும் சமஸ்தமான பக்தர்களுக்கும் பிரபுவாயுமிருக்கிற உமக்குப் பிரணாமம். கமலத்தினுடைய கேசரம் போலே பொன்னிறமான பீதாம்பரத்தை யுடையவராயும், சர்வபூதநிவாசராயும், சர்வஜ்ஞராயுமிருக்கிற உமக்குப் பிரணாமம். பகவானுனை உம்மாலே கிலேசங்களை யெல்லாம் போக்கடிக்கின்ற இந்த ரூபமானது கிலேசத்தை யுடையவர்களான எங்களுக்குக் காண்பிக்கப்பட்டது. இதைப்பார்க்கிலும் வேறே கிருபை பண்ணத்தக்கது என்ன இருக்கின்றது? வாரீர் அமங்களத்தைப் போக்கடிக்கிற மங்களமூர்த்தியே! இவர்கள் நம்முடையவர்களென்று யோக்கியமான காலங்களிலே புத்தியினுலே நினைக்கிறது யாதொன்றுண்டோ, இவ்வளவே தீனர்களிடத்திலே வாற்சல்லியத்தையுடையவர்களான விபுக்களாலே செய்யத்தக்கது. எப்போதும் உம்மையே தியானம்பண்ணிக்கொண்டு இருக்கிறவர்களுடைய இருதயத்திலே சுகரூபமாயிருக்கிறீர். அஞ்ஞானிகளான பிராணிகளுக்கும் இருதயத்திலே அறியப்படாதவராய் அந்தரியாமியா யிருக்கிறீர். அப்படியிருக்கிற நீர் கோரிக்கையை யுடையவர்களாயும் உம்முடைய உபாசகர்களான எங்களுடைய இருதயத்திலேயிரா நின்ற இஷ்டங்களை எந்தக் காரணத்தினுலே அறியாமற் போவீர்? வாரீர் ஜகத்பதியே! மோக்ஷத்தைக் கொடுக்கின்றவராயும் கதியாயுமிருக்கிற நீர் எங்களுக்குப் பிரசன்னரானீரே? இந்த உம்முடைய பிரசாதமே எங்களுக்கு வேண்டிய வரம். வாரீர் நாதனே! ஆனுலும் பிரகிருதியைக் காட்டிலும் விலக்ஷணனுன ஜீவனைக் காட்டிலும் விலக்ஷணனுன உம்மிடத்தில் நின்றும், ஒருவார்த்தைகேட்கிறேம். யாதொரு காரணத்தினுலே உம்முடைய ஐசுவரியங்களுக்கு அந்தமில்லையோ, அந்தக் காரணத்தினுலே அனந்தரென்று சொல்லப்படுகிறீர், பாரிஜாத புஷ்பமானது

சுபமாகப் புஷ்பித்ததேயாகில் வண்டானது வேறொரு புஷ்
பத்தை எப்படி யடையாதோ, அப்படியே நாங்களும்
சாக்ஷாத் பரமாத்மாவான உம்முடைய பாதமூலத்தையடைந்து
வேறே எதைக் கேட்கப்போகிறோம். நாங்கள் எவ்வளவு
காலம் உம்முடைய மாயையினாலே மோஹிக்கப்பட்டவர்க
ளாய்ச் சம்சாரத்திலே கர்மங்களினால் உழன்றுகொண்டிருக்கிற
காலம் வரையில் எங்களுக்குப் பிறவிதோறும் பாகவத சகவா
சம் உண்டாகக் கடவது. மனுஷ்யர்களுக்கு ஸ்வர்க்கமோக்ஷங்
களை அதிசயித்த பாகவதர்களுடைய க்ஷணகால சகவாசத்
துக்கும் சரியாகச் சொல்லமாட்டோம். பசுபுத்திராதி பலன்
கள் சரியல்லவென்று சொல்லவேண்டியதென்ன? யாதொரு
பாகவத சங்கத்திலே சுத்தமான பகவத் கதையானது பிரசங்
கிக்கப் படுகிறதோ? யாதொரு பகவத் கதையினாலே
சப்தாதி விஷய ஆசைக்குச் சாந்தியுண்டாகுமோ? யாதொரு
பகவத் கதாப் பிரசங்கத்திலே பிராணிகளிடங்களிலே
மனது வைரத்தை விட்டதாமோ? யாதொரு பகவத்
கதையிலே ஒரு பயமும் உண்டாகாதோ? யாதொரு
பாகவத கோஷ்டியிலே சத்கதைகளிலே முத்தர்
சங்கங்களாலே முமுக்ஷுக்களுக்குக் கதியான சாக்
ஷாத் ஸ்ரீமந்நாராயணன் அடிக்கடி ஸ்தோத்திரம் பண்ணப்
படுகிறாரோ? தீர்த்தங்களை யெல்லாம் பரிசுத்தம் பண்ண
வேண்டுமென்னும் இச்சையினால் காலாலே சஞ்சரியாநின்ற
அப்படிப்பட்ட பாகவதர்களுடைய சங்கமானது சம்சாரத்
தில் பயத்தையுடையவனை எவனுக்குத்தான் ருசிக்காது?

வாரீர் பகவானே! உமக்குப் பிரியனையும், சகாவாயும்,
பாகவதனாயு மிருக்கிற சாக்ஷாத் ருத்திரனுடைய க்ஷணகால
சங்கத்தினாலே, நாங்கள் ஒரு சிகிச்சையு மில்லாததாகிய
ஜனன மரணாத்மகமான சம்சாரமாகிற வியாதிக்கு வைத்திய
ரான உம்மை இப்போது கதியாக அடைந்தோம். வாரீர்
ஈசனே! எங்களால் பண்ணப்பட்ட அத்தியயனம் யாதொன்
றுண்டோ, சர்வகாலமும் சுசுருஷையினாலே ஞான விருத்
தர்களான ஆசாரியர்கள் பிராமணர்கள் இவர்கள் சந்தோ
ஷிக்கும்படியாய் நடந்துகொண்டது யாதொன்றுண்டோ,
ஜேஷ்டர்களான பிராதாக்கள், சிநேகிதர்கள் இவர்களை
நமஸ்கரிப்பது யாதொன்றுண்டோ? சகல பிராணிகளிடத்
திலேயும் பொறாமையை விட்டு சமமாகப் பார்ப்பது
யாதொன்றுண்டோ, வெகுகாலம் ஜலத்திலே மூழ்கிக்
கொண்டு அன்னமில்லாமல் எங்களாலே செய்யப்பட்ட தபசு
யாதொன்றுண்டோ, இவையெல்லாம் அனந்த மகிமையை
யுடையவரான உமது சந்தோஷத்தின் பொருட்டு உண்டாகக்

கடவது. தபசு ஞானங்களினாலே நிர்மலமான இருதயத்தை யுடையவர்களான சுவாயம்புமனு, பிரமன், ருத்திரன், இவர்களெல்லாம் உம்முடைய மகத்துவமென்கிற கரையை அறியாதவர்களாய் இருந்தாலும், தங்களுடைய புத்தியாறு சரணமாக உம்மை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். ஆகையால் நாங்களும் ஸ்தோத்திரம் பண்ணுகிறோம். சர்வ பூத சமராயும், சாந்தராயும், பரமபுருஷராயும், வாசுதேவராயும், சத்துவமூர்த்தியாயும், ஷட்குண பரிபூரணராயுமிருக்கிற உமக்குப் பிரணாமம் பண்ணுகிறோமென்று பிரசேதசுக்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராயும் பக்தவற்சலராயு மிருக்கிற பகவானானவர் சந்துஷ்டராய்க்கொண்டு அவர்களாலே கோரப்பட்ட அந்த வரத்தைக் கொடுத்தவராய், அனந்த மகிமையை யுடையவரான ஸ்வாமியானவர் தம்முடைய தரிசனத்திலே திருப்தியில்லாத கண்களையுடையவராயும், தமது அதரிசனத்தை இச்சியாதவர்களாயு மிருக்கிற அந்தப் பிரசேதசுக்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது, தம்முடைய ஸ்தானத்தைக் குறித்து எழுந்தருளினார். பிற்பாடு அந்தப் பிரசேதசுக்கள் சமுத்திர ஜலத்திலேயிருந்து வெளிப்பட்டு சொர்க்கத்தைத் தகையவேண்டு மென்கிறதுபோல் மிகவும் உயர்ந்திருக்கிற விருக்ஷங்களினாலே வியாபிக்கப்பட்ட பூமியைப் பார்த்துக் கோபித்துக் கொண்டார்கள். வாராய் ராஜனே! பிற்பாடு அந்தப் பிரசேதசுக்கள் பிரளயகாலத்திலே காலாக்கினி ருத்திரன்போலப் பூமியிலே உள்ள விருக்ஷங்கள் கொடிகள் இவைகள் ஒன்றுமில்லாமற் போகப் பண்ணுகிறதற்காகக் கோபத்தினாலே அவர்கள் முகத்திலேயிருந்து உண்டான அக்கினியினாலே பஸ்மங்களாகப் பண்ணப்பட்ட விருக்ஷங்களைப்பார்த்து பிரமதேவன் வந்து, பிராசீன பரிகிஷவினுடைய பிள்ளைகளான பிரசேதசுக்களுக்கு நியாயங்களைப் போதித்துக் கோபந்தணியச்செய்து, அப்போது மிகவும் பயப்பட்டுக்கொண்டிருக்கிற விருக்ஷ கன்னிகையான மாரிஷையென்கிற பெண்ணை அந்தப் பிரசேதசுக்களுக்குக் கொடுத்தார். அந்தப் பிரசேதசுக்களும் பிரமாவினுடைய ஆக்கினையினாலே அந்த மாரிஷையென்கிற பெண்ணை விவாகம் பண்ணிக்கொண்டு, அவளிடத்திலே மகாதேவனுடைய அவமானத்தினாலே நசித்திருந்த தக்ஷப் பிரஜாபதி திரும்பவும் பிறந்தான். பிரமாவானவர் பிரஜா சிருஷ்டியிலும் ரக்ஷிக்கிறதிலும் அந்தத் தக்ஷனை நியமித்தார். அவன் மரீசி முதலான பிரஜாபதிகளைப் பிரஜா சிருஷ்டியிலே ஆக்கியாபித்தான்.



## இருபத்தொன்பதாவது அத்தியாயம்

*பிள்ளையான தக்ஷனிடத்திலே ராச்சியபாரத்தைவைத்து வனத்திலே வாசம்பண்ணுகின்ற அந்தப் பிரசேதசுக்களுக்கு நாரதர் முத்தி சொல்லப்பட்ட மார்க்கத்தை உபதேசித்து அதனாலே அவர்கள் மோக்ஷத்தை அடைந்தார்களென்று சொல்லப்படுகின்றது.*

### மைத்திரேயர் வாக்கியம்

வாரீர் விதுரரே! அந்தப் பிரசேதசுக்கள் அனேகந் திவ்ய வருஷத்துக்குப் பின்பு விவேகத்தை யுடையவர்களாய், சமுத்திரத்திலே பகவானாலே சொல்லப்பட்ட வார்த்தையை நினைத்துக்கொண்டு பிள்ளையான தக்ஷனிடத்திலே தங்களுடைய பாரியை கிருகம் இவை முதலியவைகளை விட்டுச் சீக்கிரமாகப் புறப்பட்டு, சாசிலியென்கிற ரிஷி, சித்தியை யடைந்த மேற்குச் சமுத்திரக்கரையிலே பரமாத்தும ஞானத்துடன் பிரமநிஷ்டையிலே தீக்ஷையுடையவர்களாய், பிராணன்-மனது-வாக்கு-கண்கள் முதலியவைகளை நிக்கிரகித்துச் சமானங்களாயும் மூலாதாரமுதற்கொண்டு செம்மையாயுமிருக்கிற சரீரங்களையுடையவர்களாயும், நிர்மலனான பரமாத்மாவினிடத்திலே வைக்கப்பட்ட மனதையுடையவர்களாயுமிருக்கிற அந்தப் பிரசேதசுக்களை அனுக்கிரகிக்கத் தேவர்கள் அசுரர்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட நாரதமகாரிஷியானவர் வருவதைப் பிரசேதசுக்கள் கண்டு, எழுந்திருந்து சேவித்து அபிவாதனம் பண்ணி, கிரமமாகப் பூஜித்து ஆசனம் சமர்ப்பித்து, அவர் அதில் உட்கார்ந்தபிறகு, நாரத மகா முனியைப் பார்த்து, வாரீர் தேவரிஷியே! தெய்வாதீனமாக எங்களுக்கு உம்முடைய தரிசன முண்டாயிற்று. சூரியனைப்போல் உம்முடைய சஞ்சாரம் எங்களைப்போன்றவர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கடிக்கின்றது. சிவனாலேயும் பகவானான அதோக்ஷஜனாலேயும் உபதேசிக்கப்பட்ட ஞானமானது பாரியா புத்திராதிகளிலே ஆசக்தர்களான எங்களுக்கு வெகுகாலமாய் மறக்கப்பட்டது. பரமாத்ம சாக்ஷாத்காரரூபமான அந்த ஆத்மஜ்ஞானத்தை எங்களுக்குத் தெரியப்படுத்துமென்று பிரசேதசுக்களாலே கேட்கப்பட்ட நாரதமுனியானவர், புண்ணியகீர்த்தியான பகவானிடத்தில் வைக்கப்பட்ட மனதையுடையவராய்ப் பிரசேதசுக்களைப் பார்த்துச் சொல்லுகிறார்.

வாருங்கள் பிரசேதசுக்களே! ஜன்மத்தினாலும், கர்மத்தினாலும், ஆயுசினாலும், மனதினாலும், வாக்கினாலேயும் ஸ்ரீ ஹரியைச் சேவிக்கிறவனே மனுஷியன். அதுவே ஜன்மம், அதுவே சத்கர்மம், அதுவே ஆயுசு, அதுவே மனது, அதுவே வாக்கு. இந்தப்பூமியில் உத்தம குலத்திற் பிறந்து உபநயனமுதலாக யக்கியாதிகளைச் செய்த மூன்று வகைப்பட்ட ஜன்மங்களினாலும் என்ன பிரயோசனம்? வேதங்களிலே சொல்லப்பட்ட கர்மங்களிலும் தேவதைகளைப்போல வெகுகாலமான ஆயுசைப் பெற்றதினாலும், சாஸ்திரத்தினாலும், தபசினாலும், வாக்காலும், சித்தவிர்த்திகளினாலும், சமர்த்தமான புத்தி இந்திரிய பலத்தினாலும், என்ன பிரயோசனம்? பிராணாயாமயோகத்தினாலும், சாங்கிய மென்கிற தேக வியதிரிக்த ஆத்மக்கியானத்தினாலும், சன்னியாசத்தினாலும், வேதாத்தியயனத்தினாலும், மற்றுமுள்ள பசுபுத்திராதி பலன்களில் வைராக்கியங்களினாலும், பிரயோசனமில்லை, சகலமான புருஷார்த்தங்களுக்குள்ளே ஆத்துமஜ்ஞானம் சிரேஷ்டம். விருக்ஷத்தின்மீது ஜலம் விட்டதினால் அதினுடைய கிளைகள் பத்திரங்கள் புஷ்பங்களெல்லாம் திருப்தியடைவதுபோலும், பிராணனுடைய திருப்தியினாலே இந்திரியங்கள் திருப்தியடைவதுபோலும், அச்சுதனுடைய ஆராதனத்தினாலே சகல பிராணிகளும் திருப்தியடையும், வருஷாகாலத்தில் சூரியனிடத்தில் நின்றும் ஜலங்களுண்டாகித் திரும்பவும் கிரீஷ்ம காலத்திலே அந்தச் சூரியனிடத்திலேயே பிரவேசிப்பது போலும், பூமியிலே ஸ்தாவர ஜங்கமங்களான பூதங்களுண்டாய் அதிலேதானே லயிக்கிறதுபோலும், சராசராத்துமகப் பிரபஞ்சமும் ஸ்ரீ ஹரியினிடத்தினின் றுண்டாகி லயிக்கின்றன.

சூரியனுடைய பிரபையானது ஒருக்கால் பிரகாசிப்பதும் ஒருக்கால் அப்பிரகாசமா யிருப்பதும்போல, ஜகத்சரீரியான ஸ்ரீ ஹரியினுடைய ஸ்தானமான இந்த ஜகத்து சிருஷ்டி வேளையில் பிரகாசித்தும் லயகாலத்திலே அப்பிரகாசமாகியுமிருக்கும். இந்திரியங்களும் சாக்கிர அவஸ்தையிலே விஷயங்களில் வியாபித்துப் பிரகாசிக்கின்றன. சுழுத்தி அவஸ்தையில் விஷயங்களை விட்டுப் பிரகாசியாம லிருக்கின்றன. இந்தப் பிரகாரம் பரப்பிரமத்தினிடத்திலும் ராஜஸ் தாமச சத்துவ மென்னப்பட்ட குணங்கள் ஒருக்கால் காணப்பட்டும் ஒருக்கால் காணப்படாமலு மிருக்கின்றன. ஜகத்தினுடைய சுபாவம் இப்படிப்பட்டது. ஆனபடியினால் சமஸ்த பிராணிகளுக்கும் பரமகாரணமாயும், பிரகிருதி சரீரனாயும், அந்தரி

யாமியாயும், நியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியை அந்த ராத்துமா வென்கிற பாவத்தினலே நிச்சய பஜனே பண்ணுங்கள். சர்வ பிராணிகளிடத்திலும் தயையும் உள்ளதைக் கொண்டு சந்தோஷிக்கையும் சர்வேந்திரியங்களுடைய நிக்கிரகமு முள்ளவனுக்கு ஜநார்த்தனர் சீக்கிரமாகப் பிரசன்னமாவார். வாருங்கள் பக்திசுகத்தை அறிந்தவர்களே! பரமாத்மாவையே தனமாகவுடைய தரித்திரர்களான சத்புருஷர்களிடங்களிலே துரோகத்தைப் பண்ணுகிற துஷ்டபுத்தியையுடையவர்களது பூஜையை அங்கீகரியார். சர்வகாலமும் தன்னேயே விடாமல் அனுவர்த்தித்துக் கொண்டிருக்கிற லக்ஷ்மியையும் அந்த லக்ஷ்மி கடாக்ஷத்தையும் கோருகின்ற ராஜாக்களேயும், தேவர்களேயும், பகவானனவர் அனுவர்த்திக்கின்றதில்லே. உங்களுடைய வம்சத்திலே சிரேஷ்டனையும் சித்திராங்கனையும், ராஜ ராஜனையும், சிறுபிள்ளேயாயுமிருந்த துருவனனவன் சபத்தினி மாதாவினுடைய வாக்காகிற பாணங்களினலே பிளக்கப்பட்ட இருதயத்தையுடையவனய், அஞ்சுவயது பாலனய், ஸ்திரீ மோகத்தையுடைய பிதாவையும் விட்டுத் தபோவனத்தை யடைந்தவனய் அவ்விடத்திலே என்னேக்கண்டு என்னுடைய உபதேசத்தினலே பகவானே நன்ருக ஆராதித்து, சமஸ்த பதங்களுக்கும் உத்கிருஷ்டமாயும் மற்ருெருவராலேயும், அடையப்படாமலு மிருக்கிற ஸ்தானத்தை யடைந்தான். அந்த ஸ்தானத்தை இப்போதும் சப்தரிஷிகள் கீழேயிருந்து பார்த்துக்கொண்டிருக்கிருர்களே யல்லாமல் அந்த ஸ்தானத்தை யடைந்தவர்களன்று. ஆனபடியினலே நீங்கள் சர்வபூதாந்தரியாமியான ஈஸ்வரனே ருத்திரனலே சொல்லப்பட்ட உபதேச மார்க்கத்தினலே புனர்ஜன்மத்தை யடையாம லிருக்கிறதற்காக பஜனே பண்ணுங்களென்று நாரதமுனியானவர் பிரசேதசுக்களுக்கும் மற்றும் சிலபேருக்கும் பகவத் கதைகளேக் கேட்பித்துப் பிரமலோகத்தை யடைந்தார். அந்தப் பிரசேதசுக்களும் கலிதோஷங்களேப் போக்கடிக்கிற ஹரியினுடைய யஜஸைக் கேட்டு, அந்தப் பகவானுடைய பாதத்தையே தியானம் பண்ணிக்கொண்டு அவரது பதத்தை யடைந்தார்கள். வாரீர் விதுரரே! யாதொரு அர்த்தத்தை என்னேக் கேட்டீரோ பிரசேதசுக்களுக்கும் நாரதருக்கும் சம்வாத ரூபமான அந்த ஹரிகீர்த்தனமும் நம்மாலே உமக்குச் சொல்லப்பட்டது.

ஸ்ரீ சுகருடைய வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! யாதொரு இந்த மனுவினுடைய பிள்ளேயான உத்தானபாத வம்சம் சொல்லப்பட்டது.

எந்தப் பிரியவிருதன் நாரதரிடத்தில் நின்றும் ஆத்தும உபதேசத்தைப் பெற்றுப் பின்னும் வெகுகாலம் ராச்சியத்தை அனுபவித்துப் பிள்ளைகளுக்குக் கொடுத்துவிட்டுப் பரமபதத்தை யடைந்தானோ? சத்துக்களினாலே கொண்டாடப்பட்ட அந்தப் பிரிய விருதனுடைய வமிசத்தையும் கேளும்: இந்தப்பிரகாரம் மயித்திரேயராலே சொல்லப்பட்ட உத்தானபாதனுடைய சத்கதையைக் கேட்ட விதுரரானவர் மிகவும் விர்த்தியடையா நின்ற பக்தியினாலே உண்டான ஆனந்த பாஷ்பங்களை உடையவராயும் பகவானுடைய பாதாரவிந்தங்களை இருதயத்திலே தரித்துக்கொண்டுமிருக்கிற விதுரர் மைத்திரேயருடைய பாதார விந்தங்களிலே பிரணமம் பண்ணி அவரைப்பார்த்துச் சொல்லுகிறார். வாரீர் மகாயோக்கிய! மகா கிருபையை யுடையவரான உம்மாலே யாதொரு பிரகிருதியைக் காட்டிலும் பரராயும் அகிஞ்சனர்கள் இருதயத்தில் வாசம் பண்ணுநின்றவருமான ஹரியானவர் எந்தக்கியான மார்க்கத்தினாலே அறியப்படுகிறாரோ, அந்தக்கியான மார்க்கமானது காண்பிக்கப்பட்டதென்று இந்தப்பிரகாரஞ்சொல்லி, மைத்திரேயரைப் பிரணமம்பண்ணி அவருடைய அனுமதிகொண்டு பூரணமனோரதராய்த் தம்முடையவர்களான கியாதிகளைப்பார்க்க வேண்டுமென்கிற இச்சையினாலே அஸ்திநபுரியைக் குறித்துப்போனார். வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! ஹரியினிடத்திலே வைக்கப்பட்ட மனதை யுடையவர்களான இந்த ராஜாக்களுடைய சரித்திரத்தை எவன் கேட்கிறானோ அவன் ஆயுசு-தனம்-கீர்த்தி ஐசுவரியம் மோட்சம் முதலிய யாவையும் அடைவன்.



ஓம்

# பஞ்சமஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

ஸ்ரீ மஹா பாகவதபுராணத்தில் ஐந்தாவது ஸ்கந்தத்தில் அனேகப் பிரகாரங்களுடனே கூடின பிரிய விருதன் வம்சமும், பிரபஞ்ச மரியாதையும் வர்ணிக்கப்படுகிறது. அதில் இருபது அத்தியாயங்களினாலே பிரிய விருதன் முதலான ராஜாக்களாலே பூமியிலிராநின்ற தீவுகளின் மரியாதை பாலனம் பண்ணப்பட்டதென்றும், மேல்மூன்று அத்தியாயங்களினாலே சூரிய சந்திராதிகளுடைய சோதி சக்கிராதி மரியாதை பாலனம் பண்ணப்பட்டதென்றும் மேல்மூன்று அத்தியாயங்களாலே அதல முதலான கீழ்லோகங்களிலே தைத்தியர்கள் முதலானவர்களாலே மரியாதை பாலனம் பண்ணப்படுகிறதென்றும், சொல்லப்பட்டதென்று ஆக இருபத்தாறு அத்தியாயங்களை யுடையது பஞ்சம ஸ்கந்தம். அதில் முதல் அத்தியாயத்திலே கியான நிஷ்டனான பிரிய விருதனுக்குச் சமுசாரத்தில் சௌக்கியமும், திரும்பவும் கியான நிஷ்டையுமென்று அற்புதமான பிரிய விருதன் கதை சொல்லப்படுகின்றது.

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்



வாரீர் சுகப்பிரமரிஷியே! கர்ம பந்தமும் சொருபக்கியான மில்லாமையும் யாதொரு கிரகஸ்தாசிரமத்தா லுண்டாகிறதோ, அப்படிப்பட்ட கிருகஸ்தாசிரமத்திலே பாகவதனாய், பரமாத்தும அனுபவநிஷ்டனான பிரிய விருதன் எப்படி ரமித்துக்கொண்டிருந்தான்? பிராமண சிரேஷ்டரே! பசுபுத்திரர்களிடத்திலே ஆசக்தியை விட்டவர்களான மகா பாகவதர்களுக்குக் கிருகங்களில் ஆசக்தியுண்டாகிறதில்லை. அது நிச்சயம். விப்பிரசிரேஷ்டரே! புண்ணிய கீர்த்தியான பகவானுடைய பாதாரவிந்தச் சாயையினாலே சுகியா நின்ற சித்தத்தை யுடையவர்களான மகத்துக்களுடைய புத்தி சமுசாரத்தை இச்சியாதன்றோ? பிரமநிஷ்டரே! பாரியா புத்தி

ராதியிடங்களில் ஆசக்தியையுடையவனான அந்தப் பிரிய விருதனுக்கு மோட்ச சித்தியும், அதற்கு மூலமான கிருஷ்ணனிடத்திலே நிரந்தரமான பக்தியும் உண்டாயிற்றென்கிற அர்த்தத்தில் எனக்கு மகா சம்சயமுண்டாயிருக்கிறதென்று கேளாநின்ற பரிக்ஷித்து மகாராஜாவைப் பார்த்துச் சுகர் சொல்லுகிறார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்.

வாராய் ராஜாவே! கிருகஸ்தாசிரமங்களிலே பாகவதர்களுக்கு ஆசையிராதென்கிறது எதார்த்தமேயானாலும், புண்ணியகீர்த்தியான பகவானுடைய சரணாரவிந்த மகரந்த ரசங்களிலே ஆசையுடனே கூடின சித்தத்தையுடைய பாகவதர்களுக்கு மிகவும் இஷ்டரான பகவானுடைய கதையை ஒருவன் ஒரு விகாதத்தினாலே தடுக்கப்பட்டிருந்தாலும், மங்களகரமாயும் தங்களுடைய மார்க்கமாயுமிருக்கிற அந்தப் பாகவத கதையை எந்த விதத்தினாலும் விட்டுவிடார்கள். அந்த ராஜகுமாரனான பரமபாகவதனென்கிற பிரியவிருதன் நாரதருடைய பாத சேவையினாலே சீக்கிரமாகப் பரமார்த்தத்தை யறிந்தவனாய், பிரமசத்திரமென்னப்பட்ட தியான எக்கியத்தினாலே தீட்சிக்கப்போகிறவனாய், சாஸ்திரங்களாலே சொல்லப்பட்ட சிரேஷ்ட குண சமூகங்களுக்கு இருப்பிடமாயிருக்கையினாலே, தன்னுடைய பிதாவான மனுவினால் பூமியைப் பரிபாலனம் பண்ணுகிறதற்கு நியமிக்கப்பட்டிருந்தாலும் பகவானான வாசுதேவனிடத்தில் நிரந்தரமான யோகத்தினாலே சகல இந்திரிய வியாபாரங்களையும் சமர்ப்பித்தவனாய், அந்தப் பிதுர்வாக்கியம் தள்ளிப்போடத்தக்கதாயிருந்தாலும், அந்த ராச்சிய அதிகாரத்திலே அசத்தான இராகாதி துவேஷத்தினாலே ஆத்மாவுக்குத் திரஸ்காரத்தை நிச்சயித்தவனாய் அந்த அதிகாரத்தைச் சம்மதியாமலிருந்தான். பிற்பாடு பகவானாயிருக்கிற சதுர்முகனானவர், இந்தப் பிரபஞ்ச சிருஷ்டி விர்த்தியாகவேண்டுமென்கிற தியானத்தினாலே நிச்சயிக்கப்பட்ட சகல பிராணிகளுடைய அபிப்பிராயத்தை யறிந்தவரால், சரீரத்தோடே கூடிக்கொண்டிருக்கிற சமஸ்தமான வேதங்களினாலும், ஜனகாதி தேவரிஷி கணங்களினாலுஞ் சூழப்பட்டவராய், சத்திய லோகத்தில் நின்றும் இறங்கினார். அந்தப் பிரமாவானவர் ஆகாசத்தில் சந்திரனைப்போற் பிரகாசித்தவராயும், அங்கங்கே விமானங்களில் வாராநின்ற தேவதைகளால் மார்க்கங்கள் தோறும் பூசிக்கப்பட்டவராய், அந்த மார்க்கங்களில் கும்புகும்பாயிருக்கிற சித்தர்கள்-கந்தர்வர்கள்-சாத்தியர்கள்-

சாரணர்கள் முனிகணங்கள் இவர்களாலே தியானம்பண்ணப் பட்டவராயும் கந்தமாதன பர்வதத்திலிராநின்ற ஒவ்வொரு குகையைப் பிரகாசிப்பித்துக் கொண்டு வந்தார். அந்தக் கந்த மாதன பர்வத குகையில் தேவரிஷியான நாரதர் அம்சவாக னத்தினாலே பகவானான இரணியகர்ப்பனைத் தம்முடைய பிதாவென்று அறிந்து, பிதாபுத்திரர்களான மனு பிரிய விருதர்களுடனே சீக்கிரமாக எழுந்திருந்து அஞ்சலி பந்தத் தையுடையவராய்ப் பூசித்து ஸ்தோத்திரம் பண்ணினார். மாபதனே! பகவானான சதுர்முகனும் அவர்களாலே பூசிக்கப் பட்டவராய் அவர்களுடைய ஸ்தோத்திரத்தினாலே சந் துஷ்டராய், மிகவும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட குண சமூகத்தையும் அவதாரங்களையும் விஜயங்களையு முடைய வராய், தயையுடனும் மந்தஹாசத்துடனுங் கூடின கடாக்ஷத் தையுடையவராய், அந்தப் பிரிய விருதனைப் பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லுகிறார்.

### சதுர்முகன் வாக்கியம்

பிரியவிருதனே! எதார்த்தமாய் ஒரு வார்த்தை சொல்லு கிறேன். அதை நன்றாகத் தெரிந்துகொள்ளும். நானும் நீயும் உன்னுடைய தாய்தகப்பனான மனுவும் இந்த தேவ ரிஷியான நாரதரும், எல்லாருங்கூடப் பராதீனர்களா யிருந்துகொண்டு எந்த பகவானுடைய ஆக்கினையைச் செய்து கொண்டிருக்கிறோமோ, அப்பிரமேயராயும் ஜகத் ரூபியாயு மிருக்கிற அந்த பகவானிடத்திலே தோஷபுத்தி யைப் பண்ணப்படாது. தபசு-வித்தை-யோக - பலம்-ஆத்மக் கியானம்-அர்த்தம்-தர்மங்களினாலும் தன்னாலும் அல்லது அன்னியராலும் பகவானுடைய ஆக்கினையைத் தள்ளுகிற தற்கு ஒருபோதும் முடியாது. பிரியவிருதனே! ஜன்மம் - மரணம்-சோகம்-மோகம்-சுகம்-துக்கம் இவைகளின் பொருட் டும், சர்வகாலத்திலும் பயமில்லாத மோக்ஷத்தின் பொருட் டும், கர்மத்தைப் பண்ணுவதற்கு பகவானால் கொடுக்கப்பட்ட இந்த தேகத்தை ஜனசமூகமானது தரித்திருக்கிறது. குழந் தாய்! யாதொரு பகவானுடைய வேதவாக்காகிற தந்தியினாலே சத்துவாதி குணங்களால் பண்ணப்பட்டனவாயும் திடங் களாயு மிருக்கிற கர்மங்களுடனும் நாமங்களுடனும் நன்றா கக்கூட்டி வைக்கப்பட்ட நாமெல்லாம் மூக்காங் கயிற்றினால் கட்டப்பட்ட எருது புருஷனுக்கு வசியமாயிருந்துகொண்டு அவனிஷ்டப்படி எப்படி நடக்கின்றதோ, அப்படியே ஈஸ் வரனுடைய ஆக்கினைப் பிரகாரம் நடக்கிறோம். ராஜனே!

ஈஸ்வரனானவர் அவனவன் கர்மானுகுணமாக தேவர்கள்-மனுஷர்கள்-பட்சிகள்-மிருகங்கள் முதலானவைகளில் எப்படிப்பட்ட சரீரங்களைக்கூட்டி வைக்கிறாரோ, அப்படிப்பட்ட சரீரங்களை யுடையவர்களாய்க் கண்ணில்லாதவர்கள் கண்ணிருக்கிறவர்களாலே எப்படி ஓரிடத்தை யடைகின்றார்களோ, அப்படிப்போலவே பரதந்திரரா யிருந்துகொண்டு ஈஸ்வரனாலே கொடுக்கப்பட்டிருக்கிற சுகதுக்கங்களை அடைகிறோம். ஆத்மக்கியானியா யிருக்கின்றவன்கூட எவ்வளவு பரியந்தம் பிராரப்த கர்மானுபவமிருக்கிறதோ, அவ்வளவு பரியந்தம் கர்ம பலத்தை அனுபவித்து, எப்படி நித்திரை தெளிந்தெழுந்திருந்தவன் சொப்பனத்திற் காணப்பட்ட தேகத்தை அதிலே அபிமான மில்லாதவனாயிருந்து நினைத்துக் கொள்ளுகிறானோ, அப்படி இந்த தேகத்தை அபிமான மில்லாதவனாய் தரித்துக் கொண்டிருப்பான்.

அந்த தேகத்திலே மறுபடியும் ஜனனம் வரும்படியான கர்மங்களைப் பண்ணுகிறதில்லை. எவன் இந்திரியங்களை நிக்கிரகிக்க மாட்டாதவனாய் வனத்திலிருந்தும் காமக்குரோதாதி அரிஷ்டவர்க்கம் மந்தமனது புத்தி இவைகளுடன் கூட இருக்கிறானோ, அவன் எங்கே யிருந்தாலும் ஜனனமரணமென்கிற சம்சாரம் அவனை விடாது. இந்திரிய ஜயத்தை யுடையவனாயும் பரமாத்தும நிஷ்டனாயும் விவேகத்தை யுடையவனாயு மிருக்கிறவன் கிருகஸ்தாஸிரமத்திலே யிருந்தாலும், அந்த கிருகஸ்தாஸிரமம் அவனுக்கு ராகத்துவேஷாதி தோஷத்தைச் செய்யமாட்டாதன்றோ? சத்துருக்களை ஜயிக்க வேண்டுமென்கிற புருஷனானவன் ஒரு துக்கத்தைப்பற்றி யிருந்துகொண்டு பலவான்களான சத்துருக்களை ஜயித்து, பிறகு அந்த துக்கத்தைவிட்டுத் தானாகவே எப்படி வாசம் பண்ணிக் கொண்டிருப்பானோ? அப்படிபோல, எவன் காமக்குரோத முதலான அரிஷ்ட வர்க்கங்களை ஜயிக்க வேண்டுமென்று இச்சிக்கிறானோ, அவன் கிருகஸ்தாஸிரமத்திலே யிருந்தாலும் காமக்குரோதங்களை ஜயிக்கத் தக்கவன் ஆவன். அவை ஜயிக்கப்பட்ட பிறகு, அவன் எந்த ஆஸிரமத்திலும் இருக்கலாம். நீயோ பகவானுடைய பாதாரவிந்தங்களாகிற துணையைப் பற்றி, காமாதி அரிஷ்ட வர்க்கங்களை ஜயித்தாய். பகவானாலே கொடுக்கப்பட்ட போகங்களை இந்த கிருகஸ்தாஸிரமத்தி லிருந்துகொண்டு அனுபவித்து, பிறகு அவைகளிலே வைராக்கியத்தை யடைந்தவனாய், பகவானிடத்திலே நிஷ்டையுடையவனா யிருக்கக்கடவாய் என்று சொல்லினர்,

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் அரசனே! இந்தப் பிரகாரம் பிரமாவினாலே சொல்லப்பட்ட மகா பாகவதனை பிரியவிருதன், பகவானும் திரிலோக குருவாயு மிருக்கிற பிரமாவினுடைய ஆக்கினை யைத் தான் அவருக்குத் தாழ்ந்தவனானகையால் கௌரவத்தி னாலே சிரசினால் பிரணமம் பண்ணினவனாய், அப்படியே நடந்து கொள்ளுகிறேனென்று வெகுமானத்தோடே கிரகித் தான். பகவானான சதுர்முகனும் மனுவினாலே எதாசாஸ்திர மாகப் பண்ணப்பட்ட பூசையை யுடையவனாய், பிரியவிருதன் நாரதமுனி இவர்களிரண்டுபேரும் குடிலமின்றி பார்த்துக் கொண்டிருக்கையில் அவாங் மானசகோசரமாய் நித்தியமாய் அன்னியர்களாலே யடையப்படாததான தன்னுடைய உத் கிருஷ்டமான ஸ்தானத்தை யடைந்தான். மனுவும் இந்தப் பிரகாரம் பிரமாவினாலே கூட்டி வைக்கப்பட்ட மனோ ரதத்தை யுடையவனாய், தேவரிஷி சிரேஷ்டரான நாரத ருடைய அனுமதியினால் பிள்ளையான பிரியவிருதனை அகில பூமண்டலத்தையும் ரக்ஷிக்கிறதின் பொருட்டு ஸ்தாபித்துத் தானும் அத்தியந்தம் குரூரமான சப்தாதி விஷய ஆசையில் நின்றும் ஒழிந்தான். இந்தப் பிரகாரம் அந்த ஜகத்பதியான பிரியவிருதன் ஈஸ்வர இச்சையினாலே பூமிபாலன கர்மாதிகா ரத்தை யடைந்தவனாய், சகல ஜகத்துக்களின் பந்தங்களையும் போக்கடிக்கின்ற பிரபாவத்தை யுடையவனான பகவானு டைய பாதாரவிந்த அருளால் அனவரத தியானத்தி னாலே ராகத்துவேஷாதிகளைப் போக்கடித்துப் பரிசுத்தனா யிருந்தாலும். மகத்துக்களைப் பூசியாநின்ற அந்த ராஜா வானவன் பூமண்டலத்தை ரட்சித்தான். அதன் பிற்பாடு பிரஜாபதியான விஸ்வகர்மாவினுடைய பெரிகிஷ்மதியென் கிற பிரசித்தையான பெண்ணை விவாகம் பண்ணிக்கொண் டான். அந்தப் பெரிகிஷ்மதியினிடத்திலே தனக்குச் சமான மான சீலம், குணம், கர்மம், ரூபம், வீரியம், ஔதாரியம் இவைகளை யுடையவர்களான பத்துப்பிள்ளைகளையும், அவர் களுக்குத் தங்கையான ஊர்ச்சஸ்வதியெனும் ஒரு பெண்ணை யும் பெற்றான். அந்தப் பத்து பிள்ளைகளும் ஆக்கினையித்தி ரன், இத்துமசிக்குவன், எக்கியபாகு, மகாவீரன், இரணிய ரேதசு, கிருதபிருஷ்டன், சவனன், மேதாதி, விதிகோத்திரன், கவியென்னும் அக்கினியினுடைய நாமத்தை யுடையவர்களா னார்கள். இவர்களுக்குள்ளே கவி, மகாவீரன், சவனன் இவர் கள் மூன்றுபேரும் ஊர்த்துவரேதசுக்களானார்கள். அவர் கள் பால்யமுதற்கொண்டு வேதாந்த வித்தையையே அப்பியா சம் பண்ணினவர்களாய்ப் பரம அம்சர்களுடைய ஆசிரம

மான சன்னியாசத்தை யடைந்தார்கள். அந்தப் பரம அம்சர்களுடைய ஆசிரமமான சன்னியாசத்திலே சாந்தி குணத்தையே சுபாவமாக வுடையவர்களாய்ப் பரமரிஷிகளான கவிமுதலான மூன்றுபேரும் சகலமான ஜீவராசிகளுக்கும் வாசஸ்தானமாய், ஷாட்குண்ணிய ஐசுவரிய சம்பன்னனுய் சங்கார கர்த்தாக்களுக்கெல்லாம் புகலிடமாயிருக்கிற ஸ்ரீ வாசுதேவனுடைய சரணாரவிந்தத்தில் அனவரத ஸ்மரணத்தினுலுண்டான பரம பக்திரசப் பிரபாவத்தினலே பரிமளிக்கப்பட்ட மனதோடு எவற்றையும் சாக்ஷாத்கரித்தவனுய், சமஸ்த பிராணிகளுக்கும் ஆத்துமாவாய் ஜீவசரீரியான பரமாத்துமாவினிடத்தில் ஆத்மகாமியத்தைப் பேதமில்லாமல் அடைந்தான். அந்தப் பிரிய விருதனுக்கு வேறே ஒரு ஸ்திரீயினிடத்தில் உத்தமனென்றும், தாபசனென்றும், மரைவதனென்றும், மன்வந்தராதி பதிகளாய் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள்.

இந்தப் பிரகாரம் தன்னுடைய பிள்ளைகள் சாந்திகுணப் பிரதானர்களா யிருக்கையில், மகாபரிசுத்தனை பிரியவிருதனனவன் ஓரிடத்திலும் தடையில்லாம லிருக்கிற சமஸ்தமான பராக்கிரமத்தினுலே விர்த்தியடையா நின்ற இரண்டு புஜங்களினு லிழுக்கப்பட்ட கோதண்டத்தி லிரா நின்ற நாணினுடைய சப்தத்தினுலே, தர்மவிரோதிகளைப் போக்கடித்தவனுய், நாள்தோறும் விர்த்தியாகின்ற பெரிகிஷ்மதி யென்கிற ஸ்திரீயினுடைய சந்தோஷம், யோக்கியமான மரியாதை, ஸ்திரீ சுபாவமான லச்சையில் சங்கோசிக்கப்பட்ட மந்தஹாசம், கடாக்ஷம், மனோகரமான நல்ல வார்த்தை இவைகளினுலே திரஸ்கரிக்கப்பட்ட விவேகத்தை யுடையவனுய், சொரூபத்தை யறியாதவன்போ லிருந்துகொண்டு ஜகத்தை யெல்லாம் பதினொருகோடி வருஷம் பரிபாலனம் பண்ணினுன். பகவானுன சூரியன் மகாமேருவைப் பிரதக்ஷணமாக வந்து பூமியிலே பாதியைப் பிரகாசிப்பிக்கிருன்; பாதியை அந்தகாரத்தினுலே சூழப்பட்டதாகப் பண்ணுகிருன். அப்போது பிரியவிருத மகாராஜா பகவத் உபாசனத்தினுலே விர்த்தியடைந்து மற்ற எல்லாரிலும் அதிசயித்திருக்கிற பிரபாவத்தை யுடையவனுய், சூரியனைப் பார்த்து சந்தோஷப்பட்டவனுய், அந்த சூரிய ரதத்தோடே சமமான வேகத்தை யுடையதாயும், சோதிமயமாயு மிருக்கிற ரதத்தினுலே ராத்திரியையும் பகலாகப் பண்ணுவோமென்று நினைத்தவன்போல, ஏழுதரம் சூரியனுக்குப் பின்னுக இரண்டாஞ் சூரியன்போல் சஞ்சரித்தான். அவனுடைய தேர்

வண்டியினலே புதைக்கப்பட்ட பள்ளங்களே ஏழு சமுத்தி ரங்களாயின. அந்த சப்த சமுத்திரங்களினலே பூமியிலே ஜம்புவென்றும், பிலட்சமென்றும், சான்மலி என்றும், குச மென்றும், கிரௌஞ்சமென்றும், சாகரமென்றும், புஷ்கர மென்றும் பேர்களை யுடைய சப்த தீவுகளுண்டாயின. அந்த தீவுகளின் பிரமாணத்தைக் கேளும். முன்னே யிருக் கிற தீவுக்கு அப்பாலேயிருக்கிற தீவுகள் ஒன்றுக்கொன்று இரட்டிப்பான பிரமாணத்தை யுடையவைகளாய் அந்த தீவு களுக்குச் சமானமான பிரமாணத்தை யுடையவைகளான சமுத்திரங்களினலே அந்த தீவுகளுக்கு வெளியிலே சூழப் பட்டவைகளா யிருக்கின்றன. அந்ததீவுகளுக்கு அகழிகள் போலஇருக்கிற ஏழுசமுத்திரங்கள், லவணம் - இட்சு - சுரா - சர்ப்பி - ததி - க்ஷீரம் - சுத்தோதகமென்னும் பெயர்களை யுடையவைகளாய்ப் பண்ணப்பட்டிருக்கின்றன. ஜம்புத்தீவு முதலான அந்த தீவுகளிலே பிரியவிருதனனவன் தன்னி டத்திலே பக்தியை யுடையவர்களான ஆக்கினிமித்திரன், இத்துமசிக்குவன், எக்கியபாகு, இரணியரேதசு, கிருதபிருஷ் டன், மேதாதி, விதிகோத்திரனென்கிற ஏழுபிள்ளைகளையும், வரிசையாக ஒவ்வொருத்தனை ஒவ்வொரு தீவுக்கு அதி பதியாகப் பண்ணினன். ஊர்ச்சல்வதி யென்கிற தன்னு டைய பெண்ணை சுக்கிராசாரியருக்குக் கொடுத்தான் அந்த ஊர்ச்சல்வதியினிடத்தில் சுக்கிராசாரியருக்கு தேவயானி யென்கிற பெண் பிறந்தாள். பகவத் பாதாரவிந்த தூளியி னலே, பசி தாகம் சோகம் மோகம் ஜரா மரணம் இவை களை ஜயித்தவர்களான பகவத் தாசர்களுடைய பிரபா வம் இப்படிப் பட்டதென்கிறது ஆச்சரியமன்று ஏனென் முல் வர்ணங்களுக்கெல்லாம் அந்திய ஜாதியாகிய சண்டா ளனும் பகவானுடைய நாமதேயத்தை ஒருக்கால் உச்சரித் தானேயாகில், அவன் அந்த க்ஷணத்திலே சமுசார துக்கத்தில் நின்றும் விடுபட்டவனுய்ப் பரிசுத்தனுவான். இந்தப்பிரகாரம் அளவிடக்கூடாத பல பராக்கிரமங்களை யுடைய அந்தப் பிரியவிருதன் ராஜ்ஜியாதிகாரத்திலே ஒருக்கால் தேவரிஷியான நாரதருடைய சரணுரவிந்த சேவையினுலுண்டான வைராக்கியத்தை யுடையவனுய்த் தன்னைப் புண்ணியத்தைப் பண்ணுதவன்போலெண்ணிக் கொண்டு, என்னலே என்ன அசாதுவான காரியம் பண்ணப் பட்டது? யாதொரு ராஜ்ஜியாதிகாரத்திலே ஆசக்தியை யுடையவனுய் நான் இந்திரியங்களினலே மந்தகியானத்தி னல் பண்ணப்பட்ட பிரதிகூலமான சப்தாதி விஷயமாகிற பாழுங்கிணற்றிலே தள்ளப்பட்டேனே? அந்த ராச்சியாதி

காமத்திஞலே ஒரு ஸ்திரீக்கு விநோத மிருகமாக இருக்கிற என்னை நிந்திக்க வேண்டாம் என்று தன்னை நிந்தித்துக் கொண்டான்.

பரதேவதையான ஸ்ரீமந் நாராயணனுடைய பிரசாதத்திஞல் அடையப்பட்ட ஆத்மக்கியானத்திஞலே மிகவும் நிஷ்டையை யுடையவனுய்த் தன்னிடத்தில் பக்தியையுடையவர்களான புத்திரர்கள் பொருட்டு இந்தப் பூமியை யதாபாகமாகப் பங்கிட்டுக்கொடுத்து, மகா போகங்களை யனுபவித்தவளான தன்னுடைய ஸ்திரீயையும், மகா சம்பத்தையும், சவத்தைப்போலெண்ணி விட்டுவிட்டு, தான் மனதிலே நிர்வேதத்தையடைந்து பகவானுடைய சீலானுபவத்தில் ருசியையுடையவனுய், பரிசுத்தமான நடத்தையை யுடையவனுய், பகவாஞன நாரதராலே உபதேசிக்கப்பட்ட அத்தியாத்ம மார்க்கத்தையே திரும்பவுமடைந்தான். பிரியவிருதனுலே பண்ணப்பட்ட காரியத்தை ஈசுவரன் ஒருவனன்றி மற்றெவன்தான் செய்யமாட்டுவன்? யாதொரு பிரியவிருதன் ரதங்களின் சக்கர நுனிகளிஞலே சப்தசாகரங்களை யுண்டாக்கிப் பின்னும் தீவுகள்தோறும் பிராணிகளின் சுகத்தின் பொருட்டு நதிகள் பர்வதங்கள் வனங்கள் இவைகளால் பூமியினுடைய மரியாதைகளும் எல்லைகளும் பண்ணப்பட்டதோ, பாகவதோத்தமஞன எந்தப் பிரியவிருதன் பூமி அந்தரிக்ஷ சொர்க்கங்களிலே கர்மயோகத்திஞலுண்டான தன்னுடைய மகத்துவத்தை நரகதுல்லியமாக எண்ணிஞனே, அப்படிப்பட்ட பிரியவிருதஞலியற்றப்பட்ட காரியங்கள் எவனுக்குத்தான் சாத்தியமாகும்?



## இரண்டாவது அத்தியாயம்



*ஸ்திரீ பாரவசனுய், பூர்வசித்தி யென்கிற தன்னுடைய பத்தினியான அப்சர ஸ்திரீயினிடத்தில் நாபி முதலான பிள்ளைகளைப் பெற்று பிரசித்தஞன ஆக்கினியித்திரனுடைய சரித்திரம் சொல்லப்படுகிறது.*

சுகர் வாக்கியம்.

வாராய் ராஜாவே! இந்தப்பிரகாரம் பிதாவான பிரியவிருதன் நிவர்த்திமார்க்கத்தையடைந்த பின்பு, அவனுடைய ஆக்கினையிஞலிரா நின்ற ஆக்கினியித்திரன் ஜம்புத்தீவுவாசி

களான பிராஜைகளைத் தன்வயிற்றிற் பிறந்த பிள்ளைகளைப் போல் தர்மசிந்தையுடன் ரக்ஷித்தான். அந்த ஆக்கினையித்திரன் ஒருக்கால் புத்திரன் வேண்டுமென்கிற இச்சை கொண்டவனாய், தேவஸ்திரீகளுக்கு லீலாஸ்தானமான மந்தா பர்வதத்தினுடைய குகையில் பகவானாயும் லோகங்களுக்கெல்லாம் பதியாயுமிருக்கிற சதுர்முகனை, சம்பாதிக்கப்பட்ட புஷ்பம் முதலான பூஜா திரவியங்களைப்பெற்று ஏகாக்கிர சித்தத்தையுடையவனாய், தபசினாலே ஆராதித்தான். அதைக்கண்டு, ஷாட்குண்ணிய ஐசுவரிய சம்பன்னனாயும் ஆதிபுருஷனாயுமிருக்கிற சதுர்முகன், சதசிலே கானம் பண்ணிக்கொண்டிருக்கிற பூர்வசித்தியென்கிற அப்சரசை அனுப்பிவைத்தார். அந்தப் பூர்வசித்தியென்கிற அப்சரசும் அப்போது அத்தியந்தம் ரமணீயமாயும் நானாவிதங்களாயும் நெருங்கியிருக்கிற விருக்ஷங்களின் சாகைகளுடனே கூடிக் கொண்டிருக்கிற சுவர்ண லதைகள்போலே ஏறிக்கொண்டிருக்கிற மயூரமிதுனங்களாலும் சப்த ஸ்வரங்களினாலே எழும்பப்பட்ட நீர்க்கோழி, நீர்க்காக்கை, அம்சங்கள் முதலான பக்ஷிஜாதிகளினாலும் விசித்திரமாகச் சப்திக்கப்பட்ட நிர்மலமான மடுக்களிலிராநின்ற தாமரைப் புஷ்பங்களுக்கு இருப்பிடமுமான ஆஸிரம உபவன சமீபத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்தாள்.

மிகவும் மனோகரமான நடையிலுண்டான அடிவைப்புக்களாலே சிங்கார விலாசத்தை யுடையவளான அந்தப் பூர்வசித்தி யென்கிற அப்சரசினுடைய அடிவைப்புக்கள் தோறும் கணகணவென்று மனோகரமாகச் சப்தியாநின்ற காற்சிலம்பினுடைய சப்தத்தைக் கேட்டு, பிரியவிருத குமாரனை ஆக்கினியித்திரன் சமாதியோகத்தினாலே மூடப்பட்ட பத்மம் போன்ற கண்களிரண்டையும் கொஞ்சந் திறந்துபார்த்தான். அப்போது சமீபத்தில் புஷ்பங்களை மோந்துகொண்டு சஞ்சரித்த பூர்வசித்தியானவள் தேவர்கள் மனுஷியர்கள் இவர்களுடைய மனதிற்கும் கண்களுக்கும் சந்தோஷத்தைக் கொடாநின்ற நடை, லீலை, வணக்கத்துடனே கூடின பார்வை, மதுரமான சப்தத்தையுடைய கானங்கள். நேத்திரம் முதலான அவயவங்கள் இவைகளினாலே மனுஷியர்களுடைய மனதில் மன்மதனுக்குப் பிரவேசத்தைப் பண்ணுகிறவளாகியும் தன்னுடைய முகத்தில் நின்றும் வாராநின்ற மூச்சுக்காற்றின் பரிமளத்தினால், மகரந்தமயமாயிருக்கிற பிரமரங்களின் சமூகம் சூழ்ந்துகொண்டு வருகிறபடியினால் பயப்பட்டு சீக்கிரமாக வைக்கிற அடிவைப்புக்களினால் மனோ

காமாக அசையாநின்ற கலசங்கள் போன்ற ஸ்தனங்கள் அளகபாரம் அரைநூன்மாலை இவைகளை யுடையவளான அந்தப் பூர்வசித்தியென்கிற அப்சரசைப் பார்த்ததினால் கொடுக்கப்பட்ட சம்பத்தையுடைய பகவானை மன்மதனது வசத்தை யடைந்தவனாய், நீயார்? இந்தப் பர்வதத்திலே என்ன காரியமாய் வந்தாய்? என்று அவளை வினவினான்.

முனிசிரேஷ்டரே! நீர் பரதேவதையான பகவானுடைய மாயையோ? நாணில்லாத இரண்டு தனுசுக்களை என்ன நிமித்தியமாய்த் தரித்துக்கொண்டிருக்கிறீர்? இந்த தனுசுக்களினாலே உமக்கேதாவது ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கின்றதோ? ஜிதேந்திரியர்களாகாமல் காட்டில் மிருகத்துடன் சமானமாயிருக்கின்ற எம்போன்ற பேரைத் தேடுகிறீரோ? நேத்திர கமலங்களை இறகாகவுடையவைகளாயும், விசாலத்தை யுடையவைகளாயும், சொர்ணக்கட்டுகளில்லாமலிருந்தாலும், மகா அழகுள்ளனவாயும், அதிதீட்சணங்களான நுனிகளை யுடையவைகளாயுமிருக்கிற இரண்டு பாணங்களோடு காட்டிலே சஞ்சரித்துக்கொண்டு, எவன் பேரிலே பிரயோகம் பண்ணவேண்டுமென்று இச்சிக்கிறீரோ? நாம் அறியோம். ஆகையினாலே மந்தமதிகளான எங்களுக்குப் பகவானை உம்முடைய பராக்கிரமக்ஷேமத்தைச் சொல்லக் கடவது. பூஜ்யரான உம்முடைய இந்த சிஷ்யர்கள் ரகசியத்துடனே கூடின இப்படிப்பட்ட சாமத்தை நாலண்டையிலேயும் கானம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த சிஷ்யர்களெல்லாரும் உம்முடைய சிகையில் நின்றும் நழுவாநின்ற புஷ்பவருஷங்களை ரிஷிகணங்கள் வேதசாகைகளை கிரகிக்கிற பாவனையாகக் கிரகிக்கிறார்கள்.

பிரமநிஷ்டனே! உன்னுடைய கால்களிலே இராநின்ற கூண்டுகளி லிருக்கிற தித்திரிப்பக்ஷியினுடைய சப்தத்தை மாத்திரமே கேட்கிறோம். அந்தப் பக்ஷிகளுடைய ரூபம் காணப்படவில்லை. கடிப்பிரதேசத்திலே கதம்பபுஷ்பத்தினுடைய காந்தியானது காணப்படுகின்றது. அந்தக் காந்தியிலே மண்டலாகாரமான குறைக்கொள்ளி காந்தி காணப்படுகிறது. உமக்குத் தரிக்கத்தக்கதான மரவுரி எங்கே? வாரீர் பிராமணரே! அழகிய உமது மார்பிலிருக்கிற கொம்புகளில் என்ன நிறைக்கப்பட்டிருக்கிறது? இளைத்திருக்கும் இடையை யுடையவரான நீர் எந்தக் கொம்புகளை மகா பிரயாசத்துடன் சுமக்கிறீரோ, அந்தக்கொம்புகளில் என்னுடைய பார்வையானது விழுந்திருக்கின்றது. மேலும் உம்மு

டைய கொம்புகளில் பரிமளித்துக்கொண்டும் சிவந்துமிருக்கிற சேறிருக்கிறது. அந்தச் சேற்றினால் என்னுடைய ஆஸிரபத்தையெல்லாம் பரிமளிக்கப் பண்ணுகிறீர். சுரூர்த்துக்களுக்கெல்லாம் சிரேஷ்டரே! எந்த லோகத்திலிருக்கிற ஜனமானது இந்தப் பிரகாரம் மார்பினால் என்னுடைய மனதைக் கலக்காநின்ற இரண்டு கொம்புகளைத் தரித்திருக்கிறதோ, முகத்திலே மாதுரியம் விலாசம் இவைகளுடன் கூடிக்கொண்டிருக்கிற அமிர்தம் முதலான வெகு ஆச்சரியங்களைத் தரித்திருக்கிறதோ? அப்படிப்பட்ட லோகத்தை எனக்குக் காண்பியும். உம்முடைய தேகதாரணத்துக்குச் சாதனமான ஆகாரமென்ன? சதா அன்னத்தைக் காட்டிலும் வேறாகிய பதார்த்தமே உமக்கு ஆகாரமென்று எனக்குத் தோன்றுகிறது. நீர் விஷ்ணுவினுடைய அம்சமாகவேண்டும். உம்முடைய கண்கள் இமையாமலிருக்கிற மகரங்களையுடையவைகளா யிருக்கின்றன. பயந்திருக்கிற இரண்டு மீன்களை யொத்ததாயும் அம்சபட்சியின் பந்திகளினால் விளங்காநின்றும், சமீபத்திலிராநின்ற பிரமரக் கூட்டங்களுடன் கூடிக்கொண்டுமிருக்கிற உம்முடைய முகமானது ஸரஸைப்போல விளங்குகிறது. உம்முடைய தாமரைப் புஷ்பம்போன்ற கைகளால் அடிக்கப்பட்ட சூரியனானவன் திக்குகளிலே சுழன்றுகொண்டு, பிரமியாநின்ற மனதையுடையவனான என் கண்களைச் சலிப்பிக்கிறான். உம்முடைய வக்கிரகங்களா யிருக்கிற ஜடாபந்தம் அவிழ்ந்துபோயிருக்கிறதை ஏன் நினைக்கவில்லை? தூர்த்தனும் மந்தனுமிருக்கிற வாயுவானவன் உம்முடைய நீவியை அவிழ்க்கிறான். அதையும் ஏன் நினையாமலிருக்கிறீர்? தபசுபண்ணுகிறவர்களுடைய தபசை நாசம் பண்ணாநின்ற உம்முடைய இந்த ரூபமானது எப்படிப்பட்ட தபசுபண்ணி உம்மாலே அடையப்பட்டது. சிநேகிதரே! என்னுடன்கூடி, தபசு பண்ணுகிறதற்கு யோக்கியராகிறீர். சம்சாரத்தை விர்த்தி பண்ணிவையாநின்ற பிரமாவானவர் எனக்குப் பிரசன்னரானார். அவரால் கொடுக்கப்பட்ட மித்திரராயிருக்கிற உம்மை நான் விடுகிறதில்லை. உம்மிடத்தில் என்னுடைய மனதுங் கண்ணும் பற்றினதாய் அப்பாற் போகவில்லையே! மனோகாங்களான சிருங்கங்களை யுடையவரே! உமக்கிஷ்டனாகி அனுசரித்துக் கொண்டிருக்கிற என்னையும் ஸ்வாதீனமாகப் பண்ணிக் கொள்ளக் கடவீர். உம்முடைய சகிகளும் அனுகூலர்களாக என்னை அனுவர்த்திக்கக் கடவர்கள் என்றாள்.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

இந்தப் பிரகாரம் ஸ்திரீகளை நல்ல வார்த்தையினால் ஸ்வாதீனம் பண்ணிக்கொள்ளுவதில் மிகவும் சமர்த்தனான ஆக்கினியித்திரன் பூர்வசித்தியின் சாதுரியத்தையுடைய வார்த்தையினாலே அந்தத் தேவதா ஸ்திரீயைச் சஞ்சல புத்தியாய்க்கொண்டு பூசித்தான். அந்த தேவதாஸ்திரீயும் வீரசிரேஷ்டனான அந்த ஆக்கினியித்திரனுடைய புத்தி சீலம் ரூபம் வயது சம்பத்து ஔதாரியம் இவைகளால் இழுக்கப்பட்ட மனதை யுடையவளாய், அந்த ஜம்புதீவாதி பதியான அக்கினியித்திரனுடனே கூடி கோடிவருஷகாலம் பூமி போகங்களையும், சொர்க்கபோகங்களையும் அனுபவித்தாள். அந்த தேவஸ்திரீயான பூர்வ சித்தியினிடத்தில், அந்த ராஜசிரேஷ்டனான ஆக்கினி யித்திரன் நாபியென்றும் கிம்புருஷனென்றும் அரியென்றும் இளா விரதனென்றும் ரம்மியகனென்றும் இரண்மயமென்றும் குருவென்றும் பத்திராசுவனென்றும் கேதுமாலனென்றும் பெயரையுடைய ஒன்பது பிள்ளைகளைப் பெற்றான். அந்தப் பூர்வசித்தியும் வருஷங்கள் தோறும் ஒன்பது பிள்ளைகளைப் பெற்று, அந்த பர்த்தாவினுடைய கிருகத்திலே தானே அவர்களை விட்டு விட்டு மறுபடியும் தேவனான பிரமாவை யடைந்தாள். அந்த ஆக்கினியித்திரனுடைய பிள்ளைகள் மாதாவினுடைய அனுக்கிரகத்தினால் பிறந்தநாள் முதற்கொண்டு நல்ல ரூபம், பலம் இவைகளையுடையவர்களாய்ப் பிதாவினால் பிரிக்கப்பட்டுத் தங்கள் பேரை யுடையனவான ஜம்புதீப வருஷங்களை யதா பாகமாக அனுபவித்தார்கள்.

ராஜாவான ஆக்கினியித்திரனும் காமபோகத்தில் திருப்தியில்லாமல் அந்த அப்சரசைத்தானே நாள்தோறும் மனதிலே நினைத்துக்கொண்டு வேதோக்த கர்மானுஷ்டானங்களினாலே அவளுடைய சாலோக்கியத்தை யடைந்தான். யாதொரு இடத்திலே பிதுர்க்களெல்லாம் சந்தோஷித்துக் கொண் டிருக்கிறார்களோ, அப்படிப்பட்ட லோகத்தை யடைந்தான். பிதாவான ஆக்கினியித்திரன் பிதுர்லோகத்தை யடைந்த பிறகு, அந்த நாபிமுதலான ஒன்பதுபேர் பிராதாக்களும் மேருவினுடைய பெண்களான மேருதேவி, அப்ரதி, உக்கிரதமஷ்டை லதை, ரம்மியை சாந்தை, நாரி, பத்திரை, தேவியெனும் பெயரையுடைய ஒன்பதுபேரையும் விவாகம் பண்ணிக்கொண்டார்கள்.

## மூன்ருவது அத்தியாயம்

*ஆக்கினியித்திரனுடைய முதற்பிள்ளேயான நாபிக்கு எக்கியத்தில் சந்துஷ்டராகி ஸ்ரீ ஹரியானவர் ரிஷபரெனும் பெயரை யுடைய புத்திரரான மங்களகரமான சரித்திரஞ் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகருடைய வாக்கியம்

அரசர்கோனே! நாபியானவன் சந்தானத்தை இச்சித் தவனுய் அபுத்திரையான மேருதேவியினுடனே கூடப் பக வானுன எக்கிய புருஷனேச் சாவதான மனதையுடையவனுய், எக்கியங்களினுலே ஆராதித்தான். சிரத்தையுடனேயும் பரிசுத்தமான மனதையுங்கொண்டு எக்கியத்திஞல் பூசியா நின்ற நாபி மகாராஜாவுக்குப் பிரவாக்கியங்களென்கிற கர்மங் கள் நடந்துகொண்டிருக்கையில், திரவியம், தேசம், காலம், மந்திரம், கிரியை, ரித்விக்குகள், தட்சணே யென்கிற வேதோக் தங்களான உபாயங்களினுடைய சம்பத்திஞலே யடையக் கூடாதவரா யிருந்தாலும், பகவான் பாகவதர்களிடங்களிலே வாற்சல்லியத்திஞலேசோபனங்களான அவயவங்களேயுடைய வராய், சுதந்தரராயும் தமது பக்தர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்ற இச்சையை யுடையவராயும், சுபகரமாயும் மனே நேத்திரங்களுக்கு ஆநந்தகரமாயு மிருக் கிற அவயவங்களினுலே மனேக்கியமாயுமிருக்கிற தம்முடைய ஸ்வரூபத்தைப் பிரகாசிப்பித்தார். அவ்வாறு பிரகாசித்துக் கொண்டிருக்கிற சதுர்ப்புஜங்களே யுடையவராயும், தேஜோ மயராயும், சுவர்ணமான பீதாம்பரத்தைத் தரித்தவராயும், மார்பில் விளங்கா நின்ற ஸ்ரீவற்ச சின்னத்தையுடையவரா யும், சங்கம், சக்கரம், பத்மம், வனமாலே, கௌஸ்துபமணி, கதை இவைகளோடுங் கூடினவராயும், பிரகாசமான கிரணங் களுடைய சிரேஷ்ட ரத்தினங்களா லிழைக்கப்பட்ட மகுடம், குண்டலம், அஸ்தகடகம், கடிசூத்திரம், ஆரம், தோள்வளே, கால்சிலம்பு முதலான அங்க பூஷணங்களாலே பூஷிக்கப் பட்டவராயு மிருக்கிற அந்தப் புருஷோத்தமனை ரித்விக்கு கள், சதசியர்கள், எஜமானன் இவர்களெல்லோரும் தனமில் லாதவர்கள் மிகுதியான தனத்தை யடைந்ததைப்போ லடைந்து வெகுமானத்துடன்கூட அந்த பகவானேப் பூசித் துப் பிரணமம் பண்ணினவர்களாய், ஸ்தோத்திரம் பண்ணி னுர்கள். வாரீர் மிகவும் பூஜ்யரா யிருக்கிறவரே! பக்தர்க ளாகிய எங்களுடைய பூசையை அடிக்கடி நீரே அங்கீ கரிப்பதற்கு யோக்கியர். நாங்கள் உம்மை ஸ்தோத்திரம்

பண்ணுவதற்கு சக்தர்களன்று. "நமோ நமஹ:" என்கிற இவ்வார்த்தையே பெரியவர்களாலே எங்களுக்குக் கற்பிக்கப் பட்டது. உம்முடைய ஸ்வரூபம் அறியக்கூடாதாகையாலே, "நமோ நமஹ:" என்று இவ்வளவே சொல்லுவார்கள். பிரகிருதி காரியங்களான சப்தாதி விஷயங்களிலே புத்தியை யுடையவனும் பராதீனனுமிருக்கிற எவன்தான் சகல ஜீவ ராசிகளுடைய பாபங்களைப் போக்கடியாநின்றும் மிகவும் மங்களகரமாயு மிருக்கிற சிரேஷ்டங்களான உமது குணசமூ கங்களின் லேசமாத்திரத்தைச் சொல்லுவது தவிர, பிரகிருதி புருஷர்களுக்கு விலக்ஷணராயும் சர்வ நியந்தா வாயு மிருக்கிற உம்முடைய ஸ்வரூபத்தைப் பிரபஞ்சத்துக் குட்பட்ட நாமரூபாகாரங்களினாலே நிரூபிக்கிறதற்குயோக்கிய னாவான்?

பரமபுருஷரே! பக்தஜனங்களினால் பிரீதியுடன் பண் ணப்பட்ட ஸ்துதிகள், சுத்தோதகம், பரிசுத்த புஷ்பங்கள், துளிர்கள், துளசி, அறுகு இவைகளால் சம்பாதிக்கப் பட்ட பூசையினாலேயே மிகவும் சந்தோஷிக்கிறீர். இப் படிப்பட்ட பூசையைத்தவிர நானாவிதமான திரவியங்களி னாலே சம்பாதிக்கப்பட்டும், அனேக அங்கங்களை யுடைய தாயுமிருக்கிற காலத்திலேயும், நீர்தானே இந்த எக்கியத்தி லேயும், எக்கியங்கள்தோறும் சர்வ சாக்ஷாத்காராயிருந்தும் மிகவும் அனுபவிக்கப்பட்ட சமஸ்த புருஷார்த்த ஸ்வரூபங் களையுடைய பரமாத்மாவான உமக்கு வேண்டியதான ஒரு பிர யோசனத்தையுங் காணோம். நானாவித பசு புத்திராதி பலன்களைக் கோராநின்ற எங்களுக்கே இந்த யக்கியரூப மான உம்முடைய ஆராதனம் பலசாதனமாகிறது. அதெப் படியென்றால், உத்தமமான சிரேயசை அறியாதவர்களா யும் மூடர்களாயுமிருக்கிற எங்களுக்கு மிகுதியான கிருபையி னாலே மோக்ஷமென்னப்பட்ட உம்முடைய மகிமையையும் எங் களுடைய இஷ்டத்தையும் கொடுக்கப்போகிறவராய் எங்க ளாலே பூசிக்கப்படாதவராயிருந்தாலும் பூசிக்கப்பட்டவர் போல் சுய இச்சையினால்தானே எங்களுக்குப் பிரத்தி யக்ஷரானீர். இந்த ராஜரிஷியான நாபியினுடைய யக்கி யத்திலே வரதசிரேஷ்டரான நீர் உமதுபக்தர்களுடைய நேத் திரங்களுக்குப் பிரத்தியக்ஷமாக ஆர்விர்பவித்தீர். இதுவே வரமன்றோ? ரிஷிகளினாலே சர்வகாலமும் அப்பியாசம் பண்ணப்பட்ட அனந்த கலியாண குணங்களை யுடையவரே! வைராக்கியத்தினாலே யுண்டான மகா தீக்ஷணமான ஞானமா கிற அக்கினியினாலே சுத்தமான மனதிலே யிருக்கப்பட்ட

மலங்களைத் தகித்தவர்களாயும், பகவத் தர்மங்களை யுடையவர்களாயும், ஆத்ம நிஷ்டர்களாயு மிருக்கிற ரிஷிகளுக்கும் பரமமான மங்களங்களுக் கிருப்பிடமான குண சமூகங்களி னுடைய கீர்த்தனத்தை யுடையவராகிறீர், இடறுதல், துர்ப்பாஷணஞ் செய்தல், தும்மல், காரியுமிழ்தல், விழுதல், கொட்டாவி விடுதல், சங்கடமான இடத்திலே அகப்பட்டிருத்தல் முதலான அவஸ்தைகளிலே உம்முடைய சரணாரவிந்தங்களை நினைக்கிறதற்கு அசக்தர்களாயிருக்கிற எங்களுக்குச் சகல துக்கங்களையும் போக்கடிப்பதான உம்முடைய குணங்களும், நாமங்களும், வாக்கினாலே உச்சரிக்கத் தகுந்தவையாகக் கடவன. இன்னமொரு பிரார்த்தனை பண்ணுகிறோம். என்னவென்றால், புத்திரகாமனான இந்த ராஜரிஷியான நாபிமகாராஜன் உம்மைப்போன்ற பிள்ளையைக்கோரினவனாய், பசுபுத்திராதி பலன்களுக்கும் சொர்க்க மோக்ஷங்களுக்கும் ஈஸ்வரனாய் ஷாட்குண்ய ஐசுவரிய சம்பன்னரான உம்மை உபாசிக்கிறான். புத்திரனே புருஷார்த்தமென்னும் புத்தியை யுடையவனாய் இந்த ராஜாவானவன் உம்மை உபாசிக்கிறது எப்படி யிருக்கிறதென்றால், தரித்திரனானவன் உமிநூக்குக்காகக் குபேரனை உபாசிக்கிறது போலிருக்கிறது. மகத்துக்களை உபாசியாதவர்கள் யாரோ, அவர்களுக்குள்ளே இறுமாப்பாதிகளினாலேயும் ஜயிக்கப்படாததாய் அவர்களால் நிச்சயிக்கப்படாத கதியை யுடையதாயுமிருக்கிற உம்முடைய மாயையினாலே இந்த சமுசாரத்தில் ஜயிக்கப்படாதவன் எவனிருக்கிறான் ? அந்த மாயையினாலே சூழப்படாமலிருக்கிற புத்தியையுடையவன் எவனிருக்கிறான்? சப்தாதிவிஷயமாகிற விவேகத்தினால் சூழப்படாத சுபாவத்தை யுடையவன் எவனிருக்கின்றான்?

வெகுலீலைகளைச்செய்கிற பெருமானே ! தேவ தேவரே ! சர்வாத்மாவே ! எந்தக் காரணத்தினாலே இந்த யக்கியத்தில் எங்களா லழைக்கப்பட்டீரோ, புத்திரனிடத்தில் புருஷார்த்த புத்தியை யுடையவர்களாயும், மூடர்களாயுமிருக்கிற எங்களுடைய இந்த அபராதத்தைச் சகிக்கக்கடவீர் என்று இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டு தேவதைகளுக்கெல்லாம் சிரேஷ்டரான பகவான் பாரத வருஷத்திற்கு அதிபதியான நாபியினாலேயும் அவனுடைய ரித்விக்குகளினாலேயும், நமஸ்கரிக்கப்பட்ட சரணாரவிந்தங்களை யுடையவராய், தயையுடன் சொல்லுகிறார்: ரிஷிகளே ! அமோகமான வார்த்தை யுடையவர்களான உங்களாலே இந்த ராஜாவுக்கு எனக்கு சமானமான பிள்ளையுண்டாகக் கடவ

னென்று துர்லபமான வார்த்தை கேட்கப்பட்டேன். பிராமணர்களுடைய வாக்கு அபத்தமாய்ப் போகிறதில்லை. ஆகிலும் எனக்கு சமானமாக ஒருவனு மில்லாதபடியி னாலே நான்தானே இந்த நாபியினுடைய க்ஷேத்திரத்திலே அம்சாவதாரமாக அவதரிக்கப் போகிறேனென்று பேருதேவி கேட்டுக்கொண் டிருக்கும்போதே பகவானானவர் அந்த யக்கி யத்திலே அந்தர்த்தானமாய் விட்டார். இந்தப் பிரகாரம் அந்த எக்கியத்திலே பகவானான விஷ்ணு, மேருதேவியி னிடத்திலே திகம்பரர்களாயும், சுபஸ்விகளாயும், ஞானிக ளாயும், நைஷ்டிக பிரமசாரிகளாயு மிருக்கிற பேர்களுடைய தர்மங்களை அனுஷ்டித்துக் காண்பிக்கவேண்டுமென்கிற இச் சையை யுடையவராய், சுத்தசத்துவமான மூர்த்தியினாலே அவதரித்தார்.



## நான்காவது அத்தியாயம்



அந்த ரிஷபரூபியான பகவானானவர் சத்கர்மமும், நிவர்த்திமார்க்கமும் ராச்சியத்தில் சத்புருஷர்களுடைய வாசமும், நூறு பிள்ளைகளை அடைந்ததும், சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்தே! பிறக்கும்போது வச்சிராங்குச முதலான பகவத் சின்னங்களை யுடையவராய், சம்பத்துகளினாலே நாள் தோறும் விர்த்தி யடையாநின்ற பிரபாவத்தை யுடையவரா யிருக்கிற அந்த ஸ்வாமியை மந்திரி முதலான பேர்கள் பிர ஜைகள், பிராமணர்கள், தேவதைகள் இவர்கள் ஸ்தோத்தி ரம் பண்ண, பிதாவான நாபி அந்தப்பிள்ளைக்கு ரிஷப னென்று நாமகரணம் பண்ணினான். அந்த நாபியினுடைய ராச்சியத்தில் அசூயை யுடையவனாய் இந்திரன் வருஷி யாமலிருந்தான். அதையறிந்து யோகேசுவரனாயும், பாகவதனாயு மிருக்கிற ரிஷபதேவன் சிரித்துத் தம்மு டைய யோக மாயையினாலே அசனாபமென்று பிரசித்தமான தம்முடைய மண்டலத்திலே வருஷத்தை யுண்டுபண்ணினான். நாபியோவென்றால் தன்னுடைய கோரிக்கையின்படி சுபுத்தி ரனையடைந்த மிகவுஞ் சந்தோஷாதிசயத்தினாலே பரவசனாய், சுய இச்சையினாலே கிரகிக்கப்பட்ட மனுஷிய ரூபத்தை யுடை யவரும், புராண புருஷருமான பகவானை மாயையினாலே

விளங்காநின்ற புத்தியை யுடையவனாய், கத்கத சுரத்தை யுடையதான வாக்கினாலே, அப்பா! குழந்தாயென்று ஆசை யோடு சீராட்டிக்கொண்டு மிகவும் சௌக்கியத்தையடைந்து, பிற்பாடு சர்வலோக சுதந்தரனான பிள்ளைக்குப் பட்டாபி ஷேகம் பண்ணி, பிராமணர்களுடைய ஆதீனமாக வைத்து விட்டு, மேருதேவி யென்கிற தன்னுடைய ஸ்திரீயுடனே பதரிகாசிரமத்திலே ஒருவருக்கும் பயத்தை யுண்டாக் காமலும், மகா தீவிரமாயுமிருக்கிற தபோ நிஷ்டையினாலே நரநாராயணரென்று பேரை யுடையவராயும், பகவானாயு மிருக்கிற வாசுதேவரை யுபாசித்தவனாய், கால அந்தியத் திலே அவருடைய மகிமையை யடைந்தான்.

பாண்டவ புத்திரனே! அந்த நாபியினுடைய பரிசுத்த மான கர்மத்தினாலே பகவான் அவனுக்குப் புத்திரபாவத்தை யடைந்தார். அப்படிப்பட்ட நாபிராஜாவாலே செய்யப்பட்ட கர்மத்தை அவனுக்குப் பிற்பாடு பூமியிலே எந்தப் புருஷன் செய்யப்போகிறான்? பின்பு பகவானான ரிஷபதேவனும் தம்முடைய ராஜ்ஜியமான பூகண்டத்தைக் கர்மக்ஷேத்திர மென்று சந்தோஷித்தவராய், காண்பிக்கப்பட்ட குருகுல வாசத்தைப் பண்ணி, சகல வித்தைகளையும் அப்பியசித்து, தம்மாலே கொடுக்கப்பட்ட குருதட்சணையை யுடையவர்க ளான ஆசாரியர்களாலே அனுஜ்ஞை பண்ணப்பட்டவராய், கிருகஸ்தாஸிரம யோக்கியங்களான தர்மங்களைப் பண்ணிக் கொண்டு வேதங்களினாலே சொல்லப்பட்ட பிரவர்த்திமார்க் கம், நிவர்த்திமார்க்கம் இரண்டையும் அனுஷ்டித்து, இந்திரனாலே கொடுக்கப்பட்ட ஜயந்தி யென்கிற ஸ்திரீ யினிடத்திலே தமக்கு சமானமான நூறு பிள்ளைகளைப் பெற்றார்.

இந்த ரிஷப புத்திரர்களான நூறுபேருக்குள்ளே மகா யோகியாகிய ஜேஷ்டபுத்திரனான பரதன் சிரேஷ்ட குணங் களையுடையவனாக இருந்தான். யாதொரு பரதனாலே இந்தக் கண்டம் பரத கண்டமென்று சொல்லப்படுகிறதோ, அந்த பரதனுக்குப் பிற்பாடு குசாவர்தன், இளாவிரதன், பிரமா விரதன், ஆதியாவிரதன், மலயகேது, பத்திரசேயனன், இந்திரஸ்பிருகு, விதர்ப்பன், சிகடன் என்னும் ஒன்பது பிள்ளைகள் தொண்ணூற்றொன்பது பேருக்குள்ளே சிரேஷ்டர்களானார்கள். மற்றைத் தொண்ணூற்றி லும் கவியென்றும், அரியென்றும், அந்தரிக்ஷனென்றும், பிரபுத்தனென்றும், பிப்பிலாதனனென்றும், ஆவிர ஒத்திர

னென்றும், திரமிடனென்றும், சம்சனென்றும், மகாபாச னென்றும் ஒன்பது பிள்ளைகள் மகாபாகவதர்களாய், பாகவத சாஸ்திரத்தையும், பகவத்தர்மத்தையுங் கரைகண்டவர்க ளானார்கள். பகவான் மகத்துவத்தினாலே விர்த்தியடைந்த தாய், சாந்திப்பிரதானமாய், வசுதேவ நாரதசம்வாத ரூபமான இந்த பாகவதர்களுடைய சரித்திரத்தை மேலே ஏகாதச ஸ்கந்தத்தில் சொல்லுகிறோம்.

மற்ற கனிஷ்டர்களான எண்பத்தொன்று பேர்கள் பிதாவினுடைய ஆக்கினையைப் பண்ணுகிறவர்களாயும் மிகவும் வணக்கத்தை யுடையவர்களாயும், மகா சுரோத்திரி யர்களாயும் எக்கிய சீலர்களாயும், கர்ம விசுத்தர்களாயு மிருக்கிற பிராமணர்களானார்கள். ரிஷபரென்று பெயரை யுடையவரான அந்தப் பகவானவர் சுதந்தரராயும், நித்திய மாக நிவர்த்தி நிஷ்டராயும் கேவலம் ஆனந்தானுபவத்தை யுடையவராயு மிருந்துகொண்டு ஸ்வயம் ஈசுவரா யிருந் தாலும் பாரதந்திரனைப் போல தர்மங்களைப் பண்ணுகிறவ ராய் வெகுகாலமாய் நின்றுபோன தர்மத்தைத் தாம் செய்வதி னாலே தர்மத்தை யறியாதவர்களுக்கும் செய்யும்படியாய் சிக்ஷித்துக்கொண்டு சாந்தியை யுடையவராய் சகல பிராணிக ளிடத்திலேயும் தயையுடையவராய் லோகங்களைக் கிருகஸ்த தர்மங்களிலேயே ஆசக்தியை யுடையதாகச் செய்து வேத மானது தம்மாலே அறியப்பட்டிருந்தாலும், பிராமணர்க ளாலே காண்பிக்கப்பட்ட மார்க்கத்தினாலேயும், சாம தானாதி உபாயங்களாலேயும் ஜன சமூகத்தை ரக்ஷித்துக்கொண் டிருந்தார். திரவியம், தேசம், காலம், சௌசம், சிரத்தை, ரித்விக்குகள், நானாவித தேவதைகளுடைய உத்தேசம் இவைகளினாலே விர்த்தியடைந்திருக்கிற சமஸ்த கிருதுக் களினாலேயும், சாஸ்திரப்படிக்கு நூறுமுறை யக்கியங்களைப் பண்ணினார். பகவானான ரிஷபயோகியினாலே ரக்ஷிக்கப் பட்டிருக்கிற இந்த பாரத வருஷத்திலே ஒவ்வொரு புருஷ னும் ராஜாவினிடத்திலே நாள்தோறும் விர்த்தியடைந்து கொண்டிருக்கிற சிநேகாதிசயத்தைத் தவிர, தனக்கில்லை யென்று ஒரு வஸ்துவை ஒரு இடத்திலேயும், ஒரு காலத்தி லேயும், இச்சித்ததுமில்லை—கேட்டதுமில்லை.



## ஐந்தாவது அத்தியாயம்

*ரிஷப தேவராலே புத்திரர்களுக்குச் சொல்லப்பட்ட மோக்ஷ தர்ம உபதேசமும் அந்த ரிஷபதேவர் சிதோஷ்ணாதி தொந்த துக்கத்தைச் சகித்ததினாலே அந்த ரிஷப தேவருடைய பரமாம்ச நிஷ்டையுஞ் சொல்லப்படுகிறது.*

அந்த பகவானான ரிஷபதேவன் ஒருக்கால் பூசஞ்சாரம் பண்ணிக்கொண்டு வரும்போது பிரமாவர்த்த க்ஷேத்திரத்தை அடைந்து பிரமரிஷி சிரேஷ்டர்களுடைய சபையிலே பிரஜைகளெல்லாம் பார்த்துக் கேட்டுக்கொண்டிருக்க, அவதானத்துடனே கூடின மனதை யுடையவர்களாய் வணக்கம், பக்தி, பயம் இவைகளினாலே கட்டுப்பட்டவர்களா யிருக்கிற பிள்ளைகளைக் குறித்துச் சொல்லுகிறார் :

### ரிஷபதேவர் வாக்கியம்

புத்திரர்களே! இந்த லோகத்திலே மனிதர்களுடைய தேகமானது அசுத்த முண்பவைகளான பன்றி முதலான பிராணிகளுக்கும் சாதாரணங்களாயும், பின்னொடே கிலேசத்தைக் கொடுக்கிறதாயு மிருக்கிற விஷய போகங்களைக் குறித்து யோக்கியமாகிறதில்லை. சிரேஷ்டமாயும், பகவதாராதன ரூபமாயும் இருக்கிற தபசுக்கு யோக்கிய மாகாமலு மிருக்கிறது. யாதொரு தபசினாலே சத்துவகுணமானது பரிசுத்தமாய் விளங்குகிறதோ, அப்படிப்பட்ட சுத்த சத்துவத்தினாலே அநந்தமான பிரமானந்தரூபமான மோக்ஷ முண்டாகும். அப்படிப்பட்ட மோக்ஷ பிராப்திக்குப் பெரியோர்களுடைய சேவையை உபாயமாகச் சொல்லுவார்கள். ஸ்திரீகளிடத்திலே ஆசையை யுடையவர்களான விடர்களுடைய சகவாசத்தை நாகத்துக் கேதுவாகச் சொல்லுவார்கள். சதாசார சம்பன்னர்களாய், பூத தயையுடனே கூடினவர்களாய், கோப மில்லாதவர்களாய், சாந்தர்களாய், பசுவாதி சகல பிராணிகளிடங்களிலேயும் ஞானாநந்தமயனான ஆத்துமா கர்மவசத்தினாலே அந்தந்தச் சரீரத்தைப் பரிக்கிரகித்திருக்கிறதென்று சமபுத்தியை யுடையவர்களாயு மிருக்கிறவர்களை மகத்துக்களென் றறியத்தக்கது. ஈசுவனாயும் அந்தரியாமியாயு மிருக்கிற பரமாத்மாவினிடத்திலே பண்ணப்பட்ட பிரீதியையே பரமபுருஷார்த்தமாக உடையவர்களையும், தேகத்தைப் போஷியாநின்ற விஷயவார்த்தையை யுடையவர்க

னான ஜனங்களிடத்திலேயும் பார்யா புத்திரர்கள் தனம் மித்திரர்கள் இவைகளுடனே கூடின கிருகங்களிலேயும் பிரீதி யில்லாம லிருக்கிறவர்களையும், தேகதாரணத்துக்கு வேண்டியது எவ்வளவோ அவ்வளவையே பரிக்கிரகிக்கிற வர்களையும் மகத்துக்களென் றறியத்தக்கது.

இந்திரிய பிரீதிக்காக வியாபரிக்கிற புருஷன் விவேக மில்லாதவனாய் நிச்சயமாக விபத்தையடைகிறான். பூர்வஜன் மத்திலே செய்யப்பட்ட எந்தக் கர்மத்தினாலே ஆத்மாவுக்கு துக்கத்தைக் கொடாநின்ற அசத்தான இத்தேகம் உண்டா யிற்றோ, அந்தக் கர்மத்தைத் திரும்பவும் செய்வது நல்ல தென்று நான் நினைக்கவில்லை. எந்தமட்டுக்கும் ஆத்தும தத்துவத்தை யறியவேண்டுமென்று இச்சியாமலிருக்கிறானோ, அந்த மட்டுக்கும் தேக சம்பந்தத்தினாலே அஞ்ஞான மூலமான ஸ்வரூப திரஸ்கார முண்டாயிருக்கும். கர்ம ஸ்வாதீனமான அந்த மனதினாலே திரும்பவும் தேகசம்பந்த முண்டாகிறது. புருஷனானவன் விவேகமில்லாதவனாய், தனக்கு உத்தம புருஷார்த்த மோக்ஷத்திலே பிரமாதத்தை யுடையவனாய், இந்திரிய வியாபாரங்களைப் புருஷார்த்த மென்று எப்போது பார்க்கிறானோ, அப்போது சொரூப ஞானசூனியனாய் மூடனாய் மிதுனசுகத்தை யுடையதான கிருகத்தை யடைந்து நானாவித தாபங்களை யடைகிறான். புருஷனுக்கு ஸ்திரீயோடே ஏகாந்த சங்க ரூபமான விர்த் திரைய பந்தமென்று சொல்லுவார்கள். இந்த ஏகாந்த சங்க ரூபமான இருதய பந்தத்தினாலே ஜனங்களுக்கு கிருகம், க்ஷேத்திரம், பிள்ளைகள், பந்துக்கள், தனம் இவைகளினாலே நானென்றும் என்னுடையதென்றும் மகாமோகம் உண்டா யிருக்கிறது. எப்போது இந்த ஜன்மத்துக்குக் கர்மத்தினாலே கட்டுப்பட்டும் திடமாயுமிருக்கிற மனோரூபமான இந்த இருதய கிரந்தியானது எப்போது விடுபட்டுப்போகிறதோ, அப்போது ஜன்மமானவன் ஸ்திரீயோடே ஏகாந்த சங்கத் தில் நின்றும் ஒழிந்து, பிற்பாடு அகங்காரத்தை விட்டு முக்த னாய்ப் பரமாத்துமாவை யடைகிறான்.

புத்திரர்களே! நிர்மலனாயும், குருவாயுமிருக்கிற என்னி டத்தில் பக்தி, நிரந்தர சேவை, சீதோஷ்ண சுகதுக்காதி களைச் சகித்தல், சமஸ்த பிராணிகளுடைய துக்கத்தைக் கண்டு துக்கித்தல், ஆத்துமவிசாரம், தபசு, காமிய கர்மங் களை விட்ட பகவதாராதனம், நித்திய பாகவதசங்கம், சர்வபூத சாமியம், சாந்தி, சரீரம், கிருகம் முதலானவைகளிலே என்னு

டையதென்கிற புத்தியின்மை, வேதாந்த சாஸ்திர அப்பியாசம், பிராண இந்திரிய மனோஜயம், திடமான சிரத்தை, பிரமசரியம், வாக்கு நியமம், சாஸ்திர ஞானத்தினாலே பிரகாசிக்கும் ஞானயோகம், ஆகியவைகளில் சமர்த்தனான புருஷன் நம்மாலே சொல்லப்பட்ட இந்த யோகத்தினாலே அகங்காரத்தில் நின்று மொழியக்கடவன். இந்தப் பிரகாரம் பிதாவானவன் புத்திரர்களையும், குருவானவன் சிஷ்யர்களையும், ராஜாவானவன், பிரஜைகளையும், கோபத்தை விட்டவனாயும், என்னுடைய லோகத்தை இச்சித்தவனாயும், என்னுடைய அனுக்கிரகத்தையே ஆசரித்தவனாயு மிருந்து கொண்டு, சிக்ஷிக்கக்கடவன். தத்துவத்தை யறியாதவர்களாயும், பூர்வ காலத்திலே மூடர்களாயு மிருக்கிற அவர்களைத் திரும்பவுங் கர்மங்களிலே பிரவர்த்திப்பியாம லிருக்கக்கடவன். மூடர்கள் அல்பசுக நிமித்தியத்திலே ஒருவரோடொருவர்க் குண்டாகிற வைரத்தையும் அனந்தமான துக்கத்தையும் அறிகிறதில்லை. அஞ்ஞானத்துக்குள்ளே மூழ்கியிருந்து புத்தியில்லாமலிருக்கிற ஜனங்களை மிகவும் அறிந்தவனாயும், ஞானவானாயும், தயாளுவாயு மிருக்கிற எவன்தான், வழியில்லாத வழியிலே போகாநின்ற குருடனைப்பார்த்துத் திரும்பவும் அந்தத் தப்புவழியிலே கொண்டுபோய் விடுகிறவன்போல, கர்மமார்க்கங்களிலே பிரவர்த்திப்பான்? சமுசாரத்திலே விழுந்து தவித்துக்கொண்டிருக்கிற புருஷனை பக்திமார்க்கத்தை யுபதேசித்து எவன் விடுவிக்கவில்லையோ, அவன் குருவன்று.

இந்த சரீரமானது என்னுடைய இச்சையினால் அடையப்பட்டதென்று அறியத்தக்கது. நான் பிராகிருத மனுஷியனும் கர்ம மூலமான தேகத்தை யுடையவனுமல்ல. என்னுடைய இருதயமோ, சுத்தமான சத்துவகுணப் பிரதானம். அதினாலே என்னை ரிஷபனென்று சிரேஷ்டனாய்ப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையினாலே சத்துவப் பிரதானமான என்னுடைய இருதயத்தினால் பிறந்தவர்களான நீங்கள் யாவரும் மகா பூஜ்யனாயும், ராஜாவாயு மிருக்கிற இந்தப் பரதனது நைமிசாரணியத்தை விட்டு அனுவர்த்தியுங்கள். அதுவே எனக்குச் செய்யப்பட்ட சிசுருஷை. அதுவே பிரஜாபாலனம். சேதனாசேதனமான பிராணிகளுக்குள்ளே ஸ்தாவரங்கள் உத்தமம், அதிலும் ஜங்கமங்கள் உத்தமம், அதிலும் அறிவுடைய ஜந்துக்கள் உத்தமம், அதிலும் மனுஷியர்கள் உத்தமர்கள், அதிலும் பூதப்பிரேத பிசாசங்கள் உத்தமம்,

அதிலும், கந்தர்வர்கள் உத்தமர்கள், அதிலும் சித்தர்கள் உத்தமர்கள், அதிலும் அரசர்கள் உத்தமர்கள், அவர்களிலும் தேவர்கள் உத்தமர்கள், அவர்களிலும் இந்திரன் உத்தமன், அவனிலும் பிரமபுத்திரர்களான தக்ஷன் முதலானபேர் உத்தமர்கள், அவர்களிலும் சிவன் உத்தமன், அவனிலும் பிரமா உத்தமன், அந்தப் பிரமாவானவன் என்னையே சரணமாக அடைந்தவன். நானோ வென்றால் பிராமணர்களையே தெய்வமாக வுடையவன். எந்தப் பிராமணர்களிடத்திலே பரமபாவனமான சத்துவகுணம்-ஜபம்-தபம்-சத்தியம்-அனுக்கிரகம்-தபசு-க்ஷமை-அனுபவமென்னப்பட்ட இந்தக் குணங்களும் நித்தியமாயிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பிராமணர்களுக்குச் சமானமானவர்களொருவருமில்லை. யாதொரு பிராமணர்களுக்குப் பிரகிருதியைக் காட்டிலும் வேறாயும் சுவர்க்கமோக்ஷங்களுக்கு ஈஸ்வரனாயும், அனந்தனாயுமிருக்கிற என்னைக்காட்டிலும் பிரார்த்திக்கத்தக்க வஸ்து வேறொன்றுமில்லையோ, என்னிடத்திலே பக்தியை யுடையவர்களாயிருக்கிற அந்தப் பிராமணர்களுக்கு, க்ஷத்திரியர்களாலே ஆகவேண்டியதென்ன? பிள்ளைகளே! மற்சரமுதலான பேய்க்குணங்களில்லாத திருஷ்டிகளையுடையவர்களான உங்களாலே சராசரங்களான சமஸ்த பூதங்களும் என்னுடைய சரீரமாக அடிக்கடி பாவிக்கத் தகுந்தவைகள். அதுவே எனக்கு நித்தியமான ஆராதனம். மனது, வாக்கு, திருஷ்டி, மற்றுமுண்டான இந்திரியங்கள் இவைகளுடைய வியாபாரத்துக்கு என்னுடைய ஆராதனமே பிரத்தியக்ஷமான பலம். என்னுடைய ஆராதனத்தையன்றி மகா மோகமான சம்சார பயத்தில் நின்றும் புருஷன் தன்னை விடுவித்துக்கொள்ளச் சமர்த்தனாகமாட்டான்.

## ஸ்ரீ சுகர் வாக்கியம்

இந்தப் பிரகாரம் ஸ்வயமாகவே தெரிந்தவர்களா யிருந்தாலும், பிள்ளைகளை லோகசிக்ஷார்த்தமாகச் சிக்ஷித்து மகானுபாவராய், பரமசுகுர்த்தராய் ரிஷபரென்று பெயரையுடையவரான பகவான் பொறுமையே சீலமாகவுடையவர்களாயும் நிவர்த்தி நிஷ்டர்களாயு மிருக்கிற மகா முனிகளுடையபக்தி, ஞானம், வைராக்கியம் இவைகளின் சொரூபமான பரம அம்சதர்மத்தைச் சிக்ஷித்தவராய்த் தம்முடைய பிள்ளைகளுக்குள்ளே சிரேஷ்டனையும் பரமபாகவதனையும் பாகவதர்களையே கதியாக வுடையவனுமிருக்கிற பரதனைப் பூமிபாலனத்தின் பொருட்டுப் பட்டாபிஷேகம் பண்ணி, தாம் கிரு

கத்தைவிட்டுச் சரீரத்துடனே வெளிப்பட்டுப் பித்தனைப் போலவே திகம்பரராய், அவிழ்ந்திருக்கிற தலைமயிரை யுடைய வராய்த் தம்மிடத்தில் ஆக்வநீயமென்கிற வைதிகாக்கினியை ஆரோபம் பண்ணிக்கொண்டு பிரமாவர்த்த மென்கிற தம் முடைய தேசத்தைவிட்டு வெளிப்பட்டார். மூடன் அந்தகன், ஊமை, செவிடன், பிசாசன், பித்தன், குழந்தை இவர்களைப் போல் அவதூதவேஷத்தை யுடையவராய் ஜனங்களினாலே அழைக்கப்பட்டாலும், மௌன விரதத்தையுடையவராய் வார்த்தை சொல்லாமலேயிருந்தார். அங்கங்கே வழிகள் தோறும் பட்டணங்கள், நதிப்பிரதேசங்கள், பயிரிடுங் குடி களுடைய ஸ்தானங்கள், புஷ்ப வாடிகைகள், சேனா நிவேச ஸ்தானங்கள், இடைச்சேரிகள், ஜனசமூகங்கள், பர்வதங்கள், வனங்கள், ஆஸிரமங்கள் முதலானவைகளிலே துர்ஜனங் களாலே அடிக்கிறது, மூத்திரத்தை விடுகிறது, காறியுமிழ் கிறது, கல்லுவிட்டெறிகிறது, தூளி இறைக்கிறது, துர்ப் பாஷைகளைச் சொல்லுகிறது இவை முதலான வியாபாரங் களினாலே அவமானப்பட்டிருந்தாலும், அதை எண்ணாத வராய் அநித்திய தேகத்தோடே சம்மதித்தும் சம்மதியாமலு மிருக்கிற தம்முடைய மகிமையினாலே அகங்கார மமகாரங் களை விட்டதினாலே பரிபூரணமான மனதை யுடையவராய், பூமியெல்லாம் ஒருவராகவே சஞ்சரித்து, அமேத்தியத்திலே புரண்டுகொண்டு அதினாலே பூசப்பட்ட அவயவங்களை யுடையவராயிருந்தார். அந்தப் பகவானது மலத்தினுடைய சுகந்தத்துடனே கூடின வாயுவானது சுற்றிலும் பத்து யோஜனை தூரமட்டும்பரிமளிக்கச்செய்தது. இந்தப்பிரகாரம் லோக சிக்ஷார்த்தமாக நானாவிதங்களான யோக கதிகளைப் பண்ணிக்கொண்டு, மோக்ஷப் பிரதராயும் பகவானாயுமிருக்கிற ரிஷபதேவர், ஒழிவில்லாத பரமானந்தானுபவத்தை யுடைய வராய், சர்வ பூதங்களுக்கும் அந்தராத்துமாவாயும் பகவா னாயு மிருக்கிற வாசுதேவனிடத்திலே தமக்கு அபேதமான படியினாலே தனக்குத்தானே சித்தித்திருக்கிற சமஸ்த புரு ஷார்த்தங்களிலே பரிபூரணராய் அந்த யோகப் பிரபாவத்தி னாலே தனக்குத்தானே பிராப்தங்களான ஆகாச கமனம், மனோவேகம், அந்தர்த்தானம், பரகாயப் பிரவேசம், தூரத்தி லிருக்கிற பதார்த்தத்தை சமீபத்தில் பார்த்தல், கேட்டல் இவை முதலான யோக ஐசுவரியங்களைக் குறித்து மனதிலே சந்தோஷமில்லாதவராயிருந்தார்.



## ஆருவது அத்தியாயம்

*தேகாபிமான சூனியரான ரிஷப தேவருடைய தேகத்தியாகப் பிரகாரம் சொல்லப்படுகின்றது.*

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

பகவானே! யோகத்தினுலே பிரகாசிக்கப்பட்ட ஞானத்தினுல் கர்ம வாசனையைத் தகித்தவர்களாய், பரமாத்துமானுபவ நிஷ்டர்களாயிருக்கிற யோகிகளுக்குத் தனக்குத்தானே பிராப்தமான ஐசுவரியங்கள் கிலேசத்தைக் கொடுக்கமாட்டா. இது நிச்சயமன்ருே? ஆகையினுலே அப்படிப்பட்ட யோக ஐசுவரியங்களை ரிஷபதேவன் எதற்காக இச்சிக்கவில்லையென்று பிரசினம் பண்ணுநின்ற ராஜாவைப்பார்த்துச் சுகர் சொல்லுகிருர்:

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ராஜாவே! உன்னுலே எதார்த்தமே சொல்லப்பட்டது. ஆனுலும் இந்த உலகத்திலே சில புத்திமான்கள் சஞ்சல மனதைக் கபட புத்தியான கிராதன் மிருகத்தைப்போல நம்பார். ஆனபடியினுல் பெரியோர்களாலே மனதை நம்பப் போகாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது எப்படியென்ருல் எந்த மனமே விசுவாசத்தினுலே வெகுகாலமாய்ச் சம்பாதிக்கப்பட்ட சிவனுடைய தபசானது விஷ்ணுவினுடைய மோகினி ரூப தரிசனத்தாலே வழுவிவிட்டதோ, ஒரு விஷயத்திலேயும் நிலையில்லாத அப்படிப்பட்ட மனதில் ஒருக்காலும் சகவாசத்தைப் புத்திமான் நினையாமலிருக்கக்கடவன். மனதிலே நம்பிக்கையுடையவனுன யோகியினுடைய மனமானது காமத்துக்கும், அதின்பின்னே யுண்டாகாநின்ற குரோத மோகாதிகளுக்கும், விசுவாசத்தையுடையவனுன புருஷனுடைய ஸ்திரீயானவள் சோர புருஷனுக்கு இடங்கொடுக்கிருப்போல் இடங்கொடாநிற்கிறது. காமம், குரோதம், மதம், லோபம், சோகம், மோகம், பயம் இவைகள் முதலான ஹேயகுணங்களும் கர்மபந்தமும் யாதொரு மனதை மூலமாக உடையவைவையோ, அப்படிப்பட்ட மனதை ஞானியானவன் எவன்தான் ஸ்வாதீனமென்றெண்ணிக் கொள்ளுவான்?

அதின் பிறகு இந்தப் பிரகாரம் சமஸ்தலோக பாலகருக்கும் சிரோமணியான ரிஷபதேவன் ஜடன்போல் லோக

விலக்ஷணங்களாயும் நாநா பிரகாரங்களாயு மிருக்கிற அவதூத வேஷ பாஷா சரித்திரங்களால் அறியப்படாத பகவதம்சமான பிரபாவத்தை யுடையவராய், யோகிகளுக்கு தேகத்தை விடுகிற பிரகாரத்தை சிட்சிப்பித்துக்கொண்டு, தம்முடைய சரீரத்தை விடவேண்டுமென்று இச்சித்தவராய், தம்மைப் பரமாத்துமாவி னிடத்திலிருத்தி, அஞ்ஞானத்தினாலே மறைக்கப்படாத ஜீவாத்தும சொரூபம் பரமாத்துமாவுக்குச் சரீர மாகையினாலே தம்மைப் பரமாத்துமாவினுடனே அபேதமாகப் பார்த்துக்கொண்டு, தேகார்த்தமான வியாபாரத்தில் நின்றும் ஒழிந்தவரானார். இந்தப் பிரகாரம் ஸ்தூலதேக லிங்கதேக அபிமானத்தை விட்டவராயும் பகவானாயுமிருக்கிற அந்த ரிஷப யோகியினுடைய சரீரமானது யோகமாயா வாசனையினாலே, குயவனுடைய சக்கரம் போல் பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருந்தது. ஒருக்கால் கொங்கதேசம், வங்கதேசம், குடகுதேசம், தக்ஷண கர்நாடக தேசங்களைச் சுய இச்சையாக அடைந்ததாய் குடகாசலமென்கிற பர்வத சமீபத்திலே ஒரு கர்ம வாசனையினாலே வாயிலே கல்லை வைத்துக்கொண்டதாகப் பைத்தியம் பிடித்தவனைப் போல் தலைமயிரை விரித்துக்கொண்டு நக்கினமாகத் தானே சஞ்சரித்துக் கொண்டிருந்தது. பிற்பாடு வாயுவேகத்தினாலே ஒன்றோடொன்று இழையா நின்ற மூங்கில்களில் உண்டான பெருங்காட்டுத் தீயானது அவ்வனத்தை யெல்லாம் கபளீகரித்துக்கொண்டு அந்த ரிஷப தேவருடைய தேகத்தையுங் கூடத் தகித்தது. அந்த ரிஷப தேவருடைய சரித்திரத்தைக் கேட்டு. அவ்வாசாரத்துக்கு விரோதமாகக் கொங்கணதேசம், வங்கதேசம், லிங்கதேசம், யவனதேசம், சகதேசம் இவைகளுக்கெல்லாம் ராஜாவாய் அருகனென்று பெயரையுடையவனான ராஜாவானவன் கலியுகத்திலே அதர்மம் விஞ்சியிருக்கையால், பிராணிகளுடைய பாபானுகுணமாக நடக்கப் போகிறபடியினாலே புத்திமோகத்தை அடைந்தவனாய், ஓரிடத்திலேயும் பயமில்லாத சுதர்மமார்க்கத்தைவிட்டு, மூடனாய், தூளிதமான பாஷண்ட மார்க்கத்தைத் தன்னுடைய புத்தியினாலே பிரவர்த்திப்பிக்கப் போகிறான். இப்படி பாஷண்ட மார்க்கத்தை யுண்டுபண்ணா நின்ற அந்த அருகனென்கிற ராஜாவினாலே கலியுகத்தில் மனுஷியப் பதர்கள் விஷ்ணு மாயையினாலே மோகிக்கப்பட்டவராய்த் தங்களுக்கு அடுத்த சாஸ்திரங்களினாலே சொல்லப்பட்ட சௌசம் ஆசாரம் இவைகளை விட்டவராய், தேவதைகளுடைய அவமான ரூபமாயிருக்கிற ஆசாரங்களைச் சுய இச்சையினாலே கிரகித்தவர்களாய் ஸ்நான ஆசமன சௌசங்களை விட்டவராய், தலை

மயிர்கள், முகத்து மயிர்கள் இவைகளைப் பிடுங்கிப் போடுகிற வர்களாய், அதர்ம விர்த்தியை யுடையதான கலியினலே தூஷிக்கப்பட்ட புத்தியை யுடையவர்களாய், வேத பிராமணர்கள் எக்கிய புருஷர்களான பகவான் பாகவதர்கள் இவர்களைத் தூஷிக்கிறவர்களாக மிகவும் உண்டாகப் போகிருர்கள். அவர்கள் வேதத்திலே சொல்லப்படாததாயும் சுய இச்சையினலே உண்டாக்கப் பட்டதாயு மிருக்கிற அந்தக பரம்பரையான அந்த மார்க்கத்திலே விசுவாசமுடையவர்களாய் நரகத்திலே தாங்களே விழப்போகிருர்கள். இந்த ரிஷபதேவர் அவதாரம் ரஜோ குணத்தையுடையவர்க்கு மோக்ஷ மார்க்கத்தைக் காண்பிக்கிற நிமித்தியமாக உண்டாயிற்று. அந்த ரிஷபர் அவதாரத்துக்கு ஆறு குணங்களான சுலோகங்களை இந்தப் பிரகாரம் சொல்லுகிருர்கள்.

என்னவென்ருல், சத்த சமுத்திரங்களுடனே கூடின இந்தப் பூமியிலே யிராநின்ற தீவுகளிலுள்ள வருஷங்களுக்குள் இந்தப் பாரதவருஷம் அதிகமான புண்ணியத்தையுடையது. யாதொரு பாரதவருஷத்திலே யிராநின்ற ஜனங்கள் ஸ்வாமியினுடைய க்ஷேமகாங்களான ரிஷபர் அவதாரத்தைக் கானம் பண்ணிக்கொண் டிருக்கிருர்களோ, பிரியவிருதனுடைய சம்பந்தமான இந்த வம்சமானது கீர்த்தியிலே மகா பரிசுத்தமாய் விளங்குகிறது. யாதொரு பிரியவிருதனுடைய வம்சத்திலே புராண புருஷனும், ஆதி புருஷனுமிருக்கிற ஸ்வாமி அவதரித்து மோக்ஷஹேதுவான தர்மத்தைப் பண்ணினுனன்ருே? எந்த யோகிதான் அந்த ரிஷப யோகியினுடைய மார்க்கத்தை மனோத மாத்திரத்தினலே யாகிலும் அடைய மாட்டுவன்? எந்த யோகியானவன் அந்த ரிஷப யோகியினலே வஸ்து அல்லவென்று தள்ளப்பட்டுப் போன யோக சித்திகளை மகா பிரயத்தனத்தையுடையவனு யிச்சிக்கிருனே, அந்தப் பிரகாரம் சகலமானலோகங்கள், வேதங்கள், பிராமணர்கள், பசுக்கள் இவைகளுக்கெல்லாம் பரம குருவான பகவானை ரிஷப தேவருடைய பரிசுத்தமான சரித்திரமானது புருஷர்களுடைய சயஸ்தமான பாபங்களையும் போக்கடிக்கிறது. பரமமான மங்களங்களுக்கு இருப்பிடமா யிருக்கிறது. வாராய் ராஜாவே! கிருஷ்ண பகவான் பாண்டவர்களான உங்களுக்கும், யாதவர்களுக்கும், ரக்ஷகராயும், உபதேசிக்கிறவராயும், உபாசிக்கத்தக்க தெய்வமாயும், சினேகிதராயும், நியந்தாவாயு மிருந்தார். இப்படியிருந்தாலும் மற்றப் பிராணிகளுக்கும் தம்முடைய பக்தர்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுக்கிருர்.

ஒருக்காலும் மோக்ஷ ப்ரதமான பக்தியோகத்தைத் தடுக்கிற தில்லை. ஆகையால் அப்படிப்பட்ட பக்தியைத் தானே பெரியோர்கள் இச்சிப்பார்கள். நித்தியமாய் அனுபவிக்கப்பட்ட பரமாத்தும சாக்ஷாத்காரத்தினால் விஷயாபிலாஷையை விட்டவரான யாதொரு ரிஷபதேவ பகவானுடைய மாயையினால், புருஷார்த்தமான மோக்ஷத்திலே மூடமாகிய புத்தியையுடையதான லோகத்துக்குப் பரம கிருபையினாலே ஒருக்காலும் பயமில்லாத பரம புருஷார்த்தமான ஆத்துமஸ்வரூபத்தை உபதேசித்தாரோ, அப்படிப்பட்ட ரிஷப தேவருக்குப் பிரணாமம் என்பதாம்.



## ஏழாவது அத்தியாயம்



*பரதன் ராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டு வெகுகாலம் எக்கியங்களினாலே ஹரியை ஆராதித்துப் பிற்பாடு புலகருடைய ஆசிரமத்திலே சந்நியாசத்தை யடைந்து ஹரியை பஜித்தானென்று சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்.

ராஜனே! மகாபாகவதனான பரதனேவென்றால், பகவானான ரிஷபராலே பூபரிபாலனத்தின் பொருட்டு எப்போது அபிஷேகஞ் செய்யப்பட்டானோ, அப்போதே அந்த ராஜ்ஜியாதிகாரத்திலே ஜாக்கிரதையுடையவனா யிருந்து, விசுவரூபருடைய பெண்ணான பஞ்சசேனியென்கிற ஸ்திரீயை விவாகம் பண்ணினான். அவனுக்கிசைந்த அந்தப் பஞ்சசேனியிடத்திலே தனக்கு எல்லாவிதத்திலும் சமானமானவர்களாய் சுமதியென்றும், ராட்சடப்பிரந்துவென்றும், சுதரிசனனென்றும், ஆவாரணனென்றும், தூம்பரகேதுவென்றும் ஐந்துபிள்ளைகளைத் தாமச அகங்காரமானது உண்டாக்கிய பூதசூட்சுமங்க ளென்னப்பட்ட பஞ்சதன் மாத்திரைகளைப் போலப் பெற்றான். அசனாபமென்று பிரசித்தமான இந்த வருஷத்தை யாதொரு பரதன் முதற்கொண்டு பாரத வருஷமென்று சொல்லுகிறார்கள். அந்த சர்வஜ்ஞனான பரத ராஜன் பிதுர் பிதாமகரான ரிஷபதேவன் ஆக்கினியித்தின் முதலானவர்களைப்போல மிகவும் வாற்சல்லியத்தினாலே சுகர்யத்தைச் செய்துகொண்டிருக்கிற பிரஜைகளைச் சுகர்யமான ராஜதர்மத்தை அனுசரித்தவனாய் ரக்ஷித்தான். தன்னுடைய அதிகாரானுகுணமாகச் செய்யப்பட்ட அக்கினிஹோத்திரம்,

தரிசபூர்ணமாசம், சாதுர்மாசியம் பசுசோமம் இவைகளுக்குப் பிரகிருதிகளாயும் விகுர்திகளாயு மிருக்கிற யகத்துக்களான எக்கிய க்ருதுக்களாலே எதாசாஸ்திரமாக எக்கிய புருஷனான பகவானை சிரத்தையுடன் ஆராதித்தான். இந்தப் பிரகாரம் செய்யப்பட்டும் பரிபூர்ணமான அங்கங்களை யுடையனவாயு மிருக்கிற இந்த எக்கியங்களில் அபூர்வமென்னப் பட்ட ஒரு புண்ணிய முண்டாயிற்று. அந்தப் புண்ணியத்தைப் பரப்பிரமமாயும், எக்கிய புருஷராயும், சகல தேவதா சப்தங்களுக்கும் மந்திரங்களுக்கும் அர்த்த சொரூபரானபடியினாலே சாக்ஷாத் கர்த்தாவாயும், பர தேவதையாயும், பகவானுயுமிருக்கிற வாசுதேவரிடத்தில் சமர்ப்பித்தவனாய், ஆத்தும நிஷ்டையினால் சகல மனோமலங்களையும் போக்கடித்தவனாயிருக்கிற அந்தப் பரத மகாராஜாவானவன் அத்துவர்யுக்களினாலே ஓமம் பண்ணப்பட்ட அவிசுக்களையும் அந்த அவிசுக்களைப் புசியா நின்ற தேவதைகளையும், பரமாத்துமாவினுடைய அவயவமாகப் பாவனை பண்ணினான். இந்தப்பிரகாரம் கர்மசுத்தியினாலே பரிசுத்தமான சத்துவகுணத்தை யுடைய அந்தப் பரதனது இருதயப் பிரதேசத்திலே ஆகாச சரீரியாய், பரப்பிரமமாய், பிரமமாய் பகவானுயிருக்கிறவராய் ஸ்ரீவற்சப்-கௌஸ்துபம்-வனமாலை - சங்கம் - சக்கரம் கதை இவைகளுடனே கூடினவராய், தம்முடைய பக்தர்களான நாரதர் முதலான பேர்களுடைய இருதயத்தில் பிரகாசிக்கும் புருஷ ரூபத்தினாலே தன் இருதயத்தில் விளங்கியிருக்கின்ற வாசுதேவனிடத்திலே அதிசயமாக நாள்தோறும் விர்த்தியடையா நின்ற பக்தியானது உண்டாயிற்று. இந்தப்பிரகாரம் கோடி வருஷத்துக்குமேல் ராஜ்யபோகத்துக்கு ஹேதுவான தன்னுடைய முடிவுகாலத்தை நிச்சயித்தவனாய் அனுபவிக்கப்பட்டு, பிதுர் பிதாமக கிரமமாய் வந்திருக்கிற தனத்தைத் தன் பிள்ளைகளுக்குச் சரிபாகமாய்ப் பிரித்துக்கொடுத்து அந்த பரதனானவன் சர்வசம்பத்துக்களுடனே கூடின தன்னுடைய கிருகத்தில் நின்றும் புறப்பட்டுப் புலகருடைய ஆசிரமமான ஹரிக்ஷேத்திரத்தை யடைந்தான்.

குழந்தாய்! யாதொரு புலகாசிரமத்திலே பகவானான அரியானவர் இப்போதும் அங்கே வாசம் பண்ணுநின்ற ஜனங்களிடத்தில் வாற்சல்லியத்தினாலே தம்முடைய பக்தர்களுக்கு அபேட்சிதமான ரூபத்தினால் ஆவிர்ப்பவித்திருக்கிறாரோ, யாதொரு புலகாசிரமத்தி லிரா நின்ற ரிஷிகளுடைய ஆஸிரமஸ்தானங்களை இருபுறமும் சக்கரத்தை யுடையவைகளான சாளக்கிராம சிலைகளினாலே

சக்கிரந்தியென்று பிரசித்தமாய் நதிகளுக்கெல்லாம் சிரேஷ்டமான கண்டகீநதியானது நாலண்டையிலும் பரிசுத்தயாகப் பண்ணுகிறதோ, அப்படிப்பட்ட புலகாசிரம வனத்திலே பரதன் ஒருவனாய் நானாவித புஷ்பங்கள், துளிர்கள், துளசி, சுத்தோதகம், கந்த மூல பலங்கள் இவைகளினால், பகவதாராதனம் பண்ணவேண்டுமென்று இச்சித்தவனாய், பரிசுத்தனாய், விஷய அபிலாஷையையொழித்தவனாய், சாந்தியையடைந்தவனாய், பரமமான சுகத்தை அடைந்தான். இந்தப் பிரகாரம் சர்வகாலமும் அந்த பகவதாராதனத்தினால் பகவானிடத்தில் பிரீதி அதிசயித்ததினால் உருகாநின்ற மனதையுடையவனாய் சந்தோஷாதிசயத்தினால் சரீரமானது புளகாங்கிதமாயிருக்கையில், பக்தியினால் பெருகாநின்ற ஆனந்தபாஷ்பங்களினாலே தகையப்பட்ட பார்வையுடைய நேத்திரங்களுடனே கூடினவனாய்த் தனக்கு ஆனந்தத்தைக் கொடாநின்ற ஸ்வாமியினுடைய செந்தாமரைப் புஷ்பம்போன்ற சரணாரவிந்த தியானத்திலே விர்த்தியடையப்பட்ட பக்தி பிரவாகத்தினால் நாலண்டையிலும் பெருகாநின்ற பரமானந்தமாகிற கம்பீரமான மடுவிலே முழுகியிருக்கிற புத்தியை யுடையவனாய், பாகவதாராதன கைங்கரியத்தையும் மறவாமலிருந்தான். இந்தப் பிரகாரம் பகவதாராதனத்தை யுடையவனாய் கிருஷ்ணாஜின ரூபமான வஸ்திரத்தினாலும், திரிசந்தியா காலங்களிலும் ஸ்னானத்தால் ஈரங்களாயும், பொன்னுக்கென்ற வர்ணங்களாயும், வக்கிரங்களாயு மிருக்கிற சடைகளினாலும், பிரகாசியாநின்றுகொண்டு உதியாநின்ற சூரியமண்டலத்தில் பகவானை தியானம் பண்ணிக்கொண்டு ஒரு மந்திரத்தைச் சொன்னான். பிரகிருதியைக் காட்டிலும் பரனாய், ஆசிரிதர்களுக்குக் கர்மபலத்தைக் கொடுப்பவனாய், சூரியாந்தரியாமியா யிருக்கிற யாதொரு பகவானுடைய தேஜசானது சங்கல்பமாத்திரத்தினாலே பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்ததோ, சிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தைச் சுகசரீர பூதமான ஜீவனாலே அந்தரியாமியாக அனுப்பிரவேசித்து ரக்ஷியா நிற்கிறதோ, இப்படிப்பட்ட ஜீவர்களுக்கு புத்தி பிரதனாயும் கர்ம பாவசரான ஜீவர்களுக்குள்ளே அனுப்பிரவேசித் திருக்கும்போதும் பரிசுத்தனாயு மிருக்கிற பரமாத்துமாவைச் சரணமாக அடைகிறோமென்பது பரதனால் உச்சரிக்கப்பட்ட காயத்திரி மந்திரத்தினுடைய அர்த்தம்.



## எட்டாவது அத்தியாயம்

பகவானை ஆராதித்துக்கொண்டிருந்த பரதனுடைய ஆராதனத்துக்கு விக்கினமாக மானை ரக்ஷிக்கிறதினால் வந்த மிருக ஜன்மமும் யோகியானவனுக்குப் பிராணிகளிடத்தில் தயையினாலே பண்ணப்பட்ட சகவாசமும் பரலோகத்துக்கு விகாதமாய் விடுமென்றும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்.

வாராய் ராஜாவே! ஒருக்கால் அந்த பரதனானவன் மகா நதியிலே அவசியமாகச் செய்யத்தக்கதான நித்தியநைமித்திக கர்மானுஷ்டானங்களைச் செய்து பிரணவத்தை உச்சரித்துக் கொண்டு ஒரு ஜாம பரியந்தம் நதிதீரத்திலே யிருந்தான். அப்போது அங்கே ஒரு மான்பேடானது தாகங்கொண்டு ஜலபானம் பண்ண வேண்டுமென்கிற இச்சையினாலே நதி சமீபத்திலே வந்து ஜலத்தைப் பானம் பண்ணிக்கொண்டிருக்கையில், சமீபத்திலே சிங்கத்தினுடைய லோகபயங்கரமான ஒரு சப்த முண்டாயிற்று. அந்த சப்தத்தைக் கேட்டு, சுபாவமாய் அதைரியத்தை யுடையதாயும் சஞ்சலமான பார்வையை யுடையதாயும், சிங்க கர்ஜனையினாலே யுண்டான பயத்தினால் அலைந்துகொண்டிருக்கிற இருதயத்தை யுடையதாயும் தாகமடங்கா திருக்கையிலே மிகவும் பயத்தினாலே சீக்கிரமாக எழும்பின கர்ப்பிணியாயுமிருக்கிற அந்த மான் பேடினுடைய கர்ப்பமானது நழுவிப் பிரவாகத்திலே விழுந்தது. அந்த கர்ப்பம் நழுவினதினாலும், ஜலத்திலே யிருந்து உயர்ந்த கரையிலே யெழும்பி விழுந்ததினாலும் சிங்க கர்ஜனையினாலே யுண்டான பயத்தினாலும் மகா கஷ்டத்தை யுடையதான அந்த மான்பேடானது தன்னுடைய கூட்டங்களை யெல்லாம் விட்டு ஒரு பர்வத குகையில் விழுந்து மரித்தது. அப்போது தீனமாயும் பிரவாகத்தினாலே கொண்டுபோகப் பட்டதாயும், தாயார் முதலான கூட்டத்தினாலே விடப்பட்டதாயு மிருக்கிற அந்த மான்குட்டியை ராஜரிஷியான பரதன் தயவினாலே பந்துபோலப் பார்த்துத் தாயில்லாத அந்த மான்குட்டியை யெடுத்துக்கொண்டு ஆசிரமத்தை யடைந்தான். அந்த மான்குட்டியினிடத்தில் மிகவும் அபிமானத்தை யுடையவனான அந்த பரதனுக்கு மான் குட்டியைத் திருணாதிகளினாலே போஷணமும் செந்நாய்கள் முதலானவைகளில நின்றும் உபத்திரவம் வாராமல் ரக்ஷிக்கிறதும், அது உடம்பை சொரிகிறதினாலே

சந்தோஷ மடைவதும், முத்த மிட்டுக்கொண்டு லாலனே பண்ணுகிறதும், இவைகளினலே யுண்டான ஆசக்தியினல் தன்னுடைய ஸ்நானதி நியமங்கள் பிராணயாமங்கள் பகவதாராதனம் முதலான தபசுகள் நாள்தோறும் ஒவ்வொன் ருய்ச் சிலநாளேக்குள்ளே விடப்பட்டதாய், பிற்பாடு தீனமான ஒரு வசனத்தைச் சொன்னன் ஆச்சரியமன்றே ? தீனமான இந்த மான் குட்டியானது காலசக்கிரத்தினுடைய வேகத்தி னலே தன்னுடைய கூட்டமான பந்துக்களால் விடப்பட்ட தாய் என்னேச் சரணமாக அடைந்து, தாயென்றும், தகப்ப னென்றும், பிராதாவென்றும், பந்துவென்றும், தன்னுடைய கூட்டமென்றும், எண்ணிக்கொண்டு மற்றொருவரையும் அறி யாமல் என்னிடத்திலேயே மிகவும் விசுவாஸத்தை யுடையதா யிருக்கின்றது.

ஆனபடியினல் என்னேயே கதியாக அடைந்திருக்கிற இந்த மான்குட்டியினுடைய போஷணம், ரக்ஷணம், சந்தோ ஷம் முதலானவைகளே அசூயையில்லாதவனும் சரணகதர்க ளுடைய உபேக்ஷையிலே தோஷமுண்டென் றறிந்துமிருக் கிற என்னலே செய்யத்தக்கது. சதாசார நிஷ்டர்களா யும், சாந்தியை யுடையவர்களாயும், தீனவற்சலர்களாயு மிருக்கிற பெரியோர்கள் இப்படிப்பட்ட விஷயத்திலே மகத்தாயிருந்தாலும் தங்களுடைய பிரயோசனங்களேப் பாரார் களே. இது நிச்சயமல்லவா? என்று இந்தப் பிரகாரம் அந்த மான்குட்டியினிடத்திலே ஆசக்தியை யுடையவனய் இருக் கும்போதும் படுக்கும்போதும் சஞ்சரிக்கும்போதும் ஸ்நா னஞ் செய்யும்போதும் போஜனஞ் செய்யும்போதும் மான் குட்டியுடனே யிருந்துகொண்டு அதனிடத்திலே மிகவும் சினேகத்தை யுடையதான இருதயத்தை யுடையவனனன். தர்ப்பை, புஷ்பம், சமித்து, பலாசம், கந்த மூலபலங்கள், உதகம் முதலானவைகளேச் சம்பாதித்துக்கொண்டு வரும் போதும் நாய் நரி முதலியவை தன்னுடைய மான்குட்டியை உபத்திரவிக்குமோ என்று பயந்து மான்குட்டியுடனே வனத் திலே பிரவேசிப்பான். மார்க்கங்கள்தோறும் குட்டியானபடி யினலே அங்கங்கே நிற்கின்ற அந்த மான்குட்டியை மிகவும் சினேகித்துடனே கூடின இருதயத்தை யுடையவனய், சாபல்லியத்தினலே தோளில் வைத்துக்கொண்டு போவான். வைதிக கர்மங்களேச் செய்யும்போது மத்தியிலே எழுந் திருந்து வந்து, எப்போது இந்த மான் குட்டியைப் பார்க் கிறுனே, அப்போது வருஷபதியான பரதன் சொஸ்தசித்த னயிருப்பான். அந்த மான்குட்டியைப் பார்த்து, வாராய்

குழந்தாய்! உனக்கு நான்கு திக்கிலும் நன்மையுண்டாகக் கடவதென்று ஆசீர்வசனங்களைச் செய்வான். அந்த மான் குட்டியைப் பாராதபோது மிகவும் நொந்த மனதை யுடைய வனாய் உடைமையைப் பறிகொடுத்தவன் போலத் தீனனாய், தயையுடன் கூடின புத்தியை யுடையவனாய், மான் குட்டியி னுடைய பிரிவினால் அதைக்குறித்து துக்கித்துக்கொண்டு மகத்தான மோகத்தை யடைந்தவனாய்ச் சொல்லுகிறான்: அந்த மான் குட்டியானது கிராதன்போல நிர்த்தயனாயும் பாக்கிய வீனனாயுமிருக்கிற என்னுடைய அனுதாவைப் பார்த்து வாராமல் போய் விட்டதோ? அந்த மான்குட்டியை நான் மறுபடியும் பார்க்கப் போகிறேனா? சகல ஜகத்துக்கும் க்ஷேமத்தைப் பண்ணுகின்ற உதயத்தையுடை யவனாயும், வேத மூர்த்தியாயும் பகவானாயுமிருக்கிற சூரியன் அஸ்தங்கதனா னானே; இப்போதும் அந்த மான்குட்டியானது வந்து சேர வில்லையே. அது வந்து சேர்ந்து பாக்கிய ஈனனான என்னைச் சுகப்படுத்துமா? அந்த மான்குட்டி தன்னுடைய விளையாட்டி னாலே என் துக்கத்தைப் போக்கடித்து என்னைச் சுகப் படுத்துமா?

தீனவற்சலனாயும், பகவானாயும், நக்ஷத்திரங்களுக்குப் பதியாயு மிருக்கிற சந்திரன் ஆஸிரமத்திலிருந்து வெளிப் பட்ட இந்த மான்குட்டியைத் தயையினாலே ரக்ஷிப்பானா? தனக்கு இஷ்டமான மிருகத்தினுடைய பிரிவினாலே யுண் டான சுரமாகிற காட்டுத் தீயினுடைய ஜ்வாலையை அமிர்த மயங்களாகிற கிரணங்களினால் சுகப்படுத்துவானா? என்று இந்தப் பிரகாரம் சித்தியாத மனோரதத்தினாலே வியாகூல மான இருதயத்தை யுடையவனான அந்தப் பாதனெனவன் மான்குட்டி ரூபமாயிருக்கிற தன்னுடைய பிராரப்த கர்மத் தினாலே யோகாப்பியாசத்தில் நின்றும் நழுவினவனாய், பகவ தாராதன ரூபமான தபசில் நின்றும் நழுவினான். பிராரப்த கர்மமாகாவிட்டால் வயிற்றிலே பிறந்த பிள்ளையையும் விட்டு விட்டிருக்கிற அந்தப் பாதனுக்கு மிருகஜாதியான அந்த மான் குட்டியினிடத்திலே வாற்சல்லிய முண்டாகுமா? இந்தப் பிரகாரம் விக்கினத்தினாலே யோக அப்பியாசத்தை விட்டவனாயும், அந்த மான் குட்டியை வளர்க்கிற இந்த வியாபாரத்தினாலே ஆத்ம சிந்தையையும் விட்டவனாயுமிருக் கிற அந்த ராஜரிஷியான பாதனுக்குத் தாண்டக் கூடாத தாயும் மகா வேகத்தை யுடையதாயுமிருக்கிற மாண கால மானது சம்பவித்தது. அந்தச் சமயத்திலும் தான் பரிவோடு வளர்த்த அந்த மான் குட்டியினிடத்திலே வைக்கப்பட்ட

மனைதை யுடையவனுய் அந்தப் பாதனுனவன் இந்த லோகத்தை விட்டு பூர்வஜன்ம ஞானத்தை யுடையவனுய், அஞ்ஞானியைப் போல வேறொரு ஜன்மமாகிற மிருக சரீரத்தை யடைந்தான்.

அந்த மிருக ஜன்மத்திலும் பகவதாராதனத்திலே யுண்டாயிருந்த இச்சையினுல் மிகவும் பசிதாபத்தையுடையவனுய்த் தனக்குத்தானே இவ்விதம் சிந்திக்கலாயினன்: நான் ஏன் இக்கஷ்ட தசையை யடைந்தேன்? ஆத்ம நிஷ்டர்களுடைய மார்க்கத்தில் நின்றும் ஏன் பிரஷ்டனுய் விட்டேன்? சகல சங்கத்தையும் விட்டவனுயும் நிர்ஜனமாயும் மகா புண்ணிய மாயுமிருக்கிற ஆரணியத்தை யடைந்தவனுயும், பரமாத்துமாவினிடத்திலே நிஷ்டையை யுடையவனுயுமிருக்கிற என்னுடைய மனதானது சர்வ பிராணிகளுக்கும் ஆத்மாவாயும் பகவானுயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே ஆசக்தியை யுடையதாயிருந்தும் மான்குட்டியை அனுவர்த்தித்ததே யென்று இந்தப் பிரகாரம் சொல்லி, மிகவும் வைராக்கியத்தை யுடையவனுய்த் தன்னுடைய மாதாவான மிருக ஸ்திரீயை விட்டுவிட்டுத் தன் ஜன்மபூமியான காலஞ்சன மென்கிற தேசத்தைவிட்டுத் திரும்பவும் ரிஷிகணங்களுக்கு இஷ்டமாயும் பகவத் க்ஷேத்திரமாயு மிருக்கிற புலஸ்திய புலகாசிரமமான சாளக்கிராம க்ஷேத்திரத்தை யடைந்தான். அந்தச் சாளக்கிராம க்ஷேத்திரத்திலும் அந்த மிருக ஜன்மத்தினுடைய ஒழிவு காலத்தைப் பார்த்துக்கொண்டு விஷய சங்கத்தில் மிகவும் நொந்தவனுய் ஒருவனுகவே சஞ்சரித்தும் உலர்ந்த சருகு புல் கொடி முதலானவைகளைப் பக்ஷித்துக் கொண்டும் அந்த மிருக ஜன்மத்துக்குக் காரணமான கர்மத்தினுடைய ஒழிவையே சிந்தித்துக் கொண்டுமிருந்த அந்த மிருக ரூபியாயிருக்கிற பாதனுனவன் அந்த மிருக சரீரத்தையும் விட்டுவிட்டான்.



## ஒன்பதாவது அத்தியாயம்



*பரதன் மிருகமாய்ப் பிறந்து திரும்பவும் கர்மக்ஷபத்திலே உன்மத்த பிராமணனுய்ப் பிறந்து, பத்திர காளிக்குப் பலியாகும்போதும் நிர்விகாரனு யிருந்து, அவளால காக்கப் பட்டமை சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் பரிக்ஷித்தே! மிருக ஜனனம் போனபிறகு, அங்கிரச கோத்திரத்திலே பிறந்தவர்களுக்குள்ளே சிரே

ஷ்டனும், அதிதிபூசை, பொறுமை, கர்மானுஷ்டானம்' ஆத்தும ஞானம், இவைகளுடனே கூடினவனுயுமிருக்கிற ஒரு பிராமண சிரேஷ்டனுக்குத் தனக்குச் சமானமான சாஸ்திரம், சீலம், சௌசம், ஆசாரம், ரூபம், ஔதாரியம் முதலான குணங்களை யுடையவர்களான ஒன்பது பிள்ளைகள் பிறந்தார்கள். அந்தப் பிராமண சிரேஷ்டனுக்கே வேறொரு கனிஷ்ட பாரியையினிடத்திலே ஒரு பெண்ணும் பிள்ளையும் இரட்டையாய்ப் பிறந்தார்கள். அவ்விருவர்களிலே ஆண் பிள்ளையாய் ஜனித்தவன், மிருக ஜன்மத்தை யொழித்த பரதனுவான். அந்த விப்பிர ஜன்மத்திலும் தன்னுடைய ஜனங்களுடைய சகவாசத்தில் நின்றும் பயந்தவனுகி, பகவானுடைய சரணுரவிந்த யுகளத்தை மனதிலே நினைத்துக் கொண்டு, பகவதனுக்கிரகத்தினுல் பூர்வ ஜன்ம ஞான முடையவனுய், அந்த ஜன்மத்தினுடைய ஒழிவையும் எண்ணினவனுய்த் தன்னை ஜனங்களுக்குப் பைத்தியக்காரன் போல் தோற்றுவித்துக் கொண்டிருந்தான். பிதாவான அந்தப் பிராமணன் அந்தப் பிள்ளைக்குப் புத்திரவாற்சல்லியத்தை யுடையவனுய் அத்தியயனம் பண்ணிவைத்து, கடைசியில் பண்ணத்தக்கதான சமாவர்த்தன கர்ம பரியந்தங்களான சமஸ்காரங்களை யதா சாஸ்திரமாக உபநயனம் பண்ணப்பட்ட அந்தப் பிள்ளைக்குத் திரும்பவும் சௌசம் முதலான கரும நியமங்களையும், புத்திரனுக்கு இஷ்டமில்லாமலிருந்தாலும் தகப்பனண்டையிலிருந்து சகல ஆசாரங்களையும் பிள்ளை சிட்சிக்கப்பட்டவனுக வேண்டுமென்கிற சாஸ்திரத்தையறிந்து சிக்ஷைபண்ணி வைத்தான்.

அந்தப் பிள்ளையும் பிதாவினுடைய சன்னிதானத்திலே தகப்பன் அருவருத்து விட்டுவிடும்படிக்குக் கர்மங்களை ஒன்று சொல்ல ஒன்றைச்செய்துகொண்டு வித்தியாசம் பண்ணிக் கொண்டிருந்தான். திரும்பவும் வேதங்களைச் சொல்லிவைக்க வேண்டுமென்று தகப்பனுனவன் வியாகிருதி பிரணவங்களுடனே கூடினதாயும், மூன்று பாதங்களையுடையதாயுமிருக்கிற காயத்திரியை சைத்திராதி சிராவணமாத பரியந்தஞ் சொல்லிவைத்தும், அந்தப் பிள்ளையானவன் அவ்வளவு காலத்திலேயும் அந்த காயத்திரியைக் கிரகியாமற் போய்விட்டான். இந்தப் பிரகாரம் ஆத்ம பூதனுன தன் பிள்ளையினிடத்திலே பிரீதியினுலே வைக்கப்பட்ட சித்தத்தையுடையவனுய், அந்தத தகப்பனுனவன் சௌசம், அத்தியயனம், விரத நியமங்கள், குருசிசுருஷை, அக்கினி சிர்ஷை முதலான பிரமசாரி செய்யத்தக்கவையான கர்மங்களைப் புத்திர

னுக்கு அசம்மதங்களாயிருந்தாலும், அந்தப் பிள்ளைக்கு நன்றாக சிக்ஷை சொல்லிவைத்தும், புத்திரனாலே மனோ ரதத்தை யடையாதவனாய் ஆயுள் வரைக்கும் கிருகத்திலேயே உழைத்தவனாய் மரித்தான். பிறகு அந்த பிராமணனுடைய கனிஷ்டபாரியையும், தன்னுடைய கர்ப்பத்திலே பிறந்த அந்தப் பிள்ளையையும் பெண்ணையும் சக்களத்திகையிலே ஒப்புவித்துத் தான் அனுமரணத்தினாலே பதிசாலோக்கி யத்தை யடைந்தாள். தகப்பன் போய்விட்ட பிறகு இந்தப் பரதனுடைய பிரபாவத்தை யறியாதவர்களாயும் வேதத்திலே கருமகாண்டத்திலேயே சிரமப்பட்டவர்களாயும், பிரமவித் தையை அறியாதவர்களாயுமிருக்கிற அவனுடைய பந்துக் கள் இந்தப் பரதனைப் பைத்தியக்காரனென்று எண்ணினவர் களாய் அவனை கழனிகளைக் காக்கும்படி சொல்லினர்.

அந்தப்பரதனும் பிராகிருதரான மனுஷிய பசுக்களி னாலே எந்தெந்த வேளைகளிலே பைத்தியக்காரனென்றும், மூடனென்றும், செவிடனென்றும், சொல்லப்படுகிறானோ, அந்தந்தவேளையிலே மூடனைப்போலவும், பைத்தியக்காரனைப் போலவும், செவிடனைப்போலவும் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருப்பான். பிறராலே பலாத்காரமாக ஏவப்பட்ட வனாய்ப் பல காரியங்களைச் செய்வான். செய்யப்பட்ட காரியங் களுக்குக் கூலியாகக் கிடைக்கும் அன்னம் அல்பமாயிருந் தாலும். வெகுவாயிருந்தாலும் அதையே பட்சிப்பான். வாசனை ருசிகளைப்பார்த்து பக்ஷிக்கிறதில்லை. மானம் அவ மானங்களினாலுண்டான சுகதுக்கங்களினாலே தேகாபிமான மில்லாதவனாயும், அழுக்கடைந்திருக்கிற கந்தையை அரை யிலே தரித்துக் கொண்டிருக்கிறவனாயும், மிகவும் கறுத்திருக் கிற எக்கியோபவீதத்தினாலே பிராமணனென்றும், செய்கை யினாலே பிராமண அதமனென்றும் இந்தப் பிரகாரம் தன்னு டைய அறியாத சின்னங்களினாலே அவமானம் பண்ணப் பட்டவனாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தான்.

பிற்பாடு ஒருக்கால் ஒரு சூத்திரன் தனக்குப் புத்திரன் வேண்டுமென்று பிரார்த்தனை பண்ணிக்கொண்டு பத்திர காளிக்கு ஓர் புருஷனாகிற பசுவைப் பலிகொடுக்க நினைத்து ஒருவனைக் கொண்டுவர, அந்தப் புருஷன் அர்த்தராத் திரியில் தெய்வபலத்தினாலே தப்பித்துக்கொண்டு போய் விட்டான். அந்தச் சூத்திரனுடைய படர்கள் தப்பித்துக் கொண்டுபோன அவனைத் தேடிக்கொண்டு வருகிறபோது அகஸ்மாத்தாய் ஒரு இடத்திலே பரண்போட்டு, அதிலே

யிருந்துகொண்டு காட்டுப்பன்றி முதலிய மிருகங்கள் வந்து விளைச்சலை அழித்து விடாமல் ரக்ஷித்துக்கொண்டிருக்கிற பாதனைப் பார்த்து, அந்த சோரர்கள் சர்வலக்ஷணங்களோடே கூடிய இவனே நமது யஜமானனுடைய கர்மபூர்த்திக்குத் தகுந்தவனென்றெண்ணி மலர்ந்த முகத்தையுடையவர்களாகி அவனைக் கயிற்றிலே நன்றாகக் கட்டிக்கொண்டு, காளி கோயில் சமீபத்திலே வந்து பரதனை ஸ்நானம் பண்ணு வித்து, நூதன வஸ்திரத்தை உடுத்து, நல்ல சந்தனம் புஷ்ப மாலை திலக முதலானவைகளினாலே அலங்கரித்து, மிருஷ் டான்ன போஜனஞ் செய்வித்து, அவனை தூபம் தீபம் மாலை கள் பொரிகள் துளிர்கள் அங்குரங்கள் பலங்கள் முதலான பூஜாதிரவியங்களுடன் மகத்தாகிய பலிகொடுக்கிற விதி யுடனே நிர்த்த கீதங்கள் மத்தளங்கள் பேரிவாத்தியங்கள் இவைகளுடனே அந்தப் பத்திரகாளியினுடைய எதிரே நிறுத்தினார்கள். பிறகு அந்தச் சூத்திரனுக்குப் புரோகித னை சோரனும் அந்தப் புருஷபசுவினுடைய இரத்தமாகிற மத்தியத்தினாலே அந்த பத்திரகாளியைத் திருப்திசெய்து வைக்கவேண்டுமென்று எத்தனித்தவனாய், காளிமந்திரத்தி னாலே தீக்ஷணமாயும் குரூரமாயுமிருக்கும் ஒரு கத்தியைத் தன் கையிலே யெடுத்தான். இந்தப்பிரகாரம் ராக்ஷச தர்ம சுபாவத்தை யுடையவர்களாயும், மதத்தினாலே மிகவும் கர்வத்தை யடைந்த மனதையுடையவர்களாயும் சுயேச்சை யாய்க் கொக்கரித்து, லீலைகள் பண்ணிக்கொண்டு இம்சையே விளையாட்டாக வுடையவர்களாயு மிருக்கிற சோரர்களான சூத்திரர்களுடைய மகா குரூரமான யாதொரு கர்மங்களைப் பிரமநிஷ்டனையும் சாக்ஷாத் பிரமரிஷியினுடைய புத்திர னையும், வைரமில்லாதவனையும், சகல பிராணிகளுக்கும், சுகுர்த்தாயும், தன்னுடைய இம்சையிலே சந்துஷ்டனாயு மிருக்கிற அந்தப் பரதனுடைய இப்சாரூபமான அந்தக் கருமத்தைப் பார்த்து, சகிக்கக்கூடாமலிருக்கிற அவரது பிரமதேஜஸினால் தகிக்கப்பட்ட சரீரத்தை யுடையவளாகி, அந்தப் பத்திரகாளியானவள் சீக்கிரமாக அந்த பிம்பத்தில் நின்றும் வெளிப்பட்டு, அந்தச் சோரர்கள் பண்ணின அபராதத்தைச் சகியாதவளாய், மிகவுங் கோபாக்கினியி னாலே தகிக்கப்பட்டவளாய், மிகவும் வேகத்தினால் நெறிக் கப்பட்ட புருவங்கள், கோரைப்பற்கள், சிவந்த கண்கள் இவைகளின் ஆர்ப்பாட்டத்தினாலே பயங்கரமான முகத்தை யுடையவளாய், இந்த ஜகத்தைச் சங்காரம் பண்ணுகிறவள் போல அட்டகாசம் பண்ணிக்கொண்டு, கோயிலைவிட்டு வெளிப்பட்டு, பாபிகளாயும் துஷ்டர்களாயு மிருக்கிற அந்தச்

சோரபடர்களுடைய சிரசுக்களை அந்தக் கத்தியினாலேயே சேதித்து, அவர்கள் கழுத்திலிருந்து பெருகும் அதிஉஷ்ணமான ரத்தத்தைத் தன்னுடைய பூதகணங்களுடனே பானம் பண்ணி, அதிகமான அந்த இரத்தபானத்தினால் உண்டான மதத்தினாலே உடம்பு தெரியாதவளாய் மிகவுந் தன்னுடைய சேனைகளுடனேகூட கானம் பண்ணிக்கொண்டு அந்தச் சிரசுகளாகிற பந்துகளாலே விளையாடினாள்.

ராஜாவே! இப்படித்தான் விஷ்ணு பக்தர்களான மகத்துக்களிடத்திலே பண்ணின அபராதம் தன்னிடத்திலேயே பலிக்கும். தேகாதியிலே ஆத்துமபுத்தியை விட்டவர்களாயும், சகல பிராணிகளுக்கும் சுகுர்த்தான ஆத்மாவையுடையவர்களாயும், துவேஷமில்லாதவர்களாயும், சக்கராயுதரான பகவானுடைய கிருபையாலே பத்திரகாளிமுதலான க்ஷுத்திர தெய்வங்களால் ரக்ஷிக்கப்படுகிறவர்களாயும், பகவானுடைய பாதாரவிந்தங்களை ஆசரித்தவர்களாயுமிருக்கிற பாகவதோத்தமர்களுக்கு எந்தவேளையிலும் பயம் விசனம் முதலியவையிராது.



## பத்தாவது அத்தியாயம்



*பரதரை பல்லக்கு சுமக்கும் ஏவலாளாகப் பணித்துக்கொண்டு,*
*பிறகு அவரை பிரம நிஷ்டரென்று தெரிந்துகொண்ட*
*ரகுகுணனுடைய உபாக்கியானம்*
*சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்தே! சிந்துசவ்வீர தேசாதிபதியான ரகுகுணன் கபிலமகாரிஷி ஆசிரமஞ் செல்வதற்காகச் சிவிகையாட்களுக் கெல்லாம் எஜமானனவன் பல்லக்கு சுமக்கச் சிவிகையாட்களைத் தேடுகிற சமயத்தில் இக்ஷுமதி யென்கிற நதிதீரத்தில் இந்தப் பரதரானவர் தேவாதீனமாய் அகப்பட்டு, அவனாலே கிரகிக்கப்பட்டார். பருமனும் திடமான சரீரத்தை யுடையவராயு மிருப்பதனாலே எருதுபோலவும் கழுதைப்போலவும் சுமையை எடுக்கத் தக்கவனாக எண்ணிக்கொண்டு, முன்னாலே பல்லக்கு எடுக்கிற சிவிகையாட்களுடனே பலாத்காரமாய்ப் பிடித்துச் சேர்க்கப்பட்டவராய், அந்தப் பல்லக்கை யெடுக்க அயோக்கியரானாலும் மகானுபாவரான அந்த ஜட—

பரதர் இரண்டு அம்பு அளவான பூமியை முன்னே பார்த்துக் கொண்டு பிறகு அடியெடுத்து வைத்து நடக்கிறபடியினாலே அந்தப்பல்லக்கு எடுக்கிற சிவிகையாட்களுடைய நடைக்குச் சரியில்லாமற் போனபோது, அந்த ராஜாவானவன் வித்தியாசமாய்போகின்ற தன்னுடைய சிவிகையாட்களைப்பார்த்து, செவ்வையாய்ப் பல்லக்கை யெடுத்துக்கொண்டு போங்கள். ஏன் இந்தப்பிரகாரம் பல்லக்கானது வித்தியாசமா யெடுக்கப் படுகிறதென்று வெறுத்துச் சொன்னான். அந்த ராஜாவினுடைய வார்த்தையைக் கேட்டு, பயப்பட்டவர்களாய் அந்தச் சிவிகையாட்கள் ராஜாவைப் பார்த்து, மகாராஜனே! உம்முடைய ஆக்கினைப்பிரகாரம் நடக்கிற நாங்கள் உடம்பு மறந்தவர்களாய், செவ்வையாக நடவாமலிருக்கவில்லை. நாங்கள் செவ்வையாகவே எடுத்துக்கொண்டுபோகிறோம். ஆனாலும் இப்போது பல்லக்கு எடுக்க ஏவப்பட்ட இந்தப் புருஷன் சீக்கிரமாக எடுத்துக்கொண்டு நடக்கவில்லை. இவனுடன்கூட நாங்கள் பல்லக்கு எடுக்கக் கூடவில்லையென்று மகா தைரியத்துடனே சொல்லுகின்ற சிவிகையாட்களுடைய வார்த்தையைக்கேட்டு, இந்தப் பல்லக்குசெவ்வையாய் நடவாமலிருக்கிற தோஷம் சகவாசத்தினால் வந்ததே, அது நிச்சயம். ஒருவனுடைய தோஷமே யெல்லாரையும் பீடிக்கிறதென்று நிச்சயித்தவனாய், அந்த ரகுகுணனென்கிற ராஜாவானவன் பெரியவர்களுடனே சகவாசம் பண்ணி யிருந்தாலும் அந்த ராஜ சுபாவத்தை விடாமல், கொஞ்சங் கோபத்தை யுடையவனாய், நீறுபூத்த நெருப்பைப்போல் தெரியப்படாமலிருக்கிற பிரம தேஜஸை யுடையவரான அந்த ஜடபரதரைப் பார்த்து, தம்பி! இது என்ன கஷ்டம்! என்ன ஆச்சரியம்! மிகவும் இளைப்பை யடைந்தாய். வெகுநேரம் ஒருவனாகவே இந்தச் சுமையை சுமந்தாய். நீ மிகவும் பருத்திருக்கவில்லை. நீ திடமான சரீரத்தை யுடையவனுமன்று. வார்த்திகத்தினாலே மிகுதியும் பீடிக்கப்படுகிறாய். இந்தச் சுமையை எடுக்கிறதற்கு வேறு ஒருத்தருமில்லையே யென்று வெறுப்பினாலே சொல்ல, அஞ்ஞானத்தினால் செய்யப்பட்ட பிருதிவியாதி பூதங்கள், இந்திரியங்கள், புண்ணிய பாபமான கர்மங்கள் மனது இவைகளையுடைய தன்னுடைய கடைசியான அந்தச் சரீரத்திலே நான் எனதென்கிற அபிமான மில்லாதவராகியும், பிரமபூதராயு மிருக்கிற அந்த ஜடபரதரானவர், அந்த ராஜா சொன்னதற்கு உத்தரவு ஒன்றும் சொல்லாமல், முன்போலவே பல்லக்கைச் சுமந்தார். திரும்பவும் அந்தப் பல்லக்கு வித்தியாசமாய்ப் போகிறதைப்பார்த்து மகாகோபத்தை யடைந்தவனாய், அந்த ராஜா, அடா

தம்பி! இது என்ன? நீ பிராணனுடனே யிருக்கும் போதே மரித்தாய். ராஜாவான என்னையும் அப்பிரயோசகனு யெண்ணி என்னுடைய ஆக்கினையுந்தள்ளி நடக்கிறாய். உடம்புதெரியாமல் நடக்கிற உன்னைத் தண்டனை பண்ணுகிறேன். தண்டிக்கப் பட்டவனாய்ப் பிறகு சுபாவத்தை யடைந்து நடப்பாயென்று, இந்தப் பிரகாரம் வெகு விதமாய் அபத்தங்களைச் சொல்லியும் ராஜாவென்னும் அகங்காரத்தை யடைந்தும் ராஜச தாமசங்களினாலுண்டான கர்வத்தினாலே பாகவதர்களைத் திரஸ்கரித்தும், தானே சர்வஜ்ஞனென்றும் எண்ணிக்கொண்டிருக்கிற அந்த ராஜாவைப் பார்த்து, பிரம பூதராயும் பகவானாயும் கர்வமில்லாதவ ராயுமிருக்கிற அந்த ஜடபாதரானவர் புன்சிரிப்பை யுடையவராய் யோகிகளுடைய நடத்தையிலே பரிசயம் பண்ணாத புத்தியையுடைய அந்த ராஜாவுக்குச் சொல்லுகிறார்.

வாராய் ராஜாவே! இளைப்பு முதலானது ஒன்றுமில்லையென்று உன்னாலே சொல்லப் பட்டது. அது எதார்த்தமே. கபடமாய்ச் சொல்லப்பட்ட தன்று, பாரமென்கிறது ஒன்று உண்டாயிருந்தால் அந்தப் பாரத்தை எடுக்கும் தேகத்தை யுடைய எனக்கும் பாரமுண்டாம். அதுவே இல்லையல்லவா? நடக்கிறவனுக்கு அடையத்தக்க இடம் ஒன்றுண்டா யிருந்தால் மார்க்க மென்கிறதும் ஒன்றுண்டா யிருக்கும். அப்போது அது எனக்கும் உண்டாம். நீ மிகவும் பருத்திருக்க வில்லையென்று உன்னால் சொல்லப்பட்டது. பிருதிவி முதலான பூதங்களின் கூட்டமான சரீரத்திலே பருத்திருக்கிறது என்கிற சப்தம் சொல்லப்படுகிறது. ஆத்மாவிலே சொல்லப்படுகிறதில்லை. ஆகையினால் நீ மிகவும் பருத்திருக்க வில்லையென்று சொன்னது எதார்த்தமே. பருத்திருக்கை, இளைத்திருக்கை, மனோவியாதிகள், தேகத்திலேயுண்டான வியாதிகள். பசி, தாகம், பயம், கலகம், இச்சை, வார்த்திகம், நித்திரை, பிரீதி, கோபம், அகங்காரத்தினாலே யுண்டாகிறமதம், இவைகளெல்லாம் தேகாபிமானத்தை யுடையவனுக்கே உண்டு. தேகாபிமானமில்லாத எனக்கு இவைகள் ஒன்றுமில்லை. ராஜனே! பிழைத்தும் செத்தவனா யிருக்கிறாயென்றனை. இது எனக்கு மாத்திரமன்று. ஜன்ம நாசங்களை யுடைய தானபடியாலே சிருஷ்டிக்கப்பட்ட சகல பிரபஞ்சத்துக்கும் உண்டாயிருக்கிறது. உன்னைத் தண்டிக்கிறேனென்று யாதொன்று சொன்னாயோ, அதுவும்

ராஜாவென்கிறதும் சேவகனென்கிறதும் ஒருவனிடத்திலே நிலையா யிருப்பதானால் அப்போது தண்டிப்பே னென்றும், தெண்டிக்கப் படுவாயென்றும் சொல்வது யுக்தமாயிருக்கும். ராஜாவென்றும், அன்னியனென்றும் வேறு வேறானாலும் நான் ராஜாவாயிருக்கிற மட்டுக்கும் உன்னைத் தண்டிக்கத் தகுமென்று சொன்னாலும், ராஜாவென்றும் அன்னிய னென்றும் எண்ணும் இந்தப் புத்தி விகாரத்தை விட்டால் வேறேயொரு ஹேது கொஞ்சமாகிலும் காணப்படவில்லை. ராஜா என்னப்பட்டவனார்? சேவகனென்னப் பட்டவனார்? இதைத் தெரியச்சொல்லு. நானே ராஜா, இவர்களே சேவகர் என்கிற அபிமானம் உனக் கிருந்ததேயானால் நான் உனக்குச் செய்யவேண்டிய தென்ன? அதைச் சொல்லக் கடவாய். உன்மத்தனைப்போலும், மூடனைப்போலும், ஊமை யைப்போலும், பூதனாயுமிருக்கிற எனக்கு உன்னாலே செய் யப்பட்ட தண்டனையினால் ஆகவேண்டிய தென்ன இருக் கிறது? நான் உடம்பு மறந்து மத்தனா யிருக்கிறவனென்று என்னை நீ நிச்சயித்தாலும் உன்னாலே செய்யப்படுகிற சிக்ஷை அரைத்தமாவையே அரைக்கிறப்போலே வியர்த்த மாகும். சுபாவமாய் ஜடனாயிருக்கிறவன் சிக்ஷையினாலேயும் சமர்த்தனாகச் செய்யப் படமாட்டா னல்லவா வென்று, உத்தமவு சொன்னவராய், சாந்தியே சீலமாக வுடையவராய், தேகத்துக்கு நிமித்தமான அஞ்ஞான மில்லாதவராயிருக்கிற அந்தப் பரத முனியானவர் பிராரப்த கர்மத்தை அனுபோ கத்தினால் நாசம் பண்ணுவித்துக்கொண்டு அந்தப் பல்லக்கை முன்போலவே சுமந்துகொண்டு நடந்தார்.

பரிக்ஷித்தே! அந்த சவ்வீர தேசாதிபதியாயும், மிகவும் சிரத்தையாலே தத்துவத்தை யறியவேண்டு மென்கிற இச்சையாலே அதிகாரத்தை யுடையவனாயுமிருக்கிற அந்த ரகுகுணனானவன், யோக சாஸ்திரங்களுக்குச் சம்மத மாயும், மனதிலுள்ள சமுசயத்தைப் போக்கடியா நின்று மிருக்கிற, அந்த பரதனுடைய வார்த்தையைக்கேட்டு, சீக்கிர மாகப் பல்லக்கைவிட்டிறங்கி, சாஷ்டாங்கமாக அவருடைய பாதாரவிந்தங்களிலே வணங்கி நமஸ்கரித்து ராஜாவென் கிற அபிமானத்தை விட்டுச் சொல்லுகிறான். ஐய! நீர் ஆரோ? அறியப்படாத மகிமையுடையவராய்ச் சஞ்சரிக் கிறீர். எக்கியோப வீதத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறீர். தத்தாத்திரேயர் முதலான பிராமணர்களுக்குள்ளே அவதூத ராயிருக்கிற நீர் ஆர்? ஆருடைய புத்திரர்? எங்கே யிருக் கிறவர்? இங்கே என்ன காரியமாய் வந்தீர்? என்னுடைய

க்ஷேமத்தின் பொருட்டாக வந்தீரோ? கபிலமகாரிஷியோ நான் கேட்டதற்கு உத்தரவை அனுக்கிரகம் பண்ணவேண்டும். நீர் சங்கத்தை விட்டவராயும், ஜடன்போலே மூடப்பட்ட ஞான பிரபாவத்தை யுடையவராயும், அளவில்லாத மகிமையுடையவராயும் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறீர். யோகசாஸ்திர சம்மதமான உம்முடைய வார்த்தைகள் என்னுடைய மனதிலே அறியத்தகுந்தவை, நாமே யோகேசுவரராயும், ஆத்தும தத்துவத்தை யறிந்த ரிஷீசுவரர்களுக்குள்ளே சிரேஷ்டராயும், சாக்ஷாத் அரியினுடைய ஞான அம்ஸாவதாரமாயுமிருக்கிற கபிலமகாரிஷியை இந்தச் சமுசாரத்திலே எது ரக்ஷகமாயிருக்கிற தத்துவமோ? அந்தந் தத்துவத்தைக் கேட்க வேண்டுமென்று புறப்பட்டேன். பகவானுன அந்தக் கபில மகா ரிஷி தாங்கள் தானே? லோகத்தினுடைய கதியைப் பார்க்க வேண்டுமென்று தெரியப்படாத மகிமையையுடையவராய்ச் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறீரோ? கிருகாதிகளிலே ஆசக்தியை யுடையவனும் மூட புத்தியாயுமிருக்கிற என்னைப்போன்ற ஜனனமானது யோகீஸ்வரர்களுடைய கதியை எப்படி யறியும்? எனக்கு யுத்தம் முதலான கர்மத்தினாலே சிரமம் எப்படி காணப்படுகிறதோ, அப்படியே இந்தப்பல்லக்கை யெடுத்துக்கொண்டு நடக்கும் உமக்கும் சிரம முண்டாயிருக்குமென்று எண்ணுகிறேன். எனக்கு சிரமமில்லையென்று எப்படி சொல்லுவீர். விவகார மாத்திரமேயல்லாமல் பரமார்த்தமாக வில்லையென்று சொல்லுவீரேயாகில், பிரபஞ்சத்தைத் தானதர்மாதி காரியத்தோடே கூடியிருக்கிறபடியினாலே சத்தியமென்றே சொல்லவேண்டும்.

அக்கினியினாலே தபலை தபிக்கப்பட்டால் தபலைக்குள்ளே யிருக்கிற ஜலமும் தபிக்கப்படுகிறது. ஜலத்தினுடைய தாபத்தினால் அதுக்குள்ளே யிருக்கிற அரிசிகளும் தபிக்கப்படுகின்றன. அரிசியிலே தாபம் உண்டானதினால் அதனுடைய கர்ப்பத்துக்கும் தாபமுண்டாகிறதன்றோ? இதிலே ஒன்றும் அபத்தமில்லையே. இப்படிதானே வெய்யில் முதலானவைகளினாலே தேகம் தபிக்கப்பட்டால், பிறகு தேகத்தினுண்டான இந்திரியங்களிலும் தாபமுண்டாகிறது. அந்த இந்திரியங்களின் தாபத்தினால் பிராணனிடத்திலே தாபமுண்டாகிறது. பிராணனுடைய தாபத்தினால் மனதிலும் தாபமுண்டாகிறது. மனதினுடைய தாபத்தினால் அதிலேயிருக்கிற ஆத்மாவுக்குத் தாபமில்லாமற்போகுமா? எப்போது எவன் ராஜாவாயிருக்கிறானோ, அப்போது அவன் பிரஜைகளுக்குத் தண்டநாயகனாகியும் ரக்ஷகனாயுமிருக்கிறான்.

யாதொருத்தன் அச்சுதனுடைய பக்தனே அவன் வியர்த்த மான காரியத்தைச் செய்கிறதில்லை. அந்த பகவத்பக்தனானவன் சுதர்மானுஷ்டானமாகிற பகவதாராதனத்தைச் செய்துகொண்டு சகல பாபத்தில் நின்றும் விடுபடுகிறான். ஆகையினால் ராஜாவென்கிற அகங்காரத்தினாலே பெரியோர்களை நிராகரிக்கின்ற எனது சிநேக திருஷ்டியினால் சத்துக்களுடைய அவமான பாபத்தைத் தாண்டுவேனே, அதை அனுக்கிரகிக்கக்கடவீர். சகலபிராணிகளுக்கும் சுகுர்தராயும், சகாவாயும், தேகாபிமான மில்லாதவராயு மிருக்கிற உமக்கு சர்வத்திர சமதிருஷ்டியா யிருக்கையினால், என்னுடைய அனாதரவினால் ஒரு விகாரமுமில்லை. ஆனாலும் தன்னாலே செய்யப்பட்ட பெரியோர்களுடைய அவமானத்தினால் என்னைப்போன்ற ஜனனமானது சீக்கிரமாக நசித்துப் போகுமல்லவா? ஆகையினாலே என்னிடத்திலே அனுக்கிரகம் பண்ணக்கடவீர்.



## பதினொன்றாவது அத்தியாயம்



*ரகுகுண ராஜாவுக்கு சடபரதமுனி பரமமான ஆத்மஞானத்தை உபதேசித்தமை சொல்லப்படுகின்றது.*

### சடபரதர் வாக்கியம்

அரசனே! நீ அவித்துவானா யிருந்தாலும் வித்துவான்களுடைய வாதத்துக்குத் துல்லியமான வார்த்தைகளைச் சொன்னாய். சுவாமியின் பிருத்தியாதி லௌகிக விவகாரத்தை நீ சத்தியமாகச் சொன்னதனாலே நீ தத்துவத்தை யறிந்தவர்களுக்குள்ளே சிரேஷ்டனன்று. வித்துவான்கள் இந்த லௌகிக விவகாரத்தைத் தத்துவவிசாரத்தோடு சொல்லார்கள். ராஜாவே! அப்படியே அதிகமாயும், கிருகஸ்தாசிரம சம்பந்தமாகியும் இருக்கிற யோக்கிய சமூகங்களையுடையதான வித்தையினால் மிகவும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற கரும காண்டமான வேதங்களிலேயும் பாகாதி சூனியமாயும் இச்சாதி சூனியமாயு மிருக்கிற இந்த ஆத்தும தத்துவமானது பிரகாசிக்கிறதில்லை. எந்தப் புருஷனுக்குச் சொப்பன திருஷ்டாந்தத்தினாலே கிருகஸ்தாசிரம சௌக்கியமானது பரமார்த்தம் அல்லவென்று அறியப்பட்டதாக வில்லையோ, தத்துவமான அர்த்தத்தை உபதேசிக்கிறதினாலே சமர்த்தங்களான வேத

வாக்கியங்களும் அந்தப் புருஷனுக்குத் தத்துவஞானத்தைப் போதிக்கமாட்டா. புருஷனுடைய மனதானது எப்போது சத்துவ - ரஜஸ் - தமோ குணங்களினாலே வசீகரிக்கப்பட்டதாகிறதோ, அப்போது தட்டுத்தடையில்லாமல் இருந்து கொண்டு ஞானேந்திரிய கர்மேந்திரியங்களிலே புண்ணியத்தையும் பாபத்தையும் பண்ணுகிறது. கர்மவாசனையுடனே கூடினதாயும், சப்தாதி விஷயங்களிலே ஆசக்தியுடையதாயும், சத்துவாதி குணங்களிலே எங்கும் பிரவர்த்திக்கப்பட்டதாயும், காமாதி விகாரங்களை யுடையதாயும், ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் பூதமாத்திரைகள் இவைகளுக்குள்ளே சிரேஷ்டமாயுமிருக்கிற அந்தமனதானது, வேறு வேறான பேர்களுடனே கூட தேவதிரியக்காதி சரீரபேதத்தைத் தரித்துக்கொண்டு, அந்தச் சரீரங்களினாலே உத்கிருஷ்ட நிக்ருஷ்டத்தைப் புருஷனுக்குப் பண்ணுகிறது. சமுசார சக்கரத்துக்குக் காரணமான அந்த மனதானது, ஜீவனுக்கு மாயையினால் செய்யப்பட்ட உபாதிசரீரமாயிருந்துகொண்டு ஜீவனை ஆசரித்துக்கொண்டு, துக்கரூபமாயும், சுகரூபமாயும், மோகரூபமாயும். பரிகரிக்கக் கூடாமலும், அந்தந்தக் காலங்களிலே சம்பவித்துக் கொண்டுமிருக்கிற கர்மபலத்தை யுண்டாக்குகிறது. பிரகாசித்துக் கொண்டும், சாக்கிர பிரபஞ்சரூபமாயும், சொப்பன பிரபஞ்சரூபமாயும், மனதினால் செய்யப்பட்டுமிருக்கிற நானென்கிற விவகாரமானது சர்வ காலமும் க்ஷேத்திரஜ்ஞனான ஜீவனுக்குக் காணப்பட்டதா யிருக்கின்றது. ஆகையினால் இந்த மனதையே ஜீவனுக்கு அபிமானரூபமான சமுசார ஏதுவாயும், அபிமான சூனியரூபமான மோக்ஷத்துக்கு ஏதுவாயும், சொல்லுகிறார்கள். இந்த மனதானது சப்தாதி குணங்களினாலே ஆசக்தியை யடைந்ததேயானால் ஜீவனுக்கு விசனரூபமான சமுசாரத்துக்கு ஏதுவாகிறது. அந்த சப்தாதி குணங்களில் ஆசக்தியடையாமலிருந்ததானால் மோக்ஷ ஏதுவாகிறது.

தீபமானது நெய்யிலே தூவைக்கப்பட்ட வர்த்தியை யடைந்து பிரகாசிக்கிறபோது புகையை யுடையதான சிகையை யடைகின்றது. நெய்யில்லாமலிருக்கின்ற வேளையில் ஸ்வரூபத்தை யடைகின்றது. அதுபோலே இந்த மனதும் சப்தாதி குணங்களையடைந்து, நானாரூபமான விரக்திகளை யடைகிறது. சப்தாதி குணங்களை அடையாமலிருக்கிற காலங்களிலே, நானாவித விரக்தி சூனியமாய் சொரூபநிஷ்டையை யடைந்திருக்கிறது. அந்த மனதுக்குக் கிரியா

காரங்களாய் ஐந்து விருத்திகளும், ஞானகாரங்களாய் ஐந்து விருத்திகளும், அகங்கார மென்னப்பட்டதாய் ஒன்றுமாக, பதினொரு விருத்திகளுண்டா யிருக்கின்றன அந்த விருத்திகளுக்கு ஆபத்திகளையும், இந்தச் சரீரத்தையுமாகப் பதினொன்றையும், விஷயங்களென்று சொல்லுவார்கள். கந்தம், ரூபம், ஸ்பரிசம், ரசம், சப்தம் இந்த ஐந்தும் ஞானேந்திரிய வழியாய் ஞானகாரங்களான மனோவிருத்திகளுக்கு விஷயங்கள். விசர்க்கம், ரதிக்கிரீடை, கமனம், வசனம், சில்பம், இந்த ஐந்தும் கர்மேந்திரிய வழியாய்க் கிரியாகாரங்களான மனோவிருத்திகளுக்கு விஷயங்கள் பதினொன்றும் விஷயமோ என்னதென்று நிரசிக்கப்பட்ட இந்தச் சரீரமென்று சொல்லப்படும். சிலர் அகங்காரத்தைப் பன்னிரண்டாவதான மனோவிருத்தி விஷயமென்று சொல்லுவார்கள். பூதபஞ்சகம் சப்தாதிவிஷயங்கள், சமஸ்காரம் புண்ணிய பாவரூபமான அதிர்ஷ்டம் கிரியா ஏதுவான காலம் இவைகளாலே பதினொரு விதமான மனதினுடைய விகாரங்கள், நூறு பிரகாரமாகவும், ஆயிரம் பிரகாரமாகவும், கோடிப் பிரகாரமாகவும், க்ஷேத்ரஜ்ஞனான ஈசுவரனாலே யுண்டாகின்றனவே யல்லாமல், சுபாவத்தினாலே அனேக ரூபமாயுண்டானவன்று ஒன்றினாலென்று அனேக ரூபங்களாயுண்டானவுமன்று. ஜீவனானவன், தனக்கு உபாதி சரீரமாயும், கர்த்தாவாயுமிருக்கிற மனதினுடைய சம்பந்தமான, ஜாக்கிர சொப்பனாவஸ்தைகளிலே நித்தியங்களாகப் பிரகாசியா நின்ற இந்தவிருத்திகளைப் பார்க்கிறான். சுழுத்தி அவஸ்தையில் பிரகாசியாமலிருக்கிற இந்த விருத்திகளைப் பார்க்கிறான் மனது நிர்விகாரமாயிருந்ததேயாகில் சுத்தமான ஆத்தும ஸ்வரூபத்தையே பார்க்கிறான். அந்த ஜீவனாலே யறியப்படா நின்ற அந்தப் பரமாத்துமாவானவர், ஜகத்காரணராயும், பரிபூர்ணராயும், ஸ்வயம்பிரகாசராயும், ஜன்மாதி சூனியராயும், பிராணாதி இந்திரியங்களுக்கு ஈஸ்வரனாயும், ஜீவாத்துமாவைச் சரீரமாகவுடையவராயும், ஷாட்குண்ணிய பரிபூர்ணராயும், சகல பிராணிகளுக்கும் ஆசிரமமாயும், சுவாதீனமான மாயையினால் ஜீவாத்துமாவினிடத்தில் நியந்தாவாயும் இருக்கிறார். எப்படி வாயுவானவன் ஸ்தாவரஜங்கமங்களான பிராணிகளுக்குப் பிராணரூபமாயிருந்து கொண்டு நியந்தாவாயிருக்கிறானோ, அந்தப் பிரகாரம் பகவானான வாசுதேவரும் ஜீவசரீரியாய் இந்தப் பிரபஞ்சத்திலே பிரவேசித்து நியந்தாவாயிருக்கிறார். வாராய் நரேந்திரனே! புருஷனானவன் விஷயசங்கத்தை விட்டு காமக்குரோதாதிகளை ஜயித்தவனாய் ஞானதையத்தினாலே இந்த மாய்கையை யுதறிவிட்டுப்

பரமாத்தும தத்துவத்தைப் பாராமல் எந்த மட்டுமிருக்கிருனே, அந்த மட்டும் இந்தச் சமுசாரத்திலே பிரமித்துக் கொண்டிருக்கிறுன். ஜீவனுக்கு உபாதி சரீரமான இந்த மனதை சம்சார தாபங்களுக்கு உற்பத்தி க்ஷேத்திரமாக எந்தமட்டும் அறியாமலிருக்கிருனே, அந்த மட்டும் சம்சாரத்திலே பிரமித்துக்கொண் டிருக்கின்றுன். அந்தக் காரணத்தினுலே இந்த மனதானது புருஷனுக்குச் சோகம் வியாதி ஆசை லோபம் வைரம் முதலானவைகளையும் மமதையையும் பண்ணுகிறது. ஆகையினுலே சத்துருவாயும் உபேட்சையாலே மகா வீரியத்தை யுடையதாயும், விருத்தியடையாநின்றும், அசத்தாயும், ஆத்தும துரோகியாயு மிருக்கிற அந்த மனதை நீ பிரமாதத்தை விட்டவனுய் ஆசாரியனுன ஸ்ரீ ஹரியினுடைய பாதாரவிந்த உபாசனையாகிற அஸ்திரத்தை யுடையவனுய் ஜயிக்கக்கடவாய்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



*மீண்டும் ரகுகுணன் கேட்ட சந்தேகங்களை ஜடபாதமுனிவர் நிவிர்த்திசெய்தமை சொல்லப்படுகின்றது.*

### ரகுகுணர் வாக்கியம்

பிராமஹேணுத்தமரே! லோகாக்ஷணர்த்தமான சரீரகராயும், ஸ்வானந்த பிரகாசத்தினுலேயே சரீரமில்லாதவராயும் அவதூத பிராமணவேஷத்தினுலே மறைக்கப்பட்ட பிரபாவத்தையுடையவராயு மிருக்கிற உமக்குப் பிரணமம். ஜ்வரமாகிற வியாதியினுலே பீடிக்கப்பட்டவனுக்கு மதுரமான ஔஷதம்போலும், வெய்யலிலே அடிப்பட்டவனுக்குக் குளிர்ந்த ஜலம்போலும், தேகாபிமானமாகிற சர்பத்தினுலே கடிக்கப்பட்டு விவேகமில்லாதவனுன எனக்கு உம்முடைய வசனமிர்தமானது உதவி புரிகின்றது.

வாரீர் பிரமநிஷ்டரே! எனக்குச் சந்தேகவிஷயமாயிருக்கிற அர்த்தங்களைப் பிற்பாடு கேட்கிறேன். இப்போது உம்மாலே சொல்லப்பட்ட வசனம், ஆத்துமஞானயோகத்தோடு கூடியிருக்கிறபடியினுலே, நன்ருக அறியப்படாமலிருக்கிறது. அது எப்படி நன்ருகத் தெரியவருமோ, அந்தப்பிரகாரம் ஆசையுடனே கூடின மனதையுடைய எனக்குச் சொல்லும். வாரீர் யோகீஸ்வாரே! சுமை யெடுக்கிறதினுலேயுண்டாகிற இளைப்பு பிரத்தியக்ஷமாகக் காணப்பட்டிருந்தாலும், விவகார

மாத்திரமேயல்லாமல் எதார்த்தமாக விசாரிக்கு மிடத்தில் இல்லையென்று சொன்னீர். அந்த அர்த்தத்திலே என்மனது மிகவும் பிரமிக்கிறது. இந்தப்பிரமை தீரும்படியாய் நீர் அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்ற அந்த ராஜாவைப்பார்த்து ஜடபாதமுனி சொல்லுகின்றார்.

ராஜாவே! பிருதிவி மயமான இந்தத் தேகமே ஒரு காரணத்தினாலே இந்தப்பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருக்கிறது. அந்தக் காரணத்தினால் இது ஜன்மமென்று சொல்லப்படுகிறது. இந்தப் பிருதிவியமயமான எந்தத்தேகம் சஞ்சரியாமலிருக்கின்றதோ, அது ஸ்தாபரமென்று சொல்லப்படுகின்றது. இந்தப் பிருதிவியமயமான சரீரத்துக்குப் பூமியிலே பாதம், பாதத்தின்மேல் முழங்கால், அதன்மேல் துடை, அதன்மேல் இடை, அதன்மேல் மார்பு, அதன்மேல் கழுத்து, அதன்மேல் தோள், தோளின்மேலதாரு மயமான பல்லக்கு, அதன்மேலே சவ்வீரராஜனென்கிற பேரையுடைய பிருதிவியமயமான உன்னுடைய சரீரமிருக்கிறது. அந்த சரீரத்தையே நீ ஆத்துமாவென்று அபிமானத்தையுடையவனாய் 'நான் சிந்துதேசத்துக்கு அதிபதி" யென்று மதத்தினாலே அந்தகனாயிருக்கிறாய். நீ துக்கிக்கத் தக்கவர்களாயும் மிகவும் தீனர்களாயுமிருக்கிற இந்தச் சிவிகையாளரைப் பல்லக்கைச் சுமக்கச்சொல்லி கஷ்டப்படுத்திக்கொண்டு தயையில்லாதவனாக இருக்கிறாய். ஆகையினாலே நான் ஜனங்களை ரக்ஷிக்கிறேனென்று வெறுமையாகச் சொல்லிக்கொண்டிருக்கிற கர்விதனான நீ பெரியோர்களுடைய கோஷ்டிக்கு அருகனாகமாட்டாய். எப்போது சராசரமான இந்தப் பிரபஞ்சத்துக்குப் பூமியிலே நித்தியமாகப் பிறப்பையும், இருப்பவும் அந்தப் பூமியிலேயே லயத்தையும், பிரத்தியக்ஷமாகக் காண்கிறதோ, அப்போதே அந்தப் பூமியைத் தவிர வேறேயொரு விவகாரமில்லை. ஆனபடியினாலே இந்தப் பிரபஞ்சமென்கிற சொல்லைத்தவிர, விவகாரத்துக்கு மூலமாயும், பிறப்பு இறப்பு என்கிற கிரியையினாலே அறியத்தக்கதாயும், வேறே ஒன்று சத்தென்று சொல்லத் தக்கதாயும் இருக்கிறதா? நன்றாக விசாரித்துப்பார். இப்படியே இந்தப் பூமியென்கிற சப்தார்த்தமும் தனக்குக் காரணங்களான பரமாணுக்களிலே லயத்தையடைந்தபடியினாலே, அந்தப் பரமாணுக்களைத் தவிர பூமியென்று சொல்லத் தக்கதாகச் சத்தான அர்த்தம் ஒன்றுமில்லையல்லவா? இந்தப்பூமியானது பரமாணுக்களுடைய கூட்டமாயிருக்கிறதோ, அந்தப் பரமாணுக்களும் காரியவசத்தினாலே மனதினால் அஞ்ஞான மூலமாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பிரகாரம் ஞான சூனியமாயிருக்கிற

விவகாரத்துக்கு விஷயமான யாதொரு பிரபஞ்சமுண்டோ, அந்தப் பிரபஞ்சமானது திரவியமென்றும், குணமென்றும், வாசனையென்றும், காலமென்றும், இவைகளின் புத்தியினுல் பிரகிருதியினுலே பண்ணப்பட்டிருக்கிறது. சுபாவமாக ஞான சொரூபமாயும், கர்ம சம்பந்த ரகிதமாயும், பரமார்த்த சொரூபமாயும், ஏகமாயும், பரிபூர்ணமாயும், பிரமமாயும், நித்தியமாயும், சுயம் பிரகாசமாயும், பசிதாக முதலான துர்க் குணங்க ளில்லாததாயும், பகவத் சப்தார்த்தமாயுமிருக்கிற வாசுதேவனைச் சத்தியமென்று சொல்லுவார்கள். வாராய் ரகுகணனே! இப்படிப்பட்ட பரமாத்தும சொரூபத்தை மகத்துக்களுடைய சேவையில்லாமல் தபசினுலும் எக்கியங் களினுலும், ஸ்நானங்களினுலும், அதிதி பூசையினுலும், வேதாப்பியாசத்தினுலும், ஜலம், அக்கினி, சூரியன் இவர் களுடைய உபாசனையினுலும் அடைய முடியாது. யாதொரு பெரியோர்களுடைய கோஷ்டியிலே அசத்தான கதை களுக்கு விகாதமாய், சதா பண்ணப்படுகிற பகவத் குணனு வாதமானது மோக்ஷத்திலே இச்சையை யுடையவனுன புருஷனுக்கு வாசுதேவனிடத்திலே பரமார்த்தமான புத்தி யைக் கொடுக்கிறது. அப்படிப்பட்ட மகத்துக்களுடைய சேவையினுலே அந்தப் பரமாத்தும சொரூபத்தை யறிந்து, நான் பூர்வ ஜன்மத்திலே பரதனென்கிற பெயரை யுடையவனுன ராஜாவாயிருந்தேன். அப்படிப்பட்ட நான் விஷய சங்கத்தை விட்டவனுய்த் தபோவனத்திலே பகவதாராதனத்தைப் பண்ணிக்கொண்டிருந்தேன். ஒரு மிருகத்தினுடைய சகவாசத்தினுலே புருஷார்த்தத்தைக் கெடுத்துக்கொண்டவனுய்த் திரும்பவும், மிருக ஜன்மமாகப் பிறந்தேன். வீரனே! எனக்கு அந்த மிருக ஜன்மத்திலும் கிருஷ்ணனுடைய ஆராதன பிரபாவத்தினுல் ஜன்மாந்தர ஞானம் என்னைவிடாமல் இருந்தது. ஆகையினுலே ஜன பங்களுடைய சங்கத்தினுல், கெட்டுப்போவேனென்று அதற் குப் பயப்பட்டவனுய் ஜனசங்கத்தைவிட்டு அறியப்படாத சொரூபத்தை யுடையவனுய், அவதூத வேஷத்தினுலே சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன். ஆனபடியினுலே மனுஷி யன் விஷய சங்கமில்லாத பெரியோர்களுடைய சங்கத்தி னுலே உண்டான ஞானமாகிற கத்தியினுல் சேதிக்கப்பட்ட விஷயசங்கத்தை யுடையவனுய் பகவத் குணகீர்த்தனத்தி னுலும், பகவத் கதா சிரவணத்தினுலும், அடையப்பட்ட ஞானத்தை யுடையவனுய், சம்சாரமார்க்கத்தைத் தாண்டிப் பகவானை யடைவன்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்

*விரக்தியில்லாதவனுக்கு ஞானோபதேசம் வியர்த்தமென்று வைராக்கியம் உண்டாவதற்காக சம்சாரமாகிற ஆரண்யம் வர்ணிக்கப்படுகிறது.*

### ஜடபரதர் வாக்கியம்

வாராய் ராஜனே! தாண்டக்கூடாததான பிரவர்த்தி மார்க்கத்திலே விஷ்ணுமாயையினால் தள்ளப்பட்டதாயும், ரஜஸ் தமஸ் சத்துவ குணங்களினால் பிரிக்கப்பட்ட சுபாசுப காமங்களிலே திருஷ்டியை யுடையதாயும் சுகத்தை யிச்சியா நின்ற பிரசித்தமான இந்த ஜீவசமூகமானது சம்சாரமாகிற வனத்தில் பிரவேசிக்கின்றது. அதிலே ஒருநாளும் சுகத்தை யடைகிறதில்லை. வாராய் ராஜாவே! அந்த வனத்திலே ஆறுபேரான சோரர்கள் சாமர்த்தியமில்லாதவனும் சார தியையுடையவனுமான இந்தப் புருஷனை அடித்துப் பிடுங்கு கிறார்கள். அந்த வனத்திலே பொல்லாத நரிகள் இவனை ஆட்டுக்குட்டியைப்போலப் பிடித்துக்கொண்டு நாலு பக்கத் திலும் இழுக்கின்றன. அனேகமான கொடிகள், சாகைகள், புதர்கள் இவைகளினாலே பிரவேசிக்கப்படாநின்ற அந்த வனத்திலே மகா குரூரங்களான ஈக்களினாலும் கொசுக்களி னாலும் மிகவும் பீடிக்கப்பட்டவனாய், சிலவிடத்திலே கந்தர்வ நகரத்தையும் சிலவிடத்திலே மிகவும் வேகத்தையுடையதான கொள்ளிவாய்ப் பிசாசுக்களையும் பார்க்கிறான். ராஜனே! வாசபூமி, நீர்த்தம், தனம் இவைகளிலேயே ஆசக்தியை யுடையவனாய் அந்தக்காட்டிலே நாலுபக்கமும் ஓடிக்கொண்டு திரிகிறான். சிலவிடத்திலே சுழல் காற்றினாலே எழுப்பப் பட்ட தூள்கள் விழுந்து கலங்கியிருக்கிற கண்களையுடையவ னாய் திக்குகளையும் அறியாமல் சுழல்காற்றுபோலவே சுழன்று கொண்டிருக்கிறான். கண்ணாலே காணப்படாம லிருக்கிற சல்லிகை யென்னப்பட்ட பூச்சிகளுடைய சப்தங்களினால் மிகவும் பீடையை யுடையவனாய், கோட்டான்களுடைய சப்தங்களைக் கேட்டு விசனப்படுகின்ற மனதை யுடையவ னாயும் அடையக்கூடாத ஆசையாகிய மரங்களின் நிழல்களை யெல்லாம் அடைகிறான். மிகவும் பசிதாகங்களை யுடையவ னாய்ச் சிலவிடத்திலே கானலை வெள்ளமென்று எண்ணிக் கொண்டு ஓடுகிறான். சிலவிடத்திலே ஜலமில்லாம லிருக்கிற நதிகளை யடைகிறான். மகா பசியினால் பீடிக்கப்பட்டவனாய் ஒருவனைப்போய் அன்னம் வேண்டுமென்று யாசிக்கிறான்.

இந்தப்பிரகாரம் மகத்தாகிய சிரமங்களினாலும் தனநாசங்களினாலும் துவேஷங்களினாலும் மகா விபத்தை யடைந்தவனாய்ச் செத்தவன்போல அப்பிரயோஜகனாய் விடுகிறான். புருஷனானவன் அங்கங்கே எவர்கள் விபத்தை யடைந்து போகிறார்களோ, அவர்களை விட்டுவிட்டுப் புதிதாய்ப் பிறந்து விளையாடிக்கொண்டு எவ்விடத்திலிருந்து வந்தானோ, அவ்விடத்துக்கு எப்போதும் திரும்பிப்போவதில்லை. வாராய் வீரனே! இப்படி திரிகிறவர்களுக்குள்ளே சமர்த்தனாயிருந்தாலும் ஒருவனும் அந்த மார்க்கத்தினுடைய கரையை யடைந்ததில்லை. மகா வீரர்களாயும் திக்கஜங்களை ஜயித்தவர்களாயு மிருக்கிற சமஸ்தமான அரசர்களும் இந்தப் பூமி என்னதென்று பூமி நிமித்தியத்திலே ஒருவர்க்கொருவர் மகா வைரத்தை யுடையவர்களாய் யுத்தத்திலே அடிபட்டு விழுந்து போகிறார்கள். வைரமில்லாதவனாயிருக்கிற சந்நியாசியானவன் எந்த பகவானுடைய பதத்தை யடைகிறானோ, அந்தப் பதத்தை அவர்கள் அடைகிறதில்லை.

அந்த வனத்தில் ஒவ்வோரிடங்களிலே மகா அழகாயிருக்கிற கொடிகளின் சாகைகளைப் பார்த்து அதை ஆசரித்துக்கொண்டும், அந்தக் கொடிகளிலேயிருந்து செவிகளுக்கு மதுரமாய் சப்தித்துக் கொண்டு மிருக்கிற பக்ஷிகளில் ஆசையையுடையவனா யிருக்கிறான். ராஜனே! இந்தப்பிரகாரம் அந்தப் பகவானுடைய மாயையினால் சம்சாரமாகிற ஆரண்யத்தில் தள்ளப்பட்டிருக்கிற நீயும் இந்த ராஜ்ஜிய பரிபாலனத்தை விட்டவனாய், சகல பிராணிகளுக்கும் சுகிர்த்தாயிருந்து, விஷயங்களிலே ஆசையை விட்டவனாய், ஸ்ரீ அரியினுடைய உபாசனையினால் மகா தீக்ஷணமான ஞானமாகிற கத்தியைக்கொண்டு சமுசாரமாகிற காட்டைச் சேதித்து, மார்க்கத்தினுடைய கரையைத் தாண்டக் கடவாயென்று சொல்லாநின்ற பரதயோகியைப் பார்த்து, ராஜா சொல்லுகிறான்: பிராமணோத்தமரே! சமஸ்த ஜன்மங்களிலும் மனுஷ்ய ஜன்மமே மிகவும் சிரேஷ்டமாக இருக்கிறது. இதர ஜன்மங்களினாலும், சொர்க்கத்திலே தேவாதி ஜன்மங்களினாலும், என்ன பிரயோசனம்? எந்த ஜன்மத்திலே ரிஷீகேசனுடைய அனுபவத்தினால் நிர்மலமான மனதையுடையவர்களான உம்மைப்போன்ற மகாத்துமாக்களுடைய சகவாச முண்டாகாதோ, அப்படிப்பட்ட ஜன்மங்களினாலே என்ன பிரயோஜனம்? ஒரு முகூர்த்தகாலமான உம்முடைய சகவாசத்தினாலே என்னுடைய குயுக்தி மூலமான அவிவேகம் நசித்துப் போயிற்று. அப்படிப்பட்ட மகா பாகவதர்க

ளுடைய சாணாரவிந்தத் தூளிகளினல் சகல பாவங்களேயும் நாசம் பண்ணுகிற புருஷனுக்கு பகவானிடத்திலே நிர்மல மான பக்தியுண்டா யிருக்கிற தென்பது ஆச்சரியமல்ல! மகத்துக்களா யிருக்கிற பிராமணர்களுக்குப் பிரணமம் பண்ணுகிறேன்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! அளவிடக்கூடாத பிரபாவத்தை யுடையவரான அந்தப் பிரமரிஷி குமாரரான பரதமுனி, தன்னே அவமானம்பண்ணி யிருந்தாலும் அந்தச் சிந்துபதி யான ரகுகுணனுக்குப் பாம கிருபையினலே ஆத்துமதத்து வத்தை உபதேசித்து, அந்த ரகுகுணனல் பக்தியோடே வந்தனம் பண்ணைப்பட்ட சாணத்தை யுடையவராய், பூர்ண மான சமுத்திரம்போலே இந்திரிய குணங்களான காமக் குரோதாதிகளாலே விடப்பட்ட இருதயத்தை யுடையவராய், பூமியிலே சஞ்சரித்துக்கொண்டிருந்தார். சவ்வீரதேசாதிபதி யான ராஜாவும் சத்புருஷ சகவாசத்தினலே அறியப்பட்ட பரமாத்ம தத்துவத்தை யுடையவனய்த் தன்னிடத்திலே அஞ்ஞானத்தினலே பண்ணப்பட்ட தேகாத்தும புத்தியை விட்டுவிட்டான்.

வாராய் பரிக்ஷித்தே! பாகவதாசிரிதனன பரதமுனியை ஆஸ்ரயித்த சவ்வீரராஜனுடைய பிரபாவம் இப்படிப்பட்டது என்று சொல்லாநின்ற சுகப்பிரம ரிஷியைப்பார்த்து, பரி க்ஷித்து மகாராஜா சொல்லுகிருர். வாரீர் மகாபாகவதரே! சர்வஜ்ஞான உம்மாலே சொல்லப்பட்ட ஜீவாத்துமாக் களது சம்சார மார்க்கமானது விவேகிகளுடைய புத்தியி னலே கற்பிக்கப்பட்ட விஷயங்களுடையது. மூடபுத்தி களுக்கு நன்ருக அறியப்படமாட்டாது. ஆனபடியினலே அறியக்கூடாததான இந்தச் சம்சார மார்க்கத்தை அந்தந்த அனுரூபமான அர்த்தத்தினுடைய கற்பனையினலே தரி சனம் பண்ணுவித்துச் சொல்லக்கடவீர்.



## பதினன்காவது அத்தியாயம்



*சம்சாரமென்னும் வனத்தினுடைய ஆகாரமானது திருடர்-நரிகள்-கொசுக்கள்-ஸ்திரீகள் துர்ச்சனர்கள் இவைகளாலே சொல்லப்பட்ட அர்த்தங்களுக்குப் பிரஸ்துதமான சம்சாரத்திலே உசிதார்த்த கற்பனையினாலே நிரூபிக்கப் படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்.

ஓ அரசனே! தேகமே ஆத்துமாவென்றெண்ணுகின்றவர்கள் இந்த ஜீவபிரபஞ்சத்தில் சத்துவாதிகுண விசேஷங்களினாலே பிரிக்கப்பட்ட சுபாசுபரூபமான கர்மங்களினாலேயுண்டாக்கப்படும் நானாவித தேகசமூகங்களுடன் கூடுதல் பிரிதல் ரூபமான சம்சார அனுபவத்துக்குத் துவாரமாயிருக்கிற ஆறு இந்திரியங்களுடனே கடக்கக்கூடாததான சம்சாரமான காட்டை நியந்தாவாயும் பகவானாயுமிருக்கிற ஸ்ரீ விஷ்ணுவினுடைய ஸ்வாதீனமான மாயையினால் அடைந்து, அந்தக் காட்டிலே யுண்டாகும் தாபத்திரயங்களைப் போக்கடிக்கும் ஹரியாகிற குருவினுடைய சரணாரவிந்தத்தையடைவார்கள். பாகவதர்களாலே செய்யப்பட்ட பக்திமார்க்கத்தை இப்போது அடையமாட்டாமலிருக்கிறது. இந்தச் சம்சாரமான காட்டில் இந்திரியங்கள் என்னும் கள்வர் குரூரகர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறார்கள். புருஷன் அதிகம் வருந்திச் சம்பாதிக்கும் தனம் சாக்ஷாத் பரம புருஷனையாராதிப்பதிலும் பற்ற தர்ம காரியங்களை இயற்றுவதிலும் உபயோகிக்கப்படவேண்டும். இப்படி பகவத் சேவையில் செலவாகும் பொருள் மோக்ஷசாதனமான தனமெனப்படும். மெய்-வாய்-கண்-மூக்கு-செவி யென்னும் ஐவரைத் திருப்தி செய்வதே தன் வாழ்க்கையின் பயனாகக்கொண்ட இந்திரிய ஜயமில்லாத ஒருவனுடைய தனம் கர்மார்த்த தனமென்னப்படும். அது ஐம்புலக்கள்வரால் அபகரிக்கப்பட்டழியும். வளர்க்கிற ஆட்டை எப்படி செந்நாய்களும் நரிகளும் பார்த்துக்கொண்டிருக்கையிலே கொண்டுபோகின்றனவோ, அப்படியே குடும்பத்திலே ஆசையையுடையவனும், மகாலுத்தனுமிருக்கிறபுருஷனுடைய தர்ம ஏதுவான அந்தக்கனம் மகாபதிமாய் ரக்ஷிக்கப்பட்டிருந்தாலும், பார்த்துக்கொண்டிருக்கையிலேயே பார்யா புத்திரர்களால் அபகரிக்கப்படுகிறது. கிருகஸ்தாசிரமம் கர்மக்ஷேத்திரமென்று சொல்லப்படுகிறது. இந்த க்ஷேத்திரம் ஞான அக்கினியினாலே தரிக்கப்

படாமற் போனால் அதில் கர்மங்கள் ஒருநாளும் நாசம் அடைகிறதில்லை. கர்ப்பூரபாத்திரத்தில் கர்ப்பூரம் போய் விட்டாலும் பரிமளத்தை எப்படி பெற்றிருக்கின்றதோ? அப்படியே கிருகஸ்தாஸிரமமானது நாசத்தை யடையாம லிருக்கிற கர்மவாசனைகளினாலே கர்மங்களுக்கு ஆசிரய மாகவே யிருக்கும். இத்தகைய கிருகஸ்தாஸிரமத்திலே வசிக் கிறவன் காட்டுகொசுக்கள் ஈக்கள் இவைகளுக்குச்சமானர் களாயும், நீசர்களாயுமிருக்கிற ஜனங்களினால் அபகரிக்கப் படும் தனத்தையுடையவனாய், இந்தச் சம்சாரத்திலே சுழன்று கொண்டு அஞ்ஞானத்தினாலே அசத்தான இந்த லோகத்தை யதார்த்தமென்றெண்ணி, பிராந்தியை யுடையவனாய்ப் பார்த் துக்கொண்டிருக்கிறான்.

இந்த லோகத்திலே ஒவ்வோரிடங்களில் கானல் ஜலத் துக்குச் சமானமான சப்தாதி விஷயங்களைப்பார்த்து பானம் போஜனம் மைதுனம் முதலான காரியத்திலே மிகவும் ஆசையையுடையவனாய் ஓடுகிறான். ஓரிடத்திலே சமஸ்த தோஷங்களுக்கும் இருப்பிடமான சுவர்ணத்தைப் பார்த்து அந்தச் சுவர்ணம்போன்ற வர்ணத்தையுடைய ரஜோகுணத்தினால் அந்தச் சுவர்ணத்திலே பற்றியிருக்கிற புத்தியையுடையவனாய், அந்த சுவர்ணத்தைக் கிரகிக்க வேண்டுமென்று இச்சித்து ஓடுகிறான். ஓரிடத்திலே கிருகம்-தனம்-தீர்த்தம் முதலிய பல போக்கிய வஸ்துக்களில் ஆசை யையுடையவனாய், இந்தச் சமுசாரமாகிற அடவியிலே இங்கு மங்குமாக ஓடுகிறான். ஓரிடத்திலே சுழல்காற்றுக்குச் சமான மான ஸ்திரீயினாலே கிரகிக்கப்பட்டவனாய், அவள் மடியில் ஏறிக்கொண்டு அந்த வேளையில் உண்டாயிருக்கிற பிரீதி யினாலே தமோமயனாய் மரியாதைகளை விட்டவனாய், தான் மரியாதையை அதிக்கிரமித்ததற்குச் சாட்சியான திக்கு தேவ தைகளையும் அறியாமலிருக்கிறான். ஓரிடத்தில் அடிக்கடி தன் பிரயத்தனம் பலியாமல் வியர்த்தமாய்ப் போனதை அறிந் திருந்தாலும், தேகாபிமானத்தினால் அந்த நினைவில்லாத வனாய் கானல் ஜலம்போல இல்லாத விஷயங்களிலே திரும் பவும் ஓடுகிறான். ஒருவேளையில் அசத்துக்களுடைய சகவா சத்தினால் புத்தியில்லாதவனாய் ஜலமில்லாத மடுவிலே விழுந் தாற்போல், இகலோகத்திலும் பரலோகத்திலும் துக்கத்தைத் தரும் பாஷண்டனை ஆஸ்ரயிக்கிறான். எப்போது பார்களை ஆசரித்தும், அவர்களை யுபத்திரவித்தும் தனக்கு அன்னம் அகப்படாமல் கஷ்டப்படுகிறானோ, அப்போது தன் பிதா புத்திரர்கள் சம்பாதித்தது எவ்வளவாகிலும் எவனண்டை

யாகிலுமிருந்தால் அவர்களைப்போய் பாதிக்கிறான். ஓரிடத்திலே கிருகஸ்தாஸிரமத்துக்கு யோக்கியங்களான கர்மவிதிகளாகிற பர்வதங்களில் ஏறவேண்டுமென்கிற இச்சையை யுடையவனாய், லௌகீக வியாபாரத்தினால் தடுக்கப்பட்ட சங்கல்பத்தை யுடையவனாயும், நொந்த மனதை யுடையவனாயும், முள் முதலியவைகளுடனே கூடின பூமியில் நடக்கிறவனைப் போலத் துக்கித்துக் கொண்டிருக்கிறான். ஓரிடத்தில் சகிக்கக் கூடாத ஜாட ராக்கினியினால் கிரகிக்கப்பட்ட பலத்தை யுடையவனாய்த் தன்னுடைய பாரியா புத்திராதிகள் பேரிலே கோபத்தைப் பண்ணிக்கொள்ளுகிறான். அவன் தானே திரும்பவும் நித்திரையாகிய மலைப்பாம்பினால் கிரகிக்கப்பட்டவனாய் மகா தபசிலே முழுகி சூனியவனத்திலே அகப்பட்டவன்போல், எறியப்பட்ட ஜவம்போல ஒன்றையும் அறிய மாட்டாமல் விழுந்து கிடக்கிறான். ஆகையினால் இந்த லோகத்திலும் பரலோகத்திலும் ஆத்மாவுக்குப் பிரவர்த்தி மார்க்கத்திலே யுண்டாகும் கர்மத்தைச் சம்சாரத்துக்கு உற்பத்தி க்ஷேத்திரமென்று சொல்லுகிறார்கள்.

இந்தப் பிரகாரம் பிரவர்த்தி மார்க்கத்திலே உபத்திரவங்களுண்டாகின்றன. அப்படியே சுகம்-துக்கம்-ஜன்மம்-ஜரை-மரணம் முதலான தீயகுணங்களும் உண்டாயிருக்கின்றன. இந்தச் சம்சாரமார்க்கத்திலே நானா கிலேசங்களினாலே பாதிக்கப்பட்டவனாய், ஆபத்தை யடைந்த பேர்களையும் மரணத்தை யடைந்த பேர்களையும் விட்டுவிட்டுத் திரும்பவும் நூதனமாக உண்டான பேர்களைக் கிரகித்துக்கொண்டு, சோகத்தையும், மோகத்தையும், கோபத்தையும், கோலாகலத்தையும், பயத்தையும், ரோதனத்தையும், சந்தோஷத்தையும், கானத்தையும் அடைந்து சம்சார பாசத்தினாலே கட்டுப்பட்டவனாய், சத்புருஷர்களாலே விடப்பட்டவனாய், பிரவர்த்தி மார்க்கத்தில் நின்று இத்தனை துக்கத்தை அனுபவிக்கிறபோதும் ஒழியாம லிருக்கிறான். எந்த வஸ்துவில் நின்றும் இந்தச் சராசராத்மகமான பிரபஞ்சம் உண்டாகிறதோ, அந்த வஸ்துவே பிரவர்த்தி மார்க்கத்துக்கும் ஆதாரமெனச் சொல்லுவார்கள். சந்நியாசிகளாயும் முனிகளாயும் விஷயானுபவத்தில் நின்றும் ஒழிந்த மனதையுடையவர்களாயுமிருக்கிறவர்கள் அடைகிற அந்த யோகமார்க்கத்தைச் சம்சாரியான புருஷன் அடையாமல் பிரமித்துக் கொண்டிருக்கிறான். பூர்வகர்மத்தை அனுசரித்த துக்கங்களை அனுபவித்து, அந்தத் துக்கத்தில் நின்றும் மகா பிரயாசையினாலே விடுபட்டவனும், திரும்பவும் இந்தப் பிரகாரமே பிரவர்த்தி

மார்க்கத்திலேயிருந்துகொண்டு சம்சார துக்கத்தை அடைகிறான். இந்தப் பிரகாரமே சொர்க்கலோகத்தை யடைந்திருக்கிறவனும், தன்னுடைய புண்ய க்ஷயத்திலே திரும்பவும் பூலோகத்தில் சம்சாரத்திலே உற்பத்தியை அடைகிறான்.

ரிஷபராஜ குமாரனும் ராஜரிஷியாயும் மகாத்துமாவாயு மிருக்கிற பாதனுடைய மார்க்கத்தை வேறொரு ராஜாவானவன் மனதிலே நினைக்கவும் வல்லமை யுடையவனாயிருக்கமாட்டான். அவனது மனோகரங்களாயும் விடக்கூடாதவைகளாயுமிருக்கிற பாரியாபுத்திராதிகளையும், சுகிர்தங்களையும் ராச்சியத்தையும், பகவானிடத்திலே ஆசையையுடையவனாய் யவ்வன வயதிலே தானே விட்டுவிட்டான். தேவதைகளாலே பிரார்த்திக்கத் தக்கவளாயும் தயையுடனே கூடின கடாக்ஷத்தை யுடையவளாயுமிருக்கிற மகாலக்ஷமியையும் அவன் இச்சியாமற் போனானென்கிறது உசிதமல்லவா? பகவானுடைய சேவையிலே ஆசையையும் மனதையும் உடையவர்களாயும் மகான்களாயு மிருக்கிறபேர்களுக்கு மோக்ஷபலமும் அப்பிரயோசகமன்றோ? நியந்தாவாயிருக்கிற ஸ்ரீ ஹரியின் பொருட்டுப் பிராணமமென்று உதாரமான வசனத்தை யாதொரு பாதன் மிருக ஜன்மத்தை விட்டு விடுகிறபோது சொன்னானோ, அப்படிப்பட்ட பாதனுடைய மார்க்கத்தை எந்த ராஜாதான் அனுசரிக்கமாட்டான். யாரொருத்தன் அந்தப் பாதனுடைய மங்களகரமான சரித்திரத்தைக்கேட்கிறானோ, அவன் பரமாத்மாவினிடத்தில் நின்றும் தனக்குவேண்டிய நன்மைகளை யடைவான்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*அந்தப் பாதனுடைய வம்சத்திலே பிறந்த ராஜாக்களுடைய கீர்த்தி வர்ணிக்கப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ஓ பரிக்ஷித்தே கேள்! பரதனுடைய பிள்ளைக்குப் புத்திரனானவன் சுமதி யென்று சொல்லப்படுவன். ரிஷபதேவருடைய மார்க்கத்தை யனுசரிக்கும் சுமதியைப் பார்த்து, சத்புருஷர்களுக்கு விரோதிகளான சில பாஷண்டிகள் பாப ஏதுவான தங்களுடைய புத்தியினாலே கலியுகத்தில் வேதங்களினாலே பிரதிபாதிக்கப்படாத புத்ததேவரை அவ

தாரமென்று எண்ணப்போகிருர்கள். அந்தச் சுமதிக்குத் துருவேசனை யென்கிற ஸ்திரீயினிடத்திலே தேவதாசித் தென்று ஒரு புத்திரன் பிறந்தான். அத்தேவதாசித்துக்கு ஆசூரி யென்கிற ஸ்திரீயினிடத்திலே தேவததிமுனென்கிற புத்திரன் பிறந்தான். அந்த தேவததிமுனென்கிறவனுக்கு தேவமதியென்கிற ஸ்திரீயினிடத்தில் பரமேஷ்டி யென்கிற புத்திரனுண்டானுன். அந்தப் பரமேஷ்டிக்குச் சுவர்ச்சலை யென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரதிகனென்கிற புத்திரன் பிறந்தான். அந்தப் பிரதிகனென்கிற ராஜா வெகுபேருக்கு வேதாந்த விஷயத்தை உபதேசம் பண்ணி, அந்த உபதேசத்திஞல் தானும் பரிசுத்தனுய், மகாபுருஷனை விஷ்ணுவைப் பிரத்தியக்ஷமாகவே யனுபவித்தான். அந்தப் பிரதிகனுக்குச் சுவர்க்கலை யென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரதிகர்த்தா பிரஸ்தோதா உத்காதாவென்னும், எக்கிய பிரயோகத்தில் சமர்த்தர்களான மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். பிரதிகர்த்தாவுக்கு ஸ்துதியென்கிற ஸ்திரீயினிடத்தில் வியோமனென்றும் பூமாவென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். பூமாவுக்கு ரிஷிகுல்லியென்கிற ஸ்திரீயினிடத்திலே உத்கீதன் பிறந்தான். அந்த உத்கீதனுக்குத் தேவகுல்லி யென்கிற ஸ்திரீயினிடத்தில் பிரஸ்தாவன் பிறந்தான். பிரஸ்தாவனுக்கு விகுச்சையை யென்கிற ஸ்திரீயினிடத்தில் விபுவென்கிற பிள்ளை பிறந்தான். விபுவுக்குப் பராகியென்கிற ஸ்திரீயினிடத்தில் பிருதுஷேணன் பிறந்தான். பிருதுஷேணனுக்கு ஆகுதி யென்கிற ஸ்திரீயினிடத்தில் நந்தன் பிறந்தான். நந்தனுக்குப் பிரதி புத்திரையென்கிற ஸ்திரீயினிடத்தில் ஜகத் ரக்ஷணார்த்தமாகக் கிரகிக்கப்பட்ட சத்துவ குணத்தை யுடையவனுன சாக்ஷாத் பகவானுடைய அம்சமாக புருஷ சிரேஷ்டனுன கேயனென்னும் பிரசித்தனுன ஒரு பிள்ளை பிறந்தான்.

அந்தக் கேயனுடைய விஷயமான கதைகளைப் பெரியோர்கள் மேன்மையாகச் சொல்லுகிருர்கள். லோகரட்சகரான பகவான் பிரதிசொரூபராயிருந்தும், யாதொரு கேயனிடத்தில் பிரீதியை யடைந்தாரோ, அப்படிப்பட்ட கேயனை கர்மங்களினுலே எவன்தான் அனுசரிக்கப் போகிருன்? அந்த கேயனுக்கு ஜயந்தி யென்கிற ஸ்திரீயினிடத்திலே சித்திராதன் மிருகனுதி அவரோதனன் என்னும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். சித்திராதனுக்கு ஊர்ணையென்கிற ஸ்திரீயினிடத்தில் சம்பிராட்டென்கிறவன் பிறந்தான். சம்பிராட்டுக்கு உத்கலை யென்கிற ஸ்திரீயினிடத்திலே மரீசி

பிறந்தான். மர்சிக்குப் பிந்துமதி யென்கிற ஸ்திரீயினிடத்திலே பிந்துமான் பிறந்தான். பிந்துமானுக்கு சாகா என்கிற ஸ்திரீயினிடத்திலே மதுவென்பவன் பிறந்தான். மதுவுக்கு சுமனசியென்கிற ஸ்திரீயினிடத்தில் வீரவிரதன் பிறந்தான். வீரவிரதனுக்குப் போசை யென்கிற ஸ்திரீயினிடத்தில் மன்னியு வென்றும் பிரமன்னியு வென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். மன்னியுவுக்குச் சத்திய னென்கிற ஸ்திரீயினிடத்தில் பவனன் பிறந்தான். பவனனுக்குத் தோஷை யென்கிற ஸ்திரீயினிடத்தில் துவஷ்டா பிறந்தான். துவஷ்டாவுக்கு விரோசனையினி யென்கிற ஸ்திரீயினிடத்தில் விரசன் பிறந்தான். விரசனுக்கு விஷ்டபதா என்கிற ஸ்திரீயினிடத்தில் சதசித்து முதலான நூறு பிள்ளைகளும், ஒரு கன்னிகையும் உண்டானார்கள். அந்த விரசன் விஷயமாக இந்தச் சந்ததிக்கிரமம் சொல்லப்பட்டது. பிரியவிருதனுடைய வமிசத்தில் கடைசியில் பிறந்த விரசனானவன் அந்த வமிசத்தை மிகவும் கீர்த்தியினாலே அலங்கரித்தான்.



## பதினாறாவது அத்தியாயம்



சகல தீவுகளுக்கும் மத்தியிலே யுள்ள மகம்மேருவினுடைய
நிலையும பூமியாகிற தாமரைக் கமலத்தினுடைய
மொட்டும் வர்ணிக்கப்படுகின்றது.

பரிக்ஷித்து வாக்கியம்

பகவானே! எந்தமட்டுக்கும் சூரியன் பிரகாசிக்கிறானோ, சந்திரன் சுக்கில பக்ஷத்திலும், கிருஷ்ண பக்ஷத்திலும், நக்ஷத்திர கணங்களுடனேகூட எந்த மட்டுக்குங் காணப்படுகிறானோ, அந்தப் பூமண்டலத்தினுடைய விஸ்தாரம் இவ்வளவென்று உம்மாலே சொல்லப்பட்டது. அந்தப் பூமண்டலத்திலும், பிரிய விருதனுடைய தேர் வண்டிகளினாலே உண்டாக்கப்பட்ட பள்ளங்களினாலே சப்த சாகரங்களும், அந்த சப்த சாகரங்களினாலே செய்யப்பட்ட தீவுகளின் விபாகமும் உம்மாலே சவிஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. இவையெல்லாம் நான் பிரமாணங்களினாலேயும், லக்ஷணங்களினாலேயும், சவிஸ்தாரமாக அறியவேண்டுமென் றிச்சிக்கிறேன். ஸ்தூலரூபமாயும் சுயம் பிரகாசமாயு மிருக்கிற வாசுதேவனிடத்தில் என் மனதை நிறுத்துவதற்கு யோக்

கியமாகும்படி அவருடைய ஸ்தூலரூபத்தை எனக்கு விஸ்த மாகச் சொல்லவேண்டுமென்று பரிக்ஷித்துவினலே பிரஸ னம் பண்ணப்பட்டு, சுகயோகி சொல்லுகிருர்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

மகாராஜனே! பகவானுடைய மாயாகுண ஐசுவரியமா யிருக்கிற பிரபஞ்சத்தின் ஸ்தான விசேஷங்களுடைய நாம ரூபங்களின் முடிவை வாக்கினலே சொல்லுவதற்குப் புருஷ ஞனவன் தேவர்களுடைய ஆயுளைப் பெற்றிருந்தபோதிலும் சமர்த்தனுகமாட்டான். ஆனபடியினலே பிரதானமான பூகோள விஷயங்களை நாமரூப பிரமாண லக்ஷணங்களி ஞலும், வியாக்கியானம் பண்ணுகிருேம். பூமண்டலமாகிற கமலத்துக்கு இதழைப்போலுள்ள சப்த தீவுகளின் மத்தி யிலே ஜம்புத்தீவுண்டு. இந்தத்தீவு லக்ஷம் யோசனை விஸ் தாரமாயும், சமமாயும், தாமரையிலைபோலு மிருக்கும். இந்த ஜம்புத்தீவின் மத்தியிலே ஒன்பதினயிரம் யோசனை விஸ்தார முள்ள ஒன்பது வருஷங்களாகிய பூகண்டங்கள் உண்டு. ஒவ்வொன்றும் ஒன்பதினயிரம் யோசனை விஸ்தாரத்தை யுடையவையாயும், எட்டு மரியாதா பருவதங்களாலே பிரிக் கப்பட்டவைகளாயும் இருக்கின்றன. இந்த வருஷங்களுக் குள்ளே இளாவிரத மென்கிற வருஷம் மத்தியிலே யிருக்கும். இளாவிரதமென்கிற வருஷத்தினுடைய மத்தியிலே குலபர்வ தங்களுக்கெல்லாம் ராஜாவாயும், சுவர்ண மயமாயு மிருக்கிற மேருபர்வதமானது அந்தவருஷத்துக்குச்சரியான அளவை யுடையதாயும் இந்தப் பூமியாகிய பத்மத்துக்குக் கர்ணிகா காரமாயு மிருக்கிறது. இந்த மகா மேருவான சிரசிலே முப்பத்திராயிரம் யோசனை விஸ்தாரத்தோடு கூடினதாயும், மூலப் பிரதேசத்திலே பதினுயிரம் யோசனை விஸ்தாரத் தோடு கூடினதாயும், பூமிக்குள்ளே பதினருயிரம் யோசனைப் பிரமாணம் புதைமானமும் பூமிக்கு வெளியிலே எண்பத்தி ஞலாயிரம் உயர்ச்சியுடனே கூடினதுமாகக் காணப்படுகிறது. இந்தப்பிரகாரம் லக்ஷம்யோசனைப்பிரமாணம் மேருபர்வதம் இளாவிரத வருஷத்துக்கு வடக்கே கொஞ்சதூரத்தில் நீல மென்றும், சுவேதமென்றும், ஷிருங்கவானென்றும், மூன்று பர்வதங்கள் ரம்மியகம், இரண்மயம், குரு வென்னப்பட்ட மூன்று வருஷங்களுக்கும் மரியாதா பர்வதங்களாய்ப் பூர்வ பாகத்திலே தீர்க்கங்களாயும், இருபுறத்திலேயும், லவண சமுத்திரத்தை அகழிகளாக உடையவைகளாயும், இரண் டாயிரம் யோசனை விஸ்தாரத்தோடு கூடினவைகளாயும்,

ஒவ்வொரு பர்வதமும் பூர்வ பூர்வ பர்வதங்களைக் காட்டிலும் உத்தரோத்தரங்களான பர்வதங்களாய்ப் பத்தி லொருங்குக் கூக்கொஞ்சம் மிகுதியான அமிசத்தால் நீளத்திலே குறைந்த வைகளாயு மிருக்கும். இந்தப் பிரகாரம் இளாவிருதத்துக்குத் தெற்கே கொஞ்சதூரத்தில் நிஷதமென்றும், ஹேமகூடமென் றும், இமாலயமென்றும், மூன்று பர்வதங்கள் கிழக்காக நீண்டும், நீலாதி பர்வதங்களோடு சமானமான விஸ்தாரத் தைப்பெற்றும், பதினாயிரம் யோசனை உயர்ச்சியுடனே கூடி யும், அரிவருஷம், கிம்புருஷவருஷம், பாரதவருஷம் இம் மூன்றுக்கும் மரியாதா பர்வதங்களாக நிற்கின்றன.

அந்தப் பிரகாரமே இளாவிருத வருஷத்துக்கு மேற் காகவும் கிழக்காகவும் மாலியவான் கந்தமாதன மென்கிற இரண்டு பர்வதங்கள் வடக்குத்திக்கிலே நீல பர்வதம்போல் நீண்டதாயும், தெற்குத்திக்கிலே நிஷத பர்வதம்போல் நீண்டதாயும், இரண்டாயிரம் யோசனை விஸ்தாரத்துடனே கூடினவைகளாயு மிருந்துகொண்டு, கேதுமாலம் பத்திரா சுவம் என்கிற இரண்டு வருஷங்களுக்கு மரியாதா பர்வதங்க ளாக நிற்கின்றன. மந்தரமென்றும, மேருமந்தரமென்றும், சுபாரசுவமென்றும், குமுதமென்றும், நாலு பர்வதங்கள் பதினாயிரம் யோசனை விஸ்தாரம் உயர்ச்சியுடனே கூடின வைகளாய் மேருவுக்கு நாலுதிக்கிலும் அதற்குப் பிடிப்பாகப் பண்ணப்பட்டிருக்கின்றன. இந்த மந்தர முதலான நாலு பர்வதங்களிலேயும், சூதமென்றும், ஜம்புவென்றும், கதம்ப மென்றும், நெக்குரோதமென்றும், நாலுவிருக்ஷ சிரேஷ்டங் கள் இந்த நாலு பர்வதங்களுக்கும் துவஜங்கள் போலே ஆயிரத்தொருநூறு யோசனை உயர்ச்சியுடனே கூடினவைக ளாயும், அவ்வளவு விஸ்தாரங்களை யுடையவைகளாயு மிருக் கின்றன. பாரதவம்ச சிரேஷ்டனே! நூறுயோசனை விசாலத் தோடு கூடினவைகளாயும் பால்-நெய்-மது-கரும்பு-இவைக ளுடைய ரசத்தினால் பூர்ணமான ஜலங்களையுடையனவாயும், நாலு மடுக்க ளுண்டாயிருக்கிறன. அந்த மடுக்களிலே யிரா நின்ற ஜலங்களைப் பானம் பண்ணுகின்ற உபதேவகணங் கள் சுவாதீனங்களான யோக ஐசுவரியங்களைத் தரித்திருக் கிறார்கள். நந்தனமென்றும் சயித்திரரத மென்றும் வயிப் பிராசிகமென்றும், சர்வதோபத்திரமென்றும், நாலு தேவ வுத்தியான வனங்க ளுண்டாயிருக்கின்றன. அந்த தேவ வுத்தியான வனங்களில் தேவ ஸ்திரீகளுக் கெல்லாம் பூஷணங்களான ஸ்திரீகளுடைய கூட்டங்களுக்குப் பதி யான தேவ சிரேஷ்டர்கள் உபதேவ கணங்களினால் கானம்

பண்ணப்பட்ட மகாத்துமியத்தை யுடையவர்களாய், லீலை பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். மந்தர பர்வதத்தினுடைய சிரசிலே ஆயிரத்திருநூறு யோசனை யுயர்ச்சியுடனே கூடின தேவசூத விருக்ஷத்தினுடைய சிரசில் நின்றும் பர்வத சிகரம் போல் பருத்தவைகளாயும் அமிர்தத்தோடு சமானமாயு மிருக்கிற பழங்கள் விழுகின்றன.

அப்படி விழுகின்ற பழங்களின் அதிமதுரமான பரிமளத்தோடு கூடின ரசமானது அருணாசோதகமென்று பெயரையுடைய நதியாக மந்தரபர்வத சிகரத்தில் நின்றும் விழுந்து இளாவிருத வருஷத்திற்குக் கிழக்காக ஓடுகின்றது. அந்த அருணாசோதகத்தினுடைய தீர்த்த பானத்தினால் பார்வதியினுடைய பரிசாரிகைகளான யக்ஷ ஸ்திரீகளுடைய சரீர ஸ்பரிசத்தினால் சுகந்தத்தை யுடையதாய், வாயுவினால் பத்து யோசனை விஸ்தாரம் பரிமளிக்கின்றது. இந்தப் பிரகாரம் அத்தியந்தம் உயரத்திலிருந்து விழுவதினால் சிதருநின்ற அதிசூக்ஷ்மங்களான பீஜங்களை யுடையவைகளாயும் கஜப் பிரமாணங்களாயு மிருக்கிற ஜம்பு பலன்களினுடைய ரசத்தினால் ஜாம்புநதியென்று பிரசித்தமான ஒரு நதி பதினாயிரம் யோசனை யுயர்ச்சியுடனே கூடின மேருமந்தா சிகரத்தில் நின்றும் பூமியில் விழுந்து தெற்காக இளாவிருத வருஷத்தில் எவ்வளவு தூரம் பிரவகிக்கிறதோ, அந்த மட்டுக்கும் உபய தீரங்களிலேயுமிருக்கிற மிருத்திகையானது அந்த ஜாம்புநதி ஜலத்தினாலே நனைக்கப்பட்டு வெய்யில் காந்தியினுடைய சம்பந்தத்தினாலே யுண்டான பாகத்தினால் தேவ ஜனங்களுக்குப் பூஷணமான ஜாம்புநதமென்னப்பட்ட சுவர்ணமாகிறது. அந்த ஜாம்புநத சுவர்ணத்தைத் தேவர்கள் முதலானவர்கள் ஆபரணங்கள் செய்து தரித்துக் கொள்ளுகிறார்கள். சுபாரசுவமென்னப்பட்ட பர்வதத்திலே கதம்ப விருக்ஷமுண்டு. அந்த விருக்ஷத்தினுடைய பொந்துக்களில் நின்றும் பிரவகித்துக்கொண்டு ஐந்துமார் பருமனோடு கூடின ஐந்து மதுதாரைகள் சுபாரசுவசிகரத்தில் நின்று விழுந்து, மேருவுக்கு மேற்காக இளாவிருத வருஷத்தைப் பரிமளிக்கச் செய்கின்றன அந்த மதுதாரைகளைப் புசிக்கின்றவர்களுடைய மூச்சினாலே நூறு யோசனை தூரம் பரிமளம் வீசுகின்றது. இந்தப் பிரகாரம் குமுத பர்வதத்திலே முளைத்திராநின்ற சதவ்லிசமென்று பிரசித்தமான வடவிருக்ஷமுண்டு அதினுடைய அடிக்கிளைகளில் நின்றும் பிரவகியாநின்ற பால், தயிர், நெய், மது இவைகளுடனே கூடின அன்னம் - வஸ்

திரம் - பஞ்சம் - ஆசனம் - ஆபரணம் - இவை முதலான சர்வ காரியங்களையுஞ் சுரவாநின்ற நதங்கள், குமுத பர்வ தத்தினுடைய சிகரத்தில் நின்றும் விழுந்து வடக்காக இளா விருத வருஷத்துக்கு வடவண்டைப் பக்கத்தில் இருக்கிற பேருக்கு அனுபோகத்துக்கு யோக்கியமா யிருக்கின்றன.

அந்த பதார்த்தங்களை அநுபவிக்கின்ற பிரஜைகளுக்கு எப்போதும் நரை - திரை - மூப்பு - சாக்காடு இவைகள் நீங்கிச் சுகமே உண்டாயிருக்கும். குரங்கம் - குரரகம் - குசும்பம் - வைகங்கதம் - சித்திரகூடம் - சிசிரம் - பதங்கம் - ருசகம் - நிஷதம் - சிநிவாசம் - கபிலம் - சங்கம் - வைடூரியம் - ஜாருதி - அம்சம் - ரிஷபம் - நாகம் - காளஞ்சனம் - நாரதம் முதலான உபபர்வதங்கள் பூமிக்குக் கர்ணிகை போலே யிருக்கின்ற மேருவுக்குத் துவசங்கள்போல மேருவினுடைய மூலப்பிரதேசத்தில் நாலண்டையிலும் பண்ணப்பட்டிருக்கின்றன. சடரமென்றும், தேவகூடமென்றும் இரண்டு பர்வதங்கள் மேருவுக்குக் கிழக்கே யிருக்கின்றன. இந்தப் பிரகாரம் மேருவுக்கு மேற்காக நவமென்றும், பாரியாத்திரமென்றும், இரண்டு பர்வதங்களிருக்கின்றன. மேருவுக்குத் தெற்காகக் கயிலாசமென்றும், கரவீரமென்றும், இரண்டு பர்வதங்கள் கிழக்காக நீண்டவைகளா யிருக்கின்றன. இப்பிரகாரம் மேருவுக்கு வடக்காகத் திரிசிருங்கமென்றும் மகரமென்றும் இரண்டு பர்வதங்க ளிருக்கின்றன. இந்த எட்டு பர்வதங்களிலேயும் பரிஸ்தரணம் பண்ணப்பட்ட அக்கினிபோல நான்கு பக்கத்திலேயுஞ் சுவர்ணபர்வதமான மகாமேரு பிரகாசிக்கிறது. மேருவினுடைய சிரசிலே பகவானுன பிரமாவுக்கு மத்தியதேசத்திலே செய்யப்பட்டதாய்ப் பதினாயிரம்யோசனை விஸ்தாரத்தோடு கூடினதாய் சமமாய் சதுரஸ்ரமாய் சாதகும்பியென்று ஒரு பட்டணத்தைச் சொல்லுவார்கள். அந்த சாதகும்பி பட்டணத்தைச் சுற்றி நாலுபுறத்திலும் அஷ்ட லோகபாலர்களும். அவ்வவர்களுடைய ரூபத்தினாலே இரண்டாயிரத் தைந்நூறு யோசனை விஸ்தாரத்தோடு கூடின நகரங்கள் பண்ணப்பட்டிருக்கின்றன.



## பதினேழாவது அத்தியாயம்

மேருவுக்கு நாலு திக்கிலும் கங்கையினுடைய வரவும் இளாவிருதவருஷத்திலே ருத்திரனால் செய்யப்பட்ட சங்கர்ஷண வியூகோபாசனமும் சொல்லப்படுகிறது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்.

அரசிற் சிறந்த பரிக்ஷித்தே கேளும்! யாதொரு சாதகும்பியென்கிற மேருமத்தியில் இருக்கும் பிரமாவினுடைய பட்டணத்தில் பலிச்சக்கரவர்த்தியினுடைய எக்கியத்தில் திரிவிக்கிரமாவதாரம் கொண்டு பாதத்தினுல் அளந்த விஷ்ணுவினுடைய இடதுகால் பெருவிரல் நகத்தினுல் பிளக்கப்பட்ட ஊர்த்துவமான அண்ட பித்தியினுடைய ரந்திரத்தினுல் உள்ளே பிரவேசித்து அண்டத்துக்குப் புறப்பட்ட ஜலதாரையானது பகவானுடைய பாதாரவிந்த பிரக்ஷாளனத்தினுல், பாதசம்பந்தியான குங்குமமாகிற செவந்த கேசரங்களினுல் ராகயுக்தமாகப் பண்ணப்பட்டு, பாபங்களைப் போக்கடிக்கும் ஸ்நானபானத்தை யுடையதாயும், நிர்மலமாயும், பகவானுடைய பாதத்தில் உண்டாகையால் விஷ்ணுபதியென்கிற நாமத்தையடைந்து, யுகயுகங்களாக ஆகாயத்தினுடைய சிரசில் ஆவிர்ப்பவித்து விஷ்ணுபதத்தில் தீரனுயும் பரம பாகவதனுயுமிருக்கிற உத்தானபாதனுடைய குமாரனை துருவன் நாராயணனுடைய சரணாரவிந்தோதகமென்று அந்தக் கங்கையை மூன்று சந்திகளிலேயும் பக்தியினுல் இளகிப் போகாநின்ற இருதயத்தை யுடையவனுய், பத்மமுகுளம் போன்ற இரண்டு நேத்திரங்களில் நின்றும் பெருகாநின்ற ஆனந்த பாஷ்பத்தினுடைய திவலையினுல் பிரகாசிக்கப்பட்ட ரோமாஞ்ச சமூகத்தை யுடையவனுய், சிரசினுல் பரிக்கிருன். அந்தக் கங்கையினுடைய பிரபாவத்தை யறிந்த சப்த ரிஷிகள் தம்முடைய தபசுக்கு பலமிதுவேயென்று ஷாட்குண்ணியத்தோடு கூடின வாசுதேவனிடத்தில் ஒழிவில்லாத பக்தியினுலே பலாந்தரத்தை அபேக்ஷியாமலிருக்கிற ஆத்மஞானத்தை யுடையவர்களாய் ஜடாபாரங்களில் வகிக்கிருர்கள். அந்தக் கங்கையானது லோகத்தில் நின்றும் ஆகாசமார்க்கமாக இறங்கி பிரமாவினுடைய கிருகத்தில் விழுந்து அவ்விடத்திலிருந்து நாலுபிரகாரமாக பேதிக்கப்பட்டுச் சிதையென்றும், அகளநந்தையென்றும், சட்சுவென்றும், பத்திரையென்றும் நாலு நாமங்களை யுடையதாய்

நாலுதிக்கிலேயும் பிரவகித்துக்கொண்டு நதிகளுக்கெல்லாம் பதியான சமுத்திரத்திற் பிரவேசிக்கின்றது.

பாரதவருஷமே கர்மசித்திக்கு க்ஷேத்திரமாகின்றது. மற்ற எட்டு வருஷங்களும் புண்ணிய க்ஷேத்திரத்தினுடைய உபயோகஸ்தானங்களா யிருக்கின்றன. அந்தப் பாரத வருஷம் தவிர இதர கண்டங்களில் தெய்வமானத்தினால் பதினாயிரம் வருஷம் ஆயுளை யுடையவர்களாய், மூகிலிலே ஒரு கர்ப்பத்தை யுடையவர்களான ஸ்திரீகளை யுடையவர்களாயு மிருக்கிற புருஷர்களுக்குக் காலம் திரேதாயுகத்தோடு சமானமாகவே யிருக்கும். இந்த ஒன்பது வருஷங்களிலேயும் புருஷோத்தமனை ஸ்ரீமந் நாராயணன் அந்தந்தப் புருஷர்களை அனுக்கிரகிக்கிறதின் பொருட்டு, தரிசனங் கொடுத்துக் கொண்டிருக்கிறார். இளாவிருத வருஷத்திலேயோ வென்றால் பகவானை ருத்திரன் ஒருவனே புருஷன். இளாவிரத வருஷத்தில் பிரவேசிக்கிறவன் எவனாயினும் ஸ்திரீயாவானென்னும் பார்வதியினுடைய சாபத்தை அறிந்தவனாய் வேறொருவனும் அங்கே பிரவேசிக்கிறதில்லை. பார்வதிநாதரான ருத்திரர் புருஷோத்தமருடைய நாலாம் வியூகமாயும் ஜகத் சிருஷ்டிக்குக் காரணமாயுமிருக்கிற சங்கர்ஷண மூர்த்தியைத் தன்னுடைய சமாதியினால் சன்னிதானம் பண்ணி வைத்துக்கொண்டு இந்த மந்திரத்தை ஜபித்துப் பூஜிக்கின்றார். "எந்த மகா புருஷனை வாசுதேவனை இந்த ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி சங்காரங்களுக்கு ஏதுவாகச் சொல்லுகிறார்களோ. அந்தப் பகவானுக்குப் பிரணாமம் பண்ணுகிறேன். சத்துவாதி குணங்களினாலே பூர்ணமான விக்கிரகத்தை யுடையவனாயும் மகதத்துவ அபிமானியாயும், விஞ்ஞானத்துக்கு இருப்பிடமாயும், அரசனாகியுமிருக்கிற பிரமாவானவன் எந்த சங்கர்ஷண மூர்த்தியினிடத்தில் நின்றும் பிறந்தானோ, அந்தப் பிரமாவினிடத்திலிருந்தும் உற்பத்தியை யுடையவனை நான் சத்துவாதிகுணத்தை யுடைய அகங்காரத்தினாலே வைகாரிக மென்னப்பட்ட இந்திரிய அபிமான தேவதைகளையும், தாமசமென்னப்பட்ட பூதவர்க்கத்தையும், சிருஷ்டிக்கிறானோ, அந்தப் பரமாத்மாவுக்குப் பிரணாமம்." என்று இந்தப்பிரகாரம் சங்கர்ஷணமூர்த்தியை ருத்திரரானவர் இளாவிரதவருஷத்திலே பிரதிதினம் உபாசித்துக்கொண்டிருக்கிறார்.

## பதினெட்டாவது அத்தியாயம்

*பல கண்டங்களிலு மிருக்கும் உபாசியங்களான பகவன்மூர்த்தி களும் உபாசகர்களும் சொல்லப்படுகின்றன.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் பரிக்ஷித்தே! பத்திராசுவ வருஷத்திலே தர்ம னுடைய பிள்ளையான பத்திரசிரவசும் அவனுடைய சேவகர் களுக்குள்ளே முக்கியமான புருஷர்களும் சாக்ஷாத் பகவா னான வாசுதேவனுடைய சிரேஷ்டமாயும் தர்மசொரூபமாயு மிருக்கிற ஹயக்கிரீவமூர்த்தியை உத்கிருஷ்டமான சமாதியி னாலே சன்னிதானம் பண்ணுவித்துக்கொண்டு இந்த மந்தி ரத்தை ஜபித்துக்கொண்டு பஜனை பண்ணுகிறார்கள்.

அந்தப் பகவானுடைய இஷ்டமான நரசிங்கரூபத்தைப் பரமபக்தனும் தைத்தியர்களுடைய குலத்தைப் பாலிக்கு மவனுமான பிரகலாதன் பக்தியினாலே அரிவருஷத்திலிருக் கின்ற புருஷர்களோடு உபாசனை பண்ணிக்கொண் டிருக் கிறான்.

கேதுமால வருஷத்தில் பகவான் பிரத்தியும்னரூபத்தி னாலே லக்ஷ்மிக்குப் பிரியத்தைப் பண்ணவேண்டுமென்கிற இச்சையினாலே சான்னித்தியம் பண்ணியிருக்கிறார். ரம்மிய வருஷத்தில் பகவானுடைய அத்தியந்த சிரேஷ்டமான மச்சியாவதாரரூபமானது அந்த ரம்மிய வருஷாதிபதியான மனுவுக்குப் பிரசன்னமாயிருக்கிறது. அந்த மனு இப்போ தும் மகாபக்தி யோகத்தினாலே அந்த ரூபத்தை ஆராதித் துக்கொண்டும் மந்திரத்தை ஜபித்துக்கொண்டு மிருக்கிறார். இரண்மய வருஷத்தில் கூர்மரூபத்தைத் தரித்துக்கொண்டு, பகவான் ஆவிர்ப்பவித்திருக்கிறார். அந்தப் பகவானுடைய சிரேஷ்டமான கூர்மரூபத்தைப் பிதுர்க்கணங்களுக்கு அதி பதியான அரியமாவானவன் அந்த இரண்மய வருஷத்திலே யிராநின்ற புருஷர்களுடனேகூட உபாசனை பண்ணிக்கொண் டிருக்கிறான். உத்தர குருவருஷத்திலேயும் எக்கியரூபியான பகவானானவர் வராகரூபியாய் ஆவிர்ப்பவித்திருக்கிறார். அந்த எக்கியவராக ரூபத்தை இந்தப் பூமிதேவி அந்தக் குருவரு ஷத்திலேயிராநின்ற புருஷர்களுடனே கூட ஒன்றினாலே யுந் தடையில்லாத பக்தி யோகத்தினாலே பஜனை பண்ணிக் கொண்டிருக்கிறாள்.

## பத்தொன்பதாவது அத்தியாயம்

கிம்புருஷ வருஷத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் அநுமாராலே உபாசிக்கப் படுவதும், பாரதவருஷத்தில் ஸ்ரீமந் நாராயணன் நாரதரால் உபாசிக்கப்படுவதும் பரதகண்டத்து சிரேஷ்டமும் சொல்லப்படுகின்றன.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

கிம்புருஷ வருஷத்தில் ஸ்ரீ சீதாராம மூர்த்தியினுடைய சரணாரவிந்தங்களிலே மனதை யுடையவராயும், பரம பாகவதராயு மிருக்கிற அநுமான், அந்தக் கிம்புருஷ வருஷத்திலே யிருக்கும் புருஷர்களுடன் எப்போதும் நீங்காத பக்தியால் பஜனை பண்ணிக்கொண் டிருக்கிறார். மந்திரத்தினுடைய பொருள்: "ராகாதிகளினாலே தூஷிக்கப்படாத விசுத்தஞான சொரூபமாயும் தன்னுடைய மகாத்துமத்தினால் சத்துவாதிகுண காரியங்களான சாக்கிராதி அவஸ்தைகளில்லாதவராயும், சுயம் பிரகாசராயும், மிகுந்தசாந்தியை யுடையவராயும் யோகத்தினாலே பிறந்த ஞானத்தினால் அறியத்தக்கவராயும், கர்மமூலங்களான நாமரூபங்களில்லாதவராயும், அகங்கார மமகார மில்லாதவராயு மிருக்கிற அந்த ஸ்ரீராமமூர்த்தியைச் சரண மாக வடைகிறேன்" இந்தப் பிரகாரம் கிம்புருஷவருஷத்தில் ஸ்ரீராமமூர்த்தியான அரியை அநுமான் உபாசனைபண்ணிக் கொண்டிருக்கின்றார். பாரதவருஷத்தில் பகவானான நாராயணர் கல்பாயுசான பரியந்தம் விர்த்தியை யடைகின்ற தர்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், இந்திரிய நிக்கிரகம், மனோ நிக்கிரகம் பரமாத்ம சொரூப ஞானம் இவைகளையுடைய தபசை தயையினால் ஆத்தும ஞானிகளுக்கு அநுக்கிரகிக்கும் பொருட்டு எழுந்தருளி யிருக்கிறார். ஒருவராலும் அறியப்படாத அந்தப் பகவானை ஞான சக்திமுதலான குணங்களை யுடையவரான நாரதர், வர்ணாசிரமங்களை யுடைய பாரதவருஷ வாசிகளுடன் பகவானாலே சொல்லப் பட்டவைகளான சாங்கிய யோகங்களினால் பகவத்பிரபாவ உபதேசத்தை யுடையதான பாஞ்சராத்திர சாஸ்திரத்தைச் சாவர்ணி மனுவுக்கு உபதேசிக்கப் போகிறவராய்ப் பரமமான பக்தியுடனே உபாசிக்கின்றார்.

இந்தப் பாரத வருஷத்தில் மலயம், மந்திரப்பிரஸ்தம், மைநாகம், திரிகூடம், ரிஷபம், குடகம், கோஷடணம், சைகம், வேதகிரி, ரிஸ்யமூகம், ஸ்ரீசைலம், வேங்கடம், மகேந்திரம், வாரிதார விந்தியம், சுகத்திமான், ரிக்ஷகிரி, பாரியாத்திரம், துரோணம், சித்திரகூடம், கோவர்த்தம், ரைவதகம், கபுகம், நீலம், கோகாமுகம், இந்திரநீலகம், இமயகிரி முதலிய பர்வதங்களும் அந்தப் பர்வதங்களி னுடைய தாழ்வரைப் பிரதேசங்களில் உண்டாகும் சந்திர வரை, தாப்ப்ரபர்ணி, அவடோதாம், கிருதுமாலா, வைகாயிசி, காவேரி, பெண்ணை, க்ஷீரம், சக்கராவதி, துங்கபத்திரை, கிருஷ்ணவேணி, பீம, நிருவிந்தியா, கோதாவிரி, பயோஷ்ணி, தாபினி, ரேவா, சுரசா, நிர்மலா, சாமணவதி, சிந்து, சோணம், மகாநதி, வேதஸ்மிருதி, ரிஷி குல்லியா, கவுசிகி, சரஸ்வதி, பிருஹூத்துவதி, கோமதி, சரயூ, உரோமவதி, சுகோஷ்டா, குக்ஷபணு, சத்துருமருத்து ருதா, விதஸ்தா, அக்கினி, விசுவா முதலிய பல மகா நதிகளும் உண்டாயிருக்கின்றன.

இப்பாரதக் கண்டத்தில் ஜன்மமடைந்த புருஷர்களாலே சாத்துவிக ராஜச தாமசமான மூவித கர்மத்தினுலே, சொர்க்கமென்றும் நரகமென்றும் மனுஷியலோகமென்றுஞ் சொல்லப்படுகிற விதிகளானவை சர்வ பிராணிகளுக்குங் கர்மானு குணமாய் உண்டாயிருக்கின்றன. இப்பாரத கண் டத்தில் வர்ணுசிரம தர்மத்துக்கு அனுகுணமாய் மனுஷி யர்களுக்கு மோக்ஷமும் உண்டாயிருக்கிறது. பக்தியோ கத்தைச் சொரூபமாகவுடைய அஞ்ஞான பந்தத்தை அகற்றி யிருக்கிற பாம பாகவதர்களுடைய சங்கமானது புருஷ னுக்கு எப்போது உண்டாகிறதோ, அப்போது மோக்ஷம் உண்டாகிறது. பாரத வருஷத்திலே மனுஷிய ஜன்மத் தையே தேவதைகளும் உத்கிருஷ்டமாகக் கானம் பண்ணு கிருர்கள். இந்தப் பாரத வருஷத்திலே ஞானம் ஞானத் துக்கு ஏதுவான கர்மங்கள், கர்மங்களுக்கு ஏதுவான தர வியங்கள், இவைகளினுலே சம்பூர்ணமாயிருக்கிற மனுஷிய ஜன்மத்தை அடைந்திருக்கிறவர்கள் மோக்ஷத்தின் பொருட் டாகப் பகவானை ஆராதிக்காவிட்டால், அப்படிப்பட்டவர் கள் மிருகங்கள் பக்ஷிகளைப்போலத் திரும்பவுஞ் சம்சாரபந் தத்தை யடைகிருர்கள். அவர்களால் எக்கியத்தில் சிரத்தை யுடனே பாகமாகப் பண்ணப்பட்டுப், சாஸ்திரப் பிரகார மாக மந்திரங்களினுல் ஓமம் பண்ணப்பட்டுமிருக்கிற அவி ஸைப் பகவானனவர் தாமொருவரே இந்திராதி தேவர்க

ளுடைய நாமங்களினால் அழைக்கப்பட்டவராய்ப் பரிபூர்ணரா யிருந்தாலும் சர்வாபீஷ்டங்களைக் கொடுக்கிறவராயிருந் தாலுஞ் சந்தோஷத்துடனே அங்கீகரிப்பதினால், அந்தப் புருஷர்களே மகா பாக்கியத்தைச் செய்தவர்களல்லவா? பகவானானவர் பிரார்த்திக்கப்பட்ட அர்த்தத்தைச் சத்திய மாகக் கொடுக்கிறார். அந்தப் பாரத வருஷத்திலே பஜனை பண்ணுகின்ற பேருக்குப் பகவான் நிரதிசயமான மோக்ஷத் தைக் கொடுக்கிறார். அப்படிப்பட்ட பாரத வருஷத்திலே ஜன்மங்கொள்வதற்கு தேவர்களும் இச்சை கொள்ளு கிறார்கள். ராஜனே! இந்த ஜம்புத்தீபத்துக்குச் சகர புத் திரர்கள் அஸ்வத்தைத் தேடும்போது இந்தப் பூமியை யெங்கும் வெட்டினதினாலே பண்ணப்பட்டவைகளான எட்டு உப தீபங்களிருக்கின்றன. அவை சொர்ணப்பிரஸ்தம், சந்திர வலகம், ஆவர்த்தனம், ரமணகம், மந்த ஆரணம், பாஞ்ச சன்னியம், சிம்மளம், இலங்கை எனும் பெயர்களையுடையன.



## இருபதாவது அத்தியாயம்



*சமுத்திரங்கள் பிலக்ஷத்தீப முதலான ஆறுதீபங்கள் சக்கரவாளகிரி, அதற்குட்பட்ட பிரதேசங்கள், வெளிப்பட்ட பிரதேசங்கள் ஆகியவைகளின் நிலைகள் சொல்லப்படுகின்றன.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்தே! இனிமேல் பிலக்ஷ முதலான தீவுகளின் அகல நிகள அளவும், சொரூபமும், ஆகாரமும், வருஷங்க ளுடைய விபாகமும் சாஸ்திரத்தை அதிக்கிரமியாமல் சொல்லப்படுகின்றன. இந்த ஜம்புத்தீவு எவ்வளவு விஸ்தா ரத்தோடு கூடினதோ, அவ்வளவு லக்ஷம்யோசனை விஸ்தார மான லவண சமுத்திரத்தினாலே சூழப்பட்டிருக்கிறது. எப்படியானால் மேருவானது ஜம்புத் தீவினாலே சூழப்பட் டிருக்கிறதோ, அப்படியே லவண சமுத்திரமும் இரண்டு லக்ஷம்யோசனை விஸ்தாரமுடைய பிலக்ஷத் தீவினாலே சூழப் பட்டிருக்கிறது. ஜம்பு விருக்ஷத்தினுடைய பிரமாணத்தோடு சமமான பிரமாணத்தை யுடையதாயும், பிலக்ஷத்தீபமென்கிற பேருக்குக் காரணமாயும், சுவர்ணமயமாயு மிருக்கிற பிலக்ஷ விருக்ஷமானது அந்தப் பிலக்ஷத் தீவிலேயிருக்கிறது. அந்தப் பிலக்ஷத்தீவிலே எழு சுவாலையாகிற நாக்கை யுடையவனான

அக்கினியானவன் சான்னித்தியம் பண்ணியிருக்கிறான். அந்தப் பிலக்ஷத்தீவுக்குப் பிரிய விருதனுடைய பிள்ளையான இத்துமசிக்குவானவன் அதிபதி. அவன் தன்னுடைய அந்தப் பிலக்ஷத்தீபத்தை ஏழு வருஷங்களாகப் பிரித்து அந்த வருஷ நாமங்களுடன் கூடின ஏழுபிள்ளைகளுக்குங் கொடுத்துவிட்டுத் தானும் ஆத்மதியானத்தால் சம்சாரத்தில் நின்றும் நீங்கினான். சிவம், வயசம், சுபத்திரம், சாந்தம், க்ஷேமம், அபயம், ரிதம், என்னும் நாமங்களை பிலக்ஷத் தீப வருஷங்கள் பெற்றன. மணிகூடம், வச்சிரகூடம், இந்திரி சேனம், சோதிடமா, தூம்பாவர்ணம், இரணியகிரிவம், மேக மாலம் என்னும் பெயர்களையுடைய மரியாதாபர்வங்கள் ஏழி னாலும் அருணா, ரமணா, ஆங்கிரசி, சாவித்திரி, சுப்பிரபாதா, ருதம்பரா, சத்தியம்பரா என்றழைக்கப்படும் ஏழு மகா நதி களாலும் அந்தப் பிலக்ஷத்தீபம் பிரகாசிக்கிறது. இந்த நதி களின் ஜல பானத்தினால் ரஜஸ் தமோ குணங்களை விட்டவர் களாய், அம்ஸரென்றும் பதங்கரென்றும், ஊர்த்துவாயன ரென்றும், சத்தியாகாரென்றும் பெயரை யுடையவர்களான நாலுவர்ணத்தார் சகஸ்திரவருஷ பரியந்தமான ஆயுசை யுடையவர்களாய், தேவதைகளுக்குச் சமானமான ரூபத்தை யும் பிரஜோற்பத்தியையு முடையவர்களா யிருக்கிறார்கள். அந்த நாலுவர்ணத்தினர்களும் வேதமயமான சூரியனையே பரமாத்மாவாக வேதமார்க்கங்களினால் உபாசிக்கிறார்கள்.

பிலக்ஷத்தீப முதலான ஐந்து தீவுகளிலிரா நின்ற புருஷர்கள் உற்பத்தியாகும்போதே பராக்கிரமம், ஆயுள் விருத்தி இவைகளெல்லாஞ் சித்தித்திருப்பார்கள். பிலக்ஷத் தீபமோ வென்றால் தன்னோடு சமானமாக இரண்டு லக்ஷம் யோசனைப் பிரமாணத்தை யுடையதான (இக்ஷு) கருப்பஞ் சாறு சமுத்திரத்தினால் சூழப்பட்டிருக்கும். இதைப்பார்க் கிலும் இரட்டிப்பான விஸ்தாரத்தை யுடையதாய் நாலு லக்ஷம் யோசனையோடு கூடின சால்மலித் தீபம் தன்னோடு சமானமான சுரா சமுத்திரத்தினால் சூழப்பட்டிருக்கும். அந்தச் சால்மலித் தீவில் பிலக்ஷ விருக்ஷத்தோடு சமான மான உயர்ச்சியையுடையதான சால்மலி யென்னப்பட்ட இலவமரம் உண்டாயிருக்கிறது. அந்தச் சால்மலி விருக்ஷத் தினுடைய மூலப்பிரதேசத்தை, ஞானம் சக்தி முதலான குணங்களை யுடையவராயும், பக்ஷிகளுக்கெல்லாம் ராஜாவாயு மிருக்கிற கருடனுக்கு வாசஸ்தானமாகச் சொல்லுவார்கள். அந்தத் தீபமானது சால்மலி விருக்ஷத்தினால் சால்மலி யென்று பெயரையுடையதாயிருக்கின்றது. அந்தத் தீபத்துக்கு

அதிபதியான பிரியவிருதனுடைய புத்திரனை எக்கியபாகு வென்கிறவன் தன் பிள்ளைகளான ஏழுபேருக்கும் அந்தத் தீபத்தை சரோசனம், சௌமனசியம், ரகணகம், தேவபெருகம், பாரிபத்திரம், ஆப்பியாயனம், அபிக்கியானம் என்னும் அந்தப் பிள்ளைகளுடைய நாமங்களையுடையதான ஏழு வருஷங்களாகப் பிரித்துக்கொடுத்தான். அந்த வருஷங்களுக்குள்ளே வருஷ பர்வதங்கள் ஏழும் பிரசித்தமாயிருக்கின்றன. சுவற்சம், சதசிருங்கம், வாமதேவம், குந்தம், குமுதம், புஷ்பவருஷம், சகசுருதி, என்னும் வருஷ பர்வதங்கள் ஏழும் அனுமதி, சினிவாலி, சாசுவதி, குரு, அசிக்கினி, நந்தா, என்னும் ஏழு நதிகளும் அவ்வருஷங்களில் பிரசித்தமாயிருக்கின்றன. சுருத்திரனென்றும், வசுந்தாயனென்றும், இஷ்டாந்தரனென்றும், பிரசித்தமான பேரை யுடையவர்கள், அந்தச் சால்மலித் தீவிலேயிரா நின்ற சந்திரனையே பரமாத்மாவாக உபாசிக்கின்றார்கள். "தன்னுடைய கிரணங்களினால் சுக்கில கிருஷ்ண பக்ஷங்களில் பிதுர்க்களுக்கும் தேவர்களுக்கும் அமிர்த ரூபமான அன்னத்தைக் கொடுத்துக்கொண்டு எல்லாப் பிரஜைகளுக்கும், ராஜாவான சந்திரன் எங்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்கக் கடவ" னென்னும் பொருளுடனே கூடின மந்திரத்தினாலே பூஜிக்கிறார்கள்.

இந்தப் பிரகாரம் சுரா சமுத்திரத்துக்கு வெளியில் அந்தச் சமுத்திரத்துக்கு இரட்டிப்பான கிருதோதகமென்கிற நெய்க்கடலினால் சூழப்பட்ட குசத்தீபமிருக்கிறது. அந்தக் குசத்தீவில் தேவனால் செய்யப்பட்ட குசஸ்தம்பமானது குசத்தீபத்துக்கு நாம ஏதுவாயிருந்துகொண்டு, வேறொரு அக்கினிபோலத் தன்னுடைய மனோக்கியமான காந்தியினால் பத்துத் திக்குகளையும் பிரகாசிப்பிக்கின்றது. அந்தத் தீபத்துக்கு ஸ்வாமியாயிருக்கிற பிரிய விருத புத்திரனை இரணிய ரோமாவானவன் அந்தத் தீபத்தை வசு, வசுதானன், திரடருசி, நாபிகுமதன், சத்யவிரதன், விப்பிரன், வாமதேவன் என்னும் நாமங்களையுடைய தன்னுடைய புத்திரர்களான ஏழுபேருக்கும் யதாபாகமாய்ப் பிரித்துக் கொடுத்துத் தான் தபசிலிருந்தான். அந்த வருஷங்களில் வருஷ பர்வதங்கள் ஏழும், மகாநதிகள் ஏழும், பிரசித்தமாயிருக்கின்றன. பெப்புரு சதசிங்கம், பிப்பலம், சித்திர கூடம், தேவாகம், ஊர்த்த ரோமா, திரவிணம் என்பன வருஷ பர்வதங்களினுடைய நாமங்களாம். ரசகுல்லியை, மதுகுல்லியை, சுருது விந்தை, மிததுருவிந்தை, வேதகர்ப்பை, கிருதச்சுதா, மந்திரமாலை என்பன நதிகளின்பேர். அந்த நதிகளின் தீர்த்தங்களினால்

அந்தக் குசத்தீபத்தி லிருந்துகொண்டு குலசரென்றும், கோவிதரென்றும், அபியுக்தரென்றும், குலகரென்றும் பெயரை யுடையவர்களான பிரஜைகள் கர்மங்களினுல் பகவானை அக்கினி மூர்த்தியைப் பூசிக்கின்ருர்கள்.

இந்தப் பிரகாரம் நெய்க்கடலுக்கு வெளியிலே கிரௌஞ்சத்தீபமானது பாற்கடலினுலே சூழப்பட்டிருக்கும். கிரௌஞ்சமென்கிற பர்வதராஜனுல் அந்தத்தீவுக்கு கிரௌஞ்சமென்கிற பேருண்டா யிருக்கின்றது. அந்தத் தீபம் சுப்பிரமணியருடைய ஆயுதத்தினுலே துளைக்கப்பட்ட தாழ்வரைப் பிரதேசத்தை யுடையதாயிருந்தாலும், பாற்கடலினுலே நனைக்கப்பட்டு பகவானுன வருணனுலே ரக்ஷிக்கப்பட்டதாய், நிர்ப்பயமா யிருக்கிறது. அந்தத் தீபத்தில் பிரியவிருதனுடைய குமாரனுன கிருதபிருஷ்டன் அதிபதியா யிருக்கின்ருன். அவன் தன்னுடைய தீபத்தை ஏழு வருஷங்களாகப் பிரித்து, தன் புத்திரர்களுடைய நாமத்தை யுடையனவான அந்த வருஷங்களுக்குள்ளே தன் பிள்ளைகளை வருஷபதிகளாக ஸ்தாபித்து, தான் சர்வாந்தரியாமியான ஸ்ரீ ஹரியினுடைய பாதாரவிந்தத்தை யடைந்தான் நூமோதனென்றும், துவகனென்றும், மேகப்பிரஷ்டனென்றும், சுதானென்றும், ரெஞ்சிஷ்டனென்றும், லோகிதாரணனென்றும், வனஸ்பதியென்றும் கிருதபிஷ்டனுடைய பிள்ளைகளுக்குப் பேர். அவர்களுடைய வருஷங்களிலே வருஷ பர்வதங்கள் ஏழும், மகாநதிகள் ஏழும் பிரசித்தமாயிருக்கின்றன. சுக்கிலம், மர்த்தமானம், போஜனம், உபபெருகணம், ஆனந்தம், நந்தம், சர்வதோபத்திரம் என்பன வருஷபர்வதங்களினுடைய நாமங்கள். அபையா, அமிர்தவுகா, ஆரியகா, தீர்த்தவதி, பாத்திராவதி, பவித்தீர்வம் சுக்கில என்னும் நாமங்களால் மகாநதிகள் அழைக்கப்படும். அந்த நதிகளின் பரிசுத்தமான தீர்த்தத்தைப் பானம்பண்ணியும் குருவென்றும், ரிஷபனென்றும், திரவிணனென்றும், தேவனென்றும் பேரையுடையவர்களான வருஷ புருஷரானவர்கள், வருணதேவனைத் தீர்த்த பூர்ணமான அஞ்சலியினுலே பூஜிக்கின்ருர்கள்.

இந்தப் பிரகாரம் பாற்கடலுக்கு வெளியிலே நாலண்டையிலும் முப்பத்திரண்டு லக்ஷயோசனை விஸ்தாரத்தோடு கூடிய சாகத்தீபமானது தன்னுடனே சமானமான தயிர்க்கடலினுலே சூழப்பட்டிருக்கும். அந்தத் தீவிலேயுள்ள சாகமென்னப்பட்ட விருக்ஷத்தினுல் அத்தீவு சாகத் தீபமென்னும் நாம

மடைந்தது. அந்தத் தீபத்திற்குப் பிரியவிருத குமார ஞன மேதாதிதியே அதிபதியாயிருக்கின்ருன் அவனும் தன்னுடைய தீபத்தைப் புத்திரர்களுடைய நாமங்களை யிட்டு ஏழாகப் பிரித்து அந்த வருஷங்களான பூகண்டங் களிலே புரோசகன், மஞேசவன், வெபானனி, தூம்ப ராணிகன், சித்திராதன், வெகுரூபன், விசுவரான் என் னும் நாமங்களை யுடையவர்களான புத்திரர்களை அதிபதிக ளாக ஸ்தாபித்துத், தானும் பகவானிடத்திலே மனதை யுடையவஞய், தபோவனத்தில் பிரவேசித்துத் தபசு பண்ணிக்கொண்டிருக்கிருன். அந்தச் சாகத்தீபத்திலே யிரா நின்ற வருஷங்களில் ஈசானம், உருசிங்கம், பவபத்திரம், சத கோரம் சகஸ்திர சுரோதசு, தேவபாலம், மகாநசம் என் னும் ஏழு பர்வதங்களும், அநரகா, ஆயுர்த்தா, உபய சிருஷ்டி, அமராசிதா, பஞ்சதி, சகஸ்திரசுதி, நிசதுருதி என்னும் மகா நதிகளும் சிறந்திருக்கின்றன. அந்தச் சாகத் தீபத்திலே யிராநின்ற ருகவிரதரென்றும், சத்தியவிரதரென் றும், கானவிரதரென்றும், அனுவிரதரென்றும் பெயரை யுடையவர்களான புருஷர்கள் பகவாஞயும் வாயுரூபியாயு மிருக்கிற ஸ்வாமியைப் பிராணுயாமத்திஞலே ரசஸ்தம சுக்களை நசிப்பித்தவர்களாய், பரமமான சமாதியிஞலே உபா சிக்கின்ருர்கள்.

இந்தப் பிரகாரம் தயிர்க்கடலுக்கு வெளியிலே, புஷ்கரத் தீபம் சாகத்தீவுக்கு இரட்டிப்பு விஸ்தாரத்தோடு கூடினதாய், நாலாபக்கத்திலும் தன்னுடனே சமானமான சுத்தஜல சமுத் திரத்தாலே வெளியிலே சூழப்பட்டிருக்கும். அந்தப் புஷ் கரத் தீபத்திலே பெரிதாகியும், அக்கினியினுடைய சிகை யைப் போல நிர்மலமாயும். லக்ஷம் இதழ்களுடனே கூடினதாயும், பகவாஞயும், கமலாசனஞயுமிருக்கிற சதுர் முகனுக்கு ஆசனமாகப் பண்ணப்பட்டுமிருக்கிற தாமரை புஷ்பமுண்டாயிருக்கிறது. அந்த புஷ்கர தீபத்தின் நடு விலே மானசோத்தரமென்கிற பர்வதமானது ஒன்றே தனக் குட்பட்ட வருஷத்துக்கும் வெளிப்பட்ட வருஷத்துக்கும், மரி யாதா பர்வதமாக நிற்கிறது. அந்த மானசோத்தர பர்வதத்தி னிடத்திலே நாலுதிக்குகளிலேயும் லோகபாலகரான இந்தி ராதிகளுடைய நாலுபட்டணங்களுண்டாயிருக்கின்றன.

அந்த மானசோத்தர பர்வதத்தின்மேலே மேருவைச் சுற்றுநின்ற சூரிய ரதத்தினுடைய சம்வத்ஸர சொரூபமான சக்கரமானது உத்தராயண தக்ஷணுயன மார்க்கங்களிலே

சுழன்று கொண்டிருக்கிறது. அந்தப் புஷ்கரத் தீபாதிபதி பிரியவிருத குமாரனுன வீதிகோத்திரன். அவனுடைய பிள்ளைகள் ரமணகனென்றும், யாதகனென்றும் பேரை யுடையவர்களான இரண்டுபேரையும் வருஷபதிகளாக நியமித்து, அந்த வீதிகோத்திரன் தன் பெரியோர்களைப் போல பகவத் கர்மத்தையே செய்துகொண் டிருக்கின்றான். அந்தப் புஷ்கரத் தீபத்திலிராநின்ற புருஷர்கள் தர்ம ரூபியான பகவானை பிரம சாலோக்கியாதிகளுக்குச் சாதனமா யிருக்கிற யக்கியாதி கர்மத்தினாலே ஆராதிக்கின்றார்கள். அந்தச் சுத்தோதக சமுத்திரத்துக்கு வெளியிலே லோகா லோகமென்று பெயரையுடைய பர்வதமானது, சூரிய பிரகாசத்தையுடைய தேசத்துக்கும் பிரகாசமில்லாத தேசத் திற்கும் நடுவிலே நாலண்டையிலேயும், மறியாதாபர்வத மாகப் பண்ணப்பட்டிருக்கிறது. மான்சோத்தர பர்வதத் திற்கும் மேருவுக்கும் நடுவிலே எவ்வளவுபூமியோ, அவ் வளவு பூமி சுத்தஜல சமுத்திரத்திற்கு அப்பாலே லோகா லோக பர்வதத்திற்கு உட்புறத்திலே யிருக்கிறது. அதற்கப் பாலே கண்ணாடிபோன்ற தரையையுடைய காஞ்சன பூமி யிருக்கிறது. அந்தப் பூமியின்பேரில் விழுந்த பதார்த்த மானது காண்பதற்கு அரிதாயிருக்கும். ஆகையினாலே சமஸ்த பிராணிகளினாலும் பரிகரிக்கப்பட்டிருக்கிறது. இந்த லோகாலோக பர்வதமானது, ஐம்பதுகோடி விஸ்தாரத் துடனேகூடின பூமிகளுக்கு நாலிலொரு பங்கான பன்னி ரண்டரைக் கோடி யோஜனையுடனே கூடின லோகாலோக பர்வதத்திற்குமேல் நாலு திக்குகளிலும், அகிலலோக குரு வான சதுர்முகனால் ரிஷபமென்றும், புஷ்கரசூடமென்றும், வாமனமென்றும், அபராஜிதமென்றும், பெயரை யுடையவை யாய், சம்பத்தினுடைய இருப்புகளுக்கு ஏதுக்களாய் நாலு திக்கஜங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் பர்வத சிரேஷ்டமான லோகா லோக பர்வதத்தில், சகல லோகத்தி னுடைய க்ஷேமத்தின் பொருட்டு அந்தரியாமியாயும், பரிசுத்த மான சத்துவகுணம், தர்மக்கியானம், வைராக்கியம், ஐசுவரிய முதலான அஷ்டமகா சித்திகளையும் தரித்துக்கொண்டு, விசுவசேனனென்று பிரசித்தனான பகவான் தம்முடைய யோகமாயையினால் செய்யப்பட்ட நானாவித லோக மரியாதை களின் ரக்ஷணத்தின் பொருட்டுக் கற்பகால பரியந்தம் ஆவிர்ப்பவித்திருக்கிறார். அந்த லோகாலோக பர்வதத்திற் கும் அப்பாலே யோகசித்தர்களா யிருக்கிறவர்கள் யோகீசு வரர்களுடைய கதியைச் சொல்லுவார்கள். சூரியனானவன் பூமி அந்தரிக்ஷம் இவைகளுக்கு மத்திமமான அண்டமத்தி

யத்தை யடைந்திருக்கிறான். சூரியனுக்கும் அண்டகோளத்துக்கும் நடுவே பூமி இருபத்தஞ்சுகோடி யோசனை விஸ்தாரமுடையதா யிருக்கின்றது. இந்தச் சூரியன் அசேதனமான இந்த அண்டத்தில் ஆவிர்ப்பவித்தானுகையால் மார்த்தாண்ட னென்று சொல்லப்படுவான். சூரியனாலேயன்றோ திக்குகள் - ஆகாசம் - சொர்க்கம்-பூமி நரகஸ்தானங்களும்-அதல முதலான கீழேழுலகங்களும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. தேவர்கள்-பக்ஷிகள்-மனுஷியர்கள்-சர்ப்பங்கள்-பர்வதங்கள் லதைகள் இவை முதலான சர்வ ஜீவராசிகளுக்கும் நேத்திரத்திற்கு அதிஷ்டாதாவான சூரியனே ஆதாரவா யிருக்கின்றான்.



## இருபத்தோருவது அத்தியாயம்



நாள்தோறும் காலசக்கரத்தினாலே சுழலாநின்ற சூரியனுடைய ராசி சஞ்சாரங்களுடனே கூடின கதியினாலே யோகயாத்திரை சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பஞ்சாசத் கோடி விஸ்தாரத்துடனே கூடின பூமண்டலத்தினுடைய சமஸ்தானம், பிரமாணத்தினாலேயும் சொரூபத்தினாலேயும் வியாக்கியானம் பண்ணப்பட்டது. இந்தப் பூமண்டல பிரமாணத்தினாலே ஆகாசத்தினுடைய பிரமாணத்தைச் சோதிடமண்டல சொரூபத்தை யறிந்தவர்களான சோதிட சாஸ்திர பாரங்கதர்கள் உபதேசிக்கின்றார்கள். எப்படியென்றால், அரசாது கோட்டை முதலானவைகளுடைய இரண்டு தளங்களுக்குள்ளே ஒன்றினுடைய பிரமாணமானது அறியப்பட்டதானால், அதினாலே மற்றொன்றினுடைய பிரமாணமும் அறியப்படுவதுபோல் சொல்லுவார்கள். சொர்க்கம் பூமி இவைகளின் நடுவிலே ஆகாசமானது இரண்டோடும் கூடிக்கொண்டிருக்கிறது. அந்த ஆகாசமத்தியத்திலே யிருந்துகொண்டு காந்திமயனாய் வஸ்துக்களுக்கெல்லாம் பதியான சூரியன், தன்னுடைய தேஜஸினாலே மூன்று லோகங்களையும் பிரகாசிப்பிக்கிறான். அந்தச் சூரியன், உத்தராயணமென்றும், தக்ஷிணாயனமென்றும், வைசுவமென்றும், பெயரை யுடையவைகளான மந்த சீக்கிர சம கதிகளினால் ஏறத்தக்கதாயும், இறங்கத்தக்கதாயு மிருக்கிற

ஸ்தானங்களில் காலத்தை அதிக்கிரமியாமல் ஏறுகிறதும் இறங்குகிறதும், மகர முதலான மாதங்களில், பகல்களையும் இராத்திரிகளையும் தீர்க்கங்களாகவும், குறுகினவையாகவும், சமங்களாகவும் செய்து கொண்டிருக்கிறான். எப்போது சூரியன் மேஷராசியிலேயும் துலாராசியிலேயு மிருக்கிறானோ, அப்போது பகலிரவுகள் சமமாக இருக்கும். எப்போது ரிஷப முதலான ஐந்து ராசிகளில் சஞ்சரிக்கிறானோ, அப்போது பகல்கள் விர்த்தியாயிருக்கும். மாதங்கள் தோறும் ஒவ்வொரு நாழிகை ராத்திரிகளிலே குறுகியிருக்கும். எப்போது விருச்சிக முதலான ஐந்து ராசிகளிலிருக்கிறானோ, அப்போது இரவுகள் தீர்க்கங்களாயும் பகல்கள் குறுகியுமிருக்கும். தக்ஷணாயனத்தில் பகல்கள் எவ்வளவு விர்த்தியடைகின்றதோ, அவ்வளவு உத்தராயணத்தில் இராத்திரிகள் விர்த்தியடையும். ஒன்பது கோடி ஐம்பத்தொரு லக்ஷம் யோசனைகளை மானசோத்தரகிரியிலே சுற்று நின்ற சூரியனுக்கு மார்க்கமென்று சொல்லுவார்கள். இந்த மானசோத்தர பர்வதத்தில் மேருவுக்குக் கிழக்காகத் தேவயானையென்று பெயருடைய இந்திரனுடைய பட்டண மிருக்கிறது. தக்ஷிணபாகத்தில் சயமனியென்று பெயருடையதான எமனுடைய பட்டணம் உண்டா யிருக்கின்றது. மேருவுக்கு மேலண்டையாக நிமரோசனையென்று பெயரை யுடையதாய் வருணனுடைய பட்டணம் உண்டாயிருக்கின்றது. உத்தரபாகத்தில் விபாவரியென்று பெயரையுடையதாய்ச் சோமனுடைய பட்டணம் உண்டாயிருக்கின்றது. அந்த தேவயானை முதலான நாலு பட்டணங்களிலேயும் சூரியன் கிரமமாக வந்தானேயாகில், மேருவைச்சுற்றி நாலுபக்கங்களிலேயும் இரா நின்ற பிராணிகளுக்குப் பிரவர்த்தி நிவர்த்திகளுக்கு நிமித்தியங்களான உதயம், மத்தியானம், அஸ்தமனம், அர்த்தராத்திரமென்கிற கால விசேஷங்கள் சொல்லப்படுகின்றன. சூரியனானவன் சர்வகாலமும் பகற்காலத்தில் உருமத்தை யடைந்தவனாகவே நிற்கிறான். மேருவுக்கு இடது பாரிசத்திலேயே யிருந்து கொண்டு மேருவைப் பிரதக்ஷணம் பண்ணுகிறான். எவ்விடத்தில் சூரியனுதய மாகின்றானோ, அதற்கு நேரான திக்கில் அஸ்தமன மாகின்றான். எவ்விடத்திலே உச்ச காலத்தையடைந்து கிரணங்களினால் பிரகாசிக்கிறானோ, அதற்கு நேரான திக்கில் அஸ்தமனமாகின்றான். எப்போது இந்திரனுடைய பட்டணமான தேவயானை யென்கிற பட்டணத்தை விட்டுப் புறப்படுகிறானோ, அப்போது பதினைந்து நாழிகையளவிலே இரண்டேகால் கோடி யோசனைகளையும், கொஞ்சமதிகமான பன்னிரண்டரை லக்ஷம் யோசனைகளையும்

தாண்டி எமனுடைய சமயமனியென்கிற பட்டணத்தை வந்தடைகிறான்.

அவ்விடத்திலே யிருந்து அவ்வளவு நாழிகைக்குள்ளே தானே அவ்வளவு எண்ணிக்கையை யுடையதான யோசனைகளைத் தாண்டி வருணனுடைய நியரோசனை யென்கிற பட்டணத்தை யடைகிறான். அவ்விடத்தை விட்டு அவ்வளவு நாழிகையில் அவ்வளவு யோசனைகளை யதிக்கிரமித்துச் சோமனுடைய விவாவதியென்கிற பட்டணத்தை யடைகிறான். அவ்விடத்தை விட்டுத் திரும்பவும் அந்த நாழிகையிலேதானே அவ்வளவு யோசனைகளைத் தாண்டித் திரும்பவும் இந்திரனுடைய பட்டணத்தை யடைகிறான். அந்தப்பிரகாரம் சந்திரன் முதலான மற்றுமுள்ள கிரகங்களும், நக்ஷத்திரங்கள் சோதிட சக்கரங்களுடனே உதயமாகி, அதனுடன் கூடவே அஸ்தமிக்கின்றன. இந்தப் பிரகாரம் காலத்தினாலே முப்பத்துநாலு லக்ஷத்து எண்ணூறு யோசனைகளை அதிக்கிரமியாநின்ற வேதமயமான சூரியனுடைய ரதம் நாலு பட்டணங்களிலேயும் சுழன்றுகொண்டிருக்கின்றது. அந்தச்சூரியரதம் பன்னிரண்டு மாதங்களாகிற அரமென்னப்பட்ட இலைகளை யுடையதாயும், ஷட்ருதுக்களாகிற நேமி யென்னப்பட்ட மூனைகளை யுடையதாயும், சாதுர்மாசியங்களென்னப்பட்ட தொப்பைக் கட்டைகளை யுடையதாயும், சம்வற்சர சோரூபமாயு மிருக்கிற ஒரு சக்கரத்தை யுடையதென்று சொல்லுகிறார்கள். அந்த ரத சக்கரத்தினுடைய இருசு மேருவினுடைய சிரசிலே யொருமுனையும், மானசோத்தர பர்வதத்திலே யொருமுனையுமாய் வைக்கப்பட்டிருக்கின்றது. அந்த இருசிலே சோக்கப்பட்ட சூரியனுடைய ரதசக்கரம் செக்கினுடைய திருகுமரத்திலே கோக்கப்பட்ட சக்கரம்போல் மானசோத்தர கிரியிலே சுழலுகின்றது. அந்த இருசிலே வைக்கப்பட்ட மூலபாகத்தை யுடையதான இரண்டாம் இருசானது முப்பத்தொன்பது லக்ஷத்து முப்பத்தேழாயிரத் தைந்நூறு யோசனைப் பிரமாணத்தோடு கூடினதாய்ச் செக்கிலியாநின்ற உலக்கை மரம் போல் துருவனிடத்தில் வைக்கப்பட்ட நுனியை யுடையதாயிருக்கும். ரதத்துக்குள்ளிடமான மத்தியபாகமோ வென்றால், முப்பத்தாறு லட்சம் யோசனைப் பிரமாணமான உயர்ச்சியும், அதிலே நாலிலொரு பங்கான விசாலமுடையதாயுமிருக்கும். அந்தரதத்தினுடைய நுகத்தடியும் அவ்வளவு பிரமாணத்தோடு கூடியிருக்கும் யாதொரு நுகத்தடியில் காயத்திரி முதலான சந்தசுக்களுடைய பெயரையுடைய

தான ஏழு அஸ்வங்கள், அருணனுன சாரதியினுலே கட்டப் பட்டவைகளாய், சூரியனை வகியா நிற்கின் றன. சர்வகாலமும், அருணனுனவன் சூரியனுக்கு முன்னே மேற்கு முகமாயிருந்துகொண்டு சாரதி கர்மத்தில் ஏவப்பட்டவனு யிருக்கிறுன். அந்தப்பிரகாரமே வாலகில்லி யர்களென்று பிரசித்தர்களாய்ப் பெருவிரல் பிமாணத்தை யுடையவர்களான அறுபதினுயிரம் பேர் ரிஷிகள் சூரிய ஸ்தோத்திரத்தின் பொருட்டு நியமிக்கப் பட்டவர்களாய் முன்னே நின்றுகொண்டு ஸ்துதி பண்ணிக்கொண் டிருக்கி ருர்கள். அந்தப் பிரகாரம் மற்றுஞ் சில ரிஷிகள், கந்தர்வர் கள், அப்சரசுக்கள், நாகங்கள், கிராமணிகள், யக்ஷர்கள், தேவர்கள் இவர்கள் தனித்தனியே பதினுறு பேர்களாகவும், ஜோடுஜோடாய் ஏழுகணங்களா யிருந்துகொண்டு மாதங்கள் தோறும் நானுவிதமான நாமங்களோடு கூடின பகவானுனை சூரியனை வெவ்வேருன அவருடைய லீலா கர்மங்களினுல் உபாசிக்கிருர்கள். ஒன்பதரைக்கோடியும் லக்ஷத்தீராயிரம் யோசனையும் நானூறு குரோசமுமான பூமண்டலத்தி னுடைய தேசத்தை க்ஷணகாலத்தில் தாண்டுகிருன்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்



*சந்திரன் சுக்கிரன் முதலான கிரகங்களுடைய உத்தரோத்தரமான ஸ்தானங்களும் அவரவர்களுடைய கதி நிர்ணயத்தினுலே மனுஷியர்களுடைய இஷ்டானிஷ்டங்களும் சொல்லப்படுகின்றது.*

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

வாரீர் பிரமநிஷ்டரே! பகவானையும், மேருவையும், துருவனையும் பிரதக்ஷணம் பண்ணுகின்ற சூரியனுடைய இராசி கமனமும் பிரதட்சண கமனமும் பூஜ்யரான உம்மாலே சொல்லப்பட்டது. சூரியனுடைய இந்த கமனத்தை நாங்க ளெப்படி அறியப்போகிறேமென்று பரிக்ஷித்துவினுலே பிரசினம் பண்ணப்பட்டவராய்ச் சுகர் சொல்லுகின்றுர்.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் பரிக்ஷித்து மகாராஜனே! சுழலாநின்ற குயவ னுடைய சக்கரத்தின் மேலே இராநின்ற எறும்பு முதலான

ஜீவராசிகளுக்குக் கதியானது தேசாந்திரத்திலே காணப்படுவதுபோல, சக்கரகதிக்கு எறும்பு முதலானவைகளுடைய கதி வேருகவே யுண்டாயிருக்கிறதல்லவா? அப்படியே நக்ஷத்திர ராசிகளினுலே அறியப்படாநின்றும், மேருவையும், துருவனேயும், பிரதக்ஷணமாகச் சுற்ருநின்ற காலசக்கரத்துடனே கூட ஓடிக்கொண்டும், அந்தக் காலசக்கரத்தை ஆஸ்ரயித்து மிருக்கின்ற சூரியன் முதலான கிரகங்களுக்கும் வெவ்வேருன கதியானது நக்ஷத்திரங்களிலேயும் காணப்படுகிறபடியால், சூரியாதி கிரகங்களுடைய கதியானது கால சக்கரத்தினுடைய கதிக்கு வேருயிருக்கிறது. ஞான சக்தி முதலான குணங்களே யுடையவராயும், ஆதிபுருஷராயுமிருக்கிற சாட்சாத் நாராயணனே ஞானிகளினுலேயும், கர்மநிஷ்டர்களாலேயும், இச்சிக்கப்பட்டவராய் லோகங்களின் க்ஷேமத்தின் பொருட்டு, அந்தக் கால நியமத்தினுலே கர்மபூர்த்திக்கு நிமித்தமாயும், வேதமயமாயு மிருக்கிற தம்முடைய சொரூபத்தைப் பன்னிரண்டு பிரகாரமாகப் பிரித்து, வசந்த முதலான ஆறு ருதுக்களிலேயும் கர்மானுகுணமாக, சீதம் உஷ்ணம் முதலான ருதுகுணங்களேப் பண்ணுகிருர். இந்த லோகத்திலே அந்தச் சூரியபகவானே வர்ணுசிரம ஆசாரங்களிலே நிஷ்டையை யுடைய புருஷர்கள் வேதங்களிலே விதிக்கப்பட்டதாயிருக்கிற கர்மங்களினுலேயும், தியான சமாதிகளினுலேயும், சிரத்தையுடனே பூசித்துக் கொண்டு, அவரிடத்திலேயிருந்து மோக்ஷ முதலான அபீஷ்டத்தை அடைகின்ருர்கள். அந்த லோகங்களுக்கெல்லாம் ஆத்துமாவாய் சூரியாந்தரியாமியான பகவானுனவர் பூலோகம் சுவர்க்கலோகம் இவைகளுக்கு நடுவிலே யிராநின்ற ஆகாசமத்தியத்திலே காலசக்கரத்தை யடைந்தவனுய், ராசியென்று பெயரையுடையவைகளாயும், சம்வற்சரத்துக்கு அவயவங்களாயுமிருக்கிற பன்னிரண்டு மாதங்களேயும் அடைகின்ருர். அந்த ராசிகளேயே சாந்திராதி மான பேதத்தினுல் ருதுவென்றும் மாதமென்றும், பக்ஷத்துவயமென்றும், பகலென்றும், இரவென்றும் சொல்லுகிருர்கள். எவ்வளவு காலத்தினுலே சம்வற்சரத்தில் ஆறில் ஒரு பங்கை அடைகிருனே, அந்தக் காலமானது சம்வற்சரத்துக்கு அவயவமான ருதுவென்று சொல்லப்படும் பின்னும் சம்வற்சரத்துக்கு அர்த்தமான எவ்வளவு காலம் ஆகாய வீதியிலே சஞ்சரிக்கிருனே, அவ்வளவு காலத்தை அயனமென்று சொல்லுவார்கள். இன்னமும் அந்த ஆகாசமண்டத்தை சுவர்க்கம் பூமிகளின் மண்டலங்களோடு முழுமையும் எவ்வளவு காலத்தினுலே அடைகிருனே, அவ்வளவு காலத்தை

சம்வற்சரமென்றும், பரிவற்சரமென்றும், இதாவற்சர மென்றும், அனுவற்சரமென்றும், இத்துவற்சரமென்றும், சூரியனுடைய மந்த சம கதிகளினாலே சொல்லுகிறார்கள்.

இந்தப் பிரகாரம் சந்திரன் சூரியகிரணங்களுக்கு மேலாக லக்ஷம்யோசனைப் பிரமாணத்திலே பிரகாசிக்கின்றவனாய், சூரியனுடைய சம்வற்சர புக்தியை இரண்டு பக்ஷங்களினாலேயும், சூரியனுடைய மகா புக்தியை இரண்டேகால் நக்ஷத்திரங்களினாலேயும், சூரியனுடைய பக்ஷபுக்தியை ஒரு தினத்தினாலேயும், சூரியனுக்கு முன் நடக்கிறவனாயும் அதி விரைவான கமனத்தை யுடையவனாயும் தாண்டுகிறான். திரும்பவும் அமிர்தங்களினாலே விர்த்தி யடைந்து, குறைந்து போகின்ற கலைகளினாலே பிதுர்க்களுடைய அகோராத்திரங்களைச் சுக்கில கிருஷ்ண பக்ஷங்களினாலே பண்ணிக்கொண்டும், சமஸ்த ஜீவராசிகளுக்கும் அன்னமயனாகையால் ஜீவசொரூபனாயும், ஒவ்வொரு நக்ஷத்திரத்தை அறுபது நாழிகை யிருந்துகொண்டு அனுபவிக்கிறான். சோடச கலைகளுடனே கூடின சந்திரனே மகாபுருஷனான பகவானும் மனோமயனும் அன்னமயனும் அமிர்தமயனும், தேவர்கள் பிதுர்க்கள் மனுஷியர்கள் பூதங்கள் பசுக்கள் பக்ஷிகள் சர்ப்பங்கள் ஒஷதிகள் இவைகளுடைய பிராணன்களை யெல்லாம் போஷிக்கின்றவனுமாகையால், சர்வமயனென்றும் சொல்லுவார்கள். சந்திரனுக்கு மேலாக லக்ஷம்யோசனைப் பிரமாணத்திலே நக்ஷத்திரங்கள் காலசக்கரத்தில் ஈஸ்வரனாலே ஸ்தாபிக்கப்பட்டவைகளாய் அபிசித் தென்கிற நக்ஷத்திரத்தோடு கூட இருபத்தெட்டு நக்ஷத்திரங்களாய் மேருவைப் பிரதக்ஷணம் பண்ணுகின்றன. நக்ஷத்திர மண்டலத்துக்கு மேலே சுக்கிரன் இரண்டு லக்ஷம்யோசனைப் பிரமாணத்திலே சூரியனுக்கு முன்னும் பின்னும் கூடவும் சீக்கிர மந்த சம கதிகளினாலே சூரியனைப்போல லோகங்களுக்கு என்றைக்கும் அனுகூலமாயிருந்து சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். அந்தச் சுக்கிரனுடைய ராசி சலனத்தினாலே வருஷமானது உண்டென்று அறியப்படுகின்றது. அந்தச் சுக்கிரன் வருஷப் பிரதிபந்தங்களான கிரகங்களுடைய சக்தியை அடக்குகிறான். அந்தச் சுக்கிரனுக்கு மேலே இரண்டு லக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே காணப்படாநின்றும் லோகத்துக்குத் திராகச் சுபத்தையே பண்ணுகிறவனாயும், சோமனுடைய பிள்ளையான புதனானவன் எப்போது சூரியனோடு ஏகராசியில் நின்றும் பிரிகின்றானோ, அப்போது காற்று மழைகளினாலே பயத்தைச் சொல்லுவார்கள். அந்தப் புதனுக்கு மேலே

அங்காரகன் இரண்டு லக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே காணப்படா நின்றுகொண்டு, ஒவ்வொரு ராசியிலே நாற்பத்தைந்து நாளிருந்து பன்னிரண்டு ராசியையுந் தாண்டுகிறான். அந்த அங்காரகன் வக்கிரித்தானேயாகில் மிகவும் அசுபகிரகமாய் லோகங்களுக்குத் துக்கத்தையே உண்டாக்குவன். அங்காரக்கிரகத்துக்கு மேலே இரண்டு லக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே பகவானான பிரகஸ்பதி ஒவ்வொரு ராசியிலே வருஷபரியந்தஞ் சஞ்சரித்துக்கொண்டு வக்கிரித்தானாகில் திரளாகப் பிராமண குலத்துக்குப் பிரதிகூலனாயிருப்பன். பிரகஸ்பதிக்கு மேலே இரண்டு லக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே தோற்றப்படுமவனான சனியானவன் ஒவ்வொரு ராசியிலே முப்பதுமாதம் வரைக்கும் விளம்பித்துக்கொண்டு இந்தக் கிரகங்களின் பின்சென்று கொண்டிருப்பன். பன்னிரண்டாமிடம் ஜன்மராசி, இரண்டாமிடம் இவைகளிலிருக்கும்போது சகல ஜனங்களுக்குங் கஷ்டத்தையே பண்ணுவன். சனிக்கு மேலே பதினொருலக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே சப்தரிஷிகள் காணப்பட்டிருப்பார்கள். அவர்கள் லோகங்களுக்குச் சுகத்தை யுண்டாக்கிக்கொண்டு விஷ்ணுவினுடைய பரமமான பதத்தையும் பிரதக்ஷணம் பண்ணிக்கொண்டிருக்கின்றார்கள்.



## இருபத்துமூன்றாவது அத்தியாயம்



சோதிசக்கரத்துக்கு இருப்பிடமான துருவஸ்தானமும்
சிம்சுமாரரூபியான ஸ்ரீ ஹரியினுடைய ஸ்திதியுஞ்
சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

சப்தரிஷி மண்டலத்திற்கு மேலே பதின்மூன்று லக்ஷம் யோசனைப் பிரமாணத்திலே விஷ்ணுவினுடைய பரமமான பதமென்று சொல்லுகிறார்கள். அந்த ஸ்தானத்திலே மகாபாகவதனான உத்தானபாதனுடைய புத்திரனான துருவனானவன் அக்கினி, இந்திரன், பிரஜாபதி, காசியபன், எமன், இவர்களுடன் ஏககாலத்திலே கூடிக்கொண்டு நக்ஷத்திரரூபிகளான இவர்களாலே வெகுமானத்தோடுகூட பிரதக்ஷணம் பண்ணப்பட்டவனாய், கற்பகால பரியந்தம் ஆயுசையுடையவர்களுக்கு ஆஸ்ரயமாயிருக்கிறான். அந்தத் துருவ

னுடைய பிரபாவம் முன்னமே வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. அந்தத் துருவனென்னில் தேவதைகளாலும் அறியப் படாத வேகத்துடன் சுழற்றப்படா நின்ற நவக்கிரகங்கள் நக்ஷத்திரங்கள் முதலான சமஸ்தமான ஜோதிகணங் களுக்கும் மரணத்தைப்போலச் சலியாமல் ஆஸிரயமாக ஈஸ்வரனாலே நியமிக்கப்பட்டவனாய்ச் சர்வகாலமும் விளங்கு கிறான். எப்படி களத்தின் மத்தியிலே இரா நின்ற பந்தன ஸ்தம்பத்திலே கட்டப்பட்ட பிணையிலே அகப்பட்ட எருதுகள் திரிகாலத்திலும் அந்த ஸ்தானத்தை நீங் காமல் மண்டலாகாரமாகச் சஞ்சரிக்கின்றனவோ, அந்தப் பிரகாரம் நக்ஷத்திர கணங்கள் கிரகங்கள் முதலான ஜோதி கணங்கள் துருவனுக்கு உள்ளும், வெளியிலும், கட்டப் பட்டவைகளாயும், காலசக்கரத்தை யடைந்தவைகளாயும், துருவனைத்தானே பிடித்துகொண்டு வாயுவினாலே ஏவப் பட்டவைகளாய்க் கற்பகால பரியந்தஞ் சுழன்று கொண் டிருக்கின்றன.

ஆகாயத்தில் மேகங்களும் பக்ஷிகளும் காற்றில் அகப் பட்டவைகளாய் தம் தம் கர்மத்தை எப்படி உடையவை களாய்ச் சுழலுகின்றனவோ, அந்தப் பிரகாரம் ஜோதி கணங்களும் பிரகிருதி-புருஷ-சையோகத்தை யடைந்தவை களாயும், தங்கள் கர்மங்களினாலே உண்டாக்கப்பட்ட கதியை யுடையவைகளாயும் பூமியிலே விழுந்துபோகாமல் நிற் கின்றன. சிலயோகிகள் இந்த ஜோதிகணத்தைச் சிம்சுமார ரூபியாயும் பகவானாயுமிருக்கிற வாசுதேவருக்கு அவயவங் களாக யோகதாரணையிலே சொல்லுவார்கள். தலைகீழா யிருந்துங் குண்டலாகாரமாயுமிருக்கிற அந்தச்சிம்சுமாரத்தி னுடைய வாலின் நுனியிலே துருவனிருக்கிறான். வாலிலே பிரஜாபதி, அக்கினி, இந்திரன், தர்மன், இவர்களிருக் கிறார்கள். வால் அடியிலே தாதாவிதாதாக்களும், கடிப் பிரதேசத்திலே சப்த ரிஷிகளுமிருக்கிறார்கள். பிரதக்ஷிண மாகக் குண்டலாகாரமாய்ப் பண்ணப்பட்ட சரீரத்தை யுடையதான அந்தச் சிம்சுமாரத்தினுடைய தக்ஷணபாரி சத்திலே உத்தராயணங்களான அபிசித்து முதலாகப் புனர்வசு நக்ஷத்திர முடிவாக உண்டான பதினாலு நக்ஷத் திரங்கள் ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன. தக்ஷிணாயணங் களான பூசமுதலான உத்திராடமுடிவாயுள்ள பதினாலு நக்ஷத்திரங்களும் அந்தச் சிம்சுமாரத்தினுடைய இடது பாரிசத்திலே யிருக்கின்றன. இவை குண்டலாகாரமான சிம்சுமாரனுடைய உபயபாரிசங்களிலும், அவயவங்களைப்

போலச் சமானசங்கைகளை யுடையவைகளாயிருக்கின்றன. அதைச் சொல்லுகிறோம் கேளும். முதுகிலே அசுவினியும்; வயிற்றிலே ஆகாசகங்கையும், வலது இடதுகளான நிதம்பப்பிரதேசங்களிலே புனர்வசு பூசங்களும், வலக்கால் இடக்கால்களிலே திருவாதிரையும் ஆயிலியமும், வலமூக்கு இடமூக்குகளிலே அபிசித்தும் உத்திராடமும், வலக்கண் இடக்கண்களிலே திருவோணமும் பூராடமும், வலக்காது இடதுகாதுகளில் அவிட்டமும் மூலமும், தக்ஷிணாயண நக்ஷத்திரங்களான மகமுதலாய் எட்டு நக்ஷத்திரங்களும் இடப்பக்கமான மார்பிலும், அப்படித்தானே உத்தராயண நக்ஷத்திரங்களான மிருகசீரிஷ முதலாய்த் தலைகீழாய் எண்ணப்படாநின்ற எட்டு நக்ஷத்திரங்கள் வலப்பக்கமான மார்பிலேயும், வலத்தோள் இடத்தோள்களிலே சதயமும் கேட்டையும், ஸ்தாபிக்கப்பட்டவைகளாய்ச் சிம்சுமாரசுரூபியான பகவானை யோகாப்பியாசத்தினாலே யறியக்கடவன். சிம்சுமாரனுடைய வலதுதாடையிலே எமனும், இடது தாடையிலே அகஸ்தியரும், முகத்திலே அங்காரகனும், உபஸ்தத்திலே சனியும், பிடரியிலே பிரகஸ்பதியும், மார்பிலே சூரியனும், இருதயத்திலே நாராயணரும், மனதிலே சந்திரனும், நாபியிலே சுக்கிரனும், ஸ்தனங்களிலே அசுவினி தேவதைகளும், பிராண அபான வாயுக்களிலே புதனும், கழுத்திலே ராகுவும், சர்வாங்கங்களிலே கேதுவும், ரோமங்களிலே சமஸ்தமான நக்ஷத்திரகணங்களும் இந்தப் பிரகாரம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. பகவானான மகாவிஷ்ணுவினுடைய சர்வ தேவமயமான இந்தச் சிம்சுமாரரூபத்தை, நாள்தோறும் சந்தியாகாலத்திலே சுசியாய் மௌனத்தோடு பார்த்துக் கொண்டு ஸ்தோத்திரம் பண்ணக்கடவன். ஜோதிர்கணங்களுக்கு ஆதாரமாயும் தேவதைகளுக்கெல்லாம் பிரபுவாயும் காலசக்கர ரூபியாயும், இருக்கிற மகா புருஷனான விஷ்ணுவின் பொருட்டுப் பிரணாமம் பண்ணுகிறேனென்று துதிக்கின்றான். சூரியன் முதலான கிரகங்கள் அசுவனி முதலான நக்ஷத்திரங்கள் இவைகளுடைய சொரூபமாயும், அதிதேவதைகளுக்குப் பிரபுவாயும், மந்திர ஜபசீலருடைய பாபத்தைப் போக்கடிக்கின்றவராயு மிருக்கும் இந்தப் பகவத் ரூபத்தைத் திரிகாலத்திலே சிரத்தையுடனே நினைக்கிறவனுக்கும், பிரணாமம் பண்ணுகிறவனுக்கும் அந்தந்தக் காலங்களிலே உண்டான பாபம் அந்தந்த க்ஷணத்திலேயே நசித்துப்போகும்.

## இருபத்துநான்காவது அத்தியாயம்

*அதல முதலான ஏழுலோகங்களினுடைய மரியாதைகள் வர்ணிக்கப்படுகின்றன.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

இராஜ ராஜனே! சூரியமண்டலத்துக்குப் பதினாயிரம் யோசனைப் பிரமாணத்துக்குக்கீழே ராகுவானவன் நக்ஷத்திரம்போலே சஞ்சரிக்கிறானென்று சிலர் சொல்லுவார்கள். அசுராத்துமனாயும், ஸிம்மிகாபுத்திரனாயும், இருக்கிறயாதொரு ராகுவானவன், தேவனாயிருத்தலுக்கும் நவக்கிரகங்களிலேயொருவனாயிருத்தலுக்கும் யோக்கியனாகாமலிருந்தாலும், பகவானுடைய கிருபையினாலே அவ்வுன்னத நிலைமைகளுக்கு உரியவனானான். அவனுடைய ஜன்மகர்மங்களை மேலே சொல்லுகிறோம். பிரகாசியாநின்ற சூரியனுடைய யாதொரு மண்டலமுண்டோ, அந்த மண்டலத்தைப் பதினாயிரம் யோசனை விஸ்தாரமாகச் சொல்லுவார்கள். சந்திரமண்டலத்தைப் பன்னீராயிரம் யோசனை விஸ்தாரமாகச் சொல்லுவார்கள். ராகு மண்டலத்தைப் பதின்மூவாயிரம் யோசனை விஸ்தாரமாகச் சொல்லுவார்கள். யாதொரு ராகுவானவன் அமிர்தபானம் பண்ணும்போது சூரிய சந்திரரிருவருக்கும் மத்தியிலே யிருந்துகொண்டு அவர்களிருவரையும் மறைத்துக்கொண்டிருந்தபடியினாலே அவர்களுடனே விரோதித்தவனாய் அதனாலே பாவகாலங்களிலே சூரிய சந்திரரிருவரையும் கிரகிக்க ஓடி வருகின்றான். சூரியசந்திருடைய அந்த ஆபத்தைப்பார்த்து அவர்களை ரக்ஷிப்பதின் பொருட்டு, பகவானாலே பிரயோகிக்கப்பட்டதாயும், சுதரிசனமெனும் பெயரை யுடையதாயும், தேஜசினாலே சகிக்கக்கூடாததாயும் அடிக்கடி சுழன்றுகொண்டும் வருகின்ற பகவத்சம்பந்தியான சக்கரத்தைப்பார்த்து, முகூர்த்தகாலம் சூரிய சந்திருக்கு அபிமுகரா யிருந்து கொண்டு ராகுவானவன் மிகவும் பயத்தோடுகூடினவனாய், தொந்த மனதை யுடையவனாய், தூரத்திலே தானே திரும்பிவிடுகின்றான். அதை லோகமானது * உபராகமென்று சொல்லும். அந்த உபராகத்திலே அந்த ராகுமண்டலமானது சூரிய-சந்திர-மண்டலங்களுக்கு நேராகவிருந்தால் பூரண உபராகமென்றும் பக்கச் சாய்வாயிருந்தால் குறைச்சலாயிருக்கிற உபராகமென்றுஞ் சொல்லுவார்கள். நடுவே வெகுதூரம் இடமிருக்கிற

* உபராகம்=கிரகணம்.

படியினலே யதார்த்தமாக சூரிய சந்திரரை ராகுவானவன் பிடிக்கிறதில்லை. அந்த ராகுமண்டலத்துக்குக்கீழே பதினுயிரம் யோசனைப்பிரமாணத்திலே, சித்தர்கள், சாரணர்கள், வித்தியாதரர்கள் இவர்களுடைய கிரகங்கள் உண்டாயிருக்கின்றன. அதற்குக் கீழே ஆகாயமானது, யக்ஷர்கள், ராக்ஷசர்கள், பிசாசர்கள், பிரேதர்கள், பூதகணங்கள் இவைகளுடைய விவகாரத்துக்கு ஸ்தானமாயிருக்கிறது. எந்த மட்டுக்கும் வாயு வீசுகிருனே, எந்தமட்டுக்கும் மேகங்கள் தெரியப்படுகிறதோ, அதை ஆகாசமென்று சொல்லுவார்கள். மேகமண்டலத்துக்கு நூறுயோசனைப் பிரமாணத்தின் கீழே இந்தப் பூமண்டலம் உண்டாயிருக்கின்றது. அம்சம் கருடன் முதலான பக்ஷி சிரேஷ்டங்கள் எந்தமட்டுக்கும் உயரப்படுகின்றனவோ, அந்தமட்டுக்கும் பூமண்டல சமஸ்தானமென்று சொல்லப்படுகின்றது. இந்தப்பிரகாரம் பூமியினுடைய ஸ்திதியானது எதாசாஸ்திரமாக வர்ணிக்கப்படுகின்றது. இந்தப் பூமிக்குக் கீழே ஏழுபிலங்களென்னப்பட்ட லோகங்கள் ஒவ்வொன்றும் பதினுயிரம் யோசனை விஸ்தாரம் உயர்ச்சியை யுடையவைகளாயும், அண்டகடாக பரியந்தம் அகன்ற விஸ்தாரத்தை யுடையனவாயும், பகவானுலே நியமிக்கப்பட்டிருக்கின்றன. அதலமென்றும், விதலமென்றும், சுதலமென்றும், தராதலமென்றும், மகாதலமென்றும், ரசாதலமென்றும், பாதாளமென்றும் அந்த லோகங்களுக்குப் பெயர். சுவர்க்கத்தைப்பார்க்கிலும் அதிகமான சர்வசம்பத்துக்கள், காமபோகங்கள் ஐசுவரியானந்தம் இவைகளினுலே நிரையப்பெற்ற கிரகங்கள் உத்தியான வனங்கள், கிரீடாவிகார ஸ்தானங்கள் இவைகளை யுடையதான இந்தப் பில சுவர்க்கங்களிலே தைத்தியர்கள் முதலான எல்லோரும் நித்திய சந்தோஷிகளாயும் அனுராகத்தை யுடையவர்களாயுமிருக்கிற பாரியா புத்திர பந்து சுகிர்து பரிசாரகரை யுடையவர்களாகியும், கிரகபதிகளாயும், ஈசுவரனுலே சித்தியாநின்ற காமத்தை யுடையவர்களாயும், மாயாவினேதத்தை யுடையவர்களாயும் வாசம் பண்ணுகிருர்கள்.

மகாராஜனே! இந்தப் பிலசுவர்க்கங்களிலே மாயாவியான மாயனுலே நிர்மிக்கப்பட்டவைகளாய் நானுவித இரத்தின சிரேஷ்டங்களாலே இழைக்கப்பட்ட விசித்திர கிருகங்கள், பிராகாரங்கள்-கோபுரங்கள்-சபைகள்-நாற்சந்திச்சாவடிகள்-ராஜவீதிகள் முதலானவைகளிலேயும் நாக தம்பதிகள் அசுரதம்பதிகள்-மாடப்புருக்கள்-கிளிகள்-சாரிகைகள் இவைகளினுலே கானம் பண்ணப்படாநின்ற உப்பரிகைகள் முத

லான ஸ்தானங்களையுடையவைகளான பிலசொர்க்காதிபதிக ளுடைய உத்தம கிருகங்களினாலே அலங்கரிக்கப்பட்டவைக ளாய்ப் பட்டணங்கள் விளங்குகின்றன. யாதொரு லோகங் களிலே பூங்கொத்துகளையும் விருக்ஷங்களையுமுடைய உத்தி யானவனங்கள் நானாவிதமான மிருகங்கள், பக்ஷிகள், நிர்மல மான ஜலங்கள், மச்சங்கள், ஆம்பல்-நெய்தல்-செங்கழுநீர்- செந்தாமரை முதலானவைகளினாலே சுவர்க்கலோகத்தி னுடைய சம்பத்தை அதிசயிக்கின்றன. இந்தப் பில சொர்க் கங்களிலே வாசம் பண்ணுகிறவர்களுக்கு நரை திரை மூப்பு முதலானவைகளும் உண்டாகிறதில்லை. அந்த பில சொர்க் கங்களுக்குள்ளே அதலமென்கிற லோகத்திலே மயனுடைய பிள்ளையான சுபலனானவன் வாசம் பண்ணிக்கொண் டிருக்கி றான். அவனாலே இந்த லோகத்திலே சிருஷ்டிக்கப்பட்ட தொண்ணூற்றாறு மாய்கைகளுக்குள்ளே சில மாய்கைகளை இப்போதும் மாயாவிகள் தரித்துக் கொண்டிருக்கிறார்கள். போகத்திலே ஆசக்தனான அந்தச் சுபலனுடைய முகத்திலே யிருந்து ஸ்வைநிணிக ளென்றும், காமினிக ளென்றும், புமும்சலிகளென்றும் மூன்றுவிதமான ஸ்திரீகணங்களுண் டானார்கள். இந்த ஸ்திரீகணங்களிலே தன் ஜாதியிலேயே விபசரித்திருக்கிறவர்கள் காமினியென்றும், சகல ஜாதிகளி லேயும் சகல புருஷர்களுடனேயும் மிகவும் காமாதுரையாய் விபசரிக்கிறவர்கள் புமும்சலியென்றும் சொல்லப்படுவார்கள். அந்த அதலத்துக்குக் கீழான விதலலோகத்திலே ஆடகேசு வரனென்று பிரசித்தபகவானான ருத்திரன் பாரிஷிகளான பூதகணங்களினாலே சூழப்பட்டவராய்ப் பிரஜாவிர்த்தியின் பொருட்டுப் பார்வதியுடனே கூட கிரீடித்துக் கொண்டிருக் கிறார். யாதொரு பார்வதிபரமேசுவரர்களுடைய வீரியத்தி னாலே ஆடகமென்று பெயரையுடையதான நதி சிரேஷ்ட மானது பிரவகித்துக்கொண்டிருக்கின்றது.

அந்த விதல லோகத்துக்குக் கீழ்ப்பட்ட சுதலலோகத் திலே உதாரகுணனாயும், புண்ணியகீர்த்தியாயுமிருக்கிற விரோ சனனுடைய பிள்ளையான பலி சக்கரவர்த்தியானவன் இந்திர னுக்குப் பிரியத்தைப் பண்ணவேண்டுமென்கிற இச்சை யினாலே அதிதி தேவியினிடத்திலே வாமனரூபமாக அவ தரித்த பகவானாலே அபகரிக்கப்பட்ட தன்னுடைய லோகத் திரயத்தையும் உடையவனாய் அந்தப் பகவானுடைய கிருபை யினாலேதானே அந்தப் பாதாளசுவர்க்கத்திற் பிரவேசிக்கப் பட்டவனாய் இந்திராதிகளுக்குங் கிடையாத சம்பூர்ணமான ஐசுவரியத்தோடு கூடியவனாய், சுதர்மத்தினாலே ஆராதிக்கத்

தக்கவரான அந்தப் பகவானையே ஆராதித்துக்கொண்டு இப்போதும் நிர்ப்பயனாயிருக்கிறான். அந்த பலிசக்கரவர்த்திக்குச் சகலராஜ்யாதியத்தைச் சிறிதுபோல் பூமி தானத்துக்குப் பலமென்று சொல்லுவார்கள். அதுவே பலமாகமாட்டாது. அதெப்படியென்றால், பகவானும் சகலபிராணிகளுக்கும் அந்தரியாமியாயுமிருக்கிற வாசுதேவருடைய பாக்கிய வசத்தினாலே கிடையாநின்ற சத்பாத்திரத்திலே பரமயான சிரத்தையினாலே கொடுக்கப்பட்டதாயும் சாக்ஷாத் மோக்ஷத்துக்கு ஏதுவாயுமிருக்கிற தானத்துக்குப் பிரசித்தமான இந்த சுதல லோகாதிபத்தியமானது முக்கியமான பலமாகமாட்டாது. அந்த பகவானுடைய நாமத்தைப் புருஷனானவன் ஒருதரம் சொல்வதால் அவன் சகல கர்மபந்தத்தையும் சீக்கிரமாக உதறிப்போடுவன். பரமாத்துமாவான பகவானாலே யாதொரு பலிசக்கரவர்த்தியானவன் பிலிசுவர்க்க ஐசுவரியத்திலே நியமிக்கப்பட்டானே, யாதொரு காரணத்தினாலே ஆத்துமதியானத்துக்கு விக்கினமாயும், பகவானுடைய மாயா விலாசமாயுமிருக்கிற போக ஐசுவரியத்தையே திரும்பவும் பகவானால் எவன் கொடுக்கப்பெற்றானே, அந்த பலிசக்கரவர்த்தி நன்றாக அநுக்கிரகிக்கப்பட்டவரன்று. பகவானாலே யாசனையென்கிற வியாஜத்தினாலே அபகரிக்கப்பட்ட லோகத்திரயத்தையுடையவனாயும், சரீரத்துடனேயும், வருணபாசங்களினாலே நன்றாகக் கட்டப்பட்டும் பர்வத குகையிலே தள்ளப்பட்டவனாயுமிருக்கிற பலிசக்கரவர்த்தியானவன் ஒரு வார்த்தைச்சொல்லுகின்றான். இந்திரனானவன் தெரிந்தவனாயிருந்தாலும் புருஷார்த்தங்களிலே சமர்த்தனன்று. அந்த இந்திரனுக்கு யோசனையின் பொருட்டு பிரகஸ்பதியானவர் மந்திரியாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறார். அந்த பிரகஸ்பதியை யன்றித் தானே உபேந்திரனை முன்னிட்டுக்கொண்டு தன்னுடைய மனோரதமான லோகத்திரயத்தை என்னிடத்தில் யாசித்தபடியினால் இந்திரன் தெரிந்தவனன்று. ஒருத்தராலும் அறியக்கூடாத வேகத்தையுடைய இந்தக் காலத்துக்கு மன்வந்தர பரியந்தம் இராநின்ற இந்தத் திரைலோக்கிய ஐசுவரியம் எவ்வளவு என்று தள்ளி பகவானுடைய தாஸியத்தையே நம்முடைய பாட்டனான பிரகலாதனானவன் பிரார்த்தித்தானல்லவா? தன் பிதா மரித்த பிற்பாடு பகவானாலே கொடுக்கப்பட்டும் நிர்ப்பயமாயும், தகப்பனுடையதாயுமிருக்கிற இந்தத் திரைலோக்கிய ஐசுவரியத்தைப் பிரார்த்தியாமற்போனானல்லவா? மகானுபாவனான அவனுடைய மார்க்கத்தை ராக துவேஷாதிகளாலே விடப்படாதவனாயுமிருக்கிற என்னைப் போன்றவன் எவன்தான் அடைய இச்சிக்கப் போகிறா

னென்று இந்தப் பிரகாரம் பலிசக்கரவர்த்தியானவன் சொன்னான். அந்தப் பலிசக்கரவர்த்தியினுடைய வாசலிலே பகவானும், அகிலலோக குருவாயுமிருக்கிற நாராயணன் கதாபாணியாய் சுயஜனங்களிடத்திலே தயை பண்ணப்பட்ட இருதயத்தையுடையவராய் எப்போதுமிருக்கிறார். அந்த பலிசக்கரவர்த்தியினுடைய பாதாங் குஷ்டத்திலே இராவணனவன் திக்கு விஜயத்திலே பதினாயிரம்யோசனைக்கும் அப்பாலே தள்ளப்பட்டான். அப்படிப்பட்ட பலிசக்கரவர்த்தியினுடைய சரித்திரத்தை மேல் அஷ்டம ஸ்கந்தத்தில் விஸ்தரித்துச் சொல்லப்போகிறோம். அந்தச் சுதல லோகத்துக்குக் கீழே தராதல லோகத்திலே மயனென்று பிரசித்தனாய் திரிபுராதிபதியான தானவேந்திரன் மகா சக்திமானாயும், திரிபுராந்தகனாயும், திரிலோகத்திலும் சஞ்சரிக்க வேண்டுமென்கிற இச்சனையை யுடையவனாயுமிருக்கிற ருத்திரனாலே தகிக்கப்பட்ட தன்னுடைய திரிபுரத்தை யுடையவனாய் அந்த ருத்திரனுடைய பிரசாதத்தினாலே அடையப்பட்ட ஸ்தானத்தையுடையவனாய் மாயாசாரியனாய் மகாதேவனாலே ரக்ஷிக்கப்பட்டவனாய், சக்கரபயமில்லாதவனாய்த் தானவர்களாலே பூசிக்கப்பட்டிருக்கிறான்.

அந்தத் தராதல லோகத்துக்குங் கீழே மகாதலமென்கிற லோகத்திலே அனேகம் சிரசுகளோடு கூடின சர்ப்பங்களுடைய குரோதவசமென்று பிரசித்தமான கணங்கள்-குளிகன்-தக்ஷகன்-காளியன்-சுதேஷணன் முதலான பேர்களைப் பிரதானமாகவுடையவைகளாயும் விஷ்ணுவினுடைய வாகனமான கருடனுக்குச் சர்வகாலமும் பயந்தவைகளாயும் தங்களுடைய பாரியைகள் புத்திரர்கள் சிநேகிதர்கள் முதலான சம்சாரத்திலே ஆசக்தியினாலே சில விடங்களிலே மதித்தவைகளாய் விளையாடுகின்றன. அந்த மகாதலத்துக்குக் கீழே ரசாதலமென்கிற லோகத்திலே தைத்தியர்கள் நிவாதகவசர்கள் இரணியனுடைய பட்டணத்திலே வாசம் பண்ணுகின்ற காலகேயர்கள் இவர்களெல்லாம் தேவதைகளுக்கு எதிரிகளாய்ப் பிறக்கும்போது உண்டான பராக்கிரமத்தையுடையவர்களாய் சகல லோகங்களிலும் பிரபாவத்தையுடையவரான ஸ்ரீ ஹரியினுடைய தேஜசினாலே போக்கடிக்கப்பட்ட கர்வத்தை யுடையவர்களாய், சர்ப்பங்கள் போல வாசம் பண்ணுகின்றார்கள். யாதொரு காலகேயாதிகள் இந்திரனுடைய தூதியான பெண்ணாசையினாலே சொல்லப்படுகின்ற மந்திர வர்ணரூபங்களான வாக்குகளினாலே இந்திரனிடத்தில் நின்றும் பயப்படுகின்றார்கள். அந்த ரசாதலத்துக்

குக் கீழே பாதாள லோகத்திலே நாகலோகாதிபதிகளாயும், வாசுகி முதலானவர்களாயும், சங்கன் - குளிகன் மகாசங்கன் - சுவேதன் - தனஞ்சயன் - திருதராஷ்டன் - சங்கசூடன் - கம்பளன் - அசுவதரன் - வேததத்தன் முதலான மகாசர்ப்பர்கள் பெரிய படங்களையும், கொடிய விஷங்களையுமுடையவர்களாய் வசிக்கிறார்கள். அநேகம் சிரசுகளோடு கூடின சர்ப்பங்களினுடைய படங்களிலே யிராநின்ற மகாகாந்திகளோடுங்கூடிய இரத்தினங்கள் அந்தப்பாதாள பிலத்திலே யிருக்கிற * அந்தகாரத்தைத் தங்களுடைய காந்தியினாலே போக்கடிக்கின்றன.



## இருபத்தைந்தாவது அத்தியாயம்



ஆதிசேஷ மூர்த்தியினுடைய ஸ்தானம் முதலியன வர்ணிக்கப்படுகின்றன.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

மகாராஜாவே! அந்த பாதாள லோகத்துக்கு முப்பதினாயிரம் யோசனைப் பிரமாணத்தின் கீழே பகவானுடைய தமோகுணத்தைப் பிரதானமாகவுடைய அனந்தமென்று சொல்லப்பட்ட பெயரையுடைய ஒரு அம்சமிருக்கிறது. அனந்தமூர்த்தியாயும் சகஸ்திரசிரசுக்களை யுடையவராயுமிருக்கிற அந்த பகவானுடைய ஒரு சிரசிலே தரிக்கப்படுவதான இந்தப் பூமண்டலம் கடுகுபோல காணப்படுகின்றது. இந்தப் பூமண்டலத்தைக் காலவசத்தினால் சங்கரிக்கவேணுமெனும் இச்சையைக் கொண்டு அம்மூர்த்தியினுடைய கோபத்தினாலே அவருடைய புருவமத்தியிற் றோன்றிய சங்கருஷ்ணனென்கிற ருத்திரனானவன் ஏகாதசருத்திரர்களெனும் பதினொரு ரூபத்தையுடையவனாய் மூன்று கண்களையும் மூன்று சிகையுடனே கூடின சூலத்தையுடையவனாக விருக்கின்றான். ஆதிசேஷ மூர்த்தியான சங்கருஷ்ணருடைய விஷயமான பக்தியிற் சிறந்த சர்ப்ப சிரேஷ்டர்களும் அங்கிருக்கிறார்கள். சிறந்தகுணங்கள் வாய்ந்த நாக கன்னியர்கள் அவ்வனந்த மூர்த்திக்கு பலவித உபசாரங்கள் புரிந்தும் அவரைத் தமக்குற்ற நாயகராக வடைந்தும் இருக்கிறார்கள்.

* அந்தகாரம்—இருள்.

அந்த அனந்தரானவர் லோகங்களினுடைய க்ஷேமத்தின் பொருட்டு உபசங்காரம் பண்ணப்பட்ட பொறுமை கோபம் இவைகளுடைய வேகத்தை யுடையவராயிருக்கின்ருர். தேவர்களாலும் அசுரர்களாலும் தியானம் பண்ணப்படுகிறவராயும், அற்புதமான ஒரு குண்டலத்தை யுடையவராயும், தம்முடைய வைஜயிந்தியென்கிற வனமாலையை தரித்தவராயு மிருக்கிருர். மோக்ஷத்தையடைய இச்சிக்கும் சுத்த புருஷர்களுடைய இருதயத்தில் ஆவிர்பவித்திருக்கும் அப்பகவானுடைய பிரபாவத்தை நாரதமுனிவர் பிர்மசபையிலே தும்புருவோடும் கீர்த்தனம் பண்ணுகிருர். இந்தப் பிரபஞ்சத்தினுடைய வுற்பத்தி - ஸ்திதி - நாசங்களுக்கு காரணமாயும் சத்துவ - ரஜஸ் - தமோரூபங்களாயு மிருக்கிற பிரகிருதி குணங்களானவை எந்த ஆதிசேஷனுடைய கடாக்ஷத்தினுலே சிருஷ்டிக்குந் தன்மையை வகித்தனவோ, அந்த அனந்த சொரூபனை மனிதன் எப்படி அறியமுடியும்? அந்த அனந்தனைத் தவிர வேறு யாரை புருஷன் சரணமாக அடைவன். சகஸ்திர சிரசையுடையவரான அந்த பகவானுடைய ஒரு சிரசில் அநேக பர்வதங்கள் - நதிகள் - சமுத்திரங்கள் ஜீவஜந்துக்கள் ஆகியவைகளுக் கிருப்பிடமான இந்தப் பூமண்டலம் ஒரு பரமாணுபோல விளங்கியிருக்கின்றது. இப்படிப்பட்ட பிரபாவத்தையுடைய அனந்தமூர்த்தி பூமி முதலான எமலோகத்துக்கும் கீழே ஆதாரமாயிருந்து கொண்டு, லீலையினுலே ஸ்திதியின் பொருட்டுப் பூமியைத்தரித்துக் கொண்டிருக்கிருர். மனுஷியர்களாலே அடையத் தக்கவைகளான கதிகள் இவ்வளவும் சாஸ்திர பிரகாரம் உனக்குச் சொல்லப்பட்டன. இன்னும் கேட்க வேண்டியதைக் கேள் என சுகமுனிவர் உரைத்தனர்.



## இருபத்தாருவது அத்தியாயம்



*நரகங்களிலே எமதூதர்களாலே தடுக்கப்படுகிற பாபிகளின் பாதாள மூலத்துக்குங் கீழான அப்படிப்பட்ட நகரங்களினுடைய ஸ்திதி சொல்லப்படுகின்றது.*

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

மகரிஷே! இந்த லோகங்கள் ஒன்றுக்கொன்று விசித்திரமான சம்பந்தத்தைப் பெற்று ஆச்சரியமா யமைந்திருக்கின்றது. அதைப்பற்றி கேட்கக் கேட்க ஆனந்தமும் அச்சு

தன் விஷயம் ஆர்வமு முண்டாகின்றது, ஆதலின் அவைகளைப்பற்றிய விஷயங்களை விவரமாக சொல்லவேண்டுமென்ற அரசனை அன்பால் நோக்கி சுகர் சொல்லுகிறார்: மகாராஜாவே! கர்ம கர்த்தாவான புருஷன் திரிகுணங்களையுடையவனான படியினாலே சிரத்தையும், கர்மகதிகளும் வெவ்வேறாக வுண்டாகின்றன. நிஷித்தகர்மமான அதர்மத்தினுடைய கர்த்தாவுக்கு சிரத்தாபேதத்தினால் கர்மபலமும் விருத்தமாக வுண்டாயிருக்கிறது. அஞ்ஞான மூலமான இச்சையினால் உண்டாம் கர்மங்களுடைய பலசொரூபங்களாய் நானாவித நாகங்கள் தக்ஷிணை திக்கிலே பூமிக்குக் கீழும், அண்ட ஜலத்துக்கு மேலுமாக உண்டாயிருக்கின்றன. அங்கே சூவர்த்தர்கள் முதலான பிதுர்கணங்கள் தங்களுடைய குலங்களுக்கு பரமமான சமாதியினால் சத்திய ஆசீர்வசனங்களை யுரைத்துக்கொண்டு வாசம் பண்ணுகிறார்கள். அந்தத் திக்கிலே பகவானாயும், பிதுர்பதியாயும், வைவசுவென்று பிரசித்தனாயு மிருக்கிற இயமன், தீயகர்மங்களை புரிவாரை மரணகாலத்து தமது தூதர்களால்தருவித்து அவர்களுடைய துஷ்டகர்மங்களுக்குத் தக்கபடி தாண்டக்கூடாத பகவதாக்கினையைக் கொண்டு சிக்ஷை செய்கின்றான். தாமிசிரம், அந்ததாமிசிரம், ரவுரவம், மகாரவுரவம், கும்பிபாகம், காலசூத்திரம், அசிபத்திரவனம், சூகரமுகம், அந்தகூபம், கிருமிபோசனம், சந்தங்கிசம், சூாமி, வச்சிரகண்டகம், சலமரி, வைதாணி, பூயோதம், பராணரோதம், வைச்சம், லாலாபக்ஷம், சாரமேயாதனம், விசிரியபானம், ஷாரகார்த்தபம், ரக்ஷோகுணபோசனம், சூலப்புரோதம், தெந்தசூகம், வடதிரோதானம், பரியாவர்த்தனம், சூசிமுகம் எனும் நானாப் பிரகாரங்களான யாதனா அனுபவ தேசங்களான இருபத்தெட்டு வகை நரகங்கள் உண்டாயிருக்கின்றன.

பிறர் பொருளைத் தீயவெண்ணங்கொண்டு அபகரிப்போர் விஷம்போலும் நமனது படர்களால் தள்ளப்பட்டு அடைக்கலம் புகுவதற்கு மொருவரு மிலாத தாமிசிரமெனும் இருள்மயமான நரகமடைவார்கள், தமது மக்களும் மனைவியரும் மனம் வருந்தி துன்புறும்படி செய்தவர்கள் நாவிலூறும் இரசமுமின்றி வெந்து மெலிந்து தாமிசிரமெனும் கொடு நரகடைவார்கள், ஏழைப் பிராணிகள் வருந்தி சாகும்படி ஹிம்சைபுரியுந் தீயர்கள் கோடி வருஷ காலம் மனங்கொதித்து புலம்பும்படி யமகிங்கரர்கள் கோபித்து பல தடவையுமோதி மோதும்படியான ரவுரவமெனும் நரகமெய்துவார்கள், சொல்லக்கூடாத பொய் பேசுபவர்களும்,

ஆசையுடன் மதுவருந்தும் கீழ்மக்களும், தமது வாயினிடமாக ஒளிபொருந்திய அக்கினிமயமான உருக்கிய செம்பை வார்க்கும்படி பயங்கரமான நரகத்தில் தள்ளுண்டு சேர்வார்கள், உணவளிப்பார்களெனத் தமையடைந்த விருந்தினரை விழியால் கடிந்து பார்த்தவர்கள் கோடி பருந்துகள் தம்மைப் பறித்துண்ணும்படி நரகத்தில் வருந்தி வாழ்வார்கள், அன்பிலாமல் நாள்பட்ட விரோதத்தால் பிறரது செழுமை பொருந்திய வீட்டைத் தீப்பற்றவைத்து கொடியர்கள் பல நாய்கள் தமது சரீரம் முழுதும் கடித்து இங்கு மங்குமாக விழுத்துத் திரியும்படியான நரகம் புகுவார்கள், எவன் மாதா பிதாக்களுக்கும் பிராமணர்களுக்கும் துரோகம் பண்ணுகிறானோ அவன் காலசூத்திரமெனும் பிரசித்தமான பதினாயிரம் யோசனை விஸ்தாரமுள்ள நரகத்திலே தாம்பிர பாத்திரத்திலே போட்டுக் கீழுமேலும் அக்கினியினால் தகிக்கப்படுகிறான். இந்த லோகத்தில் எவன் தன்னுடைய சதுர்வேத மார்க்கத்தைவிட்டு பாப சமூகமான பாஷண்டமெனும் பிரசித்தமான துர்மார்க்கத்தை யடைகிறானோ அவன், அசிபத்திரவன மென்னப்பட்ட நரகத்திலே தள்ளப்படுகிறான். எந்த புருஷன் இந்த லோகத்திலே பஞ்ச மகா யக்கியங்களை விட்டு சம்பாதிக்கப்பட்ட அன்னத்தைப் புசிக்கிறானோ அவன் லோகாந்தரத்திலே கிருமிபோஜன மென்கிற நரகத்திலே தள்ளப்படுவன்.

இந்த லோகத்திலே தாம் அடையக்கூடாத ஸ்திரீயையும், தாம் அடையக்கூடாத புருஷனையும், துர்மார்க்கத்திலே எவர்கள் அடைகிறார்களோ அவர்கள் லோகாந்தரத்திலே தீக்ஷணமான ஜாட்டியினாலே அடிபட்டு அக்கினி மயமாயிருக்கிற ஸ்தம்பத்தை ஆலிங்கனம் பண்ணிவைக்கும் சூரமியென்னும் நரகத்தில் தள்ளப்படுவார்கள். எவன் சர்வவர்ன ஸ்திரீகளுடனே சங்கமத்தையுடையவனாய்ச் சமஸ்த பிராணிகளையும் உயிரோடு இம்சிக்கிறானோ அவன் லோகாந்தரத்திலே முள்ளுகளையுடைய இலவமரத்தின் மேலேற்றி வச்சிர கண்டகமென்னும் நரகத்தில் தள்ளப்படுவன். எவன் வேட்டையிலே சமர்த்தனாய் நிமித்தியமில்லாமல் மிருகங்களைக் கொல்லுகிறானோ அவன் லோகாந்தரத்திலே எமபுருஷர்களுடைய பாணங்களினாலே பிளக்கப்பட்டு பாணரோத மென்னும் நரகத்தில் தள்ளப்படுவன். எவர்கள் எக்கியங்களிலே பசு இம்சையைப் பண்ணுகிறார்களோ அவர்கள் லோகாந்தரத்திலே வைச்சமென்னும் நரகத்திலே தள்ளப்படுவார்கள். எவர்கள் இவ்விடத்தில் மகா குரூரமான சுபா

வத்தை யுடையவர்களாய்ச், சர்ப்பங்கள் போலப் பிராணிகளை மிரட்டிப் பயமுறுத்துகிறார்களோ, அவர்கள் மரித்தபின் தெந்தசூகமென்கிற நரகத்திலே தள்ளப்படுவார்கள். எவர்கள் இவ்விடத்தில் பாலர்களையும், அந்தகர்களையும், துர்ப்பலர்களான இதரபிராணிகளையும், பள்ளங்களிலும், பாழ்வீடு முதலானவைகளிலும் அடைத்துத் தகைந்து வைக்கிறார்களோ அவர்கள் லோகாந்தரத்திலே வடநிரோதான மென்னும் நரகத்தில் தள்ளப்படுவார்கள்.

மன்னர் மன்னனே! பாபிகள் எப்படி தாங்களிழைத்த தீவினைகளுக்குத் தகுந்தபடி பலவித நரகங்களை யடைகிறார்களோ அப்படியே தர்மநிஷ்டர்களானபேர் மேலான புண்ணிய லோகங்களை யடைவார்கள். மீண்டும் இப்புவியில் பிறக்கும்போது அந்தப் பாபிகளும், புண்ணியவான்களும், பாபசேஷத்தோடும் பிரவேசிப்பார்கள். நிவர்த்திசொரூபமான மார்க்கம் ஆதியிலே இரண்டாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டது. ராஜாவே! இந்தப் பிர்மாண்டகோசமானது பதினாலுபிரகாரமாக விகல்பிக்கப்பட்டதாய் புராணங்களிலே சொல்லப்பட்டிருக்கிற அண்டகோசம் கியான சக்தி முதலான குணங்களையுடையவராயும், மகாபுருஷனாயுமிருக்கிற நாராயணனுடைய ஆத்துமமாயை யென்னப்பட்ட பிரகிருதியினுடைய குணப்பிரவாகமான ஸ்தூல ரூபம் வாணிக்கப்பட்டது. பக்தி சிரத்தைகளினால் நிர்மலமான புத்தியையுடைய எந்த புருஷன் பகவானுடைய ஸ்தூல சூக்ஷுமங்களான இந்த ரூபங்களைக்கேட்டு, கேட்டபிரகாரம் அதிலே புத்தியைச் செலுத்துகிறானோ, அவன் ஸ்தூல ரூபத்திலே ஜெபிக்கப்பட்ட ஆத்துமாவைச் சூக்ஷுமநிஷ்டையினாலே மெள்ளச் சூக்ஷுமரூபத்தில் புத்தியை யடைவிப்பிக்கக்கடவன்.

வாராய் ராஜாவே! சகலமான ஜீவராசிகளையும் ஸ்தானமாகவுடைய ஈஸ்வரனது ஸ்தூலசரீரமாகப் பூமிவீரியங்கள்-வருஷங்கள்-நதிகள்-பர்வதங்கள்-ஆகாயம்-சமுத்திரம்-பாதாளம் - திக்கு - நரகம் - நக்ஷத்திரகணம்-லோகங்கள் இவைகளுடைய சமஸ்தமும் நம்மாலே உனக்குச் சொல்லப்பட்டது.





படம நெ. 6. பக்கம் நெ, 503.

எமதருமராஜன் கொலுவீற்றிருத்தல்.

ஓம்

# சஷ்டமஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

இதில் விஷ்ணுதூதர்களாலே பாவிகளை விடுவிக்கிறது நிமித்தம் எமகிங்கரர்கள் அந்தப் பாவிகளுடைய பாவத்தை வெளியிடுகிறதின் பொருட்டுத் தர்ம முதலானவைகளுடைய சொரூபஞ் சொல்லப்படுகின்றது.

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்



வாரீர் பிரமநிஷ்டரே! பூச்சியரான உம்மால் சாஸ்திரப்பிரகாரம் கர்மானுஷ்டான மூலமான ஞானத்தினால் சம்சார நிவர்த்தி ரூபமானமோக்ஷம்முதலானவைஇரண்டாம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டன. இப்போது மனுஷியன் நானாவிதமாகிய உக்கிரமான * யாதனைகளையுடைய நரகங்களை எந்த உபாயத்தினாலே தவிர்க்கலாமோ, அந்த உபாயத்தை எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்க சுகர் சொல்லுகின்றார்: ராஜாவே! மனோ வாக்குக் காயங்களினாற் பண்ணப்பட்ட பாபத்துக்கு இந்த லோகத்தில் மனு முதலானவர்களால் சொல்லப்பட்ட பிராயச்சித்தங்களை சாஸ்திரப்பிரகாரம் அந்த மனோ வாக்குக் காயங்களினாற்றானே அதிகாரியான புருஷன் பண்ணாமற் போனானாகில் நிக்ஷயமாக மரணத்தை யடைந்து முன்சொல்லப்பட்ட கொடிய நரகங்களை யடைவன். ஆனபடியினாலே யிவ்வுலகத்தில் மரணத்தை யடைகிறதற்கு முன்னமே துரிதமாகப் பிரபலமாயும் சொற்பமாயு மிருக்கின்ற பாவங்களையறிந்து, ரோகங்களினுடைய நிதானத்தை யறிந்த வைத்தியன் அதற்கனுகுணமாய் எப்படி சிகிச்சை பண்ணுவானோ, அப்படிப்போல பிராயச்சித்தஞ்செய்ய எத்தனம் பண்ணக் கடவனென்று சொல்லாநின்ற சுகப்பிரமரிஷியைப் பார்த்துப் பரிக்ஷித்து மகாராஜா சொல்லுகின்றார்.

---

* யாதனை—நரகத்தில் கொல்லாது வருத்து நோய்.

வாரீர் மகானுபாவரே! பெரியவர்களாலே பண்ணப்பட்ட நிந்தையாலும், அஜாஸ்திரங்களினுடைய கேள்வியாலும், இராஜதண்டனையாலும், சாஸ்திரங்களிற் சொல்லப்படும் நரகத்தில் விழுகிறதினாலும், தனக்குப் பாபமேயனர்த்தத்தைப் பண்ணுகிறதென்றறிந்தும், புருஷனானவன் திரும்பவும் பிரகிருதிப் பரவசனாய்ப் பாவத்தையே பண்ணுகிறான். ஆகையால் பிராயச்சித்தம் எப்படி கைகூடும்? ஒருவன் ஓரிடத்தில் ஒரு வேளையில் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டு பாபத்தில் நின்றும் ஒழிந்தவனாகின்றான். ஒருவன் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டிருந்தாலும் திரும்பவும் பாவத்தைச் செய்கிறவனாயுமிருக்கிறான். யானைக்கு உடம்பிலுள்ள அழுக்குப்போகச் சுத்தி பண்ணியிருந்தாலுந் திரும்பவும் புழுதியை அள்ளிப்போட்டுக்கொள்ளுகிறதினால், அந்தஸ்நானம் எப்படி வியர்த்தமாமோ அப்படிப் புருஷனானவன் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டு திரும்பவும் பாபத்தைப் பண்ணுகின்றதினால் பிராயச்சித்தம் வியர்த்தமாமென்றெண்ணுகிறேனென்று அரசன் சொல்ல சுகர் சொல்லுகின்றார்:

வாராய் ராஜாவே! அக்கியானியான புருஷன் அதிகாரியான படியினாலே பிராயச்சித்தகர்மத்தினால் பாவத்துக்கு நாசமுண்டாகிறதில்லை. பிராயச்சித்த கர்மமோவென்றால் ஞானசாதனமாயிருக்கும். பாபத்தைச் சமூலமாக நாசம் பண்ண ஞானமே முக்கியமான பிராயச்சித்தம். நித்தியமாய்ப் பசிக்கும் புருஷனுக்கு வியாதிகள் எப்படி விர்த்தியாகிறதில்லையோ, அப்படியே நியமானுஷ்டானத்தைப் பண்ணுகிற புருஷன், மெள்ள மெள்ள தத்வக்கியானத்தையடைகின்றான். தருமத்தை யறிந்தவர்களாயும், ஜிதேந்திரியர்களாயுமிருக்கிற பேர்கள் மனோவாக்குக் காயங்களினாற் பண்ணப்பட்ட மகத்தாயும் சுவற்பமாயுமிருக்கிற பாபத்தைப் பிராயச்சித்தத்தினாலும், ஸ்திரீ சம்பந்த மில்லாமையான பிரமசரியத்தினாலும், இந்திரிய நிக்கிரகத்தினாலும், கர்மபலத்தைவிட்டதினாலும், சத்திய சவுசங்களினாலும், சரணாகதியினாலும் நாசம் பண்ணுகின்றார்கள். வாசுதேவனையே பற்றாநின்ற பிரபன்னர்களான சிலர், கேவலம் சரணாகதியினால் பாவத்தை யுதறிப் போடுவார்கள். அரசனே! எந்தப்பிரகாரம் கிருஷ்ணனிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட சரீரம்-அர்த்தம்-பிராணன் இவைகளையுடைய புருஷன் அந்தக் கிருஷ்ண பக்தர்களுடைய சேவையினால் சதாசாரிய சம்பந்தத்தினால் சுத்தனாவனோ, அந்தப் பிரகாரம் பாபியானவன் தபசு-பிரமசரிய

முதலான பாவநிவர்த்தி சாதனங்களினற் பரிசுத்தனுகின்ருன், சரணுகதி மார்க்கத்தில் நல்லசீலத்தால் நாராயணனேயே முக்கியமான கதியாகவுடைய சத்புருஷர்களுடைய மார்க்கமானது உலகத்தில் ஒருக்காலும் பயமில்லாத க்ஷேமத்தை சாதிக்கக்கூடிய சிரேஷ்டமார்க்கமாகும். ஆதலால் பிராயச்சித்தங்கள் நாராயணனிடத்தில் பக்தியில்லாத புருஷனைப் பரிசுத்தனுக்க முடியாது. இப்புவியில் கிருஷ்ணனுடைய குணங்களில் பிரீதியையுடையவர்களாய் அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களில் தமது மனதை வைத்த மகானுபாவர்கள் சகலபிராயச்சித்தமும் செய்துக் கொண்டவர்களாய், யமனையும், யமபடர்களையும், கனவிலும் காணர்கள்.

ஓ இராஜ சிரேஷ்டனே! விஷ்ணுதூதர்களுக்கும் யமதூதர்களுக்குமுண்டான அந்த இதிகாசமாகிய சம்வாதத்தைச் சொல்லுகின்றேன்: கன்னியாகுச்சமென்கிற பட்டணத்தில் அஜாமிளனெனும் ஒரு பிராமணன் பரத்தையர் சங்கத்தையே விரும்பி, தீயகர்மங்களை யியற்றி, சொக்கட்டான் சூது முதலான ஆசார ஈனனுய்ச் சம்சாரத்தைப் போஷித்தும், பிராணிகளை இம்சித்துக்கொண்டுமிருந்தான். அவனுக்குப் பதின்மர் புதல்வர்களிருந்தார்கள். அவர்களில் பின்னவன் நாராயணனென்பான் தன் தாய் தந்தையர்களுக்கு மிகவும் இஷ்டன். அஜாமிளன் அந்தக் கடைசி புத்திரனை உண்ணுதல் உறங்குதலிலும் பிரியச் சகியாத அவ்வளவு அன்பு பாராட்டி வந்தான். பிறகு வார்த்திகத்தையடைந்த அஜாமிளனுக்கு வேர்வை கொள்ளவும் நடுக்க மெய்தவும் சரீரம் தளர்ந்துபோகவும் உயிர் சோரவும் மரணமடைந்து போகும் சமையத்தில், அஜாமிளன் எனும் பிராமணன் தனது ஆயுள் முடிவையறிந்து தன் அன்புமிகுந்த கடைசி புத்திரனை காணவேண்டுமென்று "நாராயணு" வென அவனைப் பெயராலழைத்தான். இப்படிக் கடைசியாக தன்னருமையான புதல்வனை பார்க்க அவாக்கொண்ட அஜாமிளன் இறப்பதற்குள்ளாக பயங்கரமான யமபடர்கள் அவன் முன்சென்று இடிமுழக்கப்போல் அதட்டி தீப்பொறி பறக்கும்படி யவனைப் பார்த்து அவனுடைய தீயகர்மங்களுக்காக அவனைத்திட்டினர்கள். நிலாவைப்போலும் பிரகாசிக்கும் வெண்சங்கையும் சக்கரத்தையும் கைகளிலுடையவர்களான தேன் பொருந்திய துழாய் மாலையைத் தரித்த சுயம்பிரகாசக் கடவுளினது பக்தர்கள் அஜாமிளனை யடைந்து யமகிங்கரர்களால் எறியப்பட்டிருக்கும் பாசக்கயிற்றினை அறுத்தனர். இப்படி யவர்கள்

செய்தது சிறிதும் பொருந்தாதது எனத் தம்முடன் வாதிக்கும் யமபடர்களுக்கு தரும நியாயங்களை யுரைத்தார்கள்.

ஓ எமதூதர்களே! நீங்கள் தர்மராஜாவினுடைய ஆக்கினையைச் செலுத்துகிறவர்களானால் தர்மத்தினுடைய ஸ்வரூபமும் பிரமாணமும் உமக்குத் தெரிந்திருக்கவேண்டும். தர்மமாவது யாது? உம்மால் தண்டனையடைதற் குரியவர் யாவர்? தண்டனைக்கு விஷயமானது எவ்வித கர்மம்? என்றிவ்வண்ணம் பற்பலவாய் விஷ்ணு தூதர்களாலே கேட்கப்பட்டவர்களாய் எமதூதர்கள் சொல்லுகிறார்கள்: வேதத்திலே எது செய்யத்தக்கதாக விதிக்கப்பட்டிருக்கிறதோ அதுவே தர்மம். அந்த வேதமோ சுவாயம்புவான சாக்ஷாத் நாராயணனுடைய சுவாசமாகும். ஸ்ரீமந் நாராயணன்-சூரியன்-அக்கினி-ஆகாயம்-வாய்வு-சலம்-சந்திரன்-சந்திகள்-அகோராத்திரங்கள் - திக்குகள் - பூமி - காலம்-எமன்-இவர்களெல்லாம் ஜீவனுக்குச் சாக்ஷியா யிருக்கிறார்கள். சாக்ஷிகளான இவர்களாலே அறியப்பட்ட அதர்மமே தண்டனைக்குரிய விஷயம். கர்மம் புரியும் சகல பிராணிகளும் அகங்கார மமகாரங்களினால் உண்டாகும் அதர்மானு குணமாகத் தண்டனைக்குரியர். புருஷன் தானியற்றும் புண்ணிய பாபகர்மங்களுக்குத் தகுந்தபடி அவைகளின் பலத்தை லோகாந்தரத்திலே அனுபவிக்கிறான். தேவசிரேஷ்டர்களே! பகவானான தர்மராஜா அந்தரியாமியாகின்ற பரமாத்துமாவைப்போல் சமயமனிபட்டணத்திலேயே யிருந்துகொண்டு மனதினால் பிராணிகளுடைய தர்மாதர்மங்களை யெல்லாம் அறிந்துகொண்டு, அந்தப் பிராணிகளின் தர்மாதர்மத்துக்கு அனுகுணமாக விசாரிக்கிறார். அக்கினியான புருஷன் ஜன்மாந்தர கர்மத்தினாலே பிராப்தமாயிருக்கிற இத்தேகத்தையே நானென்றெண்ணிக்கொண்டு ஜன்மாந்தரக் கியானமில்லாதவனாய்ப் பூர்வஜன்மத்தையும் வரப்போகிற ஜன்மத்தையும் அறியமாட்டான். ஒரு சீவன் கர்மேந்திரியங்களைந்துகளினாலே கர்மங்களைப் பண்ணுகிறான். கியானேந்திரியங்களைந்துகளினாலும் சப்தாதி ஐந்து விஷயங்களையும் அறியாமலிருக்கிறான். சோடசகலையை யுடையதாயும், குணத்திரயத்தை யுடையதாயும், அநாதியாயுமிருக்கிற இந்தச் சரீரமானது ஜீவனிடத்திலே சந்தோஷம்-துக்கம்-பயம்-பீடை இதுகளைக் கொடாநின்ற சமுசாரத்தை யுண்டுபண்ணும். அக்கியனாயும், காமக் குரோதங்கள் முதலான அரிஷ்டவர்க்கத்தை ஜயிக்கமாட்டாதவனாயு மிருக்கிற புருஷனானவன், இச்சியாமலிருந்தும் இந்த சம்சாரத்தினாலே பலாத்காரமாகக் கர்மங்களைப்

பண்ணுவிக்கப்படுகிறுன். கோசகாரமெனும் பெயரையுடைய பூச்சியானது தனக்குத்தானே பந்தனமான கூண்டைப்பண்ணிக்கொண்டு அதற்குள்ளேயகப்பட்டு எப்படி வெளிப்படாமலிருக்குமோ, அப்படி கர்மத்திலே அகப்பட்டுக்கொண்டு அந்தக் கர்மத்தைவிட்டு வெளிப்படுகைக்கு உபாயமரியாதவனய் மோகித்திருக்கிறுன். கர்மம் புரியாதவன் ஒருவனுமில்லை. பூர்வகர்மானுகுணமாக உண்டாகாநின்ற குணகாரியரான காமக்குரோதாதிகளினுலே சகல பிராணிகளும் பரவசமா யிருந்துகொண்டு பலாத்காரமாகக் கர்மத்தைச் செய்கிருர்கள். அதிருஷ்ட ரூபமான நிமித்தியத்தை யடைந்து அந்த அதிஷ்டான ரூபமான ஸ்தூலமாயும், சூக்ஷ்மமாயுமிருக்கிற தேகமானது பலவாருன கர்ம வாசனையினுலே மாதா பிதுர்க்களுக்குச் சமானமாகவே யுண்டாகும். இந்தப் பிரகாரம் பிரகிருதியினுடைய சம்பந்தத்தினுலே புருஷனுக்குச் சம்சாரமானது உண்டாகிறது. அந்தச் சம்சாரமும் சீக்கிரமாக ஈஸ்வர வுபாசனையினுலே நசித்துப்போகும். இந்த அஜாமிளனே வென்ருல் சாஸ்திர சம்பன்னனுயும், சீலம் சதாசாரம் பொறுமை இவை முதலான குணங்களுக்கிருப்பிடமாயும், விரதங்களனுஷ்டித்தவனுயும், சத்தியவாக்கு சுசித்வ குணமுடையவனுயும், வேதவித்தாயும், குரு அக்கினி அதிதிகள் விருத்தர்கள் பிராமணர்கள் இவர்களை யுபசரிப்பதில் பிரீதியுடையவனுயும், அகங்காரமில்லாதவனுயும், சர்வ பூதங்களுக்கும் சுகிர்த்தாயும், சாதுவாயும், இதம் பேசுபவனுயும், அசூயையில்லாதவனுயும் பூர்வத்திலே யிருந்தான். இப்படிப்பட்ட ஆத்தும குணங்களுடனே கூடின இந்தப் பிராமணன், ஒருநாள் பிதாவினுலேவப்பட்டு வனத்துக்குப் போய், பழம் புஷ்பம் சமித்து தர்ப்பை முதலியவைகளைக் கொண்டு திரும்பி வரும்போது, மதுமத்தியங்களைப் பானம் பண்ணி யந்த மதுபானத்தினுலே சிவந்து சுழலாநின்ற நேத்திரங்களையுடைய போகஸ்திரீயான ஒரு தாசியுடனே கூடிக் கிரீடித்துக்கொண்டிருக்கிற காமுகனுன ஒரு சூத்திரனைக் கண்டான். அந்த க்ஷணத்திலேயே மன்மத விகாரமடைந்து தன்னுடைய மனதை அடக்குவதற்கு சக்தியற்றவனுகப் போனுன்.

பிறகு அப்பாநாரியை தன் வசமாக்கி அவளை அனுபவிப்பதிலேயேயிரவும்பகலும்கழித்து சுதர்ம வைதீக கிரியைகளை விட்டவனுய், பிதாவினுலே சம்பாதிக்கப்பட்ட தனம் அவ்வளவையும் செலவுசெய்து அவளைச் சந்தோஷிப்பித்துக் கொண்டிருந்தான். அந்தத் தாசியுடைய கடைக்கண் பார்வை

யினாலே விவேகசூனியனான அந்தப் பிராமணனானவன் பாலி யத்திலே அக்கினிசாக்ஷியாகக் கலியாணம் பண்ணப்பட்டவளாயும், பதிவிரதையாயு மிருக்கிற தன்னுடைய பாரியையும் விட்டுவிட்டு, நியாயமாயும் அநியாயமாயும் தனங்களைச் சம்பாதித்து அந்த போகஸ்திரீயினுடைய சம்சாரத்தை மந்த புத்தியினனான அந்தப் பிராமணன் ரக்ஷித்துக்கொண்டிருந்தான். இத்தகைய தூர்த்தனான அஜாமிளன் எமது தரும பிரபுவால் தண்டித்ததற்குரியன். ஆதலின் அவனை நாங்களழைத்து செல்லுதற்கு அனுமதி தருதல் வேண்டுமென யமபடர்கள் உரைத்தனர்.



## இரண்டாவது அத்தியாயம்



*விஷ்ணுகிங்கரர் எமதூதர்களுக்கு அரிநாம சங்கிர்த்தனைப் பிரபாவ முரைத்து அஜாமிளனை விஷ்ணுலோகத்தையடையச் செய்தமை சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் சுகுண சம்பன்னா கேள்! இவ்விதம் அந்த எம தூதர்களுடைய வசனத்தைக்கேட்டு அந்தப் பகவத் கிங்கரர்கள் பிரதியுத்தரஞ் சொல்லுகிறார்கள்:

ஓ எமதூதர்களே! நீங்கள் சொல்வது ஆச்சரியமானது. தர்மத்தை யறிந்தவர்களுடைய சபையிலே பாபம் செய்யாத புருஷனானவன் விருதாவாக தண்டிக்கப்பட்டால், அந்தத் தர்மசபையை அதர்மமானது அடையாமலிருக்குமா? பிரஜைகளுக்குப் பிதாவைப்போல ரக்ஷிக்கிறவர்களாயும், சிக்ஷிக்கிறவர்களாயும், எல்லாருக்கும் சமானர்களாயு மிருக்கிற சத்புருஷர்களிடத்திலே பக்ஷபாத முண்டானால் பிரஜைகள் எவனைச் சரணமாக அடைவார்கள்? சிரேஷ்டனா யிருக்கிறவன் எந்தத் தர்மத்தைப் பிரமாணமாக ஒப்பி நடக்கிறானோ அதையே பிரமாணமாக மற்றவர்களும் பற்றி அனுவர்த்திப்பார்கள். சகல பிராணிகளும் விசுவாசிக்கத் தக்கவனாயும், தயாளுவாயுமிருக்கிற புருஷன் தன்னிடத்தி லொப்புவிக்கப்பட்ட சரீரத்தை யுடையதாயும், சிநேகத்தை யுடையதாயும், அக்கியனாயுமிருக்கிற அந்தப் பிராணியை எப்படித் துரோகம் பண்ணுவன்? "நாராயணா இங்கே வா" வென் பதிலுள்ள நான்கு அக்ஷரங்களை யுடையதான பகவந்

நாமத்தை யெப்போது வுச்சரித்தானோ அப்போதே மகா பாபியாயிருக்கிற இந்த அஜாமிளனுடைய பாபங்களுக்குப் பிராயச்சித்தம்பண்ணப்பட்டது. அதாவது பக்தியினாலாவது விரோதத்தினாலாவது ஞான சொரூபனான ஒப்பற்ற பகவானுடைய நாம முறைத்தலுக்காகவாவது மனமொருமித்து "நாராயணா" வெனச்சொல்வரேல் திரண்ட கொடிய பாவங்கள் கெட்டொழியும்; பிறவித்துன்பத்தை நீக்கும்; நாராயணா வெனும் நாமத்திலுள்ள நான்கக்ஷரங்கள் கொலை முதலிய கொடியபாதகங்களை யொழித்து அக்கினியிலே நெய்யைப்பெய்தல் முதலிய காரியங்களையுடைய பிராயசித்தம் முதலிய கருமங்கள் விஷயமாக வேற்பட்ட குறைபாட்டையும்நீக்கும். முத்தி தருதலை பலனாகவுடைய அந்நான்கெழுத்துகள் அவைகளை மனனம் செய்பவருடைய அஞ்ஞானத்தைப் போக்கி பொய்யொழிய பரிசுத்த மாகும்படி பிரகாசிக்கச்செய்யும். அவ்வெழுத்துக்களை உச்சரித்த மனத்திலெழும் நல்வினைக்கும் ஒப்பற்ற ஜீவாதாரமாகும்.

தும்மல், இருமல், அதிக துயரால் உள்ளம் விம்முதல், வீழ்தல் முதலிய காரியங்களை செய்யும்போதெல்லாம் இப்பெருமை வாய்ந்த நான்கு நல்லெழுத்துகளை சொல்வார்களானால் திருமாலினது சிவந்த தாமரைப்பதங்களை சத்தியமாக அவர்கள் அடைவார்கள்.

ஆதலின் தனது அன்புள்ளபுத்திரனை யழைத்தல் காரணமாக அஜாமிளன் "நாராயணா" வெனும் நான்கெழுத்தை உச்சரித்தனன். தான் முன்னிழைத்த தீயகர்மங்களினின்றும் மீண்டனன். இவ்விருத்தாந்தத்தை யுமது நாயகனான காலக்கடவுளுக்கு உரை செய்யுங்கள். அவர் இங்கு நடந்தது கிரமமென சொல்வார். நடமின் என்றனர் நாரணவடியாரானவர்கள். இதனைக் கேட்ட நமன்றமர் கலங்கியோடினர்.



## மூன்ருவது அத்தியாயம்



காலக்கடவுள் விஷ்ணுபக்தர்களுடைய பிறபாவமுறைப்பது.

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

என்னருந்தவப்பேறே ! அந்த தர்மராஜாவானவர் தன்னுடைய படர்களாலே சொல்லப்பட்ட விருத்தாந்தத்தைக் கேட்டு விஷ்ணு தூதர்களாலே நிராகரிக்கப்பட்ட அந்தப்

படர்களைப் பார்த்து என்னசொன்னான்? தேவனான எமனு டைய ஆக்கினைக்குப் பங்கமானது ஒருத்தராலேயுஞ் சொல் லக் கேட்கப்பட்டதில்லை. இந்தச் சமுசயத்தை உம்மைத்தவிர வேறொருவன் போக்கடிக்க மாட்டானென்று பிரஸினம் பண்ணுகின்ற பரிக்ஷித்துவைப் பார்த்துச் சுகர் சொல்லு கின்றார்:

ஸ்ரீ சுகர் வாக்கியம்

அரசனே! பகவத்கிங்கரர்களாலே நிராகரிக்கப்பட்ட எமதூதர்கள் சமயமணி பட்டணத்துக்கு எஜமானனையும் தங் களுக்குச் சுவாமியாயுமிருக்கிற எமதருமனை நோக்கிச் சொல்லுகிறார்கள்:

பிரபுவே! பூமியிலே மனிதர்களுக்கு கர்மானுகுணமாய் பலத்தைக் கொடுப்பதற்கும் அவர்களை சிக்ஷிப்பதற்கும் எத்தனை பேர் உண்டாயிருக்கிறார்கள்? அப்படி கர்மானு குணமாக பலனைத் தருவார் பலர் இருந்தார்களானால், அவர்களி லொருவர்க் கொருவர் பாராட்டும் விரோதத்தினால் சுகதுக்கங்கள் ஒரு பிராணிக்கும் உண்டாகமாட்டா. எல்லா பிராணிகளுக்கும் நீர் ஒருவரே பிரபுவாயும், கர்மானுகுண மாகத் தண்டனை பண்ணுகிறவராயும், மனுஷியர்களுடைய புண்ணிய பாபங்களைப் பிரித்து அறிகிறவராயும் இருக்கிறீர். உம்முடைய ஆக்கினையானது மனுஷியலோகத்திலே இது வரையிலும் தடுக்கப்படாமலிருந்தது. இப்போது ஆச்சரிய கரர்களான நான்கு சித்த புருஷர்களாலே உம்முடைய ஆக்கினை தடுக்கப்பட்டது. உம்முடைய ஆக்கினையினாலே நாங்கள் பாபியான அஜாமிளனைப் பாசத்தினாலே கட்டி னோம். அப்போது அந்த சித்த புருஷர்கள் பலாத்கார மாகப் பாசங்களையறுத்து அவனை விடுவித்தார்கள். அவர்கள் நாலு பேரையும் இன்னாரென்று உம்மிடத்தில் நின்றும் அறிய நாங்கள் இச்சிக்கிறோம் என்றனர்.

இவ்விதம் தமது படர்களால் வினவப்பட்டவனாய் பிரஜைகளுக்கெல்லாம் நியந்தாவான் யமன் சந்தோஷத் தோடு அரியினுடைய பாதாரவிந்தத்தை ஸ்மரித்துக் கொண்டு தன்னுடைய தூதர்களுக்கு இவ்விதம் விடை பகர்ந்தான்.

தூதர்களே! என்னைக்காட்டிலும் வேறாய் ஸ்தாவரசங்க மங்களுக்குத் தலைவனான ஈஸ்வரன் ஒருவன் இருக்கிறான்.

நானே மனுஷியர்களுக்குள்ளே பாபிகளுக்கு மாத்திரம் ஈஸ்வரனாய் அக்கடவுளுடைய கிங்கரனா யிருக்கிறேன். நாராயணனிடத்திலே இந்தப் பிரபஞ்சமானது நூலினால் நெய்யப்பட்ட வஸ்திரம் போலக் குறுக்கு நெடுக்குமாகக் கோக்கப்பட்டிருக்கிறது. அவருடைய அம்சபூதர்களான பிரம விஷ்ணு ருத்திரர்களாலே இந்தப் பிரபஞ்சத்துக்குச் சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்க ளுண்டாயிருக்கின்றன. அப்படிப் பட்ட நாராயணன் நமக்கு நியந்தாவாய் அதீஸ்வரனாயிருக்கிறான். அந்தப் பகவான் தம்முடைய வேதரூபமான வாக்கினாலும் பிராமணாதி - நாமங்களினாலும் பிராணிகளைக் கட்டுகின்றார். அந்தப் பிராணிகள் பகவானுடைய ஆதீனமாயிருந்து கொண்டு சுதர்மத்தைப் பண்ணுகின்றார்கள். பிரமா சிவன் இந்திரன் முதலிய சகல தேவர்களும், சித்தர்களுடனே கூடின ஏகாதச ருத்திரர்கள் பிரஜாபதிகளும், ரஜஸ் தமசுக்களினாலே ஸ்பரிசிக்கப்படாத பிருகு முதலான மகாரிஷிகளும் சத்துவகுணப் பிரதானர்களா யிருந்தாலும், பகவானுடைய மாயையினாலே மோகிக்கப்பட்டவர்களாய், அந்தப் பகவானுடைய சங்கல்பத்தை அறியார்கள் என்றால் அவர்களைக் காட்டிலும் நிகிருஷ்டர்களான மற்றபேர் அறியார்களென்பது ஆச்சரியமானதல்ல. சுதந்திரராயும் மாயாதிபதியாயும், மகாத்துமாவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய மனோகரர்களான தூதர்கள் இந்த லோகத்திலே மிகவுஞ் சஞ்சரிப்பார்கள். தேவர்களாலே பூஜிக்கப்பட்ட அந்த விஷ்ணு தூதர்கள், பிறரால் காணக்கூடாத சொரூபங்களையுடையவர்களாய், அந்த விஷ்ணுவினிடத்திலே பக்தியுடையவர்களை சத்துருக்கள் அக்கினி முதலான பூதங்கள் முதலியவைகளால் நேறிடும் துன்பங்களினின்றும் இரட்சிப்பார்கள். சாக்ஷாத் பகவானாலே சொல்லப்பட்ட சுத்தமான பாகவத தர்மத்தை ரிஷிகளும் தேவர்களும் அறியமாட்டார்கள். பிரமா, நாரதர், சிவன், பிர்மகுமாரர்களான சனற் குமாரர், கபிலர், மனு, பிரகலாதனன், ஜனகர், பீஷ்மர், பலி, சுகர், நான் ஆக இந்தப் பன்னிரண்டு பேர்களும் தான் அறிவோம். பரம ரகசியமாயும் சுத்தமாயும் அறியக்கூடாததாயுமிருக்கிற அந்த பாகவத தர்மத்தை அறிபவன் மோட்சத்தை யடைவன். பிள்ளைகளே! அரிநாம வுச்சாரணத்தினுடைய பிரபாவத்தைப் பாருங்கள். அந்த நாராயண நாம வுச்சாரணத்தினால் மகா பாதகனான அஜாமிளனும் கால பாசத்தில் நின்றும் விடுபட்டான். ஆகையினால் பகவந் நாம கீர்த்தனத்தினால் புருஷன் சகல பாபத்தில் நின்றும் விடுபட்டு முக்தனாய் விடுவன். வேதத்தினிடத்தில் சிரத்

தையும் எக்கியாதி கர்மத்தில் ஆசக்தியு முடையவர்களான மனு முதலானவர்கள் இந்த பகவந் நாமகீர்த்தனத்தி னுடைய பிரபாவத்தை அறியார்கள். இந்தப் பிரகாரம் ஸ்ரீமந் நாராயணனிடத்தில் பக்தியைச் செலுத்துகின்ற வர்கள் நம்முடைய தண்டத்துக்கு உட்பட்டவர்களன்று. அவர்களுக்குப் பாபம் உண்டாகிறதேயில்லை. அப்படிப் பட்டபேருக்கும் ஒருக்கால் பிரகிருதி வாசனையினாலே பாபம் உண்டாகுமாகில், அதையும் அந்தப் பகவானுடைய நாம கீர்த்தனமே போக்கடிக்கின்றது. இனி அத்தகைய அரி பக்தர்களுடைய சமீபத்திலும் போகாதீர்கள். அப்படிப் பட்ட முகுந்தனுடைய பாதாரவிந்தங்களைப் பணியாதவர் களும் இகசுகத்தையே கோரித்திரிபவருமே நும்மால் அழைத்து வருதற்குறியரென காலக்கடவுளுரைக்க. எமபடர்கள் கேட்டு ஆச்சரியத்துடன் பகவத் பக்தர்களிடத்து பயத்தை வகித்திருந்தனர்.

அதருமவசத்தனான அஜாமிளனும், சக்கரத்தைத் தன் திருக்கரத்தேயுடைய' கடவுளது நாமத்தை அறியாது உச்ச ரித்து உயர்ந்த மோக்ஷ வீடடைந்தனன். எனின் மனதார அந்தத் துளவமாலையை யணிந்த தூய்யவன் நாமங்களைப் பாடும் பாக்கியம்பெற்றூர் இருவினைக்கிடமான இச்சரீரத்தை யொழித்து எல்லையிலா இன்பவீடடைகுவரென யான் சொல்லவும் வேண்டுமோ அரசனே என்றுரைத்தார். மேலும், இச்சரித்திரத்தை பொதியமலையிலுள்ள பெருந்தவ ரான அகத்தியரால் எமக்குறைத்தபடி உனக்குச் சொன் னேன். இதைச் சொல்பவரும் பயத்தைக்கொடுக்கும் பாவ கர்மங்கள் தொடர்தலில்லாமல் சிரேஷ்டமாகிய முக்தியை யடைவார்கள் என சுகமுனிவர் உரைத்தனர்.



## நான்காவது அத்தியாயம்



தக்கனுடைய வமிசம் விஸ்தரிக்கப்படுகிறது.

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

பிரமரிஷியே! சுவாயம்பு மனுவந்தரத்திலே தேவர்கள் அசுரர்கள் மனிதர்கள் முதலியவர்களின் சிருஷ்டி உம்மாலே சங்கிரகமாகச் சொல்லப்பட்டது. அந்த சிருஷ்டி விஸ்தா ரத்தையும் பகவானான பரம புருஷன் தன் சக்தியினாலே

எந்தப்பிரகாரம் சிருஷ்டித்தாரோ, அந்தச் சக்தியையும்' சிருஷ்டிப் பிரகாரத்தையும் உம்மாலே தெரிந்துகொள்ள விச்சிக்கிறேனென்று வினவுகின்ற பரீக்ஷித்துவுக்கு சுகப்பிரம ரிஷியானவர் சொல்லுகின்றார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! பிராசீன பரிகசுவினுடைய பிள்ளைகளான பிரசேதசுக்கள் பத்துபேரும் சமூத்திர மத்தியில் நின்றும் வெளிப்பட்டு அப்போது விருக்ஷங்களினாலே சூழப்பட்டுக் காடுமயமான பூமியைப் பார்த்தார்கள். விருக்ஷங்கள் பொருட்டுக் கோபித்துக்கொண்டவர்களாய்த் தபசினாலே ஜொலியா நின்ற குரோதத்தை யுடையவர்களான பிரசேதசுக்கள் அந்த விருக்ஷங்களைத் தகிக்கவேணுமென்கிற இச்சையினால் முகத்தினாலே வாயுவையும் அக்கினியையுஞ் சிருஷ்டித்தார்கள். அந்தப் பிரசேதசுக்களுடைய முகத்தில் நின்றுமுண்டான வாயுவினாலும் அக்கினியினாலும் தகிக்கப்படும் அந்த விருக்ஷங்களைப் பார்த்து மகானும் ஓஷதி விருக்ஷங்களுக்கெல்லாம் ராஜாவாயுமிருக்கிற சந்திரன் பிரசேதசுக்களைக்குறித்து கோபத்தை போக்கடிக்கிறவன்போல் சொல்லுகிறான்: "மகானுபாவர்களே! நீங்கள் எளிய விருக்ஷங்களை துவ்சம் பண்ணுதற்கு யோக்கியர்களன்று. பிரஜைகளை விருத்திபண்ண வேணுமெனும் இச்சையை யுடையவர்களான பிரஜாபதிகளாக சொல்லப்படுகின்றீர்கள். ஆதியிலே பிரஜாபதிகளுக்கெல்லாம் பதியாயும், நாசமில்லாதவராயும், கியான சக்திமானாயும், விபுவாயுமிருக்கிற ஸ்ரீ அரியானவர் விருக்ஷங்களையும், ஓஷதிகளையும் பக்ஷியமாகவும் அன்னமாகவுஞ் சிருஷ்டித்தார். உத்தமகுண சம்பன்னர்களே! பெரியோர்களுடைய மார்க்கமான சாந்தியை ஆஸிரயித்திருங்கள். ஜொலியா நின்ற கோபத்தை யடக்குங்கள். குழந்தைகளுக்கு மாதா பிதாக்களும், கண்களுக்கு இமைகளும், ஸ்திரீகளுக்கு பர்த்தாக்களும் பிரஜைகளுக்கு ராஜாவும், சந்நியாசிகளுக்கு கிரகஸ்தர்களும், அக்கியானிகளுக்கு கியானிகளும், சுகுர்த்துக்களாயும் பந்துக்களாயு மிருப்பார்கள். பிராணிகளுடைய தேகங்களுக்குள்ளே நியந்தாவாய் அந்தராத்மாவான ஸ்ரீஹரியிருக்கிறார். சமஸ்தத்தையும் அந்த அந்தரியாமியான ஸ்ரீ ஹரிக்கு ஸ்தானமாகப் பாருங்கள். இப்படிப்பட்ட கியானத்தை யுடையவர்களா யிருந்தீர்களானால் அந்தரியாமியான பகவான் உங்களாலே பூசிக்கப்படுவர். யாதொருத்தன் கோபத்தை ஆத்துமவிசாரத்தினாலே அடக்குகிறானோ, அவன் பிரகிருதி குணங்களான சத்துவாதிகளை அதிக்கிரமி

யாம லிருப்பன். தீனங்களான விருக்ஷங்களைத் தகித்தது போதும். இந்த விருக்ஷங்களுக்கும் உங்களுக்கும் மங்கள முண்டாகக் கடவது'' என்று அந்தப் பிரசேதசுக்களைச் சமாதானம் பண்ணி, பிர்மலோசனை யென்கிற அப்சரஸ்திரீ யினுடைய பெண்ணான ஓர் உத்தமகன்னிகையைப் பிரசே தசர்களுக்குக் கொடுத்துவிட்டுப் போனான். அந்தப்பெண்ணை பிரசேதசுக்கள் பத்துபேரும் சாஸ்திரப்பிரகாரம் விவாஹம் பண்ணிக்கொண்டார்கள்.

தக்கன் என்பான் அந்தப் பெண்ணினிடத்தில் பிரசே தசுக்களின் புத்திரனாகப் பிறந்தவன். அந்தத் தக்கனுடைய பிரஜாஸிருஷ்டியினாலே மூன்று லோகங்களும் பூரிக்கப்பட் டன. பிரஜாபதியான தக்கன் தேவர்கள்-அசுரர்கள்-மனிதர் கள்-முதலானவர்களாயும், ஆகாசம்-பூமி-ஜலம் - இவைகளை ஸ்தானமாக வுடையவர்களாயு மிருக்கிற பிரஜைகளை முன்னே மனதினாலேயே சிருஷ்டித்தான்.

அந்தமானசயான பிரஜாசிருஷ்டி பூரணமாகாததைப் பார்த்துப் பிரஜாபதியான தக்கன் விந்திய பர்வதத்தினுடைய தாழ்வரையிலே போய்ஒருவரும்செய்தற்கரிய தவம்புரிந்தான். அந்த விந்திய பர்வதத்தின் தாழ்வரையிலே பாபத்தை நாசம் செய்யக்கூடிய அகமருஷணமெனும் பிரசித்த தீர்த்தமொன் றிருக்கிறது. அதிலே மூன்று காலமும் ஸ்நானம்பண்ணி தபசினாலே பகவானைச் சந்தோஷிப்பித்து அமுசகுய்ய மென்கிற ஸ்தோத்திரத்தினாலே அதோக்ஷசனை அந்தப் பகவானை ஸ்தோத்திரம் பண்ணினான். அத்தவத்திற்கு மகிழ்ந்து பக்தவச்சலனான பகவான் கருடாரூடராய் தீர்க்க மான அஷ்டமகாபுஜங்களை யுடையவராய் சங்கம்-சக்கரம்-நந்தகம்-சார்ங்கம்-பாசம்-கதை-பாணம்-சர்மம்-ஆகியவைகளை கொண்டு பீதாம்பரதாரியாய் காளமேகசியாமளராய் பிரசன்ன முகமும் அருளொழுகுகண்ணுமுடையவராய், கண்டத்திலே யிருந்து பாதபரியந்தம் தொங்கா நின்ற வனமாலையையுடைய வராய், விளங்கா நின்ற ஸ்ரீவக்ஷம்-கவுஸ்துவம் இவைகளை யுடையவராய், மகத்தாகிய கிரீடம்-கடகம்-மகர குண்டலம்-முதலியவைகளை யுடையவராய், நாரதர்-சனகர் முதலான தேவசிரேஷ்டர்களாலும் சூழப்பட்டவராய் பிரசன்ன மானார்.

அந்தத்திரிலோக சுந்தரமான ரூபத்தைப் பார்த்துத் தக்கன் பயமில்லாதவனாய்ச் சந்துஷ்டமான மனதையுடைய வனாய்ப் பூமியிலே விழுந்து பணிந்தான். திரிலோகாதி பதியான ஜனார்த்தனர் தக்கனைப்பார்த்துச் சொல்லுகின்றார்:

தக்கனே! மகானுபாவனே! நீ தபசினலே சித்தியை யுடைய வனய், அதினலே நம்மிடத்தில் பரமமான பக்தியை யடைந் தாய். இயமநியமாதிகளுடனே கூடின தபசானது என் னுடைய இருதயம்; அங்கங்களுடனேகூடின மந்திரஜப மானது என்னுடைய சரீரம்; தியானுதி விஷயமான புருஷ னுடைய வியாபாரமானது எனது ஆகிருதி; நன்ருகப் பண்ணப்பட்ட கிருதுக்கள் எனது அவயவங்கள்; தர்ம மானது என்னுடைய மனது; தேவர்களே யெனது பிராணன்கள்; சிருஷ்டிக்குமுன் நான் ஒருவனே யிருந்தேன். என்னையன்றி வேறில்லை. என்னிடத்தில் மாயையினலே குணமயமான பிரமாண்டமானது எப்போது உண்டாச்சுதோ அப்போதே அயோனிசனை பிர்மாவானவன் உண்டானன். தேவதைகளுக்கெல்லாந் தலைவனும், என்னுடைய சக்தியி னலே பூரணனுமிருக்கிற அந்தப் பிர்மாவானவன், சிருஷ்டி கர்மத்திலே யத்தனப்பட்டவனய் தன்னை அசமர்த்தனென வெண்ணிக்கொண்டான். அப்போது என்னலே தபசு பண் ணென்று சொல்லப்பட்டவனய், தபசினலே அந்தப் பிர்மா வானவன் ஆதியிலே பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்ற உங்களைச் சிருஷ்டித்தான் தக்ஷனே! பஞ்சசேனனென்கிற பிரஜாபதியினுடைய பெண்ணை அசிக்கினி யெனும் பெயரையுடையவள் உனக்குப் பத்தினியாகி, ஸ்திரீபுருஷர்க ளுடைய ரதிதர்மத்தை யுடையவனய், நீ அவளிடத்திலே இந்தப் பிரஜாசிருஷ்டியை மிகவுமுண்டாக்கப்போகிருய் நீயும் உனக்குக் கீழ்ப்பட்ட சகலமான பிரஜைகளும் என்னுடைய மாயையினலே ஸ்திரீயும் புருஷனுமாகச் சேர்ந்து புத்திராதிகளையு முண்டாக்கப்போகிறீர்கள். என்று சொல்லி அந்தத் தக்ஷப்பிரஜாபதி பார்த்துக்கொண்டிருக்கும் போதே, ஜகத் காரணமான அந்தப் பகவான் சொப்பனத் திலே காணப்பட்ட தனம்போல அவ்விடத்திலே அந்தர்த் தானமானர்.

## ஐந்தாவது அத்தியாயம்

*நாரதருடைய கபடவசனங்களினல் நசித்துப்போன தனது பிள்ளைகளுடைய சோகத்தினல் தக்ஷப் பிரஜாபதியானவன் நாரதரைச் சபித்தமை சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் வேந்தனே! விஷ்ணுமாயையினலே விருத்தி யடைவிக்கப்பட்ட தக்ஷப்பிரஜாபதியானவன் பஞ்சசேன

புத்திரியான அந்த அசக்கினியிடத்திலே அரியசுவா ளென்னும் பெயரையுடையவர்களான பதினாயிரம் பிள்ளைகளைப் பெற்றான். அக்குமாரர்கள் ஆசார சீலமுடையவர்களாய், பிதாவான தக்ஷனாலே பிரஜாசிருஷ்டியின் பொருட்டு நியமிக்கப்பட்டவர்களாய், மேற்குத் திக்கிலே போனார்கள். அந்த மேற்குத்திக்கிலே சிந்துநதி சமூத்திரங்களுடைய புண்ணியமான சங்கமப் பிரதேசத்திலே யிராநின்ற மகத்தான முனிசித்தர்களாலே சேவிக்கப்பட்ட நாராயணசரசு வென்னும் பிரசித்த தீர்த்தத்தை யடைந்து, அதில் ஸ்நானம் பண்ணின மாத்திரத்திலே மனதிலுள்ள காமக்குரோதங்கள் முதலான ஏயகுணங்களை உதறிப்போட்டு பகவதாராதன ரூபமான பராங்கிசியமென்கிற தர்மத்திலே நிஷ்டையை யுடையவர்களாய் பிதாவினுடைய ஆக்கினையினாலே கட்டப் பட்டு, உக்கிரமான தபம் செய்தார்கள்.

நாரதமகாரிஷியானவர் பிரஜாசிருஷ்டியின் பொருட்டு எத்தனத்தை யுடையவர்களான அந்த அரியசுவாளைப் பார்த்துச் சொல்லுகின்றார். சிறு பிள்ளைகளே நீங்கள் பூமியி னுடைய அந்தத்தை அறியாமல் பிரஜைகளை எப்படி சிருஷ் டிக்கப் போகிறீர்கள். ஒரு புருஷனையுடையதான அந்த ராஜ்ஜியத்தையும் அறியாமல், திரும்பவும் வெளியிலே புறப்படுகிறதை யுடையதான பிலத்தையும், வெகு ரூபத்தை யுடையவளான ஸ்திரீயையும், விபசாரிக்கு பதியான புருஷ னையும், உபயபாரிசங்களிலே பிரவகியாநின்ற நதியையும், தத்துவங்களினாலே அற்புதமான ஆசியத்தையும், ஓரிடத் திலே சித்திரங்களான கதைகளோடு கூடின அம்சத் தையும், தானே மிகவும் சுழன்றுகொண்டும் நாவிதன் கத்தியினாலும் வச்சிராயுதங்களினாலும் நிர்மிக்கப்பட்டது போல அதிதீக்ஷணமாயும் திடமாயும் இருபத்தைந்து தத்து வங்களினாலே ஆச்சரியமாயுமிருக்கிற கிரகத்தையும், அறியா மல் சர்வக்கியனாயிருக்கிற பிதாவினுடைய ஆக்கினையை அனு ரூபமாக அரியாதவர்களாயிருக்கிற நீங்கள் எப்படி பிரஜா சிருஷ்டியைச் செய்யப்போகிறீர்கள்?

நாரதருடைய இவ்வாக்கியங்களைக்கேட்டு அச்சிறுவர் கள் சகசமான சக்தியை யுடையதான புத்தியினாலே தாங்கள் தானே யோசனைப் பண்ணுகின்றார்கள்: பூமியினுடைய அந் தத்தைக் காணுமலென்று அம்முனிவரர் சொன்ன வசனத் துக்கு அர்த்தம் பூமியென்னப்பட்டது. ஆத்மாவுக்குப் பந்த காரணமாயும் அநாதியாயும் லிங்கசரீரமாயுமிருக்கிற க்ஷேத்

திரமென்று அறியத்தக்கது; அந்தத்தை யென்று சொன்ன வசனத்துக்கு அர்த்தம் அந்த க்ஷேத்திரத்தினுடைய நாசத்தையறியாமல் மோக்ஷத்துக்கு விரோதமான கர்மங்களினாலே என்ன ஆகவேண்டியதென்று அறியத்தக்கது; ஒரு புருஷனையுடையதான ராஜ்ஜியத்தை அறியாமல் என்றதற்கு அர்த்தம் அந்த க்ஷேத்திரத்திலே சர்வசாக்ஷியாயும் தனக்குத்தானே ஆதாரமாயுமிருக்கிற பரமேஸ்வரரே ஒருவனான புருஷன், நித்திய முக்தனான அந்தப்பரமபுருஷனை அறியாமல், புருஷனுக்கு ஈஸ்வரனிடத்திலே சமர்ப்பிக்கப் படாமலிருக்கிற கர்மங்களினாலே ஆகவேண்டிய தென்னவென்றறியத்தக்கது; பிலத்தையறியாமல் என்ற வசனத்துக்கு அர்த்தம், புருஷனானவன் யாதொன்றிலே போயடைந்து பாதாளத்தையடைந்தவன் போலத் திரும்பி வராமலிருக்கிற சோதி சொரூபமான அந்தப் பரப்பிரமத்தை யறியாதவனுக்கு நசிக்கும் சொர்க்காதிசாதனங்களான கர்மங்களினாலே ஆகவேண்டியதென்ன வென்றறியத்தக்கது; வெகுரூபையான ஸ்திரீயை அறியாமலென்ற வசனத்திற்கு அர்த்தம் புருஷனுடைய புத்தியானது விபசாரியானவள் போல வெகுவிதமான ரூபத்தையுடையதாயும், மோகத்தைப் பண்ணுநின்ற ராகாதி குணங்களோடு கூடிக்கொண்டுமிருக்கிறது, அந்தப் புத்தியினுடைய விவேகத்தை யறியாமலிருக்கிற புருஷனுக்கு இவ்விடத்திலே நசித்துப்போகிற கர்மங்களாலே ஆகவேண்டிய தென்ன வென்றறியத்தக்கது; விபசாரிக்குப் பதியான புருஷனை யறியாமல்என்றவசனத்திற்கு அர்த்தம், அந்தப்புத்தியினுடைய சங்கத்தினாலே சுவாதந்திரியத்தை விட்டவனும், துஷ்டையான ஸ்திரீயையுடைய புருஷனைப்போல அந்தப் புத்தியினுடைய சுகதுக்காதிகளை அடைந்திருக்கிற சீவனை அறியாதவனுக்கு அவிவேகத்தினால் உண்டாகும் கர்மங்களினாலே ஆகவேண்டிய தென்ன வென்றறியத்தக்கது; இரண்டு பக்கத்திலும் பிரவகியாநின்ற நதியையறியாமல் என்ற வசனத்துக்கு அர்த்தம், சிருஷ்டி-லயங்களைப் பண்ணியும் ஜனன மரணமென்கிற பிரவாகத்திலே விழுந்தபேருக்கு வெளிப்படுகிறதற்கு உபாயமான தபோவிர்த்தி யாதிகள் என்னப்பட்ட இருகரையினுடைய சமீபத்திலே குரோத அகங்காராதிகளினாலே மிகவும் வேகத்தையுடையதாயும் இருக்கிற மாயையை விசாரியாதவனும், அதன் வசமாயுமிருக்கிற புருஷனுக்கு அவிவேகத்தினாலே பண்ணப்படும் கர்மங்களினாலே ஆகவேண்டிய தென்னவென்றறியத் தக்கது; இருபத்தைந்து தத்துவமென்றதற்கு அர்த்தம், இருபத்தைந்து தத்துவங்களுக்கும் பரம புருஷனானவன் அந்தரியாமியாயிருக்கிறான்,

இந்தத் தத்துவங்களுக்கு ஆஸ்ரயரூபமான ஆதாரமாயும், தேகேந்திரியாதிகளுக்குப் பிரவர்த்தனுயு மிருக்கிற அந்தப் பரமபுருஷனை அறியாதவனுக்கு தனக்கில்லாத சுவாதந்திரியத்தை வகித்துப் பண்ணப்படும் கர்மங்களினுலே ஆகவேண்டியதென்ன வென்றறியத்தக்கது; அம்சத்தை யறியாமலென்றதற்கு அர்த்தம் ஈஸ்வரனையும், சித்து அசித்து ரூபமான வஸ்துவையும், பந்தமோக்ஷங்களையும் காண்பிக்கின்ற சாஸ்திரத்தை அறியாமல், வெகு விதங்களான இந்தக் கர்மங்களினுலே ஆகவேண்டியதென்ன வென்றறியத் தக்கது, மேற்படி உற்பவ்விய மென்றதற்கு அர்த்தம் சர்வகாலமும் சுழன்று கொண்டும், ஜகத்தைமிகவும் இகழாநின்றும், மகாவேகத்தை யுடையதாயும், சுதந்திரமாயுமிருக்கிற காலசக்கரத்தை யறியாமல் செய்யப்படாநின்ற அசத்துக்களான கர்மங்களினுலே ஆகவேண்டியதென்ன வென்றறியத்தக்கது; பிதாவினுடைய ஆக்கினையை யறியாமலென்றதற்கு அர்த்தம் இரண்டாம் ஜன்மத்துக்கு ஏதுவாயும், பிதாவாயுமிருக்கிற சாஸ்திரத்தினுடைய நிவர்த்தி மார்க்கத்துக்கு யோக்கியனுன புருஷனுக்கு நிவர்த்தி மார்க்கத்தை யறிவியாநின்ற ஆஞ்ஞையை யறியாத அந்தப் புருஷனுனவன் குணமயமான பிரவர்த்தி மார்க்கத்திலே விசுவாசத்தை யுடையவனுய், பிரஜாசிருஷ்டியிலே யெப்படி பிரவர்த்திப்பனென்று கொள்ளவேண்டும், என்று நாரதராலே சொல்லப்பட்ட வசனுர்த்தத்தை நிச்சயித்தவர்களாய் அந்த அரியசுவர்கள் எல்லாரும் ஏகரூபமான புத்தியை யுடையவர்களாய், அந்த நாரதரைப் பிரதக்ஷண நமஸ்காரம் பண்ணித் திரும்பிவாராமலிருக்கிற மார்க்கத்தை யடைந்தார்கள். அந்த நாரதமகாமுனியும் சுகப்பிரமமான பிரணவத்தில் பிரகாசியாநின்ற ரிஷிகேசனுடைய பாதாரவிந்தத்தில் நிச்சலமாகச் சித்தத்தைவைத்து லோகங்களிற் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்.

தக்கனே சீலத்தை யுடையவர்களான தன் அரிய பிள்ளைகள் நாரதராலே கலக்கப்பட்டு காணப்படாமல் போனதைக் கேட்டு, மிகவும் விசனப்பட்டுப் புத்திரசோகத்தை யடைந்தான். அந்தத் தக்ஷனுனவன் பிர்மாவினுலே சமாதானம் பண்ணப்பட்டவனுய் திரும்பவும் தன் மனைவியான அசக்கினியிடத்தில் சபளாசுவர்களெனும் பெயரை யுடையவர்களான ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றுன். மகாவிரதத்தை யுடையவர்களான அந்த பிள்ளைகளும் பிதாவினுலே பிரஜா சிருஷ்டியில் ஆக்கியாபிக்கப் பட்டவர்களாய் தங்களுடைய பிராதாக்கள் எந்தச்சரசிலே தபசித்தியை

யடைந்தார்களோ அந்தநாராயண சரசையடைந்து, அதில் ஸ்நானம் செய்த மாத்திரத்திலே காமக்குரோதங்கள் முதலான சித்த மலங்களை யுதறிப் போட்டவர்களாய், பரமமான மந்திரத்தை ஜபித்துக்கொண்டு, அந்தத் தீர்த்தத்திலே மகத்தான தபசைப் பண்ணினார்கள்.

ராஜசிரேஷ்டனே ! இந்தப்பிரகாரம் பிரஜாசிருஷ்டியிலே புத்தியை யுடையவர்களான அந்தச் சபளாசுவர்களையும் நாரதமகாமுனியானவர் அடைந்து, முன்போல் அர்த்தாந்தரத்தைத் தெரிவிக்கின்ற வசனங்களைச் சொல்லுகின்றார்: தக்ஷ குமாரர்களே ! என்னுடைய உபதேசத்தைக் கேளுங்கள். பிராதாக்களிடத்திலே வாச்சல்லியத்தை யுடையவர்களான நீங்கள் உங்கள் பிராதாக்களுடைய மார்க்கத்தை யறியுங்கள். பிராதாக்களுடைய மார்க்கத்தைத் தர்மக்கியனாயிருக்கிற எந்தப் பிராதாவானவன் பின்பற்றுகிறானோ அந்தப் புருஷனானவன் புண்ணியத்தையே பந்துவாகவுடையவனாய், பிராதுரு வச்சலர்களாயிருக்கிற தேவதைகளோடு தேவலோகத்திலே சந்தோஷித்துக்கொண்டிருப்பன் என்று முன்போல தத்துவார்த்தத்தையுடைய வசனங்களை யுரைத்துச் சென்றார். அந்தச் சபளாசுவர்களும் அந்தப் பிராதாக்களுடைய ஆத்ம நிஷ்டையினாலே அடையத்தக்கதாயும், பரனுக்கு அனுகுணமாயு மிருக்கிற மார்க்கத்தை யடைந்து இவர்களும் முன்னவர்களைப்போலத் தம் தந்தையினிடம் திரும்பவில்லை.

இப்படியிருக்கிற சமயத்திலே தக்ஷப்பிரஜாபதியானவன் மகத்தாகிய உற்பாதங்களைப் பார்த்துக்கொண்டு முன்போல நாரதராலே புத்திரர்கள் காணப்படாமற் போனதைக்கேட்டு, புத்திர சோகத்தினாலே மூர்ச்சையடைந்து பிறகு தெளிந்தெழுந்து நாரதரைக்கண்டு ரோஷத்தினாலே துடிக்கின்ற அதரங்களை யுடையவனாய் சொல்லுகிறான்.

அசத்துவே ! சத்புருஷர்களுடைய வேஷத்தை யுடையவனான நீ என்னுடைய குழந்தைகளுக்குச் சந்நியாச மார்க்கத்தைக் காண்பித்தமையால் எனது காரியம் பங்கமாகி விட்டது. பாபிஷ்டனே ! தேவருணம் பிதுருணம் ரிஷிருண மென்கிற இந்த ருணத்திரயத்தினாலே விடுபடாதவர்களாயும் கர்மத்தினுடைய சொரூபத்தை விசாரியாதவர்களாயு மிருக்கிற எனது பிள்ளைகளுடைய சிரேயசுக்கு, இகலோகத்திலும் பரலோகத்திலும் விகாதமே பண்ணப்பட்

டது. நீ நிர்த்தயனையும் பாலர்களுடைய மதியைக் கெடுத்தவனையும் இருந்துகொண்டு லச்சை யில்லாதவனைச் சுவாமியான ஸ்ரீ ஹரியினுடைய கீர்த்தியை நாசம்பண்ணிக் கொண்டு, பாகவதர்களுடைய மத்தியிலே எவ்விதம் சஞ்சரிக்கிறாய். பாம அம்சர்களுடைய வேஷத்தை யுடையவனை உன்னாலே இந்தப் பிரகாரம் புத்தி பேதிக்கப்பட்டிருந்தாலும் ஞானமில்லாமல் புருஷனுக்கு வைராக்கியம் பிறக்கமாட்டாது. புருஷனானவன் விஷயங்களை யனுபவியாமல் அந்த விஷயங்கள் துக்கத்துக்கு ஏதுவாயிருக்கிறதை அறியமாட்டான். ஆகையினாலே விஷயங்களை யனுபவித்து, அந்த விஷயங்கள் துக்க ஏதுவென்றறிந்து, எப்படி வைராக்கியத்தை அடைவனோ, அப்படி அன்னியனாலே பேதிக்கப்பட்ட புத்தியை யுடையவன் வைராக்கியத்தை யடையமாட்டான். கர்ம மரியாதையை யுடையவர்களாயும் சாதுக்களாயும், கிரகஸ்தர்களாயு மிருக்கிற எங்களுக்கு நீ சகிக்கக் கூடாத அப்பிரியத்தைச் செய்தாய். அது நம்மாலே சகிக்கப்பட்டது. சந்தான நாசத்தைப் பண்ணினவனே! நீ நம்முடைய புத்திரர்களுக்கு அசிரேயசையே பண்ணினதினால் உனக்கு லோகங்களிலே ஓரிடத்திலும் ஸ்தானமில்லாமல் போகக்கடவதென்று தக்ஷப்பிரஜாபதியானவன் நாரத மகாரிஷியைச் சபித்தான். சாதுகளுக்கெல்லாம் நாயகமான அந்த நாரத முனிவர் அந்தச் சாபத்தை ஏற்று அங்கீகரித்தனர். வீணைக் தன்னை சபித்த தக்கனை பிரதி சாபத்தால் அவனை தண்டிக்கும் தவவன்மை யுடையவராயிருந்தும் சதா உலகத்துக்கு. இதத்தையே கோறும் பெருந்தகைமையுடைய நாரதர் தீமை புரிந்தார்க்கு பிரதிதீமை புரிதல் அவரது தன்மையல்ல வாகலின் பொறுத்திருந்தார்.



## ஆறுவது அத்தியாயம்



*தக்ஷப் பிரசாபதியினுடைய பெண்களின் வம்சமும்*
*விஸ்வரூபன் பிறந்த வம்ச விருத்திகளும்*
*சொல்லப்படுகின்றன.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பூபாலனே! பிறகு தக்ஷப்பிரஜாபதி பிரமாவினாலே சமாதானம் பண்ணப்பட்டவனாய், மீண்டும் தன்னுயகினிடமாக அறுபது பெண்களைப் பெற்றான். அவர்களில் பத்து பெண்

களைத் தர்மதேவதைக்கும், பதின்மூவரை காசிபருக்கும், இரு பத்தெழுவரை சந்திரனுக்கும், பூதன், அங்கீரசு கிரிசாச்சுவன் எனும் மூவருக்கும் இவ்விரண்டு பெண்களையும், தாட்சியப ரெனும் நாமாந்தரத்தை யடைந்த காசியபருக்கு நாலு பெண்களையும் கொடுத்தான்.

தர்மதேவதையின் மனைவியர் பதின்மரில் பானுவென் பாள் வேதரிஷபனைப் பெற்றாள்; வேதரிஷபனுடைய பிள்ளை இந்திரசேனன். லம்பை யென்கிறவளுக்கு வித்தி யோதன் பிறந்தான்; அந்த வித்தியோதனனிடத்தில் நின் றும் ஸ்தனயித்துருக்கள் பிறந்தார்கள். கபுகுவென்கிற ஸ்திரீயினிடத்தில் சங்கடன் பிறந்தான்; அந்தச் சங்கடனுக் குக் கிகடன் பிறந்தான்; அந்தக் கிகடனிடத்தில் நின்றும் பூமியினுடைய துர்க்காபிமானிகளான தேவர்கள் பிறந்தார் கள். ஜாமியினிடத்தில் சொர்க்கனும், சொர்க்கனிடத்தில் நந்தியும் பிறந்தார்கள். விசுவா வென்கிறவளிடத்தில் விசுவ தேவர்கள் பிறந்தார்கள். அந்த விசுவதேவர்களை அபுத்தி ரர்களாகச் சொல்லுவார்கள். சாத்தியை யென்பாளிடத்தில் சாத்திய கணங்கள் பிறந்தார்கள்; சாத்திய கணங்களுக்கு அர்த்தசித்தி பிறந்தான். மருத்துதியினிடத்திலே மருத்து வானும் செயந்தனும் பிறந்தார்கள். அந்தச் செயந்தனை வாசுதேவ அங்கிசமாகவும், உபேந்திரனாகவும் சொல்லுவார் கள். வசுவினிடத்திலே துரோணன், பிராணன், துருவன், அர்க்கன், அக்கினி, தோஷன், வாஸ்து, விபாவசு எனும் அஷ்டவசுக்கள் பிறந்தார்கள்; துரோணனுக்கு அபிமதி யென்கிற ஸ்திரீயினிடத்தில் அருட்சம், சோகம், பயம், இவர் கள் முதலான பிள்ளைகள் பிறந்தார்கள்; பிராணனுக்கு ஊற்சாஸ்வதி யென்கிற பாரியினிடத்தில் சகன் ஆயுசு புரோசவனென்னும் மூன்றுபேர் பிறந்தார்கள்; துருவ னுடைய பாரியையான தணியோவென்றால் நானுவிதங்க ளான புராணங்களைப் பெற்றாள்; அர்க்கனுடைய பாரியை யான அசனை யென்கிறவளுக்கு ஆசைமுதலான பிள்ளைகள் பிறந்தார்கள்; அக்கினியினுடைய பாரியையான வசோர்த் தாரையானவள் திரவிணிகள் முதலான பிள்ளைகளைப் பெற் றாள்; ஸ்கந்தனேவென்றால் அக்கினிக்குக் கிர்த்திகையி னிடத்திலே பிறந்தவன்; விசாகன் முதலான பிள்ளைகளும் அக்கினிக்குப் பிறந்தார்கள்; தோஷனுக்குப் பாரியை சரவரியானவள் அரியினுடைய கலையான ஸிம்சுமாரனைப் பெற்றாள்; வாஸ்துவுக்குப் பாரியையான அங்கிரசி யென்கிற வள் சிற்பாசாரியான விசுவகர்மாவைப் பெற்றாள், விசுவ

கர்மாவுக்குச் சாட்சூசமனு பிறந்தான், சாட்சூசமனுவுக்கு விசுவேஷன் முதலான பிள்ளைகள் பிறந்தார்கள். விபாவசு வென்பவனுக்கு உஷாவென்பாள் வியுஷ்டியையும், ரோசஸ் என்கிறவனையும், ஆதபனையும் பெற்றாள், ஆதபனிடத்தில் பஞ்சயாம மென்னப்பட்ட திவசம் பிறந்தான். குமூர்தாவி னிடத்திலே மேனவூர்திகர்க ளென்கிற தேவகணங்கள் பிறந் தார்கள். சங்கல்பை யென்கிறவளிடத்திலே சங்கல்பன் பிறந் தான் ; சங்கல்பனுக்குக் காமன் பிறந்தான்.

பூதருடைய பாரியையான சரூபா வென்பவள் கோடி கணக்கான ருத்திரர்களைப்பெற்றாள்; மற்றொருத்தி ரைவதன், அரசன், உக்கிரன், விருஷாகாபி, அசைகபாது, அகிற் புத்தியன், வெகுரூபன், மகான், ஏகாதசரூபனான ருத்திர னுடைய பாரிஷதர்களான விநாயகன் முதலானவர்களைப் பெற்றாள். ஆங்கிரசுக்குச் சுதா வென்கிறவள் பிதுர்க்களைப் பெற்றாள் ; சதியென்கிறவள் அதர்வ அங்கிரசு வென்கிற வேதத்தைப் பெற்றாள். கிரிசாசுவனுக்கு அர்ச்சிசுவென் கிறவள் கிரிசாசுவா தூமரகேசனையும், திக்ஷணையென்கிறவள் வேதசிரசையும், தேவனையும், வயினனையும், மனுவையும் பெற்றாள். தாட்சியபருடைய நான்கு மனைவியரில் வினதை யென்கிறவள் சாக்ஷாத் யெக்கியேசரான விஷ்ணுவுக்கு வாகனமான கருடனையும், சூரியனுக்குச் சாரதியான அருண னையும் பெற்றாள்; கத்துருவென்கிறவள் அநேக நாகங்களைப் பெற்றாள்; பதங்கி யென்கிறவள் பக்ஷிகளையும், யாமினி யென் கிறவள் சர்ப்பங்களையும் பெற்றாள். சந்திரனுடைய மனைவிக ளானவர் இருபத்தேழு நக்ஷத்திரங்கள்; அந்தச் சந்திரன் தக்ஷனுடைய சாபத்தினாலே க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட் டவனாய், கிர்த்திகை முதலான இருபத்தேழு மனைவிகளிடத் திலும் புத்திரனில்லாதவனாக ஆனான்.

காசிபருக்குத் திமியெனும் நாயகியினிடத்தில் ஜலப் பிராணிகளுடைய கூட்டங்களுண்டாயின. சரமையினிடத் தில் சுவாபதங்க ளுண்டாயின. சுரபியினிடத்தில் மகிஷங் களும் கோக்களும் இரண்டு குளம்புகளுடனே கூடின பிராணிகளும் உண்டாயின. தாம்பரையினிடத்தில், வல் லூறு, கழுகு முதலானவை உண்டாயின. முனியினிடத் தில் அப்சரசர்களுடைய கூட்டங்கள் உண்டாயின. குரோத வசியினிடத்தில் தந்தசூக முதலான சர்ப்பங்கள் உண்டாயின. இளாவினிடத்திலே சகலமான விருக்ஷங்களும் பிறந்தன. சுரசையினிடத்தில் யாதுதானர்களெனப்பட்ட ராட்சசர்

கள் பிறந்தார்கள். அரிஷ்டையி னிடத்திலேயோ வென்ருல் கந்தர்வர்கள் பிறந்தார்கள். காஷ்டையினிடத்திலே ஒரு குளம்பை யுடையவைகளான பிராணிகள் பிறந்தன. தனுவி னிடத்திலே அறுபத்தொருபேர் பிள்ளைகள் பிறந்தார்கள். அதிதியினிடத்தில் விவசுவான், அறியமபன், பூஷான், தோஷ்டா, சவிதா, பகன், தாதா, வருணன், மித்திரன், சுக்கி ரன், உருக்கிரமன் எனும் பன்னிரண்டுபேரும் பிறந்தார்கள்.

விவசுவானிடத்தில் நின்றும் சமுக்கியா தேவியானவள் சிரார்த்ததேவனையும், மனுவையும், இரட்டையான எமனை யும், எமியையும் பெற்ருள். அந்த சமுக்கியாதேவி தானே பூமியிலே பெண்குதிரை ரூபத்தைத் தரித்தவளாய், அசுவனி தேவதைகளைப் பெற்ருள். சாயாதேவியானவள் அந்த விசுவ னிடத்தில் சனியேஸ்வரனையும், சாவர்ணி மனுவையும், தபதியென்கிற பெண்ணையும் பெற்ருள். அந்தத்தபதியானவள் சமவர்ணனைப் பார்த்தாவாக வரித்தாள். அரியமா வென்கிற வனுக்கு மாதுருகாவென்கிறவள் ஸ்திரீயாகி கியானவான்க ளான பிள்ளைகளைப் பெற்ருள். அந்தப் பிள்ளைகளிலே ஆத்துமஞானத்தையுடைய மனுஷிய ஜாதியானது பிரமாவி ஞலே சேர்க்கப்பட்டது. முன் வீரபத்திர யுத்தத்திலே முறிக் கப்பட்ட தந்தங்களை யுடையவனும் தக்ஷனை கோபித்த ருத்திர னைப் பார்த்து சிரித்தவனுமான பூஷாவானவன் தயித்திய னுக்குத் தங்கையான ரசனையை அபுத்திரனை துவஷ்ட வாவுக்கு மனைவியாக்கினன். அவர்களிருவருக்கும் சன்னி வேசனும் வீரியவானை விசுவரூபனும் பிறந்தார்கள். தேவ கணங்களை அவமானம்பண்ணியும் குருவாயுமிருக்கிற பிரகஸ் பதிக்குச் சத்துருக்களான தயித்தியர்கள் தங்கை பிள்ளையா யிருந்தாலும் அந்த விசுவரூபனைப் புரோகிதனக வரித் தார்கள்.



## ஏழாவது அத்தியாயம்



குருவான பிரகஸ்பதியினல் விடப்பட்ட தேவதைகளினலே புரோகிதர் மத்தியிலே வரிக்கப்பட்ட இந்த விசுவரூபன் தேவதைகளுக்குப் பௌரோக்கியத்தைப் பண்ணினனென்று சொல்லப்படுகின்றது.

பரீக்ஷித்துவினுடைய வாக்கியம்

வாரீர் பகவானே! ஆசாரியரான பிரகஸ்பதி தமது சிஷியர்களான தேவர்களை யாதுகாரணத்தினல் விட்டு நீங்கினர்? அப்படிப்பட்ட குருவிஷயமான சிஷியர்

களுடைய அக்கிரமத்தைச் சொல்லுமென சுகர் சொல்லத் தொடங்கினர் :

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பாரதகுல திலகனே! இந்திரன் திரிலோக ஐஸ்வரியத் தால் மதங்கொண்டு, சத்துக்களுடைய மார்க்கத்தைத் தாண்டினவனாய், சப்தமருத்துக்கள் - அஷ்டவசுக்கள் - ஏகாதச ருத்திரர்கள் - முதலாகிய இதர தேவர்களினால் சேவிக் கப்பட்டவனாய் ஞானசக்தி முதலான குணங்களை யுடைய வனாய் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட சபையின் நடுவில் சிம்மாசனத்திலே யிருந்துகொண்டு தன்னுடைய அர்த்த சிம்மாசனத்திலே யிராநின்ற இந்திராணியோடு வீற்றிருந் தனன். வேதங்களை முழுதும் உணர்ந்த முனிவனான பிர கஸ்பதி இந்திரன் முன் எழுந்தருள, அவன் செல்வச் செருக்கால் கண் தெரியாது அப்பெரியவர்க் குரிய உபசா ரங்கள் யாதும் புரியாது ஆசனத்து அமர்ந்து இருந் தனன். அரசனே! தனது ஆசாரியன் எதிரே வருதலை ஆயிரங்கண்களை யுடைய இந்திரனே காணாது போனால், பூமியில் செல்வச்செருக்கில் ஆழ்ந்த மனிதர்கள் தம்மை யடைந்தவர்களை காண்பார்களோ?

பிறகு இந்திரன் தனது குற்றத்தை அறிந்தவனாய், சதசிலே தன்னைத்தானே நிந்தித்துக்கொண்டு, என்ன காரணத்தினாலே சபையிலேவந்த எனது குருநாதனை திரஸ் கரித்தேன்? தேவர்களுக்கெல்லாம் ஈஸ்வரனான நான் எந்த திரிலோகாத்திய சம்பத்தினாலே அசுரபாவத்தை யடைந் தேனே அப்படிப்பட்ட சம்பத்தைப் பண்டிதனான எவன் தான் இச்சிப்பான்? ஆனபடியினாலே தேவர்களுக்கெல்லாம் ஆசாரியரான பிரகஸ்பதியை நான் அஞ்ஞான மொழிந்த வனாய், வணங்குகிறேனென்று நிந்தித்துக்கொள்ளுகின்ற இந்திரனைக் காண மனமில்லாதவராய் பிரகஸ்பதியானவர் தம்முடைய மாய்கையினாலே தமது கிரகத்தில் நின்றும் மறைந்தனர். அப்போது இந்திரன் தன்னுடைய புத்தி யினாலே குருவை யறியக்கூடாதவனாய் மனோ துக்கத்தை யடைந்தான். பிரகஸ்பதி தேவர்களை விட்டு நீங்கினாரென்ற தைக் கேட்டு எல்லா அசுரர்களும் சுக்கிராசாரியருடைய மதத்தை ஆஸிரயித்துத் துர்மதர்களாய் தேவர்களைக் குறித்து யுத்தம் பண்ணினார்கள். அந்த அசுரர்களிடத்திலே தோல்வி யடைந்து இந்திரன் முதலான தேவர்களெல்லாம் பிரமாவை சரணமடைய அவர்களைப்பார்த்து அம்மூர்த்தி கிருபை

யினாலே சொல்லுகின்றார்: சுர சிரேஷ்டர்களே! உங்களாலே மகத்தான அமங்கலம் பண்ணப்பட்டது. பிரம நிஷ்டரான பிரகஸ்பதியை செல்வச்செருக்கால் மதியாமற் போனீர்கள். உங்களுக்கு நேரிட்ட அவமானத்திற்கு காரணம் உமது குருவை அனாதரவு பண்ணின அனியாயமே யல்லாமல் வேறல்ல. ஓ இந்திரனே! முன்னே குருவாயிருக்கிற சுக்கிராசாரியருடைய அதிக்கிரமத்தினாலே துற்பலர்களாயும் இப்போது அந்தக் குருவை பக்தியினாலே ஆராதித்து விர்த்தியை யடைந்தவர்களாயுமிருக்கிற சத்துருக்களான அசுரர்களைப் பார். அந்த அசுரர்கள் குருபக்தியினாலே யென்னுடைய ஸ்தானத்தையும் கிரகிப்பார்கள்.

அந்த சுக்கிராசாரியருடைய அர்த்தத்தையும் மந்திரங்களையும் பெற்ற அசுரர்கள் சொர்க்கத்தை ஒரு பொருட்டாக எண்ணுவார்களா? ஆகையால் ஆத்மக்கியானியாய் துவஷ்டாவினுடைய குமாரனான விசுவரூபனைச் சீக்கிரத்தில் புரோகிதனாக அடையுங்கள். இந்த விஸ்வரூபனுடைய அசுர பக்ஷத்தைப் பொறுத்தீர்களேயானால், அவனால் உங்களுக்கு வேண்டிய பிரயோஜனங்கள் யாவும் கைகூடும் என்று பிரமா சொன்னார்.

வயதாற் சிறியவராயினும் இனிய கல்வியை அதிகமாகக் கற்றவர்களானால் அவர்களை வணங்குவது வயதால் பெரியவர்களுக்கும் உரியதே. ஆதலின் யானும் தேவர்களுடன் சென்று அந்த விஸ்வரூபனை வணங்குகிறேன் என்று சொல்லி, இந்திரன் மற்றவர்களுடன் விஸ்வரூபனை யடைந்து அவனுக்குரிய வந்தனோபசாரங்கள் புரிந்து சொல்லுகிறான்.

வாருங்கள் பிரம நிஷ்டனே! பிதுர்க்களாயும் அதிதிகளாயுமிருக்கிற பேர்களுடைய சமையோசிதமான இஷ்டமானது உன்னாலே பண்ணத்தக்கது. ஆகையினாலே துக்கத்தை யடைந்தவர்களா யிருக்கிற நாங்கள் சத்துருக்களினாலே அடைந்த அவமானத்தை உன்னுடைய தபசினாலே போக்கடித்து எமக்கு புரோகிதரா யிருந்து எங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். மகா தபசியான விஸ்வரூபனும் சிரித்துக்கொண்டு அந்தத் தேவர்களைப் பார்த்து மதுரமான வாக்கினாலே சொல்லுகின்றான்: வாருங்கள் நாதர்களே! தர்மசீலர்களாலே தபசுக்கு நாசகரமான பௌரோகித்யமானது நிந்திக்கப்படுகின்றது. ஆனாலும் லோக நாயகர்களான நீங்கள் யாசிக்க யான் எப்படி இணங்காமலிருப்பேன். பூஜ்ஜியர்கள் சொன்ன வார்த்தையை

தள்ளாமலிருக்கின்றதே சிஷியனானவனுக்குப் பிரயோசன மென்று சொல்லப்படுகின்றது. தனமில்லாத பேர்களுக்குக் கிரிஷிபண்ணுகிற க்ஷேத்திரங்களிலே யுதிர்ந்தும், கிரிஷி பண்ணுகிறவனாலே அபேக்ஷிக்கப் படாமலுமிருக்கிற நெற்களைப் பொறுக்கிக்கொள்ளுதலாகிற சில விர்த்தியும், வீதிகளிற் சிந்தின நெற்களைப் பொறுக்கிக் கொள்ளுகிறதாகிற வுஞ்சவிர்த்தி பண்ணுகையுமே தனம். அதீஸ்வர்களே! அந்தத் தனத்தினாலாகி யிருந்த கிரகாசிரமத்திலே சாதுக்களுடைய சத்கர்மங்களை நிறைவேற்றாநின்ற நான் நிந்திக்கத் தக்கதான பௌரோக்கிய கிருத்தியத்தை எப்படி செய்யப் போகிறேன். ஆனாலும் பூஜ்ஜியர்களான உங்களாலே பிரார்த்திக்கப்பட்ட காரியம் எவ்வளவு! இதற்குப் பிரிதி வசனஞ் சொல்லமாட்டேன். உங்களுடைய சமஸ்தமான இஷ்டத்தையும், பிரர்ணன்களினாலேயும், அர்த்தங்களினாலேயும், சாதிக்கிறேனென்று அந்தத் தேவதைகள் பொருட்டு பிரதிக்ஞை பண்ணி மகாதபசியான விஸ்வரூபன் பௌரோக்கிய கர்மத்தை மகத்தாகிய பிரயத்தனத்தோடு வகித்தனன். சுக்கிராசாரியருடைய வித்தையினாலே ரக்ஷிக்கப்பட்டிருக்கிற தேவசத்துருக்களான அசுரர்களுடைய சம்பத்தை விஸ்வரூபன் நாராயண கவசமென்கிற வித்தையினாலே பிடுங்கித் தேவேந்திரனுக்குக் கொடுத்து, அந்த நாராயண கவசமென்கிற வித்தையை விஸ்வரூபன் தேவேந்திரனுக்கு உபதேசம் பண்ணின மாத்திரத்தில், அந்தத் தேவேந்திரனானவன் தனக்குச் சத்துருக்களான அசுரசேனைகளைச் ஜயித்தான்.

## எட்டாவது அத்தியாயம்

நாராயண கவசத்தை இந்திரனுக்கு விஸ்வரூபன்
உபதேசித்தமை சொல்லப்படுகின்றது.

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

வாரீர் முனிவர் பெருமானே! இந்திரன் இரதகஜதுரக பதாதிகளுடனே கூடின சத்துருசேனைகளை விளையாட்டினாலே ஜயித்து திரைலோக்கியசம்பத்தை மீண்டும் அடைவதற்குகாரணமான ஸ்ரீ நாராயண கவசத்தை சொல்லுமென்று பரிக்ஷித்து மன்னன் கேட்க சூகர் சொல்லுகிறார்.

அரிய தீர்த்தத்தில் முழுகி பரிசுத்தமாகி சாஸ்திர விதிப்படி * அங்கநியாசம் கரநியாசம் ஆகியவைகளை திருத்த

* நியாசம்=யோக நியமங்களிற் சார்ந்ததோர் கிரியை. அங்க நியாசமென்பது சரீரத்தின் ஒவ்வொரு பாகத்தையும் தொட்டு மந்திரம் சொல்லுதல்.

மாகச் செய்து பக்தர்கள் இச்சித்ததை யருளும் மாயனுடைய இருபாத மலர்களை மனத்தில் இடையறாது இருத்தி விஸ்வ ரூபன் தேவேந்திரனுக்கு உரைத்த நாராயண கவசத்தைச் சொல்லுகிறேன். சாவதானமாகக் கேள்.

விஸ்வரூபனுடைய வாக்கியம்

வாரும் மயேந்திரனே! காலையுங்கையையும் நன்றாகச் சுத்தி செய்துக்கொண்டு ஆசமனஞ்செய்து பவுத்திரத்தைத் தரித்து வடக்கு முகமாயிருந்துகொண்டு அஷ்டாக்ஷரம் துவாதசாக்ஷர மந்திரங்களினாலே அங்கன்னியாச கரன்னி யாசம் பண்ணினவனாய், மௌனத்தை யுடையவனாய், சுசியாயும் நாராயண சொரூபனாயுமிருக்கிற புருஷன் தெய்வ பக்தியோடுங் கூடினவனா யிருந்துகொண்டு பாதங்கள், முழந் தாள்கள், துடைகள், வயிறு, இருதயம் மார்பு, முகம், சிரசு, ஆகிய இந்த எட்டு இடங்களிலும் பாதாதி கிரமமாக அஷ்டாக்ஷர மந்திரத்தினது பிரணவ முதலான ஒவ்வொரு அக்ஷரத்தையும் ஆரம்பத்தில் நியாசம் பண்ணக்கடவன். பிறகு உபசம்மாரத்திலே சிரசுமுதல் பாதபரியந்தம் நியாசம் பண்ணக்கடவன். அங்கன்னியாசத்துக்குத் துவாதசாக்ஷர வித்தையினால் பிரணவமுதலான ஒவ்வொரு அக்ஷரத்தையும் வலக்கை சுட்டுவிரல் முதலான யெட்டு விரல்களிலும் அங்குஷ்டங்களினுடைய ஆதியந்தரேகைகளிலும் நியாசம் பண்ணக் கடவன். சடாக்ஷர மந்திரத்தினுடைய பிரணவ முதலான அட்க்ஷரங்களை இருதயத்திலே ஓங்காரத்தையும், சிரசிலே விகாரத்தையும், புருவமத்தியங்களிலே ஷகாரத் தையும், சிகையிலே ணகாரத்தையும், நேத்திரங்களிலே வெகாரத்தையும், சமஸ்த சந்திகளிலே நகாரத்தையும், நியாசம் பண்ணக்கடவன். மகாரத்தை அஸ்திரமாகத் தியா னம் பண்ணி விசர்க்கத்தோடும் படு என்கிற அக்ஷரத்தோடும் அந்த மகாரத்தைச் சர்வதிக்கு பந்தனத்திலே நியாசம்பண்ணி புருஷனானவன் மந்திர மூர்த்தியாகின்றான். தியானம் பண் ணத் தக்கவரான பரமாத்மாவைத் தியானம்பண்ணி இந்த நாராயண கவச மந்திரத்தை ஜபிக்கக்கடவன். இந்திரனே! இந்த நாராயண கவசமானது உனக்குச் சொல்லப்பட்டது. இந்தக் கவசத்தையுடையவனாய் அசுர சிரேஷ்டர்களை சீக்கிர மாக ஜயிக்கப்போகிறாய். இந்தக் கவசத்தைத் தரியாநின்ற புருஷனானவன் எவனைக்கண்ணாலே பார்த்து காலினாலே ஸ்பரிசிக்கிறானோ அந்தப்புருஷனும் அந்தக்ஷணத்திலேசகல பயத்தில் நின்றும் விடுபடுவன். இந்தக் கவசத்தை முன்னே கௌசிகனென்று ஒரு பிராமணன் தரித்தவனாய் யோகதார

ணையினாலே தன்னுடைய சரீரத்தை நிற்சலப்ராதேசத்திலே விட்டு விட்டான். அவன் பிராணனை விட்ட பிரதேசத்துக்குச் சரியாக ஆகாயத்திலே விமான மூர்ந்துகொண்டு சித்திரரத னென கந்தர்வபதியொருவன் அந்த வழியாகப்போகும்போது அந்தக்ஷணத்திலே விமானத்தோடுகூட தலைகீழாய் விழுந்தான். அந்தக் கந்தர்வன் வாலகில்லியர்களுடைய வசனத்தினாலே கவசத்தைதரியானின்ற அந்தப் பிராமணனுடைய அஸ்திகளை யெடுத்துக்கொண்டு கிழக்கே சாஸ்வதி நதியிலே போட்டுவிட்டு ஸ்நானத்தைப் பண்ணி ஆச்சரியத்தை யடைந்தவனாய் மீண்டும் கந்தர்வலோகத்தை யடைந்தான். வாராய் ராஜனே! அப்படிப்பட்ட கவசத்தை இந்திரனானவன் பெற்று அசுரர்களை ஜயித்து திரிலோக சம்பத்தை மீண்டும் அடைந்தான்.

சமானமில்லாத இவ்விஷ்ணு கவசத்தை யுபதேசிக்கப் பெற்ற அப்பிராமணனது சரீர என்பை அழகாற் சிறந்த ஆகாய வீதியிலும் கடத்தல் கூடாதெனின், நீலமணியினது நிறத்தையுடைய அம்மானுடைய வடிவமான கவசத்தையே யடைந்தோருடைய குறையிலாத பெருமையை யான் சொல்வது சுலபமான காரியமல்ல. இவ்வளவு பெருமை வாய்ந்த கவசத்தை கேட்பவர் சொல்பவர் யாவராயினும் துன்பத்தைத் தருகின்ற கொடிய பிணியால் வருந்தார்கள்; தாங்கள் இச்சித்ததைப் பெறுவார்கள்; வளைந்த அலைகளுடைய கடலால் சூழப்பெற்ற பூமியில் கொடுமையுற்ற பகையில்லாமல் கங்கையை வழிந்தொழுகப் பெற்ற அழகிய பாதங்களையுடைய சுத்த புருஷனை (பகவானை) யடைவார்கள்.



## ஒன்பதாவது அத்தியாயம்

இந்திரனது கோபத்தினாலே விஸ்வரூபன் அடிக்கப்பட்டு பிற்பாடு துவஷ்டாவினாலே அக்கினி முகத்திலே விருத்திராசுரனை யுண்டாக்கி அந்த விருத்திரா சுரனிடத்தில் நின்றும் பயந்த தேவதைகளினாலே ஸ்ரீ ஹரியினுடைய தோத்திரம் பண்ணப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்துவே! அந்தவிஸ்வரூபனுக்குசோபிதம் சுராபிதம் அன்னதம் எனும் மூன்று சிரசுக்கள் உண்டாயின. அந்த விஸ்வரூபன் தேவர்களைக் குறித்து எக்கியம் பண்ணி வணக்கத்தோடு தேவர்களின் பொருட்டு பிரத்தியக்ஷமாக

அவிற்பாகத்தை எடுத்து இது இந்திரனுக்குஇது அக்கினிக்கென்று உரக்கச் சொல்லிக் கொடுத்தான். மாதுர்சினேகத்தினால் அசுரர்களை அனுவர்த்தித்தவனாய், அசுரர்களுக்கு அவிற் பாகத்தைக் கொடுத்தான். இந்திரனானவன் அந்த விஸ்வரூபனுடைய கபட கர்மத்தைப் பார்த்து பயந்தவனாய், சீக்கிரமாகக் கோபத்தினாலே அவனுடைய சிரசுக்களை அறுத்துப் போட்டான். அந்த விஸ்வரூபனுடைய சோம்பிதமென்கிற சிரசானது கபிஞ்சலமென்கிற பக்ஷியாயிற்று. சுராபிதமென்கிற சிரசு கலிங்க மென்னப்பட்ட பக்ஷியாயிற்று. அன்னாதமென்கிற சிரசானது தித்திரிப் பக்ஷியாயிற்று. இந்திரன் பிரமஹத்தியைத் தள்ளுகைக்குச் சமர்த்தனாயிருந்தாலும் அந்தப் பிர்மஹத்தியை அஞ்சலியினாலே கிரகித்து ஒரு வருஷகாலம் அப்படியேயிருந்து பிறகு லோகாபவாதத்துக்குப் பயந்தவனாய் அந்த அப்வாதத்தைப் பரிகரிப்பதின் பொருட்டு அந்தப் பிரமஹத்தியை நாலுபாகமாகப் பண்ணி பூமி - ஸ்திரீகள் - விருக்ஷங்கள் - ஜலம் இவர்கள் பொருட்டுக் கொடுத்துவிட்டான். அந்த நான்கினுள் பூமி மனுஷியர்களாலே வெட்டப்பட்ட பள்ளம் தானே தூந்து போகும்படி இந்திரனிடத்தில் வரம்பெற்று அந்தப் பிர்மஹத்தியின் நான்கிலொரு பங்கைக் கிரகித்தது. அந்தப் பிர்மஹத்தியினுடைய ரூபமே பூமியிலே ஊஷரக்ஷேத்திரமாகக் காணப்பட்டிருக்கிறது. ஸ்திரீகள் பிரசவ பரியந்தம் கர்பத்துக்கு விரோதமில்லாமல் சம்போகவரத்தைப் பெற்று அந்த பிர்மஹத்தியிலே நாலிலொரு பங்கைக் கிரகித்துக் கொண்டார்கள். அந்தப் பிர்மஹத்தியே ஸ்திரீகளுக்கு மாதந்தோறும், ரஜோரூபமாகக் காணப்படுகிறது. விருக்ஷங்கள் கிளையானது வெட்டப்பட்டிருந்தாலும் திரும்பவும் வெட்டினவிடம் துளிர்க்கும்படியாய் வரம்பெற்று, அந்த பிர்மஹத்தியினுடைய நாலிலொரு பங்கைக் கிரகித்தன. அந்தப் பிர்மஹத்தியினுடைய ரூபமே விருக்ஷங்களிலே பிசினாகக் காணப்படுகிறது. ஜலமானது சுரப்பினாலே விருத்தியடையும்படி வரம்பெற்று, அந்த பிர்மஹத்தியினுடைய நாலிலொரு பங்கைக் கிரகித்தது. அந்த பிர்மஹத்தியினுடைய ரூபமே ஜலங்களிலே குமிழியும் நுரையுமாகக் காணப்படுகிறது.

பிறகு இந்திரனாலே கொல்லப்பட்ட விஸ்வரூபனுடைய பிதாவான துவஷ்டாவானவன் இந்திரனைக் கொல்லத் தகுந்த ஒருவனை வுண்டாக்க ஆபிசாரிக ஓமம் வளர்த்தினான். அந்த தக்ஷணாக்கினியில் நின்றும் பயங்கரமான தரிசனத்தையுடைய ஒரு புருஷனானவன் பிரளயகாலத்திலே லோகங்

களைச் சங்கரிக்கின்ற எமன்போல உண்டானுன். கறுத்த வர்ணத்தை யுடையவனுயும், உருக்கப்பட்ட தாம்பரம் போலொத்த சிகை மயிர் தாடி மயிர்களை யுடையவனுயும், மத்தியான காலத்துச் சூரியன்போல எதிர் விழிக்கக்கூடாத கண்களை யுடையவனுயும், மூன்று சிகைகளுடனே கூடின சூலத்திலே பூமி ஆகாசங்களைக் கோர்த்துக்கொண்டவன் போல நிர்த்தனம் பண்ணிக்கொண்டும் அடிக்கடி கொட்டாவி விட்டுக்கொண்டு மிருக்கிற அந்தப் புருஷனைப்பார்த்து சமஸ்தமான பேர்களும் பயப்பட்டவர்களாய்ப் பத்துத் திக்கிலும் ஓடிப்போய் விட்டார்கள். அந்த விருத்திராசுரனை நாலுபக்கமுஞ் சுற்றிக்கொண்டு தேவசிரேஷ்டர்கள் தங்கள் தங்களுடைய திவ்வியாஸ்திர சஸ்திரங்களினுலே அடித்தார்கள். அந்த விருத்திராசுரன் தேவதைகளினுலே பிரயோகிப்பட்ட அந்த சஸ்திரங்களனைத்தையும் விழுங்கிப் போட்டான். சமஸ்தமான தேவதைகளும் ஆச்சரியத்தையும் விசனத்தையும் அடைந்தவர்களாய் அந்தரியாமியான பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிறுர்கள்.

பிரிதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயம் இவைகளும் இவைகளின் மயமான மூன்று லோகங்களும், அவைகளுக்கு ஈஸ்வரர்களான பிரமா முதலான பேர்களும், நாங்களும் பயந்தவர்களாய் காலரூபியான பகவான் பொருட்டு சுதர்மானுஷ்டானமாகிற பூசையைச் செய்கிறுமென்று ஸ்தோத்திரம் பண்ணுகின்ற அந்தத் தேவர்களுக்குப் பகவானுனவர் சங்கு சக்கர கதாதரமாக இருதயத்திலே ஆவிற்பவித்தார். ஸ்ரீ வச்சகவுஸ்துவங்களை யன்றித் தம்முடைய சாரூப்பியத்தை யுடையவர்களான சுனந்தாதிகள் பதினறுவரால் நாலுபக்கத்திலும் சேவிக்கப்பட்டும் சரற்காலத்திலே விகசித்த தாமரை புஷ்பம் போலும் நேத்திரங்களை யுடையவராயு மிருக்கிற அந்தப் பகவானை எதிரே பிரத்தியக்ஷயாகப் பார்த்து சமஸ்தமான தேவர்களும் அந்த பகவத் தரிசனத்தினுலே யுண்டான ஆனந்தத்தினுல் பரவசர்களாய்ப் பூமியில் தண்டம்போல பிரணமம் பண்ணி மெள்ள வெழுந்திருந்து திரும்பவும் ஸ்தோத்திரம் பண்ணுகிறுர்கள். வாரீர் பகவந் நாராயண! ஆதி புருஷ வாசுதேவ! மகாபுருஷ! மகானுபாவ! பரமமங்கள பரமகல்யாண பரமகாருண்ய பரம அங்கிசர்களான யோகிகளாலே அஷ்டாங்கயோகத்தினுல் ஏகாக்கிரசித்தமாக அறியப்பட்டும் பிரகாசயாயு மிருக்கிற பகவத் பஜனரூப தர்மத்தினுலே நீக்கப்பட்ட அஞ்ஞானமாகிற கதவையுடைய மனதிலே பிரகாசிக்கின்ற பிரத்தியக

ஆத்மாவிலே பிரகாசியாநின்ற தம்முடைய சுகானுபவ சொரூபரான நீர் அறியக்கூடாதவர்போல விளங்குகிறீர். இந்தச் சமுசார பிரவாகத்திலே விழுந்து கர்மபார தந்திரியத்தினல் தம்மாலே சங்கல்பிக்கப்பட்ட புண்ணிய பாபரூப கர்மபலத்தை அநுசரித்திருக்கின்ற உம்மை நாமின்னபடியென்று அறியமாட்டோம். உம்முடைய ஆத்ம மாயையினுலே முன்னே தேவர்கள் - மனுஷியர்கள்-மிருகங்கள்-ஜலஜந்துக்கள்-இந்த அவதாரங்களினுலே அபராதத்துக்குத் தக்கதாகத் தண்டனை பண்ணினீர். அந்தப்பிரகாரம் துவஷ்டாவினுலே யுண்டாக்கப்பட்ட இந்த விருத்திராசுரனைப் பார்க்கும்பொழுதே எமக்கு பயமாக விருக்கிறது. அவனை சம்மாரம் புரிந்து எம்மை யாட்கொளவேணுமென பிரார்த்தித்தார்கள். அதைக்கேட்டு ஸ்ரீ ஹரியானவர் சொல்லுகின்ருர் : தேவசிரேஷ்டர்களே! நீங்கள் அஞ்சுதல் வேண்டாம். தத்தியங்கென்னப்பட்ட ரிஷியையடைந்து வித்தையினுலும், விரதங்களினுலும், தபசினுலும் திடமாயிருக்கிற அவருடைய சரீரத்தைச் சீக்கிரமாக யாசியுங்கள். அந்த தத்தியங்க ரிஷியானவர் பிரமத்தையும் பிரவாக கர்மத்தையும் அறிந்தவராய், அசுவனி தேவதைகளுக்கு பிரமவித்தையை உபதேசித்தமையால் அசுவத்தினுடைய சிரசை யுடையவரான அவரால் சொல்லப்பட்ட அப்பிரம வித்தைக்கு அசுவ சிரசென்று பெயருண்டாயிற்று. அசுவினிதேவர்களும் ஜீவன் முக்தர்களா யிருந்தனர்.

இதுவுமன்றி அதர்வா வென்கிற ரிஷியினுடைய பிள்ளையான அந்தத் தத்தியங்க ரிஷியானவர் துவஷ்டாவுக்கு என்னுடைய ரூபமான நாராயண கவசத்தை யுபதேசித்தார். அந்தத் துவஷ்டாவானவன் தன்னுடைய புத்திரனை விஸ்வரூபனுக்கு அதை யுபதேசித்தார். அந்த விஸ்வரூபனிடத்தில்நின்றும் அந்த நாராயண கவசத்தை நீதரிக்கிருய். தர்மக்கியராயும் வித்துவானுயுமிருக்கிற அந்த தத்தியங்கரிஷியானவர் உங்களாலே யாசிக்கப்பட்டவராய் உங்களுக்குத் தனது அஸ்திகளைக் கொடுப்பார். விஸ்வகர்மாவினுல் அஸ்திகளினின்றும் ஆயுத சிரேஷ்டமான வஜ்ஜிரமுண்டாகப் போகிறது. அந்த வஜ்ஜிராயுதத்தினுல் நீ என்னுடைய தேஜசினுலே பூரிக்கப்பட்டவனுய் விருத்திராசுரனுடைய சிரஸைச் சேதிக்கப்போகிருய். அந்த விருத்திராசுரன் அடிபட்டுப்போன பிறகு நீவிர் பழையபடி எல்லா சம்பத்துகளையுமடைவீர். என்னுடைய பக்தர்களை ஒருத்தரும் இம்சிக்கமாட்டார்கள். உங்க

ளுக்கு மங்கள முண்டாகக்கடவது என்றருளிச்செய்து பகவான் அந்தர்த்தான மாய்விட்டார்.



## பத்தாவது அத்தியாயம்



*இந்திரன் ததீச மகரிஷியினுடைய என்பினின்றும் வச்சிரா யுதத்தை உண்டாக்கி விருத்திராசுரனை வென்றமை சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் பரிக்ஷித்துவே! ஆதிசேடனெனும் அரவணையில் யோக நித்திரை புரியும் பழைய முதற்பொருளான திருமாலினது திருமலரடிகளைத் தொழுது, உயர்ந்த தன்மை வாய்ந்த ததீசி முனிவரை யடைந்து தானிச்சித்து வந்ததை இந்திரனுரைத்தனன்.

தத்தியங்கமுனிவர் பிரீதியோடு சொல்லுகின்றார்: வாருங்கள் தேவர்களே! பிராணிகளுக்கு மரணத்திலே யுண்டாகும் துக்கத்தை யறிவீர்களா; பிராணவியோக துக்கமானது சகிக்கக்கூடாததல்லவா? வெகு நாள் ஜீவிக்க வேணுமெனும் இச்சையுடையார்க்கு தேகமானது அத்தியந்தம் இஷ்டமல்லவா? அப்படிப்பட்ட தேகத்தை சாக்ஷாத் விஷ்ணுதான் யாசித்தாலும் அவருக்கும் எவன்தான் கொடுக்கச் சம்மதிப்பானென்று சொல்லுகின்ற தத்தியங்க முனிவரைப் பார்த்து தேவர்கள் பிரமநிஷ்டரே! பூததயை யுடையவர்களாயும், மகான்களாயுமிருக்கிற வும்மைப்போலொத்தவர்களையாசித்தால், கொடுக்கக்கூடாத வஸ்து யாதிருக்கின்றது? லோகமானது சுயகாரியத்தையே பார்த்துக்கொண்டிருக்கும். அது நிச்சயம். எதிரியினுடைய சங்கடத்தை யறியமாட்டாது. அறிந்ததேயாகில் யாசிக்கமாட்டாது. சமர்த்தனான புருஷனானவன் யாசகனுடைய சங்கடத்தை யறிந்தானேயாகில் அவனும் இல்லையென்று சொல்லமாட்டான் என்று சொல்ல, ரிஷியானவர் சொல்லுகிறார்: வாருங்கள் தேவர்களே! உங்களுடைய தர்மத்தைக் கேட்கவேணுமென்று இச்சியாநின்ற என்னாலே நீங்கள் நிராகரிக்கப்பட்டீர்கள். நான் என்னைத் தன்னிச்சையாய் விட்டுவிடாநின்ற பிரியமான தேகத்தை உங்களுக்குக் கொடுக்கிறேன். எந்தப் புருஷன் பூததயை யுடையவனாய் அநித்தியமான தேகத்திலே தர்மத்தையும் கீர்த்தியையும் சம்பாதிக்கவில்லையோ அவன் ஸ்தா

வரங்களான விருக்ஷங்கள் முதலானவைகளினுலும் ஐயோ வென்று விசனப்படத் தக்கவன். புருஷனுனவன் நாய் நரி முதலானவைகளினுல் பட்சிக்கத் தக்கவைகளாயும், ஆத்மா வுக்கு உபயோக மில்லாதவைகளாயும், க்ஷணத்திலே நாசமடையக் கூடியதாயுமிருக்கிற திரவியம் - புத்திரர்கள்- தேகம் இவைகளினுல் பிறருக்கு உபகாரம் பண்ணுமலிருக் கிறதே மகத்தானதுக்கமும் மகா நிஷேதமுமாகுமென்று அதர்வகுமாரனை தத்தியங்க ரிஷியானவர் இந்திரனை நோக்கி இந்திரனே! உனக்கு நன்மை தரக்கூடிய எனது சரீர வெண்பினை பெற்றுக்கொள் என்று தாயைக்காட்டிலும் அன்பில் மிகுந்த ததீசியெனும் தவசிரேஷ்டன் கானல் ஜலம்போலும் சரீரத்தைவிட்டு அரிசரணுர விந்தங்களை அடைந்தான்.

பிற்பாடு இந்திரனுனவன் அந்த ரிஷியினுடைய வுடம் பிலேயிரா நின்ற எலும்புகளினுலே விசுவகர்மாவினுல் செய் யப்பட்ட வச்சிராயுதத்தை எடுத்துக்கொண்டு பகவானுடைய தேஜசோடு கூடினவனுய், ஐராவதத்தின் பேரிலேரிக் கொண்டு, சத்துருவான அந்த விருத்திராசுரனைத் துரத்தி னுன். அப்போது தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் மகா யுத்தமானது திரேதாயுகத்தினுடைய முதலில் நர்மதா தீரத் தில் உண்டாயிற்று. அந்த யுத்தத்தில் இந்திரனுடைய ஆற்ற லுக்கு விருத்திராசுரன் முதலான அசுரர்கள் சகியாமற் போனுர்கள். பிற்பாடு நமுச்சிய சம்பரன் - அன்றவாது - விமுற்தாரிஷபன்- அம்பரன் - அயக்கிரீவன் - சங்கு-சிரசு-விப் பிறசித்தி-அயோமுகன்-புலோமா - விரிஷபனுவா - பிரகெதி எதிவுதக்கரன்-முதலியவர்கள் திதியினுடையபிள்ளைகளாயும் தனுவினுடையபிள்ளைகளாயுமிருக்கிற அசுரர்களும் அனேக மாயிரம் ராக்ஷசர்களும் இந்திரனுடைய சேனுசமுகத்தைத் தகைந்து பயமில்லாமல் சிங்கநாதங்களைப் பண்ணிக்கொண்டு பீடித்தார்கள்.

தேவசிரேஷ்டர்களை நாலண்டையிலும் வளைத்து அஸ்தி திர சஸ்திரங்கள் கத்திகேடயம் முதலான ஆயுதங்களைக் கொண்டெதிர்த்தார்கள். அப்படி அந்த அசுரர்களாலே பிர யோகிக்கப்பட்ட அஸ்திரசஸ்திர சமுகங்கள் வேகத்தோடு கூடின அஸதர்களான தேவர்களினுலே ஆகாசத்தில் சகஸ் திரப் பிரகாரமாகச் சேதிக்கப் பட்டவைகளாய், அந்த தேவ சேனையிலே இருக்கிறவர்களை அடையாமற்போயின. பிற்பாடு அசுரர்கள் பர்வதசிகரங்களினுலும், விருக்ஷங்களினுலும், கற்

களினாலும் வருஷித்தார்கள். அவைகளையும் முன்போல தேவர்கள் சேதித்துபோட்டார்கள்.

பிற்பாடு விருத்திராசுரனை நாதனாகவுடைய அசுரர்கள் தங்களாலே வருஷிக்கப்பட்ட சஸ்திர சமூகங்களினாலே அடிக்கப் படாதவர்களான தேவர்களைப் பார்த்துத் திரும்பவும், விருக்ஷங்களினாலும், கற்களினாலும், நானாவிதங்களாகப் பீடித்தார்கள். கிருஷ்ணனை அனுகூலமாக வுடையவர்களான தேவகணங்களிடங்களிலே தயித்தியர்களால் அடிக்கடி பண்ணப்பட்ட சமஸ்த பிரயாசங்களும் வியர்த்தமாயின. அந்த அசுரர்கள் தங்களுடைய பிரயாசங்கள் வியர்த்தமாகப் போகின்றதைப்பார்த்து யுத்தசமூகத்திலே எஜமானனை விட்டுவிட்டு ஓடிப்போக யத்தனித்தார்கள், அப்போது யுத்தம் பண்ணவேணுமெனும் மனதையுடைய விருத்திராசுரன் ஓடிப்போகிற தன்னுடைய சேனாபதிகளைப்பார்த்து சிரித்து கேழ்க்கத்தக்கதாயும் காலோசிதமாயுமிருக்கிற வசனத்தைச் சொல்லுகிறான்: வாரீர் விப்பிரசித்தியே! நமுசியே! புலோமனே! மயனே! என்னுடைய வார்த்தையைக் கேளுங்கள். பூமியில் ஜனித்தவனுக்கு மரணம் சித்தமாகவே யிருக்கிறது. இந்த மரணத்துக்கு ஒன்றும் பிரதிக்கிரியையாகப் பண்ணப்பட்டதில்லை. யுத்தமுகத்திலே மரித்ததினாலே வீரசுவர்க்கமும் எஜசும் உண்டாகிறதானால் அந்த யுக்தமான மரணத்தை எவன்தான் இச்சியாமற்போவான்? இந்த லோகத்திலே புருஷனானவன் சிதேந்திரியனாயிருந்து யோகமார்க்கத்தினாலே பிரமனிடத்தில் ஆத்மாவைச் சேர்த்து சரீரத்தை விட்டுவிடுகிறதும், யுத்த பூமியிலே பின்னிடையாமல் யுத்தம் பண்ணிச் சரீரத்தை விட்டுவிடுகிறதும், ஆகிய இவ்விரண்டு மரணங்களும் சுலபமாக லபிக்கத்தக்க தன்றென்பது சாஸ்திரத்தின் அபிப்பிராயமாம்.



## பதினொன்றாவது அத்தியாயம்



இந்திரனுடன் யுத்தம் புரிந்த விருத்திராசுரனுடைய பக்தி-ஞானம்-ஆண்மை முதலிய அதிசயங்கள் வர்ணிக்கப்படுகின்றன.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜாவே! விருத்திராசுரனுடைய தர்மயுக்தமான வீரவசனத்தை கேட்டும் புத்தியில்லாத அந்த விப்பிரசித்தி முதலான அசுரர்கள் மேலிட்டவர்களாய் ஓடிப்

போனார்கள். அசுரசிரேஷ்டனான விருத்திராசுரன் அனு கூலகாலத்தை யுடையவர்களான தேவதைகளினாலே தூரத் தப்பட்டும், நாதனில்லாதவர்போல ஓடிப்போகும் அசுர சேனையைப்பார்த்து மிகவுந் தாபத்தையடைந்து பொறுமை யையுங் கோபத்தையு முடையவனாய் அந்தத் தேவர்களைத் தன்னுடையபராக்கிரமத்தினாலே தகைந்து மிரட்டி சொல்லு கின்றான் : வாருங்கள் தேவர்களே! பிரஷ்டபாகத்தில் அடிக்கப்பட்டவர்களாயும், ஓடுகின்ற அசுரர்களாலே யுங்க ளுக்கு ஆகிறதென்ன? தன்னைச் சூரனாக எண்ணுகின்ற பேர்களுக்குப் பயப்பட்டு ஓடா நின்ற பேர்களை அடிப்பதினால் எஜசுமில்லை சொர்க்கமுமில்லை. யுத்தத்திலே உங்களுக்குச் சிரத்தை யிருந்தால்—இகலோக சுகத்திலே இச்சையில்லா விட்டால்—என்முன்னே க்ஷணமாத்திரம் நில்லுங்களென்று சத்துருக்களான தேவகணங்களைத் தன்னுடைய வசனத் தினால் மிரட்டிக்கொண்டு மகா பலவானான அசுரன் லோக மெல்லாம் மூர்ச்சை யடையத்தக்கதாய் சிங்கநாதம் பண்ணி னான். அந்தச் சிங்கநாதத்தினாலே சமஸ்தமான தேவகணங் களும் மூர்ச்சை யடைந்தவர்களாய்ப் பூமியிலே விழுந்து விட்டார்கள். பிற்பாடு விருத்திராசுரனானவன், அந்தத் தேவ சேனையைக் கால்களினால் துவைத்தான். அதைப்பார்த்து வச்சிரதரனான இந்திரனானவன் மிகவுங் கோபத்தை யடைந் தவனாய், எதிரே யோடிவரா நின்ற விருத்திராசுரன் மேல் மகத்தான கதையைச் சுழற்றிப்போட்டான். விருத்திராசுர னானவன் அந்தக் கதையைத் தன்னுடைய இடது கையினால் விளையாட்டாகப் பிடித்துக்கொண்டு உக்கிரமான பராக்கிர மத்தை யுடையவனாய் அந்தக் கதையினால் இந்திரன் ஏறிக் கொண்டிருக்கிற ஐராவதத்தின் கும்பஸ்தனத்திலடித்தான். அவனந்த யானையை அடித்ததைப்பார்த்து யாவருங் கொண் டாடினார்கள். விருத்திராசுரனுடைய கதையினாலடிக்கப்பட்ட அந்த ஐராவதமானது இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டு இந்திரனோடுகூட ஏழுவில்லிடைப் பிரமாணம் பின்வாங்கிப் போய்விட்டது. அந்த மகாரதனான விருத்திராசுரன் மன வருத்தத்துடன் இருக்கிற இந்திரன் பொருட்டுத் திரும்பவும் அந்தக்கதையைப் பிரயோகம் பண்ணவில்லை. இந்திரனும் ஐராவதத்தோடு எதிரேவந்தான். அந்த விருத்திராசு ரனானவன் திரும்பவும் யுத்தம்பண்ணவேணுமென்கிற இச்சை யுடையவனாய், இந்திரனைப்பார்த்து முன்னே அந்த இந்திர னால் பண்ணப்பட்ட குரூரமாயும், பாபமாயுமிருக்கிற அந்தக் கர்மத்தை நினைத்து சோகமோகாவேசத்தையுடையவனாய், சிரித்து, ஒரு வார்த்தை சொல்லுகிறான் :

கேளாய் இந்திரனே! பிரமஹத்தி பண்ணினவனும், குருஹத்தி பண்ணினவனும், என்னுடைய பிராதாவைக் கொன்றவனும், எனக்குச் சத்துருவாயுமிருக்கிற நீ தெய்வாதீனமாக என் முன்னே வந்து நின்றாய்! அடா துஷ்டர்களுக்கெல்லாந் தலைவனே! உன்னாலே நானிப்போது சீக்கிரத்தில் பிராதாவினுடைய ருணத்தில் நின்றும் விடப்பட்டவனாகப் போகிறேன். எனக்குத் தமையனும், ஆத்மக்கியானியாயும், உனக்குக் குருவாயும், தீக்ஷதனுயுமிருக்கிற விஸ்வரூபனுடைய சிரசுகளைக் கத்தியினால் சேதித்துப்போட்டாய். உன்னைக் கழுகுகள் மிகவும் பட்சிக்கப்போகின்றன. வாராய் மூடனே! எதினால் எதிரேயிரா நின்ற சத்துருவான என் மேல் அமோகமான வச்சிராயுதத்தை செலுத்தாமலிருக்கிறாய்? அந்த வச்சிராயுதமானது நிஷ்பலமாகப்போமென்று சமூசயிக்கவேண்டாம். வாராய் இந்திரனே! உன்னுடைய வச்சிராயுதமானது ஹரியினுடைய தேஜசினாலும், ததீசியங்கனுடைய தபசினாலும் மிகவும் தீக்ஷணமாகப் பண்ணப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட வஜ்ஜிராயுதத்தைக் கொண்டு விஷ்ணுவினுடைய சங்கல்பத்தின்படி சத்துருவான என்னைக் கொல்லக்கடவாய். எவன் பங்கிலே ஹரியிருக்கிறானோ அவனிடத்திலேயே ஜயமும் சம்பத்துமுண்டாயிருக்கும். சங்கருஷணனவர் எனக்கு சுவாமி. நானவருடைய சரணாரவிந்தத்திலே எதா யோக்கியமாக மனதை நன்றாக வைத்து உன்னுடைய வச்சிராயுத வேகத்தினால் சேதிக்கப்பட்டவனாய், விஷயபோகங்களை விட்டவனாய், யோகியினுடைய கதியையடையப்போகிறேன். இந்திரனே! என்னுடைய சுவாமியான பகவானனவர் பக்தர்களுடைய தர்மார்த்த காம விஷயமான ஆயாசத்துக்கு விகாதத்தைப் பண்ணுவாரா? பகவானுடைய பிரசாதமானது பக்தியில்லாதவர்களுக்கு துர்லபமாயும், அகிஞ்சனர்களுக்குச் சுலபமாயு மிருக்கின்றது. அந்த பகவத் பிரசாதமானது, தர்மார்த்த காமங்களுடைய விகாதத்தினாலே அறியத்தக்கது என்று இந்திரனைப் பார்த்துச் சொல்லி, விருத்திராசுரனனவன் பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிறான்: வாராய் ஹரியே! நானும்முடைய பாதாரவிந்தத்தை ஆசரியா நின்ற தாசர்களுக்குத் தாசனாகத் திரும்பவும் ஆகக்கடவேன். என்னுடைய மனமானது பிராணநாதனான உம்முடைய குணங்களை ஸ்மரிக்கக்கடவது. என்னுடைய வாக்கானது அந்தக் குணங்களையே கீர்த்திக்கக்கடவது. நானும்மைவிட்டு சொர்க்காதி போகங்களை யடையக்கோறவில்லை. என்னுடைய மனமானது உம்மையே பார்க்கவேணுமென்று இச்சிக்கின்றது.



படம் நெ. 7. பக்கம் நெ. 537.

விருத்திராசுரனை, இந்திரன் வதைத்தது.

## பன்னிரண்டாவது அத்தியாயம்

மகேந்திரனது மகாயுத்தத்திலே விருத்திராசுரனுடைய வதம் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜாவே! இந்தப் பிரகாரம் யுத்தத்திலே தேகத்தை விடவேணுமென்று இச்சித்தும் சத்துரு ஜயத்தைக் காட்டிலும் மரணத்தையே சிரேஷ்டமாக எண்ணியுமிருக்கின்ற விருத்திராசுரனனவன், சூலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு மகேந்திரனுக்கு எதிராக வந்து, அந்தச் சூலத்தை வேகத்தினுலே சுழற்றி, மகேந்திரன் பேரிலே போட்டு, அட்டகாசம்பண்ணி, வாராய் மகாபாபியே! நீ இத்தோடு அதமாய்ப் போவாயென்று கோபத்தினுலே சொன்னுன். ஆகாசத்தில் சுழலாநின்ற கிரகங்களைப்போலும் எரிந்து கொண்டு வராநின்ற கொள்ளிக் கட்டை போலும் அந்தச் சூலத்தைப் பார்த்து, மகேந்திரனனவன் அதைரியப் பட்டவனுய் நூறு கணுக்களை யுடையதான வச்சிராயுதத்தினுலே அந்தச் சூலத்தை அறுத்துப்போட்டு, அந்த அசுரனுடைய ஒருபுயத்தையும் சேதித்தான். அப்போது விருத்திராசுரனனவன் கோபத்தை யுடையவனுய் வஜ்ஜிர அஸ்தனுய் தேவ சிரேஷ்டனனை இந்திரனைக் கதையினுல் தாடையிலடித்தான். அப்போது இந்திரனுடைய அஸ்தத்திலே யிராநின்ற வச்சிராயுதமானது நழுவிக் கீழே விழுந்தது. அது கண்டு ஆகாசத்திலே யிராநின்ற தேவர்கள் முதலானவர்களும் அந்த விருத்திராசுரனுடைய யுத்தத்திலே அதியற்புதமான அந்த கர்மத்தைக் கொண்டாடினுர்கள். இந்திரனுடைய அந்தச் சங்கடத்தையும் பார்த்து, ஆ ஆ வென்று மிகவுங் கூப்பிட்டார்கள். பிற்பாடு இந்திரனனவன் லச்சையை யுடையவனுய் சத்துருவினுடைய சந்நிதானத்திலே தன்னுடைய அஸ்தத்தில் நின்றும் நழுவிப்போன அந்த வஜ்ஜிராயுதத்தைத் திரும்பவும் கிரகியாமலிருந்தான் அப்போது அந்த இந்திரனைப் பார்த்து விருத்திராசுரனனவன் சொல்லுகின்றுன்.

இந்திரனே! வச்சிராயுதத்தை யெடுத்துக்கொண்டு உன்னுடைய சத்துருவான என்னை அடிக்கக்கடவாய். விசனப்படுகிறதற்கு இதுகாலமன்று. ஜகத்வுற்பத்தி ஸ்திதி சங்கார கர்த்தாவாயும், அநாதியாயும், சர்வக்கியராயு மிருக்கிற பரம புரு

ஷன் ஒருவனையன்றி ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு யுத்தம் பண்ணு நின்ற பராதீனமான தேகத்தை யுடையவர்களுக்கு எப்போதும் ஜயமுண்டாக மாட்டாது. பிரகிருதி புருஷன் மகதத்துவம், அகங்காரம், பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், அந்தக்கரணம் ஆகியவைகளிந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி - ஸ்திதி - லயங்களிலே ஈஸ்வரனுடைய அனுக் கிரகத்தையன்றி சமர்த்தங்களாகிறதில்லை. இவைகளை அறி யாத அவிவேகியானவன் ஆத்மாவையே ஈஸ்வரனுக என் ணிக்கொள்ளுகிறுன். ஈஸ்வரன் பிராணிகளினுலே பிராணிக ளைச் சிருஷ்டிக்கிறுன். பிராணிகளினுலே பிராணிகளைச் சங்க ரிக்கின்றுர். புருஷன் கோருமலிருந்தாலும் அவனுக்கு அந் தக் காலத்திலே துக்கம் மரணம் முதலானவைகள் உண்டா கின்றதுபோல ஆயுள் - கீர்த்தி - ஐசுவரியம் ஆகியவைக ளெல்லாம் அந்தக் காலத்திலே யுண்டாகும். ஆகையினுல் புருஷனைவன் கீர்த்தி - அபகீர்த்தி - ஜயம் - அபஜயம் - துக்கம் - மரணம் - இவைகளிலே சமபுத்தியா யிருக்கத்தக்க வன். சத்துவம் ரசசு தமசு என்னும் இம்மூன்றும், பிரகிரு தியினுடைய குணங்களேயொழிய, ஆத்மகுணங்களன்று. அந்த மூன்று குணங்களுக்கும் பரமாத்துமாவை சாக்ஷியாக எவன் அறிகிறுனே, அவன் அந்தக்குணங்களிலே கட்டுப் படுகிறதில்லை. இந்திரனே! யுத்தத்திலே அறுக்கப்பட்ட ஆயுதம் புஜம் இவைகளை யுடையவனுயும், உன்னுலே ஜயிக்கப்பட்டவனுயும், திரும்பவும் உன்னுடைய பிராணனை ஹரிக்கவேணுமென்கிற இச்சையினுலே என் பலத்துக்குத் தக்கதாக யத்தனம் பண்ணிக்கொண்டு மிருக்கிற என்னைப் பார். இந்த யுத்தமானது பிராணனை பந்தியமாகவும், பாணங்களை பாச்சிகையாகவும், வாகனங்களை காய்கள் வைக் கிற ஸ்தானமாகவு முடையதாயிருக்கிற சொக்கட்டானுட்ட மாக விருக்கின்றது. இந்த யுத்தமென்னப்பட்ட சொக்கட்டா னுட்டத்திலே இவனுக்கு ஜயமுண்டாகும் இவனுக் கபஜய முண்டாகுமென்று அறியப்பட மாட்டாதென்று சொல்லு கின்ற கபடமில்லாத விருத்திராசுரனுடைய வார்த்தையைக் கேட்டு, இந்திரனைவன் சிலாகித்துக் கொண்டு வஜ்ஜிரா யுதத்தை யெடுத்துக்கொண்டு, கர்வத்தை விட்டு சிரித்து அந்த விருத்திராசுரனைப் பார்த்து சொல்லுகிறுன்:

வாராய் அசுரனே! நீ சித்தியடைந்தவனுகவும், சர்வப் பிராணிகளுக்கும் சுகுர்தாயும், ஜெகதீஸ்வரராயு மிருக்கிற பரமாத்மாவை ஆசிரயித்தவனுகவும், ஜனங்களை மோகிப் பிக்கின்ற விஷ்ணுமாயையைத் தாண்டினவனுகவு மிருக்

கிருய். இராஜ சுபாவத்தை யுடையவனுன உனக்குப் பகவானுயும் சர்வாந்திரியாமியாயு மிருக்கிற வாசுதேவனிடத்திலே திடமான புத்தியுண்டானது மகத்தான ஆச்சரிய மல்லவா! ஸ்ரீ ஹரியினிடத்திலே எவனுக்கு பக்தியுண்டாயிருக்கிறதோ அவனுக்கு அதிசொற்ப சுவர்க்காதி சுகங்களினுலே ஆகவேண்டியதென்ன? இவ்விதம் யுத்தத்தினுலே சமர்த்தர்களா யிருக்கிற இந்திரனும் விருத்திராசுரனும் தர்மத்தை அறியவேணுமென்கிற விச்சையினுலே ஒருவருக்கொருவர் வார்த்தையாடிக்கொண்டு யுத்தம் பண்ணினுர்கள். அப்போது சத்துருக்களை இம்சியாநின்ற விருத்திராசுரன் பரிசமென்கிற ஆயுதத்தை இடது கையினுலே சுழற்றி இந்திரன் மேலே பிரயோகித்தான். அந்த இந்திரனுனவன் விருத்திராசுரனுடைய கதையையும், யானைத் துதிக்கைக்குச் சமானமான கையையும், ஏககாலத்திலே நூறு கணுக்களுடனே கூடின வஜ்ஜிராயுதத்தினுலே சேதித்துப் போட்டான்.

அப்படி சேதிக்கப்பட்ட கைகளையுடைய தோள்களில் நின்றும் இரத்தம்பெருகிவர இறகுகளில்லாத பர்வதம்போல விளங்கினுன். அந்த அசுரனுனவன் கீழ்த்தாடையைப் பூமியிலும் மேல் தாடையை ஆகாசத்திலும் வைத்துக்கொண்டு ஆகாசம்போலவே கம்பீரமான தனது வாயினுல் மகா சர்ப்பமானது யானையை விழுங்குவதைப்போல அந்த இந்திரனை விழுங்கினுன். அப்படி விருத்திராசுரனுலே விழுங்கப்பட்ட இந்திரனைப்பார்த்து பிரமா முதலான சகல தேவர்களும் துக்கத்தை யடைந்தவர்களாய், ஆ! கஷ்டமென்று அலறினுர்கள். அசுரேந்திரனுன விருத்திராசுரனுலே விழுங்கப்பட் டிருக்கிற இந்திரனுனவன் நாராயண கவசத்தினுலும், யோகமாயாப் பிரபாவத்தினுலும், ரக்ஷிக்கப்பட்டவனுய், மரிக்காமல் வஜ்ஜிராயுதத்தினுலே அவனுடைய வயிற்றைப் பிளந்து கொண்டு வெளிப்பட்டு சத்துருவின் பேரில் வஜ்ஜிராயுதக்தை விட்டான். சீக்கிரமான வேகத்தை யுடையதான அந்த வஜ்ஜிராயுதமானது சப்தித்துக்கொண்டு போய் அந்த விருத்திராசுரனுடைய சிரசை அறுத்துப் பூமியிலே தள்ளிவிட்டது. அந்த விருத்திராசுரனுடைய தேகத்தில் நின்றும் வெளிப்படாநின்ற ஆத்ம தேஜசானது சமஸ்தமான தேவதைகளும் பார்த்துக்கொண்டிருக்கும் போதேலோகாதீதரான பகவானை யடைந்தது.பூமியிலுள்ள அனைவரும் காண அசுரசிரேஷ்டனுன விருத்திராசுரன் ஜோதியாய் பிரகாசிக்கும் திருமாலினது பாதங்களையடைத

லும், தேவர்கள் முதலினோர் அளவிலாத துன்பம் போய் விட்டதென்று மலர்மாரி பொழிந்தார்கள். மலர் மாலை பணிந்த இந்திரன் மாத்திரம் மகிழ் வெய்திலன்.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



*விருத்திரப் பிரமஹத்தியாகிற மகாதபசினாலே வெகுகாலம் மோகத்தை யடைந்திருந்த இந்திரனானவன் ஸ்ரீமகா விஷ்ணுவினாலே ரக்ஷிக்கப்பட்டானென்று சொல்லப்படுகின்றது.*

என்று சுகமுனிவர் சொல்ல, எல்லோரு மகிழ்ந்து சுகமாக விருக்க ஜயமடைந்த தவற்றுற்பெற்ற பெருமை பொருந்திய வஜ்ஜிராயுதத்தை யுடைய இந்திரன் மாத்திரம் மகிழாது அன்றிருந்ததேன் என பரீக்ஷித்து வினவ, "உனது கேள்வி நல்லது நல்லது" என்று சுகமுனிவர் சொல்லுகிறார் :

ஸ்ரீ சுகர் வாக்கியம்

முன்னா ரிஷிகளும் சமஸ்த தேவர்களும் விருத்திராஸுரனுக்கு மிகவும் பயந்து அவனைக் கொல்லும்படி இந்திரனை பிரார்த்தித்தார்கள். அப்போது இந்திரன் பிரமஹத்திக்கும் பயந்தவனாய் அவனைக் கொல்ல ஒப்பாமல் தேவர்களைப் பார்த்து விஸ்வரூபனை வதைத்ததினாலுண்டான பாபத்தை பெண்கள், பூமி, நீர், மரங்கள் ஆகிய நான்கும் பாகித்து கிரகித்துக்கொண்டன. விருத்திர ஹத்தியினாலுண்டாகும் தோஷத்தை எப்படி போக்கடித்துக் கொள்ளுவேனென்று சொன்னான். இந்திரனுடைய வசனத்தைக் கேட்டு ரிஷிகள், "இந்திரனே! உனக்கு அஸ்வமேதம் பண்ணி வைக்கிறோம். உனக்கு மங்கள முண்டாகக் கடவது. நீ பயப்படாதே. அஸ்வமேதத்தினாலே மகா புருஷனாயும் பரமாத்மாவாயு மிருக்கிற நாராயணனை பிரீதி பண்ணி வைத்து, நீ சகல பாபங்களினின்றும் விடுபடுவாய். பிரமஹத்தி - பிதுர்ஹத்தி - கோஹத்தி - மாதுர்ஹத்தி - குருஹத்தி முதலானவைகளைப் பண்ணிய மகா பாவியானவனும் பகவானுடைய கீர்த்தனத்தினாலே சகல பாபத்தில் நின்றும் விடுபட்டு சுத்தியடைந்திருக்கிறான்.

அப்படிப்பட்ட பகவானை யுத்தேசித்து எங்களால் பண்ணிவைக்கப்பட்ட அஸ்வமேதமாகிற மகா கிறிதுவினாலே

நீ சிரத்தையுடன் பகவானை ஆராதித்தவனுய், பிரமா முதலான சகல பிரபஞ்சத்தையும் சங்கரித்திருந்தாலும் அந்த தோஷத்திலே அகப்படாம லிருப்பாய். அப்படி யிருக்க துஷ்டனுன விருத்திராசுரனுடைய நிக்கிரகத்தினுலே உண்டான பாவத்தை ஸ்பரிசிக்கமாட்டா யென்பதற்குக் கேட்கவேண்டிய தென்ன'' வென்று பிராமணர்களாலே ஏவப்பட்டவனுய், இந்திரனுனவன் சத்துருவான விருத்திராசுரனைச் சங்கரிக்க முன் வந்தான். அந்த விருத்திராசுரனுனவன் சங்கரிக்கப்பட்ட பிற்பாடு பிர்மஹத்தியானது இந்திரனை யடைந்தது. அந்த தேவப் பிராமணர்களாலே செய்விக்கப்பட்ட பிர்மஹத்தியா தோஷத்தினுலே சந்தாபத்தை யடைந்திரா நின்ற இந்திரனைத் தைரிய முதலான குணங்களும் சுகிப்பிக்க மாட்டாமற்போயின. பிறகு இந்திரன் சண்டாள ஸ்திரீயைப்போல ரூபத்தையுடையதாயும், க்ஷய ரோகத்தினுல் பீடிக்கப்பட்டதாயும், இரத்த வஸ்திரத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறதாயும், நரைத்த தலை மயிர்களை விரித்துக்கொண்டு நில்லு நில்லென்று துரத்திக்கொண்டு வரா நின்ற அந்தப் பிர்ம்மஹத்தியைப் பார்த்து இந்திரனுனவன் சீக்கிரமாக மானச்சரசுக்குள்ளே பிரவேசித்து, அந்தமானச் சரசினுடைய ஜலத்தில் மறைந்துகொண்டு அந்தப் பிர்மஹத்தியில் நின்றும் மோக்ஷத்தை யிச்சித்து ஆயிரம் வருஷம் தாமரைக்கொடி நூல்களிலே வாசம் பண்ணிக்கொண்டிருந்தான்.

இந்திரனுக்கு அவிற்பாகங்களைக் கொடுக்கிறதற்கு தூதனுன அக்கினிக்கு ஜலத்திலே பிரவேசமில்லாதபடியினுலே அந்த ஆயிரம் வருஷம் அவிற்பாகத்தை யடையாமலே யிருந்தான். அந்த ஆயிரம் வருஷமும் அகண்ட மண்டலாதிபதியான நகுஷச் சக்கிரவர்த்தியானவன், வித்தை-தபசு யோகம்-இவைகளினுடைய பலத்தினுல் சொர்க்கத்தை ரக்ஷித்துக்கொண்டிருந்தான். அந்த நகுஷன் சம்பத்தினுலும் ஐஸ்வரியத்தாலும் உண்டான மதத்தினுல் மூடபுத்தியை யுடையவனுய் இந்திரனுடைய பாரியையான சசிதேவியினுலே சர்ப்பஜன்மத்தை யடைவிக்கப்பட்டான்.

பிற்பாடு இந்திரனுனவன் பிராமணர்களால் அழைக்கப்பட்டு, சத்திய பரிபாலகரான ஹரியினுடைய தியானத்தில் பாபத்தைப் போக்கடித்துக் கொண்டவனுய் சுவர்க்கத்தை யடைந்தான். அந்தப் பிரமஹத்தியா தோஷமோவெனில் விஷ்ணு சக்திரூபமாயும் ஈசானியத் திக்குக்கு தேவதையாயு

மிருக்கிற ருத்திரனாலே ரக்ஷிக்கப்பட்ட இந்திரனை சாமர்த்திய மில்லாததாய்க்கொண்டு திரஸ்கரிக்கப்படாம லிருந்தது. பிரமரிஷிகள் அந்த இந்திரனை யடைந்து மகாபுருஷ ஆராதன ரூபமான அசுவமேதத்தினாலே சாஸ்திரப் பிரகாரமாகத் தீக்ஷை பண்ணுவித்து, பிரமவாதிகளினாலே பண்ணப்பட்ட அந்த அஷ்வமேதத்தில் மகேந்திரனாலே சர்வதேவமயரான மகா புருஷரானவர் பூசிக்கப்பட்டிருக்கையில், விருத்திரவத தோஷமானது மகத்தாயிருந்தாலும், அந்தமகா புருஷ ஆராதனத்தினாலே சூரியனைக்கண்ட பனியைப்போல நாசத்தை அடைவிக்கப்பட்டது. அந்த இந்திரனுடைய பிரமஹத்தியா மோக்ஷத்தைப் பிரதிபாதியாநின்று மிருக்கிற அந்த வுபாக்கியானத்தை சர்வகாலமும் ஞானிகள் படித்தாலும், பர்வங்கள்தோறும் பக்திசிரத்தை, பூர்வமாக இந்த வுபாக்கியானத்தைக் கேட்டாலும், அவர்களுக்கு எஜசு-ஆயுள் சத்துரு ஜயம் பாப நிவர்த்தி-சர்வமங்களங்கள்-ஆகியவைகளெல்லாம் உண்டாம்.



## பதினான்காவது அத்தியாயம்



*சித்திரகேதுவின் சரித்திரம்: அவன் புத்திரப் பேறடைந்ததும் அதை யிழந்ததும் அதனால் மகத்தான சோகத்தை யடைந்ததும் சொல்லப்படுகின்றது.*

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

பிரமநிஷ்டரே! ரசோகுணத்தையும், தமோகுணத்தையும், சுபாவமாக வுடையவனாயும், பாபியாயுமிருக்கிற விருத்திராசுரனுக்குப் பகவானான நாராயணனிடத்தில் திடமான பக்தி எதனாலே வுண்டாயிற்று? சுத்தசத்துவ குணத்தையுடையவர்களான தேவர்களுக்கும் சுத்தமான அந்தக்கரணத்தை யுடையவர்களான ரிஷிகளுக்கும், முகுந்தனுடைய சாரணாரவிந்தத்திலே பக்தியுண்டாகிற தில்லையே. அப்படியிருக்க அந்த விருத்திராசுரனானவன் பயங்கரமான மகா யுத்தத்திலே கிருஷ்ணனிடத்தில் திடமான பக்தியையுடையவனாக எப்படியானான். இதில் எனக்கு மகத்தாகிய சமுசயமுண்டாயிருக்கின்றபடியால் அதை நிவர்த்தி செய்யவேணுமென்று சொல்லுகின்ற பரிக்ஷித்துவினுடைய பிரஷ்னத்தைக் கேட்ட பகவானான சுகப்பிரமரிஷியானவர் சொல்லுகிறார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே கேள்! சூரசேனதேசத்தில் பிரசித்தனாய் அகண்டமண்டலாதிபதியாய் சித்திரகேது வென்னுமோர் அரசனிருந்தான். அவனுக்கு கோடி ஸ்திரீகள் பாரியைகளாக வுண்டாயிருந்தாலும், அவர்களிடங்களிலே புத்திர சம்பத்தை யடையாமற் போனான். ரூபம்-ஔதாரியம்-யௌவனம்-வித்தை-ஐஸ்வரியம்-கியானம்முதலிய சம்பத்துகளிருந்தும் அவனுடைய மனம் சந்தோஷ மடைந்திலது. ஒருநாள் இந்த லோகங்களெல்லாம் சஞ்சரியாநின்ற பகவானான அங்கிரசு மகாரிஷியானவர் தன் இச்சையினாலே அந்த சித்திரகேதுவினுடைய கிரகத்தை அடைந்தார். மகா புத்திமானான சித்திரகேதுவானவன் அவரைக்கண்டு எதிர்க்கொண்டு அர்க்கிய முதலானவைகளினாலே பூசித்து, ஆதித்தியத்தையும் பண்ணுவித்து, சுகாசனத்திலே யிருக்கச்செய்து அவருடைய பக்கத்திலே தானும் இருந்தான். அந்த அங்கிரசு மகாரிஷியும், இந்தப் பிரகாரம் பூசியாநின்ற ராஜாவைக் கொண்டாடிச் சொல்லுகிறார். மகாராஜனே! உனக்கும் உன்னுடைய மந்திரிமுதலான பிரகிருதிகளுக்கும் ஆரோக்கியமும் க்ஷேமமும் உண்டாயிருக்கிறதா ? உன்னுடைய முகத்தால் ஏதோ மனோரத பூர்த்தியில்லாதவனாய் காண்கிறாயென்று சர்வக்கியரான ஆங்கிரச ரிஷியினாலே கேழ்க்கப் பட்டவனாய் சித்திரகேது பணிந்து சொல்லுகிறான் :

வாரீர் பகவானே! தபசு-ஞானம் சமாதிகளிற் சிறந்த யோகிகளான உங்களைப்போலொத்த பேருக்கு என்போல்வர்க்குள்ளும் புறம்புமாயிருக்கும் அர்த்தம் எதுதான் அறியப் படாமலிருக்கும். லோகபாலர்களால் பிரார்த்திக்கத்தக்கவையான சாம்பிராஜ்ஜியம் ஐஸ்வரியம் முதலியன புத்திர னில்லாத என்னைச் சந்தோஷிப்பிக்க வில்லை. பூர்வீகர்களான நம்முடைய பிதுர்பிதாமகாதிகளுடனேகூட அடையப்பட்டதாய் தாண்டக் கூடாததான நரகத்தை தாண்டுவதற்கு அவசியமான புத்திரனை யடையுமாறு எனக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென பிரார்த்திக்கப் பட்டவராய், துவஷ்டாவினுடைய சருவைப் பண்ணிவைத்து அந்தச் சருவினாலே அந்த துவஷ்டா வானவரைக் குறித்து எக்கியம் பண்ணிவைத்து அந்தச்சித்திரகேதுவினுடைய ஸ்திரீகளில் முதல் பட்டமகிஷியான கிறுதத்துதி யெனும் பெயரையுடையவளுக்கு அந்த ரிஷியானவர் அந்தயக்கிய சேஷமான சருவைக்கொடுத்து, சித்திர கேதுவைப் பார்த்து ராஜனே! உனக்குச் சந்தோஷத்தையும் துக்கத்தையுங் கொடுக்கத் தக்க

ஒரு பிள்ளை பிறக்கப் போகிறுனென்று சொல்லி அந்த ரிஷியானவர் போய்விட்டார்.

பிறகு கிறுதத்துதி புசித்து அந்த யக்கிய சேஷத்தால் கர்ப்பமடைந்து சுக்கில பக்ஷத்துச் சந்திரன்போல நாள் தோறும்மெள்ளமெள்ளவிருத்தியடைந்து பிரசவகாலத்திலே புத்திரனைப்பெற்ருள். அந்தப் புத்திரோற்சவத்தினுல் ராஜா வானவன் சந்துஷ்டனுய் ஸ்நானம் பண்ணி சுசியாயலங் கரித்துக்கொண்டு பிராமணர்களாலே ஆசீர்வசனங்களைச் செய்வித்து, அந்தப்பிள்ளைக்குச் சாதகர்மத்தைப் பண்ணி வைத்து, பிராமணர்களுக்குவேண்டிய தானங்களைக்கொடுத்து அந்தப் பிள்ளையினிடத்திலே மிகவும் பிரீதியாய் நாள் தோறும் விருத்தியடைத்து வந்தான். கிருதத்துதிக்கு தன் புத்திரனிடத்திலே பிரீதியதிகரித்தது. சக்களத்திகளுக்கோ வெனில் புத்திரன் வேணுமென்கிற இச்சையுண்டாயிற்று. நாள்தோறும் அந்த குழந்தையைச் சீராட்டிக் கொண்டிரா நின்ற அந்தச் சித்திர கேதுவுக்குப் பிள்ளையைப்பெற்ற அந்த ஸ்திரீயினிடத்தில் எப்படிப்பட்ட பிரீதியுண்டா யிருந்ததோ அப்படிப்பட்ட பிரீதி மற்ற ஸ்திரீகளிடத்திலில்லாமற் போயிற்று. அந்த ஸ்திரீகள் புத்திரனையுடைய சக்களத்தியி னிடத்திலே பொருமையினுலும், தங்களுக்குப் பிள்ளையில்லை யென்கிற துக்கத்தினுலும், ராஜாவினுடைய அனுதா வினுலும், விசனத்தை யடைந்தவர்களாய்த் தங்களை நிந்தித்துக் கொண்டார்கள்.

அந்த ஸ்திரீகளுக்கு மகத்தான துவேஷம் உண்டாகி ராஜாவின்பேரில் கோபமுடையவர்களாய் அந்தப்பிள்ளைக்கு விஷத்தைக் கொடுத்தார்கள். கிறுதத்துதியானவள் சக்களத் திகளுடையபாபகர்மத்தை யறியாதவளாய் பிள்ளை தூங்குகிறு னென்றே யெண்ணிக் கொண்டு கிரகத்திலே சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். பிள்ளை வெகு நேரமாகத் தூங்குகிறு னென்று நினைத்து புத்திசாலியான அந்தக் கிறுதத்துதி யானவள் தன் பிள்ளையை எடுத்து வரும்படி முலைகொடுக்குந் தாதியை ஏவினுள். அந்தத் தாதியானவள் படுத்துக்கொண் டிராநின்ற அந்தக் குழந்தையினிடத்திற் போய் அது உயிர் நீங்கியிருப்பதைக் கண்டு, ஐயோவென்று பூமியில் விழுந்து அலறி அழுகின்றதைக் கேட்டு, அந்தப் பிள்ளைக்குத் தாயான ராஜமகிஷியானவள் சீக்கிரமாகப் புத்திரனிடத்தில் வந்து செத்துக்கிடக்கிற அந்தப் பிள்ளையைப் பார்த்து மிகுந்த சோகத்தினுலே பூமியில் விழுந்து புடவை தலை மயிர் நழுவிப்போக மூர்ச்சையடைந்தாள். பிற்பாடு ராஜாவி

னுடைய அந்தப்புரத்திலே யிருக்கிற ஸ்திரீ புருஷர்கள் அனைவரும் அந்த செய்தியைக் கேட்டு ஓடிவந்து மிகவும் விசனத்தை யுடையவர்களாய் துக்கத்தை யடைந்தார்கள். அந்தக் குழந்தையைக் கொன்றுபோட்ட சக்களத்திகளும் எல்லாரையும் போலக் கபடமாக அழுதுக்கொண்டிருந்தார் கள். பிற்பாடு அந்த ராஜாவும் ஒருத்தராலேயுங் காணப் படாத மாண நிமித்தத்தை யுடையவனுமிருக்கிற பிள்ளை செத்துப்போனானென்கிற வார்த்தையைக்கேட்டு, புத்திர னிடத்தில் வாற்சல்லியத்தினாலே துக்கமுடையவனாய் மூர்ச் சையடைந்து மந்திரி முதலான சமஸ்தமான ஜனங்களாலே சூழப்பட்டவனாய் பிரக்கினை யில்லாதவனாய் ஓடிவந்து செத் துக்கிடக்கிற அந்தக் குழந்தையினிடத்திலே விழுந்து பெரு மூச்சு விட்டு கண்ணீரைப் பெருக்கி ஒன்றுஞ் சொல்லமாட் டாமல் விசனப்பட்டுக் கொண்டிருந்தான். அப்போது அந்த ராஜமகிஷியானவள் மகா துக்கத்திலாழ்ந்த பர்த்தாவையும் வங்கிஷத்துக்கு ஒருவனாயும் மரித்துப் போயு மிருக்கிற புத் திரனையும் பார்த்து, ஜனங்களுக்கும் இராஜாவுக்கும் மந்திரி முதலான பிரகிருதிகளுக்கும் மனதிலே மகா துக்கமுண்டாகத் தக்கதாகப் பிரலாபித்தாள். குங்குமக் குழம்பினால் அலங்கரிக் கப்பட்ட ஸ்தனங்க ளிரண்டையும், மையுடன் கூடின கண் ணீர்களினால் நனைத்துக்கொண்டும், நழுவாநின்ற பூமாலை களை யுடையதான தலைமயிர்களை விரித்துக்கொண்டும் துக்கத் தினால் துணையிழந்த பக்ஷிபோல மதுரமான சுரத்துடனே அழத் தொடங்கினாள்.

குழந்தாய்! நீ அநாதையாயிருக்கிற என்னையும் சோகத் தினால் தபியாநின்ற உன் பிதாவையும் விட்டுவிடத் தகுமா? உன்னால் புத்திரயீனர்களாலே தாண்டக்கூடாத யாதொரு நரகத்தை நாங்கள் சீக்கிரமாகத் தாண்டுவோமோ அப்படிப் பட்ட நாகத்தை நிர்த்தயனான எமனாலே நீ அடையவேண் டாம். வாராய் குழந்தாய்! எழுந்திரு ராஜகுமாரனே; உன் னுடைய ஸ்நேகிதர்களான இந்தப் பிள்ளைகள் விளையாடு வதற்கு உன்னை யழைக்கிறார்கள். கண்மணியே இன்னுமா தூங்குகிறாய், பசித்திருக்கிற நீ சாப்பிடவா, ஸ்தன்னியத்தைப் பானம்பண்ணு. உனது வாய்மொழியால் எங்களுடைய துக் கங்களைப் போக்கடி என்று இந்தப் பிரகாரம் பிரலாபித்து புத்திரனைக்குறித்து அந்த ராஜமகிஷியானவள் பிரலாபிக்கை யில், சித்திரகேதுவென்கிற அந்த ராஜாவும் சோகத்தினால் தபிக்கப்பட்டவனாய் கண்டத்தை விட்டழுதான். அந்த ராஜாவும் ராஜமகிஷியும், பிரலாபிக்கிறதைப் பார்த்து அவர்

69

களை உபஜீவித்துக் கொண்டிருக்கிற ஸ்திரீ புருஷர்கள் சமஸ்தமான பேர்களும் மிகவுமழுதார்கள், அந்தப் பட்டண மெல்லாம் மூர்ச்சை யடைந்தது. இந்தப் பிரகாரம் துக்கத்தி லாழ்ந்த அந்தப் பட்டணத்து ஜனங்களை ஞான திருஷ்டி யினாலே பார்த்து அங்கிரசு மகாரிஷியானவர் நாரத மகா ரிஷியுடனே அவ்விடத்தில் வந்தார்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*ஆங்கிரசு மகாரிஷியுடனே எழுந்தருளிய நாரத மகாரிஷியினுடைய தத்துவ வுபதேசத்தினாலே சித்திரகேதுவினுடைய சோகமானது போக்கடிக்கப்பட்டமை சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

மகாராஜனே! மரித்துப்போயிருக்கிற அந்தக் குழந்தை சந்நிதானத்திலே மூர்ச்சாக்கிராந்தனாய் மிருதன்போலே யிருக்கிற அந்த ராஜாவைப்பார்த்து, ஆங்கிரசு மகாரிஷியும், நாரத மகாரிஷியும், தத்துவ வசனங்களினாற் போதித்து அவனுடைய துக்கந் தீரும்படியாக ஒரு வார்த்தைச் சொல்லு கின்றார்கள்: ஓ ராஜேந்திரா! நீ எவனைப் பார்த்து துக்கிக் கிறாயோ அவனுனக்கு என்ன ஆகவேணும்? நீ இவனுக் கென்ன ஆகவேணும்? நீ இவனுக்குப்பிதாவென் றிருந் தாயேயானால் இவன் பூர்வ ஜன்மத்தில் ஒருவன் பிள்ளையா யிருந்து மரணதாபத்தினால் அவர்களை விட்டு இந்த ஜன்மத் தில் உனக்குப்பிள்ளையானான். இனிவருகிற ஜன்மத்தில் எவ னுக்குப் பிள்ளையாகப் போகிறானோ, அது நியமமில்லை. எப் படி பிரவாகத்தினுடைய வேகத்தினால் மணல்கள் கூடிக் கூடிப் பிரிந்துப் போகின்றனவோ அப்படி இந்தச் சீவாத் மாக்களுங் காலவேகத்தினால் கூடிக்கூடிப் பிரிகின்றன. பர மாத்மாவானவர் பூதங்களினால் பூதங்களைச் சிருஷ்டிக் கிறார். பூதங்களால் பூதங்களை ரக்ஷிக்கிறார். பூதங்களினால் பூதங்களைச் சம்மரிக்கிறார். அபேக்ஷையில்லாதவரா யிருந் தும், தம்மால் சிருஷ்டிக்கப்பட்டு பராதீனமாயிருக்கின்ற அந்தப் பூதங்களைக்கொண்டு லீலையினால் இந்தப் பிரகாரம் பண்ணிக்கொண்டிருக்கிறார். ராஜாவே! பிதாவினுடைய தேகத்தினாலே புத்திரனுடைய தேகமானது மாதாவி னுடைய தேகத்தில் நின்றும் வித்தாக உண்டாகின்றது. சீவனோ பூமி முதலானதுபோல நித்தியனாக விருக்கிறான். தேகம் தேகியெனும் இந்த விபாகமானது நானாவிதமான

ரூபம்-ஜன்மம்-நாசம்-சுகம்-துக்கம் முதலான அசத்தான தர்மங்கள் ஆத்மாவுக்கு அசத்தான தேகசம்பந்தத்தினாலே காணப்படுகின்றன. ஆகையினாலே புருஷனானவன் சொப்பனத்தைப்போல இதர விஷயங்களைச் சிந்தியாதிருக்கக்கடவன். இதுவெல்லாம்மனதினாலேகற்பிக்கப்பட்டதேயல்லாமல் வேறொன்றுமில்லை. நான் எனதெனும் அபிமானத்தை விட்டுவிடு. சர்வாந்திரியாமியாயும் ஈஸ்வரனாயுமிருக்கிற வாசுதேவனிடத்தில் மனதை இருத்துஎன்று நாரதர்-ஆங்கிரசு எனுமிருவரும் கூற, சித்திரகேது சொல்லுகிறான்.

முனிகளே! நீங்கள் யார்? ஞான சம்பன்னர்களாய்ப் பூச்சியர்களுக்கும் பூச்சியர்களாக விருக்கிறீர்கள். சன்னியாசிகளின் கோலத்தினால் உங்களுடைய சுரூபத்தை மறைத்துக்கொண்டு இங்கே வந்தீர்கள். பகவானுக்கு இஷ்டர்களாய் பிர்மநிஷ்டர்களான பாகவதர்களும் சனற்குமாரர்-நாரதர்-ரிபு-ஆங்கிரசு-தேவலர் - அசிதர் - அவாந்தரதமசு-வியாசர்-மார்க்கண்டேயர்-கௌதமர் - வசிஷ்டர்-பகவானான பரசுராமர்-கபிலர்-சுகர்-துர்வாசர் முதலான ரிஷிகளும் என்னைப் போன்ற அஞ்ஞானிகளுக்கு ஞானோபதேசஞ்செய்வான் வேண்டி பூமியிலேசஞ்சரித்துக்கொண்டிருப்பார்கள். ஆனபடியினாலே நரபசுவாயும், மூடப்புத்தியினனாயும், மகா அஞ்ஞானத்தினாலே முழுகியுமிருக்கிற எனக்கு நீங்கள் ரக்ஷகர்களாய் வந்தீர்கள். ஞானமாகிற தீபம் உங்களாலே உண்டாக்கப்படுமென்று சொல்லுகின்ற ராஜாவைப்பார்த்து, ஆங்கிரசு மகாரிஷியானவர் சொல்லுகின்றார்: ராஜனே! நான் ஆங்கிரசு இவரோ சாக்ஷாத் பிரம குமாரரான நாரதமகா முனிவர். அஞ்ஞானத்தினால் புத்திர சோகத்திலே முழுகினவனாயும் பகவானுக்குப் பக்தனாயு மிருக்கிற நீ துக்கத்திலே முழுகி யிருப்பதையறிந்து உனக்கு அனுக்கிரகம் பண்ணும் பொருட்டு நாங்களிருவரும் இங்கே வந்தோம். பூர்வம் நான் பரமமான ஞானத்தை வுனக்கு உபதேசிக்கும் பொருட்டு உன்னுடைய கிரகத்துக்கு வந்தேன், உனக்கு புத்திரனிடத்திலே யிருக்கிற ஆசையையறிந்து புத்திரனையே கொடுத்தேன். இப்போது பிள்ளையை இழக்கப் பெற்றவர்களுடைய துக்கம் உன்னாலும் அனுபவிக்கப்பட்டது. பாரியை கிரகம் தனம் முதலிய நானாவிதமான சம்பத்துகள் அனித்தியமானவை, சொப்பனம்போல மனதினால் உண்டாக்கப்பட்டனவாய் நசித்துப்போகின்றன, வாசனைகளினாலே விஷயங்களைத் தியானம் பண்ணுகின்றவனுடைய மனதில்நின்றும் கர்மமூலமாகவே விஷயங்களுண்டாகின்றன. ஆகையினால் ஸ்திர

மான மனதினால் ஆத்ம தத்துவ விசாரஞ்செய்து அனித்திய மான தேகத்திலே நித்தியாத்மா வென்கிற விசுவாசத்தை விட்டு சாந்தியை யடையக் கடவாயென்று ஆங்கிரசுவாலே உபதேசிக்கப்பட்ட ஆத்ம தத்துவமானது பகவத்கடாக்ஷ மில்லாமல் சித்தியாதென்று, ஈஸ்வர கடாக்ஷம் வருகிறதற் காக நாரத மகாரிஷியானவர் ராஜாவுக்கு மந்திரோபதேசம் பண்ணுகிருர்.

நாரத மகா ரிஷியினுடைய வாக்கியம்

ராஜனே! என்னுடைய இந்த ரகசியமான மந்திரத் தைப் பரிசுத்தனயிருந்து கிரகிக்கக்கடவாய். இந்த மந்தி ரத்தை ஜபியாநின்ற நீ யேழு இராத்திரிகளுக்குள்ளே சிருஷ்டி-ஸ்திதி-சங்கார கர்த்தாவான சங்கருஷ்ணருடைய பாதமூலத்தை ஆஸ்ரயித்துப் பூர்வீகர்களான ருத்திரன் முத லான மகானுபாவர்கள் தேவன்-மனுஷ்யமென்கிற பொய் யான பேதக்கியானத்தை விட்டு அந்த க்ஷணத்திலே சமாதிக சூனியமான அந்தச் சங்கருஷ்ணருடைய மகாத்மியத்தை யடைந்தார்கள். அந்தச் சங்கருஷ்ணருடைய பரமபகத்து வத்தை நீ சீக்கிரமாக அடையப் போகிருய்.



## பதினருவது அத்தியாயம்



மிருதனன அந்தப் பாலனுடைய வசனத்தினல் சித்திரகேதுவைச்
சோகமில்லாதவனகப் பண்ணி நாரதர் ஆதிசேஷனைச்
சந்தோஷிப்பியாநின்ற மகா வித்தையை
உபதேசித்தமை சொல்லப்
படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மஹாராஜனே கேள்! தேவரிஷியான நார தர் மரணமடைந்த ராஜகுமாரனை துக்கிக்கும் ராஜாவும் அவனுடைய பந்துக்களும் அறியும்படி பார்த்து சொல்லுகி ருர்: ஜீவாத்மாவே! உனக்கு நன்மையுண்டாகக் கடவது. உன்னிமித்தம் துக்கத்தினல் தவிக்கும் நின் தாய் தந்தை பந்துக்கள் முதலியவர்களைப் பார். உன்னுடைய இந்தச் சரீரத்திலே பிரவேசித்துச் செல்வங்கள் நிறைந்தவனய், மிகுந்த ஆயுளையடைந்து பிதாவினுடைய சம்பத்துகளைச் சிங்காதனத் திலிருந்துகொண்டு அனுபவி என்று சொல்லா

நின்ற நாரத மகாரிஷியினுடைய வாக்கியத்தைக்கேட்ட அந்தப் பாலன் சொல்லுகின்றான் :

நான் விட்டு விட்ட சரீரத்தில் சந்தோஷத்துடன் மீண்டும் வந்து பொருந்த மாட்டேன் என்று தீர்மான மாயுரைத்து கண்பஞ்சடையும்படி ஆன்மா வெளிப்பட்டதும், பட்டத்து யானைமேல் பவனிவரும் அரசன் தான் தனது புத்திரனுடைய மரணத்தாலடைந்த துக்கம் தீர்ந்து நல்லறிவுபெற்று தான் நல்லவழி படுதற்கிசைந்த தருமத்தை போதிக்கும்படி பிரார்த்தித்தான்.

பிரமநிஷ்டரே! புண்ணியபாப ரூப கர்மங்களினாலே தேவர்கள் - திரியக்கு - மனிதர்கள்-இவர்களுடைய யோனிகளிலே சுழலாநின்ற எனக்கு எந்த ஜன்மத்திலே இவர்கள் மாதா பிதாக்களானார்கள். சகல பிராணிகளும் ஒன்றுக்கொன்று கிரமமாகப் பந்துவென்றும், கியாதியென்றும், சத்துருவென்றும், இப்படியாக விருக்கின்றார்கள். ஜீவித்துக் கொண்டிரா நின்ற பசுவாதி வஸ்துக்களானவைஎவனண்டையிலே எவ்வளவு காலபட்டு மிருக்கின்றனவோ அவ்வளவு மட்டுமே யெனதென்கிற சம்பந்தமுண்டா யிருக்கும். இந்தப் பிரகாரம் ஜீவனானவன் புத்திராதி சம்பந்தத்தை யடைந்திருந்தாலும், ஜன்யாதி சூனியனாயும் நான் இவனுடைய பிள்ளையென்கிற அபிமான சூனியனாயு மிருப்பேன் என்று சொல்லி அந்த சீவன் புறப்பட்டுப்போனான். அப்போது அவ்விடத்திலே அவனுடைய பந்துக்களெல்லாரும் ஆச்சரியத்துடனே கூடினவர்களாய் அந்தச் சிசுவினிடத்திலே சிநேக பாசத்தையும் சோகத்தையும் விட்டவர்களாய் அந்தச் சிசுவினுடைய தேகத்தை யெடுத்துக் கொளுத்தி, செய்யத்தக்க காரியங்களைச் செய்து சோகம்-மோகம்-பயம்-அன்பு இவைகளைக் கொடுக்கும் விடக்கூடாத சிநேகத்தை விட்டு விட்டார்கள். பாலனைக் கொன்ற அந்த ஸ்திரீகளும் மகா லச்சை யுடையவர்களாய் சிசுவத்தி தோஷத்தினாலே காந்தி யீனர்களாய் பிராமணர்களாலே விதிக்கப்பட்ட பாலஹத்தியா விரதத்தை யமுனாநதி தீபத்திலே ஜீவனுடைய வசனத்தை நினைத்துக்கொண்டு துவேஷத்தை விட்டவர்களாய் ஆஸ்ரயித்தார்கள். அந்தச் சித்திரகேதுவும் ரிஷிகளுடைய வசனங்களினாலே ஆன்மதத்துவத்தை அறிந்தவனாய் யமுனாநதியிலே சாஸ்திரப்பிரகாரம் ஸ்நானஞ்செய்து தேவ-ரிஷி-பிதுர்த் தர்ப்பண முதலான கிரியைகளையும் பண்ணி மௌனத்துடனே ஜிதேந்திரியனாய்ப் பிரம புத்திரர்களான நாரதரையும், ஆங்கிரசு மகாரிஷியையும் வந்தனம் பண்ணினான்.

அப்போது நாரத மகாரிஷியானவர் சந்துஷ்டராய் அந்தச் சித்திரகேதுவுக்குப் பிரம வித்தையை உபதேசிக்கின்றார் :

"ஞானசக்தி முதலான குணங்களை யுடைவராயும், வாசு தேவராயும், பிரத்யும்னராயும், அனிருத்தராயும், சங்கருஷ்ண ராயும், விக்கியான சுரூபராயும், பரமானந்த மூர்த்தியாயும், பரானுபவ நிஷ்டராயும், சாந்தராயும், சுவானந்தானுபவத்தி னாலே நிசேஷமாக ராகத்துவேஷ முதலான குணங்களை விட்டவராயு மிருக்கிற உமக்குப் பிரணாமம். மண்மயமான கடம் முதலானவை மண்ணிலேபிறந்து மண்ணிலேயிருந்து மண்ணிலே லயிப்பது போல, இந்தப் பிரபஞ்சமானது யாதொரு பிரமத்திலே லயத்தை யடைகிறதோ, அப்படிப் பட்ட பரப்பிரமமான உமக்குப் பிரணாமம். சமஸ்தமான பாகவத சிரேஷ்ட சமூகங்களுடைய கமலமலர் போலும் கைகளினாலே அர்ச்சிக்கப்பட்ட இரண்டு சரணாரவிந்தங்களை யுடையவரே! பரமாகாச மென்னப்பட்ட உத்தமஸ்தா னத்தை இருப்பிடமாக வுடையவரே! பகவானாயும், மகா புருஷராயும், மகா விபூதியாயு மிருக்கிற உமக்குப் பிரணாமம்" எனும் இந்த மந்திரத்தை பிரபன்னராயும், பக்தனாயு மிருக் கிற சித்திரகேதுவுக்கு உபதேசித்து நாரத முனியானவர் ஆங்கிரசுடனேகூட சத்திய லோகத்தை யடைந்தார்.

அந்தச் சித்திரகேதுவும் நாரதராலே சொல்லப்பட்ட மந்திரத்தை ஏழுநாள் ஜலத்தையே பானம் பண்ணிக் கொண்டு தைரியத்தை யுடையவனாய் ஜபித்தான். பிறகு ஏழாநாளிராத்திரி முடிவிலே மந்திரசித்தி யடைந்து பின்னை யும் சிறிதுநாளைக்குப் பின்பு வித்தையினால் உண்டாகாநின்ற மனோவேகத்தை யுடையவனாய், தேவதேவனான ஆதிசேஷ னுடைய சரணாரவிந்த சந்நிதானத்தை யடைந்து தாமரைக் கிழங்குபோலே வெளுத்த நிறமாயும், நீலவஸ்திர தாரி யாயும், பிரகாசமான கிரீடம்-தோள்வளை-அரைநாண்-கங்க ணம் இவைகளையுடையவராயும், பிரசன்னமான முகத்தையும், சிவந்த நேத்திரங்களையு முடையவராயும், சிருஷ்டி-ஸ்திதி- சங்கார கர்த்தாவாயுமிருக்கிற சங்கருஷ்ண மூர்த்தியைக் கண் டான். அந்தச் சங்கருஷ்ண மூர்த்தியினுடைய நற்றரிசனத்தி னாலே சமஸ்த பாபங்களையும் போக்கி, நிர்மலமான அந்தக் கரணத்தை யுடையவனாயும், பக்தி ரசத்தினாலே பிரவகியா நின்ற ஆனந்த பாஷ்பங்களுடனே கூடினவனாயும், புளகாங் கித சரீரத்தை யுடையவனாயும், அந்த ஆதிபுருஷனைச் சேவித்த பின்பு புண்ணிய கீர்த்தியான சங்கருஷ்ணமூர்த்தி யினுடைய பாதாரவிந்தங்களைச் சேவிக்கச் சமர்த்தனாகாம

லிருந்து புத்தியினாலே மனதை ஸ்திரம்பண்ணிக்கொண்டு பிரகாசியாநின்ற வாக்கையுடையவனாய் ஜகத்குருவான பகவானைப்பார்த்து ஸ்தோத்திரம் செய்கிறான் :

எண்ணிலடங்காத அண்டங்களையெல்லாம் அணுக்களைப்போல எக்காலத்தும் தமது பணாமுடிகளின் மேல் தாங்கி அபரிமிதமாகப் பெருகும் எண் பிரமாணம் முதலிய அளவுகளை வரையறுத்து சொல்லக்கூடிய பெரிய ஆதிசேடனெனும் கடவுளாகி, எல்லாப்பொருள்களுக்கும் ஆதரவாகி, பெரும் பிரகாசமாய் அறிவுபயமான பொருளாய், சிருஷ்டி-ஸ்திதி-சம்மாரமெனும் முத்தொழில் புரியும் பேரானந்தமான ஒப்பற்ற தெய்வமே உமக்கு போற்றி போற்றி, அண்டகோடிகள் யாவையும் தமது பவளம்போலும் அதரத்தையுடைய வாயிலிட்டு விழுங்கும் பழைய சதுர்வேதங்களால் நிச்சயிக்கப்படும் உண்மையான பழம்பொருளாய், எண்ணிலா புயங்களையுடைய அடைதற்கரிய கடவுளானவர் அடைந்து நெடிய யோக நித்திரை புரிதற்குரிய அழகிய படுக்கையாகிறவரே உமக்குப் போற்றி போற்றி, பிரம-விஷ்ணு-ருத்திரர்களெனும் மும்மூர்த்திகளாய் ஆயிரம் பணாமுடிகளை யுடையவரே போற்றி, தத்துவம் பலவாகவும் ஒன்றாகவும் விளங்குவாய் போற்றி.

ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே! சமமான புத்தியையுடையவர்களாயும் ஜயிக்கப்பட்ட மனதை யுடையவர்களாயு மிருக்கிற சத்புருஷர்களாலே நீர் ஜயிக்கப்பட்டீர். அவர்களும் உம்மாலே ஜயிக்கப்பட்டவர்களாகின்றார்கள். ஜகத்தினுடைய சிருஷ்டி-திதி-சங்காரம்-அனுப்பிரவேசம்-நிக்கிரகம் - அனுக்கிரகம் இவையெல்லாம் உம்முடைய லீலையே. விஸ்வத்துக்கு சிருஷ்டர்களான பிரமா-ருத்திரன்-நவப்பிரஜாபதிகள் - இந்திரன் இவர்களெல்லாம் தனித்தனியே உம்முடைய அம்சபூதர்களாக விருக்கிற போதிலும் அக்கினி மூலமான அகங்கார மமகாரங்களினாலே அந்தச் சிருஷ்டி முதலான வியாபாரங்களிலே நாங்களே ஈஸ்வரர்களென்று வியர்த்தமான சண்டை போடுகின்றார்கள். அதிசூட்சுமமான மூலகாரணமென்ன, அதிஸ்தூலமான அந்தியகாரியமென்ன, இதுகளுடைய ஆதிமத்தியாந்தங்களிலே நீரே யிருந்துகொண்டு ஆதிமத்தியாந்த மில்லாத வஸ்துவாகக் காணப்படுகிறீர். காரியங்களுக்கு ஆதியிலேயும், அந்தத்திலேயும்,எது அபயமில்லாமலிருக்கிறதோ அதுவே மத்தியகாலத்திலேயு மிருக்கிறது. பிரிதிவு - அப்பு - தேயு-வாயு-ஆகாசம் - மகத்தத்துவம் - அகங்காரதத்துவம் என்று

சொல்லபட்ட ஒன்றுக்கொன்று தேசகுணுதிகங்களான இந்த ஏழுகளிலேயும்சூழப்பட்டிருக்கிற அண்டகோசமானது அனேகங்கோடி பிரமாண்டங்களுடனேகூட யாதொன்று மும்மிடத்திலே சுழன்றுகொண்டிருக்கிறது.

பகவானே! உம்முடைய தரிசனத்திஞல் மனிதர்களுக்குச் சகல பாபமும் நசிக்கிறது. உம்முடைய நாமத்தை ஒருகால் கேட்டதிஞலே சண்டாளனும் சம்சாரத்தினின்றும் விடுபடுகிருன். ஆகையிஞல் நானிப்போது உம்முடைய தரிசனத்திஞல் இருதயத்திலிராநின்ற சகல பாபங்களேயும் போக்கடித்துக் கொண்டவனுனேன். உம்முடைய பக்தரான தேவரிஷியாகிய நாரதரால் உபதேசிக்கப்பட்ட மந்திரத்திஞல் உம்முடைய நற்றரிசன முண்டாயிற்று. இல்லாவிட்டால் எப்படி யுண்டாகப்போகின்றதென்று சித்திரகேதுவிஞல் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட பகவாஞன ஆதிசேடனைவர் சந்தோஷத்தை யடைந்தவராய் அந்த வித்தியாதர பதியான சித்திரகேதுவைப் பார்த்து சொல்லுகிருர் :

வாராய் சித்திரகேதுவே! உனக்கு நாரதராலும், ஆங்கிரசுவிஞலும், நம்முடைய விஷயமான உபதேசம் பண்ணப்பட்டு, அந்த வித்தையிஞலும், நம்முடைய தரிசனத்திஞலும், நீ சுத்தஞகின்ருய். நானே சர்வ பூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் பிரகாசஞகவும் காரணஞகவு மிருக்கிறேன். சப்தப்பிரமம் பரப்பிரம மெனும் இவ்விரண்டும் என்னுடைய சாசுவதமான சரீரங்கள். உலகத்திலே பரமாத்மாவை வியாபித்திருக்கிறவனேயும், பரமாத்மாவினிடத்திலே லோகத்தை யிருத்துகிறவனேயும், இவ்விரண்டும் என்ஞலே வியாபிக்கப்பட்டதாகவும், என்னிடத்திலேயே கல்பிக்கப்பட்டதாகவும் அறிவாய். எப்படி தூங்கும் புருஷன்சொப்பனத்திலே பிரபஞ்சத்தை யெல்லாம் தன்னிடத்திலே பார்க்கிருனே, எப்படி அவன் தன்னே இந்த லோகத்தில் ஏகதேசத்திலே யிருக்கிறவஞக அறிகிருனே, அப்படி சாக்கிர முதலான ஜீவனுடைய அவஸ்தைகளே யெல்லாம், பரமாத்மாவினுடைய மாயாகாரியங்களாக வறிந்து இந்த அவஸ்தா திரையத்துக்கு சாக்ஷியான அந்த பரமாத்மாவை நினைக்கக்கடவன். தூங்காநின்ற புருஷன் யாதொரு பரமாத்ம சொரூபத்திஞலே நித்திராகாலத்தில் தன்னுடைய சொப்பனத்தையும் இந்திரியங்களிஞல் அறியக்கூடாததான சுகத்தையும் அறிகிருனே அந்தப் பரமாத்மாவாக என்னே அறியக்கடவாய். யோகசாஸ்திரத்தை யறிந்தவர்களாயும், வேத வித்துக்களாயு மிருக்கிறபேர்களாலே சர்வப் பிரகா

ரத்தினுலேயுந் தன்னுடைய பரம புருஷார்த்தமானது அறியத்தக்கது. ஜீவாத்ம பரமாத்மாக்களுடைய சம்பந்தத்தை சாக்ஷாத்கரிப்பது எதுவோ அதுவே பரம புருஷார்த்தமென்று அறியத்தக்கது. என்னுலே சொல்லப்பட்ட இந்தப் பரமார்த்தமான வசனத்தை சிரத்தையுடனே தரித்தவனுய், விஷய போகங்களிலே ஆசையை விட்டவனுய், சாஸ்திரக்கியானத்தையும், பரமாத்ம சாக்ஷாத் காரத்தையும் உடையவனுய் சீக்கிரமாகச் சித்தியடையப் போகிருயென்று ஜகத்பதியாயும், விஸ்வரூபியாயுமிருக்கிற அரியானவர் சித்திரகேதுவைப் பார்த்து அருளிச்செய்து அவன் பார்த்துக்கொண் டிருக்கும்போதே அவ்விடத்தில்தானே அந்தர்த்தானத்தை யடைந்து விட்டார்.



## பதினேழாவது அத்தியாயம்



*சித்திரகேது பார்வதியினுடைய சாபத்தினுலே விருத்திராசுரனுய் வந்து பிறந்தமை சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ராஜனே! சங்கருஷ்ண மூர்த்தியான பகவான் எந்தத் திக்கிலே அந்தர்த்தானமானுரோ அந்தத் திக்கை நோக்கிப் பிரணுமத்தைப்பண்ணி வித்தியாதரனுன சித்திரகேதுவானவன் வித்தியாதர லோகபதியாய் சஞ்சரித்துக்கொண் டிருந்தான். அவன் ஆயிரங்கோடி வருஷம் ஒன்றினுலேயும் தடுக்கப்படாத சௌரியத்தையும், இந்திரிய பலத்தையும் உடையவனுய், சித்தர்களாலும், சாரணர்களாலும், முனிவர்களாலும், ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவனுய், மகா யோகத்தோடு கூடினவனுய் சங்கல்ப மாத்திரத்தினுலே நானுப் பிரகாரங்களாகிய இஷ்ட சித்திகளை யுடையதான குலபர்வதங்களுடைய தாழ்வரைகளிலே வித்தியாதர ஸ்திரீகளோடுகூட பகவானுன ஸ்ரீ ஹரியை கானம்பண்ணி கிரீடித்துக் கொண்டிருந்தான். ஒருநாள் அந்தச் சித்திரகேதுவானவன் விஷ்ணுவினுலே கொடுக்கப்பட்டதாயும் பிரகாசியானின்று மிருக்கிற விமானத்தினுலே சகல திக்கிலும் சஞ்சரித்துக்கொண்டு சித்த சாரணர்களாலே சூழப்பட்டவராயும், மடியிலே பார்வதியை வைத்துக்கொண்டும் புயங்களினுலே ஆலிங்கனம் பண்ணிக்கொண்டும் மகாரிஷிகளுடைய சதசிலே யிராநின்ற ருத்திரனைக்கண்டு பார்வதி

கேட்டுக் கொண்டிருக்க, அவருடைய சந்நிதானத்திலே சிரித்து சொல்லுகிறுன்: இந்தக் கிரீசனே லோகங்களுக்கெல்லாம் சாக்ஷாத்குருவாக விருக்கிறுன். மனுஷியர்களுக்கெல்லாம் தர்மங்களைச் சொல்லத்தக்கவன். தேவர்களுக்கெல்லாம் சிரேஷ்டன். சபையிலே தன்னுடைய ஸ்திரீயான பாரியையை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு ஜடாதரனுய் உக்கிரமான தபசையுடையவனுய் பிரமவாதியாய் சபாநாயகனுய் லச்சையில்லாமல் பிராகிருத புருஷனைப்போல ஸ்திரீயை மடிமேல் வைத்துக்கொண் டிருக்கிறுன் என்று சொன்னுன்.

அப்போது கம்பீரமான தியானத்தையுடைய பகவானுன ருத்திரனும் சித்திரகேதுவினுடைய வசனத்தைக் கேட்டுச் சிரித்துக்கொண்டு சும்மாயிருந்தார். சதசிலே யிருக்கிற பேரும் அவரைப்போலவே மௌனமா யிருந்தார்கள். இந்தப் பிரகாரம் அந்த ருத்திரனுடைய பிரபாவத்தை அறியாமல் அந்த வித்தியாதரன் மிகவும் அமங்களமான வசனத்தைச் சொல்ல பார்வதிதேவி கோபத்தினுலே துஷ்டனையும் தன்னைச் சிதேந்திரியனுயு மெண்ணி யிராநின்ற அந்த வித்தியாதரனைப் பார்த்துச் சொல்லுகிறுள்:

இந்த லோகத்திலே வித்தியாதரனுனவன் இப்போது லச்சையில்லாமலும் துஷ்டர்களாயுமிருக்கிற எங்களைப்போலொத்தவர்களுக்குத் தண்ட நாயகனு? சிட்சை பண்ணத்தக்கின பிரபுவா? சாஸ்திரத்தை அதிக்கிரமித்திரா நின்ற இந்தச்சிவனை எவர்களும் நிஷேதிக்கமாட்டாமற் போனுர்களா? நாரதர் முதலான சமஸ்த ரிஷிகளும் தியானம் பண்ணத்தக்கதான பாதாரவிந்தத்தை யுடையவராயும், ஜகத்குருவாயும், பரமதர்ம மூர்த்தியாயு மிருக்கிற ருத்திரனை க்ஷத்திரியாதமனுன இந்த வித்தியாதரனுனவன் தைரியவானுய் பிரமாதிகளையும் தெரியாதவர்களாக நினைத்துவிட்டு, தண்டனை பண்ணுகிறுனல்லவா? ஆகையினுலே வணக்கமில்லாத இந்த வித்தியாதரனுனவன் சத்புருஷர்களாலே உபாசிக்கப்பட்ட வைகுந்தனுடைய பாதமூல சேவைக்கு யோக்கியனன்று. துஷ்டபுத்தியை யுடையவனே! நீ பாபிஷ்டமான அசுர ஜன்மத்தை யடையக் கடவாயென்று சபிக்கப்பட்டவனுய், அந்தச் சித்திர கேதுவானவன் விமானத்தில் நின்று மிறங்கி பார்வதியைச் சிரசினுலே வணங்கி ஒரு வார்த்தை சொல்லுகிறுன்:

அம்பிகையே! உன்னுடைய சாபத்தை அஞ்சலியினுலே வாங்கிக்கொண்டேன். தேவதைகளினுலே மனுஷியர்

களுக்குயாதொன்று சொல்லப்பட்டதோ அது அவர்களுக்கு ஜன்மாந்தர கர்மத்தினுடைய பலமாகும். சமுசார சாகரத்திலே சுழலாநின்ற பிராணி அக்கியானத்திலே மோகிக்கப் பட்டதாய் சமஸ்த ஜன்மங்களிலேயும் சுகதுக்கத்தை அனுபவிக்கும். இந்த ரஜஸ்தமே குணப்பிரவாக ரூபமான சம்சாரத்திலே சாபமேது அனுக்கிரகமேது? சொர்க்கமேது நரகமேது? சுகமேது துக்கமேது? பகவானொருவனே சம்மந்தமில்லாதவனாய்த் தம்முடைய மாயையினாலே பிராணிகளைச் சிருஷ்டிக்கின்றார். பிராணிகள் தமது கர்மானுகுணமாகச் சுக-துக்க-மோக்ஷங்களை யடையும்படி நியமிக்கின்றார். அந்த ஈஸ்வரனுக்குப் பிரீதிதானேது? கோபந்தானேது? ஆனாலும் அந்த ஈஸ்வரனுடைய மாயா காரியமான புண்ணியபாப ரூபகர்மமானது இந்தப் பிராணிகளுக்கு சுகம்-துக்கம்-மோக்ஷம்-மரணம்-ஜன்மம்-இவைகளை யுடையதான சம்சாரத்தை யுண்டாக்குகின்றது. கோபத்தை யுடைய மகாதேவியே! நான் உன்னை சாபத்தை விடுவித்துக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளவில்லை. ஆனால் நானுறைத்த சிறு மொழிகளுக்காக வென்னை மன்னிக்கும்படி வேண்டுகிறேனென்றுறைத்து அவர்கள் ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருக்கும்போதே விமான ரூடனாய்ப் புறப்பட்டுப்போனான்.

பிற்பாடு பகவானான ருத்திரனானவர் தேவரிஷிகள் தயித்தியர்கள் சித்தர்கள் இவர்களெல்லாருங் கேட்டுக்கொண்டிருக்க பார்வதியைப் பார்த்து சொல்லுகிறார்: பெண்ணே ஆச்சரியமான லீலைகளைப் பண்ணுநின்ற ஸ்ரீ ஹரியினுடைய தாசதாசர்களாயும் விரக்தர்களாயுமிருக்கிற மகாத்துமாக்களுடைய மகாத்மியத்தைப் பார்த்தாயா. நாராயணனையே சரணமாகவடைந்த சமஸ்தமான பேரும்சொர்க்கம்-மோக்ஷம் நரகம் - இவைகளிலே சமானமான புத்தியை யுடையவர்களாய் ஒன்றுக்கும் பயப்படுகிறவர்களன்று. பிராணிகளுக்குச் சரீர சம்மந்தத்தினாலே சுகதுக்கங்கள் ஜனனமரணங்கள் சாபானுக்கிரகங்க ளென்கிற தொந்தங்கள் ஈஸ்வரனுடைய மாயையினாலே யுண்டாகின்றன. பகவானான வாசுதேவனிடத்திலே பக்தியைப் பண்ணிக்கொண்டும் ஞான வைராக்கியங்களுடைய பலத்தையுடையவர்களான பாகவதர்களுக்கு இந்த லோகத்திலே விசேஷித்து விரும்பத்தக்க வஸ்து ஒன்றுமில்லை. நானும் பிரமா சனற்குமாரர் நாரதர் பிரம புத்திரர்களான, மகா ரிஷிகள் மற்றுமுள்ள தேவ சிரேஷ்டர்களும் யாதொரு பகவானுடைய அங்கிச

அங்கிச பூதர்களாய் நான் சுதந்தர ஈசனென்றும் தனித்தனியே அபிமானத்தை யுடையவர்களாய், அந்தப் பகவானுடைய சொரூபத்தையும் செயலையுமறிவோம். அப்படிப்பட்ட பகவானுக்கு இந்த மகா பக்தனை சித்திரகேதுவானவன் இஷ்ட பக்தனையும், சர்வந்திர சமபுத்தியை யுடையவனையும் காமக்குரோதங்கள் முதலான எயதுண சூனியனையு மிருக்கின்றான். நானும் அந்த அச்சுதனுக்குப் பிரிய பக்தனாக விருக்கிறேன். ஆகையினால் மகா புருஷனுடைய பக்தர்களாயும், சாந்தர்களாயும், சமதர்சிகளாயும் மகாத்மாக்களாயுமிருக்கிற புருஷர்களிடங்களிலே ஆச்சரியப்பட வேண்டியதில்லையென்று சொல்லுகின்ற பரமேஸ்வரனுடைய வார்த்தையைக்கேட்டு பார்வதியானவள் சாந்தமான இருதயத்தை யுடையவளானாள். சித்திரகேதுவானவன் பிரதிநாசம்பண்ண சமர்த்தனாயிருந்தாலும், பார்வதியினால் தனக்கு நேரிட்ட சாபத்தைச் சிரசினால் கிரகித்தான். இதுவே சத் புருஷர்களுடைய லக்ஷண மல்லவா? அந்தச் சித்திரகேதுவானவன் ஞான விக்கியானங்களை யுடையவனாய், அசுரஜன்மத்தை யடைந்தவனாய், துவஷ்டாவினுடைய தக்ஷணாக்கினியினால் பிறந்தான்.

வாராய் பரிக்ஷித்தே! நீ யாதொன்று நம்மைக்கேட்டாயோ? அந்தப் பிரஸ்னத்துக்கு உத்திரம் சொல்லப்பட்டது. விஷ்ணுபக்தர்களுக்குள்ளே மகாத்மாவான சித்திர கேதுவினுடைய புண்யகரமாயிருக்கிற இந்த இதிகாசத்தையும் விஷ்ணுபக்தர்களுடைய பிரபாவத்தையும் கேளாநின்ற புருஷனானவன் சம்சாரத்தில் நின்றும் விடுபடுவன்.



## பதினெட்டாவது அத்தியாயம்



*அதிதியினுடைய ஐந்தாம்பிள்ளைகள் முதற்கொண்டு மற்ற எட்டு பேருடைய வம்சமும் சொல்லுமிடத்தில் திதியினுடைய கர்ப்பமும் தேவேந்திரனாலே பண்ணப்பட்ட மருத்துக்களுடைய பேதமுஞ் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் மன்னனே! அதிதிமைந்தர்களில் எடுத்துக்கொண்ட சிலரது வம்ஸ பரம்பரையை யுரைத்தோம். இனி மற்றவர்களது வம்ச கிரமமும் சொல்லுகிறோமென சுகமுனிவர் சொல்லலுற்றனர்.

ராஜனே! சவிதாவினுடைய பாரியையான பிரசனியானவள் சாவித்திரியையும், மூன்றுவியாகிருதிகளையும், அக்கினி ஒத்திரத்தையும், பசுபாகத்தையும், சோமனையும், சாதுர்மாசியத்தையும், பஞ்சமகா யக்கியங்களையும் பெற்றாள். பகவானுடைய பாரியையான சித்தியானவள் மகிமாவையும், விபுவையும், பிரபுவையும், சிரேஷ்டமான விரதத்தையுடையவளான ஆசுசியென்கிற வுத்தமமான ஒரு பெண்ணையும் பெற்றாள். குகு சினவாலி ருகா அனுமதி ஆன நால்வரும் விதாதாவினுடைய மனைவியர். இந்நாலு பேரும் சாயமம்-தரிசம்-பிருதக-பூரணமாசம் என்னப்பட்ட நாலு பிள்ளைகளையும், கிரமமாகப் பெற்றார்கள். விதாதாவானவன் கிரியையென்கிற பாரியினிடத்திலே பஞ்சசித்தி யென்கிற அக்கினிகளைப் பெற்றான். வருணனுடைய பாரியை சருஷினியானவள் பிருகு மகாரிஷியைப்பெற்றாள். மகாயோகியான வால்மீகமகாமுனியும் புற்றிலேயிருந்து வருணனுக்கே புத்திரனாகவுண்டானார். அகத்தியரும் வசிஷ்டரும் ஊர்வசியினுடைய சந்நிதானத்திலே மித்திரன்வருணனெனுமிருவருடையரேஜஸை அடைந்தவர்களாய் கும்பத்திலே அவர்களுக்கே புத்திரர்களாகப் பிறந்தார்கள். ரேவதி யென்கிற ஸ்திரீயிடத்திலே மித்திரனானவன். உனற்சரகனையும், அரிஷ்டனையும், பிப்பலனையும் பெற்றான். இந்திரன் பவுலோமி யென்கிற ஸ்திரீயினிடத்திலே, ஜயந்தன் ரிஷபன் மிட்டுவானென்னும் மூன்று பிள்ளைகளைப் பெற்றான். மாயா ரூபியான திரிவிக்கிரம தேவருக்கு கீர்த்தியென்கிற ஸ்திரீயினிடத்திலே பிறந்த மகா கீர்த்திமான்களான சவுபகன் முதலான பிள்ளைகள் பிறந்தார்கள். கபட வாமன மூர்த்தியாயும், காசிபருக்கு அதிதியினிடத்திலே பிறந்தவராயும் மகாத்மாவாயுமிருக்கிற அந்த உருக்கிரம தேவரின் குணப் பிரபாவ லீலைகளையெல்லாம் எட்டாவது ஸ்கந்தத்திலே சொல்லுகிறேன்.

இனி காசிபருக்கு திதியினிடத்திலே பிறந்தவர்களான தைத்தியர்களை உனக்குச் சொல்லுகிறேன். தைத்தியர்களுக்குள் ஸ்ரீமானுயிருக்கிற பிரகலாதன், பலி இவர்களிருவருமே மகா பாகவதர்களானார்கள். அந்தத் தைத்தியர்களுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன். திதிக்கு இரணிய கசிபுவென்றும், இரணியாக்ஷனென்றும், பிரசித்தர்களாய் தைத்தியர்களாலே வணங்கப்பட்டவர்களாய் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்களென்று மூன்றாவது ஸ்கந்தத்திலேயே சொல்லப்பட்டதல்லவா? அவர்களுக்குள்ளே இரணிய கசிபுவுக்கு பாரியாயும், ஜம்பனுடைய புத்திரியான கியாது வென்கிற ஸ்தி

யானவள் கிலாதன், பிரகலாதன், அனுகிலாதன், சமகிலாதன் எனும் பிள்ளைகளையும், சிம்மிகி யென்கிற ஒரு பெண்ணையும் பெற்ருள். அந்த சிம்மிகியானவள் விப்பிரசித்து வென்கிற பர்த்தாவுக்கு, ராகுவென்கிற பிள்ளையைப் பெற்ருள். சமகிலாதனுக்கு மதியென்கிற பாரியானவள் பஞ்சசேனனென்கிற பிள்ளையைப் பெற்ருள். கிலாதனுக்கு தமனி யென்கிற பாரியையானவள் வாதாபி இல்வலன் என்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்ருள். அனுகிலாதனுக்கு சூசமி யென்கிற ஸ்திரீயினிடத்திலே பாஷகிலனும் மகிஷனும் பிறந்தார்கள். பிரகலாதனுக்கு விரோசனன் பிறந்தான். விரோசனனுக்கு தேவியென்கிற ஸ்திரீயினிடத்திலே பலிச்சக்கிரவர்த்தி பிறந்தான். பலிச்சக்கிரவர்த்தி அசனையென்கிற ஸ்திரீயினிடத்திலே, பாணன் முதலான நூறு பிள்ளைகளை பெற்ருன். அந்த பலியினுடைய கீர்த்திகரமான பிரபாவத்தை இனிமேல் சொல்லப்போகிருேம். திதிக்கு நாற்பத்தொன்பது பேர் மருத்துக்களென்கிற புத்திரர்கள் பிறந்தார்கள். அந்த நாற்பத்தொன்பது பேரும் அபுத்திரர்களாய் இந்திரனுலே தேவதத்துவத்தையும் அடைவிக்கப்பட்டார்களென்று சொல்லுகின்ற சுகப் பிரமரிஷியைப்பார்த்து-பரிக்ஷித்து "குருவே! அந்த திதி புத்திரர்களான மருத்துக்கள் உற்பத்தி சித்தமான அசுரபாவத்தை விட்டு இந்திரனுலே தேவ சாமியத்தை எப்படி அடைந்தார்கள். அவர்கள் என்ன நன்மை செய்தார்கள். இந்த ரிஷிகளும் என்னுடன்கூட அந்த மருத்துக்களுடைய உபாக்கியானத்தைக் கேட்கக் கோறியிருக்கிருர்கள். ஆதலின் அதைக் கூறவேண்டு"மென பிரார்த்திக்க சுகர் சொல்லுகின்ருர்.

மன்னர் மன்னனே! திதியானவள் இந்திரசகாயமான விஷ்ணுவினுலே கொல்லப்பட்ட புத்திரர்களைப் பார்த்து சோகத்தினுல் ஜொலிக்கும் கோபாக்கினியினுலே சிந்திக்கின்றதாவது: எப்போது நான் தன் பிராதாக்களைக் கொன்றவனும், குரூரமான கடினசித்தனும், பாபியாயும், இந்திரிய வசியனுமிருக்கிற இந்திரனைக் கொல்லுவித்து சுகமாக நித்திரை பண்ணப்போகிறேன். அந்த இந்திரனுடைய மதத்தைப் போக்கடிக்கத்தக்கவனை புத்திரன் எனக்கெந்த தர்மத்தினுலே உண்டாவனே அப்படிப்பட்ட தர்மம், பர்த்துரு சிசுருஷை யென்றெண்ணிக்கொண்டு அந்த அபிப்பிராயத்தினுலே திதியானவள் பர்த்தாவான காசியபருக்கு சிசுருஷையினுல் பிரியத்தைப் பண்ணி காசியபருடைய மனதை

வசிகரித்தாள். புருஷர்களை தன் வயமாக்கும் தன்மை ஸ்திரீ களிடத்தில் சுபாவமாகவே இருக்கிறது. இது ஆச்சரிய மன்று. பிரமதேமர் ஆதியிலே சங்கமில்லாத பூதங்களைப் பார்த்துத் தன்னுடைய தேகத்திலே பாதியை ஸ்திரீயாகச் சங்கல்பித்ததன் நோக்கமே அத்தகையதாகலின். பகவானுன காசியபர் மிகவும் சந்துஷ்டராய் திதியைக் கொண்டாடி சொல்லுகின்றூர்:

வாராய் சுந்தரமான துடைகளையுடையவளே! நிர்துஷ் டையாயிருக்கிறவளே! உனக்கு நான் சந்துஷ்டனுனேன். இஷ்டமானவரத்தைக் கேளென்று சொல்லுகின்ற பர்த்தா வைப்பார்த்து திதியானவள் சொல்லுகிறுள்: பிரம நிஷ்டரே! எனக்கு நீர்வரத்தைக் கொடுக்கிறவரேயாகில் புத்திரனைப் பறிகொடுத்த நான் யர்தொரு இந்திரனுலே என்னுடைய புத்திரர்கள் கொல்லப்பட்டார்களோ அவனைக் கொல்லத் தக்கவனும், நாசமில்லாதவனுயு மிருக்கிற புத்திரனை வரிக்கிறேன் என்று சொல்லுகின்ற திதியி னுடைய வசனத்தைக்கேட்டு, காசியபர் துக்கத்தை யுடை யவராய் மனதிலே பரிதாபத்தை யடைந்து, கொஞ்சம் கோபத்துடனே அந்த திதியைப்பார்த்து சொல்லுகின்றூர் : மங்களயான ரூபத்தை யுடையவளே! நம்மாலே சொல்லப் படும் இந்த சர்வச்சர விரதத்தை சாஸ்திரப்பிரகாரம் குறை வில்லாமல் அனுஷ்டிப்பாயானுல் உனக்கு இந்திரனைக் கொல்லத் தக்கதோர் புத்திரன் உண்டாவன். விரத பூர்த்தி யில்லாமற் போகுமானுல் அந்தப்புத்திரனே தேவதை களுக்கு பந்துவாவானென்று சொல்லுகின்ற பர்த்தாவைப் பார்த்து "இந்த விரதத்தைச் சொன்ன பிரகாரமே தரிக் கிறேன். எனக்கந்த விரதத்தை யுபதேசியும்" என்று சொல் லுகின்ற திதியைப்பார்த்து காசியபர் சொல்லுகின்றூர் : வாராய் திதியே? இந்த விரதத்தினுடைய முறைமையைச் சொல்லுகிறேன் கேள். இந்த விரதத்திலே பிராணிகளை வதைசெய்வதும், ஜலத்திலே யிறங்கி ஸ்நானம் பண்ணு வதும், துற்சனர்களுடன் வார்த்தையாடுவதும், மலின வஸ்திரத்தை தரிப்பதுமாகாது. பத்திரகாளிக்கு நிவேதனம் பண்ண அன்னத்தையும், மச்சத்தையும், சூத்திரன் கொண்டுவந்த வஸ்துக்களையும் தூரஸ்திரீயினுலே பார்க்கப் பட்ட அன்னத்தையும், இரண்டு கைகளால் எடுத்த தீர்த்தத் தையும் சாப்பிடலாகாது. சந்தியா காலங்களிலே தலைமயிரை விரித்துக் கொண்டும் மேல்வஸ்திர மில்லாதவர்களாயும் வெளியிலே சஞ்சரிக்கலாகாது. பாதங்களைச் சுத்தி பண்ணிக்

கொள்ளாமலும் வடக்குமேற்காகத் தலைவைத்தும், நிர்வாண மாயும், சந்தியாகாலங்களில் சயனமும் பண்ணக்கூடாது. சர்வ மங்களத்துடன் கூடினவளாய் பிராதக்காலத்திலே போஜனத்துக்குமுன்னே பசுக்களையும், பிராமணர்களையும், மகா லக்ஷ்மியையும், விஷ்ணுவையும் பூசிக்கவேணும், இந்த புத்திரோற்பத்திகரமான விரதத்தை ஒரு வருஷம் சாஸ்திரந் தப்பாமல் தரித்தாயாகில் உனக்கு இந்திரனைக் கொல்லத் தக்கவனான புத்திரனுண்டாகப் போகிறானென்று காசிபராலே சொல்லப்பட அப்படியே செய்கிறேனென்று திதியானவள் காசியபரிடத்தில் நின்று கர்ப்பத்தையுந் தரித்து அந்த விரதத்தையும் அனுஷ்டிக்கத் தொடங்கினாள்.

ராஜனே! இந்திரனும் தனக்கு சிறியதான திதியினுடை அபிப்பிராயத்தை யறிந்து, அவளது விரதத்திற்கு பங்கம் நேரிடச் செய்யவேணுமென்று ஆசிரமத்திலிருக்கும் அந்தத் திதியை யடுத்து நாள்தோறும் தபோவனத்தில் நின்றும் புஷ்பம் - பலம் - கந்தமூலம் - சமித்து - தர்ப்பை-தீர்த்தம் முத லானவைகளை அந்தந்தக் காலங்களிலே கொண்டு மிந்து கொடுத்தல் முதலிய காரியங்களால் திதிதேவியை யுபசரித்து வந்தான். மிருகங்களைக் கொல்வதற்கு ஒரு வேடன் சமயம் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் வெகு நாள் சிசுருஷை பண்ணிக்கொண்டிருந்தும் அந்தத் திதியினுடைய விரதத் துக்கு விகாத முண்டாகாததைக்கண்ட இந்திரன் ஒருநாள் சந்தியாகாலத்தில் திதிதேவியானவள் விரதத்தினாலே இளைப் பையடைந்து அசுசியாய் ஆசமனம் பண்ணாமல் கை கால் அலம்பாமல் தெய்வத்தினாலே மோகிக்கப்பட்டவளாய் நித்திரை பண்ணும் சமயமறிந்து யோகசாஸ்திரம் அறிந்த வனான அவன் நித்திரையினால் பரவசமாயிருக்கிற திதியி னுடைய உதரத்தில் யோகமாயையினாலே பிரவேசித்துச் சுவர்ணச்சாயலான அந்தத்திதியினுடைய கர்ப்பத்தை வச்சி ராயுதத்தினாலே ஏழுகண்டமாக அறுத்தான். அப்படி அறுக்கப்பட்ட கர்ப்பங்களை அழாதே அழாதேயென்று சொல்லிக்கொண்டு மீண்டும் ஒவ்வொரு கண்டத்தையும் எவ் வேழாக அறுத்தான். ராஜனே! இந்திரனால் சேதிக்கப்பட்ட சமஸ்த கர்ப்பங்களும் அஞ்சலி பந்தத்துடனே கூடியவைக ளாய் இந்திரனைப்பார்த்து இந்திரனே உனக்குச் சகோதரர்க ளான எம்மை எதற்காக இம்சிக்கிறாய் யென்று சொல்லி னதுகள். அதற்கு இந்திரனும் பயப்படாதீர்கள் என்று அந்த மருத்துகணங்களைத் தனக்குப் பாரிஷதர்களாகப் பண்ணினான். திதியினுடைய அந்தக் கர்ப்பமானது வச்சிரா

யுதத்திஞலே வெகுப்பிரகாரமாகச்சேதிக்கப்பட்டிருந்தாலும் ஸ்ரீநிவாசனுடைய கிருபையிஞலே மறித்துப் போகாம லிருந்தது. ஒரு வருஷத்திற்கும் குறைவாக திதியிஞல் பகவான் அர்ச்சிக்கப்பட்டமையால் அந்த மருத்துகள் இந்திரனுடன் கூட ஐம்பது தேவர்களாஞர்கள். அந்த மருத்துக்கள் இந்திரஞலே மாதாவினுடைய அபராதத்தை யெண்ணமல் எக்கியபாகிகளாகப் பண்ணப்பட்டார்கள். மகா பதிவிருதையான அந்தத் திதியும், நித்திரையைவிட்டு எழுந் திருந்து அக்கினிபோலப் பிரகாசித்துக்கொண்டும் இந்திர னுடனே கூடிக்கொண்டு மிருக்கிற தன்னுடைய பிள்ளை களைப் பார்த்து மிகவும் சந்தோஷத்தை யடைந்தவளாய் இந்திரனைப் பார்த்து சொல்லுகின்ருள் :

குழந்தாய்! நான் தேவர்களுக்குப் பயத்தைப் பண்ணத் தக்கவஞன ஒரு பிள்ளையைக்கோறி ஒருத்தராலும் பண்ணக் கூடாத இந்த விரதத்தை அனுஷ்டித்தேன். இப்படியிருக்க நாற்பத்தொன்பது பிள்ளைகளைப்படியாஞர்கள். இதற்குக் காரணம் உனக்குத் தெரிந்திருந்தால் சொல் என்று சொல்லு கிற திதிதேவியைப்பார்த்து இந்திரன் சொல்லுகின்ருன்: தாயே! உன்னுடைய அபிப்பிராயத்தை யறிந்து உனது சமீபத்திலிருந்துகொண்டு ஒரு சமயத்தை யடைந்தவஞய் உன்னுடைய கர்ப்பத்தைச் சேதித்துப் போட்டேன். தன் பிரயோசனத்திலேயே புத்தியையுடைய புருஷன் தர்மத்தை யறியமாட்டானல்லவா? என்ஞல் சேதிக்கப்பட்ட உன் னுடைய கர்ப்பமானது ஏழுபிள்ளைகளாயின. அவர்களில் ஒவ்வொருவரும் ஏழுபிரகாரமாகச் சேதிக்கப்பட்டவர்களாய் மரியாமல் தேவதத்துவத்தை யடைந்தார்கள். மூர்க்கஞன என்னுடைய இந்த துஷ்டகிருத்தியத்தை க்ஷமிக்கவேண்டும். தெய்வாதீனமாக உன்னுடைய கர்ப்பமானது மரித்துத் திரும்பவும் ஜீவித்ததென்று சொல்லி இந்திரனைவன் சந்துஷ்டையான அந்தத் திதியிஞலே சுத்த இருதயத்துடன் அனுக்கியைப் பண்ணப்பட்டவஞய் அந்த மருத்துக்க ளுடனேகூட அந்தத் திதிதேவியைப் பிரணமம்பண்ணி சொர்க்கலோகத்தை யடைந்தான்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்

காசிபராலே திதிதேவிக்கு உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ ஹரி சந்தோஷகரமான பும்சவனமென்கிற விரதமே லோகத்துக்கு இதத்தின் பொருட்டுப் பிரகாசமாகச் சொல்லப்படுகின்றது.

### பரீக்ஷித்துவின் வாக்கியம்

பிரமநிஷ்டரே! உம்மால் யாதொரு பும்சவனமென்கிற விரதமானது சொல்லப்பட்டதோ எந்த விரதத்தினால் ஸ்ரீஹரியானவர் பிரசன்னமாவரோ அப்படிப்பட்ட விரதத்தினுடைய பிரகாரத்தை சாங்கோ பாங்கமாக அறியவேணுமென்று வினவுகின்ற ராஜாவைப் பார்த்து சுகர் சொல்லுகிறார்.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் ராஜனே! மார்க்கசிரமாதத்திலே சுக்கிலபக்ஷப் பிரதமையிலே ஸ்திரீயானவள் பர்த்தாவினுடைய அனுமதியைக்கொண்டு சர்வ பலசாதனமான இந்த விரதத்தை ஆரம்பிக்கக்கடவள். அந்த ஸ்திரியானவள் மருத்துக்களுடைய உற்பத்தியையுங் கேட்டு பிராமணர்களுடைய அனுமதியையுங்கொண்டு ஸ்நானம் பண்ணி வெளுத்த தந்தங்களை யுடையவளாய் அலங்காரஞ் செய்து சுப்பிரமான இரண்டு வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு பிராதக் காலத்திலே போஜனத்துக்கு முன்னே ஸ்ரீ மகாலக்ஷ்மியுடனேகூட பகவானைப் பூசிக்கக்கடவள். அந்தப் பூஜைக்குண்டான மந்திரமாவது:" வாரீர் பூர்ண பகவானே! காமனே! உமக்குச் சகலமும் பரிபூரணமா யிருக்கிறதல்லவா? மகா சம்பத்துகளுக்கெல்லாம் பதியாயும் அணிமாமுதலிய அஷ்ட ஐஸ்வரியங்களுடனே கூடியவருமான உமக்கு பிரணமம். ஈசனே நீர் யாதொரு காரணத்தினாலும் கிருபையுடனேயும், ஐஸ்வரியத்துடனேயும், தேஜசுடனேயும், மகாத்மியத்துடனேயும், பராக்கிரமத்துடனேயும், மற்றுமுள்ள சமஸ்த குணங்களுடனேயுங் கூடினவராய் சமஸ்தமான தேவதைகளாலுஞ் சேவிக்கப்பட்டவரா யிருக்கிறீர்." இந்த மந்திரத்தினாலே நாள்தோறும் விஷ்ணுவுக்கு ஆவாகனம், அர்க்கியபாத்தியம், ஆசமனம், ஸ்நானம், வஸ்திரம், உபவீதம், பூஷணம், கந்தம், தூபம், தீபம், நிவேதனம் முதலான சகல உபசாரங்களையுஞ் சித்தசமாதானத்தோடு கூடினவளாய்ச் செய்யக்கடவள். அந்த பூஜைபண்ணி மிகுந்த அவிசை பகவானுன உமக்கு நமகா சுவாகாவென்று இந்த

மந்திரத்தைச் சொல்லி பன்னிரண்டு ஆகுதிகளை ஓமம் பண்ணக்கடவள்.

இவ்விதம் மகாலக்ஷ்மியையும், ஸ்ரீ ஹரியையும், நித்யமாக பக்தியினாலே சம்பத்தைக் கோருகின்ற ஸ்திரீயானவள் பூசிக்கக்கடவள். இந்தப்பிரகாரம் ஸ்ரீ மகா லக்ஷ்மியுடனே வரதனான ஸ்ரீநிவாஸனையும் ஸ்தோத்திரம் செய்து ஆத்ம சமர்ப்பணமும் பண்ணி அர்ச்சிக்கக்கடவள். அப்படி பகவானுக்குப் பூசிக்கப்பட்ட திரவிய சேஷத்தை மோந்துவிட்டு ஸ்ரீ ஹரியை புநர் பூசை பண்ணி தன்னுடைய புருஷனையும் பரமபக்தியினாலே ஸ்ரீ ஹரிரூபமாக வெண்ணி உபசாரங்களினாலே பூசித்துப்பிரணாமம் பண்ணக்கடவள். அந்தப் பர்த்தாவும் பிரீதியுடையவனாய் பத்தினியினுடைய நானாவிதமான அந்தப் பூஜாகாரியங்களுக்கு அனுகூலனாயிருக்கக்கடவன். தம்பதிகளில் ஒருவராலே பண்ணப்பட்ட பூசையாயிருந்தாலும் இருவருக்கும் அதின் பலன் உண்டாகுமல்லவா? ஸ்திரீயானவள் விரதாசனத்துக்கு அயோக்கியையாயிருந்தால் பர்த்தாவானவன் விரதத்தைப் பக்தியுடையவனாய் ஆசரிக்கக் கடவன். ராஜனே! விஷ்ணுவினுடைய விரதத்தை ஒருக்காலும் விடாமலிருக்கக்கடவன். பிற்பாடு பகவானை தகுந்த ஆசனத்திலே எழுந்தருளச்செய்து அவருக்கு நிவேதித்த அன்னத்தை முதல் ஆத்மசுத்தி யர்த்தமாகவும் சர்வ கர்மபலப்பிராப்தி நிமித்தமாகவும் புசிக்கக் கடவன். பூஜாவிதியிலே பனிரண்டு மாதத்துடனே கூடின சம்வச்சரத்தைத் தள்ளினவனாய் பிற்பாடு கார்த்திகை மாதத்திலே கடைசி தினத்துக்கு முன்னாளில் பிராதக்காலத்திலே ஸ்நானம் பண்ணி சுசியாயிருந்துகொண்டு முன்போலவே ஸ்ரீ ஹரியை ஆராதனம் செய்து க்ஷீரத்தினால் பக்குவம் பண்ணப்பட்ட அவிசினால் (பச்சரிசிச்சோறு) நெய்யுடனே கூடபாறுண ஸ்தாலிபாகப் பிரகாரமாக ஓமஞ்செய்து பிராமணபோஜனம் செய்துவைத்து, அவர்களாலே ஆசீர்வசனங்களைப்பெற்று பந்துக்களுடன்மௌனியாய்ப் புசிக்கக்கடவன். பிற்பாடு சந்தானத்தையும் சௌபாக்கியத்தையுங் கொடுக்கின்ற அந்த அவிசினுடைய சேஷத்தைப் பத்தினி கையில் கொடுக்கக்கடவன். இந்தப் பிரகாரம் புருஷனானவன் இந்த லோகத்திலே ஸ்ரீ ஹரியினுடைய இந்த விரதத்தை சாஸ்திரப்பிரகாரம் ஆஸிரயித்துச் சகல மனோரதங்களையும் அடைவன்.

நன்மைதரும் இத்தகைய விரதத்தினை மணமாகாத பெண்கள் அனுஷ்டித்தால் உத்தம நாயகனை மணங்கொள்வர்; அற்ப ஆயுளையுடைய மக்களைப் பெறும் பெண்கள் நீண்ட ஆயுளையுடையவர்களைப் பெறுவார்கள். இப்புண்ணிய விரதத்தை விதவாஸ்திரீகள் உள்ளன் போடு அனுஷ்டித்தால் பகவதநுக்கிரகம்பெற்று மறுபிறப்பில் நல்ல கணவனையடைந்து ஆயுள் முழுதும் இன்பமடைவார்கள்; மிக்க சிரத்தையுடன் இதைக் கேட்டவர்கள் தமக்கு வேண்டிய எல்லா நன்மைகளையும் பெறுவார்கள்.



ஓம்

# சப்தமஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

இரணியாக்ஷனுடைய வதம் சொல்லப்படுகிறது.

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்



**வாரீர் பிரமநிஷ்டரே!** சகல பிராணிகளுக்கும் புகலிடமாயும், அனுகூலராயும், பரம காருண்ய மூர்த்தியாயும் விளங்கும் பகவான் தாம் இந்திரன் நிமித்தம் தைத்தியர்களையெல்லாம் எப்படிக் கொன்றார்? சாக்ஷாத் பரமானந்த சொரூபராயும், ரஜஸ்-தமோகுண சூன்னியராயுமிருக்கிற அந்தப் பகவானுக்குத் தேவகணங்களால் பிரயோஜனமும் அசுரர்களால் கஷ்டமுமுண்டாகுமா? அந்த நாராயணனுடைய கல்யாண குணங்களைக்குறித்து எனக்கு விபரீதமான சந்தேகமுண்டாயிருக்கிறது. எனதகவிருள் நீக்கும் ஆரியரே! நீவிர் அருள்கூர்ந்து எனது சந்தேகம் ஒழியும்படி அதன் காரணத்தை விவரமாகச் சொல்லுமென பரிக்ஷித்து வினவ சுகர் சொல்லுகிறார்:

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

மன்னர் மன்னனே! நீ நன்று கேட்டனை. பகவானிடத்தில் பரம பக்தியைச் செலுத்திய பிரகலாதனுடைய மகாத்துமியத்தை யுடையதாயும் அற்புதமாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியினுடைய சரித்திரமானது நன்றாக உன்னாலே பிரசினம் பண்ணப்பட்டது. ஆகையால் வியாசருக்குப் பிரணமம்பண்ணி, நாரதர் முதலான மகாரிஷிகளினாலே கானம்பண்ணப்படும் பரமபாவனமான ஸ்ரீ ஹரியினுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறேன். ஜனன-மரணங்களில்லாதவராயும், இந்திரியங்களினாலே கிரகிக்கக் கூடாதவரும் பிரகிருதி விலக்ஷணருமான பகவான் தாமச முதலான குணசூனியராயிருந்தாலும், தமது அனந்தமாயா பிரகிருதியினுடைய குணத்திலே பிரவேசித்துக் கொல்லுகிறவராயும்

கொல்லப்படுகிறவராயு மிருக்கிறார். சத்துவம் ரஜசம் தாமதம் என்பவை பிரகிருதியினுடைய குணங்களேயல்லால் ஆத்துமாவினுடைய குணங்களன்று.

சத்தாகவும் சித்தாகவும் சுத்தமாகவும் பரம சுகமயமாகவும் அறியப்படும் நாம - ரூப - குண சூன்யரும் நிர்விகாராருமான அப் பரம்பொருளே இவ்வண்ட கோடிகளை சிருஷ்டிக்குங் காலத்தில் இராசதகுணப் பிரதானனான பிரமாவாகவும், படைப்புகளை இரக்ஷிக்கவேண்டிய காலத்தில் சத்துவ குணத்தை யடைந்து வன்மையில் தேர்ந்த தாமத குணத்தை அடக்குகிற விஷ்ணுவாகவும், எல்லாப்படைப்புகளும் அழியவேண்டிய காலத்தில் தாமதகுணத்தைப் பிரதானமாகவுடைய சம்மார கர்த்தாவான ருத்திரனாகவும் தோன்றும். அப்பரப் பிரமத்தினிடத்திலே ஆரோபிக்கப்பட்ட இவ்விகாரங்களெல்லாம் அம்மூன்று குணங்களால் அமைந்தவையாகும்.

சத்வகுணம் விருத்தியாகும்போது தேவர்களையும் ரிஷிகளையும், ரஜோகுணத்தினுடைய விருத்தி காலத்திலே அசுரர்களையும், தமோகுணம் விருத்தியாகும்போது யக்ஷ-ராக்ஷசர்களையும், அந்தந்த காலானுகூலங்களைக் கொண்டு பகவான் அந்தந்த தேகங்களிலே பிரவேசித்து அவரவர்களை விருத்தி பண்ணுகின்றார். காஷ்ட முதலான பதார்த்தங்களில் அக்கினியானது வேறாக அறியப்படாதது போல் பவானனவர் தேவாதி சரீரங்களைக் காட்டிலும் வேறாக அறிய்ப்படுகிறதில்லை. ஆனாலும் ஞானிகள் தேவாதி சரீரங்களில் பிரவேசித்திரா நின்ற அந்தப் பரமாத்மாவைக் காரியத்தினாலே அறிகின்றார்கள். நரதேவனே! சத்திய சங்கற்பனாய் சர்வாந்திரியாமியான ஈஸ்வரன் நியமித்த பூதர்களான பிரதான புருஷர்களின் பொருட்டு அம்முக்குணங்களுக்கு ஆஸ்ரயமாகவிருக்கின்ற காலத்தைத் தாமே சிருஷ்டிக்கிறார். எந்த காரணத்தாலும் அந்தப் பகவானனவர் எந்த காரியத்திலும் பிரகிருதி புருஷர்களுடைய சம்பந்தத்தை அடைவதில்லை. ராஜனே! இந்தக் காலமானது சத்துவகுணத்தை விருத்திபண்ணி வைக்கிறது. ஆகையினாலே ஈஸ்வரனும் சத்வகுணப் பிரதானர்களான தேவகணங்களை விருத்திபண்ணி வைக்கிறார். தேவதைகளுக்குச் சத்துருக்களாயும் ரஜஸ் - தமோ குணங்களைச் சுபாவமாக வுடையவர்களாயு மிருக்கிற அசுரர்களைச் சங்கரிக்கிறார். அந்தப் பகவானனவர் சர்வகாலமும் தம்மாலே சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தினுடைய ரக்ஷணார்த்த

மாகத் தேவகணங்களுக்குச் சத்துவ குணத்தை விருத்தி பண்ணி வைக்கிறார் ராகத்துவேஷ சூன்னியரான பகவானுக்கு தேவர்களிடத்திலே பிரீதியும் அசுரர்களிடத்திலே கோபமும் எப்படி கூடுமென்கிற இந்தக் கேள்வியே முன்னொரு காலத்தில் தருமபுத்திரரால் தான் நடத்திய இராஜசூயயாக காலத்தில் கேட்கப்பட்டது. அதற்கு நாரதரெனும் தவசிரேஷ்டர் பகர்ந்த விடை மிகப்பொருத்தமாயிருந்த தாதலின் அதை விவரமாகச் சொல்லுகிறேன் கேளுமென சுகர் சொல்லுகிறார்: தர்மபுத்திரரானவர் ராஜசூய மகா யாகத்திலே பகவானான வாசுதேவனிடத்தில் சிசுபாலன் அடைந்த அதியற்புதமான சாயுச்சியத்தைக் கண்டு மிகவும் ஆச்சரியத்தை யுடையவராய் அங்கு விஜயம் செய்திருந்த நாரத முனிவரைப் பார்த்து கேட்கிறார்;

## தருமபுத்திரர் வாக்கியம்

வாரீர் முனிவர் பெருமானே! மகா பாகவதர்களுக்கும் துர்லபமான பரதத்துவமான வாசுதேவனுடைய சாயுச்சிய பிராப்தி கிருஷ்ண பகவானிடத்திலே அத்தியந்த துவேஷியாகிய சிசுபாலனுக்கு எப்படி உண்டாயிற்று? இது அதியாச்சரியமாயிருக்கிறது! இதை நாங்கள் எல்லாரும் அறிய இச்சிக்கிறோம். முன்னம் பகவானை நிந்தித்ததினாலே வேனனென்கிற ராஜா பிராமணர்களாலே நரகத்திலே தள்ளப்பட்டான். பாபியான சிசுபாபலன் பாலிய முதற்கொண்டு இதுவரைக்கும் அந்தக் கோவிந்தனிடத்திலே மிகவும் துவேஷத்தை யுடையவனாயிருந்தான். துற்புத்தியினனான தந்தவக்கிரனும் அந்தக் கிருஷ்ணனை துவேஷித்திருந்தான். ஆதிமத்தியாந்த சூனியராய் பரப்பிர்மமாகிய கிருஷ்ணனை அடிக்கடி தூஷிக்கும் சிசுபால தந்தவக்கிரர்களுடைய நாக்களிலே குஷ்டரோகமும் உண்டாகாமல் போயிற்றே! அடையக்கூடாத சொருபத்தையுடையவரான அந்தப் பகவானிடத்திலே சமஸ்தமானவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே நரகத்திற்கே உரியவரான இவர்களிருவரும் எந்த யேதுவினாலே ஐக்கியத்தை யடைந்தார்கள்? வாயுவினாலே தீபமானது அலைவதுபோல என்னுடைய புத்தியானது இச் சந்தேகத்தால் அலைகிறது. சர்வக்கியாரயிருக்கிற நீர் இதன் அர்த்தத்தை எனக்குச் சொல்லவேண்டுமென தருமபுத்திரர் கேட்க, பகவானான நாரதமுனிவர் மிகவும் சந்துஷ்டராய் சபையிலேயிருக்கிற சகலபேரும் கேட்டுக்கொண்டிருக்கத் தருமபுத்திரரைப் பார்த்துச்சொல்லுகிறார்:

நாரதர் வாக்கியம்

தருமனந்தனே! பிரகிருதி புருஷர்களுடைய அவிவேகத்தினாலே இந்தச் சரீரமானது நிந்தை - ஸ்தோத்திரம்-பூசை - திரஸ்காரம் முதலியவைகளைப் பிரயோசனமாகவுடையதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த உலகத்திலே பிராணிகளுக்குத் தேகாபிமானத்தினாலே நான் - எனது என்கிற விபரீத புத்தியும், தண்டிக்கிறது திட்டுகிறது முதலான இம்சையும், உண்டாகிறது. நான்-எனது என்கிற இந்த அபிமானமானது யாதொரு தேகத்தைப்பற்றி உண்டாகிறதோ அந்தத் தேகத்தினுடைய வதம் பிராணிவதமென்று சொல்லப்படுகிறது. தேகாபிமான சூனியராயும், சேதனு-சேதன விலக்ஷணராயுமிருக்கிற பகவானுக்கு நான் - எனதென்கிற அபிமானமில்லை. அந்த பரமாத்மாவினால் எந்த ஏதுவினாலும் இம்சையானது கற்பிக்கப்படும். ஆகையினால் பகவானிடத்திலே வைரமாகிற யோகத்தினாலும், பயத்தினாலும், சினேகத்தினாலும், கர்மத்தினாலும், மனிதன் மனதை வைக்கக்கடவன். வேறாகப் பார்க்கத்தக்கவனன்று. யோகத்தினாலே பகவத் சாயுச்சிய முண்டாவதைப்போல பக்தியோகத்தினாலே யுண்டாகாதென்பது என்னுடைய நிச்சயம். மாயையினாலே ஆச்சரிய திவ்யமங்கள விக்கிரக விசிஷ்டனையும் ஈஸ்வரனையுமிருக்கிற கிருஷ்ணபகவானிடத்தில் வைரத்தினாலே யுண்டான அனவரத தியானத்தினாலே பாபத்தைப் போக்கடித்தவர்களாய் சிலர் அந்த கிருஷ்ணனுடைய சாரூப்பியத்தை யடைகின்றார்கள். பக்தியினாலும், துவேஷத்தினாலும், பயத்தினாலும், சிநேகத்தினாலும், மனதை ஈஸ்வரனிடத்திலே வைத்து, சகல பாபத்தையும் விட்டு, வெகு பேர்கள் அந்தப் பகவானுடைய பதத்தை யடைந்தார்கள்.

ராஜனே! காமத்தினால் கோபிகா ஸ்திரீகளும், பயத்தினால் கம்சனும், துவேஷத்தினால் சிசுபாலன் முதலான ராஜாக்களும், தேகசம்பந்தத்தினால் விருஷ்ணிகளும், சினேகத்தினால் நீங்களும், பக்தியினால் நாங்களும், ஆக யாவரும் பகவானுடைய அருளைப்பெற்று, அவருடைய பதத்தை அடைகிறோம். இந்த ஐந்துவித பகவத் சம்பந்தங்களில் வேனனானவன் ஒன்றிலும் சேராதவனானான். ஆகையினால் புருஷனானவன் எந்த உபாயத்தினாலேயாகிலும் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலே மனதை வைக்கக்கடவன். தருமராஜனே! உங்கள் சிறிய தாயார் பிள்ளைகளான சிசுபால-தந்தவக்கிரர்களிருவரும் பூர்வத்திலே விஷ்ணுவினுடைய * பாரிஷத

* பாரிஷதர்கள்—வாயல் காப்போர்; துவாரபாலர்கள்.

சிரேஷ்டர்களாயிருந்து பெரியோர்களைப் பிழைத்தமையாலடைந்த சாபத்தினால் வைகுண்டத்தில் நின்றும் நழுவினார்களென்று சொல்லும் நாரத மகாமுனிவரைப் பார்த்து தரும புத்திரர் சொல்லுகிறார்:

மகாரிஷியே! அரிதாசர்களுக்கும் தீமைபயக்கும் சாபம் யாருடையது? அது எத்தகையது? அரிதாசர்களை சாபத்தினால் ஜன்மமானது மீண்டும் அடையுமெனத் தோன்றவில்லை. தேகேந்திரியப் பிராணன்களிலே அபிமான சூன்னியர்களாய் சுத்த சத்துவமான * தேகத்தையுடையவர்களாய் வைகுண்டபுர வாசிகளான பகவத் தாசர்களுக்கு இந்தப் பிராகிருத † தேகசம்பந்த மூலமான ஜன்மம் ஏற்பட்ட விதத்தை எனக்குத் தெரியச்சொல்லுமென்று பிரஸ்னம் பண்ணுகின்ற தரும புத்திரனைப் பார்த்து நாரதமகாமுனிவர் சொல்லுகின்றார்:

வேந்தே! ஒருக்கால் பிரம புத்திரர்களான ஜனகாதிகள் திரிலோகங்களிலுஞ்சஞ்சரித்துக்கொண்டு சுயவிச்சையினாலே விஷ்ணுலோகத்தை யடைந்தார்கள். ஐந்தாறு வயது பிள்ளைகள் போன்றும் தேஜசுடையவர்களாயும், பூர்வீகர்களான மரீசி முதலான பேர்களுக்கு முன்னுண்டானவர்களாயும் திகம்பரர்களாயு (நிருவாணிகளாயு) மிருக்கிற அந்த ஜனகாதிகளை விஷ்ணுவினுடைய துவாரபாலர்கள் குழந்தைகளாக எண்ணித் தடுத்தார்கள். அதனால் அவர்கள் கோபத்தை யடைந்தவர்களாய் துவாரபாலர்களை இவ்விதம் சபித்தார்கள்: வாருங்கள் மூர்க்கர்களே! பாபிஷ்டர்களான நீங்களிரு வரும், ரஜஸ்-தமோ குணங்களினாலே பரிக்ஷிக்கப்படாத விஷ்ணுவினுடைய பாதமூலத்திலே வாசம்பண்ணுகிறதற்கு யோக்கியர்களன்று. ஆகையினால் அசுரயோனியைச் சீக்கிரமாக அடையக்கடவீர்கள். இவ்விதம் சபிக்கப்பட்டு அந்த விஷ்ணுபாதத்தில் நின்றும்நழுவி விழும் அவர்களிருவரையும் கிருபா மூர்த்திகளான அந்த ஜனகாதி ரிஷிகள் கிருபையால் நோக்கி, உங்களுக்கு மூன்று ஜன்மங்கழிந்ததும் இந்த விஷ்ணுபதம் மீண்டும் கிடைக்குமென அருளிச்செய்தார்கள்.

அவர்களிருவரும் திதிபுத்திரர்களாய் தயித்திய-தானவர்களாலே வந்தனம் பண்ணப்பட்டவர்களாய் இரணியகசிபு

* பிராகிருததேகம்—பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாசமெனும் ஐந்து பூதங்களாலமைந்த சரீரம்.

† சுத்த சத்துவ தேகம்—அப்பிராகிருத சரீரம்; அதாவது மண் முதலிய பஞ்ச பூதங்களால் அமையாதது.

இரணியாக்ஷனெனும் இருவராய் வந்து பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே இரணியகசிபு நரசிங்க மூர்த்தியான பகவானாலே சங்கரிக்கப்பட்டான். இரணியாக்ஷனும் வராக ரூபத்தைத் தரித்துப் பூமியை உத்தாரணம் பண்ணுகின்ற அந்தப் பகவானாலே சங்கரிக்கப்பட்டான். அந்த இரணியகசிபானவன் கேசவப் பிரியனையும், புத்திரனையுமிருக்கிற பிரகலாதனைக் கொல்ல நினைத்து மாணயேதுக்களான நானா யாதனைகளையுஞ் செய்தான். ஆனாலும் பகவானுடைய தேஜஸினாலே வியாபிக்கப்பட்டும், சர்வ பூதங்களுக்கும் ஆத்மாவான பரமாத்மாவை அந்த ராத்மாவாக வுடையவராயும், ராகதுவேஷ முதலான யேயதுண சூனியராயும், சராசராத்மகங்களான சர்வவஸ்துக்களிலேயு மிரா நின்ற அந்தப் பகவானொருவனையே சாக்ஷாத்கரியானின்று மிருக்கிற அந்தப் பிரகலாதனை நானாவித மாணவுபாயங்களினாலும் கொல்லுதற்குச் சமர்த்தனாகாமற் போனான்.

பிற்பாடு ராக்ஷசர்களான அவர்களிருவரும் அந்த ஜன்மத்தை விட்டு கேகசியென்கிற ஸ்திரீயினிடத்திலே விசிர்வசுவுக்குப் பிள்ளைகளாய் சர்வ லோகபயங்கரர்களான இராவண-கும்பகன்னர்களாக வந்து பிறந்தார்கள். அந்த ஜன்மத்திலும் பகவானானவர் தசரதராமனாய்ப் பிறந்து, அவர்களுடைய சாபவிமோசனார்த்தமாக அவர்களிருவரையும் சங்காரித்தார். தருமபுத்திரரே! அந்த ஸ்ரீ ராமருடைய பராக்கிரமத்தை மார்க்கண்டேயருடைய வாக்கினாற் கேழ்க்கப் போகிறீர். அவர்களிருவரும் இப்போது உங்கள் சிறிய தாயார் பிள்ளைகளாகிய சிசுபால-தந்தவக்கிரர்களான க்ஷத்திரியர்களாகப் பிறந்தார்கள். இப்போது கிருஷ்ணனுடைய சக்கிரத்தினாலே சகலபாபத்தையும் போக்கடித்துக் கொண்டவர்களாய், சாபத்தில் நின்றும் விடுபட்டவர்களாய், துவேஷமாகிற யோகத்தினாலே மிகவும் தீக்ஷணியமாயிருக்கிற தியானத்தினால் அச்சுதனுடைய சாரூப்பியத்தை யடைந்தவர்களாய் திரும்பவும் விஷ்ணுபாரிஷதர்களாய், அவருடைய சமீபத்தை யடைந்தனர் என்று சொல்லுகின்ற நாரதமகாமுனிவரைப் பார்த்து யுதிஷ்டிரர் சொல்லுகின்றார்: வாரீர் பகவானே! மகாத்துமாவாயும், அத்தியந்தப் பிரியனையும், புத்திரனையு மிருக்கிற அந்த பிரகலாதனிடத்தில் இரணியகசிபுவுக்கு துவேஷம் எதினாலுண்டாயிற்று. அந்தப் பிரகலாதனுடைய உத்தம சரித்திரத்தைக் கிரமமாக கேட்க என்மன மவாவுகிறது. கிருபை கூர்ந்து அதைச் சொல்ல வேண்டும், என்று கேட்டார்.

## இரண்டாவது அத்தியாயம்



*மஹாவிஷ்ணுவினிடத்தில் விரோதங்கொண்டு இரணியகசிபு தானவர்களைக்கொண்டு உலகத்தில் உபத்திரவம் புரிதல்.*

ஸ்ரீ நாரதர் வாக்கியம்

வாரீர் தருமபுத்திரரே! தனது சகோதரனான இரணியாக்ஷன் வராகரூபியான பகவானாலே சங்கரிக்கப்பட, இரணியகசிபுவானவன் ரோஷத்தினாலும் சோகத்தினாலும் மிகவும் பரிதாபத்தை யடைந்து, உதடுகளைக் கடித்துக்கொண்டு, கோபத்தினாலே ஜொலிக்கும் இரண்டு கண்களினாலும் தூம்பரவர்னமான ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு பயங்கரமான கோரைப் பற்களினாலும், உக்கிரமான திருஷ்டியினாலும், பார்க்கக்கூடாத நெறித்த புருவங்களாலும் கூடினமுகத்தை யுடையவனாகி சபையிலே சூலத்தை எடுத்துக் கொண்டு தானவர்களையெல்லாம் பார்த்துச் சொல்லுகிறான் :

வாருங்கள் தானவர்களே! தயித்தியர்களே! திவமூர்த்தனே! திரியக்ஷனே! சம்பரனே! சதபாகுவே? அயக்கிரீவனே! மூசியே! பாகனே! இல்வலனே! விப்பிரசித்தியே! புலோமாவே! சகுனன் முதலான பேர்களே! நீங்களெல்லாரும் என்னுடைய வார்த்தையைக் கேட்டு எனது ஆக்கினைப் பிரகாரம் சீக்கிரமாகச் செய்யுங்கள். தாமதஞ் செய்ய வேண்டாம். அப்பிரயோஜகர்களாயும் நமக்குச் சத்துருக்களாயுமிருக்கிற தேவர்களாலே என்னுடைய பிரியசகோதரனானவன் தேவதைகளுக்குச் சகாயமான ஸ்ரீ ஹரியினாலே கொல்லப்பட்டான். சுபாவத்தை விட்டவரா யிருந்தாலும், சுத்த தேஜோமயரா யிருந்தாலும், மாயையினாலே வராகரூபம் கொண்டு, தம்மை உபாசிப்பவரை அனுவர்த்தித்த அந்த ஹரியினுடைய கழுத்தை நம்முடைய சூலத்தினாற் பேதித்து அதில் நின்றும் பிரவகிக்கும் இரத்தப்பிரவாகத்தினால் தான் என்னுடைய சகோதரனின் மரணத்தால் நேர்ந்த துக்கம் தீரும். சமச்சித்தத்தை யுடையவரல்லாத அந்த விஷ்ணு நாசமடைந்தால் வேரோடு சேதிக்கப்பட்ட விருக்ஷத்தினுடைய கிளைகள்போல விஷ்ணுவைப் பிராணனாகவுடைய தேவர்கள் தாமே நாச மடைவார்கள். ஆகையினால் நீங்கள் பிராமண க்ஷத்திரியர்களாலே விருத்தி யடையாநின்ற பூமியையடைந்து தபசு - எக்கியம் - விரதம் - ஆக்கினி

ஹோத்திரம் இவைகளைப்பற்றிய பிராமணர்களை சம்மாரம் பண்ணுங்கள். விஷ்ணு பிராமணர்களால் செய்யப் பட்ட யக்கிய சொரூபராயும், தர்மமயமான புருஷராயும், தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்கள் இதரப் பிராணிகள் இவர் களுக்கும் தர்மத்துக்கும் பரமகதியாயுமிருக்கிறவர். ஆனபடி யினால் எந்தெந்த தேசங்களிலே பிராமணர்கள் கோக்கள், வேதங்கள்,வர்ணாசிரம தர்மங்கள் இவையாவும் உண்டாயிருக் கின்றனவோ அந்தந்த தேசத்தைப்போய்க்கொளுத்துங்கள். அங்கங்கே யிருக்கிற பேரைச் சேதியுங்களென்று சொல்லா நின்ற இரணியகசிபுவினுடைய ஆக்கினையைச் சிரசினாலே வகித்துக்கொண்டு, அந்தத்தயித்திய தானவர்களெல்லாம் பிரஜைகளை நாசம்பண்ணி, பட்டணங்கள் கிராமங்கள் இடைச்சேரிகள், உத்தியானவனங்கள், க்ஷேத்திரங்கள், தோப்புகள், ரிஷிகளுடைய ஆசிரமங்கள், கிருஷிபண்ணுகிற பேர்களுடைய ஸ்தானங்கள் ரதத்தின் ஸ்தானங்கள், கோஸ் தானங்கள் இவைகளையெல்லாம் தகித்தார்கள். சிலபேர் மண் வெட்டிகளினாலே தடாகங்கள் பிரகாரங்கள் கோபுரங்கள் முதலியவைகளையெல்லாம் பேதித்தார்கள். பிரஜைகளுக்கு ஜீவனசாதனங்களான விருக்ஷங்களை யெல்லாம் சில பேர் கோடாலிகளினாலே சேதித்தார்கள். சிலபேர் எரிகின்ற கொள்ளிகளைக்கொண்டு கிரகங்களையெல்லாம் தகித்தார்கள்

இந்தப்பிரகாரம் இரணியகசிபுவினுடைய சேவகர்களான தயித்திய-தானவர்களாலே லோகமெல்லாம் நாசம் பண்ணப் படுகையில், எக்கிய பாகங்களில்லாமையால் தேவர்கள் சொர்க்கத்தைவிட்டுப் பூமியிலே போய் ஒருவருக்குந் தெரி யாமல் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். இரணியகசிபுவும் சோகத்தால் பீடிக்கப்பட்டவனாய் லோகாந்தா கேதனான தம்பிக்குச் செய்யத்தக்க பிரேதகிருத்தியங்களை யெல்லாம் செய்து, அந்தப் பிராதாவினுடைய புத்திரர்களான சகுனி சம்பிரன் திருஷ்டன் பூதசந்தாபன் விருகன் காலநாபன், மகாநாபன் அரிஸ்மசுரு உதகேசன் ஆகிய இவர்களுடைய மாதாவான உதஷ பானுவையும், தனது தாயாரான திதியையும் அழைத்து சௌமிய வசனங்களினாலே தேச-காலங்களை அறிந்தவனாய் அசுரேசனான இரணியன் சொல்லு கின்றான் :

தாயாரே! புத்திரர்களே! வீரனான இரணியாக்ஷனைக் குறித்து நீங்கள் விசனிக்கிறது யுக்தமன்று சூரர்களான பேருக்கு சத்துருவினுடைய எதிரேவதமானது சிலாக்கிய மாகச் சொல்லப்படுகின்றது. சோபனமான விரதத்தை

யுடையவளே! தெய்வ சக்தியினாலும் பூர்வ கர்மத்தினாலும், ஒருவிடத்திலே கூட்டுவிக்கப்பட்டு மீண்டும் தத்தமது கர்மங்களால் பிரிக்கப்பட்டவாயுமிருக்கிற பிராணிகளுக்கு சகவாசமானது அநித்தியமாகவிருக்கிறது. ஆத்துமா நித்தியனாயும், நாசமில்லாதவனாயும், சுத்தனாயும், சர்வ பரிபூரணனாயும், சர்வக்கியனாயும், தேகாதிகளைக் காட்டிலும் வேறாகவு மிருக்கிறான். இப்படிப்பட்ட ஆத்துமா தன்னுடைய மாய்கையினாலே சத்வாதிகுண மயமான தேகங்களைச் சிருஷ்டித்துக் கொண்டு லிங்க தேகத்தைத் தரிக்கின்றான். எப்படி ஜலத்திலே பிரதிபலிக்கும் விருக்ஷங்கள் அலைகின்ற ஜலத்தினாலே அவைகளும் சலிக்கிறவைகளாக காணப்படுகிறதோ, அப்படியே சத்துவாதி குணங்களினாலே மனது சுழலும்போது நிர்விகாரனான புருஷன் அந்த மனதுடனே காமியத்தையடைந்து சுபாவமாகத் தேக தர்மத்தை யுடையவன்போலக் காணப்படுகிறான். அந்த ஆத்மாவுக்குத் தேகத்தினிடத்திலே யுண்டாகின்ற "நான் தேவன்-நான் மனுஷியன்-நான் பிராமணன்-நான் க்ஷத்திரியன்" என்கிற அபிமானமே அஞ்ஞானம் இந்த அஞ்ஞான மூலமாகப் பிரிய வஸ்துக்களோடு கூடுதலும் பிரியமில்லாத வஸ்துக்களை விட்டுப் பிரிதலும், கர்மமும், அந்தக் கர்மகாரணமாக நானாயோனிகளிலே பிரவேசித்தலும், அதில் நின்றும் வெளிப்படையாகிற வுற்பத்தியும், வினாசமும், சோகமும், மோகமும், சிந்தையும், அவிவேகமும் இவைவியெல்லாம் உண்டாகிறது. காரணமில்லாமல் விருதாவாய் விசனப்படுகிற இந்த அர்த்தத்திலே பிரேதபந்துக்களுக்கும் எமனுக்கும் சம்வாதரூபமான ஒரு இதிகாசத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

### சுவயெக்கியராஜன் சரித்திரம்

உசிநாமென்கிற தேசத்திலே சுவயெக்கியனெனும் பிரசித்த ராஜனொருவனிருந்தான். அவன் ஒருநாள் சத்துருக்களால் யுத்தத்திலடிப்பட்டு மரணமடைந்தான். படுகளத்தில் விழுந்து கிடக்கிற அவனது சரீரத்தைச் சூழ்ந்துகொண்டு அவனது மனைவியர் அவனது பிரிவையாற்றாது பலவாறு பிரலாபித்தனர். இராத்திரியிலே அந்த யுத்தபூமியில் இவ்வாறு வருந்துமவர்களின் முன் காலக்கடவுள் ஓர் பாலனாகத் தோன்றி சொல்லுகிறார்: வயது சென்றவர்களாயும் உலகத்தினுடைய இயல்பை யறிந்து மிருக்கிற இவர்களுடைய மோகத்தை என்னவென்று சொல்வது. மனிதன் எந்த அவ்வியக்தத்திலிருந்தும் வந்தானோ அந்த அவ்வியக்தத்தையே அடைந்திருக்கிற அவனைக்குறித்து வியர்த்தமாகத்

துக்கிக்கிறது ஆச்சரியமாயிருக்கிறது. சிருஷ்டி-ஸ்திதி-சம்மாரம் ஆகிய காரியங்களை யியற்றும் பிரபுவாயிருக்கிற அந்த ஈஸ்வரனுக்கு இந்தப் பிரபஞ்சத்தைக் கிரீடாசாதனமாகச் சொல்லுவார்கள். கிரகத்திலே மாதாபிதாக்கள் முதலான பந்துவர்க்கங்களாலே ரக்ஷிக்கப்பட்டிருந்தாலும், ஈஸ்வரனுடைய கடாக்ஷமில்லாதவன் நசித்துப் போகிறான். தேவாதி சரீரங்களும் ஜனனமரணங்களுக் குட்பட்டிருக்கின்றன. ஆத்மாவானவன் தேகாதி விலக்ஷணனாய் சரீரத்தினுடைய ஜனனமரண முதலான தர்மங்களினாலே சம்பந்திக்கப் படுகிறதில்லை. பாஞ்சபௌதிகமாயும் அவிவேகத்திலே ஆத்மாவென்று கிரகிக்கப்பட்டிருக்கிற இந்தத் தேகமானது பிருதிவி தேஜசு இவைகளினாலே யுண்டாகி நசிக்கிறது. ஆத்மாவோவென்றால் ஒருக்காலும் நசிக்கிறதில்லை. எப்படி ஆகாசமானது சர்வத்தையும் வியாபித்துக்கொண்டிருந்தாலும், ஒன்றுடனேயும் சங்கத்தையடையாமலிருக்கிறதோ, அப்படி புருஷனும் சமஸ்தமான தேகேந்திரியாதிகளை ஆசிரயித்திருந்தாலும், அவைகளைக் காட்டிலும், வேறாகவே யிருக்கிறான்.

விவேகமில்லாதவர்களே! உங்களுடைய பர்த்தாவான அந்தச் சுவயக்கியன் இவ்விடத்திலே படுத்துக்கொண்டிருக்கிறானா? இல்லையே. நீங்கள் ஏன் துக்கிக்கிறீர்கள்? உங்களுடைய முறையைக் கேட்கிறவனாவனோ? பிரதி வசனஞ் சொல்லுகிறவனாவனோ? அந்தப் புருஷன் இவ்விடத்தில் ஒருகாலுங் காணப்படப் போகிறதில்லை. இந்தத் தேகத்திலே சர்வேந்திரியங்களுடைய வியாபாரத்துக்கு ஏதுவாயும் முக்கியனாயுமிருக்கிற பிராணனானவன் கேட்கவுமாட்டான் பிரதிவசனஞ் சொல்லவுமாட்டான். இந்தச் சரீரத்திலே எந்த ஆத்மாவானவன் தேகேந்திரியங்களாலே சகலமானதையும் பார்த்துக்கொண்டிருந்தானோ, அந்த ஆத்மாவானவன் பிராண-தேகாதிகளுக்கு வேறாய் விலக்ஷணனாக விருப்பன். பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், மனம் இவைகளுடனே காணப்படும் நானாவிதமான இந்தத் தேகங்களை, தேகாதிகளைக் காட்டிலும் வேறாயும் நித்தியனாயுமிருக்கிற ஆத்மாவானவன் நான் எனதென் றெண்ணுகிறான். தன்னுடைய விவேக பலத்தினாலே நான் எனதென்கிற இவ்வபிமானத்தை விட்டுவிடக்கடவன். இந்த ஆத்மாவானவன் எந்த மட்டுக்கும் தேகத்திலே நான் எனதென்கிற அபிமானத்தை யுடையவனாக விருக்கிறானோ அந்தமட்டுக்குமந்த ஆத்மாவுக்குக் கர்மமானது பந்தஹேதுவாக விருக்கிறது. ஆகையினாலே தேக

தர்மத்தை அடைந்திருத்தலும் அதினாலே கிலேசமும் இந்த ஆத்மாவுக்கு அக்கியானமூலமாக வுண்டாகின்றன. ஆத்மாவை நித்தியனாகவும், தேகத்தை அனித்தியமாகவும், அறிகின்ற கியானிகள் விசனப்படார்கள். இப்படிப்பட்ட கியானம் திடமாயில்லாததினாலே விசனப்படுகிறது சுபாவமாக விருக்கிறது.

ஒரு காட்டிலே ஒரு வேடனானவன் பக்ஷிகளுக்கெல்லாம் மிருத்தியுவாக அங்கங்கே வலையைப்பரப்பிக் கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் ஆண் பெண்ணுமாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்த இரண்டு குலிங்கப் பக்ஷிகளில் பெண் பக்ஷியானது அவனுடைய வலையிலே காலசகதியினால் அகப்பட்டது. அப்படி அகப்பட்டிருக்கிற பெண்பக்ஷியைப் பார்த்து புருஷ பக்ஷியானது மிகவும் சினேகத்தினாலே துக்கித்துக்கொண்டு அந்த ஆபத்தில் நின்றும் விடுவிக்க சக்தியிலாது பிரலாபித்துக்கொண்டிருக்கும்போதே, வேடன் மறைவாக இருந்துகொண்டு காலத்தினாலே ஏவப்பட்டவனாய் பாணத்தினால் அதையும் அடித்துக்கொன்றான். இந்தப் பறவைகளைப்போலவே நீங்களும் உமது நாசத்தை அறியாது துக்கித்துக்கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எத்தனை வருஷங்களானாலும் இந்தப் பர்த்தாவை யடையப்போகிறதில்லையென்று பாலவேஷங்கொண்ட எமனானவன் சொல்லி மறைந்துபோய்விட்டான். அப்போது அங்கிருந்த அவனது மனைவியர் முதலியோர் ஆச்சரியத்தையுடைய மனதுடனே கூடினவர்களாய்ச் சர்வபதார்த்தத்தையும் அனித்தியமாகவும், எதார்த்தமல்லவென்றும் அறிந்து, அந்த சுவக்கியனுக்குப் பிரேத-பிதுர் காரியங்களென்னவுண்டோ அவைகளையெல்லாம் செய்தார்கள். ஆகையினாலே நீங்கள் அன்னியனைக் குறித்தும் தன்னைக்குறித்தும் துக்கிக்கவேண்டாம். தானுவதார்? அன்னியனுவதார்? தன்னுடையதாவதேது! அன்னியனுடையதாவதேது? பிராணிகள் தானென்றும் அன்னியனென்றும், தன்னுடையதென்றும், அன்னியனுடையதென்றும் கொள்வது விருதா அஞ்ஞானமேயொழிய வேறில்லையென்று இரணியன் சொன்னான்.

தருமபுத்திரரே! இந்தப் பிரகாரஞ்சொல்லுகின்ற தயித்திய பதியான இரணியனுடைய வாக்கியத்தைக்கேட்டு திதிதேவி முதலியவர்கள் க்ஷணத்திலே புத்திரசோகத்தை விட்டு தத்துவத்திலே மனதைத் தரித்தார்களென்று நாரதமகாமுனிவர் திருவாய் மலர்ந்தருளினர்.

## மூன்ருவது அத்தியாயம்

*இரணியகசிபு உக்கிரமான தபம்புரிந்து பிரம்மாவினல் வரம் பெற்றமை சொல்லப்படுகிறது.*

### நாரதர் வாக்கியம்

வாரீர் தருமபுத்திரரே! இரணியகசிபுவானவன் தன்னை ஒருத்தராலும் ஜயிக்கப்படாதவனும், ஜராமரண சூனியனாகவும், தனக்குச்சமானமில்லாதவனாகவும், ஜகத்துக்கெல்லாம் ஏகராஜாவாகவும், இராஜ்ஜியபாரம் பண்ணவேணுமென்று கோரி, மந்தர பர்வதத்தினுடைய தாழ்வரையிலே உயரவெடுக்கப்பட்ட கரங்களை யுடையவனாய், ஆகாசத்திலே திருஷ்டியை யுடையவனாய், கால்பெருவிரலாலே பூமியிலே நின்றுகொண்டு மகா உக்கிரமான தபசைச்செய்து, தன்னுடைய சடையினது காந்தியினாலேயும், கிரணங்களினாலேயும், பிரளயகாலத்துச் சூரியன்போல விளங்கினான். இந்தப் பிரகாரம் அந்த இரணியகசிபுவானவன் தபசுபண்ணுகையில் முன்னாலே அந்த இரணியனுக்குப் பயப்பட்டு பூமியின் கண்ணிலே படாமல் சஞ்சரித்துக்கொண்டிருந்த தேவதைகள் திரும்பவும் தங்களுடைய ஸ்தானங்களை அடைந்தார்கள். இப்படி தபசுபண்ணுகின்ற அந்த இரணியகசிபுவினுடைய சிரசில் நின்றும், தபோமயமான அக்கினியானது தூமத்துடனேகூட உண்டானதாய், லோகங்களை நாலுபக்கமும் பரவி தகிப்பித்தது. அப்போது நதி சமுத்திரங்களெல்லாம் கலங்கின, த்வீபங்கள், பர்வதங்களுடனே கூடின பூமி நடுங்கின. கிரகங்களுடனே நக்ஷத்திரங்கள் விழுந்தன. பத்துத் திக்குகளும் ஜொலித்தன. தேவதைகள் அவனுடைய தபோ அக்கினியினாலே தகிக்கப்பட்டவர்களாய், சுவர்க்கத்தை விட்டுப் பிரமலோகத்தையடைந்து பிரமாவைப்பார்த்து விக்கியாபனம் பண்ணுகிறார்கள் :

வாரீர் தேவதேவனே! ஜகத்பதியே! தயித்தியேந்திரன் இரணியனுடைய தபசினால் தகிக்கப்பட்டவர்களாய், சொர்க்கத்தி லிருக்கக்கூடாமையா யிருக்கின்றது. வாரீர் நிரதிசை மகாத்மியத்தை யுடையவரே! உலகங்கள் அவனுடைய தபோ அக்கினியினாலே நாசத்தை யடைவதற்கு முன்னே அதற்கொரு சாந்தியைப் பண்ணும். ஒருவராலுஞ் செய்யக்கூடாத தபசைப்பண்ணுகின்ற அந்த இரணியகசிபுவினுடைய சங்கற்பமானது உமக்குத் தெரிந்திருந்தாலும் எங்க

ளுக்குத் தெரிந்தவரையில் சொல்லுகிறோம். என்னவெனில் பிரமாவானவர் சராசர சொரூபமான இந்தப் பிரபஞ்சத்தைத் தபசினாலேயும், யோகத்தினாலேயும், சமாதியினாலேயும் சிருஷ்டித்துச் சமஸ்தமான ஸ்தானங்களைக்காட்டிலும் உத்தம ஸ்தானமான சத்தியலோகத்திலே எப்படியிருக்கிறாரோ, அப்படி நானும் விருத்தியடைந்து தபயோகசமாதியினாலே காலம், ஆத்மா இவைகள் நித்தியமான படியினாலே நமக்கு அப்படிப்பட்ட பிரபுத்துவத்தைச் சம்பாதிக்கக்கடவேன். இந்தப் பிரபஞ்சத்தைத் தேவ அசுரர்கள் முதலான பிராணிகளால் வித்தியாசமாக ஸ்தாபித்து முன்போலிராமல் பண்ணிப் போடப்போகிறேன். காலத்திலகப்படாதவனாயும் கற்பாந்தகாலமிராநின்ற துருவன் முதலான பேர்களுடைய ஸ்தானங்களினால் பிரயோஜனமென்னவென்று இந்தப்பிரகாரம் சங்கற்பித்தவனாய், அந்த இரணியகசிபுவானவன் பண்ணக்கூடாத தபசைப்பண்ணுகிறானென்று கேள்விப்பட்டோம். ஆகையினாலே திரிலோகேஸ்வரரே! இந்த விஷயத்தில் எது யுக்தமோ அதை நீர்தானே சீக்கிரமாகப் பண்ணக்கடவீர்.

தர்மராஜனே! இந்தப்பிரகாரம் தேவதைகளினால் பிரார்த்திக்கப்பட்டவராய், பகவானான பிரமாவானவர் பிற்பாடு தக்ஷன்முதலான நவப்பிரஜாபதிகளினால் சூழப்பட்டவராய், தயித்தியேஸ்வரனான இரணியனுடைய ஆஸ்ரமத்தையடைந்து அதன்மத்தியிலே புற்றுக்களாலும், மூங்கில்களாலு மறைக்கப்பட்டவனாயும், எறும்புகளினால் பக்ஷிக்கப்படாநின்ற சர்மம் மாங்கிஷம் இரத்தம் இருதயப் பிரதேசத்திலிருக்கிற கொழுப்புகள் இவைகளை யுடையவனாயுமிருக்கிற அந்த இரணியகசிபுவைப் பார்த்து மிகவும் ஆச்சர்யத்தையுடையவராய், சொல்லுகின்றார்: வாராய்காசிபப்புத்திரனான இரணியகசிபுவே! உனக்கு மங்களம். தபசித்தி உண்டாகக்கடவது. தபசைவிட்டெழுந்திரு. உனக்கு வரத்தைக்கொடுக்க வந்தேன். உனக்கிஷ்டமான வரத்தைக்கேள். நானுன்னுடைய அத்தியற்புதமான இந்தத் தைரியத்தைப் பார்த்தேன். காட்டு ஈக்களினால் பிடுங்கப்பட்ட தேகத்தை யுடையவனான உன்னுடைய பிராணன் அஸ்திகளை ஆஸ்ரயித்துக்கொண்டிருக்கிறது. இத்தகைய தபசைப் பூர்வீகர்களான ரிஷிகளும் செய்ததில்லை. இனிமே லொருவரும் செய்யப் போகிறதுமில்லை. எவன்தான் தீர்த்தபானமும் பண்ணாமலிருந்துகொண்டு பிராணன்களைத் திவ்விய வருஷத்தினால் நூறு வருஷந்தரிப்பன்! வாராய் திதி நந்தனனே! தபசிகளுக்குள்

செய்யக்கூடாமலிருக்கிற உன்னுடைய தபசினால் ஜயிக்கப்பட்டேன். ஆகையால் வாராய் அசுரசிரேஷ்டனே! உனக்கு வேண்டிய வரங்களெல்லாங் கொடுக்கிறேன். மனனசீலனை உனக்கு நித்தியனான என்னுடைய தரிசனம் வியர்த்தமாகப் போகிறதல்லவென்று பிரமாவானவர் சொல்லி, எறும்புகளினால் பட்சிக்கப்பட்ட தேகத்தையுடைய இரணியகசிபுவை அமோகமான வீரியத்தையுடையதாயும் திவ்வியமாயுமிருக்கிற கமண்டலசலத்தினால் புரோக்ஷித்தார்.

இரணியகசிபு வாக்கியம்

இந்தப் பிரகாரம் புரோக்ஷித்த பிற்பாடு அந்த இரணியகசிபுவானவன் மூங்கிற் புதறினாலே சூழப்பட்ட புற்றில் நின்றும் காந்தி-மனோபலம்-சரீரபலம் இவைகளுடனே கூடினவனாயும், சர்வ அவயவங்களுடனே கூடிய வஜ்ஜிரம் போன்ற திடமான சரீரத்தை யுடையவனாய், எவ்வன புருஷனாய் உருக்கிவிட்ட தங்கத்தைப்போலும் காந்தியையுடையவனாயும், காஷ்டத்தில் நின்றும் ஜொலியாநின்ற அக்கினி போல எழுந்திருந்து ஆகாசத்தில் அம்சவாகனத்தின் பேரிலே யிராநின்ற பிரமாவைப்பார்த்து, அவரைக்கண்டதால் மகா சந்தோஷத்துடனே கூடினவனாகி, பூமியில் சிரசினாலே பிரணாமம் பண்ணி, எழுந்திருந்து அஞ்சலிபந்தம் பண்ணி வணக்கத்தை யுடையவனாய் கண்களினாலே பிரமாவைப் பார்த்துக்கொண்டு ஆனந்த பாஷ்பத்தினாலே புளகாங்கிதனாய் தழைதழைத்த சொற்களினாலே கசிபுவானவன் ஸ்தோத்திரம் பண்ணுகிறான் :

கற்பாந்தத்திலே காலத்தினால் சிருஷ்டிக்கப்பட்டதாயும், பிரகிருதி குணமாயும், மகாந்தகாரமாயுமிருக்கிற தமோகுணத்தினாலே சூழப்பட்டிருக்கிற அந்த ஜகத்தை சுவயம் பிரகாசரான பகவான் தம்முடைய தேஜசினாலே பிரகாசிப்பித்து அந்தபகவான் திரிமூர்த்தி ரூபமாயிருந்துகொண்டு இந்தத் தேகத்தைச் சிருஷ்டித்தும், ரக்ஷித்தும், சங்கரித்தும், சத்துவ-ரஜஸ்-தமோகுணங்களுக்கு ஆஸ்ரயராயும் மகா புருஷராயு மிருக்கிற அந்த பரமாத்மாவுக்குப் பிரணாமம் பண்ணுகிறேன். ஆதியாயும், காரணமாயும், ஞானவிஞ்ஞான மூர்த்தியாயும், பிராணேந்திரிய-மனோ-புத்தி விகாரங்களினாலே பிரகாசிக்கப்பட்ட சொரூபத்தையுடையவராயு மிருக்கிற உமக்குப் பிரணாமம். நீரே ஸ்தாவர-சங்கம ரூபமான பிரபஞ்சத்துக்குச் சூத்திராத்ம ரூபத்தினாலே நியந்தாவாக விருக்கின்றீர். ஆகையினாலே பிரஜைகளுக்கு ரக்ஷகரா

யிருந்து அந்தப் பிரஜைகளுடைய சித்தத்திற்கும், கியானத்திற்கும், மனதிற்கும், இந்திரியங்களுக்கும் பதியாகின்றீர். ஆகாசாதி பஞ்சபூதங்களுக்கும் அவைகளுடைய சப்தாதி விஷயங்களுக்கும், வாசனைகளுக்கும் ஈஸ்வரனாக விருந்து நீரே நாலு ஹோதாக்களையுடையதான எக்கிய கர்ம விஷயமான மந்திரங்களினாலேயும். மூன்றுவேத சொரூபமான சரீரத்தினாலேயும், அக்கினிஹோஷ்டம் முதலான எக்கியங்களை விஸ்தாரமாகப் பண்ணுகிறீர். பிராணிகளுக்கெல்லாம் அந்தராத்மாவாயும், அநாதியாயும், சர்வக்கியராயும், தேசகாலங்களினாலே அளவிடக்கூடாத மகிமையையுடையவராயும், அகண்ட சொரூபராயுமிருக்கிற பரமாத்மாவாக விருக்கிறீர். நீரே நிர்விகாரராயும், கியான சொரூபராயும், பரமேஸ்வரராயும் ஜன்மமிலாதவராயும், அளவிலாதவராயும், நியந்தாவாயு மிருக்கிறீர். வேதம், உபதேசம், முதலான சமஸ்த வித்தைகளும் வேதாங்கங்களும் உம்முடைய சரீரங்களாக விருக்கின்றன. இந்தப் பிரமாண்டத்தைக் கர்ப்பத்திலே யுடையவராயும், பிரகிருதியைக் காட்டிலும் பரராயு மிருக்கிற பரப்பிரமமாக விருக்கிறீர்.

வாரீர் விபுவே! காரியமான இந்தப் பிரபஞ்சம் உமக்குச் சரீரமாக விருக்கிறது. அந்தச் சரீரத்தினாலே இந்திரியம்-பிராணன்-மனது இவைகளின் குணங்களை நீர் பரமேஸ்வரராக விருந்துகொண்டு அனுபவிக்கிறீர். வாரீர் அநந்தரே! மனோவாக்குகளுக்கும் விஷயமல்லாத ரூபத்தையுடையவரான உம்மாலே இந்த ஜகத்தானது வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஜீவபிரகிருதிகளைச் சரீரமாகவுடையவராயும், பகவானுயுமிருக்கிற உமக்குப் பிரணாமம். வாரீர் வரதோத்தமனே! எனக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பது உமக்கிஷ்டமானால், உமது சிருஷ்டிப் பொருள்களால் எனக்கு மரணமுண்டாகாதபடி அருள் செய்யவேண்டும். உள்ளேயும் வெளியிலேயும், பகலிலேயும், இரவிலேயும், பூமியிலேயும், ஆகாசத்திலேயும், உம்மாலே சிருஷ்டிக்கப்படாமல் இருக்கிற பொருள்களாலும், ஆயுதங்களினாலும், மனிதர்களாலும், மிருகங்களாலும், பிராணனில்லாத வஸ்துக்களினாலும், பிராணனுடனே கூடின வஸ்துக்களாலும், சுரர்களாலும், அசுரர்களாலும், சாப்பஜாதிகளினாலும் எனக்கு மரணமுண்டாகாமலிருக்கவேண்டும். யுத்தத்திலே எனக்குச் சமானமில்லாதிருத்தலும், சகல பிராணிகளுக்கும் நானொருவனே பிரபுவாயிருத்தலும் யானிச்சித்த வரங்களாகும். சமஸ்தமான லோக பாலர்களுடைய ஐசுவரியத்தையும், தபசு-

யோகம் இவைகளினுலே மகாப் பிரபாவத்தையுடைய பேர்கள் ஒருக்காலும் நசியாமலிருக்கிற அணிமாதி ஐசுவரியத்தையும் உமக்கிருப்பதைப்போல எனக்குக் கொடுக்கக் கடவீரென்று, இரணிய கசிபுவானவன் ஸ்தோத்திரம் பண்ணினுன்.



## நாலாவது அத்தியாயம்



*இரணியகசிபுவானவன் வரங்களைப் பெற்று சமஸ்தலோக பாலர்களையும் ஜயித்து விஷ்ணுவினிடத்திலே கொண்ட துவேஷத்தினுலே அந்த லோக பாலர்களைப் பீடிதமை சொல்லப்படுகின்றது.*

### நாரதர் வாக்கியம்

வாராய் தர்மபுத்திரனே! பிரமாவானவர் இந்தப்பிரகாரம் இரணிய கசிபுவினுலே வரிக்கப்பட்டவராய், அவனுடைய தபசினுலே சந்தோஷத்தை யடைந்து ஒருவராலும் அடையக்கூடாமலிருக்கிற அந்த வரங்களை அவனுக்குக் கொடுத்து, அவனைப் பார்த்து சொல்லுகிருர் :

குழந்தாய்! நீ என்னிடத்தில் கேட்கும் இந்த வரங்கள் புருஷர்களால் அடையத்தக்கதன்று. ஆனுலும் அன்னியர்களுக்கு மிகவும் துர்லபமான இந்த வரங்களைக் கொடுத்தேனென்று சொல்லி, பிரமாவானவர் அசுர சிரேஷ்டனுன இரணிய கசிபுவினுலே பூஜிக்கப்பட்டவராய் தம்முடைய லோகத்தை யடைந்தார்.

இந்தப்பிரகாரம் பிரமதேவரிடத்தில் நின்றும் சகல வரங்களையும் பெற்றிருக்கிற அந்த இரணியகசிபுவானவன் சுவர்ணம்போலொத்த சரீரத்தை யுடையவனுய், பிராதாவினுடைய வதத்தை நினைத்துக்கொண்டு பகவானிடத்தில் துவேஷத்தைப் பண்ணினுன். பிற்பாடு இந்த இரணியகசிபுவானவன் சமஸ்தமான திக்குகளையும், மூன்று லோகங்களையும் ஜயித்து, தேவர்கள்-அசுரர்கள்-மனுஷியர்கள்-கந்தருவர்கள் முதலிய பலரையும் ஜயித்து, சுவாதீனம் பண்ணிக்கொண்டு சமஸ்தத்தையுஞ் ஜயித்தவனுய் லோகபாலர்களுடைய ஸ்தானங்களை அவர்களுடைய தேஜசுடனேகூட அபகரித்தான். சகல சம்பிரங்களுடன் கூடிய சுவர்க்கத்தை ஆக்கிரமித்தவனுய் விசுவகர்மாவினுலே நிருமிக்கப்பட்ட

தாயும், திரிலோக சாம்பிராச்சிய லக்ஷ்மிக் கிருப்பிடமாயு மிருக்கிற சாக்ஷாத் தேவேந்திரனுடைய கிரகத்திலே வாசம் பண்ணிக்கொண்டிருந்தான். அந்த இந்திரனுடைய கிரகத்திலே பவழங்களினாலே கட்டப்பட்ட படிகளை யுடையவைகளான மரகத மாணிக்கங்களினாலே யிழைக்கப்பட்ட பூமிகளும், ஸ்படிக மயங்களான சுவர்களும், விசித்திரமான மேற்கட்டு வஸ்திரங்களும், பதுமராக மயங்களான ஆசனங்களும், பால் நுரைக்குச் சமானமான முத்துமாலைகளினாலே அலங்கரிக்கப்பட்டதாயு மிருக்கிற சயனங்களும் இருந்தன. சோபனமான தந்தங்களையுடைய தேவதாஸ்திரீகள் காற்சிலம்புகளினாலே நாலுபக்கத்திலேயும் சப்திக்க ரத்தின மயமான பிரதேசங்களிலே சுந்தரமான தங்கள் முகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட மகேந்திர கிரகத்திலே மகா பலசாலியாயும், தைரியத்தை யுடையவனாயும், மிகவுந் தீவிரமான ஆக்கினையையுடையவனாயும், உலகங்களையெல்லாம் ஜயித்து ஏகராஜாவாயுமிருக்கிற அந்த இரணியகசிபுவானவன் தன்னாலே தாபத்தை அடைவிக்கப்பட்ட தேவர்கள் முதலான சமஸ்தமான பேராலேயும், வணங்கப்பட்ட பாதயுகளத்தை யுடையவனாய் விகசித்துக் கொண்டிருந்தான்.

தருமராஜனே! மிகவும் பரிமளித்துக்கொண்டிருக்கிற மத்திய பானத்தினாலே மதித்தவனாயும், சுழன்று கொண்டும் சிவந்துமிருக்கிற நேத்திரங்களை யுடையவனாயும், தபோயோக பலங்களினாலே உண்டான சாமார்த்தியங்களுக் கிருப்பிடமான அந்த இரணியகசிபுவை திரிமூர்த்திகளைத் தவிர சமஸ்தலோக பாலர்களும் * உலுப்பைகளுடனேகூடின அஸ்தங்களை யுடையவர்களாய் உபாசித்துக்கொண்டிருந்தார்கள். பாண்டுபுத்திரனே! பராக்கிரமத்தினாலே மகேந்திரனுடைய சிங்காசனத்திலேறியிருக்கிற இரணியகசிபுவை விசுவாவசு துப்புரு நாரதர்இவர்கள் முதலான கந்தருவர்கள்-சித்தர்கள்-ரிஷிகள்-வித்தியாதரர்கள்-அப்சரசுக்கள் இவர்கள் அடிக்கடி கானத்துடனே மிகவும் ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டு மிருந்தார்கள். அந்த இரணியகசிபுவானவன் தானே பிராமணாதி நாலு வருணங்களாலும் பிரமசரியாதி ஆசிரமத்தை யுடையவர்களாலும், வெகு தக்ஷிணைகளை யுடையதான எக்கியங்களினாலும், ஆராதிக்கப்பட்டவனாய், தன்னுடைய தேஜசினாலே அவிர்பாகங்களைக் கிரகித்துக் கொண்டிருந்தான்.

---

* உலுப்பை—உயர்ந்தோர் தயவை சம்பாதிப்பதற்காக கொண்டுவரும்காணிக்கை'

அப்போது அந்த இரணியகசிபுவுக்கு பூமியானது உழுது பயிரிடாமலிருக்கும்போதும், சகலமான பயிர்களையும் உடையதாயிருந்தது. சுவர்க்கமோவென்றால் அவனுக்கு வேண்டிய இஷ்டங்களைக் கொடுத்துக்கொண்டிருந்தது. ஆகாசமானது நானாவித ஆச்சரியங்களுக்கும் இருப்பிடமா யிருந்தது. ஏழு சமுத்திரங்களும் சமுத்திர பத்தினிகளான நதிகளும் அலைகளால் இரத்தின சமூகங்களைக் கொடுத்தன. பர்வதங்களானவை தாழ்வரையில் கிரீடாயோக்கியமான ஸ்தானங்களைத் தரித்தன. விருக்ஷங்களோ சகல ருதுக் களிலும் உண்டாகும் பல-புஷ்பங்களைத் தரித்தன. அந்த இரணியகசிபுவானவன் தான் ஒருவனே சமஸ்த லோகபாலர்களுடைய வெவ்வேறான தகன சோஷணாதி குணங்களைத் தரித்தான். இந்தப்பிரகாரம் ஜயிக்கப்பட்ட சகல திக்குகளை யுடையவனும், தானே ஏக ராஜா வாயு மிருக்கிற இரணியகசிபுவானவன் இந்திரியப் பரவ சனாய் இஷ்டமான விஷயங்களை அதிகமாக அனுபவித் துக்கொண்டு திருப்தியில்லாமலும் ஐஸ்வரிய மத்தனும் கர்வியாயும் சாஸ்திரத்தை அதிக்கிரமித்து நடவாநின்றும், பிரமநிஷ்டர்களுடைய சாபத்தை யடைந்தவனுமிருக்கிற இரணியகசிபு இவ்விதம் அநேக வருஷங்கள் ஏகச்சக்ராதி பத்யம் பூண்டு வந்தான். அந்த இரணியகசிபுவினுடைய உக்கிரமான ஆக்கினைக்குப் பயப்பட்டவர்களாய் உலகபாலர்க ளுடன் கூடின சமஸ்த உலகங்களும் வேறே ரக்ஷகனை அடையாதவர்களாய், அச்சுதனையே சரணமாக அடைந்து, சாந்தர்களாயும் நிர்மலர்களாயு மிருக்கிற சந்நியாசிகள் யாதொரு வைகுண்டத்தை யடைந்து திரும்பவும் பிறக்கிற தில்லையோ, அப்படிப்பட்ட வைகுண்டத்துக்கு பிரணும மென்று தேவர்கள்முதலிய சமஸ்தமானபேரும் திடசித்தர்க ளாய் பரிசுத்தமான மனதுடனே கூடினவர்களாய் பகவா னிடத்திலே வைக்கப்பட்ட புத்தியையுடையவர்களாய் வாய்வு போஜனம் பண்ணிக்கொண்டு நித்திரையை விட்டவர்களாய் ரிஷிகேசனைத் தியான பூர்வமாக ஸ்தோத்திரம் பண்ணி னார்கள். கியானசத்தி முதலான குணங்களையுடையவராயும், மகாபுருஷனும், மகாத்மாவாயும் விசுத்தக்கியானனந்த அனுபவ சந்தோஷத்தை யுடையவராயு மிருக்கிற சுவா மிக்குப் பிரணுமமென்றும், மந்திரத்தினால் தியானம் பண்ணு கின்ற அந்த தேவதைகள் முதலான பேருக்கு மேக கர்ச்சனை போல் திக்குகளை யெல்லாம் சப்தியா நின்றும் சாதுக்களுக் கெல்லாம் அபயாஸ்தங் கொடுத்துக்கொண்டுமிருக்கிற ஒரு அசரீரிவாக்கானது உண்டாயிற்று.

வாருங்கள் தேவ சிரேஷ்டர்களே! பயப்படாதீர்கள். உங்களெல்லாருக்கும் க்ஷேமம் உண்டாகக்கடவது. நம் முடைய சந்தரிசனமுண்டாவது சமஸ்த பிராணிகளுக்கும் சகல சிரேயசுக்களையும் அடைவிக்கும் பொருட்டல்லவா? அந்த ராக்ஷச அதமனுன இரணிய கசிபுவினுடைய துர்நடத்தையானது நம்மாலே அறியப்பட்டிருக்கிறது. அதற்குச் சாந்தி பண்ணுகிறேன். காலத்தைப் பார்த்துக் கொண்டிருங்கள். எப்போது அந்த அசுரனுக்கு வேதங்களிடத்திலும், தேவதைகளிடத்திலும், சத்புருஷர்களிடத்திலும், தர்மத்திலும், என்னிடத்திலும் மிகவும் துவேஷ முண்டாச்சுதோ அப்போதே அவன் சீக்கிரமாக நசித்தற்குரியவனுயினுன். நிர்விசாரனுயும், ராகத்வேஷாதி சூனியனுயும், மகாத்மாவாயும், தனது புத்திரனுயுமிருக்கிற பிரகலாதனுக்கு எப்போது துரோகம் பண்ணுகிருனே, அப்போது பிரமாவினுடைய வரங்களினுலே பலவானுயிருந்தாலும் அந்த இரணியகசிபுவைக் கொல்லப்போகிறேனென்று உலககுருவான ஹரியினுலே சொல்லப்பட்டவர்களாய் தேவதைகளானவர்கள் அந்தப் பகவானைப் பிரணுமஞ்செய்து பயத்தை விட்டவர்களாய் திரும்பி வந்தார்கள். அதற்குப் பிற்பாடு அந்த தயித்தியபதியான இரணிய கசிபுவுக்கு மகா அற்புதர்களான நாலுபிள்ளைகள் பிறந்தார்கள்.

அவர்களுக்குள்ளே பிரகலாதனன் குணத்தினுலே சிரேஷ்டனுயிருந்தான். அதெப்படியென்றுல் பெரியவர்களை உபாசிக்கிறவனுயும், பிராமணர்களை தெய்வமாக வுடையவனுயும், சீலவானுயும், சத்தியசந்தனுயும், ஜிதேந்திரியனுயும், சர்வ பூதங்களுக்கும் ஆத்மாவைப்போல் ஏகனுயும், பிரிய சுகுர்தாயும், சமனுயும், தாசனைப்போல பெரியோர்களுடைய பாதாரவிந்தத்திலே வணங்கினவனுயும், பிதாவைப்போல் தீனவாற்சல்லியத்தை யுடையவனுயும், பிராதாவைப்போல சமானர்களிடத்திலே சினேகத்தை யுடையவனுயும், பெரியவாளிடங்களிலே ஈஸ்வரபாவனை யுடையவனுயும், வித்தை அர்த்தம் ஜன்மம் ரூபம் இவைகளினுலே பூரணனுயும், அபிமானம் கர்வம் இவைகளினுலே வர்சிக்கப்பட்டவனுயும், விசனங்களிலே பயப்படாமலிருக்கிற மனதை யுடையவனுயும், கேழ்க்கப்பட்டும் பார்க்கப்பட்டுமிருக்கிற விஷயங்களிலே இச்சையில்லாதவனுயும், சப்தாதி விஷயங்களிலே வஸ்துபுத்தி யில்லாதவனுயும், நிக்கிரகிக்கப்பட்ட இந்திரியப்பிராண - சரீரபுத்திகளை யுடையவனுயும் சர்வகாலமும் சாந்தமான காலத்தையுடையவனுயும், அசுரனு

யிருந்தும் அசுர பாவ மில்லாதவனுயும், இப்படிப்பட்ட குணங்களினுலே சர்வகாலமும் பிரகலாதனன் சிரேஷ்டனு யிருந்தான்.

அந்தப் பிரகலாதன் ஓரிடத்தில் பச்சை நிறத்தை யுடைய திருமாலினது கல்யாண குணங்களை பாவசப்பட்டு பாடுவான்; மற்ருேரிடத்தில் கரிய நிற உருவங்களை கடவுளது உருவமேயென நாடுவான்; ஒரு பக்கத்தில் திருத்துழாய்த் தளங்களைச் சூடிக்கொள்வான்; அன்பு முதிர்ச்சியினுலே ஆனந்தக் கண்ணீரை பொழிந்துக்கொண்டு வேருேரிடத்தில் ஆனந்தக்கூத்தாடுவான். மற்றும், பூமியிலும் ஆகாயத் திலும் மற்ற உலகத்திலும் பொருந்தி வாழும் உயிர்கள் யாவையும் குளிர்ச்சி பொருந்திய தாமரையில் தங்கிவாழும் உலகநாயகியான இலக்ஷிமி யடைந்திருக்கிற கண்ணபிரா னெனவே பார்க்கும்படியான தெய்வகாட்சியை யுடையவன். பிறர் தன்னைப் பைத்தியக்கார னெனப்பழிக்கவும், பலர் கள் குடித்த அறிவிலானென அசட்டைசெய்யவும், சிலர் மானுபி மானமிலாத முக்தன் எனப் போற்றவும், சுத்தமனதால் சிந்தித்தற்குரிய மாயவனது பக்தனென்று வேறு சிலர் புகழவும், தான் பலவிதமாக நடந்துகொள்வான் பக்தவற் சலனது பக்திவயப்பட்ட பாலனுன பிரகலாதன்.

உணவு கொள்ளும்போதும், நடக்கும்போதும், ஓரிடத் தில் தங்கியிருக்கும்போதும், வேறு காரியம் இயற்றும் போதும், தீர்த்த மாடும் போதும், ஆண் - பெண்- அலியுமல் லாத அச்சுதனுடைய நாமங்களை பக்தி பாவசனுய்ப் பாடுவான்.

ஸ்ரீ இலக்குமிநாயகனே உண்மையான வஸ்துவென தத்துவ விசாரத்தால் துணியப்படுபவன் எனக் கூறு வான்; அஷ்டாக்ஷரங்களைக் குறித்து சுவையுள இரசம் அவனது நாவிலூறும்; முடிவில்லாத தபத்தால் சித்தி யடைந்தவர் இவனைவிட வேறு யாரிருக்கிருர்கள்? பிறரால் உபதேசிக்கப்படாமலே உண்மைப் பொருளை உணர்ந்துக் கொள்ளும் காதலனுன பிரகலாதனை மலர்மாலை யணிந்த இரணியாசுரன் பாடசாலையில் கல்வி கற்க வைத்தனன்.

வாரீர் தருமராஜனே! பகவானுன வாசுதேவனிடத் திலே அந்தப் பிரகலாதனுக்கு இயற்கையாக பக்தியுண்டாகி பாலிய லீலைகளை விட்டவனுய் மூடன்போல பகவானிடத் திலே மனதைச் சமர்ப்பித்திருக்கிற படியினுலே அவன்

ஜகத்தை இப்படிப் பட்டதென்று அறியாமலிருந்தான். போஜனம் பண்ணல், சயனித்துக்கொள்ளுதல், பானம் பண்ணுதல், வார்த்தையாடுதல் முதலிய காரியங்களில் சிறிதும் மனமிலாது, வைகுந்த நாதன்பால் செலுத்திய சிந்தையோடு கூடின புத்தியை யுடையவனாய் கோவிந்த குணானுபவத்திலே யுண்டான ஆனந்த வயத்தனாகி, நகைக்கிறதும் கானம் பண்ணுகிறதும் கண்டத்தைவிட்டு உரக்கக் கூப்பிடுகிறதும் லச்சை யில்லாமல் நிர்த்தனம் பண்ணுகிறதும் அந்தக் கிருஷ்ணனுடைய தியானத்தோடு கூடினவனாய் தன்மயனாயிருந்து அகிஞ்சனர்களான * பிரபன்னர்களுடைய சகவாசத்தினாலே அடையப்பட்ட புண்ணிய கீர்த்தியான பகவானுடைய பாதாரவிந்த சேவையினாலே ஆத்மாவுக்கு சுகத்தை விஸ்தரித்துக்கொண்டு, துஷ்டர்களுடைய சகவாசத்தினாலே துன்மார்க்கத்தை யடைந்த அன்னிய புருஷர்களுடைய மனதுக்கும் சாந்தியை யுண்டாக்கினான். ராஜனே! மகாத்மாவாகியும், மகா பாகவதனாயுமிருக்கிற அந்தப் பிரகலாதனிடத்திலே துவேஷம் பாராட்டி இரணிய கசிபுவானவன், அச்சிறுவனை பலவிதமாய் துன்பப்படுத்தினான் என்று சொல்லுகின்ற நாரத மகா முனியைப் பார்த்து தருமபுத்திரர் சொல்லுகின்றார்:

### தருமபுத்திரர் வாக்கியம்

தேவரிஷியே! நித்திய சாத்வீக விரதத்தை யுடையவரே! சாதுவாயிருக்கும் புத்திரனை பிரகல்ாதனை பிதாவான இரணியகசிபு எதற்காகத் துவேஷித்தானோ அதை உம்மிடத்தில் நின்றும் அறியவேணுமென்று இச்சிக்கிறேன். உலகத்திலே புத்திர வாற்சல்லியத்தை யுடையவர்களான பிதாக்கள் பிரதி கூலர்களான பிள்ளைகளைச் சிக்ஷிக்கிறது நிமித்தமாக வெறுத்துக் கொள்ளுவார்கள். சத்துருவைப் போல துவேஷிக்கமாட்டார்களே. அனுகூலர்களாயும் ராகத்துவேஷாதி சூனியர்களாயும், பிதாவையே தெய்வமாக வுடையவர்களாயு மிருக்கிற புத்திரர்களுக்குத் துரோகஞ் செய்ய மாட்டார்களென்று சொல்லவும் வேண்டுமோ.



* பிரபன்னர்கள்—பகவானை சரணடைந்தவர்கள்.

## ஐந்தாவது அத்தியாயம்

குருவினாலே வித்தையை விஷ்ணுவினுடைய ஸ்தோத்திரத்திலே
ஆசக்தியை யுடையவனான பிரகலாதனை இரணியகசிபு
சர்ப்ப முதலானவைகளினாலே கொல்ல முயற்சி
புரிந்தும் அம்முயற்சிகள் வீணானமை
சொல்லப்படுகின்றது.

### நாரதர் வாக்கியம்

தருமபுத்திரரே! அசுரர்களாலே பாவனனான சுக்கிராசாரியர் புரோகிதராக வரிக்கப்பட்டாரல்லவா? அந்தச் சுக்கிராசாரியருடைய சண்டன் அமர்க்கன் எனும் பிரசித்தர்களான இரண்டு புத்திரர்கள் தயித்திய ராஜனான இரணிய கசிபுவினுடைய கிரகத்திலேவாசம் பண்ணிக்கொண்டிருந்து, பிரகலாதனுக்கும் மற்றுமுள்ள சில அசுரபுத்திரர்களுக்கும் ராஜநீதிகளைப்போதித்து வந்தனர். இப்படி கல்விகற்று வருநாளில் ஓர் நாள் இரணிய கசிபுவானவன் தன் பிள்ளையான பிரகலாதனை மடியிலே வைத்துக்கொண்டு குழந்தாய் நீ யாதொன்றை நல்லமார்க்கமாய் கற்றுத்தேர்ந்தாயோ அதை சொல்லெனக் கேட்டனன். எனது அன்பு மிக்க தந்தையே! நான் எனது என்கிற அகங்கார-மமகாரங்களினாலே சர்வகாலமும் தொந்தமனதை யுடையவர்களான ஜீவர்களுக்கு ஆத்மநாசகரமான கிரகஸ்தாஸ்ரமமாகிற பாழுங்கிணற்றை விட்டுத் தபோவனத்தை யடைந்து ஸ்ரீ ஹரியைப் பஜனம் பண்ணவேணுமென்கிற இந்த மார்க்கத்தை நல்லதாகக் கற்றேன் என்றனன் பிரகலாதன்.

என்றிவ்விதம் பிரகலாதனுரைக்க எனது இளையசகோதரனுடைய உயிரைக் கொன்றவனுடைய பெயரைச் சொல்லுவித்தனர் சுக்கிராசாரியருடைய புத்திரர்கள். அவர்களது சாமர்த்தியம் நன்று நன்றென இரண்யன் சிரித்தனன்.

இப்படி இரணியன் கோபங்கொண்டு சிரித்ததைக்கண்டு சண்டன் அமர்க்கன் எனுமிருவரும் நடுநடுங்கி "பெருமானே! உமது புத்திரன் இவ்விதம் உரைத்தற்கு யாங்கள் சிறிதும் காரணரல்லோம். நாங்கள் ஒன்றைச் சொல்ல அவன் மற்றொன்றைச் சொல்லுகின்றனன். என் செய்வோம்" என்றனர்.

பாலனான இவனுக்கு ஒன்றைவிட்டு ஹரிவிஷயமான மற்றொன்றைச்சொல்ல எப்படித்தெரியும்? மறைந்து திரியும்

ஹ்ரி பக்தர்களது காரியமாகுமிது. இனி இவனை எவருட னும் கூடவிடாமல் நீங்களே நேராக நமது தர்மங்களைச் செய்கையாய்ப் போதியுங்கள் என்று சொல்லி இரணியகசிபு பிரகலாதனை மீண்டும் அனுப்பினன்.

வாராய் குழந்தாய் பிரகலாதனனே! உனக்கு நன்மை யுண்டாகக் கடவது. நாங்கள் சொல்லுகிறபடிக்குச்சொல்லு. வேறு விதமாகச் சொல்லாதே. இந்த விபரீத புத்தியானது உனக்குத் தானாக உண்டாயிற்றோ, அல்லது அன்னியரா லேற்பட்டதோ. வாராய் வம்சத்தைச் சந்தோஷிப்பியா நின்ற புத்திரனே! இதைக்கேட்க வேணுமென்று இச்சியா நின்றும் குருவாயுமிருக்கிற எங்களுக்குச் சொல்லக் கடவா யென்று கேட்கும் குரு புத்திரர்களைப் பார்த்துப் பிரகலாதனன் சொல்லுகிறான்:

கேளுங்கள் குருபுத்திரர்களே! எந்தப் பகவானுடைய மாயையினால் மோகிக்கப்பட்ட புத்தியை யுடையவர்களாய் நீங்கள் தன்னவனென்றும், பிரனென்றும் கொள்ளும் இப் பேத புத்தி பண்ணப்பட்டிருக்கிறதோ, அந்த பகவான் பொருட்டுப் பிரணாமம் பண்ணுகிறேன். அந்தப் பகவான் எப்போது அனுகூலமாகிறாரோ அப்போது புருஷர்களுக் குப் பசுபுத்தியைப்போல இவன்வேறு நான்வேறு என்கிற அசத்தான இந்தப் பேதப்புத்தியானது தள்ளப்பட்டுப் போகிறது. அறியக்கூடாத செயலையுடையவரான அந்தப் பரமாத்துமாவை தன்னவனென்றும், பிரத்தியானென்றும், விவேகசூனியர்கள் சொல்லுகிறார்கள். எந்தப்பர்மாத்ம விசா ரத்திலே வேதவாதிகளான பிரமாதிகளும் மோகிக்கிறார் களோ அந்தப்பரமாத்மாவே என்னுடைய புத்தியைப்பேதிக் கிறான். வாரும் பிராமணர்களே! அயக்காந்தத்தினிடத்தே எப்படி இருப்பானது தானே சுழலுமோ அப்படியே என்னு டைய மனதானது சக்கிரபாணியினுடைய சந்நிதானத்தில் சுயவிச்சையாகவே பேதிக்கிறதென்று மகாமதியினனான அந்தப் பிரகலாதனன் சொன்னான். அந்தத் தயித்திய குரு வானவன் கோபத்தையடைந்து தீனனாய் பிரகலாதனனைப் பார்த்து மிரட்டிச் சொல்லுகின்றான்:

அடா பிரம்பைக்கொண்டுவாடா! நமக்கு அபகீர்த்தி உண்டாக்குகிறவனாயும், குலநாசகனாயும், துற்புத்தியுடைய வனாயு மிருக்கிற இவனுக்குத் தண்டனையே செய்யத்தக்கது. அசுரகுலமாகிற சந்தன வனத்திலே பிரகலாதனாகிற விஷ விருக்ஷம் பிறந்தது. அந்தச் சந்தன வனத்தை வேரோடே

நாசம் பண்ணுகிற கோடாலியா யிருக்கிற விஷ்ணுவுக்கு இந்தப்பயல் கோடாலிக் காம்பு போலாகின்றா னென்று அந்தப் பிரகலாதனனே நாலுவிதமாக மிட்டித் தர்மார்த்த காமமோக்ஷங்களை விவரித்துச் சொல்லா நின்ற சாஸ்திரங் களைச் சொல்லி வைத்தான். பிற்பாடு அந்தக் குருவானவன் பிரகலாதனனைச் சாமபேத தான தண்டமென்கிற சதுர்வித வுபாயங்களை அறிந்தவனாக எண்ணி தாயாராலே ஸ்நானஞ் செய்வித்து அலங்கரிக்கப்பட்டிருக்கிற அவனை தயித்தியேந் திரனான இரணிய கசிபுவினுடைய சமீபத்திலே யழைத்துக் கொண்டுபோய்க் காண்பித்தான். அந்த இரணிய கசிபுவும் தன்னைப் பணிந்து நின்ற பாலகனைச் சந்தோஷத்துடனே ஆசீர்வதித்து கைகளினாலே தழுவிக் கட்டிக்கொண்டு பரம சவுக்கியத்தை யடைந்தான். வாரீர் தர்மபுத்திரரே! பிறகு அந்த பிரகலாதனனை மடியிலே எடுத்து வைத்துக்கொண்டு உச்சிமோந்து ஆநந்த பாஷ்பங்களினாலே அவனை நனைத்து மலர்ந்த முகத்தை யுடையவனாய்ச் சொல்லுகிறான்:

என தாருயிர்க் குழந்தாய் பிரகலாதனே! தீர்க்காயுளை யுடையவனே! நீ இதுவரையில் குருவினிடத்தில் நின்றும் கற்ற வித்தையில் சாரமா யிருக்கிற ஒன்றைச் சொல்லென்று கேட்டான்.

தந்தையான இரணியன் இங்ஙனம் வினவ, புத்திரனான பிரகலாதன் சொல்லுகிறான்: பகவானுடைய புண்ணிய சரித்திரங்களைச் சிரவணஞ் செய்து, சர்வத்துக்கும் காரண மான அவனுடைய நாமங்களை உச்சரித்து, தாமரைமலரி லுதித்த நான்முகக் கடவுளும் வணங்குகிற அவனுடைய அழகிய பாதங்களைத் தலையில் சூடி, ஸ்ரீ மகா லக்ஷ்மியை தன் மார்பகத்தே தரித்த அப்பகவானது கோயில்களைச் சூழ்ந்து, நல்ல மலர்களை அவனது பதங்களில் தூவி, இளம் வண்டுகள் மேல் விழுந்து மொய்க்கும் மெல்லிய அரும்புக ளானவை மலர்ந்து அவைகளினின்றும் பொழியப்பெற்ற தேனினையுடைய அழகிய துளவமாலையைத் தரித்த பகவானை நெஞ்சம் குழைந்து அறிதல் அல்லவா உண்மையைக் கூறு மிடத்து நன்றா யறிதலெனப்படுவது என்று சொல்ல, இரணியன் கடைக்கண் வழியாக செழுமையான அக்கினி சிந்தும்படி கண்கள் சிவந்து கோபங்கொண்டான்.

இரணிய கசிபுவானவன் கோபத்தினாலே உதடு துடிக் கக் குருபுத்திரனைப் பார்த்துச் சொல்லுகிறான்:

வீராய் பிராமணனே! உனக்கு துற்புத்தி யுண்டானதென்ன? சத்துருவான விஷ்ணுபக்ஷத்தை ஆஸ்ரயித்தவனும் அசத்தாயு மிருக்கிற நீ என்னையும் அனுதரவுபண்ணி நம்முடைய பிள்ளையானவனுக்கும் அசாரமாயிருக்கிற அர்த்தத்தை அத்தியயனம் பண்ணிவைத்தாய். உலகத்திலே அசாதுக்களானவர்கள் துஷ்டமான சிநேகத்தை யுடையவர்களாயும் கபடவேஷத்தை யுடையவர்களாயு மிருப்பார்களல்லவா? அவர்களுக்குத் துவேஷமானது காலாந்தரத்திலே பிரமஹத்தியாதி பாபங்களைப் பண்ணினபேர்களுக்கு க்ஷயரோக முதலான வியாதி யுண்டாவது போல உண்டாகின்றதென்று சொல்லுகின்ற இரணியகசிபுவைப் பார்த்து குருபுத்திரன் சொல்லுகிறான்:

இறைவனே! உன்னுடைய புத்திரன் நான் சொல்லி வைத்ததையுஞ் சொல்லவில்லை, அய்லார் சொல்லியதையுஞ் சொல்லவில்லை, இவனுக்கு இந்தக் கியானம் சுபாவசித்தமாக விருக்கிறது. இதற்காக எம்மீது வீணாக கோபம் செய்துக் கொண்டால் என் செய்வதென்று கூற இரணியாசுரன் மறுபடியும் பிள்ளையைப் பார்த்து சொல்லுகின்றான் :

அடா சிறுவனே! உனக்கிந்த துஷ்டபுத்தியானது குருமுகமாக வுண்டாகாமல் பின்னை யாரிடத்தில் நின்றும் உண்டாயிற்றென்று கேட்கின்ற இரணிய கசிபுவைப்பார்த்துப் பிரகலாதனன் சொல்லுகின்றான் :

பிரகலாதன் வாக்கியம்

கிரகத்திலே செய்யவேண்டிய சங்கற்பத்தை யுடையவர்களாயும். ஒருக்காலும் விஷயானுபவத்தினாலே திருப்தி யடையாத இந்திரியங்களினால் சங்காரத்திலே அடையாநின்றும் அந்தச் சங்காரத்தில் அடிக்கடி அனுபவித்ததையே அனுபவித்துக்கொண்டு மிருக்கிற பேர்களுக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலே புத்தியானது தங்களாலேயும் குருவினாலேயும் உண்டாகிறதில்லை. துஷ்டசித்தர்களாயும் சப்தாதி விஷயங்களிலே அபிமானத்தை யுடையவர்களாயு மிருக்கிற பேர்கள் ஈசனுடைய வாக்குரூபமான மகத்தான கயிற்றினாலே கட்டப்பட்ட பேர்களாய் குருடராலே அழைத்துக்கொண்டு போகப்பட்ட குருடரானவர்கள் எப்படி மார்க்கத்தை அறியமாட்டார்களோ, அப்படிப் பிரபன்னர்களாலே அடையத்தக்கவரான ஸ்ரீ விஷ்ணுவை அறியமாட்டார்கள். இப்படிப்பட்ட பேர்களுடைய புத்தியானது மகானுபாவர்களாயும், நிஷ்காமர்களாயு மிருக்கிற பாகவதர்களுடைய பாதரஜஸினாலே எந்த

யட்டுக்கும் அபிஷேகத்தைக் கோருப லிருக்கிறதோ அந்த யட்டுக்கும் உருக்கிரயனுன ஸ்ரீமந் நாராயணனுடைய பாதாரவிந்தத்தை யடையயாட்டாதென்று சொல்லி மௌன த்தை யடையா நின்ற புத்திரனை இரணிய கசிபுவானவன் ரோஷத்தினுலே மூடனைதை யுடையவனுய் தன் மடியிலே நின்றும் பூமியிலே தள்ளிவிட்டுப் பின்னும் சகிக்கக்கூடாத கோபத்தையும் சிவந்த கண்களையும் உடையவனுய் சொல்லு கின்றுன் :

### இரணிய கசிபு வாக்கியம்

வாருங்கள் அசுரர்களே! இவனைச் சீக்கிரமாகக் கொன்று போடுங்கள். இல்லாவிட்டால் இவனை தேசத்தை விட்டுத் துரத்திவிடுங்கள். இந்த பிரகலாதனுனவன் மித்திரர்களையும் சுவஜனங்களையும் விட்டுவிட்டுத் தன் னுடைய சிறிய தகப்பனைக் கொன்ற விஷ்ணுவினுடைய பாதங்களைத் தாசன் போலப் பூஜிக்கிறுன். ஆகையினுலே இவனை என்னுடைய பிராதாவைக் கொன்றவன் ஆவன்; ஐந்துவயதுள்ள இந்தப் பிரகலாதனுனவன் விடக்கூடாம லிருக்கிற மாதா பிதாக்களுடைய சிநேகத்தையும் விட்டு விட்டான். அப்படிப்பட்ட துஷ்டனுயிருக்கிறவன் அந்த விஷ்ணுவுக்குத் தான் பிரீதிவரும்படியாய் எந்த நன்மையைச் செய்யப்போகிறுன். சத்துருவானுலும் அவிழ்தம்போல இதத்தைச் செய்தானேயாகில் அவனே புத்திரனென்று அறியவேண்டும். தன் சரீரத்திலே பிறந்த பிள்ளையானுலும் ரோகம்போலப் பிரதிகூலத்தைச் செய்தானேயாகில் அவனை சத்துருவென்றறிய வேண்டும். சரீரத்திலே யாதொரு அவயவம் தேகத்துக்கு உபத்திரவகாரியா யிருக்கிறதோ அந்த அவயவமானது சேதித்துப் போடத்தக்கதல்லவா? அந்த அங்கத்தைச் சேதித்துப் போட்டதினுலே மற்ற அங்கங்கள் சுகமாக ஜீவிக்குமல்லவா? ஆகையினுலே மித்திரன்போல வேஷதாரியாகவும் சத்துருவாயுமிருக்கிற இந்தப் பிரகலாதனைப் போஜனம்-சயனம்-ஆசனம் இவை களிலே விஷப்பிரயோக முதலான சமஸ்த உபாயங்களி னுலும் கொல்லுங்களென்று இரணிய கசிபுவினுலே ஆக்கியாபிக்கப்பட்டவர்களாய், சூலபாணிகளாயும், தீக்ஷண மான தந்தங்களையுடையவர்களாயும், பயங்கரமான முகத்தை யுடையவர்களாயும், தாம்பரவர்ணமான தாடி தலைமயிர்களை யுடையவர்களாயு மிருக்கிற அந்த அசுரர்கள் பயங்கரமான அட்டகாசத்தைப் பண்ணினவர்களாய் வெட்டு குத்தென்று சொல்லிக்கொண்டு அங்கே யிராநின்ற பிரகலாதனனைச்

சூலங்க்ளினலே குத்தினர்கள். அப்போது சர்வாந்திரியாமியாயும், கியானசக்தி முதலான குணங்களை யுடையவராயும், பரபிரமமாயுமிருக்கிற ஸ்ரீமந் நாராயணனிடத்தில் வைக்கப் பட்ட மனதையுடையவனை பிரகலாதனிடத்திலே அந்த அசுரர்களுடைய செயல்களெல்லாம் தேவதாபக்தியில்லாதவனுடைய சத்கர்மங்களைப் போல வியர்த்தமாய் விட்டன.

தர்மநந்தனனே! அசுரர்கள் அவனைக் கொல்லவேணுமென்று எத்தனப்பட்ட அந்தப் பிரயாசம் வியர்த்தமாய்ப் போவதைக் கண்டு தயித்தியாதிபதியான இரணியகசிபுவானவன் சங்கையுடையவனாய் நிர்பந்தத்துடன் அவனைக்கொல்ல பலவித உபாயங்களைச் செய்தான்.

பிரம்ம - விஷ்ணு - ருத்திரன் எனும் முக்கடவுளராகி சிருஷ்டி - ஸ்திதி - சம்மாரம் எனும் முத்தொழில்களை இயற்றும் புருஷோத்தமனது சிவந்த பாத தாமரைகளை தனது சிரத்திலே அணியப்பெற்ற இளவரச குமாரனை பிரகலாதனது மார்பில் கொலைஞர்களெறிந்த வெற்றியுடைய வேலாயுதமானது புஷ்பத்தைப் போல நுட்பமாக மோதியது.

கொடிய கோபமுடைய வன்மையிற் சிறந்த சிவந்த வேலாயுதத்தை யுடைய போர்வீரர்கள் பிரகலாதன் மீது பிரயோகித்த அக்கினியயமான ஆயுதங்களியாவும் பிரயோஜனமிலாது போனதைக்கண்டு, இரணியன் ஊழித்தீயெனச் சீற்றங்கொண்டு விஷநாகங்களையும் அஷ்ட கஜங்களையும் கொண்டுவந்து, அவைகளால் அவனது உயிரை வதையுங்களென கூறினன்.

வாசுகியெனும் சர்ப்ப அரசனை அதன் சிரத்திலுள்ள மணியானது பிதுங்கி வெளிவரும்படி கடைதற்குரிய நாணாகக் கொண்டு அமுத முண்டாகும்படி திருப்பாற்கடலைக் கடைந்த மேகநிறத்தை யுடைய பெருமானது பாதங்களிடத்தே அன்பு பூண்ட பிரகலாதனைக் கொல்லும்பொருட்டு கடுமையான கோபங்கொண்டு கவ்வுகின்ற அஷ்ட நாகங்களின் வாய்களினின்றும் அமுதமே பெருகியது.

பிறகு இரணியகசிபு அஷ்டகஜங்களை வாவழைத்து அச்சிறுவன் மீது ஏவ. அவைகள் மகாவேகத்துடன் அவன்மீது பாய, அவைகளுடைய வைரமுள்ள நீண்ட தந்தங்கள் முறிந்துவிட்டன. அதுவும் பயனிலாதொழியவே, அவனை பெருமலைச் சிகரத்திலேற்றி கால்களையுங் கைகளையுங்

கட்டி உருட்டி விட்டனர். பிரகலாதன் மலர் படுக்கையில் புரளுவதுபோல புரண்டு மலையினடி வாரத்தை யடைந்தான். பிறகு பெரும்பாறையில் அச்சிறுவனைப் பிணைத்துக் கட்டி கப்பலிலேற்றி நடுசமுத்திரத்தில் ஆழ்த்தினார்கள். மாயப் பிறவியின் மயக்கமறுத்து மாயுமனிதர்க்கு ஆயன் அருள் வழிகாட்டும் அரசிளங்குமரன், அப்பெரும்பாறையை ஓர் தெப்பமாகக் கொண்டு கரையை யடைந்தான்.

இப்படி பலவிதத்தாலும் பிரகலாதன் மரணமடையாமல் போகவே இரணியனது மனதில் பல விசாரங்கள் குடி கொண்டு அவனை வருத்தலாயின. இனியேது; இவனைக் கொல்ல எவராலும் முடியாது போலிருக்கிறதே. இவ்வுலகத்தில் எதையும் எளிதில் வெல்லக் கூடிய வெனக்கு இச்சிறுவனை வெல்லுதல் கூடாத காரியமாயிற்றே. ஏது, ஒருவேளை நமக்கு இவனே நமனாய் முடிவானோ என்னவோ என்றிவ்வண்ணம் வருந்தி நினைந்து கொண்டிராநின்ற இரணியாசுரனைப் பார்த்து சுக்கிரனுடைய புத்திரர்களான சண்டன் அமர்க்கன் எனுமிருவரும் ஏகாந்தத்தில் சொல்லுகின்றார்கள். அசகாயரான உம்மால் புருவங்களுடைய நெறிப்பினால் பயப்படாநின்ற சமஸ்த லோகபாலர்களை யுடையதான இந்த மூன்றுலகமும் ஜயிக்கப்பட்டது. அப்படிப்பட்ட உமக்கு விசனப்படத்தக்க தொன்றுமில்லை. சுக்கிராசாரியார் வருகிறபரியந்தம் இந்தப் பிள்ளையானவன் பயப்பட்டு ஓடிப்போகாமலிருக்கும்படி கயிறுகளால் கட்டிவைப்பது நல்லதென்று சொன்னதைக்கேட்டு, அங்கீகரித்து அவர்களைப் பார்த்துக் குருபுத்திரர்களே! நீங்கள் இவனுக்கு ராஜதர்மங்களையும், கிரகஸ்த தர்மங்களையும், உபதேசியுங்களென்று சொன்னான். பிற்பாடு அந்தக் குரு புத்திரர்கள் மிகவும் வினயத்துடனேகூடின அந்தப் பிரகலாதனுக்குத் தர்மார்த்த காமங்களை வரிசையாக மிகவும் உபதேசித்தார்கள்.

குருக்களினாலே தனக்கு உபதேசிக்கப்பட்ட அந்த தர்மார்த்தகாமங்களை சாரமாக எண்ணாமல் தன்னோடு சமான வயதை யுடையவர்களாயும், விளையாட வேண்டுமென்கிற இச்சையையுடையவர்களாயுமிருக்கிற பாலர்களாலே அழைக்கப்பட்டு மகா புத்திமானாயும் அவர்களுடைய ஜனன மரணங்களை அறிந்தவனாயுமிருக்கிற அந்தப் பிரகலாதன் கிருபையினாலே அந்த பாலர்களை அழைத்து பிரிய வசனங்களினாலே அவர்களிடத்திலே சிரித்துக்கொண்டே இதோபதேசம் பண்ணுவான். அவர்களெல்லாம் அவனிடத்தில்

கவுமாரத்திலே விளையாடுகிற சாமக்கிரிகைகளை யெல்லாம் விட்டுவிட்டு விஷயப் பிரவணனான குருபுத்திரரால் சொல்லப்பட்ட வசனங்களினால் தூஷிக்கப்படாத புத்தியை யுடையவர்களாய் அந்தப் பிரகலாதனிடத்திலேயே வைக்கப்பட்ட இருதயத்தையும், நேத்திரங்களையும் உடையவர்களாய், அந்தப் பிரகலாதனை அனுசரித்துக் கொண்டிருந்தார்கள். வாராய்! ராஜேந்திரனே! மகாதயாளுவாயும், மகாவாச்சல்லிய முடையவனும், பாகவதனுயு மிருக்கிற அந்தப் பிரகலாதனானவன் அந்த பிள்ளைகளைப் பார்த்து சொல்லத் தொடங்கினான்.



## ஆறாவது அத்தியாயம்



*பிரகலாதன் பாடசாலைச் சிறுவர்களுக்கு இதோபதேசம் செய்தமை சொல்லப்படுகிறது.*

### பிரகலாதனன் வாக்கியம்

வாருங்கள் பிள்ளைகளே! இந்த லோகத்திலே புத்திமானானவன் இளவயதிலே பாகவத தர்மங்களைப் பண்ணக்கடவன். மனுஷிய ஜன்மம் கிடைக்கத்தக்கதன்று. புருஷார்த்த சாதனமான ஜன்மம் கிடைத்தபோதைக்கும் அனித்தியமாயிருக்கும். ஆகையினால் சர்வாந்தரியாமியான விஷ்ணுவானவர் சர்வபூதங்களுக்கும் பிரியசுகிர்தாகின்றபடியால், புருஷனுக்கு அந்த விஷ்ணுவினுடைய பாதசேவையே போக்கியமாயிருக்கின்றது. வாருங்கள் தயித்திய குமாரர்களே! தேகசம்பந்தத்தினாலே இந்திரிய சம்பந்த சுகமானது பசுவாதி பிராணிகளிலேயும், அதிருஷ்ட வசத்தினாலே யுண்டாகின்றது. புருஷனானவன் தனது சரீரபலம் விபத்தையடையாமல் பூரணமாயிருக்கிற வரைக்கும் தனது க்ஷேமத்தின் பொருட்டு முயற்சி புரியக்கடவன். புருஷனுக்குப் பூரணமான ஆயுளாவது நூறு வருஷம் இந்தப் புருஷனானவன் இராத்திரியிலே மகா நித்திரையை யடைந்தவனாய் சயனித்துக் கொண்டிருக்கிறபடியால், இந்திரிய ஜயமில்லாத அந்தப் புருஷனுக்குப் பாதி வயதானது வியர்த்தமாகப் போகிறது. மூடனாய் பாலிய கவுமாரத்திலே லீலை பண்ணிக் கொண்டிருப்பதில் இருபதுவயது போகிறது. வார்த்திகத்தினாலே பலவீனனாகிற அவன் இருபதுவயது போக்கடிக்கிறான். மிகுந்த வயதெல்லாம் கிரகங்களிலே ஆசக்தனாயும்,

பாம புருஷார்த்தத்தைச் சிந்தியாதவனுயுமிருக்கிற அவனுக்குப் பரிக்கக்கூடாமலும் துக்கரூபமாயுமிருக்கிற காமத்தினலேயும் பலவாருன மோகத்தினலேயும் போகிறது. கிரகங்களிலே ஆசக்தனுய் இருக்கிற எந்தப் புருஷனும் திடமான பாரியா புத்திராதி சினேகபாசங்களினலே கட்டப்பட்டும் இந்திரிய ஜயமில்லாதவனுயுமிருக்கிற தன்னை விடுவித்துக் கொள்ளுகிறதற்குச் சமர்த்தனுகமாட்டான். பிராணனைக் காட்டிலும் யாதொரு அர்த்தம் இஷ்டமோ! அந்த அர்த்தத்தைக் கள்ளர் முதலியவர்கள் மிகவும் பிரீதிவிஷயங்களான பிராணன்களுக்கு ஹானிவந்தாலும் வரட்டுமென்று ஒப்புக்கொண்டு சம்பாதிக்கிருர்கள்.

அப்படிப்பட்ட பொருளில் ஆசையை எவன்தான் விடமாட்டுவன் தன் இஷ்டபாரியினுடைய ரகசியமான சங்கத்தையும், மனதைக்கவரும் இதமான அவளது வார்த்தைகளையும், சினேகிதர்களுடைய சகவாசத்தையும், பிள்ளைகளுடைய மழலைச்சொற்களையும், மற்ற பந்து வர்க்கங்களையும், இல்லம் காணி பசு முதலிய சம்பத்துகளையும் நினைத்து, இவைகளை எப்படி விட்டுவிடுகிறதென்று ஆசையினல் கர்மங்களைச் செய்துகொண்டு, திருப்தியடையாமலிருக்கிற காமங்களை யுடையவனுய், சிசுனம்-உபஸ்தம்-நாவு இவைகளிலே யுண்டாகாநின்ற சுகத்தையே அதிகமாக எண்ணிக்கொண்டு கரையில்லாத மோகத்தை யுடையவனுயிருக்கிற புருஷனவன் எப்படி தான் சம்சார சாகரத்தை தாண்டுவான் ? குடும்ப போஷணத்தின் பொருட்டாக நசியாநின்ற தன்னுடைய ஆயுளையும், புருஷார்த்தமான மோக்ஷத்தையும், அதற்குச் சாதனமாக விதிக்கப்பட்ட பக்தியையும், விஷயங்களிலே ஆசக்தனு யிருந்துகொண்டு அறியமாட்டாமலிருக்கிருன். சர்வகாலத்திலேயும், சர்வ தேசத்திலேயும், ஆத்தியாத்மீகம், ஆதிபவுதிகம், ஆதிதெய்வீக மென்கிற தாபத்திரையத்தினலே துக்கப்படும் மனதை யுடையவனு யிருந்தாலும், தன்னுடைய வியாபாரத்தில் விருப்பத்தை யுடையவனுய், அதிலே வெறுப்பை யடையாமலிருக்கிருன். அர்த்தங்களிலே நித்தியமாக ஆசையுடையதான மனதை யுடையவனுய் பரதிரவியத்தை அபகரிக்கிறவனுக்கு இகலோகத்திலும் பரலோகத்திலும் உண்டாயிருக்கிற தோஷங்களைப் பிரத்தியக்ஷமாய் சாஸ்திரங்களினு லறிந்திருந்தாலும், இந்திரியங்களை ஜயிக்க மாட்டாமல் விருத்தியை அடைகின்ற காமத்துடனே கூடினவனுய், குடும்பியா யிருக்கிற புருஷனவன் பிறர் பொருளை

அபேக்ஷிக்கிருன். வாருங்கள் அசுரகுமாரர்களே! புருஷனுனவன் இந்தப் பிரகாரம் அறிந்தவனுயிருந்தாலும், குடும்பத்தையே போஷித்துக்கொண்டு, ஆத்ம விசாரத்தின் பொருட்டு பிரவிர்த்தியாமலிருக்கிருன்.

எனது பிரிய நண்பர்களே! ஆகையினல் விஷயங்களிலேயே புத்தியை யுடையவர்களான தயித்தியர்களுடைய சங்கத்தைத் தூரத்திலே விட்டுவிட்டு, ஆதிதேவனுன நாராயணனேயே சரணமாக அடையுங்கள். அந்த நாராயணன் தானே முக்த சங்கங்களாலே இச்சிக்கப்படாநின்ற மோக்ஷமாக விருக்கிருர். அந்த அச்சுதன் சர்வபூதங்களுக்கும் ஆத்மாவாகையாலும், பரிபூரணராகையாலும், அவரை ஆஸிரயித்துச் சந்தோஷிப்பிக்கிறவனுக்கு மிகவும் பிரயாசமில்லை. உத்கிருஷ்ட நிகிருஷ்டர்களாயும் ஸ்தாவரமுதல் பிரமபரியந்த மிருக்கிற ஜீவாத்மாக்களிலேயும், பூதவிகாரங்களான கடபடாதிகளிலேயும், பஞ்சமகா பூதங்களிலேயும், சப்தாதி குணங்களிலேயும், குணகாமிய அவஸ்தாரூபமான பிரகிருதியிலேயும், மகதத்துவ முதலானதிலேயும், நிர்விகாராயும், கியானசக்திமுதலான குணங்களை யுடையவராயும், தன்னெடொத்த புருஷாந்தர சூனியராயும், சர்வபூதாந்திரியாமியாயும், சர்வோத் கிருஷ்டனுயுமிருக்கிற புருஷோத்தமரே பிரகிருதி சொரூபத்தினலேயும், சிவசொரூபத்தினலேயும் வியாப்பியராயும், வியாபகராயும், நாமரூபங்களால் சொல்லப்படுகிறவராயும், சுபாவத்தில் நாமரூபவிகல்ப சூனியராயும், கேவல அனுபவானந்த சொரூபராயும், குணமயமான மாயாசிருஷ்டியினல் மறைக்கப்பட்ட ஐஸ்வரியத்தை யுடையவாராயுமிருக்கிருர். ஆகையினல் பகவானுனவர் யாதொரு அன்பினல் சந்தோஷிப்பாரோ அப்படிப்பட்ட அன்பையும், சினேகத்தையும், சமஸ்த பிராணிகளிடத்திலேயும் வகித்து, அசுரபாவத்தை விட்டவர்களாய் வசித்திருங்கள். சர்வகாரணராயும், அநந்தராயுமிருக்கிற நாராயணனை சந்தோஷிப்பிக்கிற புருஷனுக்கு அடையக்கூடாத வஸ்து எதுதானிருக்கிறது? சத்துவாதிகுண மூலங்களாயும், எத்தனமில்லாமல் சித்தியா நின்றுமிருக்கிற தர்மார்த்தங்களினலே என்ன பிரயோசனம்? பகவானுடைய சாணாரவிந்தங்களிலேயிருக்கிற மதுவைப் பானம்பண்ணி அதினலே கானம்பண்ணுநின்ற, நமக்கு இச்சிக்கப்படாநின்றும் குணசூனியமாயுமிருக்கிற கைவல்ய மோக்ஷத்தினலேதான் என்ன பிரயோசனம்? தர்மார்த்த காமமும். ஆத்துமவித்தையும், நீதிசாஸ்திரமும், தர்க்கசாஸ்திரமும், நானுவிதமான சீவன

விர்த்தியும், வேதத்தினுடைய அர்த்தரூபமான இவைக ளெல்லாம் தனக்கு அந்தரியாமியான பரமபுருஷனுடைய பிரவர்த்திக்குச் சாதனமாகுமானால், அவைகளைச் சத்தியமாக கொள்ளலாம். அடையக்கூடாததாயும். நிர்த்துஷ்டமாயு மிருக்கிற எந்தக்கியானத்தை நரனைச் சகாவாகவுடைய நாரா யண மூர்த்தியான பகவானவர் பதரிகாசிரமத்திலே நாரதருக்கு உபதேசித்தாரோ, அந்தக்கியானந்தமானது பகவானுக்கு ஏகாந்தபக்தர்களாயும், அகிஞ்சனர்களாயும், அந்தப்பகவானுடைய பாதாரவிந்த தூளிகளிலலே முழுகியு மிருக்கிற ஆத்துமாவையுடையபேர்களுக்கும் உண்டாகிறது. சாஸ்திரக் கியானத்தோடும், யோகக்கியானத்தோடும் கூடிக் கொண்டிருக்கிற இந்தக் கியானமுஞ் சுத்தமான பாகவத தர்மமும், தேவதைகளாலே காணத் தக்கினவரான நாரத ரிடத்தில் நின்றும் முன்னே நம்மாலேகேட்டு அறியப்பட்ட தென்று சொல்லுகின்ற பிரகலாதனைப் பார்த்துத் தயித்திய புத்திரர்கள் சொல்லுகின்றார்கள்:

தைத்திய புத்திரர்கள் வாக்கியம்

பிரகலாதனனே! நாமெல்லோரும் நமது பாலியந் தொடங்கி இந்தக் குருபுத்திரானைத் தவிர வேறேகுருவை அறியோமே? பாலனாய் அந்தப்புறத்திலே இருக்கிறவனுக்கு மகா புருஷசங்கங் கிடைக்கமாட்டாதே. சவுமியனே எங்க ளிடத்தில் உண்மையான பிரீதியுண்டாயிருக்குமானால் எங்க ளுடைய இந்தச் சம்சயத்தைப் போக்கடிக்க வேணுமென்று தயித்திய புத்திரர்கள் சொன்னார்கள்.



## ஏழாவது அத்தியாயம்



*பிரகலாதன் தனது தாயார் கர்பத்திலிருந்தே நாரதருடைய ஞானோபதேசத்தைப் பெற்றமையை தைத்ய புத்திரர் களுக்குச் சொல்லப்படுகிறது.*

நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மபுத்திரமகாராஜனே! இந்தப் பிரகாரம் தயித்திய குமாரர்களாலே பிரசினம்பண்ணப்பட்ட பரம பாகவதனான பிரகலாதனன் சிறித்துக்கொண்டு நம்முடைய வசனத்தை நினைத்துக்கொண்டவனாய் அவர்களைக் குறித்துச் சொல்லுகின்றான்:

பிரகலாதன் வாக்கியம்

வாருங்கள் தயித்தியகுமாரர்களே! என்னுடைய தகப்பனுர் தவசின்பொருட்டு மந்தரபருவதத்தை யடைந்திருக்கையில், தெய்வாதீனமாக லோககண்டகனும், பாபியாயுமிருக்கிற இந்த இரணியகசிபுவானவன் தன்னுடைய பாபத்தினுலே தான் பக்ஷிக்கப்பட்டுப் போனுனென்று எண்ணி சந்தோஷத்தினுலே இந்திரன் முதலான தேவர்கள் அசுரர்களை எதிர்த்தார்கள். அதைப்பார்த்து, அசுரயூதபர்களெல்லாம் பயந்தவர்களாய் பாரியைப்புத்திரர்கள் உத்தம சினேகிதர்கள் கிரகங்கள் பசுமுதலான கிரகோபகரணங்கள் இவை யெல்லாவற்றையும் விட்டுவிட்டவர்களாய், தங்கள் பிராண னிடத்திலேயே மிகவும் ஆசையையும் வேகத்தையும் உடையவர்களாய் எல்லாரும் நாலுதிக்கிலும் ஓடிப்போய் விட்டார்கள். அந்த வேளையிலே ஜயசாலிகளான தேவதைகள் அசுர ராஜாவினுடைய பட்டணத்தைக் கொள்ளையிட்டார்கள். இந்திரனே வென்ருல் ராஜமகிஷியான என்னுடைய தாயாரைப் பிடித்துக் கொண்டு போனுன். இந்திரனுலே பிடித்துக்கொண்டு போகப்பட்டும் மிகவும் பயத்தினுலே நடுங்கிக் கதறிக்கொண்டுமிருக்கிற என்னுடைய தாயாரை அவ்விடத்திலே சுயவிச்சையாய் வராநின்ற தேவரிஷியான நாரதரானவர் மார்க்கத்திலே கண்டு தேவேந்திரனைப்பார்த்து சொல்லுகின்ருர்.

வாராய் சுரபதியே! நிரபராதியான இந்த ஸ்திரீயை நீ கொண்டுபோதல் அநியாயம். பதிவிரதையாயும் பரதாரமாயு மிருக்கிற இந்த ஸ்திரீயை விட்டுவிடு என இந்திரன் சொல்லுகின்ருன்:

வாரீர் மகாரிஷியே! இவளுடைய கர்ப்பத்திலே தேவசத்துருவான இரணியகசிபுவினுடைய சகிக்கக் கூடாததான மகாவீரியமானதிருக்கிறது. இந்த ஸ்திரீயானவள். அந்தக் கர்ப்பத்தைப் பிரசவிக்கிர பரியந்தம் என்னண்டையிருக்கட்டும், பிற்பாடு என்னுடைய பிரயோசனத்தை அடைந்தவனுய் இவளை விட்டு விடுகிறேனென்று சொல்லுகின்ற இந்திரனைப்பார்த்து நாரத மகாமுனிவர் சொல்லுகின்ருர்:

வாராய் இந்திரனே! இவளுடைய கர்ப்பத்திலேயிருக்கிற சிசுவானவன் ராகத்வேஷாதி சூனியனும், தன்னுடைய குணங்களினுலேயே மகானும், பாகவதோத்தமனும், மகாபலவானும், அனந்தனுடைய தாசனும் இருக்

கிருன். இவன் உன்னுலே மாணத்தை யடையப்போகிற தில்லை என்று சொல்ல, இந்திரனானவன் அந்தரிஷியி னுடைய வார்த்தையை வெகு சந்தோஷத்தோடு கேட்டு, அந்த ஸ்திரீயை விட்டுவிட்டு, அநந்தருடைய தாசனுன என்னுடைய பக்தியினுலே அவளைப் பிரதக்ஷணம்பண்ணி சொர்க்கத்தையடைந்தான். பிற்பாடு நாரத மகாரிஷியானவர் என்னுடைய தாயாரைத் தம்முடைய ஆசிரமத்திலே அழைத் துக்கொண்டுபோய் சமாதானம்பண்ணி அவளுடைய பர்த்தா வருகிற வரைக்கும் தனதாஸ்ரமத்திலேயே யிருக்கும்படி சொல்ல, அவருடைய வார்த்தையை ஒத்துக்கொண்டவளாய், என்னுடைய தாயானவள் அந்தரிஷியினுடைய சமீபத்திலே தமித்திய பதியான இரணியகசிபுவானவன் உக்கிரமான தபசைவிட்டு ஒழிந்துவருகிற மட்டுக்கும் நிற்பயமாய் வாசம் பண்ணி கொண்டிருந்தாள். பதிவிரதையாயும் கர்ப்பிணியாயு மிருக்கிற அவள் தன்னுடைய கர்ப்பத்தின் க்ஷேமத்தின் பொருட்டும் தனக்கு இச்சையானபோது பிரசவிக்கிறதின் பொருட்டும் பரமமான பக்தியோடு அந்த நாரத மகாரிஷிக்கு பணிவிடையை பண்ணிக்கொண்டிருந்தாள். மகாகிருபா சாலியாயும் சபர்த்தராயு மிருக்கிற அந்த நாரத மகாரிஷி யானவர் என்னை உத்தேசித்து அவளுக்குச் சோகநிவர்த்தி யின் பொருட்டுத் தர்மத்தினுடைய தத்துவமான பகவத் பக்திமார்க்கத்தையும், ஆத்மஞானத்தையும் உபதேசித்தார்.

பிறகு வெகுகாலமானதினுலேயும், ஸ்திரீ சுபாவத்தி னுலேயும், என்னுடைய தாயாருக்கு உபதேசமானது மறக் கப்பட்டதாய்விட்டது. அந்தரிஷியினுலே அனுக்கிரகிக்கப் பட்ட என்னை அந்தக்கியாபகமானது இப்போதும் விடா மலேயிருக்கிறது. என்னுடைய வார்த்தையை விசுவசித்தீர் களேயானுல், ஸ்திரீகள் பாலர்கள் இவர்களுக்கும் தேகாதி யிலே நானென்கிற புத்தியைப் போக்கடியாநின்ற இந்தக் கியானமும் சிரத்தையும் எப்படி எனக்கு உண்டாச்சுதோ, அப்படி உங்களுக்கும் உண்டாகும். பிறக்கிறது இருக்கிறது வளருகிறது ரூபாந்தரத்தை யடைகிறது இளைக்கிறது நசிக் கிறது என்னப்பட்ட இந்த ஆறுவிகாரங்களும் ஆத்மாவான வன் இருந்தாலே தேகத்தினுடைய தர்மங்களாக விருக் கின்றன. ஆத்மாவினுடைய தர்மங்களன்று, அதெப்படி யென்ருல் விருக்ஷமிருந்தால் பலபுஷ்பங்களுடைய ஆவிர்ப் பவமானது ஈஸ்வர சொரூபமான காலத்திலே காணப் படுவதுபோல, இந்த ஆறுவிகாரங்களும் தேகதாபமாகக் காணப்படுகின்றன. ஆத்மாவோவெனில் நாசமில்லாதவனு

யும், விகாரமில்லாதவனும், *சுத்தனும், ஒருவனும், தேகாதிகளை அறிந்தவனும், தேகாதிகளுக்கு ஆஸ்ரயனு யும், கிரியாசூனியனும், சுவயப்பிரகாசனும், ஜகத்காரண மாயும், சர்வத்திர பரிபூர்ணனும், ஒன்றோடேயும் சம்மந்த மில்லாதவனும், ஒன்றிஞலேயும் மறைக்கப்படாதவனுயு மிருக்கிறவன். விவேகத்தைக் கொடாநின்ற இந்தப் பன்னி ரண்டு லக்ஷணங்களிஞலேயும், ஆத்மாவைத் தேகாதிகளைக் காட்டிலும் வேறுபாடாக அறிந்து புருஷனுனவன் தேக முதலானவைகளில் மோகத்திஞலே உண்டாகா நின்ற நான் எனதென்கிற இந்த அசத்தான புத்தியை விட்டுவிடுவன். சொர்னமெடுக்கிற உபாயமறிந்த சொர்னக்காரனுனவன் க்ஷேத்திரங்களிலே சொர்ன தாதுக்களோடு கூடிக்கொண் டிருக்கிற கல்லுகளிலே ஊதியெடுக்கிறது முதலான உபாயங் களிஞலே சொர்னத்தை எப்படி அடைகிருனே, அப்படிப் போலே பரமாத்மாவினுடைய ஆதீனமான காரியகாரணங் களை அறிந்த புருஷனுனவன் க்ஷேத்திரமென்று சொல்லப் படாநின்ற தேகங்களிலே ஆத்மாவையடையத் தக்க தான யோகாதிவுபாயங்களிஞலே அந்தப் பரமாத்மாவை யடைகின்ருன்:

மூலப்பிரகிருதி - மகதத்துவம் - அகங்காரம் - ரூப - ரச- கந்த - ஸ்பரிஸ - சப்தம் ஆக இந்த எட்டுகளும் பிரகிருதிக ளென்று சொல்லப்படுகின்றன. சத்துவம் - ரஜசு - தமசு என்கிற இந்தமூன்றும் பிரகிருதியினுடைய குணங்கள். கியா னேந்திரியங்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும், மன தும் - பிரிதிவியாதி பஞ்ச மகா பூதங்களும் ஆகப்பதினறு தத்துவங்களாகச் சொல்லப்படுகின்றன. இவைகளில் அந்த ரியாமியாயிருக்கிற ஆத்மாவொருவனென்று கபிலர்முதலான ரிஷீஸ்வரர்களாலே சொல்லப்பட்டிருக்கிறது. தேகமோ வென்ருல் இந்த இருபத்துநாலு தத்துவங்களுடைய கூட்ட மாக விருந்துகொண்டு, ஸ்தாவரமென்றும், சங்கமமென்றும், இரண்டு விதமாகவிருக்கிறது. இந்த தத்துவங்களுடைய கூட்டசொரூபமான தேகத்திலேயே அந்தப் பரமபுருஷ னுனவன் தேகாந்திரியாதிகளை நிஷேதிக்கிறதிஞல் அறியப் படுகிருன். புத்தியினுடைய விர்த்திகளானவை சாக்கிர மென்றும், சொப்பனமென்றும், சுழுத்தியென்றுஞ்சொல்லப் படுகின்றன. இந்தச் சாக்கிராதி புத்தியினுடைய விருத்திக ளானவை யாதொருத்தரால் அனுபவிக்கப் படுகின்றனவோ, அவரே சாக்ஷியாயிருக்கிற பரம புருஷராக விருக்கிருர். திரிகுணத்மகமாயும், சர்வ விஷயத்திலேயும் விழாநின்றும்,

கர்மத்தி லுண்டாகின்ற இந்தப் புத்தியினுடைய விருத்தி களின் சம்பந்தத்தினாலே ஆத்மாவினுடைய சொரூபத்தை புஷ்பங்களுடைய கந்தங்களினாலே அந்த கந்தத்துக்கு ஆஸ்ரயமாயிருக்கிற வாயுவைப்போல அறியக்கடவன்.

இப்படிப்பட்ட புத்தியை துவாரமாக வுடையதாயும், புத்தியினுடைய குணகர்மங்களினால் கட்டப்பட்டதாயும், அக்கியான மூலமாயுமிருக்கிற சம்சாரமானது எதார்த்த மாகாமலிருந்தாலும் புருஷனுக்குச் சொப்பனம்போலுண்டா கிறது. ஆகையினால் உங்களாலே திரிகுணாத்மகமான கர்மங் களுக்கு மூலமான அக்கியானம் ஞானத்தினால் தகனம் பண்ணத்தக்கது. குருசிசுருஷையினாலும், சாதுக்களுடைய சங்கத்தாலும், பகவத்நாம சங்கீர்த்தனங்களினாலும், காமக் குரோத-லோபமோக-மத - மாச்சரியங்களென்கிற ஆறையும் இந்திரியங்களையும் ஜயிக்கத்தக்க புருஷர்களுக்குப் பகவா னாயும், நியந்தாவாயுமிருக்கிற வாசுதேவனிடத்தில் பக்தி யானது உண்டாகும். பரமாத்மாவினிடத்திலே புத்தியை யுடையவனாய், சமஸ்த கர்மபந்தங்களை விட்டவனாய், பக்தி யோகத்தினாலே அக்கியான வாசனைகளைத் தகித்தவனாயிருக் கிறவன், அதோக்ஷசனான சுவாமியை அடைவான். அந்த ஈஸ்வரனை இருதயத்தி லுபாசியுங்கள். இப் பூமியிலே பகவானை அன்புடன் வழிபடுவது ஓர் சிரமமான காரிய மல்ல. பலவித உருவங்களைப் பெற்ற ஆபரணங்களிலும் எப்படி பொன்னே நிறைந்திருக்கிறதோ, அப்படி சரம்- அசரம் எனும் இருவகைப் படைப்புகளிலும் மாயன் எனப் படும் பரம்பொருளே நிறைந்து இருக்கிறதென மனதார சிந்தித்தலே பகவானை பக்தி செய்வதெனப்படுவது.

வாருங்கள் அசுர குமாரர்களே ! சமஸ்த பிராணிகளுக் கும் பிரியராயிருக்கிற அந்த ஸ்ரீ ஹரியை உபாசிப்பதில் யாதொரு பிரயாசையுமில்லை. சமஸ்த பிராணிகளுக்கும் சாதாரணமா யிருக்கிற விஷயானுபவங்களினாலே என்ன பிரயோசனம். இவ்வுலக சம்பத்து புருஷனுக்கு என்ன சுகத் தைக் கொடுக்கப்போகின்றது. ஆகையினாலே காணப்பட்டும் கேழ்க்கப்பட்டு மிருக்கிற சர்வாந்திரியாமியான ஸ்ரீமந் நாரா யணனை ஆத்ம லாபத்தின் பொருட்டு பக்தியினாலே பஜனை பண்ணுங்கள். உலகத்திலே கர்மங்களுடைய சங்கற்பமானது சுகத்தை யடையும் பொருட்டும், துக்கநிவர்த்தியின் பொருட்டு மாக உண்டாயிருக்கின்றது. இந்த உலகத்தில் புருஷனான வன் எந்த சரீரத்துக்காக விஷயங்களினாலே போகங்களை இச்சிக்கின்றானோ அந்தச் சரீரமானது நாய் முதலானவை



படம் நெ. 8. பக்கம் நெ, 601.

பகவான், நரசிம்ம அவதாரம் செய்து இரணியனை
சம்ஹாரம் புரிந்தது.

களினாலே பக்ஷிக்கத்தக்கதாயும், அனித்தியமாயு மிருக்கின்றது. வாருங்கள் அசுரர்களே! இந்த உலகத்திலே ஸ்திரீசங்க முதலான அவஸ்தைகளினாலேயும், கர்மங்களினாலேயும், கிலேசப்படுகின்ற புருஷர்களுக்கு எவ்வளவு சுகம் உண்டாகின்றது விசாரித்துப் பாருங்கள். புருஷனானவன் தேகத்தினாலே கர்மங்களைச் செய்கிறான். ஒருவன் பிராமணனாயிருந்தாலும், தேவனாயிருந்தாலும், சீலம்-தனம் - தபசு - யாகம்-ஆசாரம்-விரதங்கள் இவைகளினாலெல்லாம் முகுந்தனைச், சந்தோஷிப்பிக்க முடியாது. அந்த ஸ்ரீ ஹரியானவர் நிஷ்காமமான பக்தி ஒன்றினாலேயே சந்தோஷப்படத்தக்கவர். மற்றவையெல்லாம் வேஷமே யல்லாமல் வேறல்ல. சகல பிராணிகளையும் தன்னைப்போலே பார்த்து, சகல பிராணிகளுக்கும் அந்தரியாமியாயும் நியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியினிடத்திலே பக்தியைப் பண்ணுங்கள் எக்ஷராக்ஷசர்கள்-ஸ்திரீகள்-சூத்திரர்கள்-இடையர் - பக்ஷிகள் - மிருகங்கள் இவை முதலான பாவஜீவர்களெல்லாரும்கூட பகவத்பக்தியால் அச்சுதனுடைய சாரூப்பியத்தை யடைந்திருக்கிறார்கள். சகல பிராணிகளிலும் கோவிந்தனே அந்தரியாமியா யிருக்கிறாரென்று அறிந்துகொள்ளுங்கள். இது இந்த உலகத்திலே யிருக்கப்பட்ட புருஷனுக்கு பரம புருஷார்த்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.



## எட்டாவது அத்தியாயம்



*பகவான் நரசிம்மராக அவதரித்து ஹிரணியசம்மாரம் புரிந்தமை சொல்லப்படுகின்றது.*

### நாரதர் வாக்கியம்

தருமபுத்திரரே! அதன்பிறகு தயித்திய குமாரர்கள் எல்லாரும் அந்தப் பிரகலாதனாலே சொல்லப்பட்ட அர்த்தத்தைக் கேட்டு, தோஷமில்லாம லிருப்பதினாலே அதைக் கிரகித்து, குருவினால் சொல்லப்பட்ட அர்த்தத்தைக் கிரகியாமற் போனார்கள். பிற்பாடு ஆசாரிய புத்திரனானவன் அந்த அசுர புத்திரர்களும் பகவானிடத்திலே நிஷ்டையை யுடையவராய் பக்தியில் மேம்படுவதைக்கண்டு பயந்து சீக்கிரமாகப் போய் ராஜாவுடன் இந்த விருத்தாந்தங்களைச் சொன்னான்.

கடையப்பெற்ற கடலினின்றும் உற்பவித்த அமுதத்தை உண்ணும்படி ஊட்டியதை யொப்ப மதுரமான வார்த்தை

களைப் பேசும் பிரகலாதனுடைய சமாசாரத்தைக் கேட்டு, மனம் பொறுமல், வளருப்படியான நெருப்பைப்போலும் கோபமானது பொங்கி, தன்னுடைய கண்கள் விஷத்தை வெளியிட ஹிரணியன் கொடியவிஷப்பாம்பைப்போலானான்.

அந்தச் சிறுவனை நீங்கள் சென்று இங்கு கொண்டு வாருங்களெனக் கோபித்துச் சொன்னான். வெறுப்பை யுடைய அசுரர்கள் ஓடிப்போய் பிரகலாதனைக் கொண்டுவந்து சபையில் சேர்க்க, சமுசார பந்தத்தினின்றும் மீறும் வழியைக் கண்டறிந்த தனது புத்திரனுடைய சிவந்த அழகிய முகத்தை நோக்கி "அட கொடியனே! நீ மாண மடையப் போகிறாய், துஷ்டனே! அதமனே! எனதாக்கினை யைத்தாண்டி நடவாநின்ற உன்னை எமலோகத்துக் கனுப்பு கிறேன். எனக்கு உலக பாலர்களுடனே கூடிக்கொண் டிருக்கிற மூன்று உலகங்களும் நடுநடுங்கிக்கொண் டிருக் கின்றன, நீ மாத்திரம் எனது வார்த்தையை என்னபலத் தைப்பற்றி தள்ளிவிட்டாய்" என, பிரகலாதனன் பிதாவைப் பார்த்து சொல்லுகின்றான்:

எனது பிதாவே! உத்கிருஷ்ட நிக்கிருஷ்டங்களான பிரமா முதலிய ஜீவகோடிகளும் அந்தப் பகவானுடைய ஆதீனமாயிருக்கின்றன. அந்தப் பகவானானவர் எனக்கு மாத்திரம் பலமாக விருக்கவில்லை. உன்னிலும் பலசாலி களாயிருக்கிற மற்றபேர்களுக்கும் பலமாக விருக்கிறார். கால ரூபியாயுமிருக்கிற விஷ்ணு தானே தம்முடைய சக்தியினால் ஜகத் சிருஷ்டி - ஸ்திதி - சங்காரங்களைப் பண்ணுகிறார். உன்னுடைய இந்த அசுரபாவத்தைவிட்டு மனதைச் சர்வ பிராணிகளிலேயும் சமமாகத் தரிக்கக்கடவாய். உன்னைப்போ லொத்த சிலர் ஆத்மாவை அபகரிக்கும் காமக்குரோத லோப-மத மாச்சரியமென்கிற அனிஷ்டவர்க்கத்தையும், மனது முதலான ஆறு இந்திரியங்களையும், முன்னே ஜயிக்காமல் பத்துத் திக்குகளும் தன்னாலே ஜயிக்கப்பட்டவைகளா யெண்ணி யிருக்கிறார்களென்று சொல்லுகின்ற பிரகலா தனைப் பார்த்து இரணியகசிபுவானவன் சொல்லுகிறான்:

"அட அறிவிலா சிறுவனே! மரணங் கிட்டியிருக்கிறவர் களுக்கே இப்படிப்பட்ட அனர்த்த புத்தி யுண்டாகும். என்னைப் பார்க்கிலும் உன்னாலே சொல்லப்பட்ட வேறொரு ஜகதீஸ்வரனெங்கே இருக்கிறான்" என்று கேட்க பிரகலாதன் சொல்லுகிறான்:

"வெற்றியையே யுடைய சக்கராயுதத்தை தன்றிருக்கரத்தேயுடைய குற்றமிலாதவன் கடலிலு மிருக்கிறுன்; வண்டுகளால் மொய்க்கப்பெற்ற புஷ்பங்களிலும் உளன்; உயர்ந்த மலைகளிலுமுளன். அரசனே! சரீரத்தில் வசிக்கும் உயிரைப்போல எல்லா உலகங்களிலும் இறைவன் இருக்கிருன்" என்றுரைத்தான்.

அவன் எங்குமிருப்பது உண்மையானல் இந்தஸ்தம்பத்திலும் அவனைக் காணலாமல்லவா? இப்படிப் பிதற்றுவதிலுலே உன்னுடைய சிரசை அறுத்துப்போடுகிறேனென்று கத்தியை யுருவிக்கொண்டு சிங்காதனத்தில் நின்றெழுந்திருந்தவனுய், அதிகபலமான தன்னுடைய முஷ்டியினுலே இரணியன் கம்பத்தை யறைந்தான்.

இடி இடித்தது போல இரணியன் கோபித்து, தன்கையால் அறையப்பெற்ற கம்பத்தில்நின்றும் பொன்னுலகம் (தேவர்களது உலகம்) வெடிக்கவும், பெரிய மலைகள் நடுங்கவும், எல்லார்க்கும் அச்சம் உண்டாகும்படி அந்த க்ஷணத்திலேயே பகவானுனவர் தம்முடைய பக்தனுன பிரகலாதனுடைய வசனத்தை சத்தியமாகப் பண்ணுகைக்குச் சபையில் இருக்கும் ஸ்தம்பத்திலே மிருகமல்லாமலும், மனுஷ்யனல்லாமலு மிருக்கிற மிகவும் அற்புதமான ரூபத்தோடு காணப்பட்டார்.

இரணியகசிபுவானவன் இந்தப்பிரகாரம் ஸ்தம்பத்தில் நின்றும் ஆவிர்பவித்த பயங்கரமான சுவர்க்கத்தையளாவின சரீரத்தை யுடையதாயும், விசாலமான வக்ஷஸ்தலத்தை யுடையதாயும், சூட்சுமமான இடையையுடையதாயும், சந்திரகிரணம் போல வெளுத்த ரோமங்களினுலே வியாபிக்கப்பட்டதாயும், நகங்களை ஆயுதமாக உடையதாயு மிருக்கிற அந்த நரஹரிரூபத்தைப் பார்த்து, இந்த ஜந்துவானது மிருகமுமன்று; மனுஷியனுமன்று; காணுதற்கரிய ஆச்சரியகரமான, நரஹரி ரூபம் பெற்றிருக்கிறது என்று நினைத்து, உடனே மஹோதைரியத்துடன் கதையை யுடையவனுய் அட்டகாசம் பண்ணிக்கொண்டு நரசிங்கனுன ஸ்ரீ ஹரியின் பேரிலே எதிர்த்தான். அப்போது அந்த இரணியாசுரனுனவன் நரசிம்மனெனும் தீபத்திலே விழுந்த விட்டிற்பூச்சிபோலக் காணுமல் மறைந்து போனுன். அந்த பகவானிடத்திலே இரணியன் காணுமற்போனது ஒரு ஆச்சரியமன்று. யாதொரு பகவான் ஆதியிலே உண்டான பிரளயகால இருளையெல்லாம் தம்முடைய தேஜஸினுலே

விழுங்கி விட்டாரோ, அப்படிப்பட்டவருக்கு இது ஒரு ஆச்சரிய மன்று. பிற்பாடு அசுர சிரேஷ்டனான இரணியன் கோபத்தினாலே ஓடிவந்து கதையினாலே நரசிம்மரை அடித்தான். சுவாமியும் தமதுபேரிலே பராக்கிரமியா நின்ற இரணியனை கருடன் சர்ப்பத்தைக் கிரகிப்பது போலக் கிரகித்துக்கொண்டார். வாராய் தர்மபுத்திரனே! அப்போது கருடனித்தில் நின்று நழுவிய சர்ப்பம்போலச் சுவாமியினுடைய அஸ்தத்தினின்றும் இரணியனானவன் நழுவினான். அப்போது சமஸ்தமான தேவர்களும் உலகபாலர்களும் மேகத்திலே மறைந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அப்படி நழுவிய இரணியனானவன் கத்தி கேடயங்களை யெடுத்துக்கொண்டு திரும்பவும் மகாவேகத்தோடு முகுந்தனை யெதிர்த்தான். ஸ்ரீ ஹரியானவர் அந்த இரணியகசிபுவைப் பிடித்துக்கொண்டு பிடித்தபிடியோடு சபையினுடைய வாசற்படியில் துடையின்மேலே தள்ளிக்கொண்டு நகங்களினாலே கிழித்து எறிந்தார். பயங்கரமான கண்களை யுடையவராயும், திறக்கப்படாத வாயையுடையவராயும், தம்முடைய நாவிலே அந்த அசுரனுடைய இரத்தத்தையுரிந்தும் இரத்த பிந்துக்களினாலே நனைந்து சிவந்துமிருக்கிற பிடரிமயிர்களையும் முகத்தையு முடையவராயும், குடலை மாலையாகவும், கஜவதத்தினாலே சிம்மம்போலே விளங்கியுமிருக்கிற அந்த நரஹரியானவர், தன்னாலே பிளக்கப்பட்ட இரணியனை விட்டுவிட்டு, ஆயுதபாணிகளாகத் தன்பேரி லெதிர்க்கா நின்ற அந்த இரணியனுடைய சேனைகளையும் சங்கரித்தார். அதன் பின்பு தன்னோடு யுத்தம் பண்ணுகிறதற்கொருவரு மில்லாதவராயும், ராஜாவினுடைய சிங்காதனத்திலே யிரா நின்றும், உக்கிரத்தை யுடையவராயும், உலகநாதராயும், பயங்கரமான முகத்தை யுடையவராயுமிருக்கிற அந்த நரசிங்க மூர்த்தியை ஒருத்தருங் கிட்டிவந்து சேவிக்கமாட்டாமற் போனார்கள்.

தேவர்களும் புஷ்ப வருஷங்களாலே வருஷித்தார்கள். அப்போது இரணியவதோற்சவத்தை பார்க்கவந்த தேவதைகளுடைய விமானக் கூட்டங்களினாலே ஆகாசமெல்லாம் நெருங்கிற்று. தேவதுந்துபி முதலான வாத்தியங்கள் முழங்கின. தேவதைகள் முதலான சமஸ்தமானபேர்களும் அஞ்சலி பந்தம் பண்ணிக்கொண்டு சிங்காதனத்திலே மஹா தேஜசோடு கூடினவராயிருக்கிற நரசிரேஷ்டரான நரசிம்மருடைய சமீபத்திலே நெருங்கப் பயந்தனர்.

## ஒன்பதாவது அத்தியாயம்

நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மநந்தனரே! அதி பயங்கரமான பகவானுடைய நரசிம்ம உருவத்தைக்கண்டு சகல தேவர்களும் கிட்டே நெருங்க வஞ்சி, ஸ்ரீ இலக்குமிதேவியை பகவானண்டையில் போகும்படிக்கு பிரார்த்தித்தார்கள். ஸ்ரீதேவியும் அவர்களது முறைக்கிறங்கி, பகவானண்டையிலே வந்து, அவரடைந்திருந்த என்றுமிலாத அந்த அற்புத ரூபத்தைக்கண்டு தானும் நெருங்க பயந்தனள். பிரம்மாவும் சிவனும் தேவர்களும் இந்திரனும் முனிவர்களும் சித்தர்களும் பிதுர்க்களும் நாகர்களும் குபேரன் முதலிய கந்தருவர்களும் இன்னும் மற்ற எண்ணிலாதவர்களும் பகவானைக் கிட்ட முடியாமல், மனிதனும் சிம்மமுங் கலந்த உருவங்கொண்ட பெம்மானை பலதடவையுந் தொழுது, அவனது பாததாமரைகளைப் பணிந்தார்கள்.

அத்தேவர்கள் அவதரித்த பெருமானது இருபாதங்களை தோத்திரம் செய்து, பூமியில் விழுந்து வணங்கி, வாளாயுதத்தை தரித்த இரணியனை சம்மாரம் புரிந்து எமைக் காப்பாற்றிய பெருமானே! ஆதிசேஷ சயனத்தில் அறிதுயில் கொள்ளும் மேகமே! நீர் கொண்டிருக்கும் கோபத்தைத் தணித்துக்கொள்ள வேண்டுமெனப் பிரார்த்திக்க, நரசிம்மன் கொண்ட கோபம் தணியாது நிற்க, எல்லோரும் கலங்கினார்கள்.

அப்போது பிரம தேவனுனவர் சமீபத்திலிராநின்ற பிரகலாதனைப் பார்த்து, வாராய் குழந்தாய்! உன்தகப்பனுன இரணியன் பொருட்டு கோபத்தையடைந்த ஜகந்நாதரான ஸ்வாமியைக்கிட்டி கோபந்தணியும்படி பிரார்த்தித்துக் கொள்ளென்று அனுப்பிவைத்தார். மகா பாகவதோத்தமனுன அந்தப் பிரகலாதனன் அப்படியே யாகட்டுமென்று, அங்கீகரித்து, மெள்ள அந்த நரசிங்கமூர்த்தி யண்டைக்குப் போய், அஞ்சலிபந்தனம் பண்ணிக்கொண்டு, சாஷ்டாங்கமாகப்பணிந்து, பக்திப்பரவசனுகி அவரண்டையில் நெருங்கி, ஹிரண்யாசுரனது புத்திரனுன வெற்றியை யடைந்த பிரகலாதனன் திருப்பாற்கடலினின்றும் எழுந்த மதுரமுடைய அமுதத்தைப்போல செவி முதலிய பஞ்ச இந்திரியங்களும் குளிரும்படி ஸ்ரீ தேவியினது நாயகரான பகவானுடைய

அழகிய தாள்களை யடைந்து துதிசெய்ய, கரிய நிறத்தை யுடைய கடவுள் மனம் குழைந்து உருகி, தாமரை மலர் போலும் கரங்களால் பிரகலாதனது பின்புறத்தைத் தடவி, "குழந்தாய்! உனக்கு வேண்டிய வரங்கள் யாவை? அவை களைக் கேள் தருகின்றேன்" என்றனர்.

பகவானுனவர் கிருபாபரிபூரணராய் தம்முடைய பாதார விந்தங்களில் பிரணாமம்பண்ணுநின்ற அசுரபாலனுன பிரக லாதனை யெடுத்துத் தம்முடைய அஸ்தத்தை அவனுடைய சிரசிலே வைத்தார். பிரகலாதனுனவன் பகவானுடைய கரஸ்பரிசத்தினுலே சகல சுபங்களையும் பெற்றவனுய், அந்த ஸ்வாமியினுடைய பாதபத்மங்களை இருதயத்தில் தரித்து, ஏகாக்கிரமான மனதுடன், பிரீதியினுல் தழை தழைத்த வாக்கினுல் அந்த நரசிம்ம பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிருன் :

### பிரகலாதன் வாக்கியம்

ஆசைப் பெருக்கத்தை அறவேயொழித்த பெரியோர்கள் நாடுகின்ற மேன்மையான பெரிய சுடரே! பரிசுத்தமான பழைய வேதங்களினுல் துணியப்படும் நுண்ணிய பொருளே! பசுமையான மேகநிறத்தை யுடையவரே! தம்மை யடைவதற் கின்றியமையாத பக்தியைக் காட்டிலும் வேறு வரத்தை எவன் பெற விச்சிப்பான் என்று சொல்லி பரிசுத்தமான தெய்வ உணர்ச்சியை யுடைய பிரகலாதனன் பகவானைத் தொழுது தோத்திரம் புரியலானுன்.

புஷ்பங்களிற் பொருந்தியிருக்கும் வாசனையைப்போல் எல்லாப் பொருள்களிலும் நிறைந்த பெருமானே! உமது சிவந்த தாமரைப் பாதங்களை தொழுது போற்ருதவர்கள் தேவர்களானுலும் நீசரேயாவார்கள். உமது திவ்விய கல்யாண குணங்களை தமது நாவினுல் தோத்திரம் புரிபவர் கள் பொல்லாத நீசர்களாயினும் தேவர்களிலும் சிரேஷ்டர்க ளாவார்கள். மனித - சிம்ம உருவங்கொண்ட ஐயனே! உருளுகின்ற சக்கரத்தைப்போல சிறிதும் ஓய்விலாமல் பிறவித்துன்பத் துழன்றேன். மயக்கத்தைத்தரும் பிறவித் துன்பத்தால் யானின்னும் வருந்தவேண்டுமோ வென்று அஞ்சுதலல்லாமல், தெளிவைக் கொடுக்கும் உம்மைக்கண்ட தேவர்களைப் போல யான் பயப்படவில்லை. என்னிடத்தில் உமது அருளைத் தரவேண்டும்.

சிருஷ்டிப் பொருள்களின் உற்பத்தி காலத்திற்கு முன் ஒருவராகவே யிருந்து, அவைகள் அழிவையடைந்தபின்

பின்னும் ஒருவராக விருந்து, இவ்விரண்டு காலத்தின் நடுவில் நானுவித ஜீவகோடிகளாகியிருப்பதுபோல் விளங்குகின்ற பெருமானே! ஞானப்பிரகாசமே! உன் திருவிளையாடல்களை யெல்லாம் சொல்ல வல்லவர் யாரிருக்கின்றார்கள்.

சிருஷ்டி முதலியவைகளுக்கு முதற்காரணமான மகாமாயையாகி, உட்கரணங்களி லொன்றான அகங்காரமாகி, மண் நீர் நெருப்பு காற்று ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களாகி, மெய் வாய் கண் மூக்கு செவியெனும் ஐந்து இந்திரியங்களாகி, அவ்விந்திரியங்களுக்குரிய குணங்களாகி உரையும் குற்றமிலாத உம்மையல்லாமல் எம்மால் மதிக்கக் கூடிய பொருள் வேறிருக்கின்றதோ? பிறந்து விட்ட பிறகு மரண காலத்தில் மரணத்துன்பத்தை அனுபவிப்பதற்கும் அஞ்சி, மீண்டும் ஓர் தாய் வயிற்றை யடைந்து அங்கு நெருக்கத்தால் நேரிடும் கஷ்டங்களை யனுபவிப்பதற்கும் பயந்து, சுழல் காற்றின் இடையில் அகப்பட்டுக்கொண்ட சருகைப்போல உழல்பவரும் உம்மைப் போற்றிடார். அவர்களது கல்வியை யென்னவென்று சொல்வேன் யான்! வெற்றி பொருந்திய வேலாயுதத்தைக் கரத்தே பெற்றிருந்த எனது தந்தையாகிய இரணியாசுரனைக் கொன்று மேலான சிறப்பை எமக்களித்த பகவானே! இவ்விடத்தே நீர் அடைந்திருக்கும் கொடிய கோபத்தை விட்டு மனமுவந்து எமக்கு அருள் செய்ய வேண்டுமென்று பலமுறையும் சகல பற்றுகளையும் அறுத்து உயர்ந்த ஐந்து வயதுள்ள பாலனான பிரகலாதன் பிரார்த்திக்க, நரசிம்மமூர்த்தி கோபந்தணிந்து மகிழ்ந்தனர்.



## பத்தாவது அத்தியாயம்



*ஸ்ரீ அரியானவர் பக்தனான பிரகலாதனை அனுக்கிரகித்து அந்தர்த்தானமானதும், ஸ்ரீ அரியினுடைய கிருபையால் ருத்திரபகவான் திரிபுரங்களை தகித்ததுமே சொல்லப்படுகிறது.*

### நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மராஜனே! அந்தப் பாலனான பிரகலாதனானவன் அந்தவரங்களையெல்லாம் பக்தியோகத்துக்கு விகாதமாக எண்ணினவனாகி, பகவானைக் குறித்துச் சிரிப்புடனே சொல்லுகிறான்: வாரீர் நரசிம்மரே! சுபாவமாகக் கர்மங்களிலே ஆசக்தியை யுடையவனான எனக்கு நானுவித வரங்

களால் ஆசையை உண்டாக்க வேண்டாம். நிர்வேதத்தை யடைந்தவனாயும், விஷய சங்கதில் நின்றும் பயந்தவனாயு மிருக்கிற நான் மோக்ஷத்தை அபேக்ஷித்தவனாய் உம்மைச் சரணமாக அடைந்தேன். நீர் பக்தனுடைய லக்ஷணத்தை யறிய வேணுமென்று இச்சையையுடையவராகி, பக்தனைச் சமுசார மூலங்களாயும் இருதய பந்தங்களாயு மிருக்கிற சப்தாதி விஷயங்களிலே ஏவுகிறீர். வாரீர் புருஷசிரேஷ்டரே! நீர் எனக்குவேண்டிய வரங்களைக் கொடுக்கிறவரே யாகில் அந்தச் சப்தாதிவிஷய கர்மங்கள் என்னுடைய இருதயத்திலே உண்டாகாமலிருக்க வேணுமென்கிற இந்த வரத்தையே உம்மிடத்தில் நின்றும் அடைய விரும்புகிறேன் என்று சொல்லாநின்ற பிரகலாதனைப் பார்த்து பகவான் சொல்லுகின்றார்:

### ஸ்ரீ பகவான் வாக்கியம்

அன்புள்ள குழந்தாய்! என்னுடைய ஏகாந்த பக்தர்களான உன்னைப்போலொத்தவர்கள் என்னிடத்தில் நின்றும் இந்த லோகாந்தரத்திலே அனுபவிக்கத் தக்கதான பலன்களைக் கோருகிறவர்களில்லை. ஆனால் இந்த மனுவந்தரகால மட்டுக்கும் இந்த உலகத்திலே தயித்தியேசுவரர்களுடைய போகங்களை யெல்லாம் நீ அனுபவித்துக்கொண்டு, நியந்தாவாயிருக்கிற என்னை எப்போதும் உன்னுடைய இருதயத்திலே வைத்து ஆராதிக்கக் கடவாய். உன்னாலே கானம் பண்ணப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தை எந்தப் புருஷன் உன்னையும் என்னையும் ஸ்மரித்துக்கொண்டு திரிகாலங்களில் கீர்த்திக்கிறானோ! அவனும் கர்மபந்தத்தில் நின்றும் விடப்பட்டு முக்தனாவான் என்று சொல்லுகின்ற பகவானைப் பார்த்துப் பிரகலாதனன் சொல்லுகிறான்:

### பிரகலாதன் வாக்கியம்

வாரீர் மஹேஸ்வரனே! தீனதயாளுவே! என்னுடைய பிதாவான இரணியனானவன் உம்முடைய மகிமையை அறியாதவனாய், மிகவும் குரூரமான மனதையுடையவனாய், தன்னுடைய பிராதாவைக் கொன்றீரென்று அசத்தான புத்தியுடனே கூடினவனாய், உம்முடைய பக்தனான என்னிடத்திலேயும் துரோகம் பாராட்டி சர்வலோக குருவாயும் சிருஷ்டி - ஸ்திதி - சங்கார கர்த்தாவுமான உம்மை நிந்தித்தான். தீனவத்சலனே! என்னுடைய பிதாவானவன் சாந்தமான உம்முடைய திருஷ்டியினாலே கடாக்ஷிக்கப்பட்டு பரிசுத்தனாகி, தாண்டக்கூடாததாயும் கரையில்லாமலுமிருக்

கிற அங்கப் பாபவகைகளில் நின்றும் பரிசுத்தனுகக் கடவன். என்று பிரார்த்தியா நின்ற பிரகலாதனைப் பார்த்து ஸ்ரீ ஹரி யானவர் சொல்லுகின்றார் :

ஸ்ரீ பகவான் வாக்கியம்

வாராய் குலபாவனனே! யாதொரு காரணத்தாலே உலகங்களை யெல்லாம் பாலனம் பண்ணுநின்ற நீ இந்த இரணியாசுரனுடைய கிரகத்திலே பிறந்தாயோ, அதுகார ணத்தாலே உன்னுடைய பிதாவான இரணியன் முதல் இருபத்தொரு தலைமுறை வரைக்கும் பிறக்குமவர்களும் மகா பாபிஷ்டர்களா யிருந்தாலும் பரிசுத்தமாவார்கள். வாராய் பிரகலாதனே! என்னுடைய தேக ஸ்பரிசத்தாலே எல்லா விதத்திலும் பரிசுத்தனுன உன்னுடைய பிதாவுக்குச் செய்யவேண்டிய பிரேத காரியங்களைச் செய்யக்கடவாய். சுபுத்திரனை யுடைய இந்த இரணிய கசிபுவானவன் உத்தம லோகத்தை யடையப்போகிறான். வாராய் குழந்தாய்! இனி நீ உன் பிதாவினுடைய சிங்காசனத்தில் ஏறி யிருக்கக்கட வாய் என்று பகவான் சொன்னபடிக்கே பிரகலாதனும் தகப்ப னுக்குச் செய்யவேண்டிய புத்திர கிருத்தியங்களைச் செய்து, பிராயணோத்தமர்களாலே பட்டாபிஷேகமும் பண்ணப்பட்ட வனுகி, சத்துரு சூனியமான இராஜ்ஜியத்தைப் பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தான். அப்போது பிரமதேவனும் தேவதைகளோடு சூழப்பட்டவராய் பிரசன்ன முகரான நரசிம்ம தேவரைப்பார்த்து சொல்லுகிறார் :

பிரம்மதேவர் வாக்கியம்

வாரீர் தேவதேவனே! பாபியாயும் உலகத்தைப் பீடித்த வனுமான இந்த அசுரனுனவன் உம்மாலே சங்கரிக்கப் பட்டான். அந்த அசுரன் என்னுல் சிருஷ்டிக்கப் பட்டவை களினுலே மரணமில்லாமல் இருக்கும்படி என்னிடத்தில் நின்றும் வரம்பெற்றவனுகி, தபயோக பலத்தினுலே கர்வி யாகி, சமஸ்தமான தர்மங்களையும் நாசம்பண்ணினுன். இந்த பிரகலாதன் மிருத்தியு முகத்தில் நின்றும் உம்மாலே விடு விக்கப்பட்டான் என்று சொல்லுகின்ற பிரமாவைப் பார்த்து ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார் :

ஸ்ரீ பகவான் வாக்கியம்

வாராய் சதுர்முகனே! இப்படிப்பட்ட வரம் இனிமேல் அசுரர்களுக்கு உன்னுலே கொடுக்கத்தக்க தன்று. குரூர மான சுபாவத்தையுடைய பேர்களுக்கு இப்படிப்பட்ட வரங்

கொடுக்கிறது பாம்புக்குப் பால் புகட்டி வளர்ப்பது போலா கும் என்று ஸ்ரீ ஹரியானவர் சொல்லி பிரமாவினுல் பூஜிக் கப்பட்டவராகி, சர்வ பூதங்களுக்குங் காணப்படாதவராய் அந்தர்த்தானமானுர்.

பிற்பாடு பிரகலாதனுனவன் பிரமதேவனையும், ருத்தி ரனையும், பிரஜாபதிகளையும், தேவர்களையும், பூசித்து, சிரசி ஞலே வந்தனம் பண்ணினுன். பிரமதேவன் முதலான தேவர்களெல்லாம் சுக்கிராசாரியர் முதலான ரிஷிகளுடனே கூட பிரகலாதனைத் தயித்திய தானவர்களுக்குப் பதியாகப் பண்ணி, அப்பிரமா முதலான சகலமானபேரும் ஆசீர் வசனஞ்செய்து சந்தோஷித்து அவனுலே பூஜிக்கப்பட்டவர் களாய்த் தங்கள் தங்கள் ஸ்தானங்களை அடைந்தார்கள். இந்தப்பிரகாரம் விஷ்ணு பாரிஷதர்களான ஜய விஜயர்கள் சாபத்தாலே திதிக்குப் புத்திரர்களாகப் பிறந்தவர்களாகி, மனதிலேயே மிராநின்ற வயிரவ பாவத்தினுலே ஸ்ரீ ஹரி யினுல் சங்கரிக்கப் பட்டார்கள். திரும்பவும் அந்த ஜய விஜயர்கள் கும்பகர்னனுகவும் இராவணனுகவும் பிறந்து ஸ்ரீ ராமருடைய பல பராக்கிரம பாணங்களினுலே விழுந்த வர்களாய் ஸ்ரீ ராமனையே நினைத்துக்கொண்டு தேகத்தை விட்டார்கள். பிற்பாடு அவர்களே சிசுபால தந்தவக்கிரர்க ளாகப் பிறந்து ஸ்ரீ கிருஷ்ணனுலே சங்கரிக்கப் பட்டவர் களாய் அவருடைய சாயுச்சியத்தை யடைந்தார்கள்.

### நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மராஜனே! உம்மால் கேழ்க்கப்பட்ட அந்தச் சிசுபாலன் முதலான ஸ்ரீ கிருஷ்ண வயிரிகளுடைய சாயுச் சியமானது சொல்லப்பட்டது. மகானுபாவர்களான ரிஷிகள் பரப்பிரமரூபியான ஸ்ரீ கிருஷ்ணபகவான் மனுஷியரூபியா யிங்கே பிரத்தியக்ஷமாக வாசம் பண்ணுகிருரென்று உங்க ளுடைய கிரகத்தைக்குறித்து நாலுதிக்கிலேயுமிருந்து வரு கிருர்கள். அப்படிப்பட்ட நீங்களே இந்தப் பூலோகத்திலே மகா பாக்கியத்தைப் பண்ணினபேர்கள். ஸ்ரீ கிருஷ்ணரான வர் உங்களுக்குப் பிரியராயும் குருவாயு மிருக்கிருர். இந்தப் பகவானுன ஆதிபுருஷனுனவர் பூர்வத்திலே மஹா மாயாவி யான மயனுலே போக்கடிக்கப்பட்ட ருத்திரனுடைய எஜ ஸைத் திரும்பவும் விஸ்தரிப்பித்தார் என்று சொல்லுகின்ற நாரத மகாரிஷியைப் பார்த்துத் தர்மராஜா சொல்லுகின்றுர்:

### தருமபுத்திரர் வாக்கியம்

வாரீர் மகாரிஷியே! ஜகதீசனுன ருத்திரனுடைய கீர்த் தியை மயன் எந்தக்காரியத்திலே போக்கடித்தான்? அந்த

கீர்த்தி ஸ்ரீ கிருஷ்ண பகவானாலே திரும்பவும் எப்படி விஸ்தரிக்கப்பட்டது? இதை எனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கின்ற தர்ம புத்திரனைப்பார்த்து நாரத மகாரிஷியானவர் சொல்லுகின்றார்:

நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மராஜனே! யுத்தத்திலே ஸ்ரீ கிருஷ்ண பகவானால் விருத்தியை அடைவிக்கப்பட்ட தேவதைகளினாலே ஜயிக்கப்படாநின்ற அசுரர்கள் மாயாவிகளுக்கெல்லாம் பரம குருவான மயனைச் சரணமடைந்தார்கள். சிருஷ்டியிலே சமர்த்தனான அந்த மயனானவன் ஒருத்தராலேயுங் காணக் கூடாத போக்குவரவை யுடையவர்களாயும், இன்னபடியென்று எண்ணக்கூடாத உபகரணங்களை யுடையவைகளாயுமிருக்கிற மூன்று பட்டணங்களைச் சிருஷ்டித்து அவர்களுக்குக் கொடுத்தான். அசுர சேனைபதிகள் பூர்வ வயிரத்தை நினைத்துக்கொண்டு, அந்தத் திரிபுரங்களோடு கூட கண்ணுக்குக் காணப்படாம லிருந்துகொண்டு, லோகபாலர்களோடு கூடின மூன்று உலகங்களையும் பீடித்தார்கள்.

பிற்பாடு மூன்று உலகங்களும் ஈஸ்வரனை அடைந்து வணங்கி தேவனே! உம்முடையவர்களாயும் திரிபுர வாசிகளான அசுரர்களாலே பீடிக்கப்பட்டுமிருக்கிற எங்களையெல்லாம் ரக்ஷியுமென்று சொன்னார்கள். இந்தப் பிரகாரம் உலகங்களாலே பிரார்த்திக்கப்பட்ட பகவானும் சங்கார கர்த்தாவாயுமிருக்கிற உருத்திரர் தேவதைகளைப் பார்த்து பயப்படாதீர்களென்று சொல்லி அனுக்கிரகித்தவராகி, தனுசிலே சரத்தைச் சந்தானம்பண்ணி அபிமந்திரித்துத் திரிபுரங்கள்மேலே விட்டார். அந்தச் சரத்தில் நின்றும் சில பாணங்களினாலே திரிபுரங்கள் காணப்படாமற்போயின. திரிபுரவாசிகளான அந்த அசுரர்களெல்லோரும் அந்த பாணங்களினாலே ஸ்பரிசிக்கப்பட்டு விழுந்திறந்தார்கள். மகாயோகியான மயனானவன் அவர்களைக் கொண்டுபோய் தன்னாலே நிர்மிக்கப்பட்ட அமிர்தரசத்தை யுடையதாயிருக்கிற கூபத்திலே போட்டுவைத்தான். அந்த அசுரர்கள் சித்தாமிர்த ரசத்தினாலே ஸ்பரிசிக்கப்பட்டு, வஜ்ஜிரம்போல திடகாத்திரர்களாய் மேகத்தைப் பிளவாநின்ற இடி நெருப்புகள்போல யெழும்பினார்கள். அப்படி யெழும்பியவர்களைப் பார்த்து விசனப்பட்டுக் கொண்டிராநின்ற ரிஷபத் துவசனைப்பார்த்த விஷ்ணுவானவர் ஒரு உபாயத்தைப் பண்ணினார். அஃதெப்படி யென்றால், புதல்வனான பிரமதேவன் கன்றாகவும், தான் பசுவாகவும், ரூபத்தைத் தரித்தவராகி, மத்தியான காலத்

திலே திரிபுர பட்டணத்திலே பிரவேசித்து, ரச கூபத்திலே யிருக்கிற அமிர்தத்தைச் சேஷமில்லாமல் பானம் பண்ணினார். அந்த அசுரர்கள் பார்த்துக் கொண்டிருந்தும் மோகத்தை யடைந்தவர்களாகி பசுரூபமான அந்த விஷ்ணுவை நிஷேதியாம லிருந்தார்கள். அதையறிந்து மாயாவியான மயனானவன் விசனமில்லாதவனாய், தெய்வ கதியையும் ஸ்மரித்தவனாய், அந்த அமிர்தரசத்தை ரக்ஷியா நின்றபேர்களைப் பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லுகிறான் :

இந்த உலகத்திலே தனக்கும் அன்னியனுக்கும் தெய்வத்தினாலே கற்பிக்கப் பட்டிருக்கிறதைப் போக்கடிப்பதற்கு எவன் தான் இச்சிப்பனென்று சொன்னான். பிற்பாடு ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் தம்முடைய சக்திகளினாலே ருத்திரனுக்கு ரதம்-சாரதி-குதிரைகள்-தனுசு-சரம் இவை முதலான யுத்தசாதனத்தைச் சிருஷ்டித்துக்கொடுக்க, இவைகளைக்கொண்டு ருத்திரனானவர் யுத்தசன்னாகத்தை யுடையவராய், பகவானுடைய தேஜஸினாலே ரக்ஷிக்கப்பட்டவராய், அபிசித்தென்கிற முகூர்த்தத்திலே பேதிக்கக்கூடாத திரிபுரங்களைத் தகித்தார். அப்போது ஆகாசத்திலே துந்துபி வாத்தியம் முழங்கின. தேவர்கள் புஷ்பவருஷம் வருஷித்தார்கள். இந்தப்பிரகாரம் சிவபெருமான் திரிபுரங்களைத் தகித்து, பிரமாதிகளினாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய்த் தம்முடைய ஸ்தானத்தை யடைந்தார்.

பிரகலாதனது இச்சரிதத்தை உரைப்பவரும், அதை அன்புடன் கேட்பவரும், துன்பமெனும் சமுத்திரத்தை தாண்டி இன்பமெனும் சமுத்திரத்தை யடைவார்கள்.



## பதினொன்றாவது அத்தியாயம்



*பிராமணாதி வர்ணங்களுக்கும் ஸ்ரீகளுக்கும் சாதாரணமான தர்மங்களும், அதில் முக்கியமாயிருக்கிற தர்மங்களுஞ் சொல்லப்படுகின்றன.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! தர்மபுத்திரரானவர் மகாத்துமாக்களுக்கெல்லாம் இஷ்டனாயும் பகவானிடத்திலேயே மனதை யுடையவனாயு மிருக்கிற அந்த பிரகலாதனுடைய சரித்திரத்தைக்கேட்டு சந்துஷ்டராகி, திரும்பவும் பிரமகுமாரரான

நாரத மகாரிஷியை வினவுகிறார். வாரீர் கியானசக்திமுத லான குணங்களையுடைய நாரத பகவானே! எந்த தர்மத்தி னால் புருஷன் கியான பக்திகளை அடைகுவனோ அப்படிப் பட்ட வர்ணாசிரம ஆசாரங்களோடு கூடிய அனாதியான மனுஷிய தர்மத்தைக் கேட்பதற்கு இச்சிக்கிறேன். உம்மைப் போலொத்தவர்கள் சிரேஷ்டமாயும் ரகசியமாயு மிருக்கிற தர்மத்தை அறிவார்கள். ஆதலின் அருள் செய்ய வேண்டு மென்று பிரார்த்திக்கும் தர்மபுத்திரரைப் பார்த்து நாரத மகாரிஷி சொல்லுகின்றார் :

நாரதர் வாக்கியம்

ராஜனே! உம்மாலே கேழ்க்கப்பட்ட அனாதியான வர்ணாசிரம தர்மத்தைச் சொல்லுகிறேன். யாதொரு பகவான் தம்முடைய அமிசத்தினால் தர்மத்துக்கு தக்ஷ குமாரியினிடத் தில் அவதரித்தவராய் பதரிகாசிரமத்தில் தபசு பண்ணிக் கொண் டிருக்கிறாரோ, அந்தப் பகவானைப் பிரணாமம் பண்ணி, மனுஷியர்களுக்கெல்லாம் சாதாரணமான தர்மங் களைச் சொல்லுகிறேன் கேளும்.

சத்தியம், தயை, ஏகாதசியாதி உபவாசம், சவுசம், க்ஷமை, யுக்தா யுக்த விவேகம், மனோநிக்கிரகம், அயிம்சை, பிரமசரியம், தானம், குருவினாலே உபதேசிக்கப்பட்ட மந்திர ஜபம், மனோ வாக்கு காயங்கள் ஒரு வழிப்பட்டிருக்கின்ற உள்ளத்தைக்கொண்டு சந்தோஷமாயிருத்தல், ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய ஸ்மரணமும் - கீர்த்தனமும் - சேவையும், இவை முதலான முப்பது தர்மங்களும், பிராமணாதி நாலு வர்ணங்களுக்கும் சாதாரணமான தர்மங்கள் ஆம். எக்கியம்- அத்தியயனம்-தானம்-பிரமசரியாதி ஆசிரமங்களுக்கு விதிக் கப்பட்டிருக்கிற கிரியைகள் இவைகள் விசுத்தமான குலத்தி னாலேயும், ஆசாரத்தினாலேயும், சுத்தர்களான பிரம-க்ஷத்தி ரிய-வைசியர்களுக்குத் தர்மமாக விதிக்கப்பட்டிருக்கின்றன.

தான் அத்தியயனம் பண்ணுகிறதும், ஒருவனுக்கு அத்தியயனம் பண்ணிவைக்கிறதும், தான் யாகம் பண்ணு கிறதும், ஒருவனுக்கு யாகம் பண்ணிவைக்கிறதும், தான் தானம் கொடுக்கிறதும், தானம் வாங்குகிறதும், ஆகிய விவை யாறும் பிராமணனுக்கு விகித கர்மங்களாம்.

அரசர்களுக்கு தர்மமாவது : அருமையான வேதங்களை யோதலும், யாகங்களை இயற்றலும், பெரிய பூமியை அரசு புரிந்து இரக்ஷித்தலும், கொடிய யுத்தங்களுக்காக சைனியங் களை பயிற்றுதலும், அஞ்சாமல் உக்கிரமான யுத்தத்தில்

எதிர்த்து வெற்றியை மிகுதியாக அடைதலும், அன்புடன் தரித்திரர்களுக்கும் மற்றவர்களுக்கும் பொருள் முதலியன கொடுத்து தன்னைப்போ லின்புறும்படி பார்த்தலும் ஆகிய அறுவகையாம்.

வேதம் ஓதல், யாகம் செய்தல், வர்த்தகம் செய்தல், பயிர் செய்தல், கடன் கொடுத்தல், பசுக்கூட்டங்களைக் காப்பாற்று தல் ஆகிய ஆறு தர்மங்களும் வைசியருக் குறியதாம். பிராமண க்ஷத்திரிய வைசியர்களெனும் மூவருக்கும் பணி செய்தல் சூத்திருக்குற்ற கடமையாம் எனச் சொல்வார்கள்.

பெண்களுக்கு தர்மமாவது : குடும்பகாரியங்களை செவ்வையாயியற்றுதலும், தனது கணவனை தெய்வமெனக்கருதி உள்ளன்போடு பணிதலும், கணவனது சொல்லுக்குச் சிறிதும் மாறுபடாமல் காரியங்களை இயற்றுதலும், அவனது தாய்மனம் கோணுதபடி நடந்து கொள்ளுதலும் ஆம்.

இனிமேல் சங்கர ஜாதிகளுடைய தர்மம் சொல்லப்படு கிறது : வண்ணான் சக்கிலி-கைக்கோளன்-நட்டுவன் - வலைக் காரன்-மேதாவன்-வேடனெனும் எழுவகைப்பட்ட அந்திய ஜாதியாயும், இவர்களுக்குக் கீழ்ஜாதியாகிய சண்டாளன்-புலக்கசன்-மாதங்கன் முதலான அந்திய ஜாதிகளாயுமிருக் கிற சங்கரஜாதிகளிலே களவு, இம்சை, இவைகளில்லாமல் இவர்க்குக் குலக்கிரமமாக வராநின்ற அந்தந்த விர்த்தியே அவரவருக்குத் தர்மமாக அறியத்தக்கதென்று வேதாந்தக் கியானிகளினுலே சொல்லப்பட்டிருக்கிறது.



## பன்னிரெண்டாவது அத்தியாயம்



*பிரமசாரி-வானப்பிரஸ்தர்களுடைய தர்மமும், பிரமசரிய முதலான நாலு ஆஸிரமங்களும் பொதுவான சிலதர்மங்களுஞ் சொல்லப்படுகின்றது.*

### நாரதர் வாக்கியம்

வாரும் தர்மபுத்திர மகாராஜனே! பிரமசாரியானவன் குரு குலத்திலே வாசம் பண்ணிக்கொண்டு குருவினிடத்தில் பயபக்தி விசுவாச முள்ளவனுயும், காயத்திரியை ஜெபித்துக் கொண்டும் காலையிலும் மாலையிலும் குரு சூரியன் அக்கினி சுரோத்தமான் இவர்களை உபசரிக்கக் கடவன். முந்தி கிருஷ்ணசனம்-சடை-தண்டம்-கமண்டலம்-உபவீதம் இவை

களையெல்லாம் கையிலே பவுத்திரத்தை யுடையவனுய் சாஸ்திரப்பிரகாரம் தரிக்கக்கடவன், ஸ்திரீகளிடங்களில் அதிகமாகப் பேசுதல் ஆகாது. கிரகஸ்தனுக்கோ வென்ருல் ருதுஸ்நானம் பண்ணியிருக்கிற தன்னுடைய ஸ்திரீயுடனே ரதியும் மதனும் போலவிருந்து, மற்றகாலங்களிலே குருவை அனுவர்த்தித்தல் தர்மமாகிறது. விரதநிஷ்டர்கள் சரீரத்துக்கும் சிரசுக்கும் தைலமிடுதல், உடம்பு பிடித்துக்கொள்ளுதல், ஸ்திரீகளைப் பார்த்தல், மாம்ஸ போஜனம், மதுபானம், கந்தபுஷ்பாதி அலங்காரம், இவைகளையெல்லாம் விடக்கடவர்கள். இந்தப் பிரகாரம் விரதத்தில் நிஷ்டையையுடையவனுய் பிரமசரியமுதலான நாலு ஆஸிரமங்களிலே ஒன்றைப்பற்றி, அந்த ஆஸிரமதர்மத்தை ஆஸிரியாநிற்கிறவன் வேதாந்தக் கியானியாய்ப் பரப்பிரமமான ஸ்ரீமந் நாராயணனை அடைகுவன்.

வாரும் தர்மாராஜனே ! இனிமேல் வானப்பிரஸ்தனுடைய நியமங்களைச் சொல்லுகிறேன் : வானப்பிரஸ்தன் உழுது விரைக்கப்பட்ட பூமியில் உண்டான பலன்களையும், உழாதபூமியிலே சுபாவமாயுண்டான பலன்களையும், அகாலத்திலே உண்டான பலன்களையும், அக்கினிபக்குவமான பதார்த்தத்தையும் விட்டு, யோக்கியகாலத்தில் அபக்குவமான கந்த மூலமுதலான வஸ்துவையும், சூரிய பக்குவமான பலாதிகளையும் புசிக்கக்கடவன். பனி, காற்று, அக்கினி, மழை, வெய்யில், இவைகளைச் சகித்துக்கொண்டு அக்கினி நிமித்தமாகவே பர்னசாலையையாவது கிரிகுகையையாவது ஆஸிரயிக்கக்கடவன். தலையில் மயிர்-உடலிலே மயிர்-நகங்கள்-தாடி-உடம்பழுக்கு-சடை-கமண்டலம்-கிருஷ்ணசனம் - தண்டம் - மரவுரி இவைகளையெல்லாம் தரிக்கக்கடவன். இந்தப் பிரகாரம் வானப்பிரஸ்தனனவன் வனத்திலே பனிரண்டு வருஷம் எட்டு வருஷம் நாலு வருஷம் இரண்டு வருஷம் ஒரு வருஷமாகில் தபசிலே யுண்டான கஷ்டத்திலுல் புத்தியெப்படி நசியாமலிருக்குமோ அப்படி சஞ்சரிக்கக்கடவன். வியாதிகளினுலேயும், கிறையினுலேயும், கர்மானுஷ்டானத்தினுலேயும், கியான அனுஷ்டானத்தினுலேயும், தான் சமர்த்தனுகாமற் போனுனேயாகில் உபவாச முதலான விரதத்தை ஆசரிக்கக்கடவன். எப்படியென்ருல் ஔபாசனத்தை ஆத்துமாசமாரோபனம்பண்ணிக்கொண்டு அகங்கார மமகாரங்களைவிட்டு பஞ்ச பூதசங்காதமான தேகத்தை எதா யோக்கியமாகத் தத்துவத்தினுடைய காரணங்களிலே கூட்டக்கடவன்.

அதெப்படியென்றால், புத்திமானானவன் ஆகாசத்திலே இந்திரியங்களையும், வாயுவினிடத்திலே மூச்சையும் காதுகளையும், தேஜசிலே தன்னுடைய சரீரத்திலுள்ள பூஷணத்தையும், அப்பிலே இரத்தம் சிலேஷ்மம் சுக்கில சுரோணிதங்களையும், மிகுந்த அஸ்திமாங்கிச முதலானவைகளைப் பிருதிவி தத்துவத்திலேயும், எதில் நின்றும் எது எப்படி பிறந்ததோ அந்தப் பிரகாரமே லயிப்பிக்கக்கடவன். இந்தப் பிரகாரம் ஸ்தூல சரீரத்தை நசிப்பித்து, லிங்க சரீரத்தை சொல்லத்தக்க விஷயத்தோடுகூட வாக்கிந்திரியத்தை அக்கினியிலேயும், காரியத்துடனேகூட அஸ்தயிந்திரியத்தை இந்திரனிடத்திலேயும், நடையோடுகூட பாதயிந்திரியத்தை விஷ்ணுவினிடத்திலேயும், ரதிக்கிரீடையுடனேகூட உபஸ்தவிந்திரியத்தைப் பிரம்மாவினிடத்திலேயும், மல விசர்க்கத்துடனேகூட பாயுவிந்திரியத்தை மிருத்தியுவினிடத்திலேயும், அந்தந்த ஸ்தானங்களை அதிக்கிரமியாமல் சேர்க்கக்கடவன். சப்தத்துடனேகூட சிரவண விந்திரியத்தை திக்குகளிலேயும், ஸ்பரிசத்தோடு துவக்கிந்திரியத்தை வாயுவினிடத்திலேயும், ரூபத்தோடுகூடச் சுரோத்திரேந்திரியத்தை சூரியனிடத்திலேயும், ரசத்துடனேகூட சிகுமிந்திரியத்தை அப்பிலேயும், கந்தத்துடனேகூட கிராணேந்திரியத்தைப் பூமியிலேயும் சேர்க்கக்கடவன்.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



*மோக்ஷ சாதகமான யதிதர்மமும் ஒரு அவதூத விருத்தாந்தத்தினாலே தபசில் சித்தியை யுடையவனது அவஸ்தையும் வர்ணிக்கப்படுகின்றது.*

### நாரதர் வாக்கியம்

தர்மராஜனே! இந்தப்பிரகாரம் வானப்பிரஸ்தன் சுதர்மானுஷ்டானத்தில் சக்தனாகாவிட்டால், முன்சொன்ன பிரகாரத்தினாலே தியானம்பண்ணி உபவாச தீக்ஷையைப் பண்ணக்கடவன். சுதர்மானுஷ்டானத்தில் சக்தனாகில் முன்சொன்ன பிரகாரமே தியானம் பண்ணி சன்னியசிக்கக்கடவன். இப்படி தியானம்பண்ணி சன்னியசிச்சுவிரக்தனாய் சரீரத்தைக்கொண்டு அஸ்தமனமாகிற கிராமத்திலே அந்த ராத்திரி மாத்திரம் வாசம் பண்ணிக்கொண்டு சஞ்சரிக்கக்கடவன். சந்நியாசியானவன் வஸ்திரத்தைத் தரியாமல் கௌபீன மாத்திரந் தரித்தவனாய் ஆபத்தில்லாத வேளையிலே

தனக்கு அடையாளமான தண்டமுதலானதைத் தவிர மற்றொன்றைத்தரிக்கக்கூடாது. இந்தப் பிரகாரம் யதியானவன் ஆத்மானுபவ பரனாய் வேறொரு ஆஸ்ரயமில்லாமல் சர்வப் பிராணிகளுக்கும் சுகிர்தனான நாராயணனையே பிராப்பியராக நிச்சயித்தவனாய் ஒருவனாகவே சஞ்சரிக்கக்கடவன். சாக்கிர அவஸ்தை சுழுத்தி அவஸ்தை இவைகளுடைய சந்தியிலே ஆத்மநிஷ்டனாயிருக்கக்கடவன். நிச்சயமாக உண்டாகும் மரணத்தை யடைவதற்கும், அனித்தியமான வாழ்க்கையை விடுவதற்கும், எப்போதும் சித்தமாயிருந்துக் கொண்டு ஜீவனசாதனமான சிற்பவித்தை முதலானதை விட்டவனாயும், வேதத்தினாலே சங்கை பண்ணுநின்ற தர்க்கங்களை யெல்லாம் விட்டவனாயும், இருக்கக்கடவன்.

இனிமேல் பரம அங்கிசர்களான யதிகளினுடைய விசேஷ தர்மம் சொல்லப்படுகிறது. சாந்தனாயும், சமசித்தனாயுமிருக்கிற தத்துவக்கியானத்தையுடைய யதியானவன் தனது ஆசிரமத்தை உலக நிமித்தமாகத் தரிக்கவும் விட்டு விடவுங்கூடும். கியான பரிபக்குவத்தையுடைய சந்நியாசியானவன் இதரர்களாலே அறியப்படாதபடி ஜாதியாதி வேஷத்தையுடையவனாயும், பிரயோசன அபேக்ஷை யில்லாதவனாயும், உன்மத்தன்போலவும், பாலன்போலவும், பிரமானுபவத்திலே கியானனாயிருந்தாலும், ஊமைபோலும் இருந்து கொண்டு சஞ்சரிக்கக்கடவன். இந்தப் பரம அங்கிசனுடைய ஒழுக்கத்திற்கு பெரியோர்கள் பிரகலாதனுக்கும் அசகரவிருநிஷ்டனான குருமுனிக்கும் சம்வாதரூபமாயும் புராதனமாயுமிருக்கிற இந்த இதிகாசத்தை உதாரணமாகச் சொல்லுவார்கள். அதாவது, பகவத்பிரியனான பிரகலாதனானவன் உலகங்களுடைய இயல்பை அறியவேணுமென்கிற இச்சையினாலே சில மந்திரிகளுடனே உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டு சயிக பர்வதத்தினுடைய தாழ்வரையிலே காவேரிக்குச் சமீபமான பூப்பிரதேசத்தில் படுத்துக்கொண்டும் அழுக்கடைந்த தேக அவயவங்களினாலே மறைந்திருக்கிற பிரமதேஜஸை யுடையவனாயுமிருக்கிற ஒரு முனியைக்கண்டான். ஒருவராலேயும் இன்னானென்று அறியக்கூடாத அந்த முனியைப் பிரகலாதன் கண்டு வேதவிதிப்படி வணங்கி பிரஸ்னம் பண்ணுகிறான்:

பிரகலாதன் வாக்கியம்

வாரீர் முனிவரே! உலகத்திலே திரவியத்துக்காக வியாபாரங்களைப் பண்ணி திரவியம் சம்பாதிக்கிறவனுக்கல்லவோ

தேகம் பருத்திருக்கும். வாரீர் பிரம நிஷ்டரே! வியாபார சூனியராய் சயனித்துக்கொண்டிருக்கிற உமக்குச் சரீரமானது எந்த ஏதுவினலே பருத்திருக்கின்றதோ, அதை எனக்குச் சொல்லக் கூடியாளுல் சொல்லவேண்டுமென்றனன். அம் முனியானவர் அந்த பிரகலாதனுடைய வாக்காகிற அமிர்தத்தினலே வசிகரிக்கப் பட்டவராய் சிரித்துக்கொண்டு அந்தப் பிரகலாதனைப் பார்த்து சொல்லுகின்ருர்:

நாரதர் வாக்கியம்

வாராய் அசுரசிரேஷ்டனே! பெரியோர்களுக்குச் சம்மதனை நீ கியானதிருஷ்டியினலே இந்தஉலகத்தில் மனுஷியர்களுடைய பிரவர்த்தி நிவர்த்தி மார்க்கங்களுடைய பலன்களையும், நன்ருக அறிந்தே யிருக்கிருய். ஸ்ரீமந் நாராயணன் அன்புடன் உன்னுடைய இருதயத்தில் எக்காலும் வாசம் பண்ணிக்கொண்டு அக்கியானமான விருளைச் சூரியன் போலப் போக்கடித்துக்கொண்டிருக்கிருர். ஆகையினல் உன்னுடைய பிரசினங்களை எனக்குத் தெரிந்தமட்டுஞ் சொல்லுகிறேன். பிரகலாதனனே! சம்சாரப் பிரவாகத்தைப் பெருக்கா நின்றும், ஆசையினலே கர்மமார்க்கத்திலே பிரவர்த்தித்துக்கொண்டு மிருந்த நான் முன்னே நாஞவித ஜன்மங்களிலே கூட்டிவைக்கப் பட்டேன். அந்தப் புண்ணிய பாபகர்மங்களினலே சுழலாநின்ற நான் சொர்க்க மோக்ஷங்களுக்கும் திரியக் ஜன்மங்களுக்கும் மனுஷிய ஜன்மத்துக்கும் துவாரமாயிருக்கிற இந்த மனுஷிய ஜன்மத்தைத் தன்னிச்சையாக அடைவிப்பிக்கப்பட்டேன். இந்த சீவனுடைய நிரதிசயசுக சொரூபமானது சர்வகர்மங்களுடைய நிவர்த்தியிலே தனக்குத் தானே பிரகாசிக்கிறது. கர்மபோகங்களை மனேரத மூலங்களாய்க்கொண்டு, அனித்தியமென்று பார்த்து, வியாபாரத்தை விட்டவனுய் பிராரப்த கர்மபலன்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். மூடனைவன் ஜலத்திலே யுண்டாகாநின்ற பாசி புல்லுகள் முதலானவைகளினலே மறைக்கப்பட்டிருக்கிற ஜலத்தை அறியமாட்டாமல் விட்டு, ஜலம் வேணுமென்கிற இச்சையினல் கானலைக்கண்டு ஜலமென்று ஓடுவதுபோல, புருஷன் தன்னிடத்திலிருக்கிற பரமாத்மாவை விட்டு அப்பாலே தேடுகிருன்.

வியாதிகளினலேயும், மனேவிகாரத்தினலேயும், சோராதியுபத்திரவங்களாலேயும், ஒருக்காலும் விடப்படாமலிருக்கிற இந்த மனுஷியனுக்கு மகாபிரயாசத்தினலே அடையப்பட்ட அர்த்த-காமங்களினல் என்ன பிரயோஜனம்? ஆகையினல்

நான் இவைகளையெல்லாம்விட்டுத் தனக்குத்தானேயுண்டான சந்தோஷத்துடனேயும், அற்பமாயும் வெகுவாயும், மதுரமாயும் மதுரமில்லாமலும், சிரத்தையுடனேயாவது சிரத்தையில்லாமலாவது கொடுக்கப்பட்டதையும், பகலிலே யாகட்டும் இராத்திரியிலே யாகட்டும் தனக்குத்தானே பிராப்தமான அன்னத்தைப் புசித்துக்கொண்டும், பட்டு பீதாம்பரம் கிருஷ்ணாசனம் மரவுரி சீரணவஸ்திரம் இவைகளிலே பிராப்தமானதை சந்துஷ்டனாய்த் தரித்துக்கொண்டும் மரத்தினிழலில் பூமியில் உப்பரிகையின்மேல் கட்டிலில் சயனித்துக்கொண்டும், ஸ்நானம் பண்ணினவனாய் கந்தாதிகளையும் நல்ல வஸ்திரங்களையும் தரித்துக்கொண்டவனாய், ரதம்-அஸ்வம்-கஜம் இவைகளினாலே சஞ்சரித்தும், திகம்பரனாய் பிசாசம் போலே சஞ்சரித்துக்கொண்டு மிருப்பேன். சுபாவமாக ஒருத்தன் போலிராமல் வேறுவேறாயிருக்கிற ஜனங்களை நான் நிந்திக்கிறதுமில்லை, ஸ்துதிக்கிறதுமில்லை. வாராய் பிரகலாதனனே! நீ மகா பாகவதனாகையால் என்னுடைய சரித்திரமானது நம்மாலே சொல்லப்பட்டதென்று சொல்ல, அசுரராஜனான பிரகலாதனானவன் அந்த முனியினாலே சொல்லப்பட்ட பரம அங்கிசர்களுடைய தர்மத்தைக்கேட்டு சந்துஷ்டனாய் அந்த முனிவரைப் பூசித்து அவருடைய உத்திரவைப் பெற்றுக்கொண்டு தன்னுடைய கிரகத்தையடைந்தான்.



## பதினான்காவது அத்தியாயம்



*சிரேயசுக்கு சாதனமான கிரகஸ்தனுடைய உத்தமமான தர்மம் சொல்லப்படுகிறது.*

யுதிஷ்டிரர் வாக்கியம்

தேவரிஷியே! சம்சாரத்திலேயே மிகவும் பற்றியிருக்கிற புத்தியையுடைய என்னைப்போலொத்த கிரகஸ்தனானவன் எந்த உபாயத்தினாலே மோக்ஷசாதனமான இந்த நிவர்த்திமார்க்கத்தைச் சீக்கிரமாக அடைவன்? அதையெனக்குச் சொல்லுமென்றுகேட்கும் தர்மபுத்திரரைப்பார்த்து நாரதமகாரிஷியானவர் சொல்லுகிறார்:

நாரதர் வாக்கியம்

மகாராஜனே! ஜனங்களுக்கு அனுக்கிரகத்தைப்பண்ணுகின்ற உன்னாலே நல்ல கேள்வி கேட்கப்பட்டது. எந்தத்

தர்மத்தினால் கிரகஸ்தன் பந்தயேதுவான கர்மத்தைச் செய்யாமலிருப்பனோ அதை யதார்த்தமாகச் சொல்லுகிறேன். கிரகாசிரம நிஷ்டனாயிருக்கிறவன் கிரகஸ்தாஸிரமத்திற்கு யோக்கியமான கர்மங்களை வாசுதேவார்ப்பணமாகச் செய்து கொண்டு பாகவதர்களான மகாமுனிகளை உபாசிக்கக்கடவன். பகவானுடைய புண்ணிய சரித்திரங்களைச் சிரத்தையுடன் கேட்டுக்கொண்டு, சத்துக்களுடைய சகவாசத்தினால் தனக்குத்தானே விட்டுவிடாநின்ற பாரியா - புத்திராதிகளிடங்களில் சங்கத்தை, நித்திரைபண்ணி யெழுந்த புருஷன் சொற்பனத்திற்கண்ட அர்த்தங்களை எப்படி விட்டுவிடுவனோ, அப்படி விட்டுவிடக்கடவன். மாதா - பிதா - புத்திராகள்- சகோதரர் இவர்களெதை இச்சிக்கிறார்களோ அதை மமதையை விட்டவனாய்க் கொடுத்து சந்தோஷிக்கக்கடவன். தனக்குக் கிடைக்கப்பட்ட தானியாதி சம்பத்துக்களை வைத்துக்கொண்டு தன்னுடைய நித்திய நைமித்திக கர்மங்களை நடத்தக்கடவன். மிருகம், பக்ஷி முதலான ஜந்துக்களைத் தன்னுடைய புத்திரர்களைப்போலப் பார்க்கக்கடவன். தான் புசிக்கும் வஸ்துக்களைப் பிறருக்குக்கொடுத்து உண்ணக்கடவன். யாதொருவன் தனது பாரியாள் நிமித்தம் மாதா-பிதா-குரு இவர்களை வஞ்சிக்கிறானோ, அவனாலே பகவானானவர் வேறு எந்த விதத்திலும் ஆராதிக்கப் படுவதில்லை. ஆகயின் பொருளிடத்தில் தனதென்கிற அபிமானத்தைவிட்டு நிவர்த்தி பரர்களுடைய மார்க்கத்தை ஆசரிக்கக்கடவன். தேவர்கள் ரிஷிகள் பிதுர்க்கள் பகவான் இவர்களை நாள் தோறும் ஆராதிக்கக்கடவன். தனவானான புருஷனானவன் கன்னியாமாதத்தில் மாதாபிதாக்களுக்கும் பந்துக்களுக்கும் தன்னுடைய திரவியானுசாரம் மகமஹாளய சிரார்த்தத்தைப் பண்ணக்கடவன். ஆகையினால் மனுஷியர்கள் புண்ணிய காலங்களிலே ஜன்ம சாபல்லியமான அந்தச் சுதர்மங்களைச் செய்துக்கொள்ளக் கடவர்கள்.

வாராய் தர்ம நந்தனனே! இனிமேல் தர்ம முதலான சிரேயசுக்குச் சாதனமான புண்ணிய தேசங்களைச் சொல்லுகின்றேன். பகவானுடைய பிம்பரூபமாகிய சற்பாத்திரமான பிராமணனெங்கே லபிக்கிறானோ, அதுவே கர்மங்களுக்கு யோக்கியமான புண்ணிய தேசம். தபசு, வித்தை, நற்செய்கை இவைகளோடுகூடின பிராமணகுல மிருக்கிற விடங்கள் சிரேயசுக்கு ஸ்தானமாக விருக்கிறது. புராணப் பிரசித்தமான கங்கை முதலான புண்ணிய நதிகளின் உற்பத்தி ஸ்தானங்களும், நதிதீரங்களும், சரசுக்களும், பாகவதர்கள் வாசம்

பண்ணும் புஷ்கர முதலான க்ஷேத்திரங்களும், தர்மஞ்செய் வதற்குப் பொருத்தமான புண்ணிய க்ஷேத்திரங்களாக விருக் கும். இந்த க்ஷேத்திரங்களிலே பண்ணப்பட்ட தர்மமானது புருஷர்களுக்குச் சகல நற்பலன்களையும் கொடுக்கும்.

வாரீர் தர்மபுத்திரரே! உம்முடைய இராஜசூய யாகத் திலே தேவரிஷிகளாயும் தபோயோகாதி சித்தர்களாயு மிருக்கிற சனற்குமாரர் முதலான ரிஷிகள் இருக்கின்றபோது எந்தக்காரணத்தினலே ஸ்ரீ கிருஷ்ணர் சற்பாத்ரமாக உக்கிர பூசைக்குப் பாத்திரமாகப் பண்ணப்பட்டார். ஆகையினலே அந்த ஸ்ரீ ஹரியே முக்கிய பாத்ரமென்று அறியத்தக்கது. தேவர்கள் திரியக்குகள் மனுஷியர்கள் ஸ்தாவரங்கள் எனும் நான்கு வகைப்பட்ட சரீரங்களும் அச்சுதனல் சிருஷ்டிக்கப் பட்டவைகளென்று அறியத்தக்கது. இப்படி யிருந்தாலும் திரேதாதியுகங்களில் மனுஷியர்களெல்லாருக்கும் பூசையி லேயே புத்தியிருக்கிறதைப் பார்த்து, பூஜார்த்தமாகக் கியானி களினலே ஸ்ரீ ஹரியினுடைய அர்ச்சா விக்கிரகமானது பண்ணப்பட்டது. சிலபேர் அந்த அர்ச்சாவிக்கிரகத்திலே ஸ்ரீ ஹரியை சிரத்தையுடன் பூசையினலே யுபாசிக்கிருர்கள். இப்படி உபாசிக்கப் பட்டிருந்தாலும் அந்த அர்ச்சாரூபியான பகவான் புருஷத்துவேஷிகளான பேருக்குப் பலத்தைக் கொடுக்க மாட்டான். அந்தப் புருஷர்களுக்குள்ளேயும் தபசு வித்தை சந்தோஷம் இந்தக் குணங்களுடனேகூட ஸ்ரீ ஹரியினுடைய ரூபமான வேதத்தை சர்வகாலமும் பரியா நின்ற பிராயணனை உத்தமப் பாத்திரமாகச் சொல்லுவார்கள்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*மோக்ஷ சாதனமான சமஸ்த வர்ணுச்ரம தர்மங்கள் வர்ணிக்கப்படுகிறது.*

### நாரதர் வாக்கியம்

வாரீர் தர்மராஜனே! சில பிராமணர்கள் கர்மநிஷ்டர்க ளாயும், சிலர் தபோநிஷ்டர்களாயும், சிலர் வேதாத்தியயன பரர்களாயும், சிலர் மனன நிஷ்டர்களாயும், சிலர் கியான- யோக நிஷ்டர்களாயு மிருக்கிருர்கள். இவர்களுக்குள் கியான நிஷ்டனுக்கே கர்மத்தினுடைய அனந்த பலத்தை கோராநின்ற புருஷனலே பிதுர்க்களை உத்தேசித்துக் கொடுக்கப்பட்ட கவ்வியங்களும் தேவதைகளை உத்தேசித்துக்

கொடுக்கப்பட்ட அவ்வியங்களும் கொடுக்கத்தக்கன. அப்படிப்பட்டவன் கிடையாமற்போனால் இதரர்களுக்குள்ளே கியானத்திற் சிறந்தவர்களுக்கு அவை கொடுக்கத்தக்கவையாம். மகதைஸ்வரியத்துடனே கூடினவனும் சிரார்த்தம் பண்ணும்போது விசுவதேவஸ்தானத்தில் மூன்றுபேரையும் வைக்கக் கடவன். அது கூடாவிட்டால் இந்த இரண்டு ஸ்தானத்திலேயும் ஸ்தானமொன்றுக்கு ஒருவனையாகிலும் வைத்து சிரார்த்தம் பண்ணக்கடவன். சிரார்த்தம் பண்ணும்போது வெகுபேர் யோக்கியர்களிருந்தாலும் முன்சொன்ன கணக்குக்கு அதிகமானவர்களைவைத்துப் பண்ணக்கூடாது. தர்மத்தினுடைய தத்துவத்தை அறிந்தவன் சிரார்த்தத்திலே மாம்சத்தைக் கொடுக்கமாட்டான். அது எவ்விதத்திலும் கூடாதது. அதை தானும் புசிக்கலாகாது. அன்னங்களினாலே பிதுர்தேவதைகளுக்குத் திருப்தி செய்யவேண்டியது. தேவர்கள் - பிதுர்க்கள் - ஆத்துமசுவஜனம் இவர்களுக்கு அன்னத்தைக் கொடுத்துக்கொண்டு சாவத்தையும், பகவத் ரூபமாகப் பார்க்கக்கடவன். சிரேஷ்டமான தர்மத்தைக் கோருகின்ற மனுஷியர்களுக்கு மனோவாக்குக் காயங்களினாலேயும் பிராணிகளை இம்சியாமலிருத்தற்கு ஒப்பான தர்மம் வேறொன்றில்லை. புருஷனானவன் திக்குகளையும் சகல பூமியையும் ஜயித்து அனுபவித்தாலும் ஆசையினுடைய அந்தத்தை யடையமாட்டான். வெகு சாஸ்திரங்களை அறிந்தவர்களாயும், சகலசம்பத்தைப் போக்கடித்தவர்களாயுமிருக்கிற வெகுபேர்கள் சந்தோஷ மில்லாததினாலே அதோகதியை யடைந்தார்கள்.

யாகாதி கர்மங்களும், மோக்ஷசாதனமாக மாட்டா. எவன் மோக்ஷத்தையடைய விரும்புகிறானோ அவன் விஷய ஆசக்தியை விட்டவனாயும், பிரதிக்கிரகத்தை விட்டவனாயும், மனுஷியர்களில்லாத விடத்திலே வாசம் பண்ணிக்கொண்டு, ஒருவனாய்க் கிடைத்த அன்னத்தை மிதமாக புசித்துக்கொண்டு, சன்னியாசம் பண்ணிக்கொண்டவனாகி, சமபூமியில் சுசியான பிரதேசத்திலே ஸ்திரமான ஆசனத்தை ஸ்தாபித்துக் கொண்டு அதிலே நெறித்துகொண்டிருக்கிற, அங்கத்தையுடையவனாய் பிரணவத்தை உச்சரித்துக்கொண்டு சுகமாயிருக்கக்கடவன். இந்தப்பிரகாரம் மூக்குமுனையிலே திருஷ்டி வைத்தவனாய் எவ்வளவு காலம் தன்மனதானது சகல கர்மங்களையும் விட்டுவிடுகிறதோ, அவ்வளவு காலபரியந்தம் பூரகமென்னப்பட்ட சுவாச ஆக்ரிஷணமும், கும்பகமென்கிற சுவாசத்தைப் பூரித்தலும், ரேசகமென்னப்பட்ட சுவாசத்தை

விடுதலும் இவைகளினுலே பிராணுபானங்களை நிரோதிக்கக் கடவன். வித்துவானுனவன் விஷயங்களையே நாடும் மனதை இழுத்து அடக்கி தன்வயப்படுத்துகிருன்.

பலாபேக்ஷையில்லாமல் மனோவாக்குக் காயங்களினுலே செய்யப்பட்ட கர்மங்களைச் சாக்ஷாத் பரப்பிரமமான ஸ்ரீமந் நாராயணனிடத்திலே மனோவாக்குக் காயங்களினுல் சமர்ப்பித்தல் கிரியாத்துவ இதமென்றும், தனக்கும் தன்னுடைய புத்திர - மித்திர - களத்திராதிகளுக்கும் மற்றுமுள்ள பிராணிகளுக்கும் ஐக்யபாவனை யாதொன்றுண்டோ அதுவே திரவியாத்துவ இதமென்றும் சொல்லப்படும். எந்தத் திரவியம் எந்த உபாயத்தினுல் எவ்விடத்தில் எவனுக்கு நிஷிதமாகாம லிருக்கிறதோ, அந்தப் புருஷன் அந்தத் திரவியத்தினுலே சுதர்மங்களைச் செய்யக்கடவன்.

வாரீர் தர்மநந்தனரே! நீங்கள் தேவதைகளாலேயுந் தாண்டக்கூடாத ஆபத்துகளை யெல்லாம் பிரபுவான ஸ்ரீ கிருஷ்ணனுடைய கடாக்ஷத்தினுலே தாண்டி, ஜயிக்கக் கூடாத ராஜாக்களை யெல்லாம் ஜயித்து, இராஜசூய முதலான கிருதுக்களைச் செய்தீர்கள். அப்படிப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணனைச் சுதர்மானுஷ்டானபரனுன புருஷனுனவன் பஜிக்கக் கடவன். நான் பூர்வகல்பத்திலே கந்தர்வர்களுக்கெல்லாஞ் சிரேஷ்டனுயும், உப்பறுகணென்னும் பெயரினுல் பிரசித்தனுயும், ரூபம்-யௌவனம்-சவுந்தரியம்-பரிமளம் இவைகளினுலே சகலமானபேருக்கும் இஷ்டமான தரிசனத்தை யுடையவனுயும், ஸ்ரீகளுக்கு நித்தியம் மிகவும் இஷ்டனுயும், மகா சம்பத்தில் மதித்தவனுயும், கானகத்திலே சமர்த்தனுயு மிருக்கிற கந்தர்வனு யிருந்தேன். இப்படி இருக்கிறகாலத்தில் ஒருக்கால் தேவசத்திர மென்கிற மகாயாகத்திலே நவப் பிரஜாபதிகளாலே கந்தர்வர்களும் அப்சரஸ்திரீகளும் ஹரி சரித்திரத்தைக் கானம் பண்ணுகிறதற்காக அழைக்கப்பட்டார்கள். அப்போது நானும் அவர்களா லழைக்கப்பட்டதை யறிந்தவனுய் மதத்தினுலே கானம் பண்ணிக்கொண்டு ஸ்திரீகளால் சூழப்பட்டவனுய் எந்த எக்கியத்துக்குப் போனேன். அந்தப் பிரஜாபதிகள் அப்போது என்னைப் பார்த்து நீ ஹேளனம் பண்ணினுயாகையால் நஷ்ட ஐஸ்வரியனுய் சூத்திர ஜன்மத்தைச் சீக்கிரமாக அடையக்கடவா யென்று சபித்தார்கள். அந்தச் சாபத்தினுல் தாசியினிடத்திலே ஜனித்தேன். ஈனஜன்மத்திலேயும், பிரமக்கியானிகளுடைய சிசுருஷையினுலேயும், அவர்களுடைய சகவாசத்தி

ளாலேயும், திரும்பவும் பிரமபுத்திரனானேன். உங்களுக்குப் பிரியசுகிர்தராயும், ஏவற்றொழில் செய்கிறவராயு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ண பகவானானவன் மகான்களாலே தேடப்படா நின்ற பரப்பிரமமா யிருக்கின்றார். ஸ்ரீ கிருஷ்ணனுடைய நிஜரூபமானது பிரமருத்திராதிகளினாலும் உள்ளபடிக்கு அறிந்து வருணிக்கப்படவில்லை. பக்தர்களுக் கெல்லாஞ் சரணியரான அப்படிப்பட்ட பகவானானவர் மவுனம்-பக்தி-சாந்தி இவைகளினால் பூசிக்கப்பட்டவராய்ப் பிரசன்னமாகக் கடவரென்று தேவரிஷியான நாரதர் சொல்ல, தர்மராஜனானவர் மிகவும் பிரீதியை யடைந்தவராய், அந்த நாரதரையும் ஸ்ரீ கிருஷ்ணபகவானையும் பூஜித்தார்.



ஓம்

# அஷ்டமஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

*மனுவந்தரமானது வர்ணிக்கப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்



வாரீர் பரிக்ஷித்து மஹாராஜனே! இந்தப் படியே மனுவந்தரங்கள் தோறும் மனுபுத்திரர்கள், ரிஷிகள், தேவர்கள், இந்திரன், ஸ்ரீ ஹரி, இந்த ஆறுபேரும் தனித் தனியே வர்ணாசிரம விகித தர்மங்களை விருத்திபண்ணியும், ரக்ஷித்தும் அனுஷ்டானம் பண்ணியு மிருக்கிறார்கள். ஆகையால் மனுவந்தரத்துக்கு விகிததர்மமே லக்ஷணமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

வாரீர் பிரமநிஷ்டரான சுகயோகியே! இனிமேல் எந்த மனுவந்தரத்தில் விசுவசிஷ்டர்களான மரீசி முதலான பிரஜாபதிகளுக்கு மனுகன்னிகைக ளிடங்களிலே புத்திர பவுத்திராதி வங்கிஷங்களுண்டானதும், எந்தெந்த மனுவந்தரங்களில் ஸ்ரீ ஹரியானவர் அவதரித்தாரோ அதையும் கேட்கவேண்டுமென்கிற இச்சையுடனே கூடின எனக்குச் சொல்லவேண்டு மென்று பிரசினம் பண்ணுகின்ற பரிக்ஷித்து மகாராஜனைப் பார்த்து சுகப்பிரம்ம ரிஷியானவர் சொல்லுகின்றார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! இந்த கல்பத்திலே சுவாயம்பு முதலாகிய ஆறு மனுக்கள் அதிக்கிரமித்துப் போனார்கள். அவர்களுக்குள்ளே தேவாதிகளுக்கெல்லாம் உற்பத்தியை யுடையதான ஆதி மனுவினுடைய வம்சம் உமக்குச் சொல்லப்பட்டது. அந்த சுவாயம்பு மனுவினுடைய பெண்களாகிய ஆகூதி தேவஹூதி என்கிற இரண்டு

பேரிடங்களிலேயும், கர்பவுபதேச நிமித்தமாகவும், கியா
ஞோபதேச நிமித்தமாகவும், பகவானானவர் கபிலமூர்த்தி
யாகவும், எக்கியமூர்த்தியாகவும் புத்திரப்பாவத்தை யடைந்
தார். அந்த அவதாரங்களுக்குள்ளே கபிலோபாக்கியான
மும், சர்வ பூதங்களுடைய உற்பத்தியும், முன்னே சொல்லப்
பட்டது.

இனி பகவான் எக்கியமூர்த்தியாகி செய்ததைச் சொல்லு
கிறேன். கேளும், கர்ம யோகங்களிலே விரக்தராயும்,
சதருபை யென்கிறவளுக்கு பர்த்தாவாயு மிருக்கிற மனு
வானவர் விரக்தியை யடைந்தவராய் இராஜ்ஜியத்தை விட்டு
பாரியாசகிதராய் தபசுசெய்வதின்பொருட்டு வனத்திற் பிரவே
சித்து, சுனந்தாதி தீரத்திலே நூறுவருஷம் ஒருகாலால் நின்
றுக்கொண்டு ஒருவராலும் செய்யக்கூடாத தபசைச்செய்து
கொண்டு சமாதியிலே யிருந்தார். இந்தப்பிரகாரம் சமா
நிஷ்டராயிருக்கின்ற சுவாமியைப் பார்த்து அசுரர்களும்
இராக்ஷசர்களும் பசியினாலே பக்ஷிப்பதற்கு எதிராக ஓடிவந்
தார்கள். அப்படி வருகின்ற அசுரராக்ஷசர்களையறிந்து சர்வாந்
திரியாமியான எக்கிய பகவான் யாமாளென்கிற தம்முடைய
புத்திரர்களான தேவராலே சூழப்பட்டவராய் அந்த அசுர
ராக்ஷதர்களைச் சங்கரித்து சொர்க்கலோகத்தைத் தாமே
இந்திரனாகப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தார். சுவா
யம்பு மனுவந்தரத்திலே மனுசுவாயம்புவனும் பிரியவிருதன்
உத்தானபாதனென்கிற மனுபுத்திரர்களும் யாமாளென்கிற
தேவர்களும் மரீசி முதலான சப்தரிஷிகளும் எக்கியரென்கிற
ஸ்ரீ ஹரியினுடைய அங்கிசாவதாரமும் அவர்தானே இந்திர
னுமாக தர்மப்பிரவர்த்தனஞ் செய்து கொண்டிருந்தார்கள்.

இரண்டாம் மனுவந்தரத்தில் சுவாரோசிஷனென்கிற
அக்கினிபுத்திரனானவன் மனுவும். அந்த மனுவினுடைய
பிள்ளைகளும், ரோசனனென்கிற இந்திரனும், துஷிதர்கள்
முதலான தேவர்களும், பிரயவாதிகளான ரிஷிகளும், வேத
சிரனென்கிறரிஷிக்கு துஷிதை யென்கிற பத்தினியிடத்திலே
அவதரித்த ரிபுவென்கிற ஸ்ரீ ஹரியினுடைய அங்கிசாவதார
மும், இவர்களெல்லாம் தனித்தனியே தர்மப் பிரவர்த்தனம்
செய்துகொண்டிருந்தார்கள். கவுமாரதசையை யுடையவர்க
ளாயும் பிரமசாரிகளாயுமிருக்கிற எண்பத்தெண்ணாயிரம்
ரிஷிகள் விரதத்தை யுடையவராய் அந்தரிபுவென்கிற பகவா
னுடைய விரதத்தைக் கிரகித்து அனுஷ்டானம் பண்ணிக்
கொண்டிருந்தார்கள்.

மூன்றாவது மனுவந்தரத்திலே பிரியவிருத புத்திரனை உத்தமனென்பவனும் அவனது புத்திரர்களும் பிரமதன் முதலான வசிஷ்ட புத்திரர்களான சப்தரிஷிகளும் சத்தியர்களென்றும் வேதசுருதர்களென்றும் பத்திரர்களென்றும் பிரசித்தர்களான தேவர்களும் சத்தியசித்தனென்கிற இந்திரனும் தர்மராஜனுக்கு சூனிருதையென்கிற ஸ்திரீயினிடத்தில் சத்தியவிருதர்களோடுகூட அவதரித்து சத்தியசேனரென்று பிரசித்தரான பகவானும் தனித்தனியே தர்மப்பிரவர்த்தனஞ் செய்து கொண்டிருந்தார்கள். அந்தச் சத்தியசேனனென்கிற பகவான் சத்தியசித்தென்கிற இந்திரனுக்கு சகாவாய் அசத்தியவாதிகளாயும், சீலமில்லாதவர்களாயும், பூதத்துரோகிகளாயும், அசத்துக்களாயு மிருக்கிற யக்ஷராக்ஷச பூதகணங்களைச் சங்கரித்தார்.

நாலாவது மனுவந்தரத்திலே உத்தமனுக்குப் பிராதாவாகிய தாபசனென்கிற மனுவும், அந்த மனுவினுடைய விருஷன், கியாதி, நரன், கேது, முதலான புத்திரர்கள் பதின்மரும், சத்தியகரனென்றும், அரிகனென்றும், வீராளென்றும் பெயரையுடையவர்கள் காலவசத்தினாலே நஷ்டமான வேதங்களைத் தங்களுடைய தேஜசினால் தரித்துக்கொண்டு, விதிர்த்திரியினுடைய புத்திரர்களாகையால் வைதிருதிகளென்று பிரசித்தர்களான தேவர்களும், திரிசிகனென்கிற இந்திரனும், சோதிவியோமர் முதலான சப்தரிஷிகளும், அரிமேதசுவென்கிற ரிஷிக்கு அரிணி யென்கிற ஸ்திரீயினிடத்திலே அவதரித்து ஸ்ரீ ஹரியென்று பெயரை யுடையவராயும், முதலையினாலே கிரசிக்கப்பட்ட கஜேந்திரனை விடுவித்த அந்தப்பகவானும், தனித்தனியே தர்மப் பிரவர்த்தனஞ் செய்து கொண்டிருந்தார்களென்று சொல்லுகின்ற சுகப்பிரம ரிஷியைப்பார்த்து பரிக்ஷித்துமகாராஜன் சொல்லுகின்றார்.

பரிக்ஷித்து வாக்கியம்.

வாரீர் சுகயோகியே! பகவானான ஸ்ரீ ஹரியானவர் முதலையினாலே கிரசிக்கப்பட்ட கஜேந்திரனை எந்தப்பிரகாரம் விடுவித்தாரோ, அதைக்கேட்க வேண்டுமென்று இச்சிக்கிறேன். புண்ணிய கீர்த்தியான பகவான் எந்தெந்தக் கதைகளில் கீர்த்திக்கப்படுகிறாரோ, அந்தக் கதைகளே புண்ணியகரங்களாயும், கீர்த்திகரங்களாயும், தனப்பிரதங்களாயும், மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமாயு மிருக்கும். ஆகையால் அதைச் சொல்லவேணுமென்று கங்காத்துவாரத்திலே பிராயோபவேசம் பண்ணின பரிக்ஷித்துவுக்கு சுகயோகி

யானவர் அங்குள்ள பிராமணர்களையும் ராஜாவையும் சந்தோஷிப்பித்து சதசிலே மகாரிஷிக ளெல்லாம் கேட்டுக்கொண்டிருக்க கஜேந்திர உபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கினார்.



## இரண்டாவது அத்தியாயம்



*தெய்வ வசத்தினால் கஜேந்திரன் முதலையால் பீடிக்கப்பட்டமை சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! திரிகூடமென்கிற பெயரினாலே பிரசித்தமாயும் க்ஷீரசமுத்திரத்தினால் சூழப்பட்டும் காந்தியுடனே கூடினதாயும் பதினாயிரம் யோசனை உயரத்துடனே கூடினதாயுமிருக்கிற ஒரு சிரேஷ்ட பர்வதம் உண்டாயிருக்கிறது. அந்த பர்வதமானது நாலுபக்கங்களிலேயும் பதினாயிரம் யோசனை விஸ்தாரத்துடனே கூடினதாயும், வெள்ளி-இரும்பு-சொர்ன மயமாயுமிருக்கிற மூன்று சிகரங்களினால் அந்த க்ஷீர சமுத்திரத்தையும், பத்துத் திக்குகளையும் பிரகாசிப்பித்துக்கொண்டு, மற்றும் இரத்தினங்களினாலேயும், நானாவித விருக்ஷங்களினாலேயும், அருவிப்பாய்ச்சல்களினாலேயும், பிரகாசித்துக்கொண்டிருக்கும். பின்னையும் அந்தப் பர்வதமானது நிர்மலமான ஜலத்தையுடைய நதிகளோடும் தடாகங்களோடும், நவரத்தினமயமான மணல்களையுடைய மணற்குன்றுகளுடனேயுங் கூடிக்கொண்டும், அப்சரஸ்திரீகள் வந்து ஸ்நானம் பண்ணுகையால் அவர்களுடைய கந்தங்களாலே பரிமளித்துக்கொண்டிருக்கிற ஜலங்களையும் காற்றுகளையும் உடையதாயுமிருக்கிற அந்தப் பர்வதத்தில் வளமைதங்கிய ஒரு சரசு இருக்கின்றது.

அந்தச் சரசிலே ஒருக்கால் அந்தத் திரிகூட பர்வதத்தின் காடுகளிலே சஞ்சரியாநின்ற ஒரு யானையானது அனேகம் பெண்யானைகளாலே சூழப்பட்டதாய்ச் சஞ்சரித்துக்கொண்டு, தாகத்தினாலே பீடிக்கப்பட்டும் அந்தச் சரசை வந்தடைந்து, அதில் முழுகி தனது தும்பிக்கை நுனியினால் வீசப்பட்ட ஜல பிந்துக்களினால் யானைப்பேடுகளையும் குட்டிகளையும் ஸ்நானம் பண்ணிவைத்துக்கொண்டு ஈஸ்வர மாயையினாலே பிராப்தமான சங்கடத்தை அறியாம லிருந்தது. வாராய் ராஜனே! அந்தச் சரசிலே இந்தப் பிரகாரமிரா

நின்ற அந்தக் கஜேந்திரனைத் தெய்வத்தினாலே ஏவப்பட்ட தாயும் பலத்தையுடைய தாயுமிருக்கிற ஒரு முதலையானது கோபத்துடனே கா்லில் பிடித்துக்கொண்டது. அப்போது மகாபலமுள்ள யானையரசு தன்னால் கூடியவரைக்கும் முதலையை இழுக்கத் தொடங்கிற்று. முதலை கஜேந்திரனை தன் பலத்தைக் கொண்டு மடுவின் மத்தியில் இழுக்கத்தொடங்கிற்று. இதைப் பார்த்து கரையிலுள்ள யானைப்பேடுகளும், யானைகளும், துக்கப்பட்டுக்கொண்டு அந்தக் கஜேந்திரனை விடுவிக்க மாட்டாமல் வீறிட்டுக் கொண்டிருந்தன. இவ்விதம் யானைக்கும், முதலைக்கும் ஆயிரம் வருஷம் யுத்தம் நடந்தது.

ஆகார முதலியவை யின்மையாலும் முதலையால் இத்தனை வருஷம் அடைந்த கஷ்டத்தாலும் யானையரசு என்பு மயமாயிளைத்து யாதும் முடியாமல் அசைவற்றிருந்தது. முதலையோவெனில் தனது இயற்கை வாசஸ்தானமாகிற குளத்திலேயே இருந்தமையால் பலம் உற்சாக முதலியவைகளால் மேன்மைப்பட்டது. தன்னால் கூடியவரைக்கும் முதலையால் நேர்ந்த ஆபத்தினின்றும் மீள முடியாமல் கடைசியாய் கடவுளையல்லாமல் வேறொருவரும் தன்னை காத்தற்குரியவர் இல்லை என்று உணர்ந்துகொண்டது.



## மூன்றாவது அத்தியாயம்



ஸ்ரீ ஹரியானவர் கஜேந்திரனை விடுவித்து முதலையை சாபத்தில் நின்றும் விடுவித்தமை சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

யானையினது சரீர வலிவு குறையவே, தனது துதிக்கையை ஆகாயத்தில் நீட்டி, சர்வபரி பூர்ணவஸ்துவே! எல்லா உலகங்களையும் படைத்தும், காத்தும், அழித்தும், தான் மாத்திரம் மாறுபடாது நின்ற மூல காரணமானவரே! மேலான ஆனந்த மெனும் கடலில் குளிக்கும் பரிசுத்த புருஷர்களது மனதிலும் வேதங்களின் அந்தத்திலும் மேவிய பரிசுத்த பகவானே! என்று கூச்சலிட்டது.

வேத சாஸ்திரங்களை ஒருமுறையாகக் கற்று உணர்ந்து அதனால் பரந்த உண்மையான ஞானத்தையடைந்தவர்களது மனமெனும் தாமரைப் புஷ்பத்தை யடைந்திருக்கும் சோதி, பொன்னில் பிரகாசிக்கும் ஒளியைப்போல யாருக்கும் தீமை யுண்டாகாதபடி தனது கிருபையால் யாருக்கும் தெரியாமல்

பொருந்தியிருக்கும் ஆதிமூலன் வந்து என்னை இப்பொழுதே காக்கவேண்டுமென கஜேந்திரனாகிய யானை அழைத்தது.

யானையினது அபய குறலைக்கேட்டு பிரமா சிவன் முதலிய தேவர்களும் தம்மை யானை யழைத்திலதே என் செய்வது, அதனால் அழைக்கப்படும் மூலகாரணன் நாராயணனே யாதலின் அவன் வந்து காக்கவேண்டும் என்று தியானம் செய்தார்கள். அப்போது சேதன சேதன சரீரியாகையால் சர்வதேவ சொரூபியான ஸ்ரீ ஹரியானவர் கஜேந்திரனாலே பண்ணப்பட்ட ஸ்தோத்திரத்தைக் கேட்டு அவனைப் பிராண சங்கடத்தில் நின்றும் நீக்கும் பொருட்டு தேவர்களோடு கூடவே தபயனை கருடனால் வகிக்கப்பட்டவராய்-சக்கிராயுதராய்-கஜேந்திரன் முறையிட்டுக் கொண்டிருக்கிற விடத்திலே சீக்கிரமாக ஆவிர்ப்பவித்தார்.

கஜேந்திரன் கமலை கேள்வனது காணுதற்கரிய பெருங் காக்ஷியைக் கண்டு, தனது துயர் தீர்ந்தது எனும் துணிவால் அன்பு மிகுந்து தனது துதிக்கையை உயரவெடுத்துக் கொண்டு மகாப்பிரயாசையோடு அகில ஜகத்குருவே! நாராயணனே அடியேனை யாட்கொள்வானெழுந்தருளிய எந்தையே! பகவானே! உமக்குப் பிரணாமமென்று சொல்லிற்று. அப்போது பகவான் முதலையினாலே கவ்வப்பட்டு பிராணசங்கடத்தை யடைந்த கஜேந்திரனைப் பார்த்துத் தம்முடைய மகத்தாகிய கிருபையினாலே அதிவேகமா யிறங்கிச் சரசில் கஜேந்திரனை உத்தாரணம் பண்ணிச் சீக்கிரத்தில் முதலையினது முகத்தைப் பிளந்து தேவர்களெல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கக் கஜேந்திரனை முதலைவாயில் நின்றும் விடுவித்தார்.



## நான்காவது அத்தியாயம்



*முதலை சாபம் நீங்கி கந்தர்வரூபத்தை யடைந்ததும் கஜேந்திரன் விஷ்ணு பாரிஷதர்களுக்குள்ளே ஒருவனாகச்செய்து தம்முடைய ஸ்தானத்தை அடையச் செய்தமையும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! அப்போது பிரமருத்திரர்கள் முதலிய தேவர்கள் - ரிஷிகள்-கந்தருவர்கள். இவர்களெல்லாம் ஸ்ரீ ஹரியினுடைய அதியற்புதமான கஜேந்திர மோக்ஷத்

தைக் கொண்டாடிக்கொண்டு புஷ்பவருஷங்களை வருஷித்தார்கள். தேவதுந்துமிகள் சப்தித்தன. ஸ்ரீ ஹரியினுடைய சக்கரத்தினால் பிளக்கப்பட்ட அந்த முதலையும் அந்த க்ஷணத்திலேயே தேவலரிஷியினுடைய சாபத்தில் நின்றும் விடுப்பட்டு, முன்போல ஊஹூவென்னும் பெயரையுடைய கந்தர்வ ரூபத்தைத் தரித்து புண்ணிய கீர்த்தியாய் நிர்விகாரராய் கீர்த்திக்கத்தக்க குணங்களையுடைய பகவானைப் பிரணாமம் பண்ணி, சகலமானபேர்களும் பார்த்துக் கொண்டிருக்கக் கந்தர்வ லோகத்தையடைந்தான். கஜேந்திரனும் பகவானுடைய ஸ்பரிசத்தினால் அக்கியான பந்தத்தில் நின்றும் விடப்பட்டவனாய் சதுர்ப்புஜனாய் பீதாம்பரதாரியாய் பகவானுடைய சாரூப்பியத்தை யடைந்தான்.

அந்த கஜேந்திரனானவன் முன்னே திரவிடாளிலே சிரேஷ்டனாய்ப் பாண்டியனென்று பிரசித்தனாகப் பாண்டிய தேசாதிபதியாய், இந்திரத்துய்மனென்று பிரசித்தமானவனாய் மலயபர்வதத்தில் தபசுபண்ணிக்கொண்டிருந்தான். இப்படியிருக்கின்ற சமயத்திலே அந்த ஆஸிரமத்திலே அகஸ்தியர் அனேக சிஷ்யர்களால் சூழப்பட்டவராய் அவ்விடத்திற் கெழுந்தருளினார். இராஜாவானவர் அர்க்கியபாத்தியாதி உபசாரங்களினாலே தம்மைப் பூசை பண்ணாமலிருப்பதை அகஸ்தியரிஷியானவர் கண்டு கோபித்துக்கொண்டவராய் அக்கியான அந்தகாரத்திற் பிரவேசித்து யானையைப்போல மதித்திருந்தமையால் அவன் யானையே ஆகக்கடவனென்று சபித்துவிட்டு, அஸ்தியரானவர் சிஷியகணங்களால் சூழப்பட்டவராய்ப் போய்விட்டார். அப்பால் ராஜரிஷியான இந்திரத்துய்மனும் அந்தச்சாபத்தை தெய்வகதியால் நேரிட்டதென்றெண்ணிக்கொண்டு ஆத்மக்கியானத்தை நாசம் பண்ணும் கஜ ஜன்மத்தை அடைந்தான். பிற்பாடு ஸ்ரீ ஹரியினுடைய ஆராதனப் பிரவாகத்தினால் கஜ ஜன்மத்திலேயும் அனுசரிக்கப்பட்ட கியானத்தையுடையவனானான், கருடத்துவஜனான பத்மநாபன் இந்தப்பிரகாரம் கஜேந்திரனை விடுவித்து தம்முடைய பாரிஷிதர்களுக்குள்ளே ஒருவனாக்கிக் கொண்டு தன்னோடுகூட கந்தர்வர்கள்-சித்தர்கள் முதலியவர்களாலே கானம் பண்ணப்பட்டவராய் அதியற்புதமான வைகுண்ட புவனத்தை அடைந்தார். வாராய் மகாராஜனே! கீர்த்திகாமயும் கலிதோஷ ஹரமாயுமிருக்கிற இந்த கஜேந்திர மோக்ஷத்தை தியானம் பண்ணுகிறவர்கள் சகல பாபத்திலிருந்தும் விடுபடுவார்கள்.

## ஐந்தாவது அத்தியாயம்

ஐந்தாவது மநுவாகிய ரைவதன் ஆறுவது மநுவாகிய சாட்சூசன் எனும் இரு மனுக்களின் கால வர்ணனை சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! இனியுனக்கு ரைவத மனுவந்தரத்தைச் சொல்லுகிறேன். நான்காவதான தாபசமனுவுக்குச் சகோதரனுகிய ரைவதனென்கிற பிரசித்த ராஜா ஐந்தாவது மனுவானுன். அர்ச்சுனன் பலி விந்தியன் இவர்கள் முதலானபேர்கள் இந்த மனுவினுடைய புத்திரர்கள் விபுவென்கிற இந்திரன் பூதரயன் இவர்கள் தேவகணங்கள். இரணியரோமவேதசிரசு ஊர்த்தபாகு இவர்கள் ரிஷிகள். சுப்பிரருடையஸ்திரீயான விகுண்டையென்கிறவளிடத்திலே வைகுண்டர்களென்கிற அனேக புத்திரர்களுடனே பகவான்தாமும் வைகுண்டரென்று பிரசித்தராய் அவதரித்தார். லக்ஷ்மி தேவியின் பிரார்த்தனைக்கிணங்கி சர்வலோகங்களிலும் சிறந்த வைகுண்டமெனும் ஒரு உலகத்தை அந்த பகவான் சிருஷ்டித்தார். அந்த வைகுண்டர் முதலியவருடைய பிரபாவம் திரிதியஸ்கந்தத்தில் சொல்லப்பட்டது. பூமியிலே உண்டான ரேணுக்களை எவன் அளவிடமாட்டுவனே அவன் விஷ்ணுவினுடைய குணங்களை வர்ணிக்கத்தக்கவன். ஆறுவது மனுவோவென்றால் சட்சுவினுடைய புத்திரனுன சாட்சூசமனுவென்று சொல்லப்படுவன். புரு-புருஷன் சுத்தும்மினன்-இவர்கள் முதலானபேர் அந்த சாட்சூச மனுவினுடைய புத்திரர்கள். அந்த சாட்சூச மனுவந்தரத்திலே மந்தரத்துருமன் இந்திரன் ஆப்பியாள் இவர்கள் தேவகணங்கள். அவிஷமானு விரகன் இவர்கள் ரிஷிகள். அந்த சாட்சூசமனுவந்தரத்தில் ஆதிதேவனுன பகவான் வைராஜனுடைய ஸ்திரீயான சம்பூதியினிடத்தில் அஜிதனென்று பெயரையுடையவராய் அவதரித்து சமுத்திரத்தைக்கடைந்து தேவதைகளுக்கு அமிர்தம் சாதித்தார். க்ஷீரசமுத்திரத்தில் சுழலாநின்ற மந்தர பர்வதமானது கூர்மரூபியானபகவானுல் தரிக்கப்பட்டதென்று சுகப்பிரமரிஷி சொல்ல பரிக்ஷித்து மகாராஜன் பகவான் கூர்ம அவதாரங்கொண்டதை விஸ்தாரமாய் சொல்லும்படி வினவினர்.

பரிக்ஷித்து மகாராஜனே! யுத்தத்திலே அசுரர்களால் கொல்லப்பட்டவர்களாய் தேவர்கள் நிர்ச்சீவர்களாய் விழுந்து எழுந்திருக்கமாட்டாமற்போனதும், துர்வாசருடைய சாபத்

திஞலே் இந்திரனுடனே கூடின மூன்று உலகங்களும் லக்ஷி மியை இழந்தபோது, யாகாதி கிரியைகளெல்லாம் நசித்துப் போயின. மகேந்திரன் வருணன் முதலான தேவகணங்கள் இதைப் பார்த்துத் தாங்களெல்லாரும் ஒன்றாகக்கூடி மந்திரா லோசனைசெய்து நிச்சயத்தை யடையாமற் போனவர்களாய், பின்பு மேருபர்வத சிகரத்தில் பிரமசபையை யடைந்து பிரம தேவனுக்குப் பிரணமம்பண்ணி விர்த்தாந்தத்தை யெல்லாம் விக்கியபானம் பண்ணினார்கள்.

பிரமதேவன் வாக்கியம்

அப்போது பிரமதேவன் இந்திரன் வாயுமுதலான தேவர்களையும், அமங்கள சொரூபமான உலகங்களையும், பல புஷ்டிகளோடு கூடின அசுரர்களையும் பார்த்து மனதினால் பரமபுருஷனைத் தியானஞ்செய்து பிரசன்ன வதனனாய் தேவ தைகளைப்பார்த்து சொல்லுகின்றார்: நானும்-ருத்திரனும் நீங்களும்-அசுரர்கள் முதலான பேர்களும் மனுஷியர்களும்- திரியக்குகளும்-விருக்ஷங்களும் சுவேதசம் அண்டசம் உத் பீஜங்கள் முதலானவைகளும் யாதொரு பரமாத்மாவி னுடைய அவதாரமான விராட் புருஷனது அமிசமாக விருக்கிறோமோ அப்படிப்பட்ட ஈசுரனை நாமெல்லாம் சரண மாக அடைவோம். அந்தப் பரமாத்மாவுக்குக் கொல்லத் தக்கவனென்றும், இரக்ஷிக்கத் தக்கவனென்றும், உபேக்ஷிக் கத் தக்கவனென்றும், ஆதரிக்கத் தக்கவனென்றுமில்லை. ஆனாலும் ஜகத்சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களுக்காக பகவான் அந்தந்தக் காலத்திலே தமோகுணத்தையும் ரசோகுணத் தையும் சத்துவகுணத்தையுந் தரித்தவராக விருக்கின்றார். இந்தக் காலமோ சத்துவ மூர்த்தியான பகவான் பிரஜை களுக்கு விர்த்திபண்ணும் பொருட்டு உலகங்களைச் சவரக்ஷணை பண்ணுகிற காலமாயிருக்கிறது. ஆகையினாலே நாமெல்லாம் ஜகத் குருவான சுவாமியைச் சரணமாக அடைவோம். தேவப்பிரியரான அந்தப் பகவான் நமக்கெல்லாஞ் சுகத்தைக் கொடுக்கப் போகிறாரென்று பிரமதேவன் தேவதைகளைப் பார்த்துச் சொல்லி, பகவானுடைய பிரகிருதி யென்னப்பட்ட அந்தகாரத்திலும் பரமமான ஸ்தானத்தை யடைந்தார்.

அந்த அப்பிராகிருத ஸ்தானத்திலே ஒருத்தராலேயுங் காணப்படாத சொரூபத்தை யுடையவராயும், வேத வேதாந் தங்களில் பிரசித்தராயுமிருக்கிற பகவானை வேத வாக்கியங் களினாலே சாவதானமான இந்திரியங்களை யுடையவனாய் ஸ்தோத்திரம் பண்ணத் தொடங்கினான். சத்தியரூபியாயும், நிர்விகாரமாயும், ஆதியந்தங்களில்லாதவராயும், சர்வாந்திரி

யாமியாயும் உபாதி சூனியராயும், இன்னபடியென்று சிந்திக்கக் கூடாதவராயும், மனதைக் காட்டிலும் அதிகவேகத்தை யுடையவராயும், வாக்கினுலே அளவிட்டுச் சொல்லப்படாதவராயும். சிரேஷ்டராயும், தேவோத்தமராயும், பிராணன்-மனது-புத்தி அஹங்காரம் இவைகளுக்குச் சாக்ஷியாயும், சப்தாதி விஷயங்கள் சுரோத்திராதி இந்திரியங்கள் இவைகளுக்கு நியாமகராயும், நித்திரையில்லாதவராயும், தேகமில்லாதவராயும், ஜீவனுடைய தர்மங்களாயு மிருக்கிற வித்தை அவித்தைகள் இல்லாதவராயும், ஷாட்குண்ணிய பரிபூரணராயும், மூன்று யுகங்களிலேயும், அவதாரம் பண்ணியும் சுகரூபியாயும், நாமமில்லாதவராயு மிருக்கிற பகவானுக்குப் பிரணாமம்.

எப்படி விருக்ஷத்தினுடைய மூலத்தில் ஜலத்தை விட்டால் சாகோப சாகைகள் அபிவிர்த்தியாமோ அப்படிப் போல விஷ்ணுவினுடைய ஆராதனம் சமஸ்த பிராணிகளுக்கும் தனக்கும் திருப்திகரமாயிருக்கும். தேசத்தினுலேயும், காலத்தினுலேயும், வஸ்துக்களினுலேயும், அளவிடக் கூடாதவராயும், இன்னபிரகாரமென்று சொல்லி ஒருத்தராலேயும் அளவிடக் கூடாத தம்முடைய கர்மத்தை யுடையவராயும், எயகுண சூனியராயும், கல்யாண குணகரராயும், சத்துவமூர்த்தியாயு மிருக்கிற உமக்கு இப்போது பிரணயம் பண்ணுகிறோமென்று ஸ்தோத்திரம் பண்ணினுன்.



## ஆறுவது அத்தியாயம்



பகவானுடைய வாக்கியத்தினுல் தேவர்களும், அசுரர்களும் சந்தி பண்ணிக்கொண்டு, க்ஷீராப்தியை கடைவதற்கு முயற்சி புரிதல் சொல்லப்படுகிறது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே! இந்தப் பிரகாரம் தேவகணங்களினுல் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டு பகவானுன ஸ்ரீ ஹரியானவர் அந்தத்தேவ கணங்களுக்கு முன்னே கோடி சூரியனுதித்தாற் போல ஆவிற்பவித்தார். சதுர்முகனுனவன் ருத்திரனேடு கூட தன்முன்னே பத்மதளங்கள் போலச் சிவந்த நேத்திரங்களை யுடையதாயும், மரகத மாணிக்கம் போல பச்சைநிறமாயும் நிர்மலமாயும், பத்துமாத்துத் தங்கம்போலப் பொறுக்கென்ற நிறத்தையுடைய பீதாம்பரத்தினுல் விளங்கா நின்றும்

மனோக்ரமாயு மிருக்கிற சர்வ அவயவங்களையுமுடைய சுவாமியினுடைய திவ்விய தேகத்தைப் பார்த்துப் பூமியில் சாஷ்டாங்கப் பிரணாமம்பண்ணி சமஸ்த தேவர்களுடனும் பிரமாவானவர் ஸ்தோத்திரம் பண்ணுகின்றார்.

பிரமதேவர் வாக்கியம்

சத்வ-ரஜஸ-தாமத குணங்களாகி, அம்மூக்குணங்களையுடைய பொருளாகி, பூமி இனிய ஜலம் நெருப்பு காற்று ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களாகி, அப்பூதங்களுக்கு ஆதிவஸ்துவாகி, எதையும் ஆஸ்ரயித்திராது தனிப்பரம் பொருளாய், க்ஷணநேரமாகி, இறந்த காலம்-நிகழ்காலம்-எதிர்காலமாகி, கிருபா சமுத்திரம்போல் திருப்பாற்கடலில் முடிகளையுடைய பிரகாசம் தங்கிய ஆதிசேஷன்மீது யோக நித்திரை செய்யும் கடவுளே! எங்களுக்கு அருள்தரல் வேண்டும்.

எழுவகை ஜீவர்களுடைய சரீரமாகவும், ஆன்மதத்துவமாகி எல்லா உலகமும் ஏக உருவமாகி, சிறப்பாக விருக்கும் உம்மை யல்லாமல் வேறு ஒரு தெய்வம் உளதோ, உம்மை யறியாதவர்க்கு இருளாகவும், தத்துவமறிந்து உனது சொரூபத்தை யறிந்தவர்க்கு ஞானசொரூபமாய் விளங்கும் செழுமையான சுடரே! ஆராவமுதமே! எங்களுக்கு இங்கே அருளள் வேண்டுமென்று அன்று பிரார்த்தித்தார்கள்.

ஸ்ரீ பகவான் வாக்கியம்

பிரமாதி தேவர்களே! உங்கள் யாவருக்கும் மங்களமுண்டாகட்டும். நீங்கள் யாவரும் அசுரர்களுடன் கொண்டிருக்கும் விரோதத்தை விட்டு நட்பு கொள்ளுங்கள். நீங்கள் இருதிறத்தாருமாகச் சேர்ந்து பாற்கடலைக் கடையுங்கள். மந்தரபர்வதத்தை மத்தாகவும் வாசுகியென்கிற நாகராஜனை மத்துக்கயிறாகவுங் கொள்ளுங்கள். அதினின்றும் பெருகும் அமுதத்தால் உங்களுக்கு நன்மை யுண்டாகும். நானும் கூடவிருக்கிறேன் எனச்சொல்லி அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அந்தர்த்தானமானார்.

பிற்பாடு பிரமதேவனும் ருத்திரனும் அந்தப் பகவானுக்கு பிரணாமம் பண்ணிவிட்டுத் தங்களுடைய ஸ்தானத்தை யடைந்தார்கள். தேவர்களும் பலிச்சக்கரவர்த்தியை யடைந்தார்கள். அப்போது தயித்தியராசனையும், புண்ணிய கீர்த்தியாயும், விரோத காலத்தையும் சமாதான காலத்தையும் அறிந்தவனுயு மிருக்கிற பலிச்சக்கரவர்த்தியானவன், யுத்தத்தைவிட்டு வந்திராநின்ற சத்துருக்களான தேவர்களைப்

பார்த்து தனது சைனியங்களையும் யுத்தத்தை நிறுத்தும்படி பணித்தனன்.

அப்போது மகேந்திரனானவன் மதுரமான வார்த்தையினால் சமாதானமாகப் பலிச்சக்ரவர்த்தியைப் பார்த்து புருஷோத்தமனால் சொல்லப்பட்ட அமிர்த உற்பத்தி விர்த்தாந்தத்தை சொன்னான். இந்திரன் சொன்ன வார்த்தையானது பலிச்சக்கரவர்த்திக்கும் அவனுடன் சேர்ந்திருக்கிற அசுரர்களுக்கும் இஷ்டமாயிருந்தது. தேவர்கள்-அசுரர்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் சிநேகம் பண்ணிக்கொண்டு மரியாதைகளுடனே அமிர்த நிமித்தம் விடாமுயற்சியுடன் உழைத்து வந்தனர். அந்தத் தேவர்களும் அசுரர்களும் தங்கள் பராக்கிரமத்தினால் மந்தரகிரியைப் பிடுங்கி சமுத்திரத்தினிடத்திற் கொண்டுவருகையில் தம்மால் முடியாமல் அதை மார்க்கத்தில் விட்டு விட்டார்கள். அப்படி விடப்பட்ட சொர்னமயமான பர்வதமானது கீழேவிழுந்து மிகவும் பாரத்தினால் வெகு அமரர்களையும் தானவர்களையும் சூரணமாகப் பண்ணிற்று. அப்போது, பகவான் யாவரையும் காப்பாற்றி யருளினார். அந்த மந்தர பர்வதத்தையும் ஒருகையால் விளையாட்டாகக் கருடன் மேலே ஏற்றிவைத்துக்கொண்டு தாமும் ஏறிக்கொண்டு தேவாசுர கணங்களினால் சூழப்பட்டவராய் க்ஷீர சமுத்திரத்தை யடைந்தார். பக்ஷியிந்திரனாகிற கருடன் தோளில் நின்றும் பர்வதத்தைக் கீழேயிரக்கி ஜல மத்தியத்தில் தள்ளிவிட்டுப்போனார்.



## ஏழாவது அத்தியாயம்



க்ஷீராப்தியைக் கடையும்போது உண்டான கால கோடி விஷத்தை ஸ்ரீ ருத்திரபகவான் பானம்பண்ணினமை சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ராஜனே! அந்தத் தேவர்களும் அசுரர்களும் நாகராஜனான வாசுகியை யடைந்து, அவனையும் துணைக்கொண்டு, அவனை அந்த மந்தரபருவதமெனும் மத்துக்குக்கயிறாகச் சுற்றி சந்தோஷத்துடனே கூடினவர்களாய்ச் சமுத்திரத்தைக்கடைய உத்தேசித்தார்கள். அப்போது அந்த வாசுகியினுடைய சிரோபாகத்தை ஸ்ரீ ஹரியானவர் முன்னே பிடித்ததைப்பார்த்து தேவர்களும் அந்த சிரோபாகத்தையே பிடித்தார்கள். அந்த மகா புருஷனுடைய செய்கையை தயித்திய



படம் நெ. 8-A. கூர்மாவதாரம். பக்கம் நெ. 637.

தேவ - அசுரர்கள் க்ஷீராப்தி சமுத்திரத்தை கடைந்த போது மந்தரமலையை ஜலத்தில் முழுகாமல் பகவான், ஆமையாகி தாங்கியது.

பதிகளான அசுரர்கள் அங்கீகரியாதவர்களாய் நாங்கள் இந்த வாசுகியினுடைய நிஷிதமான வால்புறத்தைப் பிடிக்கிறதில்லை யென்று சொன்னார்கள். பிறகு அந்தத் தயித்தியர்களைப் பார்த்துப் புருஷோத்தமரானவர் புன்சிரிப்பையுடையவராய் தேவர்களோடு நாகராஜனுடைய தலைப்புறத்தை விட்டுப் புச்சப்பிரதேசத்தைக் கிரகித்துக்கொண்டார். இந்தப் பிரகாரம் சிரோபாகத்தில் அசுரர்களும், வால்பக்கத்தில் தேவர்களுமாக மகா முயற்சியுடனே சமுத்திரத்தைக் கடைந்தார்கள்.

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! அந்தச் சமுத்திரத்தைக் கடையும்போது ஆகாரமில்லாமலிருக்கிற அந்த மந்தர பருவதமானது பலவான்களான தேவ அசுரர்களாலே தரிக்கப்பட்டிருந்தாலும் அதிக பாரத்தினால் ஜலத்திற்குள்ளே முழுகிப்போயிற்று. அந்தத் தேவ அசுரர்கள் பலவகையான முயற்சிகளையுஞ் செய்து அவைகள் வியர்த்தமானமையைக் கண்டு பயந்தார்கள். அப்போது அபாரமான சக்தியையுடையவராயும், சத்திய சங்கல்பராயுமிருக்கிற பகவானானவர் விக்கின ராஜனுடைய கிருத்தியத்தைப்பார்த்து, மகத்தாகிய அதியற்புதமான கூர்மரூபத்தைத் தரித்து, ஜலத்துக்குட் பிரவேசித்து பத்துலக்ஷம் யோசனை விஸ்தாரமுடையதான தம்முடைய முதுகினாலே மகத்தாகிய வேறொரு த்வீபமானது போல மந்தாபர்வதத்தை தரித்துக்கொண்டிருந்தார். தேவ அசுரர்களானவர்கள் ஜலத்தில் நின்றும் எழும்பாநின்ற அந்த மலையைப் பார்த்துத் திரும்பவும் சமுத்திரத்தைக் கடைவதற்கு யத்தனம் பண்ணினார்கள்.

அப்போது அளவிடக்கூடாத மகிமையை யுடையவராயும், ஆதி கூர்மரூபியாயு மிருக்கிற பகவானானவர் தேவ அசுர சிரேஷ்டர்களுடைய புஜபலத்தினால் இழுக்கப்பட்டும் முதுகினாலே சுழன்றுகொண்டு மிருக்கிற அந்த மந்தர பர்வதத்தைத் தாங்கியும், அசுர ரூபத்தினால் அசுரர்களுடனே யிருந்துகொண்டு அவர்களுடைய பலவீரியத்தை விர்த்தி பண்ணிக் கொண்டும், தேவதா ரூபத்தினால் தேவகணங்களுடனேயுங் கூடவிருந்து அவர்களுடைய தேஜஸை விர்த்திபண்ணியும், அந்த நாகராஜனையும் சிரமம் வராமல் காப்பாற்றிக்கொண்டும், ஒருவராலேயும், அறியப் படாதவராகவே யிருந்தார். அப்போது பிரமா - ருத்திரன் - இந்திரன் முதலான தேவர்கள் புஷ்ப வருஷங்கள் பொழிந்தார்கள். அப்படி சமுத்திரத்தைக் கடையும்போது சிரேஷ்டமான அந்த வாசுகியினுடைய நேத்திரங்கள் - முகங்கள்

இவைகளில் நின்று முண்டாகும் புகையினுலேயும் அக்கினியினுலேயும் தகிக்கப்பட்டவர்களாய் அசுரர்களெல்லோருங் காட்டுத்தீயினுல் தகிக்கப்பட்டு தேஜசில்லாதவர்களானுர்கள். அந்த வாசுகியின் சுவாசாக்கினியினுல் தகிக்கப்பட்டு கஷ்டமடைந்தார்கள். இந்தப்பிரகாரம் தேவ அசுர சிரேஷ்டர்களாலே கடையப்படா நின்ற அந்தச் சமுத்திரத்தில் அமிர்தம் பிரவாமற்போகவே, பகவானுனவர் தாமரை மலர்போன்ற தமது கைகளினுல் வாசுகியாகிற மத்துக்கயிற்றைக் கிரகித்துக்கொண்டு மத்தினுல் சமுத்திரத்தைக் கடைந்தார். இந்தப் பிரகாரம் கடையாநின்ற சமுத்திரத்தில் நின்றும் முதல் ஆலகாலமெனும் காலகோடி விஷம்பிறந்து திக்குகள்தோறும் கீழ்மேலும் பரவ, அதைப் பார்த்துப் பயந்தவர்களாய் ஓடிப்போகும் இந்திராதிகளான பிரஜைகளெல்லாம் ஒருத்தராலேயும் ரக்ஷிக்கப் படாதவர்களாய் கயிலாயபர்வதத்தில் பார்வதியுடனே எழுந்தருளியிரா நின்ற சதாசிவனை யடைந்து, அவரை சகுணமாகவும் நிர்க்குணமாகவும் தக்ஷன் முதலான பிரஜாபதிகளெல்லாம் ஸ்தோத்திரம் பண்ணினுர்கள்.

வாரீர் தேவதேவனே! மகாதேவனே! பூதங்களுக்கெல்லாம் அந்தரியாமியாயிருந்து அவைகளை உண்டாக்குகின்றவனே! சரணுகதர்களான எங்களைத் தகிக்கும் விஷத்தில் நின்றும் ரக்ஷியும். நீர் ஒருவரே ஜகத்துக்களுடைய பந்த மோக்ஷங்களிரண்டுக்கும் நியந்தாவாயிருக்கிறவர். ஆகையால் சமர்த்தர்களானபேர் பிரபந்நர்களுடைய இளைப்பைப் போக்கடித்து, அகஸ்தியர் முதலான பேருக்கெல்லாம் ஞான உபதேசத்தால் குருவாயிருக்கிற உம்மை அர்ச்சிக்கின்றுர்கள். இந்த ஜகத்துக்குச் சத்துவாதி குணரூபமா யிருக்கிற உம்முடைய சக்தியினுலே சிருஷ்டி - ஸ்திதி - சங்காரங்களை எப்போது பண்ணுகிறீரோ அப்போது சுத்தசித்தக்கியானத்தையுடையவராய் பிரமா-விஷ்ணு-சிவன் என்கிற நாமங்களைத் தரிக்கின்றீர். ஸ்தூல சூட்சுமங்களாகிற தேவதிரியக்காதி ரூபங்களை யுண்டாக்கிக் கொண்டு சேதனுசேதன விலக்ஷனமாய் ஒருவராலும் அறியப்படாததாயு மிருக்கிற பிரமமும் நீரே. ஆதலின் இந்த காலகோடி விஷத்தால் உண்டாகும் கஷ்டத்தினின்றும் எம்மை காப்பாற்றியருளும் உமது தரிசனமே எம்மை கிருதார்த்தர்களாக்கிற்று என்று ஸ்தோத்திரம் செய்தார்கள்.

ஸ்ரீ உருத்திரபகவான் வாக்கியம்

இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரம் புரியும் பிரஜாபதிகளின் முறைங்கிணங்கினவராய், சர்வபூத சுகிர்தரான மகாதேவர் தம்முடைய இஷ்டநாயகியான பார்வதியைப் பார்த்துச் சொல்லுகின்றார்: வாராய் பார்வதியே! க்ஷீரசமுத்திரத்தைக் கடைந்ததினாலே யுண்டான காலகோடி விஷத்தினால் கஷ்ட மடைந்த பிரஜைகளுடைய மகா விசனத்தைப்பார். என்ன கஷ்டம்! பிராணனைக் கோராநின்ற இந்தப் பிரஜைகளுக்கு நம்மாலே அபயப்பிரதானம் செய்யத்தக்கது. பிராணிகளிடத்தில் தயையை யுடையவனான புருஷனுக்குச் சர்வாந்தரியாமியான ஸ்ரீ ஹரியானவர் பிரீதியையுடையவரா யிருப்பார். பகவானான ஸ்ரீ ஹரி பிரீதியையுடையவராகில் ஸ்தாவர சங்கமங்களுடனேகூடி நானும் பிரீதியை யுடையவனாவேன். ஆகையால் பிரஜைகளின் மங்களத்தின் பொருட்டு இந்தக் காலகோடி விஷத்தை நான் புசிக்கிறேனென்று பார்வதியினனுமதிகொண்டு, விசுவகர்த்தரான ருத்திரன் அந்த விஷத்தை எடுத்து விழுங்கினார். அப்போது அக்காலகோடி விஷமானது தன்னைப்பானம் பண்ணும் ருத்திரனது கண்டத்தை கருக்கவைத்து தன்னுடைய வீரியத்தை காண்பித்தது. ஜகத் பூஜ்ஜியனும் தேவதேவனுமு மிருக்கிற சிவபெருமானுடைய அந்த விஷபக்ஷணத்தைப் பார்த்துத் தக்ஷன் முதலான பிரஜாபதிகளும், பார்வதியும், பிரமாவும், வைகுண்டனுதனும் கொண்டாடினார்கள். ஈஸ்வரன் விஷபக்ஷணம் பண்ணும்போது சிதறிய விஷபிந்துக்களை உலகத்திலே விருச்சிகங்கள் முதலான ஜந்துக்களும் விஷரூப்மான ஓஷதிகளும் மற்றும் சில துஷ்ட பதார்த்தங்களும் கிரகித்தன.



## எட்டாவது அத்தியாயம்



*பாற்கடலினின்றும் ஸ்ரீ இலக்குமிதேவி அவதரித்ததும், பகவானுடைய மாயா மோகினி ரூபமானதும் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் அரசர்க்கரசே! இந்தப்பிரகாரம் அந்த ருத்திர பகவானாலே காலகோடி விஷமானது பானம்பண்ணப்பட்டதும், இந்திரன் பலி முதலானவர்களும் சந்தோஷத்தை யடைந்தவர்களாய்த் தங்களுடைய பலத்தினால் திரும்பவும்

சமுத்திரத்தைக் கடைந்தார்கள். அப்படிக் கடையப்பட்ட அந்தச் சமுத்திரத்திலே முதலில் காமதேனு உண்டாயிற்று. பிரமநிஷ்டர்களான ரிஷிகள் அவசியமான எக்கியத்துக்கு பரிசுத்தமான பொருளாக அதைக் கிரகித்தார்கள். பிற்பாடு உச்சைச்சிரவசு என்கிற பெயரையுடைய வெளுத்த ஒரு குதிரை உண்டாயிற்று. அதனிடத்திலே பலிச்சக்கிரவர்த்தி இச்சைகொண்டான். இந்திரனேவென்றால் முன்னாலடைந்த ஈஸ்வரனுடைய சிக்ஷையினாலே அதனிடத்தில் இச்சைக் கொள்ளவில்லை. பின்பு ஐராவதமென்கிற சிறந்த யானை பிறந்தது. பிற்பாடு தேவலோகத்துக்குப் பூஷணமாயும், பூமியிலே யாசகர்களுடைய மனோரதங்களை பூர்த்திசெய்யக்கூடிய பாரிஜாதவிருக்ஷம் பிறந்தது. பின்பு நடையாலும் கடைக்கண் பார்வையாலும் சுவர்க்கலோகத்திலே யிருக்கின்றவர்களுக்கு ஆனந்தத்தை யுண்டாக்கக்கூடிய சர்வாபரண பூஷிதர்களாயும், விலையில்லாத நல்ல வஸ்திரங்களை யுடையவர்களாயுமிருக்கிற அப்சரஸ்திரீகள் உண்டானார்கள்.

பிறகு பகவானிடத்திலே அதிகப் பிரேமையையுடையவளான ஸ்ரீமகா லக்ஷ்மி தேவியானவள் தன்னுடைய ஒளியால் மின்னற் கொடிபோல திக்குகளைப் பிரகாசித்தபடி அவதரித்தாள். அந்த மகா லக்ஷ்மி தேவியினிடத்திலே தேவாசுர மனுஷியர்களெல்லாரும் அந்த மகாலக்ஷ்மியினுடைய ரூபம் - ஔதாரியம் - யவ்வனம் - மகிமை இவைகளினால் இழுக்கப்பட்ட மனதை யுடையவர்களாய் இச்சைகொண்டார்கள். அந்த லக்ஷ்மிதேவிக்கு இந்திரனானவன் அதியற்புதமாகிய ஒரு சிங்காதனத்தைக் கொடுத்தான். மகா நதிகளெல்லாம் திவ்விய ரூபங்களைத் தரித்துக்கொண்டு சுவர்ண கும்பங்களினால் சுசியான ஜலத்தைக் கொண்டுவந்து கொடுத்தன. பூமியானவள் அபிஷேகத்துக்கு உசிதமான சகலமான ஓஷதிகளையுங் கொண்டுவந்து கொடுத்தாள். பசுக்கள் பஞ்சகவ்வியங்களைக் கொண்டுவந்தன. வசந்தங்களான சைத்திர வைசாக தேவதைகள் பல - புஷ்பங்களைக் கொண்டுவந்து கொடுத்தன. மகாரிஷிகள் சாஸ்திரப்பிரகாரம் லக்ஷ்மிக்கு மகா அபிஷேகத்தைப் பண்ணி வைத்தார்கள். அப்போது கந்தர்வர்கள் மங்கள கீர்த்தனங்களைக் கானம் பண்ணினார்கள். அப்சரசுக்கள் நிர்த்தனம் பண்ணினார்கள். வருணன் மகரந்த பானத்தினால் மதித்த பிரமங்களையுடைய வைஜந்தமென்கிற மாலையைக் கொடுத்தான்.

பிற்பாடு மகா லக்ஷ்மியானவள் மகா ரிஷிகளாலே தோத்திரம் பண்ணப்பட்டு ஒரு கருநெய்தல் மாலையைக் கையி

லெடுத்துக்கொண்டு புன்சிரிப்பையுடையவளாய் புறப்பட்டு ஒவ்வொருவரையும் பார்த்தபடியே சென்று கடைசியாய் பின்னையொரு புருஷரிடத்திலேயும் இல்லாத அனந்தகல்யாண குணங்களாலே சிரேஷ்டராயும், தமக்குத்தாமே ஆசிரியரானபடியினலே பிராகிருதமான சத்துவாதி குணங்களை அதிக்கிரமித்தவராயு மிருக்கிற முகுந்தனையே தனக் கிஷ்ட நாயகனுகை வரித்து, அவரது தோள்களிலே தனது கையிலிருக்கிற மங்களகரமான நெய்தல் மாலையைப் போட்டு அந்தப் பகவானுடைய அனுக்கிரகத்தைக் கோறினவளாய் புன்சிரிப்புடனே மலர்ந்திருக்கிற நேத்திரங்களாலே அந்தப் பகவானுடைய வக்ஷஸ்தலத்தைப் பார்த்துக்கொண்டு அவருடைய சன்னிதானத்திலே யிருந்தாள். அப்போது அந்தப் பகவான் மகத்தாகிய ஐசுவரியங்களை யுடையவளாயும் மூன்று உலகத்துக்கும் தாயாகியுமிருக்கிற அத்தேவிக்கு தம்முடைய பரமமான மங்கள மார்பை வாசஸ்தானமாகக் கொடுத்தார். மகாலக்ஷ்மியும் பகவானுடைய வக்ஷஸ்தலத்திலே யிருந்து கொண்டு கிருபாபூரணமான தன்னுடைய கடைக்கண் பார்வையினலே பிரமாதிகளையும் உலக பாலர்களுடனே கூடின மூன்று உலகங்களையும், விருத்தி யடையச் செய்தாள். அப்போது பிரமா-ருத்திரன் முதலான தேவர்கள் புஷ்பவருஷங்களை வருஷித்து மந்திரங்களினல் ஸ்தோத்திரம்பண்ணி மகாலக்ஷ்மியினுடைய கடைக்கண் பார்வையால் ரக்ஷிக்கப் பட்டவர்களாய் சுகத்தை அடைந்தார்கள்.

வாராய் ராஜனே! பிற்பாடு அந்தச்சமுத்திரத்தில் நின்றும் வாருணிதேவி யுண்டானுள். அந்த வாருணியை அசுரர்கள் கிரகித்துக் கொண்டார்கள். பின்பு அமிர்தபூரணமான கலசத்தைப் பரித்துக்கொண்டவராயும். சாக்ஷாத் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய அமிசாவதாரமாயும், ஆயுர் வேதத்தின் கரைகண்டவராயும், எக்கிய பாகங்களைப் புசிக்கிறவராயுமிருக்கிற தன்வந்திரி பகவான் எனும் ஒரு மகாபுருஷ னுண்டானுர். சமஸ்தமான அசுரர்களும் அந்த மகாபுருஷனையும் அமிர்தகலசத்தையும் பார்த்து, சர்வ வஸ்துக்களையும் அடையவேணு மென்கிற இச்சையை யுடையவர்களாய் அந்த அமிர்தகலசத்தைச் சீக்கிரமாக அபகரித்துக் கொண்டார்கள். அப்படி அசுரர்களாலே அமிர்த கலசமானது அபகரிக்கப்படுகையில் தேவர்களெல்லாம் முகம் வாடி ஸ்ரீ ஹரியைச் சரணமாக அடைந்தார்கள். அப்போது பகவானவர் உங்களுடைய இஷ்டத்தைச் சாதித்துக் கொடுக்கிறேன், விசனப்படாதேயுங்களென்று தேவர்களுக்

குரைத்து, அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானர். ' பிறகு சமஸ்த உபாயங்களையு மறிந்தவராயும் ஜகந்நியந்தாவாயுமிருக்கிற பகவானனவர் சகலருடைய மனதையுங் கவரக்கூடிய சகல இலக்ஷணங்களையுமுடைய ஜகன்மோகனமான பெண்ரூபத்தைத் தரித்தார்.



## ஒன்பதாவது அத்தியாயம்



*பகவான்மோகினி யுருக்கொண்டு தைத்திரியர்களால் கொடுக்கப்பட்ட அமிர்தத்தை தேவர்களுக்கு பங்கிட்டமை சொல்லப்படுகின்றது.*

இவ்விதம் சகலருடைய மனதையும் மயக்கக்கூடிய மோகினியுருவங்கொண்டு, அமிர்த கலச விஷயமாக சண்டையிட்டுக்கொள்ளும் அவர்கள் முன் தோன்றினர். அந்த மோகினியைப்பார்த்து இந்த ஸ்திரீயினுடைய ரூபம் என்ன ஆச்சரியகரமானது என்று அந்த அசுரர்கள் தமது மனதிலே மன்மதவிகாரத்தை யுடையவர்களாய். அந்த ஸ்திரீயினருகில்வந்து, பத்மதளத்தையொத்த நேத்திரங்களை யுடையவளே! நீ யார்? எங்கேயிருந்துவருகிறாய்? என்ன செய்யக் கோறுகிறாய்? நீயாருடைஸ்திரீ? சுந்தராங்களான உருவங்களையுடையவளே! நீ இதுவரைக்கும் ஒருவராலும் பரிசிக்கப்படாதவளாக அறிகிறோம். நீ ஒருவனால் அனுப்பப்பட்டு வந்தாயோ! சுயவிச்சையினாலே வந்தாயோ? அல்லது எங்களுடைய சகலமான இந்திரியங்களுக்கும் மனதுக்கும் சந்தோஷத்தை யுண்டாக்க வேணுமென்று இச்சியாநின்ற தயாளுவான விதியினாலே ஏவப்பட்டவளாக வந்தாயோ? ரூபவதியே! உனக்கு மங்களமுண்டாகக் கடவது என்று தமதிடம் உள்ள அமுதகலசத்தை யவளிடங் கொடுத்து தமக்கு பங்கிட்டுத்தரும்படி பிரார்த்தித்தார்கள். அதற்கு மோகினி வேஷதாரியான ஸ்ரீ ஹரியானவர் சிரித்து மனோகரமான கடைக்கண் பார்வையினால் அவர்களையே பார்த்துக்கொண்டு சொல்லுகின்றார்: வாருங்கள் அசுரர்களே! மகாரிஷியான காசிபருடைய புத்திரர்களாயிருக்கிற நீங்கள் எதேச்சையாகச் சஞ்சரியாநின்ற விபசாரியான என்னிடத்திலே எப்படி விசுவாசம் கொண்டீர்கள். பண்டிதர்களானவர் ஒருக்காலும் ஸ்திரீகளிடங்களிலே விசுவாசத்தை யடையக்கூடாதே. நூதனமான வஸ்துவைத் தேடும் செந்நாய்களின் சிநேகமும், விபசாரிகளான ஸ்திரீ

களுடைய ஸ்நேகமும், நித்தியமாயிராதென்று சொல்லுவார்களே என்று சொன்னுள். அந்த ஸ்திரீயினுடைய விநோத வசனங்களினுல் மய்ங்கியமனதை யுடையவர்களான அவ்வசுரர்கள் அந்த ஸ்திரீயின்கையிலே அமிர்தகலசத்தை கொடுத்தார்கள். அப்போது ஸ்ரீ ஹரியானவர் அந்த அமிர்தகலசத்தை வாங்கிக்கொண்டு அசுரர்களைப்பார்த்து நான்செய்யும் காரியத்தில் குற்றங்கூருமல் ஒப்புக்கொள்வது உமக்கு இஷ்டமானுல் நான் இந்த அமிர்தத்தைப் பங்கிடுகிறேனென்று சொல்ல அந்த மாயா யோகினியினுடைய வசனத்தைக்கேட்டு அந்த அசுரசிரேஷ்டர்கள் அவளுடைய அபிப்ராயத்தை யரியாதவர்களாய், அப்படியே ஆகட்டுமென்று சம்மதித்தார்கள். பிறகு தேவாசுரர்கள் சமஸ்தமானபேரும் ஒரு நாள் உபவாசமிருந்து மறுநாள் ஸ்னுனம்பண்ணி அக்கினிஹோத்திரத்தைச்செய்து கிழக்குமுகமாகப் பரப்பப்பட்ட தர்ப்பாஸனங்களி லிருந்தார்கள். பின்பு அந்த மோகினி தேவர்களையும் அசுரர்களையும் இரண்டு பந்தியாகப்பண்ணி அமிர்தகலசத்தைக் கையிலெடுத்துக்கொண்டு தயித்தியர்களை வஞ்சித்து தேவதைகளைப்பானம் பண்ணிவைத்தாள். அப்போது அந்த அசுரர்கள் மாயாஸ்திரீயின் வஞ்சனையை யுணர்ந்தும் அந்த ஸ்திரீயினிடத்திலேயுள்ள சினேகத்தை கெடுத்துக்கொள்ள மனமில்லாது மௌனமாயிருந்தார்கள். அப்போது ராகுகேதுக்கள் தேவவேடம்பூண்டு தேவசதசிலே யிருந்துகொண்டு அமிர்தத்தை பானம்பண்ணினுர்கள். அப்போது இவர்களசுரர்களென்று சந்திர சூரியர்களாலே காண்பிக்கப்பட்டு அமிர்தபானம் பண்ணிக்கொண்டிருந்த அந்த ராகுகேதுக்களுடைய சிரசை ஸ்ரீ ஹரியானவர் சக்கரத்தினுல் சேதித்துப்போட்டார். அந்த ராகுகேதுக்களுடைய உடலானது அந்த அமிர்தத்தினுல் ஸ்பரிசிக்கப்பட்டதாய் விழுந்துவிட்டது. சிரசோவென்ருல் அந்த அமிர்தசம்பந்தத்தினுல் தேவதத்துவத்தையடைந்து, அந்த சிரசுகளை பிரமதேவனுனவன் ராகுகேதுக் கிரகங்களாகப் பண்ணினுன். லோகநாதரான ஸ்ரீ பகவான் தேவர்களாலே அமிர்தம் மிகவும் பானம் பண்ணப்படுகையி லசுரசிரேஷ்டர்களெல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே தம்முடைய நிஜசொரூபத்தை யடைந்தார். இவ்விதம் சுவாமியினுடைய பாதாரவிந்த தூளியைப்பற்றின தேவர்கள் மாத்திரமே அமிர்த பானபலத்தை அடைந்தார்கள். அவர்களுக்கு விரோதிகளான தயித்தியர்கள் அந்த அமிர்தபலத்தை அடையாது போனுர்கள்.



## பத்தாவது அத்தியாயம்



*தைத்தியர்கள் தேவதைகளோடு யுத்தம் பண்ணுகையில் அப்போது ஸ்ரீ ஹரியானவர் ஆவிர்ப்பவித்தா ரென்றும்சொல்லப்படுகின்றது.*

**ஸ்ரீ சுகர் வாக்கியம்**

அடைதற்கரிய அமிர்தத்தை யடைந்த தேவர்களின் மீது பொருமைகொண்டு அசுரர்கள் தேவர்களின் மீது யுத்தந் தொடுத்தார்கள். அந்தத்தேவ அசுர யுத்தத்திலே அசுர சேனைகளுக்கெல்லாம் நாயகனான விரோசன குமாரனான பலியானவன் வைகாயசமெனும் பெயரையுடையதாயும் மயனாலே நிர்மிக்கப்பட்டதாயும், சமஸ்தமான யுத்தோபகரணங்களோடு கூடினதாயும், நினைத்தவிடத்திலே கொண்டு போய் விடத்தக்கதாயு மிருக்கிற விமானத்தின் மேலிருந்து கொண்டு, நமுசி சம்பரன் பாணன் விப்பிரசித்தி அயோமுகன் திவிமூறதா காலநாபன் பிரஹெதி ஹெதி இவ்வலன் சகுனி பூதசந்தாபன் வச்சிரதமிஷ்டிரன் விரோசனன் அயக்கிரீவன் சங்குசிரசு கபிலன் மேகதுந்துபி தாரகன் சந்திரகிறுக்கி சும்பன் நிசும்பன் சம்பன் உத்கலன் அரிஷ்டன் அரிஷ்டநேமி திரிபுராதிபதியான மயன் ஆகிய சேனாபதிகளாலே சூழப்பட்டவனாய், உதயகிரியிலிராநின்ற சந்திரன் போல் விளங்கினார். மற்றும் சில பௌலோமர்கள் காலகேயர்கள் நிவாதகவசர்கள் முதலான அசுரர்கள் அமிர்தமதனம் பண்ணி, அமிர்தத்தையடையாமல் துக்கத்தையே அடைந்தவர்களாய், இவர்களெல்லாம் யுத்தமுகத்திலே கேவலம் தேவர்களை ஜயித்து மகா தொனியையுடைய சங்கங்களைப் பூரித்தார்கள்.

அப்போது மிகவும் கர்விகளான சத்துருக்களைப் பார்த்துச் சுவர்க்கலோகாதிபதியான இந்திரன் மிகவுங்கோபத்தை யடைந்தவனாய் ஐராவதமாகிற திக்கஜத்தின் பேரிலேறிக் கொண்டு ஆகாசத்தில் அருவிகளுடனே கூடின உதயகிரியில் சூரியன்போல விளங்கினான். அந்த இந்திரனுக்கு நாலு பக்கங்களிலேயும் நானாவிதமான வாகனங்கள்-துவசங்கள்-ஆயுதங்கள் இவைகளுடனே கூடினவர்களாயும், வாய்வு-அக்னி-வருணன் முதலான உலகபாலர்களானபேர்கள் தங்களுடைய சேனைகளோடு கூடவிருந்து தேவ அசுரர்கள் ஒருத்தருக்கொருத்தர் எதிர்த்துத் திரஸ்காரஞ் செய்து தொந்தயுத்தம் பண்ணினார்கள். அப்போது இந்திரனோடு

பலியும், தாரகாசுரனுடனே ஸ்கந்தனும், ஹெதியோடு வருணனும், பிரஹெதியோடு மித்திரனும், காலநாபனுடனே எமனும் மயனோடு விசுவகர்மாவும், துவஷ்டாவுடனே சம்பரனும், சவிதாவுடனே விரோசனனும், அபராசிதனோடு நமுசியும், விறஷபறவாவுடனே அசுவனி தேவதைகளும் பாணன் முதலான பலிபுத்திரர்கள் நூறுபேருடனே சூரியனும், ராகுவோடு சந்திரனும், புலோமாவுடனே அனலனும், இவர்களெல்லாம் ஒருவர்க்கொருவர் எதிர்த்து பலவித ஆயுதங்களைக்கொண்டு தொந்தயுத்தம் பண்ணினார்கள். அந்தயுத்தத்தில் பலியானவன் பத்துபாணங்களினால் மகேந்திரனையும், மூன்று பாணங்களினால் ஐராவதத்தையும், நான்கு பாணங்களினால் ஐராவதத்தினுடைய பாதரக்ஷணங்களான நான்கு குதிரைகளையும், ஒரு பாணத்தால் மாவுத்தனையும் பார்த்துப் பிரயோகம் பண்ணினான். இந்திரனும் சிரித்துக்கொண்டு ஆகாயத்தில் ஓடிவரா நின்ற அந்தப் பாணங்களை மகா வேகமாயும், தீக்ஷணமாயும், அவ்வளவு எண்ணிக்கையோடு கூடினதாயு மிருக்கிற அம்புகளினால் அந்தப் பாணங்களைச் சேதித்துப் போட்டான். பின்பு பலியானவன் அந்தர்த்தானத்தை யடைந்து அசுரமாயையை சிருஷ்டித்தான். அந்த மாயையினால் தேவசேனையின் பேரிலே பர்வதங்களும், விருக்ஷங்களும் விழுந்தன. ராக்ஷத கணங்கள் சூலங்களைக் கையிலெடுத்துக்கொண்டு நிர்வாணிகளாய் வெட்டுகுத்தென்று சொல்லிக்கொண்டு தேவசேனையில் விழுந்து நானுவிதமான தொந்தரவு செய்ததினால் தேவசேனையிலிருக்கிற பேர்களெல்லாந் துதிக்க இந்திரன் முதலான தேவர்கள் அந்த மாயாயுத்தத்திற்குப் பிரதிக்கிரியையை யறியாதவர்களாய்ப் பகவானை தியானம் பண்ணினார்கள். அப்படித் தேவர்களால் தியானம் பண்ணப்பட்டவராய் விசுவகர்த்தாவான ஸ்ரீ பகவான் அந்த யுத்த பூமியில் கருடாரூடராய் ஆவிர்ப்பவித்தவுடனே அசுரர்களுடைய காரியத்தினாலேயுண்டான மாயையெல்லாம் அந்தப் பகவானுடைய மகிமையினால் நித்திரைபண்ணி யெழுந்திருக்கின்றவனுக்கு சொப்பனமானது எப்படி நசிக்குமோ அப்படி நசித்துப்போயின. அப்போது அந்த யுத்தத்தில் கருடாரூடரான ஸ்ரீ பகவானைப் பார்த்து சிங்கவாகனனான காலநேமிசூலத்தை சுழற்றிப் போட்டான். கருடனுடைய சிரசின்பேரில் விழவருகின்ற அந்தச் சூலத்தை விளையாட்டினால் கிரகித்துக்கொண்டு ஸ்ரீ பகவான் அந்தச் சூலத்தினால் சிங்கத்தின் பேரிலேயிருக்கிற காலநேமியை யடித்தார். மகா பலவான்களாகிய மாலி-சுமாலி இவர்களிருவருடைய சிரசுகளுஞ் சேதிக்கப்பட்டன,

அந்த யுத்தத்தில் ஸ்ரீ பகவான்பேரி லெதிர்த்தவர்கள் ஸ்ரீ பக வானுடைய சக்கரத்தினாலே சேதிக்கப்பட்டார்கள்.



## பதினொன்றாவது அத்தியாயம்



தேவாசுர யுத்தத்தில சுரர்களடைந்த வெற்றியும், அசுரர்களது தோல்வியும், நாரதரால் போர் நிறுத்தப்பட்டதும் சொல்லப்படுகின்றது.

வாராய் ராஜனே! பிற்பாடு இந்திரன் வாய்வு முதலான தேவர்கள் பரம புருஷனுடைய கிருபையினால் பராக்கிர மத்தை யுடையவர்களாய் முன்னே தங்களோடெதிர்த்த அசு ரர்களையெல்லாம் முறிய அடித்தார்கள். இந்திரனானவன் கோபாவேசத்தோடு கூடினவனாய்ப் பலியோடெதிர்த்து வச்சிராயுதத்தைப் பிரயோகித்து அவனைப் பார்த்து, அடா மூடனே! மாயாவியான உன்னுடைய சிரசு இதோடு ஒழிந் தது என்றான்.

அதைக்கேட்ட பலியானவன் வாராய் இந்திரனே! காலத்தினால் ஏவப்பட்ட கர்மங்களையுடைய யுத்தவீரர்களுக்கு கீர்த்தியும், ஜயமும், அபஜயமும், மரணமும் கிரமமாக வுண்டாயிருக்கின்றன. ஞானிகள் இவைகளுக்காக சந்தோ ஷிக்கிறதுமில்லை விசனப்படுகிறதுமில்லை. நீங்களோ விவேக மில்லாதவர்கள், ஜயாபஜயங்களிலே சுக துக்கங்களைப் பாராட்டுகிறவர்கள். உங்களுடைய வார்த்தைகளை நாங்கள் கேட்பது தகாது யென்று இந்திரனை நிராகரித்துச் சூரர் களால் கொண்டாடப்பட்ட சூரனான பலியானவன் பாணங் களினால் இந்திரனை யடித்தான். அப்போது இந்திரனானவன் அங்குசத்தினால் குத்தப்பட்ட யானையைப்போல அந்த திரஸ் காரவசனத்தைச் சகியாமல் அவன்பேரில் வச்சிராயுதத்தைப் பிரயோகம்பண்ணி இறகுகளையுடைய மலைபோலப் பூமியிலே விழும்படிச் செய்தான். அப்போது பலிக்குத் துணைவனான சம்பராசுரனானவன் பூமியில் விழுந்த தன்னுடைய சகாவான பலியைப் பார்த்து சகியாமல் இந்திரன்பேரிலே யெதிர்த்து அவன்மீது கதையை சுழற்றி இந்திரனுடைய கழுத்தையும், ஐராவதத்தையும் அடித்தான். அப்படி யடிக்கப்பட்ட ஐரா வதமானது முழங்காலை மடித்துக் கொண்டு பூமியிலே விழுந்து மூர்ச்சையடைந்தது. பிற்பாடு இந்திரன் மாதலி யினால் கொண்டு வரப்பட்ட ஆயிரங்குதிரை பூண்ட ரதத்தி லேறிக் கொண்டவுடனே தானவ சிரேஷ்டனான சம்பரா

சுரன் அந்த மாதலி ரதங்கொண்டுவந்த தீவிரத்தைப் பார்த்து சந்தோஷித்து ஆச்சரியப்பட்டவனாய் ஜொலித்துக் கொண்டிருக்கிற சூலத்தினால் மாதலியை யடித்தான். அதைக் கண்ட இந்திரன் மிகவுங் கோபத்தை யடைந்தவனாய் அந்த சம்பராசுரனுடைய சிரசை வச்சிராயுதத்தினால் சேதித்து விட்டான்.

அப்படி இந்திரனால் சேதிக்கப்பட்ட சம்பராசுரனுடைய மரணத்தை நாரதரால் கேள்விப்பட்ட அந்தச் சம்பராசுர னுடைய கியாதிகளான நமுசி-வலன்-பாகன் என்கிற மூன்று பேரும் அதிதீவிரமாக அவ்விடத்திற்கு வந்து இந்திரனை எதிர்த்தார்கள். அப்போது வலாசுரனானவன் இந்திர னுடைய ஆயிரங்குதிரைகளையும் ஆயிரம் பாணங்களினால் அடித்தான். பகாசுரனானவன் ஒரு க்ஷணத்திலே சந்தானம் பண்ணி விடப்பட்ட இரண்டு பாணங்களினால் இந்திர னுடைய சாரதியை அடித்து ரதத்தையும் பொடியாக்கினான். நமுசியென்கிற அசுரனும் பதினைந்து பாணங்களினால் இந் திரனை யடித்து ஜலபூர்ணமான மேகம்போலக் கர்ச்சித்தான். அசுரர்களானவர்கள் இந்திரனை சரங்களினால் மறைத்துப் போட்டார்கள். அப்போது தேவகணங்கள் இந்திரனைக் காணமல் மிகவும் விசனத்தையடைந்து சமுத்திர மத்தியில் கப்பலுடைந்தால் அதிலிருக்கப்பட்ட ஜனங்கள் முறையிடு வதுபோல முறையிட்டார்கள். பிற்பாடு அந்த இந்திர னனவன் அசுவங்கள் - ரதம் - துவசம் - சாரதி இவர்க ளோடு கூட அந்த அசுரர்களுடைய சரக்கூட்டத்தில் நின்றும் வெளிப்பட்டு சத்துருக்களினால் பீடிக்கப்பட்ட தன்னுடைய சேனைகளுக்குத் தைரியஞ் சொல்லி சத் துருவைக் கொல்வதற்கு வச்சிராயுதத்தைப் பிரயோகித்து வலன் - பாகன் இவர்களுடைய சிரசுகளைச் சேதித்து விட்டான். வாராய் ராஜனே ! நமுசியானவன் அவர்கள் நாசமடைந்ததைப் பார்த்து பொருமை - துக்கங்களோடு கூடினவனாய் இந்திரனைக் கொல்ல வேணுமென்று சூலத் தையெடுத்து இந்திரன்மீது எறிந்தான். அப்போது ஆகா சத்திலே மகா வேகத்தோடு வாராநின்ற அந்தச் சூலத்தை அனேக பாணங்களினால் ஆயிரந் துண்டுகளாகச் சேதித்து அவனையும் வஜ்ஜிரா யுதத்தினால் கழுத்தி லடித்தான். தேவநாயகனான இந்திரனானவன் சத்துருவின் பேரில் விட்ட வஜ்ஜிராயுதமானது அந்தச் சத்துருவினுடைய சர மத்தை அறுக்கமாட்டாமற் போயிற்று. அப்போது அந்த இந்திரனானவன் நமுசியினிடத்தில் அச்ச முற்றவனாய்த்

தனக்கு பலமுறையும் ஜயத்தைக்கொடுத்த சிறந்த வஜ்ஜிரா யுதமும் சக்தியற்றுப் போனதைக்கண்டு பயந்து பகவானை நினைத்து வருந்தினன். அப்போது ஒரு அசரீரி வாக்குண் டாயிற்று.

அதாவது "இந்திரனே! இந்த நமுசி யென்னப்பட்ட அசுரனானவன் உலர்ந்த ஆயுதத்தினாலேயும், ஈரமாயிருக்கிற ஆயுதத்தினாலேயும், கொல்லத்தக்கவனன்று. ஏனெனில் ஒருக்கால் நாம் இந்த அசுரனுக்கு மேற்சொல்லிய இரண்டு விதங்களாலேயும் மரணமில்லை யென்று வரங்கொடுத்திருக் கின்றோம். ஆகையினால் இவனை கொல்லுவதற்கு வேறோ ருபாயம் சிந்திக்கத் தக்கது." இந்த அசரீரிவாக்கியத்தைக் கேட்டு இந்திரனானவன் சித்தசமாதானத்தோடு கூடினவனாய் தியானம் பண்ணி பின்பு நனையாமலும் உலராமலுமிருக்கிற நுரையை அவனைக்கொல்லச் சாதனமாகப் பார்த்து அந்த நுரையினால் நமுசியினுடைய சிரசைச் சேதித்துப்போட் டான். அப்போது அந்த இந்திரனை முனிகணங்களெல் லாம் ஸ்தோத்திரம் பண்ணி புஷ்ப வருஷங்களைப் பெய் தார்கள். இந்தப்பிரகாரம் வாய்வு அக்கினி வருணன் முத லான தேவர்களும் தங்களுடனே எதிர்த்த சத்துருக்களை அஸ்திர சமுகங்களினால் சங்கரித்தார்கள். அப்போது தானவர்களுடைய மூலபல நாசத்தைப் பார்த்து பிரமதேவ னால் அனுப்பப்பட்ட நாரத மகாரிஷியானவர் வந்து தேவ தைகளை யுத்தத்தில் நின்றும் நீக்கி சொல்லுகின்றார்:

### நாரதர் வாக்கியம்

வாருங்கள் தேவர்களே! ஸ்ரீமந்நாராயணருடைய பாதாரவிந்தத்தை ஆசரியா நின்ற உங்களாலே அமிர்தமும் அடையப்பட்டது. ஸ்ரீ தேவியினுடைய கடாக்ஷத்தினால் சமஸ்தமான பேரும் விர்த்தியை யடைந்தீர்கள். ஆகை யினால் யுத்தத்தில் நின்றும் ஒழிந்து விடுங்களென்று சொன்ன நாரதருடைய வசனத்தைக் கேட்டு கோபத்தை யடக்கி அவரது வசனத்தைப் பூசித்துக்கொண்டு தேவர்கள் கந்தர் வர்கள் முதலான பேர்களினால் கானம் பண்ணப்பட்டவர்க ளாய் சுவர்க்கத்தை அடைந்தார்கள். அந்த தேவாசுர யுத்தத்திலே அடிப்பட்டவர்கள்போக மற்ற அசுரர்களெல் லாம் நாரத மகாரிஷியினுடைய அனுமதிகொண்டு மூர்ச் சையை அடைந்திருக்க பலிச்சக்கரவர்த்தியை எடுத்துக் கொண்டு அஸ்தமன கிரியை அடைந்தார்கள். அப்போது கைகால்கள் முதலான அவயவங்கள் அறுபட்டுப்போனவர்

களா யிருக்கிற அசுரர்களைச் சுக்கிராசாரியரானவர் சஞ் ஜீவினியென்கிற தன்னுடைய வித்தையினால் பிழைப்பித்தார். பலிச்சக்கரவர்த்தியும் சுக்கிராசாரியினால் ஸ்பரிசிக்கப்பட்ட வனாய் மீண்டும் சரீரபலம் ஞானம் முதலியவைகளை யுடைய வனாய் இருந்தான்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



*மோகினி ரூபத்தினுடைய விலாசத்தைப் பார்க்க வேண்டுமென்கிற இச்சையுடைய ருத்திரனுக்கு ஸ்ரீ ஹரியானவர் அந்த ரூபத்தைக் காண்பித்து, அவரை மோகிப்பித்துத், திரும்பவும் அவருடைய மோகத்தைப் போக்கடித்தாரென்று சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ ஹரியானவர் மோகினி ரூபத்தினால் தானவர்களை மோகிப்பித்து தேவகணங்களை அமிர்தபானம் பண்ணிவைத்தாரென்கிற விர்த்தாந்தத்தை ருத்திரனானவர் கேட்டு ரிஷபத்தின்பேரிலே பார்வதி சமேத ராய் எழுந்தருளி சமஸ்த பூதகணங்களினாலும் சூழப்பட்டவ ராய் ஸ்ரீ ஹரியிருக்கு மிடத்தைத் தேடிப்பார்க்கவந்தார். அவ் விடத்தில் ஸ்ரீ ஹரியை நன்றாகப் பூசித்து அவரைப்பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லுகிறார்: வாரீர் தேவனே! ஜகத்தில் எள்ளுக்குள் எண்ணெய்போல வியாபித்திருக்கிறவரே! ஜகதீ சனே! ஜகன்மயனே! நிர்க்குணராயும் பரிபூரணராயும், சுகரூப ராயும், சத்துவ ரஜஸ தமோகுண சூனியராயும், சோகமில்லா தவராயும், பிரபஞ்சரூபராயும், பிரபஞ்சத்தினுடைய உற் பத்தி ஸ்திதி சங்காரங்களுக்கு ஏதுவாயும், சமஸ்த சேதனர் களாலே தங்களுடைய பலசித்திக்காக அபேக்ஷிக்கப் பட்டவ ராயும், இருக்கிறீர். தம்மால் தரிக்கப்பட்ட ஜகன்மோகன ரூபத்தைக்காண வேணுமென்கிற ஆசையால் இங்கே வந்தே னென்று சூலபாணியான ருத்திரனாலே பிரார்த்திக்கப்பட்ட வராய் ஸ்ரீமகா விஷ்ணுவானவர் சிரித்து அப்படி யாகட்டு மென்றுரைத்து அவர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மறைந்து விட்டார்.

அப்போது ஈஸ்வரனும் பார்வதியும் நாலாபக்கத்திலும் பார்த்துக்கொண்டிருக்கும்போது விசித்திரமான புஷ்பங்கள் சிவந்த தளிர்கள் இவைகளையுடைய மரம் செடி கொடிக ளுடனே கூடின உபவனத்தில் பந்தாடிக்கொண்டும் மிகவும்

பிரகாசியாநின்ற வெண்பட்டினுல் சூழப்பட்ட நிதம்பங்களி லிராநின்ற அரைநூன்மாலையை யுடையவளாயும் பந்தாடி விளையாட்டினுல் நிமிராநின்றும் வணங்காநின்று மிருப்பதி னுல் மிகவும் அலையாநின்ற ஸ்தனங்களுடைய பாரத்தினு லேயும் ஆரங்களுடைய பாரத்தினுலேயும் அடிக்கடி இடை யானது ஒடிந்துபோவதுபோல மெல்லெனச் சஞ்சரித்துக் கொண்டிருக்கிற அந்த உத்தம ஸ்திரீயை ருத்திரனுனவர் பார்த்துச் சஞ்சலமான மனதை யுடையவராகி, தன்னையும், தன் சமீபத்திலிராநின்ற பார்வதியையும், பூதகணங்களையும், மறந்தவராகி, அந்த ஸ்திரீயினுடைய கடைக்கண் பார்வை யினுல் தன்னிடத்தில் ஆசையை யுடையவள்போல நினைத்து மன்மத விகாரத்தை யுடையவராய்ப் பார்வதியும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே லஜ்ஜையில்லாமல் அவள் பின்னே தொடர்ந்தார். அவளும் தன்னை அனுசரித்து வராநின்ற ருத்திரனை பார்த்து விருக்ஷங்களில் மறைந்தவளாயும் சிரித் துக்கொண்டும் சஞ்சரித்துகொண்டு மிருந்தாள். அப்போது அவளை யனுசரித்து போகாநின்ற ருத்திரரும் கலங்காநின்ற இந்திரியங்களை யுடையவராய் யானைப்பேடைக் கண்ட மத்தகஜம்போல மன்மத விகாரமடைந்து அதிவேகமாகப் பின்சென்று தன்னை இச்சியாமலிருக்கிற அந்த ஸ்திரீயி னுடைய பின்னலைப் பிடித்துக்கொண்டு கரங்களினுல் ஆலிங் கனம் பண்ணிக்கொண்டார்.

அப்போது விஷ்ணுமாயையினுல் நிருமிக்கப்பட்ட அந்த ஸ்திரீயானவள் சீக்கிரமாக நடக்க ஆரம்பித்தாள். ருத்திரனுனவர் பின்தொடர்ந்து செல்லும்போது தன்னு டைய சுக்லமானது கலிதமாயிற்று. மகாத்மாவாகிய அந்த ருத்திரனுடைய சுக்லமானது பூமியில் எங்கெங்கே விழுந்த தோ அந்தந்த விடமெல்லாம் வெள்ளி பொன்களுக்கு ஸ்தானமாயின. தன்னுடைய ரேதசு நழுவுகையில் அந்த ருத்திரன் தன்னை விஷ்ணுமாயையானது மூடனுக்கி விட்ட தென்று தெரிந்துகொண்டு அந்தமோகத்தில்நின்றும் நீங்கி ஞர். பிற்பாடு பரமாத்மாவாகிய விஷ்ணுவினுடைய மாகாத் மியத்தை அறிந்தவரான ருத்திரன் அந்தமோகினி லீலையை ஆச்சரியமாக எண்ணவில்லை. அப்போது ஸ்ரீ பகவான் பரமசந்தோஷத்தை யுடையவராய்த் தம்முடைய அசா தாரண ரூபத்தோடே நின்று ஒரு வார்த்தை சொல்லு கின்ருர்:

வாராய் தேவசிரேஷ்டனே! ஸ்திரீ ரூபமான என்னு டைய மாயையினுல் மோகிக்கப்பட்டு மீண்டும் அதைவென்று

பழைய் நிலைமையை யடைந்தாய். உன்னைத்தவிர விஷயங் களிலே ஆசையுடைய எந்தப் புருஷன்தான் என்னுடைய மாயையை தாண்டமாட்டுவன். ஆகையினால் அப்படிப்பட்ட எனது மாயையானது உம்மையுந் திரஸ்கரிக்கப் போகிற தில்லையென்று பகவானாகிய ஸ்ரீ வச்சாங்கனாலே சொல்லப் பட்டவராகி ருத்திரனானவன் அவரைப் பிரதக்ஷணம்பண்ணி அவரனுமதிகொண்டு, தன்னுடைய கணங்களுடனே தனது ஸ்தானத்தை யடைந்து, தானனுபவித்த அந்த விஷ்ணு மாயையை பார்வதிக்கு ரிஷி சிரேஷ்டர்களெல்லாம் பார்த் துக்கொண்டிருக்கச் சொன்னார். வாராய் பார்வதியே! பரதே வதையான பரமபுருஷனுடைய மாயையை நீயும் பார்த் தாயே. நான் கியானிகளுக்கெல்லாஞ் சுவாமியா யிருந்தா லும் அந்த விஷ்ணுமாயைக்குள்ளே அகப்பட்டு மோகித்தே னாதலால் மற்றபேர் அந்த விஷ்ணுமாயையில் மோகிப்பார்க ளென்பதற்குச் சொல்ல வேண்டியதென்ன? ஆகையினால் ஸ்ரீ ஹரியே பரமபுருஷராக விருக்கின்றார்.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



மனுவந்தரங்கள் ஏழாவது முதல் பதினாலாவது வரையிலும் சிருஷ்டிகளை தனித்தனியே சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! இப்போது நடவாநின்ற மனுவந் தரத்தில் விவசுவானுடைய புத்திரனாகிய சிரார்த்த தேவன் மனுவென்று சொல்லப்படுகிறான். இந்த வைசுதமனுவுக்கு இக்ஷுவாகு நிறுகன் திருஷ்டன் சைரதி நாஷியந்தன் நரபா கன் திஷ்டன் கருசகன் விரஷத்திரன் வசுமான் எனும் பத்துபிள்ளைகள் இருந்தார்கள். ஆதித்தியர்கள் வசுக்கள் விசுவதேவர்கள் ருத்திரர்கள் மருதகணங்கள் அசுவனிதேவ தைகள் இவர்கள் தேவர்கள். இவர்களுக்குப் பிரபுவாகிய இந்திரன் புரந்தரன். காசியபர் அத்ரி வசிஷ்டர் விசுவா மித்திரர் கவுதமர் ஜமதக்கினி பரத்துவாசர் இந்த ஏழுபேரும் ரிஷிகள். இந்த மனுவந்தரத்திலேயும் காசியபருக்கு அதிதி யினிடத்தில் பகவான் தம்முடைய அம்சத்தினால் வாமன ரூபியாக விவசுவர்கள் முதலான அதிதிபுத்திரர்களுக்குக் கனிஷ்டராய் அவதரித்தார். இவ்வளவும் மற்ற ஏழுமனு வந்தரங்களும் உமக்கு நம்மாலே சொல்லப்பட்டன: இனி

விஷ்ணு சக்திகளான அங்கிசாவதாரங்களோடு கூடின மனுவந்தரங்களையுஞ் சொல்லுகிறேன்.

வாராய் ராஜனே! அதிலே விவச்வானுக்கு விசுவ கர்மாவினுடைய பெண்களான சமுக்கியாதேவியும், சாயா தேவியும் மனைவியர். அந்த விவசுவானுக்குப்படவை யென்று மூன்றாவது பாரியையும், வேறே இன்னமும் ஒருத்தி யுண்டென்று சொல்லுவார்கள். அவர்களுக்குள்ளே சமுக் கியாதேவிக்கு எமனென்றும், எமியென்றும், சிராத்தவே னென்றும் மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள். சாயாதேவிக்குச் சாவர்ணியும், சமவருணருக்குப் பாரியையான தபதியென்கிற ஒருபெண்ணும், சவன்சானும், இந்த மூன்றுபேரும் பிறந் தார்கள். சாயை படவைக்கு அசுவனிதேவதைகள் பிறந் தார்கள். இவர்களுக்குள்ளே சாயாபுத்திரனான சாவர்ணி யென்கிறவன் மேல்வரப்போகிற எட்டாவது மனுவந்த ரத்திலே மனுவாகப் போகிறான். நிர்மோகன்-விரஸ்கன் முதலான பேர் அந்த சாவர்ணிமனுவுக்குப் புத்திரர்களாகப் போகிறார்கள். அந்த எட்டாவது மனுவந்தரத்தில் சுத பசுக்களும், விரசர்களும் அமிர்தப்பிரபர்களும் தேவகணங்க ளாகப் போகிறார்கள். விரோசனபுத்திரனான பலி அவர் களுக்குப் பிரபுவாகி இந்திரனாகப்போகிறான்.

அப்போது பலியானவன் மூன்றடிதாவென்று யாசியா நின்ற விஷ்ணுவுக்கு இந்தப் பூமியெல்லாம் கொடுத்து பிற் பாடு சித்திர பதமான இந்திர பதத்தை அனுபவித்து மோக்ஷமடையப்போகிறான். அந்தப்பலியானவன் பூமிதானஞ் செய்ததினால் பகவானானவர் சந்தோஷத்தையடைந்து சுவர்க் கத்தைப் பார்க்கிலும் அதிகமான சுதலலோகத்திலே திரும்ப வும் வைக்கப்பட்டு இப்பவும் தேவேந்திரனைப் போல விருக்கிறான். பரசுராமன், துரோண புத்திரனாகிய அசுவத் தாமா, கிருபாசாரியார், ரிஷியசிறுங்கர், நம்முடைய பிதாவா யும் பகவானாயு மிருக்கிற பாதராயணரென்று பிரசித்தரான வியாசர் இவர்களெல்லாம் எட்டாவது மனுவந்தரத்திலே சப்தரிஷிகளாகப்போகிறவர்களாய் இப்போது தபசுபண்ணிக் கொண்டு தங்கள் தங்கள் ஆசிரமங்களிலே யிருக்கிறார்கள். வேதகுய்யருக்கு சரஸ்வதியினிடத்திலே சார்வ பூமனென்று பிரசித்தராய்ப் பகவான் தம்முடைய அங்கிசத்தினால் அவ தரித்துப் புரந்தரனிடத்தில் நின்றும் ஸ்தானத்தைவாங்கி பலிக்குக் கொடுக்கப்போகிறார்.

ஒன்பதாவது மனுவந்தரத்திலே, வருணபுத்திரனாகிய தக்ஷசாவர்ணிமனுவாகப்போகிறான். திருதகேது திபதகேது

முதலான பத்துப்பிள்ளைகள் அந்தமனுவுக்குண்டாகப்போகிறார்கள். பார்-மரீசி-கற்கர்கள் முதலானபேர் தேவர்களாகப் போகிறார்கள். சுரதனென்கிறவனும் இந்திரனாகப்போகிறான். துதிமான் முதலானபேர் சப்தரிஷிகளாகப்போகிறார்கள். ஆயுஷ் மனுவுக்கு அம்புதாரையென்கிற ஸ்திரீயினிடத்தில் பகவான் ரிஷபராக அவதரிக்கப்போகிறார். யாதொருரிஷப பகவானால் மூன்று உலகமும் கொடுக்கப்பட்டு சிரதனென்கிற இந்திரன் அனுபவிக்கப் போகின்றான்.

பத்தாவது மனுவந்தரத்திலே உபலோக புத்திரனாய் மகானான பிரமசாவர்ணி மனுவாகப்போகிறான். பூரிஷேணன் முதலானபேர் அந்த மனுப்புத்திரர்களாகப் போகிறார்கள். அவிஷ்மான் முதலானபேர் ரிஷிகளாகப்போகிறார்கள். அவிஷ்மான், சுகிர்தி, கத்தியன், சயன், மூர்த்தி இவர்கள் அப்போது ரிஷிகளாகப்போகிறார்கள். சுத்திராமான்-விபுத்திரர்கள் முதலானபேர் தேவர்களாகப் போகிறார்கள். சம்பு இந்திரனாகப்போகிறான். விசுவசிஷ்டர்களான பிரஜாபதிகளுடைய கிரகத்திலே பகவான் தம்முடைய அங்கிசா அங்கிசத்தினால் விசூசியென்கிற ஸ்திரீயினிடத்தில் விஷபவச்சேனராக அவதரித்து சம்புவென்கிற இந்திரனுக்குச் சக்தியைத் தரப்போகிறார்.

பதினோராவது மனுவந்தரத்திலே தர்மசாவர்ணியென்று ஆத்மக்கியானியாய் ஒருவன் மனுவாகப்போகிறான். சக்திய தர்மர்கள் முதலான பத்துபேர் அந்த மனுப்புத்திரராகப் போகிறார்கள். விகங்கமர்கள் - காமர்கள் - நிர்வாணருசிகள் தேவகணங்களாகப்போகிறார்கள். வைதிருதி அவர்களுக்குப் பிரபுவான இந்திரனாகப்போகிறான். அருணாதியர் சப்தரிஷிகளாகப் போகிறார்கள். ஆரியகருக்கு வைதிருதியென்கிற ஸ்திரீயினிடத்தில் பகவான் தர்மசேதுவென்று தம்முடைய அங்கிசத்தினால் அவதரித்து மூன்று உலகத்தையுந் தரிக்கப் போகிறார்.

பனிரண்டாவது மனுவந்திரத்திலே ருத்திர சாவர்ணி மனுவாகப்போகிறான். தேவவான்-உபதேவன்-தேவசிரேஷ்டன் முதலானபேர் மனுபுத்திரர்களாகப் போகிறார்கள். ருதுசாமா இந்திரனாகப்போகிறான். அரிதா முதலானபேர் தேவர்களாகப் போகிறார்கள். தபோமூர்த்தி தபசு-ஆக்கினியித்தர்கள் முதலானபேர்கள் ரிஷிகளாகப்போகிறார்கள். சத்தியசககசுக்கு சுனிருதையினிடத்திலே பகவான் தம்முடைய

அமிசத்தினால் சுதர்மாவென்று பிரசித்தராய் அவதரித்து அந்த மனுவந்தரத்தைச் சாதிக்கப்போகிறார்.

பதின்மூன்றாவது மனுவந்தரத்தில் ஆத்துமக்கியானியான தேவசாவர்ணிமனுவாகப்போகிறான். சித்திரசேனனை விசித்திரன் முதலானபேர் அந்தமனுப்புத்திரர்களாகப் போகிறார்கள். சுகர்மானென்றும் சுந்திரர்மானென்றும் தேவகணங்களுண்டாகப்போகிறார்கள். திவஸ்பதி இந்திரனாகப் போகிறான். நிர்மோகன்-தத்துவதரிசி முதலான பேர்கள் ரிஷிகளாகப் போகிறார்கள். தேவவோத்திராருக்குப் பித்ஹறதியென்கிற ஸ்திரீயினிடத்தில் பகவான் தம்முடைய அமிசத்தினால் யோகேசுவரராக அவதரித்து திவஸ்பதியாகிற இந்திரனுக்குச் சகாயம்பண்ணப்போகிறார்.

பதினான்காவது மனுவந்தரத்திலே இந்திர சாவர்ணி மனுவாகப்போகிறான், உருகப்பீரன்-வசு முதலானபேர் அந்த மனுப்புத்திரராகப்போகிறார்கள். பவித்திரர்களும்-சாட்சுகர்களும், தேவர்களாகப் போகிறார்கள். சுகியிந்திரனாகப் போகிறான். அக்கினி பாகுசுசி-சுக்கிரன்-மகாதன் முதலானபேர் ரிஷிகளாகப்போகிறார்கள். ஸ்ரீ அரியானவர் சத்தராயணருக்குப் பிள்ளையாய்ப் பிரகதபானு வென்று பிரசித்தராய் அவதரித்து எக்கியத்தின்பொருட்டு கிரியாகலாபங்களை விஸ்தரிப்பிக்கப்போகிறார். வாராய்ராஜனே! திரிகாலத்தோடுஞ் சேர்ந்த இந்தப் பதினாலு மனுவந்தரங்களும் உனக்குச் சொல்லப்பட்டன. இந்தப் பதினாலு மனுக்களில் பிரமாவினுடைய ஆயிரம் யுகமான கல்பம்" அளவிடப்பட்டிருக்கின்றது.



## பதினான்காவது அத்தியாயம்



மனுக்கள், ரிஷிகள், இந்திரன் முதலியவர்களின் தர்மங்கள், மநுபுத்ரர்கள் - சப்தரிஷிகள் முதலான பேர்களுடைய செய்கைகள் சொல்லப்படுகின்றன.

### பரிக்ஷித்துவினுடைய வாக்கியம்

வாரீர் பிரமநிஷ்டரே! மனுவந்தரங்களிலே பகவான் மனுமுதலான பேர்களை எந்தப்பிரகாரம் எந்தெந்தக் கிரமத்தினால் எவ்வெவர்களை நியமித்தாரோ அதை எனக்குச் சொல்லவேணுமென்று கேட்ட பரிக்ஷித்துமகாராஜனைப் பார்த்து சுகப்பிரமரிஷியானவர் சொல்லுகின்றார்:

## ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே! மனுவந்தரங்களில், மனுக்களும் மனுபுத்திரர்களும், சப்தரிஷிகளும், இந்திரன் முதலான தேவகணங்களும் அந்தந்தக் காலங்களிலேயுண்டான மகா புருஷனுடைய அம்சாவதாரங்களினால் நியமிக்கப்பட்டிருப் பார்கள். எக்கிய முதலாகியவற்றால் மனுமுதலானபேர் ஏவப் பட்டவர்களாய் ஜகத்தினுடைய பரிபாலனத்தை நடத்தி வைத்தார்கள். சதுர்யுகத்தினுடைய முடிவிலே காலத்தினால் நசித்துப்போகாநின்ற சுருதிகளை ரிஷிகள் தபசினாலே பார்த் துப் பிரகாசம் பண்ணிவைப்பார்கள். சில சுருதிகளில் நின் றும் அனாதியான தர்மம் பிரவர்த்திக்கும். அந்த நாலு பாகத்தோடு கூடின தர்மத்தை மனுக்கள் ஸ்ரீ ஹரியினால் ஏவப்பட்டவர்களாய் அந்தத் தர்மத்தைத் தங்கள் தங்கள் காலத்தில் பூமியிலே பிரவர்த்தித்தார்கள்.

பிரஜாபாலர்களான மனுப்புத்திரர்கள் புத்திர பவுத்தி ராதிக் கிரமத்தினால் அந்தத் தர்மத்தை மனுவந்தரத் தளவும் ரக்ஷிப்பார்கள். இந்திரன் பகவானால் கொடுக்கப்பட்ட திட மான திரிலோகசம்பத்தை அனுபவித்து மூன்றுலோகங் களையும் பாலனம் பண்ணிக்கொண்டு அவரவருக்கு அபீஷ் டத்தையும் வருஷிப்பன். யுகங்கள்தோறும் ஸ்ரீ ஹரியானவர் ஜனகாதி சித்த ரூபியாய் அவரவருக்குக் கியானத்தை யுபதே சிப்பர். யாக்கியவகர் முதலான ரிஷிரூபத்தைத் தரித்து தத்தாத்திரேயர் முதலான யோகீஸ்வர ரூபத்தையுந் தரித்து கியானகர்ம யோகங்களிரண்டையும் உபதேசிப்பார். மரீசி முதலானவர் பிரஜாபதிரூபியாய்ச் சிருஷ்டியைப்பண்ணுவர். ராஜரூபத்தினால் சோரர்களைச் சங்கரிப்பர். காலரூபத்தினால் சகல பிராணிகளுக்கும் நாசத்தின் பொருட்டு தனித்தனியே சீதோஷ்ணாதிகுணங்களை அடைவர். நாமரூபாத்மகமான விஷ்ணுமாயையினால் மோகிக்கப்பட்ட புத்தியையுடையவர்க ளான இந்த ஜனங்களால் நானாவிதங்களான சாஸ்திரங்களி னால் நிரூபிக்கப்பட்டிருந்தாலும் பகவானானவர் ஒருத்தரா லேயும், எதார்த்தமாக அறியப்படுகிறதில்லை. இந்த அவாந் தர கல்பத்தினுடைய பிரமாணம் கீர்த்திக்கப்பட்டது. அந்த அவாந்தரகல்பத்தில் கியானிகள் பதினாலு மனுவந்தரங்க ளுண்டென்று சொல்லுவார்கள். அப்படிப்பட்ட அவாந்தா கல்பம் நிரூபிக்கப்பட்டது.

## பதினைந்தாவது அத்தியாயம்

*பலியானவன் யாகத்தைச் செய்து, சுவர்க்க ஆதிபத்தியம் கைக்கொண்டதும், அவனைக்கண்டு தேவர்கள் மறைந்ததும் சொல்லப்படுகிறது.*

### பரிக்ஷித்து வாக்கியம்

ஓ மகானுபாவரே! சகல லோகங்களுக்கும் நியந்தாவாகிய பகவான் எதற்காக தரித்திரர்களைப்போல் பலியினிடத்தில் பூமியில் மூன்றடியை யாசித்தார்? பரிபூர்ணரான பகவான் நிரபராதியான பலியைக் கட்டினதைக் கேழ்க்க வேணுமென்று சொல்லுகின்ற பரிக்ஷித்துவைப் பார்த்து சுகப்பிரம ரிஷியானவர் சொல்லுகின்றார் :

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்துவே! சொல்லுகிறேன் கவனமாய் கேள். பலியானவன் இந்திரனாலே சம்பத்துகளை யிழந்து, அபஜயப்பட்டவனாய் பிராணனையு மிழந்தவனாய், திரும்பவும் பிருகுவமிசத்தில் பிறந்த மகாரிஷிகளினால் ஜீவிக்கப்பட்டவனாய்ச் சர்வப் பிரகாரத்திலேயும் அந்த பிருகுவமிசத்திலே பிறந்த மகாரிஷிகளை மிகவுந் தனங்களைக்கொடுத்து சிஷியனாயிருந்து ஆஸ்ரயித்தான். மகானுபாவர்களாயும் பிருகுவமிசத்திலே பிறந்தவர்களாயுமிருக்கிற அந்த முனிவர்கள் மிகவும் பொருள்களினால் பூசிக்கப்பட்டவர்களாகிச் சுவர்க்கத்தை ஜயிக்கவேணுமென்று இச்சை கொண்ட அந்த பலிச் சக்கரவர்த்தியை சாஸ்திரபிரகாரம் அபிஷேகம் பண்ணுவித்து அவனைக்கொண்டு விசுவசித்து யாகம் பண்ணிவைத்தார்கள். அப்போது அவிசுக்களினால் வளர்க்கப்பட்ட வைதிகாக்கினியில் நின்றும் சுவர்ணபட்டங்களினால் கட்டப்பட்ட மகத்தாகிய ரதமும் சூரியாசுவங்களுக்குச் சமானமான குதிரைகளும், சிங்கத்தினால் விளங்காநின்ற துவஜமும் சுவர்ண கட்டுகளோடுங்கூடின ஒரு தனுசும் அக்ஷயசரங்களையுடைய இரண்டு அம்புறாத்தூணியும், திவ்வியமாகிய ஒரு கவசமு முண்டாயிற்று. அந்தப் பலிக்குப் பிதாமகனான பிரகலாதனன் வாடாத பத்மங்களையுடைய மாலையையும், சுக்கிரன் ஒரு சங்கத்தையுங் கொடுத்தார்கள்.

பிற்பாடு மகாரதனான பலிச்சக்காவர்த்தி பெரியோர்களால் ஆசீர்வதிக்கப்பெற்று அந்த பிருகுவமிசர்களாலே கொடுக்கப்பட்ட திவ்விய ரதத்திலேறி சோபன மாலையைத்

தரித்துக்கொண்டு கவசம் தனுசு கட்கம் அம்புருத்தூணி இவைகளையுடையவனுய்ச் சுவர்ணமயமாக விளங்கி ரதாரூடர்களாயும் கண்களினுலே ஆகாசத்தைப் பானம் பண்ணுகிறவர்கள் போலவும் திக்குகளை அடியோடே பிடுங்கிப்போடுகிறவர்கள் போலவுமிருக்கிற தயித்திய சேனுபதிகளினுல் சூழப்பட்டவனுய் மகத்தாகிய அசுரசேனையை அழைத்துக் கொண்டு ஆகாசம் பூமி இரண்டையும், நடுங்கப் பண்ணுகிறதுபோல சர்வ சம்பத்துடனேகூடின இந்திரப் பட்டணத்திற் பிரவேசித்து அதை நாலா பக்கத்திலும் முற்றுகையிட்டு சங்கத்தை ஊதினுன். இந்திரனும் அந்தப் பலியினுடைய மகத்தாகிய யுத்தசன்னுகத்தை யறிந்து சமஸ்த தேவகணங்களோடு கூடினவனுய்ப் பிரகஸ்பதியைக் குறித்து சொல்லுகின்றுன் :

### இந்திரனுடைய வாக்கியம்

பகவானே! நமக்குப் பூர்வசத்துருவான பலியினுடைய யுத்தசன்னுகமானது மிகவும் அசாத்தியமா யிருக்கின்றது. ஆகையால் இந்தப் பலியை ஜயிக்க முடியாதென்று எண்ணுகிறேன். இவன் முகத்தினுல் ஜகத்தைப் பானம் பண்ணுகிறவன் போலவும், பத்துத் திக்குகளையும் கவளீகரிக்கிறவன் போலவும், திருஷ்டிகளினுல் தகிக்கிறவன் போலவும், பிரளயாக்கினிபோல விருக்கிறுன். இவனுக்கு எதனுலிந்த யுத்த சன்னுகத்துக்கு மூலங்களான இந்திரிய பலம்-மனேபலம்-சரீரபலம்-தேஜசு இவையெல்லா முண்டாயினவோ அதைச் சொல்லுமென்று இந்திரன் கேட்க பிரகஸ்பதி கூறுகின்றுர்:

### பிரகஸ்பதியினுடைய வாக்கியம்

இந்திரனே! பிரமவாதிகளான பிருகுவமிசத்தார் சிஷியனை இந்த பலிக்குத் தேஜஸை யுண்டாக்கினுர்கள். சர்வ நியந்தாவான ஸ்ரீ ஹரியைத் தவிர மற்ற நீயும் உன்னைப்போலொத்த ஒருவனும் இந்தப் பலியை யுத்தத்தில் ஜயிக்க மாட்டார்கள். ஆகையால் நீங்களெல்லாஞ் சுவர்க்கத்தை விட்டு வெளிப்பட்டு காலத்தைப் பார்த்துக் கொண்டிருங்கள். பிராமணர்களுடைய பலத்தினுலே திடமாகிய விக்கிரமத்தை அடைந்திருக்கிற இந்தப் பலியானவன் அவர்களுடைய அவமானத்தினுலே தானே தன்னுடைய பரிவாரத்துடனே நசிக்கப்போகிறுனென்று இந்தப் பிரகாரம் இனிவருங் காரியங்களை அறிந்தவரான பிரகஸ்பதியினுல் சொல்லக்கேட்டு காமரூபிகளாயிருக்கிற அந்தத் தேவதைகள் சுவர்க்கத்தை விட்டுப் போய்விட்டார்கள்.

பிறகு தேவர்களெல்லாரும் மறைந்து போகையில் விரோசன புத்திரனான பலியானவன் தேவதைகளுடைய பட்டணமான அமராபதியிலே யிருந்துகொண்டு மூன்று உலகங்களையும், வசப்படுத்திக் கொண்டான். லோகங்களை யெல்லாஞ் ஜயித்தவனாயும், சிஷ்யனாயும் அனுவர்த்தித்துக் கொண்டு மிரா நின்ற அந்தப் பலியைச் சிஷ்யனிடத்தில் வாத்சல்யத்தை யுடையவர்களான அந்தப் பிருகுவம்சத்தாரான பிராஹ்மணர்கள் அஸ்வமேதத்தை செய்து வைத்தார்கள். அந்த நூறு அஸ்வமேதத்தினுடைய பிரபாவத்தினால் பலியானவன் மூன்று லோகத்தினாலேயும் ஆச்சர்யகரமான கீர்த்தியைத் திக்குகளில் பரவச்செய்து கொண்டு, மகா உதாரத்தை யுடையவனாய்த் தன்னைக் கிருத கிருத்தியனாக எண்ணினவனாய்ப், பிராஹ்மணர்களாலே யடைந்த மகா சம்பத்தை அநுபவித்துக்கொண்டிருந்தான்.



## பதினாறுவது அத்தியாயம்



*கசியபர் அதிதியை பயோவிரதத்தை அனுஷ்டிக்கசொல்லுதலும், ஸ்ரீ பகவான் வாமனாவதாரமுஞ் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே! இந்தப் பிரகாரம் தேவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் சுவர்க்கத்தை விட்டுப்போன பிறகு, தயித்தியர்களாலே சுவர்க்கலோகமும் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கையில் தேவமாதாவாகிய அதிதிதேவியானவள் அனாதையைப் போல பயதாபத்தை அடைந்திருந்தாள். அப்போது ஒருக்கால் பகவானாகிய கசியபப் பிரஜாபதி வெகுகாலத்திற்குப் பின்பு சமாதியில் நின்றும் வெளிப்பட்டவராய், அதிதியினுடைய ஆசிரமத்தையடைந்து அவ்விடத்தில் சந்தோஷமில்லாமலிருக்கிற தம்முடைய பத்தினியான அதிதியினால் கொடுக்கப்பட்ட ஆசனமுதலாகிய பூஜையை யுடையவராய் அவளைப்பார்த்து ஒரு வார்த்தைச் சொல்லுகின்றார் :

### கசிய பிரஜாபதி வாக்கியம்

அடிமங்களரூபிணியே! இப்போது உலகத்திலே பிராமணர்களுக்கும் பசுக்களுக்கும் - தர்மத்துக்கும் அமங்களமொன்றுமில்லையே. உன் முகம் வாடியிருப்பதன் காரணத்தை யானறியச்சொல் என பர்த்தாவைப் பார்த்து அதிதிதேவியானவள் சொல்லுகின்றாள்,

அதிதி தேவி வாக்கியம்

ஓ பிரமநிஷ்டரே பிராமணர்-பசுக்கள்-தர்மம்-தர்மார்த்த காமங்களுக்கு உற்பத்தி ஸ்தானமான இந்தக் கிரகங்கள் இவைகளுக்கெல்லாம் க்ஷேமம் உண்டாகியே யிருக்கின்றது. அக்கினி- அதிதிகள் - பரிசனங்கள் - சன்னியாசிகள் பிரயோசனத்தை அபேக்ஷித்துக் கொண்டிருப்பார்கள். இவையெல்லாம் நான் பகவானாகிய உம்மைத் தியானம் பண்ணிக்கொண்டிருக்கிறபடியால், குறைவில்லாமலே இருக்கின்றது. வாரீர் மரீசிபுத்திரரான காசியபரே! உம்முடைய மானசபுத்திரர்களான தேவாசுர தயித்தியப் பிரஜைகளெல்லாம் சத்துவ ரஜஸ் தமசு என்கிற மூன்று குணங்களோடுகூட விருப்பார்கள். அந்தத் தேவர்கள் முதலான புத்திரர்களிடங்களில் நீர் சமமாகவே யிருக்கின்றீர். வாரீர் பிரபுவே! ஆனாலும் ஈஸ்வரன் பக்தனுக்கே பிரசன்னராவார். ஆகையால் பக்தி பண்ணாநின்ற என்னுடைய சிரேயசைச் சிந்தியும். சத்துருக்களான தயித்தியர்களால் அபகரிக்கப்பட்ட சம்பத்தையும் ஸ்தானத்தையும் உடையவர்களான பிள்ளைகளையும் என்னையும் ரக்ஷியும். என்னுடைய ஐஸ்வரியம்-காந்தி-எஜசு - ஸ்தானம் இவையெல்லாம் சத்துருக்களாலே அபகரிக்கப்பட்டன. பிரஜைகளுக்கு க்ஷேமத்தை உண்டு பண்ணுகிறவரே! என்னுடைய பிள்ளைகள் அந்த ஐஸ்வரிய முதலானவைகளைத் திரும்பவும் எப்படி அடைவார்களோ அதை உம்முடைய கல்யாணமான புத்தியினால் அனுக்கிரகம் பண்ணுமென்று அதிதியினால் அர்த்திக்கப் பட்டவராய்க் கசியபப்பிரஜாபதியானவர் சிரித்துக்கொண்டு அதிதியைப் பார்த்து சொல்லுகின்றார்: வாராய் நல்ல மனதையுடையவளே! விஷ்ணுவினுடைய மாயாபலத்தை என்னசொல்லப்போகிறோம். அந்த மாயையினால் இந்தச் சகத்தானது புத்திராதிபாசங்களினால் கட்டுப்பட்டிருக்கின்றது. சர்வ பூதாத்துமாவாகியும், கியான சக்தி பரிபூரணராயும், ஜனார்த்தராயும், ஜகத் குருவாயு மிருக்கிற வாசுதேவனைப் பஜனை பண்ணக்கடவாய். தீனதயாளுவாகிய அந்தப்பகவான் உன்னுடைய இஷ்டங்களை நிறைவேற்றுவாரென்று சொல்லாநின்ற கசியபருடைய வார்த்தையைக்கேட்டு அதிதி தேவியானவள் சொல்லுகின்றாள்.

வாரீர் பிரமநிஷ்டரே! ஜகத்குருவான பகவானை எந்தப் பிரகாரம் ஆராதிப்பேன். சத்திய சங்கற்பராகிய அந்தப் பகவான் என்னுடைய மனோரதத்தை எந்தப் பிரகாரம் நிறைவேற்றுவார். புத்திரர்களோடுகூட துக்கப்படா நின்ற எனக்குப் பகவான் எந்த ஆராதனத்தினால் சீக்கிரமாகச் சந்

தோஷிப்பாரோ அப்படிப்பட்ட பகவதாராதன விதியை உப தேசியுமென்று சொல்லாநின்ற அதிதிதேவியைப் பார்த்து கசியபர் சொல்லுகின்றார் :

கசிய பிரஜாபதி வாக்கியம்

நல்லொழுக்கமுடையவளே! சதுர்முகனவன் எனக்குச் சொன்ன கேசவப்பிரீதிகரமான அந்தப் பயோவிரதத்தை யுனக்குச் சொல்லுகிறேன். என்னவென்றால் பால்குணமாதம் சுக்கில பக்ஷத்திலே பிரதமை முதல் பன்னிரண்டு நாள் வரைக்கும் பரமபக்தியோடு கூடினவளாய்ப் புண்டரீகாக்ஷனைப் பயோவிரதத்தினால் அர்ச்சிக்கக்கடவை. விரதாரம்பத்துக்கு முதல் நாள் அமாவாசையினன்றைக்கு வராகமுகத்தினால் கிளரப்பட்ட மிருத்துவினால் இந்த மந்திரத்தை யுச்சரித்துச் சரீரத்தில் பூசிக்கொண்டு நதிப்பிரவாகங் கிடைத்தால் அதிலே ஸ்நானம்பண்ணி நித்தியநைமித்ய கிரியைகளை யுடையவளாய்ச் சித்தசமாதானத்தை யடைந்து, பூமியிலேயாகிலும் சூரியனிடத்திலாகிலும், பகவானை அர்ச்சித்து, மந்திரங்களினால் ஆவாகன முதற்கொண்டு அர்க்கியபாத்தியாதி உபசாரங்களினால் பகவானைச் சிரத்தையோடு பூசித்து, பாலிலே பக்குவமாயும், நெய்-வெல்லம் இவைகளோடு கூடிய சாலி அன்னத்தைப் பகவானுக்கு நிவேதனம் பண்ணி, துவாதசாக்ஷர மந்திரத்தினால் ஓமம் பண்ணுவித்து, பிற்பாடு நூற்றெட்டு ஆவர்த்தி துவாதசாக்ஷரியை ஜபித்து, ஜகத்பிரபுவான ஸ்வாமியை ஸ்துதித்துப் பிரதக்ஷணஞ் செய்து, பிரணாமம்பண்ணி தன்னுடைய இஷ்ட பந்துக்களோடுகூட நிவேதிக்கப்பட்ட அன்னத்தை புசித்து அன்றிராத்திரி பிரமசரிய நியமத்தையுடையவளாயிருந்து, முதல் நாளைப்போல் மற்ற பன்னிரண்டுநாள் பரியந்தம் இந்தப் பயோவிரதத்தைச்செய்து, ஸ்ரீ ஹரியை ஆராதித்து, அர்ச்சிக்கக்கடவை. இந்தச் சிரேஷ்டமான பகவதாராதனமானது பிதாமகனால் முன்னே எனக்குச் சொல்லப்பட்டது. இப்போதென்னால் உனக்குச்சொல்லப்பட்டது.

வாராய் மகானுபாவையே! நீயும் நன்றாக அனுஷ்டிக்கப்பட்ட இந்தப்பயோவிரதத்தினால் பரிசுத்தமாயும் பக்தியையுடையதாயுமிருக்கிற மனதினால் நிக்கிரகிக்கப்பட்ட ஆத்துமாவை யுடையவளாய், நிர்விகாரனான கேசவனையே ஆராதிக்கக்கடவாய். இந்தப் பயோவிரதமே சமஸ்தஎக்கியமாகவும், சமஸ்தவிரதமாகவும், ஈஸ்வரப்பிரீதிகரமான சிரேஷ்டமான தபசாகவும், ஸ்தானமாகவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. மங்களரூபிணியே! அதோக்ஷசனாகிய பகவான் எந்த விரதத்



படம் நெ. 9. பக்கம் நெ. 663.

பகவான், வாமனாவதார மெடுத்தது.

தினாலே சந்தோஷிக்கிறாரோ, அதுவே சமஸ்தமான நியமங்களும், தபசும், தானமும், விரதமும், எக்கியமுமாகும். ஆகையினால் இந்த விரதத்தைப் பக்தியினாலேயும் சிரத்தையினாலேயும், ஆசரிக்கக்கடவாய். ஸ்ரீ பகவானுஞ் சந்துஷ்டராய்ச் சீக்கிரமாக உனக்கு அபீஷ்டத்தைக் கொடுக்கப்போகிறார்.



## பதினேழாவது அத்தியாயம்



*அதிதியினால் பயோ விரதமானது அநுஷ்டிக்கப்பட்டமையைச் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே! இந்தப்பிரகாரம் தன்னுடைய பர்த்தாவாகிய கசியபராலே சொல்லப்பட்டவளாய் அந்த அதிதியானவள் பனிரண்டுநாள் இந்தப் பயோவிரதத்தைச் சோம்பலில்லாதவளாய் ஆசரித்து ஏகாகாரமான புத்தியினால் மகாபுருஷனான ஈஸ்வரனைச் சிந்தித்துக்கொண்டு மனதையும் ஏகலக்ஷியமான புத்தியினால் சர்வாந்தரியாமியாயுங் கியானசக்தி முதலாகிய ஷாட்குண்ணிய பரிபூரணராயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே நிறுத்திப் பயோவிரதத்தை ஆசரியாநின்ற அந்த அதிதிக்கு ஆதிபுருஷனாகிய பகவான் பிரத்தியக்ஷமானார். வாராய் ராஜனே! பீதாம்பரதாரியாயும், சதுர்ப்புஜராயும், சங்குசக்கரகதாதரராயும், கண்ணுக்குத் தோற்றாநின்ற பகவானைப் பார்த்துச் சீக்கிரமாகவெழுந்திருந்து அதிதியானவள் ஆதரவோடு கூடினவளாய் பிரீதியினாலே பரவசையாய் அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு ஸ்தோத்திரஞ்செய்து அந்தப்பகவானைக்கண்ட சந்தோஷத்தினால் நடுங்காநின்ற சரீரத்தையுடையவளாயுமிருந்து, பின்பு ஜகத்குருவாயிருக்கிற சுவாமியை நேத்திரங்களினால் பானம் பண்ணுகிறவள்போலப் பார்த்துக்கொண்டு மெதுவாகத் தழைத்த சொற்களினால் அந்த ஸ்ரீ ஹரியைத் தோத்திரம் பண்ணுகின்றாள்:

அதிதிதேவி ஸ்தோத்திரம் பண்ணுதல்

வாரீர் ஈசனே! எக்கிய புருஷனே! அச்சுதா! பரிசுத்தனே! மங்களமான நாமதேயத்தை யுடையவனே! ஜகத்ரூபியாயும் ஜகத்தினுடைய உற்பத்தி ஸ்திதி சங்காரங்களுக்காக சுவயிச்சையினால் கிரகிக்கப்பட்ட அனந்தசக்திகளை வாய்ந்த மாயாகுணங்களை யுடையவராயும், சர்வவியாபகராயும்,

மகானும், ஐஸ்வரியமும், சுவர்க்கமும், பூமியும், பாதாள மும், அணிமாதி அஷ்ட ஐஸ்வரியமும், தர்மார்த்தகாமங் களும், கேவலக்கியானமும், இவைகளெல்லாம் சந்துஷ்ட ரான உம்மாலே மனுஷியர்களுக்கு உண்டாகின்றது. சத்துரு ஜய முதலானவை உண்டாகுமென்பதற்குச் சொல்லவேண் டியதென்னவென்று அதிதியினால் ஸ்தோத்திரம் பண்ணப் பட்டவராயும் சர்வபூதாந்தரியாமியாயு மிருக்கிற புண்டரீ காக்ஷனை ஸ்ரீ பகவான் அந்த அதிதியைப்பார்த்து சொல்லு கின்றார்:

ஸ்ரீ பகவான் வாக்கியம்

வாராய் தேவமாதவே! உன்னால் வெகுகாலமாக அபே க்ஷிக்கப்பட்ட கோறிக்கையானது என்னால் அறியப்பட்டது. என்னவென்றால் சத்துருக்களால் அபகரிக்கப்பட்ட ஐசுவரி யத்தையுடையவர்களாயும், சுவர்க்கத்தில் நின்றும் நழுவின வர்களாயுமிருக்கிற பிள்ளைகளுக்குச் சத்துரு ஜயத்தினால் சுவர்க்கப்பிராப்தியை உன்னால் அபேக்ஷிக்கப்பட்டது. அந்த அசுரசிரேஷ்டர்களை யுத்தத்தில் ஜயித்து அஷ்டஐஸ்வரிய சம்பன்னர்களான புத்திரர்களோடுகூட ஓரிடத்திலே யிருக்க இச்சிக்கின்றாய். அவர்கள் விஷயத்தில் இப்போது பராக் கிரமமானது சுகத்தைக் கொடுக்கமாட்டாது. ஆனாலும் உன்னுடைய இந்தபயோவிரத அனுஷ்டானத்தினால் சந் தோஷிக்கப்பட்ட என்னால் ஒரு உபாயம் சிந்திக்கத்தக்கது. என்னுடைய ஆராதனம் சிரத்தானு குணமாகப் பலத்தை கொடுக்கிறதாகையால் வியர்த்தமாக மாட்டாது. புத்திரர்களை ரக்ஷிக்கிற நிமித்தமாக உன்னால் அர்ச்சிக்கப்பட்டு அதற்கு யோக்கியமாக ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட நான் எனது அம்சத்தினால் உனக்குப் புத்திரபாவத்தையடைந்து கசியப பிரஜாபதியினுடைய தபசிலிருந்துகொண்டு உன்பிள்ளைகளை ரக்ஷிக்கிறேன். உன்னுடைய பதியினிடத்தில் என்னை இப்படிப்பட்ட ரூபத்தையுடையவனு யிருக்கிறவனாகப் பாவித் துக்கொண்டு பாபசூனியரான கசியபப் பிரஜாபதியை யடை யக்கடவாய். இந்தப்பரமமான தெய்வ ரகசியத்தை ஒருவருக் கும் எந்த விதத்திலுஞ் சொல்லாதே என்று இந்தப்பிரகாரம் பகவானானவர் அதிதிதேவியைப் பார்த்துச் சொல்லி அவ் விடத்திலேயே அந்தர்த்தானமானார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

அந்த அதிதிதேவியான ஜகத்பிரபுவான ஸ்ரீ ஹரியி னுடைய அவதாரத்தை தன்னிடத்திலே யடைந்து, கிருத கிருத்தியையானவள் போல பதியான கசியபரை பரம

பக்தியினாலே யடைந்தாள். சத்தியசங்கற்பரான அந்தக் கசியபரும் தம்மிடத்தில் பிரவேசிக்கின்ற ஸ்ரீ ஹரியினுடைய அமிசத்தைச் சமாதியோகத்தினாலே யறிந்து, தபசினால் வெகுகாலமாகச் சம்பாதிக்கப்பட்ட வீரியத்தை நல்ல மனதை யுடையவராய்த் தயித்தியர்களைப் போக்கடிக்கத் தக்கதாக அதிதியினிடத்தில் ஸ்தாபித்தார். அதிதியினிடத்தில் கசியபராலே கர்ப்பாதானம் பண்ணப்பட்ட கர்ப்பத்திலே ஸ்ரீ பகவான் பிரவேசித்திருக்கின்றதை யறிந்து பிரமாவானவன் இரகசியமான நாமங்களினால் அந்த ஸ்ரீ பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகின்றான் :

பிரம்தேவர் வாக்கியம்

வாரீர் உருகாயனே! பகவானே! உருக்கிரமனே! அதிகமான பதவின்னியாசத்தை உடையவனே! உமக்கு நமஸ்காரம். ஷாட்குண்ணிய பூரணராயும், வேதகர்ப்பராயும், பிரமரூபியாயும், மூன்று உலகங்களையும் நாபியில் உடையவராயும், கோப்பிராமணர்களுக்குள்ளே வியாபித்திருக்கிறவராயும், சர்வ வியாபகருமாகையால் விஷ்ணுவென்று பெயரையுடையவராயு மிருக்கிற உமக்குப் பிரணாமம். ஜலத்திலே முழுகா நின்றபேர்களுக்கு ஓடம்போல சுவர்க்கத்தில் நின்றும் நழுவா நின்ற தேவதைகளுக்கு நீர் பரமகதியா யிருக்கின்றீர்.



## பதினெட்டாவது அத்தியாயம்



*பகவானுடைய வாமனாவதாரம் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! இந்தப் பிரகாரம் பிரமதேவனால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டு பகவான் அந்த அதிதியினிடத்தில் ஆவிர்ப்பவித்தார். சியாமளவர்ணராயும், இரண்டு மகரகுண்டலங்களைக் காதிலே யுடையவராயும், ஸ்ரீ வச்சமென்னப்பட்ட மருவை வக்ஷஸிலேயுடையவராயும், கங்கணம்-தோள்வளை-கிரீடம்-அரை நூல்-மாலை-காற்சிலம்பு இவைகளினால் பூஷிக்கப்பட்டவராயும், வனமாலையோடு கூடினவராயும், கவுஸ்துவ மாணிக்கத்தைக் கண்டத்திலுடையவராயும், கசிபப் பிரஜாபதியினுடைய கிரகத்திலுண்டான விருளை தம்முடைய தேஜசினால் போக்கடிக்கப்பட்ட பகவானானவர் புரட்டாசிமாதத்தில் சுக்கிலபக்ஷ சிரவணத் துவாதசியிலே அபிசித்தென்கிற நக்ஷத்திரத்தில் அதிதியி

னிடத்தில் அவதரித்தார். எந்தத் துவாதசியில் ஸ்ரீ வாமன மூர்த்தியினுடைய அவதாரமோ அந்தத் துவாதசியை விஜயத் துவாதசியென்று சொல்வார்கள். அப்போது தேவ துந்துபி முழங்கிற்று. தேவர்கள் புஷ்பவருஷம் பொழிந் தார்கள். ரிஷிகள் முனிவர்கள் சித்தர்கள் வித்தியாதர கணங்கள் கின்னரர்கள் யக்ஷர்கள் கிம்புருஷர்கள் இவர்க ளெல்லாம் ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

அப்போது அதிதிதேவியானவள் தன்னுடைய கர்ப்பத் தில் அவதரித்த பரமபுருஷனைப்பார்த்து ஆச்சரியப்பட்டு சந்தோஷத்தை யடைந்தாள். கசியப்பிரஜாபதியும் ஆச்சரி யத்தை யுடையவராய் பார்த்துக் கொண்டிருக்கும்போதே வாமன மூர்த்தியானார். அந்த வாமன மூர்த்தியைப்பார்த்து சந்தோஷமடைந்தவர்களாய் மகாரிஷிகள் கசியபப் பிரஜா பதியை முன்னிட்டுக்கொண்டு ஜாதகர்ம முதலான வைதீக கர்மங்களை அந்தப் பகவானுக்குச் செய்துவைத்து ரிஷிகளி னால் உபநயனம் பண்ணிவைக்கப்படாநின்ற ஸ்ரீ வாமனமூர்த் திக்குச் சூரியன் காயத்திரியை உபதேசித்தான். பிரகஸ்பதி பிரமசூத்திரத்தைக் கொடுத்தார். கசியபர் முஞ்சியைக்கொடுத் தார். பூமி கிருஷ்ணாசனத்தைக்கொடுத்தது. வனங்களுக் குப் பதியான சந்திரன் தண்டத்தைக்கொடுத்தான். தாயாகிய அதிதிதேவியானவள் கௌபீன வஸ்திரத்தைக்கொடுத்தாள். வேதகற்பனான பிரமா கமண்டல பாத்திரத்தைக் கொடுத் தான். இந்தப் பிரகாரம் உபநயனம் பண்ணிவைக்கப்பட்ட அந்த வாமன மூர்த்திக்கு யக்ஷராஜனான குபேரன் பாத்திரத் தைக் கொடுத்தான். பகவதியான சாக்ஷாத் பார்வதியானவள் பிக்ஷையைக்கொடுத்து சமித்துக்களினால் ஓமம் பண்ணினாள்.

அதன் பிற்பாடு அந்த வாமனமூர்த்தி பலவானான பலிச் சக்கரவர்த்தி பிருகுவமிசர்களான பிராமணர்களைக்கொண்டு செய்கின்ற அஸ்வமேத எக்கிய சாலையிலே பிரவேசித் தார். அந்த வாமனமூர்த்தியை பலிச்சக்கரவர்த்தி முதலான வர்களும் பார்த்து இவன் சூரியனோ அக்கினியோ அல்லது யாகத்தை பார்க்கவேணுமென்கிற இச்சையினால் சனகரே வருகிறாரோ வென்று தர்க்கித்துக் கொண்டிருக்கும்போது, அந்த வாமனமூர்த்தியான பகவான் தண்டம்-சத்திரம்-ஜல பூரணமான கமண்டலம் இவைகளைத் தரித்துக்கொண்டு அஸ்வமேத சாலையில் பிரவேசித்தார். இந்தப் பிரகாரம் எக்கியசாலையிற் பிரவேசியாநின்ற சுவாமியைப் பார்த்து பிராமணர்களெழுந்திருந்து அவரைப் பூசித்தார்கள். எஜமா னான பலிச்சக்கரவர்த்தியும், சந்துஷ்டனாய்ச் சுவாமியைக்

கண்டு அவருக்கு ஆசனங்கொடுத்து, குஶலப்பிரஶ்னம் பண்ணி நமஸ்காரம் செய்து பகவானுடைய திருவடிகளை அலம்பி, நிஷ்காமமாக அர்ச்சித்து சகல பாபங்களையும் போக்கடியாநின்ற அந்தப் பகவானுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தைச் சகல தர்மமும் அறிந்த அந்தப் பலியானவன் சிரசிலே தரித்துக்கொண்டு அந்தப் பகவானை பார்த்துச் சொல்லுகின்றான் :

பிராமணோத்தமரே ! உமக்கு நான் செய்யவேண்டியதென்ன ? உம்மை பிரத்தியக்ஷமாக மூர்த்தீகரித்த பெருமானெனவே எண்ணுகிறேன். நீர் நம்முடைய கிரகத்தில் பிரவேசித்ததினால் நமது பிதுர்க்களெல்லாம் திருப்தியடைந்தார்கள். அக்கினிஹோத்திரங்களும் நன்றாக ஓமங்கள் பண்ணப்பட்டன. உம்முடைய ஸ்ரீபாத தீர்த்தத்தினால் என்னுடைய பாபமானது நாசமாய்விட்டது. இது நிச்சயம். வாரீர் பிரமசாரியே ! பிராமண புத்திரனே ! மகா பூச்சியனே ! உம்மை ஏதோவொன்றை யாசிக்கவந்தவராக எண்ணுகிறேன். நீர் எதை உமது மனதிலெண்ணி வந்தீரோ அதை யென்னிடத்தில் நின்றும் அடையக்கடவீரென்று பலிச்சக்கரவர்த்தியானவன் சொன்னான்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்



வாமன மூர்த்தியால் மூவடிமண் யாசிக்கப்படுவதும், பலிச்சக்கரவர்த்தி அதைக்கொடுக்க இசைவதும், சுக்கிராசாரியர் அதைத் தடுப்பதும் சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே ! இந்தப்பிரகாரம் விரோசன புத்திரனான பலியினுடைய தர்மமாயும், எதார்த்தமாயுமிருக்கிற வசனத்தைக் கேட்ட பகவானானவர் பிரீதியையுடையவராய்ச் சந்தோஷித்து ஒருவார்த்தை சொல்லுகிறார்:

### ஸ்ரீ பகவான் வாக்கியம்

ஜனங்களுக்கெல்லாம் நாயகனே ! உனக்குப் பரலோக இதமான தர்மத்தில் பிருகுவமிசர்களான பிராமணர்களும் குலவிருத்தனையும், மிகவும் சாந்தனையும், பிதாமகனையுமிருக்கிற பிரகலாதனும் குருவாயிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட உன்னுடைய இந்த வசனம் சத்தியமாயும், குலத்துக்கு யோக்கியமாயும், தர்மயுக்தமாயும், கீர்த்திகரமாயுமிருக்கிறது.

யாசிக்கும் பிராமணனுக்கு யாதொரு தாதா கொடுக்கிறே னென்று பிரதிக்கினைப்பண்ணி மீண்டும் இல்லையென்று அவ மானம்பண்ணுகிருனே, அப்படிப்பட்ட புருஷன் இந்தக் குலத்திலேயில்லை. உன்னுடைய குலத்தில் பிரகலாதனன் நிர்மலமான தேஜஸினுல் ஆகாசத்தில் சந்திரன்போல விளங்குகிருன்.

பிரகலாதனுடைய புத்திரனும் உனக்குப் பிதாவாயும், பிராமணர்களிடத்தில் அன்புடையவனாயு மிருக்கிற விரோ சனனானவன் பிராமணவேஷங்கொண்ட தேவதைகளால் யாசிக்கப்பட்டவனாய், அவர்களைத் தேவர்களென்றறிந்திருந் தும் அவர்களுக்குத் தன் ஆயுளை யெல்லாங்கொடுத்தான். தயித்தியேந்திரனே! அத்தகைய கீர்த்திவாய்ந்த குலத் துதித்த உன்னிடத்தில் நின்றும் என்னுடைய அடியினுல் அளக்கப்பட்ட மூன்றடி பூமியை யாசிக்கிறேன். ஜகதீஸ்வர னாயும் மகாதாதாவாயு மிருக்கிற உன்னிடம் வேறொன்றை அபேக்ஷிக்கவில்லையென்று சொல்லும் பகவானைப் பார்த்து பலிச்சக்கரவர்த்தி சொல்லுகின்ருன்:

### பலிச்சக்கரவர்த்தி வாக்கியம்

வாரும் பிராமணபுத்திரரே! உம்முடைய வசனங்களா னவை பெரியோர்களுக்குச் சம்மதமாகமாட்டாது. நீரோ சிறுபிள்ளையாயும், பாலபுத்தியினராயு மிருக்கிற படியினுல் சொற்ப பிரயோசனத்தை விரும்புகிறீர். உலகங்களுக்கெல் லாம் நாயகனுகியும், த்வீபத்தையும் கொடுக்கத்தக்கவனாயு மிருக்கிற என்னை வார்த்தைகளினுல் பூசித்து மூன்றடியை யாசிக்கின்றீர். நீர் சீவனத்தைத்தரும் பூமியை என்னிடத்தில் நின்றும் எதேஷ்டமாக வாங்கிக்கொள்ளுமென்று சொன் னான். அதற்கு ஸ்ரீ பகவானானவர் கூறுகின்ருர்:

### ஸ்ரீ பகவான் வாக்கியம்

அரசசிரேஷ்டனே! ஆசைக்கோ அளவில்லை. மூன்றடி மண்ணில் திருப்தியடையாதவன், மூவுலகத்திலுள்ள மேலான தேசங்களனைத்தையும் பெற்ருலும் திருப்தியடை யான். ஆகையால் நான் இந்த மூன்றடிகளிலேயே கிரு தார்த்தனுவேனென்று சொல்லாநின்ற வாமனமூர்த்தியைப் பார்த்து பலிச்சக்கரவர்த்தியானவன் சிரித்துக்கொண்டு உமக்கு வேண்டும் வரத்தைவாங்கிக் கொள்ளுமென்று சொல்லி, வாமனரூபியான ஸ்ரீ பகவானுக்கு பூதானம். பண்ணுதற்கு ஜலபாத்திரத்தைக் கொண்டுவந்தான். அப் போது கியானிகளுக்கெல்லாந் தலைவரான சுக்கிராசாரிய

ரானவர் விஷ்ணுவினுடைய நினைப்பை யறிந்தவராய் அவர் பொருட்டு பூமியைக் கொடுக்கப் போகிறவனும் அசுரேசுரனுயுஞ் சிஷியனுயு மிருக்கிற பலிச்சக்கரவர்த்தியைப் பார்த்து சொல்லுகின்றார்:

### சுக்கிராச்சார்யர் வாக்கியம்

என தன்பிற்குரியவனே! எக்காரியத்தையும் ஆராய்ந்து செய்யும் நீ இவ்விஷயத்தில் தவிர்ந்ததேது? இப்போது நீ செய்யப்புகுங் காரியத்தால் நீ கெடுவதுமல்லாமல் உன்னை நம்பிய அனைவரையும் கெடுக்கப் பார்க்கின்றாய். மேல் வரப் போகிற அனர்த்தத்தை யறியாத உன்னால் இவருக்கு யாதொன்றை கொடுக்கிறேனென்று பிரதிக்ஞை பண்ணப் பட்டதோ அதை நல்லகாரியமாக எண்ணவில்லை வாமனனாய் இங்கு வந்திருப்பவன் ஸ்ரீமந்நாராயணனே யாவன். அவன் திதிதேவி மைந்தனாய் வந்து இந்திரனுக்கு பொன்னுலகை மீண்டுமளிப்பான் நின்பாலிரக்கின்றனன். மூவடி மண் தருவதாயுரைத்த நீ அவன்தனது ஒரு அடியால் பூமி முழுதும் மற்ற ஒரு அடியால் ஆகாயமுழுதும் அளந்து கொண்ட பிறகு மற்ற மூன்றாவது அடிக்கு இடத்தை எங்கிருந்து கொடுக்கப்போகிறாய் இப்படி கொடுப்பது கொடையாகாது. அதனால் நீ நரகத்தையேதான்படையவேண்டி வரும். ஒருவன் தனக்குள்ள பொருளை தன் மனையிலுள்ளவர்களுக்கும், சுற்றத்தார்க்கும், தேவர்களுக்கும், பிதுர்க்களுக்கும், விருந்தினருக்கும் பங்கிட்டு உபயோகிக்க வேண்டியிருத்தலால் அதைத் தனக்கே உரியதெனக்கொள்ளலும் தவறாகும். மேலும், கபடத்தனமாக நம்மை ஏமாற்ற வருகிறவர்கள் விஷயமாகவும், உதவிபுரிவாரொருவருமிலாதகாலத்துதன்னை மரணத்தினின்றும் தப்பித்துக் கொள்வதற்காகவும், விலைமாதர்கள் விஷயமாகவும், பசுக்கள், முதலிய ஜீவ ஜந்துக்களையும் பிரமஞானிகளையும் ஆபத்தில் நின்றும் காப்பாற்றும் விஷயத்திலும், பேசும்படியான பொய் பொய்மையேயாகாது. அது சத்தியமே யாகும். பிச்சை யெடுத்து பிழைக்கும் ஆசிரமத்திலுள்ளவர்கள் தருமம்வழுவி பொய்பேசி பொருள் பறிக்க இச்சித்தால் அவர்கள் விஷயத்தில் நாம்பொய்பேசுவது நியாயமே யாகும், ஆதலின் வீணாக அவர் வேண்டுவதை கொடுத்து கஷ்டத்திற் காளாகாதே என்றனர்.



## இருபதாவது அத்தியாயம்

பலிச்சக்கரவர்த்தி மூவடிமண் தானம் செய்ததும் வாமனமூர்த்தி திரிவிக்கிரமனாகி பூவுலகத்தையும் சுவர்க்கலோகத்தையும் இரண்டடியால் அளந்தமையும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ராஜனே! பலியானவன் சுக்கிர பகவானால் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டு ஒரு க்ஷணகாலம் மௌனமாயிருந்து பிறகு குருவான சுக்கிரபகவானை பார்த்து சொல்லுகிறான்:

பலிச்சக்கிரவர்த்தி வாக்கியம்

இருதயத்தின் இருளை நீக்கும் எந்தையே! எந்த தாமமானது தர்மார்த்த காமங்கள்-எஜஸு-விருத்தி இவைகளை நாசம் பண்ணாமலிருக்கிறதோ அதுவே கிரகஸ்தர்களுடைய தர்மமென்று உம்மால் சொல்லப்பட்டது. அது யதார்த்தமே. ஆனாலும் பிரகலாதனனுடைய பவுத்திரனென மகா பிரசித்தனான நான் ஒரு தூர்த்தனைப்போல பிராமணனுக்குக் கொடுக்கிறேனென்றுசொல்லியதை யில்லையென்று எப்படி நிராகரிக்கப் போகிறேன். சத்தியத்துக்கு மிஞ்சின தர்மமில்லையல்லவா? இந்தப் பூமிதேவியானவள் அசத்தியவாதியான புருஷனைத் தவிர மற்ற எல்லாவற்றையும், நான் வகிப்பதற்கு இச்சிக்கிறேனென்று சொன்னாளல்லவா? நான் பிராமணனை வஞ்சிப்பதற்கு எவ்வளவு அஞ்சுகிறேனோ அவ்வளவு துக்கமான நரகத்துக்கும் தாித்திரத்துக்கும் பூமியை இழந்து போவதற்கும் மரணத்திற்கும் பயப்படமாட்டேன். ததியங்கு முனிவர் சிபிச்சக்கிரவர்த்தி முதலான சத்புருஷர்கள் விடக்கூடாத பிராணன்களினாலும் பிராணிகளுக்கு உபகாரத்தைப் பண்ணினார்களல்லவா? ஆகையால் சந்தேகமில்லாமல் கொடுக்கத்தக்கதான பூமி முதலான பொருள்களைக் கொடுக்கலாம். யுத்தத்தில் பின்னுக்கு வாங்காதவர்களான ராஜாக்களானவர்கள் காலவித்தியாசத்தினால் அனுபவிக்கப்பட்ட பூமியைமாத்திரம் இழந்துவிட்டார்களேயல்லாமல் அந்தப் பூமியில் பிறவாநின்ற அவர்களுடைய கீர்த்தியையும் இழந்து போகவில்லை. ஆகையால் இந்தப் பிரமசாரியானவர் வரப்பிரதனான விஷ்ணுவானாலும் மற்றயாவரானாலும் ஆகட்டும். இவரால் அபேக்ஷிக்கப்பட்ட பூமியைக் கொடுக்கிறதேயல்லாமல் பிராமணரூபியாயிருக்கிற ஸ்ரீ ஹரியை இம்சிக்கிறதில்லை. இந்தப்பகவானானவர் யுத்தத்தில் என்னைச் சங்கரித்து விட்டு இந்தப் பூமியை அபகரித்தாலும் என்னால் அவர் சங்கரிக்கப்பட்டாலும் இந்த இரண்டு விதத்திலேயும்

என்னை கீர்த்தியானது விடப்போகிறதில்லை யென்று இந்தப் பிரகாரம் தன்னிடத்தில் சிரத்தை யில்லாதவனும், சத்திய சந்தனுயும், மகாதாதாவாயு மிருக்கிற சிஷியனை அந்தப் பலிச்சக்கரவர்த்தி சொல்வதைச் சுக்கிராசாரியானவர் கேட்டு தெய்வத்தினுல் ஏவப்பட்டவராய், அட மூடனே! என்னை உல்லங்கனம் பண்ணின நீ சீக்கிரமாக ஐஸ்வரிய பிரஷ்டனுக போகிருயென்று சபித்தார்.

இந்தப்பிரகாரம் தன்னுடைய குருவான சுக்கிராசாரியரால் சபிக்கப்பட்டிருந்தாலும் சத்தியத்தில் நின்றும் சலியாத மகா உதாரனை பலிச்சக்கரவர்த்தியானவன் வாமன பிரமசாரியை அர்ச்சித்து இந்தப் பூமியை உதகதாரா பூர்வமாகக் கொடுத்தான். அப்போது பலிச்சக்கரவர்த்தியினுடைய பத்தினியான விந்தியாவலி யென்கிறவள் சுவாமியினுடைய திருவடிகளை அலம்புகிறது நிமித்தியமாக ஜலபூர்ணமான சுவர்ணகலசத்தைக் கொண்டு வந்தாள். எஜமானை பலிச் சக்கரவர்த்தியானவனும் அந்தச் சுவாமியினுடைய பாதாரவிந்த யுகளத்தைச் சந்தோஷத்தினுல் விளக்கி உலகங்களுக் கெல்லாம் பாவனமான அந்த ஸ்ரீ பாத தீர்த்தத்தை சிரசிலே வகித்தான். அப்போது ஆகாசத்தில் தேவகணங்கள் கந்தர்வர்கள் முதலானவர்களெல்லாம் அந்தப் பலிசக்கரவர்த்தியினுடைய சிலாக்கியமான தர்மத்தைக் கொண்டாடி, துந்துபி முதலான வாத்தியங்களை முழக்கி, புஷ்பங்களினுல் வருஷித்தார்கள்.

அப்போது அனந்தனென்று சொல்லப்பட்ட ஸ்ரீ ஹரியினுடைய சத்துவ ரஜஸ்தமோகுணசொரூபமான அந்த ஆச்சரியமுள்ள வாமனரூபமானது வித்தியடைந்து பூமி-ஆகாசம்-திக்குகள்-சுவர்க்கம்-பாதாளங்கள் - சமுத்திரங்கள்-திரியக்குகள்-தேவர்கள்-மனுஷியர்கள்-ரிஷிகள் இவர்களெல்லாம் யாதொரு பகவானுடைய சரீரத்திலிருக்கிருர்களோ, அந்தத் திரிவிக்கிரமனுடைய உள்ளங்காலில் பாதாளலோகத்தையும், பாதங்களில் பூமியையும், கணைக்கால்களில் பர்வதங்களையும், முழங்கால்களில் பக்ஷிகளையும், துடைகளில் மருத்துக்களுடைய கூட்டத்தையும், பீதாம்பரத்தில் சந்தியாகாலத்தையும், குய்யப்பிரதேசத்திலே பிரஜாபதியையும், அறையிலே தன்னோடு மற்றுமுள்ள அசுரர்களையும், நாபியில் ஆகாசத்தையும், உதரங்களில் சப்த சமுத்திரங்களையும், மார்பிலே நக்ஷத்திரமாலையையும், இருதயத்திலே தர்மத்தையும், இரண்டு ஸ்தனங்களில் இதசத்தியங்களையும், மனதிலே சந்திரனையும், மார்பிலே தாமரை புஷ்பங்களை கரங்களினுடையவ

ளான ஸ்ரீ மகா லக்ஷமியையும், கண்டத்தில் சாம முதலான சமஸ்தவேதங்களையும், புஜங்களில் இந்திரன் முதலான தேவர்களையும் கர்னங்களிலே திக்குகளையும், சிரசில் ஆகாசத்தையும், கேசங்களிலே மேகங்களையும், நாசிகளிலே வாயுவையும், கண்களில் சூரியனையும், முகத்தில் அக்கினியையும், வாக்கில் வேதசந்தசுக்களையும், நாவிலே வருணனையும், புருவங்களில் விதிநிஷேதங்களிரண்டையும், இமைகளில் இராப்பகல்களையும், நெற்றியிலே கோபத்தையும், அதரத்தில் லோபத்தையும், தொக்கிந்திரியத்தில் காமத்தையும், ரேதசிலே ஜலத்தையும், பிருஷ்டபாகத்தில் அதர்மத்தையும், அடிவைப்புகளில் எக்கியத்தையும் நிழல்களில் மிருத்துவையும், நகைப்புகளில் மாயையையும், ரோமங்களில் கொடிவகைகளையும், நாடிகளில் நதிகளையும், நகங்களில் கற்புகளையும், புத்தியிலே பிரமாவையும், இந்திரியங்களில் தேவகணங்களோடு ரிஷிகளையும், இவ்விதம் அனந்தனுன ஸ்ரீ ஹரியினுடைய சரீரத்தில் நாலுவிதங்களான சராசரங்களையும், அந்த பலிச்சக்கரவர்த்தியானவன் கண்டான்.

வாராய் மகாராஜனே! விஸ்வரூபியான அந்தப் பகவானிடத்தில் இந்த சமஸ்த்தமான உலகங்களையும் பார்த்து சகல அசுரர்களும் மோகத்தை யடைந்தார்கள். சகிக்கக் கூடாத தேஜஸையுடையதான சுதரிசனமென்கிற சக்கிரமும் மேகம்போல் சப்தியாநின்ற சாரங்கமென்கிற தனுசும், மேகம்போல் கர்ச்சியாநின்ற பாஞ்ச சன்னிய மென்கிற சங்கமும், மகாவேகத்தோடு கூடின கவுமோதகி யென்கிற கதையும், சதசந்திரமென்கிற கேடையத்தோடு கூடின வித்யாகர மென்கிற கத்தியும், அக்ஷயங்களான பாணங்களோடு கூடின அம்புராப் பொதிக ளிரண்டையும், சனகன் முதலான விஷ்ணு பக்த சிரேஷ்டர்களும் சமஸ்தமான உலக பாலர்களோடு கூடின அந்தப் பகவானை ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். திரிவிக்கிரமனுன அந்த பகவானுனவர் பலிச்சக்கரவர்த்தியினுடைய பூமி முழுமையும் ஒரு பாதத்தினுலேயும், ஆகாசத்தை சரீரத்தினுலேயும், திக்குகளைக் கைகளினுலேயும் அளந்துகொண்டு, இரண்டாவதான அடியை அளக்கின்ற சுவாமிக்கு சுவர்க்கமானது இடம் ஆச்சுது, மூன்ருவதான அடிக்கு அணுமாத்திரமாகிலுமில்லாமல் போயிற்று. அப்போது திரிவிக்கிரமனுடைய பாதமானது சுவர்க்கத்துக்கு மேலும் போய் மகாலோக சனலோக தபோலோகங்களையும் அதிக்கிரமித்து சத்திய லோகத்தையும் அளாவியது.

## இருபத்தொன்ருவது அத்தியாயம்

*பலிச்சக்கரவர்த்தியினுடைய பிரதிக்ஞை பூரணமாகாமையும் தனது ஜனங்களைத் திருப்திபடுத்தியமையும் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

ராஜனே! அப்போது பிரமதேவனானவன் பகவானுடைய பாதாரவிந்தத்தைப் பார்த்து மரீசி முதலான நவப் பிரஜாபதிகளுடனும் தபோநிஷ்டர்களான சனந்தன் முதலிய யோகிகளுடனும் கூடினவனாய் அவ்விடத்தில் வந்து, பகவானுடைய பாதாரவிந்தங்களை ஸ்மரித்து பூஜைபுரிந்தார்கள். ராஜனே! அப்போது பிரமதேவனுடைய கமண்டலத்திலுள்ள ஜலமானது அந்தத் திரிவிக்கிரமனுடைய பாதங்களை அலம்ப உபயோகிக்கப்பட்டதினால் பவித்திரமாகி கங்கையாயிற்று. அந்த கங்கையானது ஆகாசத்தில் நின்றும் மூன்று உலகத்தில் வியாபித்துப் பாவனம் பண்ணிக்கொண்டிருக்கின்றது. அப்போது அசுரர்களானவர் மூன்றடி தரவேணுமென்கிற யாசனை நிமித்தத்தினால் சமஸ்தமான பூமியும் விஷ்ணுவினால் அபகரிக்கப்பட்டதை பார்த்துத் தங்களுக்கு பர்த்தாவரயும், யாகத்திலே தீக்ஷிதனாயுமிருக்கிற பலிச்சக்கரவர்த்தியினிடத்தில் கோபத்தையுடையவர்களாய் சொல்லுகிறார்கள் : இந்த வாமன பிரமசாரி பிராமணனேயன்று. மாயாவிகளுக்கெல்லாம் தலைவனான விஷ்ணுவேயாவன். பிராமண வேஷத்தினால் மறைந்துகொண்டு தேவ காரியத்தைப் பண்ண இவன் இச்சிக்கிறான். ஆகையால் வஞ்சகனான இவனைக் கொல்லுகிறது நமக்கு தர்மமேயாகுமென்று அசுரர்கள் சகலமான பேரும் இந்தப் பிரகாரம் சொல்லி சூலம் பட்டயம் முதலான ஆயுதங்களைக் கையிலே யுடையவர்களாகி அந்தப் பலிச்சக்கரவர்த்தியினுடைய ஆக்ஞையைக் கடந்து ஓடி வந்தார்கள். அப்படி ஓடிவரும் அசுரயூதபர்களைப் பார்த்து சிரித்து விஷ்ணுவினுடைய அனுசரர்களெல்லாம் ஆயுதபாணிகளாக நின்றார்கள். சுனந்தன்-நந்தன்-ஜயன் - விஜயன்-பிற்பலன்-உற்தலன்-குமுதன்-குமுதாட்சன்-விஸ்வச்சேனன்-கருதமான்-ஜயந்தன் - சுருத்தேவன்-புஷ்பதந்தன் - சாதவதன் பதினாயிரம் யானை பலத்தையுடைய இவர்களெல்லாம் அந்த அசுர சேனைகளை அடித்தார்கள். அப்போது பலிச்சக்கரவர்த்தியானவன் மாகாபுருஷனுடைய அனுசரர்களான சுனந்தநந்தர்கள் முதலான பேர்களால் கொல்லப்படும் அந்த அசுரர்களைப் பார்த்து சுக்கிராசாரியருடைய

சாபத்தை நினைத்துக்கொண்டு அவர்களை விலக்கி ஒரு வார்த்தைச் சொல்லுகிறான் :

எனது இஷ்ட ஜனங்களே! என்னுடைய வார்த்தையை கவனித்துக் கேளுங்கள். நமக்கு இந்தக் காலமானது அநு கூலமானதன்று. எந்த பகவானானவர் ஒருகால் நம்முடைய விருத்தியின் பொருட்டு, தேவர்களை வேறறுக்க முயற்சி செய் தாரோ, அவரே இப்போதவர்களுக்கு ஜயத்தையும், நமக்கு அபஜயத்தையும் கொடுக்கின்றார். ஸ்ரீ ஹரியினால் ஆதரிக்கப் படுமிவர்கள் உங்களால் ஜயிக்கப்படமாட்டார்கள். ஆகை யால் நமக்கு அனுகூலமாக வரும் காலமெதுவோ அதைப் பார்த்துக் கொண்டிருங்களென்று சொல்லுகின்ற ராஜாவி னுடைய வசனத்தைக் கேட்டு அசுரர்களெல்லாம் விஷ்ணு பாரிஷதர்களால் பீடிக்கப்பட்டவர்களாய் பாதாளத்தில் பிரவேசித்தார்கள்.

பிறகு பகவான் பலியை நோக்கி, "அப்பா அசுர சிரேஷ் டனே! உனது சொற்படி ஓரடியால் மண்ணையும் மற்றொன் றால் விண்ணையுமளந்து கொண்டேன். மூன்றாவதடிக்கு இடத்தைக் காணேன். சொன்ன சொல்லை நிறைவேற்றா தவன் நரகத்திற்கே உரியவனானவன் என்பதை நீ நன் கறிவை. ஆதலின் நீ சிலகாலம் நரகத்தில் வசிக்கக்கட வாய்" என்றனன்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்



*பலிச்சக்கரவர்த்திக்கு பகவான் அவனுக்கிஷ்டமான வரங்களைக் கொடுத்து அனுக்கிரகம் புரிந்தமையைச் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்துமகாராஜனே! இந்தப் பிரகாரம் பகவானால் பலிச்சக்கரவர்த்தியானவன் வஞ்சிக்கப்பட்டு சத்தியந் தப்பாத மனதை யுடையவனாய் அப்போது கம்பீரமாக சொல்லு கின்றான் :

### பலிச்சக்கரவர்த்தி வாக்கியம்

உத்தமமான கீர்த்தியையுடையவரே! தேவதேவரே! நீர் கபடவாமன மூர்த்தியாய் சிறிய வடிவைக் காட்டி பெரிய காலாலளந்துகொண்டும் எனது வசனத்தை அசத்தியமாக எண்ணினீர். ஆகையால் எனது வசனமானது அசத்திய மாகாமல் உம்முடைய மூன்றாவதடியை என்னுடைய சிரசில் வைக்கக் கடவீர், நான் என் பூமியை யிழந்தாலும், நரகத்தை

யனுபவித்தாலும், அபகீர்த்திக்கு மாத்திரம் பயப்படுகின்றேன். உம்மால் நானிப்போதடைந்திருக்கும் துன்பத்திற்கு எவ்வளவும் பயப்படவில்லை. பாகவதசிரோமணியாயும், பிரசித்தமான எஜஸை யுடையவனுயும், எனக்குப் பாட்டனுயுமிருக்கிற பிரகலாதனரானவர் உமக்குச் சத்துருவாயிருக்கிற தம்முடைய பிதாவினுல் நானுவித இம்சைகளை அடைவிக்கப்பட்டிருந்தாலும் உம்மைபரமகதியாக ஆஸ்ரயித்து, தேகத்திஞலும், தனத்திஞலும், புத்திரர்கள் முதலானபேர்களாலும், என்ன பிரயோசனமென்று நிச்சயித்து ஜனன மரணத்தில் நின்றும் பயந்தவராய் தயித்தியகுலத்தை நாசம்பண்ணும் உம்முடைய சாசுவதமான பாதாரவிந்தத்தைப் பற்றினது போல, நானும் தெய்வ எத்தனத்திஞல் எனக்குச் சத்துருவான உம்முடைய சமீபத்தை யடைந்தேன்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்துவே! இந்தப் பிரகாரம் பகவானைப் பார்த்து பலிச்சக்கரவர்த்தியானவன் சொல்லிக் கொண்டிருக்கும்போது அவ்விடத்தில் பகவானுக்குப் பிரிய பக்தனுன பிரகலாதனரானவர் பூர்ணச்சந்திர னுதித்ததுபோல வந்தார். அப்போது இந்திர சேனஞன பலிச்சக்கரவர்த்தியானவன் தனக்குப் பாட்டஞன பிரகலாதனரைப்பார்த்து வருண பாசத்தில் கட்டப்பட்டவனுய் அந்தப் பிரகலாதருக்கு முன் போல உபசரியாமல் சிரசினுல் மாத்திரம் வணங்கினுன். அப்போது மகானுபாவரான பிரகலாதரும், ஸ்ரீ ஹரியைப் பார்த்து சிரசினுல் பிரணமம் பண்ணி சொல்லுகிருர் :

பிரகலாதன் வாக்கியம்

வாரீர் பகவானே! பூசிக்கப்பட்ட இந்திர பதமானது உம்மாலேயே கொடுக்கப்பட்டிருந்து திரும்பவும் உம்மாலேயே அபகரிக்கப்பட்டது. இந்தப் பலியானவன் சம்சாரத்தில் இன்னும் அழுந்தாமல் உம்மால் அனுக்கிரகிக்கப்பட்டான். பரமாத்மாவாயும், ஜகதீஸ்வரனுயும், அகில உலகங்களுக்குச் சாக்ஷியாயும், நாராயணனென்று பிரசித்தராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம் என்று அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டிருக்கும்போது, பூஜ்ஜியஞன பிரமதேவன் சுவாமியைப் பார்த்து பேச உத்தேசிக்கும்போது, பலியினுடைய பத்தினியான விந்தியாவலி பேச யத்தனித்ததைப் பார்த்து பேசாமலிருந்தார். அந்தப் பலியினுடைய பத்தினியாயும், பதிவிரதையாயு மிருக்கிற விந்தியாவலியானவள் வருண பாசத்திஞல் கட்டப்பட்ட பதியைப் பார்த்து, பயத்தி

ஞாலே நடுங்கி, வணக்கத்துடனே அஞ்சலி பந்தஞ்செய்து தலையை இறங்கிக்கொண்டு பகவானைப்பார்த்து சொல்லு கிறாள் :

விந்தியாவலி வாக்கியம்

வாரீர் ஈசனே! உமக்கு லீலார்த்தமாக இந்த மூன்று உலக மும் உம்மால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட இந்த மூன்று உலகத்திலேயும், கியான வீனர்களான சில பேர் தாங்களே சுவாமியென்கிற புத்தியைக் கொண்டிருக் கிறார்கள். இந்த ஜகத்தை சிருஷ்டித்தும்-ரக்ஷித்தும்-சங் கரித்துக்கொண்டு மிருக்கிற உமக்கு லச்சை யில்லாதவர்க ளாயும், உம்மாலே தள்ளப்பட்ட சுவாதந்திரியத்தை யுடைய வர்களாயுமிருக்கிற புத்திரர்கள் எதை சமர்ப்பிக்கப்போகி றார்கள். ஆகையினால் எம்மை நீரே கேவலம் கிருபையினால் பாசபந்தத்தில் நின்றும் விடுவித்து, ரக்ஷிக்கக் கடவீரென்று விந்தியாவலி சொன்னாள். பிறகு பிரமதேவன் சொல்லு கின்றான் :

பிரமதேவர் வாக்கியம்

பூதங்களை உண்டாக்கி அவைகளுக்கு நியந்தாவான பெருமானே! தேவதேவனே! ஜகன்மயனே! சர்வசொத் தையும் உம்மிடத்தில் சமர்ப்பித்த இந்தப் பலியை விட்டு விடும். இவன் நிக்கிரகத்துக்கு யோக்கியனன்று. உதார மான புத்தியினால் சர்வசொத்தும் ஆத்மாவும் சமர்ப்பிக்கப் பட்டது. பகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தியை யுடைய புருஷனானவன் கேவலம் அறுகம் புல்லையும் ஜலத் தையும் சமர்ப்பித்து சிரேஷ்டமான பூசையைப்பண்ணி உத்தமமான கதியை அடைகின்றான். இந்தப் பலியோ உமக்கு மூன்று உலகங்களையும் சமர்ப்பித்தவன். அத்தகைய னான இவன் நாகயாதனையைச் சகிக்கமுடியாது என்று பிரமாசொல்ல ஸ்ரீ வாமனரூபியான பகவான் சொல்லு கின்றார் :

ஸ்ரீ பகவான் வாக்கியம்

நான்முகனே! நான் யாவனொருவனை அனுக்கிரகிக் கிறேனோ அவனுடைய அர்த்தங்களை அபகரிப்பேன். யாவ னொருவன் மனுஷ்ய ஜன்மத்தில் ஜன்மத்தினாலேயும்; கர்மத்தினாலேயும், வயதினாலேயும், ரூபத்தினாலேயும், வித்தை யினாலேயும், ஐஸ்வரிய முதலானவைகளினாலேயும் கர்வ முண்டாகாமலிருந்தால் அவனிடத்தில் என்னுடைய அனுக் கிரக மிருக்கிறதென்று அறியத்தக்கது. தயித்தியதானவ

சிரேஷ்டனுயும், விஸ்தாரமான கீர்த்தியை யுடையவனுயு மிருக்கிற இந்தப் பலியானவன் என்னுடைய மாயையை ஜயித்தான். இவன் மகா கஷ்டத்தை யடைந்தும், ஸ்தானப் பிரஷ்டனுயும், ஐஸ்வரிய மிழந்தவனுயும், பந்துக்களால் நிராகரிக்கப்பட்டவனுயும், சத்துருக்களினுல் கட்டப்பட்டவனுயும், கியாதிகளினுல் விடப்பட்டவனுயும், குருவினுல் மிரட்டப்பட்டும் சபிக்கப்பட்டவனுயு மிருந்தாலும், நல்ல விரதத்தையுடைய இந்தப் பலியானவன் சத்தியத்தை விடவில்லை. கபடவசனங்களினுல் நம்மாலே தர்மம் சொல்லப்பட்டிருந்தாலும் இவன் தர்மத்தை விடவில்லை. ஆகையினுல் தேவர்களாலேயும் அடையக்கூடாத ஸ்தானத்தை அடைதற்குரியனுயினுன். இந்தப் பலியானவன் வரப்போகிற சாவர்னி மனுவந்தரத்தில் இந்திரனுகப்போகிருன். அதுவரைக்கும் விசுவகர்மாவினுல் நிர்மிக்கப்பட்ட சுதலலோகத்தில் இருக்கக்கடவன். வாராய் இந்திரசேன மகாராஜனே! உனக்கு நன்மை உண்டாகக் கடவது உன்னுடைய ஆக்ஞையை அதிக்கிரமிக்கும் தயித்தியர்களை என்னுடைய சக்கிரமானது சங்கரிக்கப்போகின்றது. சர்வபூதாந்திரியாமியான நான் பரிஜனங்களோடு கூடிக்கொண்டிருக்கும் உன்னைச் சர்வகாலத்திலும் ரட்சிக்கப்போகின்றேன். வீரனே! நீ அவ்விடத்திலே சர்வகாலமும் சந்நிதானத்திலிராநின்ற என்னைப் பார்த்துக்கொண்டிருக்கப் போகிருயென்று பகவானுனவர் திருவாய் மலர்ந்தருளினுர்.



## இருபத்திமூன்ருவது அத்தியாயம்



*பாட்டனுரான பிரகலாதனனேடுகூடப் பலிச்சக்கரவர்த்தி சுதல லோகத்தை அடைந்ததும், உபேந்திரரான பகவான் இந்திரனுக்கு சுவர்க்கத்தை கொடுத்து, முன் போலச் சந்துஷ்டனு யிருந்தானென்றும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! பகவானுடைய அருள் செறிந்த வார்த்தைகளைக்கேட்டு மகானுபாவனுயும் சமஸ்த சாது ஜனங்களுக்குச் சம்மதனுயுமிருக்கிற பலிச்சக்கரவர்த்தியானவன் அஞ்சலிபந்தத்துடனே ஆனந்த பாஷ்பத்தினுல் வியாபிக்கப்பட்ட நேத்திரங்களை யுடையவனுயும், மிகுந்த பக்தியை யுடையவனுயும் சொல்லுகிருன்: வாரீர் பகவானே!

உலகபாலர்களாயும் சத்துவகுணப் பிரதானர்களாயுமிருக்கிற தேவர்களினுலேயும் அடையப்படாத உம்முடைய அனுக்கிரகமானது அதி நீசனுயும், ராக்ஷசனுயும், அசுரனுயுமிருக்கிற என்னுல் அடையப்பட்டிருக்கின்றது. ஏழையேன் எந்தையின் கடைக்கண் நோக்கத்தால் பிழைத்தேன் என்று சொல்லி பலிச்சக்கரவர்த்தியானவன் ஸ்ரீ ஹரியைப் பிரணுமம்பண்ணி, பிற்பாடு ருத்திரனையும் பிரமதேவனையும் பிரணுமம்பண்ணி, பாசத்தினுல் விடப்பட்டவனுய் சந்துஷ்டனுய் தன்னவர்களான அசுரர்களோடுகூட சுதலலோகத்தில் பிரவேசித்தான். அப்போது உபேந்திரரான பகவானுனவர் இந்திரனுக்கு சுவர்க்கலோகத்தை திரும்பவுங்கொடுத்து அதிதியினுடைய கோரிக்கையையுமீடேற்றி சகல ஜகத்தையும் பாலனம் பண்ணினுர். அப்போது பகவத்பிரசாதத்தையுடையவராயும், வருணபாசத்தினுல் விடப்பட்டவராயும், வம்சோத்தாரகராயும், பக்தசிரேஷ்டராயு மிருக்கிற பிரகலாதனரானவர் சொல்லுகிறுர்:

பகவானே! பிரமாதிகளால் சேவிக்கப்படும் பாதாரவிந்தத்தையுடைய நீர் அசுரர்களான எங்களுக்குத் துவாரபாலராகவுமிருக்க மனங்கொண்டீர். அப்படிப்பட்ட உம்முடைய தயாபூர்ணமான கடாக்ஷ மார்க்கத்தை மூடபுத்தியுடையவர்களாயும் துஷ்டஜாதியில் பிறந்துமிருக்கிற நாங்கள் எந்த ஏதுவினுல் அடைவிக்கப்பட்டோமென்று வினவுகின்ற பிரகலாதனனைப்பார்த்து பகவானுனவர் ஒரு வார்த்தை சொல்லுகின்றுர்:

குழந்தாய் பிரகலாதனனே! உனக்கு மங்களமுண்டாகக் கடவது. என்பால் நீங்கள் காட்டிய அளவிலாத பக்தியே அதற்குக் காரணம். இனி நீ சந்துஷ்டனுய் உன்னுடைய பவுத்திரனுன பலிச்சக்கரவர்த்தியோடுகூட சுதலலோகத்தையடைந்து கியாதிகளுக்கெல்லாஞ் சுகத்தை உண்டாக்கக் கடவாயென்று சொல்லும் ஸ்ரீ பகவானுடைய ஆக்கினையைப் பிரகலாதனரானவர் அங்கீகரித்து, அஞ்சலிபந்தத்தையுடையவராய் பலிச்சக்கரவர்த்தியோடுகூட ஆதிபுருஷனுன ஸ்ரீ பகவானைப் பிரதக்ஷணப்பிரணுமம்பண்ணி, அவருடைய அனுமதி பெற்றவராய் சமஸ்தமான அசுரர்களோடுகூட மகாபிலமான சுதலலோகத்தில் பிரவேசித்தார். பின்பு நாராயணரான ஸ்ரீ ஹரியானவர் பிரமவாதிகளான ரித்துவிக்குகளுடைய நடுவில் தம்முடைய சமீபத்திலிரா நின்ற சுக்கிரனைப் பார்த்து சொல்லுகின்றுர்: வாரீர் பிரமநிஷ்டரே! எக்கியகர்மத்தைப் பண்ணுநின்ற சிஷ்யனுக்கு

எக்கிய விக்கினம் வந்தது. அதைப் பூரணமாக நிறைவேற்றி வையும் என்று ஸ்ரீ பகவான் சொல்ல சுக்கிரன் சொல்லுகின்றார்:

சுக்கிரன் வாக்கியம்

அச்சுதனே! கர்மங்களுக்குப் பிரவர்த்தகனும் எக்கிய புருஷனுமிருக்கிற நீர் என்னுடைய சர்வ பாவத்தினலேயும் பூசிக்கப்பட்டீர். ஆதலின் என்னுடைய கர்மத்திலே குறைச்சலானது ஏனுண்டாகப் போகின்றது. உலகத்தில் மந்திர தந்திரங்களினலேயும், தேசகாலங்களினலேயும், பாத்திர வஸ்துக்களினலேயும், கர்மத்திலுண்டான குறைவுகளெல்லாம் உம்முடைய நாம சங்கீர்த்தனமே பூரணமாகப் பண்ணுகின்றது. ஆனலும் உம்முடைய ஆக்கினேயைச் செய்வது எனது கடமை யாகுமென்று சுக்கிராசாரியர் பலிச்சக்கரவர்த்தியினுடைய எக்கியத்தின் குறைவை பிராமணர்கள் ரிஷிகள் இவர்களோடுகூட சம்பூர்ணமாகப் பண்ணினர்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே பிறகு பிரஜாபதிகளுக்கெல்லாம் பதியான பிரமதேவரானவர் தேவர்கள்-ரிஷிகள்-பிதுர்க்கள்-மனுக்கள்-தக்ஷன்-பிருகு-அங்கிரசு இவர்கள் முதலானவர்களோடும் ருத்திரனேடும் சனற்குமாரர்களோடுங் கூடினவராய், கசியபர் அதிதி இவர்களின்பிரீதியின் பொருட்டும், சர்வப்பிராணிகளின்க்ஷேமத்தின் பொருட்டும், உலகங்கள் உலகபாலர்கள் வேதங்கள் சமஸ்ததேவர்கள் தர்மம் தபசு சம்பத்து மங்களங்கள் விருத்தங்கள் சுவர்க்கம் மோக்ஷம் இவைகளுக்கெல்லாம் வாமனமூர்த்தியான ஸ்ரீ பகவான் ரக்ஷணத்தில் சமர்த்தராகையால் அவரைப்பதியாகப்பண்ணினர். அப்போது சமஸ்தமான பிராணிகளும் மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்தார்கள். பின்பு இந்திரனனவனும் வாமனமூர்த்தியான ஸ்ரீ பகவானே முன்னிட்டுக்கொண்டும் பிரமதேவருடைய அனுமதி கொண்டவனுய் சுவர்க்கத்தை யடைந்தான். அப்போது இந்திரனனவன் உபேந்திரரான வாமனருடைய புஜத்தினல் ரக்ஷிக்கப்படாநின்ற மூன்று உலகங்களேயுமடைந்து பரமமான ஐஸ்வரியத்தை யடைந்தவனுய் நிற்பயனுகச் சந்தோஷித்துக்கொண்டிருந்தான். திரிவிக்கிரமருடைய இச்சரித்திரத்தை கேட்பவர்கள் எல்லா பாபங்களினின்றும் விடுபடுவார்கள்.

பரிக்ஷித்துவின் வாக்கியம்

ஏ பகவானே! ஆச்சரியமானசெயலே யுடையவரான ஸ்ரீ ஹரியினுடைய பூர்வமான மச்சாவதார கதையைக்

கேட்க இச்சிக்கிறேன். எதற்காக ஸ்ரீ பகவானனவர் கர்ம வசியனன புருஷனைப்போல உலகத்தில் நிந்திக்கப்பட்டதாயும் தாமசப்பிரகிருதியாயுஞ் சகிக்கக் கூடாததாயுமிருக்கிற மச்சரூபத்தை தரித்தார்? உத்தமகீர்த்தியான இந்தப்பகவானுடைய சரித்திரத்தை யெல்லாம் உள்ளபடி எனக்குச் சொல்லவேண்டுமென்று பிரஸினம் பண்ணுகின்ற பரிக்ஷித்து மகாராஜனைப் பார்த்து சுகப்பிரம ரிஷியானவர் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய மச்சாவதார கதையைச் சொல்லத் தொடங்கினர்.



## இருபத்தினன்காவது அத்தியாயம்

*பகவான் மச்சாவதாரம் எடுத்தமையும், சத்தியவிரதரென்கிற ராஜரிஷியை அனுக்கிரகித்தமையும் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! சர்வநியந்தாவான ஈஸ்வரனனவர், பசுக்கள், பிராமணர்கள், தேவர்கள், சத்புருஷர்கள், வேதங்கள், தர்மம், அர்த்தம் இவைகளையெல்லாம் ரக்ஷிக்க இச்சைகொண்டு நானுவிதரூபங்களைத் தரிக்கின்றார் போன கல்பத்தினுடைய முடிவில் பிரமாவினுடைய நித்திரையினல் உண்டான நைமித்திகமென்று சொல்லப்பட்ட பிரளயமுண்டாயிற்று. அந்தப் பிரளயத்தில் பூமி முதலான உலகங்களெல்லாஞ் சமுத்திரத்தில் முழுகின. அப்போது காலவசத்தினல் நித்திரையை யடைந்து சயனிக்க வேணுமென்கிற இச்சையை யுடையவனன பிரமதேவனுடைய முகத்தில் நின்றும் உண்டாகின்ற வேதங்களைச் சமீபத்தில் இராநின்ற அயக்கிரீவாசுரனனவன் அபகரித்தான். அப்போது ஸ்ரீ பகவானும் சர்வநியந்தாவாயுமிருக்கிற ஸ்ரீஹரியானவர் தானவேந்திரனன அயக்கிரீவனுடைய சேஷ்டையை அறிந்து மச்சரூபத்தைத் தரித்தார்.

அந்த காலத்தில் சத்தியவிரதனென்று பெயரை யுடையவனும், மகானும், பகவானிடத்தில் பக்தியுடையவனுமாயுமிருக்கிற ஒரு ராஜரிஷியானவன் ஜலத்தையே பானம் பண்ணிக்கொண்டு தபசுசெய்துகொண்டிருந்தான். அந்த ராஜரிஷியானவன் ஒருக்கால் கிருதமாலாநதியில் ஜலதர்ப்பணஞ் செய்யும்போது அவனுடைய கையில் இராநின்ற ஜலத்தில் ஒரு மச்சமானது இருந்தது. திராவிட தேசாதிபதியான அந்தச் சத்திய விருதனென்கிற ராஜரிஷியானவன்

தன் கைஜலத்தில் இராநின்ற அந்த மச்சத்தை ஜலத்தோடுகூட நதிஜலத்திலே விட்டுவிட்டான். அப்போது மச்சமானது மகாதயாளுவான அந்தச் சத்தியவிருதனைக் குறித்து மிகவும் தைரியத்தோடு சொல்லிற்று. ராஜரிஷியே! தீனர்களிடத்தில் வாற்சல்லியத்தை யுடையவனே! தன் னினத்தைக் கொல்லாநின்ற ஜலஜந்துகளில் நின்றும் பயந்திராநின்ற என்னை இந்த நதிஜலத்திலே எப்படிவிட்டு விடுகிறீரென்று மச்சமானது சொல்லவே, அந்தச் சத்திய விருதனனவன் பிரீதியினால் தனக்கு அனுக்கிரகம் பண்ணுகிறது நிமித்தமாக மச்ச ரூபத்தைத்தரித்த சுவாமியென் றறியாமல் அந்த மச்சத்தைத்தான் ரக்ஷிக்கவேணுமென்று அந்த மச்சத்தைத் தன்னுடைய கமண்டல சலத்தில் வைத்துக்கொண்டு தனது ஆஸிரமத்தை வந்து சேர்ந்தான். அந்த மச்சமோ அந்தக் கமண்டசலத்தில் ஒரு இராத்திரியில் மிகவும் பெரிதாக வளர்ந்து அதில் அடங்காத சரீரத்தை யுடையதாய் ராஜரிஷியைக் குறித்து சொல்லியது: ராஜ ரிஷியே! நானிந்தக் கமண்டலப் பாத்திரத்தில் கஷ்டமாக வாசம் பண்ணமாட்டேன். எந்த இடத்தில் சுகமாக வாசம் பண்ணுவேனோ அப்படிப்பட்ட பெரிய இடத்தைக் கற்பிக்க வேணுமென்று மச்சமானது சொல்ல, ராஜரிஷியும் அந்த மச்சத்தைக் கமண்டலத்தில் நின்றும் எடுத்துப் பெரிதாகிய கொப்பறை ஜலத்திலே விட்டார்.

அந்தக் கொப்பறையிலேயும் அந்த மச்சமானது ஒரு முகூர்த்த காலத்தில் மூன்று யாளவாக வளர்ந்து அந்த ராஜரிஷியைப் பார்த்து இந்தக் கொப்பறையும் எனக்குச் சுகமாக வாசம் பண்ணுகிறதற்கு யோக்கியமன்று. இதை விட விஸ்தாரமான விடத்தை யெனக்குத் தரவேணும் உன்னை நான் சரணமாக அடைந்தேனென்று சொல்ல, அவ் விடத்தில் நின்றும் அந்த மச்சத்தை யெடுத்து ஒரு குளத் திலே விட்டான். அப்போது அந்த மீனானது அந்த சரசு நிறைய வளர்ந்து அந்த ராஜாவைப் பார்த்து ராஜரிஷியே! ஜலத்தையே இருப்பிடமாக வுடைய எனக்கு இந்த மடுச் சலமும் சுகமாக வாசம் பண்ணுதற்குப் போதாது என அந்த மச்சத்தை அவன் வடியாமலிருக்கும் மடுக்கள்தோறுங் கொண்டுபோய் விடவும், அந்த மடுக்களுக்குச் சரியாக அந்த மச்சம் வளர்ந்துகொண்டேவா, அதை சமுத்திரத்தில் கொண்டுபோய் விட்டான்.

அப்போது அந்த மச்சமானது ராஜரிஷியைப் பார்த்து வீரனே! இந்தச் சமுத்திரத்தில் திமிங்கல முதலான ஜல

ஜந்துக்கள் என்னைப் பக்ஷித்துவிடும். ஆகையால் இங்கே என்னை விட்டுவிடாதே யென்று சொல்லிற்று. ராஜரிஷி யானவன் அத்த மச்சத்தைப் பார்த்து சொல்லுகின்றான்: வாரீர் தேவனே! நீரோ மச்ச ரூபத்தைக்கொண்டு என்னை மோகிக்கும்படி செய்கிறீர். ஜலஜந்துக்களில் இவ்வளவு வீரியத்தையுடைய பிராணி இதற்குமுன் நம்மாலே காணப் பட்டதுமில்லை. கேட்கப்பட்டதுமில்லை. ஒரு பகலிலே நீர் நூறுயோசனை விஸ்தாரமான ஒரு சரசெல்லாம் வியா பித்தீர்; ஆகையால் நீர் சாக்ஷாத் நாராயணராயும், நிர்வி காரராயும் ஆசிரதபாப நிவர்த்தகராயு மிருக்கிற ஸ்ரீ ஹரியே ஆகவேணும். உலகங்களையெல்லாம் அனுக்கிரகிக்கிறது நிமித்தமாக சகல ஜந்துக்களுடைய ரூபத்தைத் தரித்திருக் கின்றீர் போலும், ஆகையால் இந்த ரூபம் எதற்காக உம்மாலே தரிக்கப்பட்டதோ அதை யறிய வேணுமென்று இச்சிக்கிறேன். அன்பு கூர்ந்து அருள்செய்ய வேண்டுமென, பகவான் தம்முடைய சங்கல்பத்தைச் சொல்லுகிறார்:

### மச்சாவதார பகவான் வாக்கியம்

ராஜரிஷியே! இன்றைக்கு ஏழாநாள் இந்தப் பூமி முதலான மூன்று உலகங்களும் பிரளய சமுத்திரத்தில் முழுகப் போகின்றது. அப்போது நம்மால் ஏவப்பட்டு விசாலமான ஒரு ஓடம் உன்னை அடையப்போகின்றது. நீயும் சமஸ்தமான ஓஷதிகளையும், நானுவிதங்களான வித்துக்களையும் அந்த ஓடத்தில் ஏற்றிக்கொண்டு சப்தரிஷிக ளோடும், சர்வபலத்தோடுங்கூடினவனாய் அந்தப்பெரிதான ஓடத்தில் ஏறிக்கொண்டு மகா அந்தகாரமான சமுத்திரத் தில் மகாரிஷிகளுடைய கடாக்ஷத்தினால் தீரனாய் சஞ்சரிக்கப் போகிறாய். அப்போது மகாபலவானான வாயுவினால் அலைக் கப்பட்ட அந்த ஓடத்தை சமீபத்தில் வரா நின்ற என்னு டைய கொம்பிலேசேர்த்து மகா சர்ப்பத்தினால் இழுத்துக் கட்டக்கடவாய். அப்போது நான் ரிஷிகளோடுகூட இரா நின்ற உன்னையும் ஓடத்தையுமிழுத்துக்கொண்டு பிரமாவி னுடைய ராத்திரி காலமானது எவ்வளவோ அவ்வளவு காலமும் சமுத்திரத்தில் சஞ்சரிக்கப்போகிறேன். அப்போது நீ பரப்பிரமசொரூபமான என்னுடைய மகிமையை உண்மை யாக அறியப்போகிறாயென்று ஸ்ரீ ஹரியானவர் அந்தரிஷி யைப்பார்த்து சொல்லி அவ்விடத்திலேயே அந்தர்த்தான மானார். அப்போது அந்த ரிஷியும் ஸ்ரீ ஹரியினாலே ஆக்கி யாபிக்கப்பட்ட காலத்தைப் பார்த்து கிழக்குமுகமாக தர்ப்பை களைப் பரப்பிக்கொண்டு அதில் ஈசானியமுகமாயிருந்து மச்ச



படம் நெ. 9-A. மச்சாவதாரம். பக்கம் நெ. 679.

பகவான், மச்சாவதார மெடுத்து அயக்கிரீவாசுரனை சம்மரித்து நான்கு வேதங்களையும் கொண்டுவந்து பிர்ம்மதேவனிடம் ஒப்புவித்தது.

ரூபியான ஸ்ரீ ஹரியினுடைய பாதார விந்தங்களைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்தான்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பின்பு சமுத்திரமானது வருஷிக்கப்பட்ட மேகங்களினால் விருத்தியடைந்து கரைபுரண்டு பூமியெங்கும் வியாபித்தது. அந்த ராஜரிஷியும், பகவத் பாதார விந்தத்தைத் தியானம் பண்ணிக் கொண்டிருக்கும்போது தன்னண்டை வருகின்ற ஒரு ஓடத்தைப் பார்த்து அந்த ஓடத்தில் ஒஷதிகளை யெல்லா மேற்றிக்கொண்டு சப்தரிஷிகளோடுகூட தானு மேறிக்கொண்டான். அப்போது அந்த ரிஷிகளெல்லாம் சந்துஷ்டர்களாய் அந்த ராஜரிஷியைப் பார்த்து பகவானு டைய பாதாரவிந்தத்தைத் தியானம் பண்ணுவீராகில் நம்மை இந்தச் சங்கடத்தில் நின்றும் ரக்ஷிப்பார் யென்று சொல்லக் கேட்டு ராஜரிஷியும். பகவானையே தியானம்பண்ணிக்கொண் டிருந்தார். பிறகு பகவானானவர் அந்த சமுத்திரத்தில் ஒரு கொம்பையுடையவராயும், லக்ஷம் யோசனைப் பிரமாணமாயு மிருக்கிற சரீரத்தையுடையவராயும், சுவர்ணமயமாயுமிருக் கிற மச்சமூர்த்தியாக ஆவிர்ப்பவித்தார். அப்போது அந்த ரிஷியானவர் ஸ்ரீ ஹரியினால் எந்தப் பிரகாரம் சொல்லப்பட் டாரோ அந்தப் பிரகாரம் அந்த ஓடத்தைக் கயிறுபோலிரா நின்ற ஒரு சர்ப்பத்தினாலிழுத்து, மச்சத்தினுடைய கொம்பில் சேர்த்துக்கட்டி சந்துஷ்டனாய் மதுசூதனனான சுவாமியை ஸ்தோத்திரம் பண்ணினான். வாரீர் பகவானே! அநாதி யான அவித்தையினால் சூழப்பட்ட ஆத்மசொரூபக்கியா னத்தை யுடையவர்களாயும், அந்த அவித்தியாமூலமான சம்சாரதாபத்திரையத்தினால் பீடிக்கப்பட்டவர்களாயு மிருக் கிற புருஷர்கள் இந்தச் சம்சாரத்தில் யாதொரு உம்முடைய அனுக்கிரகத்தினால் ஆசரித்துக்கொண்டு உம்மையே யடை கின்றார்களோ, அப்படிப்பட்ட மோக்ஷப்பிரதரான நீரே எனக்குப் பரம குருவா யிருக்கின்றீர். இந்த அக்கியானத் தோடு கூடின ஜனங்கள் தம்முடைய கர்ம பாசத்தினால் கட்டுப்பட்டு சுகிக்க வேணுமென்கிற இச்சையினால் மகா கஷ்டத்தோடுங் கூடின கர்மத்தைச் செய்கின்றார்கள். யாதொரு பகவானுடைய சேவையினால் புருஷனானவன் அந்த மூட புத்தியைவிட்டு விடுகிறானோ, அப்படிப்பட்ட பகவானே பரமாசாரியராக நின்றுகொண்டு என்னுடைய இருதயகிரந்தியை பேதிக்கக்கடவர். வெள்ளியானது அக் கினியினுடைய சம்பந்தத்தினால் தன்னுடைய மலத்தை விட்டு விட்டு நிஜ சொரூபத்தை யடைகின்றது போல, புருஷ

ஞனவன் பகவானுடைய சேவையினால் மனதினுடைய அக்கியானமாகிற மலத்தைவிட்டுத் தன்னுடைய உண்மை சொரூபத்தை யடைகிருன். நித்தியராயும், குருவுக்கும் குரு வாயுமிருக்கிற ஈசனை நீரே எனக்குப் பரம குருவாகக் கடவீர் என்று சொல்லுகின்ற ராஜரிஷியைப் பார்த்து ஆதி புருஷனும், மச்ச ரூபியாயும், சமுத்திரத்தில் லீலை பண்ணிக் கொண்டிரா நின்ற பகவானனவர் ஆத்ம தத்துவ உபதேச மும் பண்ணி சாங்கியயோக தர்மக்கியானங்களோடு கூடின மச்ச புராணத்தையும் சத்திய விருதனென்கிற ராஜரிஷிக்கு உபதேசம் பண்ணினர். அந்த ராஜாவும் ஓடத்திலேயிருந்து கொண்டு ரிஷிகளோடுகூட சமுசயமில்லாமல் பகவானால் சொல்லப்பட்ட சாசுவதமான ஆத்தும தத்துவத்தைக் கேட்டார்.

போன பிரளயத்தினுடைய அந்தத்தில் நித்திரை பண்ணி எழுந்திரா நின்ற பிரமதேவனுக்கு பகவானனவர் அயக்கிரீவாசுரனைச் சங்கரித்து வேதங்களைத் திரும்பவும் கொடுத்ததுபோலச் சத்தியவிருத னென்கிற ராஜரிஷியான வனும் யோகக்கியானம் ஆத்மக்கியானம் இவைகளோடு கூடினவனும் பகவானுடைய பிரசாதத்தினால் இந்தக் கல்பத் திலே வைவசுத மனுவாக ஆனன்.



ஓம்

# நவமஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

*சந்திரவம்சப் பிரவர்த்தகனான சதியும்ன ராஜனுக்கு ஸ்திரீரூபம் வந்தமை சொல்லப்படுகின்றது.*

### விஷ்ணுராதனுடைய வாக்கியம்



**வாரீர் பிரமநிஷ்டரே!** உம்மாலே சொல்லப்பட்டிருக்கிற சமஸ்த மனுவந்தரங்களும் என்னால் கேட்கப்பட்டன. அந்த மனுவந்தரங்களில் செய்யப்பட்ட அனந்த வீரியரான ஸ்ரீ ஹரியினுடைய சரித்திரங்களுங் கேட்கப்பட்டன. ஸ்ரீ பகவானுடைய சேவையினால் உத்தமமான கியானத்தையடைந்த திரவிட தேசாதிபதியான சத்திய விரதனென்கிற ராஜரிஷி இப்போது வைவசுமனுவாக இருக்கிறானென்றும், இட்சுவாகு முதலான ராஜாக்கள் அந்த மனுவினுடைய புத்திரர்களென்றும் சொன்னீர். அந்த இட்சுவாகு முதலான ராஜாக்களுடைய வம்சத்தையும், வம்சானு சரித்திரங்களையும், சத்தியமாகக் கேட்கவேணுமென்று இச்சையையுடையவனான எனக்குச் சொல்லக் கடவீரென்று சவுனக மகாரிஷியானவர் கேட்கவே சூதர் சொல்லுகிறார் :

சவுனக மகாரிஷியே! இந்தப் பிரகாரம் பிரமவாதிகளுடைய சபையிலே பரிக்ஷித்துவினால் வினவப்பட்டவராய் பரம தர்ம வித்தாயும், கியானியாயு மிருக்கிற சுகப்பிரம ரிஷியானவர் சொல்லுகிறார் : நீதிதவறு நேர்மையனே! மனுவம்சத்தின் சரித்திரம் சவிஸ்தாரமாகச் சொல்வதற்கு அநேக வருஷங்களும் போதாது. ஆகையால் அந்த மனுவம்சத்தில் பிரசித்தர்களானவர்களைச் சொல்லுகிறேன், கேளும். எறும்பு முதலாயும் பிரமா அந்தமாயுமிருக்கிற பிராணிகளுக்கு அந்தராத்மாவாயும், பிரகிருதியைக் காட்டிலும் பராயு மிருக்கிற ஸ்ரீமந் நாராயணரே கல்பாந்தத்தில் வேறொருவருமில்லாமல் தான் ஒருவரே யிருந்தார். அந்த

ஸ்ரீமந் நாராயணருடைய நாபியில் நின்றும் சுவர்ண மயமான ஒரு பத்மமுகளமானது உண்டாயிற்று. அந்தப் பத்மத்திலிருந்து சதுர்முகனான பிரமதேவர் உண்டானார். அந்தப் பிரமதேவனுடைய மனதில் நின்றும் மரீசிப் பிரஜாபதி உண்டானார். அவருக்குக் கசியபர் உண்டானார். அந்தக் கசியபருக்குத் தாக்ஷாயணியான அதிதியினிடத்தில் விவசுவானென்கிற புத்திரனுண்டானான். அந்த விவசுவானுக்குச் சமுக்யையென்கிற ஸ்திரீயினிடத்தில் சிரார்த்ததேவனென்கிற மனுவுண்டானான். அந்தச் சிரார்த்த தேவனென்கிற மனுவானவன் சிரத்தையென்கிற ஸ்திரீயினிடத்தில் இட்சுவாகு, நிருகன், சையாதி, இரிஷ்டன், திருஷ்டன். கருஷகன், நரிஷ்யந்தன், விருஷேந்திரன், நாகபாகன், கலி எனும் பத்துப் பிள்ளைகளைப் பெற்றான். வசிஷ்ட பகவானானவர் இட்சுவாகு முதலான பிள்ளைகளுடைய உற்பத்திக்கு முன்னே பிள்ளையில்லாமலிருக்க மனுப்பிரஜாபதிக்கு புத்திரனுண்டாகிறது நிமித்தமாக ஒரு யாகத்தைப் பண்ணி வைத்தார். அந்த யாகத்தில் பாலையே ஆகாரமாக உடையவளாயும், மனுவினுடைய பத்தினியாயுமிருக்கிற சிரத்தையானவள் ஹோதாவைப் பிரணாமம் பண்ணித் தனக்குப் பெண்ணுண்டாகும்படியாய் ஓமம் பண்ணச்சொல்லி யாசித்தாள். ஓதாவும் அதற்கிசைந்து மந்திரத்தை தகுந்தபடி மாற்றி யுச்சரித்து ஓமம்பண்ணினார். அதன் பயனாக இளையென்று ஒரு பெண் பிறந்தது. மனுவானவன் அந்தப் பெண்ணை நோக்கி மனது சமாதான மில்லாதவனாய் குருவைப் பார்த்து சொல்லுகின்றான் :

வைவசுதமநு வாக்கியம்

பகவானே! பிரமவாதிகளான உங்களுடைய கர்மம் எதிப்படி விபரீத மாச்சுது? கர்மத்தில் மந்திரங்கள் வியர்த்தமாகிறதில்லையே? இப்படி விபரீதமாக என்ன கஷ்டமுண்டாயிற்று? நீங்கள் மந்திரத்தை அறிந்தவர்களுக்குள்ளே சிரேஷ்டர்களும், தபசினால் சகல பாபங்களையும் போக்கடிப்பவர்களுமல்லவா? அப்படிப்பட்ட உங்களுக்கு மூடர்களைப் போல நினைப்பொன்றும் செய்கையொன்றுமாக சங்கல்ப விரோதம் எப்படியுண்டாயிற்று என, வசிஷ்டர் ஹோதாவினுடைய அபசாரத்தையறிந்து சூரியபுத்திரனான மனுவைப் பார்த்து சொல்லுகின்றார் :

வசிஷ்டர் வாக்கியம்

வைவசுதமனுவே! இந்தச் சங்கல்பவிரோதம் உன்னுடைய ஹோதாவின் அதிக்கிரமத்தினாலே வந்தது. ஆனாலும்

உனக்கு சுபுத்திரனுண்டாகும்படி நான் என்னுடைய தேஜ சினுல் சாதித்துக் கொடுக்கிறேனென்று இராஜாவுக்குச் சொல்லி, மகா பூஜ்ஜியரான வசிஷ்டர் அந்த இளேயென்கிற பெண்ணுக்குப் புருஷரூபம் உண்டாகும்படி ஆதிபுருஷனை பகவானை ஸ்தோத்திரம் பண்ணினுர். அப்போது ஸ்ரீ ஹரி யானவர் சந்துஷ்டராய் அவருக்கு வேண்டும் வரத்தைக் கொடுத்தார். அந்த வரப்பிரசாதத்தினுல் இளேயென்கிற பெண் இளனென்கிற புருஷசிரேஷ்டனுக ஆயினுன். அவன் ஒருக்கால் வனத்தில் வேட்டையாடவேணுமென்கிற இச்சை யினுல் சஞ்சரித்து சில மந்திரிகளேயுங் கூட்டிக்கொண்டு சிந்துதேசத்தில் பிறந்த ஒரு உத்தம அஸ்வத்திலேறிக் கொண்டு உத்தமமான தனுசையும், அற்புதங்களான பாணங் களேயும் எடுத்துக்கொண்டு கவசத்தையுந் தரித்து வேட்டை யாடி வடதிக்கில் மேருவின் தாழ்வரையில் பகவானுன உருத்திரனுனவர் பார்வதியோடு கிரீடித்துக்கொண்டிருக் கிற குமாரவனத்தில் பிரவேசித்தான். அப்படி பிரவேசித்த மாத்திரத்தில் தானும் தன்னுடைய வாகனமும் அவனேப் பின்தொடர்ந்த சகலரும் பெண்களாக மாறியதைக் கண்டு அவர்கள் மனேவருத்தம் அடைந்தார்கள் என்ற சுகப்பிரம ரிஷியைப்பார்த்து பரிக்ஷித்து அவ்விடத்தில் அவர்களியாவரும் பெண்ணுனதேன்? என சுகர் அதன் விருத்தாந்தத்தைச் சொல்லுகிருர் :

ஸ்ரீ சுகர் வாக்கியம்

மன்னனே! ஒருக்கால் முனிவர்கள் சிலர் ஒன்றுகூடி திக்கு விஜயஞ்செய்து வரும்போது ருத்திரனே பார்க்கவேணு மென்கிற இச்சையினுல் அந்தக் குமாரவனத்துக்கு வந் தார்கள். அப்போது அந்த ரிஷியைப் பார்த்து நிர்வாணமா யிருந்த பார்வதி தேவியானவள் மிகவும் லச்சையை யுடைய வளாய் பர்த்தாவினுடைய மடியில் நின்று மெழுந்திருந்து சீக்கிரமாக வஸ்திரத்தை யுடுத்திக்கொண்டாள். அந்த ரிஷி களும் கிரீடித்துக்கொண்டிரா நின்ற பார்வதி பரமேஸ்வரர் களேக் கண்டு பகவானே தரிசிப்பதற்குரிய சமயமாய் அக்கால மிலாமையால் திரும்பி அங்கு நரநாராயணருடைய ஆசிர மத்தை யடைந்தார்கள். அப்போது பகவானுன ருத்திர னுனவர் பாரியையான பார்வதிக்குப் பிரியத்தைப் பண்ண வேணுமென்கிற இச்சையினுல் இவ்வனத்தில் பிரவேசிக்கிற புருஷர்கள் இனி ஸ்திரீயாகக் கடவரென்று சபித்தார். அன்று முதற்கொண்டு புருஷர்கள் அந்த வனத்தில் பிரவே சிப்பதில்லே. ஆகையினுல் இளனெனும் சுத்தயிம்னராஜனும் அந்த சாப விருத்தாந்தத்தை அறியாமல் சமஸ்தமான

சேனைகளோடுகூட அந்த வனத்தில் பிரவேசித்துத் தானும் தன் சேனைகளும் ஸ்திரீரூபத்தை அடைந்து அந்த வனத்திலே தானே சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்.

பின்பு அவ்விடத்தில் தபசு பண்ணிக்கொண்டிரா நின்ற பகவானுன புதனுனவன் தன்னுடைய ஆஸிரம சமீபத்திலே ஸ்திரீகளினுல் சூழப்பட்டவளாக சஞ்சரித்துக்கொண்டிரா நின்ற அந்த உத்தம ஸ்திரீயை பார்த்து இச்சைப்பட்டான். அந்த ஸ்திரீயும் சந்திரனுடைய புத்திரனுன புதனைப் பார்த்து இச்சைப்பட்டான். அப்போது அந்தப் புதனுனவன் அந்த ஸ்திரீயினிடத்தில் புரூரவசு யென்கிற புத்திரனைப் பெற்ருள். பிறகு சுத்துயிம்னன் தன் குலத்துக்கு ஆசாரியான வசிஷ்டரை நினைத்தான். அப்போது அந்த வசிஷ்ட மகாரிஷியானவர் அந்த சுத்துயிம்னனுடைய ஸ்திரீரூபத்தைப் பார்த்து மிகவும் கிருபையை யுடையவராய் அந்த சுத்துயிம்னனுக்குப் புருஷ ரூபத்தை அபேக்ஷித்து சங்கரனை ஸ்தோத்திரம்செய்ய அந்தச் சங்கரனும் சந்தோஷித்து சொல்லுகின்ருர்: வசிஷ்டரே உம்முடைய சிஷியனுன இந்தச் சுத்துயிம்னனுனவன் உமது தபோபலத்தினுல் ஒரு மாதம் புருஷனுயும், ஒரு மாதம் ஸ்திரீயாயும், இருந்து கொண்டு பூமியை இரக்ஷிக்கக்கடவன் என்றனர். இந்தப் பிரகாரஞ் சுத்தயிம்னன் ஆசாரியனுடைய அனுக்கிரகத்தினுல் ஸ்திரீ ரூபத்தையும் புருஷ ரூபத்தையும் அடைந்தவனுய் ஜகத்தைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கும் போது அவனுக்கு உத்கலனென்றும், கயனென்றும், விமலனென்றும் மூன்று பிள்ளைகளுண்டானுர்கள். தர்மிஷ்டர்களான அந்த மூன்று பேர்களும் தக்ஷண ராஜ்ஜியத்துக்கு ராஜாக்களானுர்கள். சிலகாலஞ் சென்றபின்பு பிரதிஷ்டான புரத்து அதிபதியான அந்தச்சுத்துயிம்னனுனவன் புரூரவசு யென்கிற புத்திரனுக்கு பூமியைகொடுத்துத் தபசுசெய்ய தபோவனத்தை அடைந்தான்.



## இரண்டாவது அத்தியாயம்



வைவசுதமனுவினுடைய பத்துப்பிள்ளைகட்குள்ளே இரண்டுபேர் வைராக்கியத்தினுல் அபுத்திரர்களானுர்களென்றும், கருஷகன் முதலாக ஐந்துபேர்களுடைய வம்சங்கள் கிரமமாகவும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! இந்தப்பிரகாரம் சுத்துயிம்னராஜன் தபோவனத்தை யடைந்திருக்கையில் வைவசுத

மனுவானவன் புத்திரன் வேணுமென்கிற இச்சையுடைய வனாய் யமுனாநதிதீரத்தில் நூறு வருஷம் தபசைச்செய்து, ஜகத்பிரபுவாயிருக்கிற ஸ்ரீ ஹரியை யக்கியங்களினால் ஆராதித்து இட்சுவாகு முதலிய பத்து உத்தம பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் விரஷத்திரனானவன் குருவான வசிஷ்டமகா ரிஷியினால் பசுக்களைப் பரிபாலனம் பண்ணுகிறதற்கு ராஜாவாகப் பட்டாபிஷேகம் பண்ணப்பட்டவனாய், இராத்திரியிலேயும் கத்தியைக் கையிலே யுடையவனாய் நித்திரையை விட்டு ஜாக்கிரதையோடு பசுக்களை இரக்ஷித்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்க ஒருநாள் அர்த்தராத்திரி வேளையில் மழை பெய்யும்போது ஒரு புலி பசுக்களுடைய தோழத்தில் பிரவேசித்தது. அந்தப் புலியைக்கண்டு படுத்துக்கொண்டிருக்கிற பசுக்களெல்லா மெழுந்திருந்து பயந்து அந்தத் தோழத்தில் நாலுபக்கத்திலேயும் ஓடிக்கொண்டிருந்தன. அந்தப்புலி மந்தையில் ஒரு பசுவைப் பிடித்துக்கொள்ள அந்தப் பசு மிகவும் பயப்பட்டு வீறிட்டது. அந்தப் பசுவினுடைய சப்தத்தைக்கேட்டு விரஷத்திரனானவன் நக்ஷத்திரப் பிரகாசமுமில்லாத அந்த ராத்திரியில் கத்தியை யுருவி, அதிக வேகமாயோடிவந்து, புலியென்றெண்ணி கபிலை பசுவினுடைய சிரசைச் சேதித்தான். அந்தப் புலியும் காதறுபட்டு மிகவும் பயந்து அந்த மந்தையில் நின்றும் வெளிப்பட்டு ஓடிப்போய்விட்டது. அந்த விருஷத்திரனானவன் உதயமானவுடனே தான் கொன்றுவிட்டது பசுவெனப் பார்த்து மிகவுந் துக்கத்தை யடைந்தான். குலகுருவான வசிஷ்டர் தனக்குத்தெரியாமல் பாவத்தைப்பண்ணின அந்த விரஷத்திரனென்கிற ராஜாவைப் பார்த்து நீ இந்த பாபத்தினால் ராஜாவல்லாமல் சூத்திரனாகப் போகிறாயென்று சபித்தார்.

இந்தப்பிரகாரம் தன்னுடைய குருவான வசிஷ்டமகா ரிஷியினால் சபிக்கப்பட்டவனாய், அந்த ராஜாவானவன் அந்த சாபத்தை யேற்று கைகட்டியும் ஜிதேந்திரியனாயிருந்துகொண்டும் முனிகளுக்கு சம்மதமான விரதத்தை ஆசரித்து பகவானிடத்தில் ஏகாந்தமான பக்தியை யுடையவனாய் மனதை ஆத்துமாவினிடத்தில் நிறுத்தி, சித்த சமாதானத்தோடிருந்து அந்த ராஜாவானவன் ஒருநாள் அவ்வனத்தில் பற்றிக்கொண்டு எறிந்த காட்டுத் தீயைக் கண்டு அதிலே விழுந்து சரீரத்தைவிட்டுப் பாப்பிரமத்தை யடைந்தான். அந்த விரஷத்திரனுக்குத் தம்பியான கவி யென்கிற ராஜாவும் விஷயங்களில் ஆசையில்லாதவனாய்

பந்துக்களோடுகூட ராஜ்ஜியத்தையும் விட்டு வனத்தை யடைந்து சித்தத்தில் சுயம்பிரகாசரான பரமபுருஷனையே தியானம் பண்ணிக்கொண்டு பால்யவயதிலேயே பரமகதியை யடைந்தான். மனுபுத்திரனான கருஷனிடத்தில் நின்றும், காருஷர்களெனும் சில க்ஷத்திரியர்கள் பிறந்து உத்திர தேசத்தை நன்கு ரக்ஷித்துக்கொண்டிருந்தார்கள். திருஷ்டனிடத்தில் நின்றும், தாரஷ்டியெனும் ராஜகுலம் பிறந்து பூமியில் பிராமணத்துவத்தைப் பெற்றது. நிருகனென்கிற ராஜாவுக்கு சுமதியும், அவனுக்குப் பூதச் சோதிசுவும், அவனுக்கு வசுவும், அவனுக்கு ஒகவானும், அவனுக்கு ஒகவானென்று ஒரு பிள்ளையும் ஒகவதியென்று ஒரு பெண்ணும் பிறந்தார்கள். அந்த ஒகவதியென்கிற பெண்ணை சுதரிசனன் விவாகம் பண்ணிக்கொண்டான். மனுபுத்திரனான நரிஷியந்தனுக்குச் சித்திரசேனனும், அவனுக்கு தக்ஷனும், அவனுக்கு மிட்டுவானும், அவனுக்கு சனுவனும், அவனுக்கு இந்திரசேனனும், அவனுக்கு விதிஹோத்திரனும், அவனுக்கு சத்திய சிரவசும், அவனுக்கு உக்கிற சிரவசும், அவனுக்கு தேவதத்தனும், பிறந்தார்கள். தேவதத்தனுக்கு அக்கினிவேசனென்று ஒருபிள்ளை பிறந்து கானினனென்றும், சாதுகற்னனென்கிற மகாரிஷியாகவுஞ் சொல்லப்பட்டுப் பிரசித்தனாயிருந்தான். அந்த அக்கினிவேசனுடைய வம்சமானது அக்கினி வயிசியாயன மென்கிற பிராமண வம்சமாய்விட்டது. இதுவரைக்கும் நரிஷியந்தனுடைய வம்சமானது சொல்லப்பட்டது.

திஷ்டனுக்கு மனுபுத்திரனான நாபாகனென்று ஒரு பிள்ளை பிறந்து கர்மத்தினால் வைசியனானான். அந்த நாபாகனுக்கு பலந்தனும், பலந்தனனுக்கு வச்சப்பிரீதியும், அவனுக்கு பிராங்கிசுவும், அவனுக்கு பிரமிதியும், அவனுக்குச் சமித்திரனும், அவனுக்குச் சாட்சூசனும், அவனுக்கு, விவிங்குசதியும், அவனுக்குக் குறம்பனும், அவனுக்கு கனிநேத்திரனென்று தர்மவானான ஒருபிள்ளையும், அவனுக்கு மகாதேஜசை யுடையவனான கறந்தமனும், அவனுக்கு விட்சூத்துவும், அவனுக்கு மருத்தனென்கிற சக்கரவர்த்தியும் பிறந்தார்கள். அங்கிரசுவினுடைய பிள்ளையான சம்வர்த்தனென்கிற மகாரிஷியானவர் மருத்தனென்கிற சக்கரவர்த்திக்கு அனேக எக்கியங்களைச் செய்து வைத்தார். அந்த சோம யாகத்திலே இந்திரன் மூதலான தேவர்களும் திருப்தியடைந்தார்கள். அந்த மருத்தனுக்கு தமனும், அவனுக்கு ராஜவர்த்தனனும், அவனுக்கு சுத்திரிதியும், அவனுக்கு

நரனும், அவனுக்குக் கேவலனும், அவனுக்கு பந்துமானும், அவனுக்கு வேகவுரனும், அவனுக்குப் பந்துவும், அவனுக்குத் திரணபிந்துவு முண்டானார்கள். அந்தச் சிலாக்கிய குணங்களோடுகூடின திரணபிந்துவென்கிற மகாராஜாவை அப்சரஸ்திரீயான அலம்புசை புருஷனாக அடைந்தாள். அந்த அலம்புசையினிடத்திலே திரணபிந்துவுக்கு மூன்று பிள்ளைகளும் இனிபிளவென்று ஒரு பெண்ணும் பிறந்தனர். அந்த இனிபிளவினிடத்தில் விசுரவசு யென்கிற மகாமுனி குபேரனைப் பெற்றார். அந்த குபேரன் யோகேஸ்வரனும் பிதாவாயு மிருக்கிற விசுரவசுவினிடத்தில் நின்றும், பரமமான வித்தையைக் கற்றுக்கொண்டான். திரணபிந்துவுக்கு விசாலனென்றும், சூன்னியபந்துவென்றும், தூம்பரகேதுவென்றும் மூன்றுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே வம்சகர்த்தாவான விசாலனென்கிற ராஜா சாலியென்றபட்டணத்தைச் சிருஷ்டித்தான். அவனுக்கு யமசந்திரனும் அவனுக்கு தூம்பராஷ்டனும். அவனுக்குச் சகதேவனும், அவனுக்குப் பிருசாசிவனும் அவனுக்கு சோமதத்தனும் பிறந்தார்கள். அந்த சோமதத்தனானவன் அநேக அசுவமேதங்களினால் எக்கியபதியான மகாபுருஷனை ஆராதித்து யோகீஸ்வரர்களால் அடையப்பட்ட பரமமான கதியையடைந்தான். சோமதத்தனுக்கு சுமதியும் அவனுக்கு சனமேசயனும் பிறந்தார்கள். விசாலனுடைய வம்சத்திற் பிறந்த இந்த ராஜாக்கள் திரணபிந்துவினுடைய கீர்த்தியைப் போலக் கீர்த்தியை யுடையவர்களானார்கள்.



## மூன்றாவது அத்தியாயம்

*மனுப்புத்திரனான ஸயாதியினுடைய வம்சமும், சுகன்னியையினுடைய உபாக்கியானமும், றைவதனுடைய உபாக்கியானமும் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! மனுப்புத்திரனான சையாதியெனும் உத்தம அரசனுக்கு சுகன்னியாவென்கிற ஒரு பெண்ணுண்டானாள். அந்த ராஜாவானவன் தன் பெண்ணை அழைத்துக்கொண்டு வனத்திற்போய் சியவன மகாரிஷியினுடைய ஆசிரமத்தை யடைந்தான். அந்தச் சுகன்னியாவென்கிற பெண்ணானவள் சகிகளாலே சூழப்பட்டவளாய், அந்த வனத்தில் விருக்ஷங்கள்தோறும் சஞ்சரித்துக்

கொண்டு ஒரு புற்றினுடைய துவாரத்திலே மின்மினிப்பூச்சி போலப் பிரகாசியா நின்ற இரண்டு தேஜசுக்களைக்கண்டு பால்யத்தினால் அந்தத் தேஜசுக்களை முள்ளினாற் குத்தவே அதில் நின்றும் இரத்தம் பிரவாகித்து அதினால் அந்த க்ஷணத்திலே ராஜாவினுடைய சேனைகளுக்கெல்லாம் சலமலங்கள் கட்டுப் பட்டன. அப்போது ராஜஷிரியானவன் சையாதியானவன் அந்தச் சேனாசைனியங்களைப் பார்த்து ஆச்சரியத்தை யுடையவனாய் பிருகுபுத்திரரான சியவனரிஷிக்கு உங்களாலேதாகிலும் அபராதஞ் செய்யப்பட்டதோ வென்று கேட்க தகப்பனைப்பார்த்து சுகன்னியை பயந்தவளாய் ஒரு வார்த்தை சொல்லுகின்றாள்:

சுகன்னியா வாக்கியம்

எனது அன்புமிக்க பிதாவே! என்னாலொரு காரியம் செய்யப்பட்டது. அது தாம் நினைக்கிறபடி அபசாரமோ என்னவோ வென்றனள். அவளது காரியத்தைக் கேட்டு சையாதிமகாராஜாவானவன் மிகவும் பயந்தவனாய் புற்றிலே மறைந்திருக்கிற முனிவரை தன் புத்திரி இழைத்த பிழைக்காக மன்னிக்கும்படி வேண்டினன். பிறகு அந்த முனிவருடைய அபிப்பிராயத்தின்படி அவருக்கே தன்னுடைய பெண்ணை விவாகஞ்செய்துகொடுத்து அந்தப்பெண்ணை அவ்விடத்திலே விட்டுவிட்டு தன் பட்டணத்துக்கு வந்து சேர்ந்தான். பிற்பாடு அந்த சுகன்னியாவென்கிற பெண்ணானவள் மிகவுங் கோபத்தையுடையவரான சியவன மகாரிஷியைப் பர்த்தாவாக அடைந்து, அவருடைய சித்தத்தை அறிந்தவளாய் அதற்காக தான் வெகுளாமல் தன்னுடைய சிசுருஷைகளினால் அவரைச் சந்தோஷிப்பித்துக் கொண்டிருந்தாள்.

சிலகாலத்திற்குப் பின்பு அந்த ஆஸிரமத்தில் அசுவனி தேவதைகள்வந்தார்கள். அவர்களை அந்தச் சியவன ரிஷியானவர் பூசித்து தனக்கு ஸ்திரீகள் கொண்டாடும்படியான நல்ல வயதையும், ரூபத்தையும் கொடுக்கும்படி பிரார்த்திக்க, அந்த அசுவனி தேவதைகளும் நல்லதென்று சொல்லி அந்த ரிஷியைக் கையிலே பிடித்துக்கொண்டு ஓர் மடுவிலே யிறங்கி ஸ்நானம் பண்ணினார்கள். அப்போது அந்த மூன்று பேரும் ஸ்திரீகளுக்கிஷ்டமான ரூபம் வயது முதலியவைகளை யுடையவர்களாய் வெளியிலே வந்தார்கள். அப்போது சுகன்னியாவென்கிற அந்த பதிவிரதையானவள் நல்ல ரூபத்தையும், தேஜசையு முடையவர்களாயுமிருக்கிற அந்தப் புருஷர்களைப் பார்த்து தன்னுடைய பர்த்தாவை அறியாதவளாய் அசுவனிதேவதைகளைச் சரணமாக அடைந்தாள்.

அப்போது அந்த அசுவனி தேவதைகளும் அவளுடைய பர்த்தாவைக் காண்பித்து விட்டு சுவர்க்கத்தை யடைந்தார்கள்.

பிறகு சையாதி மகாராஜாவானவன் எக்கியம் பண்ணுவதற்காக அந்த சியவன மகாரிஷியினுடைய ஆஸிரமத்தை யடைந்து, தன் பெண்ணினுடைய பாரிசத்தில் சூரியனைப்போல தேஜசையுடையவரான அந்த மகரிஷியைப் பார்த்து, அந்த ராஜாவானவன் தன் பெண்ணைநோக்கி ஆசீர்வாதம் பண்ணுமலும் மனதில் சந்தோஷமில்லாதவனுயும், சொல்லுகிறுன்: "பெண்ணே! என்ன காரியஞ்செய்தாய். உலகங்களில் நமஸ்கரிக்கப் படாநின்றும், உனக்குப் பதியாயுமிருக்கிற சியவன மகாரிஷியானவரை விருத்தனென்று வஞ்சனை பண்ணி விட்டு, அசம்மதனுன இந்த சோர புருஷனை எதற்காகப்பற்றிஞய். துஷ்டையே! நல்லகுல்த்திற் பிறந்த உனக்கு இத்தகைய விபரீதபுத்தி எப்படியுண்டாயிற்று." அந்தச் சுகன்னியானவள் புன் சிரிப்புடன் நடந்ததை விவரமாய் யுரைக்க அவ்வரசன் மகிழ்ந்தனன்.

பிறகு, சியவன மகாரிஷியும் வீரனுன சையாதியைக் கொண்டு சோமயாகம்பண்ணி வைத்து, அந்த யாகத்தில் சோமபானமில்லாத அசுவனி தேவதைகளுக்குத் தம்முடைய பிரபாவத்தினுல் சோமகிரகத்தையும் உண்டாக்கிக் கொடுத்தார், அதைக்கண்டு இந்திரன் கோபித்துக்கொண்டு சியவன ரிஷியைக் கொல்ல வஜ்ஜிராயுதத்தையெடுத்தான். அப்போது பார்க்கவரான சியவனரிஷியும் வஜ்ஜிராயுதத்தோடு கூடின இந்திரனுடைய கையை ஸ்தம்பனயாகப் பண்ணிஞர். பிற்பாடு சமஸ்தமான தேவதைகளும் முன்னே வைத்தியாளென்று சோம ஆகுதியிலே தள்ளப்பட்டிருந்த அந்த அசுவனி தேவதைகளுக்கு சோமகிரகத்தைக் கொடுக்கச் சம்மதித்தார்கள்.

அந்த சையாதி மகாராஜனுக்கு உத்தான பரிகசுவென்றும், ஆனர்த்தனென்றும், பூரிஷேணனென்றும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே ஆனர்த்தனுக்கு ரேவதன் பிறந்தான். அந்த ரேவதனுனவன் சமுத்திரமத்தியிலே குசஸ்தலியென்ஞெரு பட்டணத்தை நிர்மாணம்செய்து அதிலே யிருந்துகொண்டு ஆனர்த்த முதலிய தேசங்களைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான். அந்த ரேவதனுக்கு குமி யென்கிறவனை ஜேஷ்டனுக வுடையவர்களான நூறு பிள்ளைகளும் ரேவதி யென்ஞெரு பெண்ணும் உண்டானுர்கள். அந்த ரேவதராஜாவானவன் தன் பெண்

ணை ரேவதியை யழைத்துக்கொண்டு அவளுக்கு நாயகனே இன்னானென்று பிரமாவினிடமிருந்து தெரிந்துகொள்வான் பிரமலோகத்தை யடைந்தான். அப்போது பிரமாவினுடைய சபையில் சங்கீதம் பாடிக்கொண்டிருக்கையில் தனக்குச் சமயம் அகப்படாமல் க்ஷணகாலம் அவ்விடத்திலே யிருந்து அந்தச் சங்கீதத்தினுடைய முடிவிலே பிரமதேவனைக் கிட்டிப் பிரணாமம்பண்ணித் தன்னுடைய அபிப்பிராயத்தைச் சொன்னான். பிரமரும் அதைக் கேட்டுச் சிரித்து ஒரு வார்த்தை சொல்லுகின்றார்:

பிரமதேவர் வாக்கியம்

அப்பா தேவராஜனே! நீ எவர்களுக்கு இந்தப் பெண்ணைக் கொடுக்கவேணுமென்று நினைத்திருந்தாயோ அவர்களெல்லாம் வெகுநாளைக்கு முன்காலகதியை யடைந்தார்கள். அவர்களுடைய புத்திர பௌத்திரர்களும் அவர்களுடைய வம்சங்களும் இப்போது கேட்கப்படவில்லை. நீ இவ்விடத்தில் வந்த பிற்பாடு இருபத்தேழு சதுர்யுகத்தோடு கூடின காலமானது நடந்து போய்விட்டது. பகவான் மகாபலவானான பலராமனென்னும் நாமதேயம் பெற்று பூபாரத்தை நீக்குவான் பூமியிலவதரித்திருக்கிறார். அவருக்கிந்தப் பெண்ணைக்கொடு.

பிறகு அவ்வரசன் தன் பட்டணத்திற்கு வந்து ரேவதியைப் பலராமருக்குக்கொடுத்து தான் பதரிகாசிரமத்தில் தபசுபண்ணுவதற்காகப் போய்விட்டான்.



## நான்காவது அத்தியாயம்



*நாரபாகனுடைய பிள்ளையான அம்பரிஷ உபாக்கியானம் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! நபனுடைய புத்திரனான நரபாகன் என்பவன் குரு குலத்திலேயே வெகுநாள் வாசஞ் செய்துகொண்டிருந்தான். அவனுடைய சகோதரர்கள் குருகுலவாசியான அந்த நரபாகனை நயிஷ்டிக பிரமசாரியென்றெண்ணிக்கொண்டு தாங்கள் மாத்திரமே தனத்தைப் பங்கிட்டுக்கொண்டார்கள். பின்பு குருகுலத்தில் நின்று வந்து பாகத்தை அபேக்ஷித்தவனும். கனிஷ்டனும், வித்துவானுயுமிருக்கிற அந்த நரபாகனனவன் பிராதாக்

களைப்பார்த்து எனக்கென்னபங்கு வைத்தீர்களென்று கேட்டான். அப்போது அவர்கள் பிதாவை உன் பாகமாகப் பிரித்து வைத்தோமென்று சொன்னார்கள். அதைக்கேட்டு அவன் பிதாவண்டைக்குப் போய் தனது பிராதாக்கள் சொன்னதைச் சொல்ல, அதற்குப் பிதாவும் வஞ்சனையை யுணர்ந்து அவனுக்கு ஒரு ஜீவன் உபாயத்தை உபதேசிக்கிறான். அப்பா! இப்போது புத்திமான்களான அங்கிரசு ரிஷிகள் எக்கியம் பண்ணுகிறார்கள். நீ மகா வித்துவானகையால் அவர்கள் அந்த எக்கியத்தில் ஆறுநாள் பண்ண வேண்டிய கர்மத்தில் சொல்லத்தக்கதான வேதபாகங்களை யறியாமல் மோகித்திருக்கிறார்கள். அந்த மகாத்துமாக்களுக்கு இரண்டு வைசுவதேவ சூக்தங்களைப் பாடம் பண்ணிவை. அவர்கள் எக்கிய முடிந்த பிறகு அந்தச் சத்திர யாகஞ்செய்து மீந்த தங்களுடைய தனத்தை யெல்லாம் உனக்குக் கொடுப்பார்கள் என நரபாகன் அப்படியே செய்தான். அந்த அங்கிரசுக்களுஞ் சத்திரயாகஞ்செய்து மிகுந்த தனத்தையெல்லாம் அந்த நரபாகனுக்கு கொடுத்து சுவர்க்கத்தை யடைந்தார்கள்.

அந்த தனத்தை கிரகியாநின்ற நரபாகனை கறுத்தும் சிவந்துமிருக்கிற வர்ணத்தையுடைய ஒரு புருஷனனவன் வடக்கேயிருந்து வந்துப் பார்த்து, இந்த யக்கியவஸ்துவிலே யிருக்கிய தனம்தனதென்று கேட்க நரபாகனனவன் இந்தத் தனத்தை தனக்கு ரிஷிகள் கொடுத்தார்களென்று சொன்னான். அதற்கு அந்தப் புருஷன் நாமிருவரும் உன்னுடைய பிதாவைப்போய் கேட்போமென்று சொல்ல, அப்படியே நரபாகன் தன் பிதாவைக் கேட்டான். பிதாவும் எக்கியவஸ்துவில் மிகுந்த தனங்களை ருத்திரனுடைய பாகமாக்கினார்கள். ஆகையால் சிவனே அந்ததனத்துக்குரியவரென, நரபாகனும் அந்தக் கிருஷ்ண பிங்களவர்ணனை புருஷனைப் பிரணமஞ்செய்து வாரீர் பிரமநிஷ்டரே! ஈசனே! எக்கிய வஸ்துவில் மிகுந்த தனமெல்லாம் உம்முடையதென்று என்னுடைய பிதா சொன்னார். ஆதலின் என்னை மன்னிக்க வேண்டுமென வணங்கிப் பிரார்த்தித்தான்.

அதற்கு அந்தப் புருஷன் "அப்பா நரபாகனே! உன்னுடைய பிதா எந்த தர்மத்தைச் சொன்னாரோ, அதை நீயும் சத்தியமாகவே கொள்ளுகிறாய். அப்படிப்பட்ட யதார்த்தவாதியான உனக்கு நித்தியமான பிரம ஞானத்தை உபதேசிக்கிறேன். அதை நீ கிரகித்துக்கொண்டு பரமமான ஆபத்திலேயும் அசத்தியத்தைச் சொல்லாமலிரு. இந்த யக்கியத்தில்

மிகுந்த தனத்தை நானுனக்கே கொடுத்துவிட்டேன். அதை யும் நீ யெடுத்துக்கொள்ளென்று சொல்லி, ருத்திரனுனவர் அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானுர்.

அந்த நரபாகனுக்கு மகாபாகவதனுயும், புண்ணியவா னுயும், அம்பரிஷனென்று ஒரு புத்திரனுண்டானுன். அவன் சப்தத்திவுகளோடு கூடின பூமியையும் அளவில்லாத சம்பத் தையும், ஒப்பில்லாத ஆதிபத்தியமாகிற ஆக்கியா சக்தியை யும் பெற்றிருந்தாலும், அந்த ஐஸ்வரிய முதலானவைகளை யும், சொப்பனத்திற் கண்ட வஸ்துவைப்போல அனித்திய மாக நினைத்து பகவானுன வாசுதேவனிடத்திலும், அவர் களுடைய பக்தர்களான சத்புருஷர்களிடங்களிலும் பரம மான பக்தியை யடைந்தவனுய் தன்னுடைய மனதை ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் ஸ்தாபித்து, சர்வகாலமுந் தனது க்ர்மங்களை யெல்லாம் எக்கியபலப்பிரத ரான பரமபுருஷனிடத்தில் சமர்ப்பித்து இந்தப் பூமியைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருந்தான். அப்படிப்பட்ட மகா பாகவதனுன அம்பரிஷ மகாராஜனுனவன் சுதர்மமான கர்ம யோகத்தோடுங் கூடின பக்தியோகத்தினுல் ஸ்ரீ ஹரியைச் சந்தோஷிப்பித்துக் கொண்டு மெள்ள மெள்ள மக்கள் மனை முதலிய அனைத்தையும் அநித்தியமென்று நீக்கினுன். அப் போது ஸ்ரீ ஹரியானவர் அந்த அம்பரிஷனிடத்தில் கிருபையுடையவராய் தம்முடைய சக்கரத்தை அவனுக்குக் கொடுத்தார்.

அந்த வீரனுன அம்பரிஷன் தனக்குச் சமானமான சீலத்தையுடைய ஸ்திரீகளோடு கூடிக்கொண்டு ஸ்ரீ விஷ் ணுவை ஆராதிக்கவேணுமென்கிற இச்சையை யுடையவனுய் ஒருவருஷ பரியந்தம் ஏகாதசி விரதத்தை அனுசரித்து அந்த விரதத்தினுடைய அந்தத்தில், கார்த்திகை மாதத்தில் மூன்றுநாள் உபவாசத்தோடிருந்து, யமுனு நதியில் ஸ்நானம் பண்ணி, மதுவனத்தில் ஸ்ரீ ஹரியை அர்ச்சித்து, துவாதசி யில் பாரணை பண்ண யத்தனம் பண்ணினுன். அந்தச் சமயத் தில் துருவாசர் அந்த ராஜாவுக்கு அதிதியாக வந்தார். அந்த ராஜாவும் அம்மகாரிஷியை எதிர்கொண்டு அர்க்கிய பத்தியாதி உபசாரங்களினுல் பூசைபண்ணி, தன்கிரகத்தில் அவரைப் போஜனம் பண்ணும்படி பிரார்த்தித்தான். அவரும் அதை அங்கீகரித்து நித்திய கர்மஞ் செய்துக் கொண்டு வருகிறேமென்று போய் காளிந்தியினுடைய சுசி யான தீரத்தில் ஸ்நானஞ்செய்து, பிரமத்தைத் தியானித்துக் கொண்டிருந்தார். அப்போது அரை முகூர்த்தமே மிகுந்

திருக்கும். துவாதசியில் பாரணை பண்ணுகிறதற்கு தூறு வாசமகாரிஷி வாராமலிருப்பதை நினைத்து அவரில்லாமல் பாரணை பண்ணுவதால் அதிக்கிரமதோஷம் வருகிறது, துவாதசியிலே பாரணை பண்ணாமற்போவதால் தோஷமும் வருகிறது. ஆகையால் ஜலபானத்தைப் பெரியவர்கள் அசன துல்லியமாகவும், உபவாச துல்லியமாகவும், யோசனைசெய்து ராஜரிஷியான அம்பரிஷன் மனதில் ஸ்ரீ பகவானை தியானஞ்செய்து ஜலபாரணையைப் பண்ணிவிட்டு, அந்த தூறு வாசருடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். தூறு வாசரும் யமுனதீரத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டு வந்து ராஜாவினால் பூசிக்கப்பட்டவராய், அந்த ராஜா செய்த காரியத்தை மனதில் அறிந்துகொண்டு கோபத்தினால் பயங்கரமான முகத்தையுடையவராயும், பசியையுடையவராயு மிருக்கிற அந்த முனியானவர் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டிருக்கிற ராஜாவை அங்குள்ள சமஸ்தமான பிராமணர்களும் நடுங்கப்பார்த்து சொல்லுகின்றார்: கேட்டீரோ அந்தணர்களே! இந்த ராஜாவானவன் அதிதியாய் வந்த எனக்கு ஆதித்யஞ் சொல்லி அன்னங்கொடாமல் புசித்தான். அப்படிப்பட்ட இந்த ராஜாவுக்கு அதிதியினுடைய பலத்தை இப்போதே காண்பிக்கிறே னென்று சொல்லி, தூறுவாச ரிஷியானவர் தம்முடைய சடையிலே ஒன்றைப் பிடுங்கி, அந்த ராஜாவை நாசம்பண்ணும்படி காலாக்கினிக்குச் சமானமாக ஒரு பூதத்தை சிருஷ்டித்தார்.

அப்போது கத்தியைக் கையிலே பிடித்துக்கொண்டும் பாதத்தினால் பூமியை நடுங்கச்செய்து கொண்டும் வரா நின்ற அந்தப் பூதத்தைப் பார்த்து அம்பரிஷனவன் பகவான் மீது பாரத்தைப்போட்டு பயப்படாமலிருந்தான் அப்போது மகாத்மாவான பரமபுருஷனால் அம்பரிஷனுக்குக்கொடுக்கப்பட்ட சக்கரமானது கோபத்தினால் சீறி சர்ப்பம்போல ஓடி வரும் அந்த பூதத்தை தகித்துவிட்டு, தூறுவாசரையும் துரத்திக்கொண்டுபோக, அந்த ரிஷியானவர் தம்முடைய பிரயத்தினம் நிஷ்பலமானதையும், சக்கரமானது தன்னைத் துரத்திக்கொண்டு வருவதையும் பார்த்து பயந்தவராய் பல திக்குகளிலும் ஓடினார். அந்தரிஷியை எங்கேபோனாலும் பின்றொடர்ந்து துரத்த மேருவினுடைய குகையில் பிரவேசிக்கவேணுமென்றோடினார். அங்கும் பின்றொடர அந்தத் தூறுவாச முனியானவர் மிகவும் பயந்தவராய் ரக்ஷகனைத் தேடிக்கொண்டு பிரமதேவரைப்போய் சரணமாகவடைந்து, ஐயனே! ஸ்ரீ ஹரியினுடைய சக்கரத்தில் நின்றும் என்னை

இரக்ஷிக்கக்கடவீரென்று சொல்ல, பிரமதேவர் பகவானு டைய பக்தனுக்குத் துன்பம் விளைத்த உனக்கு நான் என்ன நன்மை செய்யமுடியுமென்ன, தூறுவாசன் சிவபெருமானை யடைந்து தன்னை இரக்ஷிக்கும்படி வேண்ட, அவரும் அச் சுதனுடைய சக்கரத்தின் ஆற்றலையடக்க நம்மாலும் ஆகாது, ஆதலின் பக்தவற்சலனுடைய பாதங்களையே கதியாக அடை யென, தூறுவாசர் வைகுந்தம் சென்று, கடவுளை பணிந்து, பலவிதமாய் தோத்திரம் செய்து, தன்னை இரக்ஷிக்கும்படி இரைஞ்ச நாரணர் நவில்கின்றார்:

வாரீர் முனியே! நான் பரதந்திரமான யானைபோல பக்தபராதீனனாக விருக்கிறேன். ஆகையால் அந்த அம்ப ரிஷ மகாராஜனையே நீ அடைவதுதான் தகுதி. பக்தர் களால் வசீகரிக்கப்பட்ட இருதயத்தை யுடையவனாயும், பக்த ஜனங்களுக்குப் பிரியனாயுமிருக்கிற நான் சாதுக்களான அந்தப் பக்தர்களை விட்டு என்னுடைய ஆத்மாவையும் இச்சிக்கமாட்டேன். அந்தப் பக்தர்களை விட்டு என்னையே ஆசரித்துக்கொண்டிருக்கிற லக்ஷ்மியையும் அபேக்ஷிக்கமாட் டேன். என்னுடைய சேவையினாலேயே திருப்தர்களாயிருக் கிற பாகவதர்கள் எனது சேவையினால் அடையப்பட்ட சாலோக்கிய முதலான நாலுவித மோக்ஷங்களையும் அபே க்ஷிக்கிறதில்லை. என்னுடைய இருதயத்தில் சாதுக்களும், சாதுக்களுடைய இருதயத்தில் நானுமாக விருப்போம். என்னை விட்டு வேறொன்றை அவர்களும் அறிகிறதில்லை. நானும் அவர்களை விட்டு ஒன்றையும் அறிகிறதில்லை. ஆகை யினால் எவனிடத்தில் நின்றும் உமக்கு உபத்திரவம் உண் டாச்சுதோ அவனை சீக்கிரமாக யடையுங்கள். உமக்கு அநுக்கிரகம் உண்டாகும் என்று பகவானவர் திருவாய் மலர்ந்தருளினர்.



## ஐந்தாவது அத்தியாயம்



*அம்பரீஷனால் ஏவப்பட்ட விஷ்ணுவினுடைய சக்காத்தை ஸ்தோத்திரம் பண்ணி தூறுவாச மகாரிஷியானவர் பிராண சங்கடத்தில் நின்றும் இரக்ஷிக்கப்பட்டமை சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! இந்தப் பிரகாரம் பகவானால் ஆக்கியாபிக்கப்பட்டவராய், தூறுவாசர் சக்கரதேஜசினால்

தகிக்கப்பட்டு மகாதுக்கத்தோடு அம்பரிஷனையடைந்து, அவனுடைய பாதங்களை பிடித்துக்கொண்டார். அம்பரிஷனும் தயையுடனே ஸ்ரீ ஹரியினுடைய சக்கரத்தை ஸ்தோத்திரம் பண்ணினான். வாரீர் சுதரிசனரே! தேவரீர் அக்கினி, சூரியன், ஜோதிக்கணங்களுக்கெல்லாம் பதியான சந்திரன், பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாசங்களும், சப்தாதி விஷயங்களும், சுரோத்திராதி இந்திரியங்களும், தர்மமும், தைரியமும், சத்தியமுமாகி அதர்மத்தையே சுபாவமாகவுடையவர்களான அசுரர்களுக்கு சங்கார கர்த்தாவாயும், மூன்று உலகங்களையும் இரக்ஷிக்கிறவராயுமிருக்கின்ற நீர் கதாதரனை பகவானால் துஷ்டர்களுடைய கண்டனத்தின்பொருட்டு நியமிக்கப்பட்டிருக்கின்றீர். ஆகையினால் எங்களுடைய குலத்துக்கு பாக்கியலாபத்தின் பொருட்டு தூறுவாச மகாரிஷிக்கு நன்மை செய்யக்கடவீர். அதுவே எங்களுக்கு அனுக்கிரகமாக விருக்கும் என்று பிரார்த்திக்க, அந்த ஸ்ரீ விஷ்ணுவினுடைய சுதரிசனமானது சாந்தியையடைந்தது.

பிறகு அந்த தூறுவாசமகாரிஷியும் சக்கரத்தினாலுண்டான அக்கினியில் நின்றும் விடப்பட்டவராய், அம்பரிஷனை ஆசீர்வதித்து அவனை ஸ்தோத்திரம் பண்ணினார். அந்த அம்பரிஷ மகாராஜாவும் அந்த மகாரிஷியினுடைய பாதங்களைப்பிடித்து க்ஷமைகொண்டு அவருக்குப் போஜனம் பண்ணிவைத்தான். அந்த தூறுவாச மகாரிஷியும் ராஜாவினால் கொண்டு வரப்பட்ட சர்வபோக்கிய வஸ்துக்களோடு கூடின அமிர்தமயமான அன்னத்தைப் புசித்து திருப்தராய், ராஜாவையும் நீர் போஜனம் பண்ணுமென்றுசொல்லி, அவன் உண்டபின் ஆகாசமார்க்கமாக நித்தியமான பிரமலோகத்தை அடைந்தார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! அந்த தூறுவாச மகாரிஷியானவர் சக்கரத்தினால் துரத்தப்பட்டு பல உலகமும் சென்று மீண்டும் அவர்களை யடைவதற்குள் ஒருவருடம் பூர்த்தியாயிற்று. அத்தனை நாளும் அந்த அம்பரிஷ மகா ராஜாவானவன் தூறுவாசருடைய தரிசனத்தையே அபேக்ஷித்துத் தீர்த்தந்தையே குடித்துக்கொண்டிருந்தான். இப்படிப்பட்ட அனேக குணங்களை யுடையவனான அந்த அம்பரிஷன் தனக்குச் சமானமான குணங்களை யுடையவர்களான பிள்ளைகளிடங்களிலே ராஜ்ஜியத்தைவிட்டு, தபோவனத்திலே பிரவேசித்துப் பிரகிருதி குணங்களான சத்துவ ரஜஸ தமோ குண

காரியங்களை யெல்லாம் விட்டு ஆத்மாவான வாசுதேவனிடத்தில் மனதை நிறுத்தித் தபசு பண்ணினன்.



## ஆறவது அத்தியாயம்

*மாந்தாதாவினுடைய பெண்களுக்குப் பதியாகின சவுபரியினுடைய உபாக்கியானம் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! அம்பரிஷனுக்கு விருபனென்றும், கேதுமானென்றும், சம்புவென்றும் மூன்று பிள்ளைகளுண்டானார்கள். விருபனிடத்தில் நின்றும் பிரஷதசுவனுண்டானன். பிரஷதசுவனுக்கு ரதிதரனுண்டானன். அபுத்திரனை ரதிதரனுடைய பாரியையினிடத்தில் அங்கிரசுவென்கிற ரிஷிசந்தானார்த்தமாகப் பிரம வர்ஜசுக்களையுடைய பிள்ளைகளைப் பெற்றார். இவர்கள் ரதிதரனுடைய க்ஷேத்திரத்தில் உண்டானதால் ரதிதரனுடைய கோத்திரர்களென்றும், அந்த க்ஷேத்திரத்தில் உண்டானதால் ரதிதரனுடைய கோத்திரர்களென்றும், அந்த க்ஷேத்திரத்தில் அங்கிரசினது பீஜத்துக்குப் பிறந்தமையால் ஆங்கிரசப் பிராமணர்களென்றும் சொல்லப்படுவார்கள். மனுவானவன் ஒருநாள் தும்பும்போது அவனுடைய நாசிகையில் நின்றும் இக்ஷுவாகு பிறந்தான். அந்த இக்ஷுவாகுவுக்கு நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே விகுக்ஷி நிமிதண்டன் என்கிற மூன்றுபேருஞ் சிரேஷ்டர்கள். இந்த நூறு பிள்ளைகளுக்குள்ளே விந்தியா பர்வதத்துக்கும் ஏமவிந்தத்துக்கும் மத்தியிலிராநின்ற ஆரியாவர்த்தமென்கிற க்ஷேத்திரத்தில் முன்னேயிருபத்தைந்து பிள்ளைகள் பிறந்தார்கள். பின்பு இருபத்தைந்து பிள்ளைகளுண்டானார்கள். மத்தியில் ஜேஷ்டர்களான மூன்று பிள்ளைகளுண்டானார்கள். மற்றபேரெல்லாந் தக்ஷணவுத்திராதி தேசங்களில் பிறந்தார்கள்.

அந்த இக்ஷுவாகு மகாராஜாவானவன் ஒருக்கால் அஷ்டகசிரார்த்தஞ் செய்யும்போது சிரேஷ்டனை விகுக்ஷியைப் பார்த்து வாராய் விகுக்ஷியே! சீக்கிரமாகப்போய் பரிசுத்தமான மாம்சத்தைக்கொண்டுவா வென்று பிள்ளையை ஆக்கியாபித்தான். அவனும் அதை யங்கிகரித்துக் காட்டுக்குப்போய் சிரார்த்த யோக்கியங்களான மிருகங்களையடித்து அதினல் இளைப்பையடைந்தவனாய் பசியினல் பக்ஷிக்கவேணுமென்கிற இச்சை யுடையவனய்ச் சிரார்த்தத்துக்குக் கொண்டு

போகவேணு மென்கிற கியாபகமில்லாமல் ஒரு முசலைப் பக்ஷித்துவிட்டு மிகுந்ததை தகப்பனுக்குக் கொண்டுவந்து காண்பித்தான். அப்போது இட்சுவாகு ராஜனுனவன் குரு வான வஸிஷ்டரோடு சொல்ல, அவர் அந்த மாமிசமானது உச்சிஷ்டமாச்சுது. ஆகையால் கர்மத்துக்கு யோக்கிய மல்ல வென்று சொல்லக்கேட்டு இட்சுவாகு அந்தப் பிள்ளையை தேசத்தில் நின்றுந் துரத்திவிட்டான். பின்பு இட்சுவாகுவுங் குருவான வஸிஷ்டருடனே சம்வாதம் பண்ணி இராஜ்ஜிய போகத்தில் விரக்தனுய் யோகாப்பியாசத்தை யுடையவனுய் சரீரத்தை விட்டு யோகாப்பியாசத்தினுலேயே ஸ்ரீ பகவானை அடைந்தான். தகப்பனுன இட்சுவாகுவும் லோகாந்தரத்தை யடைந்தபின்பு திரும்பவும் விகுட்சியானவன் வந்து இந்தப் பூமியைப் பாலனஞ்செய்துகொண்டு சாதன் என்கிற பெய ரால் பிரசித்தனுய் ஸ்ரீ ஹரியை யக்கியங்களினுல் ஆராதித் தான். அந்த சாதன் என்னப்பட்ட விகுட்சிக்குப் புரஞ்சய னென்று ஒரு பிள்ளையுண்டானுன்.

ஒரு காலத்தில் தேவதைகளுக்குத் தானவர்களோடு உலகங்களுக்கெல்லாம் நாசகரமான யுத்தமுண்டாயிற்று. அதிலே வீரனுன புரஞ்சயனைத் தயித்தியர்களாலே அப ஜயப்பட்ட தேவதைகள் தேவதேவராயும், சர்வாந்திரியாமி யாயும், லோகநாயகராயு மிருக்கிற பகவானுடைய வசனத் தினுல் சகாயமாக வரவேணுமென்று பிரார்த்தித்தார்கள். அப்போது அந்தப் புரஞ்சயனும் எனக்கு யுத்தத்தில் இந்திர னுனவன் வாகனமாயிருந்தால் நான் உங்களுக்குச் சகாயமாக வருகிறேனென்று சொல்ல, அந்த வார்த்தையைக் கேட்டு இந்திரன் லச்சையினுல் ஒப்பாமலிருக்க, தேவதேவனுன விஷ்ணுவினுடைய வசனத்தினுல் அந்த காரியத்துக் கிசைந்து, இந்திரனும் ரிஷபரூபமானுன். அப்போது புரஞ்சயனுனவன் யுத்த சன்னுகத்தோடு கூடினவனுய் இந்திர னுகிற ரிஷபத்தின் பேரிலேறிக்கொண்டு தேவதைகளால் ஸ்தோத்திரம் பண்ணப் பட்டவனுய், பரம புருஷனுன விஷ்ணுவினுடைய தேஜசினுல் பூரிக்கப்பட்டவனுய், மேற் குத் திக்கிலே தயித்தியர்களுடைய பட்டணத்தைத் தேவதைக ளோடு கூடப்போய் தகைந்துகொண்டான். அப்போது அசுரர்களோடு ககுஸ்தனுன புரஞ்சயனுக்கு மகா பயங்கர மான யுத்தமுண்டாயிற்று. அந்த யுத்தத்தில் தயித்தியர்கள் தோல்வியடைந்து பாதாளத்துக்கு ஓடிப்போய்விட்டார்கள் ககுஸ்தராஜனும் அசுரர்களை ஜயித்து அவர்களுடைய தன முதலானவைகளை இந்திரனுக்குக் கொடுத்தான்.

ஆகையால் அந்த ராஜாவானவன் சத்துருக்களுடைய பட்டணத்தை ஜயிக்கையால் புரஞ்சயனென்றும், இந்திரனை வாகனமாகப்பெற்றமையால் இந்திரவாகனனென்றும், இந்திரனுடைய முகப்பிலேயிருந்து யுத்தம் பண்ணியதால் ககுஸ்தனென்றுஞ் சொல்லப்பட்ட நாமங்களினால் பிரசித்தனானன்.

அந்தப் புரஞ்சயனுக்கு அனெனசுவெனும் ஒரு பிள்ளை பிறந்தான். அவனுக்குப் பிருதுவும், அவனுக்கு விசுவகோதனும், அவனுக்கு சந்திரனும், அவனுக்கு யுவனாசுவனும், அவனுக்கு சாவஸ்தனென்கிறவனும் உண்டானான். அந்த சாவஸ்தராஜாவினால் சாவஸ்தியென்றொரு பட்டணமானது நிர்மிக்கப்பட்டது. அந்த சாவஸ்தியென்கிறவனுக்கு பிரகதசுவனும், அவனுக்குக் குவலயாசுவனும் உண்டானான். அந்த பலவானான குவல்யாசுவ ராஜனானவன் இருபத்தோராயிரம் பிள்ளைகளோடு கூடினவனாய் உதங்க ரிஷிக்குப் பிரீதியார்த்தமாக யுத்தத்தில் துந்துவென்கிற அசுரனை அடித்தபடியால் துந்துமாரனென்றும் பிரசித்தனானன். அப்போது அந்த யுத்தத்தில் துந்துவென்கிற அசுரனுடைய முகாக்கினியினால் இருபத்தோராயிரம் பிள்ளைகளில் திடாசுவன், கபிலாசுவன் பத்திராசுவனென்கிற மூன்றுபேர் தவிர மற்றவர்களெல்லாந் தகிக்கப்பட்டார்கள். திடாசுவனுடைய புத்திரன் அரியசுவன். அவனுடைய புத்திரன் நிகும்பன். அவனுடைய புத்திரன் பரிஹிணாசுவன். அவனுடைய புத்திரன் கிரிசாசுவன். அவனுக்கு சேனசித்து, அவனுக்கு யுவனாசுவன் பிறந்தான்.

அந்த யுவனாசுவனானவன் புத்திரனில்லாமல் விசனத்தையுடையவனாய் தன்னுடைய மனைவியர் நூறுபேர்களுடனே தபோவனத்தை அடைந்தான். அவ்விடத்திலேயிராநின்ற ரிஷிகளானவர்கள் சித்தசமாதானத்தோடு கூடினவர்களாய் யுவனாசுவனுக்குப் புத்திரார்த்தமாக இந்திரயாகத்தைப் பண்ணிவைத்தார்கள். அந்த ராஜாவானவன் அர்த்தராத்திரியில் மிகவும் தாகத்தையுடையவனாய் எக்கியசாலையிற் பிரவேசித்து கும்பத்திலே அபிமந்திரித்திருக்கப்பட்ட ஜலத்தை யெடுத்துப் பானம்பண்ணினான். பிற்பாடு நித்திரை பண்ணி யெழுந்திராநின்ற பிராமணர்கள் ஜலசூனியமாயிருக்கிற அந்த கலசத்தைப்பார்த்து இந்த புத்திரோற்பத்திக்கு யேதுவான தீர்த்தத்தை எவன் பானம் பண்ணினானென்று கேட்டு தெய்வத்தினால் பிரேரேபிக்கப் பட்டவனாய் ராஜாவே அந்த ஜலத்தைப் பானம்பண்ணினானென்றறிந்து தெய்வ

பலமே பிரபலமல்லவாவென்று ஆச்சரியத்தை யுடையவர்களாய் அந்த ஈஸ்வரனுக்கு நமஸ்காரம் பண்ணினார்கள். பிற்பாடு சிலகாலஞ் சென்று பிரசவகாலம் வந்தவுடனே அந்த யுவனாசுவனுடைய வலது பக்கமான வயிற்றைப் பேதித்துக்கொண்டு சக்கரவர்த்தியான ஒருபிள்ளை பிறந்தான். இந்தப்பிள்ளை ஸ்தன்னியத்துக்காக மிகவும் ரோதனம் பண்ணுகின்றானே எதைப் பானம் பண்ணப் போகிறானென்று பிராமணர்கள் சொல்ல, இந்திரன் தன் கட்டை விரலை குழந்தையின் வாயிலே கொடுத்தான். அந்தச் சிசுவினுடைய பிதாவான யுவனாசுவன் தேவப்பிராமணர்களுடைய அனுக்கிரகத்தினால் மரித்துப் போகாதவனாய் அவ்விடத்தில் சிலகாலந் தபசு பண்ணி அதனாலே சித்தியையடைந்தான். இந்த மாந்தாதாவுக்கு இந்திரனானவன் திரசதசுயென்று நாமமிட்டான். யுவனாசுவனுடைய புத்திரனை மாந்தாதா வானவன் சக்கரவர்த்தியாகி பகவானுடைய தேஜசினால் சப்த தீவுகளோடு கூடின பூமியைத் தானொருவனாகவே பரிபாலனம்பண்ணி நாராயணனை யக்கியங்களினால் ஆராதித்து, சசிபிந்துவினுடைய பெண்ணான விந்துமதியென்கிற ஸ்திரீயினிடத்தில் புருச்சனையும், அம்பரிஷனையும், முசுகுந்த யோகியையும், ஐம்பது பெண்களையும் பெற்றான்.

ஒருகால், சவுபரி ரிஷியானவர் வழக்கப்படி யமுனாசலத்தில் முழுகும்போது மச்சங்கள் கூட்டமாக சம்போகியா நின்ற சுகத்தைப்பார்த்துத் தாமும் அப்படியிருக்கவேணுமென்கிற ஆசையையுடையவராய் இராஜாவானமாந்தாதாவினிடத்திற்குவந்து அவனுடைய பெண்களில் ஒருவளை தனக்குக் கொடுக்கும்படி கேட்டார். அவ்வரசன் அம்முனிவன் விருத்தாப்பியனாயிருப்பதை நோக்கி, எனது குமாரத்திகளில் எவள் உம்மை இச்சிக்கிறாளோ அவளை நீர் மணந்து கொள்ளுமென, முனிவரும் தேவஸ்திரீகளும் இச்சைப்படும்படியான ரூபத்தைத் தரித்துக்கொண்டு ராஜாவின் அந்தபுரத்தில் பிரவேசித்து அந்த ஐம்பதுபெண்களையும், தாம் ஒருவரே மணஞ் செய்துகொண்டார். பிற்பாடு அந்த சவுபரி ரிஷியானவர் அந்த ஐம்பது ஸ்திரீகளையும் அடைந்து தம்முடைய தபோபலத்தினால் உண்டாக்கப்பட்ட நானாவிதங்களான விலையுயர்ந்த சாமக்கிரியைகளுடனே கூடினதாயுமிருக்கிற கிரகங்களில் மகாயோக்கியங்களான மஞ்சங்கள், ஆசனங்கள், வஸ்திரங்கள், பூஷணங்கள், போஜனங்கள், இவைகளோடு கூடினவராய் அந்த ஸ்திரீகளோடு ரமித்துக்

கொண்டிருந்தார். இருக்குவேதிகளுக்கு ஆசாரியரான சவுபரிமகா ரிஷியானவர் மச்ச சகவாசத்திஞல் உண்டான சம்சாரப் பெருக்கை யுணர்ந்து வெகுகாலம் கிரகஸ்தாஸிரமத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருந்த அந்தச் சவுபரிமகாரிஷியானவர் விரக்தியடைந்தவராய் சகலத்தையும் விட்டுதபோவனத்தை யடைந்தார். பதியையே தெய்வமாக உடையவர்களான அவருடைய பத்தினிகளும் அவரின்பின் சென்ருர்கள். அந்தத் தபோவனத்தில் அவர் மகா உக்கிரமான தபசைப்பண்ணி ஆத்மசாக்ஷாத்காரத்தை யுடையவராய் பரமாத்துமாவோடு கலந்தார். அவருடைய பத்தினிகளும் பதியினுடைய மோக்ஷகதியைப் பார்த்து அவரிடத்திலேயே லயித்தார்கள்.



## ஏழாவது அத்தியாயம்



*புருகுச்சன், அரிச்சந்திரன் இவர்களுடைய உபாக்கியானமும் மாந்தாதாவின் வம்சமும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! மாந்தாதாவினுடைய பிள்ளைகளுள் சிரேஷ்டஞன அம்பரிஷன் தனக்குப் பாட்டஞன யுவஞசுவஞலே புத்திரஞக சுவீகரிக்கப்பட்டான். யுவஞசுவன், ஆரிதன் ஆகிய இவர்கள் மாந்தாதாவினுடைய கோத்திரத்துக்குப் பிரவர்த்தகர்களாயிருப்பார்கள். புருகுச்சனுக்கு சர்ப்பர்கள் தங்களுக்குத் தங்கையான நர்மதையைக் கலியாணம் பண்ணிக்கொடுத்தார்கள். சர்ப்பராஜாவிஞல் யேவப்பட்ட அந்த நர்மதையிஞலே பாதாளத்தை அடைவிக்கப்பட்டிருக்கிற புருகுச்சஞனவன் பகவானுடைய சக்தியைத் தரித்தவஞய் அந்தப் பாதாளத்தில் கொல்லக் கூடாதவர்களாகிற கந்தர்வர்களை சங்காரம் பண்ணிஞன். நர்மதை புருகுச்சனைப் பாதாளத்தில் அழைத்துக் கொண்டுபோய் கந்தர்வர்களைக் கொல்லுவித்ததை ஸ்மரிக்கின்ற பேருக்கு சர்பத்தில் நின்றும் பயமில்லாமலிருக்கக் கடவதென்று சர்ப்பங்களிஞல் கொடுக்கப்பட்ட வரத்தைப் பெற்ருள்.

அந்தப் புருகுச்சனுடைய பிள்ளை திரசதசியன் அவனுக்கு அனரண்ணியனும், அவனுக்கு அரியசுவனும், அவனுக்கு திரியருணனு அவனுக்குத் திரிபந்தனனும், அவனுக்குத் திரிசங்குவென்று பிரசித்தஞன சத்தியவிரதனும் பிறந்தார்கள். அந்தத் திரிசங்குவானவன் குருவான வசிஷ்ட

மகாரிஷியினுடைய சாபத்தினல் சண்டாளனாய், திரும்பவும் விசுவாமித்திரனுடைய பிரபாவத்தினல் சரீரத்தோடு சுவர்க்கத்தை யடைந்து, தேவதைகளினல் தலைகீழாகத் தள்ளப்பட்டு, மீண்டும் விசுவாமித்திரனுடைய தபோ பலத்தினல் அங்கேயே ஸ்தாபிக்கப்பட்டவனாய் இப்போதும் ஆகாசத்திலே காணப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

அந்தத் திரிச்சங்குவினுடைய பிள்ளை அரிச்சந்திரன். அந்த அரிச்சந்திரனிமித்தமாக வசிஷ்ட விசுவாமித்திரர்களுக்கு அநேக வருஷங்கள் யுத்தம் உண்டாச்சுது. அப்படிப்பட்ட அரிச்சந்திரனனவன் பிள்ளையில்லாமல் துக்கத்தை யடைந்து, நாரதருடைய உபதேசத்தினல் வருணனைச் சரணமாகவடைந்து "பிரபுவே! வருணனே, எனக்கு வீரியனான ஒரு புத்திரனுண்டாக அருளவேண்டும். பிறந்தானகில் அவனையே புருஷபசுவாகக்கொண்டு 'உன்னை ஆராதனம் பண்ணுகிறே" னென்று பிரார்த்திக்க, வருணனும் நல்லதென்று அங்கீகரிக்க, அவனுடைய அனுக்கிரகத்தினல் ரோகிதனென்று அரிச்சந்திரனுக்கு ஒரு புத்திரனுதித்தான். வருணன் ராஜாவைப் பார்த்து உனக்குப் பிள்ளைபிறந்தானே இந்தப் பிள்ளையினல் என்னை ஏசிக்க வேணுமென்று சொன்னன்.

அப்போது அரிச்சந்திரனனவன் அந்த வார்த்தையைக் கேட்டு புத்திரன் பாலியம் ஒழிந்தபின் பரிசுத்தமாவன், அப்போது எக்கியம் பண்ணுகிறேனென்று வருணனைப் பார்த்துச் சொன்னன். அவ்வரசனது புத்திரனுக்கு பாலிய பருவம் கடந்ததும் வருணன் வந்து சொன்னபடி செய்யெனக் கேட்க, அரசன் தன் புதல்வனுக்கு பல் முளைந்த பிறகு பூஜையை நிறைவேற்றுவதாகச் சொல்ல வருணன் சென்றான். அச்சிறுவனுக்கு பல் முளைந்ததும் வருணன் மீண்டும் வந்துகேட்க, அரசு காரியங்களுக்குரிய அவன் கவசதாரணத்திற்குதவானே என்றிப்படி அவ்வரசன் தன் புதல்வன் மீதுள்ள பற்றினல் பலமுறையும் பலவிதமாக நியாயங்கூறி காலந்தள்ளி வந்தான்.

ரோகிதனெனும் அப்புதல்வன் இவ்விருத்தாந்தங்களை கேட்டு, வனத்தில் வசிப்பதே உத்தமமென்றுணர்ந்து ஓர் வனத்திற்கு சென்றனன். வருணனும் அவ்வரசனுக்கு மகோதர வியாதியை யுண்டாக்கினன்.

அரிச்சந்திரன் வருணனல் மகோதர வியாதியை அடைந்ததைக் கேட்டு அந்த ரோகிதன் வீட்டுக்குப்போக

மனங்கொண்டான். இந்திரன் போக வேண்டாமென்று தடுத்து புண்ணிய தீர்த்தயாத்திரை செய்யும்படி ஆக்கியா பித்தான். அப்படியே அந்த ரோகிதனும் காட்டிலே ஒரு வருஷம் தீர்த்தயாத்திரை பண்ணிக்கொண்டு சஞ்சரித்தான். இந்தப் பிரகாரம் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து வருஷம் வரைக்கும் வருஷந்தோறும் பட்டணத்துக்கு வரவேணு மென்று இச்சியா நின்ற அந்த ரோகிதனை இந்திரனானவன் விருத்தப் பிராமணனாகச் சென்று போகவேண்டாமென்று தடுத்தான். பிறகு அந்த ரோகிதன் ஆறுவது வருஷத் திலும் அப்படியே வனத்தில் தீர்த்தயாத்திரை பண்ணி வரும்போது அஜிகிரதனென்பவனுடைய சுனசேப னென் கிற கனிஷ்ட புத்திரனைக் கிரையத்திற்கு வாங்கி பிதாவுக்குக் கொண்டுவந்து கொடுத்துச் சேவித்தான். அப்போது அந்த அரிச்சந்திரனும் வருணனால் மகோதர வியாதியில் நின்றும் விடுவிக்கப்பட்டவனாய் புருஷ மேதத்தினால் வருணன் முத லான தேவர்களை ஆராதித்தான்.

அந்த யக்கியத்தில் விசுவாமித்திரரானவர் ஓதாவும், ஆத்மக்கியானியான ஜமதக்கினி ரிஷியானவர் அத்துவரியு வும், வசிஷ்ட மகாரிஷியானவர் பிரமாவும், அயாசிய ரிஷி யானவர் உத்காதாவுமாக ஆனார்கள். அந்த எஜமானனான அரிச்சந்திரனுக்கு இந்திரனானவன் சந்துஷ்டனாய்ச் சுவர்ண மயமான ரதத்தைக் கொடுத்தான். அந்த சுனசேபனுடைய உத்தமசரிதத்தை மேலே சொல்லுகிறேன்: அரிச்சந்திர னுடைய சத்திய பலத்தையும் தைரியத்தையும் பார்த்து விசுவாமித்திரர் சந்தோஷித்து அவனுக்குக் கியானத்தை யுபதேசித்தார். அந்த ராஜாவானவன் சமஸ்த பந்தத்தில் நின்றும் விடப்பட்டவனாய் கியானானந்த மயமாயும், தேச காலங்களிலே யளவிடக் கூடாததாயும், மனோவாக்குகளுக் கெட்டாததாயுமிருக்கிற பரமாத்ம சொரூபத்தில் கலந்தான்.



## எட்டாவது அத்தியாயம்



*சகரனது புத்திரர்கள் சாம்பரானதும், அசமஞ்சனது உபாக்கியானமும் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரும் பரிட்சித்து மகாராஜனே! ரோகிதனுக்கு அரி தனும், அரிதனுக்குச் சம்பனும் உண்டானார்கள். அந்தச்

சம்பனால் சம்பரபுரி நிர்மிக்கப்பட்டது. அப்படிப்பட்ட சம்பனிடத்தில் நின்றும் சுதேவனும் அவனுக்கு விஜயனும் அவனுக்கு அறுக்கனும் அவனுக்கு விருகனும் அவனுக்குப் பாகுகனும் பிறந்தார்கள். பாகுகனென்கிற ராஜா சத்துருக்களினால் ராஜ்ஜியம் அபகரிக்கப்படுகையில் பாரியையோடுகூட வனத்திற் பிரவேசித்தான். அவ்விடத்தில் மரணத்தையடைந்த பர்த்தாவுடனே அநுமரணம் பண்ணக் கோறின அவனுடைய பாரியையை அவுரவரிஷியானவர் கர்ப்பவதி யென்றறிந்து அநுமரணஞ் செய்யவேண்டா மென்று நிறுத்தினார். பின்பு அவளுடைய சக்களத்திமார்கள் இவள் கர்ப்பிணியா யிருக்கிறாளென்று அறிந்து அந்த கர்ப்ப நாசத்தின் பொருட்டு அன்னத்தில் விஷத்தைக் கலந்துகொடுத்தார்கள். அந்த அவுரவரிஷியினுடைய அநுக்கிரகத்தினால் விஷத்தோடுகூட கர்ப்பத்திலிருக்கிற பிள்ளை மறியாமல் பிறந்தான். அவன் பிரசித்தனாய் மகா கீர்த்திமானாய் சகரச் சக்கரவர்த்தியென்று பேர் பெற்றிருந்தான். அந்த சகரனுடைய பிள்ளைகளால் இந்தச் சமுத்திரமானது நிருமிக்கப்பட்டது.

அந்தச் சகரனானவன் தாலசங்கர்கள், எவனர்கள் முதலிய பகைவர்களை தனது குருவான அவுரவருடைய உத்திரவின்படி கொல்லாமல் சிலரை மொட்டையடித்தும், சிலரை விரித்த தலைமயிரை யுடையவர்களாயும், சிலர்க்கு பாதிசிரசை மொட்டையடித்தும், அனுப்பினான். சமஸ்த தேவரூபியாயும், சர்வாந்திரியாமியாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியை அவுரவரிஷியினால் உபதேசிக்கப்பட்ட யோகமார்க்கத்தினால் அசுவமேதங்களால் ஆராதித்தான். அந்த அசுவமேதத்தில் சகரனால் விடப்பட்ட அசுவத்தை இந்திரனானவன் அபகரித்துக் கொண்டுபோனான். அப்போது அந்தச் சகர சக்கரவர்த்தியினுடைய கேசினி சுமதி என்கிற இரண்டு பாரியைகளுள் சுமதி என்கிறவளுடைய பிள்ளைகள் அறுபதினாயிரம் பேரும் கர்விகளாய் பிதாவினுடைய ஆக்கினையினால் அந்த அசுவத்தைப் பூமியெங்கும் தேடிக்காணாமல் பூமியைச் சுற்றிலும் தோண்டினார்கள். அப்போது ஈசானிய திக்கிலே பாதாளத்தில் கபிலமுனியினுடைய சந்நிதானத்தில் அந்தக் குதிரையைக்கண்டு, இவன்தான் குதிரையைத் திருடிவைத்துக்கொண்டு அறியாதவன் போல கண்ணை மூடிக்கொண்டிருக்கிறான். மகா பாவி இவனைக் கொல்லவேணுமென்று சொல்லி ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு எதிரே யோடிவந்தார்கள். அப்போது கபில மகாமுனிவர் கண்ணைத்திறந்து பார்க்க அந்த அறுபதி

ஞயிரம் பேரும் அந்த க்ஷணத்தில்தானே தங்கள் தங்க ளுடைய சரீரத்தில் பிறந்த அக்கினியினுல் தகிக்கப்பட்டவர்க ளாய் பஸ்பமாகப் போனுர்கள்.

சகரனுக்குக் கேசினியென்கிற மனைவியினிடத்திலே யுண்டான அசமஞ்சதனுக்கு புத்திரனுன அஞ்சுமான் என் கிறவன் பாட்டனுகிய சகரனுக்கு அனுகூலனுயிருந்தான். அசமஞ்சதனே பூர்வ ஜன்மத்தில் யோகியாயிருந்து விஷய சங்கத்தினுல் யோகத்தில் நின்றும் நழுவினவன். அவன் சகவாசத்தை யொழிக்கவேண்டி உலகத்துக்கு விரோதமான காரியங்களை செய்துக்கொண்டும், விளையாடும் பசுக்களை எடுத்து சரசுநதியில் போட்டுக்கொண்டும், ஜனங்களுக்கு பயங்கரனு யிருந்தான். இத்தகையன் உலகத்திற் குதவா னென்று துரத்திவிட்டான். அப்போது அந்த அசமஞ் சதன் தனது யோகாப்பிரபாவத்தில் தன்னுலே சரசுநதியில் போடப்பட்ட பிள்ளைகளை யெல்லாம் எழுப்பிவிட்டு பின்பு சுயமிச்சையாய் புறப்பட்டுப்போனுன்.

அப்போது அயோத்தியில் வாசம்பண்ணுகின்ற ஜனங்க ளெல்லாம் இறந்துபோய்த் திரும்பவும் பிழைத்து வந்தப் பிள்ளைகளைக்கண்டு ஆச்சரியப்பட்டார்கள். சகரனும் தனது புத்திரனது பிரதாபத்தை கேட்டு வருந்தினுன். பின்பு அஞ்சுமானுனவன் பாட்டனுன சகரனுல் அசுவமேதக் குதிரையைத் தேடிக்கொண்டு வர அனுப்பிவைக்கப்பட்ட வனுய் சிறிய தகப்பன்மார் வெட்டின மார்க்கத்தை யனுசரித் துப் பாதளத்தில் போய் அவ்விடத்தில் சாம்பல் குப்பல் கிட்டேயிருக்கிற அசுவத்தைக் கண்டு அங்கே யிருக்கிற கபில ரூபியான பகவானைப் பார்த்துத் தெளிந்த மனதையுடைய வனுய் அவருக்குப் பிரணமஞ்செய்து அஞ்சலிபண்ணிக் கொண்டு ஸ்தோத்திரம் செய்கின்றுன் :

பகவானே! உலகத்தில் சத்துவ-ரஜஸ-தமோ குணங்க ளோடுகூடின யாதொரு சரீரிகளுண்டோ அவர்களெல்லாம் உம்முடைய மாயையினுல் மோகத்தை யடையாநின்ற புத்தி யையுடையவர்களாய் தங்களுக்கு அந்தராத்மாவாக விருக்கும், உம்மை யறியாதவர்களாய் யிருக்கிறுர்கள். கியானுநந்த சொருபராயும், பேதயோகங்களில்லாதவராயும், சனந்தனுதி ரிஷிகளினுல் அறியத்தக்கவருமாயு மிருக்கிற அப்படிப்பட்ட உம்மை மூடனுன நான் எப்படி யறியப்போகிறேன். வாரீர் சாந்தமூர்த்தியே! சத்வாதிகாரியங்களான சிருஷ்டியாதி வியாபாரங்களை லக்ஷணமாக வுடையவராயும், சிருஷ்டி

நிமித்தமான நாமரூபங்களில்லாதவராயும், காரியாகாரணங்களான தத்துவங்களைக்காட்டிலும் விலக்ஷணராயும், கியானுபதேச நிமித்தமாய் கிரகிக்கப்பட்ட கபிலமூர்த்தத்தை யுடையவராயுமிருக்கிற புராண புருஷரான உம்மைச் சேவிக்கிறேன். கபில பகவான் அஞ்சுமானைக் கிருபையினு லனுக்கிரகித்து சொல்லுகிருர் : குழந்தாய்! இது உன்னுடைய பாட்டனை சகரனது எக்கிய பசுவான குதிரை, இதோ உன்னுடைய தகப்பன்மார் அக்கினியினுல் தகிக்கப்பட்டவர்களா யிருக்கிருர்கள். இவர்கள் கங்காதீர்த்தத்தினுல் முக்தர்களாய் விடுவார்கள் என்று கபிலபகவான் சொல்ல, அந்த அஞ்சுமானுனவன் அந்த மகாரிஷியைப் பிரதக்ஷண நமஸ்காரம் செய்து குதிரையைக் கொண்டுவந்து பாட்டனை சகரனண்டையில் விட்டான். சகரனும் அந்த அசுவத்தினுல் எக்கியசேஷத்தை நிறைவேற்றி ராஜ்ஜியத்தை அஞ்சுமானிடத்தில் விட்டு நிராசையாய் பந்தத்தில் நின்றும் விடுப்பட்டவனுய், அவுரவ ரிஷியினுல் உபதேசிக்கப்பட்ட சமாதி யோகத்தினுல் உத்தமமான கதியை யடைந்தான்.



## ஒன்பதாவது அத்தியாயம்



*கங்கையை பூமியிலே கொண்டுவந்த பகீரதனுக்குப் பாட்டனுன அஞ்சுமான் முதலாக கட்டுவாங்க ராஜாபரியந்தமுள்ள வம்ச பரம்பரை சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! அஞ்சுமான் கங்கையைக்கொண்டுவரவேணுமென்கிற இச்சையினுல் வெகுகாலம் உக்கிரமான தவம்புரிந்து பல சித்தியை அடையாதவனுய் லோகாந்தரத்தை அடைந்தான். அவன் பிள்ளையான திலிபராஜனும் அவனைப்போலவே அனேகக்காலம் தபசுபண்ணி அசக்தனுய் காலத்தை அடைந்தான். அவன் பிள்ளையான பகீரதனும் மகா தபசைப் பண்ணினுன். அப்போது அந்தப் பகீரதனுக்கு கங்காதேவி பிரசன்னமாகி, உனக்குவேண்டும் வரத்தை கொடுக்கிறேன் கேளென்று சொல்ல, அந்த ராஜனுனவன் கங்கையை பிரணமம்பண்ணி தன்னுடைய இஷ்டத்தைச் சொன்னுன். அதற்குக் கங்காதேவி சொல்லுகிருள்: வாராய் ராஜாவே! நான் பூமியிலே விழுந்தால் எனது வேகத்தை எவன் தரிப்பான்? தரிக்கக் கூடியவனெருவனில்லாவிட்டால் நான் பூமியைப் பிளந்துகொண்டு பாதா

ளத்தில் போய்விடுவேன். இதுவுமன்றி நான் பூமியை யடைகிறதில்லை. பூமியிலே விழுந்தால் அங்குள்ள மனுஷி யர்களெல்லாம் தங்களுடைய பாபத்தை என்னிடத்திலே சுத்திபண்ணிக் கொள்ளுவார்கள். நான் அவர்களுடைய பாபத்தை எப்படி சுத்திபண்ணிக் கொள்ளப்போகிறேன்! இதற்கு நீ ஒரு உபாயஞ் சொல்லென்று கங்கையானவள் கேட்க பகீரதன் சொல்லுகின்றான்:

பகீரதன் வாக்கியம்

தாயே! சாந்தர்களாயும் உலகபாவனர்களாயு மிருக்கிற யோகிகள் தர்மபிரவர்த்தர்களான சத்புருஷர்கள் இவர்க ளெல்லாம் உன்னிடத்திலே வந்து ஸ்நானம்பண்ணி தங்க ளுடைய சரீர சம்பந்தத்தினால் உனது பாபத்தைப் போக்கு வார்கள். அவர்களிடங்களில் சகல பாபத்தையும் பேதிக்கிற வரான ஸ்ரீ ஹரி யிருக்கிறாரல்லவா? ருத்திரனிடத்தில் இந்த சகத்தெல்லாம் கோக்கப்பட்டிருக்கிறது. அந்த ருத்திரனானவர் உன்னுடைய வேகத்தை தரிக்கக்கூடுமென்ன கங்காதேவி யானவள் அதற்கு சம்மதித்தாள்.

பிறகு பகீரதனும் தபசினாலே சிவனைச் சந்தோஷிப்பித் தான். சர்வ லோகங்களுக்கும் ஹிதப் பிரவர்த்தகனான சிவனும் அந்த ராஜாவுக்குப் பிரசன்னராய், அவனாலே கங்கையைத் தரிக்கவேணுமென்று பிரார்த்திக்கப்பட்டவ ராய், அப்படியே ஆகட்டுமென்று அங்கீகரித்து, ஸ்ரீ ஹரியி னுடைய பாதசம்பந்தத்தினால் பரிசுத்தமான கங்கையைச் சாவதானமாகச் சிரசிலே தரித்தார். அப்போதந்த ராஜ ரிஷியான பகீரதனும் உலகபாவனியான அந்தக் கங்கையை எந்ததேசத்தில் தன்னுடைய பாட்டன்மார்கள் தேகங்கள் பஸ்பமா யிருந்தனவோ அந்தப் பிரதேசத்தில் கொண்டுவந் தான். அந்த கங்காதேவியும் வாயுவேகமான ரதத்தின்பேரி லேறிக்கொண்டு முன்னே போகாநின்ற பகீரதனைப் பின் சென்று சகல தேசங்களையும் பாவனம் பண்ணிக்கொண்டு பஸ்பமாக இராநின்ற சகரபுத்திரர்களைத் தன் ஜலங்களி னாலே நனைத்தாள். சகல சகர புத்திரர்களும் கேவலம் தேக பஸ்பங்களினாலேயே அந்தக் கங்காஜலத்தை ஸ்பரிசித்த மாத்திரத்தில் சுவர்க்கத்தை யடைந்து விட்டார்கள்.

பிறகு அந்தப் பகீரதனுக்கு சிறுதனும், நாபாபரனும், அவனுக்கு சிந்தித்திபனும், அவனுக்கு அயுதாயுசும், அவ னுக்கு ரிதுபர்னனும் பிறந்தார்கள். நளனுக்கு ஸ்நேகித னான ரிதுபர்னனானவன் அந்த நளராஜனுக்கு அசுவவித்

தையினுடைய மர்மத்தைச்சொல்லி அவனிடத்தில் நின்றும் அசுவவித்தையைப் பெற்ருன். அந்த ரிதுபர்னனுக்குச் சர்வகாமனும் அவ்னுக்கு சுதாசனும் அவனுக்கு மதயிந்தி பதியான சவுதாசனும் பிறந்தார்கள். யாதொரு சவுதா சனையே மித்திரசகாயனென்று சொல்லுவார்கள். அவன் ஒரு காரணத்திஞல் கன்மாஷபாதனைய்விட்டான் என்று சுகர் சொல்ல, பரிக்ஷித்து அதன் விருத்தாந்தத்தை வினவ, சுகர் சொல்லுகிருர்:

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! அந்தச் சவுதாசன் ஒருநாள் வேட்டையாடும்போது ஒரு ராக்ஷதனைச் சங்கரித்துவிட்டான். அந்த ராக்ஷதனுடைய பிராதாவானவன் அவன் நிமித்தமாக விசனத்தையடைந்து அவனைக்கொன்ற சவுதாசனுக்குப் பிரதிசிக்ஷை செய்யவேணுமென்று நினைத்து, சுயம்பாகி வேஷம் தரித்துக்கொண்டு சவுதாசனுடைய கிரகத்திலே யிருந்து ஒருநாள் போஜனம் பண்ணவேணுமென்று இச் சையை யுடையவரான வசிஷ்டருக்குப் பக்குவமாக நரமாமி சத்தைச் சமைத்து வைத்தான். வசிஷ்டர் தமக்குப் பரிமாரப் பட்ட நரமாமிசத்தைப் பார்த்து அரசனை நோக்கி நீ எனக்கு நரமாமிசத்தை வைத்தபடியினல் ராக்ஷசனுகக் கடவாயென்று சபித்தார். பிறகு வசிஷ்டர் அதை ராக்ஷசதனுடைய காரிய மென வறிந்து அந்த ராஜாவைப் பனிரண்டு வருஷமே ராக்ஷதனுயிருக்கக் கடவாயென்று சொன்னுர். அப்போ தந்த ராஜாவும் அஞ்சலியில் ஜலத்தை யேந்திக்கொண்டு குருவைச் சபிக்க உத்தேசிக்க தன்னுடைய பாரியையான மதயிந்தியினல் விலக்கப்பட்டு அந்த தீக்ஷணமான ஜலத் தைத் திக்குகள் பூமி ஆகாசமிதுகளெங்கும் பிராணி மயமா யிருக்கிறதைப் பார்த்து ஜலத்தை விடுவதற்கிட மில்லாமல் தன்காலிலே விட்டுக்கொண்டான். உடனே மகா நீலவர்ண மான பாதத்தை யுடையவனுயும் கன்மாஷபாதனென்று சொல்லப்பட்டவனுயும் குரு சாபத்திஞல் ராக்ஷச ரூபத்தை அடைந்தவனுயும், காட்டில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் போது, அவ்விடத்தில் கிரீடித்துக்கொண்டிருக்கும் ஒரு பிராமணனையும் பிராமண ஸ்திரீயையும் கண்டு, அவன் பசி யினுல் பீடிக்கப்பட்டவனுய் அந்த பிராமணனை மாத்திரம் பிடித்துக்கொண்டான். அந்தப் பிராமணனுடைய ஸ்திரீ யானவள் தைரியத்தை யடைந்தவளாய் ஒரு வார்த்தை சொல்லுகின்ருள்:

அப்பா வீரனே? நீ ராக்ஷசனல்ல. சாக்ஷாத் இட்சு வாகு வம்சத்தில் பிறந்த ராஜாக்களுக்குள்ளே மகா உத்தம

ஞன மதயிந்திபதியான மகாராஜனல்லவா? அப்படிப்பட்ட நீ அதர்மத்தைச் செய்ய யோக்கியனன்று. புத்திரனைக் கோறிக் கொண்டிருக்கும் எனக்கு கிரீடையிலே திருப்தியாக வில்லை. ஆதலின் என் புருஷனைத் தரவேணும். இந்த மனுஷியதேகமானது புருஷனுக்கு சகல புருஷார்த்தத்தையுங் கொடுக்கின்றது. ஆகையால் இந்தத்தேகத்தினுடைய வதமானது சர்வார்த்தங்களுடைய வதமாகச் சொல்லப்படும். வித்துவானும் மகா தபசோடுங் கூடின மகா புருஷனென்று பெயரை யுடையவராயுமிருக்கிற இந்தப் பிராமணனைவர் சர்வ பூதங்களினும் பரமாத்மபுத்தியினால் அந்தப் பூதங்களில் சத்வாதி குணங்களினால் மறைக்கப்பட்டிருக்கிற சாக்ஷாத் பிரமத்தை ஆராதிக்கவேணுமென்று இச்சையை யுடையவராயிருக்கிறார். அப்படிப்பட்டவர் பிரபுவான உன்னால் பிதாவுக்குப் புத்திரன்போல எப்படித்தான் வதத்துக்கு யோக்கியராவர்? அப்படி நீ இவரைப் பக்ஷிக்கிறதானால் என்னை முன்னே பக்ஷித்துவிடென்று சொல்லி, அநாதையைப்போல பிரலாபித்துக்கொண்டிருக்கிற அவள்முன்னே தானே அந்த சவுராஜனாகிய ராக்ஷதனானவன் அந்தப் பிராமணனைப் பக்ஷித்துவிட்டான். அந்தப்பிராமண ஸ்திரீயானவள் ராக்ஷசனால் பக்ஷிக்கப்பட்ட தன்புருஷனைப்பார்த்து கோபத்தை யடைந்தவளாய் பாபியான அந்த ராஜாவை நோக்கிச் சபித்தாள். அட துற்புத்தியையுடையவனே! எந்தக் காரணத்தினால் காமத்தினால் பீடிக்கப்பட்ட எனது பாபசூனியரான புருஷரானவர் உன்னால் பக்ஷிக்கப்பட்டாரோ! அந்தக்காரணத்தால் உனக்கு ஸ்திரீ சம்போகத்தாலே மரணமுண்டாகக் கடவதென்று அந்த ஸ்திரீயானவள் மித்திரசுகனான சவுதாசனைச் சபித்து பர்த்தாவினுடைய மோகத்தை யுடையவளாய் அந்தப் புருஷனுடைய அஸ்திகளை ஜொலியாநின்ற அக்கினியிலே போட்டுத் தானும் அநுமரணம் பண்ணி, பர்த்தாவினுடைய கதியை யடைந்தாள்.

பின்பு அந்த ராஜாவானவன் பன்னிரண்டு வருஷத்துக்குமேல் சாபத்தினின்றும் விடுபட்டவனாய் கிரகத்தில் வந்து தன் ஸ்திரீயினுடனே கிரீடைபண்ணுகிறதற்கு ஆரம்பித்துத் தனக்குப் பிராமண ஸ்திரீயினால் நேரிட்ட சாபத்தைத் தன் மனைவிக்குத் தெரிவித்து ஸ்திரீ சம்போகத்தை விலக்கினான். பின்பு வசிஷ்ட மகாரிஷியானவர் அந்த ராஜாவினால் அனுக்கிரையபண்ணப்பட்டவராய், அவனுடைய ஸ்திரீயான மதயிந்தியினிடத்தில் கர்ப்பத்தை யுண்டாக்கினார்.

அந்த மதயிந்தியும் ஏழுவருஷம் அந்தக் கர்ப்பத்தை தரித்துக்கொண்டு பிரசவியாமலே யிருந்தாள். பின்பு அவளுடைய உதிரத்தை வசிஷ்டமகாரிஷியானவர் கல்லினுல் பிரகரித்த பின்பு அவள் அந்தப்பிள்ளையைப் பெற்ருள். அந்தப் பிள்ளையானவன் கல்லினுல் பிரகரிக்கப்பட்டுப் பிறந்ததினுல் அஸ்தமகனென்று சொல்லப்பட்டு அவனிடத்தில் நின்றும் மூலகன் பிறந்தான். அந்த மூலகனுனவன் பரசுராமர் க்ஷத்திரியவதஞ் செய்யும்போது ஸ்திரீகளினுல் சூழப்பட்டு ரக்ஷிக்கப்பட்டபடியினுல் நாரிகவசனென்று பேர்பெற்ருன். அவனே ராஜவம்சத்துக்கு மூலமாகையால் மூலகனென்று பெயரையுடையவனுனுன். அவனிடத்தில் நின்றும் தசரதனும். அவனுக்கு அளபிடியும், அவனுக்கு விசுவசகனென்கிற ராஜாவும் அவனுக்குக் கட்டுவாங்க சக்கரவர்த்தியும் பிறந்தார்கள். ஒருவராலேயும் ஜயிக்கக்கூடாதவனுன அந்தக் கட்டுவாங்கச் சக்கரவர்த்தியானவன் தேவர்களினுல் பிரார்த்திக்கப்பட்டு யுத்தத்தில் தயித்தியர்களை யெல்லாம் ஜயித்தான்.

அந்த ராஜனுனவன் சந்துஷ்டர்களான தேவர்களாலே தனக்கு வேண்டியவரத்தைக்கேட்கப்பட்டு தனக்கு ஆயுள் இன்னும் எவ்வளவு காலமிருக்கிறது என்று கேட்டான், அப்போது தேவர்கள் இன்னும் ஒரு மூகூர்த்தகால மிருக்கிறதென்று சொன்னுர்கள். அதைக்கேட்டு அவர்கள் கொடுக்கப்பட்ட விமானத்திலேறிக்கொண்டு அதிவேகமாகத் தன்னுடைய பட்டணத்தை அடைந்து ஸ்ரீ பகவானிடத்தில் தனது மனதை அனுசந்தானம் செய்து ஈஸுவரனுடைய மாயையினுல் நிர்மிக்கப்பட்டதாயும் கஜதர்வபுரத்திற்குச் சமானமாயுமிருக்கிற சத்துவ-ரஜஸ்-தமோ மயமான தேகங்களிலேயுஞ் சப்தாதி விஷயங்களிலேயுஞ் சுபாவமாகவே திடமாயிராநின்ற ஆசக்தியைவிட்டு விசுவகர்த்தாவான சுவாமியினிடத்தில் ஆசக்தியினுல் அவரையே சரணமாக அடைகிறேனென்று ஸ்ரீமந் நாராயணரிடத்தில் பற்றியிராநின்ற புத்தியினுல் நிச்சயத்தை யுடையவனுக அந்தக் கட்டுவாங்கனுனவன் தேகாபிமான அக்கியானத்தைவிட்டு கியானத்தை யடைந்தவனுய் பரமாத்மாவை அடைந்தான்.

## பத்தாவது அத்தியாயம்

கட்டுவாங்கனுடைய வம்சத்திற் பிறந்த ஸ்ரீராமருடைய வைபவமும்,
இலங்கேசனான இராவணனைச் சங்கரித்து அயோத்தியை
வந்தடைந்த சரித்திரமும் சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

அச்சுதனது அடிமலர்களை அநுதினமும் பணியும் பரிக்ஷித்துவே கேட்பாயாக! கட்டுவாங்கனுக்கு தீர்க்கபாகுவும், அவனுக்கு ரகுமகாராஜாவும், அவனுக்கு மகா கீர்த்திமானான அஜனும், அவனுக்குத் தசரதனும் பிறந்தார்கள். பூமியில் அரக்கரை வென்று தேவர்களை காப்பாற்றும் பொருட்டும், தேவர்களின் வேண்டுகோளின்படி அதர்மத்தை அறவே யொழித்து தருமத்தை நிலை நாட்டவும், ஸ்ரீமந் நாராயணனே தயரதனுக்கு ஸ்ரீராமனெனும் புத்திரனாக தசரதனது முதன் மனைவியான கோசலை வயிற்றுதித்தனன். அவனது இரண்டாவது மனைவி கைகேயினது வயிற்றில் பகவானுடைய சக்கரமானது பரதனாகப் பிறந்தது. சுமித்திரையெனும் மூன்றாவது மனைவியினிடத்தில் ஆதிசேடன் இலட்சுமணனாகவும், சங்கம் சத்துருக்கனாகவும் அவதரித்தார்கள். தனது வேள்வியை அரக்கர்களது தொந்திரவிலிருந்தும் காப்பாற்றும் பொருட்டு விசுவாமித்திரர் தயரதனிடத்திலிருந்து ஸ்ரீ இராமனையும் இலட்சுமணனையும் பெற்று, ஸ்ரீ இராமரால் தாடகை முதலிய அரக்கர்களைக் கொல்லுவித்து, மாரீசனென்பவனை ஓர் அம்பால் சமுத்திரத்தில் விழுத்தி, தன்யாகத்தை நிறைவேற்றிக் கொண்டனன். பிறகு ஸ்ரீராமரின் பாதஸ்பரிசத்தால் அகலிகை கல்லுருமாறி சாபவிமோசனம் அடையப்பெற்றனள்.

பிறகு அம்மூவரும் மிதிலையடைந்து ஜனகரால் ஆதரிக்கப்பெற்று, அங்கு எவராலும் கைக்கொள்வதற்கரிய பெரும் சிவதனுசை நாணேற்றி ஒடிக்க, ஜனகர் தன் செல்வப் புதல்வி சீதையெனும் திருமகளை ஸ்ரீராமனுக்கும் மற்ற மூவரை பரதன், இலட்சுமணன், சத்துருக்கன் ஆகிய மூவருக்கும் மணம் செய்விக்கப்பெற்று, பிறகு அயோத்திக்கு மீளுங்காலையில் பரசுராமன் இராமனை எதிர்க்க, ஸ்ரீராமன் அவனது வில்லை வளைத்து அவன் செருக்கை யடக்கி அயோத்தி யடைந்தனன்.

தன்னுடும் புவியி லவதரித்த ஜானகிபிராட்டியுடன் பகவான் சில நாள் சுகித்திருக்க, தசரதன் அவருக்கு முடி

படம் நெ. 10. பக்கம் நெ. 712.



ஸ்ரீ ராம அவதாரமும், ராவண சம்ஹாரமும்.

கூட நினைத்தனன். மந்தரையெனும் கூனியொருவளால் தூண்டப்பட்டு கைகேசி தனக்கு தசரதன் முன் வாக்களித்திருந்த இரண்டு வரங்களை தற்போது பெற்று, அவைகளில் ஒரு வரத்தால் ஸ்ரீ இராமனை வனத்திற் கனுப்பவும் மற்றொரு வரத்தால் பரதனை அரசாளவும் பணித்தனள். ஸ்ரீ இராமன் பித்ருவாக்கியத்தை பரிபாலிக்கும் பொருட்டு அவரது சிறிய தாயார் பணித்தபடி வனத்திற் கெழுந்தருள, ஜானகியும் இலட்சுமணரும் பின் தொடர்ந்தனர். தசரதன் இது கேட்டு உயிர் துறந்தனன். பகவானைப் பிரிய வாற்றாது அயோத்தி நகரம் முழுதும் துக்கத்தில் மூழ்கி சீரிழிந்தது.

பிறகு வனத்தில் குகனால் போற்றப்பட்டு அவனால் கங்கையைக் கடந்து, பரத்துவாசரது ஆசிரமத்தில் ஒருநாள் கழித்து, பிறகு சித்திர கூடத்தில் வசித்து வந்தனர். பரதனும் தனது அன்னையால் நேர்ந்த தீமைகளியாவையும் உணர்ந்து அவளைக் கடிந்து, கான்புகுந்து, தன் அண்ணனை காகுத்தனைப் பணிந்து, தந்தை யிறந்த செய்தி தெரிவிக்க, இராமன் முதலிய மூவரும் ஆழ்ந்த துயரால் அகமுருகி, அவர்க்குரிய கடனை அங்கே செய்து முடித்தனர். பிறகு பரதன் தன் அண்ணனை நோக்கி அண்ணா! என் உயிர்க்குயிரே! இழிந்த குணத்தென் தாயினது உரையை ஒரு பொருள் படுத்தாது, அடிகள் மீண்டும் அயோத்தியெழுந்தருளி அடியோமை ஆட்கொள்க. பூபாரம் வகிக்கும் ஆற்றல் அடியேற்கு சிறிது மிலது'' என்றிவ்விதம் பலவாறு யிறைஞ்ச, அண்ணலும் அதற்கிசையாது 'எந்தை பணியை என் சிரங்கொண்டுடங் குறைந்தேன், தம்பீ! என் மனதிற்கினியாய்! நீயும் அப்பணியைச் சார்ந்தொழுகுதலே தகுதி'' யென்று உரைத்து அவர் வேண்டியபடி தனது பாதுகைகளைத்தர, பரதனும் அப்பாதுகைகளை தன் சிரத்திற்றரித்து நந்தி கிராமத்திற் சென்று, ஆங்கு அதை சிம்மாசனத்திலிருத்தி தான் அங்கிருந்தபடியே அரசகாரியங்களைப்பார்த்து செவ்வனே நடத்திவந்தான்.

சித்திர கூடத்திலிருந்தும் ஸ்ரீ ராகவன் முதலியோர் அத்திரி ஆசிரமமடைந்து, அதை விட்டு வரும் வழியில் விராதன் எனும் ஒரு பெரிய அசுரனைச் சங்கரித்து, சரபங்கர் முத்தியடையப் பார்த்து, அங்கிருந்து பல காததூரங் கடந்து, தண்டகாவனத்துறை முனிவர்க்கு அபயங்கூறி, அங்கு பன்னாள் கழித்து, பிறகு அகத்தியரிடம் சார்ந்து அவரால் வில்லும் அம்புகளும் கொடுத் தாசீர்வதிக்கப் பெற்று, மீண்டு போகும் வழியில் சடாயு வெனும் பறவைக்

கரசைக் கண்டு, பின் கோதாவரி நதியை நோக்கி நடந்தனர். பிறகு பஞ்சவடி யடைந்து அங்கு இலட்சுமணனால் நிருமிக்கப்பட்ட மனையில் வசித்து வந்தனர்.

இராவணனது தங்கை சூர்ப்பணகி யென்பாள் ஆங்கு சென்று, ஐயனது அரிய திருவுருக்கண்டு காமுற்று, தானும் ஒரு திவ்விய உருவம் பெற்று தன்னிலும் ஆயிரமடங்கு அதிக அழகமைந்த சீதையைக்கண்டு அவளைக் கொல்லப் புகுவதை இளையோனறிந்து, அத்தீயளது நாசிகா சேதம் செய்தான். அதுகேட்டு கரன் முதலிய அரக்கர் பெரும் படை புடை சூழ வந்து கொடும் போர் புரிய அண்ணல் ஒருவனாய் அவர்களனைவரையும் வானுலகுக் கேற்றினன். வானோர் மலர்மாரி சொரிந்து மகிழ்வெய்தினர்.

பிறகு சூர்ப்பனகையால் சீதையினது திருவுருவத்தைக் கேட்டு, இராவணன் காமங்கொண்டு அவளை அடைய தீர்மானித்து, மாரீசனை மானாக ஏவ, அம்மான் சீதை முன் துள்ளியோடி விளையாட, அதை ஜானகி தனக்கு பிடித்துத்தர இராமனை வேண்ட, இளையவன் அது மாயமான் என்ன, அதைச் செவிகொள்ளாது இறைவன் அப்புது மானைத் தொடர்ந்து அதை அப்பாலெய்ய, அது இறக்கும் பொழுது "அட இலக்குவா! சீதா!" என்றலறிபடிய, அது கேட்டு சீதை தன் நாயகர்க்கேதோ இடுக்கணுற்றது என நினைந்து "இளையவரே! இன்னே நம்பிரான்பாற் சென்று மீளுக" வென்றுரைக்க, "அன்னே! நீர் எதற்கும் அஞ்சுதல் வேண்டாம். மூவரும் முடுகினாலும் என் அண்ணலை அமரில் வெல்லுவது யாவர்க்கும் அரியாது" என்று இலக்ஷ்மணன் கூற, "ஓகோ! நின் அண்ணனைக் கொன்று என்னை யடையக் கோரினை போலும்" என்று ஜானகி இளையவனை இழித்துக்கூற, அதை செவிகொள ஆற்றாது இளையபெருமான் அண்ணன்பா லகன்றனன்.

தானினைந்தபடி சமயம் நேர்ந்ததைக் கண்டு களித்து இராவணன் சீதையைச் சிறைகொண்டு ககனமார்க்கமாய்ப் போகும்போது, சடாயு வெதிர்க்க, அதையவன் அடித்து விழுத்தி, இலங்கை சேர்ந்தான். இராமரும் இலக்ஷ்மணரும் சீதையைக் காணாதுவருந்தி வரும்வழியில் சடாயுவைக்கண்டு, அவரால் நடந்ததை யறிந்து, அப்பக்ஷி மரணமடைய, அதற்கு ஈம கருமம் செய்து முடித்தனர். ஓர் காட்டில் இளையவன் ஜலம் தேடிச்செல்ல அங்கு அயோமுகியெனு மோரசுரனது மூக்கை யறுத்தனர். கவந்தன் எனும் அரக்

கனது வனத்தில் இவர்கள் பிரவேசிக்க, அவன் இவர்களை எதிர்க்க, இராமரது ஓரம்பினால் உயிர்துறந்து தன் சாபம் நீங்கி, இயக்க உருவங்கொண்டு, சவரியிடம் இவர்களைப் போகப்பணித்து நற்கதியடைந்தான்.

ஸ்ரீ ராகவன் அடிமலர்களில் இருத்திய அன்புமிகுதியால் நல்ல கனிகளை உருசிபார்த்துச் சேகரித்து கொணர்ந்து ஸ்ரீ இராமருக்கும் இலக்ஷமணருக்கும் கொடுத்து, அவர்களதை யுண்ணத் தான் மகிழ்ந்து, மதங்கமலையிலுள்ள அநுமன் சுக்கிரீவன் முதலியோரைக் காணும்படி அவர்களை வேண்டி தான் முத்தி வீடடைந்தனள்.

அம்மலையில் வசிக்கும் சுக்கிரீவன் முதலியோர் இவ்விருவர்களையுங் கண்டு பயந்து, ஆஞ்சனேயரை யனுப்ப, அவரால் இரகுபதி சுக்கிரீவன் செய்தி யாவுமறிந்து, அவனைக்கண்டு, அவனைத் துன்புறுத்தும் துன்மார்க்கனை வாலியை வதைப்பேனென வாக்களிக்க, அவ்வளவாற்றல் ஐயர்க்குளதோ வென்றையுற்ற அவ்வானரர் முன் தன் தம்பியால் துந்துமி என்பவை எறிந்தும், தான் ஓரம்பால் ஏழுமராமரங்களைத் துளைத்தும் அவன் கொண்ட சந்தேகம் ஒழித்தனர். பிறகு சுக்ரீவனை வாலியிடம் ஏவி, அவ்விருவரும் போர் புரியும்போது, வாலியை வதைத்து, சுக்ரீவனை அரசுக்குரியவனாக்கினர். மழைகாலம் கழிக்க தாங்கள் வனத்திலிருந்தனர்.

சரற்காலம் கழிந்தும் அவ்வானரபதி வாராமையைக் கண்டு, ஸ்ரீ இராமன் வெகுண்டு, தன் தம்பியை அவனது கருத்தை யறிந்துவர ஏவ, இலக்ஷமணன் சென்றபோது சுக்கிரீவன் முதலியோர் மதுவுண்டு மதி மருண்டு கிடக்க, வாலியுயிரை யுண்டுகளித்த அம்புகள் போன்றது இன்னும் ஆயிரமுண்டு காணுமென்று இளையவன் சீற, மயக்கம் நீங்கி, இராகவரை இறைஞ்சி நின்றனன். பின்பு சுக்ரீவனது ஏவலால் வானரர்கள் பலதிக்கிலும் சீதையைத் தேடினர்.

தெற்குத்திசை சென்ற அனுமான், நீலன், சாம்பவன், அங்கதன் ஆன நால்வரும் தேடித்திரிந்து எங்கும் சீதையை காணாமல், மகேந்திர கிரியடைந்து, அங்கு அமர்ந்து "சடாயுவைப்போல நாமும் போரில் மடியாதொழிந்தோமே" என வருந்த, இதுகேட்டு சம்பாதி எனும் சடாயுவின் சகோதரன், எல்லா விஷயமும் இவர்களாலறிந்து, தனது சகோதரனது மரணத்திற்கு வருந்தி, அனுமானை இலங்கைக் கனுப்பும்படி யோசனை சொல்ல, அதன்படி ஆஞ்சனேயர் இலங்

கைபுகுந்து, அசோக வனத்து அம்மையைக்கண்டு களித்து இரகுபதியினது மோதிரத்தை அடையாளமாகக் கொடுத்து அவர்களது செய்தியாவும் உரைக்க, பிறகு அவர் இராவணன் மீது கொண்ட கோபமடங்காது அசோகவனத்தை யழிக்க, அது கேட்ட இராவணன் சைனியங்களை யனுப்ப, அவர்களை அனுமன் கொல்ல, கடைசியாக இந்திரஜித்தன் தனது பிரம பாசத்தால் மாருதியைப் பிணித்துக்கட்டி இராவணன் முன் விடுப்ப, அவன், "நீயார்? இங்கேன் வந்தாய்?" என்று வினவ, அநுமன் "உன்னையும் உன்குலத்தையும் வேரறுப் பான் வந்தருளிய வெற்றிவீரன் ஸ்ரீ இரகுராமனுக் குற்ற தோழன் யான். நீ பிழைப்பதானால் என் தாயை இன்னே எந்தையிடந் தருதி; இலையாயின் நீ ஒழிவாய்" என்ன, இம்மொழிகள் செவிகொளவாற்றாது, இராவணன் அனு மனை கொல்லப் பணிக்க, "தூதுவரைக் கொல்வது அரசர்க் காகாது" என்று இராவணனது தம்பியான விபீஷணர் தடுக்க, பிறகு மாருதியின் வாலைக்கொளுத்த, மாருதி இலங் கையைச் சுட்டு நீறாக்கி, அத்தீயால் சிறிதும் கஷ்டமுறா திருந்த அன்னையின் அடிவணங்கி, அவரது சூடாமணி யைப் பெற்று அவரடிபணிந்து மீண்டு, மகேந்திர கிரியை யடைந்து அங்குள்ள அங்கதன் முதலியோர்க்கு செய்தியாவு முரைத்து அவருடன் இராகவன் பாலடைந்தான்.

சீதாபிராட்டியாகிய அன்னையைக் கண்டது ஐயனுக் குரைப்ப, அச்சுதன் மகிழ்ந்து, கடல் கடக்க வெண்ணி சுக்ரீ வன் முதலிய வானரர்களுடன் கடல்கரை யடைய, அங்கு இராவணனை வெறுத்து விபீஷணன் இராமனைச் சரண்புக. அநுமனது யோசனையால் அவர்க்கு அபயந்தந்து, வருணனை கடலிலிடந் தரும்படிவேண்ட, அதற்கவனிசையாது நிற்க அவன்மேல் கோபித்து இராகவன் வாளியேவ, வருணன் பணிந்து இடந்தர, வானரரால் அணை கட்டி, இலங்கை புக, அங்குவந்த இராவணனது சுகசாரணரெனும் தூதுவர் மூல மாக இராகவன் இலங்கை புகுந்தமை யோர்ந்து, இராவணன் கோபுரமீதினின்று இராமனுதியரைக் காண, அவனைக்கண்டு சுக்ரீவன் இராவண னண்டையிற் பாய்ந்து, அவனது கிரீடத் தைக் கொணர்ந்து இறைவனடியிற் சமர்ப்பித்தனன். பின்பு, அங்கதன் தூதாக இராவணனிடமடைந்து புத்தி கூறியுப் உடன் படாத இராவணனைப் போர்க்கழைத்து மீள, இராம சேனைகள் இலங்கையைச் சூழ்ந்தது.

பெரும்படை புடை சூழ உக்கிர போர்க்கோலங்கொண்டு இராவணன் எதிர்க்க, அவனை வென்று ஒன்றும் உதவுவதற்

கிலாதிபடிச்செய்து, ஸ்ரீ இராமன் நேரில் இராவணனுக்கு நல்லதுரைப்ப, இராவணனும் இல்லம் திரும்பி, தன் தம்பியான கும்பகர்ணனைப்போர்க்கனுப்பினன். அவனும் போரில் மடிய, தனது புதல்வனை அதிகாயனை போர்க்கனுப்ப, அவனும் இலட்சுமணனால் மடிந்தான். பிறகு இந்திரஜித்து போர்க்களம் புகுந்து நாகபாசத்தால் தன்னை யெதிர்த்த இலட்சுமணன் முதலியோரை பிணிக்க, கருடபகவானால் நாக பாசம் அறுக்கப்பட்டது. பிறகு இந்திரஜித்தன் பிரமபாசத்தைவிட இராம சைனியம் அடங்கலும் வீழ, அனுமாது முயற்சியால் கொண்டுவரப்பட்ட சஞ்சீவி மலையால் யாவரு முயிர்க்க, இந்திரஜித்தன் மறைந்து நிகும்பலை யெனும் பெரும்யாகமியற்ற, அதை யறிந்து இலட்சுமணன் அவனைத் துரத்தி போரில் அவ்வீரனது சிரத்தை வீழ்த்தினன்.

இந்திரஜித்த னிறந்தது கேட்டு இராவணன் எல்லையிலா துன்பத்தாழ்ந்து மூலபல சைனியங்களைப் போர்க்கனுப்ப, அவர்களை ஒரு நிமிஷத்தில் இராகவன் மடிக்க, இராவணனே கடைசியாக யுத்தத்திற் கெழுந்தான். இராமச்சந்திர மூர்த்தி இந்திரனேவலால் மாவலிகொணர்ந்ததேரிலமர்ந்து, இராவணனுடன் பெரும்போர் புரிந்து இராவணனைக்கொன்றனர். தேவர்கள் மலர்மாரிபெய்து, களிப்பெய்தினர். பிறகு, விபீஷணன் மடிந்தார்க்கு நீர்க்கடன்கழிக்க, ஸ்ரீ இராமர் அவனுக்கு ஓர் கற்பகாலம் ஆயுளும் தந்து, அவனுக்கு இலங்கை யரசைக்கொடுத்து, சீதையைக் கைக்கொண்டு, புஷ்பகவிமானமூர்ந்து, அனைவரும் கிஷ்கிந்தை யடைந்து, அங்கிருந்தும் எழுந்து, பரத்துவாசர் ஆசிரமத்தில் பெரு விருந்துண்டு, அயோத்திக்கெழுந்து செலுமுன் மாருதியால் பரதன் இராகவனது செய்தியறிந்து, அவன் எல்லோரோடும் எதிர்கொள, ஸ்ரீ ராகவன் சகலவைபவங்களுடனும் அயோத்தியடைந்து, உலகம் உய்ய பட்டாபிஷேகம் கொண்டனன்.



## பதினோராவது அத்தியாயம்



*ஸ்ரீ ராமமூர்த்தியானவர் தம்பிமாரோடுகூட அயோத்தியிலே வாசம் பண்ணிக்கொண்டு யக்ஞ முதலான வர்ணாசிரம தர்மங்களை உலகசிட் சார்த்தமாகச் செய்தாரென்று சொல்லப்படுகின்றது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

இராகவனது அன்னையர் மூவரும், ஜானகி பிராட்டியும், பரதர், இலட்சுமணர் சத்துருக்கரான சகோதரர்களும்,

அனுமான் முதலியவரும் பூமியிலுள்ளார் யாவரும் 'வாழத் தாமும் மிக மகிழ்ந்து வாழ்ந்தனர். ஸ்ரீ இராமபிரான் பூமி யரசு செலுத்திவரும் நாளில் தீமையென்பன யாவும் ஒழிந் தன; உத்தம தருமங்கள் தழைத்து வளர்ந்தன; மும்மாரி பருவம் கடவாது, பெய்ய, சகலரும் இன்பமெய்தினர்; எல்லா மனிதரும், பக்ஷிகள்-மிருகங்கள் முதலிய மற்றப் பிராணி களும், புல்-பூண்டு-விருக்ஷாதிகளும் குறைவின்றி வாழ்ந்தார் கள். புகழில் பெரிய வசிட்டரால் இயற்றுதற்கரிய பல யாகங்களையும் பகவான் செய்து முடித்தார். அரக்கரை வெற்றி கொண்ட ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தியினது அரிய கதையை கேட்பவரும், அதை தியானிப்பவரும், அதைப் படிப்பதற்கு ஏற்பாடு செய்பவரும், அதை நன்கு நடத்து பவரும், தாம் கோறியதை யடைந்து வாழ்வார்கள்.

பிறகு, ஒருக்கால் ஸ்ரீ ராமரானவர் வழக்கம்போல் உல கத்தினுடைய நடத்தையை அறியவேணுமென்கிற இச் சையை யுடையவராய், இராத்திரியில் ஒருத்தருக்குந் தெரியா மல் வீதியிலே உலாவும்போது, தம்முடைய பாரியையான சீதையை உத்தேசித்து, ஒருவன் தன் மனைவியை நோக்கி "அடி துஷ்டையே! அன்னியர்களுடைய கிரகத்துக்குப் போய்வந்த உன்னை நான் சேர்த்துக் கொள்ளுகிறதில்லை. ஸ்ரீ ராமரல்லவா அயலார் கிரகத்திலே வாசம்பண்ணிய சீதையை சேர்த்துக் கொண்டார்" என்று சொன்னான். அந்த வார்த்தையைக் கேட்டு ஸ்ரீ ராமர் உடனே சீதையை காட்டில் விட, கர்ப்பிணியான ஜானகியும் வால்மீக மகாரிஷியி னுடைய ஆசிரமத்தை யடைந்து அங்கு இரட்டைப் பிள்ளை களைப் பெற்றாள்.

அப்போது வால்மீகி மகாரிஷியானவர் அந்தப் பிள்ளை களுக்கு ஜாதகர்ம முதலானவைகளைப் பண்ணி, அவர்களுக்கு குசனென்றும், லவனென்றும் நாமகரணத்தைச் செய்வித் தார், அவர்களும் பிரசித்தர்களா யிருந்தார்கள். லக்ஷ் மணருக்கு அங்கதனென்றும் சந்திரகேது வென்றும் இரண்டு பிள்ளைகளும், பரதருக்கு தக்ஷனென்றும் புஷ்கர னென்றும் இரண்டு பிள்ளைகளும், சத்துருக்கனருக்கு சுபாகு வென்றும், சுருதசேனனென்றும் இரண்டு புத்திரர்களும் பிறந்தார்கள். பரதரானவர் திக்குவிஜயத்தில் அனேககோடி கந்தர்வர்களைச் சங்கரித்து அவர்களுடைய தனத்தையெல் லாம் கொண்டுவந்து ராஜாவான ஸ்ரீ ராமருக்குச் சமர்ப்பித் தார். சத்துருக்கனரும் மதுவினுடைய புத்திரனான லவண

னென்கிற ராக்ஷசனைச் சங்கரித்து மதுவனத்தில் மதுரை யென்று ஒருபட்டணத்தை நிருமித்தார்.

ஒருநாள் குசனும் லவனும் வான்மீகமுனிவரா லியற்றப் பட்ட ஸ்ரீ இராமாயணத்தை ஸ்ரீ இராமர் சபையில் பாட, ஸ்ரீ இராமரும் அவர்களைத் தமது புத்திரர்களென்று உணர்ந்து, சீதையைமீண்டும் அடைய விச்சிக்க, ஸ்ரீசீதையை வான்மீகர் கொண்டுவந்து விடுத்து, குற்றமிலா விக்குலக் கொழுந்தை நற்றவர் நாயகமே நீ மீண்டு மடையெனச் சொல்ல, தேவியும் அச்சபையினர் முன் "நான் கற்பில் பிறழாதவளாயின் எனக்கு இப்பூமகளிடந்தருக" வென, பூமகளும் அவ்விடத்துத் தோன்றி ஓர் பொற்றகட்டில் அம் மையை ஏந்திக்கொண்டு பூமியில் மறைந்தனள். அது கண்டு நம்மிறைவன் பூமியின் மீது சீற்றங்கொள்ள, பிரமன் தோன்றி "எந்தாய்! எமதன்னை வைகுந்த மடைந்து நுமது வரவை எதிர்பார்க்கின்றனள். ஆதலின் சீற்றந்தணிக" வென்றிரைஞ்ச, ஐயன் தணிந்தனன்.

பிறகு ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தி தனது அரிய புதல் வர்களை அணைத்து மகிழ்ந்தனர். பூவுலகம் வாழ நம்புண் ணியமூர்த்தி கண்ணியமாக பதின்மூவாயிர வருஷம் செங் கோல் ஓச்சி வந்து, பின்னர் தன் அடிச்சோதிக் கெழுந் தருள நினைந்து, தன் மக்களுக்கும் தன் சகோதரர்களது மைந்தர்களுக்கும் அரசைப் பகிர்ந்து கொடுத்து விட்டு, தான் தன் தம்பியருடன் சரயூநதியிலிறங்கி, கோசல நாட்டிலுள்ள சரம்-அசரமெனும் இருவகை ஜீவராசிகளும். மேலுலகம் புகுந்து மேன்மையுறக் கடைக்கணித்து, தன் பழைய பொன் னுருவம் பூண்டு, பற்றற்றார் பற்றத் தவம்புரியும் வைகுந்தம் சார்ந்து இருந்தனர்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



ஸ்ரீ ராமபுத்திரரான குசனுடைய வம்சமானது சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! குசனுக்கு அதிதி யென்று ஒருபிள்ளையும், அவனுக்கு நிஷதனென்கிறவனும், அவனுக்கு நபனென்கிறவனும், அவனுக்குப் புண்டரீகனும், அவனுக்கு க்ஷேமதர்மாவும், அவனுக்கு தேவாணிகளும். அவனுக்கு அகினனும், அவனுக்குப் பாரியாத்திரனும்,

அவனுக்குப் பலஸ்தனும், அவனுக்கு சூரிய அம்சனை வச்சிரநாபனும், அவனுக்கு சங்கனனும், அவனுக்கு விதுர்த்தியும், அவனுக்கு இரணியநாபனும் பிறந்தார்கள். அந்த இரணியநாபனே சயமுனி மகாரிஷிக்கு சிஷியனானான். யோகாசாரியனான அந்த இரணியநாபனிடத்தில் நின்றும் கோசல புத்திரரான யாக்கியவற்கிய முனிவர் மகாசித்திகளை யுடையதாயும், இருதயத்தினுடைய சமுசயகிரந்தியைப் போக்கடியா நின்றுமிருக்கிற அத்தியாத்தும யோகத்தை அடைந்தார். அப்படிப்பட்ட இரணியநாபனுக்கு புஷியனென்று ஒரு பிள்ளையும், அவனுக்கு துருவசந்தி யென்கிறவனும், அவனுக்கு சந்தனனும் அவனுக்கு அக்கினிவர்ணனும் அவனுக்கு சிக்கிரனும், அவனுக்கு மருத்தென்கிறவனும் பிறந்தார்கள்.

அந்த மருத்தென்கிற ராஜனானவன் கலாபமென்னப்பட்ட கிராமத்திலே யிருந்துகொண்டும் யோகசித்தியை யுடையவனாய் இப்போதும் இருக்கின்றான். அந்த மருத்தானவன் கலியினுடைய முடிவில் நஷ்டமாகப்போகும் சூரிய வம்சத்தைத் திரும்பவும் உண்டாக்கப் போகிறான். அந்த மருத்துக்குப் பிரசுசுருகனும், அவனுக்குச் சந்தியும், அவனுக்கு அகமரஷணனும் அவனுக்கு மகசுவானும், அவனுக்கு விசுவசாகியனும், அவனுக்கு பிரகக்ஷபலனும் பிறந்தார்கள். அந்தப் பிரகக்ஷபலனானவன் பாரத யுத்தத்தில் உன்னுடைய பிதாவான அபிமன்னுவினால் சங்காரிக்கப்பட்டான். இட்சுவாகு வம்சத்தில் பிறந்த இவர்களெல்லாம் அக்கிரமித்துப் போனார்கள்.

இனிமேல் பிறக்கப்போகிறவர்களைச் சொல்லுகிறேன் கேள். அந்தப் பிரகக்ஷபலனுக்கு பிரகக்ஷிருதனும், அவனுக்கு உருட்சூதனும், அவனுக்கு வச்சப்பிரிதனும், அவனுக்குப் பிரிதிவியோமனும், அவனுக்குப் பானுவும், அவனுக்குத் தேவசேனாதிபதியான பானுவும், அவனுக்கு வீரனான சகதேவனும், அவனுக்குப் பிரகதஸ்வனும், அவனுக்குப் பானுமானும், அவனுக்குப் பிரிதிகாசுவனும், அவனுக்குச் சுப்பிரதிக்னும், அவனுக்கு மனுதேவனும், அவனுக்குச் சுனக்ஷத்திரனும், அவனுக்கு குருக்ஷகனும், அவனுக்கு அந்தரிக்ஷனும், அவனுக்குச் சுதபஸ்தும், அவனுக்கு அமித்திரசித்தும், அவனுக்குப் பிரகத்துவாசனும், அவனுக்குப் பொறிகசும், அவனுக்குத் தனஞ்சயனும், அவனுக்கு இரணஞ்சயனும், அவனுக்குச் சிரஞ்சயனும், அவனுக்குச் சாக்கியனும், அவனுக்குச் சுத்தோதனும், அவனுக்கு வாங்க

லனும், அவனுக்குப் பிரசேனசித்தும், அவனுக்குச் சூத்திரகனும், அவனுக்குக் குணகனும், அவனுக்கு குச்சுரதனும், அவனுக்குச் சுமித்திரனும் பிறக்கப்போகிறார்கள். இந்த ராஜாக்கள் பிரகத பலனுடைய வம்சத்தில் பிறக்கப்போகிற வர்கள். இட்சுவாகுவினது இந்த வம்சமானது அந்தச் சுமித்திரனை அந்தமாயுடையதாக நிற்கப்போகின்றது.



## பதின்மூன்றாவது அத்தியாயம்



பிரபக்கியானிகளாகிய ஜனகர் முதலியபேர்களாலுண்டான இட்சுவாகு புத்திரன் நிமியினுடைய வம்சம் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! இட்சுவாகு புத்திரனான நிமியானவன் ஒரு சத்திரயாகத்தை ஆரம்பித்தது, வசிஷ்டரை எக்கியஞ்செய்து வைக்கும்படியாக வரித்தான். அந்த வசிஷ்ட மகாரிஷியானவர் "நான் முன்னால் இந்திரனால் வரிக்கப்பட்டேன். அந்த இந்திரனுடைய யாகத்தை நிறைவேற்றி விட்டுவருகிறேன். அதுபரியந்தம் பார்த்துக் கொண்டிரு'' வென்று சொல்ல, கேட்டு, அந்த நிமியானவன் மௌனமாயிருந்தான். வசிஷ்டரும் இந்திரனுக்கு யாகத்தைச்செய்து வைத்தார். பின்பு அந்த நிமியானவன் ஆத்மக்கியானியாகையால் இந்தச் சரீரத்தை அஸ்திரமாக எண்ணிக்கொண்டு வசிஷ்டமகாரிஷி வருவதற்கு முன்னமே வேறேசில ரித்விக்குகளைக்கொண்டு சத்திரயாகத்தை ஆரம்பஞ் செய்துகொண்டிருந்தான். அப்போது வசிஷ்டர் வந்து, சிஷியனது அக்கிரமத்தைப் பார்த்து, தானே சர்வக்கியனென்றெண்ணிக்கொண்டிராநின்ற இந்த நிமியினுடைய தேகமானது விழுந்துபோகக் கடவதென்று சபித்தார். அந்த நிமியுந் தர்மநிஷ்டரான குருவைப்பார்த்து, லோபத்தினால் தர்மத்தை அறியாத உமது தேகமும் விழக்கடவதென்று பிரதிசாபங் கொடுத்தான். பின்பு ஆத்மக்கியானியான நிமி தன்னுடைய தேகத்தை விட்டுவிட்டான். அந்த வசிஷ்டரும் அந்தச் சரீரத்தைவிட்டு விட்டு, ஊர்வசியைக்கண்டமாத்திரத்தில் நழுவாநின்ற மித்திராவருணாளுடைய வீரியத்தில் கும்பத்திலே ஜனித்தார். பின்பு முனிசிரேஷ்டர்கள் அந்த நிமியினது தேகத்தைக் கந்தவஸ்துக்களில் வைத்துக்கொண்டு, சத்திரயாக முடிந்தபின்பு அந்த யாகத்துக்கு வந்திருந்த தேவர்களைப் பார்த்து சொல்லுகிறார்கள்:

வாரீர் தேவர்களே! நீங்கள் எங்களுக்குப் பிரசன்னர் களும், சமர்த்தர்களுமானீர்களேயாகில் இந்த ராஜாவினு டையதேகம் ஜீவிக்க கடவதென்று சொன்னார்கள். அந்த தேவர்களும் அதை அங்கீகரித்து அப்படியே ஆகட்டு மென்று சொல்லுகையில், அந்த நிமியானவன் பிழைத்து சொல்லுகிறான்: "ஸ்ரீ ஹரியினிடத்தில் புத்தியை யுடையவர் களான முனிவர்கள் தேகத்தினுடைய சம்பந்தத்தை இச்சி யாதவர்களாய், மோக்ஷத்திலேயே இச்சையை யுடையவர் களாய், ஸ்ரீ ஹரியினுடைய பாதார விந்தத்தையே இச்சிக் கிறார்கள். அதுபோல, எனக்கு இந்தத் தேகசம்பந்தம்வேண் டாம்'' எனும் அந்த நிமியைப் பார்த்து தேவர்கள் சொல்லு கிறார்கள்: வாராய் நிமியே! நீ தேகமில்லாதவனாய் பிராணி களுடைய நேத்திரங்களில் நிமை கொட்டுதல் விழிக்குதல் இவைகளினால் காணப்பட்டவனாய் ஆத்மக்கியானத்தை யுடையவனாய் எதேச்சையாக வாசம் பண்ணுகவென்று வரங் கொடுத்தார்கள். அப்போது அந்த ரிஷிகள் அந்த நிமியினு டைய தேகத்தைக்கடைந்தார்கள். அப்போது அந்தச் சரீரத் தில் நின்றும் ஒருபுத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரனான வன் ஜனிக்கையாலே ஜனகனென்றும், விதேகனுடைய தேகத்தில் பிறந்ததினால் வைதேகனென்றும், கடைதலினால் பிறந்ததினால் மிதிலனென்றும் பெயர்பெற்றான். யாதொரு மிதிலனே தன்பெயரால் மிதிலையென்று ஒரு பட்டணத்தை நிருமித்தான்.

அந்த ஜனகனிடத்தில் நின்றும் உதாவசுவும், அவ னுக்கு நந்திவற்கனனும், அவனுக்கு சுகேதும், அவனுக்கு தேவராதனும், அவனுக்குப் பிருகத்திருதனும், அவனுக்கு மகாவீரியனான சுதிருதியும், அவனுக்கு திருஷ்டகேதுவும், அவனுக்கு அரியசுவனும், அவனுக்கு மருவும், அவனுக்குப் பிராணிந்தகனும், அவனுக்கு கீர்த்திதானும் அவனுக்கு தேவமீடனும், அவனுக்கு விதுர்த்தனும், அவனுக்கு மகா கிருதியும், அவனுக்கு கீர்த்திராதனும், அவனுக்கு மகா ரோமனும், அவனுக்கு சுவர்ணரோமாவும், அவனுக்கு இரஸ்வரோமனும், அவனுக்குச் சிரத்துவசனும் ஜனித்தார் கள். அந்தச் சிரத்துவசனானவன் எக்கிய நிமித்தமாகப் பூமி யைக் கலப்பையினால் உழும்போது அந்தக் கலப்பையினு டைய முகத்தில் சீதை பிறந்தாள். ஆகையால் அவன் சிறத்துவசனென்று பெயர்பெற்றான். அவனுக்குச் சத்துவச னும், அவனுக்குத் தர்மத்துவசனும், அவனுக்குக் கிரு தத்துவசனென்றும் மிதத்துவசனென்றும் இரண்டு பிள்ளை

கள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே கிருதத்துவசனுக்கு கேசித்துவசனும், மிதத்துவசனுக்கு காண்டிக்கனும் ஜனித்தார்கள். கிருதத்துவசனுடைய புத்திரனுன கேசித்துவசனனவன் வேதாந்தக்கியானத்தை யுடையவனுயிருந்தான். காண்டிக்கனே கர்மகாண்டத்தினுடைய தத்துவத்தை யறிந்தவனுய் கேசித்துவசனுக்குப் பயந்து ராஜ்ஜியத்தை விட்டுப் புறப்பட்டுப் போனுன்.

அந்த கேசித்துவசனுக்குப் பானுமானும், அவனுக்கு சதத்தியுமினனும், அவனுக்கு சுசியும், அவனுக்கு சனத்துவாசனும், அவனுக்கு ஊர்த்தகேதுவும், அவனுக்கு அசனும், அவனுக்கு புருசிதும், அவனுக்கு அரிஷ்டநேமியும், அவனுக்கு கிருதாயுசும், அவனுக்கு சுபாருசுவகனும், அவனுக்கு சித்திராதனும், அவனுக்கு மிதிலாபதியான ஷேமாலியும், அவனுக்கு எமதானும், அவனுக்குச் சனுத்தியாதனும், அவனுக்கு உபகுருவும், அவனுக்கு அக்கினியினுடைய அம்சமான உபகுபதனும், அவனுக்கு சாவனனும், அவனுக்கு சுவற்சாயுசும், அவனுக்குச் சுபாஷணனும், அவனுக்கு சிரதனும், அவனுக்கு ஜயனும், அவனுக்கு விஜயனும், அவனுக்குக் குறிதனும், அவனுக்கு அனகனும், அவனுக்கு விதி அவ்வியனும், அவனுக்கு திக்கியும், அவனுக்கு விபிலாசுவனும், அவனுக்கு திறுதியும், அவனுக்கு சிதேந்திரியனும் மகானுயுமிருக்கிற கிறுதியும் ஜனித்தார்கள். மிதிலனுடைய வம்சத்தில் பிறவாநின்ற இந்த ராஜாக்கள் வேதாந்தக்கியானிகளாயும் யோகீஸ்வரர்களான ரிஷிகளுடைய பிரசாதத்தினுல் கிரகாசிரமங்களிலே யிருந்தாலும் சிதோஷ்ணுதி தொந்ததுக்க மில்லாதவர்களா யிருந்தார்கள்.



## பதினுன்காவது அத்தியாயம்



*புரூரவசுவானவன் ஊர்வசியினிடத்தில் ஆயிசு முதலான ஆறுபிள்ளைகளைப் பெற்றுனென்று சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

அபசே! இனி ஜகத்பாவனமான புரூரவசு முதலான ராஜாக்களின் சந்திர வமிசத்தைச் சொல்லுகிறேன் கேள். சகஸ்திர சிரசோடு கூடின மகா புருஷனுன பகவானுடைய நாபிக் கமலத்தில் பிறந்த பிரமதேவனுக்கு குணங்களினுற் சமானமானவனுன அத்திரியெனும் ஒரு புத்திரன் பிறந்

தான். அந்த அத்திரிமகாரிஷியினுடைய நேத்திரத்திலுண்டான ஆனந்த பாஷ்பங்களில் நின்றும் அமிர்தபயனுன சந்திரன் பிறந்தான். அந்தச் சந்திரனுனவன் பிரமதேவனுல் பிராமணர்கள் ஓஷதிகள் நக்ஷத்திரங்கள் இவைகளுக்கு ராஜாவாக நியமிக்கப்பட்டு மூன்றுலோகத்தையும் ஜயித்து இராஜசூய யாகத்தைப் பண்ணினுன். அந்தக் கர்மத்தினுல் தாரையென்று பெயரையுடையவளான பிரகஸ்பதியினுடைய பத்தினியை பலாத்காரத்தினுல் அபகரிக்க, தேவாசுரர்களிருவருக்கும் யுத்த மூண்டாயிற்று. அந்த தேவாசுர யுத்தத்தில் சுக்கிரனுனவர் பிரகஸ்பதியினிடத்தில் துவேஷத்தினுல் அசுரர்களோடுகூட சந்திரனைத் தன்னுடைய பக்ஷமாகக் கிரகித்துக் கொண்டார். ருத்திரனும் பூதகணங்களோடு கூடினவனுய் தனக்கு வித்தியாகுருவான அங்கீரசுவினுடைய புத்திரரான பிரகஸ்பதியை குருபுத்திரனென்கிற ஸ்நேகத்தினுல் தன்னுடைய பக்ஷமாகக் கிரகித்தார். சமஸ்தமான தேவகணங்களோடுங் கூடினவனுய் கேந்திரனுனவன் குருவான பிரகஸ்பதியை அனுவர்த்தித்தான். அப்போது தாரை நிமித்தமாக தேவாசுரர்களுக்கெல்லாம் நாசகரமான யுத்தம் உண்டாயிற்று.

பிற்பாடு அங்கீரசுவினுல் விக்கியாபனம் பண்ணப்பட்டவனுய், பிரமதேவனுனவன் சந்திரனை கோபித்து நிந்தித்து தாரையை அவளது பர்த்தாவான பிரகஸ்பதிக்குக் கொடுத்தார். அப்போது பிரகஸ்பதியும் தன்னுடைய பாரியை கர்ப்பிணியாக அறிந்து சொல்லுகின்ருன்: துற்புத்தியே! என்னுடைய க்ஷேத்திரத்தில் அன்னியர்களால் உண்டாக்கப்பட்ட கர்ப்பத்தை சீக்கிரமாக விட்டுவிடு. பர்த்தா வார்த்தையைக் கேட்டு, சுவர்ணசாயலான ஒரு பிள்ளையைப் பெற்ருள். பிறந்த அப்பிள்ளையினிடத்தில் பிரகஸ்பதியும், சந்திரனும் இச்சைப்பட்டார்கள். பிற்பாடு என்னுடைய பிள்ளை உன்னுடைய பிள்ளை யென்று இந்தப்பிரகாரம் அந்தப்பிள்ளை விஷயத்திலே பிரகஸ்பதி சந்திரன் இவர்களிருவரும் விவாதப்படுகையில் சமஸ்தமான தேவர்கள் ரிஷிகளும் அந்தத் தாரையை இவன் யாருக்குப் பிறந்தவனென்று கேட்டார்கள். அந்தத் தாரையானவளும், லச்சையை யுடையவளாய் ஒரு உத்தரமும் சொல்லாமலே யிருந்தாள். அந்தக் குமாரனுனவன் மிகவுங் கோபத்தை யடைந்தவனுய் தாயாரைப்பார்த்து சொல்லுகிருன்:

துஷ்டையே! இந்த அபத்தமான லச்சையினுல் ஒன்றுஞ் சொல்லாம லிருக்கிருய். சீக்கிரமாக உன்னுடைய தப்பு

நடத்தையைச் சொல்லக் கடவாயென்று கேட்கும்போதும் மௌனமா யிருந்தாள். அப்போது பிரமதேவனானவர் தாரையை ஏகாந்தத்தில் அழைத்துக்கொண்டுவந்து நல்ல வார்த்தையினால் சமாதானம் பண்ணி, இவன் யாருக்குப்பிறந்தவனென்று கேட்டார். அப்போது அப்புத்திரன் சந்திரனுக்குப் பிறந்தவனென்று மெதுவாகச் சொல்ல, சந்திரனும் அந்தப் புத்திரனைக் கிரகித்துக்கொண்டான். அந்தப் பிள்ளைக்கு பிரமதேவன் புதனென்று நாமகரணம் பண்ணினான். அந்தப் பிள்ளையினாலேயும் அதிதினுடைய கம்பீரமான புத்தியினாலேயும், நக்ஷத்திரபதியான சந்திரனானவன் சந்தோஷத்தை அடைந்தான். அந்தப் புதனுக்கு இளையென்கிற ஸ்திரீயினிடத்திலே புரூரவசு வுண்டானான்.

நாரத மகாரிஷியினால் கானம் பண்ணப்படாநின்ற அந்தப் புரூரவசுவினுடைய குணம்-ரூபம்-ஔதாரியம்-சீலம்-தனம்-பராக்கிரமம் இவைகளையெல்லாங் கேட்டு, ஊர்வசியானவள் மன்மதபாணத்தினால் பீடிக்கப்பட்டவளாய் அவனுடைய சமீபத்தை அடைந்தாள். அந்தப் புரூரவசுவென்கிற ராஜாவும் ஊர்வசியைப்பார்த்து சந்தோஷத்தினால் வாராய் உத்தமஸ்திரீயே! நீ இவ்விடத்தில் தானே என்னுடனேகூட இரமித்துக்கொண்டிருக்க கடவாயென, ஊர்வசி சுந்தர புருஷனே! உன்னிடத்தில் வைக்கப்பட்ட இந்த இரண்டு ஆடுகளையும் நீ இரக்ஷிக்கக் கடவாய். நானுன்னுடனேகூட இரமித்துக்கொண்டிருக்கிறேன். எனக்கு நெய்யானது பக்ஷணமாகும். உன்னை நான் சம்போககாலந்தவிர இதர காலத்தில் நிர்வாணமாகப் பார்க்கிறதில்லையென்று சொல்ல, அந்த ராஜாவும் அப்படியே யாகட்டுமென்று அவள் பிரதிக்கினையை அங்கீகரித்து, இந்த ரூபத்துக்கும் பிரீதிக்கும் என்ன சொல்லப்போகிறேன், எவன்தான் தானே வாராநின்ற தேவமாதாவான உன்னை யடையாமற் போவனென்று சொல்லி, புருஷ சிரேஷ்டனான அந்த ராஜாவானவன் சந்தோஷித்து அந்த ஊர்வசியோடு தேவர்களுக்கு விசாரஸ்தானமான சயித்திராத முதலான உத்தியான வனங்களிலே இஷ்டப்பிரகாரம் இரமித்துக் கொண்டிருந்தான்.

பின்பு ஒருக்கால் தேவலோகத்தில் இந்திரனானவன் "ஊர்வசி யில்லாமல் நம்முடைய சமஸ்தானஞ் சோபிக்கவில்லை" யென்று அந்த ஊர்வசியை யழைத்துக்கொண்டு வருவதற்குச் சில கந்தர்வர்களை அனுப்பினான். அந்தக் கந்தர்வர்களும் அந்த இராத்திரியில் மகா அந்தகாரத்திலே வந்து ராஜாவினிடத்தில் வைக்கப்பட்டிருந்த ஊர்வசியி

னது இரண்டு ஆடுகளையும் மாயையினால் அபகரித்துக் கொண்டு போனார்கள். அப்போது அந்தக் கந்தர்வர்களால் அபகரிக்கப்பட்ட தனக்குப் புத்திரர்கள் போலிருக்கின்ற இரண்டு ஆட்டுக் கடாக்களுடைய கூச்சலைக் கேட்டு ஊர்வசியானவள் சொல்லுகின்றாள்: மகா வீரனென்றெண்ணிக் கொண்டும் நபுஞ்சகனாகவுமிருக்கிற அப்பிரயோசகனான இந்த நரனால் நான் கெட்டுப் போகின்றேன். சோரர்களால் இரண்டு பிள்ளைகளை யொத்த ஆடுகள் அபகரிக்கப்பட்டன. ராஜனானவன் ஸ்திரீயைப்போல சோரர்களுக்குப் பயந்து படுத்துக் கொண்டிருப்பது தகுமோ? இவன் புருஷனேயன்று. எனது சரீரத்தை அணைத்துக் கொண்டிரா நின்ற நீ உனது கைகளை வாங்கு, என்னை விட்டுவிடு என அவளது சிநேகத்தைவிட மனமில்லாமல் மிகவும் பயந்தவனாய் அந்தப் புரூரவசுவானவன், அர்த்த ராத்திரியில் கோபத்துடனே கத்தியை யுருவிக்கொண்டு வஸ்திரமில்லாதவனாய் அந்தச் சோரர்களான கந்தர்வர்களைத் துரத்திக்கொண்டு போனான். அந்தக் கந்தர்வர்களும் அப்போது அவ்விடத்தில் இரண்டு ஆடுகளையும் விட்டுவிட்டு மின்னலைப் பிரகாசிப்பித்தார்கள். அப்போது அந்த இரண்டு ஆடுகளையும் கிரகித்துக்கொண்டு வரா நின்றும் வஸ்திர வீனனாயு மிருக்கிற அந்த ராஜாவைப் பார்த்து ஊர்வசியானவள் முன் பண்ணின நிபந்தனைக்குப் பங்கம் வந்ததினால் தேவலோகத்தை யடைந்தாள். புரூரவசுவும் படுக்கையில் தனது பாரியையான ஊர்வசியைக் காணாமல் மகா விசனத்தை யடைந்து, அவளையே நினைந்து நினைந்து வருந்தி உன்மத்தனைப்போல் பூமியெங்குந் திரிந்து கொண்டிருந்தான்.

அவன் ஒரு நாள் குருக்ஷேத்திரத்தில் சரஸ்வதி நதி தீரத்தில் அந்த ஊர்வசியையும் அவளது சகிகளையுங் கண்டு, மலர்ந்த முகத்தை யுடையவனாய் அவளைப் பார்த்து மதுரமாக அடி என் உயிர்க்குயிரானவளே! பயங்கரமான இவ்விடத்தில் நீ என்னை விட்டு விடுகிறது தர்மமல்ல. உன்னிமித்தமாக எனது ஆத்மாவை விட்டு விடுகிறேனென்று சொல்ல, அவனைப் பார்த்து ஊர்வசியானவள் சொல்லுகிறாள்: ராஜாவே! ஸ்திரீகளுடைய சிநேகமானது ஒரு புருஷனிடத்திலேயும் ஸ்திரமாயிராதென்பது உமக்குத் தெரியாதா? உலகத்தில் ஸ்திரீகள் தயையில்லாதவர்களாயும், குரூரர்களாயும், பொறுமையோடு கூடினவர்களாயும், தனக்கு வேண்டிய விஷயத்தில் காதலையே பிரியமாக உடையவர்களாயு மிருப்பார்கள். அற்ப காரியத்தைக் காரணமாகக்

கொண்டும் அன்பு மிகுந்த பர்த்தாவையுங் கொன்று போடுவார்கள். நவீனரா யிருக்கிற புருஷர்களிடங்களிலே பொய்யான நம்பிக்கையை உண்டாக்கி உண்மையில் சிநேகமில்லாதவர்களாகவே யிருப்பார்கள். புதிய புருஷனையே கோறி விபசாரிகளாய் தன் மனதுக்கு இஷ்டமானபடிக்கே நடந்து கொண்டு மிருப்பார்கள். நீ இப்போது வருந்துவதால் பயன் சிறிதுமில்லை. நீ சம்வச்சராந்தரத்தில் ஒரு ராத்திரி என்னோடு வாசஞ் செய்யப் போகிறாய். சிரேஷ்டமான பிள்ளைகளும் நமக்கு உண்டாகப் போகிறார்களென, இவள் கர்ப்பிணியென்று எண்ணிக்கொண்டு ராஜாவும் தன் பட்டணத்தை அடைந்தான்.

பின்பு அந்த ராஜன் வருஷ முடிவில் சரஸ்வதி நதி தீரத்துக்கு வந்து, வீரனுக்குத் தாயாரான அந்த ஊர்வசியை யடைந்து, சந்தோஷத்துடனே ஒரு இராத்திரி அவளோடு இரமித்துக்கொண்டிருந்தான். பின்பு தன்னை விட்டுப் பிரிய மாட்டாமலிருக்கிற அந்த ராஜாவைப்பார்த்து ஊர்வசியானவள் சொல்லுகிறாள்: வாராய் ராஜாவே! நீ கந்தர்வர்களை ஸ்தோத்திரஞ் செய்தால் அவர்கள் என்னை உனக்குக் கொடுத்து விடுவார்கள் எனும் அவள் வார்த்தையைக்கேட்டு, அரசனும் அந்தக் கந்தர்வர்களைப் பூசித்து ஸ்தோத்திரஞ் செய்தான். அவர்களும் சந்துஷ்டர்களாய் அந்த ராஜாவுக்கு ஒரு அக்கினி ஸ்தாலியைக் கொடுத்தார்கள். அப்போது அந்த அக்கினிஸ்தாலியைக் ஊர்வசியா எண்ணிக் கொண்டு வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். பின்பு அந்த ஸ்தாலியை ஊர்வசி யல்லவென் றறிந்துகொண்டு காட்டிலே வைத்துவிட்டு கிரகத்திலே வந்து அவளையே இராத்திரியில் தியானஞ் செய்துகொண்டிராநின்ற அந்த ராஜாவினுடைய மனதில் கர்மங்களுக்குப் போதகமாய் மூன்று வேதங்கள் தோன்றிற்று. பின்பு அந்த ராஜனானவன் அந்த ஸ்தாலியை வைத்தவிடத்திற்குப்போய் அதைக் காணாமல் அவ்விடத்தில் வன்னிமரத்திலே யுண்டான ஒரு அசுவத்த விருக்ஷத்தைப் பார்த்து, அந்த அசுவத்த விருக்ஷத்தினால் இரண்டு அரணிகளைச் செய்து கொண்டு அதிலே ஊர்வசி சாலோக்கியத்தைக்கோறி அக்கினியைக் கடைந்தான்.

மந்திரத்தினால் கீழ் அரணியை ஊர்வசியாகவும் மேல் அரணியைத் தானாகவும் இரண்டு அரணிகளுக்கும் நடுவேயிருக்கிற காஷ்டத்தை அக்கினியைப் பிறப்பிக்கிறதாகவும் பாவனை செய்துகொண்டு கடைந்தான். அப்போது கடைந்த

அரணியில் நின்றும் அக்கினி யுண்டாயிற்று. அந்த அக்கினியானது வேத மந்திரங்களினால் சமஸ்காரஞ் செய்யப்பட்டதாய், காருகபத்தியம் ஆகவனீயம் தக்ஷிணாக்கினியெனும் ரூபத்தை யுடையதாய் அந்த ராஜாவான புரூரவசுவினால் புத்திரனாகக் கற்பிக்கப்பட்டது. அப்போது ராஜாவானவன் அந்த அக்கினியினால் யக்கியபலத்தைக் கொடுக்கிறவராயும், பகவானாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியைக் குறித்து ஊர்வசி சாலோக்கியத்தைக் கோறினவனாய் ஏசித்தான். கிருத யுகத்தில் சமஸ்த வாக்குகளுக்கும் பீச பூதமான பிரணவம் ஒன்றே வேதமாயும், நாராயணரொருவரே தெய்வமாயும், ஒரே அக்கினியாயும், அசமென்னப்பட்ட ஒரே வர்ணமாயு மிருந்தது. வாராய் பரிக்ஷித்தே! திரேதாயுக ஆதியில் புரூரவசுவினால் அக்கினியானது மூன்று ரூபமாகவும், வேதமும் மூன்று ரூபமாகவும் உண்டாயிற்று. அந்தப் புரூரவசு ராஜனும் அந்த அக்கினியாகிற புத்திரனால் கந்தர்வ லோகத்தை யடைந்தான்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*காசிராஜாவின் பேரனுடைய பிள்ளையான பரசுராமரானவர் கோபத்தினால் கார்த்த வீரியார்ச்சுனனைச் சங்கரித்த அப்படிப்பட்ட காசி ராஜனானவன் புரூரவசுவினது புத்திர வம்சத்தினாலே யுண்டானானென்று சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! இளாபுத்திரனான புரூரவசுவுக்கு ஊர்வசியினது கர்ப்பத்தில் நின்றும், ஆயுசுவென்றும், சுறுதாயுசு வென்றும், சத்தியாயுசு வென்றும், ரேயனென்றும், விசயனென்றும், சயனென்றும் ஆறு பிள்ளைகளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே சுறுதாயுசுவுக்கு வசுமானும், சத்தியாயுசுக்கு தனஞ்சயனும், ரேயனுக்கு தூறுதனும் ஏகனும், சயனுக்கு மிதனும், விசயனுக்கு பீமனும், புத்திரர்களா யுண்டானார்கள். பின்பு பீமனுக்குக் காஞ்சனனும், அவனுக்கு ஒதுறகனும், அவனுக்கு சனனுவும் பிறந்தார்கள். அந்த சனனுவே கங்கையை ஒருவாய் தீர்த்தமாகப் பானம் பண்ணினவன். அந்த சனனுவுக்குச் சுவயஞ்சயனென்று ஒரு பிள்ளையும், அவனுக்குப் பாலகனும், அவனுக்கு அசகனும், அவனுக்குக் குசனும், அவனுக்குச் சாம்மன் தூர்த்தயன் வசுகுசனாபன் எனும் நாலு பிள்ளைகள்

பிறந்தார்கள். குசாம்பனுக்குக் காதியுண்டானன். அந்தக் காதிக்குச் சத்தியவதி யென்று ஒரு பெண் பிறந்தது. அந்தப் பெண்ணை ரிசிகனென்கிற பிராமணன் வந்து யாசித்தான். அப்போது அந்தக் காதி ராஜனானவன் அந்தப் பிராமணனைப் பெண்ணுக்குச் சமானமானவ னல்லவென்றெண்ணி பிருகு புத்திரரான அந்த ரிசிகரைக் குறித்து சொல்லுகிறான் :

வாரீர் ரிசிகரே! குசிதனுடைய வம்சத்திலே பிறந்த இந்தப் பெண்ணுக்கு ஒரு காது பச்சை வர்ணமாயும் மற்ற அங்கங்களெல்லாம் சந்திரனைப்போல வெளுத்த காந்தியினை யுடையவைகளான ஆயிரங் குதிரைகளைக் கன்னியா திரவியமாகக் கொடுத்தால் பெண்ணைத் தருகிறேனென்று சொல்ல, ரிசிகரானவர் வருணனண்டைக்குப் போய் அவனிடத்தில் நின்றும் அப்படிப்பட்ட அசுவங்கள் ஆயிரங்கொண்டுவந்து காதி ராஜனுக்குக் கொடுத்து, அவன் பெண்ணான சத்தியவதியை விவாகம் பண்ணிக்கொண்டார். பிற்பாடு ஒருக்கால் அந்த ரிசிக ரிஷியானவர் பாரியையான சத்தியவதியாலும் அவளுக்குத் தாயாராலும், புத்திரார்த்தமாக யாசிக்கப்பட்டவராய், பிராமண மந்திரங்களினால் தன்னுடைய ஸ்திரீக்கும் க்ஷத்திரிய மந்திரங்களினால் மாமியாருக்கும் இரண்டு அவிசுகளைப் பாகம் பண்ணி வைத்துவிட்டு ஸ்நானம் பண்ணப் போனார். அப்போது அந்தச் சத்தியவதியானவள் தனக்குப் பண்ணி யிருக்கிற அவிசைத் தயாருக்குக்கொடுத்து அவளுக்காகச் சமைத்த சருவைத் தான் பக்ஷித்தாள். பின்பு அந்த ரிஷியானவர் வந்து அந்தச் சருவித்தியாசப் பட்டதை யறிந்து தம்முடைய பாரியைப் பார்த்து சொல்லுகிறார்: அடி நாயகி! நீ விபரீத காரியத்தைச் செய்தாய், ஆகையால் உன்னுடைய புத்திரன் தண்ட நாயகனாகவும் மகா குரூரனாகவும், உன்னுடைய பிராதா பிரமக் கியானியாகவும் பிறக்கப்போகிறார்களென்று அனுக்கிரகித்தார்.

பிற்பாடு அந்த ரிசிகருக்கு சமதக்கினி பிறந்தார். அந்தச் சத்தியவதியும் உலகத்தைப் பாவனம் பண்ணுநின்ற மகா புண்ணியமான கவுசிகை நதியானாள். அந்த சமதக்கினியானவர் ரேணுவினுடைய பெண்ணான ரேணுகையை விவாகம் பண்ணிக்கொண்டு அவளிடத்தில் வசுமனன் முதலான பிள்ளைகளைப்பெற்றார். அந்தப் பிள்ளைகளுக்குள்ளே எல்லாருக்குங் கனிஷ்டனாய் ராமரென்று பிரசித்தராய் ஒருவருண்டானார். அந்த ராமனையே வாசுதேவர் அம்சமாகச் சொல்லுகிறார்கள். அவரே ஹேஹயகுலத்தை நாசம்

பண்ணினவர். அவரோ இருபத்தொரு தரம் இந்தப் பூமியை ராஜ சூனியமாகப் பண்ணினவர். அந்த ராமன் சொற்ப மான அபராத நிமித்தத்திலேயே பிராமண விரோதியாயும், ராஜச-தாமசமான சரீரத்தை யுடையதாயுமிருக்கிற க்ஷத்திரிய வமிசத்தை நாசம் பண்ணினவர். என்று சொல்லுகின்ற சுகப் பிரமரிஷியைப் பார்த்து பரிக்ஷித்து மகாராஜன் சொல்லுகின்றார் :

### பரிக்ஷித்து வாக்கியம்

வாரீர் பிரம நிஷ்டரே! பகவானுன பரசுராமருக்கு ராஜர்கள் என்ன அபராதம் பண்ணினார்கள்? எதனால் அந்தப் பரசுராமரானவர் ராஜகுலத்தை வேரோடு களைய நினைந்தார்? அதை எனக்குச் சொல்லவேணுமென்று கேட்கின்ற பரிக்ஷித்து மகாராஜனைப் பார்த்து சுகப்பிரம ரிஷியா னவர் சொல்லுகின்றார் :

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! ஹேயகுலத்துக்கு அதிபதி யாயும் புருஷ சிரேஷ்டனுயுமிருக்கிற கார்த்த வீரியார்ச் சுனன் நாராயண அம்சரான தத்தாத்திரய பகவானை அனேக சிசுருஷையினல் உபசரித்து அவராலே ஆயிரங் கையையும், சத்துருக்களால் ஜயிக்கக் கூடாமலிருக்கையும், க்ஷயமில்லாத இந்திரிய பலத்தையும், அணிமாதி அஷ்ட ஐஸ்வரியத்தையும் பெற்று, உலகங்களில் ஒருவராலும் பய மில்லாமல் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அந்தக் கார்த்த வீரியார்ச்சுனன் ஒருக்கால் அனேக ஸ்திரீகளால் சூழப்பட்ட வனுய் நர்மதாநதி சலத்தில் கிரீடித்துக்கொண்டு, அந்த நர்மதா நதியினுடைய பிரவாகத்தைத் தன்னுடைய கைகளி னல் கட்டினன். அப்போது இராவணனுனவன் திக்கு விஜயம் பண்ணிக்கொண்டு வரும்போது மாகிஷமதி பட்ட ணத்திற்குச் சமீபத்தில் நர்மதா நதியில் ஸ்நானம் பண்ணி தேவபூசை பண்ணிக்கொண்டிருக்க, கார்த்த வீரியார்ச்சுனனது கைகளினல் தடுக்கப்பட்ட ஜலம் திரண்டு போய், தன்னுடைய பூசாதிரவியங்களையும் சேனையையும் முழுகப்பண்ணினதைப் பார்த்து சகியாதவனுகி யுத்தம் செய் தான். அப்போது கார்த்த வீரியார்ச்சுனன் தன்னுடைய ஸ்திரீகள் பார்த்துக்கொண்டிருக்க விளையாட்டாக அந்த இராவணனைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு மாகிஷமதி பட்ட ணத்தில் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் கட்டிவைத்துப் பின்பு குரங்கைப்போல விட்டுத் துரத்தி விட்டான்.

அந்தக் கார்த்தவீரியார்ச்சுனன் பின் ஒருநாள் ஜனசஞ்சாரமில்லாத வனத்தில் வேட்டையாடி பிறகு ஜமதக்கினி மகாரிஷியினுடைய ஆசிரமத்தில் பிரவேசித்தான். அந்த ரிஷியானவர் மந்திரிகள் யானை குதிரை முதலான சேனைகளுடன் வந்த அந்த ராஜாவுக்குத் தம்முடைய காமதேனுவினால் பூர்ணமாக ஆதித்தியம் பண்ணிவைத்தார். அந்த அரசனும் தன் ஐஸ்வரியத்துக்கு மிஞ்சின அவருடைய பிரபாவத்தைக்கண்டு, சந்தோஷியாமல் அந்த காமதேனுவினிடத்தில் ஆசையை யுடையவனாய் அந்தக் காமதேனுவை கர்வத்தினால் பிடித்துக்கொண்டு வரும்படி மனுஷியர்களை ஏவினான். அவர்களும் அந்தப் பசுவை பலாத்காரமாக மாகிஷமதி பட்டணத்தில் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள்.

இராஜாவும் ஆஸிரமத்தை விட்டுப்போன பிறகு வெளியிலே யிருந்துவந்த பாசுராமர் அந்த ராஜாவினுடைய துர்நடத்தையைக்கேட்டு மிகவுங் கோபத்தை அடைந்தவராய், மகா பயங்கரமான தனது கோடாலியையும், தனுசையும், கவசத்தையும் எடுத்துத் தூக்கிக்கொண்டு போனார். அப்படி தூக்கிக்கொண்டு வரும் பாசுராமரை ராஜா பார்த்து ரத-கஜ-துரக-பதாதிகளோடு கூடின பதினேழு அக்ரோணி சேனைகளை ஏவினான். அந்தப் பதினேழு அக்ரோணி சேனைகளையும் பகவானான பரசுராமர் ஒருவரே சம்மாரம் பண்ணினார். அப்போது பாசுராமரால் அதமாய்போன தன்னுடைய எழு அக்ரோணி சேனைகளையும்பார்த்து, ஹேயராஜன் ரோஷத்தினால் பரசுராமர்பேரில் எதிர்த்து ஐந்துநூறு விற்களில் ஏககாலத்தில் பாணங்களைப் பிரயோகம் பண்ணினான். பரசுராமரும் அந்த தனுசுக்களை யெல்லாம் ஏககாலத்தில் பாணங்களினால் அறுத்துவிட்டு, அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனுடைய சிரசையும் தன்னுடைய கோடாலியினால் சேதித்துவிட்டார். அப்போது அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனுடைய புத்திரர்கள் பதினாயிரம்பேரும் பயத்தினால் ஓடிப்போய் விட்டார்கள்.

பிற்பாடு பாசுராமர் கன்றோடு கூடிக்கொண்டிராநின்ற அக்கினிஹோத்திர காமதேனுவைக் கிரகித்துக்கொண்டு தம்முடைய ஆசிரமத்தை அடைந்து, அந்தக் காமதேனுவை மாதா பிதாக்களுக்குக் கொடுத்துத் தம்மாலே செய்யப்பட்ட யுத்தத்தையும் அவர்களுக்குச் சொன்னார். அதைக் கேட்டு ஜமதக்கினியானவர் புத்திரனைப் பார்த்து "பாசுராமா! நீ சர்வதேசசொரூபியான ராஜாவை வியர்த்தமாகக் கொன்றமையால் நீ மகாபாபத்தைப் பண்ணினாய். குழந்தாய்! நாம்

பிராமணர்களல்லவா? பொறுமையினால் சகல ஜனங்களா லேயும் பூசிக்கப்படுகின்றோம். உலககுருவான பிரமாவும் பொறுமையினால் உத்தம ஸ்தானத்தை அடைந்தாரல்லவா? பொறுமையை யுடையவர்களுக்கு பகவானான ஸ்ரீ ஹரி சீக்கிர மாகச் சந்தோஷிப்பர். அகண்ட மண்டலாதிபதியான ராஜா வினுடைய வதமானது பிராமண வதத்தைப் பார்க்கிலும் பெரிது. ஆகையால் குழந்தாய்! நீ அச்சுதனிடத்தில் மனதை யுடையவனாய் புண்ணிய தீர்த்த யாத்திரையினால் அந்தப் பாபத்தைப் போக்கடித்துக் கொள்ளென பிதாவான ஜமதக்கினி சொல்லினர்:



## பதினாறுவது அத்தியாயம்

ஜமதக்கினியை கார்த்தவீரியார்ச்சுனனது புத்திரர்கள் வதைசெய்ததும், பரசுராமர் அரசர்களை வதைத்ததும், விசுவாமித்திர வம்சமும் சொல்லப்படுகின்றது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்துவே! அந்தப் பரசுராமர் இவ்விதம் தம் பிதாவினால் சிக்ஷிக்கப்பட்டு ஒரு வருஷகாலம் தீர்த்த யாத்திரை பண்ணி ஆசிரமத்தை யடைந்தார். பிறகு ஒரு கால் ரேணுகாதேவி தண்ணீர் கொண்டுவருவதற்காக கங்கை யையடைய, அக்கங்கையில் அப்சரசுக்களோடு கூடி கிரீடித் துக்கொண்டும் பத்மமாலையை யுடையவனுயுமிருக்கிற ஒரு கந்தர்வ ராஜனைக் கண்டு அவனிடத்தில் ஆசையை யுடைய வளாய், ஓமகாலத்தை மறந்து, அவள் காலங்கடந்து பயந்து ஆஸிரமத்திலேவந்து கலசத்தை ரிஷிமுன்னே வைத்து அஞ்சலிபந்தனம் பண்ணிக்கொண்டு நின்றாள். அப்போது ஜமதக்கினி ரிஷியானவர் தன் நாயகியினுடைய விபசாரத்தை யறிந்து மிகவுங் கோபத்தை யடைந்தவராய் புத்திரர்களைப் பார்த்து பாபியான இவளைக் கொன்றுபோடுங்களென்று சொன்னார். புத்திரர்கள் தம் பிதாவினது உத்திரவின்படி தாயைக் கொலைசெய்ய வஞ்சினர். பின்பு பரசுராமரானவர் பிதாவினால் மாதாவையும் சகோதரர்களையும் கொன்றுபோட ஆக்கியாபிக்கப்பட்டவராய், அந்த முனியினது தபசு சமாதி இவைகளுடைய பிரபாவத்தை மிகவும் அறிந்தவராய் மாதா வோடு கூட பிராதாக்களையுங் கொன்றுபோட்டார். அப் போது சத்தியவதி புத்திரரான ஜமதக்கினி ரிஷியானவர் சந்துஷ்டராய், உனக்கு வேண்டிய வரத்தைக் கேளென்று

சொன்னார். பரசுராமர் கொல்லப்பட்ட தனது சகோதரர்களும் தாயாரும் பிராணனோடு எழுந்திருக்கவும் அவர்கள் வதைக்கப்பட்டது அவர்களுக்குத் தெரியாமலிருக்கவும் கேட்டார். அப்படியே அந்த ரிஷியினுடைய அனுக்கிரகத்தினால் கொல்லப்பட்டவர்கள் நித்திரை தெளிந்தெழுந்தவர்கள்போல் சீக்கிரமாக எழுந்திருந்தார்கள்.

அந்தப் பரசுராமரானவர் பிதாவினுடைய தபோ வீரியத்தை யறிந்து தானும் தன் சகோதரர்களுடன் தவம் பண்ணினார். கார்த்த வீரியார்ச்சுனனுடைய பிள்ளைகளும் தன் பிதாவினுடைய வதத்தை ஸ்மரித்துக்கொண்டு, பரசுராமருடைய வீரியத்தினால் திரஸ்கரிக்கப்பட்டவர்களாய் ஓரிடத்திலும் சுகத்தை யடையாமற் போனார்கள். பிறகு ஒரு நாள் பரசுராமர் ஆஸிரமத்தில் நின்றும் பிராதாக்களோடு வனத்தை யடைந்திருக்கையில், கார்த்தவீரியார்ச்சுனனுடைய புத்திரர்கள் வைரத்தை தீர்த்துக் கொள்ளவேணுமென்று இச்சையையுடையவர்களாய் ஆஸிரமத்திலே வந்து, அக்கினி ஹோத்திரத்தில் இராநின்றும் உத்தமஸ்லோகரான பகவானிடத்தில் புத்தியை யிருத்தியுமிருந்த அந்த ஜமதக்கினி ரிஷியைக் கொன்றுவிட்டார்கள். அப்போது ரேணுகையும், துக்கசோகங்களினால் மிகவும் பீடிக்கப்பட்டவளாய் தன்னாலே தன்னை அடித்துக்கொண்டு ராம ராம ராமாவென்று பிள்ளைகளைக் கூப்பிட்டு முறையிட்டாள். அப்போது பரசுராமர் முதலான பிள்ளைகள் ராமாவென்கிற சப்தத்தைக் கேட்டு சீக்கிரமாக ஓடி வந்து, கொல்லப்பட்டிருக்கிற பிதாவைக்கண்டு, வெகுவாகப் பிரலாபிக்க, பரசுராமர் அந்தப் பிதாவினுடைய தேகத்தை பிராதாக்களிடத்தில் வைத்துவிட்டு, பரசுவை யெடுத்துக்கொண்டு மாஹிஷ்மதி பட்டணத்தை யடைந்து, கார்த்த வீரியார்ச்சுன புத்திரர்களுடைய சிரசுக்களைக் கண்டித்தார். பிறகு அவர் பிதாவினுடைய வதநிமித்தமாக பூமியிலேயுள்ள க்ஷத்திரியர்களை யெல்லாம் அதம்பண்ணி பிதாவினுடைய தேகத்தோடு சிரசைக்கூட்டி அக்கினியில் சமஸ்காரம்பண்ணி சர்வதேவனாயிருக்கிற பரமாத்மாவை யக்கியங்களினால் ஆராதித்தார்.

அந்த எக்கியத்திலே ஓதாவுக்குக் கிழக்குத் திக்கையும், பிரமாவுக்கு தக்ஷண திக்கையும், அத்துவரியுவுக்கு மேற்கு திக்கையும், உத்காதாவுக்கு உத்தர திக்கையும், மற்ற சிலருக்கு மத்தியிலே யிருக்கிற திக்குகளையும், காசியபருக்கு மத்திய தேசத்தையும், உபதிரஷ்டாவுக்கு ஆரியவர்த்த க்ஷேத்திரத்தையும், அதற்கப்புறப்பட்ட பிரதேசத்தை சதசியர்களுக்கும்

கொடுத்து, சரஸ்வதியென்கிற பிரம நதியில் அவ்பிருத ஸ்நானஞ் செய்து, அதனுல் சகல பாபத்தையும் போக்கடித்து, மேகங்களினுல் மறைக்கப்பட்ட் சூரியன்போல விளங்கினுர். அந்த ஜமதக்கினி ரிஷியும் பரசுராமரால் பூஜிக்கப்பட்டவராய் நல்ல கியானத்தை யுடையதான தம்முடைய தேகத்தை அடைந்து ரிஷிகளுடைய மண்டலத்தில் ஏழாவது ரிஷியாகவிளங்கினுர். ஜமதக்கினி புத்திரராயும் பகவானுயும் புண்டரீகாக்ஷனுயுமிருக்கிற பாசுராமரானவர் வரப்போகிற மனுவந்தரத்தில் வேதப் பிரவர்த்தகர்களான சப்த ரிஷிகளுக்குள்ளே ஒருவராகப்போகிறவராய், இப்போதும் மகேந்திர பர்வதத்திலே ராஜ தண்டனையை விட்டு சாந்தியை யுடையவராய், சித்தர்கள் கந்தர்வர்கள் சாரணர்கள் இவர்களால் கானம் பண்ணப்பட்டிருக்கிருர்.

இந்தப் பிரகாரம் பிருகு வம்சத்தில் ஸ்ரீ ஹரியானவர் அவதரித்து பூமிபாரத்தை நீக்கும்படி ராஜர்களை சங்கரித்தார். காசிராஜனுக்கு விஸ்வாமித்திரரென்று ஒருவர் உண்டாருர். அந்த விஸ்வாமித்திரரே தபசினுல் க்ஷத்திரிய பாவத்தை விட்டு பிரமதேஜஸை யடைந்து நூற்றெருரு பிள்ளைகளை பெற்ருர். அவர்களுள் மதுச்சந்தசு என்பான் மத்திம புத்திரன். அவன் முதலாக மற்ற ஜேஷ்டர்களான ஐம்பது பிள்ளைகளும் மதுச்சந்துசுக்களென்றே சொல்லப்படுவார்கள்.

அஜீகர்த்தனுடைய பிள்ளையாயும், தேவயக்கியத்திலே தேவர்களால் ரக்ஷிக்கப்பட்டமையால் தேவராதனென்று பிரசித்தனுயும், பிருகு வம்சத்திலே பிறந்தமையால் பார்க்கவனென்றுஞ் சொல்லப்படும் சுனச்சேபன் அரிச்சந்திரனுடைய எக்கியத்தில் புருஷபசுவாக விற்கப்பட்டவனுய், பிரமா முதலான தேவர்களை ஸ்தோத்திரம் பண்ணி, அவர்களுடைய பிரசாதத்தினுல் பாச பந்தத்தில் நின்றும் விடுவிக்கப்பட்டு, தேவதைகளால் ரக்ஷிக்கப்பட்டு, காதியினுடைய வம்சத்தில் தேவராஜனென்று பிரசித்தியை யடைந்தான். அந்தச் சுனசேபனை விஸ்வாமித்திரர் புத்திரனுகக் கிரகித்து, தம்முடைய புத்திரர்களைப் பார்த்து இவனை எல்லோரும் ஜேஷ்டனுகக் கொள்ளுங்களென்று சொன்னுர். அதை புத்திரர்களுக்குள்ளே மதுசந்தசுஎன்பார் அங்கீகரிக்கவில்லை. விஸ்வாமித்திரர் அதற்கு சினந்து அவர்களை மிலேச்சராகும்படி சபித்தார். அப்போது மதுசந்தசு யென்பான் தனக்குப் பின்பிறந்த சகோதரர்களுடன் அந்த சுனசேபனை ஜேஷ்டனுக அங்கீகரித்தான். விஸ்வாமித்திரரும் சந்தோஷத்தை யடைந்தனர். அஷ்டகன் ஆரிதன் ஜயந்தன் சுமதன் முத

லான் மற்றும் சிலபேர் விஸ்வாமித்திரருக்குப் புத்திரர்களா ஞர்கள். இந்தப் பிரகாரம் அந்த கௌசிககோத்திரம் விஸ் வாமித்திரர் புத்திரர்களால் வெவ்வேருகப் பண்ணப்பட்டது. இந்த கௌசிக கோத்திரமே இந்தப் பிரகாரம் அந்தத் தேவ ராதனை ஜேஷ்ட புத்திரஞகச் செய்துகொண்டு நாஞப் பிரகாரமாக பிரவர பேதத்தையு மடைந்தது.



## பதினேழாவது அத்தியாயம்



க்ஷத்திரவிருத்தன் முதலான நான்குபேருடைய வம்சம் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! புரூரவசுவினுடைய ஜேஷ்ட புத்திரஞன ஆயுசுக்கு நகுஷன், க்ஷத்திரவிருத்தன், அரசி, ஆரம்பன், அனனசுவெனும் ஐந்து பிள்ளைகளுண் டாஞர்கள். அவர்களுக்குள்ளே க்ஷத்திரவிருத்தனுடைய வம்சத்தைசொல்லுகிறேன் கேளும். க்ஷத்திரவிருத்தனுடைய புத்திரன் சுகோத்திரன், அவனுக்குக் காசியன், குசன், கிரிச் சமதன் எனும் மூவர் பிறந்தார்கள். கிரிச்சமதனுக்கு சுனகன் பிறந்தான். அவனுக்கு ரிஷிசிரேஷ்டராயும் ருக்குவேதியாயு மிருக்கிற சவுனகர்பிறந்தார். காசியனுக்குக் காசிபிறந்தான். அவனுக்கு ராஷ்டானும், அவனுக்கு தீர்த்தபசுவும், அவ னுக்கு ஆயுர்வேதத்துக்குப்பிரவர்த்தகரான தந்வந்திரி பகவா னுண்டாஞர். அவருக்கு கேதுமான், அவனுக்கு பீமரதன், அவனுக்கு திவோதாசன், அவனுக்கு துயுமான் பிறந்தான். அவனே பிறதறனென்றும், சத்ருஜித்தென்றும், வச்சனென் றும், ரித்ததுவசனென்றும், குவலயாசுவனென்றும் பேர் பெற்றான். அவனுக்கு அளர்க்கன் முதலான பேருண்டா ஞர்கள். அந்த அளர்க்கனைத் தவிர வேறொரு ராஜாவான வன் யுவாவாய் அறுபத்தாருயிரம் வருஷம் பூமியைப் பரிபா லனம் பண்ணினவனில்லை. அந்த அளர்க்கனுக்கு சந்நிதி யும், அவனுக்கு சுனிதனும், அவனுக்கு சுகேதனனும், அவ னுக்கு தர்மகேதுவும், அவனுக்கு சத்தியகேதுவும், அவ னுக்கு திஷ்டகேதுவும். அவனுக்கு சுகுமாரனும், அவ னுக்கு விதிகோத்திரனும், அவனுக்கு பற்கனும், அவனுக்கு பாற்கனும், அவனுக்கு பாற்கபூமியும் பிறந்தார்கள். இவர் களெல்லோரும் காசிகோத்திரஸ்தர்களும் காசியினுடைய பிற்பிதாமகஞன க்ஷத்திர விருத்தனுடைய வம்சத்திலே பிறந்த ராஜாக்களுமாவார்கள். ஆரம்பனுக்கு தபசனென்று ஒரு பிள்ளையும், அவனுக்கு கர்பீரனும், அவனுக்குச் சக்கிர

கனும் பிறந்தார்கள். அந்தச் சக்கிரகனுடைய க்ஷேத்திரத்தில் பிராமண வம்சம் உண்டாயிற்று. இனிமேல் அனனசுவினுடைய வம்சத்தைக் கேளும். அந்த அனனசுவுக்கு சுத்தனும் அவனுக்கு சுசியும், அவனுக்கு பிரமசாரதியான திரிக்குத்தும், அவனுக்குச் சாந்தரதனும் பிறந்தார்கள். அந்தச் சாந்தரதன் ஆத்மக்கியானியாய் கிருதகிருத்தியனானன்.

அரசியென்கிறவனுக்கு மகா பலவான்களாய் ஐன்னூறு புத்திரர்களுண்டானார்கள். அந்த அரசியானவன் தேவர்களால் பிரார்த்திக்கப் பட்டவனாய், தயித்தியர்களை யெல்லாஞ் சங்கரித்து, இந்திரனுக்குச் சுவர்க்கத்தைக் கொடுத்தான். பிற்பாடு இந்திரனானவன் பிரகலாதனுக்குப் பயந்தவனாய் திரும்பவும் அந்தச் சுவர்க்கத்தைக்கொடுத்து அந்த ரசிகனுடைய பாதங்களைப் பிடித்துகொண்டு நான் உன்னவனாகவிருக்கிறேனென்று தன்னையே அந்த ரசிகனுக்கு சமர்ப்பித்தான். அரசியானவன் லோகாந்தரத்தை யடைந்திருக்கையில் அவனுடைய புத்திரர்கள் இந்திரனால் சுவர்க்கத்தை யாசிக்கப்பட்டவர்களாய், அவனுக்கு அதைக் கொடுக்கவில்லை. பின்னும் அந்த இந்திரனுடைய யக்கிய பாகங்களையும் கிரகித்துக் கொண்டார்கள். பிற்பாடு இந்திரனானவன் தேவகுருவான பிரகஸ்பதியினால் அக்கினியில் அபிசாரஹோமம் பண்ணப்படுகையில் சன்மார்க்கத்தை விட்டிராநின்ற ரசிகனுடைய பிள்ளைகளி யாவரையும் சங்கரித்துவிட்டான். ஷத்திரவிருத்தனுடைய பேரனான குசனுக்கு பிரீதியும், பிரீதிக்கு சஞ்சயனும், அவனுக்கு சயன், அவனுக்கு கிருதன், அவனுக்கு அரியசுவனன், அவனுக்கு சகதேவன், அவனுக்கு பீமன், அவனுக்கு சயச்சனன், அவனுக்கு சங்கிருதி, அவனுக்கு சயன், அவனுக்கு மகாரதனான ஷத்திரவிருத்தனுடைய பேரனான தர்யா வுண்டானான். இவர்களெல்லாம் ஷத்திர விருத்த வம்சத்திலே யுண்டான ராஜாக்கள். இனி, நகுஷ வம்சத்தாரைச் சொல்லுகிறேன்.



## பதினெட்டாவது அத்தியாயம்

நகுஷபுத்திரனான யயாதியினுடைய கதையும் அவனுடைய ஐந்து புத்திரர்களுக்குள்ளே கடைசியிலுள்ளையானவன் யயாதியினுடைய வார்த்தீகத்தைக் கிரகித்துக்கொண்டதும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே! நகுஷனுக்கு யதி யயாதி சையாதி யாதி வியாதி கிறுதி எனும் ஆறுபிள்ளைகளுண்டானார்கள்,

அவர்களுக்குள்ளே ஜேஷ்டனை யதியானவன் பிதாவினால் கொடுக்கப்பட்ட ராச்சியத்தை அனர்த்த யேதுவென்று ஓர்ந்து துறவறங்கொண்டான். பிதாவான நகுஷனனவன் சுவர்க்கத்தை யடைந்து இந்திராணியான சசிதேவியை இச்சித்தமையால் சுவர்க்கத்தில் நின்றும் தள்ளப்பட்டு, அகஸ்தியர் முதலான ரிஷிகளது சாபத்தால் மலைப்பாம்பா யிருந்தான். யயாதியானவன் ராஜாவாய் பூமியைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டு தம்பிமார் நான்குபேரையும் நான்கு திக்குக்கும் ரக்ஷகர்களாக நியமித்து தானும் சுக்கிராசாரியருடைய பெண்ணையும் விரஷபாவாவினுடைய பெண்ணையும் மணந்து பூமியை பரிபாலனஞ் செய்து கொண்டிருந்தானென்று சொல்ல, பரிக்ஷித்து மகாராசன் சொல்லுகின்றார் :

பரிக்ஷித்து வாக்கியம்

வாரீர் பகவத் பாராயண போதா! சுக்கிராசாரியர் பிரமரிஷியல்லவா? நகுஷ புத்திரனை யயாதியோ ராஜாவாகவிருக்கிறார். ராஜாவுக்கும் பிராமணருக்கும் விவாகமானது எதினாலுண்டாயிற்றென்று கேளா நின்ற ராஜாவைப்பார்த்து சுகப்பிரமரிஷி சொல்லுகின்றார் :

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்தே கேள்! ஒருகால் தானவேந்திரனை விருஷபரவாவினுடைய பெண்ணான சர்மஷ்டையானவள் குருவான சுக்கிரனது பெண்ணான தேவ யானையோடு ஆயிரம் சகிகளுடன் கூடினவளாய், நகர சமீபத்திலிரா நின்ற உத்தியான வனத்தில் வஸ்திரத்தை யவிழ்த்து கரையில் வைத்துவிட்டு, தாமரை மடுவிலிறங்கி ஒருத்தர்க்கொருத்தர் மேல் சலத்தை யிரைத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அந்த ஸ்திரீகளானவர்கள் பார்வதியோடு கூடரிடபவாகனத்தின் மீது போகா நின்ற ருத்திரனைப் பார்த்து லச்சையுடனே கூடினவர்களாய் சீக்கிரமாகக் கரையில் வந்து வஸ்திரங்களை யுடுத்திக் கொள்ளும்போது அவர்களுக்குள்ளே சர்மஷ்டையானவள் குருபுத்திரியான தேவயானையினது வஸ்திரத்தை யறியாதவளாய் தனதாக வெண்ணிக்கொண்டு உடுத்திக்கொண்டாள். அதைக் கண்டு தேவயானையானவள் சர்மஷ்டையைக் கோபித்து அடி சகிகளே! எனது தாசியான சர்மஷ்டையினுடைய அயுத்தமான காரியத்தைப் பாருங்கள். எனது வஸ்திரத்தை எக்கியத்தின் அவிசை நாயெடுத்தாற்போல் எடுத்துத் தரித்துக்கொண்டாள். பிராமணர்களான எமது தபசில் இந்த சகத்தானது சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது. நாங்கள் இந்த சர்மஷ்டையினுடைய தகப்பனுக்குக் குருவாக விருக்கின்

ரேய். இப்படியிருக்க நான் உடுத்திக்கொள்ளுகிற வஸ்தி ரத்தைத் துஷ்டையான இந்தச் சர்மஷ்டையானவள் சூத்திர னனவன் வேதத்தை தரிப்பதுபோல தரித்துக் கொண்டவ ளென்று சொல்லும் குருபுத்திரியான தேவயானையைப் பார்த்து சர்மஷ்டையானவள் ரோஷத்தினல் பெருமூச்சு விட்டு உதட்டைக் கடித்துக்கொண்டு சொல்லுகின்ருள்: அடி பிக்ஷை யெடுக்கிறவளே! உன்னுடைய விருத்தாந் தத்தை யறியாமல் என்ன பிதத்துகிருய்? எனது கிரகத்தை காக்கைபோல நீ பார்த்துக்கொண்டிருக்க வில்லையா? வென்று இப்படிப்பட்ட குரூரமான வசனங்களினல் ஆசாரிய புத்திரி யான தேவயானையைத் திரஸ்காரஞ்செய்து, சர்மஷ்டை யானவள் அந்தத் தேவயானையையுங் கிணற்றில் தள்ளி விட்டு, அவளுடைய வஸ்திரத்தையும் எடுத்துக்கொண்டு போய்விட்டாள்.

யயாதி ராஜனனவன் வேட்டையாடி ஜலாபேக்ஷையோடு கூடினவனய் அந்தக்கிணற்றினிடத்தில் வந்து, அதிலிரா நின்ற தேவயானையைப் பார்த்து மகாதயாளுவான அந்த ராஜனனவன் தன்மேலே யிருக்கிற வஸ்திரத்தை வஸ்திர மில்லாத அந்தத் தேவயானைக்குக் கொடுத்துத் தனது கையி னல் அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு கிணற்றை விட்டு வெளியே யெடுத்துவிட்டான். அப்போது சுக்கிரா சாரியின் பெண்ணன தேவயானையானவள் வீரனன அந்த ராஜாவைப் பார்த்து பிரீதியோடு சொல்லுகிருள்:

அரசனே! என்னுடைய அஸ்தமானது உன்னல் பிடிக் கப்பட்டதாதலின், இனி நான் வேருெருவனது கரத்தைப் பற்றுவது தகுதியல்ல. தெய்வகதியால் நேர்ந்த இக்காரியத் தால் நான் உம்மை நாயகனுக அடைய வெண்ணங்கொண் டேன் என்று தேவயானை சொல்ல, யயாதிராஜன் அவளது ரூபலாவண்ணியத்தி லீடுபட்டு, அவளுடைய வசனத்தை அங்கீகரித்து, தன் நகரை யடைந்தான். பின் தேவயானை யும் விசனத்துடன் தன்னுடைய வீட்டுக்கு வந்து பிதாவுக்கு சர்மஷ்டை செய்த குரூரகாரியங்களை சொன்னள். அப் போது சுக்கிராசாரியர் மகா விசனத்தை யடைந்து, தன் பௌரோகித்திய கர்மத்தை நிந்தித்துக்கொண்டு, தன் புத்திரி யுடன் பட்டணத்தைவிட்டு வெளிப்பட்டுப் போய்விட்டார். சர்மிஷ்டையினுடைய பிதாவான விறஷபறவா இதை யறிந்து, சுக்கிராசாரியரை மார்க்கத்திலே போய் அவருடைய பாதங்களை வணங்கி க்ஷமிக்கும்படி வேண்டினன். அப்போது சுக்கிராசாரியரும் சாந்தராய், சிஷ்யனன விறஷபறவாவைப்

பார்த்து தனது பெண்ணான தேவயானையினுடைய இஷ்டத்தை நிறைவேற்றும்படி உரைக்க, தேவயானை எந்தப் புருஷருக்குப் பிதாவினாலே கொடுக்கப்பட்டவளாய் நான் எங்கே போகிறேனோ அங்கே சர்மிஷ்டை தன் சகிகளோடு எனக்குத் தாசியம் பண்ணவேணும் எனக்கேட்டு, விறஷபறவா தன் பெண்ணை அப்படியே தாசியஞ் செய்யும்படியாய் திட்டம் பண்ணினான். அந்தச் சர்மிஷ்டையும் ஆயிரஞ் சகிகளோடு தேவயானைக்குத் தாசியம் செய்துக்கொண்டிருந்தாள்; பின்பு சுக்கிராசாரியரும் நகுஷபுத்திரனான யயாதிக்குத் தன்பெண்ணை சர்மிஷ்டையோடு கொடுத்து ராஜாவைப் பார்த்து ராஜனே! நீ ஒருக்காலும் படுக்கையில் சர்மிஷ்டையை அடைதல் கூடாதென்று சொன்னார்.

பின்பு ஒருநாள் அந்தச் சர்மிஷ்டை தேவயானை ருது ஸ்நானஞ் செய்திருந்த சமயத்தில் ராஜாவை ஏகாந்தத்தில் பர்த்தாவாக வரித்தாள். தர்மக்கியனான அந்த ராஜாவும் புத்திரார்த்தமாக ராஜபுத்திரியான சர்மிஷ்டையினது மனோரதத்தைப் பூரிக்கச் செய்யவேணுமென்றெண்ணி அவளை அணைந்தான். தேவயானை எதுவென்றும், துறுவசுவென்றும் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். சர்மிஷ்டை துற்கிறனென்றும், அனுவென்றும், பூருவென்றும் மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். பின்பு தேவயானையானவள், அசுரபுத்திரியான சர்மிஷ்டையினிடத்தில் தன் பர்த்தாவுக்குப் புத்திரோற்பத்தியையறிந்து மிகவுங் கோபத்தையடைந்து, பிதாவினுடைய கிரகத்துக்குப் புறப்பட்டு போனாள். அப்போதவளிடத்தில் மோகத்தையுடையவனான அந்த ராஜாவும், தன் பாரியாளைப் பின்றொடர்ந்து நல்ல வார்த்தை சொல்லியும் பாதத்தைப் பிடித்தும் அவள் சமாதானமாகவில்லை. சுக்கிராசாரியர் அந்த ராஜாவைப் பார்த்து கோபித்துக்கொண்டு "அட ஸ்திரீலோலனே! மூடனே! மனுஷியர்களுக்கு விகாரத்தைத்தரும் சிறையானது உன்னை யடையக்கடவ" தென்று சபிக்க, யயாதிராஜன் "பிரமநிஷ்டரே! உம்முடைய பெண்ணான தேவயானையினிடத்தில் காமபோகங்களை யனுபவித்து இன்னந் திருப்தி யடையாமலிருக்கும் எனக்கு இச்சாபந் தந்தது தகுதியோ" வென்றிரைஞ்ச, சுக்கிரரும் "அப்படியானால் இந்தச் சிரையைத் தரிக்கத்தக்கவனான ஒருவனுக்கு அதைக் கொடுத்து அவனுடைய யௌவனத்தை நீ வாங்கிக்கொண்டு காமசுகத்தை யனுபவி யென்றனுக்கிரகித்தார்.

பிறகு ராஜன் தனது ஜேஷ்ட புத்திரனைப் பிரார்த்தித்து குழந்தாய்! உன் மாதாமகனாகிய சுக்கிரனால் சபிக்

கப்பட்ட இச்சிரையை என்னிடத்தினின்றும் பெற்றுக்கொள். உனது யௌவனத்தை யெனக்குக் கொடு. உன்னுடைய யவ்வன வயதினால் நான் இன்னும் சில நாளைக்கு விஷயங்களை யனுபவிக்கிறேன் என்று சொல்ல எதுவானவன் "பிதாவே! உமக்கு நடுவே வந்த சிறையை நான் எப்படி தரிக்கக்கூடும்? உலகத்தில் புருஷன் விஷயசுகத்தை யறியாமல் சாந்தியை யடைய மாட்டானேயென்று சொன்னான். பின்பு துறுவசுவும், துர்க்கியனும், அனுவும், பிதாவினால் கேட்கப் பட்டவர்களாய் தர்மத்தையறியாமல் யௌவனத்தை நித்தியமாக எண்ணிக்கொண்டிராநின்ற அவர்களும் அதை நிராகரித்தார்கள். பின்பு வயதில் குறைந்தவனையும், குணத்தில் சிறந்தவனையுமிருக்கிற பூருவைப்பார்த்து யயாதி சொல்லுகின்றான்: நீயாவது எனது முறைக்கு இணங்காயோவென்ன பூருவும் 'எந்தையே!, நின் இச்சையின்படி யொழுகுவது' எனது கடமை என்றுரைத்து, தனது யவ்வனத்தை விட்டு, கிழ உருவத்தை வகித்தனன். யயாதி மகாராஜனும் புத்திரனுடைய யவ்வனத்தை வகித்துக்கொண்டு யக்கிய புருஷனையும் சர்வ தேவமயனையுமிருக்கிற ஸ்ரீ ஹரியை அனேகவித யக்கியங்களினால் ஆராதித்து அனேகமாயிரம் வருஷம் இஷ்டப்படி அனுபவித்தும் திருப்தியடையவில்லை.



## பத்தொன்பதாவது அத்தியாயம்



யயாதி மகாராஜன் முத்தி சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் அபிமன்னியு புத்திரரே! அந்த யயாதி ராஜன் விஷய சுகங்களை யனுபவித்துக்கொண்டு ஸ்திரீ பரவசனாய் தன்னுடைய ஆத்ம விஷயானுபவத்தில் கெட்டுப்போனதை உணர்ந்து, வெறுப்போடு கூடினவனாய், தனது பாரியாளை நோக்கி, "அடி என்னுயிர்க் கொப்பானவளே! நாம் இத்தனை நாள் கூடிச்சுகித்து என்ன பலனைக் கண்டோம்? இச்சித்ததையே இச்சித்தும், அனுபவித்ததையே பல தடவையும் பல விதமாக அனுபவித்தும், நம் ஆசைக்கு அளவு ஏற்படவில்லை. ஆகையால் இனியாவது வீணான விஷய சுகத்திலுள்ள இச்சையை யொழித்து, அச்சுதனது அடிமலரை அடைய முயற்சி புரிவதுதான் தகுதி. இன்னும் வீணாக நாள்களை கழிக்க வேண்டாம். இந்திரிய சமூகமானது பலத்தையுடைய தாகையால் கியானியான புருஷனையும் விஷயங்

களிலே இழுத்துக்கொண்டுபோகும். ஒழிவில்லாமல் விஷயங்களை அனுபவியா நின்ற எனக்குக் குறைவில்லாமல் ஆயிரம் சம்வச்சரம் பூர்ணமாயிற்று. ஆனாலும் அடிக்கடி விஷயங்களிலேயே இன்னும் ஆசையான துண்டாகின்றது. ஆகையால் நான் இந்த விஷய ஆசையைவிட்டு விட்டுப் பிரமத்தினிடத்தில் மனதை ஸ்திரமாக வைத்து, சீதோஷ்ண முதலான தொந்த துக்கங்களை சகித்துக்கொண்டு, அகங்காரத்தை விட்டு, வனத்தில் மிருகங்களோடுகூட சஞ்சரித்துக் கொண்டிருக்கப் போகிறேனென்று சொல்லி, புத்திரனை பூருவுக்கு அவனுடைய யவ்வனத்தைத் திரும்பவுங் கொடுத்துவிட்டுத், தன்னுடைய சிறையை தான் வாங்கிக்கொண்டு, ஆசையையொழிந்தவனாய், அக்கினி திக்கிலே துற்கிரனையும், தக்ஷண திக்கிலே எதுவையும், மேற்குத் திக்கிலே துறுவசுவையும், வடக்குத் திக்கிலே அனுவையும், ராஜர்களாக ஸ்தாபித்து, சமஸ்தமான பூமண்டலத்துக்கும் பூருவை சிரேஷ்ட ராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்துத் தமையன்மாரையும் அவனுடைய சொற்படி நடந்துகொள்ளும்படியாக திட்டம் செய்து தபோவனத்தை யடைந்து, யயாதி மகாராஜனவன் சமஸ்த விஷய சங்கத்தையும் விட்டு ஆத்மானுபவத்தினாலே லிங்க சரீரத்தையும் விட்டவனாய் பரப்பிரமமாயும் நிர்மலமாயுமிருக்கிற வாசுதேவனிடத்திலே நிஷ்டையை யுடையவனாய் பகவத் சம்மந்தமான கதியை யடைந்தான். பிற்பாடு அநயும் தேவயானையும் நிவர்த்திமார்க்க நிஷ்டையை யறிந்து, சமஸ்த விஷயங்களிலேயும் சங்கத்தை விட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்திலேயே மனதை நிறுத்தி தன்னுடைய லிங்கசரீரத்தை விட்டு விட்டாள்.



## இருபதாவது அத்தியாயம்



*பூருவம்சத்திலே யுண்டான துஷ்யந்த புத்திரனான பரதனுடைய கீர்த்தியை சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் புருஷர்களில் சிறந்தவனே ! யாதொரு வம்சத்திலே நீ பிறந்தாயோ, எந்த வம்சத்திலே ராஜரிஷிகளும் பிரம வம்சத்தவர்களும் ஜனித்தார்களோ, அப்படிப்பட்ட பூருவினுடைய வம்சத்தைச் சொல்லுகிறேன் கேள். பூருவுக்கு ஜனமேசயனும், அவனுக்குப் பிரசனனுவானும், அவனுக்குப் பிரவீரனும், அவனுக்கு மன்சுயவும், அவனுக்

குச் சாருவும், அவனுக்கு மகா புண்ணியவானான சுத்தியுவும், அவனுக்கு வெகுபவனும், அவனுக்குச் சய்யாதியும், அவனுக்கு சங்காதியும், அவனுக்கு ரவுத்திராசுவனும் ஜனித்தார்கள். அந்த ரவுத்திராசுவுக்கு ரிதேயு கிறிஷேயு ஸ்தலேயு, கிறிதேயு, ஜலேயு, சனனதேயு, தறமேயு, சத்தியேயு, விறதேயு, வனேயு எனும் பத்துபிள்ளைகள் சிறுதாசியென்கிற அப்சாரஸ்திரீயினிடத்திலே ஆத்மபூதமான முக்கியப்பிராணனுக்கு தசவிந்திரியங்கள்போலப் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே அப்பிரதிதனுக்கு கண்ணுவரும், அவருக்கு மேதாதியும், அவருக்கு விருக்குவா முதலான பிராமணரும் ரிதேயும் ஜனித்தார்கள். சுமதிக்கு துஷ்யந்தனென்று ஒருவன் பிறந்தான்.

அந்தத் துஷ்யந்த மகாராஜனானவன் வேட்டைக்கென்று புறப்பட்டுப்போய் கண்ணுவரிஷியினுடைய ஆஸிரமத்தையடைந்து, அவ்விடத்திலே மகா லக்ஷுமியைப்போலிருக்கும் ஒரு உத்தம ஸ்திரீயை பார்த்து, அந்த க்ஷணத்திலேயே மிகவும் மோகத்தையடைந்து, தனது ஆயாசமெல்லாந் தீர்ந்து, மன்மதனாலே பீடிக்கப்பட்டவனாய், அந்த ஸ்திரீயைப்பார்த்து சிரித்துக்கொண்டு மதுரமான வசனத்தினாலே "ஓ பெண்கள் நாயகமே! கமல நேத்திரி! நீயாருடைய பெண்? உனக்கு ஒருவருமில்லாத இந்த வனத்தில் செய்யவேண்டுவதென்ன? நிச்சயமாக உன்னை இராஜாவினுடைய பெண்ணாக எண்ணுகிறேன். பூருவம்சத்திலே பிறந்தவர்களுடைய மனதானது அதர்மத்திலே பிரவேசியாதே. நினது விருத்தாந்தத்தை அறிந்துகொள்ள ஆவல்கொளும் எனக்கு மனமுவந்து அதைத் தெரிவிக்க வேண்டும் என்ன, சகுந்தலை சொல்லுகின்றாள்: ராஜனே! நான் விஸ்வாமித்திர ரிஷிக்கு மேனகையினிடத்திலே ஜனித்தவள். அந்த மேனகையினால் இந்த வனத்திலே விடப்பட்டு கண்ணுவ மகாரிஷியினாலே இரக்ஷிக்கப்பட்டிருக்கிறேன். எனது உற்பத்தியைப் பகவானான கண்ணுவ மகாரிஷியானவர் நன்கு அறிவார் என்றுரைத்து அவனுக்கு ஆசனமளித்து உபசரித்தாள். அரசனும் அவளது அழகில் ஈடுபட்டு "ஸ்திரீ இரத்தினமே! கௌசிகர்க் குதித்த நீ என்னுடன் சம்பந்தங் கொள்வது முறையே யாகும். நீ அன்பு கூர்ந்து என்னை வரிக்கவேண்டும்" என்ன, சகுந்தலையும் அதற்கிணங்க, அவ்வரசன் காந்தர்வ முறைப்படி அவளை மணந்தான். ஒருநாளவளிடமிருந்து, அடுத்தநாள் தன் பட்டணத்துக்குப் போனான்.

சில காலத்துக்குப் பின்பு சகுந்தலையானவள் ஒரு புத்தி ரனைப் பெற்றாள். அந்தப் பிள்ளைக்குக் கண்ணுவ மகா ரிஷி யானவர் சாத கர்ம முதலான உசித கர்மங்களைச் செய்தார். அந்தப் பிள்ளையானவன் அந்த ஆஸிரமத்திலேயே விர்த்தி யடைந்து தனது பலத்தினாலே சிங்கங்களைப் பிடித்துக் கட்டி விளையாடிக்கொண்டிருந்தான். பிற்பாடு அந்தச் சகுந்தலை யானவள் ஒருவராலேயும் அதிக்கிரமிக்கக் கூடாத பராக்கிர மத்தை யுடையவனாயும், ஸ்ரீ ஹரியினுடைய அம்சத்தினால் ஜனித்தவனாயு மிராநின்ற அந்தப் பிள்ளையை எடுத்துக் கொண்டு பர்த்தாவினுடைய சந்நிதானத்தை யடைந்தாள். அப்போது அந்த துஷ்யந்த ராஜனானவன் அவர்களைப் பற்றிய ஞாபகம் சிறிது மின்மையால் குற்றமிலாத அந்தப் பாரியையும் புத்திரனையும் ஆதாவு செய்யாதிருக்க, அப் போது ஒரு அசரீரி உண்டாயிற்று. அதென்னவென்றால், துஷ்யந்தனே ! உலகத்தில் பிள்ளைகளுக்குத் தாயானவள் ஆதாரமாத்திரமே யாகின்றாள், பீஜப்பிரதனாகையால் பிதா வுக்கே ஒருவன் புத்திரனாகி விருக்கின்றான். ஆகையால், நீ உனக்குப் பிறந்த இந்த பிள்ளையைக் கைக்கொள். நிர்துஷ் டையான இந்தச் சகுந்தலையை அவமானம்பண்ணாதே. வம்ச கர்த்தாவான புத்திரனானவன் பிதாவை யமலோகத்தில் நின்றும் உத்தாரணம் பண்ணுவன். பீஜப்பிரதனான பிதா வானவனும் புத்திரனை எமனுடைய சபையில் நின்றும் ஜயித்தடைவன். மாதாவானவள் அடையமாட்டாள். அதைக் கேட்டு அந்தத் துஷ்யந்த ராஜாவும் பாரியாபுத்திரர்களிருவ ரையும் பரிக்கிரிகித்துக்கொண்டான்.

பிறகு அந்தப் பரதன் பிதாவான துஷ்யந்தன் லோகாந் தரத்தை யடைந்த பிறகு, மகாபிஷேக விதியினாலே பட்டாபி ஷேகம் பண்ணப்பட்டவனாய், அநேக யாகங்களைச் செய்து அக்கினிசயன மென்கிற கிருதுவைப்பண்ணி பூமியிலே இருபத்தேழாயிர வருஷம் தனது ஆஞ்ஞா சக்கரத்தைத் திக்குகளெங்கும் நடப்பித்துக் கொண்டிருந்தான். பிற்பாடு அந்தப் பரத மகாராஜன் ஐஸ்வரியத்தையும் இகசுகத்தையும் பாரியைகளையும் புத்திரர்களையும் அனித்தியமென்றெண்ணி சம்சாரத்திலே வைராக்கியத்தை யடைந்து தனக்கு விதேக னுடைய புத்திரிகள் மூன்று இஷ்டபாரியைகளிடத்திலே பிறந்த புத்திரர்களை பார்த்து, பரதனானவன் இந்தப் பிள்ளை கள் தனக்குரியவர்களல்லவென்று நிராகரிக்க, அந்த ஸ்திரீ கள் தங்களிடத்தில் பர்த்தாவுக்கு விபசாரசங்கை பிறந்து, தங்களை விட்டுவிடப் போகிறானென்கிற பயத்தினால் அந்த

பிள்ளைகளைக் கொன்றுபோட்டார்கள். இந்தப் பிரகாரம் பிறக்கப்பிறக்கக் கொன்று போடுவதினால் வம்சமானது வியர்த்தமாயிருக்கையில், அந்தப் பாதனானவன் புத்திரார்த்த மாக மறுதஸ்தோகம் என்கிற கிருதுவினால் தேவதைகளைக் குறித்து எக்கியம் பண்ணினான். அப்போது அந்தத் தேவதைகள் பிரசன்னமாகி அந்தப் பாத மகாராஜாவுக்கு பாத்துவாசனென்று ஒரு பிள்ளையைக் கொடுத்தார்கள். தேவதைகளுக்குப் பாத்துவாசனென்கிற பிள்ளை வந்தவழியைச்சொல்லுகிறேன் கேள். பிரகஸ்பதியானவர் ஒருக்கால் கர்ப்பிணியாயும், மாதாவென்று பெயரையுடையவளாயுமிருக்கிற தன் தம்பியான உசத்தியனுடைய பாரியினிடத்தில் காமங்கொண்டு அவளைச் சேர்ந்தனர். கர்ப்பத்திலிராநின்ற சிசு அவ்விடத்தில் வேறொரு கர்ப்பத்துக்கு இடமின்மையால் முறையமிட்டு அப்போது அவரது வீரியம் கர்ப்பத்திலேயிருக்கிற சிசுவினால் தள்ளப்பட்டு யோனிக்கு வெளிப்பட்டு பூமியிலேவிழுந்து அந்த க்ஷணத்திலேயே ஒரு பிள்ளையாயிற்று. இதைக் கண்டு பிரகஸ்பதி வயிற்றிலுள்ள கருவை அந்தகனாக சபித்தார். விபசாரசங்கையினால் தன் பர்த்தா தன்னை விட்டுவிடப்போகிறானென்கிற பயத்தினால் அந்த மாதானவள் பிரகஸ்பதியைப் பார்த்து நம்மிருவருக்கும் அனியாயத்தினால் பிறந்த இந்தப் பிள்ளையை நான் ஒருத்தியே பரிக்க மாட்டேன். நீயே பரிக்கக்கடவை என்று சொல்லி விட்டுவிட்டாள். பிரகஸ்பதியும் கைக்கொள்ளாது விட்டனர். அப்படி அவர்களிருவராலேயும் விடப்பட்ட பாத்துவாசனெனும் பிள்ளையை தேவர்கள் போஷித்துப் பாதனுடைய வம்சமானது வியர்த்தமாய்ப் போகையில் பாதனுக்குக் கொடுத்தார்கள். ஆகையினால் அவனுக்கு வித்தனென்று பெயருண்டாயிற்று.



## இருபத்தோராவது அத்தியாயம்



*பாதனுடைய புத்திரனான விதாதாவினுடைய வம்சம் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்தே கேள்! விதாதனுக்கு மண்ணியுவெனும் ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்குப் பிரகஷத்திரன், சயன், மகாவீரியன், நரன், கற்பன் எனும் ஐந்து பிள்ளைகளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே நரனுக்குச் சங்கிரதியென்று ஒருவனுண்டாயினன், அவனுக்குக் குருவ

னென்றும், ரந்திதேவனென்றும் இரண்டு பிள்ளைகளுண்டானார்கள். அந்த ரந்திதேவனுடைய எஜசு இகத்திலும், பரத்திலும் கீர்த்திக்கப்பட்டதாயும், பிரயத்தன மில்லாமலே தெய்வகதியாக வரும் வஸ்துவை அதிதிகளுக்குக் கொடுத்துக் கொண்டும், தான் அநுபவித்துக்கொண்டுமிருந்தான். அவனே பசியை யுடையவனாயும், மகா தரித்திரனாயும் மிகுந்த தைரியத்தை யுடையவனாயும், கஷ்டத்தை அநுபவித்துக்கொண்டு மிருந்தான். அந்த ரந்திதேவன் ஒரு சமயம் நாற்பத்தெட்டு நாள் ஜலபானம் பண்ணாமலிருந்தான். பிற்பாடு உதயகாலத்திலே நெய்யும்-அன்னமும்-பாயசமும் தீர்த்தமும் தெய்வகதியாக லபித்தது. பசிதாகத்தினாலே மகா சங்கடத்தை யடைந்த அவன் அந்த அன்னத்தைப் போசனம் பண்ண அவாவுடன் பிரயத்தனம் செய்யும் சமயத்தில் ஒரு பிராமணன் அதிதியாக வந்தான். அப்போது அந்த ராஜாவானவன் சகல பிராணிகளையும் ஸ்ரீ ஹரியாகப் பார்த்து அந்த அன்னத்தைப் பகிர்ந்து ஆதரவுடனே அந்தப் பிராமணனுக்குக் கொடுத்தான். அந்தப் பிராமணனும் அந்த அன்னத்தைப் புசித்துப் புறப்பட்டுப்போன பிறகு, அந்த ராஜன் தன் குடும்பத்தோடு அதிதிக்குக் கொடுத்த சேஷத்தைப் புசிக்க வேணுமென்றிருக்கும்போது ஒரு சூத்திரன் அன்னத்தை விரும்பிவந்தான்.

அப்போது அந்த ராஜனானவன் அவனையும் ஸ்ரீ ஹரியாக நினைத்து அவனுக்கும் அந்த அன்னத்திலே பிரித்துக் கொடுத்தான். அந்தச் சூத்திரனும் அவ்வன்னத்தைப் புசித்துப்போன பின்பு, வேறேயொரு புருஷனானவன் சிலநாய்களைக் கூட்டிக்கொண்டு அதிதியாக வந்து வாரீர் ராஜனே! பசியினாலே வருந்துகின்ற வெனக்கும் என்னுடைய நாய்களுக்கும் அன்னங்கொடுக்க வேணுமென்று சொன்னான். அப்போது அந்த ராஜா அவனையும் ஆதரித்து மிகுந்த அன்னத்தையெல்லாம் சிரத்தையோடு நாய்களுக்கும் அவனுக்குங் கொடுத்தான். பிற்பாடு தீர்த்தபானம் பண்ணப் போகும் அந்த ராஜாவை ஒரு மிலேச்சன் அடைந்து மிகவுந் தாகத்தையுடைய வெனக்கு இந்தத் தீர்த்தத்தைக் கொடுக்க வேணுமென்று கேட்டான். அப்போது மகா கீர்த்தியை யுடையவனான அந்த அரசன் அவனுடைய வசனத்தைக் கேட்டு கிருபையினாலே பீடிக்கப்பட்டவனாய் தனக்குள்ளே "ஏ பகவன்! தம்மிடத்தில் நின்றும் அணிமாதி அஷ்ட ஐஸ்வரியங்களோடு மோக்ஷத்தை நான் கோரவில்லை. சமஸ்த பிராணிகளுடைய இருதயத்திற்குள்ளே யிருக்கும் அவர்களுடைய துக்கத்தையெல்லாம் நானனுபவிக்க வேணு

மென்று இச்சிக்கிறேன். அவர்களுடைய துக்கத்தை அனு பவிக்கும் என்னாலே அவர்களெல்லாம் துக்கசூனியர்களாக வேணுமென்று இச்சிக்கும் நான் தாகத்தையுடைய உமக்கு ஜீவன் ஏதுவான இந்த ஜலத்தைக் கொடுப்பதினாலே எனக் குப் பசிதாகம் இளைப்பு இவைகளெல்லாம் நிவர்த்தித்துப் போகும்" என்றுசொல்லி, அந்த ராஜன் அந்த மிலேச்ச னுக்கு தீர்த்தத்தைக் கொடுத்தான்.

அப்போது பலத்தை யிச்சிப்பவர்களுக்குப் பலத்தை கொடுக்கும் பிரமா முதலியவர்கள். அந்த ராஜாவினுடைய மனதை பரிசோதிக்கிறதற்காக முன்னே எடுத்த பிராமணாதி ரூபங்களை விட்டு தமது நிஜஸ்வரூபத்தைக் காண்பித்தார்கள். அப்படி காண்பித்தும் அந்த ராஜன் விரக்தனாகி, விஷயத் திலே ஆசையில்லாமல் அவர்களுக்குப் பிரணாமஞ்செய்து, வாசுதேவன் ஒருவனிடத்திலேயே பக்தியினால் மனதை ஸ்திரமாக வைத்தான். அப்போது அந்த ரந்திதேவனை அனுவர்த்தித்த பேரெல்லாம் அவனுடைய சகவாசப் பிர பாவத்தினாலே ஸ்ரீமந் நாராயணனையே பரமகதியாகவுடைய யோகிகளானார்கள். கற்கனுக்குக் காற்பாயணியெனு மொரு வனுண்டானான். அந்த ராஜாவினிடத்தில் நின்றும் பிரம வம்சம் உண்டாயிற்று. மகா வீரியனுக்கு உருக்ஷயனென்று வொருவனுண்டானான். அவனுக்குத் திரையாருணி கவி புஷ்கலாருணி யெனும் மூவர் உண்டானார்கள். இவர்கள் மூன்றுபேரும் ராஜ வம்சத்திலே யிருந்து பிராமணகதியை யடைந்தார்கள். பிரகக்ஷத்திரனுக்குச் சுகோத்திரனும், அவ னுக்கு அஸ்தியும் உண்டானார்கள். அந்த அஸ்தியானவன் அஸ்தினாபுரத்தை யுண்டாக்கினான். அவனுக்கு அசமீடன் இவீமீடன், புருமீடன் எனும் மூன்று பேருண்டானார்கள். அசமீடனுடைய வம்சத்திலே பிரியமேதன் முதலான பிரா மணர்களுண்டானார்கள். அந்த மூன்று பேர்களுக்குள்ளே அசமீடனுக்குப் பிரகதிட்சுவும், அவனுக்குப் பிரகததன னும், அவனுக்குப் பிரகதகாயனும், அவனுக்குச் சயத்திர னும், அவனுக்கு விசுவசித்தும், அவனுக்குச் சனசித்தும் உண்டானார்கள். அந்த சனசித்துக்கு ருசிராசுவன், திரட அனுகாசியன், வச்சன் எனும் நான்கு பிள்ளைகளுண்டானார் கள். ருசிராசுவனுக்குப் பிருதுசனனும், அவனுக்குப்பார னும், அவனுக்கு நீபனும் உண்டானார்கள். அந்த நீபனுக்கு நூறுபிள்ளைக ளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே காம் பிலியாதிபதியான சமரன் ஜேஷ்டனாகப் பிறந்தான். அந்தச் சமரனுக்குப் பாரதன் முதலான மூன்று பேருண்டானார்கள்.

பாரதனுக்குப் பிரதியென்று ஒருவனுண்டானன். அவனுக்குச் சுகுர்தியும், அவனுக்கு விப்பிராசனும், அவனுக்கு அணுகனும் உண்டானர்கள். அந்த அணுகன் சுகருடைய பெண்ணை கிருத்தியினிடத்திலே பிருமதத்தனை யுண்டாக்கினன். அந்தப் பிருமதத்தன் யோகீசனய் சரஸ்வதியென்கிற பாரியினிடத்திலே விசுவச்சேனரென்று ஒரு பிள்ளையைப் பெற்ருன்.

அந்தப் பிள்ளையானவன் சயிகிருஷருடைய உபதேசத்தினலே யோகதந்திரமென்கிற சாஸ்திரத்தை எழுதினன். அவனுக்கு உதகசனனென்று வொருவனுண்டானன். அவனுக்கு பலலாதனென்று வொருவனுண்டானன். இவர்களெல்லாம் பிரகதிசுவினுடைய வம்சத்திலே பிறந்த ராஜர்கள். இப்பால் திவிபீடனுக்கு எமிநானும், அவனுக்கு கிரிதிமானும், அவனுக்கு சத்தியதிருதியும்; அவனுக்கு திரடனேமியும் அவனுக்குச் சுபாரிவனும், அவனுக்குச் சுமதியும், அவனுக்குச் சன்னதிமானும், அவனுக்குக் கிருதியும் உண்டானர்கள். அந்த கிருதியே இரணியநாபனிடத்தில் நின்றும் யோகத்தைப் பெற்று பிராச்சிய சாமங்களுடைய ஆறு சங்கிதைகளைக் கானம் பண்ணினன். அவனுக்கு உக்கிராயுத னென்று ஒருவ னுண்டானன். அவனுக்கு ஷமியனும், அவனுக்குச் சுவிரனும், அவனுக்குச் சுரவினும், அவனுக்குப் புரஞ்சயனும், அவனுக்குப் பாகுரதனும் உண்டானர்கள். புருமீடனுக்குச் சந்தானமேயில்லை. அசுமீடனுக்கு நளினியென்கிற ஸ்திரீயினிடத்திலே நீளனும், அவனுக்குச் சாந்தியும், அவனுக்குச் சுதாந்தியும், அவனுக்குப் புரீசனும், அவனுக்கு அரதனும், அவனுக்கு அரம்மியாசுவனும் உண்டானர்கள். அந்த அரம்மியாசுவனுக்கு முத்கலனென்றும், எவிநரனென்றும், பிரகதிசுவனென்றும், காம்பில்லிய னென்றும், சிரஞ்சயனென்றும் ஐந்து புத்திரர்களுண்டானர்கள்.

அந்த அரம்மியர் சுவனனவன் தன்னுடைய பிள்ளைகள் ஐந்துபேரும் ஐந்துவிஷயங்களையும் ரக்ஷிக்கக் கர்த்தர்களென்று சொன்னன். ஆகையினலே பாஞ்சாலர்களென்று பெயரையுடையவர்களானர்கள். முத்கலனிடத்தில் நின்றும் பிரம்ம வமிசம் உண்டாயிற்று. அந்த கோத்திரமே மவுத்கல்லிய கோத்திரமென்று பெயரை பெற்றது. அரம்மியாசுவ புத்திரனை அந்த முத்கலனிடத்தில் நின்றும், திவோதாசனென்று ஒரு பிள்ளையும், அகலிகையென்று ஒரு பெண்ணும் இரட்டையாகப் பிறந்தன. அந்த அகலிகையினிடத்திலே

கௌதமரிஷிக்குச் சதானந்தர் பிறந்தார். அந்தச் சதானந்தருக்கு தனுர்வேதத்திலே சமர்த்தரான சத்தியதிருவென்று ஒரு பிள்ளை யுண்டானார். அவரது பிள்ளை சிரத்துவான், அந்தச் சிரத்துவான் ஊர்வசியைக்கண்டு கலிதமாகா நின்ற இந்திரியத்தை நாணற் புதரிலே விட்டுவிட்டான். அந்த இந்திரியத்தினாலே துரோண பத்தினியான கிருபியென்று ஒரு பெண்ணும் கிருபனென்று ஒரு பிள்ளையும் உண்டானார்கள். அந்த இரண்டு சிசுவையும் வேட்டைக்கு வந்த சந்தனு மகாராஜன் கண்டு கிருபையினாலேயெடுத்துக் கொண்டுபோய் ரக்ஷித்தான்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்



*திவோதாசன் ரிக்ஷன் முதல் ஜராசந்தன் விர்த்தாந்தத்தோடுகூட துரியோதனாதிகளின் வம்சம் வரையிலும் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் அச்சுதனருளால் ஆருயிர்பெற்றவனே! முத்கல புத்திரனை திவோதாசனுக்கு மித்திராயுவும், அவனுக்குச் சிவனனும், அவனுக்குச் சுதாசனனும், அவனுக்குச் சகதேவனும், அவனுக்குச் சோமகனும் ஜனித்தார்கள். அந்தச் சோமகனுக்கு நூறுபிள்ளைகளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே சுசந்தகிருது வென்கிறவன் ஜேஷ்டன். பிரஷதனென்கிறவன் கனிஷ்டன். அந்தப் பிரஷதனுக்கு திருபதனும், அவனுக்கு துஷ்டத்தூய்மன் முதலான புத்திரர்களும் துரோபதை யென்றொரு பெண்ணும் உண்டானார்கள். துஷ்டத் தூய்மனுக்கு திருஷ்டகேது உண்டானான். இவர்களெல்லாம் அரம்மியாசுவ வம்சஸ்தரும் பாஞ்சால வம்சஸ்தருமான ராஜாக்கள். அசாமிட புத்திரனை ரிஷியனென்கிறவனுக்குச் சமவரணனென்று ஒருவன் பிறந்தான். அவனுக்கு தபதியென்கிற சூரியகன்னிகை யினிடத்திலே குருக்ஷேத்திராதிபதியான குரு உண்டானான். அந்தக் குருவுக்குப் பரிக்ஷித்து, சுதனு, சன்னு, நிஷதன் எனும் நான்கு பிள்ளைகளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே சுதனுக்குச் சுகோத்திரனும், அவனுக்குச் சிவனனும், அவனுக்குக் கிருதியும், அவனுக்கு உபரிசராசுவும், அவனுக்குப் பிரதகதரன் முதலான குசாம்பன்-மச்சியன் பிரத்தியக்ரன்-சதிமாத்தியன் இவர்களுண்டானார்கள். அவர்களுக்குள்ளே பிரகதரனுக்கு சாக்கிரனும், அவனுக்கு விருஷபனும், அவனுக்குப் புஷ்ப

வானும் அவனுக்கு சத்தியயிதனும், அவனுக்கு குருவும் பிறந்தார்கள். பிரகதரனுக்கு வேறொரு பாரியினிடத்திலே இரண்டு பிளப்பாய் ஒரு சிசு வுண்டாகி மாதாவினாலே பட்டணத்துக்கு வெளியிலே யெறியப்பட்டது. அந்தச் சிசுவைச் ஜரையென்கிற ராக்ஷசியானவள் ஏகமாக சேர்த்து பிழைக்கக் கடவாயென்று சொல்லி லீலைபண்ணினாள். அப்படி பண்ணுகையில் அதுவே ஜீவனோடு கூடி உயிர்த்தது. இந்தப் பாலன் பின் ஜராசந்தன் எனும் நாமம் பெற்றான். அந்த ஜராசந்தனுக்கு சகதேவன் உண்டானான். அவனுக்கு சோபியும், அவனுக்குச் சுருதசிரவசும் உண்டானார்கள். பரிக்ஷித்துவுக்குச் சந்தான மில்லை. இப்பால் சன்னுவுக்குச் சுரதனும், அவனுக்கு விரதனும், அவனுக்குச் சார்வபூமனும், அவனுக்குச் சயச்சனனும், அவனுக்கு ராதியும், அவனுக்கு அனுபாவுகனும், அவனுக்குக் குரோதனனும், அவனுக்குத் தேவாதிதியும், அவனுக்கு ரக்ஷனும், அவனுக்குப் பீமசேனனும், அனுக்குப் பிரதிபனும் ஜனித்தார்கள். இந்தப் பிரதிபனுக்குத் தேவாபி, சந்தனு, பாலிகன் எனும் மூவர் பிறந்தார்கள்.

அவர்களுக்குள்ளே தேவாபி என்கிறவன் பிதுர் சம்மந்தமான ராஜ்ஜியத்தைவிட்டு வனத்தை யடைந்தான். பிற்பாடு சந்தனு ராஜனானான். அந்தச் சந்தனுவே பூர்வ ஜன்மத்திலே மகா பிஷக்கென்கிற பெயரையுடையவனா யிருந்து, வார்த்தீகத்தை யுடைய புருஷர்களைத் தன் கைகளினாலே தொட்டமாத்திரத்தில் அவர்களெல்லாம் ஏவ்வனத்தை யடைந்தார்கள். அதினாலே சந்தனு வென்கிற பெயரை யுடையவனானான். அந்தச் சந்தனுவினுடைய ராஜ்ஜியத்திலே பன்னிரண்டு வருஷம் மழையில்லாமற் போகவே, பிராமணர்கள் அந்தச் சந்தனுவைப் பார்த்து "சந்தனுவே! நீ தமையனான தேவாபியினுடைய ராஜ்ஜியத்தை அனுபவிக்கின்றபடியினாலே பரிவித்தியாக நிற்கிறாய். ஆகையினாலே இந்த ராஜ்ஜியத்திலே வருஷமில்லாமற் போச்சுது. இப்பவும் ராஜ்ஜியத்தின் விருத்தியின் பொருட்டு தமயனுக்கு ராச்சியத்தைக் கொடுத்துவிடு" என்று பிராமணர்களாலே சொல்லப்பட்டவனாய், வனத்திலே போய் ஜேஷ்டனான தேவாபியைக் கண்டு இராஜ்ஜியத்தை யடைந்து பரிபாலனம் பண்ணச் சொல்லிப் பிரார்த்தித்தான். இதற்கு முன்னே சந்தனு மந்திரியான அசுவனுபனாலே அனுப்பிவைக்கப்பட்ட சில பிராமணர்களாலே பாஷண்ட மதத்தை ஆஸ்ரயித்திரா நின்ற அந்தத் தேவாபியானவன் வேதநிந்தா வசனங்களான

சில வார்த்தைகளைச் சொன்னான். அதினாலே அந்தத் தேவாபிக்கு ராஜ்ஜிய யோக்கியதை யில்லாமற் போச்சுது. ஆகையால் சந்தனுவுக்குத் தோஷமில்லாமற் போனபடியினாலே, அப்போது ராஜ்ஜியத்திலே வருணன் வருஷித்தான். அந்தத் தேவாபி யோகமார்க்கத்தை யடைந்து கலாபக் கிராமத்திலே வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறான். கலியுகாந்தத்திலே சந்திர வம்சம் நசித்துப் போகையில் மறுபடியும் கிருதயுகாதியிலே அதை ஸ்தாபிக்கப் போகிறான்.

பாண்டுகுல திலகனே! பாகலிகனுக்குச் சோமதத்த னுண்டானான். அவனுக்குப் பூரிசு, பூரிசிரவ, சல எனும் மூன்று பிள்ளைகளுண்டானார்கள். சந்தனுவுக்குக் கங்கையினிடத்தில் ஆத்மக்கியானியான பீஷ்மருண்டானார். சயஸ்தமான தர்மவித்துகளுக்குள்ளே சிரேஷ்டராயும், மகா பாகவதராயும், வித்துவனாயும், வீரர்களுக்குள்ளே சிரேஷ்டராயு மிருக்கிற அந்தப் பீஷ்மரானவர் ஒருக்கால் யுத்தத்திலே பரசுராமரைச் சந்தோஷிப்பித்தார். உபரிசரவசுவினுடைய வீரியத்தினாலே மச்சிய கர்ப்பத்திற் பிறந்து, வலைக்காரராலே போஷிக்கப் படா நின்ற செம்படவன் பெண்ணினிடத்திலே சந்தனுவுக்குச் சித்திராங்கதனென்றும், விசித்திர வீரியனென்றும் இரண்டு பிள்ளைகளுண்டானார்கள். அந்தச் சித்திராங்கதன் சித்திராங்கதனென்கிற கந்தர்வனாலே யுத்தத்திலே அடிப்பட்டுப் போய்விட்டான். அந்தக் கைவத் கன்னிகையினிடத்தில் பராசருக்குச் சாக்ஷாத் நாராயண அம்சமான வேதவியாசர் அவதரித்தார். அந்த வேதவியாசரிடத்தில் நின்றும் நான் இந்தப் பாகவதத்தை அத்தியயனம் பண்ணினேன். அந்தப் பகவானாயும் பாதராயண ரென்று பிரசித்தராயுமிருக்கிற வியாசர் தம்முடைய சிஷியர்களான பயில ரிஷி முதலான பேரையெல்லாம் விட்டுவிட்டு, புத்திரனாயும் சாந்தனாயு மிருக்கிற எனக்கு இந்த பாகவதத்தைச் சொன்னார்.

விசித்திர வீரியன் சுயம்வரத்தில் ஜயித்து பீஷ்மராலே கொண்டுவரப்பட்ட அம்பிகை அம்பாலிகை யென்கிற காசி ராஜனுடைய இரண்டு பெண்களையும் விவாகம் பண்ணிக்கொண்டு, அவர்களிடத்திலே ஆசக்தமான ஹிருதயத்தையுடையவனாய் க்ஷயவியாதியிலே அகப்பட்டு மரித்தான். சந்தான மில்லாதவனாயும், பிராதாவாயு மிருக்கிற விசித்திர வீரியனுடைய க்ஷேத்திரத்திலே தாயாராலே வம்சத்தை யுண்டாக்க வேணுமென்று சொல்லப்பட்டவரான வியாசரானவர், திருதராஷ்டிரனையும் பாண்டுவையும் விதுரனையும் பெற்றார். அந்தத் திருதராஷ்டிரனுக்குக் காந்தாரியென்கிற ஸ்திரீயி

னிடத்திலே நூறுபிள்ளைகளுண்டானார்கள். அவர்களுக்குள்ளே துரியோதனன் ஜேஷ்டன். துச்சலையென்கிற பெண் கனிஷ்டை: ஒரு ரிஷியினுடைய சாபத்தினாலே தகையப்பட்ட ஸ்திரீ சம்போகத்தை யுடையவனான பாண்டுவினுடைய பாரியையான குந்தியினிடத்திலே எமன்-வாய்வு-இந்திரன் இவர்களுடைய பிரசாதத்தினாலே, யுதிஷ்டிரான்-பீமன்-அர்ச்சுனன் இவர்கள் மூன்றுபேரு முண்டானார்கள். அசுவனி தேவதைகளுடைய பிரசாதத்தினாலே நகுல சகாதேவர்களிரண்டுபேரும் அந்தப் பாண்டுவினுடைய மற்றொரு பாரியையான மாத்ரியினிடத்திலே ஜனித்தார்கள். ராஜனே! துரோபதையினிடத்திலே யுதிஷ்டிரர் முதலான ஐந்து பேருக்கும் உம்முடைய பிதாக்கள் ஐந்துபேரும் ஜனித்தார்கள். அவர்களுக்குள்ளே யுதிஷ்டிரனுக்குப் பிரதிவிந்திரனும் பீமசேனனுக்குச் சுதசேனனும், அர்ச்சுனனுக்குச் சுதகீர்த்தியும், நகுலனுக்குச் சதானீகனும், சகாதேவனுக்குச் சுதகர்மாவும் ஜனித்தார்கள். அந்தப் பிரகாரமே யுதிஷ்டிராதிகளுக்குள்ளே சில பாரியிடங்களில் சிலபேர் ஜனித்தார்கள்.

அவர்களுக்குள்ளே யுதிஷ்டிாருக்குக் கவுரவீரியென்கிற ஸ்திரீயினிடத்திலே தேவகனும், பீமசேனனுக்கு இடும்பியினிடத்திலே கடோற்கசனும், அந்தப் பீமனுக்குக் காலியென்ற ஸ்திரீயினிடத்திலே சர்வகேதனும், சகதேவனுக்குப் பர்வத புத்திரியான விசையினிடத்திலே சுகோத்திரனும், நகுலனுக்கு ரேணுவதியென்கிற ஸ்திரீயினிடத்திலே நிரமித்திரனும், அர்ச்சுனனுக்கு உலூபியென்கிற நாகக் கன்னிகையி னிடத்திலே அராவானும், மணலூர் பதியினிட பெண்ணினிடத்திலே புத்திரிகா தர்மத்தினாலே பப்பரவாகனனும், மறுபடியும் சுபத்திரையென்கிற ஸ்திரீயினிடத்திலே அதிரதர்களை யெல்லாம் ஜயிக்கத் தக்கவனாக உமக்குத் தகப்பனான அபிமன்னியு வானவன் பிறந்தான். அந்த அபிமன்னியுவுக்கு உத்தரை என்கிற ஸ்திரீயினிடத்திலே நீர் பிறந்தீர். துரோணபுத்திரனான அஸ்வத்தாமாவினுடைய பிரமாஸ்திரத்தினாலே குருவம்சம் நாசத்தை யடைகையில், நீரொருவரே கிருஷ்ணனுடைய பிரபாவத்தினாலே ஜீவனோடேகூட அந்த விபத்தில் நின்றும் விடுவிக்கப்பட்டீர். பரிக்ஷித்தே! உமக்கு ஜனமேஜயனும், சுதசேனனும், பீமசேனனும், வீரியவானான உக்கிரசேனனும் ஜனித்தார்கள்.

இவர்களுக்குள்ளே ஜனமேஜயன் உம்மை தக்ஷகனாலே மரணத்தை யடைந்தவனாக அறிந்து, துவேஷங்கொண்டு

சர்ப்பயாகத்தினாலே சர்ப்பங்களை அக்கினியிலே ஓமம் பண்ணப்போகிறான். அந்த ஜனமேஜயனுக்குச் சாதனீகனென்றொருவனுண்டாகி யாக்கியவற்கியரிடத்தில் நின்றும் வேதத்தையும் கிருபாசாரியினிடத்தில் நின்றும் சர்வ சாஸ்திரங்களையும் சவுனக ரிஷியினிடத்தில் நின்றும் மேலான ஆத்மக்கியானத்தையு மடையப்போகிறான். அந்தச் சதானீகனுக்குச் சகஸ்ரானிகனும், அவனுக்கு அசுவமேதகனும், அவனுக்கு அசீரமகிருஷ்ணனும், அவனுக்கு நிச்சத்திரனும் ஜனிக்கப்போகிறார்கள்: அந்த நிச்சக்கிரன் அஸ்தினாபுரமானது கங்கையிலே முழுகிப்போகையில் கவுசாம்பிகையென்கிற பட்டணத்திலே வாசம் பண்ணப்போகிறான். மேலுமிந்த நிச்சகிரகனுக்கு உகததனும், அவனுக்குச் சித்திராதனும், அவனுக்குச் சீரதனும், அவனுக்கு விருஷ்டிமானும், அவனுக்குச் சுஷேணனும், அவனுக்குச் சுனிதனும், அவனுக்கு நிருசக்ஷசுவும், அவனுக்கு நளனும், அவனுக்குப் பாரிப்பிலவனும், அவனுக்குச் சுனையனும், அவனுக்கு மேதாவியும், அவனுக்கு நிருபஞ்சயனும், அவனுக்கு அபூர்வனும், அவனுக்கு நிமியும், அவனுக்கு கிரகிதானும், அவனுக்குச் சுதாசனும், அவனுக்குச் சதானிகனும், அவனுக்கு உதையனனும், அவனுக்கு அகீதநரகனும், அவனுக்குத் தண்டபாணியும், அவனுக்கு க்ஷேமகனும் உண்டாகப் போகிறார்கள். தேவரிஷிகளினாலே பூஜிக்கப்பட்ட பிரகக்ஷத்திரனுடைய வம்சமானது கலியிலே க்ஷேமகனென்கிற ராஜாவை யடைந்து அவனோடு நிற்கப்போகிறது.

இனிமேல் மகாராஜாக்கள் சிலபேருண்டாகப் போகிறார்கள் அவர்களைச் சொல்லுகிறேன் கேளும். மேற்கூறிய பிரகதானுக்கு ஜராசந்தனும், அவனுக்குச் சகதேவனும், அவனுக்கு மாற்சாரியும், அவனுக்குச் சுதசிரவசும், அவனுக்கு யுதாயுதாயுவும், அவனுக்கு நிரமித்திரனும், அவனுக்குச் சுனக்ஷத்திரனும், அவனுக்குப் பிரகவகர்மாவும், அவனுக்குச் சனசித்தும், அவனுக்குச் சுதஞ்சயனும், அவனுக்கு விப்பிரனும், அவனுக்குச் சுசியும், அவனுக்கு க்ஷேமனும், அவனுக்குச் சுவவிருதனும், அவனுக்குத் தர்மநேத்திரனும், அவனுக்குச் சிரதனும், அவனுக்குத் திடசேனனும், அவனுக்குச் சுமதியும், அவனுக்குப் பெலனும், அவனுக்குச் சுனிதனும் அவனுக்குச் சத்தியசித்தும் அவனுக்கு விசுவசித்தும், அவனுக்கு ரிபுஞ்சயனும் உண்டாகப்போகிறார்கள். இவர்களெல்லாம் பிரகதர வம்சரான ராஜாக்கள். இவர்கள் ஆயிரம் வருஷத்திற்குள்ளே யுண்டாகப்போகிறார்கள்.

## இருபத்துமூன்றுவது அத்தியாயம்

*அனு முதலியோர் வம்சமும், எது முதலியோர் வம்சமும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ஆண்மையில் மிக்க அபிமன்யு புத்திரனே! யயாதினுடைய புத்திரனான அனுவுக்குச் சபாநரன், சடசு, பரோக்ஷன் எனும் மூன்று புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே சபாநரதனுக்குக் காலநரனும், அவனுக்குச் சிரஞ்சயனும், அவனுக்கு ஜனமேஜயனும், அவனுக்கு மகாசாலனும், அவனுக்கு மகாமனசும் ஜனித்தார்கள். மகாமனசுக்கு உசிநரனென்றும், திதிட்சூவென்றும் இரண்டு பிள்ளைகள். உசிநரனுக்குச் சிபி ஷமி முதலிய நாலுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே சிபிக்கு விரஷாதற்பனென்றும், சுவிரனென்றும், மத்திரனென்றும், கேகயனென்றும் நாலு பிள்ளைகள், திதிட்சூவுக்கு ருசத்திரதனும், அவனுக்கு ஓமனும், அவனுக்குச் சுதபசும், அவனுக்குப் பலியும் உண்டானார்கள். பலிமகாராஜனுடைய க்ஷேத்திரத்திலே திரகதபசென்கிற ரிஷிக்கு அங்கன்-வங்கன்-களிங்கன்-சுகன்-பவுண்டரன்-ஆந்தரன் என்பார் ஜனித்து தங்கள் பெயரால் அங்கதேச முதலிய ஆறு தேசங்களை யுண்டாக்கினார்கள்.

அவர்களுக்குள்ளே அங்கனுக்கு நகபானனும், அவனுக்குத் திவிரதனும், அவனுக்குத் தர்மரதனும், அவனுக்குச் சித்திராதனும் ஜனித்தார்கள். அந்தச் சித்திராதனுக்குச் சந்தானமில்லை. தர்மரதனுக்கு ரோமபாதரென்று ஒருவருண்டானார். அவருக்குச் சகாவான தசரதன் தன்னுடைய பெண்ணான சாந்தையைப் புத்திர சுவிகாரமாகக் கொடுத்தான். அந்தச் சாந்தையென்கிற பெண்ணை ரிசியசிருங்கர் விவாகம் பண்ணிக்கொண்டார். அந்த அரணிபுத்திரரான ரிசியசிருங்கரை யோகஸ்திரீகளானவர்கள் நாட்டியம் சங்கீதம்-பூஜை முதலான உபசாரங்களினாலே வருஷத்தோடுகூட பட்டணத்துக்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். அந்த ரிசியசிருங்கரானவர் அபுத்திரனான தசரதனுக்குப் புத்திர காமேஷ்டியைப் பண்ணிவைத்து சந்தானத்தை யுண்டாக்கினார். ரோமபாதருக்குச் சதுரங்கரும், அவருக்குப் பிருதுலாக்ஷனும், அவனுக்குப் பிரகதரதனும், அவனுக்குப் பிரகதகர்மாவும், அவனுக்குப் பிரகதபானுவும், அவனுக்குப் பிரகனமனசும், அவனுக்குச் சயதரனும் ஜனித்தார்கள்.

ஜயதரதனுக்குச் சம்பூதியென்கிற ஸ்திரீயினிடத்திலே விசயனும், அவனுக்குத் திருதியும், அவனுக்குத் திருதவிருதனும், அவனுக்குச் சத்தியகர்மாவும், அவனுக்கு ஆதிரதனும் உண்டானார்கள். பிள்ளையில்லாமலிருக்கிற அந்த ஆதிரதனானவன் கங்காதீரத்திலே லீலைபண்ணிக் கொண்டிருக்கும்போது, குந்திதேவிக்குக் கன்னிகாதசையிலே பிறந்தவனும், அவளால் ஒரு பெட்டியில்வைத்து கங்காப்பிரவாகத்தில் விடப்பட்டவனுமிருக்கிற அந்தப் பாலனை தனக்குப் பிள்ளையாக வைத்துக்கொண்டான். அவனே கர்ணனென்பான். அந்தக் கர்ணனுக்கு விரஷ்சேனனென்று ஒரு பிள்ளையுண்டானான். யயாதிபுத்திரனான திரியுவுக்குப் பப்புருவென்று ஒருபிள்ளையும் அவனுக்குச் சேதுவும், அவனுக்கு ஆரத்தனும், அவனுக்குக் காந்தாரனும், அவனுக்குத் தர்மனும், அவனுக்குக் கிருதனும், அவனுக்குத் துர்மகனும், அவனுக்குப் பிரசேதசுக்களும் உண்டானார்கள். அந்தப் பிரசேதசுக்கு நூறுபிள்ளைகள். அந்த நூறுபிள்ளைகளும் வடக்குத்திக்கிலே மிலேச்சர்களுக்கு அதிபதியாயிருந்தார்கள். யயாதிபுத்திரனான துருவசுவுக்கு வன்னியுவும், அவனுக்குக் கற்கனும், அவனுக்குப் பானுவுரனும், அவனுக்குத் திருசானுவும், அவனுக்கு உதாரபுத்திரபுத்தியான கரந்தனனும், அவனுக்கு மருத்தனும், அவனுக்குப் புத்திரனும் ஜனித்தார்கள். அந்தப் புத்திரனானவன் பவுரவ வம்சமான துஷ்யந்தனைச் சிலகாலம் புத்திரனாக அனுபவித்தான். பிற்பாடு அந்தத் துஷ்யந்தன் மறுபடியும் ராஜ்ஜியத்தைக் கோறினவனாகி தன்னுடைய பவுரவ வம்சத்தை அடைந்தான். வாரீர் நரசிரேஷ்டனே! இனிமேல் யயாதினுடைய ஜேஷ்ட புத்திரனான எதுவினுடைய மகாபுண்ணியகரமாயும், மனுஷியர்களுடைய சமஸ்த பாபங்களையும் போக்கடிக்கத் தக்கதாயுமிருக்கிற வம்சத்தைச் சொல்லுகிறேன் கேளும். எதுவுக்கு சகஸ்சிரசித்து, குரோஷ்டு, நளன், ரிபுவெனும், நாலு பிள்ளைகள் உண்டானார்கள். அவர்களுக்குள்ளே சகஸ்திரசித்துக்குச் சத்துருசித்துவென்று ஒருவன் பிறந்தான். அவனுக்கு மகா அயனென்றும், வேணுஹயனென்றும், ஹேஹயனென்றும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள்.

அவர்களுக்குள்ளே ஹேஹயனுக்குத் தருமரும், அவருக்கு நேத்திரரும், அவருக்குக் குந்தியும், அவருக்கு சொஹஞ்சியும், அவருக்கு மயிஷமானும் அவருக்குப் பத்திரஜனகரும் பிறந்தார்கள். அந்தப் பத்திரஜனகருக்குத் துர்மதனென்றும், தனகனென்றும் இரண்டு பிள்ளைகளுண்டானார்

கள். " அவர்களுக்குள்ளே தனகனுக்குக் கிருதவீரியன், கிருதாக்கினி, கிருதகர்மா, கிருதோசாவெனும் நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே கிருதவீரியருக்குக் கார்த்தவீரியார்ச்சுனன் பிறந்தான். சப்ததீபாதிபதியான அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனானவன் ஸ்ரீ ஹரியினுடைய அம்சமான தத்தாத்திரேயரிடத்தில் நின்றும் அணிமாதி அஷ்ட ஐஸ்வரியங்களையுடைய யோகாப்பியாசத்தைப் பெற்ருன். அந்தக் கார்த்தவீரியார்ச்சுனனுடைய கதியை எக்கியம் தானம் தபசு யோகம் சௌரியம் வீரியம் ஜயம் இவை முதலான குணங்களாலே ஒரு ராஜனும் அடையப் போகிறதில்லை. ஒருக்காலும் ஒருவராலுந் தடுக்கப்படாத பலத்தையுடையவனான கார்த்தவீரியார்ச்சுனன் நாள் தோறும் ஸ்ரீ ஹரியையே ஸ்மரித்துக்கொண்டு, எண்பத்தையாயிர வருஷம் ராச்சியபாரம் பண்ணிக்கொண்டிருந்தான். அவனுடைய பதினாயிரம் பிள்ளைகளுக்குள்ளே சயத்துவசன், சூரசேனன், விருஷணன், மதன், ஊற்சிதன் எனும் ஐந்துபேர் யுத்தத்திலே மரணத்தை யடையாமல் மீண்டார்கள். அவர்களுக்குள்ளே சயத்துவசனுக்குத் தாலசங்கன் பிறந்தான். அவனுக்கு நூறுபிள்ளைகள் பிறந்து அந்த நூறு பேரும் சகரனாலே சங்கரிக்கப்பட்டார்கள். அவர்களுக்குள்ளே ஜேஷ்டனானவன் விதிஹோத்திரன். அர்ச்சுன புத்திரனான மதுவுக்கு விருஷணியெனும் ஒருவன் பிறந்தான். அவனுக்கு விருஷணி முதலாக நூறுபிள்ளைகளுண்டானார்கள். அவர்களே மாதவர்களென்றும், விருக்ஷணிகளென்றும், யாதவர்களென்றும் பேர்பெற்றார்கள். எதுபுத்திரனான குரோஷ்டுவுக்கு விரசினவானென்று ஒருவன் பிறந்தான். அவனுக்கு அவிபூவும், அவருக்குத் திரிசங்குவும், அவருக்குச் சித்திரரதரும், அவருக்கு மகாயோகியாய் மகாபோகவானாய் சசிபிந்து யென்பவரும் பிறந்தார். அந்தச் சசிபிந்துவானவர் மகா சக்கரவர்த்தியாயும், பரர்களாலே ஜயிக்கப்படாதவராயு மிருந்தார். அவருக்குப் பதினாயிரம் பேர் ஸ்திரீகள். அந்தப் பதினாயிரம் ஸ்திரீகளிடங்களிலேயும் ஒவ்வொருத்திக்கு லக்ஷம் பிள்ளைகள் வீதம் பதினாயிர லக்ஷம் பிள்ளைகளைப் பெற்றார். அவர்களுக்குள்ளே பிருதுசிரவசு, பிருதுகிறதி, பிருதுயெசசு முதலாக ஆறுபேர் பிறந்தனர்கள். அவர்களுக்குள்ளே பிருதுசிரவசுவுக்குத் தர்மரென்று வொருவர் பிறந்தார். அவருக்கு நூறு அஸ்வமேதம் பண்ணுகின்ற உசநசுவானவர் பிறந்தார். அவருக்கு ருசகர் பிறந்தார். அவருக்குப் புருஜித்து, ருக்குமன், ருக்குமேசு, பிருது, சாமகன் எனும் ஐந்து பிள்ளைகள் பிறந்தார்

கள். அவர்களுக்குள்ளே சயிப்பியா பதியான சாமகரானவர் அபுத்திரரா யிருக்கும்போதும், பாரியையினுடைய பயத்தினலே வேறொரு பாரியைப் பரிக்கிரியாமலே யிருந்தார்.

ஒருக்கால் அந்தச் சாமகர் சத்துரு கிரகத்தில் நின்றும் ஒரு கன்னிகையைக் கிரகித்துக்கொண்டுவந்தார். அப்போது ரதத்தின் மீதிருக்கிற அந்தப் பெண்ணைப் பார்த்த சயப்பியானவள் மிகவுங் கோபத்தை யுடையவளாகி மகாவேகத்தோடும் பர்த்தாவைப் பார்த்து "படனே! ரதத்தில் நானிருக்கிறவிடத்தில் யாரை யேற்றிக்கொண்டு வந்தாய்" என, அவளைப்பார்த்து சாமகரானவர் உனது மருமகளென்று சொன்னார். அப்போது சயிப்பியானவள் புன்சிரிப்பையுடையவளாகி, பர்த்தாவைப் பார்த்து சொல்லுகின்றாள்: ஐயா! நான் பிள்ளையைப் பெறாதவளாயிருக்க, எனக்கு மருமகளென்கிறது எப்படி கூடுமென்றாள். அதற்கு ராஜா மகிஷியே! இனி நீ பெறப்போகும் புத்திரனுக்கு இவள் பாரியாளென்றனன். அப்போது அவனால் முன்னாலே ஆராதிக்கப்பட்ட விசுவதேவர்களும் பிதுர்க்களும் ராஜாவின் கஷ்ட நிலைமையைப் பார்த்து, ததாஸ்துவென்று அனுக்கிரகித்தார்கள். அந்தச் சயிப்பியும் ஒரு புத்திரனைப் பெற்றாள். அவனே விதற்பனென்பான். அவன் தகப்பனாலே கொண்டு வரப்பட்டுப் பதிவிரதையாக விருந்த சுனுஷையை என்கிற பெண்ணை விவாகம் செய்துகொண்டான்.



## இருபத்திநான்காவது அத்தியாயம்



*விதற்பனுடைய வம்சம் முதல் ராமகிருஷ்ணர்களுடைய உற்பத்தி வரைக்கும் சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பொய்யைக்கடிந்து மெய்யைப்பற்றும் புனிதனே! அந்த விதற்பன் சுனுஷை யென்கிற ஸ்திரீயினிடத்திலே கருத கிருதர்களென்கிற இரண்டு புத்திரர்களையும், வைதற்பகுலத்துக்குப் பிரியரான ரோமபாதரையும் பெற்றான். அந்த ரோம்பாதருக்குப் புருவென்று ஒருவரும், அவருக்குக் கிருதியும், அவருக்கு உசீகரும், அவருக்குச் சேதியும், அவரிடத்தில் நின்றும் சிசுபாலன் முதலான ராஜாக்களு முண்டானார்கள். விதற்பருக்கு ஜேஷ்ட புத்திரனான கிருதருக்குக் குந்தியென்று ஒருவனும், அவருக்கு விருஷணியும், அவருக்கு திருவிருதியும், அவருக்குத் தசாஹருகரும், அவருக்கு வியோமசுதரும், அவருக்குச் சீமூதரும், அவருக்கு விகுருதி

யும், அவருக்குப் பீமரதரும், அவருக்கு நவரதரும், அவருக் குத் தசரதரும், அவருக்குச் சகுனியும், அவருக்குக் குந்தி யும், அவருக்குத் தேவாரதியும், அவருக்குத் தேவக்ஷத்திர ரும், அவருக்கு மதுவும், அவருக்குப் புருவசரும், அவருக்கு அனுவும், அவருக்குப் பூருவோத்திரரும், அவருக்கு அங் கிசுவும், அவருக்குச் சாத்துவதரும் பிறந்தார்கள். அந்தச் சாத்துவதருக்குப் பசமானன், பிசி, திவ்வியன், விருஷ்ணி, தேவவிருதன், அந்தகன், மகாபோசன் எனும் ஏழு புத்திரர் கள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே பசமானனுக்கு நிம ரோசிகங்கணி விருஷ்ணி யென்பார் ஒரு ஸ்திரீயினிடத்திலே பிறந்தார்கள். மற்றொரு ஸ்திரீயினிடத்திலே சதசித்து, சகஸ் திரசித்து, அயுதசித்து எனும் மூவர்கள் பிறந்தார்கள். தேவ விருதனுக்குப் புருவென்று ஒருவனுண்டானான். இந்தப் புரு தேவவிருதன் இவர்களிருவராலேயும் பதினாலாயிரத்து அறு பத்தைந்துபேர் உபதேச பேதத்தாலே மோக்ஷத்தை யடைந் தார்கள். மகாபோசனென்கிறவன் அதிக தர்மாத்மா. போஜ ராஜாக்களெல்லாம் இவனுடைய வம்சத்திலே பிறந்தவர்கள்.

அரசரே! விருஷ்ணிக்குச் சுமத்திரரும், அவருக்குயுதா சித்தும், அவருக்குச் சினியும், அவருக்கு அனமித்திரரும், அவருக்கு நிம்மனரும் உண்டானார்கள். அந்த நிம்மனருக் குச் சந்திராசிதரென்றும், பிரசேனரென்றும் இரண்டு பிள்ளை களுண்டானார்கள். அனமித்திரருக்குச் சினியென்று ஒரு பிள்ளை. அவருக்குச் சத்தியகரும், அவருக்கு யுயுதானரும், அவருக்குச் சயரும், அவருக்குக் குணியும், அவருக்கு யுவந் திரரும் ஜனித்தார்கள். அந்த அனமித்திரருக்குப் பிரசனி யென்று ஒருபிள்ளை பிறந்தான். அவருக்குச் சுவபலக்கர், சித்திரகர் எனும் இரண்டுபிள்ளைகள். சுவபலக்கருக்குக் காந் தினி யென்கிற ஸ்திரீயினிடத்திலே அக்குரூரர் முதலான பன்னிரண்டு பிள்ளைகளும், சுசாகையென்று ஒருபெண்ணும் பிறந்தார்கள். அக்குரூரருக்குத் தேவவானென்றும், உபதேவ னென்றும் இரண்டு புத்திரர்கள் சுத்திராதையென்கிற ஸ்திரீ யினிடத்திலே பிறந்தார்கள். விருஷனுக்குப் பிருதுவீடூரதன் முதலான வெகுபேர் பிறந்தார்கள். அந்தகனுக்குக் குகூரன், பசமானன், ரசுசி, கம்பளபரயிஷன் எனும் நாலுபிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களுக்குள்ளே குகூரனுக்கு விருஷ்ணியும், அவருக்கு விலோமாவும், அவருக்கு கபோதரோமாவும், அவருக்கு அனுவும் பிறந்தார்கள். அந்த அனுவுக்குத் துந்துபியும், அவருக்குப் பரித்திரும், அவருக்குப் புனர் வசுவும் ஜனித்தார்கள்.

அந்தப் புனர்வசுவுக்கு ஆகுகனென்றொரு பிள்ளையும், ஆகுகை யென்றொருபெண்ணு முண்டானார்கள். அந்த ஆகுகனுக்குத் தேவகனென்றும், உக்கிரசேனனென்றும் இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். இந்தத் தேவகனுக்குத் தேவவானென்றும், உபதேவனென்றும், சுதேவனென்றும், தேவவாதனென்றும் நாலு பிள்ளைகளும், அவர்களோடு திருத்தேவாவென்றும், சாந்திதேவா வென்றும், உபதேவா வென்றும், ஸ்ரீ தேவாவென்றும், தேவரக்ஷிதாவென்றும், சகதேவாவென்றும், தேவகி யென்றும் ஏழு பெண்களும் பிறந்தார்கள். இந்த ஏழு பெண்களையும் வசுதேவரானவர் விவாகம் பண்ணிக்கொண்டார். உக்கிரசேனனுக்குக் கங்கி சன், சுனமா, நிக்குரோதன், கக்குவன், சங்கு, சபு, நாஷ்ட பாலன், விவி, சிரஷ்டன், துஷ்டிமான் எனும் பத்துப் பிள்ளைகளும், கமுசை, கங்கவதி, கங்கா, சுரபூ, பாரஷ்ட பாலிகா வெனும் ஐந்து பெண்களும் பிறந்தார்கள். இவர்கள் வசுதேவருடைய தம்பிமாரான தேவபாகன் முதலான பேர்க ளுடைய ஸ்திரீகளானார்கள்.

பசமானனுடைய பிள்ளையான விடுரதனுக்குச் சூரனென் றொருவன் பிறந்தான். அவனுக்குச் சினியும், அவனுக்கு போசனும், அவனுக்கு இருதிகனும் பிறந்தார்கள். இருதி கனுக்குத் தேவமீடன், சத்தனு, கிருதவர்மன் எனும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். தேவமீடனுக்குச் சூரனென்று ஒரு பிள்ளை அவன் மாரிஷையென்கிற ஸ்திரீயினிடத்தில் வசு தேவன், தேவபாகன், தேவசிரவன், ஆனகன், சிருஞ்சயன், சியாமகன், கங்கன், இஷுதகன், வச்சகன், பகன் எனும் நிர்த் துஷ்டர்களான பத்துப்பிள்ளைகளைப் பெற்றான். சிரேஷ்ட ரான வசுதேவர் பிறக்கும்போது தேவதுந்துபி முழங்கிற்று. இந்த வசுதேவர் முதலான பேருக்குப் பிருதை, சிரததேவா, சிரதகீர்த்தி, சிரதசவா, ராசாதிதேவி யெனும் ஐவர் உடன் பிறந்தவர்கள். இவர்களுக்குள்ளே பிரதை யென்கிறவளைப் பிதாவான சூரனானவன் தனக்குச் சகாவாயும், அபுத்திரனாயு மிருக்கிற குந்திராஜனுக்குக் கொடுத்தான். அந்தப் பிரதை யானவள் தன்னுடைய கிரகத்திலே வாராநின்ற தூருவாச ரைப் பூஜையினாலே சந்தோஷிப்பித்து, அவரிடத்தில் நின்றும் தேவதைகளைத் தான் வேண்டும்பொழுது அழைப் பித்துக் கொள்ளும்படியான ஒருவித்தையை யடைந்தாள்.

அந்த வித்தையைச் சோதிக்கவேண்டி கன்னிகையா யிருக்கும்போதே சுசியா யிருந்துகொண்டு சூரியனை மந்திரப் பிரபாவத்தினாலே யழைத்தாள். அந்த க்ஷணத்திலே பிரத்தி

யக்ஷமாக வந்த சூரியனைப்பார்த்த பிரதையானவள் ஆச்சரி யத்தை யுடையவளாய் "வாரீர் தேவனே! மந்திர சோதனைக் காக உம்மைக் குறித்து மந்திரத்தை ஜபித்தேன். என்னு டைய அபராதத்தைப் பொறுத்துக்கொண்டு உம்முடைய ஸ்தானத்திற்குப் போம்" என்று சொல்ல, அந்தக் குந்தியைப் பார்த்துச் சூரியன் சொல்லுகிறான்: வாராய் சோபனமான இடையை யுடையவளே! தேவதைகளுடைய பிரத்தியக்ஷ மானது வியர்த்தமாகப் போகக்கூடாது. ஆனபடியினாலே உனக்கு ஒரு புத்திரனைத் தருகிறேன். நீ கன்னிகையாக யிருந்தாலும் உனக்கு யோனி தோஷமில்லாமலிருக்கும்படி அனுக்கிரகம் பண்ணுகிறேன் என்று சொல்லி சூரியனானவர் அந்தப் பிரதையான குந்தியினிடத்திலே கர்ப்பாதானம் பண்ணி அந்த க்ஷணத்திலே ஆகாசத்தை யடைந்தார். அப் போதே குந்திக்கு இரண்டாம் சூரியனைப்போல ஒரு பிள்ளை யுண்டானான். குந்தியானவள் உலகத்துக்குப் பயந்தவளாகி, துக்கத்தினாலே அந்த குழந்தையைக் கங்காப் பிரவாகத்திலே விட்டுவிட்டாள்.

பிற்பாடு உமக்குப் பாட்டனாயும் மகா பராக்கிரமசாலியு மான பாண்டுராஜனானவன் அந்தக் குந்தியை விவாகம் பண்ணிக்கொண்டான். இப்பால் சிரதைதேவை யென்கிற வளைக் கருசதேசாதிபதியான விருத்த தர்மாவானவன் விவா கம் பண்ணிக்கொண்டான். அந்தச் சிரதை தேவியினிடத் திலே தமித்திபனானவன் ஒரு ரிஷியினாலே சபிக்கப்பட்டவ னாகி, தந்தவக்கிரனென்று பெயரை யுடையவனாய்ப் பிறந் தான். கேகய தேசாதிபதியான திருஷ்டகேதுவானவன் சுதகிரதி யென்கிறவளை விவாகம் பண்ணிக்கொண்டு, அவளிடத்திலே சந்தாதனன் முதலான ஐந்து பிள்ளைகளைப் பெற்றான். ராசாதிதேவி யென்கிற ஸ்திரீயினிடத்திலே சயஸ்துசயனானவன் விந்தானு விந்தர்களென்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்றான். சேதிராஜனான தமகோஷன் சித சிரசு யென்கிறவளைப் பாணிக்கிரஹணம் பண்ணிக்கொண்டு அவளிடத்திலே சிசுபாலனை பெற்றான். அந்தச் சிசுபால னுடைய உற்பத்தி முன்னாலே சொல்லப்பட்டது. தேவபாக னுக்கு மூசையென்கிற ஸ்திரீயினிடத்திலே சித்திரகேதுவும், பிரகதபலனும் பிறந்தார்கள். வாரீர் மகாராஜனே! சங்கவதி யென்கிற ஸ்திரீயினிடத்திலே தேவசிரவசுக்குச் சுவிரனும், இக்ஷுமானும் பிறந்தார்கள். கங்கனிடத்தில் நின்றும் கங்கை என்கிற ஸ்திரியினிடத்திலே பகனும், சத்தியசித்தும், புரு சித்தும் பிறந்தார்கள். ராஷ்டிரபாலியினிடத்திலே சிரஞ் சயனுக்கு விரஷன் துர்மருஷணன் இவர்கள் முதலானபேர்

பிறந்தார்கள். சியாமகனானவன் சூராபூமியி னிடத்திலே இரணியகேசன் இரணியாக்ஷன் என்கிற இரண்டு பிள்ளை களைப்பெற்றான். மித்திரகேசியென்கிற அப்சரசுவினிடத்திலே வச்சனென்கிறவருக்கு விருகன் முதலானபேர்ஜனித்தார்கள்.

விருகனானவன் தூறுவாக்ஷி யென்கிற ஸ்திரீயினிடத் திலே தக்ஷன்-புக்ஷசன்-ரசாலுவன் இவர்கள் முதலானபேரை வுண்டாக்கினான். சமிகரிடத்தில் நின்றும் சுதானினியென் கிற ஸ்திரீயானவள் சுமித்திரன் - அர்ச்சுனன் - பாணன் இவர்கள் முதலானவர்களைப் பெற்றாள். அன்றியும் கோமுக னென்கிறவன் கர்னிகையென்கிற ஸ்திரீயினிடத்திலே ரிது தாமன் செயனன் என்கிற இரண்டு பிள்ளைகளைப் பெற்றான். பவுரவி, ரோகணி, பத்திரா, மதிரா, ரோசனி, இளா, தேவகி என்று சொல்லப்பட்டவர்கள் வசுதேவருடைய பாரியைகள். பலன், கேதன், சாரணன், தூர்மதன், விபுலன், துருவன், கிருதன் முதலியவர்களை வசுதேவர் ரோகணியினிடத்திலே யுண்டாக்கினார். சுபத்திரன், பத்திரபாகு, துர்மதன், பத்தி ரன், பூதன் முதலான பன்னிரண்டு பிள்ளைகள் வசுதேவருக் குப் பவுரவி யென்கிற ஸ்திரீயினிடத்தில் பிறந்தவர்கள். நந்தன், உபநந்தன், கிற்தகன், தரன் முதலானபேர் பத்திரை யின் பிள்ளைகள்.

கோசல ராஜாவினுடைய பெண்ணான பத்திரையானவள் குலதீபகனான கேசியென்று ஒரு பிள்ளையைப்பெற்றாள். அஸ் தன் எமாங்கதன் முதலானபேர் ரோசனை யென்கிறவளுக்குப் பிறந்தார்கள். இளையென்கிறவளிடத்திலே எது சிரேஷ்டர்க ளான உருவலகன் முதலானபேர் பிறந்தார்கள். அந்த வசுதேவரானவர் திருத்தேவி யென்கிற ஸ்திரீயினிடத்திலே திருவிஷ்டனென ஒரு பிள்ளையைப் பெற்றார். பிரசியமன் பிர சிரதன் முதலானவர் சாந்தி தேவியினுடைய பிள்ளைகள். கல்பவருஷன் முதலான பத்துபேர் உபதேவியினுடைய பிள்ளைகள். வசு அம்சன் சுதனன் முதலான ஆறுபேர் ஸ்ரீ தேவியினுடைய பிள்ளைகள். நவசாத்திரன் கேதன் இவர்கள் முதலானபேர் தேவரக்ஷிதியினுடைய பிள்ளைகள். பின்னும் அந்த வசுதேவரானவர் சகதேவை யென்கிற ஸ்திரீயினிடத்திலே புருவிசுருகன் முதலான எட்டு பிள்ளை களைப் பெற்றார். அவர்களாரென்றால் சாக்ஷாத் தர்மனும் வசுக்களுமே யாவர். தேவகியென்கிற ஸ்திரீயினிடத்திலே வசுதேவரானவர் கிரதிவந்தனனையும், சுஷேஷனனையும், பத்திரசேனனையும், ருசுவையும், சமந்தனையும், பத்திராக்கனை யும், சேஷாம்சமான சங்கருஷணனையும், சாக்ஷாத் ஸ்ரீ ஹரி

யாயும் எட்டாவது பிள்ளையாயும் மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனை யும், உமக்குப் பாட்டியாயும் மகானுபாவையாயும் இருக்கிற சுபத்திரையையும் பெற்றார்.

வாரீர் ராஜனே! சர்வக்கியராயும், சர்வாந்தரியாமியா யும், சர்வ சரீரியாயும், சேதனுசேதன விலக்ஷணராயுமிருக்கிற இந்தப் பகவானுடைய ஜன்ம கர்மங்களுக்கு அவருடைய மாயையான இச்சையன்றி வேறொரு ஏதுவுமில்லை. அந்தப் பகவானுடைய மாயாலீலா சரித்திரமானது ஜீவர்களுக்கு அனுகிரகத்தின்பொருட்டும், பிரபஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டி-ஸ்திதி-லயத்தின்பொருட்டும், சங்கார நிவர்த்தியிலே பகவத் பிராப்தியின் பொருட்டுமாக விருக்கின்றது. அனேக அக் ரோணிகளுக்குப் பதிகளாய் ராஜாக்களென்று பேரிட்டுக் கொண்டிருக்கிற அரசர்களாலே ஆக்கிரமிக்கப்பட்ட பூமியி னுடைய பாரத்தை நீக்குகிறதற்காக அவதரியாநின்ற பகவா னுன ஸ்ரீ கிருஷ்ணரானவர் பலராமருடனே கூடிக்கொண்டு, அபரிமிதமான தேவ சிரேஷ்டர்களாலும் மனதினுல் சிந்திக்கக்கூடாத லீலைகளைச் செய்தார்.

கலியிலே ஜனிக்கப் போகிற பக்தர்களுடைய அனுக்கிர கத்தின்பொருட்டு துக்கம்-சோகம்-அக்கியானம் இவைகளைப் போக்கடித்தும் பாவனமாயுமிருக்கிற கீர்த்தியை விஸ்தரிப்பித் தார். போஜர்கள்-விருஷணிகள்-அந்தகர்கள்-மாதவர்கள்-சூரசேனர்-தாசாருகர்கள்-கவுரவர்கள்-சிருஞ்சயர்கள்-பாண்ட வர்கள் முதலான சமஸ்த ராஜாக்களினுலேயுங் கொண் டாடப்பட்டவராயும் இனியராயுமிருக்கிற அந்த ஸ்ரீகிருஷ்ண பகவானுனவர் ஸ்நேக சூசகமான புன்சிரிப்பினுலும், கடைக் கண் பார்வையினுலும், சாதுரிய வார்த்தைகளினுலும், பராக் கிரம லீலையினுலும், சர்வாங்க சுந்தரமான திருமேனியி னுலும், பூலோகத்தில் ஜனங்களை ரம்பித்தாரல்லவா? அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுனவர் பிறந்த மாத்திரத்தில் பிதுர்க் கிரகத்தை விட்டு, இடைச்சேரியில் சென்று, வளர்ந்து, சத்துருக்களை யெல்லாம் சங்காரம்பண்ணி, சில ஸ்திரீகளை விவாகஞ்செய்துக்கொண்டு, அவர்களிடங்களிலே புத்திரர்க ளைப் பெற்று, தம்முடைய ஆஞ்ஞையான வேத மார்க்கங்களை

ஜனங்களுக்குச் சிக்ஷிப்பித்துக்கொண்டு கவுரவர்களுக்கு ஒருத்தருக்கொருத்தர் உண்டான கலகத்தினாலே அர்ச்சுனனிடத்தில் ஜயத்தை யுண்டாக்கி உத்தவருக்குப் பரம ரகசியமாயும் பரமபாவனமாயு மிருக்கின்ற பரமாங்கிச யோகத்தை உபதேசித்து தம்முடைய திவ்விய ஸ்தானத்திற்கு எழுந்தருளினார்.

நவமஸ்கந்தம் முற்றிற்று.



திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை:—9-1-1950.

